*உ*

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

# திருமூலர் அருளிய

# திருமந்திரம்

## பத்தாம் திருமுறை {I}


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

நிறுவன வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

# கற்பகம் பல்கலைக்கழகம்

ஈச்சநாரி, கோவை - 21

**நூற்குறிப்பு**

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **திருமந்திரம் பத்தாம் திருமுறை (I)** |
| ஆசிரியர் | : | **திருமூலர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **48** |
| முதற்பதிப்பு | : | **2016** ஜூன் |
| பக்கங்கள் | : | 928 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | டெமி 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>அலைபேசி : 98431 74238 |




## திருமூலர் அருளிய
## திருமந்திரம்
## பத்தாம் திருமுறை (I)

# பொருளடக்கம்

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# திருமந்திரம் - வழிபாட்டுக் கருத்தரங்கம்

(25.06.2016, 26.06.2016 சனி, ஞாயிறு)

மந்திரமுந் தேவும் மருந்துங் குருவருளுந்
தந்திரமும் ஞானந் தருமுறையும் – யந்திரமும்
மெய்யென்னில் மெய்யாய் விளங்குமே மேதினியிற்
பொய்யென்னிற் பொய்யாகிப் போம்.

**– நீதி வெண்பா – 38.**

## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள்

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம். (சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கைகள்**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார் எனத் தெளிதலும்/ உறுதிபட நிற்றலும்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலாமை.

ஈ) மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்.

உ) தம்மைத் தாம் முற்றிலும் மறத்தல்.

**3. வகுத்துக்கொண்ட நெறிகள்**

1) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.

2) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்

3) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கும் யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே.

– திருமந்திரம் (40)

அன்புடையீர் வணக்கம்.

அருளிக் கூறினும், வெகுண்டு கூறினும் அவ்வச் சொற்களின் பொருண்மை யாண்டும், என்றும் குறைவின்றி நின்று அவ்வப் பயன்கள் அவ்வப்பொழுதே பயக்கத்தக்க சொல்லாற்றலையுடைய சான்றோர்தம் ஆணையினாலே கிளம்பியவே மந்திரங்களாகும். அவ்வாறு பொருள் புறத்தார்க்கு எளிதிற் புலனாகாமல் அரிதில் உணருமாறு மறைத்துக் கூறப்படும் சொற்றொடராலியன்ற செய்யுளே தமிழ் மந்திரச் செய்யுள் எனப்படும். இவ்வியல்பு திருமூலதேவ நாயனார் இயற்றியருளிய திருமந்திரம் எனப்படும் பத்தாம் திருமுறைக்கு அமைந்திருப்பதும், அதைப் படித்தும், படிப்பித்தும், அறிந்தும், அறிவித்தும், உணர்ந்தும், உணர்வித்தும், இன்புறுவது இறைவனின் திருவருட் பெருங்கருணையாகும். திருக்கயிலை மலையில் வீற்றிருந்தருளும் திருநந்திதேவர்பாற் பெற்றருளிய அருமறை, ஆகமம், முதனூல்களில் உள்ளனவாகிய பொருள்கள் எல்லாவற்றையும் சின்னாள் பல்பிணிச் சிற்றறிவினராகிய மக்கட்பொருட்டுத் தொகுத்து, 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்றெழுந்த பெருங்கருணை யினாலேயே தாம் பெற்ற பேற்றை இவ்வுலகமும் பெற்று உய்வான்வேண்டி, திருமூலதேவநாயனார் திருமந்திரத்தை அருளிச்செய்தார். இதை அவர் சீடனுக்குச் சொன்னது போலச் சொல்லியுள்ளார். இந்நூலின்கண் அமைந்துள்ள நுட்பமான கருத்துக்களை இப்பதிப்புரை மூலம் பகிர்ந்து கொள்வதே நமக்குப் பெரும்பேறு என்று நினைக்கிறோம்.

திருமந்திரச் சிறப்பு - வடமொழியில் அமைந்த பதஞ்சலி யோக சூத்திரத்திற்கு நிகராகத் தமிழில் அமைந்த யோக நூல்

இந்நூல் - தோத்திரநூல், சாத்திரநூல், மந்திரநூல், தந்திரநூல், மெய்ஞ்ஞானநூல், விஞ்ஞான

நூல், இம்மையும், மறுமையும் காட்டும் செம்மை நூல், யோக நூல், போக நூல், மருத்துவ நூல், சித்த நூல், இன்னும் இன்றும் என்றும் வியத்தகு கருத்துக்கள் பலவற்றை விளக்கும் அரிய நூல்.

நந்திதேவர்பால் உபதேசம் பெற்ற எண்மர் - சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் நந்திகள் நால்வர், சிவயோக மாமுனி, தில்லையில் திருக்கூத்துத் தரிசனம் கண்ட பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகியவர்களோடு திருமூலரையும் சேர்த்து எண்மர். இம்மாதிரியான பள்ளித் தோழர்களை நாம் பெறவேண்டும்.

திருமூலரின் மாணாக்கர்கள் எழுவர் - மாலாங்கன், சோமன், பிரமன், உருத்திரன், கந்துரு, காலாங்கி, கஞ்சமலையன்.




தம் வரலாறு / மொழிபெயர்ப்பன்று - "நந்தி இணையடி நான் தலை மேற்கொண்டு" என்ற பாயிரப்பாடலில் முதலிரண்டு அடிகளில் ஆசிரிய வணக்கங்கூறி, பின்னிரண்டு அடிகளில் நூற்பெயர்க்காரணம் புலப்படக் கூறுகின்றார். இதனாலே நாயனார் சிவாகமங்களை மொழி பெயர்த்துச் செய்யாது, அவற்றது தெளிந்த பொருளையே திரட்டி இந்நூலாய் அருளிச் செய்கின்றார் என்பதும் பெறப்பட்டது.

சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம் - கயிலைத் தாழ்வரையிடத்தும் அக்காலத்தில் தமிழ் போற்றிக் கற்கப்பட்டது. அதனாலன்றோ பிற்காலத்தில் சேரமான் பெருமாள் நாயனார்

திருக்கயிலாய ஞான உலா என்னும் தமிழ்ப் பாடலை திருக்கயிலையில் யாவரும் கேட்க அரங்கேற்றினார்.

திருமூலர் திருக்கயிலையை விட்டு இத்தமிழ் நாட்டிற்கு வந்த காரணத்தைத் தம் மாணாக்கர் மாலாங்கனிடம் கூறுகிறார்.

மாலாங்கனே இங்கு யான் வந்த காரணம்
நீலாங்க மேனியாள் நேரிழையாள் ஒடு
மூலாங்கம் ஆக மொழிந்த திருக் கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே.
- திருமந்திரம் (16)

சிவபெருமான் முதற்கண் உமை அம்மைக்கு முதல் நூலாகச் சொல்லியச் சிவாகமத்தின் பொருளைச் சொல்லுவதற்காகவே வந்தேன் என்கிறார். ஆகமமும் முதல் நூல் என்னும் பொருளில் வேதம் எனவும் ஒரு காலத்தில் சொல்லப்பட்டது.

போதம் - ஞானம் - போதத்தை உடையது. போதி அதன் கீழ் அமர்ந்து திருமூலர் ஞானம் பெற்றதனால் அது சிவபோதி.

இராப்பகல் அற்ற இடம் - இரவு, பகல் என்பன அறியாமையும், அறிவுமாகும். இவை கருவி கரணங்களின் நீக்கத்தாலும், தொடக்கினாலும் வருவன. இவையற்ற இடம் என்றும் ஒருபெற்றியாய் விளங்கும் பேரறிவாகும். அதனால் அங்கு துன்பம் என்பதின்றி இன்பமே உள்ளது என்க.

மந்திரம் என்பது தொல்காப்பியம் கூறும் பாட்டு, உரை, நூல், மந்திரம், பிசி, அங்கதம், முதுசொல் என்ற எழுவகைச் செய்யுட்களுள் ஒன்றாதலின் இதன் தொன்மையும், தமிழ்த் தோற்றமும், பரந்த வழக்கும் பெறப்படும். மந்திரம் என்பதன் பொருளை

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழிதானே மந்திரம் என்ப

என்ற நூற்பாவால் தொல்காப்பியம் விரித்துக் காட்டியுள்ளது. ஏனைய

ஆறுவகைச் செய்யுட்களைச் செய்வார்க்கு உரிய தகுதியை இந்நூல் சுட்டவில்லை என்பதும், மந்திரம் ஒன்றிற்கே அதனை மொழிவார் நிறைமொழி மாந்தராக இருப்பார் எனத் தகுதி சுட்டுகின்றது என்பதும் நினையத்தகும்.

இதனைத் தழுவியே திருவள்ளுவ நாயனார், 'நிறைமொழி மாந்தர் பெருமை' என மொழிந்தார். இம்மந்திரங்களை நிறைமொழியாளர்களே என்றும் கூற வேண்டுவதில்லை. அவர்தம் ஆணைபெற்ற வழியினரும் கூறலாம்.

பண்டைக்காலத்து மந்திரம் எழுதாக்கிளவியாக இருந்தது. வழிவழியாக, குரு-மாணாக்கர் முறையில் கற்பிக்கப்பட்டு வந்தது. ஆதலால் **வாய்மொழி என்றும் கூறப்பட்டது.**

**மந்திரம் என்றால் நினைப்பவரைக் காப்பது எனப்பொருள் கூறுவர். மந் - நினைத்தல், அறிதல், திரம்-காத்தல். புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்தல் என்ற பொருளோடு இடையூறு நீக்கிக் காத்தல் என்ற பொருளையும் மறைமொழி என்ற தொடர் குறிக்கும். தமிழ்க் காப்பியங்களில் மந்திரம் பற்றிய குறிப்புக்களும், அவற்றின் வியத்தகு பயன்களும் ஆங்காங்கு வருகின்றன. கோவலன் பாய்கலைப்பாவை மந்திரம் அறிந்தவன் என்று சிலம்பும், மணிமேகலை மூன்று மந்திரங்களை அறிந்தவள் என்று மணிமேகலைக் காப்பியமும் கூறுகின்றன.**

**மூலன் உரை செய்த மூவாயிரந்தமிழ்**
**மூலன் உரை செய்த முந்நூறுமந்திரம்**
**மூலன் உரை செய்த முப்பதுஉபதேசம்**
**மூலன் உரை செய்த மூன்றும் ஒன்றாமே**

**என்ற திருமந்திரச் செய்யுளில் திருமூலர் சுமார் 3000, 300, 30 பாடல்களைக்கொண்ட மூன்று நூல்களைச் செய்தார் எனவும், அவை எண்களில் மூன்றாயினும், பொருளால் ஒன்று எனவும் அறிகிறோம். மூன்று நூல்களும் திருமந்திரமாலை என்று பொதுப்பெயராலே வழங்கப்பெறும். ஐந்து கரத்தினை எனத் தொடங்கும் திருமந்திரப்பாடலை மூன்று நூலுக்கும் விநாயகர் காப்பாக அமைந்திருப்பது மூன்றும் ஒன்றே என்ற கருத்தைத் திடப்படுத்துகிறது.**

திருமூலதேவ நாயனார் திருமந்திரம் – பத்தாம் திருமுறை

| மந்திரக்கலைத் திருமந்திரம் | 3000 | மந்திரம் | யோகம் (உபாசனா காண்டம்) |
|---|---|---|---|
| தந்திரக்கலைத் திருமந்திரம் | 300 | தந்திரம் | சரியை, கிரியை (கா்மகாண்டம்) |
| உபதேசக்கலைத் திருமந்திரம் | 30 | உபதேசம் | ஞானம் (ஞான காண்டம்) |

சரியை முதலான நான்கு பாதங்களும் தந்திரம் முதலான மூன்று கலைகளில் அடங்கி நிற்கும்.

சரியை - அலகிடல், மெழுகிடல் முதலியன (காய்)

கிரியை - பூசனை நெறிகள் (கனி)

யோகம் - எண்வகை. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி(அரும்பு)

ஞானம் - கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடுதல் (மலர்) வீடு பயக்கும் மெய்யுணா்வு - தத்துவ (உண்மை) ஞானம்

திருமுறை கண்ட புராணத்தில் ஒரு பாடல் திருமுறைகள் ஏழாகவும் பின் பதினொன்றாகவும் வகுக்கப்பட்டதற்கு மந்திர எண்ணிக்கைகளே காரணமாகும் என்று கூறுகிறது.

மந்திரங்கள் ஏழு கோடி ஆதலினால் மன்னுமவர்
இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்துப்
பந்தமாறு மந்திரங்கள் பதினொன்று மாதலினால்
அந்தமுறை நான்கினொடும் முறை பதினொன்றாக்கினார்.

ஏழு கோடி மந்திரங்கள்:

எண்ணிக்கையில் ஏழு அல்ல. இறுதியான முடிபு - 7 என்ற பொருளில் அவை வருகின்றன. எண்ணிறந்த மந்திரங்கள் யாவும் இந்த ஏழு கோடி மந்திரங்களில் அடங்கும். கோடி - முடிபு. ஏழு கோடி என்றால் எழுகோடி மந்திரங்கள் என்பது பொருளல்ல. ஏழு முடிபுகளுடைய மந்திரங்கள் என்பது பொருளாகும். சப்தகோடி மந்திரங்கள் இவையே. 1.நம, 2.சுவதா, 3.சுவாகா, 4.வௌஷட், 5.வஷட், 6.உம், 7.பட் என இவை முடியும்.

### பதினொரு மந்திரங்கள்

பிரம்மமந்திரங்கள் - 5

(ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம்)

அங்கமந்திரங்கள் - 6

(இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அத்திரம்)

நித்தியா தந்திரம் என்ற வடநூல்

<u>மந்திரம்</u> - 10 முதல் 20 வரை உள்ள எழுத்துக்களால் இயற்றப்பட்டது.

<u>மாலாமந்திரம்</u> - 20க்கு மேற்பட்ட எழுத்துக்களால் இயற்றப்பட்டது என்று கூறுகிறது.

### திருமந்திர யாப்பில் எழுத்தளவு கொள்ளப்பெற்ற வரையறை

திருமந்திர நூல் 12 எழுத்துக்களால் இயன்ற 4 அடிகளை உடையனவாய் மொத்தமாய் 20க்கு மேற்பட்ட எழுத்துக்கள் இருப்பதால் அது மந்திரமாலை அல்லது மாலாமந்திரம் எனப்படுகிறது. திருமந்திரப் பாடல்கள் பெரும்பாலும் 12 எழுத்துக்களும், நான்கு சீர்களும் கொண்ட முதல் மூன்று அடிகளும், நான்காம் அடி நேர் முதலாயின் ஒன்று குறைந்து 11 எழுத்துக்களும் நிரை முதலாயின் 12 எழுத்துக்களும் உடையனவாய் அமைந்துள்ளன. எழுத்தினை எண்ணுங்கால் உயிரும் உயிர்மெய்யாகி ஒரு மாத்திரையிற் குறையாதனவே அலகிடப்படும்.

ஒன்றை எழுத்துக்கள் அலகிடப்படாவாம்
உயிரில் லெழுத்தும் எண்ணப்படாஅ
உயிர்த்திறம் இயக்கம் இன்மையான

-(தொல். பொருள். 351)

என்பது விதி.

மாலை என்பதன் முதற்பொருள் ஒழுங்கு, வரிசை என்பனவாகும். பொன், பூ, மணி, சொல் முதலியவற்றால் ஒழுங்குபடத் தொகுத்து யாக்கப்படுவனவும் மாலை எனப்படும். இறைவனுக்குரிய வடிவம் மூன்று. அவை தூலம், சூக்குமம், அதிசூக்குமம். அவற்றுள் தூலவடிவம், மந்திர வடிவமாகும். 64 கலைகளில் மந்திரமும் உள்ளது.

தெய்வங்களுக்கு உவகையை விளைவிப்பனவாயுள்ள செபம், ஓமம்,

அருச்சனை ஆகியவை வேதத்தின் எப்பாகங்களில் உச்சரிப்பால் செய்யப்படுகின்றனவோ அப்பாக்கள் மந்திரம் எனப்படும்.

**மந்திரவகை**

**மந்திரமானது பொதுவாக ஐந்தெழுத்து மந்திரம், மூல மந்திரம், பீசமந்திரம், பஞ்சமந்திரம், சடங்க மந்திரம், பதமந்திரம், சம்கிதா மந்திரம், காயத்திரி மந்திரம், அசபா மந்திரம், மோன மந்திரம், துயில் மந்திரம், உபதேச மந்திரம், தாரக மந்திரம் என்று பலவகைப்படும்.**

**முப்பத்துமுக்கோடி தேவர்கள், பதினெண்கணம், காலக்கடவுளர் முதலாகவுள்ள எல்லாக் கடவுளருக்கும் தனித்தனியே சிறப்பான மந்திரங்களுண்டு.**

**அன்றியும் உலகில் உள்ள இயங்கு திணையும், நிலைத் திணையுமான சராசரப்பொருள்கள் எல்லாவற்றிற்கும் அவற்றை அதிட்டித்து நின்று இயக்கும் அதிதேவதை மந்திரங்கள் உள்ளன. மந்திரங்களால் அதிட்டிக்கப்படாத பொருள்கள் ஒன்றுமில்லை என்று சர்வ ஞானோத்திரத்திலும், பிற ஆகமங்களிலும் சொல்லப்பட்டுள்ளன.**

**சைவ பூடண மந்திர வகைகள்**

1. **ஐவகை சிருட்டி ரூப சிவமந்திரங்கள்**
2. **ஐவகைத் திதிரூப சதாசிவ மந்திரங்கள்**
3. **மூவகை சங்கார ரூப மகேசுவர மந்திரங்கள்**
4. **ஐவகைப் பிரணவ மந்திரங்கள்**
5. **பதினான்கு வகைப் பஞ்சாக்கர மந்திரங்கள்**
6. **தேவிமூல மந்திரங்கள்**
7. **அத்திர மந்திரங்கள்**
8. **பஞ்சபிரம மந்திரங்கள்**
9. **சூரிய தேவாதி மந்திரங்கள்**
10. **மகாசத்தி மந்திரங்கள்**
11. **சித்த மந்திரங்கள்**
12. **கிரியா மந்திரங்கள்**

### மந்திரப்பிரயோகம்

மேற்கூறப்பட்ட மந்திரங்களை அறிந்து அவற்றுடன் காலம், தேகம், காரியம் என்பவற்றிற்கேற்ப மந்திரங் கொண்டும், அவ்வம் மந்திரங்களின் வாசகம், வாச்சியம், சந்தசு, அதிதேவதை, நியாசம், பீசம், வியாகிருதி எண் என்பவற்றை அறிந்தும், ஆறங்க மந்திரங்களின் கிரமத்திற்கேற்ப நமஹா, சுவாஹா, சுவதா, வௌஷட், வஷட், உம், பட் என்னும் ஏழு பல்லவங்களை ஒட்டியும், பஞ்சஅங்க மந்திரங்களுக்கேற்ற நேத்திர பல்லவம் விட்டும், அங்கமிலா மந்திரங்களுக்கு அங்கம் கற்பித்தும், உரிய பல்லவங்களை உச்சரித்தும், மானசிகம், வாசிகம், உபாஞ்சு என்னும் கிரமம் அறிந்தும் பிரயோகிக்க வேண்டும். முறையாகப் பிரயோகித்தால் பயன் நிச்சயம் விளையும்.

### இயந்திரம்

இயக்குதல்- கருவி, பொறி எனப் பொருள்படும். அதாவது வரைகளும், பீசம் முதலியவையும் முறைப்படி வரையப்பெற்று வழிபடப்படும் சக்கரம் ஆகும். இதன்கண் இறைவனது அருட்சத்தி பதிந்து விளங்கி நின்று சாதகராவர் விழைந்த பொருளையும் வினையையும் இயக்குதற்கு நிலைக்களனாக இருத்தலினாலே இது இப்பெயர் பெற்றது.

மந்திரம் - உயிர் போன்றது

இயந்திரம் - பிராணனைப் போன்றது

தந்திரம் - உடம்பினைப் போன்றது

- காமிகாகமம் - யந்திரோத்தார விதிப்படலம்

### இயந்திரவகை

இத்தகைய இயந்திரங்கள் பொதுவாக மூலயந்திரம், பூசாயந்திரம், தாபன இயந்திரம், இரட்சா இயந்திரம், பூசனயந்திரம், முத்தொழிற் சக்கரம், ஐந்தொழிற் சக்கரம், சிவசக்கரம், சிவகோணம், ராசி சக்கரம், ஐங்கோண, அறுகோணச் சக்கரம். முக்கோண, நவகோண, நாற்பத்துக் கோணச் சக்கரம், திருவம்பலச் சிதம்பரச் சக்கரம், அறுபத்தி நான்கு பதச் சக்கரம் முதலியவையாகப் பல உள்ளன.

ஒவ்வொரு கடவுளருக்கும் தனித்தனியாகச் சிறப்பாகப் பல சக்கரங்கள் உள்ளன.

இவ்வாறான இயந்திரங்களைப் பற்றி அறிந்து கொண்டு அவற்றை உரிய பஞ்சலோகத்தில் பீசாக்கரங்களுடன் வரைந்து, (ஆவாகன, ஸ்தாபன, சந்நிதான) அவற்றை இருந்தருள, எழுந்தருளச் செய்து வழிபாட்டுக்கு அனுமதிபெற்று, பஞ்சசுத்தி செய்துகொண்டு, எந்தக் கன்மத்துக்கு எந்தச் சக்கரம், எந்த மந்திரம், எந்த தந்திரம், எந்த பீசாட்சரமோ அப்படியே அர்ச்சித்து பூசை செய்தால் நினைத்த காரியம் நடக்குமென்றறிக.

பிரணவம் (மூல மந்திரம்) (சொரூபம்)

↓

அனந்தகோடி மந்திர, தந்திர, எந்திரம் (தடத்தம்)

↓

தனு, கரண, புவன, போகம்

## மந்திரமும், தந்திரமும், எந்திரமுமாகித் தீராநோய்த் தீர்த்தருள வல்லான்

| | மந்திரம் | தந்திரம் | யந்திரம் |
|---|---|---|---|
| 1. | அ) மறைத்துப் பேசப்படுவது மந்திரம்<br>ஆ) மனத்தால் நினைந்து மொழியால் சொல்வது<br>இ) மந் - நினைத்தல், அறிதல்<br>திரம் - காத்தல். மனம் மொழிகளால் மந்திரம் நிகழ்கிறது | தந்திரம், கிரியை, வினை, கன்மம் என்பன ஒரு பொருட் சொற்கள் | யந்திரம் - இயந்திரம் என்பது இயக்குதல், கருவி, பொறி எனப்பொருள்படும்.<br>வரைகளும், பீசம் முதலியவை முறைப்படி வரையப்பெற்று வழிபடப்படும் சக்கரம் ஆகும். |
| 2. | அ) தொல்காப்பியம் கூறும் எழுவகைச் செய்யுட்களுள் ஒன்று<br>ஆ) மந்திரம் பிரயோகிக்கப்படும் | செயலால் செய்வது , செய்யப்படுவது தந்திரம். மந்திரத்தை ஓதிப் பயன்படுத்தும் முறை | மந்திர உச்சாடனங்களும் அதன் பலனும் 24 x 7 தொடர்ந்து கிடைக்க இயங்கிக்கொண்டே இருப்பது இயந்திரம் |
| 3. | மந்திரம் செய்வார்க்குண்டான தகுதியினை நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி தானே மந்திரம் என்ப என்ற நூற்பாவில் தொல்காப்பியர் எடுத்துக் காட்டியுள்ளார் | கிரியையாக அவ்வப்போது செய்வது. கலை - சாத்திரம், நூல் | மந்திரங்களுக்குப் புறத்தோற்றமாய்க் காட்சியளிப்பது |
| 4. | திருவள்ளுவரும் நிறைமொழி மாந்தர் பெருமை என்று கூறியுள்ளார் | கன்மசித்தியின் பேறாயுள்ள வசியம் முதலான எண் வினையாகிய அட்ட கன்மங் களைக் குறித்து நிற்பது தந்திரக்கலை | மந்திரங்கள் செயல்வடிவம் பெற யந்திர வடிவு அவசியம் |

| | | | |
|---|---|---|---|
| 5. | அ) இம்மந்திரங்களை நிறைமொழியாளரே என்றும் கூற வேண்டுவதில்லை. அவர்தம் ஆணைபெற்ற வழியினரும் கூறலாம்<br>ஆ) அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பொருளைத் தரும் தப்பாத மொழி என்ற பொருளையும் தரும்<br>இ) மந்திரம் உயிர் போன்றது | அ) தந்திரமாகிய ஆகமங் களுள் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு பாதங்களுள் முதலிரண்டு பாதங்கள் தந்திரக்கலையில் அடங்கும்<br>ஆ) தந்திரம் - முதன்மை, பிரதானம், தலைமைப் **பொருள், ஆகம நூலின் பெரும் பிரிவு** | அ) இயங்கிக் கொண்டே இருப்பது இயந்திரம். எந்நேரமும் மந்திரத்தைச் சொல்லிக்கொண்டே இருக்க முடியாது. தந்திரமாக கிரியையும் எந்நேரமும் செய்து கொண்டே இருக்க முடியாது. **இயக்கிவிட்டால் இருதயம் போல இயந்திரம் இயங்கிக்கொண்டே இருக்கும்.**<br>**ஆ) தமிழ் மொழியில் ய, ர, ல போன்ற எழுத்துக்கள் மொழி முதலாக வரும்போது இ சேர்த்துப் படிக்க** வேண்டுமென்பது விதி. |
| 6. | அ) பண்டைக்கால மந்திரம் எழுதாக் கிளவி<br>ஆ) மந்திரங்கள் சுத்தமாயையிலிருந்து தோன்றின | தன்னை அடைந்தோரைக் காப்பதும், தத்துவ மந்திரங்களின் பொருளை விளக்குவதும் தந்திரமாகும் | |
| 7. | அ) வழி வழி குரு மாணாக்கன் முறையில் கற்பிக்கப்பட்டு வந்தது. வாய்மொழி என்றும் தொல்காப்பியத்தால் கூறப்பட்டது | அ) 64 கலைகளில் தந்திர பேதம் என்பதும் ஒன்று | சாதகன் மந்திரத்தை முறைப்படி ஓதியும் உணர்ந்தும் வழிபடும் |

| | | | |
|---|---|---|---|
| | ஆ) மந்திரம் என்றால் நினைப்பவரைக் காப்பது | ஆ) தந்திரத்தைச் சொன்ன முறையே செய்யவேண்டும் | முறைமையும் அதனால் எய்தும் பயனையும் குறிப்பதும் |
| 8. | அ) வாய்மொழி - வழிவழியாகப் புழங்கும் மொழி<br>ஆ) இறைவனுக்கும் மனிதனுக்கும் ஒலித் தொடர்புச் சாதனமாக இருப்பவை மந்திரங்கள் | அ..்து ஓரிடத்தும் வெளிப்படாத மந்திரத்தை வெளிப்படச் செய்வது என்பர் | உலகியல் மருந்து எப்படிப் பிணியைத் தீர்க்கின்றதோ அதேபோல மருந்தாகிய யந்திர வழிபாட்டு முறைகளும் உடற்பிணியைத் தீர்ப்பதோடு உயிர்ப்பிணியாகிய பிறவிப் பிணியையும் நீக்குகிறது. |
| 9. | இக்குறிப்பைத் தொல்காப்பியரும், திருவள்ளுவரும், மறைமொழி என்ற தொடரால் சுட்டக் காணலாம். | தந்திரம் உடம்பாக நின்று கன்மத்தைச் செய்யும் | |
| 10. | மறை என்றால் புறத்தாருக்குப் புலனாகாமல் மறைத்தல் எனப் பொருள் கொள்வதோடு இடையூறு நீக்கிக் காத்தல் எனவும் பொருள் கொள்ளலாம். | மெய்யால் செய்யப்படுவது தந்திரம். 24 x 7 செய்து கொண்டே இருப்பது அவ்வளவு எளிதல்ல. | மந்திரத்தைப் பிரயோகித்து மெய்யாகிய தந்திரத்தால் இயக்கிவிட்டுவிட்டால் இயந்திரம் இயங்கிக்கொண்டே இருக்கும். |
| 11. | மந்திரத்தின் தன்மையை எழுதாமல் இவை வல்லார் வாய் கேட்டுணர்க என்பதும் பெறப்படுகிறது. | | இந்த நோக்கத்தில்தான் யந்திரங்கள் பஞ்சலோகத்தகட்டில் இயற்றப்பட்டுத் திருக்கோயில் கருவறைத் திருமேனிக்குக் கீழ் தாபிதம் செய்யப்படுகின்றன. |
| 12. | இறைவனுக்குரிய வடிவம் மூன்று : தூலம். சூக்குமம், அதிசூக்குமம். தூல வடிவம், மந்திரமாகும். | | |

| 13. | மந்திரங்கள் சுத்தமாயையிலிருந்து தோன்றியவை | | |
|---|---|---|---|
| 14. | மந்திரம் என்பது எல்லாவற்றையும் அறிதலையும், உயிர்களுக்கு அருள் புரிதலையும் செய்வது. நினைப்பவனைக் காப்பது, மனனம் -யாவற்றையும் அறிதல் திராணம் - உயிர்களைக் காத்தல் இரண்டு தன்மையும் உடையதால் மந்திரம் எனப்பெயர் பெற்றது. | | |
| 15. | தெய்வங்களுக்கு உவகையை விளைவிப்பன வாயுள்ள செபம், ஓமம், அருச்சனை ஆகியவை வேதத்தின் எப்பாகங்களின் உச்சரிப்பால் செய்யப்படு கின்றனவோ அப்பாகங்கள் மந்திரம் எனப்படும் - சுக்கிரநீதி | | |
| 16. | பிரேரித்தல் - சாதாகராவார் கணிக்குமாறு செய்தல் - செலுத்துதல், அதிட்டித்தல் - கணித்தபின் பயனளித்தற் பொருட்டு அவற்றை வாயிலாகக் கோடல் | | |

### புவனாபதிச்சக்கரம்

இது இயந்திரராசன் என்றும் சொல்லப்படும். திருநந்தி தேவரிடத்தினின்றும் திருமூலதேவநாயனாரால் பெறப்பட்டது. அவரால் பெரிதும் போற்றி வழிபடப் பெற்றது. சித்தி, புத்தி, முத்திகளாகிய எல்லாப்பயனையும் எய்துவதற்கு ஏதுவாயுள்ளதும் ஆகிய பெருமைகளை உடையது. இது வழிபடற்குரிய மூலயந்திரமாகும்.

கந்தர் அனுபூதி, சௌந்தரியலகரி, மனோன்மணிமாலை, வராகி மாலை முதலிய நூல்களில் உள்ள ஒவ்வொரு செய்யுளும் தெந்தமிழ்த் தெய்வ மந்திரம் ஆவதால் அம்மந்திரச் செய்யுள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே யந்திரம், தந்திரம், ப்ரயோகம், வழிபாட்டு முறை முதலியன அமைந்திருந்தலும், விதிப்படி வழுத்துபவருக்கும், பூசிப்பவருக்கும் கருதிய பயன்களை அவை பொய்யாக்காமல் அளித்துவருவதும் உண்மை.

இவற்றுக்கு 1. நிறமும், 2.திணையும், 3.பூவும், 4.சாந்தும், 5.புகையும், 6.பண்ணும், 7.திறமும், 8.இருதுவும், 9.திங்களும், 10.நாளும், 11.பக்கமும், 12.கிழமையும், 13.பொழுதும், 14.கோளும், 15.இராசியும், 16.தெய்வமும், 17.திசையும், 18.மந்திரமும், 19.மண்புலமும், 20.பொறியும், 21.எழுத்து முதலாகிய பண்பும் அறிந்து ஆராதிப்ப அவை யாவருக்கும் கல்வியும், புலமையுமாக்கி நன்மை பயக்கும் என்று யாப்பருங்கலவிருத்தி (95) கூறுகிறது.

### அட்டகருமம்

வசியம், ஆகருணம், மோகனம், உச்சாடணம், தம்பனம், மாரணம், வித்துவேடணம், பேதனம்.

### எண்வகை யோகங்கள்

1. இயமம் - தவிர்க்க வேண்டிய கெட்ட பழக்கங்களை விடுதல்
2. நியமம் - கடைபிடிக்க வேண்டிய நற்பழக்கங்களை மேற்கொள்ளுதல்
3. ஆசனம் - யோகம் பயில்வோர் கை, கால் முதலிய உறுப்புகளைத் தக்கபடி வைத்து அமர்ந்-திருக்கும் முறை / நிலை

4. பிராணாயாமம் - பிராணன் - மூச்சுக்காற்று; ஆயாமம் - அடக்குதல். மூச்சை முறைப்படி அடக்கினால் ஆயுள் நீளும், ஒவ்வொரு உயிரும் தினமும் 21600 முறை மூச்சுவிடும். ஒரு உயிரின் ஆயுட்காலத்துக்கும் உண்டான மொத்த மூச்சு முதலிலேயே நிர்ணயிக்கப்பட்டிருக்கும். எனவே தினசரி மூச்சுக் குறைந்தால் ஆயுள் நீளும், இயமம், நியமம், ஆசனம் முறையாகப் பயின்றோரே பிராணாயாமத்துக்கு தகுதியுடையவர்.

   பூரகம் - காற்றை இடது நாசியால் உள்ளிழுத்தல் - 16 மாத்திரை நேரம். கும்பகம் - நிறுத்துதல், நான்குமடங்கு 64 மாத்திரை நேரம். ரேசகம் - வலது நாசியால் விடுதல் 32 மாத்திரை நேரம். இதை முறையாகச் செய்தால் நரை, திரை, மூப்பின்றி வாழலாம்.

5. பிரத்தியாகாரம் - மனத்தைப் பொறிவழி போகவிடாது அகமுகமாக ஆறாதாரங்களில் நிறுத்துதல்

6. தாரணை - பொறுமை

7. தியானம் - இடையறாது நினைத்தல், ஆறாதாரங்களில் நிறுத்தப்பட்ட மனத்தை மீளவும் புறம் போகவிடாமல் அவ்வாதாரங்களிலேயே நிறுத்துதல்

8. சமாதி - தியான முயற்சியில் தன்னை மறந்து இறையுடன் கலத்தல் - **நிறைவு இவ்வெண் வகை யோகம் பயிலுங்கால் அட்டமாசித்திகளும் இடையில் கைகூடும். அவற்றை அகற்றிச் சமாதி நிலை கூடுதலே பெரும்பலன். சித்தியில் ஈடுபடுதல் சிறுபயன் பெறவே பயன்படும். சித்திகளை பதி புண்ணியங்களுக்காகப் பயன்படுத்த வேண்டும்.**

அவற்றைப் பசு புண்ணியங்களுக்காகப் பயன்படுத்தக்கூடாது.

| | | |
|---|---|---|
| காயசித்தி | - | காயம் - உடம்பு; யோகசித்திகளைப் பெறக் கருவியாயிருக்கும் உடம்பை அழியாதபடி நோயின்றிக் காக்கும் வழி |
| உடம்பைப் பக்குவப்படுத்த வேண்டிய முறைகள் | - | வாரசரம், வாரசூலை, அமுரிதாரணை, ஆயுள் பரிட்சை, காலசக்கரம் |
| ஆசனங்கள் | - | 1) பத்திராசனம், 2) கோமுகாசனம், 3) பத்மாசனம் 4) சிங்காசனம், 5) சுகாசனம், 6) ஸ்திராசனம், 7) சுகத்திகாசனம், 8) உத்த மோத்தமாசனம் |
| ஆறாதாரங்கள் | - | 1) மூலாதாரம் - எருவாய்க்கும், கருவாய்க்கும் இடையில். கணபதி - அதிதெய்வம் |

2) சுவாதிட்டானம் - குறியினுக்கும், உந்திக்கும் இடைப்பட்ட இடம் - தனது இடம் பிரம்மா

3) மணிபூரகம் - தொப்புள் பிரதேசம், வாயுவைக் கும்பிக்கும் இடம், திருமால்

4) அநாகதம் - வடிவற்றது. மனத்தின் இடம், இருதயத்தானம், உருத்திரன், இங்கு அட்டமாசித்திகள் கூடும். அதனை அகற்றி மேலே செல்ல வேண்டும்

5) விசுத்தி – மிக்க தூய்மை, மகேசுவரன், நாக்கின் அடிப்பாகம்

6) ஆக்ஞை – அறிவிற்கு நிலைக்களம் புருவமத்திமம் - சதாசிவம், பிரமரந்திரம், சிரத்தின் உச்சி, பரமசிவன்

| தசவாயுக்கள் | பணிகள் |
|---|---|
| 1. பிராணன் | இதயம் இயங்கிச் சுவாசம் வெளிவர உதவுவது |
| 2. அபானன் | கீழ் நோக்கும் வாயு. மலசலம் முதலியவற்றை வெளியேற்றுவது |
| 3. சமானன் | உண்ட உணவைச் சீரணிக்கச் செய்வது |
| 4. உதானன் | மேல் நோக்கும் வாயு. நாபியில் நிற்பது |
| 5. வியானன் | உடல் முழுதும் வியாபித்திருப்பது. இரத்த ஓட்டத்தை உண்டாக்குவது |
| 6. நாகன் | நீட்டல், முடக்கல், சொல்லல், விக்கல் இவற்றிற்குக் காரணமாவது |
| 7. கூர்மன் | இமைத்தல், விழித்தல், மயிர் சிலிர்த்தலைச் செய்வது |
| 8. கிரிகரன் | தும்மல், இருமல், வெம்மை, சினம் - இவற்றை உண்டாக்குவது |
| 9. தேவதத்தன் | ஓட்டம், இளைப்பு, வியர்வை, கொட்டாவி - இவற்றை விளைவிப்பது |
| 10. தனஞ்சயன் | உயிர் பிரிந்தாலும் உடம்பில் நின்று, உச்சந்தலை வெடித்து வழிவிடப் போவது |

| வ.எண் | அட்டமா சித்தியின் பெயர் | பயன் |
|---|---|---|
| 1. | அணிமா | அணுவினுள்ளும் அணுவாய் நுழைதல் பரமாணுவைப் போல உடல் நுண்மையாதல். அணுவிலும் அதிசூக்கும வடிவுற்று நிற்றல். |
| 2. | மகிமா | அண்டத்தினும் பெரியோனாய் அதைக் கடந்து நிற்றல். சகம் போலப்பகுத்தல் |

| | | |
|---|---|---|
| 3. | இலகிமா | மலை போன்றவை பஞ்சு போல இலேசாதல். காற்றினும் நொய்ம்மையனாய் வானத்தில் உலாவுதல் |
| 4. | கரிமா | மலை போலத் திண்மை உடையவனாய் இருத்தல் |
| 5. | பிராத்தி | நினைத்த இடத்திற்கு நினைத்த மாத்திரத்தில் செல்லுதல். பூமியிலிருந்து கொண்டே சந்திரனைத் தீண்டுதல், சேய்மையில் உள்ளதை அண்மையில் அடைதல் |
| 6. | பிராகாமியம் | நினைத்ததை நினைத்தபடி முடித்தல், நீரின் மேல் நடப்பதும், நிலத்தில் மூழ்கி யெழும்புதலும் போல்வன |
| 7. | ஈசத்துவம் | எல்லோராலும் ஏற்றிப் போற்றப்படுதல். ஏகதேசமாக விளங்கும் எல்லா ஆற்றல்களும் வரும். ஆனால் படைப்பாதி ஐந்தொழில் செய்ய முடியாது. அது சிவபெருமான் ஒருவரால் மட்டும் தான் செய்யமுடியும். ஏனெனில் ஒன்று அவன்தானே |
| 8. | வசித்துவம் | யாவரையும் தன் வழிப்படுத்தி நிற்றல், உலகச்சுவாதீனம், தான் எல்லாப் பொருள் களிலும் கலந்து நிற்குந்தன்மை. முன்னைய மூன்றும் உடம்பிலும், பின்னைய வைந்தும் மன முதலியவற்றானும் பெறப்படும். |

<u>தசநாடிகள்</u> - இடகலை, பிங்கலை, சுழுமுனை, புருடன், காந்தாரி, வைரவன், சிகுவை, சங்குனி, அலம்புடை, அத்தி (அ) அக்கினி.

## ஆறு ஆதாரங்களின் நவசத்திகள்

| | | |
|---|---|---|
| 1. | மூலாதாரம் | வாமை |
| 2. | சுவாதிட்டானம் | சேட்டை |
| 3. | மணிபூரகம் | ரௌத்திரி, காளி |
| 4. | அனாகதம் | கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரதமணி |
| 5. | விசுத்தி | மனோன்மணி |
| 6. | ஆக்ஞை | ஆதிசத்தி |

அகப்பூசை

| | |
|---|---|
| இருதயம் | பூசைத்தானம் |
| நாபி | ஓமத்தானம் |
| புருவநடு | தியானத்தானம் |

ஆறு ஆதாரங்களும் மூன்று மண்டலங்களும்

| | | | |
|---|---|---|---|
| 1. | பிரமகிரந்தி | அக்கினிமண்டலம் | மூலாதாரம்<br>சுவாதிட்டானம் |
| 2. | விட்டுணுகிரந்தி | சூரியமண்டலம் | மணிபூரகம்<br>அனாகதம்<br>விசுத்தி |
| 3. | உருத்ரகிரந்தி | சந்திரமண்டலம் | ஆக்ஞை<br>பிரமரந்திரம் |

வார சரம் - வாரம் என்பது இங்கு கிழமைகளைக் குறிக்கின்றது. மூலாதாரத்தில் தொடங்கி முதற் கண்டத்தில் அங்கி மண்டலம் (உண்ட ஊனைச் செரிக்கச் செய்யும் நெருப்புள்ள இடம்) நெஞ்சக் கமலத்தை ஒட்டிய கண்டத்தில் சூரிய மண்டலம் முடியில் மதி மண்டலம் அமைந்துள்ளன. பிராணவாயு திங்கள், புதன், வெள்ளி ஆகிய மூன்று நாட்களில் இடது நாசி வழியாகவும் செவ்வாய், சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்களில் வலது நாசி வழியாகவும் வளர்பிறை வியாழனில் இடது நாசி

வழியாகவும், தேய்பிறை வியாழனில் வலது நாசி வழியாகவும் இயங்குதல் உடல் நலத்திற்கு ஏற்புடைய இயற்கைப் பிராண வாயு இயக்கமாகும்.

### அமுரிதாரணை

அமுரி – சிறுநீரில் உள்ள மருந்துப் பொருள் - தாரணை – தரித்தல். அமரி – மரித்தலை நீக்குவது. அமரி – மருவி அமுரி என்று வழங்குகிறது. வெளிப்போந்த சிறுநீரிலிருந்து மருத்துவமுறையில் பெறும் அமுரியை, அஃது உள்ளிருக்கும் பொழுதே யோக முறையில் நிறுத்தி உடலிற்குப் பயன்படச் செய்யும் முறையே இங்கு அமுரிதாரணை என்று கூறப்படுகிறது. துறவிகளும், துறவிகளாய் வாழும் எண்ணம் உடையவர்களும் மிளகுப் பொடியைப் பல வகைகளாலும் உணவில் சேர்த்து உண்பர். இவ்வாறு உண்டால் சிறுநீரானது சிவ நீராக மாறும். இதனால் துறவிகள் எண்ணெய் தேய்த்துக் குளிக்காமல் மிளகு தேய்த்துக் குளிக்கிறார்கள். குளிப்பவர்களுக்கு நரை, திரை வராது. நாளொன்றுக்கு ஒரு மிளகு வீதம் உண்டு வந்தால் உடல் வளமிகும்.

### சந்திர யோகம்

சந்திரனை விளக்கம் செய்கின்ற யோகம் என்பது இதன் பொருளாகும். ஆறாதாரங்களைக் கடந்த ஏழாம் இடமாகிய பிரமரந்தரத்தைக் குறிப்பது. சகஸ்திராரம் எனப்படும். 16 கலைகளுடன் சந்திரன் வளர்ந்தும், தேய்ந்தும் வருவதுபோல, உடம்பிலுள்ள சந்திரமண்டல ஆற்றலும் வளர்ந்தும், தேய்ந்தும் ஒடுங்குவதாகும். அண்டத்திலுள்ள சந்திரனைப் போலப் பிண்டத்திலுள்ள சந்திர மண்டலமும் ஒத்துள்ளதைக் கூறும் பகுதி இதுவாகும். சூரியகலை 12 அது 12 சூரியர்களைக் குறிக்கும் அக்கினிகலை 10 ஆகும்.

### யோகத்தின் பயன்கள்

சமாதியாகிய இறையருள் நிலை, அட்டமாசித்தி, காயசித்தி, ஆயுள் பரீட்சை.

### அனுபவப் பொருள்

எந்த அனுபவ நூற்கும் நாம் அறியப்புகுவது சொற்பொருளே.

அனுபவப்பொருள் அன்று. அனுபவம் சாதனங்களின் வழி நின்று ஒவ்வொரு உயிரும் பெற வேண்டியது. சொற்பொருளை அறிவது சாதனத்தில் செல்லத்தூண்டும். சொற்பொருளை அறியாவிடில் சாதனத்தில் செல்ல இயலாது.

**சங்காரம்**

**நித்தம், அவாந்தரம், சருவம், வீடுபேறு என நான்கு வகைப்படும்.**

| | | |
|---|---|---|
| **நித்த சங்காரம்** | - | **உறக்கம்** |
| **அவாந்தர சங்காரம்** | - | **இறப்பு** |
| **சருவ சங்காரம்** | - | **முற்றழிப்பு** |
| **வீடுபேறு** | - | **மலங்கள் நீங்கி உயிர் இறைவன் திருவடி பெற்று இன்புறுதல்** |

**அருள்**

**உயிரின் பக்குவத்திற்குத்தக்க தனு, கரண, புவன போகங்களைக் கூட்டி அதன் அறிவை வளர்ப்பது அருள்தான்.**

குயிலின் முட்டையைக் காக்கை காத்து வருதல்

**தாய், தந்தையர் தாம் குழந்தையை வளர்ப்பதாக எண்ணிப் போற்றி வருவது குயிலின் முட்டையைக் காக்கை காத்து வருவது போன்றதாகும். உண்மையில் அம்மையப்பர் தான் அதனைக் காத்து வருகிறார்.**

அதோ முகம்

**அசுத்தமாயை அதோமாயை எனப்படும். அதன் கீழுள்ள பிரகிருதிமாயைச் சார்ந்த நம் நிலவுலகத்தைக் கண்காணிக்கும் முதல்வன் திருமுகம் அதோமுகம் எனப்படும். அம்முகம் பலசக்திகளாகத் தங்கிநின்று உலகத்தார்க்குத் தீங்கு வராமல் காக்கும். இவ்வியல்பைக் கூறும் பகுதி அதோமுக தரிசனம் எனப்படும்.**

வார சூலம்

**இறைவன் படையாகிய முத்தலை வேல் (சூலம்)**

| | |
|---|---|
| திங்கள், சனிகளில் | - கிழக்கில் நிற்கும் |
| செவ்வாய், புதனில் | - வடக்கில் நிற்கும் |
| ஞாயிறு, வெள்ளியில் | - மேற்கில் நிற்கும் |
| வியாழனில் | - தெற்கில் நிற்கும். வழிச் செலவு மேற்கொள்ளும் போது சூலம் நிற்கும் திசை பின்னும், இடமும் ஆயின் துன்பம் இல்லை, முன்னும் வலமும் ஆயின் மேல்வினை மேன் மேலே விளையும் |
| ஊர் புகுதல் | - முத்தி பெறுதல் / வீடுபேறடைதல் |
| சடை | - தவக் கோலத்தை உணர்த்தலால் பற்றின்மையைக் குறிக்கும் |

## திருச்சிற்றம்பலம்

**திருச்சிற்றம்பலம் என்பது ஒப்புயர்வில்லாத சிறந்த செந்தமிழ்த் தெய்வத்திருமந்திரமாகும். ஆதலினாலே சைவத் திருமுறைகளாகிய தமிழ்மறை மந்திரங்களை ஓதுங்கால் அவற்றின் முதலிலும் முடிவிலும் பிரணவ ஓங்கார மூலமந்திரப் பொருளாயுள்ள திருச்சிற்றம்பலம் என்னும் இம்மூலமந்திரத்தை முதலில் ஓதியே தொடங்குதலும் நிறைவு செய்தலும் தொன்றுதொட்டே வரும் மரபாகும்.**

| | |
|---|---|
| **சிற்றம்பலம்** | **- சிறுமை + அம்பலம் = ஞானாகாயம்** |
| **சிறுமை** | **- (சிவத்தை அறியும்) நுண்ணறிவு. பரஞானம், மெய்யுணர்வு** |
| **அம்பலம்** | **- ஆகாயம், குடிகொண்டிருக்குமிடம்** |
| **சிற்றம்பலம்** | **- ஞானமயமாகிய ஆகாயம் - பராசத்தி சோதிரூபம்** |
| **சிற்றம்பலம்** | **- என்பது தில்லைப் பெருங்கோயிலில் கூத்தப் பெருமான் வீற்றிருக்கும் இடமாகிய அம்பலம்.** |

**இது பிரணவப் பொருள் என்றும், ஓங்கார சொரூபம் என்றும், சுத்தமாயா சொரூபம் என்றும், பராசத்தி, பரஞான சொரூபம் என்றும், சொல்லும், பொருளுமாயுள்ள உலகுகள் யாவும் தோன்றி, நின்று ஒடுங்குதற்கு இடமாயுள்ளதென்றும், முத்தான்மாக்களின்**

உறைவிடமென்றும், இப்பூலகிற்கு நடுவிடம் என்றும், இறைவன் இடையறாமல் ஆடல்புரியும் உள்ளக்கமலமென்றும், யோக, ஞான தியானத் தானமென்றும் கூறப்படும்.

## தகரவித்தை

**மேற்காண் சிற்றம்பலத்தில், திருவைந்தெழுத்தே திருவுருவமாகக் கொண்டு ஓங்காரத்துள் விளங்கி ஆடல்புரியும் சிவபரம்பொருளை யோக, ஞான நெறிகளால் உணர்தலே தகரோபாசனை / தகரவித்தை என்றும் மறைகளின் முடிவான உபநிடதங்களில் சொல்லப்பட்டுள்ளன.**

**தகரம் - சிறுமை, நுண்மை. உபாசனை-உபாசித்தல். வழிபடுதல்,**

**வித்தை - அறிதல்**

**நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி**
**உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்**
**பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்**
**சிற்றம்பலம் என்று தேர்ந்து கொண்டேனே - திருமந்திரம் - 2770**

**அம்பலமானது அஞ்செழுத்தாமே - திருமந்திரம் - 2775**

**இவை போன்ற ஏராளமான நுட்பங்களைத் தொகுத்து வழிபாட்டு கருத்தரங்கம் நடத்தி, நூலாக வெளியிடத் திருவருள் கூட்டுவித்த நிலையில் ஏற்கனவே இருமாதங்களுக்கொருமுறை நிகழ்ந்த பன்னிரு திருமுறை ஆய்வுக் கருத்தரங்குகளை கீழ்க்கண்டவாறு நினைவு கூர்வோம்.**

| | |
|---|---|
| முதல் திருமுறை | டிசம்பர் 27, 28.2014 |
| இரண்டாவது திருமுறை | பிப்ரவரி 21, 22.2015 |
| மூன்றாம் திருமுறை | ஏப்ரல் 18, 19.2015 |
| நான்காம் திருமுறை | ஜீன் 27, 28.2015 |
| ஐந்தாம் திருமுறை | ஆகஸ்டு 29, 30.2015 |
| ஆறாம் திருமுறை | அக்டோபர் 24, 25-2015 |
| ஏழாம் திருமுறை | டிசம்பர் 26, 27-2015 |
| எட்டாம் திருமுறை - I | பிப்ரவரி 27, 28 - 2016 |
| எட்டாம் திருமுறை - II | ஏப்ரல் 23 - 2016 |
| ஒன்பதாம் திருமுறை | ஏப்ரல் 24 - 2016 |

அதன் வரிசையில் வரும் ஜுன் மாதத்தில் பத்தாம் திருமுறை கருத்தரங்கம் பாயிரம் முதல் மூன்று தந்திரங்களுடன் கீழ்க்கண்ட அட்டவணைப்படி நடைபெறும்.

**25.06.2016 சனி**

| வ. எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு–பொருள் |
|---|---|---|---|
| 1. | 25.06.2016 சனி காலை 9.00–11.00 | மகாவித்துவான் மயிலம் வே.சிவசுப்பிரமணியம் அவர்கள் | பாயிரம் : கடவுள் வாழ்த்து நுதலிய பொருள், நூற் சிறப்பு, குருபாரம்பரியம், தம் வரலாறு, அவையடக்கம், நூலின் அளவும் பயனும், குருமட வரலாறு **முதல் தந்திரம்:** சிவபரத்துவம், திரிமூர்த்திகளின் சேட்ட, கனிட்ட முறைமை, வேதச் சிறப்பு – 101 பாடல்கள் |
| 2. | 25.06.2016 சனி நண்பகல் 11.00–01.00 | பேராசிரியர் ம.வே. பசுபதி அவர்கள் | **முதல் தந்திரம்:** ஆகமச் சிறப்பு, உபதேசம், யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, உயிர் நிலையாமை, கொல்லாமை, புலால் மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர் இழிவு, நல்குரவு, அக்கினி காரியம் பாடல் 102 முதல் 222 வரை – 121 பாடல்கள் |
| 3. | 25.06.2016 சனி பிற்பகல் 02.00–04.00 | சிவத்திரு சொ.சொ.மீ. சுந்தரம் அவர்கள் | **முதல் தந்திரம் :** அந்தணர் ஒழுக்கம், அரசாட்சி முறை, வானச்சிறப்பு, தானச்சிறப்பு, அறஞ்செய்வான் திறம், அறஞ்செய்யான் திறம், அன்புடைமை, அன்பு செய்வாரை அறிவன் சிவன், கல்வி, கேள்வி கேட்டமைதல், கல்லாமை, நடுவு நிலைமை, கள்ளுண்ணாமை, பாடல் 223 முதல் 332 வரை – 110 பாடல்கள் |

| | | | |
|---|---|---|---|
| 4. | 25.06.2016<br>சனி மாலை<br>04.00–06.00 | சிவத்திரு<br>ப. குமரலிங்கம்<br>அவர்கள் | **இரண்டாம் தந்திரம் –**<br>அகத்தியம், பதிவலியில் வீரட்டம் எட்டு, இலிங்கபுராணம், தக்கன் வேள்வி, பிரளயம், சக்கரப்பேறு, எலும்பும் கபாலமும், அடிமுடி தேடல், சருவ சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம்<br>பாடல் எண் 333 முதல் பாடல் எண் 444 வரை – 112 பாடல்கள் |

**26.06.2016 ஞாயிறு**

| வ. எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு–பொருள் |
|---|---|---|---|
| 1. | 26.06.2016<br>ஞாயிறு<br>காலை<br>09.00–<br>11.00 | சிவத்திரு<br>சு.குஞ்சிதபாதம்<br>அவர்கள் | **இரண்டாம் தந்திரம் :** கர்ப்பக் கிரியை, மூவகைச் சீவவர்க்கம், பாத்திரம், அபாத்திரம், தீர்த்த உண்மை, திருக்கோயிற்குற்றம், அதோமுக தரிசனம், சிவநிந்தை கூடாமை, குருநிந்தை கூடாமை, மகேசுர நிந்தை கூடாமை, பொறையுடைமை, பெரியாரைத் துணைக்கோடல்<br>**மூன்றாம் தந்திரம்**<br>அட்டாங்கயோகம், இயமம், நியமம், ஆதனம்<br>பாடல் எண் 445 முதல் 551 வரை – 107 பாடல்கள் |
| 2. | 26.06.2016<br>ஞாயிறு<br>நண்பகல்<br>11.00–1.00 | சிவத்திரு<br>சிவ.காந்தி<br>அவர்கள் | **மூன்றாம் தந்திரம் :**<br>பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, அட்டாங்க யோகப்பேறு, அட்டமாசித்தி, பரஅணிமா, பரஅணிமா, பரலகிமா, பரமகிமா<br>பாடல் எண் 552 முதல் 662 வரை – 111 பாடல்கள் |

| 3. | 26.06.2016<br>ஞாயிறு<br>பிற்பகல்<br>02.00–<br>04.00 | பேராசிரியர்<br>புரிசை. நடராசன்<br>அவர்கள் | **மூன்றாம் தந்திரம் :**<br>பரப்பிராத்தி, பரகரிமா, பரப்பிராகாமியம், பராஈசத்துவம், பர வசித்துவம், திருவருட் சிறப்பு, கலைநிலை, காயசித்தி உபாயம், காலசக்கரம், ஆயுட் பரீட்சை<br>பாடல் எண் **663** முதல் **773** வரை – **111** பாடல்கள் |
|---|---|---|---|
| 4. | 26.06.2016<br>ஞாயிறு<br>மாலை<br>04.00–<br>6.00 | முதுமுனைவர்<br>ந.இரா.<br>சென்னியப்பனார்<br>அவர்கள் | **மூன்றாம் தந்திரம் :**<br>வாரசரம், வார சூலம், கேசரியோகம், பரியங்கயோகம், அமுரிதாரணை, சந்திரயோகம்<br>பாடல் எண் 774 முதல் **866** வரை – **93** பாடல்கள் |

இரண்டு திங்களுக்கு ஒருமுறை சுமார் 1500 பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்துக் கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும், முனைவர் ப. தமிழரசியைத் தலைவியாகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின், முனைவர் இரா. மதன்குமார், முனைவர் ச. கவிதா, முனைவர் பு. பிரபுராம், முனைவர் செ. ஆறுச்சாமி, செல்வி பா. சுமனா ஆகியோருக்கும், நூலாக்க ஒருங்கிணைப்புப் பணியில் செயலாற்றுகின்ற திரு. ப. வெள்ளிங்கிரி, திரு. ப. மணிசேகர், திரு. அ. இராமசாமி ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான திரு. மு. மகேஷ், திரு. து. சசி அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும் மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.panniruthirumurai.org என்ற இணைய முகவரியில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் அழைக்கின்றோம்.....

நன்றி,

அன்பன்,

10.05.2016 **இராச. வசந்தகுமார்**

கோவை - 21 வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்

## இதுவரை வெளிவந்துள்ள திருமந்திரப் பதிப்புகள்

| வ. எண் | காலம் | நூல் பெயர் | ஆசிரியர் , பதிப்பாளர் | பாடல்கள் |
|---|---|---|---|---|
| 1. | 1887 | திருமந்திரம் மூவாயிரம் | கொ. சண்முக சுந்தர முதலியார் | 3083 |
| 2. | 1897 | திருமந்திரம் | திருவாவடுதுறை சுப்பிரமணியத் தம்பிரான் பதிப்பு | 3083 |
| 3. | 1909 | திருமந்திரம் | திரு. வி. கல்யாண சுந்தரனார் பார்வை | 3083 |
| 4. | 1912 | திருமந்திரம் | மாவை வே. விசுவ நாதப் பிள்ளைப் பதிப்பு | 3048 |
| 5. | | திருமந்திரம் | வி. உலகநாத முதலியார், விவேக போதினி, மைலாப்பூர், சென்னை | |
| 6. | 1934 | திருமூலர் அருளிய திருமந்திரம் | எஸ். சங்கரலிங்க முதலியார் பார்வை, இரத்தின நாயக்கர் சன்ஸ், சென்னை | 3083 |
| 7. | 1940 | திருமந்திரம் | எஸ். வையாபுரிப் பிள்ளை, சைவ சித்தாந்த மகாசமாசம் | 3047 |
| 8. | 1942 | திருமந்திரம் மூவாயிரம் - ப.இராமநாதப் பிள்ளை (விளக்கம்) | துடிசைகிழார் அ. சிதம்பரனார் குறிப்புரை, சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் | 3000 |

| | | | | |
|---|---|---|---|---|
| | | மூலமும், உரையும் | 1942, 57, 63, 69, 75, 80, 94, 96 | |
| 9. | 1954 | கயிலாய சித்தர் உரை | திருவாவடுதுறை | |
| 10. | 1955 | சிவயோகப் பகுதி முதலியன | திருவாவடுதுறை | |
| 11. | 1957 | வைத்தியப் பகுதி | திருவாவடுதுறை | 3047 |
| 12. | 1959 | முதல் தந்திரம் | திருவாவடுதுறை | 336 |
| 13. | 1960 | இரண்டாம் தந்திரம் பஞ்சாட்சரதீப உரை | திருவாவடுதுறை | 213 |
| 14. | 1960 | மூன்றாம் தந்திரம் உரையுடன் | திருவாவடுதுறை | 335 |
| 15. | 1961 | திருமந்திர கட்டுரை இரண்டாம் தந்திரம் முற்பகுதி | திருவாவடுதுறை | |
| 16. | 1962 | திருமந்திர கட்டுரை இரண்டாம் தந்திரம் பிற்பகுதி | திருவாவடுதுறை | |
| 17. | 1962 | திருமந்திர கட்டுரை இரண்டாம் தந்திரம் கா்ப்பக்கிரியை | திருவாவடுதுறை | |
| 18. | 1962 | நான்காம் தந்திரம் உரையுடன் | திருவாவடுதுறை 1990, 1996 மறுபதிப்பு | 535 |
| 19. | 1963 | திருமந்திர கட்டுரை மூன்றாம் தந்திரம் முற்பகுதி | திருவாவடுதுறை | |

| | | | | |
|---|---|---|---|---|
| 20. | 1963 | ஐந்து, ஆறாம் திருமந்திரங்கள் உரையுடன் | திருவாவடுதுறை ஆதீனம் 1965, 1990, 1997 | 285 |
| 21. | 1966 | திருமூலர் திருமந்திரம் ஏழாந் தந்திரம் | திருவாவடுதுறை ஆதீனம் நான்காம் பதிப்பு 1967, 1991, 1997 மறுபதிப்பு | 418 |
| 22. | 1974 | திருமூலர் திருமந்திரம் ஒன்பதாம் தந்திரம் | திருவாவடுதுறை ஆதீனம் மூன்றாம் பதிப்பு 1975, 1993, 2002 மறுபதிப்பு | 233 |
| 23. | 1974 | திருமூலதேவ நாயனார் அருளிச் செய்த திருமந்திர மாலையாகிய திருமந்திரம் - பத்தாம் திருமுறை-I பொழிப்புரை, விளக்கக் குறிப்பு களுடன் 1, 2, 3 தந்திரங்கள் | தெளிவுரை, குறிப்பாசிரியர் முனைவர் சி. அருணை வடிவேல் முதலியார் - தருமபுரம் ஆதீனம் 1997, 2014 மறுபதிப்பு | 866 |
| 24. | 1976 | திருமந்திர மாலை | திருப்பனந்தாள் காசிமடம் | 3108 |
| 25. | 1978 | திருமந்திரம் விரிவுரை 1,2,3 இதுவரை 9 பதிப்புகள் | ஜி. வரதராசன் உரையுடன் பழனியப்பா பிரதர்ஸ் | 883 |
| 26. | 1983 | திருமந்திரம் 4, 5, 6- ஆம் தந்திரங்கள் இதுவரை 7 பதிப்புகள | ஜி. வரதராசன் உரையுடன் பழனியப்பா பிரதர்ஸ் சென்னை | 820 |

| | | | | |
|---|---|---|---|---|
| 27. | 1984 | திருமூலதேவ நாயனார் அருளிச் செய்த திருமந்திர மாலையாகிய திருமந்திரம் - பத்தாம் திருமுறை -II பொழிப்புரை விளக்கக் குறிப்பு களுடன் 4, 5, 6 ஆம் தந்திரங்கள் | தெளிவுரை, குறிப்பாசிரியர் முனைவர் சி. அருணை வடிவேல் முதலியார் - தருமபுரம் ஆதீனம் 1997-2014 மறுபதிப்பு | 815 |
| 28. | 1985 | திருமந்திரம் 7, 8, 9-ஆம் தந்திரங்கள் | ஜி. வரதராசன் உரையுடன் , இதுவரை 7 பதிப்புகள் | 1343 |
| 29. | 1990 | திருமந்திர மாலை முந்நூறு (மூலமும், உரையும்) | ந. சிவப்பிரகாச தேசிகர் - அண்ணாமலைப் பல்கலைக்கழகம் | 300 |
| 30. | 1990 | திருமந்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு | ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் | 14700 பிரதிகள், 3947 பாடல்கள் |
| 31. | 1991 | திருமந்திரம் ஆங்கில மொழிபெயர்ப்பு | முனைவர் பி. நடராஜன், அருட்செல்வர் நா. மகாலிங்கம் ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை | 3047 |
| 32. | 1995 | திருமூலதேவ நாயனார் அருளிச் செய்த திருமந்திர மாலையாகிய திருமந்திரம் - | தெளிவுரை, குறிப்பாசிரியர் முனைவர் சி. அருணை வடிவேல் முதலியார் - | 1320 |

| | | | | |
|---|---|---|---|---|
| | | பத்தாம் திருமுறை -III பொழிப்புரை விளக்கக் குறிப்பு களுடன் 7, 8, 9 தந்திரங்கள் | தருமபுரம் ஆதீனம்1995 - மறுபதிப்பு 1997, 2014 | |
| 33. | 1997 | திருமூலநாதர் அருளிய திருமந்திரம் என வழங்கும் சதாசிவ ஆகமம் -மூலபாட ஆய்வுப் பதிப்பு மூன்று தொகுதிகள் சுருக்கமான உரை | டாக்டர் சுப. அண்ணாமலை - இந்தியப் பண்பாடு ஆராய்ச்சி நிறுவனம், சென்னை - 3 பகுதிகள் 1997 முதல் பதிப்பு 2002 இரண்டாம் பதிப்பு | 2998 |
| 34. | 2001 | என்னை நன்றாக இறைவன் படைத்தனன் (கட்டுரை நூல்) | பன்னிரு திருமுறை ஆய்வு மையம், கற்பகம் கலை அறிவியல் கல்லூரி | சில உயிர்ப் பாடல்கள் உரை |
| 35. | 2001 | திருமந்திரம் மூலமும், தெளிவுரையும் | உரையாசிரியா் - புலவா் அ.மாணிக்கம் வா்த்தமானன் பதிப்பகம் - 3 பகுதிகள் முதல் பதிப்பு 2001, மறு பதிப்புகள் 2002, 2003, 2004, 2006 | 3047 |
| 36. | 2003 | திருமூலா் திருமந்திரம் | உரை ஆசிரியா் ஞா. மாணிக்க வாசகன், உமா பதிப்பகம், சென்னை | 3047 |
| 37. | 2003 | திருமூலா் திருமந்திரம் எட்டாந் தந்திரம் | திருவாவடுதுறை ஆதீனம் மூன்றாம் பதிப்பு | 526 |
| 38. | 2004. | திருமந்திர ஆராய்ச்சிக் கட்டுரைகள் | புதுக்கோட்டை திலகவதியாா் ஆதீனம் | |

| | | | | |
|---|---|---|---|---|
| 39. | 2005 | திருமந்திர ஆய்வுரைக் களஞ்சியம் | திலகவதியார் ஆதீனம் புதுக்கோட்டை (பல ஆசிரியர்களின் கட்டுரைகள்) | |
| 40. | 2009 | திருமூலர் அருளிய திருமந்திரம் பத்தாம் திருமுறை | பிரேமா பிரசுரம், சென்னை | 3069 |
| 41. | 2014 | திருமூலர் அருளிய திருமந்திரம் | தமிழக சைவ நெறிக்கழகம், திருச்சி, இலவச வெளியீடு பாடல்கள் | 3047 |
| 42. | 2014 | திருமந்திரச் சொல்லகராதி (பாடல்களுடன்) | முனைவர் புலவர் மணியன் அருட்செல்வர் ந. மகாலிங்கம், இராமானந்த அடிகளார் அறக்கட்டளை | 3000 |
| 43. | ஜூன் 2016 | திருமூலர் திருமந்திரம் -I பத்தாம் திருமுறை (முதல் மூன்று தந்திரங்கள்) | டாக்டர் இராச. வசந்தகுமார், பன்னிரு திருமுறை ஆய்வுமையம் கற்பகம் பல்கலைக் கழகம், கோவை-21 | 866 |

நமது பத்தாம் திருமுறை நூலின் முதல் பகுதியை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குருமகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மனமுவந்த நன்றிகள்.



உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

# திருமூலநாயனார் வரலாறு

சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பத்தாந் திருமுறையெனப் போற்றப்பெறும் திருமந்திரமாலையாகிய அருள்நூலை அருளிச்செய்தவர் சிவயோகியராய் விளங்கிய திருமூல நாயனாராவார். இவ்வாசிரியரை

'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்'

என நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகையிற் பரவிப் போற்றியுள்ளார். பன்னாளும் சிவயோக பரம்பரையில் விளங்கிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் கொண்டொழுகிய சிவயோக நெறிக்கு முதல்வராய் விளங்கிய திருமூல நாயனாரை 'நம்பிரான் திருமூலன்' எனக் குறித்துப் போற்றியுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும். சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகையின் வகைநூலாகத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடியருளிய நம்பியாண்டார் நம்பிகள்,

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெ னுச்சி
அடிமன்ன வைத்த பிரான் மூல னாகிய அங்கணனே.

(திருவந்தாதி – 37)

எனவரும் திருப்பாடலில் திருமூல நாயனாரது வரலாற்றை வகுத்துக் கூறியுள்ளார். "நாற்குடிகள் நிலைபெற்று வாழும் சாத்தனூரிலே பசுக் கூட்டத்தை மேய்ப்போனாகிய இடையனது உடம்பிற் புகுந்து, சென்னியிலே நிலைபெற்ற வளைந்த பிறைச்சந்திரனை யணிந்த சிவபெருமானை (நாற்பொருள்களாற் குறைவின்றி நிறைந்த) முழுமை வாய்ந்த தமிழிற் கூறியவண்ணமே நிலைத்த வேதங்கள் சொல்லியபடியே பரவிப் போற்றி எனது தலையிலே தன் திருவடியினை நிலைபெறச் செய்தருளிய பெரியோன் திருமூலன் என்னும் பெயரையுடைய அருளாளனாவன்" என்பது திருப்பாடலின் பொருளாகும்.

இதன்கண், 'பரவிட்டு' என்னும் வினையை, 'முழுத்தமிழின்படி பரவிட்டு' எனவும், 'வேதத்தின் சொற்படியே பரவிட்டு' எனவும், ஈரிடத்தும் சென்றியையும்படி நம்பியாண்டார் நம்பிகள் கூறியிருத்தலால், திருமூலநாயனார் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள்களும் நிரம்பப்பெற்ற

தமிழ் மறைகளையும், வடமொழி வேதங்களையும் தழுவித் தமிழாகமம் எனப் போற்றப்படும் வகையில், இத்திருமந்திரப் பனுவலை இயற்றியருளினார் என்னும் மெய்ம்மை இனிது புலனாகும். அம்மையப்பனாகிய சிவபெருமான், தமிழும், ஆரியமும் ஆகிய இரு மொழிகளிலும் ஒப்ப அமையும்படி ஞானநூற் பொருள்களை உமாதேவியார் கேட்கத் திருவாய் மலர்ந்தருளினான் என்பதனை,

மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
ஆரிய முந்தமி ழும்உட னேசொலிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே. (திருமந்திரம் – 109)

எனவரும் திருப்பாடலில் திருமூல நாயனார் தெளிவாகக் குறித்துள்ளார். இக்குறிப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் முற்காலத்தில் இறைவனால் அருளிச் செய்யப்பெற்ற சிவாகமங்கள் தமிழிலும் வடமொழியிலும் ஒப்ப அமைந்துள்ளன என்பது நன்கு விளங்கும். இவ்வாறு இறைவனியல்பினை உலக மாந்தர் உணர்ந்து உய்திபெறும் வண்ணம் தமிழிலும் வடமொழியிலும் இறைவனூலாகிய அருள் நூல்கள் அமைந்திருந்தன என்பதனை,

அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறுஞ்
சிமிழ்த்தலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலு மாமே. (திருமந்திரம் – 110)

என ஆகமச் சிறப்புணர்த்தும் பகுதியில் ஆசிரியர் விளங்கக் கூறியுள்ளார். அன்றியும் திருமந்திரம் நாலாந்தந்திரத்துள் 'வயிரவி மந்திரம்' என்ற பகுதியில்,

அந்தம் நடுவிரல் ஆதி சிறுவிரல்
வந்த வழிமுறை மாறி உரைசெய்யும்
செந்தமி ழாதி தெளிந்து வழிபடும்
நந்தி இதனை நவம்உரைத் தானே. (திருமந்திரம் – 1072)

எனத் திருமூலர் அறிவுறுத்தியருளுதலால் அவ் வழிபாட்டுக்குரிய மந்திரம் வடமொழியில் மட்டுமின்றித் தமிழிலும் அமைந்திருந்தமை நன்கு தெளியப்படும். திருமந்திரம் அருளிய திருமூல நாயனார் தமது வரலாறு கூறுவதாக அமைந்த பாயிரப் பகுதியில்,

நந்தி யிணையடி நான் தலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றி செய்து
அந்தி மதிபுனை அரனடி நாள்தோறும்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே. (திருமந்திரம் – 12)

எனவும்,

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே (திருமந்திரம் – 20)

எனவும் வரும் ஆசிரியர் வாய்மொழிகள், இந்நூல் தமிழாகமமாக அருளிச் செய்யப்பெற்ற தென்பதனை இனிது புலப்படுத்துவனவாகும்.

சதாசிவ தத்துவம் முத்தமிழ் வேத
மிதாசனி யாதிருந்தே னின்ற காலம் (திருமந்திரம் – 15)

எனவும்,

தமிழ் மண்டலம் ஐந்துந் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகந் திரிவர்
அவிழு மனமும் எம் ஆதி யறிவுந்
தமிழ் மண்டலம் ஐந்துந் தத்துவ மாமே. (திருமந்திரம் – 1624)

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகள், திருமந்திரத்திற் கூறப்படுந் தத்துவ வுண்மைகள் செந்தமிழ் நாட்டில் வாழ்ந்த சிவஞானிகளால் அருளிச் செய்யப்பெற்ற சிறப்புடையனவாதலை நன்கு வலியுறுத்துவனவாகும்.

வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே (திருமந்திரம் – 2362)

எனவும்,

வேதத்தை விட்ட அறம் இல்லை வேதத்தின்
ஓதத் தகும் அறம் எல்லாம் உள தர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளம் உற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே. (திருமந்திரம் – 96)

எனவும்,

அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத்து அறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே. (திருமந்திரம் – 102)

எனவும்,

பரனாய்ப் பராபரங் காட்டி உலகில்
தரனாய்ச் சிவதன்மந் தானேசொல் காலத்
தரனாய் அமரர்கள் அற்சிக்கும் நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கிநின் றானே. (திருமந்திரம் – 105)

எனவும் இந்நூலில் ஆசிரியர் வேதநூற் பொருள்களையும் ஆகமநூற்

பொருள்களையும் இறைவனூற் பொருள் எனக்கொண்டு, வேத சிவாகமங்களாகிய அவற்றைப் பொதுவும், சிறப்புமாகப் பொருளியைபு பெற எடுத்துரைத்தலால், வடமொழி வேதத்தைப் பொது நூலாகவும், தமிழிலும் வடமொழியிலும் உள்ள சிவாகமங்களைச் சிறப்பு நூலாகவும் கொண்டு இவ்விருதிறப் பொருள்களும் ஒருங்கமைய அருளிச் செய்யப்பெற்ற செந்தமிழ்ச் சிவாகமம் இத்திருமந்திரம் என்பது நன்கு துணியப்படும். இந்நூட்பத்தினை விளக்குதற் பொருட்டே, 'முழுத்தமிழின்படி, மன்னு வேதத்தின் சொற்படியே பரவிட்டு என்னுச்சி அடிமன்ன வைத்தபிரான் மூலனாகிய அங்கணன்' என நம்பியாண்டார் நம்பிகள் திருமூல நாயனாரைக் குறித்துப் போற்றியுள்ளார் எனக் கருதுதல் பொருத்தமுடையதாகும்.

திருத்தொண்டத் தொகையாகிய முதல் நூல், திருமூலரது பெயரும் சிவயோகப் பண்பும் எடுத்துரைத்தது. அதன் வகை நூலாகிய திருவந்தாதி, திருமூலரது உடம்பு, சாத்தனூரிற் பிறந்து ஆனிரை மேய்ப்போனாகிய இடையனுடையதெனவும், இவ்வாசிரியர் அவ்வுடம்பிற் புகுந்து சிவாகம வேதப் பொருள்களைத் தமிழால் அருளிச் செய்த அருளாளர் எனவும், அவர்தம் ஊரும், பேரும், அருட்பண்பும், ஞான நூலருளிய திறமும், பிறவும் வகுத்துக் கூறுகின்றது. திருத்தொண்டத் தொகையின் விரிநூலாகச் சேக்கிழாரடிகள் தாம் இயற்றிய பெரியபுராணத்தில் திருமூலரது வரலாற்றினை 28 செய்யுட்களால் விரித்துக் கூறியுள்ளார்.

திருக்கயிலாயத்திலே சிவபெருமானது திருக்கோயிலுக்கு முதற் பெருங்காவல் பூண்ட திருநந்தி தேவரது திருவருள் பெற்ற மாணாக்கருள் ஒருவராய், அணிமா முதலிய எண்வகைச் சித்திகளும் கைவரப்பெற்ற சிவயோகியார் ஒருவர், அகத்திய முனிவர்பாற் கொண்ட நண்பினாலே அவருடன் சில நாள் தங்குதற்கு எண்ணி, அம்முனிவர் எழுந்தருளிய பொதியமலையை அடைதற்பொருட்டுத் திருக்கயிலையினின்றும் புறப்பட்டுத் தென்திசை நோக்கி வந்தார். வருவழியில் திருக்கேதாரம், பசுபதிநேபாளம், அவிமுத்தம் (காசி), விந்தலை, திருப்பருப்பதம், திருக்காளத்தி, திருவாலங்காடு ஆகிய திருத்தலங்ளைப் பணிந்தேத்திக் காஞ்சி நகரையடைந்து திருவேகம்பப் பெருமானை இறைஞ்சிப் போற்றி அந்நகரிலுள்ள சிவயோகியர்களாகிய தவ முனிவர்களுடன் அன்புடன் அளவளாவி மகிழ்ந்தார். பின்னர்த் திருவதிகையை யடைந்து, புரமெரித்த பெருமானை வழிபட்டுப் போற்றி, இறைவன் அற்புதத் திருக்கூத்தாடியருளும் திருவம்பலத்தினைத் தன்னகத்தே கொண்டு திகழும் பொற்பதியாகிய பெரும்பற்றப்புலியூர் வந்தடைந்தார். எல்லாவுலகங்களும் உய்யும்படி ஐந்தொழில் திருக்கூத்தியற்றியருளும் கூத்தப் பெருமானை வணங்கித் துதித்துச் சிந்தை களிகூர்ந்த சிவயோகியார், பசுகரணங்கள் சிவகரணங்களாகிய தூய நிலையில் தம்முள்ளகத்தே பொங்கியெழுந்த சிவபோதமாகிய மெய்யுணர்வினால் சிவானந்தத் திருக்கூத்தினைக் கண்டுகளித்த ஆராத பெருவேட்கையினால் அத்திருத்தலத்தில் தங்கியிருந்தார்.

தில்லைத் திருநடங் கண்டு மகிழ்ந்த சிவயோகியார், அங்கிருந்து புறப்பட்டுக் காவிரியில் நீராடி அதன் தென்கரையினை யடைந்து, உமையம்மையார் பசுவின் கன்றாக இருந்து இறைவனை வழிபாடு செய்து அம்முதல்வனுடன் எழுந்தருளியிருந்து அருள் புரியும் திருவாவடு துறையினையணுகித் திருக்கோயிலை வலம்வந்து பசுபதியாகிய இறைவனை வழிபட்டு, அத்திருப்பதியினை விட்டு நீங்காததொரு கருத்துத் தம்முள்ளே தோன்ற அங்கே தங்கியிருந்தார். ஆவடுதுறை யிறைவரை வழிபடுதலின் ஆராத பெருங் காதலையுடைய சிவயோகியார், அத்தலத்தை யகன்று செல்லும்பொழுது காவிரிக் கரையிலுள்ள பொழிலிடத்தே பசுக் கூட்டங்கள் கதறி அழுவதனை எதிரே கண்டார். அந்தணர்கள் வாழும் சாத்தனூரிலே தொன்றுதொட்டு ஆனிரை மேய்க்கும் குடியிற் பிறந்த ஆயனாகிய மூலன் என்பான் அங்குத் தனியே வந்து பசுக்களை மேய்ப்பவன். தான் எடுத்த பிறவிக்குக் காரணமாகிய வினைகள் நுகர்ந்து தீர்ந்தமையால் அவனது வாழ்நாளைக் கூற்றுவன் வந்து கவர்ந்துகொள்ள, உயிர் நீங்கி, அங்கு நிலத்தில் வீழ்ந்து இறந்தான். அவனால் மேய்க்கப்பெற்ற பசுக்கள் உயிர் நீங்கிய அவனது உடம்பினைச் சுற்றச் சுழன்று மோப்பனவும் கதறுவனவுமாக வருந்தின.

மேய்ப்பவன் இறந்தமையால் பசுக்களடைந்த துயரத்தினைக் கண்ட அருளாள ராகிய சிவயோகியாரது உள்ளத்தில் 'இப்பசுக்கள் உற்ற துயரத்தை நீக்குதல் வேண்டும்' என்றதோர் எண்ணம் இறைவர் திருவருளால் தோன்றியது. 'இந்த இடையன் உயிர் பெற்றெழுந்தாலான்றி இப்பசுக்கள் துயரம் நீங்கா' எனத் திருவுளத்தெண்ணிய தவமுனிவர், தம்முடைய திருமேனியைப் பாதுகாவலானதோரிடத்து மறைத்து வைத்துவிட்டுக் கூடுவிட்டுக் கூடுபாய்தல் (பரகாயப்பிரவேசம்) என்னும் வழியினாலே தமது உயிரை அவ்விடையனது உடம்பிற் புகுமாறு செலுத்தித் திருமூலராய் எழுந்தார். எழுதலும், பசுக்களெல்லாம் தம் துயரம் நீங்கி அன்பினால் அவரது உடம்பினை நாத்தழும்ப நக்கி மோந்து கனைத்து மிகுந்த களிப்பினாலே வாலெடுத்துத் துள்ளிக் கொண்டு தாம் விரும்பிய இடத்திற் சென்று புல் மேய்ந்தன. திருமூலநாயனார் அதுகண்டு திருவுளம் மகிழ்ந்து ஆனிரைகள் மேயுமிடங்களிற் சென்று நன்றாக மேய்த்தருளினார். வயிறார மேய்ந்த அப்பசுக்கள், கூட்டமாகச் சென்று காவிரியாற்றின் முன் துறையிலே யிறங்கி நன்னீர் பருகிக்கரையேற, அப்பசுக்கள் குளிர்ந்த நிழலிலே தங்கி இளைப்பாறும்படி செய்து பாதுகாத்தருளினார்.

சூரியன் மேற்றிசையை யணுக மாலைப்பொழுது வந்தது. பசுக்கள் தத்தம் கன்றுகளை நினைத்துத் தாமே மெல்ல நடந்து சாத்தனூரை அடைவனவாயின. அப்பசுக்கள் செல்லும் வழியிலே தொடர்ந்து பின் சென்ற சிவயோகியார்,

பசுக்கள் யாவும் தத்தமக்குரிய வீடுகளிற் சென்று சேர்ந்த பின்னர் அவ்வூர் வழியில் தனியே நிற்பாராயினர்.

அந்நிலையில், மூலனுடைய மானமிகு மனையறக் கிழத்தியாகிய நங்கை, 'என் கணவர் பொழுது சென்ற பின்னரும் வரத் தாழ்த்தனரே, அவர்க்கு என்ன நேர்ந்ததோ?' என்று அஞ்சியவளாய்த் தன் கணவனைத் தேடிக் கொண்டு எதிர் செல்பவள், சிவயோகியார் நின்ற இடத்தை யடைந்தாள். தன் கணவனது உடம்பிற் றோன்றிய உணர்வு மாற்றத்தைக் கண்டு 'இவர்க்கு ஏதோ தீங்கு நேர்ந்திருத்தல் வேண்டும்' என்று எண்ணி, அவரைத் தளர்வின்றி இல்லத்திற்கு அழைத்துச் செல்லும் கருத்துடன் அவரைத்தொடுதற்கு நெருங்கினாள். திருமூலராகிய சிவயோகியார், அவள் தம்மைத் தீண்ட வொண்ணாதவாறு தடுத்து நிறுத்தினார். தன் கணவனையன்றி மக்கள் முதலிய நெருங்கிய சுற்றத்தார் ஒருவருமின்றித் தனியளாகிய அவள், அவரது தொடர்பற்ற நிலைகண்டு அஞ்சி மனங்கலங்கினாள். 'நும் அன்புடைய மனைவியாகிய எளியேனை வெறுத்து நீங்குதலாகிய இதனால் எனக்கு எத்தகைய பெருந்துன்பத்தைச் செய்து விட்டீர்' என்று கூறிப் புலம்பி வாட்டமுற்றாள். அந்நிலையில் நிறைதவச் செல்வராகிய திருமூலர், அவளை நோக்கி, நீ எண்ணியவாறு இங்கு உனக்கு என்னுடன் எத்தகைய உறவும் இல்லை' எனக் கூறிவிட்டு, அவ்வூரில் அருந்தவர் பலரும் தங்கியிருத்தற்கென அமைந்துள்ள பொதுமடத்திற் புகுந்து சிவயோகத்து அமர்ந்திருந்தார்.

தன் கணவனது தன்மை வேறுபட்டதனைக் கண்ட மூலனின் மனைவி, அதுபற்றி யாரிடத்தும் சொல்லாமலும், தவநிலையினராகிய அவர்பால் அணையாமலும், அன்று இரவு முழுதும் உறங்காதவளாய்த் துயருற்றாள். பொழுது விடிந்ததும், தன் கணவர் நிலையை அவ்வூரிலுள்ள நல்லோர்பால் எடுத்துரைத்தாள். அது கேட்ட சான்றோர், திருமூலரையணுகி அவரது நிலைமையை நாடி, 'இது பித்தினால் விளைந்த மயக்கமன்று, பேய் கோட்படுதல் முதலாகப் பிறிதொரு சார்பால் உளதாகியதும் அன்று, சித்தவிகாரக கலக்கங்களையெல்லாம் அறவே களைந்து தெளிவு பெற்ற நிலையில் சிவயோகத்தில் அழுந்திய கருத்து உடையவராய் இவர் அமர்ந்துள்ளார். இந்நிலைமை யாவராலும் அளந்தறிதற்கரியதாம் எனத் தெளிந்தனர். "இவர் இருவகைப் பற்றுகளையும் அறுத்து ஞானோபதேசத்தால் பரமர் திருவடியைப் பெற்ற சீவன் முத்தர்களைப் போன்று எல்லாவற்றையும் ஒருங்கேயறியவல்ல முற்றுணர்வுடையவராக விளங்குகின்றார். ஆகவே முன்னை நிலைமைப்படி உங்கள் சுற்றத் தொடர்பாகிய வாழ்க்கையில் ஈடுபடுவார் அல்லர்" என மூலன் மனைவிக்கு எடுத்துரைத்தார்கள். அதுகேட்ட அவள், அளவிலாத் துயரத்தால் மயக்குற்றாள். அருகேயுள்ளவர்கள் அவளைத் தேற்றி அவளது மனைக்கு அழைத்துச் சென்றார்கள்.

சாத்தனூர்ப் பொதுமடத்தில் சிவயோகத்தில் அமர்ந்திருந்த திருமூலர், யோகுகலைந்து எழுந்து, முதல்நாளில் பசுக்கள் வந்த வழியினையே நோக்கிச் சென்று, தமது உடம்பினை மறைத்து வைத்த இடத்தை அடைந்து, தம் உடம்பைத் தேடிப் பார்த்தார். வைத்த இடத்தில் அவ்வுடம்பு காணப்படவில்லை. அது மறைந்துபோன செயலை மெய்யுணர்வுடைய சிந்தையில் ஆராய்ந்து தெளிந்தார். பிறைமுடிக்கண்ணிப் பெருமானாகிய இறைவன், உயிர்களிடம் வைத்த பெருங்கருணையாலே அருளிய சிவாகமங்களின் அரும் பொருள்களை இந்நிலவுலகில் திருமூலரது வாக்கினால் தமிழிலே வகுத்துரைக்கக் கருதிய திருவருட்றிறத்தால் சிவயோகியரது முந்தைய உடம்பினை மறைப்பித்தருளினார். இம்மெய்மையினைத் திருமூலர் தமது முற்றுணர்வினால் தெளியவுணர்ந்தார். அந்நிலையில் தம்மைப் பின்தொடர்ந்து வந்த ஆயர்குலத்தவர்கட்கும் தமக்கும், எத்தகைய தொடர்பும் இல்லையென்பதை, அவர்கட்கு விளங்க அறிவுறுத்தருளினார்; அவர்கள் எல்லாரும் தம்மைவிட்டு நீங்கியபின், சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்து அவ்விடத்தை விட்டகன்று திருவாவடுதுறைத் திருக்கோயிலை அடைந்தார். அத்திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் அம்மையப்பராகிய இறைவரை வணங்கி அத்திருக்கோயிலின் மேற்கில் மதிற்புறத்தேயுள்ள அரச மரத்தின்கீழ்த் தேவாசனத்தில் சிவயோகத்து அமர்ந்து, உள்ளக் கமலத்தில் வீற்றிருந்தருளும் அரும்பொருளாகிய சிவபரம் பொருளோடு இரண்டறக்கூடி ஒன்றியிருந்தார்.

இங்ஙனம் சிவயோக நிலையில் அமர்ந்திருந்த திருமூலநாயனார் ஊனோடு தொடர்ந்த இப்பிறவியாகிய தீய நஞ்சினாலுளவாம் துயரம் நீங்கி இவ்வுலகத்தார் உய்யும் பொருட்டு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளும், நால்வகை மலர்களாக விரிந்து விளங்கும் நல்ல திருமந்திர மாலையாகிய நூலை இறைவன் திருவடிக்குப் பணித்துப் போற்றும் நிலையில்,

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே

என்னும் திருப்பாடலைத் தொடங்கி ஓராண்டுக்கு ஒரு திருப்பாடலாக இவ்வாறு மூவாயிரம் ஆண்டுகள் இவ்வுலகில் சிவயோக நிலையில் அமர்ந்திருந்து, மூவாயிரம் திருப்பாடல்கள் அருளிச்செய்து, தமிழ் மூவாயிரமாகிய திருமந்திரத் திருமுறையினை நிறைவுசெய்து, சிவபெருமான் திருவருளாலே திருக்கயிலை அடைந்து, அம்முதல்வனுடைய திருவடி நீழலில் என்றும் பிரியாதுறையும்

பேரின்பப் பெருவாழ்வினைப் பெற்று இனிதிருந்தார். திருமூலர் அருளிய திருமந்திரமாலை நலஞ்சிறந்த ஞான யோகக் கிரியா சரியையெலாம் மலர்ந்த மொழி மாலையாகத் திகழ்கின்றது.

இவ்வாறு சேக்கிழார் பெருமான் திருமூலரது வரலாற்றினை விரித்துக் கூறியுள்ளார். பெரியபுராண ஆசிரியர் விரித்துக்கூறிய இவ்வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றுக்குத் திருமூலநாயனார் அருளிய திருமந்திர மாலையில் நூலாசிரியராகிய அம்முனிவர்தம் வரலாறு கூறும் முறையிற்பாடியருளிய திருமந்திரப் பாடல்கள் அகச்சான்றுகளாக அமைந்துள்ளன.

மூலனுடம்பிற் புகுந்து தமிழ் மூவாயிரம் அருளிய முனிவர்பிரான், திருக்கயிலாயத்தில் நந்தியெம்பெருமான்பால் ஞானோபதேசம் பெற்ற நான்மறை யோகிகளுள் ஒருவர் என்றும், அவர் பொதியமலையில் எழுந்தருளியிருந்து அகத்திய முனிவரைக்கண்டு அளவளாவும் விருப்பம் உடையராய்த் தென்றிசை நோக்கிச் செல்லும் வழியில் சாத்தனூரையடுத்துக் காவிரியின் தென்கரையிலுள்ள சோலையில் ஆக்களை மேய்ப்போனாகிய மூலன் என்னும் பெயருடைய இடையன் இறந்துபட அந்நிலையில் அவனால் மேய்க்கபெற்ற பசுக்கள் அவனுடம்பைச் சுற்றிக்கதறி வருந்தின என்றும், அப்பசுக்களின் துயரத்தை நீக்கத் திருவுளங் கொண்ட அருளாளராகிய சிவயோகியார், தம் உடம்பினைப் பாதுகாப்பாக ஓரிடத்தில் மறைத்து வைத்துவிட்டுத் தாம் கற்றறிந்த பரகாயப் பிரவேசம் (கூடு விட்டுக் கூடு பாய்தல்) என்னும் சித்தித்திறத்தால் தமது உயிரை மூலனது உடம்பிலே புகச் செய்து திருமூலராய் எழுந்தார் என்றும், திருத்தொண்டத்தொகைக்கு வகைநூல் செய்த நம்பியாண்டார் நம்பிகளும், விரிநூல் செய்த சேக்கிழார் அடிகளும் தெளிவாகக் கூறியிருத்தலால், திருமந்திர நூலாசிரியருக்குத் திருமூலர் என வழங்கும் இப்பெயர் அவர் மூலனுடம்பிற் புகுந்தபின்னரே உளதாயிற்று என்பது நன்கு புலப்படும்.

நந்தி திருவருள் பெற்ற நான்மறையோகியராய் இருந்த இவர் தம் முன்னை நிலையில் இவர் பிறந்த ஊர், குடி, பேர் முதலியவற்றை அறிந்து கொள்ளுதற்கேற்ற வரலாற்றுச் சான்றுகள் தெளிவாகக் கிடைக்காமையால், அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் அடிகள், சிவயோகியார் திருமூலராதற்கு முன்னுள்ள அவர்தம் ஊர், பேர், குலம் முதலிய வரலாற்றுச் செய்திகளைக் குறித்து எதுவும் கூறாது விட்டார்.

திருமூலராகிய சிவயோகியார் திருக்கயிலையில் நந்திதேவர்பால் ஞானநூற் பொருள்களை ஓதியுணர்ந்த நான்மறை யோகிகளுள் ஒருவர் என்பது,

நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே. **(திருமந்திரம் – 6)**

எனவரும் அவர்தம் வாய்மொழியால் நன்கு தெளியப்படும். நந்தி தேவரின் உபதேசத்தைப் பெற்ற சிவயோகியார் ஒருவர் இருந்தார். அவர் அட்டமா சித்திகளையும் கைவரப் பெற்றவர் என்பதும், ஆவுறுதுயரத்தினை நீக்குதற் பொருட்டே, இறைவன் அருளின்வழி, மூலன் என்னும் ஆயனது உடம்பிற் புகுந்து பசுக்களைச் சாத்தனூரிற் செலுத்தி மீண்டுவந்து தமது பழைய உடம்பினை வைத்த இடத்தில் வந்து பார்த்தபொழுது, அவ்வுடம்பினை இறைவன் மறைத்தருளினனாக, அவ்வுடம்பினைக் காணாதவராய், முன்னையுடம்பினாற் பயனில்லையெனவுணர்ந்து இறைவன் திருக்குறிப்பின் வண்ணம் மூலனுடம்பிலே நெடுங்காலம் விரும்பித் தங்கியிருந்தனர் என்பதும்,

அரிய தெனக்கில்லை அட்டமா சித்தி
பெரிதருள் செய்து பிறப்பறுத் தானே **(திருமந்திரம் – 626)**

எனவும்,

குரவன் அருளிற் குறிவழி மூலன்
பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத்
தெரிதரு சாம்பவி கேசரி சேரப்
பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே **(திருமந்திரம் – 627)**

எனவும்,

நந்தி யருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி யருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி யருளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தி யருளாலே நானிருந் தேனே. **(திருமந்திரம் – 20)**

எனவும் அமைந்த திருமூலர் வாய்மொழிகளால் நன்கு விளங்கும். மேற்கண்ட பாடலில் 'நந்தி அருளாலே' எனத் திருமூலர் சுட்டியது, இறைவனால் மறைக்கப்பட்ட தமது பழைய உடம்பினை. இவ்வாறு, இறைவன் தமது பழைய உடம்பினை மறைத்து மூலன் என்னும் ஆயனுடம்பிற் புகச்செய்தருளிய இப்படைப்புத் தொழில், அம்முதல்வனது பொருள்சேர் புகழ்த்திறங்களைத் தமிழ்ப் பாக்களால் நன்றாகப் புனைந்து போற்றுதற்கேற்ற நலந்தரும் வாழ்வினை நல்கியதென வுணர்ந்த சிவயோகியார், பரகாயப் பிரவேசம் என்னும் சித்தித்திறத்தால் தாம் புகுந்திருந்த மூலனுடம்பினை "எனது முன்னைத்

தவத்தின் பயனாக, எனக்கு இறைவனால் நன்றாகத் திருத்தமுறச் செய்தளிக்கப்பட்ட நல்ல படைப்பு இதுவாகும்" எனக் கொண்டு போற்றி மகிழ்ந்தனர் என்பது,

> பின்னை நின்றென்னே பிறவி பெறுவது
> முன்னை நன்றாக முயல்தவஞ் செய்திலர்
> என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
> தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே. **(திருமந்திரம் – 20)**

எனத் தமிழ்மாலைகளால் இறைவனைப் போற்றி மகிழும் நிலையில் தாம் பெற்றுள்ள உடம்பினை ஆசிரியர் பாராட்டி மகிழ்தலாற் புலனாம்.

இறைவன் திருவருளால் மூலனுடம்பிற்புக்க சிவயோகியார், திருவாவடு துறைத் திருக்கோயிலை அடைந்து அங்கு எழுந்தருளிய அம்மையப்பர் திருவடிகளைப் போற்றிப் பரவி, அத்திருக்கோயிலை அடுத்துள்ளோர் சிவபோதியாகிய அரசமரத்தின் நீழலில் எண்ணில்லாத பல்லாண்டுகள் சிவயோகத்தில் அமர்ந்திருந்தார் என்பது,

> சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
> சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
> சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்
> சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. **(திருமந்திரம்–18)**

எனவும்,

> இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி
> இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
> இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
> இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. **(திருமந்திரம்–19)**

எனவும்,

> ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
> ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
> ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
> நானு மிருந்தேன்நற் போதியின் கீழே. **(திருமந்திரம்–21)**

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் இனிது புலனாம். இத்திருப்பாடலில் 'நந்திநகர்' என்றது திருவாவடு துறையினை,

சைவ சமயத் தனிநாயகனாகிய இறைவனுடைய திருவடிகளை

இறைஞ்சிச் சிவயோகத்தமர்ந்து அம்முதல்வனருளிய சிவாகமப் பொருளை விரித்துரைக்கத் திருவுளங்கொண்ட திருமூலர், இறைவன் திருவருளை இடைவிடாது சிந்தித்திருந்து தமிழ் மூவாயிரமாகிய மந்திரப்பனுவலை அருளிச் செய்தார் என்பதும், இவ்வருள் நூலுக்குத் திருமூலர் இட்ட பெயர் திருமந்திர மாலை என்பதும்,

> நந்தி யிணையடி நான் தலை மேற்கொண்டு
> புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றி செய்
> அந்தி மதிபுனை அரனடி நாள்தோறும்
> சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே. **(திருமந்திரம்–12)**

எனவும்,

> பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
> சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
> மறப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலை
> உறைப்பொடுங் கூடிநின் றோதலு மாமே. **(திருமந்திரம்–25)**

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் நன்கு புலனாம்.

தவமுனிவராகிய திருமூலர் தமிழாகமமாகிய இந்நூலை அருளிச் செய்த காலத்தில் தமிழ்மொழியிற் சைவ சமய நுண்பொருள்களை விரித்துரைக்கும் சாத்திர நூல்கள் சிலவாக அருகிக் காணப்பட்டன. ஆயினும், அந்நூல்களில் இல்லாத பொருள்கள் வேறெங்கும் இல்லை என்னும்படி, உலக மக்கள் உணர்ந்து உய்திபெறுதற்குரிய அரும் பொருள்கள் அனைத்தும் இறைவனருளால் நிரம்பியிருந்தன. இவ்வுண்மையினை,

> அங்கி மிகாமை வைத்தான் உடல்; வைத்தான்
> எங்கும் மிகாமை வைத்தான் உலகு ஏழையும்;
> தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச்சாத்திரம்
> பொங்கி மிகாமை வைத்தான் பொருள்தானுமே. **(திருமந்திரம்–26)**

எனவரும் திருப்பாடலில் திருமூலர் தெளிவாக வெளியிட்டருளிய திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

அகத்தியமுனிவரைக் காண விரும்பித் திருக்கயிலாயத்தினின்றும் தென்றிசை நோக்கிவந்த சிவயோகியார், சிவத்தலங்கள் பலவற்றையும் வழிபட்டு வருபவர், தென்னாட்டிற் காஞ்சி நகரத்தையடைந்து அங்கு வாழும் சிவயோகியர் பலரொடும் அளவளாவினார் எனத் திருத்தொண்டர் புராண ஆசிரியர் குறித்தலாலும், தமிழ்நாட்டிற் பொதிய மலையில் தங்கிய அகத்திய

முனிவரொடு பழகிய நட்பினால் அவரைக் காணப் புறப்பட்டு வந்தமையாலும், தமிழகத்தின் தெற்கெல்லையாகிய குமரித்துறையில் அருட்சத்தியாகிய அம்மையார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருத்தலையும், தம் காலத்தில் தமிழ்நாடு ஐந்து மண்டலங்களாகப் பகுக்கப்பட்டிருத்தலையும், வழிப்போவார் அச்சமின்றிச் செல்லவொண்ணாதபடி கொங்கு நாட்டில் வழிப்பறித் தொழில் நிகழ்தலையும் இந்நூலிற் குறித்துள்ளமையாலும் இந்நூலாசிரியராகிய சிவயோகியார் மூலனுடம்பிற் புகுந்து, திருமூலர் என்னும் பெயரைப் பெறுவதற்கு முன்னரும் தமிழ்நாட்டிற் பல்லாண்டுகள் வாழ்ந்த பயிற்சியுடையார் என்பது நன்கு தெளியப்படும். சிவாகமப் பொருளை நன்றாகத் தமிழிற் செய்யும்படி இறைவன் தம்மை நன்றாகப் படைத்தனன் எனத் தம்மைத் தமிழொடு தொடர்புபடுத்திக் கூறுதலால் அவர் தமிழ்க்குலத் தொடர்புடையவர் என்பதும், எனவே தென்தமிழ் நாட்டிலிருந்து வடகயிலையை அடைந்து மீண்டு தென்னாடுபோந்து திருவாவடுதுறையிற் சிவயோகத் தமர்ந்து செந்தமிழாகமத்தை அருளிச் செய்து சிவபரம்பொருளுடன் இரண்டறக் கலந்த தமிழ்முனிவர் திருமூல நாயனாரென்பதும் நன்கு துணியப்படும்.

திருமூலர் தம்முடன் இருந்து நந்திதேவர்பால் உபதேசம் பெற்றவர்களாகச் (சனகர், சனந்தனர், சனாதனர், சனற் குமாரர் என்னும்) நந்திகள் நால்வரையும், சிவயோகமாமுனி, தில்லையில் திருக்கூத்துத் தரிசனம் கண்ட பதஞ்சலி முனிவர், வியாக்கிர பாத முனிவர் ஆகியவர்களையும் சேர்த்து எண்மராகக் குறித்துள்ளார் (தி.10 பா.6). இதனை நோக்குங்கால் இவர் சிவயோக மாமுனி, பதஞ்சலி, வியாக்கிர பாதர் ஆகிய முனிவர்கள் காலத்தில் உடன் வாழ்ந்த சிவாகமச் செல்வர் என்பது உய்த்துணரப்படும். திருமூலர் தில்லையில் திருக்கூத்துத் தரிசனங்கண்டு இவ்வுலகில் நெடுங்காலம் இருந்தவரென்பதும்,

> செப்புஞ் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்
> அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றும்
> தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
> ஒப்பில் எழுகோடி யுகமிருந் தேனே. (திருமந்திரம்–13)

எனத் திருமூலரே தமது வரலாற்றைக் குறிப்பிடுதலால் இனிது விளங்கும்.

இவ்வாறு நெடுங்காலம் இந்நிலவுலகில் தங்கியிருந்ததன் காரணம், இறைவனுடன் பிறப்பின்றி விளங்கும் அருட்சத்தியாகிய புவனபதியென்னும் அருந்தவச் செல்வியை வழிபட்டு அவ் வன்னையின் அருளால் இவ்வுலகிற் பத்திநெறியையும், யோக நெறியையும், ஞான நெறியையும் நிலைபெறச் செய்து இறைவனது அருட்கூத்தினை விளக்கும் தமிழ் வேதமாகிய திருமந்திரப்

பனுவலை அருளிச் செய்தற்பொருட்டே என்பதனை,

இருந்தவக் காரணங் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனாபதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. **(திருமந்திரம்–14)**

எனவும்,

மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே. **(திருமந்திரம்–16)**

எனவும், தன் மாணாக்கர்களாகிய இந்திரன், மாலாங்கன் என்பவர்களை நோக்கிக் கூறும் முறையில் அமைந்த இத்திருப்பாடல்களால் திருமூலர் நன்கு புலப்படுத்தியுள்ளார்.

திருமூலராகிய இச்சிவயோகியாரால் அன்புடன் ஆதரிக்கப்பெற்று அவர் அருளிய திருமந்திரப் பனுபற்பொருளை அவர்பாற் கேட்டுணர்ந்த மாணாக்கர்கள் மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், கந்துரு, காலாங்கி, கஞ்சமலையன் என்னும் பெயரினராகிய எழுவர் எனத் தெரிகிறது. இச்செய்தி,

மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோடு
இந்த எழுவரும் என்வழி யாமே. **(திருமந்திரம்–8)**

எனவரும் திருமந்திரத்தால் அறியப்படும்.

மூலனுடம்பிற் புக்குத் திருமூலராய் எழுந்த சிவயோகியார். இறைவனருளால் சதாசிவமூர்த்தியை ஒத்துச் சிவாகமப் பொருளை அறிவுறுத்தும் முற்றுணர்வும், தேவர்க்கெல்லாம் முதன்மையும் உடையவராகத் தாம் விளங்கிய திறத்தினை,

நந்தி யருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி யருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி யருளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தி யருளாலே நானிருந் தேனே. **(திருமந்திரம்–29)**

எனவரும் திருப்பாடலிற் குறித்துள்ளார்.

உ

*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# திருமந்திரப் பாடற்றொகை

திருமந்திரம் மூவாயிரம் திருப்பாடல்களையுடையதென்பது, 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரஞ்சாத்தி' எனவரும் சேக்கிழார் வாய்மொழியாலும், 'மூலனுரைசெய்த மூவாயிரந்தமிழ்' (திருமந்திரம்–36) 'முத்திமுடிவிது மூவாயிரத்திலே' (37), 'தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்' (38) எனத் திருமந்திரப் பாயிரத்திலும் நூன்முடிவிலும் வரும் பாடற்றொடர் களாலும் அறியப்படும். இப்போது சில நூல்களில் திருமந்திர நூலில் உள்ளனவாக வழங்குவன காப்புச் செய்யுளோடு சேர்த்து 3048 பாடல்களாகும். திருமந்திரச் செய்யுட்கள் என வேறு நூல்களில் மேற்கோளாகக் காட்டப்பட்டுத் திருமந்திரச் சுவடிகளிலும் வெளிவந்த பதிப்புகளிலும் நூலுட் சேர்க்கப்பட்டுள்ளவை 11 பாடல்கள். சில ஏட்டுச் சுவடிகளில் இருந்து அச்சில் வெளிவராதனவாய்ச் சைவசித்தாந்த சமாசப் பதிப்பில் வெளியிடப்பெற்றவை 17 பாடல்கள். இவற்றின் மேலாக வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகளால் ஞானாவரணபாடியத்திலும் முத்தி நிச்சயப் பேருரையிலும் மேற் கோளாகக் காட்டப்பட்ட திருமந்திரப் பாடல்களில் இதுவரை வெளிவராதனவாக உள்ளவை ஏறக்குறைய முப்பது திருப்பாடல்களாகும். இவையெல்லாவற்றையும் சேர்த்தெண்ணுங்கால் திருமந்திரப் பாடல்களின் தொகை 3100 ஆக உயர்கின்றது.

இவ்வாறு திருமந்திரப் பாடற்றொகை மூவாயிரத்திற்கும் மேலாக மிகுந்து காணப்படுதற்கு இவற்றுட் சில பாடல்கள் பொருளியல்பு பற்றி இருமுறையும் மும்முறையுமாக இடம் பெற்றிருத்தலும், சில பாடல்கள் பாட பேதங்களால் உருத்திரிந்து வெவ்வேறு பாடல்களாக எழுதப்பெற்றிருத்தலும், திருமந்திரத்தைப் பயின்ற பிற்காலச் சான்றோர் சில அவ்வருள் நூலின் சொற்பொருள் நடையினை அடியொற்றிப் பாடிய பாடல்கள் சில யாப்பு ஒப்புமை பற்றித் திருமந்திரம் என்ற பெயராற் குறிக்கப்பட்டிருத்தலும், அவற்றுட்சில இந்நூலில் ஆங்காங்கே இடைச்செருகலாக இடம் பெற்றிருத்தலும் காரணங்களாகும்.

திருமூலநாயனார் இத்திருமந்திர மாலையை 'ஒன்றவன்றான்' என்ற திருப்பாடலை முதலாகக் கொண்டு தொடங்கி மூவாயிரந் திருப்பாடல்களால்

நிறைவேற்றி அருளினார் என்பது,

'ஏனவெயி றணிந்தாரை ஒன்றவன்றானென வெடுத்து'

'முன்னிய அப்பொருண் மாலைத் தமிழ் மூவாயிரஞ்சாத்தி'

எனச் சேக்கிழார் கூறுதலால் இனிது விளங்கும். 'ஒன்றவன்றான்' எனவரும் இத்திருப்பாடலுக்கு முன்னே,

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தி னிளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

எனவரும் விநாயகர் வணக்கத் திருப்பாடல் இத்திருமந்திரத்திற் காப்புச் செய்யுளாக இடம் பெற்றுள்ளது. மூத்த பிள்ளையாராகிய யானைமுகக் கடவுளது வழிபாடு கி.பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே தமிழ்நாட்டில் நிலைபெறுவதாயிற்றென்பது ஆராய்ச்சியாளர் துணிபாதலானும், திருமந்திர நூலினுள்ளே சிவபெருமானது திருக்குமாரராகிய அறுமுகச் செவ்வேளையும் ஐயனாரையும் குறித்த திருமூலர், மூத்த பிள்ளையாரெனப் போற்றப்பெறும் விநாயகக்கடவுளைப் பற்றி ஒன்றும் குறிப்பிடாமையானும், ஒன்றவன்றான் என்ற பாடலையே திருமந்திரத்தின் முதற்பாடலாக ஆசிரியர் சேக்கிழார் குறித்தமையானும் 'ஐந்துகரத்தனை' என்னும் இத்திருப்பாடல் பின் வந்த சான்றோரொருவரால் இந்நூற்குக் காப்புச் செய்யுளாகப் பாடிச் சேர்க்கப்பட்டதாதல் வேண்டும்.

ஓலைச்சுவடிகள் முதல் காகிதத்தாள், கணினிநூல் வரை அனைத்து நூல்களிலும் பாடபேதங்களும், இடைச்செருகல்களும், பாடுவன பாடுவதாகவும், பலநூல்களில் பலவாறாக 3000 முதல் 3100 வரை பாடல் எண்கள் காட்டப்படுகின்றன. அவரவர் அறிவுக்கு எட்டியவரை அவரவர் ஆட்கொள்ளப்படுகிறார்கள். அந்த வகையில் பெரும்புலவர் அருணை வடிவேல் முதலியார் அவர்கள் பதிப்பையொட்டி நாம் மொத்தத் திருப்பாடல்கள் மூவாயிரமே என்று கணக்கில் கொண்டு மூலன் உரைசெய்த மூன்றும் சேர்த்துமே மூவாயிரம் தான் என்ற உறுதிகொண்டு நூலினுள் செல்வோமாக. இடைச்செருகல் என்ற பாடல்களுக்கு நமது நூலில் தொடர் எண்கள் கொடுக்கப்படவில்லை.

உ

*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# திருமந்திர நூலமைப்பு

திருமூலநாயனார் அருளிய திருமந்திரம் தமிழாகமமாக விளங்குதலை யாவரும் அறிவர். சிவாகமங்கள், தந்திரம், மந்திரம், உபதேசம் என மூவகை உரையளவைகளையும் உறுப்பாகக் கொண்டன. அவற்றுள் தந்திர கலையாவது, வேத ஆகமங்களின் வகையாகிய கருமகாண்டம், ஞானகாண்டம், உபாசனா காண்டம் என்னும் மூவகைகளுள் கருமகாண்டம் பற்றிப் பின்னொடுமுன் மாறுகோளின்றி அனுட்டித்தலை அறிவுறுத்துவது. மந்திரக்கலை என்பது, உபாசனா காண்டம் பற்றி மனம் முதலியன அடக்கித் தெய்வத்தை வழிபடும் முறையினை விரித்துரைப்பது. உபதேசகலை என்பது, ஞானகாண்டம் பற்றித் தனக்கு முதலும் முடிவுமில்லாத இறைவன் தன்னின் வேறல்லாத எண்குண முடையனாதல், தன்னின் வேறாகிய பசு பாசங்களையுடையனாதல் முதலிய தன்மைகளைத் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்துமாறும் விளங்க அறிவுறுத்துவதாகும். இனி, "சாத்திரங்களை முன்னொடு பின், மலைவறக் கொள்வது தந்திரகலையாம் என்றும், கரணங்களுடைய வியாபாரங்களை அடக்கி அவரவர் தங்களுக்கு வேண்டின தெய்வங்களை அந்தந்த மந்திரங்களினாலே வழிபடுவது மந்திரகலையாம் என்றும், தனக்கு முதலும் முடிவுமில்லாத பரமேசுவரனுடைய சிவஞானத்தைப் பக்குவான்மாக்களுக்குப் போதிப்பது உபதேசகலையாம் என்றும் ஞானகண்டம் ஒன்றைப் பற்றி இம்மூவகைக் கலைகளின் இலக்கணங்களைப் பகுத்துரைத்தலும் ஏற்புடையதேயாகும். ஆகமங்களுக்கு அங்கமாகிய இம்மூவகை உரையளவை களையும்,

அனாதியே யமலனாய அறிவனூ லாகமந்தான்
பினாதி மாறின்றிப் பேணல் தந்திரம், மந்திரந்தான்
மனாதிகள் அடக்கித் தெய்வம்வழிபடும் வாய்மையாகும்
தனாதி யீறிலான்றன் தன்மை யுணர்த்துதல் உபதேசந்தான்.

(சித்தியார் சுபக்கம் 13)

எனவரும் திருவிருத்தத்துள் அருணந்தி சிவாசாரியார் சுருக்கமுந் தெளிவும் பொருந்த விளக்கியுள்ளார்.

மேற்குறித்த தந்திரம், மந்திரம், உபதேசம் எனப்படும் மூவகை உரைத் திறங்களும் ஒருங்கமைந்த செந்தமிழ்ச் சிவாகமமாகத் திகழ்வது, திருமூல

நாயனார் அருளிய இத்திருமந்திர மாலையாகும். தந்திரம், மந்திரம், உபதேசம் எனப்படும் மூன்றனுள் நடுவே நின்ற மந்திரம் என்பது, முன்னுள்ள தந்திரத்தோடும் பின்னுள்ள உபதேசத்தோடும் பிரிவின்றியியைந்த தொடர்பினதாகிய தலைமைபற்றித், திருமூலர் இறைவன் திருவருளாற் சிந்தை செய்து அருளிய இத்தமிழாகமத்தை 'மந்திரமாலை' எனக் குறித்துள்ளார். தமிழ் மூவாயிரமாகிய இத்திருமந்திரப் பாடல்கள் ஒன்பது தந்திரங்களாக வகுக்கப்பெற்றன என்பது, "மூலன்... தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம் சுந்தரவாகமச் சொன்மொழிந்தானே" **(38)** எனவரும் இந்நூலின் பாயிரப் பாடலால் அறியப்படும்.

சைவ சமயத்துட் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் செந்தமிழ்ப் பாடல்களால் அறிவுறுத்த எண்ணிய திருமூலர், நாற்சீரடி நான்கு கொண்ட கலிவகை யாப்பினால் இத்திருமந்திர மாலையை அருளிச்செய்துள்ளார். ஒற்று நீக்கி எழுத்து எண்ணுங்கால் அடிதோறும் பன்னிரெண்டெழுத்தும் ஈற்றடி நேரசையினைக் கொண்டு தொடங்கியதாயின் பதினோர் எழுத்தும் பெற்று வெண்டளை பிழையாது வருவது இத்திருமந்திர யாப்பாகும். செப்பலோசை தழுவிய இக்கலிப்பாவகை திருமூலர் திருமந்திரத்தில்தான் முதன்முதற் காணப்படுகின்றது. எனவே, இதனைத் **'திருமந்திரயாப்பு'** என வழங்குதல் தகும்.

இந்நூலுக்கு ஆசிரியர் இட்டபெயர், 'திருமந்திரமாலை' என்பதாகும். "ஞான முதல் நான்குமலர் நற்றிரு மந்திரமாலை" எனச் சேக்கிழாரடிகள் இந்நூற் பெயரைக் குறித்தருளினார். 'மூலர் திருமந்திரமாலை' என்றார் உமாபதிசிவம். ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்' (திருமந். **85**) எனவும், 'மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை, உறைப்பொடுங்கூடி நின்றோதலுமாமே' (திருமந். **86**) எனவும் இந்நூற் பாயிரம் கூறுதலால், இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் திருமந்திரமாலை என்பது நன்கு தெளியப்படும். இந்நூல், மூவாயிரந் தமிழ்ப்பாடல்களை யுடைமைப்பற்றித் "தமிழ் மூவாயிரம்" என வழங்குதலும் உண்டு. 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரஞ் சாத்தி' என்பது பெரியபுராணம்.

இந்நூல், தொல்காப்பியர் கூறிய எழுநிலத்து எழுந்த செய்யுட்களுள் மறைமொழிகிளந்த மந்திரத்தான செய்யுளின்பாற்படுதலின், திருமந்திரம் என வழங்கப் பெறுவதாயிற்று. தாம் சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றிப் பயன்தரச் சொல்லும் ஆற்றலுடைய நிறைமொழி மாந்தராகிய பெரியோர் 'இஃது இவ்வாறாகுக' எனத் தமது ஆணையாற் சொல்லப்பட்டு, அவ்வாற்றல் அனைத்தையும் தன்கட் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய

நன்மொழியே மந்திரம் எனப்படும். இதன் இயல்பினை, 'நிறைமொழிமாந்தர் ஆணையிற்கிளந்த, மறைமொழிதானே மந்திரமென்ப' என்ற நூற்பாவில் தொல்காப்பியர் தெளிவாகப் புலப்படுத்தி உள்ளார். இக்கருத்தேபற்றி ஆசிரியர் திருவள்ளுவரும்,

> 'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும்' **(28)**

எனவரும் திருக்குறளில், பெரியோர் அருளிய மந்திரமொழியின் பெருமையை நன்கு விளக்கியுள்ளார். "நிறைமொழி" என்பது, "அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் மொழி" என்பர் பரிமேலழகர். நிறைமொழி மாந்தராவார், இருவகைப் பற்றுக்களையும் நீக்கி, ஐம்புலன் களையும் அடக்கி, எவ்வுயிர்க்கும் அருளுடையராய் வாழும் பெரியோர். ஆணையிற் கிளத்தலாவது, 'இஃது இவ்வாறாகுக' எனத் தமது ஆற்றல் தோன்றச் சொல்லுதல். மறைமொழி – புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் என்பர் பேராசிரியர். இனி மறைமொழி என்பதற்கு, 'பலர்க்கும் புலப்படாது மறைந்துள்ள அரிய உண்மைகளைத் தன்னகத்தே பொதிந்துள்ள மொழி' எனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். 'சான்றோர் எண்ணிய வண்ணம் செயற்படுத்தற்குரிய ஆற்றல் முழுவதும் தன்கண் வாய்க்கப்பெற்ற மொழியே மந்திரம்' எனப்படும் என்பார், அதனை 'வாய்மொழி' (செய்யுளியல் 75) என்ற பெயராலும் தொல்காப்பியர் குறித்துள்ளார்.

இவை தமிழ்மந்திரம் என்றற்கும், 'மந்திரந்தானே பாட்டாகி அங்கதம் எனப்படுவனவும் உள, அங்கதப் பாட்டு அல்லாத மறைமொழியே மந்திரம் என ஈண்டுச் சிறப்பித்து உரைக்கப்படும்' என்றற்கும் 'மறைமொழி தானே' எனப் பிரித்துரைத்தார். <u>எனவே சபித்தற் பொருட்டாகிய மந்திரச் செய்யுளை அங்கதப்பாட்டெனவும், வசைப்பொருட்டு ஆகாது, உலக நலங்குறித்துவரும் மறைமொழியினையே மந்திரம் எனவும் வழங்குதல் ஆசிரியர் தொல்காப்பியர் கருத்தென்பது நன்கு விளங்கும்.</u> திருமூலநாயனார் திருவாய் மலர்ந்தருளிய இலக்கணத்தின்படி அமைந்த தமிழ் மந்திரங்களுக்குரிய சிறந்த இலக்கியமாகத் திகழும் சிறப்பு உடையதாகும். "ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்" **(24)** எனத் திருமூல நாயனாரும், 'சிவயோகமிகு மந்திரமா முறையொன்று' என உமாபதி சிவாசாரியாரும் இதனை மந்திரப்பனுவலாகக் குறித்துள்ளமை இங்கு நினைக்கத்தகுவதாகும்.

தமிழ் மூவாயிரமாகிய இந்நூல், பொருள் தொடர்பு உடையதாய் மாலை போன்று அமைந்திருத்தலின் இதனை 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரம்' எனச் சேக்கிழாரடிகள் குறித்துள்ளார். <u>சிவபெருமான்,</u>

<u>சிவயோகியாரது முன்னுடம்பை மறைப்பித்துச் சாத்தனூர் தமிழ்க்குடி இடையனாகிய மூலனுடம்பில் நின்றவாறே திருவாவடுதுறையில் சிவயோகத்திருக்கும்படி செய்தருளியது, திருமூலர் இறைவனூலாகிய சிவாகமங்களை இந்நிலவுலகில் தமிழால் வகுத்தருளிச் செய்யவேண்டும் என்ற கருத்தினாலேயே என்பதும்,</u> இறைவரது இத்திருவருட் குறிப்பை உணர்ந்த திருமூலர், திருவாவடுதுறையில் அம்மையப்பரை வணங்கிச் சிவயோகத்தமர்ந்திருந்து தமிழாகமமாகிய இத்திருமுறையினை அருளிச்செய்தாரென்பதும்,

> தண்ணிலாவார் சடையார்தாந் தந்த ஆகமப்பொருளை
> மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ்வகுப்பக்
> கண்ணிய அத்திருவருளால் அவ்வுடலைக் கரப்பிக்க
> எண்ணிறைந்த உணர்வுடையார் 'ஈசரருள்' என உணர்ந்தார்

எனவரும் சேக்கிழாரடிகள் திருவாய்மொழியாலும்,

> 'சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற்றேனே' (திருமந்திரம் – 12)

எனவும்,

> 'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
> தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே' (திருமந்திரம் – 20)

எனவும் அமைந்த திருமூலர் வாய்மொழிகளாலும் அறியப்படும்.

சிவபெருமானிடமிருந்து சத்தியும், சத்தியிடமிருந்து சதாசிவமும், அவர் பால் மகேசுரரும், அவரிடமிருந்த ஸ்ரீ கண்டருத்திரரும், அவர்பால் திருமாலும், அவரிடமிருந்து பிரம தேவரும், அவரிடமிருந்து மற்றவர்களும் உபதேசம் பெற்றனரென்றும், இவர்கள் தனித்தனியே உபதேச வாயிலாகப் பெற்றுணர்ந்த காரணம், காமிகம், வீரம், சிந்தியம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம் என்னும் இவ்வொன்பது ஆகமங்களையும் நந்திப்பெருமான் இறைவனருளால் ஒருங்கு கைவரப் பெற்றார் எனவும் இந்நூல் பாடல்களால் அறிகிறோம். மேற்குறித்த ஒன்பது ஆகமங்களின் சாரமாகவே இந்நூல் ஒன்பது தந்திரங்களை உடையதாய் அமைந்துளது எனக் கருதுவாரும் உளர். இந்நூலில் உள்ள ஒன்பது தந்திரங்களும் முறையே ஒவ்வோராகமத்தின் சாரம் எனக் கொள்வதைக் காட்டிலும் திருமூலர் சிவாகமங்களின் நுண் பொருள்களை ஒன்பது தந்திரங்களாக வகைப்படுத்தி மூவாயிரந் திருப்பாடல்களில் வைத்து உணர்த்தியருளினார் எனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும் என்பர் அறிஞர்.

சிவாகமங்கள் உண்மைப் பொருளை பதி, பசு, பாசம் என்று

முப்பொருளாகவும், அடையும் நன்னெறிகளாகச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதங்களாகவும் விரித்துரைக்கும். வேதம் பொது, ஆகமம் சிறப்பு என்பதும் நாம் அறிந்ததே. இந்நூலின் சிறுபான்மை வேதப் பொருளும், பெரும்பான்மை ஆகமப்பொருளும் எடுத்தோதப்பட்டன. இந்நூலின் பெரும் பிரிவைத் தந்திரம் என்றும், இவற்றுள் அடக்கிய திருப்பாடல்களை மந்திரமென்றும் வழங்குவது மரபு.

தம்வரலாற்றை உள்ளடக்கிய பாயிரப்பகுதியுடன் தொடங்கி ஒவ்வொரு தந்திரமாக ஒன்பது பெரிய தந்திரங்களில் **3000** மந்திரப்பாடல்களை அருளிச் செய்தார். அவற்றுள் பாயிரத்தையும் முதல் மூன்று தந்திரங்களையும் நூலமைப்புச் சுருக்கமாக இப்போது காண்போம்.

**பாயிரம்**

பிறவியாகிய துன்பத்தினின்றும் நீங்கி வீடுபெறுதலே அறிவுடைய மக்களின் கடமையும் செயலுமாகும். அந்நிலை சிவனையடைந்தாலன்றிக் கைகூடாது. சிவன் ஒருவனே எல்லார்க்குந் தலைவன். சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை. அவன் மூவர்க்கும் முதல்வன். தாயினும் நல்லன். தேவர் முதலிய யாவரும் அவனைத் தொழுவதல்லது அவனால் தொழப்படுவார் ஒருவருமிலர். இடியும் முழக்கமும் ஈசன் உருவம். அயன் அரி அரன் ஆகிய மூவரும் ஆராய்ந்து நோக்குங்கால் இறைவனது அருளாகிய தொடர்ச்சியால் ஒருவரேயாவர். சிவனருளல்லது வேறு தெய்வமில்லை. சிவபெருமான் உயிர்கள் மேல் வைத்த பெருங்கருணையால் மன்னுயிர்கள் பாசப் பிணிப்பினின்றும் நீங்கி வீடுபேறடைதற் பொருட்டு வேத சிவாகமங்களை அருளிச் செய்துள்ளார். அவற்றின் வழியொழுகிப் பிறவிப் பெருங்கடல் நீந்தி வீடு பெறுதற்கு வேண்டிய நற்செயல்களே அறிவுடைய நன்மக்களால் மேற்கொள்ளத் தக்கன. சிவபெருமான் ஆகமப் பொருளை நந்திபெருமானுக்கு உபதேசித்தருளினர். அவர் கயிலையில் சனற்குமாரர் முதலிய நால்வர்க்கும் பதஞ்சலி வியாக்கிரபாதர் ஆகிய முனிவர்களுக்கும் அவ்வழியே எனக்கும் உபதேசித்தருளினார். ஆகமப் பொருளைத் தமிழில் சொல்லும் பொருட்டே என்னை இம்மூலனுடம்பி லிருக்குமாறு இறைவர் பணித்தருளினர். அவருடைய அருளால் யான் மூலனுடம்பிற் புகுந்து திருவாவடுதுறையிற் பல்லாண்டுகள் சிவயோகத் தமர்ந்திருந்தேன். அரனடி நாள்தோறும் சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றேன். இறைவன் ஆடியருளும் திருக்கூத்தின் சிறப்பினை அறிவுறுத்தும் மறை நூலாகிய இதனைச் செப்புதற் பொருட்டே யான் இங்கு வந்தேன். நான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுவதாகுக. யான் கூறிய ஞானம் மிக்க இம்மந்திரங்களை உளம் பொருந்திக் கேட்டுணர்வோர் இறைவனுடைய திருவடிகளில் தலைப்பெய்து இன்புறுவர்" என இப்பாயிரப்

பகுதியில் எட்டு அதிகாரங்களில், முப்பத்தொன்பது பாடல்களில் திருமூலர் அறிவுறுத்தியருள்கின்றார்.

இந்நூலிலுள்ள ஒன்பது தந்திரங்களுள் முதல் நான்கும் சிவஞானத்தைப் பெறுதற்கு விரும்பியவர் தம்மை உள்ளும் புறம்பும் தகுதியுடையவராக்கிக் கொள்ளுதற்குரிய சாதனங்களையும், நடுவணதாகிய ஐந்தாந் தந்திரம் சைவத்தின் முடிந்த முடிபாகிய சைவசித்தாந்த உண்மைகளையும், ஆறு முதல் ஒன்பது வரையுள்ள நான்கு தந்திரங்களும் ஞானம்பெறும் நிலையில் உணர்ந்து பெறத்தக்கனவாக நற்பயன்களையும் பற்றி விரித்துக் கூறும் முறையில் அமைந்துள்ளன.

## முதல் தந்திரம்

ஞானம் பெற முயல்வோர் அதற்குத் தகுதியுடையாராகத் தம்மைத் தூய நல்லொழுக்க நெறியில் நிலைக்கச் செய்து கொள்ளுதல் வேண்டும் என வற்புறுத்தி அதற்குரிய சாதனங்களையும் உபதேசிப்பது இந்நூலின் முதல் தந்திரமாகும். இஃது இருபத்து ஏழு அதிகாரங்களாகப் பகுக்கப் பெற்றுள்ளது. இதன் தொடக்கத்திலுள்ள சிவபரத்துவம், வேத, ஆகமச் சிறப்புகளுக்குப் பின் முப்பது திருப்பாடல்களும் உபதேசம் என்ற தலைப்பில் அமைந்துள்ளன. இதனையடுத்து யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை என்பன உலகியலில் வைத்து அறிவுறுத்தப் பெற்றுள்ளன. ஐந்தாவதாகவுள்ள உயிர் நிலையாமை என்ற தலைப்பில் பத்துத் திருப்பாடல்கள் உள்ளன. உயிர்கள் என்றும் அழியாத நிலையுடைய பொருள் என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாதலை யாவரும் அறிவர். அங்ஙனமாகவும் இங்கு உயிர்நிலையாமை என்றது மன்னுயிர் தான் எடுத்துள்ள ஒருடம்பிலேயே விரும்பி நிலைபெற்றிருக்க இயலாத தன்மையைக் கூறுவதாகும். "வீயாது, உடம்பொடு நின்றவுயிருமில்லை, மடங்கலுண்மை மாயமே வன்றே" **(363)** எனவரும் புறப்பாடற்றொடர் ஈண்டு நினைக்கத் தக்கதாகும். இதனையடுத்துக் கொல்லாமை, புலால் மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர் இழிவு, நல்குரவு ஆகிய அதிகாரங்களில் அமைந்த பாடல்கள் உள்ளன. இவை தமிழ் மறையாகிய திருக்குறளின் அதிகாரத் தலைப்பினையும் பொருளமைதியையும் அடியொற்றி அமைத்திருத்தல் காணலாம். இவற்றையடுத்து அக்கினி காரியம், அந்தணரொழுக்கம் என்ற தலைப்புக்களிலமைந்த பாடல்கள் வேதப்பொருள்களை உளங்கொண்டு கூறியனவாகும். அடுத்து அரசாட்சி முறை, வானச்சிறப்பு, தானச் சிறப்பு, அறஞ்செய்வான் திறம், அறஞ்செயான் திறம், அன்புடைமை, கல்வி, கேள்வி, கல்லாமை, நடுவுநிலைமை, கள்ளுண்ணாமை ஆகிய தலைப்புக்களில் அமைந்த பாடல்கள் உலகியலொழுக்கமாகத் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளிய

பொருளுரைகளை அகத்துட்கொண்டு அப்பொருள்களை உலகியலின் உயிர் நிலையாய் நிலவும் மெய்ந்நெறியாகிய சைவசித்தாந்த நெறிக்குப் பொருந்தும் வண்ணம் விரித்துக் கூறும் முறையில் அமைத்திருத்தல் அறியத்தக்கதாகும். இங்குத் திருமூலர் கூறும் கல்வியாவது சிவபரம் பொருளைச் சிந்திக்கும் நிலையில் அமைந்த கல்வியே. கேள்வி என்றது அம்முதல்வனது பொருள் சேர் புகழ்த்திறங்களைக் கேட்டுணரும் கேள்வியினை. இங்ஙனமே நடுவு நிலைமை, கற்புடைமை முதலாக இத்தந்திரத்திலுள்ள ஏனைய பொருள்களையும் சிவநெறியிலொழுகுவார்க் குரிய சிறப்பியல்பினவாக ஆசிரியர் கூறியுள்ளமை கருதத்தக்கதாகும்.

## இரண்டாம் தந்திரம்

வேதசிவாகமங்களின் ஒன்றுபட்ட துணிபு, "சிவனே", பரம்பொருள் என்று முன்பாயிரத்திற் கூறியபொருளே ஆசிரியர் சிறப்பு முறையில் விரித்துரைப்பதாக அமைந்தது இத்திருமந்திரத்தின் இரண்டாந் தந்திரமாகும். இஃது அகத்தியம் என்பது முதல் பெரியாரைத் துணைக்கோடல் ஈறாக இருபத்தைந்து தலைப்புக்களையுடையது. இறைவன் வேண்டுதல் வேண்டாமையிலான் ஆயினும் தம் போன்ற எண்ணிலாவுயிர்கள் உய்திபெறுதற்கு இயல்பாகிய பேரருளால் படைத்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்து கொண்டிருக்கின்றான். அம்முதல்வன் செய்யும் ஐந்தொழில்களுட்படுவன, உயிர்கள் எடுத்துள்ள உடம்பும் அகக்கரணங்களும், புறக்கரணங்களும், உயிர்கள் வாழ்தற்கிடனாகிய புவனங்களும், உயிர்கள் நுகர்தற்குரிய நுகர் பொருள்களும் ஆகும். உடலும் உயிருமாகச் சேர்த்துப் படைக்கப்பெறும் நிலை 'கருவுற்பத்தி' என்ற தலைப்பிற் பேசப்படுகிறது. உயிர்கள் ஒருமலமுடையன, இருமலமுடையன, மும்மலமுடையன என்னும் பாகுபாட்டினால் முறையே விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும் என்றும், அவற்றுள் முத்தியில் விருப்பமுடைய சகல வர்க்கத்தார் நூற்பொருளைக் கேட்டற்குரியர் என்றும் அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது "மூவகைச் சீவவர்க்கம்" என்ற பகுதியாகும்.

சகல வர்க்கத்தினராகிய மக்கட்குலத்தார் இவ்வுலகில் நன்னெறியறிந்து ஒழுகிப் பிறவாநெறியாகிய வீடுபேற்றின்பத்தை அடைதற்குரியராதலின், தம்மால் வேண்டும் பொருளளித்து வழிபட்டு நற்பொருளைக் கேட்டுணர்தற்குரிய மெய்யுணர்வுடைய பெரியோர்களையறிந்து வழிபட்டும், மனமாசகற்றும் தீர்த்தத்தின் இயல்பு தெரிந்தும் தம்மைத் தூய்மை செய்து கொள்ளுதல் வேண்டும் என்பதும், மன்னுயிர்கள் உய்தற் பொருட்டு இறைவன் அன்பர்க்கு எளிவந்து அருள்புரியும் அருள் நிலையங்களாகிய திருக்கோயிலின் பண்பு தெரிந்தும், அங்கு நிலையாக வீற்றிருந்து உயிர்களின் இடரகற்றி

இன்பமளிக்கும் இறைவனது அதோ முகத்து இயல்பும் கண்டும், அம்முதல்வனை வழிபட்டுச் சிவநிந்தை, குருநிந்தை, மாகேசுவர நிந்தை ஆகிய தீமைகளினின்றும் நீங்கிப் பொறையென்னும் அணிகலனைப் பூண்டு, பெரியோரையறிந்து அவர்களைத் துணையாகக் கொண்டு நன்னெறியில் ஒழுகி உய்தி பெறுதல் வேண்டுமென்றும் ஆசிரியர் இத்தந்திரத்தில் அறிவுறுத்தியுள்ளார்.

## மூன்றாம் தந்திரம்

மூன்றாந்தந்திரம் அட்டாங்கயோகம் முதல் சந்திரயோகம் ஈறாக இருபத்தொரு தலைப்புக்களையுடையது. இதன்கண் எண்வகை யோக உறுப்புக்களாகிய இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவும், இவற்றை மேற்கொண்டோர் அடையும் பேறுகளும், அணிமா, லகிமா, மகிமா பிராத்தி, கரிமா, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய எண் வகைச் சித்திகளின் இயல்பும் பயன்களும், கலைநிலை, காய சித்தி உபாயம் முதலியனவும் விரித்துரைக்கப்பட்டுள்ளன. இத்தந்திரப் பகுதியின் உள்ளுறையாவது சரீர சித்தி உபாயமாகும். உடம்பின்றி உயிர் தனித்து நின்று தொழில் புரிதல் இயலாது. உயிர் அறம் முதலிய உறுதிப் பொருளைப் பெறவேண்டுமாயின் அதற்குரிய முயற்சிகளை உடம்பொடு கூடி நின்றே செய்தல் வேண்டும். ஆகவே உயிர்க்கு ஞான சாதனமாகவுள்ள உடம்பினைப் பேணுதல் இன்றியமையாதது என்னும் உண்மையினை,

> உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
> திடம் பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
> உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே
> உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே. (திருமந்திரம் – 708)

> உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
> உடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டேன்
> உடம்புளே யுத்தமன் கோயில்கொண்டா னென்
> றுடம்பினை யானிருந் தோம்புகின்றேனே. (திருமந்திரம் – 709)

எனவரும் திருமந்திரங்களால் திருமூலர் அறிவுறுத்தியுள்ளமை நோக்கத்தக்கதாகும்.

இங்ஙனம் இயமம், நியமம் முதலிய யோகவுறுப்புக்களால் உடம்பினை நன்கு பேணிச் சரியை, கிரியை ஆகிய நெறிகளில் பயின்ற பின்னர்ச் சிவயோகத்தில் நிலை பெற்று நின்று சிவஞானமாகிய பயனைப் பெறுதற்கு நிறை மொழி மாந்தரருளிய மறைமொழிகளாகிய மந்திரங்களின் சாதகமும் அவற்றின் வலிமையும் பெறுதல் இன்றியமையாததாகும்.

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# திருமூலதேவ நாயனார்

*அருளிச்செய்த*

# திருமந்திரம்

## பத்தாம் திருமுறை

### பாயிரம்

#### கடவுள் வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

1. ஒன்றவன் றானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தான்இருந் தான்உணர்ந் தெட்டே. 1

---

*'திருமந்திரம்' என்னும் பெயர்க்காரணம் இதன் பாயிரத்துள் பெறப்படும். இந்நூல் முழுதும் பெரும்பான்மையும் வெண்டளை தழுவிய நாற்சீரடி நான்கு கொண்ட யாப்பினால் ஆயது. பிற்கால நூல் வழி நோக்கின் இவ்யாப்பு, கலிவிருத்தமாம். ஆயினும், தொல் காப்பியத்தின்படி தரவுக் கொச்சகக் கலிப்பாவாம். சில விடதது யாப்புக்கள் அந்தாதியாய் வருவன.*

***1. தெளிவுரை :-*** *ஒரு பொருளாய் உள்ளவன் முதற்கடவுளே; வேறில்லை. அவனது அருள், 'அறக்கருணை, மறக்கருணை' என இரண்டாய் இருக்கும். அவ் அருள்காரணமாக அவன், 'இலயம், போகம், அதிகாரம்' என்னும் மூன்று நிலைகளில் நிற்பான். நின்று, 'அறம், பொருள், இன்பம், வீடு' என்னும் உறுதிப்பொருள் நான்கினையும் தானே உணர்ந்து உலகிற்கு உணர்த்தினான். செவி முதலிய ஐம்பொறிகளின் வழி நுகரப்படும் ஓசை முதலிய ஐம்புலன்களின் மேல் எழுகின்ற ஐந்து அவாவினையும் வென்றான். 'மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை' என்னும் ஆறு அத்துவாக்களாக விரிந்தான். 'பிரம லோகம், விட்டுணுலோகம்,*

*உருத்திர லோகம், மகேசுர லோகம், சதாசிவ லோகம், சத்தி லோகம், சிவ லோகம்' என்னும் ஏழுலகங்களுக்கும் மேற்சென்று தானேயாய் இருந்தான். அவனை, நெஞ்சே, நீ அறிந்து அடை.*

*அவர் என்றும் அவராகவே நிற்றலில் ஒன்றாயும், அவரும் அவருடைய இன்னருளாம் சக்தியும், சிவமுமாய், அம்மையப்பராய், அர்த்தநாரியாய், மாதொருபாகனாய், கழலிரண்டாய், இருசுடராய் நிற்கும் நிலைகளை இரண்டாகவும், பிரம்மா, திருமால், உருத்திரன் என மும்மூர்த்திகளாயும், அருவம், அருவுருவம், உருவம் என்ற நிலைகளில் மூன்றாயும், வேதங்களை உணர்தலிலும், அவற்றிற்கு அப்பாற்பட்டு நிற்பதிலும், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மார்க்கங்களை நமக்கு உணர்த்தி நிற்பதில் நான்காயும், பொறிகள், புலன்களில் சென்று, பற்றாது வென்று அடக்கும் நிலையில் ஐந்தாயும், மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களில் நிலைபெறச் செய்வதில் ஆறாயும், உச்சந்தலைக்கு மேலாக உள்ள சகத்தரத் தானமாம் ஏழாவது ஆதாரத்தில் விளங்குவதாலும், உயிர்களுக்கு நால்வகைத் தோற்றம், எழுவகை பிறப்பை அளிப்பதால் ஏழாயும், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், உயிர், நிலா, பகலோன் என எண் வகை - அட்ட மூர்த்தமாக நிற்பதனால் எட்டாயும் அவர்தம் பரத்துவத்தை அவரவர் அறிந்த - உணர்ந்த அளவில் எடுத்துக்கூறி வருகிறார்கள்.*

***குறிப்புரை :-** முதற் கடவுளை, 'அவன்' எனப் பண்டறிசுட்டாற் கூறுதல் வழக்கு. "அவன்தானே" என்றதில் தான் அசைநிலை; ஏகாரம் பிரிநிலை.*

*"பிரமம் ஒன்றே இரண்டாவதில்லை"[1] எனவும் "மெய்ப்பொருள் ஒன்றே"[2] எனவும், வேதமும் கூறுதல் காண்க. "தனக்குவமை இல்லாதான்" என்றதும் இப்பொருட்டு. அறக்கருணை அருட்சத்தியும், மறக்கருணை திரோதான சத்தியுமாம். இலயம் முதலியவற்றின் இயல்பையும் ஆறத்துவாக்களின் இயல்பையும் சிவாகமங்களிலும், மெய்கண்ட நூல்களிலும் காணலாம்.*

*"அழிந்த சிந்தை அந்தணாளர்க் கறம்பொருளின்பம் வீடு - மொழிந்த வாயான்"[3] எனவும், "விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்"[4] எனவும், போந்த தேவாரத் திருமொழிகளால், அறம் முதலிய நான்கு உறுதிப் பொருள்களையே முனிவர் நால்வர்க்கு நான்கு*

வேதங்களால் உணர்த்தியருளினான், என்பது இனிது விளங்கிக் கிடத்தலின், 'நான்கு உணர்ந்தான்' என்பதற்கு இதுவே பொருளாதல் அறியலாம். ''உணர்ந்தான்'' என்னுமிடத்து, 'தானே' என்பது இசையெச்சம். அவ்வினைச் சொல் உணர்ந்து உணர்த்துதலாகிய தன்காரியம் தோன்ற நின்றது.

"வென்றனன்" என்றது. 'அவற்றொடு பொருந்திநின்றே அவற்றால் திரிபின்றி நின்றான்' என்றவாறு. ''வினையின் நீங்கி''[5] என்றும், "பற்றற்றான்"[6] என்றும் ஓதியவற்றிற்கும் இவ்வாறே உரைக்கப்படுதல் காண்க. இவற்றானே, "பொறிவாயில் ஐந்தவித்தான்"[7] என்றதும் இப்பொருட்டாயிற்று. "நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும் - வென்றானை''[8] ''மங்கை யோடிருந்தே யோகுசெய்வானை''[9] என்பனவும் இக்கருத்தே பற்றி வந்தன. மனைவியோடிருந்த முனிவரைத் திருவள்ளுவர், "ஐந்தவித்தான்"[10] என்றதும் இங்கு நினைக்கத்தக்கது.

நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகட்கு உட்பட்ட புவனங்களை அவற்றிற்கு முதல்வராகிய கடவுளரது உலகங்களாகவும், இறுதிக் கண்ணதாகிய சாந்திய தீத கலையில் இலய புவனங்களை வேறிரண்டாகவும் வைத்து 'ஏழுலகம்' என்றலே ஆகம முறை. 'பூலோகம், புவலோகம், சுவலோகம், மகலோகம், தவலோகம், சத்தியலோகம்' என வேதமுறையிற் கூறப்படும் ஏழுலகங்களில் ஏழாவ தாகிய உலகம் புவனபதி உலகமாகவும், ஏனைய ஆறும் கீழ்க்கீழ் நோக்க ஒன்றின் ஒன்று தாழ்ந்தோர்க்குரிய உலகமாகவும் மேல் ஆகம முறையிற் கூறிய ஒவ்வோர் உலகத்திலும் உட்கூறுகளாய் அவ்வவ்வுலகங்கட்கு ஏற்ற பெற்றியில் அமைந்துள்ளவை என்பது சிவாகம நூல் துணிவு. கீழ்க்கீழ் உள்ள உலகங்களில் மேன்மேல் உள்ள புவனபதிகட்குரிய இடங்களும் உள; மேன்மேல் உள்ள உலகங்களில் கீழ்க்கீழ் உள்ள புவன பதிகட்குரிய இடங்கள் இல்லை என உணர வேண்டும். "சென்றனன்" என்றது முற்றெச்சம்.

---

1. வேதக்கூற்று
2. வேதக்கூற்று
3. தி.4 ப.53 பா.6
4. தி.4 ப.7 பா.8
5. தொல். பொருள் - இளம் 940
6. குறள் - 350
7. குறள் - 6
8. தி.6 ப.50 பா.3
9. திருமுறை தி.9 ப.13 பா.11
10. குறள் - 25

"தான் இருந்தான்" என்பதில் பிரிநிலை ஏகாரமும், ஆக்கச் சொல்லும் தொகுத்தல் பெற்றன. தானேயாய் இருத்தலாவது சத்தியோடு கூடிச் செயற்படுத்தலைத் தவிர்ந்திருத்தல். இதுவும், முதற்கண் "ஒன்றவன்றானே" என்றதும் இறைவனது, 'சொரூபம்' எனப்படும் உண்மைநிலை. ஏனைய, 'தடத்தம்' எனப்படும் பொதுநிலை. ஒன்று முதலாகத் தொடங்கி ஆறு ஈறாகக் கூறியது. 'ஒருவனே பலவாய் விரிந்து நிற்கின்றான்' என்பது உணர்த்துதற்கு, "ஏழும்பர்ச் சென்றனன்" என்றது. "அவ்வாறு விரிந்து நிற்பினும் அவன் மன வாக்கிற்கு எட்டாதவனே" என்றற் பொருட்டு.

"எட்டு" என்றது, சொல் ஒப்புமையால் எண்ணலங்காரத்தை நிரப்பிற்று, "நால்வாய் ஐங்கரத்தன்"[1] என்பதிற்போல. எட்டுதல் - முயன்று பற்றுதல். அம் முயற்சிகள் பலவும் நூலுட் கூறப்படும். "உணர்ந்து எட்டு" என்றது, 'மேற்கூறியவாற்றால் அவன் ஒருவனே உணரப்படுதற்கும், அடையப் படுதற்கும் உரியவன்' என்பது அறிவித்தவாறு.

'வாழ்த்து, வணக்கம், பொருளியல்புரைத்தல்' என்னும் மூவகை வாழ்த்துள் இது பொருளியல்புரைத்தல். இதனானே இந்நூல் நுதலிய பொருள் தொகுப்புக் குறிப்பாற் கூறப்பட்டது. அஃது ஆமாறு, 'முதற்கடவுள் உளன்; அவன் ஒருவனேயன்றிப் பலர் இல்லை. ஆயினும் அவன்தன்னின் வேறாகாத சத்தியால் 'அருளல், மறைத்தல்', என்னும் இரண்டனையும் செய்தற் பொருட்டு 'இலயம், போகம், அதிகாரம்' என்னும் மூவகை நிலைகளில் நின்று, 'அறம், பொருள், இன்பம், வீடு, என்பவற்றை அடையும் நெறிகளை உலகிற்கு உணர்த்தித் தான் ஒன்றிலும் தோய்விலனாய் நின்றே எப்பொருளுமாக விரிந்து, அங்ஙனம் விரிந்தவிடத்தும், மன வாக்குகளைக் கடந்த தனது நிலைமையில் மாறுபடாதே நிற்கின்றான், ஆதலின், அவனை அறிந்து அடைதலே உயிர்கள் செயற்பாலன' எனக் கண்டு கொள்க. நூல்நுதல் பொருள் இங்ஙனம் குறிப்பால் தோன்றவருதல் நூன்முகத்து வரும் கடவுள் வாழ்த்திற்கு இயல்பு என்க.

---

1. சிவஞானசித்தி - காப்பு

**நுதலிய பொருள்**

2. போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக் குள்தென் திசைக்கொரு வேந்தனாம்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே. 2

---

*இப்பாட்டு இந்நூல் நுதலிய பொருள் இது என்கின்றது.*

***2. தெளிவுரை :-*** *மலமாசகன்ற தூய உயிரிடத்து நிலைபெற்று விளங்கும் தூயவனும், உலகம் முழுவதற்கும் நலந்தருபவளாகிய அம்மைக்குக் கணவனும், தென்திசைக்குத் தலைவனாம் கூற்றுவனை உதைத்தவனும் ஆகிய சிவபெருமானது பெருமையை யான் துதிமுறையால் கூறுவேன்!*

*இம்மந்திரம், இறைவன் அன்பரகத் தாமரையுள் உறைபவன் - உலகங்கட்கெல்லாம் தலைவன் - காலகாலன் - உமாபதி என இறை இயல்பை விளக்கிற்று. எல்லாம் உயிராயினும்* ***போற்றி இசைத்த உயிரே இறைவன் விளங்கி நிற்கும் இடமாம்*** *ஆதலின் அந்த உயிர் இன்னுயிர் எனப்பட்டது. போற்றி செய்து மலர்தூவி வழிபடல் இருபத்தொன்றாம் நூற்றாண்டிற்கு மிக உகந்த வழிபாடு என்பது உணரப்படுகிறது.*

***குறிப்புரை :-*** *போற்று - முதனிலைத் தொழிற்பெயர், போற்றுதல் - துதித்தல். 'போற்றி' என்பதன் ஈற்று இகரம் தொகுத்தல் பெற்றது எனக் கொண்டு, 'வணக்கம்' எனப்பொருள் கொள்ளலும் பொருந்தும். "போற்றிசைத்து" என்றதனை, "கூறுகின்றேன்" என்பதற்கு முன்னே வைத்து உரைக்க. 'தூயஉயிர்' என்றதற்கு "இன்னுயிர்" என்றார். தயிரில் நெய்போல இறைவன் இனிது விளங்கி நிற்றல் குறிப்பிடப்படுகிறது. "நாற்றிசைக்கும்" என்றது, 'உலகம் முழுவதற்கும்' என்றவாறாம். நன்மை, அருள், உலகத்தோடு இறைவனுக்கு உளதாய தொடர்பு அவனது சத்தி வழியே ஆதலின், 'நாற்றிசைக்கு நாதன்' என்னாது, "நாற்றிசைக்கும் நல்ல மாதுக்கு நாதன்" என்றார். 'அளியன்றித் தெறலும் அருளே' என்றற்கு "நல்ல" என்றும் 'அவ்விரண்டனையும் செய்வது சத்தியே' என்றற்கு "மாது" என்றும், 'சத்தி முதலன்று; முதலது பண்பே' என்றற்கு, "நாதன்" என்றும் கூறினார். 'மாது' உயர்திணை ஆதலின், சாரியை வேண்டாதாயிற்று. மேல்திசை - மேற்சுட்டிய நான்கு திசைகள். "ஒரு வேந்தன்" என்றது, 'திசைக்காவலர் எண்மருள் ஒருவன் என அவனது சிறப்பின்மை கூறியவாறு. கூற்றுதைத்தமையைக் கூறியது, மேல் 'அவன்'*

*எனப் பொதுப்படக் குறித்த முதற்கடவுளை, 'சிவபெருமான்' எனச் சிறப்பு வகையால் விளக்குதற் பொருட்டு, சிறப்பாதற்கு "மாதுக்கு நாதன்" என்றதினும் இது வலியுடைத்து என்க. முதற் கடவுளை முதற் கண்ணே சிறப்புப் பெயராற் கூறாது இலக்கணத்தாற் பொதுப்படக் கூறியது, 'முதற்கடவுளாவான் இத்தன்மையனே, என்பது உணர்த்து முகத்தால், தாம் கூறும் சிவபெருமானையன்றி ஏனையோர் கூறும் கடவுளரை முதற்கடவுள் என்றல் ஒவ்வாமையை நிறுவுதற் பொருட்டாம். ''புனிதன்'' முதலியன ஆகுபெயராய் அவனது பெருமைமேல் நின்றன. எனவே, 'இந்நூல் சிவபெருமானது பெருமையை உணர்த்தற்கு எழுந்தது' என்பது பெறப்பட்டது. 'சிவபெருமானது பெருமையேயன்றி உயிர்களின் இயல்பு, அவைகளைப் பற்றியுள்ள பாசங்களின் இயல்பு என்பனவும் இதனுட் கூறப்படுகின்றன அல்லவோ, எனின், அவை அவனது அடிமையும், உடைமையுமே ஆதலின்' அவற்றது இயல்புகளும் அவனது பெருமையாய் அடங்கும் என்க.*

*"போற்றிசைத்துக் கூறுகின்றேன்" என்றதனால், வரையறை வகையால் கூறாமை பெறப்பட்டது. வரையறை வகையாற்கூறின், அளவு படாமையின் குன்றக் கூறலாய் முடியும், என்பது கருத்து. "யானறி அளவையின் ஏத்தி ஆனாது - நின்னளந்தறிதல் மன்னுயிர்க் கருமையின் நின்னடி உள்ளி வந்தனென்"[1] எனப் பிறிதோரிடத்தும் கூறப்பட்டமை காண்க. இதனானே இந்நூல் தோத்திர வகையாகிய திருமுறைகளுள் ஒன்றாயிற்று.* **நான் போற்றுகின்றேன். நீங்களும் போற்றி உய்யுங்கள் என்னும் கருணைக் குறிப்பு.**

***"கூறுகின்றேன்" என வாளா கூறின், 'வரையறை வகையாற் கூறுகின்றார்' என்பதேபடும் ஆதலின், அது படாமைப் பொருட்டு, "போற்றிசைத்து" என்றதனையும் உடன் கூறினார். ஆகவே, நுதலிய பொருளோடு அதனைக் கூறும் முறைமையும் இதனுள் பெறப்பட்டது. "கூறுகின்றேன்" எனத் துணிவுபற்றி எதிர்காலம் நிகழ்காலமாகச் சொல்லப்பட்டது. திசையொடு திசை புணருங்கால் தெற்கையும், வடக்கையுமே நிலைமொழியாக நிறுத்திப் புணர்த்தலைத் தொல்காப்பியத்தில் காணலாம்.***

---

1. *திருமுருகாற்றுப் படை 276 - 278*

**நூற் சிறப்பு**

**3.** ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்
நக்கன்என் றேத்திடும் நம்பனை நாள்தொறும்
பக்கம்நின் றார்அறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. 3

---

*இதுவும், அடுத்த பாட்டும் நூற்சிறப்புக் கூறுகின்றன.*

***3. தெளிவுரை :-*** *எண்ணில்லாத தேவர்களில் ஒருவனாய் அவர்களோடொப்ப நிற்பவனும், அவ்வாறு நிற்பினும் அவர் அனைவராலும் என்றும் வணங்கப்படுபவனும், தன்னை அடைந்தவர்களாலும் தன் தன்மை முழுதும் அறியப்படாத மேலானவனும், ஆகிய சிவபெருமானது பெருமையை யான் அவனுள் அடங்கிநின்று உணர்ந்து துதிக்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *ஒக்க நின்றானை - உடனாய் நின்றவனும், உலப்பிலி தேவர்கள் நக்கன் என்று ஏத்திடும் நாதனை - அழிவில்லாத தேவர்கள் ஆடையில்லாதவன் என்று பரவும் தலைவனும், பக்க நின்றார் அறியாத பரமனை - பக்கத்திலுள்ள திருமால் முதலிய தேவர்கள் அறிய முடியாத மேலோனும் ஆகிய இறைவனை, புக்க நின்று உன்னி யான் நாள்தொறும் போற்றி செய்வேன் - நான் அணுக்கமாய் இருந்து அனுதினமும் வழிபாடு செய்வேன்.*

*நக்கன் - ஆடையில்லாதவன். இறைவன் திசைகளையே ஆடையாகக் கொண்ட அகண்ட வியாபகம் உடையவன்.*

*உயிர்களோடு உடனாய் விளங்கும் பரமனை அணுகி நின்று வணங்க வேண்டும்.*

*பக்கம் நின்றார் அறியாத பரமன் என்றது தாமரையோடு உடனிருந்தும் தவளை அதன் மணத்தையும் தேனையும் அறியாதது போலப் பெருந்தேவர் எல்லாரும் திருவணுக்கன் திருவாயிலிலேயே காத்துக் கிடக்கும் புண்ணியத்தை எய்தியும் இறைவனின் உண்மை இலக்கணத்தைத் தெரிந்து உய்ய மாட்டார்கள் ஆயினர். என்னே இவர்கள் பேதைமை! என்று இரங்கிக் கூறிப் பரமனது உயர்வும் தேவர்களது மாட்டாமையும் தெரிவித்தது.*

***4. தெளிவுரை :-*** *மண்ணுலகத்தவராகிய மக்கட்கும், விண்ணுலகத் தவராகிய தேவர்கட்கும் முதலாய் நிற்பவனும், வந்த இடத்திலே எனது*

4. அகலிடத் தார்மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் தென்மெய்யைப் போதவிட் டானைப்
பகலிடத் தும்இர வும்பணிந் தேத்தி
இகலிடத் தேஇருள் நீங்கிநின் றேனே. 4

---

*உடம்பை விழச்செய்தவனும் ஆகிய சிவபெருமானை நான் பகலும், இரவும் வணங்கியும், துதித்தும் மயக்கத்தைச் செய்யும் இவ்வுலகத் திற்றானே மயக்கமின்றி இருக்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *சிறப்புப்பற்றி, "அகலிடத்தார்" என மக்களையே கூறினாராயினும், இனம்பற்றிப் பிற உயிர்களும் கொள்ளப்படும். நிலை பேறு உடைமைபற்றிக் காரணத்தை, "மெய்" என்றார். காரணம் இங்கு வினைமுதல். அகலிடத்தார் என்றதனோடு இயைய 'அண்டத்தார்' என நின்றதன் இறுதிநிலை தொகுத்தலாயிற்று. அனைத்துயிர்க்கும் முதல்வனாதலை வலியுறுத்தற்பொருட்டு இரு தொடராக வகுத்தருளிச் செய்தார். "விட்டான்" என்பது 'விடுவித்தான்' என்னும் பொருளது. 'போத இட்டார்' எனப் பிரித்து, 'மிக இருத்தினான்' என்றலும் ஆம். நாயனாரது உடம்பை நீக்கி அவரை மூலன் உடம்பில் இருக்குமாறு இறைவன் செய்த வரலாறு பெரிய புராணத்துள் விரித்துரைக்கப் பட்டது. 'எம்மெய்யை, என்றனை' என்பனவும் பாடங்கள். ஐம்புலன்கள் உயிர்செல்லும் வழிக்கு மாறாய் நின்று மறித்தலின், அவற்றின் வடிவாகிய உலகத்தை "இகலிடம்" என்றும், அஃது அன்னதாயினும், மேற்கூறியவாறு நான் இறை நினைவில் நீங்காது நிற்குமாற்றால் மயக்கமின்றி இருக்கின்றேன் என்பார், "இருள் நீங்கி நின்றேன்" என்றும் கூறினார். இவை இரண்டு பாட்டாலும், 'இந்நூல் அருள்வழி நின்று செய்யப்படுவதன்றி, ஆன்ம போதத்தின் வழிநின்று செய்யப்படுவதன்று எனவும், அன்னதாயினும் பதி போதமும் ஒரோவழி உள தாங்கொல்லோ' என ஐயுறல் வேண்டா எனவும் கூறி, நூலது சிறப்பு உணர்த்தப்பட்டது. பயனும், உபாயமும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இவற்றின் பின்னவாகப் பதிப்புக்களில் காணப்படும் "சிவனோ டொக்கும் தெய்வம்" என்பது முதலிய பாட்டுக்களும், வேதச்சிறப்பு, ஆகமச்சிறப்பு, திரிமூர்த்திகளின் சேட்டகனிட்ட முறை என்னும் அதிகாரப் பாட்டுக்களும் எடுத்துக்கொண்ட பொருளையே கூறலின், அவை நூற்பாட்டுக்களன்றிப் பாயிரப் பாட்டுக்களல்லவாதல் இனிது விளங்கும். அதனால், ஏடுசேர்த்தோர் அவற்றை முறைபிறழக் கோத்தார் எனவே கொள்க.*

**குரு பாரம்பரியம்**

5. பெற்றமும் மானும் மழுவும் பிரிவற்ற
தற்பரன் கற்பனை யாகும் சராசரத்
தற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பத மும்அளித் தான்எங்கள் நந்தியே. 5

6. நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே. 6

---

*இந்நூல் பொருள் வரலாற்றுமுறையாற் கேட்டுச் சொல்லப் பட்டதன்றித் தாமே தம் மனவழிப்பட்டுச் சொல்லியதன்று என்றற்கு இது முதல் ஏழு பாட்டுக்களால் தமது அருட்குடி வரவு கூறுகின்றார். குரு பாரம்பரியம் - ஆசிரியத் தலைமுறை.*

***5. தெளிவுரை :-*** ***எங்கள் நந்தி பெருமான், ஆனேறு, மான், மழு என்பவற்றை விடாது கொண்டுள்ள சீகண்ட பரமேசுரனது உபதேசப் பொருளாகிய பொருட் பெற்றியாம் மறைபொருளையும் எனக்கு விளக்கி, தமது ஞானத்தைத் தரும் திருவடிகளையும் அடியேனது தலைமேல் சூட்டியருளினார்.***

***குறிப்புரை :-*** ***சீகண்ட வுருத்திரர் என்பது விளங்குதற் பொருட்டே வாளா, 'தற்பரன்' என்னாது, பெற்றம் முதலிய அடையாளங்களைக் கூறினார். கற்பனை - உபதேசம். சராசரம் என்பது, 'சித்து, அசித்து' என்னும் பொருட்டாய், அனைத்துப் பொருள்களையும் குறித்தது. அசைவனவும், அசையாதவனவுமாம் அற்றம் - மறைபொருள்; இரகசியம், நன்மை - ஞானம், இதனால், சீகண்ட பரமேச்சுரன்பால் நந்திபெருமானும், நந்திபெருமான்பால் இவ்வாசிரியரும் ஞானம் பெற்றமை கூறப்பட்டன. இப்பாட்டும் பதிப்புக்களில் இடம்மாறி உள்ளது. இறைவன் தமக்கு அருளிச்செய்த முறையை அறிவிக்கிறார்.***

***6. தெளிவுரை :-*** ***நந்திபெருமானது அருளைப்பெற்ற ஆசிரியன்மார் யாவர் என்று ஆராயுமிடத்து, அவரோடு ஒத்த நால்வரும், சிவயோக முனிவரும், தில்லை அம்பலத்தை வணங்கிய பதஞ்சலி, வியாக்கிர பாதரும் என்ற இவர் என்னொடு கூட எண்மருமாவர் என்பதாம்.***

*குறிப்புரை :-* *ஆசிரியரை, நாயனார், நாதர் என்கின்றார். "நமச் சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க" என்ற திருவாசகம் இங்கு நினைக்கத் தக்கது. நந்தி பெருமானோடு ஒத்தமை, சீகண்ட பரமேசுரன் பால் அறம் முதலிய நான்கையும் கேட்டமையாலாம். 'அந்நான்கையும் உணர்த்துவன வேதங்கள்' என்பது முதல் திருப்பாட்டின் உரையுட் காட்டப்பட்டது. அறமுதலியவற்றோடு ஒருங்கோதிய வீட்டுநெறி பொதுவகையானன்றிச் சிறப்பு வகையான் அன்மையின், அதனைச் சிறப்பு வகையான் இனிதுணர்ந்து அடைய அப்பெருமான் அவர்களை, நந்தி பெருமான்பால் கேட்க என விடுத்தவண்ணம் அவர்களும் நந்தி பெருமான்பால் ஆகமவழியாக வீட்டு நெறியைச் சிறப்பு வகையாற் கேட்டுணர்ந்தார். ஆகவே, அவர்கள் நந்தி பெருமானோடு ஒருங்கொத்த மாணவராய், முதிய மாணாக்கரிடம் இளைய மாணாக்கர் கேட்கும் முறையிற் கேட்டனர் என்றற்கு, "நந்திகள் நால்வர்" என்றார். அவர்களை 'சனகர், சனந்தனர், சனாதனர், சனற் குமாரர்' என்ப. சிவயோகமுனி என்பவரைப் பற்றிப் பிற நூல்களில் ஓரிடத்தும், ஒன்றும் கூறப்படவில்லை. அதனால் அவரைப் பற்றி யாதும் அறிதற்கில்லை. சிலர் இவரை 'அகத்தியர்' என்றும், 'துருவாசர்' என்றும் கூறுவர். அவ்வாறாயின், நாயனார் அப்பெயரால் கூறுதலல்லது பிறவாறு கூறார் என்க. எனவே, சிவயோக முனி என்பது பெயரேயன்றித் தன்மை கூறுவதன்று என்க.*

*பதஞ்சலியாரும், வியாக்கிரரும் தமிழ்நாட்டோடு தொடர்புடையவர் என்பதற்கு "மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரர்" என்றார். எனவே, மன்று தொழுத என்னும் அடைமொழியைப் பதஞ்சலிக்கு மட்டுமே உரியதாக வைத்து, அஃது யோகநூல் பதஞ்சலி யாரினை வேறுபடுத்தற்குக் கூறப்பட்டது என்றல் பொருந்தாதாம். ஆகமத்துள் யோக பாதமும் உளதாதலின், அதனையே இப்பதஞ்சலியார் செய்யப் பின்வந்தோர் அதனை நன்குணராது வேறு கூறினமையின் அது 'பாதஞ் சலம்' என வேறு மதமாயிற்று எனக் கொள்ளுதலில் தவறில்லை. பொருட்பெற்றியை இனிதுணர்த்துவது ஞானபாதமேயாதலின், யோகபாதத்துட் கூறப்பட்ட தத்துவங்கள் சிறிது சுருங்கியிருத்தல் கூடும். மன்று தொழுது நின்றமையால் நூல்செய்தல் கூடாதென்பது இல்லையன்றோ! நாயனாரும் மன்று தொழுதவராதல் பின்னர்க் காணப்படும்.*

*இங்குக் கூறப்பட்ட எண்மரும் ஒருகாலத்தே நந்தி பெருமானிடம் ஞானம்பெற்றனர் என எண்ணுதல் கூடாது. நந்திகள் நால்வரும் முதற்கண் பெற்றனர் என்றும், சிவயோக மாமுனி அதற்குப் பின் ஒருகாலத்திற் பெற்றனர் என்றும், அவருக்குப்பின் பதஞ்சலி,*

7. நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றேன்
நந்தி அருளாலே மூலனை நாடினேன்
நந்தி அருளாவ தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நான்இருந் தேனே. 7

8. மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்

---

*வியாக்கிரர் இருவரும் ஒருகாலத்திற் பெற்றனர் என்றும் இறுதியாக இவ்வாசிரியர் பெற்றனர் என்றும் கொள்ளற்பாலன. "மன்று தொழுத" என இறந்த காலத்தால் கூறினமையின், முன்னே மன்று தொழுது பின்னர் அதன் பயனாக நந்தி பெருமானை அடைந்து, ஞானம் பெற்று, மீண்டனர் என்பது பெறப்படும். வியாக்கிரர் மூத்தோராகவும், வழிபாட்டில் பெரும்பற்றுடையராகவும் சொல்லப்படுதலால், தில்லை, 'பெரும்பற்றப்புலியூர்' என அவர்பெயராலே வழங்கப்பட்டது. பதஞ்சலியாரும் அத்தலத்திலே தங்கி யோகநூல் செய்தார் என்க. வியாக்கிரர் நூல் செய்திலர். வியாக்கிரர் வசிட்ட முனிவர்தம் தங்கையை மணந்து பெற்ற உபமன்னிய முனிவர் இமயத் தாழ்வரையிலே பிறந்து சிறிது வளர்ந்து, பின்னர்ச் சில்லாண்டுகள் தில்லையில் தந்தையார்பால் வளர்ந்து பின்னர்த் தவத்திற்கு உரியராய காலத்து மீளவும் அத்தாழ்வரைக்கண்ணே சென்று தங்கினார் என்க. உபமன்னியரை யாதவன் - துவரைக் கிறையாகிய மாதவன் முடிமேல் அடி வைத்தான் என்று சேக்கிழார் அருளிச் செய்தமையால் இம் முனிவர் பாரத காலத்தவர் என்பது பெறப்படும். இருக்கு என வழங்கப்பட்ட ஆரிய மந்திரப் பாடல்களை, இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என வியாச முனிவர் முறைப்படுத்து நான்காக வகுத்து பிரமாணம், உபநிடதம் என்பவற்றையும் அவற்றுக்கு உரிமை செய்து அனைத்திற்கும் வேதம் எனப் பெயரிட்டதும் பாரத காலத்திலேயாம். அதன் பின்னரும் உபநிடதங்கள் தோன்றின என்க.*

***7. தெளிவுரை :-** நந்திப் பெருமானது அருளால் நான், ஆசிரியன் எனப் பெயர்பெற்றேன். பின்பு மூலன் உடலைப் பற்றுக்கோடாகக் கொண்டேன். நாட்டில் இறைவனருள் பெறாத ஒருபொருள் என்ன செய்யும்? ஒன்றையும் செய்யாது. அதனால், அவரது அருள் வழியை உலகிற்கு உணர்த்த நான் மூலனது உடலுக்குள் சிவானந்த நிட்டை கூடியிருந்தேன் என்றவாறு.*

***குறிப்புரை :-** பெற்றோம், நாடினோம் என்பன பாடமாயின் அவற்றை ஒருமைப் பன்மை மயக்கமாகக் கொள்க. நாட்டினில், நந்தி அருளா அது என் செயும் எனப் பிரித்துப் பொருள் கொள்க. யோக*

கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ
டிந்த எழுவரும் என்வழி யாமே. 8

9. நால்வரும் நாலு திசைக்கொன்றும் நாதர்கள்
நால்வரும் நானா விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரும் நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வரும் தேவராய் நாதரா னார்களே. 9

---

*சித்தியுடையார் நாதன் என வழங்கப்படுதலை போகநாதர், சட்டை நாதர் என்ற வழக்குகளால் அறியலாம்.*

***8. தெளிவுரை :-*** *எனது நூலாகிய இத்திருமந்திரத்தைப் பெற்று வழிவழியாக உணர்த்த இருப்பவர்; மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், தறிபோன்ற உருவத்துடன் யோகத்தில் இருக்கும் காலாக்கினி, கஞ்சமலையன் என்னும் எழுவருமாவர். இவரே என்வழியினர்.*

***குறிப்புரை :-*** *மந்திரம் எனப் பின்னர்க் கூறப்படும் பெயரை இங்கு எதிரது போற்றிக் கூறினார். இந்திரன் முதலியோர் கடவுளரல்லர், அப்பெயர்பெற்ற மாணாக்கர் என்க. இவர்களை ஓரோரிடத்தில் நாயனார் பின்னர்க் குறித்தல் காண்க. இவர் என்வழியாம் என வேறு தொடராக்குக. இங்ஙனமாகவே, இவர் எழுவரும் திருமூலர்தம் நேர் மாணாக்கராய்ப் பின்பு அவரது மரபினை வேறுவேறிடத்தில் இருந்து வளர்த்தனர் என்பது பெறப்படும். அண்மையில் வாழ்ந்த தாயுமான அடிகள் தம் ஆசிரியராகிய மௌன குருவை, 'மூலன் மரபில்வரு மௌன குருவே!' என விளித்தமை காணப்படுகின்றது.*

***9. தெளிவுரை :-*** *நந்தி பெருமானுக்கு மாணாக்கராகிய எண்மருள், நந்திகள் எனப்பட்ட நால்வரும் எல்லா உலகங்கட்கும் பொருந்திய ஆசிரியர்களாய், அறம் முதலாக நால்வகைப்பட்டுப் பற்பல வகையாக விரிந்த உறுதிப்பொருள் அனைத்தையும் உணர்ந்து, நான் பெற்ற பேற்றினை உலகம் பெறுவதாக என்னும் பேரருள் உடையராய், அதனால் சிவகணத்துள்ளே ஆசிரியராயினர். இப்பாடல் சந்தானம் பரவியதை நுதலிற்று.*

***குறிப்புரை :-*** *அதனால், அவர் இந்நிலவுலகத்திற்கு வந்திலர் என்றவாறு. அந்நால்வருள் சனற்குமாரர்க்குச் சத்தியஞான தரிசினிகளும், அவர்க்குப் பரஞ்சோதி மாமுனிகளும் மாணாக்கராக, பரஞ்சோதி மாமுனிகள் வான்வழிச் செலவின் இடையே*

10. மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும் ஈசன்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்பும்
செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக் காட்டகி லானே. 10

---

*தமிழ்நாட்டில் திருவெண்ணெய்நல்லூரில் கருவிலே திருவுடையராய் (சாமுசித்தராய்)த் தோன்றி, சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத் திருப்பெயர் உடையாராய் இருந்தவர்க்குச் சிவஞானத்தை உபதேசித்து, மெய் கண்டார் எனத் தீக்கைத் திருப்பெயரும் இட்டுச் செல்ல, அவரது மரபு இன்றும் தமிழ் நாட்டில் நின்று நிலவுதல் அனைவராலும் அறியப்பட்டது. நான் என்றது, பன்மை ஒருமை மயக்கம். மெய்கண்டாரது தோற்றம் நாயனார்க்குப் பன்னூறாண்டுகட்குப் பிற்பட்டது என்பதைப் பலர் அறிவர். நானாவிதப் பொருள் கைக்கொண்டு என்பது குரு உபதேச முறையோடு தத்தம் அனுபவங்களையும் சேர்த்துத் தனித்தனியாக யோக நெறியைப் பரப்பினார் என்று கொள்ளலாம். குரு உபதேசம் ஒன்றேயானாலும் அனுபவம் நானாவிதமாதல் இயல்பே.*

***10. தெளிவுரை :-*** *பிறப்பு இறப்புகள் இல்லாத பெருமையை உடைய முக்கட் கடவுள் தனது எல்லையில்லாத பெருமையைப் பிறர்க்குக் காட்டமாட்டானாயினும், அதனை அவன் ஆசான்மூர்த்தி வாயிலாகக் காட்டியது மேற்குறித்த நால்வரோடு, சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்கிர பரதர் ஆகிய மூவர்க்குமேயாம்.*

***குறிப்புரை :-*** *அவர்களோடு அப்பேறு எனக்கும் கிடைத்தது என்பது குறிப்பெச்சம். பணிவினால் இதனை எடுத்தோதாது குறிப்பாற் பெறவைத்தார். நாங்கள் பெற்ற பேறு பிறர் பெறுதற்குரியது என அதன் அருமை கூறியவாறு. இரண்டாம் அடி முதலாகத் தொடங்கிப் பொருள் கூறுக. மூன்று, நான்கு என்னும் முறைமையால் உளதாகும் செய்யுளின்பம் நோக்கி மூவரை முன் வைத்தார். இறப்பும், பிறப்பும் ஒழிந்த பெருமையை உடைய தேவன் என்க. ஒழிந்த அதனையே பெருமை எனக் கூறலால், பெயரெச்சம் வினைப்பெயர் கொண்டதாம். மூன்றன் என்னும் சாரியை தொகுத்தலாயிற்று. முச்சுடர்களின் ஒளியும் சிவபெருமானது முக்கண்ணின் ஒளியாதல்பற்றி, செழுஞ்சுடர் மூன்றன் ஒளியாகிய தேவன் என்றார்.*

11. எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையும்
செழுந்தண் நியமங்கள் செய்மின் என் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. 11

---

**11. தெளிவுரை :-** *தன்னைவிட்டு இமையளவும் பிரிய விரும்பாத நந்திகள் நால்வர்க்கும் சிவபெருமான் எதிர்ப்படத்தோன்றி, சப்த மேகங்களும் எழுந்து எட்டுத் திசையும் நடுங்கப் பெருமழை பெய்து உலகம் அழிகின்ற ஊழிக் காலத்திலும் நீங்கள் நம்மை வழிபட்டிருப்பீராக என்று அருள்புரிந்தான். நியமங்களாகிய பூசைகளில் தவறுதல் கூடாது என்று இறைவன் அறிவித்ததை இப்பாடல் உணர்த்துகிறது.*

**குறிப்புரை :-** *அதனால் அவர்கள் என்றும் அவனோடு இருப்பர் என்றவாறு. எழுந்து நீர் பெய்வன ஏழுமேகங்களும். அவைவிடாது பெய்யினும் என்றது, ஊழிக் காலத்தும் என்றவாறு. எட்டுத் திசையும் பெய்யினும் என முன்னே கூட்டுக. மூன்றாம் அடி சிவபெருமான் காட்சி வழங்கினமையைக் குறித்தது. ஆசான் மூர்த்தி வாயிலாக அருள்செய்தபின்னர் நேர்நின்று அருள்புரிந்தார் என்பதாம்.*

*நந்திகள் நால்வரும் நிலவுலகத் தொடர்பிலராயினார் எனக் கூறி, 'இந்த எழுவரும் என்வழியாமே' எனத் தமது மரபினை எடுத்துக் கூறிப்போந்தமையால், ஏனை மூவரும் இவ்வாறே தம் தம் மாணாக்கர் சிலரால் நந்திமரபினை நிலைநிறுத்தினர் என்பது கொள்ளக் கிடக்கின்றது. எனினும் இன்று சனற்குமாரர் மரபாகிய மெய்கண்ட மரபு ஒன்றுமே நிலைபெற்றுளது என்க.*

*மேல் ஆசிரியமரபுவகை பலவற்றையும் கூறிய நாயனார் இனி அவற்றுள் ஒன்றன் முதல்வராகிய தாம், தமது நெறிப் பொருளை உலகிற்கு உணர்த்தற்பொருட்டுச் செய்யும் இந்நூலாசிரியர் வரலாறு விளங்குதற் பொருட்டுத் தம் வரலாற்றைக் கூறுகின்றார்.*

**12. தெளிவுரை :-** *என் ஆசிரியராகிய நந்தி பெருமானது இரு திருவடிகளையும் என் சென்னியிலும், சிந்தையிலும் கொண்டு, வாயினாலும் துதித்து, அவ்வாற்றானே அந்திப் பிறையை அணிந்த சிவபெருமானது திருவருட் பெருமையை இடைவிடாது சிந்தித்து உணர்ந்து, அங்ஙனம் உணர்ந்த வாற்றால், சிவாகமப் பொருளைக் கூறத் தொடங்கினேன்.*

**குறிப்புரை :-** *முதலிரண்டு அடிகளும் ஆசிரிய வணக்கங்கள்*

**தம் வரலாறு**

12. நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்(து)
அந்தி மதிபுனை அரனடி நாள்தொறுஞ்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே. 12

13. செப்பும் சிவாகமம் என்னுமப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில்ஒரு கோடி யுகமிருந் தேனே. 13

---

*கூறும் கருத்துடையன. 'மந்திரம்' என்பது 'மனத்தில் நிலைத்து நிற்பது' எனவும் பொருள்தருமாதலின், பன்னிரண்டடிகளால் நூற்பெயர்க் காரணமும் புலப்படுத்தவாறாயிற்று. இதனானே நாயனார் சிவாகமங்களை மொழிபெயர்த்துச் செய்யாது, அவற்றது தெளிந்த பொருளையே திரட்டி இந்நூலால் அருளிச் செய்கின்றார் என்பது பெறப்பட்டது. எனவே, "ஆகமம்" என்றது அவற்றின் தெளிந்த பொருளையாயிற்று. சிவாகம நெறியே 'சைவம்' எனப்படும் சிவநெறியாதலின், நாயனார் தமிழ்நாடு செய்த தவப்பயனானே இங்கு எழுந்தருளியிருந்து, அந்நெறியின் முறைமையை இந்நூலால் அறியச் செய்தார் என்க.*

13. ***தெளிவுரை :-*** *உயர்த்துச் சொல்லப்படுகின்ற 'சிவாகமம்' என்னும் பெயரையுடைய நூலைக் கூறவல்லவன் என்ற தகுதி பெற்ற பின்பும், அவற்றின் பொருளை உள்ளவாறு உணர்த்துகின்ற நந்தி பெருமானது ஆணை வழி, அழிவில்லாத தில்லையம்பலத்தை அடைந்து அங்குச் சிவபெருமான் செய்யும் ஒப்பற்ற நடனத்தைக் கண்டு மீண்டபின், உடம்போடிருக்க உடன்படாத நிலையிலே பலகாலம் உடம்போடு இருந்தேன்.* ***நூலறிவு ஒன்றே கொண்டு நுவன்றேன் அல்லேன். ஆசிரியன் அருளும், ஆனந்தக்கூத்துத் தரிசனமும் கண்டபின் பலகோடியுகம் இருந்து எண்ணி இயம்பினேன் என்பதாம்.***

***குறிப்புரை :-*** *இருந்தது கயிலைத் தாழ்வரையிலாம். இவ் வரலாற்றைத் தமக்கு இயைபில்லாமைபற்றிச் சேக்கிழார் கூறிற்றிலர் என்க.* ***மண்ணுலகத்தார் மன்றின்கட்சென்று திருக்கூத்துக் காண்டல் இன்றியமையாதது என்னும் மரபு நிலைபெறுதற்கு*** *நந்திதேவர் நாயனாரை அது செய்யுமாறு பணித்தருளினார் எனக் கொள்க.*

14. இருந்தஅக் காரணம் கேள்இந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. 14

---

*அநுபவ ஞானம் கைவரப்பெற்றோர் உடம்பொடு நிற்க விரும்பாமையை வாதவூரடிகளது நிலைபற்றி உணர்க. ஞானம் கைவந்தபின் நாயனாரது நிலை இதுவாயினும், அதற்கு முன்னர் அவர் நெடுங்காலம் இருக்க விரும்பிச்செய்த பெருந்தவம் தனது பயனைத் தந்து நின்றமையின், அவர் அவ்வாறே இருத்தல் வேண்டுவதாயிற்று என்பதை அவர் அடுத்தபாட்டிற் கூறுதல் காண்க. இவ்வாற்றானே இவரைச் சேக்கிழார், 'அணிமாதி சித்திபெற்றவர்' எனக் குறித்தல் காண்க. ஒப்பு - உடன்பாடு. இவ்வாறு உடன்பாடின்றி இருந்தமையால், ஒவ்வொரு நாளும் ஒவ்வோர் யுகம்போலத் தமக்குத் தோன்றின என்பது தோன்ற, "எழுகோடியுகம் இருந்தேன்" என்றார். பலவற்றைக் குறித்தற்கு, 'கோடி' எனக்கூறலும், பலவற்றைக் குறிக்குமிடத்து ஏழென்னும் எண்ணோடு தொடர்புபடுத்தலும் வழக்கு. எனவே இன்னோரன்னவாக நாயனார் கூறுவனவற்றிற்கு, 'பன்னெடு நாள் இருந்தார்' என்னும் பொதுப்பொருளே கொள்ளலாவது அறிக. இது பற்றியே நாயனாரது வாழ்நாளைச் சேக்கிழார் அவரது நூலின் பாடற்கணக்கொடு தொடர்புப்படுத்தி, 'மூவாயிரம் ஆண்டு' என வரையறுத்து, 'பாடலும் மூவாயிரம், நாயனார் வாழ்ந்த ஆண்டும் மூவாயிரம்' என்னும் நயம்பற்றி, 'ஓராண்டுக்கு ஒன்றாக ஒன்றவன்றான் என எடுத்து இந்நூலை அருளிச் செய்தார்' எனக் குறித்தருளினார். நாயனார் தாம் வாழ்ந்த காலத்தை 'மூவாயிரம் ஆண்டு' என ஓரிடத்தும் குறியாமையை நோக்குக. "ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே" என்ற பாட பேதத்துடன் கூடிய மற்றொரு உரையையும் படித்து மகிழலாம்.*

14. ***தெளிவுரை :-*** ***இந்திரனே, உடன்பாடின்றியும் நான் அவ்வாறு நெடுநாள் உடம்போடிருந்த காரணத்தைக் கூறுகின்றேன்; கேள். எல்லா உலகங்கட்கும் தலைவியாம் அருந்தவமாகிய செல்வியை அடியேன் அன்பினால் விரும்பி உடன் நின்று பணிந்துவந்தேன்.***

***குறிப்புரை :-*** *'அதனால் அவள் என்னை அவ்வாறு இருக்கச் செய்தாள்' என்றவாறு. அருந்தவச்செல்வி, உருவகம், ஒன்னார்த் தெறலும், உவந்தாரை ஆக்கலும் செய்யவல்லது தவமாகலின், அதனை உலகத்தின் தலைவியாகக் கூறினார். கல்வி செல்வங்களைக் 'கலைமகள், திருமகள்' என்றல்போலத் தவத்தை, 'புவனாபதி' என்றார். 'புவனா'*

15. **சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்**
மிதாசனி யாதிருந் தேன்நின்ற காலம்
இதாசனி யாதிருந் தேன்மனம் நீங்கி
உதாசனி யாதுட னேஉணர்ந் தோமால். 15

---

*என்பது உலகமாகிய பெண்பாலை உணர்த்தி நின்றது. 'பதி' என்பது, 'அவனைப் பதமாக உடையவள்' என்னும் ஈகார ஈற்று ஆரியச்சொல் 'இந்திரனே' என்றது. அப்பெயருடைய மாணாக்கரை முன்னிலைப் படுத்ததாம். அமரர் பதியான இந்திரன் அல்லன்.*

15. ***தெளிவுரை :-* இறப்புத் தோன்றாதவனாய் இருந்து வாழ்ந்த அக்காலம் முழுதும் உலகத்தில் விருப்பம் தோன்றாது மனஒடுக்கம் உடையவனாயே இருந்தேன். அவ்வாறிருக்கும் பொழுது, சிவபெருமானது ஐந்தொழில்நிலை, பொருட்பெற்றி, தமிழ்மொழி, வேதம் என்னும் இவைகளைப் புறக்கணியாது விருப்பத்துடன் கற்று உணர்ந்தேன்.**

***குறிப்புரை :-*** *கீழுள்ள மகேசுரர் முதலியவர்க்கும் தலைவர் சதா சிவரேயாதலின், அவரே ஐந்தொழிற்கும் தலைவராதல் வெளிப்படை. அதனால், ஐந்தொழில் நிலையை, 'சதாசிவம்' என்ற ஒன்றினாலே குறித்தார். இனி அதனை 'உபலக்கணம்' என்றலும் ஆம். 'முத்தமிழ்' என்ற இதனால்,* ***கயிலைத் தாழ்வரையிடத்தும் அக்காலத்தில் தமிழ் போற்றிக் கற்கப்பட்டது என்பது தெளிவாகும். அதனாலன்றோ பிற்காலத்தில் சேரமான் பெருமாள் நாயனார் தமது 'திருக்கயிலாய உலா' என்னும் ஞானத் தமிழ்ப்பாடலைத் திருக்கயிலையில் யாவரும் கேட்க அரங்கேற்றினார்!*** *இதனால், நாயனார் தாம் பலகலை வல்லுநராயினமையைக் குறித்தவாறு காண்க. இவற்றையெல்லாம் இவர் நந்தி பெருமானது அருள்பெற்ற பின்னர் அதனையே துணையாகப் பற்றி நன்குணர்ந்தார் என அறிக. எனவே,* ***இறைவன் திருவருள் உலகர் உய்தற்பொருட்டு இவரை இந்நிலையினராக்கியது என்பதும் உணரற்பாற்று.*** *'மிருதம், இதம்' என்பன செய்யுள் நோக்கி; 'மிதா, இதா' என நின்றன. சனித்தல் - தோன்றுதல். உதா சனித்தல் - புறக்கணித்தல். இரண்டாம் அடியில் 'நிதாசனி' என்பதும் பாடம்.*

*மிதம் + அசனம் = மிதமான உணவு. மிதாசனியாமை - அளவுடன் நுகராமை. இதம் + அசனம் = இதமான உணவு. இதாசனியாமை - இதமான உணவு இன்மை. உதாசனியாமையாவது, விருப்பு வெறுப்பு இல்லாமை.*

**16.** மாலாங்க னேஇங் கியான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. **16**

---

*ஒருவன் பகலில் உணவு அருந்துவதில்லை என்றால் அப்போதும் உணவு அருந்தாதவன் என்று பொருள் படாது. இரவில் உணவு அருந்துவான் என்று பொருள் கொள்ளுகிறோம். அது போலவே, இங்குச் 'சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம் ஆகியவற்றை நான் அளவுக்கு மேல் ஆராய்ந்து கண்டேன்' எனப் பொருள் கொள்க. அதனால் 'உணவையும் விட்டு விருப்பு வெறுப்புக்களையும் விட்டு நின்றேன்' என்றபடி.*

*திருமூலர் தத்துவ ஆராய்ச்சியினால் மனம் தெளிந்து உண்மைப் பொருளை உணர்ந்திருந்தார்.*

**16. தெளிவுரை :-** *மாலாங்கனே, திருக்கயிலையை விட்டு இத்தமிழ்நாட்டிற்கு நான் வந்தகாரணம் கேள். சிவபெருமான் முதற்கண் நீல நிறமான திருமேனியும் நேரிய அணிகளும் உடைய உமையம்மைக்கு முதல் நூலாகச் சொல்லிய ஆனந்தக் கூத்தினது இயல்பினை விளக்கும் சிவாகமத்தின் பொருளைச் சொல்லுதற்காகவே வந்தேன்.*

***குறிப்புரை :-*** *'மாலாங்கன்' என்பவர் நாயனார்தம் மாணாக்கருள் ஒருவர் என்பது மேலே சொல்லப்பட்டது. 'மொழிந்த வேதம்' என இயையும்,* **பல தேவர்களையும் பொதுப்பட வைத்துக்கூறிய வேதமும், தான் ஒருவனையே முதல்வனாக வைத்துக் கூறிய வேதமும் எனச்சிவபெருமான் கூறிய வேதங்கள் இரண்டு எனவும்,** *அவற்றுள் முன்னதை முனிவர் நால்வர்க்கும், பின்னதை உமையம்மைக்கும் கூறினான் எனவும் கூறப்படுவனவற்றுள், பின்னதாகிய வேதம் என்பார், திருக்கூத்தின் சீலாங்கவேதம் என்றார். அது சிவாகமம் என்பது வெளிப்படை.* **ஆகமமும், முதல் நூல் என்னும் பொருளில் வேதம் எனப்படுதல் அறிந்து கொள்க.** *சீலம் - இயல்பு. அங்கம் - வகை. நாயனார் வந்தது அகத்தியரைக் காணுதற்பொருட்டேயாயினும், திருவருட்செயல் இவ்வாறு இருந்தது என்பது இப்பாட்டின் கருத்து என்க.*

*பிரபஞ்ச சிருட்டிக்குக் காரணமான ஆற்றல் நீலவொளியில்*

17\. நேரிழை யாவாள் நிரதி சயானந்தப்
பேருடை யாள்என் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவன் ஆவடு தண்டுறை
சீருடை யாள்பதம் சேர்ந்திருந் தேனே. 17

---

*உள்ளது. அவ்வொளியிலிருந்து பிரபஞ்சம் படைக்கப்படுதலால் அவள் "நீலாங்க மேனியள்" ஆகிறாள். அதனூடே அறிவாகிய செவ்வொளி, விளங்கும் எல்லா உயிர்களிலும் கலந்துள்ளது. இவ்வகையான இரு ஒளிகளால் சூக்கும உலகங்களும் தூல பூதங்களும் படைக்கப்பட்டுப் பஞ்சகிருத்தியம் நடைபெறுகிறது. இந்த யோக இரகசியத்தை விளக்கவே தென்னாடு போந்ததாய் ஆசிரியர் கூறுகிறார். நெற்றிக்கண் ஆகாயம் மண்டலம் போல நீலவொளியில் விளங்கும்.*

*ஆசிரியர் திருக்கூத்தின் உண்மையை உணர்த்த வந்தவராவார்.*

**17. *தெளிவுரை :-*** *'உமையம்மை' என்று சொல்லப்படுபவள் வரம்பில் இன்பமாகின்ற பெருமையை உடையவள். அவள் எனது பிறப்பை அறுத்து வீடு தந்து என்னை ஆட்கொண்டவள்; மிக்க புகழை உடையவள்; சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவாவடுதுறை யாகிய இச்சிறந்த திருத்தலத்தைத் தனதாக உடையவள். அவள் திருவடி நிழலில் இதுபொழுது இருக்கின்றேன். ஆசிரியர் சுழுமுனையில் விளங்கும் சிற்சத்தியோடு பொருந்தியிருந்தார்.*

***குறிப்புரை :-*** *'தேவியாவாள் சிவனது சத்தியே' என்பது பற்றி இவ்வாறு அருளிச்செய்தார். 'பேரின்பமான பிரமக்கிழத்தி' என்றார் திருவுந்தியாரிலும் (பா.34) இதனால், தாம் திருவாவடுதுறையில் நிரதி சயானந்தம் உற்று இருந்த நிலையைக் கூறினார் என்க. சீர் - செல்வம். 'சீராக' என ஆக்கம் வருவிக்க.* ***ஆவடுதுறை அம்மை ஆவாய் நின்று பூசித்த தலமாதல் அறிக.*** *நிரதிசயம் - உயர்வற உயர்ந்த நிலைமை. ஆ + அடு + தண்டு + உறை - ஆவடுதண்டுறை - ஆன்மாக்களைப் பக்குவம் செய்யும் நெறியாகிய வீணாத் தண்டில் (முதுகுத் தண்டில்) பொருந்தி சிவன் ஆவடு தண்டுறை சேர்ந்திருந்தேன் - சிவன் சீவர்களைப் பக்குவம் செய்யும் வீணாத் தண்டின் முடிவிலுள்ள சகஸ்ர தளத்தில் சேர்ந்திருந்தேன்.*

**18. *தெளிவுரை :-*** *சீருடையாள் பதம் சேர்ந்தமையால் அவளை ஒருபாகத்தில் உடைய சிவனையும் சேர்ந்திருக்கின்றேன்.*

18. சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. 18

19. இருந்தேன்இக் காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன்என் நந்தி இணையடிக் கீழே. 19

---

*இத்திருவாவடுதுறை அவளுடையது மட்டுமன்று; அவனுடைய துந்தான். இங்குச் சிவஞானத் திருவின்கீழ் அவனது திருப்பெயர் பலவற்றையும் ஓதித் துதித்துக் கொண்டிருக்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *போதம் - ஞானம். போதத்தை உடையது போதி. 'புத்தருக்குப்பின் அரசமரத்திற்கு இப்பெயர் உண்டாயிற்று எனினும், இதன் கீழ்ப் புத்தர்பெற்றது சூனியஞானம்; நான் பெற்றது சிவஞானம்' என்பார், 'அரசமரம்' என்னாது* ***"சிவபோதி"*** *என்றார்.*

**19.** ***தெளிவுரை :-*** *இங்கும் இவ்வுடம்பிலே பல்லாண்டுகள் இருந்தேன். அங்ஙனம் இருந்த காலம் முழுவதும் சிவஞானப் பேரொளியில்தான் இருந்தேன். அது தேவராலும் வணங்கப்படும் எங்கள் நந்தி பெருமானது திருவடி நிழலேயன்றி வேறில்லை.*

***குறிப்புரை :-*** *ஆசிரியர் சிவமேயாதல்பற்றி, நந்தி இணையடி சிவனடியேயாதல் அறிக.* ***'இரவு, பகல்' என்பன அறியாமையும், அறிவுமாம்.*** *இவை கருவி கரணங்களின் நீக்கத்தாலும், தொடக்கினாலும் வருவன. இவை அற்றஇடம், என்றும் ஒரு பெற்றியாய் விளங்கும் பேரறிவாம். அதனால் அங்குத் துன்பம் என்பதின்றி இன்பமே உளது என்க. இராப்பகல் அற்ற இடம் - சூரிய சந்திர கலைகளின் இயக்கமில்லா இடம். சூரியன் - அறிவு. சந்திரன் - உணர்வு. ஆன்ம அறிவும், உணர்வும் தொழிற்படாத நிலை.*

**20.** ***தெளிவுரை :-*** *முற்பிறப்பில் நன்கு முயல்கின்ற தவத்தைச் செய்யாதவர், பின்னை நற்பிறவியைப் பெறுதல் எவ்வாறு கூடும்! கூடாது. ஆகவே நான்செய்த தவம் காரணமாக இறைவன் என்னை,*

20. பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவம் செய்கிலர்
**என்னைநன் றாக இறைவன் படைத்தனன்**
**தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே.** 20

21. ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தன்னுள்
ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே. 21

---

*தன்னைத் தமிழ்மொழியால் நன்றாகப் பாடும் வண்ணம் செவ்விய முறையால் படைத்தான்.*

***குறிப்புரை :-*** *'ஆதலால் இதனைச் செய்கின்றேன்' என்பது குறிப்பெச்சம். மூலன் உடம்பில் புகுதற்குமுன்னே இருந்தநிலையை முற்பிறப்பாகவும், அதற்குப்பின் இருந்த நிலையைப் பிற்பிறப்பாகவும் வைத்து, இதில் நாயனார் அருளிச் செய்தார். ஆகவே, 'படைத்தனன்' என்றது, மூலன் உடம்பில் இருக்கச் செய்ததையேயாயிற்று. தவம் இன்றியாதொன்றும் ஆகாது என்பதே முதல் இரண்டு அடிகளால் உணர்த்தப்பட்டது. 'தமிழ்செய்தல்' என்னும் இரண்டாவதன் தொகை ஒரு சொல் நீர்மைத்தாய்ப் பாடுதல் எனப் பொருள்தந்து, "தன்னை" என்றதற்கு முடிபாயிற்று, 'தமிழ்ச் செய்யுமாறே' என்பதும் பாடம். இரண்டாம் அடியை முதலில் வைத்துரைக்க.*

**21. *தெளிவுரை :-*** *ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு - ஞானத் தலைவியாயுள்ள சத்தியோடு கூடிய சிவநகர் புகுந்து, ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள் - ஊனம் ஒன்றில்லாத ஒன்பது முடிவுகளுடன் கூடிய சந்திப்பில், ஞானப் பாலாட்டி நாதனை அர்ச்சித்து - தோத்திரமாகிய அபிடேகத்தைச் செய்து இறைவனைப் பூசித்து, நற்போதியின் கீழே நானும் இருந்தேன் - நான் நல்ல அறிவுமயமான சிவனடியின் கீழ் இருந்தேன்.*

***குறிப்புரை :-*** *ஒன்பது கோடி - ஏழு ஆதாரங்களுடன் விந்து நாதம் சேர்ந்து ஒன்பது முடிபாகும். ஊனமின்மையாவது, இவ் வொன்பதும் கடந்த நிலை. ஞானப்பாலாட்டுதலாவது தோத்திரம் செய்தல். 'பாட்டவி காட்டுதும் பாலவி யாமே' என்ற மந்திர அடியை நோக்குக.*

22. செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர் நரர்தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. 22

23. சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே. 23

---

22. ***தெளிவுரை :-*** *செல்கின்ற வாறறி சிவ முனி - திருக் கைலாயத்திலிருந்து செல்லுகின்ற வழியில் சிவனை நினைந்து, சித்தசன் வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய் - மன்மதனை வெல்கின்ற ஞானத்தில் மிகுந்த முனிவராய், பல்கின்ற தேவர் அசுரர் நரர் - முப்பத்து முக்கோடி தேவர்கள் அசுரர்கள் மானுடர்கள் ஆகியோர், தம்பால் ஒல்கின்ற வான் வழியூடு வந்தேன் - தம்மிடம் சூக்குமமாயுள்ள விண் வழியாய் இவ்வுலகுக்கு யான் வந்தேன்.*

***குறிப்புரை :-*** *சித்தசன் - மன்மதன். சித்தசன் வெல்கின்ற ஞானமாவது, காமத்தை வெல்கின்ற அறிவு. ஒல்குதல் - சுருங்குதல். சிவத்தை முன்னி முனிவராய் விண்வழி இவ்வுலகுக்கு ஆசிரியர் திருமூலர் வந்தார்.*

**23.** ***தெளிவுரை :-*** *மக்களுடைய உள்ளத்தில் சிறந்து நிற்கின்ற நூல்கள் பலவற்றிலும் தலையானதாகச் சொல்லப்படுகின்ற வேதத்தைச் சொல்லுதற்கு ஏற்ற உடம்பையும், உள்ளக்கருத்தையும் எனக்கு இங்கு இறைவன் அளித்தது, தனது அருள் காரணமாகவாம்.*

***குறிப்புரை :-*** *'தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறு நியமித்து அதற்கேற்ற உடம்பைக் கொடுத்துக் கருத்துக்களையும் தோற்றுவித்தான்' என்றபடி, 'உற்பத்தியும்' என்ற உம்மை தொகுத்தல் பெற்றது. உடல் என்றது பொருளாகிய உயிர் இருத்தற்கு இடமான சொல்லை. உள்நின்ற உற்பத்தி - சொல்லுள் நின்ற தோற்றமாகிய பொருள்.*

**24.** ***தெளிவுரை :-*** *பரவெளியைப் பற்றிநிற்கின்ற வேதப் பொருளை உள்ளவாறு உணர்ந்து சொன்னால் அதுவே, 'உடம்பைப் பற்றி நிற்கின்ற உயிருணர்வில் நிலைத்துநிற்கும் மந்திரம்' எனப்படும். அம்மந்திரத்தை இடையறாது உணர உணரப்பேரின்பம் கிடைப்பதாம்.*

24. நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறும் மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. 24

25. பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலை
உறைப்பொடுங் கூடிநின் றோதலு மாமே. 25

---

*அவ்வாற்றால் நான்பெற்ற இன்பத்தை, இவ்வுலகமும் பெறுவதாக.*

***குறிப்புரை :-*** *உயிர்களின் உணர்வில் தோன்றும் கருத்துக்களே சுத்தமாயையின் காரியமாகிய நாதத்தைப் பற்றி நிற்பனவாக, இறைவன் உலகிற்கு உணர்த்தும் பொருள்கள் அவனது அருள் வெளியைப் பற்றுக்கோடாகக் கொண்டுநிற்றல் பற்றி ''வான் பற்றி நின்ற மறைப்பொருள்'' என்றார். இதனால், மந்திரங்களின் இயல்பும், அவற்றின் பயனும் இவை எனக் கூறுவார்போன்று, தாம் செய்யும் நூல் மந்திரமாதலையும், அதன் பயனையும் கூறினார் என்க.*

**25. *தெளிவுரை :-*** தேவர் பலரும், பிறப்பில்லாத முதல்வனும், 'நந்தி' என்னும் பெயருடையவனும் ஆகிய சிவபெருமானைத் தூய்மையுடன் சென்று கைதொழுது இம் 'மந்திரமாலை' நூலை மறவாது மனத்துட் கொள்வர். ஆகவே, நீவிரும் இதனை உறுதியாக நின்று ஓதுதல் வேண்டும்.

***குறிப்புரை :-*** *'உண்மைச் சிவநூல் எங்கு உளதாயினும் அதனைத் தேவர் மகிழ்ச்சியோடும் கைக்கொண்டு போற்றுவர்' என்னும் துணிவு பற்றி; "வானவர் மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை" என்றார். இக்கருத்தே பற்றிச் சேக்கிழாரும், 'ஞானசம்பந்தர் நமச்சிவாயத் திருப்பதிகத்தை வானமும் நிலனுங்கேட்க அருளிச் செய்தார்' என்றும், 'நாவுக்கரசரது திருப்பெயரை உலகேழினும் மன்னுக என்று இறைவன் அருளிச் செய்தான்' என்றும் கூறினார். 'மந்திர மாலை' என்றது நூற் பெயர் குறித்தவாறு எனவே, இவை இரண்டுபாட்டாலும் நூற்பெயரும், நூலது பெருமையும் கூறப்பட்டனவாம்.*

**26. *தெளிவுரை :-*** *உடம்பைப் படைத்த இறைவன், அதனுள் வேண்டும் அளவிற்கே நெருப்பை அமைத்துள்ளான். நிலவுலகைப்*

**26.** அங்கி மிகாமைவைத் தான்உடல் வைத்தான்
எங்கும் மிகாமைவைத் தான்உல கேழையும்
தங்கி மிகாமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்
பொங்கி மிகாமைவைத் தான்பொருள் தானுமே. **26**

---

*படைத்த அவன் அளவின்றி எங்கும் பரந்து கிடப்பப்படையாது, ஏழென்னும் அளவிற்படவே படைத்தான். அவ்வாறே தமிழ் நூல்களையும் கற்பாரின்றி வீணேகிடக்கவையாது, அளவாக வைத்தான். பொருளையும் அவற்றால் மிகைபடாது இன்றியமையாத அளவிலே புலப்பட வைத்தான்.*

***குறிப்புரை :-*** ***உடல் வைத்தான் அங்கி மிகாமை வைத்தான் - உடலை அளித்த இறைவன் உடலில் அக்கினியை மிகாமல் அளவுடன் அமைத்தருளினான், உலகு ஏழையும் எங்கும் மிகாமை வைத்தான் - பூலோகம் முதலிய ஏழுலகங்களையும் அழியாதவாறு அக்கினியை வைத்தான், தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச் சாத்திரம் - குழப்பமில்லாது இருக்கத் தமிழாகமமாகிய திருமந்திரத்தை வைத்தான், பொருள் தானுமே பொங்கி மிகாமை வைத்தான் - எல்லாப் பொருளும் இந்நூலின்கண் அடங்குமாறு செய்தான். உடல் அங்கியாவது குடரைச் சீர் செய்யும் சாடராக்கினி, உலக அங்கியாவது கடலைப் பெருகாதவாறு செய்யும் வடவாமுகாக்கினி. உலகமும் உயிரும் வாழும்வண்ணம் திருமந்திரமாகிய நூலைச் செய்யும்படி இறைவன் அருளினான். 'ஆகவே, தமிழாலாய இந்நூலும் மூவாயிரம் பாடலுள் இன்றியமையாப் பொருள்களைக் கூறுவதாய் அமையும்' என்பதாம். 'இலட்சம் கிரந்தம், கோடி கிரந்தம் என்றாற்போல் வனவற்றை நோக்க, இம்மூவாயிரம் பாடல் எம்மாட்டாய் எல்லா ஆகமங்களுமாகும் என்று இகழற்க' என்றவாறு. இதனானே, 'சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராய்ச் சுருங்கிய நிலவுலகத்தின் கண் வாழும் சகலராய மக்கட்கு ஏற்புடையன தமிழ் நூல்களே' என்பதும் குறித்தவாறு காண்க. "உலகேழ்" என்றது நாவலந்தீவு முதலிய ஏழு தீவுகளை. நாயனார் இந்நூல்செய்த காலத்தில், 'தொல்காப்பியம், திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, திருவாசகம், திருக்கோவையார்' என்னும் இவையே தமிழ்மொழியில் சிறந்த நூல்களாய் விளங்கிப் பயனைக் குறை வின்றித் தந்தமையின்; "தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச்சாத்திரம் - பொங்கி மிகாமை வைத்தான் பொருள் தானுமே" என்றார். காரைக்காலம்மையார் பாட்டு முதலாக இன்று பதினொன்றாந் திருமுறையில் உள்ளனவற்றுள் சில, நாயனார் காலத்து இருந்தனவா என்பது ஆராய்ந்துணரத் தக்கது.***

27. ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
ஆயத்தை அச்சிவன் றன்னை அகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே. 27

---

*மாணிக்கவாசகர் தாம் கூறும் தலங்களுள் திருவிடைமருதூரைக் குறித்துத் திருவாவடுதுறையைக் குறியாமையால், இந்நாயனாராலே அத்தலம் 'நவகோடி சித்தபுரம்' என்பது முதலிய பல சிறப்புக்களைப் பெற்றது, அவர் காலத்திற்குப் பின்னரே என்பது துணியப்படும். நாயனாரது காலத்தில் திருவாவடுதுறை பொதுவான ஒரு சிவத்தலமாய் இருந்தது எனவும், எக்காரணத்தாலோ இறைவன் திருவருள் இவரை அத்தலத்தில் இருத்தியது எனவும் கொள்க. 'கோகழி' என்பதைத் 'திருவாவடுதுறை' எனச் சிலர் கருதுதல் பொருந்துவதாய் இல்லை.*

*இப்பாட்டின் பின் பதிப்புக்களில் காணப்படும் ''அடிமுடி காண்பார்'' என்னும் பாட்டுச் சிவபரத்துவத்தில் இருத்தற்குரியது.*

**27. *தெளிவுரை :-* இம்மூவாயிரம் பாட்டுக்களிலே, 'அறியப்படும் பொருள், அறிவு, அறிபவன், அசுத்தமாயா காரியம், சுத்தமாயா காரியம், அனைத்திற்கும் மேலான பரம்பொருளாகிய சிவன் என்று சொல்லப்படுகின்ற வாக்கு மனங்கட்கு எட்டாத முதல்கள் ஆகிய அனைத்தின் இயல்பையும் முற்றக் கூறுவேன்'.**

***குறிப்புரை :-*** *சுத்த தத்துவம் காலம் கடந்தன ஆதல் பற்றி, 'நித்தப்பொருள்' என்று சொல்லப்படுதலால், காலத்திற்கு உட்பட்ட ஏனைத் தத்துவங்களை, 'மாயம்' என்றார். மாயம் - மாய்தலுடையது. 'பரை' என்றது சத்தியை. ஆயம் - கூட்டம்; தொகுதி. பரைஆயம் - சுத்த மாயையில் வசிக்கின்ற பரை, ஆதி, திரோதாயி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி முதலிய சத்திகளின் கூட்டம். மாயையைக் கூறவே, ஏனைய கன்ம ஆணவ மலங்களும் பெறப்படும். 'அறிபவன்' எனப்பட்டது பசுவாகிய ஆன்மாவே என்பது வெளிப்படை. 'ஞாதுருவத்தை' என்பதில் அத்து, வேண்டாவழிச் சாரியை, "அறிகின்றவனை" உணர்த்துகிறது. பதியாகிய இறைவன் அறியப்படும் பொருளாய் நிற்றல் தடத்தநிலையிலாதலின், "ஞேயம்" என்றது தடத்த சிவனையாம். ஞானம், அவனது சத்தி. 'சொரூப சிவன்' என்பது உணர்த்துதற்கு, "அச்சிவன்" எனச் சேயனாகச் சுட்டிக் கூறினார். அகோசரம் - அகப்படாமை. பசு பாசங்களின் உண்மை இயல்புகளும் வாக்கு மனங்கட்கு அகப்படுவன அல்லவாதல் பற்றி அனைத்தையும்*

**28.** விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பிற் கயிலை வழியில்வந் தேனே. **28**

**29.** நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி அருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி அருளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தி அருளாலே நான்இருந் தேனே. **29**

---

*'அகோசரம்' என்றார். 'பீசம்' என்னும் ஆரியச்சொல். 'வீசம்' என்று ஆகிப் பின் எதுகைநோக்கி, 'வீயம்' எனத் திரிந்தது. பீசம் - வித்து, சிறிய அளவில் செய்யப்படினும், 'இந்நூலுள் ஆகமப் பொருளாகிய முப்பொருள் இயல்பு முழுவதும் எஞ்சாமற் கூறப்படும்' என்றவாறு. துணிவு தோன்ற, "விளக்கியிட்டேன்" என இறந்த காலத்தாற் கூறினார்.*

**28.** *தெளிவுரை :- இவை அனைத்தையும் விளக்கிச் சிவபெருமானது உபதேச முறையில் நின்று, 'திருக்கயிலாய பரம்பரையில் வந்த ஆசிரியன்' என்னும் பேற்றைப் பெற்றவனாவேன். ஆனந்தக்கூத்தன் ஆணை வழி ஆசிரியர் திருக்கயிலையினின்றும் தென்னாடு போந்தார்.*

*குறிப்புரை :- பரமாகும் சோதி, பெருமையன், ஆனந்த நந்தி என்பனவும் சிவபெருமானையே குறித்தன. 'வளப்பம்' என்பது, 'வளப்பு' என நின்றது. துளக்கறுதல் - அசைவற்றிருத்தல். சொரூப சிவத்துக்கு அசைவு இல்லை.*

29. *தெளிவுரை :- சிவபெருமானது திருவருளால் மூலனது உடலைப் பற்றி நின்றபின், அவனது திருவருளாலே ஆகமத்தைப் பாடும் நிலையை அடைந்தேன். அந்நிலையில் அவன் அருளால் நிட்டையும் பெற்றுச் சீவன் முத்திநிலையில் பல்லாண்டுகள் இருக்கின்றேன்.*

*குறிப்புரை :- ''மூலனை நாடி'' என்றது வழிமொழிதல். 'ஆகமத்தை அருளிச்செய்தவர் சதாசிவ நாயனார்' என்றல் பற்றித் தம்மை அவ்வாறு கூறினார். 'சீவன் முத்தி நிலையிலிருந்தே இதனைச் செய்கின்றேனாதலின், இது, சிவன் மொழியேயன்றி என்மொழியன்று' என்பதாம். உலகம் உய்தல் காரணமாக அருளாளர் இங்ஙனம் பட்டாங்குக் கூறுவனவற்றை நம்மனோர் சொற்போலத் தற்புகழ்ச்சி என்றல் கூடாமை அறிக. இதுபற்றி யன்றே 'நிறைமொழி மாந்தரா*

30. இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்
அருக்கனும் சோமனும் ஆரழல் வீச
உருக்கி யுரோமம் ஒளிவிடுந் தானே. 30

31. பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை
இயற்றுவன் நெஞ்சத் திரவும் பகலும்
உயற்றுவன் ஓங்கொளி வண்ணன்எம் மானை
இயற்றிகழ் சோதி இறைவனும் ஆமே. 31

---

*யினார் சில சொற்களை ஆணையாற் கிளப்பர்' (தொல் - செய்யுள் - சூ. 178) என்றதூஉம் என்க. 'பல்லாண்டுகள்' என்பது ஆற்றலான் வந்தது. மூலன் - மூலாதாரத்தில் உள்ளவன். சதாசிவன் - நெற்றிச் சக்கரத்தில் விளங்குபவன் - எப்போதும் சிவத்தோடு ஒன்றியவன் - சதா காலமும் சிவனையே நினைப்பவன். குருவருளால் மூலாதார மூர்த்தியை தரிசித்து நெற்றியில் விளங்கும் சதாசிவனைக் கூடி, மெய்ஞ்ஞானம் பெற்று நிலைபெற்றிருந்தார் என்பதாம்.*

**30.** *தெளிவுரை :- பல்லாண்டுகள் ஓர் உடம்பிலே இருத்தல் கூடுமோ? உடம்பு தளர்ச்சியுற்று அழிந்தொழியாதோ எனில் மறை விடமாகிய மூலாதாரத்துள், எழாது கிடக்கின்ற அரிய நெருப்பை, 'சூரியகலை, சந்திரகலை' என்னும் இரு காற்றும் அடங்கிநின்று மூட்டி வளர்க்கும் படி இருந்தால், உடம்பு நெடுங்காலம் தளர்வின்றி இருக்கும்; உரோமமும் வெளிறாது கறுத்து அழகுற்று விளங்கும். உரோமத்துவாரங்களெல்லாம் ஒளி வீச இருக்கலாம்.*

*குறிப்புரை :- 'அவ்வாற்றால் நான் பல்லாண்டுகளாக இருக்கின்றேன்' என்பதாம். இரண்டாம் அடி முதலாகத்தொடங்கி, 'இருக்கும் ஆரழலை அருக்கனும் சோமனும் வீச இருக்கில் எண்ணிலி கோடி இருக்கும்' எனக்கூட்டி "இருக்கும்" என்பதற்கு 'உடம்பு' என்பது வருவிக்க. உருக்குதல் - மனத்தைக் கவர்தல். அருக்கன் - சூரியன். முதலடிக்கு இருக்கு வேதத்தில் பல கோடி மந்திரங்கள் உள்ளன என்றும் பொருள் கொள்வர்.*

**31.** *தெளிவுரை :- இவ்வாறிருக்கின்ற நிலையில் நான் இரவும் பகலும் சிவபிரானது பெயரையே பிதற்றுவேன். நெஞ்சில் நினைப்பேன்; காயத்தால் அவனை வழிபடுவேன். அதனால், விளக்க விளங்குகின்ற என் அறிவும், இயல்பாய் விளங்குகின்ற சிவனது அறிவேயாய்த் திகழும்.*

**அவையடக்கம்**

32. ஆர்அறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
ஆர்அறி வார்அவ் வகலமும் நீளமும்
பேர்அறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேர்அறி யாமை விளம்புகின் றேனே. 32

---

***குறிப்புரை :-*** *விடாது சொல்லுதலை, 'பிதற்றுதல்' என்றார். 'நந்தி பேர் தன்னை' என மாற்றுக. நெஞ்சத்து இயற்றுதல், நினைத்தல், 'உஞற்றுவன்' என்பது 'உயற்றுவன்' என நின்றது. 'முயற்றுவன்' எனவும் பாடம் ஓதுவர். முயற்றுவன் என்றால் முயல்வேன் என்பது பொருளாகும். 'இயல்பாகத் திகழ்கின்ற சோதி' என்க. இறைவன், ஆகுபெயர். "ஆம்" என்றதற்கு எழுவாய் வருவிக்கப்பட்டது.*

*இருபது திருமந்திரங்களால் தம் வரலாறும், நூல் வரலாறும் கூறிய நாயனார், நான்கு திருமந்திரங்களால் அவையடக்கம் கூறுகின்றார். நாயனார் அவையடக்கம் கூறியது, இறைவனது பெருமையை மாணாக்கர் உணர்தற்பொருட்டு என்க.*

**32. *தெளிவுரை :-*** *எங்கள் சிவபெருமானது திருவருளின் பெருமையை முற்ற உணர்வோர் யாவர்! அவனது பரப்பைத்தான் யாவர் உணர வல்லார்! சொல்லுக்கு அகப்படாத பேரறிவுப் பொருள் தன்னோடு ஒப்பது பிறிதொன்றில்லதாய் உளது. அதனது மெய்ந்நிலையை அறியாமலே நான் பலரும் அறியக்கூறத் தொடங்கினேன்.*

***குறிப்புரை :-*** *"ஒன்று" எனச் சிவபெருமானையே வேறு போலக் கூறினார். மெய்ம்மையை "வேர்" என்றார் 'அறியாமல்' என்றது, 'முற்ற உணராது சிறிதுணர்ந்த அளவிலே' என்றவாறு. 'அறிந்த அளவில் செய்கின்றேன்' என்றபடி. விளம்புதல் - பலரறியக் கூறுதல்.*

**33. *தெளிவுரை :-*** *இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழுள் ஒன்றையும் நெறிப்பட அறிகிலேன். அளவை நூல் முறையால் ஆராயவும் வல்லனல்லேன். பேரன்பினால் இறைவனையே தேடி அலையும் நிலைமையும் இல்லேன்.*

***குறிப்புரை :-*** *'நான் சிவபெருமானது பெருமையைக் கூறுதல் எவ்வாறு' என்பது குறிப்பெச்சம். எனவே 'எனது சொல்*

**33.** பாடவல் லார்நெறி பாடஅறிகி லேன்
ஆடவல் லார்நெறி ஆடஅறிகி லேன்
நாடவல் லார்நெறி நாடஅறிகி லேன்
தேடவல் லார்நெறி தேடகில் லேனே. 33

**34.** மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலும் ஆமே. 34

---

*அறிவுடையோர்க்கு நகை விளைக்கும்' என்பதாம். பாடுதல், இயல் வகையாலும், இசைவகையாலும் என்க. அங்ஙனம் அறியவும், தேடவும் மாட்டாத யான் சொல்லத் தொடங்கியது எவ்வாறு என எனக்கே நகை தரும் என்று அவையடக்கம் கூறியவாறு.*

**34.** *தெளிவுரை :- தன்னை அறிகின்றவரது உள்ளத்தில் வீணையுள் இனிய இசைபோல மெல்ல எழுகின்றவனும், உலகத்தைப் படைத்த பிரமனாலும் தியானிக்கப் படுகின்றவனும் ஆகிய இறைவனது பெருமையை, நிலைபெற்ற மெய்ந்நூல் வழியாகவும் சிறிது உணர்தல் கூடும். பிரமன் உன்னுதலாவது, பிரமனுக்குப் படைத்தல் தொழிலுக்கு அதிகாரம் கொடுத்தமை. வாய்மொழி - வேதம்.*

*குறிப்புரை :- 'அவ்வாற்றால் ஆகமத்தின்வழிச் சிறிது கூறுகின்றேன்' என்பது குறிப்பெச்சம். எனவே 'அம்முதனூற் பொருளையுடையது என்பதுபற்றி அறிவுடையோர் இந்நூலை இகழார்' என்பது கருத்து. 'மதித்தவர் உள்ளே இன்னிசைபோல எழுகின்ற ஈசனை' எனக் கூட்டுக. "இன்னிசை வீணையில் இசைந் தோன் காண்க" (தி.8 திருவாசகம் திருவண்டப்பகுதி - 35) என்றமை நினைக்கத்தக்கது. பின்னைப் படைத்தல் - மீளப் படைத்தல். வேதங்களாலும், மாலயனாலும் உணரப்படாத பொருளை யான் எங்ஙனம் உரைப்பது என்று அவையடக்கம் கூறியவாறு.*

**35.** *தெளிவுரை :- மன்னிய வாய்மொழியாகிய சிவாகமங்கள், வீடுபேற்றை அடைவதற்கு விரும்பியிருந்த முனிவரும், தேவரும் கருத்தொருமை கொண்டு உலகப் பயன் விரும்பும் மக்களை விடுத்துத் தனி இடத்திலிருந்து வேண்டிக்கொண்ட அன்பு காரணமாக இறைவன்*

35. தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவருந் தேவரும்
ஒத்துடன் வேறாய் இருந்து துதிசெயும்
பத்திமை யால்இப் பயன்அறி யாரே. 35

### நூலின் அளவும் பயனும்

36. மூலன் உரைசெய்த மூவாயி ரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணலும் ஆமே. 36

---

*உண்மை ஞானத்தைக் கயிலைத் தாழ்வரைக்கண் இருந்து உணர்த்தியருளிய நூல்களாம். பக்குவம் இல்லாதோர் இவ்வுண்மையை அறியமாட்டார்.*

***குறிப்புரை :-*** *'அதனால் அவற்றை வேதத்திற்குப் புறம்பான நூல்' என்று இகழ்வர். அவர் என்னையும் இகழ்வராதலின், அது பொருளன்று' என்பது குறிப்பெச்சம். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, 'பத்திமையால் தத்துவஞானம் தாழ்வரை உரைத்தது' எனக்கூட்டி உரைக்க. "உரைத்தது" என்னும் பயனிலைக்கு எழுவாய் முன்னைப் பாட்டினின்றும் வந்தது. 'பத்திமையால் உரைத்தது'. எனவே, அறியார் அஃதில்லாதோர் என்பது விளங்கிற்று. இதனால், 'வேதம் உலகர்பொருட்டும், சிவாகமம் சத்திநிபாதர் பொருட்டும் சிவபெருமானால் செய்யப்பட்டன' என்பது சொல்லப்பட்டது.*

*இதனை,*

*'வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்;
வேறுமுள நூல்இவற்றின் விரிந்த நூல்கள்;
ஆதிநூல் அனாதிஅம லன்தருநூல் இரண்டும்;
ஆரணநூல் பொது; சைவம் அருஞ்சிறப்பு நூலாம்;
நீதியினால் உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும்
நிகழ்த்தியது'*

*எனச் சிவஞானசித்தி விளக்குதல் காண்க.*

*பாயிரத்திறுதியில் நூற்பாட்டின் தொகையும், நூற்பயனும் கூறுகின்றார்.*

37. வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவா யிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவா யிரம்பொது
வைத்த சிறப்புத் தரும்இவை தானே. 37

**குருமட வரலாறு**

38. வந்த மடம்ஏழு மன்னும்சன் மார்க்கத்தின்
முந்தி உதிக்கின்ற மூலன் மடவரைத்
தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரம்
சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே. 38

---

36. ***தெளிவுரை :–*** *மூலன் பாடிய மூவாயிரம் பாடலையுடைய இத்தமிழ் நூல் நந்திப்பெருமானது அருள் உணர்த்திய பொருளை உடையதே. அதனால், நாள்தோறும் இதனைப் பொருளுணர்ந்து ஓதுவோர் முதற்கடவுளாகிய சிவபெருமானை அடைவர்.*

***குறிப்புரை :–*** *''மூலன்'' என்றது தம்மைப் பிறர்போலக் கூறியவாறு. ஞானசம்பந்தரும், நம்பியாரூரரும் தம் பதிகத்திறுதியில் இவ்வாறு கூறுதல் காண்க. இங்ஙனம் நாயனார் "மூவாயிரம் தமிழ்" என்றமையானும், மேல் "மந்திரமாலை" என்றமையானும் சேக்கிழார், "நற்றிருமந்திரமாலை" எனவும், "தமிழ் மூவாயிரம் சாத்தி" எனவும் கூறினார் என்க.*

37. ***தெளிவுரை :–*** *நன்னூலின் வைத்த பரிசு வகை வகை - திருமந்திரமாகிய நல்ல நூலில் வைத்த தன்மை ஒன்பது தந்திர வகையாம், மூவாயிரத்திலே முத்தி முடிவு இது - இம்மூவாயிரமும் முடிவான முத்தி நிலையைக் கூறுவது, புத்திசெய் பூர்வத்து மூவாயிரம் - புத்திபூர்வமாய்ச் சொன்ன மூவாயிரம், இவைதானே பொது வைத்த சிறப்புத் தரும் - ஆகிய இவைதாம் பொதுவும் சிறப்புமாய் அமைந்து ஓதுவார்க்கு நன்மை பயக்கும்.*

***குறிப்புரை :–*** *வகை வகை - ஒன்பது தந்திர வகை. முதல் ஐந்து தந்திரங்கள் பொது என்றும், பின் நான்கு தந்திரங்கள் சிறப்பு என்றும் கொள்க. திருமந்திரம் பொதுவும் சிறப்புமாய் அமைந்து ஓதுவார்க்கு இம்மை மறுமைப் பயன் அளிக்க வல்லது.*

38. ***தெளிவுரை :–*** *வந்த மடம் ஏழும் மன்னும் சன்மார்க்கத்தின் - கயிலாய பரம்பரையிலே வந்த ஏழு மடங்களும் சன்மார்க்கத்தைப்*

**39.** கலந்தருள் காலாங்கர் தம்பால் அகோரர்
நலந்தரு மாளிகைத் தேவர்நா தாந்தர்
புலங்கொள் பரமானந் தர்போக தேவர்
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே. **39**

---

*போதிப்பனவாம், முந்தி உதிக்கின்ற மூலன் மடம்வரை - அவற்றுள்ளே முன்னே தோன்றிய மூலன் மடத்தில் வந்த ஆசிரியர்வரை, தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம் - வகை செய்யப்பெற்ற ஒன்பது தந்திரங்களையும் அவற்றில் கூறப்பெறும் மூவாயிரம் மந்திரங்களையும் அநுசரிக்கும்படி, சுந்தர ஆகமச் சொல்மொழிந்தான் - அழகிய ஆகமங்களில் சொன்னவற்றை எடுத்துக் கூறினார்.*

***குறிப்புரை :-*** *பழமையான மடத்தின் தலைவராகிய திருமூலர் திருமந்திரமாகிய ஆகமத்தை மொழிந்தார்.*

**39.** ***தெளிவுரை :-*** *கலந்தருள் காலாங்கர் தம்பால் அகோரர் - சிவானந்தத்தில் திளைத்திருக்கும் காலாங்கர் பின்னர் அகோரர், நலந்தரு மாளிகைத் தேவர் நாதாந்தர் - நன்மையைச் செய்கின்ற திருமாளிகைத் தேவர் நாதாந்தர், புலங்கொள் பரமானந்தர் போகதேவர் - அறிவு மயமான பரமானந்தர் போகதேவர், நிலந்திகழ் மூலர் நிராமயத்தோர் - உலகில் விளங்கியிருக்கும் திருமூலர் ஆகிய எழுவரும் பிறவி நோயற்ற சித்தர்களாம்.*

***குறிப்புரை :-*** *புலம் - அறிவு. நிராமயம் - குற்றமின்மை, ஆன்மாக்களுக்குக் குற்றமாவது, பிறவி நோய். இவ்வேழு மடங்களும் சித்த மார்க்கத்தைப் போதிப்பன. காலாங்கர் முதல் திருமூலர் வரை எழுவரும் பிறப்பற்றோராவர்.*

***பாயிரம் முற்றிற்று.***

# முதல் தந்திரம்

## 1. சிவபரத்துவம்

**40.** சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கும் யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே. 1

---

*"தந்திரம்" என்பது "கயிறு" எனப் பொருள்தரும். "நூல்" என்னும் பொருளில் ஆகமத்திற்கும் இது பெயராகும். இதன்கண் ஒன்பது தந்திரங்கள் இருத்தலின், இது ஒன்பது வடங்கள் கூடிய மாலை போல்வதாம். சிவநெறியின் தொடக்கநிலைப் பொருள்கள் பலவற்றை முதல் தந்திரமாக வைத்து அருளிச் செய்கின்றார். அனைத்துப் பொருள்கட்கும் முதலாவான் முதற்கடவுள் ஆதலின், அவனது இயல்பினை இம் முதல் தந்திரத்து முதற்கண் அருளிச் செய்கின்றார்.*

*பொது நூலாகிய வேதத்துள் பொதுவகையாற் குறிப்பாகச் சொல்லப்பட்ட பொருள்களைச் சிறப்புவகையால் இனிது விளங்கக் கூறுவனவே ஆகமங்கள் ஆதலின், அவ்வாற்றால், "முதற்கடவுளாவான் சிவபெருமானே'' என்பதனை விளக்குதலின், இவ்வதிகாரம் சிவபரத்துவம் கூறுவதாம். இது 'பரசிவப் பிரபாவம்' என முன்னைய பதிப்பிற் காணப்படுகின்றது. இதனையும் கடவுள் வாழ்த்தாகச் சில பதிப்புக்கள் கொண்டமை பொருந்துவதன்று என்பது பாயிரத்துட் கூறப்பட்டது.*

**40.** *தெளிவுரை :- தேவருள்ளும் ஒருவரும் சிவனோடு நிகர்ப்பவர் இல்லை; மக்களுள்ளும் அவனொடு ஒப்பராவார் இல்லை; ஆதலின், இயல்பிலே உலகைக் கடந்து நின்று உணர்வுக் கதிரவனாய் (ஞான சூரியனாய்) விளங்கும் முதற்கடவுள் அச்சிவபெருமானே.*

*குறிப்புரை :- சுத்தம், அசுத்தம், பிரகிருதி என்று மூன்று மாயைகளின் காரியமாகிய புவனங்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்டு - புவனம் கடந்து. "இங்கு" என்றது "இம் மண்ணுலகில்" என்றபடி. 'சித்தியாலும், முத்தியாலும் சிலர் சிவனோடு ஒத்திருப்பர்' என மயங்கிக் கூறுவாரை மறுத்தற்கு ''அவனொடொப்பார் இங்கும் யாவரும்*

41. அவனை ஒழிய அமரரும் இல்லை
அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவனன்றி மூவரால் ஆவதொன் றில்லை
அவனன்றி ஊர்புகு மாறறி யேனே. 2

---

*இல்லை" என்றார். ஆதலின் என்பது சொல்லெச்சம். "அன்று கடந்து" என மாற்றுக. "அன்று" என்றது "அநாதி" என்னும் பொருளது, "அன்றே" என்னும் தேற்றேகாரம் தொகுத்தல் பெற்றது. பொன் - பகலவன். "பொன்னொளியாய்" என உருவகப் பொருண்மைத்தாய ஆக்கம் விரிக்க. தவன் - தவத்தின் பயனாய் உள்ளவன்; பரமுத்திப் பேறாய் உள்ளவன்; "முதற்கடவுள்" என்றவாறு.* ***தாமரையான் - தாவுகின்ற மானை ஏந்தியவன்.*** *"சடைமுடித் தாமரையான்" என்றது, 'சிவபெருமான்' என்னும் பெயரளவாய் நின்றது. தவனம் - அக்கினி (செம்மை), சூரியன், வெப்பம்.*

**41. *தெளிவுரை :-*** *சிவபெருமானைத் தவிர இறவாதவர் பிறர் இல்லை; அவனை உணராது செய்யும் செயல் சிறந்த தவமாதல் இல்லை; அவனது அருளின்றி மும்மூர்த்திகளால் யாதொரு செயலும் நடவாது. அவனது அருளின்றி முத்திக்கு வழி இல்லை.*

***குறிப்புரை :-*** *"சிவனொடொக்குந் தெய்வம் தேடினும் இல்லை" என மேற்கூறியதனையே அநுவதித்தார். அதனால், பின்வருவனவற்றை வலியுறுத்தற்பொருட்டு. அருந்தவம், வீடடைவிக்கும் தவம். "ஊர்புகுதல்" என்றது ஒட்டணியாய் நின்று, முத்திபெறுதலைக் குறித்தது. இறவாமை முதலிய நான்கும் முதற்கடவுளது இயல்புகள் என்பதைப் பெயர்த்துரை (அநுவாத) வாய்பாட்டாற் கூறி, 'அவ்வியல் புகளை உடையவன் சிவபெருமான் ஒருவனே' என்பது உணர்த்திய வாறு, நஞ்சுண்ட வரலாறு கூறும் புராணத்தால் சிவபெருமான் இறவாதவன் என்பது தெளிவாதலாலும், 'சிவன் முத்திக் கடவுள்' என்பதே வழக்காதலாலும் "அவனை ஒழிய அமரரும் இல்லை; அருந்தவம் இல்லை" என்றார். அவை அங்ஙனமாகவே, ஏனைய இரண்டும் இனிது பெறப்பட்டன. "நீல மணிமிடற் றொருவன்போல மன்னுக", (புறம்-91) "சாவா மூவாச் சிங்கமே" (தி.6 ப.99 பா.2) என்றாற் போலும் மெய்ம்மொழிகளைக் காண்க. ஊர் - வீடுபேறு, முத்தி. எடுத்த இடைச்சட்டைக்கேற்ப ஒட்டுவானின்றி ஊர்புகும் வழியை அறியேன் என்றார்.*

42. முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னையொப் பாயொன்றும் இல்லாத் தலைமகன்
தன்னையப் பாஎனில் அப்பனு மாய்உளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே. 3

43. தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருளறி வார்இல்லை

---

42. ***தெளிவுரை :-*** *பொன்போலும் மேனியையுடைய, யானைத் தோற் போர்வையாளனாகிய சிவபெருமானே! ஊழிகளுள் ஒன்றில் ஒருவர் மற்றிருவரையும், பிறிதொன்றில் மற்றொருவர் ஏனை இருவரையும் படைக்குமாற்றால் தம்முள், 'முன்னோர், பின்னோர்', என்னும் வேறுபாடில்லாத மும்மூர்த்திகளுக்கும் என்றும் முன்னோன்; அத்தன்மை பிறருக்கு இன்மையால், தன்னை ஒப்பாகின்ற பொருள் பிறிதொன்றும் இல்லாத பெருந்தலைவன்; தன்னை, "அப்பா" என்று அழைப்பவர்க்கு அப்பனுமாய் இருக்கின்றான்; (உம்மையால்) "அம்மே" என்று அழைப்பவர்க்கு அம்மையாயும் இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *''முன்'' என்றது பல ஊழிக்காலங்களை, "முன்னோன்" என்றது, அவர்களை என்றும் தானே படைத்தல் பற்றி, "படைப்போற் படைக்கும் பழையோன்", "முன்னோன் காண்க" (தி.8 திருவாசகம் - திருவண்டப்பகுதி 13, 29) என்றமை காண்க. "அயனைமுன் படைத்திடும் ஒரு கற்பத்து; அரியை முன் படைத்திடும் ஒரு கற்பத்து" (சிவஞானபாடியம் - சூ.1 அதி.2) என்றது அறிக. "தன்னை யொப்பாய்... தலைமகன்" என்றது, ஒருவனாதல் குறித்தபடி. "ஏகோ ஹிருத்ர:" (சுவேதாசுவதரம்) "தன்னேரில்லோன் தானே காண்க" (தி.8 திருவாசகம் - திருவண்டப்பகுதி 30) என்றதும் காணத்தக்கது. இவ்வாறாகவே இது, "ஒன்றவன்றானே" என்றதனை விளக்கியவாறாம். "அப்பனும், அம்மையும்" என்றது, "உலகிற்கு முதல்வன்" என்றதாம். இதுவும், முதற் கடவுள் இயல்பும், அவற்றைச் சிவபெருமான் உடையனாதலுங் கூறியது.*

43. ***தெளிவுரை :-*** *நீண்ட சடையை உடையவனாகிய சிவபெருமான், தேறுங்கால் நெருப்பினும் வெம்மை உடையவன்; அருளுங்கால் நீரினும் தண்மையுடையவன்; ஆயினும், அத்தகைய அவனது ஆற்றலின் தன்மையை அறியும் உலகர் இல்லை. உலகர்க்கு*

சேயனு மல்லன் அணியன்நல் அன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே. 4

44. பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே. 5

---

*இவ்வாறு அறியப்படாத சேய்மைக்கண் உளனாகிய அவன், மெய்யன்பர்க்கு அவ்வாறின்றி நன்கறியப்படும் அணிமைக்கண் உள்ளவனாய்த் தாயினும் மிக்க தயவுடையனாவான்.*

***குறிப்புரை :-*** *அறியாமையாவது, உலகில் நிகழும் மறமும், அறமும் அவன் ஆணைவழியால் நிகழ்வன என்பதை அறியாமல், பிறவாற்றான் நிகழ்வனவாக எண்ணுதல், தெறலும் கருணை யேயாதல் பற்றி, "அருள்" எனப் பொதுப்படக் கூறினார். தாயது தன்மை; குழவிக்குத் தனது பாலைக் கைம்மாறு கருதாது அளித்தல் ஆதலின் அஃது, உயிர்கட்குத் தனது பேரின்பத்தைக் கைம்மாறு கருதாது வழங்கும் கடவுட்டன்மைக்கு உவமையாயிற்று. தாய்க்குக் குழவி பசித்த காலத்தில் பால்கொடுத்தல் இயலாமையும், இயலினும் நிரம்பக் கொடுக்க இயலாமையும், அவை காரணமாகக் குழவி மாட்டு அவட்கு வெறுப்பும் ஒரோவழித் தோன்றுதலும் உண்டாகலின், அன்ன குறை பாடில்லாத கடவுளை, ''தாயினும் நல்லன்'' என்றார். ''பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" (தி.8 திருவாசகம் - பிடித்த பத்து 9) என்றதும் காண்க. இதனால், "ஒறுத்தல், அளித்தல்களால் உலகத்தை உடனாய்நின்று நடத்துதலும், அவ்வாறு நடத்தினும்* ***உலகர்க்கு வெளிப்படாது, உணர்வினர்க்கே வெளிப்படுதலும், வெளிப்படக் கண்ட உணர்வினர்க்குத் தனது பேரின்பத்தைக் கைம்மாறு கருதாது இடையறவின்றி வழங்குதலும் ஆகிய கடவுட்டன்மைகள் கூறப்பட்டன.*** *"சேயினும் நல்லன்" என்பது பாடம் அன்று. 'நற்றாழ்சடையோனே' என்பது பாடமாதல் வேண்டும்.*

***44. தெளிவுரை :-*** *என்னால் வணங்கப்படுகின்ற எங்கள் சிவபெருமான், தனது பொற்சடை பொன்னால் செய்யப்பட்டனவே என்னும்படி பின்னலோடு விளங்குமாறு இருப்பவன். "நந்தி" என்னும் பெயர் உடையான். அவனால் வணங்கப்படுபவர் ஒருவரும் இல்லை. பின்புறமாவது, பின்மூளைப்பகுதி. பின்புற மூளையாவது, சிறு*

**45.** அயலும் புடையும்எம் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதுமொன்றில்லை
முயலும் முயலின் முடிவும்மற் றாங்கே
பெயலும் மழைமுகிற் பேர்நந்தி தானே. **6**

---

*மூளையின் நடுநாயகமான (Pineal Gland) பகுதியாகும். இதுவே உயிராற்றலின் பீடம். சூக்கும தேகத்தையும் தூல தேகத்தையும் அறிவுடன் இணைக்கும் பாலம் இதுவேயாம். சிவாலயங்களில் இலிங்கோத்பவர் சிவலிங்கத்தின் பின்புறம் உள்ளதைக்கொண்டு இவ்வுண்மையை அறிக.*

***குறிப்புரை :-*** *புரிதல் - முறுக்குதல், செய்தல். பொன்சடை - அழகிய சடை. பெண்ணால் புரிந்திட்ட பொற்சடையாவது, அருளாகிய கதிர்களால் சூழப்பெற்ற சடை. 'தானே எல்லாராலும் வணங்கப்படுபவன்' என்பதாம். "பொற்சடை" என்பதில், "பொன்" என்றது, வாளா பெயராய் நின்றது. பின் - பின்னுதல்; முதனிலைத் தொழிற்பெயர். ஆல், ஒடுவின் பொருளில் வந்தது. "பின்னால்" என்பதனை இடப்பொருட்டாக்கி, அது பிறரைத் தலைதாழ்த்து வணங்காமையைக் குறிக்கும். குறிப்பு மொழியாக உரைப்பாரும் உளர். 'பின்தாழ் சடையானை' (தி.1 ப.74 பா. 4) என்றாற்போல வரும் எவ்விடத்தும் அங்ஙனமே உரைத்தல் அவர் கருத்து. சடை தவக்கோலத்தை உணர்த்துதலால், பற்றின்மையைக் குறிக்கும் குறிப்பாகும். பொன்மை கவர்ச்சியையும், பின்னல் பழமையையும் குறிக்கும். நந்தி - இன்பம் உடையவன். "அதனைத் தனக்கே உரிய பெயராக உடையவன்" என்றவாறு. "சிவன்" என்பது இப்பொருளும் தரும். இன்பம், இயல்பாய் இருத்தலே என்பது தோன்ற, மெய்ம்மையும், அறிவும் இயல்பாக இருத்தலே என்பது தோன்ற, முதற்கடவுளை, "சச்சிதானந்தன்" என உபநிடதங்கள் கூறுதல் அறிக. எனவே, அவையும் இதனாற் குறிக்கப்பட்டனவாம். இதனால், பற்றின்மையும், கவர்ச்சியும், காலத்திற்கு உட்படாமையும், மெய்யறிவின்பங்களை இயல்பாக உடைமையும், தனக்கு மேலாவார் இன்றித் தானே எல்லார்க்கும் மேலானவனாதலும் ஆகிய கடவுட்டன்மைகள் கூறப்பட்டன. இப்பாடலில் சிவபெருமானின் பெயரும், குறியும், பெருமையும் உணர்த்தப்பட்டன.*

***45. தெளிவுரை :-*** *எங்கள் சிவபெருமானது பெருமையை நோக்குமிடத்து அவனோடொத்த பெருங்கடவுள் சேய்மையிலும் இல்லை; அண்மையிலும் இல்லை என்பது புலப்படும். உழவும்,*

**46.** கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்
எண்ணிலி தேவர் இறந்தார் எனப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களும்
அண்ணல் இவன்என் றறியகி லார்களே. 7

---

உழவின் பயனும், அவற்றிற்கு முதலாயுள்ள மழையும், அம்மழையைத் தருகின்ற மேகமும் ஆகிய எல்லாம், 'நந்தி' என்னும் பெயருடைய அவனேயன்றிப் பிறர் இல்லை. மழையால் நீரும், மேகத்தால் மழையும் எய்தக் காண்கிறோம்.

*குறிப்புரை :-* அயல் - பக்கம். இது தத்தம் இருக்கைக்கு இருமருங்கும் உள்ளது. புடை - அதற்கு அடுத்துள்ளது. அயல் - சித்தாந்த சைவம் தவிர ஏனைய அகச் சமயங்கள். புடை - அகப்புறச் சமயங்கள். **வேற்றுச் சமயத் தெய்வங்களும் சிவபெருமான் ஏவல் வழி நின்று இயங்கும் என்பது பெறப்பட்டது.** முயல் - முயற்சி; 'முயற்சி' எனினும், 'உழவு' எனினும் பொருந்தும். "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்" (குறள். 1031) என்பதனால், உலகத்திற்கு முதலாதலை இவ்வாறு கூறினார். இதனானே மெய்ந்நெறியிலும் சாதனமும், அதனைத் தருகின்ற திருவருளும், அதற்கு முதலும் ஆதலும் பெறப்படுவதாம். இதனால், பந்தம், வீடு இரண்டற்கும் முதல்வனாதல் கூறப்பட்டது.

**46.** *தெளிவுரை :-* சிவபெருமான் என்றும் ஒரு பெற்றியனாய் அழிவின்றி இருக்கவும், அளவற்ற தேவர்கள் அழிந்தனர் என்று புராணங்கள் முழங்கவும், மண்ணிலும், விண்ணிலும் உள்ள பலர் அப்பெருமானை, 'இவனே முதல்வன்' எனத் துணியமாட்டாதவரா கின்றனர். இருவகையினரும் பிறந்த தம் காரணத்தை மறந்தனர் என்பதாம்.

*குறிப்புரை :-* 'இஃது இரங்கத்தக்கது' என்பது குறிப்பெச்சம். "காதல்" என்றது அருளை, ஒருபெற்றியாய அருளை, 'ஓர் அருள்' என்றார். நிற்றல் - அழிவின்றி நிலைத்திருத்தல். இதனால், அழிவிலனாதல் கூறப்பட்டது. ஆகவே, 'அவனை ஒழிய அமரரும் இல்லை' என்பது விளக்கப்பட்டதாம்.

**47.** *தெளிவுரை :-* திருமால், பிரமன் முதலிய தேவர்களும் இன்னும் சிவபிரானது பெருமையை ஓர்ந்து தெளியவில்லை. ஆகவே, அண்டத்தின் அப்புறத்தும் உள்ள அவனது பரப்பை அளந்து

**47.** மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்
எண்ணளந் தின்னம் நினைக்கிலார் ஈசனை
விண்ணளந் தான்தன்னைமேல் அளந் தாரில்லை
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே. **8**

---

*கண்டவர் யார்? ஒருவரும் இல்லை. அவன் எவ்விடத்தையும் உள்அடக்கி அவை அனைத்தையும் கடந்து நிற்கின்றான்.*

*குறிப்புரை :- மண் அளந்தான் - மூவுலகை ஈரடியால் அளந்த திருமால். இங்ஙனம் அளந்து மாவலியை அடக்கிய பெருமையினால் செருக்குற்று என்னென்னவோ எண்பது கோடி எண்ணங்களை எண்ணிக் கொண்டிருக்கின்றான். மலரோன் - உந்தியத் தாமரைப் போதில் உள்ள பிரமன். அவன் எஞ்ஞான்றும் மென்மையை விரும்புவனாக எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறான்; இவர்களுமே ஈசனை மறந்தனர். இவர்கள் நிலையே இவ்வாறாக, இவர்களை முதல்வராகக் கொண்ட ஏனைய தேவர்களும் அங்ஙனமேயாயினர். எண் - எண்ணம். அளந்து - மிகுதிப்படுத்தி.*

*விண் அளந்தான் என்றது சூரியனை. சூரியன் கண்ணொளிக்கு உபகாரமாய்க் கலந்து பொருள்களையறியத் துணை செய்யுமாறு போல இறைவன் உயிர்களைக் கலந்து நின்று அறியச் செய்கின்றான். காணும் கண்ணுக்கு காட்டும் உள்ளத்தை எங்ஙனம் கண் அறிவதில்லையோ அதுபோல உபகாரப்பட்டு நிற்கும் சூரியனைப் போன்ற சிவத்தையும் உயிர்கள் அறிவதில்லை என்பது விளங்க 'விண் அளந்தான் தன்னை மேலளந்தார் இல்லை' என்று அருளினார். அளத்தல் - மூவகைப் பிரமாணங்களுள் ஈண்டுப் பொருந்துமாற்றான் ஆராய்ந்து அறிதல். ஆகவே சூரியனைப் போலக் கலந்து நின்று காட்டும் சிவத்தை மேலும் பிரமாணங்களால் ஒரு வகையான் அளந்து, அநுபவித்தார்கள் இல்லை என்பது கருத்து.*

*இறைவனோ இவர்கள் கண்ணொளியோடு கலந்தும், காணப்படு பொருளாய் எங்குமாயும், அவ்விரண்டு நிலையையும் கடந்து வேறாய் அப்பாற்பட்டும் நின்றான் என்பார் 'கண்ணளந்து நின்றான்', 'எங்கும் நின்றான்', 'கடந்து நின்றான்' என்றருளினர். அளந்து - அளாவி (கலந்து). இதற்குப் பொருந்தாவுரை தோன்ற உரைத்து இடர்ப்படுவார் பலர் அதனை எடுத்தாய்ந்து மறுத்தலும் மரபு வழுவாம் என மறந்தாம்.*

**48.** அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண் டிலேனென் றச்சுதன் சொல்ல
முடிகண்டே னென்றயன் பொய்மொழிந் தானே. **9**

**49.** கடந்துநின் றான்கம லம்மல ராதி
கடந்துநின் றான்கடல் வண்ணன்எம் மாயன்
கடந்துநின் றான்அவர்க் கப்புறம் ஈசன்
கடந்துநின் றான்எங்கும் கண்டுநின் றானே. **10**

---

**48.** *தெளிவுரை :-* 'சிவபெருமானது பெருநிலை (வியாபகம்) ஒருவராலும் அளத்தற்கரிது' என்பதற்கு, அயன், மால் இருவரும் அப்பெருமானது அடிமுடி தேடிக் காணமாட்டாது அல்லற்பட்ட வரலாறே போதிய சான்றாகும்.

*குறிப்புரை :-* 'காண்பராய இருவர்' எனவும், 'கண்டிலராய்க் கூடி' எனவும் இயைத்துரைக்க. இருவருள் ஒவ்வொருவரும் அடி, முடி இரண்டையுங் காணுங் கருத்தினராய் முதற்கண்ணே தோல்வியுற்றமையின், "அடிமுடி காண்பார் அயன் மால் இருவர்" எனப் பொதுப் படவே கூறினார். படி - தாம் கருதிய நிலை. நிலவுலகினின்றே புறப்பட்டமையின், ''மீண்டும் பார்மிசைக் கூடி'' என்றார். சிவபெருமானைப் பொதுநீக்கி உணர்தற்கு இவ்வரலாறு பெரிதும் சிறந்ததாய்ப் பயின்று வருவதாகலின், பின்னர்க் கூறப்படும் புராண வரலாறுகளுட் கூறுதலன்றி இவ்விடம் குறித்தருளினார். இவ்வாறன்றி, 'இத் திருமந்திரமும் பின்னர் வரும் இவ்வரலாற்று மந்திரங்களுள் ஒன்றாகற் பாலதே' என்பாரும் உளர். அச்சுதன் - திருமால். அயன் - பிரமன்.

**49.** *தெளிவுரை :-* பிரமனும், திருமாலும் ஓரோர் எல்லையளவில் பெருநிலை (வியாபகம்) உடையவராயினும், அனைவரினும் மேம்பட்ட பெருநிலையுடையவன் சிவபெருமான். அவன் அத்தகையனாய்ப் புறத்து நிற்பினும், எப்பொருளினும் நிறைந்து அவற்றை அறிந்து நிற்கின்றான். உருத்திரன் சாரூபம் பெற்ற பக்குவான்மா ஆதலின் ஈசன் எனப்பட்டார்.

*குறிப்புரை :-* கடந்து நின்றான் கமலம் மலர் ஆதி - சிவன் சுவாதிட்டமான மலரிலுள்ள பிரமனைக் கடந்துள்ளான், கடந்து நின்றான் கடல் வண்ணன் எம் மாயன் - மணிபூரகத்தானத்திலுள்ள

**50.** ஆதியு மாய்அர னாய்உட லுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான்அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே. **11**

---

*எமது மாயனாகிய விஷ்ணுவைக் கடந்துள்ளான், கடந்து நின்றான் அவர்க்கு அப்புறம் ஈசன் - அவ்விருவர்க்குமேல் அநாகதச் சக்கரத்திலுள்ள உருத்திரனைக் கடந்துள்ளான். கடந்து நின்றான் எங்கும் கண்டுநின்றான் - இம்மூவரையும் கடந்து சிரசின்மேல் நின்று எங்கும் கண்காணித்துக் கொண்டுள்ளான்.*

*பிரமன், விஷ்ணு, உருத்திரன் ஆகிய மூவரும் முறையே சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதச் சக்கரங்களுக்கு அதிதேவதை என்பர். கண்டத்தானமாகிய விசுத்திக்கு மகேசுவரனையும் புருவ நடு ஆஞ்ஞைச் சக்கரத்துக்குச் சதாசிவனையும் கொள்வர். பிரமனாதி ஐவரையும் அதிகாரப் புருஷர்களாய்க் கொண்டு சிவன் உலகுயிர் களைக் கண்காணித்து வருகிறான்.*

**50.** *தெளிவுரை :- அருளாகிய ஒளி உருவினனாயும், என்றும் குறைதல் இல்லாத அவ்வருள் காரணமாக அனைத்துயிர்க்கும் நடுவுநிலைமையனாயும், அழிவில்லாதவனாயும் உள்ள சிவபெருமான், தானே உலகிற்கு முதலாகியும், முடிவாகியும், பல்வகை உடம்பிலும் காணப்படுகின்ற இன்ப துன்பங்களாகியும் பரந்து நிறைந்திருக்கின்றான்.*

*குறிப்புரை :- ஆதி - பிரமன், அரன் - உருத்திரன். வேதி - மாற்றம். ''உடலுள் நின்ற'' என்றதனால், அஃது இன்பதுன்ப நுகர்ச்சியைக் குறித்தது. எனவே, இது நிலைத்தொழிலை உணர்த்திற்று. முதல் இரண்டடிகளால் முத்தொழிற்கும் முதல்வனாதல் கூறப்பட்டது. இறுதி இரண்டடிகளால் அத்தொழில் புரிவதற்குக் காரணம் உடம்பொடு புணர்த்தலால் கூறப்பட்டது. முன்னைத் திருமந்திரத்தில் பேரறிவு கூறப்பட்டாற்போல, இத் திருமந்திரத்தில் பேராற்றல் கூறப்பட்டவாறு காண்க. 'எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் அறிதலின், உயிர்கள் நன்மையடைதற்பொருட்டு நடுவு நிலையாளனாய் என்றும் நின்று ஆக்கல் அழித்தல் முதலியவற்றைச் செய்கின்றான்' என்றபடி. 'விரிந்து ஆர்ந்திருந்தான்' என்றது. 'அவனது பெருநிலையால் விளையும் பயன் இது' என்றற்கு.*

**51.** கோது குலாவிய கொன்றைக் குழற்சடை
மாது குலாவிய வாள்நுதல் பாகனை
யாது குலாவி அமரருந் தேவரும்
கோது குலாவிக் குணம்பயில் வாரே. **12**

---

**51.** *தெளிவுரை :- திருத்தி நரம்போடு விளங்கிய, கொன்றை மாலையணிந்த குழல்போலும் சடையை உடைய, அழகு விளங்கும் மங்கையைப் பாதியில் உடைய சிவபெருமானை மும்மூர்த்திகளும், தேவர்களும் எதனை விரும்பிக் குற்றத்தையே குணமாகக் கொண்டாடி வணங்கு கின்றார்கள்? பரிபாகம் இல்லாதார் பரமன் திருமுன் பழகியும் பயனில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*குறிப்புரை :- "தாம்தாம் வேண்டுவன யாவற்றையும் விரும்பியே அவ்வாறு வணங்குகின்றார்கள்" என்பது குறிப்பெச்சம். 'கோது' இரண்டனுள் முன்னது, 'கொழுது' என்பதன் மரூஉ. கொழுதுதல் - திருத்துதல். பின்னது - குற்றம். மகளிர் கூந்தலும் சிலபொழுது குழல் போலத் திருத்திவிடப்படுதல் பற்றியே, 'குழல்' எனப்படுகின்றது. அமரர் என்றது ஏனையோரை நோக்க நெடுநாள் வாழ்வுடையராதல் பற்றி மும்மூர்த்திகளைக் குறித்தது, 'கோது குணமாகக் குலாவிப் பயில்வார்' என மாற்றிக் கொள்க. குற்றமாவன, எலும்பும் சாம்பலும் அணிதல், சுடுகாட்டில் ஆடுதல், இரந்துண்டல் முதலியன.*

*கானார் புலித்தோல் உடை, தலைஊண், காடுபதி*
*ஆனால் அவனுக்கிங் காட்படுவார் ஆரேடி?*
*ஆனாலுங் கேளாய் அயனும் திருமாலும்*
*வானாடர் கோவும் வழியடியார் சாழலோ.*

*- (தி. 8, திருவாசகம், திருச்சாழல், 12.)*

*என்றமை காண்க. ஒன்றும் இல்லாதவன் போலவும், பித்தன் போலவும் காணப்படினும் வேண்டுவார் வேண்டுவன பலவற்றையும் அருளுதல் இதனால் தொகுத்துக் கூறப்பட்டது. "மாது குலாவிய வாள்நுதல் பாகன்" என்றதும் அதனைத் தெளிவிக்கும் குறிப்பு.*

*அமரர் - மரணம் இல்லாதவர் என்ற சிறப்பை உபசாரமாகப் பெற்ற உயிர்கள். தேவர்கள் - சகலான்மாக்களுள் புண்ணிய மிகுதிப் பாட்டால் அதிகார சத்தி பெற்று போகம் நுகர்பவர்கள் - மும்மல பந்தம் நீங்காதவர்கள்.*

52. காயம் இரண்டுங் கலந்து கொதிக்கினும்
மாயங் கத்தூரி யதுமிகும் அவ்வழி
தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினும்
ஈசன் உறவுக் கெதிரில்லை தானே. 13

53. அதிபதி செய்து அளகையர் வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவம் நோக்கி
அதுபதி யாதரித் தாக்கம தாக்கின்
இதுபதி கொள்ளென்றான் எம்பெரு மானே. 14

---

52. ***தெளிவுரை :-*** *"காயம், கத்தூரி" என்னும் இரண்டையும் கலந்து கொதிக்க வைத்தாலும் அவ்விடத்து வியப்புண்டாகுமாறு கத்தூரியின் மணம் காயத்தின் மணத்தை அடக்கி மேற்பட்டு விளங்கும்; அதுபோல, உலகத்தார், சிவபெருமானை ஏனைத் தேவர் பலரோடு ஒப்பவைத்து எண்ணினாலும், சிவபெருமானது திருவருளுக்கு ஏனை தேவரது அருள் ஈடாகாது; சிவனருளே மேம்பட்டு விளங்கும்.*

***குறிப்புரை :-*** *"கத்தூரி" எனப் பின்னர் வருதலின், அது முன்னரும் கூட்டி எண்ணப்படும். மாயம் - மருட்கை. "மாயமாக" என ஆக்கம் வருவிக்க. "அவ்வழி" என்றதனை, "கொதிக்கும்" என்றதன் பின்னர்க்கூட்டுக. "தேசம்" என்றது மக்களை, கலத்தல் - ஒப்ப வைத்தல். 'ஏனைத் தேவர் பிற சில பயன்களைத் தரவல்லராயினும், உண்மை ஞானத்தையும், வீடு பேற்றையும் தரவல்லராகாமையின், அவரது அருளால் பெறும்பயன் யாது' என்பதும், 'பிற பயன்களிலும் சிவபெருமானால் தரப்படுவனவேமிக்கு விளங்கும்' என்பதும் கருத்து. சிவபெருமான் இம்மை, மறுமைப் பயன்களையும் நிகரின்றித் தருதலும், முடிந்த பயனாய வீடுபேற்றைத் தருதலும் இதனால் வகுத்துக் கூறப்பட்டன. பின்னிரண்டடிகளில் யகரத்திற்குச் சகரம் எதுகையாயிற்று. உயிரெதுகையுமாம்.*

**53.** ***தெளிவுரை :-*** *அளகை நகரில் உள்ள இயக்கர்க்குத் தலைவனாகிய குபேரனை அவன் செய்த மிக்க தவத்தைக் கண்டு அவனை அந்நகருக்குத் தலைவனாகச் செய்து, அந்த அளகை நகரத்தைச் சுட்டி, 'இதுதான் உனது நகர்; இதனை நீ நன்கு புரந்து, செல்வத்தைப் பெருக்குவதாயின் ஏற்றுக்கொள்' என்று எங்கள் சிவபிரானே வழங்கினான்.*

54. இதுபதி ஏலங் கமழ்பொழில் ஏழும்
முதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவம் நோக்கி
அதுபதி யாக அமருகின் றானே. 15

---

*குறிப்புரை :-* 'அதனால் பெருஞ்செல்வம் உடையவன்' எனப் புகழப்படுகின்ற குபேரனுக்கு அந்நிலையை வழங்கினவனும், 'எங்கள் சிவபெருமானே' என்றவாறு. 'அளகை வேந்தனை' 'கொள் என்ற' என்பன பாடமல்ல. 'அந்நிதிபதி' என்னும் சுட்டு வருவிக்க 'அது பதியை, இதுபதி; இதனை ஆதரித்து ஆக்கமதாக்கின் கொள் என்றான்' என முடிக்க. இதுகாறும் சிவபிரான் தேவர்க்குந் தேவனாதலைக் கூறி, 'சிவனோடொக்குந் தெய்வம் தேடினும் இல்லை' என்பதனை விரித்துரைத்தவாறு. பதி - வழி. இதுபதி - இதுதான் வழி. கொள் - தெரிந்து கொள். அதிபதி - தலைவன். அளகை வேந்தன் - குபேரன், சந்திரன். நிறை தவமாவது, விந்துவை ஒளிமயமாக்கும் யோகம். அதிபதி - வடதிசை. ஆக்கம் - சேமிப்பு, உயிர்ச்சத்தி. முன் மந்திரத்தில் விளக்கியவாறு ஸ்பந்த உணர்வு (vibration) சிரசின் ஈசான பாகமாகிய வடகீழ்த்திசையில் (இடக்கண்ணருகே) உள்ளது. அதுவே சத்த ஞானத்தின் பதிவு நிலையாகும். ஆங்கிலத்தில் Speech Centre என்று கூறுவர். எண்ணத்தின் பயன் அங்கு உணரப்படுவது பற்றி நிறைதவ நோக்கி நிதிபதியாய் உணரப்படும் குபேரனது திசை வடதிசையாயிற்று. நிதிபதி செய்த நிறைதவத்தைச் செய்தால் ஒளி மண்டலம் விளங்கும்.

54. ***தெளிவுரை :-*** சந்திரனைத் தரித்துள்ளவனாகிய சிவபெருமான், இவ்வுலகத்தில் ஏலம் முதலியவற்றின் மணங் கமழ்கின்ற சோலையின் பெயராகிய 'பொழில்' என்பதனையே தமக்கும் பெயராகக் கொண்ட ஏழு தீவுகளையும், இவ்வுலகிற்கு மேலே ஒன்றைவிட ஒன்று நூறு கோடி யோசனை விரிவுடையனவாகிய பல உலகங்களையும் தோற்றுவித்தவன்; அவ் வளவையும் ஆக்கிக் காத்து அழிக்குமாற்றை அறிந்த பேரறிவுடையவன். அவன் தன்னை நோக்கிச் செய்யும் மெய்த்தவத்தைக் கண்டு அத்தவத்தையே தனக்கு இடமாக விரும்பி வீற்றிருக்கின்றான்.

*குறிப்புரை :-* 'ஆதலின், அவன் அருளைப் பெறுதற்கு அத்தவமே செயற்பாலது' என அதற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது. 'இப்பதி' என்பதனை 'இது பதி' என்றார். 'பதி' நான்கில் முன்னவை இரண்டும் உலகம். இறுதியில் உள்ளது உறைவிடம். விது - சந்திரன், பதி

55. முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த
அடிகள் உறையும் அறனெறி நாடில்
இடியும் முழக்கமும் ஈசர் உருவம்
கடிமலர்க் குன்றம் மலையது தானே. 16

---

*செய்தவன் - பதித்தலைச் (சூடுதலை) செய்தவன். "ஏலங் கமழ்" என்றது சொல்லளவாய் நின்ற பொழிலுக்கு அடை. எல்லாவற்றையும் நினைத்த அளவாலே செய்தலின், செயலைக் கூறாது அறிவையே கூறினார். 'சிவபெருமானை நோக்கிச் செய்யும் தவமே மெய்த்தவம்' என்பதனை விளக்கவே, 'தவம்' என்றொழியாது; 'மெய்த்தவம்' என்றார். 'சிவபுண்ணியம்' அல்லது 'பதிபுண்ணியம்' எனப்படுவதும் இதுவே என்க. எனவே, இதனால், 'அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை' என்பதனை விளக்கியவாறாயிற்று. 'சிவனை நோக்கிச் செய்யும் தவமே மெய்த் தவமாதற்குக் காரணம் உண்மைக் கடவுள் அவனாதலே' என்பதனை விளக்கவே, பொழில் ஏழும் முதுபதியும் செய்தவனா தலை எடுத்தோதினார். முதுமை, இங்குப் பெருமைமேல் நின்றது. முதுபதி - சுடுகாடு. விதுபதி - சந்திரன். அவன் செய்த மெய்த்தவமாவது - தன் தவறை உணர்ந்து இறைவனையே புகலிடமாகப் புகுந்து உற்றுநோக்கி அவனையே உணர்ந்திருந்தது.*

***55. தெளிவுரை :-** உயிர்கட்கு இறப்பையும், பிறப்பையும் பண்டே அமைத்து வைத்த தலைவன் நிலைபெற்று நிற்கின்ற தவநெறியைக் கூறும் நூல்கள் யாவை என ஆராயின், அவை இடிபோலவும், முரசு முதலிய பறைகள் போலவும் அனைவரும் அறிய முழங்கும்; அவனது திருவுருவம் மலைபோலவும், கடல்போலவும் நன்கு விளங்கித் தோன்றும். இடியும் முழக்கமும் ஈசர் உருவம் - இறைவனது வடிவம் ஒளியும், ஒலியுமாகும்.*

***குறிப்புரை :-** 'ஆதலின், அந்நூல்களின் வழிநின்று தவம் செய்து அவனது திருவுருவை விளங்கக் கண்டு பயன் பெறுக' என்பது குறிப்பெச்சம். "அறனெறி" என்றது காரியவாகு பெயராய் அதனை உணர்த்தும் நூலைக் குறித்தது. அறம், இங்குச் சிவதன்மமாதலின் அதற்கு, 'தவம்' எனப் பொருள் உரைக்கப்பட்டது. சிவதன்மத்தைக் கூறும் நூல்கள் சிவாகமங்கள். அவை இறைவன் திருவருள் வடிவமாகலின், அவற்றை அவனுக்கு உறைவிடமாக அருளினார். அதனால் அந்நூல்கள் அவனது திருவருளை அங்கை நெல்லிக் கனியென இனிது விளக்குதல் பெறப்பட்டது. 'அவற்றின்வழி நிற்பின் அப்பெருமான் அநுபவப் பொருளாதல் தப்பாது' என்றற்கு, 'அவனது*

*உருவம் மலையும், கடலும்போல விளங்குவது' என்றார். "முழக்கம்" என்றது, முழங்கும் பறைகளைக் குறித்த காரியவாகு பெயர். இதன்பின், 'போலும்' என்பது எஞ்சி நின்றது. கடி - மணம். மலைகள் மணம் நிறைந்த மலர் மரங்களை உடையவாதல் அறிக. அலை, ஆகுபெயர். 'அரனெறி' என்பதும் பாடம்.*

*அறன்நெறி - விதிமார்க்கம் கூறுகிற வேதமும், சரியையாதி உபாயங்களை அறிவிக்கும் ஆகமமுமாம். இவையே ஞானசொரூபி யாகிய இறைவன் உறையும் இடங்கள். இறைவன் நூலாதலின் இங்ஙனம் உபசரிக்கப்பெற்றது. வேதாகமங்களில் சொல்லப்படுகின்ற அறிவுருவேயன்றி இடியும், முழக்கமும் அவன் உருவே என்றவாறு. இடிக்கும், முழக்கத்திற்கும் உள்ள வேறுபாடு யாதோ எனின், இடி உண்டானபோது நம்மறிவுக்கு ஒளியாகவும் ஒலியாகவும் புலனாகின்றது. ஆதலின் ஒலியாகிய முழக்கத்தைப் பின்கூறவே இடி என்றது மின்னலாகிய ஒளியை உணர்த்தியது என்று உணரலாம். ஆகவே இடி மின்னொளியும் முழக்கம் அதன் ஓசையாம் எனவும் தெளியலாம்.*

*இம்மந்திரம் ஈசனுருவம் வேதாகமங்களாகிய ஞானசொரூபம் எனவும், இடியும், மின்னலும் மலர்க்குன்றமும் மலையுமாக இந்திரிய கோசரமுமாக இருத்தலின் இவற்றையெல்லாம் மாயாகாரியமாகிய பூதமாக உணராமல், மாயா தீதமாகிய மகேச்சுவர வடிவாகக் காண்டலே ஞானியரின் செயல் என உணர்த்திற்று.*

***இன்னொரு விளக்கம் :-** கடி - விளக்கம். மலர் - கண் மலர். கண் மலரே அகநோக்குக்கு வழியாகும். மலை - சிரசு. இடி - ஒளி, விந்து. முழக்கம் - ஒலி, நாதம். பஞ்சபூத நாயகர்களுள் சதாசிவர் ஆகாய பூதத் தலைவராய் உள்ளார். ஆகாய பூத அறிவு சிரசில் விளங்கித் தோன்றும் போது வெளியில் மழைபெய்யும். மேகம் கர்ச்சிப்பது போன்ற இடியோசைகள் சாதகனின் சிரசில் தியானத்தில் புலப்படும்.*

***56. தெளிவுரை :-** கண்ணிற்குப் புலப்படாது கருத்தினுள்ளே நிற்கின்ற கள்வனாகிய சிவன், யாவர் எதனை எண்ணினும் அதனை அறிவான் என்று உண்மை நூல்கள் கூறவும், உலகர் அவனை நினைத்து அவன் அருளைப் பெறுகின்றார்களில்லை. நினையாமலே ஒவ்வொருவரும் 'சிவன் எங்களுக்கு அருள் பண்ணவில்லை' என்று நொந்து கொள்கின்றார்கள். உண்மையில் சிவன், பிறவற்றை நினையாது தன்னை நினைப்பவர் பக்கமே விரும்பி நிற்கின்றான்.*

**56.** மனத்தில் எழுகின்ற மாயநன் னாடன்
நினைத்த தறிவ னெனில்தாம் நினைக்கிலர்
எனக்கிறை அன்பிலன் என்பார் இறைவன்
பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின்றானே. 17

**57.** வல்லவன் வன்னிக் கிறையிடை வாரணம்
நில்லென நிற்பித்த நீதியுள் ஈசனை
இல்லென வேண்டா இறையவர்தம்முதல்
அல்லும் பகலும் அருளுகின் றானே. 18

---

***குறிப்புரை :–*** *'ஆதலின் அவன் அருளைப் பெறுதற்கு அவனை நினைத்து நிற்றலே செய்யத்தக்கது' என்றவாறு. மாய நாடன் - வஞ்சனையை இடமாகக் கொண்டு நிற்பவர். 'வஞ்சம்' என்றது புலனாகாமையை. 'பிறர்க்குத் தீங்கு சூழும் வஞ்சனை அன்று' என்பது தோன்ற. 'நல்' என்னும் அடைகொடுத்தார். 'எனக்கு' என்றது பன்மை ஒருமை மயக்கம். 'எனக்கு அன்பிலன்' என இயையும். பிழைத்தல், பிறவற்றினின்று நீங்குதல். ஈற்றடி மூன்றாம் எழுத்தெதுகை.*

**57. *தெளிவுரை :–*** *கடவுள் இல்லை என்பார்க்கு ஏது காட்டி விளக்குகிறார். உலகீர் எல்லாம் வல்லவனாய், கடல் நீரை, 'தீக்கடவுளாகிய வடவையிடத்து அடங்கிநிற்க' என மிகுந்து வாராமல் நிற்கச் செய்த அருளாணை உடையவனாகிய சிவபெருமானை, நுண்ணுணர்வின்றி, 'இல்லை' எனக் கூறிப்பிணங்குதல் வேண்டா; அவன் அயன், மால் முதலிய கடவுளர்க்கு முதல்வனாய் நின்று, எப்பொழுதும் உயிர்கட்கு நலம்புரிந்து வருகின்றான்.*

***குறிப்புரை :–*** *'உலகம் ஒருவனது ஆணைவழி நடப்பதும் அவ் வொருவன் எல்லாம் வல்லவன் என்பதும் கடல் கரையின்றியே அடங்கி நிற்கும் இவ்வொன்றானே அறியப்படும்' என்பது முன்னிரண்டு அடிகளின் கருத்து. "வல்லவன், முதல்" என்பவற்றில் ஆக்கச்சொல் விரிக்க.*

*வல்லவன் - வலிமையையுடையவன் என்றது முக்கரணத்தாலும் முக்காலத்திலும் முன்னியது முடிக்கின்ற ஆற்றலையும் விச்சதின்றியே விளைவு செய்யும் வன்மையையும் உடையவன் என்பதாம்.*

*வன்னிக்கு இறை - அக்கினிதேவன், ஆகவனீயம் முதலிய அக்கினிகளுக்கும் சாடராக்கினி முதலிய உடலங்கிக்கும் அங்கி*

**58.** போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமின் என்றுஞ் சிவனடிக் கேசெல்ல
மாற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே. **19**

---

*இறைவனாக இருத்தலின் இங்ஙனம் கூறப்பெற்றது. இடைவாரணம் என்பதை வாரணம் இடை என்று மாற்றுக. வாரணம் இடை - கடலுக்கு நடுவில்.*

*நில் என நிற்பித்த ஈசனை - அங்கியைக் கடலுக்குள் நிற்க எனக் கட்டளையிட்ட ஈசனை; என்பது நீரும் நெருப்பும் தம்முள் மாறுபட்டனவாக. அவிப்பனவும் அவிவனமுமாக இருந்தும் கடலுக்குள் கனன்று கொண்டே இருக்க என்று நிற்பித்தமை யினாலேயே அவனாணைவழி அனைத்தும் நடப்பன என்பது அறியக் கிடக்கின்றது. உள் ஈசனை - நீதியால் உள்ளப்படுகின்ற கடவுளை நீதியால் என்பதற்கு நித்திய வஸ்துவாகிய ஈசனை எனவும் ஆம். கடல் தமது எல்லை கடவாது நிற்கப் பெண் குதிரையின் முகமுள்ள அங்கி ஒன்று கடவுளருளால் கடலுக்குள் இருந்து காத்து வருகின்றதென்பது வரலாறு. எத்தனையோ ஆறுகள் எண்ணிலி யாண்டுகள் இடையறாது ஒழுகியும் கடல் எல்லை கடவாமைக்குக் காரணம். கடவுள் ஆணை என்பது தானே போதரவும் இல்லையென்பார் இல்லென வேண்டா என்றவாறு.*

*படைத்தும் காத்தும் தொழிலாற்றுவார் இறைவராக. அவர்கள் அனைவரும் இவன் ஆணைவழி நிற்பார் என்பார் 'இறையவர் தம்முதல்' என்றார். முதல் பண்பாகு பெயராக முதல்வனை உணர்த்திற்று.*

*அல்லும் பகலும் அருளுகின்றான். அவனியை அலை கடல் அழிக்காதவாறு அங்கியை நிறுவித் தன் இருப்பை உணர்த்தியதோடன்றி, ஆன்மாக்களாகிய நமக்கும் எப்போதும் அருள் செய்கின்றான். அதனைக் கொண்டேனும் அறியலாமே என்றது.*

**58.** *தெளிவுரை :- 'நமது மனமே நம்மை நன்னெறியினின்று மாற்றி விட்டது' என்பதை உணர்ந்து, மயக்கம் பொருந்திய அம்மனத்தை மாற்றித் தெளிந்தவரது வழியிற்றான் சிவபெருமான் மறைவின்றி விளங்கி நிற்கின்றான். அதனால், உலகீர், அவனது திருவடி நிழலில் செல்வதற்குப் பன்முறை வணக்கம் கூறியும், பலவாற்றால் புகழ்ந்து பாடியும் அவனது திருவடிகளை என்றும் தெளிந்து நின்மின்கள்.*

**59.** காணநில் லாயடி யேற்குற வாருளர்
நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொளக்
கோணநில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி அமர்ந்து நின் றானே. 20

---

***குறிப்புரை :-*** *'சிவனடிக்கே செல்வம்' என்பது பாடமாயின், 'இவ்வாறு செய்தால் சிவனடியை அடைவோம்' என உரைக்க. வினைக்கு ஈடாக யாம் பொருளைப் படைத்து போகங்களைப் பொருந்தவே என்று மயங்கிப் பொருளை ஈட்டவும் போற்றவுமாகப் போகத்துள் அழுந்தி அனுபவிக்கும் மனத்தை செல்வம் படைத்தது சிவனடிக்குப் பணி செய்யவே என்று மாற்றியமைக்க முயலுகின்றவர் களின் முன்னே சிவன் பொருந்தி நின்றான் என்பதாம். மாற்றினார் எனக்கூறாது மாற்றி நின்றார் என்றது இறைவனது எளிவந்த கருணையை விளக்கியவாறு.*

**59. *தெளிவுரை :-*** *'இறைவனே! நீ முன்முன் தோன்றினால் உன்னைத் தழுவிக்கொள்ளுதற்கு நான் சிறிதும் நாணமாட்டேன்; எனக்கு உன்னையன்றி உறவாவார் யாருளர்! யான் காணும்படி வெளிநின்றருள்' என்று மாறுபாடின்றி இரக்கின்ற பண்புடைய அடியவர் உள்ளத்திலே சிவன் அறையப்பட்ட ஆணிபோல்பவனாய் வீற்றிருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அதனால் அவ்வாற்றால் அவனை மனத்தில் எழுந்தருளப் பண்ணிக்கொண்மின்கள்' என்பதாம். இரண்டாம் அடியை முதற்கண் மொழிமாற்றி வைத்து, "உளர்" என்றதன்பின், 'என்று' என்பது வருவித்து உரைக்க. இது காறும் நினைதல் கூறியவாறு; இதன் பின் வாழ்த்துதலைக் கூறுதலே முறையாயினும், அஃது இந்நூற்குச் சிறந்ததாதல் பற்றி இறுதிக்கண் கூறுவாராய், வணங்குதலை முன்னர் கூறுகின்றார்.*

**60. *தெளிவுரை :-*** *சிவபெருமான் பிறப்பில்லாதவன்; சடை முடி உடையவன்; மிக்க அருளுடையவன்; ஒரு காலத்தும் அழிவில்லாதவன்; யாவர்க்கும் வேறுபாடின்றி நன்மையையே செய்து, அவரை என்றும் விட்டு நீங்காதவன். அதனால் அவனை வணங்குங்கள், வணங்கினால் என்றும் மறவாத தன்மையாகிய மெய்யுணர்வு தோன்றுவதாகும்.*

***குறிப்புரை :-*** *'சிவபெருமான்' என்பது அதிகாரத்தால் வந்தது. "தன்னை" என்றது, 'அவனை' என்றவாறு. இவ்வாறு 'பிறப்பிலி'*

**60.** பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே. **21**

**61.** தொடர்ந்துநின் றானைத் தொழுமின் தொழுதால்
படர்ந்துநின் றான்பரி பாரக முற்றும்
கடந்துநின் றான்கம லம்மலர் மேலே
உடந்திருந் தானடிப் புண்ணிய மாமே. **22**

---

*முதலியவற்றைப் பயனிலையாக்காது, பெயராக வைத்துரைத்தல் சிறவாமை அறிக. பிறப்பிலி முதலிய பலவும் அவன் ஒருவனே வணக்கத்திற்கு உரியவனாதலைக் குறிப்பால் உணர்த்தி நின்றன. சடைமுடி யோகியாதலைக் குறித்தலின், அதுவும் வணக்கத்திற்கு உரிய வனாதலைக் குறித்தல் அறிக. மாயா விருத்தம் - மாயைக்கு மாறானது. மாயை - அஞ்ஞானம்; 'அதற்கு மாறு' எனவே 'ஞானம்' என்பது போந்தது. இறைவனை மறக்கும் மறதி அஞ்ஞானத்தால் உளதாவதாம். அது நீங்கவே, மறவாமையாகிய மெய்ஞ்ஞானம் உளதாம் என்க. துறப்பிலி - இடையீடில்லாதவன். மாயை - அஞ்ஞானம். விருத்தம் - ஞானம்.*

**61.** *தெளிவுரை :- யாவர்க்கும் இன்பம் அருளி, அவரை விடாது தொடர்ந்து நிற்கின்ற சிவனை வணங்குங்கள்; வணங்கினால் அவனது திருவடி ஞானம் உங்கட்குக் கிடைக்கும்.*

*குறிப்புரை :- பரி பாரகம் - எல்லாவற்றையும் தாங்குகின்ற நிலமாகிய இடம். "பாரகம் முற்றும்" என்பது தாப்பிசையாய் முன்னும், பின்னும் சென்று இயையும். ''கமலமலர்'' என்றது அன்பரது உள்ளங்களை. உடந்திருந்தான் - ஒன்றாய் இருந்தவன். 'படர்ந்து நிற்றல், கடந்து நிற்றல், புணர்ந்திருத்தல்' என்னும் மூன்றும் முறையே இறைவன் உலகத்தோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்கும் முறைமையை உணர்த்தியவாறு. 'அம் முறைமையே சிவநெறி அத்துவிதம்' என்பதும், 'அதனை உணர்தலே சிவஞானம்' என்பதும் அறிக. சிவனடிப் புண்ணியம் - சிவதன்மம்; சிவதன்மத்தால் விளைகின்ற சிவஞானத்தை, 'சிவதன்மம்' என்றார்.*

**62.** *தெளிவுரை :- 'அந்தி வானம் என்று சொல்லத் தக்க நிறத்தை*

**62.** சந்தி எனத்தக்க தாமரை வாள்முகத்
தந்தமில் ஈசன் அருள்நமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படும்அவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே. **23**

**63.** இணங்கிநின் றான்எங்கு மாகிநின் றானும்
பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானும்
உணங்கிநின் றான்அம ராபதி நாதன்
**வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே.** **24**

---

*யுடைய தாமரை (செந்தாமரை) மலர்போலும் ஒளி பொருந்திய முகத்தை உடைய, அழிவில்லாத சிவபெருமானது திருவருள் நமக்கே உரியதாகும்' என்ற உறுதியுடன் அவனை நாள்தோறும் வணங்க உடன்படும் அவரது உள்ளத்துள்ளே அவன் குடிபுகுந்து நிற்கின்றான்.*

*குறிப்புரை :-* ‘அதனால் நீவிரும் வணங்குமின்’ என்பது கருத்து. படுதல் - உடன்படுதல். முகத்து ஈசன், அந்தமில் ஈசன் எனத் தனித்தனிக் கூட்டுக. சந்தி - பகலும் இரவும் கூடும் வேளையாகிய காலை, மாலை.

63. *தெளிவுரை :-* மாயோனும் சிவபெருமானை வழிபட உடன்பட்டு நின்றதல்லது வழிபட்டுக் காணவில்லை. படைப்புக் கடவுளாகிய பிரமன் வழிபடுதற்கு உடன்படவேயில்லை. அவர்கட்குப் பின் இந்திரன் காண இயலாதவனாய் வாட்டமுற்று நின்றான். ஆகவே, சிவபெருமான் தன்னை வணங்கி நிற்பவர்க்கே செல்கதித் துணையாய் நிற்கின்றான்.

*குறிப்புரை :-* இங்கு வழிபடுதல், பயன் கருதாத மெய்யன்பினால் வழிபடுதலாதலின், ‘திருமாலும் அது செய்யவில்லை’ என்றும், பயன் கருதி வழிபட்டுச் சக்கரம் பெற்றமையால் “இணங்கி நின்றான்” என்றும் கூறினார். பிரமனும், இந்திரனும் அவ்வாறு வழிபட்டுப் பேறு பெற்ற வரலாறு ஒன்றும் சிறப்பாகச் சொல்லப்படாமையால், அவர்களை, பிணங்கியும், வணங்கியும், நிற்பவராகக் கூறினார். “எங்குமாகி நின்றான்” என்றது. ‘விட்டுணு’ என்னும் சொற்பொருளை எடுத்தோதியவாறு. “பின்” என்பதை இரண்டாம் அடியின் இறுதியிற் கூட்டி உரைக்க. மேல் பொது வணக்கம் கூறி, இதனால், உண்மை வணக்கம் கூறியவாறு. இதுகாறும் வணங்குதல் கூறப்பட்டது. இனி வாழ்த்துதல் கூறப்படும்.

**64.** வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்
ஊனப் பிறவி ஒழிக்கும் ஒருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தஎங்
கோனைப் **புகழுமின் கூடலு மாமே.** **25**

---

**64.** *தெளிவுரை :-* *மேகம் போலும் நிறத்தையுடைய திருமால், பிரமன், மற்றைய தேவர் ஆகியோர்க்கும் இழிவான பிறவித் துன்பத்தை நீக்குகின்ற ஒப்பற்றவனும், யானையை உரித்த எங்கள் தலைவனும் ஆகிய சிவபெருமானைத் துதியுங்கள்; அதனால் அவனை அடைதலாகிய அப்பெரும்பேறும் கிடைக்கும்.*

*குறிப்புரை :-* *வானப் பெருங்கொண்டல் - வானில் இயங்கும் பெரிய மேகம். மேகமானது மழையை எதிர்நோக்கும் நன்செய், புன்செய், எதிர்நோக்காத கடல், பாலை இவற்றில் நியதி தவறாமல் பெய்யும். பெய்யினும் பாலை பயன்படுத்திக் கொள்ளாது; கடல் உவராக்கும் செய்யிடம் ஏற்று உணவாயும் நீராயும் உதவும். அதுபோல எதிர்நோக்கும் அன்பருளத்தும், எதிர்நோக்காவன்பருளத்தும், இறைவன் ஒப்ப வீற்றிருந்து ஆன்மா என்ற பொதுமையின் அருள் வழங்குவர். ஆனாலும் அடைந்து உய்வது அன்பருளமே என்பதை விளக்கக் கொண்டலாக உருவகித்தது என்க.*

*புகழுமின் கூடலும் ஆம் என்றது இல்லாத குணத்தை ஏற்றிப் புகழ்தலும், இருப்பனவற்றைப் புகழ்தலும், இருப்பனவற்றுள்ளும் முற்றும் மொழிய மாட்டமாமையின் திருவருள் காட்டியவரை புகழ்ந்து அமைதலும் எனப் புகழ்ச்சி மூவகை. அவற்றுள் சர்வ சங்கார காரணனான பரமேசுவரனைப் புகழ்தல் நம் பரிபாகத்திற்குத் தக அவனருள் வழி நின்று அது காட்டிய அளவு கண்டு புகழ்தல். அங்ஙனம் புகழ மனம் கனியும்; மலவாதனை குன்றும்; சிவ விளக்கம் உண்டாம்; சிவம் விளங்க இடையீடில்லாக் காட்சியுண்டாம். அக்காட்சி அவனணைப்பிலேயே இருக்கும் இன்பப் பேற்றை நல்கும் என்பதாம்.*

**65.** *தெளிவுரை :-* *இறைவன் கருணைக்கடல் ஆயினும், நாமும் பரிபாகமுறுதல் இன்றியமையாதது என்பது உணர்த்துதல் நுதலிற்று. 'வானத்தில் நின்று முழங்குகின்ற மேகம்போல இறைவன் மேலுலகத்தில் நின்று தன் அடியவரை 'வருக என்று அழைப்பான் என்று ஆன்றோர் கூறுதல் உண்மையாய் இருக்குமோ' என்று சிலர் ஐயுறுவர். 'எங்கள் சிவபெருமான் தன்னைப் பிரிந்த கன்றைத் தாய்ப்பசு*

**65.** வானின் றழைக்கும் மழைபோல் இறைவனும்
தானின் றழைக்குங்கொல் என்று தயங்குவார்
ஆனின் றழைக்கு மதுபோல்என் நந்தியை
நானின் றழைப்பது ஞானங் கருதியே. **26**

---

*கதறி அழைப்பது போலத் தன் அடியவரைத் தன்பால் கூறி அழைப்பவனே; (இதில் ஐயமில்லை. அவனைப் பலர் துதித்து அவற்றிற்கு ஈடாகப் பல பயன்களைப் பெற்றனர். ஆயினும்) நான் அவனைத் துதிப்பது ஞானத்தைப் பெறுதற்பொருட்டே.*

***குறிப்புரை :-*** *'நான் நின்று அழைப்பது ஞானம் கருதியே' என்றதனால், 'பலர் பயன் கருதித் துதித்து அவற்றைப் பெற்றனர்' என்பது பெறப்பட்டது. 'அவர் அங்ஙனம் பெற்றமை அனுபவ மாகலின், சிலர்போல நீங்கள் ஐயுற வேண்டுவதில்லை' என்றபடி. 'ஞானம் கருதித் துதித்தலே சிறந்தது' என்பதும் குறிக்கப்பட்டது என்க.*

*வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்*
*தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மைஎல்லாந் தொழவேண்டிச்*
*சூழ்த்துமது கரம்முரலுந் தாரோயை நாயடியேன்*
*பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே*

*என்ற திருவாசகத்தையும் காண்க (தி.8, திருச்சதகம். 20). உயர்ந்த வானத்திநின்று ஒலிக்கும் மழைபோல இறைவன் அழைப்பரோ என்றது. மழை இடித்து மின்னித் தனது வரவைக் குறிப்பிட்டு, உழவர்களே நீங்கள் புலத்தைப் பண்படுத்தி வித்தி எதிர்நோக்கி இருங்கள்; பெய்த மழை பரந்து ஓடி வழிக் கொள்ளாதவாறு வளமுறுத்துங்கள் என்கின்றது. அதுபோல இறைவனும் அருண்மழை பெய்தற்கு அழைப்பர். ஆனால் வான்போல அன்று. பின் எங்ஙனம் என்னில்? ஆன்போல், ஆன் தன் கன்றின் பசியறிந்து ஊட்டும்; கன்றும் தாயைக் கூவியழைக்கும், இரண்டு ஈயவும், ஏற்கவும் ஒத்து இருக்கும். அவற்றைப்போல நம் இறைவனும் இருப்பர்; நாமும் கன்று போல அழைக்கவேண்டும் என்பதாம். ஆனால் கன்றழைப்பது பால் கருதி; நான் அழைப்பது ஞானங்கருதி என்றவாறு.*

**66.** ***தெளிவுரை :-*** *மக்கள்முன் தோன்றி அருள்புரிதலால் மண்ணுலகத்தில் உள்ளவனைப் போலவும், தேவர்களுள் ஒருவனாய் நிற்றலால் வானுலகத்தில் உள்ளவனைப் போலவும், முத்தர்களுக்கு*

**66.** மண்ணகத் தான்ஒக்கும் வானகத்தான் ஒக்கும்
விண்ணகத் தான்ஒக்கும் வேதகத் தான்ஒக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே. **27**

**67.** தேவர் பிரான்நம் பிரான் திசை பத்தையும்
மேவு பிரான்விரி நீருல கேழையும்
தாவு பிரான்தன்மை தானறி வாரில்லை
பாவு பிரான்அருள் பாடலு மாமே. **28**

---

*வீட்டுலகத்தில் நின்று அருள்புரிதலால் வீட்டுலகத்தில் உள்ளவன் போலவும், யாவரையும் தன்மயமாகச் செய்தலால் சித்தன் போல்பவன் போலவும் தோன்றுபவனாய், பண்களில் பொருந்திய இசையிடத்துள்ள விருப்பத்தால் தானே வீணையை இசைக்கின்ற சிவபிரான் பொருட்டு அவனது அருள் நோக்கில் நின்றே அவனிடத்து நான் அன்புசெய்கின்றேன்.*

*குறிப்புரை :-* "ஒக்கும்" நான்கும் பெயரெச்ச அடுக்கு. அவை, "பாடலுற்றான்" என்பதனோடு முடிந்தன. 'யாவர்க்கும் அவரவர் தகுதிக்கேற்ப நின்று அருள்புரிபவனாகிய சிவபெருமான் விரும்புவது இசை என்பதை உணர்ந்து, அவன் அருளாலே அவனைப் பாடித் துதிக்கின்றேன்' என்பது இத் திருமந்திரத்தின் திரண்ட கருத்து. துதிக்கும்பொழுதும் நான் என்ற முனைப்புடன் துதியாது, 'இப் பேறும் அவனது அருளால் கிடைத்தது' என அவனது அருள்வழி நின்று துதித்தல் வேண்டும் என்றற்கு, "கண்ணகத்தே நின்று" என்றார். 'அவன் கண்ணகத்தே நின்று' என்க. "அவனரு ளாலே அவன்தாள் வணங்கி" என்றதும் காண்க. (தி.8 திருவாசகம். சிவபுராணம் அடி 18).

**67.** *தெளிவுரை :-* சிவபெருமான் தேவர் பலர்க்கும் தலைவன்; நமக்கும் தலைவன்; உலக முழுதும் நிறைந்து நிற்கும் நிறைவினன்; அவ்வாறு நிற்பினும் அவற்றை அகப்படுத்து அப்பால் நிற்கும் பெரியோன்; ஆதலின் அவனது தன்மையை முற்றும் அறிந்து துதிப்பவர் ஒருவரும் இல்லை. ஆயினும் எங்கும் நிறைந்த அவனது அருட்டன்மைகளை உயிர்கள் தாம் தாம் அறிந்தவாற்றால் பாடித் துதித்தலும் அமைவுடையதே. இறைவனருள் எம்மறிவின் எல்லையைக் கடந்தது.

68. பதிபல வாயது பண்டிவ் வுலகம்
விதிபல செய்தொன்றும் மெய்ம்மை உணரார்
துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரும்
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. 29

69. சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல்
வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி
ஆர்ந்த சுடரன்ன **ஆயிர நாமமும்**
**போந்தும் இருந்தும் புகழுகின் றேனே.** 30

---

*குறிப்புரை :-* *"தேவர் பிரான்" முதலியவற்றைப் பல தொடராகக் கூறியது, அவற்றின் சிறப்புணர்த்தற்கு. காட்சிக்கு எய்துதல் பற்றி "விரிநீர் உலகு ஏழையும்" என நிலவுலகத்தையே கூறினாராயினும், மேல், "திசை பத்தும்" கூறினமையால் பிற உலகங்களும் கொள்ளப்படும். 'முற்ற அறிய வாராமை பற்றி அவன் முனிதல் இல்லை; அறிந்த அளவு பாடின் உவப்பான்' என்பது கருத்து. "யானறி அளவையின் ஏத்தி ஆனாது - நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின் - நின்னடி உள்ளி வந்தனென்" (திருமுருகாற்றுப்படை, 277-279) என்றதும் காண்க. மேவுதல் - விரும்புதல்; அது, பற்றிநிற்றலைக் குறித்தது. திசைபத்து - நேர்த்திசை 4, கோணத்திசை 4, விண்ணும் மண்ணுமாகிய 10.*

68. *தெளிவுரை :-* *பண்டுதொட்டு இவ்வுலகத்தில் 'கடவுள்' என்ற ஒன்று, பலவாகக் கொள்ளப்படுகின்றது. அவற்றின்கண் பலரும் பல விதிமுறை வழிபாடுகளைச் செய்தும் மெய்ம்மையைச் சிறிதும் உணர்கின்றார்களில்லை. அக்கடவுளரைத் துதிக்கின்ற பல தோத்திரப் பாடல்களைத் தாங்களே ஆக்க வல்லவர்களும் மெய்யறிவில்லாதவர் களாய் மனத்தில் துன்புறுகின்றார்கள். உண்மைப்பொருளை உணராது செய்யும் கிரியைகளும், பாடும் பாடலும் பயனற்றவையாகும்.*

*குறிப்புரை :-* *'அதனால் சிவனது முதன்மையாகிய மெய்ம் மையைத் தெளிவித்தல் அரிதேயாம்' என்பது குறிப்பெச்சம். பதி- கடவுள்.*

69. *தெளிவுரை :-* *சந்தனத்தில் நின்று கமழ்கின்ற கத்தூரி மானின் மதமணம்போலச் சிவபெருமான், முத்தியுலகத்தில் உள்ள சிலர்க்கு அறிவுறுத்திய நெறியே மெய்ந்நெறி. அந்நெறி நின்றே பகலவனது பல கதிர்கள் போன்ற அவனது பல திருப்பெயர்களை, நான் நடக்கும் பொழுதும், இருக்கும்பொழுதும் துதித்துக் கிடக்கின்றேன்.*

70. ஆற்றுகி லாவழி யாகும் **இறைவனைப்**
**போற்றுமின் போற்றிப் புகழ்மின்** புகழ்ந்திடில்
மேற்றிசைக் குங்கிழக் குத்திசை எட்டொடும்
ஆற்றுவன் அப்படி ஆட்டலும் ஆமே. **31**

---

*குறிப்புரை :- 'நீவிரும் அவ்வாறு செய்தலே தக்கது' என்பது குறிப்பெச்சம். 'மான்மத மணம் சந்தன மணத்தினும் வேறாய் மிக்குத் தோன்றுமாறுபோலச் சிவபிரான் அறிவுறுத்திய நெறி ஏனை நெறியினும் மிக்குத் தோன்றுதல் அறிவுடையார்க்குப் புலனாகும்' என்பது, 'சாந்து கமழும் கவரியின் கந்தம்போல்' என்ற உவமையால் குறிக்கப்பட்டது. "மாயங்கத் தூரியது மிகும் அவ்வழி" என மேலேயும் கூறினார் (தி.10 திருமந்திரம் - 51). கவரி - ஆகுபெயர்.*

*'முத்தியுலகத்தில் மெய்ந்நெறி அறிவுறுக்கப்பட்டோர் பிரணவர் முதலியோர்' என்பது பின்னர்க் காணப்படும் 'மெய்ந் நெறி யானே' என உருபு விரிக்க 'ஆர்ந்தசுடர்' பன்மையும், ஒளியும் பற்றி வந்த உவமை. 'பேர்ந்தும்' என்பதும் பாடமாகலாம். சிவபெருமான் அருளிய மெய்ந்நெறி அடைய ஆயிரம் திருநாமங்களையும் பரவ வேண்டும்.*

70. **தெளிவுரை** *:- பிறிதொரு நெறியும் ஒப்பாக மாட்டாதபடி உயர்ந்து நிற்பதாய சிவநெறியாற் பெறப்படுபவனாகிய சிவபெருமானுக்கு வணக்கம் கூறுங்கள்; கூறிப் பலவாற்றால் புகழுங்கள்; புகழ்ந்தால், மேலுலகத்தையும், கீழுலமாகிய நிலவுலகம் முழுதையும் உமக்கு அவன் வழங்குவான்; அவ்வுலகங்களை நீங்கள் உங்கள் விருப்பப்படி ஆளலாம்.*

*குறிப்புரை :- "ஆற்றுகிலா" என்றதில் ஆற்றுதல், "வையகமும் - வானகமும் ஆற்றல் அரிது" (குறள். 101) என்பதிற்போல 'ஒத்தல்' என்றும், "ஆற்றுவன்" என்றதில், ஆற்றுதல் "அற்றார்க் கொன்றாற் றாதான் செல்வம்" (குறள். 1007) என்பதிற்போல, 'கொடுத்தல்' என்றும் பொருள் தந்து நின்றன. ஆற்றுகிலா வழி ஆகும் இறைவன் - பிறர் சாதிக்க இயலாத சிவோகம் பாவனையில் நிற்பார்க்கு உதவி புரியும் இறைவன். 'வழக்கும், எதிர்வழக்கும் கூறுவோரது கூற்றினுள் மெய்ம்மை இது என்பது நடுவுநிற்பார்க்கு இனிது விளங்கி நிற்றல்போலப் பல நெறிகளும் பிறர்கோள் மறுத்துத் தம்கோள் நிறுவுமாயினும், உண்மை காண்பார்க்குச் சிவநெறியது உயர்வு 'சாந்து கமழும் கவரியின் கந்தம் போல்' (தி.10 பா. 69) இனிது விளங்கியே நிற்கும் என்பார், சிவநெறியை 'ஆற்று கிலா வழி' என்று அருளினார்.*

71. அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரி சீசன் அருள்பெற லாமே. 32

---

*ஆதல், உளவாதல். அஃது இங்குப் பெறப்படுதலைக் குறித்தது. "மேற்கு, கிழக்கு" என்பவை, 'மேல், கீழ்' என்னும் பொருள்வாய் நின்றன. திசைக்கண் உள்ளவற்றை, 'திசை' என்றார், மூவுலகமும் இங்கு, 'மேல், கீழ்' என இரண்டாக அடக்கப்பட்டன. அப்படி - அவ்வுலகம் 'தம் விருப்பப்படி நடத்தலாம்' என்பது தோன்ற, 'ஆளலுமாம்', என்னாது, "ஆட்டலுமாம்" என்றார்.*

*இனி, 'ஆளலுமாம்' என்பதே பாடம் என்றலும் ஆம். 'சிவபிரானைப் போற்றுவோர் எவ்வுலகத்தை ஆளநினைப்பினும் ஆள்பவராவர்' என்பது திருமுறைகளுள் பலவிடத்தும் இனிது எடுத்துச் சொல்லப்படுவது. 'ஏனைக் கடவுளர்பால் அடையும் பயனையும் சிவபிரான்பால் அடையலாம்' என்பது கூறி, அவனை வாழ்த்துதலை வலியுறுத்தியவாறு.*

***71. தெளிவுரை :-** எவ்வுயிர்க்கும் தந்தையும், 'நந்தி' என்னும் பெயருடையவனும், தெவிட்டாத அமுதமாய் இனிப்பவனும், வள்ளல் பிறர் ஒருவரும் ஒப்பாகமாட்டாத பெருவள்ளலும், ஊழிகள் பலவற்றிலும் உலகிற்குத் தலைவனாய் நிற்பவனும் ஆகிய சிவபெருமானை யாதொரு முறைமையிலானும் துதியுங்கள்; துதித்தால், அம்முறைக்குத் தக அவனது அருளைப் பெறலாம்.*

***குறிப்புரை :-** பொது நீக்கி ஒப்புயர்வற்ற தலைவனாக உணருந்தன்மை இல்லாது பொதுப்பட ஏத்தினும் அது பின்னர் உண்மையுணர்வைப் பயக்கும் என்பதும், பயன்கருதித் துதிப்பினும் அது பின்னர்ப் பயன் கருதாது துதிக்கும் மெய்யன்பினைப் பயக்கும் என்பதும் கருத்து.*

*"அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ"*

*(தி.5 ப.23 பா.9)*

*என்று அருளிச் செய்தார் ஆளுடைய அரசரும். எங்ஙனம் ஏத்தினும் ஈசன் அருள் பெறலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

72. நானும்நின் றேத்துவன் நாடொறும் நந்தியைத்
தானும்நின் றான்தழல் தானொக்கு மேனியன்
வானில் நின்றார்மதி போல்உடல் உள்ளுவந்
தூனில்நின் றாங்கே உயிர்க்கின்ற வாறே. 33

---

*உயிர்த் தந்தையை, இறைவனை உண்டு தெவிட்டாத அமுதம் போல்பவனை தன்னொப்பார் இல்லாத வள்ளலை, ஊழிகட் கெல்லாம் அப்பாற்பட்ட முதற்பொருளானவனை எத்தன்மை யிலாயினும் ஏத்துமின்; ஏத்தினால் அத்தன்மையால் அவன் அருளை எய்தலாம் என்றவாறு.*

*அப்பனை; மகனை குற்றந்திருத்திக் குணம் புகட்டி வளர்க்கும் உடல் தந்தை போல உயிர்க்குற்றங்களாகிய மல மறைப்பை நீக்கி ஞானவொளி நல்கித் திருவடியிற் சேர்ப்பிக்கும் உயிர்த் தந்தையை என்பதாம். நந்தி என்பது சிவபெருமானுடைய மற்றொரு திருநாமம். ஆர்தல் - உண்டு அமைதல். ஆரா அமுதினை - உண்டு, அமையும் என்ற ஆசையின் முடிவை உண்டாக்காத அமுதம் போல்வானை, ஊழி முதல்வன் - இறுதியைச் செய்யும் முதல்வன்; சங்கார காரணன் என்றவாறு.*

*எப்பரிசாயினும் ஏத்துமின் - கண்ணப்பர் போன்று அன்பு நெறிப்பட்டோ, சிவகோசரியாரைப் போன்று ஆகம நெறி நின்றோ, சாக்கியர் போன்று மறைந்த அன்பு கொண்டோ, மா விரதியாகவோ, பாசுபதராகவோ எம்முறை பற்றியேனும் ஏத்துமின். இங்ஙனம் கூறியது யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே மாதொரு பாகனார் தாம்வந்து அருள்செய்வர் என்னும் துணிவு புலப்படுத்த என்க. அப்பரிசு ஈசன் அருள் பெறலாம் என்பதில் அத்தன்மையால் அவன் அருளைப் பெறலாம் என மூன்றாவதுருபு விரித்துப் பொருள் கொள்க.*

**72.** *தெளிவுரை :- சிவபெருமானை நானும் நாள்தோறும் மேற்கொண்டு நின்று துதிக்கின்றேன்; அவனும் நாள்தோறும் வானத்தில் பொருந்தி வளராநின்ற வளர்பிறைச் சந்திரன் போல எனது உடலில் மகிழ்ந்து மேன்மேல் விளங்கி நிற்கின்றான். தூயனாகிய அவன் எனது புலால் உடம்பில் நின்று உயிர்ப்பாய் வெளிப்படுகின்றவாறு வியப்பு.*

*குறிப்புரை :- உம்மைகள் எச்சம். "தழல்தான்" என்பதில்தான், அசைநிலை. 'தழலொக்கு மேனியனாகிய தானும் மதிபோல் உடலுள்*

**73.** பிதற்றொழி யேன்பெரி யான்அரி யானைப்
பிதற்றொழி யேன்பிற வாஉரு வானைப்
பிதற்றொழி யேன்எங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் நானே. **34**

---

*உவந்து நின்றான்' எனக் கூட்டுக. உவத்தல் - நிறைதல். "ஊனில் நின்று" என்பதனால். அவன் அதனோடு இயைபில்லாத தூயனாதல் பெறப்பட்டது. "நிலாவாத புலாலுடம்பே புகுந்துநின்ற கற்பகமே" (தி.6 ப.95 பா.4) எனவும், "எந்தையே ஈசா உடலிடங்கொண்டாய் யானிதற் கிலனொர்கைம் மாறே" (தி.8 கோயில் திருப்பதிகம் 10) எனவும் போந்த அருட்டிருமொழிகளைக் காண்க. உயிர்ப்பாய் வெளிப்படுதலாவது, உயிர்க்குந்தோறும் புறத்தும், அகத்தும் இன்பமாய்த் தோன்றுதல்.*

*"என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்*
*கென்னு ளேநிற்கும் இன்னம்ப ரீசனே" (தி.5 ப.21 பா.1)*

*என்றருளியதும் காண்க. இதனை அசபா மந்திரத்தின் அநுபவம் என்ப. ஏத்தினால் ஈசன் அருளைப் பெறுதலை அனுபவத்தின் வைத்து உணர்த்தியவாறு.*

73. ***தெளிவுரை :-** யாவரினும் பெரியவனும், யாவர்க்கும் அரியவனும், நால்வகைத் தோற்றத்துள் ஒன்றாகாது தன் இச்சையாற் கொள்ளப்படுவனவாய அருட்டிருமேனிகளை உடையவனும் ஆகிய எங்கள் சிவபெருமானைப் பிதற்றுதல் ஒருகாலும் ஒழியேன்; அதனால், நானே பெருமையை உடைய தவத்தை உடையவன்.*

***குறிப்புரை :-** பிதற்றுதல் போலுதலின், 'பிதற்று' என்றார்; இது முதனிலைத் தொழிற்பெயர். "பிதற்றொழியேன்" என்பதனைச் சொற்பொருட் பின்வருநிலையாகப் பலகாற் கூறியது, வலியுறுத்தற் பொருட்டு, வேறு வேறு தொடராதலின், இஃது ஒருசொல்லடுக் கன்மை உணர்க. 'பெரியானை' என்னும் இரண்டனுருபு தொகுத்தலாயிற்று. 'இத்தன்மையனை இடையறாது துதித்தல் தவமிலார்க்குக் கூடாது' என்றற்கு. 'பெருமைத்தவன் நானே' என்றார். 'தவமும் தவமுடையார்க்கே ஆகும்' (குறள் 262) என்றார் திருவள்ளுவ நாயனாரும்.*

*யானே தவமுடையேன்; என்நெஞ்சே நன்னெஞ்சம்*
*யானே பிறப்பறுப்பான் எண்ணினேன் - யானேஅக்*

74. வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும் எம்பெரு மான்என் றிறைஞ்சியும்
ஆத்தஞ்செய் தீசன் அருள்பெற லாமே. 35

75. குறைந்தடைந் தீசன் குரைகழல் நாடும்
நிறைந்தடை செம்பொனின் நேரொளி ஒக்கும்
மறைஞ்சடஞ் செய்யாது வாழ்த்தவல் லார்க்குப்
புறஞ்சடஞ் செய்வான் புகுந்துநின் றானே. 36

---

*கைம்மா உரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற*
*அம்மானுக் காளாயி னேன்.*

*- (அம்மை திருவந்தாதி, 7)*

*என்றது காண்க. பிதற்றுதல் - வாய்க்கு வந்தவற்றைத் தொடர்பின்றிச் சொல்லுதல். மதி மயங்கினாரும், கள்ளுண்டு களித்தாரும், நோய் வாய்ப்பட்டவரும் அங்ஙனம் பிதற்றுவர். இறைவன் அன்பு வயப்பட்டமையால் நானும் பிதற்றுகிறேன் என்பதாம். பிதற்று ஒழியேன் என்பது பிதற்றுதலைக் கண்டு பிறர் ஏளனம் செய்வர். அது கண்டு பிதற்றுதலை ஒழிதல் நாணமுடையார் செயல்; அந்த நாணமும் கழன்றமையால் பிதற்று ஒழியேன் என்றவாறாம்.*

74. ***தெளிவுரை :-*** ***தன்னை வாழ்த்த வல்லவரது மனத்தின் கண் ஒளியாயும், தூய்மையாயும், இன்பமாயும் விளங்குகின்ற சிவபெருமானைத் துதித்தும், 'எம் தலைவன்' என்று வணங்கியும் உறவு கொண்டால், அவனது திருவருளைப் பெறலாம்.***

***குறிப்புரை :-*** ***"அங்கே" என்பது "தீர்த்தன்" என்பதனோடும் இயையும். "திளைக்கின்ற" என்பது, "தேவன்" என்ற செயப்படு பொருட்பெயர் கொண்டது.***

***மனத்து உள்ளுறு சோதியாவது, சிவத்தின் பிரபாவத்தை நினைத்தபோது மன மண்டலத்தில் விளங்கும் சோதி தீர்த்தமாவது, சோதி அமைந்தபோது உடலில் நீரில் குளித்தது போன்று உண்டாகும் உணர்வு. ஆத்தம் செய்தலாவது, இவ்வுணர்வை அன்பினால் பெருக்கிக் கொள்ளுதல்.***

***ஒரு பொருளைச் சுத்தம் செய்ய நீரால் கழுவியும் அக்கினியால் சுட்டும் சுத்திகரிப்பர். புறத்தூய்மை நீரில் கழுவுவதால் அமையும். அகத்தூய்மை பெற இறைவன் ஒளி பாய்ந்து மலம் கழுவப்பட வேண்டும்.***

**76.** சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனஞ்செய்த நெஞ்சிடை போற்றவல் லார்க்குக்
கனஞ்செய்த வார்குழல் பாகனும் அங்கே
இனஞ்செய்த மான்போல் இணங்கநின் றானே. **37**

---

*"ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந்*
*தீர்த்தன்நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்*
*கூத்தன்இவ் வானுங் குவலயமும் எல்லோமுங்*
*காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி".*
*- (திருவாசகம்-திருவெம்பாவை 12)*

*மனத்து உள்ளூறு சோதியை அன்பினால் வழிபட்டு அருள் பெற வேண்டும்.*

**75. *தெளிவுரை :-*** *கரவு கொண்டு வன்மை செய்யாது தன்னை வாழ்த்த வல்லவர்க்குச் சிவபெருமான் அவர்களது உள்ளத்தைப் புறக் கணியாது புகுந்து நிற்பான்; அதனால் அவனது மாற்று நிறைந்து அடையப்பட்ட செம்பொன்னிடத்துப் பொருந்திய ஒளியை ஒத்த, ஒலிக்கின்ற கழல் அணிந்த திருவடியைக் குறைவேண்டி அடைந்து பற்றுங்கள். நிறைந்து அடை செம்பொன் - மாற்று நிறைந்த செம்பொன். அடமாவது - திருவடியை நினையாதிருப்பது.*

***குறிப்புரை :-*** *'குரைகழலை நாடும்; அது செம்பொன்னின் ஒளியொக்கும்' என்னும் தொடர்கட்குக் கருத்துநோக்கி இவ்வாறு உரைக்கப்பட்டது. 'நாடும்' என்பது உம்மீற்றுப் பன்மை ஏவல். மறைஞ்சு, 'மறைந்து' என்பதன் போலி. 'மறைந்தடம்' எனவும் ஓதுவர். உள்ளத்தைச் சடம் என்றது, உடம்பையும் குறித்தற்கு.*

**76. *தெளிவுரை :-*** *சீறி எழுந்த நஞ்சினை உண்டு தேவரைக் காத்த சிவபெருமானை, காடு வெட்டித் திருத்திய புனம்போன்ற உள்ளத்தில் வைத்துத் துதிக்க வல்லவர்கட்கு, உமையை ஒரு பாகத்தில் உடைய அவன் அவ்வுள்ளத்திலேயே மான் இனத்தோடு ஒப்பச் செய்யப்பட்ட பார்வை விலங்கு போல்பவனாய் அச்சந் தோன்றாது அன்பு தோன்றத்தக்க வடிவத்துடன் பொருந்தி நிற்பான்.*

***குறிப்புரை :-*** *'நெஞ்சிடை வைத்து' என ஒரு சொல் வருவிக்க. பார்வை விலங்கினை குருவடிவிற்கேயன்றி, உள்ளத்தில் நினைக்கப் படும் வடிவிற்கும் கூறினார் என்க. "கனஞ் செய்த" என்றதில் 'செய்த' உவம உருபு. கனம் - மேகம். 'வாள் நுதல்' என்பது பாடம் அன்று. புனம் செய்த நெஞ்சு - குற்றம் நீங்கிக் குணம் நிறைந்த நெஞ்சு.*

77. போயரன் தன்னைப் புகழ்வார் பெறுவது
நாயக னான்முடி செய்தது வேநல்கும்
மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்
வேயன தோளிக்கு வேந்தொன்றுந் தானே. 38

---

77. ***தெளிவுரை :-*** *சிவபெருமானை அடைந்து துதிப்பவர்கள் பெறத்தக்க பயன், அவன் 'நான்' என்னும் பசுபோதத்தை ஒழித்துத் தரும் சிவபோதமேயாம். அதனை, அவன் தானே விரும்பிக் கொடுப்பான். அதுவன்றி, நிலையில்லாத அப்பசு போதத்தால் சில வற்றை விரும்பி அடையினும் அவற்றையும் அவன் உடன்பட்டுக் கொடுப்பான்.*

*அரனைப் புகழ்வார் அடையும் பயன் இது என்பது உணர்த்துதல் நுதலிற்று. படைத்தபடியே மீள மீளப் படைக்கின்ற நான்கு திருமுடிகளையுடைய பிரமனாகிய தலைவன் சிருட்டித்த மாயா காரியமாகிய உலகையே சுற்றித்திரிய வல்லவராகிலும் உமாபதியானவர் அவரை வந்து பொருந்துவர். இதுவே அரனைப் புகழ்வார் எய்தும் பேறு என்றவாறு.*

*செய்ததுவே நல்கும் நான்முடி நாயகன் மாயகம் சூழ்ந்து வர வல்லராகிலும் வேந்து ஒன்றும்; அரன் தன்னைப் புகழ்வார் போய்ப் பெறுவது இதுவே எனக் கூட்டிப் பொருள் கொள்க.*

*செய்ததுவே நல்கும் - முன் படைத்தபடியே மீளவும் படைக்கும்; என்றது விசித்திரப் படைப்பும் விசேடப் படைப்பும் புரியப் பிரமனுக்கு ஆற்றலின்று; வினைக்கீடாகக் கட்டளைப்படி இயற்றும் ஆற்றலே அவனுக்கு உண்டு என்று உணர்த்தியவாறு.*

*நான்முடி நாயகன் - நான்கு முடிகளையுடைய தலைவன்; என்றது பிரமனை. மாயகம் - மாயையின் காரியமான பிரபஞ்சம். அதனைச் சூழ்ந்து வரலாவது உலக இன்பத்தையே பெரிதென்று கருதிச் செக்குச் சுற்றிய மாடுபோலப் பிரிந்து போக வன்மையிருந்தும் விடாது சுழலுதல். வேயன தோளிக்கு வேந்து - மூங்கிலையொத்த தோளையுடைய உமாதேவிக்குத் தலைவன், என்றது ஆன்மாக்களுக்கு அருள் வழங்கத் தானும் தையலுமாக எழுந்தருளுதலைக் குறிப்பது.*

***குறிப்புரை :-*** *"நான்" என்றது, 'நான்' என்னும் முனைப்பிற்குக் காரணமான பசுபோதத்தைக் குறித்த காரியவாகுபெயர். முடி - முடிவு; முதனிலைத் தொழிற்பெயர். 'செய்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. இஃது எதிர்காலத்த இறந்த காலம். "அது" என்றது,*

78. அரனடி சொல்லி அரற்றி அழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளும்
உரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் றானே. 39

79. போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்அசு ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்மனி தர்புனி தன்அடி
போற்றிஎன் அன்புள் பொலியவைத் தேனே. 40

---

*"அந்தப்பயன்" எனச் சிவபோதத்தை உணர்த்திற்று. ஆணவ சத்தி மெலிதல், அனாதிதொட்டே நோக்கிவரும் இறைவனது திருவருள் நோக்கத்தாலாதலின், 'நாயகன் முடிசெய்த அது' என்றார். 'பெறுவது' எனக் கூறிப் பின்னரும், 'நல்கும்' என்றார்; 'தானே விரும்பிக் கொடுப்பான்' என்பது உணர்த்துதற்கு "அகம்" என்றது, 'நான்' என்னும் பொருளதாகிய வடசொல், "அகத்தால்" என உருபு விரித்து, சூழ்தற்குச் செயப்படுபொருளாகிய, 'சிலவற்றை' என்பது வருவிக்க. "வல்லர்" என்றது வஞ்சப் புகழ்ச்சி. ஒன்றுதல் - உடன்படுதல்; அது, கொடுத்தலாகிய தன் காரியம் தோன்ற நின்றது. சிவபெருமானை வாழ்த்துவார், போகம், மோட்சம் இரண்டும் பெறுவர் என்பது உணர்த்தியவாறு.*

78. ***தெளிவுரை :-*** *சிவபெருமானது திருவடியையே துதித்து, அலறி, அழுது, அவற்றையே விரும்பி நாள்தோறும் நினைக்க வல்லவர்க்கு, அவன் தனது திருவடியை உறுதுணையாகக் கொடுத்து, பின் அதிலே அடங்கிநிற்க வல்லார்க்கு அதனை இனிது விளங்கத்தந்து, அவரது அறிவிலே நிறைந்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *"நாளும் பாவிப்ப" எனவும், 'அடி உரன் செய்து' எனவும் 'அடி நிரன்' செய்து எனவும் மாற்றுக. உரன் - வலிமை; அது துணைவலிமேல் நின்றது. சொல்லி, அரற்றி, அழுது, நாடி, பாவிப்ப, அடிசெய்து ஒதுங்கவல்லார்க்கு நிரன் அடிசெய்து நிறைந்து நின்றான் என முடிக்க.*

*எல்லையற்ற கருணையையும் வீரத்தையும் உபகாரத்தையும் எண்ணி அரற்றுதலும் அழுதலும் செய்பவர்களின் தகுதிக்கு ஏற்பச் சங்கார காரணனாகிய அரன் என்றும், ஆய்ந்து தெளிந்து பாவிப்பதற்கேற்ப பரன் என்றும் இறைவனைக் குறிப்பித்தருளியமை காண்க.*

80. விதிவழி அல்லதில் வேலை உலகம்
விதிவழி இன்பம் விருத்தமும் இல்லை
துதிவழி நித்தலுஞ் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னாமே. 41

81. அந்திவண் ணாஅர னேசிவ னேஎன்று
சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணாமுதல் வாபர னேஎன்று
வந்திவ்வண் ணம்எம் மனம்புகுந் தானே. 42

---

*பாவிப்ப - தியானிக்க. சிவோகம்பாவனை செய்ய எனலுமாம். உரன் - ஞானம். அடிசெய்தல் - கால்கொள்ளச் செய்தல். ஒதுங்க வல்லார்க்கு - ஞானமே தாரமாகப் பிரியாது நிலைத்திருக்க வல்லவர்க்கு. வெயிலுக்கு அஞ்சி நிழலில் ஒதுங்குவார் பிரிவின்றி யிருத்தல் போலப் பிறவி வெப்பிற்கு அஞ்சி ஞானமே பற்றுக் கோடாகப் பிரியாது ஒதுங்கி இருப்பார்க்கு என்பதாம்.*

*நிரன் என்பது நீரன் என்பதன் குறுக்கல் விகாரம். நீரன் - நீரைப்போலத் தண்ணியன்; கருணையாளன் என்பதாம். அடிசெய்து- திருவடி பதித்து. நிறைந்து நின்றான் - ஆன்மாவைப் பூரணம் ஆக்கினான் என்பதாம்.*

**79. *தெளிவுரை :-*** *தேவர், அசுரர், மக்கள் ஆகிய அனைவரும் சிவபெருமானது திருவடிக்கு வணக்கம் கூறித் துதிப்பர். அதனால் நானும் அவ்வாறே செய்து அதனை என் அன்பினுள் நின்று ஒளிரச் செய்தேன்.*

*'அமரர் முதலாயினார் திருவடியை நுகரும் உபாயமறியாதே போற்றியென்று வாயுபசாரம் வழங்குவதில் அமைவாராயினார்கள்; நான் அன்புள் அடியை விளங்கவைத்தேன்' என்று சிவஞானியின் அநுபவமானது தேவர் முதலாயினார் அநுபவத்திலும் ஆயிர மடங்கு அதிகம் என்றும், அந்த அநுபவமே பரிபாக விசேடமுற்றார் அடையத் தகும் நெறி என்றும் அறிவித்தருளியது.*

***குறிப்புரை :-*** *'அதனால் நீவிரும் அதுவே செய்ம்மின்' என்பது குறிப்பெச்சம். இயக்கர் கந்திருவர் முதலியோரைத் தேவருள்ளும், நரகரை அசுரருள்ளும் அடக்கினார். நரகரும் தேவராதற்குச் சிவனது திருவடியைத் துதிப்பர் என உணர்க. வேறு வேறு தொடராகக் கூறியது, போற்றுதலின் சிறப்பை விளக்குதற்கு. சிவன் அப்பெயரால்*

*கூறப்படுதல், 'நிறைமலம் அனாதியின் நீங்கி நிற்றல்'. (காஞ்சிப்புராணம், திருநெறிக்காரைக்காட்டுப் படலம், 23) பற்றியும் ஆதலின், 'புனிதன்' என்றார்.*

**80. தெளிவுரை :-** *கடல் சூழ்ந்த இவ்வுலகம் வினைவழியல்லது நடத்தல் இல்லை. இங்கு இன்பச்சூழலும் வினைவழி தோன்றுத லல்லது வேறோராற்றான் இல்லை. ஆயினும் ஒளிமயமாகிய சிவபெருமான் தன்னை நாள்தோறும் துதிப்பவர்க்கு அத்துதி வழியாக முத்திக்கு வழிகாட்டும் பகலவனாய் நிற்பான்.*

**குறிப்புரை :-** *'ஆதலின் வினைவழியினின்று விடுதிபெற வேண்டுவோர் சிவபெருமானைத் துதிக்க' என்பது குறிப்பெச்சம். திருவள்ளுவ நாயனாரும், வினை நீங்குதற்கு வாயில் இறைவனது பொருள்சேர் புகழை விரும்பிச் சொல்லுதலே எனக் கூறுமாறு அறிக.*

*இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (குறள். 5)*

*"இன்பம்" என்றதன்பின், 'உளதாகல்' என்பது வருவித்து, உம்மையைப் பிரித்து அதனொடு கூட்டுக. "இல்லை" என்பது "அல்லது" என்றதனோடும் இயையும்.*

*இதன்பின், 'ஆயினும்' என்பது எஞ்சி நின்றது. வினை உளதாவது அஞ்ஞானத்தால் ஆதலின் அது மெய்ஞ்ஞான வடிவினனாகிய சிவபெருமானால் நீங்கும் என்பார். "சோதிப் பிரான்" எனவும், "பகலவன் ஆம்" எனவும் கூறினார். "சோதிப் பிரானும்" என்ற உம்மை, அசைநிலை.*

**81. தெளிவுரை :-** *'அந்தி வானம்போலும் நிறம் உடையவனே, அரனே, சிவனே' என்று சிவபெருமானது திருப்பெயர்கள் பலவற்றைச் சொல்லி, தியானத்திற்கு உரிய அவனது வடிவத்தைச் செம்மை பெற்ற அடியார்கள் வணங்கும்பொழுது நானும், 'எவ்வுருவிற்கும் முதலாய திருவுருவத்தை உடையவனே, தலைவனே, மேலானவனே' என்று துதித்து வணங்கினேன்; அப்பொழுதே ஞானமயனாகிய அவன் இவ்வாறு என் உள்ளத்திற் புகுந்துவிட்டான்.*

**குறிப்புரை :-** *அரன் - பாசத்தை அரிப்பவன். சிவன் - மங்கல மானவன். வடிவத்தை "வண்ணம்" என்றார். "தொழ" என்றது, "ஞாயிறு பட வந்தான்" என்பதிற்போல நிகழ்கால வினை. 'அடியார் தொழ நானும் தொழுதேன்' என்றது. 'அவர் செய்ததை நானும் செய்தேன்; அச் செயலின் திறம் முற்றும் அறிந்து செய்தேனில்லை' என்றபடி.*

82. மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்
நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர்
பனையுள் இருந்த பருந்தது போல
நினையாத வர்க்கில்லை நீள்இன்பந் தானே. 43

---

*"ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு*
*ஞானத் தாய்உனை நானுந் தொழுவனே" - (தி.5 ப.91 பா.3)*

*என்ற அப்பர் திருமொழியும் காண்க. "என்று", என்றது, தன்மை ஒருமை இறந்த காலமுற்று. இங்கு "என்றேன்" என வருதல் யாப்பிற்கு ஒவ்வாமை அறிக. ''இவ்வண்ணம்'' எனச் சுட்டியது தம் அனுபவங்களை, இத்துணையு வாழ்த்துதலே கூறினார். வணங்குதல், திருவடியின் முன்னன்றிச் சிறவாது. நினைதற்கு நெஞ்சு ஒடுங்குதல் அரிது. அதனால் எப்பொழுதும் யாவர்க்கும் எளிதில் கூடுதல் பற்றி வாழ்த்துதலையே பெரிதும் வலியுறுத்தினார். தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகள் பரக்க எழுந்தமைக்கும் இதுவே காரணம் என்க. திருவள்ளுவரும் மேற்குறித்த குறளில் இறைவனது பொருள்சேர் புகழையே எப்பொழுதும் இடைவிடாது சொல்லுதல் வேண்டுமென விதித்தல் நினைக்க, இனி மூவகை வழிபாட்டினையும் இறுதிக்கண் தொகுத்துணர்த்துவார். அந்திவண்ணன், அரன், சிவம் - திருமேனிகளை மட்டும் உணர்ந்த அடியவர்கள் செய்யும் வழிபாடு. முந்திவண்ணன், முதல்வன், பரன் - யோகியரும் ஞானியரும் செய்யும் அருவ வழிபாடு. ஈற்றடி சில பதிப்புகளில் "புந்திவண்ணன்" என்றும் தொடங்குகிறது.*

***82. தெளிவுரை :-** சிவபெருமானை ஓரோவொரு பொழுதாயினும் நினைப்பின், இல்லறத்தில் நிற்பவரும் பெரிய தவத்தவரேயாவர். துறவராயினார் சிவத்தியானத்திலே நிற்பாராயின், ஞானத்தில் நிற்பவராவர். இல்லறத்தவராயினும் துறவறத்தவராயினும், பனைமரத்தின் மேலே வாழ்ந்தும் அப்பனையின் பயனை அறிந்து நுகர மாட்டாத பருந்துபோலச் சிவனது திருவருளில் நின்றும் அதனை யறிந்து அழுந்தமாட்டாதவர்க்குப் பேரின்பம் உண்டாதல் இல்லை.*

***மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பார்.** இல்லறத்திற்குரிய எல்லா அங்கங்களோடும் இருந்து இறைவனையும் இடைவிடாது தியானித்துத் தான் செய்கின்ற பணிகள் அனைத்தையும் சிவப்பணியாகவே செய்பவர். தவத்திற் சிறந்தோர்க்கு ஒப்பாவர். மாதவத்தர் என்னாது ஒப்பர் என்றது ஐம்புல இன்பங்களையும் ஆரத்துய்த்துக் கொண்டே அரன் பணியும் ஆற்றுதலின் புலன்களை வென்ற தவத்தவரோடு*

**83.** அடியார் பரவும் அமரர் பிரானை
முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்
படியார் அருளும் பரம்பரன் எந்தை
விடியா விளக்கென்று மேவிநின் றேனே. **44**

---

*ஒப்பாவர் என்றதாம். இதற்கு உடம்பில் இருந்த ஆன்மாக்கள் மாதவர்க்கு ஒப்பாவர் என உரை கூறுவாரும் உளர். அது சிறப்பும் இயைபும் இன்மை உற்று நோக்குக.*

*நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர் என்றது எண்ணெய் ஒழுக்குப்போல இடைவிடாது தியானமாகிய யோக நெறியிலே நின்றார் இறைவனோடு இடைவிடாத புணர்ச்சியும் பழகுதல் உடைமையான் இறைவனுக்கு நேசர் ஆவர் என்பதாம். ஆலாலசுந்தரர் இங்ஙனம் நின்று தம்பிரான் தோழர் ஆயினமையை வரலாறு கொண்டு துணிக.*

*பனையுள் இருந்த பருந்ததுபோல நினையாதவர்க்கு பனை மரத்தில் கூடுகட்டி வசிக்கும் பருந்து எங்குச் சுற்றினாலும் பனைமரத்தை அடைந்து அடைந்து மீளுவது போல மனம் உலகியலில் இறங்கி எடுத்த உடலின் உபாதிகளான உணவுக்கும் உடைக்கும் ஊறுக்குமாகச் சுற்றினும், இறைவனை வந்து இயைந்து இருத்தலே மேற்கொள்ளவேண்டியது என்பதாம். எக்கணத்தும் பனையை விட்டுப் பருந்து பறந்து விண்ணை அடையும். அதுபோல என்றும் இவ்வுலக நிலையை உதறி இறைவனையடையும் வகையில் நினைப்பவர்க்கு என்றுமாம்.*

***குறிப்புரை :-** பின்னர் 'நினையாதவர்' என வருதலால், முன்னர் 'நினைப்பவர்' என்பதும், முன்னர் "மனையுள் இருந்தவர்" என்றதனால் பின்னர், 'துறந்திருந்தவர்' என்பதும் பெறப்பட்டன. 'ஞானம் ஈசன்பால் அன்பே' (தி.12 பெ. பு. ஞானசம்பந்தர், 843) ஆதலின், ஞானத்தை, "நேசம்" என்றார். 'நின் இன்பம்' என்பது பாடம் அன்று. இதனால் நினைத்தலின் சிறப்புக் கூறப்பட்டது.*

***83. தெளிவுரை :-** மெய்யுணர்ந்தோரால் துதிக்கப்படுகின்றவனும், தேவர்கட்குத் தலைவனும், எப்பொருட்கும் முதல்வனும், இவ்வுலகத்திற்றானே நிரம்ப அருளைப் புரிபவனும், மேலானவற்றிற் கெல்லாம் மேலானவனும், எமக்குத் தந்தையாய் நிற்பவனும் ஆகிய சிவபெருமானை நான் அணையா விளக்காகக் கொண்டு தலையால் வணங்கி, மனத்தால் நினைந்து அன்பு செய்து நிற்கின்றேன்.*

84. பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்
திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே. 45

---

***குறிப்புரை :-*** *படி - ஞானபூமி. விடியாவிளக்கு - இரவு, பகல் என்ற பேதமின்றி எப்போதும் பிரகாசிப்பது. மெய்யுணர்ந்தோரே சிவனுக்கு ஆட்படுவா ராதலின், அடியாராவர் அவரேயாதல் அறிக. 'படி ஆர' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "முடியால்" என்பதற்கேற்ப, 'மனத்தால்' என்பது வருவிக்கப்பட்டது. "வணங்கி, முன்னி" என்று ஒழிந்தாராயினும், முன்னர் "பரவும்" என்ற குறிப்பால், வாயால் வாழ்த்தலும் பெறப்பட்டது. "அமரர் பிரான்" முதலாக வந்த சிறப்பினால் வணங்கப்படுதல் முதலியவற்றிற்கு அவனே உரியவன் எனக் குறித்தவாறு. பரம்பரன் - எந்தை - விளக்கு என்று கூறியது பரம்பரனாய்க் கடந்து நிற்பினும் என்னைத் திருத்த எளிவந்த எந்தை ஆயினான். உண்மையை விளக்க ஒரு தீபமாயினான்.*

**84. *தெளிவுரை :-*** *தன்னின் வேறாகாத பரையாகிய சத்திக்கும், தன்னின் வேறாகிய பசு பாசங்கட்கும் தலைவனாகிய சிவபெருமானை நினைந்து, உயிர்க்குரிய உடலிடத்தே சொல்லும் அந்நெறிப்பட்டு நிற்க வல்லவர்கட்கு, கட்டுற்ற உயிர்கட்கு உரித்தாகிய அலைமோதும் பிறவிப் பெருங்கடலை நீந்தி, மும்மலங்களும் கழன்று, பரமுத்தியாகிய கரையை அடைதல் கூடும். உள்ளி ஒருங்க வல்லார்க்கு நீந்தி, கடந்து கரை எய்தலாம் என வினை முடிக்கவும். பரநாதன், பசுநாதன், பாசத்துநாதன் எனக் கூட்டவும்.*

***குறிப்புரை :-*** *"உரை பசு பாசம்" என்பதில், "பாசம்" என்றது உடம்பை. "உள்ளி உரை பாசத்து ஒருங்க" என்றது. 'மனம் மொழி மெய் ஆகிய மூன்றும் அவனிடத்தே ஒரு நெறிப்பட' என்றவாறு. "திரை" என்பது "கடல்" என்பதனோடு வினைத்தொகையாகத் தொக்கது. பாவம் - உளதாந்தன்மை; என்றது பிறப்பை. செழுமை, அளவிடப்படாத அகல ஆழங்கள். 'நீந்திக் கடந்து கரை எய்தல் ஆம்' எனக்கூட்டுக. ஆதல் - கூடுதல்.*

**85. *தெளிவுரை :-*** *சிவபெருமானையே என் தலைவன் என்று நினைந்து அவனது திருவடியாகிய மலர்களை நான் தலையில் சூடிக் கொள்வேன்; நெஞ்சில் இருத்திக் கொள்வேன்; பாடித் துதிப்பேன்;*

85. சூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரான்என்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்
றாடுவன் ஆடி அமரர்பி ரான்என்று
நாடுவன் நானின் றறிவது தானே. 46

---

*பலவாகிய மலர்களைத் தூவிப் பணிந்துநின்று கூத்தாடுவேன்; தேவர்க்குத் தேவன் என்று கொள்வேன்; திருவருள் பெற்ற இந்நிலையில் நான் அறிவது இவ்வளவே.*

***குறிப்புரை :-*** *'நான் இன்று அறிவது இவ்வளவே' என்றது, 'இதற்குமேல் உண்மை வேறில்லை' என்றதாம். 'பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த - மக்கட் பேறல்ல பிற' (குறள் - 61) 'யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை - எனைத்தொன்றும் - வாய்மையின நல்ல பிற' (குறள் - 300) என்றவற்றிற்கும் கருத்து இவ்வாறாதல் அறிக.*

*நாற்பத்தாறு திருமந்திரங்களால் சிவபெருமானது முதன்மையை முதற்கண் கூறிய நாயனார், 'சிவன் ஒருவனே கடவுளாயின் 'அயன், அரி, அரன்' என மும்மூர்த்திகளாக யாண்டும் கூறப்படுவோரது நிலை என்னை?' என்னும் ஐயத்தை நீக்குதற்கு அம்மூவரது மேல் கீழ் நிலையைப் பத்துத் திருமந்திரங்களால் விளக்குகின்றார்.*

## 1 (அ) திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமை

**86.** அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் நாலும் உணரில்
தளர்விலன் சங்கரன் தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அரிஅயற் காமே. 47

**87.** ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானும்

---

**86. தெளிவுரை :-** *என்றும் ஒழியாது செய்கின்ற படைப்பும், காப்பும், அழிப்பும், அருளும் என்ற நான்கனையும் ஆராயுமிடத்தும் அவை அனைத்தையும் சோர்வின்றிச் செய்பவன் சிவபெருமான் ஒருவனே. ஆயினும், மெய்யுணர்ந்தோராகிய அவன்றன் அடியார்கள் சொல்கின்ற அளவில்லாத அவன் பெருமைகள் 'மால், அயன்' என்னும் இருவர்க்கும் ஏற்ற பெற்றி பொருந்துவனவாம்.*

**குறிப்புரை :-** *எனவே, 'புண்ணிய மிகுதியால் அத்தொழில்களுள் சிலவற்றை இயன்ற அளவு பெற்று நடாத்துதல் பற்றி அவரும் ஒருபுடைத் தலைவராய் நிற்பர்' என்றவாறு. தோற்றத்தை "இளமை" என்றார்.*

*"அந்தம்" என்றது உயிர்களின் அலைவிற்கு முடிவாதலை; எனவே, அஃது அருளலாயிற்று; இறுதியில் நிற்கற்பாலதாய அதனைச் செய்யுள் நோக்கி இடை வைத்தார்.*

*ஈறு - ஒடுக்கம். அளவியல் காலம், 'தோற்றத்திற்குப் பின்னதாயும், ஈற்றிற்கு முன்னதாயும் இடைநிற்றலின் வரையறைப்பட்டு நிகழ்கின்ற காலம்; அஃது அதனை உடைத்தாகிய நிலைத்தொழிலின்மேல் நின்றது. மறைத்தலின் வகையே படைப்பு முதலிய மூன்றுமாகலின், அதனை வேறுவைத்து எண்ணாது, "நாலும் உணரில்" என்றார். இத்தொழில் அனைத்தும் என்றும் நிகழ்வனவாகலின், அவற்றிற்கு, 'அளவில்' என்ற அடைகொடுத்தார்.*

**87. தெளிவுரை :-** *யாவர்க்கும் முதல்வனாகிய சிவனும், அழகிய மணிவண்ணனாகிய மாயோனும், முதற்றொழிலாகிய படைப்பினைச் செய்யும் பிரமனும் என்கின்ற வடிவங்களை ஆராயின், அம்மூன்று வடிவங்களும் தொழில் இயைபில் ஒன்றே என்று அறியாமல் 'வேறு*

சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றார்களே. **48**

**88.** ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்
பீசம் உலகிற் பெருந்தெய்வ மானது

---

*வேறு' என்று சொல்லி உலகத்தார் இகலி நிற்கின்றார்கள்; இஃதோர் அறியாமை இருந்தவாறு!*

***குறிப்புரை :–*** *தொழில் இயைபு பின்னர் விளக்கப்படும். இயைபு பட்ட தொழில்கள் பலவற்றைப் பலர் இயற்றுங்கால் தம்முள் இணங்கி இயற்றுதலன்றிப் பிணங்கி இயற்றாமையும், ஓரோவழிப் பிணங்கி இயற்றியவழி ஒன்றும் நடவாதொழிதலும் காட்சியால் அறியப் படுவனவாகலின், அவைபற்றி இடையறாது நிகழும் படைப்பு முதலியவற்றை இயற்றுவோர் அவற்றைத் தம்முள் இணங்கியே இயற்றுகின்றமை துணியப்படும் என்பார், "மூன்றும் தொடர்ச்சியில் ஒன்றெனார் பேதித்துப் பிணங்குகின்றார்களே" என்றார். எனவே, "மால், அயன்" இருவரும் பொருளால் சிவபெருமானின் வேறாயினும், தொழிலால் அவனோடு ஒருவரே என்றதாயிற்று.*

**88.** ***தெளிவுரை :–*** *வினையின் நீங்கி நிற்பவன் சிவபெருமான் ஒருவனே. அதற்கு உலகில் திருக்கோயில்களில், காணாத அருவினுக்கும் காண்கின்ற உருவினுக்கும் (தி.8 பெரியபுராணம், சாக்கிய. 8) முதலாயுள்ள அவனது இலிங்கத் திருமேனி நடுவிடத்தில் விளங்க, ஏனைத் தேவர் பலரும் அதனைச் சூழ்ந்து போற்றி நிற்றலும், அத்தேவர் நடுவிடத்தில் விளங்கும் கோட்டங்களில் அஃது அவ்வாறு நில்லாமையுமே சான்றாகும். காட்சியானே உணரப்படுகின்ற இதனையும் நோக்காது, முதற்கடவுள் 'அது' என்றும், 'இது' என்றும் பிற தெய்வங்களைச் சுட்டிச் சொல்லித் தம்முட் சிலர் கலாய்ப்பா ராயின், அவர் பகுத்துணர்வில்லாதவரே யாவர். தூர்ப்புக்களையே பொருளென்று கண்டவர்கள் அத்தூர்ப்பைத் தான் அறிவார்கள்; அவற்றை அகற்றி உள்ளே உள்ள பொருளை அவர்கள் எவ்வாறு கண்டறிவார்கள்!*

***குறிப்புரை :–*** *"ஈசன் இருக்கும் இருவினைக்கு அப்புறம் என்றதற்குக் கருத்து நோக்கி இவ்வாறு உரைக்கப்பட்டது. "ஈசனே, தூரே" என்னும் பிரிநிலை ஏகாரங்கள் தொகுத்தலாயின. முதலதனால்,*

ஈசன் அதுஇது என்பார் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் தூரறிந் தார்களே. **49**

**89.** சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றாகும்

---

'ஏனைத் தேவர் பலரும் வினையாற் கட்டுண்டு நிற்பவரே' என்பது பெறப்பட்டது. 'இருக்கும்' என்பது முற்று. "உலகில்" என்றதனால் காட்சிப் பொருளாய 'கோயில்' என்பது விளங்கிற்று. பெருமை, இங்கு முதன்மையைக் குறித்தது. "ஆனது" என்றது, 'ஆகிநின்றது' என்றவாறு. இதன் முதல் அடி மேற்கோளாயும், இரண்டாம் அடி ஏதுவாயும் நின்றன. நினைப்பு - ஆய்வு. "தூசு" என்றது பின்வரும் தூரினை. தூர் - பள்ளங்களைத் தூர்த்து நிற்கும் பொருள்கள். கூரிய நோக்குடையவரே. தூரினை அறிந்து அகற்றி உள்ளே கிடைக்கும் பொருளைக் காண்பர். அதுபோல அறிவுடையவரே கலாய்ப்புக்களை அகற்றி உண்மையை உணர்வர் என்றவாறு. தூசு - தூய்மை, சுத்தம். தூர் - வேர்.

**89.** *தெளிவுரை :- சிவபெருமான் 'சிவன், சதாசிவன், மகேசுரன்' என மூன்றாகவும், 'சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால் அயன்' என ஐந்தாகவும், தொகுத்தும் வகுத்தும் சொல்லப்படுகின்றார். நிலைகளோ, 'சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன்' என ஒன்பதாக விரித்துச் சொல்லப்படும். அந்நிலைகள் எல்லாம், முதல்களாகிய விந்து நாதங்களினின்றே தோன்றுதலால், யாவும் அத்தொகுதித் தலைவனாகிய சிவபெருமான் ஒருவனது நிலை வேறுபாடுகளேயன்றி, ஒவ்வொன்றும் ஒவ்வொரு கடவுளன்று.*

*குறிப்புரை :- "இதனை யறியாது மேற்கூறியவாறு தம்முள் முரணிக் கூறிக் கலாய்க்கின்றவரைத் தெருட்டுதல் இயலாது" என்பது குறிப்பெச்சம்.*

*முதற்கடவுள் ஒருவனே, பிறிதொன்றையும் நினையாது வாளா இருக்கும் பொழுது 'பரசிவன்' அல்லது 'பரமசிவன்' எனப்படுவான். பரமசிவனே, 'சொரூபசிவன், சுத்தசிவன்' என்றெல்லாம் சொல்லப்படுவான். அப்பொழுது அவனது, சத்தி 'பராசத்தி' எனப்படும். பின் அப்பரமசிவன் உலகைத் தொழிற்படுத்த நினைக்கும்*

பொழுது 'சிவன்' அல்லது 'தடத்தசிவன்' எனப்பட, அவனது சத்தி பராசத்தியில் பல கூற்றில் ஒருகூறாய் 'ஆதிசத்தி' எனப்படும். 'திரோதானசத்தி' எனப்படுவதும் இதுவே.

சிவனுக்கு உலகை உய்வித்தற்கு உள்ள விருப்பமே 'இச்சாசத்தி' என்றும், அச்செயலுக்கு ஆனவற்றை அறியும் அறிவே 'ஞானசத்தி' என்றும், அறிந்தவாறு செய்யும் செயலாற்றலே 'கிரியா சத்தி' என்றும் சொல்லப்படும். இவற்றுள் இச்சை, என்றும் ஒரு பெற்றியாய் உள்ளதே ஏனைய ஞானம் கிரியை இரண்டுமே பலவாறு அவ்வப்பொழுது செயற்படும். சிவன் (தடத்த சிவன்) சுத்த மாயை முதற்கண் தனது ஞானசத்தி மாத்திரத்தால் பொதுவாக நோக்கிப் பின்பு கிரியா சத்தியைப் பொதுவாக அதன்கண் செலுத்துவான். கிரியையின் செயற்பாடே செய்கையாகையால் இந்நிலை சத்திக்கே உரியது. அதனால், இந்நிலை 'சத்தி' என்றே சொல்லப்படும். இது முன் சொன்ன ஆதிசத்தியன்று, முன்பு, ஆதி சத்தியும், தானும் வேறின்றி ஒருவனேயாய் நின்ற சிவன், இச்சத்தி தோன்றிய பின்பு 'சிவன், சத்தி' என இரண்டாய் நிற்பன். அச்சிவன் பின்பு சுத்தமாயையை ஞான சத்தியால் சிறப்பாக நோக்கி 'நாதம்' என நின்று, பின்பு கிரியா சத்தியைச் சிறப்பாகச் செலுத்துவன். அந்நிலையில் அவனது சத்தி 'விந்து' எனப்படும். இதுவே இந்த அளவிலே, இறைவனது நிலை, 'சிவன் சத்தி, நாதம், விந்து' என நான்காதல் அறியலாம். இந்நான்கிலும் ஞானமே மிகுந்திருப்பதால் இவை அருவம் (சூக்குமம்) சிவனை, 'பரநாதம்' என்றும், சத்தியை 'பர விந்து' என்றும் நாதத்தை 'அபர நாதம்' என்றும் விந்துவை 'அபர விந்து' என்றும் சொல்வது உண்டு. பரம் - மேல் அபரம் - கீழ். 'நாதனை' என்பதற்கு 'நாதம் என்கின்ற நிலையில் நிற்பவன்' என்பதே பொருள். நாதம் - ஒலி. சுத்த மாயையில் நாத தத்துவமே எழுத்தொலி என்பது உணர்க.

மேற்கூறியவாறு ஞானசத்தியே மிக்கு விளங்கிய நிலைக்குப் பின் ஞான சத்தியையும், கிரியா சத்தியையும் இறைவன் சமமாகச் செலுத்தி மாயையைச் செயற்படுத்த முயல்வன். இந்நிலையில் அவன் 'சதாசிவன்' எனப்படுவன். இந்நிலை அருவுருவம் (சூக்குமத்திற்கும், தூலத்திற்கும் இடைப்பட்டது). பின்பு ஞான சத்தியைக் குறைவாகவும், கிரியா சத்தியை மிகுதியாகவும் செலுத்திச் சுத்தமாயையில் ஐந்தொழில் செய்வான். அப்பொழுது அவன் 'மகேசுரன்' எனப் பெயர் பெறுவான். பின்பு ஞானசத்தியை மிகுதியாகவும், கிரியா சத்தியைக் குறைவாகவும் செலுத்தி உரியோர் சிலரை ஏவி அசுத்த மாயை, பிரகிருதி மாயைகளில் ஐந்தொழில் செய்யச் செய்வான். இந்நிலையில் அவன் 'வித்தியேசுரன்'

எனப்படுவான். வித்தியேசுரன் கீழ் நிற்போருள் உயர்நிலையை அடைந்தோரும், 'வித்தியேசுரர்' எனப் பெயர்பெறுவர். அவர், 'அனந்தர், சூட்சுமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தர், சீகண்டர், சிகண்டி' என எண்மராவர். இவருள் முதல்வராகிய 'அனந்தர்' என்பவரே அசுத்த மாயையில் ஐந்தொழில் செய்தும், சீகண்டருத்திரை ஏவி அவர் வாயிலாகப் பிரகிருதி மாயையில் ஐந்தொழிலைச் செய்வித்தும் நிற்பார்.

ஐந்தொழில்களுள், 'படைத்தல், காத்தல், அழித்தல்' என்னும் மூன்றும் மாயையின் மேலும், 'மறைத்தல், அருளல்' என்னும் இரண்டும் ஆன்மாக்கள் மேலும் நிகழ்வன. இவற்றை இறைவன் பிறரைக் கொண்டு செய்விக்குங்கால், படைப்பு முதலிய மூன்றனையும் தான் அவரேயாய் மறைந்து நின்றும், ஏனை இரண்டனையும் அவர் தானேயாக விளங்கி நின்றும் செய்வன். எனவே, படைத்தல், காத்தல், அழித்தல் தொழில்களைச் செய்யும் 'அயன், அரி, அரன்' என்னும் மூவரே மகேசுரனுக்கு வேறாக வைத்து எண்ணப்படுவர். அனந்த தேவரது தொழிலோடு எவ்வாற்றானும் நம்மனோர்க்கு நேரே தொடர்பு இன்மையால் அவரையும் அவர்கீழ் நிற்பாரையும் வேறு வைத்து எண்ணுவதில்லை. சீகண்டரது மறைத்தல், அருளல் தொழில் சிவனுடையனவே என்பது மேலே குறித்தவாற்றால் விளங்கும். எனவே, 'மகேசுரன், உருத்திரன், மால், அயன்' எனச் சதாசிவனுக்கு கீழ் நான்கு நிலைகளே சொல்லப்படுகின்றன. இவை நான்கும் உருவம் (தூலம்). அனைத்தும் கூட, 'சிவன், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன்' எனச் சிவனது நிலைகள் ஒன்பது என்பது விரியாக அமைந்துள்ளன. இவை 'நவந்தரு பேதம்' எனப்படும். முதல் நான்கும் இலய நிலைகள்; இடை ஒன்று போக நிலை; இறுதி நான்கு அதிகாரநிலை. இவைகளை மூன்றாகத் தொகுத்துக் கூறுமிடத்து. 'சிவன்' என்னும் இலய நிலையுள் ஏனைய மூன்றும் 'மகேசுரன்' என்னும் அதிகார நிலையுள் ஏனைய மூன்றும் அடங்கும். ஐந்தாக வகுத்துக் கூறுமிடத்து, 'சிவன்' என்பதில் நாதமும், 'சத்தி' என்பதில் விந்துவும் அடங்க, 'உருத்திரன்' மால், அயன் என்னும் மூன்றும் 'வித்தை' என ஒன்றாகச் சொல்லப்படும். இவற்றையே, "சிவன் முதல் மூவர்" என்றும் "ஐவர்" என்றும், "ஆறு இரண்டு ஒன்று - ஒன்பது" என்றும் கூறினார். ஒன்பது நிலைகளுள் 'சத்தி, விந்து என்பன சத்தியின் நிலைகளே' என்பதை மேலே குறித்தோம். எனவே, இறைவன் 'சிவன் நாதம், சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன்' என்னும் நிலைகளுள் நிற்கும்பொழுது இறைவி முறையே, சத்தி, விந்து, மனோன்மணி, உமை,

அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதற் சங்கரன் தன்பெயர் தானே. 50

**90.** பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்
அயனொடு மால்நமக் கன்னியம் இல்லை

---

*திரு, வாணி என நிற்பாள். எனவே, மறைந்து நிற்றல் வகையாயினும், விளங்கி நிற்றல் வகையாயினும் ஒன்பது நிலைகளும் எவ்வாற்றானும் சிவபெருமானுடையனவே, ஆதலின், 'மால், அயன்' என்போரை அப்பெருமானின் வேறாக எண்ணி உயர்த்தியோ, தாழ்த்தியோ கூறிப் பிணங்க வேண்டுவது இல்லை என்பதாம்.*

*சிறந்த அவை முதல் ஒன்பது - சிறப்புடைய அவை முதலாய் நிற்கின்ற ஒன்பது, 'முதலுகின்ற ஒன்பது' என வினைத்தொகை இரண்டாவதாய் நின்ற "அவை" என்றது, 'ஓங்க' என்பதனோடு இயையும். இதனை அடுத்து நின்ற முதல், கருவி; தத்துவம். தத்துவத்திற்கு ஏதுவாகும். இறைவன் நிலைகளை 'தத்துவம்' என்றார். சவை - சபை. தொகுதி. 'பெயர்' எனச் சொல்மேல்வைத்துக் கூறினாரேனும், அதனால் உணர்த்தப்படும் நிலைகளைக் கூறுதலே கருத்து என்க. இறைவனது நிலைகளை இவ்வாறு தொகுத்தும், வகுத்தும் விரித்தும் கூறப்படுதலை எடுத்தோதி, இவையெல்லாம் ஒருவனது பல நிலைகளேயன்றி பொருளால் வேறல்ல என்பார், 'ஒன்று ஆகும்' என்றார். சவை - சபை. சவை முதற் சங்கரன் - மன்றத்துள் முதல்வராகிய சங்கரன்.*

***90. தெளிவுரை :-** மேற்கூறிய நிலைகளால் உயிர்கட்கு விளையும் பயன்களை அறிந்து அவற்றை முறைப்படுத்தி எண்ணுங் கால் சீகண்ட வுருத்திரர்க்குக்கீழ் நிற்கும் 'அயன், மால்' என்பவர் தாமும் நமக்கு அயலாவாரல்லர்; அதனால் நீவிர் அக்கடவுளராலும் சிவனுக்கு அடியவராகும் வகையைப் பெற முயல்வீராக. அயனும், மாலும் படைத்தல், காத்தல் தொழில்புரிவது நம்போன்ற சகலான்மாக்களில் பரிபாக விசேடமுற்றுப் பதவிகளை எய்தி இறைவனருளால் இத்தொழில்களை இயற்றுகின்றார் என உணரப்படுதலின் அன்னியமாகார்.*

***குறிப்புரை :-** "எண்ணும்" என்றதற்கு, 'அவற்றை' என்னும் செயப்படு பொருள் வருவிக்க. இங்கு, 'அயன், மால்' என்றது சீகண்ட உருத்திரர்க்குக் கீழ் நிற்பவரையே என்பது. ஏற்புழிக் கோடலால் விளங்கும். 'அன்னியம் இல்லை' என அமைதிகூற வேண்டுதல் அவரைப்*

*பற்றியே யாகலின், அன்னியராவாரை, ''அன்னியம்'' என்றார். அதன்பின், ஆதலால் என்னும் சொல்லெச்சம் வருவிக்க. 'மாலும்' எனவும், 'அவ்வானவராலும்' எனவும் போந்த இழிவு சிறப்பும் தொகுத்தலாயின 'அன்னியம் இல்லை' என்றது சிவபிரானுக்கு வேறானவராய்த் தோன்றுதல் இல்லை என்றவாறு. அவரால் சிவனடியாராதலைப் பெறுதலாவது. 'இவரும் சிவ பெருமானது தொழிற்குரியராம் நிலைமையைப் பெற்றுச் சீகண்ட உருத்திரர் வாயிலாக அப்பெருமானது திருவருளைப் பெற்று நிற்பவர்' என உணர்ந்து அவனது அடியவராகக் கருதி வழிபட்டுச் சிவ புண்ணியத்தைப் பெறுதல். "ஆம்" என்றது எச்சம்; முற்றாதற்கு ஏலாமை அறிக. 'வயணம்' என்பது எதுகை நோக்கித் திரிந்தது. 'வயணம்' என்பதே பாடம் எனலுமாம். வயணம் - வகை.*

*நவந்தரு பேதங்களில் இறைவன் தன் அடியவரை அவர்க்கு விருப்பம் உள்வழி ஏற்புடையவற்றில் நிறுத்துதலும் உண்டு. ஆகவே, அவை 'சம்பு பட்சம், அணு பட்சம்' என இருவேறு வகையாய் நிற்கும். இறைவன் தானே கொள்ளும் நிலைகள் சம்பு பட்சம்; தன் அடியவரை அந்நிலைகளில் நிறுத்தித் தானே செய்விப்பனவும், பிறர் வாயிலாகச் செய்விப்பனவும் அணுபட்சம், இவ்விருவகை நிலைகளும் சுத்த மாயையிலே உள்ளன. ஏனை இருமாயைகளிலும் அணுபட்சம் மட்டுமே உள்ளன. அவற்றுள்ளும் தூலமாய் உள்ள உருவநிலை நான்குமே உள்ளன. அந்நான்கனுள் மகேசுர நிலையில் நிற்பவர் முறையே அனந்ததேவரும், சீகண்டருமேயாவர். ஆன்ம வருக்கத் தினராகிய இவர் எல்லாரிடத்தும் பதியாகிய சிவபெருமான் தான் அவரேயாய்க் கலந்துநின்று அவரவர் தொழிலை இயற்றுவிப்பான். இவ்வாற்றால் அணுபட்சத்தினராகிய அயன், மால் என்பவரும் ஓராற்றால் சிவநிலையினரேயாகலின், ''அயனொடு மால் நமக்கு அன்னியம் இல்லை" என்றார். இவ்வாறே,*

*"ஒருவிண்முதல் பூதலம் - ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்*
*படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திக ளாயினை" - தி. 1 ப. 28*

*"நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண்"*
*- தி.6 ப.8 பா.3*

*"மாதிவர் பாகன் மறை பயின்ற*
*வாசகன் மாமலர் மேய சோதி" - தி.8 திருவார்த்தை 1*

*ஆதி - அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான்*
*- ஞானவுலா 5*

என அருட்டிருமொழிகள் ''அயன், மால்'' என்பவரையும் சிவபெருமானோடு ஒன்றாக வைத்து உயர்த்துக் கூறுமாறு அறிக.

அருட்டிருமொழிகளில் மேற்காட்டியவாறு அயனையும், மாலையும் சிவபெருமானோடு ஒன்றாக வைத்து உயர்த்துக் கூறுவனவேயன்றி,

"முந்நீர்த் துயின்றோன் நான்முக னறியாப்
பண்பொடு நின்றனை" - தி.1 ப.28

"பிரமனும் மாலும் மேலை முடியோடு பாதம்
அறியாமை நின்ற பெரியோன்" - தி.4 ப.14 பா.2

"பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க"

- தி.8 திருவாசகம், திருவண்டப்பகுதி 32

என வேறாக வைத்து இழித்துக் கூறுவனவும் உள்ளனவன்றோ எனின், ஆம், அவையெல்லாம், 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்' என இறைவன் செய்யும் தொழில் ஐந்து என்பதும், அவை ஐந்தும் ஒருவனது தொழிலே என்பதும் உணராது படைத்தல் முதலிய மூன்றே தொழில்கள் உள்ளன எனவும், அவற்றுள் அழித்தல் தொழில் கொடியதாகலின் அதனைச் செய்வோன் இறைவனாகான் என விடுத்து ஏனைய இரண்டும் செய்யத் தக்கனவாயினும் அவற்றுள் ஒவ்வொன்றே உயர்ந்தது எனவும் கொண்டு அதுவதற்கு உரிய ஒவ்வொருவனையே இறைவன் எனப்புகழ்ந்து, ஏனை இருவரையும் இகழ்ந்தொதுக்குவாரை நோக்கி, 'முதல்வனாவான் ஓரோர் தொழிற்கே முதல்வராய் அவர் எல்லாரினும் மேம்பட்ட ஒருவன்' எனத் தெளிவித்தற் பொருட்டு வருவனவாகலின், 'அவை, முன்னர்க் காட்டியவற்றோடு முரணுவன அல்ல' என்க.

எனவே, அயனையும், மாலையும் சிவபெருமானோடு ஒன்றாக வைத்துக்கூறும் திருமொழிகள் சிவபெருமான் தானே செய்வோனாய் சம்பு பட்சங்களில் வெளிப்பட்டு நிற்கும் நிலை, செய்விப்போனாய் அணுபட்சங்களில் மறைந்து நிற்கும் நிலை என்னும் இவற்றை நோக்கின எனவும், அவ்விருவரையும் வேறாக வைத்துக் கூறுந்திருமொழிகள் அவர் அணுபட்சத்தினராகின்ற நிலையை நோக்கின எனவும் பகுத்துணரற்பாலன என்பதாயிற்று.

இதுபற்றி யன்றே இந் நாயனாரும், "பயனறிந் தவ்வழி எண்ணும்

அளவில்... நமக்கு அன்னியமில்லை" என்றார்! 'அவ்வழி எண்ணும் அளவில் அன்னியம் இல்லை' எனவே, "சிவபெருமானது நிலை வேறுபாடுகளாகிய சம்புபட்சங்களை எண்ணாது அணுபட்சங் களாகிய அவரவரையே எண்ணிய வழி அன்னியம் உண்டு" என்று போந்தது.

"நமக்கு அன்னியம் இல்லை" என்றது, 'சம்புபட்சங்களை எண்ண வல்ல சிவநெறியாளராகிய நமக்கு அன்னியம் இல்லை' என்றவாறு. எனவே, 'அது மாட்டாது அணுபட்சத்தையே எண்ணும் இரணியகருப்பர், பாஞ்சராத்திரிகள் முதலியோர்க்கு எவ்வாற்றானும் உளதாவது அன்னியமே என்பதும் போந்தது. இதனானே, 'இது மாட்டாத பௌராணிகர், அனைவரையும் ஒப்பவைத்து அனேகேச்சுர வாதம் பேசுவர்' என்பதும் பெறப்படும்.

இன்னும், ''பயனறிந்து அவ்வழி எண்ணும் அளவில்'' என்றதனால், உயிர்களின் நன்மையின் பொருட்டு இறைவன் கொள்ளும் தடத்த நிலைகள் மேற்கூறியவாற்றான் முன்னும் பின்னுமாய் நிற்றல் நோக்கிச் சம்புபட்சமாகிய அவற்றின் மேல், கீழ் கூறப்படுதல் பற்றி அணுபட்சத்திலும் மேல், கீழ் கூறப்படுகின்றன வன்றி, அணு பட்சத்தில் உண்மையில் மேல் கீழ் இன்றி யாவரும் ஒரு தன்மையினரே என்பதும் உணர்த்தப்பட்டதாம். இதனை,

> அயனை முன்படைத் திடுமொரு கற்பத்
> தரியை முன்படைத் திடுமொரு கற்பத்
> துயரு ருத்திரன் றனைமுனம் படைப்பன்
> ஒருகற் பத்தின்மற் றொருகற்பந் தன்னின்
> முயலு மூவரை ஒருங்குடன் படைப்பன்
> முற்பி றந்தவர் மற்றிரு வரையும்
> செயலி னாற் படைக் கவும் அருள் புரிவன்
> சிவபிரான் எனில் ஏற்றமிங் கெவனோ.

எனச் 'சிவதத்துவ விவேக' நூல் விளக்கிற்று.

'இச் சிவதத்துவ விவேகச் செய்யுளில் 'சிவபிரான்' என்றதற்கு ஈடாக 'மாயோன்' அல்லது 'நான்முகன்' என்பதைப் பெய்து, இவை அனைத்தையும் மால் அல்லது அயனுக்கு ஆக்கிக் கூறின் வரும் குற்றம் யாது' எனின், 'சிவம் சாந்தம் சதுர்த்தம்' என்று சிவபெருமானைக் குணமூர்த்திகளாகிய மூவரின் மேம்பட்ட நான்காமவனாய நிர்க்குண மூர்த்தியாகக் கூறியது போல, அவரை ஓரிடத்தும் கூறாமையானும்,

நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்
வயனம் பெறுவீர்அவ் வானவ ராலே. 51

91. ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனி பணிந்தடி யேன்தொழ
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் ஒப்புநீ
ஞாலத்து நம்மடி நல்கிடென் றானே. 52

---

*மாயோனையும், நான்முகனையும் முதல்வராகக் கூறுவோர் அவரை முறையே 'சத்துவ மூர்த்தி, இராசத மூர்த்தி' என்பதல்லது, நிர்க்குண மூர்த்திகளாகக் கூறாமையானும் அங்ஙனம் கூறுதல் கூடாது என்க. உருத்திரனைச் சிவபிரானின் மேம்பட்டவனாகக் கூறிப் பிணங்குவார் இன்மையின், அவன் அன்னியன் ஆகாமையைக் கூறிற்றிலர்.*

91. ***தெளிவுரை :-*** *எண்ணில்லாத தேவர்கள் திருவோலக்கத்தில் சூழ்ந்து பணிகின்ற சிவபிரானது திருமேனியை அடியேனும் பணிந்து கும்பிட, அவன்,* ***'நீ திருமாலையும், படைப்புக் கடவுளாகிய பிரமனையும் நிகர்த்தவன்; ஆதலின், நிலவுலகத்திற்கு நமது திருவருட் பெருமையை உணர்த்து'*** *என ஆணை தந்தருளினான்.*

***குறிப்புரை :-*** *ஆகவே, மக்களுலகத்துள்ளாரைச் சிவபெருமான் மாலும் அயனுமாகச் செய்தல் உண்டு என்றவாறு. "உலப்பிலி தேவர்கள்" என்றதை முதலிற் கூட்டுக. சிவபெருமானது திருமேனி, பால் போலுதல் திருநீற்றுப் பூச்சினாலாம். இனிபால், இனிமை பற்றி வந்த உவமை என்றலுமாம். அருளை, 'அடி' என்றல் மரபு என்பது, "இறைவனார் கமல பாதம் இன்றியான் இயம்பும் ஆசை" என்ற சிவஞான சித்தியானும் (சுபக்கம் - பாயிரம் - 4) உணர்க. திருமாலும், பிரமனும் வேதம் முதலியவற்றால் பலர்க்குச் சிவபிரானது திருவருட் பெருமையைப் பலர்க்கு உணர்த்துவோராதல் அறியத்தக்கது. 'ஞாலக்கு' என்பதே பாடம் போலும். நாயனார்க்கு சிவபெருமான் இவ்வாறு ஆணை தந்தது நந்திதேவர் வாயிலாக என்க. இனித் திருவாவடுதுறையில் சிவபோதியின் கீழ் இருந்து கண்ட யோகக் காட்சியில் என்றலும் பொருந்துவதேயாம். இவ்ஆணையின் வழி நல்கப்பட்டதே இத் திருமந்திர மாலை என்க. ஓலக்கம் - திருக்கயிலையில் அத்தாணி மண்டபத்தில் அரியாசனத்து அரசு வீற்றிருக்கும் நிலை.*

**92.** வானவர் என்றும் மனிதர்இவர் என்றுந்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வது தானே. 53

**93.** சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்

---

**92.** *தெளிவுரை :-* *உடம்போடு கூடி நிற்பவருள் சிலரை 'இவர்தேவர்' என்றும், சிலரை (இவர் மக்கள்) என்றும் உணர நிற்கும் நிலைமைகள் எல்லாம் சிவபெருமானது செயலால் அமைவனவன்றித் தானாகவே அவ்வாறு நிற்கும் தனித் தெய்வம் இல்லை.*

*குறிப்புரை :-* *'அதனால், ஏனைத் தேவரும், தலைமக்களும் மாலயன் போலச் சிவபெருமானது கலப்பினை நோக்கும்வழி அவனாதலும், இவர்தந் தன்மையை நோக்கும்வழி இவரோயாதலும் பெறப்படும்' என, வானுலகத்தில் இந்திரன் முதலாகவும், மண்ணுலகத்தில் அரசர் முதலாகவும் உள்ள தலைவரது நிலைமையை விளக்கியவாறு. இவ்வாற்றானே. "திருமாலுக் கடிமைசெய், தெய்வம் இகழேல், சக்கர நெறிநில்" (ஆத்திச்சூடி) என்றற்றொடக்கத்து அறநூற் கட்டளைகள் எழுந்தன என்க. "ஒரும்" என்றது செயப்பாட்டு வினையாய் நின்றது. தனிமை, இங்குச் சுதந்திரத்தைக் குறித்தது. மற்று, அசைநிலை.*

**93.** *தெளிவுரை :-* *எனின், மூவரைப் பேதித்துப் பேசுபவர் மூடர் என்பது உணர்த்துதல் நுதலிற்று. ஒளிவிடுகின்ற பேரொளிப் பிழம்பாகிய சிவம், பிரமன், விஷ்ணு, உருத்திரன் என மூன்றாயும் அவற்றுடன் சதாசிவன், மகேசன் கூட ஐந்தாகவும் நின்ற தொன்னிலைக் கண் அவரால் அடையும் பயனை அறியமாட்டாதவர் களாகிய மூடர்கள், முறையாக உருத்திரன், திருமால், பிரமன் என்று வேறுபடுத்திப் பிதற்றுகின்றனரே அவரறிவு இருந்தபடி என்னே! என்பது என்றவாறு.*

*சோதித்த என்பது ஒளியென்னும் பொருளைத் தருகின்ற சோதியென்னும் பெயர்ச் சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சம்; ஒளியை உடைய என்பது பொருள், ஆராய்ந்த எனப் பொருள் செய்யின் இறைவனுடைய வரம்பிலறிவுடைமைக்கு இழுக்காதலே யன்றி ஆன்றோர் மரபுமன்றாம். இறைவனே மூன்றாயும், ஐந்தாயும்*

நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே. 54

**94.** பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப்புற மாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்
தரத்தினுள் தான்பல தன்மைய னாகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே. 55

---

*நிற்கின்றான் என்றெண்ணுவதே முறை என்பது கருத்து.*

**94. *தெளிவுரை :-*** *சிவபெருமான் ஒன்றோடும் ஒட்டாது தனித்து நிற்கும் மேல் நிலையில் ஒருவனேயாய், அந்நிலையினின்று வருதலாகிய பொதுநிலையில் எல்லாப் பொருட்கும் உள்ளும், புறம்பும் நிறைந்து நிற்பனவனாய் மால், அயன் முதலிய ஒன்பது நிலைகளை உடையவ னாகியும், உயிர்களின் தகுதி வேறுபாட்டிற்கேற்ப மற்றும் பல்வேறு நிலைகளையுடையனாகியும் இவ்வாறெல்லாம் தனது திருவருள் ஒன்றிலே நின்று உயிர்கட்குப் பாசத்தைப் போக்கி யருளுகின்றான்.*

***குறிப்புரை :-*** *பரத்தில் - தற்சொரூப நிலையாகிய உயர்ந்த நிலை. வரத்து - பிறவி. கரத்தினுள் - எல்லாவற்றையும் ஒடுக்குகின்ற காலத்தில். கழிவு செய்தல் - சங்கரித்தல். 'எனவே, 'இவற்றிற்கெல்லாம் காரணம் பல்வேறு நிலைப்பட்ட உயிர்கள் மாட்டுக்கொண்ட அருளேயன்றிப் பிறிதில்லை' என, 'ஒருவன் ஒருநிலையில் நில்லாது பல நிலையை மேற்கொள்ள வேண்டுவது என்னை' என்னும் ஐயத்தை நீக்கியவாறு "மாயவன், அயன்" "தரம்" என்பன உபலக்கணம். வரத்து, 'வரவு' என்னும் தொழிற் பெயர். சொரூபம் நிலையும், தடத்தம் வரவும் ஆதல் உணர்ந்து கொள்க. கரம் போல்வதனை, "கரம்" என்றார். இறைவனது சத்தியை அவனுக்குக் கை போல்வதாதலை,*

> *"நங்கையினால் நாம் அனைத்தும் செய்தாற்போல்*
> *நாடனைத்தும்*
> *நங்கையினால் செய்தளிக்கும் நாயகனாம்"*

*என்னும் திருக்களிற்றுப்படியார். 78 இதனாலறிக. இதனானே, "என்னை இப்பவத்திற் சேராவகை எடுத்து" (சிவஞானசித்தி, பாயிரம் 2) என்பதில் எடுத்து என்றது, "அருளாகிய கையால் எடுத்து" எனப் பொருள் தந்தது.*

**95. *தெளிவுரை :-*** *எம் கடவுளாகிய சிவபெருமான் தானே ஒரு கூற்றில் சதாசிவ மூர்த்தியாய் 'சாந்தியதீதை' என்னும் ஒரு கலையுள்*

**95.** தானோரு கூறு சதாசிவன் எம்இறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின்று றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே. **56**

---

*நின்று அதனையே தன்னிடமாகக் கொண்டும் இருக்கின்றான். மற்றொரு கூற்றில் உயிர்க்குயிராய் நின்று உணர்த்துவதாகிய இலய சிவனாயும் நிற்கின்றான். பிறிதொரு கூற்றில் பாசங்களின் வழிநின்று நடத்தும் மறைப்பாற்றலாயும் உள்ளான். வேறொரு கூற்றில் பாசத்தை நீக்கித் தன்னைத் தரும் அருளாற்றலாயும் இருப்பன்.*

*எமது தலைவனாகிய பரமசிவன் ஞான சத்தியை ஒருகூறாச் சேர்ந்து சதாசிவனாக உளன்; ஆகாயத்தை ஒரு கூறாக மருவிப் பராகாயத்து உளன்; உடலுள் நின்று உயிர்க்கின்ற பிராணனாகவும் உளன்; தனது ஒரு கூறு அப்புமயனாகவும் ஆவன் என்றவாறு.*

*குறிப்புரை :-* ‘அதனால் அவனது நிலைவேறுபாடுகளை அறிதல் உயிர்கட்கு அரிது’ என்பது கருத்து. ‘இந்நிலையெல்லாம் தன் இச்சையாற் கொள்வனவே’ என்றற்கு முதற்கண், “தான்” என்றார். சாந்தியதீத கலையும் ஆகாயம் எனப்படுமாறு அறிக. உண்மையை “அங்கு” என்பதனுடன் கூட்டுக. “கோன்” என்றது. ‘எசமானன்’ என்னும் பொருளது. பாசத்தின் வழி நின்று நடத்துதலை, ‘உடலுள் நின்று உயிர்த்தல்’ என்றார். இறுதிக் கண் நின்ற “ஒரு கூறு” என்றது முன்னும் சென்று இயையும், “ஆம்” என்பதனை, “தான்” என்றதற்கும் கூட்டுக. தண்ணியனாதல் பற்றி அருள்வோனாதலை. “சலமயன் ஆம்” என்றார்.

## 2. வேதச் சிறப்பு

**96.** வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே. 1

---

*இதுகாறும் சிவநெறியில் இறைவனாகிய சிவபெரு மானது பெருமையைக் கூறிய நாயனார், இனி அவனாற்செய்யப்பட்ட நூலது பெருமையைக் கூறுகின்றார். அந்நூல் தான், 'பொதுவும், சிறப்பு' என்று இருவகைத்தாய் முறையே, 'வேதமும், ஆகமமும்' எனப் பெயர்பெற்றன என்பதை நாயனார் பின்னர்க் கூறுகின்றார் (தி. 10 எட்டாந் தந்திரம் "வேதமொ டாகமம்") ஆதலின், அவற்றுள் பொது நூலாகிய 'வேதத்தின்' சிறப்பை முன்னர் ஆறு திருமந்திரங்களால் கூறுகின்றார்.*

**96.** *தெளிவுரை :-* 'அறவேட்கை உடையேம்' எனத் தம்மைப் பற்றிச் சொல்லிக்கொள்வார் சிலர், 'வேதத்திற் சொல்லப்படாத அறமும் உண்டு' எனக் கூறுவராயினும், அஃது உண்மையன்று; வேதத்திற் சொல்லப்படாத அறம் யாதொன்றும் இல்லை. மக்கள் ஓதி உணர வேண்டுவனவாய எல்லா அறங்களும் வேதத்திலே உள்ளன. அதனால், அறிவுடையோர் பலரும் வேதத்தை மறுத்துச் செய்யும் சொற்போரை விடுத்து எல்லாச் சொல்வளமும், பொருள்வளமும் உடைய வேதத்தை ஓதியே வீடடையும் நெறியைப் பெற்றார்கள்.

*குறிப்புரை :-* "இது செய்; இது செய்யற்க" என விதியானும், மறையானும் அறங்களை விதிப்பன வேதங்களாதலின் வேதத்தை விட்ட அறம் இல்லை என்றார். 'கொல்லாமையே சிறந்த அறம்; அது வேதத்துள் இல்லை' எனக் கூறும் புத்த சமண மதத்தவரது கூற்றை உட்கொண்டு கூறியது இத்திருமந்திரமாதலின், இதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது. வேதத்துள் ஊன வேள்வி கூறப்பட்டதாயினும், வேதம், பல்வேறு திறத்தார்க்கும் அவரவர்க்கு ஏற்புடைய அறங்களைக் கூறுவதாகலின், அதனுட் கூறப்பட்ட அறங்கள் அவ்வத்திறத்தார்க்கே உரியனவன்றி, **எல்லா அறங்களும் எல்லார்க்கும் உரியன அல்ல;** அவ்வாற்றால் ஊன் வேள்விகளும் அவற்றிற்கு உரியாரை நோக்கியே கூறப்பட்டன என்பதும், ஊன் வேள்வியன்றித் தூய வழிபாடுகளும், தூய நோன்புகளும் அவற்றிற்கு உரியாரை நோக்கி வேதத்திற் கூறப்பட்டுள்ளன என்பதுமே வேதத்தை உடன்பட்டோர்

துணிபாகலின் ''வேதத்தை விட்ட அறமில்லை'' என்பது முதலியவற்றால் வேதத்தின் சிறப்பை வலியுறுத்தினார் நாயனார், திருவள்ளுவ நாயனாரும்,

> அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
> உயிர்செகுத் துண்ணாமை நன்று. - குறள். 259

என 'ஊன்வேள்விகள் உயர்ந்தோர்க்கு உரியன அல்ல என்பது மாத்திரையே கூறியதல்லது. 'ஒருவர்க்கும் ஆகாது' என முற்றக் கடிந்து கூறினாரல்லர். ஊன் வேள்விகளை அறிவுடையோர் விலக்காமைக்குக் காரணம், அவற்றாலும் சிலர்க்குக் கடவுள் உணர்ச்சி உளதாதல் பற்றியேயாம். புத்த சமண மதங்கள் கடவுட் கொள்கை இல்லாத மதங்களாதலின் அவை அவற்றை மறுக்கு முகத்தான் கடவுள் வழிபாட்டினையே மறுப்பனவாயின. அன்றியும், ஊன் வேள்வியை விலக்குதலைத் தம் மதத்தினைப் பரப்புதற்குத் தக்கதொரு கருவி யாகவுங் கொண்டு தம் ஆரவார உரைகளைப் பெருக்கின என்பது, "கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம்" (தி.12 திருநாவுக்கரசர் புராணம். 37) என்ற சேக்கிழாரது திருமொழிக் குறிப்பால் நன்குணரலாம்.

> "வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
> ஆத மில்லி அமணொடு தேரரை" - தி.3 ப.108 பா.7

என்னும் திருமொழியும் இக்கருத்தே பற்றி எழுந்தது.

'கடவுள் வழிபாடு உயிர்க்கொலையோடு கூடாது நிற்றலே சிறப்பு; கூடினும் அமைக' என்பது வேத மதங்களின் கருத்து. 'கடவுள் வழிபாடு செய்யப்படாது ஒழியினும் ஒழிக; உயிர்க் கொலை கூடாது' என்பது புற மதங்களின் கொள்கை. 'இப்புறமதக் கொள்கையால் ஒழிவது கடவுள் வழிபாடேயன்றி உயிர்க்கொலையன்று' என்பதை ஊன்றியுணரவல்லார்க்கு, அம்மதங்களால் விளையும் தீங்கு புலனாவதாகும். அது நோக்கியே அறிவுடையோர் அனைவரும் வேதத்தை உடம்பட்டு ஒழுகினர் என்க.

> "அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
> நின்றது மன்னவன் கோல்" - குறள் 543

> "ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
> காவலன் காவான் எனின்" - குறள் 560

என்பவற்றால் திருவள்ளுவ நாயனாரும் வேதத்தை உடம்பட்டமை

**97.** வேதம் உரைத்தானும் வேதிய னாகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்கா
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே. **2**

---

புலனாகும். 'வேதத்தின் அறம் எல்லாம் உள' என்றதனால், 'வேதம் அறத்தைக் கூறும் பொது நூல்' என்பது பெறப்பட்டது.

**97.** *தெளிவுரை :-* வேதத்தை எப்பொழுதும் ஓதுபவனாகிய பிரமனும் வேதத்தைச் செய்தவனாயினானில்லை. ஏனெனில், வேதத்தைச் செய்தவன் அதனைச் செய்தது, அப்பிரமன் அதனை ஓதி அறிவு விளங்கப் பெறுதற் பொருட்டும், மற்றும் கன்மத்தில் விருப்பம் உடையவர்க்கு வேள்விகளை உளவாக்குதற்பொருட்டும், மெய்யுணர்வு பெற விரும்புவோர்க்கு மெய்ப்பொருளை உணர்த்தற் பொருட்டுமாம்.

*குறிப்புரை :-* பொருளுணர்ச்சி இல்லாமல் ஒலிக்கூட்டமாக ஓதுகின்றவன் வேதியனாக மாட்டான். 'பிரமன் வேதத்தால் அறிவு விளங்கப்பெறுதல், அவன் அதனை இடையறாது ஓதுதலால் அறியப்படும்' என்றற்கு, அவனை 'வேதம் உரைத்தான்' என்னும் பெயராற்கூறினார். உம்மை நான்கனுள் முதலது, சிறப்பு; ஏனையவை எச்சம். 'வேதத்தை ஓதி அறிவு விளங்கப் பெறுபவன், அவ்வேதத்தைச் செய்தவனாதல் எவ்வாறு' என்றற்கு, "வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட" என்றார். இக்கருத்தால் இது கூறப்புகுந்தவர், வேதத்தால் உளவாகும் ஏனைய பயன்களையும் உடன் கூறினார் என்க. இப்பயன்களது சிறப்பை வலியுறுத்தற்கு எச்ச உம்மை புணர்த்து வேறு வேறு தொடராற் கூறினார். அவ்வும்மைகட்கு முன் 'உரைத்தது' என்பன சொல் லெச்சமாய் எஞ்சி நின்றன. இதனால் 'வேதத்தைச் செய்தவன் பிரமன் எனக் கூறும் இரணிய கருப்பமத'த்தவர் முதலாயினவர் கூற்றும் பொருந்தா' என்பதும், 'வேதத்தின் பயன் இவை' என்பதும் கூறப்பட்டன. இதனானே வேதம் ஒருவராலும் செய்யப்பட்டதன்று என்னும் மீமாஞ்சகரது கொள்கையும் பொருந்தாமை பெறப்பட்டது. விளங்கிட உரைத்தானும், வேள்விக்காய் உரைத்தானும், காட்ட உரைத்தானும் இறைவன் எனக் கூட்டிப் படிக்க.

**98.** *தெளிவுரை :-* பூனையை ஒத்த புறத்தோற்றம் உடைய வேதியர்கள் சொல்கின்ற; பிறப்பை உடைய ஆசிரியனாகிய மாயோன் றானும், மந்திரவடிவாகிய எழுச்சியான ஓசையை உடைய கன்ம

**98.** இருக்குரு வாம்எழில் வேதத்தி னுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங்
கருக்குரு வாய்நின்ற கண்ணனு மாமே. **3**

---

*காண்டத்துள் உள்ளத்தை உருக்குகின்ற அன்புருவாயும், ஞான காண்டத்துள் கேள்வி, ஆய்வு முதலியவற்றால் துணியப்படும் மெய்ப்பொருளாயும் உயர்ந்து நிற்பவனவனோ? ஆகான்.*

*குறிப்புரை :- 'அதனால், அவனும் வேதத்தைச் செய்தவன் ஆகான்' என்றபடி வேதத்தின் பாகங்களையும், 'வேதம்' என்றல் வழக்கு. உருக்கு உணர்வு அன்பு உணர்வேதம், உணரப்படும் வேதம். "ஓங்கி" என்றது பெயர். 'வேதம் முதல் நூலாதலின், அதனைச் செய்தவன் யாவர்க்கும் முன்னோனாய தன்னிகரில்லாத் தனிப்பெருந்தலைவனே யாதல் வேண்டும். அதனால், அவன் தனது தன்மையை உணர்ந்து தன்னைச் சாரமாட்டாத பிறர்க்கு அன்பினானும், ஆராய்ச்சியானும் தன்னை அடையுமாற்றையே அந்நூலுட் கூறியிருத்தல் வேண்டும். ஆகவே, அவன் அதன் கன்ம காண்டத்துள் அன்பிற்கும், ஞானகாண்டத்துள் அறிவிற்கும் பற்றாய் நிற்றல் வேண்டும். அத்தன்மை பிறப்பினுட்பட்டு நிற்கும் மாயோனுக்கும் கூடாது' என்பார். "கருக் குரு வாய் நின்ற கண்ணனும் ஆமே" என்றார். "கரு" என்றது பிறப்பை. "கருக்குரு" என்றதை, 'கருவை உடை குரு' என விரிக்க. 'கருவில் வீழ்பவன் குருவாகமாட்டான்' என்பது குறிப்பு. 'கண்ணன் மாயோன்' என்பன ஒருபொருட்சொற்கள் "கண்ணனும்" என்ற உம்மை இழிவு சிறப்பு. 'ஆமே' என்ற வினா, 'ஆகான்' என எதிர்மறைக்கண் வந்தது. 'கண்ணனும் உருக்குணர்வாய் ஓங்கி ஆமே' எனக் கூட்டுக.*

*வரையறை இன்மையின், "வெருக்குரு" என வேற்றுமைப் புணர்ச்சியுள் நிலைமொழியில் சிறுபான்மை ககரம் இரட்டிற்று. "வெருக்குக்கண்" (நாலடியார் 210) எனப் பிறவிடத்தும் வந்தது. 'பிரமத்தை உணர்ந்திருத்தலால் பிராமணர் எனவும், பிரமஞானம் மிக்கிருத்தலால் விப்பிரர் எனவும் சொல்லப்படுகின்றோம்' என்று சொல்லிக் கொண்டு, பிரமமாகிய சிவபெருமானைச் சிறிதும் உணர்ந்து அன்பு செய்யாமலே, மாயோன் முதலியோரையே புகழ்வதோடு சிவபெருமானை இகழ்வதும் செய்துகொண்டே, நூலும் சிகையும் முதலாய தோற்றத்தால் மட்டும் சிலர் பிராமணராய் நிற்றலின், அவரது தோற்றத்திற்குத், தவத்தோடு சிறிதும் இயைபின்றி அதற்கு மாறாய்*

**99.** திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே. **4**

---

*நின்று கொண்டே தோற்றத்தால் பெரிதும் தவமுடையது போலத் தோன்றுகின்ற பூனையினது தோற்றத்தை உவமை கூறினார். பிராமணருட் சிலர் இவ்வாறு நிற்றற்குக் காரணம், ததீசி, கௌதமர் முதலிய முனிவர் சிலரது சாபம் என்பதைக் காந்தம், கூர்மம் முதலிய புராணங்களுட் காண்க. வெருக்கு - பூனை. கருக்குரு - சூக்கும வடிவமான கருநிலை.*

*இதனால், 'வேதத்தை மாயோன் இயல்பாய் நின்றே செய்தான்' எனப் பாஞ்சராத்திரிகளும், 'வியாதனாய் அவதரித்துச் செய்தான்' எனப் பௌராணிகரும் கூறுங் கூற்றுக்கள் பொருந்தா என்பது உணர்த்தினார். 'வேதத்தைச் செய்தவன் பிரமனு மல்லன்; மாயனுமல்லன், என்பதைப் பொருந்துமாற்றின் வைத்து உணர்த்தி, 'அது செய்தவன் சிவபெருமானே' என்பதைப் பாரிசேடத்தாற் பெறுவித்தார் என்க. வியாச முனிவன் வேதத்தை வகைப்படுத்திய தல்லது செய்திலாமை அறிக.*

**99.** *தெளிவுரை :- 'வீட்டு நெறியாவது, ஞானாசிரியன்வழி உளதாவதாய், சித்தும், அசித்துமாய் இருதிறப்பட்டு நிற்கும் உலகத்தை நினையாமல், அவை அனைத்தையும் கடந்து நிற்கும் சிவபெருமான் ஒருவனையே நினைந்து அவனாந் தன்மையைப் பெறுகின்ற ஒரு நெறியே' என வேத முடிவு ஒருதலையாக அறுதியிட்டுக் கூறும்.*

*குறிப்புரை :- 'அதனால் வேதத்தைச் செய்தவன் சிவபெருமானே' என்பது குறிப்பெச்சம். 'திரு' என்பது வீடாதலை "போகமும் திருவும் புணர்ப்பானை" (தி.7 ப.59 பா.1) என்பதனுட் காண்க. வியாபக நிலையை, ''பெரு நெறி'' என்றார். ''சிவமாம் நெறி'' எனப் பின்னர் வருகின்றமையின், வாளா, "பிரான்", என்று போயினார். "குருவே சிவம்" (தி.10 ஆறாம் தந்திரம்) எனப் பின்னர்க் கூறுவாராகலின், "குருநெறி ஆம்" என்றது, 'அவனருளால் அல்லது கிடைக்கப் பெறாத' என்றவாறு, "ஒரு நெறி" என்றதன்பின், 'என்று' என்பது எஞ்சிநின்றது 'பிரானையே, ஒருநெறியே' என்னும் பிரிநிலை ஏகாரங்கள் தொகுத்தலாயின. 'திருநெறியாவது சிவமாம் நெறி கூடும் ஒருநெறியே' என வேதாந்தம் கூறுதல், ''பிற எல்லாவற்றையும் விடுத்துச் சிவன் ஒருவனே*

**100.**ஆறங்க மாய்வரு மம்மறை ஓதியைக்
கூறங்க மாகக் குணம்பயில் வாரில்லை
வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்
பேறங்க மாகப் பெருக்குகின் றாரே. **5**

---

*தியானிக்கப்படத் தக்கவன்; அதர்வ சிகை முற்றிற்று" "ஸிவ ஏகா தியேயக சிவங்கர ஸர்வ மன்யத் பரித் யஜ்யேதி, மாப் தார்த்த வஸிஹா" என்று வேதாந்தம் (அதர்வசிகோப நிடத முடிவு) இறுதியிற் கூறி முடிதலால் அறியப்படும். சித்து அசித்து - அறிவு அறியாமை. வேதாந்தம் - வேதத்தின் முடிவு, உபநிடதம்.*

*இதனால் மேல் பாரிசேடத்தாற் பெறப்பட்டதனைப் பொருந்து மாற்றின் வைத்துணர்த்தி வலியுறுத்தல் செய்யப்பட்டது. இதனானே, சிவமாம் நெறியாகிய திருநெறியது இயல்பும் தொகுத்துணர்த்தப் பட்டவாறு அறிக.*

*திருஞானசம்பந்தரது, "அருநெறிய மறை" (தி.1 ப.1 பா.11) என்னும் திருப்பாடல் இத்திருமந்திரத்தை அடியொற்றிச் செல்வதாய் இருத்தலும், அவர் தமது பாடலை, 'திருநெறிய தமிழ்' என்று குறித்திருத்தலும் இங்கு நினைவுகூரத்தக்கன.*

**100. *தெளிவுரை :- ஆறு அங்கங்களை உடையதாய், மேற்றொட்டு எழுதாக் கிளவியாய் வருகின்ற அவ்வேதத்தைச் செய்த சிவபெரு மானை அதன் முடிவில் விளங்குபவனாக உணர்ந்து அவனது அருட் குணங்களைப் போற்றுபவர் உலகருள் ஒருவரும் இல்லை; அவர் பலரும் வேறு எவ்வெவற்றையோ தங்கள் கடனாக நினைந்து, அவற்றால் சில பேறுகளை உளவாக்கிக் கொண்டு அவற்றால் கிடைக்கின்ற பயன் மேலும் மேலும் வரும் பிறப்பேயாக அவற்றைப் பெருக்கி உழல்கின்றார்கள். சிவனைப் புறத்தே வைத்துப் பயன் கருதிக் கருமங்களைச் செய்யின் வினை பெருகும்.***

***குறிப்புரை :-*** *'இஃது அவர் வினையிருந்தவாறு' என்பது குறிப்பெச்சம். 'சிவஞானத்தாலன்றிப் பிறவி அறமாட்டாது' என்பது கருத்து.* ***'ஆறங்கம்' - 'சிட்சை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந்தோவிசிதி' என்பன. அவற்றுள் 'சிட்சை வேதத்தை ஒலிக்கும் முறையை நன்குணர்த்துவது; வியாகரணம், வேதத்தில் உள்ள தொடர் மொழிகளின் இயல்பை புலப்படுத்துவது. நிருத்தம், வேதத்தின் தனி மொழிகளின் இயல்பைக் கூறுவது. சோதிடம், வைதிக கருமங்கட் குரிய***

101. பாட்டும் ஒலியும் பரக்குங் கணிகையர்
ஆட்டும் அறாத அவனியின் மாட்டாதார்
வேட்டு விருப்பார் விரதமில் லாதவர்
ஈட்டும் இடஞ்சென்றிகலுற் றாரே. 6

---

*காலத்தின் இயல்பைத் தெரிவிப்பது. கற்பம், வைதிக கருமங் களை அனுட்டிக்கும் முறையைக் கூறுவது; சந்தோவிசிதி வேதத்தின் சந்தங்களை எழுத்தெண்ணிக்கை கூறி உணர்த்துவது. இவையின்றி வேதத்தாற் பயன்கொள்ளுதல் கூடாமையின், இவை வேதத்திற்கு அங்கமாயின. அங்கம் உடையதனை "அங்கம்" என்றார். "ஆறங்கமாய்" என்றும், "வரும்" என்றும் கூறியது, 'இவ்வாற்றால் வேதத்தை வருந்திக் கற்றும் சிலர் அதனால் பயன் பெறாதவராகின்றனர்' என்பது உணர்த்துதற்கு.*

*கூறு அங்கம் - சிறப்பாகச் சொல்லப்படும் உறுப்பு; தலை, "வேறு அங்கம்" என்றதில், "அங்கம்" என்பது, 'இன்றியமையாதது' என்னும் பொருட்டு.*

**101. *தெளிவுரை :-* *இயலும், இசையும், நாடகமும் ஆகிய கலை களின் பயனை அறியாவிடினும் அவற்றை இடையறாது நிகழ்த்தி நிற்கின்ற இவ்வுலகில், வேதத்தை இடையறாது ஓதுகின்ற வேதியரும் அத்தன்மைரேயாய்ப் பொருள் பெறவிரும்பி, பொருளாசை நிறைந்த நெறிமுறை இல்லாத அக்கலைவல்லுநர் பொருள் ஈட்டும் இடத்திற் சென்று அவரோடு மாறுகொண்டு நிற்கின்றனர். பாட்டும், இசையும், ஆட்டமும் இறைவனது உண்மையை உணர அமைக்கப் பெற்றவை. இகலுதலாவது இவ்வுண்மையை உணராது புறத்தோற்றத்தில் மயங்கிக் கெடுதல். பரத்தல் - அலைந்து திரிதல். இகலுதல் - மாறுபடுதல்.***

***குறிப்புரை :-* "பாட்டு" என்றது, இயற் பாட்டினையும், "ஒலி" என்றது பண்ணமைந்த இசைப் பாடல்களையுமாம், நெறிப்பட்ட வாழ்க்கையை 'விரதம்' என்றார் 'இயற்பாட்டு முதலிய கலைகள் யாவும் நற்பண்பினை வளர்த்தற்கு உரியனவாகவும், அவற்றில் வல்லுநராகியும் அவை வளரப் பெறாதார் பொருளீட்டுதல் ஒன்றே அவற்றாற்பெறும் பயனாகக்கொள்வர்' என்பார். "விருப்பு ஆர்விரதம் இல்லாதவர்" என்றும், 'அவர் பொருளீட்டும் இடம் அரசர் முதலிய செல்வம் மிக்கோர்களாதலின், அவ்விடத்தில் இவ்வேதியரும் சென்று, அவர்க்கு***

*முன்னே எமக்குத் தம்மின் என அவரின் முந்துகின்றதல்லது, தாம்வேதம் ஓதியதற்குப் பயன் பிறிதில்லை' என்பார், "அவர் ஈட்டு மிடஞ்சென்று இகலலுற்றாரே" என்றும் கூறினார். வேதியர் அவரின் முந்துதல், 'தக்கார்க்குக் கொடுத்தலாகிய இது முன்செய்யத்தக்கது' என அறிவுறுத்தி நிற்றல் 'வேதியர், பிறரெல்லாம் இலௌகிகர், யாம் வைதிகர் என்று சொல்லால் தம்மை உயர்த்திக் கொள்வதல்லது, செயலால் இலௌகிகரோடு ஒக்கின்றார்' என்பதும் கூறியவாறு. 'சிவபிரானை உணராதார்க்கு உலகப் பற்று நீங்காது' என்பதாம்.*

*இம்மூன்று திருமந்திரங்களாலும், 'வேதத்தின் பயன் சிவநெறியே நெறி என்று உணர்ந்து அந்நெறி நிற்றலே' என்பது உடம்பாட்டானும் எதிர்மறையானும் வலியுறுத்தப்பட்டது. "வேதப் பயனாம் சைவம்" (தி.12 சண்டேச்சுரர் 9) என்று அருளிய சேக்கிழார் திருமொழி இங்கு நினைக்கத்தக்கது. இப்பயன் எய்தாதாரை நோக்கியே,*

*"அசிக்க ஆரியங்கள் ஓதும்*
*ஆதரைப் பேத வாதப்*
*பிசுக்கரைக் காணாக் கண்; வாய்*
*பேசாத பேய்க ளோடே" (தி.9 திருவிசைப்பா 4, 5)*

*என்றாற்போலும் திருமொழிகள் எழுந்தன.*

*'வேதத்தைச் செய்தவன் இவன்' என்பது பற்றியும், அதனால், முடித்துக் கூறப்படும் நெறி இன்னது என்பது பற்றியும், நாயனார் இவ்வாறெல்லாம் வலியுறுத்து அருளிச் செய்தமையால், 'வேதம் அவரவர் தகுதிக்கேற்பப் பலவாற்றாற் பொருள் கொள்ள நிற்பது' என்பது பெறப்பட்டது. எனவே, நாயனார் பின்னர்க் கூறுமாறு போல, உண்மையை முதற்கண்ணே முற்ற உணர்த்தினால் உணர்தல் அரிதாதல் பற்றி அதனை முதற்கண் ஒருவாற்றான் உணர்த்தும் பொது நூலே 'வேதம்' என்பதாயிற்று.*

## 3. ஆகமச் சிறப்பு

102. அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சாம் முகத்தில் அரும்பொருள் கேட்டதே. 1

---

*இங்ஙனம் பொதுநூலை உணர்ந்த பின்னர்ப் பலதலைப்பட்ட உணர்வினான் மலைவுற்று, 'உண்மை யாது' என ஆராய்ந்துணரும் வேட்கையும், அறிவும் உடையராயினார்க்கு அதனை ஒருதலையாக உணர்த்தும் நூல் சிவாகமங்கள் ஆதலின், அவற்றது சிறப்பினை அடுத்துக் கூறுகின்றார்.*

*உண்மையை முற்ற உணரும் வேட்கையும், அறிவும் இல்லாது ஓரளவில் உணர விரும்புபவரே உலகர். அவ்வேட்கையும், அறிவும் சத்திநிபாதர்க்கே உளவாம். அதனால், உலகர் பொருட்டு 'வேதம்' என்னும் பொதுமுதல்நூலும், சத்திநிபாதர் பொருட்டு, 'ஆகமம்' என்னும் சிறப்பு முதல்நூலும் இறைவனாற் செய்தளிக்கப்பட்டன. எனவே, 'முதல்நூல் ஒன்றாகாது, இரண்டாயினவாறு என்னை' என ஐயுறவேண்டாமை அறிக.*

*வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்;*
*வேறுமுள நூல்இவற்றின் விரிந்த நூல்கள்;*
*ஆதிநூல், அனாதிஅம லன்தருநூல் இரண்டும்;*
*ஆரணநூல் பொது; சைவம் அருஞ்சிறப்பு நூலாம்;*
*நீதியினால் உலகர்க்கும், சத்திநிபா தர்க்கும்*
*நிகழ்த்தியது; நீண்மறையின் ஒழிபொருள் வேதாந்தத்*
*தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம்; பிறநூல்*
*திகழ்பூர்வம்; சிவாகமங்கள் சித்தாந்த மாகும்.*

*என இக்கருத்தைச் சிவஞான சித்தி சூ. 8.15 இனிது விளக்கினமை காண்க.*

*சேக்கிழாரும் இவ்வாறே ஞானசம்பந்தர் புராணத்து முதற் கண், "வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறை விளங்க" (தி.12 திருஞான. பு.1) எனப் பொதுப்பட இரண்டாகக் கூறிய நெறியது இயல்பினைப் பின்னர்,*

*"உலகியல் வேதநூ லொழுக்கம் என்பதும்*

*நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்”*

*- தி.12 திருஞான. பு. 820*

*என இனிது விளங்கக் கூறி, ‘இதுவே, சைவ சமயத்தின் உண்மையைத் திருப்பாசுர வாயிலாகப் பாண்டியனுக்கு அறிவுறுத்த, பிள்ளை யாருக்கும் கருத்து’ என்று அருளிச் செய்தார். அது “வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்” (தி.3 ப.54 பா.1) என்று முதலில் அந்தணர் பலரையும், வானவர் பலரையும் பொதுப்படக் குறித்துப் பின்னர், “எல்லாம் அரன் நாமமே சூழ்க” எனச் சிவநெறியையே நிலை நிறுத்தினமையால் விளங்குதல் காண்க.*

**102. தெளிவுரை :-** *கரிய நிறமுடைய உமாதேவியை இடப்பாகத்தில் உடைய சிவபெருமான் அருளிச்செய்த ஆகமங்கள் இருபத்தெட்டு உள்ளன. அவை, அறுபத்தாறுபேர் அப் பெருமானை வணங்கி அவனது மேன்முகமாகிய ஈசான முகத்தில் அரிய கருத்துக்களைக் கேட்டுணர்ந்தனவாம்.*

**குறிப்புரை :-** *அஞ்சனம் - மை, கருமை. அஞ்சொடிருபத்து மூன்று - இருபத்தெட்டு. அஞ்சாம் முகம் - ஐந்து முகம். அவ்வாகமங்கள், ‘காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீத்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிசுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம்’ என்பன.*

*சிவபெருமானுக்கு நாற்றிசை நோக்கி நான்கு முகங்களும், உச்சியில் வான்நோக்கி ஒருமுகமாக உள்ள ஐந்து முகங்களையும், கீழிருந்து முறையே, ‘சத்தியோசாதம் (மேற்கு), வாமதேவம் (வடக்கு), அகோரம் (தெற்கு), தற்புருடம் (கிழக்கு), ஈசானம் (உச்சி)’ என எண்ண, ஐந்தாவதாக வருவது ஈசான முகம். ‘சிவபெருமான் மேற்சொல்லிய இருக்கு முதலிய வேதங்கள் நான்கனையும் கீழுள்ள தற்புருடம் முதலிய நான்கு முகங்களானும், ஆகமங்களை மேலே உள்ள ஈசான முகத்தாலும் அருளிச்செய்தான்’ என்பவாகலின், ஆகமங்களை, “அஞ்சாம் முகத்தில் அரும்பொருள் கேட்டது” என்றார்.*

*அஞ்சாம் முகம் - ஐந்து என்னும் எண்ணின்கண் நிற்கும் முகம். இனி, ‘சத்தியோசாதம் முதல் கீழே உள்ள நான்கு முகங்களாலும் முகத்திற்கு ஐவைந்தாகக் காமிகம் முதல் முகவிம்பம் ஈறாக உள்ள இருபது ஆகமங்களையும், மேலே உள்ள ஈசானமாகிய ஒருமுகத்தால்*

எஞ்சிய எட்டு ஆகமங்களும் அருளிச்செய்தான்' எனக் கூறுதலும் உண்டு. ஆதலின், அப்பொருளும் தோன்றுமாறு "அஞ்சாம் முகத்தில்" என்றார். இப்பொருட்கு, "அஞ்சாம் முகம்" என்றதை, "அஞ்சாகி நின்கின்ற முகம்" என்றவாறாக உரைக்க. பின்னர்க் கூறிய முறைமைக்கு, 'மேல்முகமாகிய ஈசானம் ஒன்றே சத்தியோசாதம் முதலிய ஐந்தனையும் உடையதாய் இருக்கும்; அவற்றின்கண்ணே காமிகம் முதலிய ஆகமங்கள் ஐவைந்தாகவும், எட்டாகவும் தோன்றின' என, இரண்டு கருத்தும் தம்முள் முரணாதவாறு விளக்கம் தருபவர் உளர்.

இனிச் சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் முகங்களால் முறையே, 'கௌசிகர், காசிபர், பாரத்து வாசர், கௌதமர், அகத்தியர்' என்னும் முனிவர்கட்கு மேற்சொல்லிய ஆகமங்கள் உணர்த்தப்பட்டன என்பது, 'நிலவுலகில் மகேந்திர மலையில்' என்ற தி. 8 திருவாசகக் கீர்த்தித் திருவகவலால் (அடி.19 20) அறியப்படுவதாம்.

இனி, ஆகமங்களைக் கேட்ட அறுபத்தறுவருள், 'எல்லாரும் எல்லா ஆகமங்களும் கேட்டனர்' என்பதில்லை; 'காமிகம் முதல் சுப்பிரபேதம் ஈறாக உள்ள பத்தினையும் ஒன்றை ஒருவராகப் பதின்மர் சிவபெருமானிடங் கேட்க, அவருள் ஒருவரிடத்து ஒருவராக ஓரா கமத்தை மற்றும் இருவர் கேட்டனர்' என்பதே வரலாறு. ஆகவே, காமிகம் முதலிய பத்தினையும் கேட்டவர் முப்பதின்மராகின்றனர்.

அவருள் காமிக முதலிய பத்தினையும் சிவபெருமானிடம் நேரே கேட்ட பதின்மராவார், 'பிரணவர், சுதாக்கியர், சுதீத்தர், காரணர், சுசிவர், ஈசர், சூக்குமர், காலர்,, அம்பு, தேசேசர்' என்போர்.

இனி இப்பதின்மருள் ஒருவரிடத்தினின்று இவ்விருவராக வழிவழிக் கேட்ட இருபதின்மராவார். 'திரிகலர், அரர் - பசுமர், விபு - கோபதி, அம்பிகை - சர்வருத்திரர், மிரசேசர் - சிவர், அச்சுதர் - திரிமூர்த்தி, உதாசனர் - வைச்சிரவணர், பிரபஞ்சனர் - பீமர், தருமர்- உக்கிரர், ஆதித்தியர் - விக்னேசர், சசி' என்போர்.

இம்முப்பதின்மரும், 'சிவர்' எனப்படுதலால், இவர்களால் கேட்கப்பட்ட காமிகம் முதலிய பத்து ஆகமங்களும் 'சிவபேதம்' எனப்படுகின்றன.

இனி, எஞ்சிய விசயம் முதல் வாதுளம் ஈறாக உள்ள பதினெட்டு ஆகமங்களுள் ஒவ்வொன்றை ஒவ்வொருவர் சிவபெருமானிடம் நேரே கேட்க, அவரிடம் அவற்றை மற்றும் ஒவ்வொருவராகக் கேட்டனர்.

*ஆகவே எஞ்சிய பதினெட்டு ஆகமங்களைக் கேட்டோர் முப்பத்தறுவர் ஆகின்றனர். அவர் பெயர் முறையே வருமாறு;*

*அநாதிருத்திரர் (அநாதிருத்திரரை, 'மகாருத்திரர்' என்றும் சொல்வது உண்டு, பரமேச்சுரர் - தசாரணர், பார்வதி - நிதனேசர், பதுமபூ - வியோமர், உதாசனர் - தேசர், பிரசாபதி - பிரமேசர், நந்திகேசர் - சிவர், மகாதேவர் - சர்வான்மர், வீரபத்திரர் - அநந்தர், பிருகற்பதி - பிரசாந்தர், ததீசி - சூலி, கவசர் - ஆலயேசர், இலளிதர் - பிந்து, சண்டேசர் - சிவநிட்டர், அசம்பாதர் - சோமதேவர், நிருசிங்கர் - சீதேவி, உசனர் - தேவவிடி, சம்வர்த்தர் - சிவர், மகா காளர், இவரெல்லாம் 'உருத்திரர்' எனப்படுதலின், இப்பதினெட்டு ஆகமங்களும், 'உருத்திரபேதம்' எனப்படுகின்றன.*

*இவர்களுள் ஒருவர் பெயரையே பிறரும் உடையவராய் இருத்தல் பற்றியும், ஆகமங் கேட்டவரல்லாத பிறரது பெயரும் இவர்களுட் சிலர்க்குக் காணப்படுதல் பற்றியும் நாம் மலைவெய்துதல் கூடாது. இவரெல்லாரும் சுத்தமாயா புவனங்களுள் சதாசிவ புவனத்தில் சதாசிவ மூர்த்திபால் ஆகமங்களை நேராகவும், வழிமுறையாலும் கேட்டவர் என்க.*

*ஐந்து முகம் உடைய மூர்த்தி சதாசிவ மூர்த்தியே. அதனால், "அஞ்சாம் முகத்தில் அரும்பொருள் கேட்டது" என்றது, இவரிடம் கேட்டதையே என்பதாதல் அறிக. இவரது நிலை மேலே விளக்கப்பட்டது. (தி.10 பா.89-90) "அஞ்சாம் முகத்தில் அரும் பொருள் கேட்டது" என்பதற்கு ஈடாக, "எஞ்சலில் விஞ்ஞகர் இருபத்தெண்மரும்" என்று ஓதுவது, தாமே தமக்கு வேண்டியவாறு கட்டிக் கொண்ட பாடம்.*

*''அரும்பொருள்'' என்றது, மெய்யுணர்வினை. எனவே, 'ஆகமங்கள் மெய்ந்நெறியை உணர்த்தும் சிறப்புநூல்' என்பது கூறியவாறாயிற்று. 'பாகத்தன் ஆகமம்' என்பது, செய்யுட் கிழமைக்கண் வந்த ஆறாவதன் தொகை.*

**103.** அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூறாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே. 2

---

**103.** *தெளிவுரை :-* *சிவபெருமான் உயிர்கள்மேல் வைத்த அருள் காரணமாக அருளிச்செய்த ஆகமங்களை எண்ணாற்கூறின், 'இருபத் தெட்டு' என்னும் அளவில் நில்லாமல், அளவின்றியுள்ளன. அவைகளால் மேற்கூறிய அறுபத்தறுவரும், பிறரும் சிவபெருமானது மேன்மையைத் தத்தமக்கியைந்தவாற்றால் விளங்க உரைத்தார்கள். அவ்வாறு உரைக்கப்பட்ட அளவிலே நானும் கேட்டுச் சிந்தித்துத் துதிக்கத் தொடங்கினேன்.*

*குறிப்புரை :-* *"கோடி நூறாயிரம்" என்றது அளவின்மை கூறிய வாறு. அற்றாயினும் முற்கூறிய இயைபு தோன்றுதற் பொருட்டு, "இருபத்தெண்கோடி நூறாயிரம்" என்றார். விண்ணவர் என்றது மக்களினும் மேம்பட்ட பலரையும், 'அவர் இவர்' என்பது பின்னர் விளக்கப்படும். 'வேதம் நான்கு' எனவும், 'ஆகமம் இருபத்தெட்டு' எனவும் வரையறை கூறப்படினும், அவ்வப்பொழுது இறைவன் அவரவருக்கு உணர்த்துமாற்றால் உண்மையில் அவை அளவில்லனவே என்பது உணர்த்துதற்கு இவ்வாறு கூறினார். "வேதங்கள் அநந்தம்" என்ற வாக்கியமும் உண்டு. இது பற்றியே, "ஒருமுகம் எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித் - திங்கள் போலத் திசைவிளக்கும்மே" என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதிக்கு நச்சினார்க்கினியர் உரை கூறுமாறும் அறிக.*

*இனி 'இஃது ஆகமங்களின் கிரந்தங்கள் எண்ணிலவாதலையும், உபாகமங்கள் இருநூற்றேழாதலையும் கூறியது' என்றலுமாம். சேக்கிழாரும் "எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்" என்றமை அறியத்தக்கது. (தி.12 திருக்குறிப்புத் தொண்டர் 51) இதனால், 'ஆகமங்கள், அறுபத்தறுவரேயன்றிப் பின்னும் பலரால் கேட்கப்பட்டு வந்து நிலவுலகில் விளங்கின' என்பது கூறப்பட்டது.*

*ஆகமங்களின் கிரந்த அளவு மரபாகச் சொல்லப்பட்டுவரும் முறை வருமாறு:-*

1. *காமிகத்திற்கு கிரந்தம் பரார்த்தம் (ஆயிரங் கோடா கோடி)*
2. *யோகஜத்திற்கு கிரந்தம் ஒரு லட்சம்*

| | | | |
|---|---|---|---|
| 3. | சிந்தியத்திற்கு | கிரந்தம் | ஒரு லட்சம் |
| 4. | காரணத்திற்கு | கிரந்தம் | ஒரு கோடி |
| 5. | அஜிதத்திற்கு | கிரந்தம் | நியுதம் (பத்து நூறாயிரம்) |
| 6. | தீப்தத்திற்கு | கிரந்தம் | நியுதம் |
| 7. | சூட்சுமத்திற்கு | கிரந்தம் | பத்மம் (கோடானுகோடி) |
| 8. | சகஸ்ரத்திற்கு | கிரந்தம் | சங்கம் (இலட்சங்கோடி) |
| 9. | அம்சுமானுக்கு | கிரந்தம் | ஐந்து லட்சம் |
| 10. | சுப்பிரபேதத்திற்கு | கிரந்தம் | மூன்று கோடி |
| 11. | விஜயத்திற்கு | கிரந்தம் | மூன்று கோடி |
| 12. | நிஸ்வாசத்திற்கு | கிரந்தம் | ஒரு கோடி |
| 13. | சுவாயம்புவத்திற்கு | கிரந்தம் | ஒன்றரைக் கோடி |
| 14. | ஆக்னேயத்திற்கு | கிரந்தம் | முப்பதினாயிரம் |
| 15. | வீரத்திற்கு | கிரந்தம் | நியுதம் |
| 16. | ரௌரவத்திற்கு | கிரந்தம் | எட்டு அற்புதம் |
| 17. | மகுடத்திற்கு | கிரந்தம் | ஒரு லட்சம் |
| 18. | விமலத்திற்கு | கிரந்தம் | மூன்று லட்சம் |
| 19. | சந்திர ஞானத்திற்கு | கிரந்தம் | மூன்று கோடி |
| 20. | முகவிம்பத்திற்கு | கிரந்தம் | ஒரு லட்சம் |
| 21. | புரோத்கீதத்திற்கு | கிரந்தம் | மூன்று லட்சம் |
| 22. | லளிதத்திற்கு | கிரந்தம் | எண்ணாயிரம் |
| 23. | சித்தத்திற்கு | கிரந்தம் | ஒன்றரைக் கோடி |
| 24. | சந்தானத்திற்கு | கிரந்தம் | ஆறாயிரம் |
| 25. | சர்வோக்கத்திற்கு | கிரந்தம் | இரண்டு லட்சம் |
| 26. | பாரமேசுரத்திற்கு | கிரந்தம் | பன்னிரண்டு லட்சம் |
| 27. | கிரணத்திற்கு | கிரந்தம் | ஐந்து கோடி |
| 28. | வாதுளத்திற்கு | கிரந்தம் | ஒரு லட்சம் |

இருபத்தெட்டு மூலாகமங்கட்கு உபாகமங்களின் அளவு மரபாகச் சொல்லப்பட்டு வரும் முறை வருமாறு:

1. காமிகத்திற்குக் உபாகமம் 3:- வக்தாரம், பைர வோத்தரம், நாரசிம்மம் (மிருகேந்திரம்)

2. யோகஜத்திற்கு உபாகமம் 5:- தாரம், வீணாசிகோத்ரம், ஆத்மயோகம், ஸந்தம், ஸந்ததி

3. சிந்தியத்திற்கு உபாகமம் 6:- ஸுசிந்தியம், ஸௌபகம், வாமம், பாபநாசம், பரோத்பவம், அம்ருதம்

4. காரணத்திற்கு உபாகமம் 7:- காரணம், வித்வேஷம், பாவனம், மாரணம், தௌர்கம், மாஹேந்திரம், பீனஸம்ஹிதை

5. அஜிதத்திற்கு உபாகமம் 4:- பிரபூதம், பரோத்பூதம், பார்வதீஸம்ஹிதை, பத்மஸம்ஹிதை

6. தீப்தத்திற்கு உபாகமம் 9:- அமேயம், சப்தம், ஆச்சாத்தியம், அஸங்கியம், அமிருதோஜஸம், ஆனந்தம், மாதவோத்பூதம், அற்புதம், அக்ஷயம்

7. சூட்சுமத்திற்கு உபாகமம் 1:- சூட்சுமம்

8. சகஸ்ரத்திற்கு உபாகமம் 10:- அதீதம், மங்கலம், சுத்தம், அப்ரமேயம், ஜாதிபாக்கு, பிரபுத்தம், விபுதம், அஸ்தம், அலங்காரம், ஸௌபோதம்

9. அம்சுமானுக்கு உபாகமம் 12:- வித்தியா புராணம், தந்திரம், வாஸவம், நீலலோகிதம், பிரகரணம், பூததந்திரம், ஆத்மாலங்காரம், காசியபம், கௌதமம், ஐந்திரம், பிராமம், வாசிட்டம், ஈசானோத்திரம்.

10. சுப்பிரபேதத்திற்கு உபாகமம் 1:- சுப்பிரபேதம்

11. விஜயத்திற்கு உபாகமம் 8:- உற்பவம், சௌமியம், அகோரம், மிருத்யுநாசனம், கௌபேரம், மகோகோரம், விமலம், விசயம்.

12. நிஸ்வாசத்திற்கு உபாகமம் 8:- நிசுவாசம், நிசுவாசோத்தரம், நிசுவாச சுகோதயம், நிசுவாச நயனம், நிசுவாச காரிகை, நிசுவாச கோரம், நிசுவாச குய்யம், மந்திர நிசுவாசம்

13. *சுவாயம்புவத்திற்கு உபாகமம் 3:- பிரஜாபதி மதம், பதுமம், நளினோற்பவம்*

14. *ஆக்னேயத்திற்கு உபாகமம் 1:- ஆக்கினேயம்*

15. *வீரத்திற்கு உபாகமம் 13:- பிரஸ்தரம், புல்லம், அமலம், பிரபோதகம், அமோகம், மோகசமயம், சகடம், சகடாதிகம், பத்திரம், விலேகனம், வீரம், அலம், போதகம்*

16. *இரௌரவத்திற்கு உபாகமம் 6:- காலாக்கியம், காலதகனம், இரௌரவம், இரௌரவோத்தரம், மகாகாலமதம், ஐந்திரம்*

17. *மகுடத்திற்கு உபாகமம் 2:- மகுடம், மகுடோத்தரம்*

18. *விமலத்திற்கு உபாகமம் 16:- அனந்தம், போகம், ஆக்கிராந்தம், இருடபிங்கம், இருடோதரம், இருடோற்பூதம், இரௌத்திரம், சூதந்தம், தாரணம் ஆரேவதம், அதிக்கிராந்தம், அட்டகாசம், பத்திரவேதம், அர்ச்சிதம், அலங்கிருதம், விமலம்*

19. *சந்திர ஞானத்திற்கு உபாகமம் 14:- ஸ்திரம், ஸ்தாணு, மகாந்தம், வாருணம், நந்திகேசுரம், ஏகபாதபுராணம், சாங்கரம், நீலருத்திரகம, சிவபத்திரம், கற்பபேதம், சீமுகம், சிவசாசனம், சிவசேகரம், தேவீமதம்*

20. *முக விம்பத்திற்கு உபாகமம் 15:- சதுமுகம், சமத்தோபம், பிரதிபிம்பம், அயோகஜம், ஆன்மாலங்காரம், வாயவியம், பட்டசேகரம், தௌடிகம், துடிநீரகம், குட்டிமம், துலாயோகம், காலாத்தியயம், மகாசௌரம், நைருதம், மகாவித்தை.*

21. *புரோத்கீதத்திற்கு உபாகமம் 16:- வாராகம், கவசம், பாசபந்தம், பிங்கலாமதம், அங்குசம், தண்டதரம், தனுதரம், சிவஞானம், விஞ்ஞானம், சீகாலஞானம், ஆயுர்வேதம், தனுர்வேதம், சர்பதம், ஷ்டரவிபேதனம், கீதகம், பரதம், ஆதோத்தியம்.*

22. இலளிதத்திற்கு உபாகமம் 3:- இலளிதம், இலளிதோத்தரம், கௌமாரம்

23. சித்தத்திற்கு உபாகமம் 4:- சாரோத்தரம், ஔசனசம், சாலாபேதம், சசிமண்டலம்.

24. சந்தானத்திற்கு உபாகமம் 7:- இலிங்காதியட்சம், சுராத்தியட்சம், அமரேசுரம், சங்கரம், அசங்கியம், அனிலம், துவந்தம்.

25. சர்வோக்கத்திற்கு உபாகமம் 5:- சிவ தருமோத்தரம், வாயுப்புரோத்தம். திவ்வியப்புரோத்தம், ஈசானம், சருவோற்கீதம்.

26. பாரமேசுரத்திற்கு உபாகமம் 7:- மாதங்கம், யட்சணிபதுமம், பாரமேசுரம், புட்கரம், (பௌட்கரம்) சுப்பிரயோகம், அமிசம், சாமானியம்.

27. கிரணத்திற்கு உபாகமம் 9:- காருடம், நைருதம், நீலம், இரூட்சம், பானுகம், தேனுகம், காலாக்கியம், பிரபுத்தம், புத்தம்.

28. வாதுளத்திற்கு உபாகமம் 12:- வாதுளம், வாதுளோத்தரம், காலஞானம், பிரரோகிதம், சருவம், தருமாத்மகம், நித்தியம், சிரேட்டம், சுத்தம், மகானனம், விசுவம், விசுவான்மகம்.

ஆக உபாகமங்கள் இருநூற்றேழு - 207

காமிகம் முதலிய இருபத்தெட்டு மூலாகமங்கள் சிவபெருமானுக்குப் பாதம் முதலிய உறுப்புகளாகவும், ஆடை, ஆபரணம் முதலிய பிற பொருள்களாகவும் அமைந்த முறைமை ஆகமங்களுட் சொல்லப்படும்.

எண்ணற்ற கிரந்தங்களாயும், உபாகமங்களாயும் விரிந்த ஆகமங்களைப் பின்வந்த ஆசிரியர்கள் பலவாறு சுருக்கிச் சொன்னார்கள். அச்சுருக்கங்களிற் சிலவே இப்பொழுது கிடைக்கும் ஆகமங்கள்.

104. அண்ணல் அருளால் அருளுந்திவ் யாகமம்
விண்ணில் அமரர் தமக்கும் விளங்கரி
தெண்ணில் எழுபது கோடிநூ றாயிரம்
எண்ணிலும் நீர்மேல் எழுத்தது ஆகுமே. 3

105. பரனாய்ப் பராபரங் காட்டி உலகில்
தரனாய்ச் சிவதன்மந் தானேசொல் காலத்
தரனாய் அமரர்கள் அர்ச்சிக்கும் நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கிநின் றானே. 4

---

104. ***தெளிவுரை :-*** *சிவபெருமான் தனது திருவருள் காரணமாக அருளிச்செய்த மேலான ஆகமங்கள் வானத்தில் உள்ள தேவர்களாலும் அறிதற்கரிய பொருள்களை உடையன. அதனால், அவை அளவிறந்து கிடப்பினும், உயிர்கட்குப் பயன்படுதல் அரிது. எழுத்துக்களை எண்ணில் வெள்ளம் என்ற எண்ணையும் விஞ்சும் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *'அஃது அறிந்து சிவபெருமான் அவற்றைத் தானே நேராகவும், பிறர் வாயிலாகவும் பலர்க்கு விளக்கியருளினான்' என்பது குறிப்பெச்சம். "நீர்மேல் எழுத்து" பயன்கொள்ளுதல் அரிதாதற்கு உவமை. 'அங்ஙனம் விளக்கம் பெற்றோர் இவர்' என்பதனை வருகின்ற திருமந்திரங்களால் கூறுவார். எழுத்தது எண்ணிலும் நீர் மேல் ஆகும் எனக்கூட்டுக. நீர் - வெள்ளம். ஈண்டுப்பல என்னும் பொருட்டாய் நின்றது.*

105. ***தெளிவுரை :-*** *சிவலோகத்தில் மேலான சதாசிவ மூர்த்தியாய் இருந்து ஆகமங்களைப் பிரணவர் முதலியோர்க்கு உணர்த்தியருளிய சிவபெருமான், நிலவுலகிற்கு ஏற்ப அவற்றை உணர்த்தியருளும் பொழுது சீகண்ட பரமசிவனாய் இருந்து உணர்த்த, தேவர்களால் வணங்கப்படுகின்ற நந்தி பெருமான் மெய்யுணர்வுடையராய் அவை இனிது விளக்கப்பெற்றார்.*

***குறிப்புரை :-*** *இஃது ஆகமங்கள் நிலவுலகிற்கு வந்த வரலாற்றைத் தொகுத்து கூறியது. பராபரம் - உயர்ந்ததும் தாழ்ந்தனவும் ஆகிய பொருள்; அவை பதியும், பசு பாசங்களுமாம். எனவே, 'முப்பொருளின் இயல்பு' என்றவாறாம். தரனாய் - ஏற்ற பெற்றியில் நிற்பவனாய். இங்ஙனங் கூறவே, 'சிவபெருமான் ஆகமங்களை முதற்கண் அனந்த தேவர் வாயிலாகச் சீகண்ட உருத்திரர்க்கு உணர்த்தி, பின்பு அவர் வாயிலாகத் தேவர், முனிவர், கணங்கட்கு உணர்த்தினான் என்பது கொள்க. வேதங்களை அனந்ததேவர் வாயிலாகப் பிரமதேவர்க்கு*

உணர்த்தினான் என்ப. அரன் - உருத்திரன்; அஃது ஏற்புழிக் கோடலால், சீகண்ட உருத்திரரைக் குறித்தது. பரமசிவன் சீகண்ட உருத்திரராய் நிற்றல், அவரே தானாக அவருள் நிற்றல், சிவ தன்மம் - சிவபுண்ணியம். 'அவை சரியையும், கிரியையும்' என்பது "நல்லசிவ தன்மத்தால் நல்லசிவயோகத்தால் நல்லசிவ ஞானத்தால்'' (திருக்களிற்றுப்படியார். 15) என்பவற்றால் அறிக. சிவதன்மங் கூறவே, இனம் பற்றிச் சிவயோகமும் கொள்ளப்படும். "பராபரம், சிவதன்மம்" என்றவை, ஏனையிடங்களிலும், சென்று இயையும். எனவே, சிவாகமங்கள் 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்னும் நாற்பாதங்களாய் உள்ளன என்பது உணர்த்தப்பட்டதாம்.

சிவாகமங்களில்,

சிவபெருமானது இலிங்கத் திருமேனி, உமா மகேசுர மூர்த்தம் முதலிய உருவத் திருமேனி, நந்திதேவர் முதலிய பரிவார மூர்த்தங்கள் முதலியவற்றின் அமைப்பு முறைகளையும், திருக்கோயில் அமைப்பு, புட்ப விதி, பிராயச்சித்த விதி, பவித்திர விதி, செப மாலை யோகபட்டம் முதலியவற்றின் அமைப்பு, அந்தியேட்டி விதி, சிரார்த்த விதி முதலியவற்றையும் கூறும் பகுதிகள் சரியாபாதம் எனவும்,

மந்திரங்களின் உச்சாரணமுறை, குண்டமண்டல வேதிகை முதலியவற்றின் அமைப்புக்கள், சந்தியாவந்தனம், பூசை, செபம், ஓமம் முதலியவற்றின் விதிகள், சமய விசேட நிருவாண தீட்சைகள், ஆசாரியாபிடேகம் என்பவற்றின் விதிகள், ஆன்மார்த்தமும், பரார்த்தமும் ஆக அமைந்த நித்திய நைமித்திய பூசை முறைகள் விழா முறைகள் போல்வனவற்றைக் கூறும் பகுதிகள் கிரியா பாதம் எனவும்,

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு நிலைகளின் முறைமையும், மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களின் இயல்பும், ஞானபாதத்திற் சொல்லப்படும் பொருள்களைப் பாவனையாற்காணும் முறைகளும் போல்வனவற்றைக் கூறும் பகுதிகள் யோக பாதம் எனவும்,

'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களின் இயல்பு, உலகத்தின் தோற்ற ஒடுக்கங்கள், அண்டகோடிகளின் இயல்புகள், நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பின் எண்பத்து நான்கு நூறாயிர யோனிபேதத்தின் இயல்புகள், வினைவகை வினைப்பயன் வகைகள், ஞானத்தின் படிநிலைகள், அவற்றின் பயன்கள் முதலிய வற்றைக் கூறும் பகுதிகள் ஞானபாதம் எனவும் உணர்க.

**106.** சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
நவஆ கமம்எங்கள் நந்திபெற் றானே. **5**

---

*சிவாகமங்களைச் சிவபெருமான் சொல்லியருளினமையைத் திருஞானசம்பந்தரும்,*

*'திறங்கொண்ட அடியார்மேல் தீவினைநோய் வாராமே*
*அறங்கொண்டு சிவதன்மம் உரைத்தபிரான்'*

*- தி. 2 ப.43 பா.6*

*எனக் குறிப்பிட்டருளினமை காண்க. இதனுள், "அறங்கொண்டு" என்றது, "சார்ந்தாரைக் காத்தல் வேண்டுவதாகிய கடன் பற்றி" எனப் பொருள் தரும். உரன் - உரம் உடையவன். உரம் - மெய்யுணர்வு, "உரனென்னுந் தோட்டியான்" (குறள். 24) என்பதிற்போல, ஓங்கி - ஓங்கப்பெற்று. ஓங்குதல் - விளங்குதல்.*

**106. *தெளிவுரை :-* *தடத்த நிலைகளுள் மேலானதாகிய சிவம் நாத தத்துவத்தில் நின்று, தன்னிடத்தினின்று வெளிப்பட்டு விந்து தத்துவத்தில் நிற்கும் சத்திக்கு உணர்த்த, அச்சத்தி தன்னினின்றும் தோன்றிய சதாசிவர்க்கு உணர்த்த, அவர் தம்மிடத்தினின்றுந் தோன்றிய சம்புபட்ச மகேசுரரோடு ஒத்த அணுபட்ச மகேசுரராகிய மந்திர மகேசுரர்க்கு உணர்த்த, அவர் உருத்திரதேவர்க்கும், அவர் தவத் திருமாலுக்கும், அவர் பிரமேசருக்கும் உணர்த்த இவ்வாறு சுத்தமாயையில் உள்ள தலைவர்கள் ஒருவரிடமிருந்து ஒருவராகப் பெற்றுப் பயனடைந்த ஆகமங்களில் சிறப்பாக ஒன்பதை எங்கள் ஆசிரியராகிய நந்தி பெருமான் மேற்குறித்தவாறு சீகண்ட பரமசிவன்பால் பெற்றார்.***

***குறிப்புரை :-*** *"உவமா" என்பது, 'ஒப்பு' என்னும் பொருளதாகிய ஆரியச்சொல். 'உருத்திரன், திருமால், பிரமன்' என்போர் சுத்த மாயையில் உள்ளோர் என்பது அறிவித்தற்கு, 'உருத்திர தேவர்' என்றும், ''தவமால்'' என்றும், ''பிரமேசர்'' என்றுங் கூறினார். மால் - பெருமையுடையோன். தவமால் - மிக்க பெருமையுடையோன். முதற்கண் கூறியவாறு அஞ்சாம் முகத்தில் அரும்பொருள் கேட்ட அறுபத்தறுவரும் சதாசிவ புவனத்தில் வாழும் அணுசதாசிவராகலின், இது அவ்வாகமங்கள் கீழ்க்கீழ்ப் புவனங்களில் வந்த முறைமை*

கூறியவாறு. மந்திர மகேசுரர் ஈசுர தத்துவத்திலும் உருத்திரர் முதலிய மூவரும் சுத்த வித்தியாதத்துவத்திலும் வாழ்வார் என்று அறிக. உருத்திரதேவர்க்கு மந்திர மகேசுரரால் உணர்த்தப்பட்டது. எனவே, 'சுத்த வித்தையில் அவரோடு ஒப்ப நிற்கும் அனந்த தேவர்க்கும் அவர் வழியாகவே உணர்த்தப்பட்டது' என்பதும், அங்ஙனமாயினும் அனந்ததேவர் சதாசிவரிடமிருந்தே ஆகமங்களைப் பெற்றார் எனச் சில ஆகமங்களில் கூறப்படுதல் முகமனுரை என்பதும் பெறப்படும்.

நந்தி பெருமான் ஆகமங்களில் ஒன்பதைச் சிறப்பாகப் பெற்றமையாவது, ஆசிரிய வழிமுறையால் (குருபரம்பரையால்) சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோராகிய மக்கட்கு விண்ணோர் தமக்கும் விளங்கரிய எல்லா ஆகமங்களின் பொருளையும் எளிமை யாகத் தொகுத்துணர்த்தற் பொருட்டாம். எனவே, அவ்வொன்பது ஆகமங்களுள் ஏனை எல்லா ஆகமப் பொருளும் அடங்கி நிற்றல் பெற்றாம். "ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு" (தி.10 ஐந்தாம் தந்திரம்) என்னும் திருமந்திரத்தால் இக்கருத்து வலியுறுத்தப் படுகின்றது. 'அவ்வாகமங்கள் இவை' என்பதனை அடுத்துவரும் திருமந்திரத்தால் உணர்த்துவார். 'அவற்றை நந்தி பெருமானிடம் கேட்டு உலகிற்கு உணர்த்தினோர் இந்நாயனாரை உள்ளிட்ட எண்மர்' என்பதையும், 'இவர் வழியாக மற்றும் பலர் அவற்றை உலகிற் பரப்பினர்' என்பதையும் முன்னே கூறினார் (தி.10 எட்டாம் தந்திரம்) இன்னும் சனற்குமார முனிவர் கேட்டுச் சத்திய ஞான தரிசனிகள் நிலவுலகில் வழியாகப் பரஞ்சோதிமாமுனிவர்க்கும், அவர் வழியாக திருவெண்ணெய்நல்லூரில் 'சுவேதவனப் பெருமாள்' என்னும் பிள்ளைத் திருநாமத்துடன் எழுந்தருளியிருந்த மெய்கண்ட தேவர்க்கும் உணர்த்தறப்பட்டு, அவர் வழியாகப் பலவிடத்தும் ஆகமப் பொருள் விளங்கிவருதல் அம் மரபினராகிய உமாபதிதேவ நாயனார் அருளிச் செய்த சிவப்பிரகாச நூலாலும், பிறவற்றாலும் நன்கறியப்பட்டது.

'சிவபெருமான் ஆகமங்களைப் பிரதி சங்கிதை முறையால் (ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்றாக வகுத்துக் கூறும் முறையால்) பிரணவர் முதலிய இருபத்தெண்மர்க்கும் நேரே உணர்த்தி, மகௌக முறையால் (எல்லாவற்றையும் ஒருவர்க்கு ஒருங்கு தொகுத்துக் கூறும் முறையால்), அனந்த தேவர் வாயிலாகச் சீகண்டருக்கு உணர்த்த, அவர் நந்திபெருமானுக்கும் அவ்வாறே அனைத்தையும் உணர்த்தினார்' என ஆகமங்களில் கூறப்படுதலால், "நவ ஆகமம் எங்கள் நந்திபெற்றானே"

**107.** பெற்றநல் ஆகமம் காரணம் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரம்
துற்றநற் சுப்பிரம் சொல்லும் மகுடமே. **6**

---

*என இங்கு நாயனார் அருளிச்செய்தற்கு, 'குருபரம்பரையால் நிலவுலகிற்குத் தருமாறு உணர்த்தப்பட்டவை ஒன்பது' என்பதே கருத்தாதல் அறிக.*

*ஆகமங்களைச் சிவபெருமானிடம் நேரே கேட்டவர் மந்திர மகேசுரர் ஆதலின் அது 'அதிபர சம்பந்தம்' என்றும், மந்திர மகேசுரரிடம் அனந்ததேவர் கேட்டது 'பர சம்பந்தம்' என்றும், அனந்த தேவரிடம் சீகண்டர் கேட்டது 'மகா சம்பந்தம்' என்றும், சீகண்டரிடம் நந்திபெருமான் கேட்டதும், திருமால் முதலிய தேவர்கள் கேட்டதும் 'அந்தராள சம்பந்தம்' என்றும், நந்தி பெருமானிடத்தும், திருமாலிடத்தும், மற்றைய தேவர்களிடத்தும் முனிவர்களும் சித்தர்களும் கேட்டது 'திவ்வியசம்பந்தம்' என்றும், தேவர்களிடமும், முனிவர்களிடமும் மக்கள் கேட்டது 'திவ்வியாதிவ்விய சம்பந்தம்' என்றும், மக்களிடம் மக்கள் கேட்டது 'அதிவ்விய சம்பந்தம்' என்றும் சொல்லப்படுகின்றன.*

*'வேதம், சிவாகமம்' என்னும் இரண்டும் 'ஆப்த வாக்கியம்' எனப்படுகின்றன. 'ஆப்தன்' என்பதற்கு, 'உள்ளது கூறுவோன்' என்பது பொருள். பொதுமக்கட்கு நன்மக்கள் ஆப்தர், நன்மக்கட்கு முனிவர்களும், தேவர்களும் ஆப்தர். முனிவர்கட்கு நந்தி பெருமானும், தேவர்கட்குப் பிரமதேவரும் ஆப்தர். நந்திதேவர், பிரம தேவரினின்று மேன் மேல் உள்ளவர் கீழ்க்கீழ் உள்ளவருக்கு ஆப்தர். எல்லார்க்கும் ஆப்தராய்த் தமக்கோர் ஆப்தர் இல்லாத அதிபரமாப்தர் சதாசிவ நாயனார். அவர்க்கு மேல் உள்ள சத்தியும், சிவமும் இலயநிலை (ஒடுக்கநிலை) ஆதலின், அங்கு வேத சிவாகமங்கள் விளங்கித் தோன்றுதல் இல்லை.*

**107. *தெளிவுரை :-* மேற்கூறியவாறு நந்திபெருமான் *சீகண்டரிடம் சிறப்பாகப்பெற்ற ஒன்பது ஆகமங்கள் '1. காரணம் 2. காமிகம் 3. வீரம் 4. சிந்தியம் 5. வாதுளம் 6.................. 7. ..................... 8. சுப்பிரபேதம் 9. மகுடம்' என்பன.***

**108. அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்**
**எண்ணிலி கோடி தொகுத்திடு மாயினும்**
**அண்ணல் அறைந்த அறிவறி யாவிடில்**
**எண்ணிலி கோடியும் நீர்மேல் எழுத்தே. 7**

---

*குறிப்புரை :-* இத்திருமந்திரத்தின் மூன்றாம் அடி, 'நாயனார் திருமொழியன்று' என்பது தெளிவாய்த் தெரிகின்றது. எவ்வாறெனில், 'யாமளமாகும் காலோத்தரம்' என்பது பெரும்பான்மையும் ஒன்றாகவே கொள்ளத்தக்கதாய் உள்ளது. அவ்வாறு கொண்டால், ஒன்பது கூறவந்தவர் ஒன்றனை மறந்தார் ஆவர். 'யாமளம்' ஆகும் காலோத்தரம்' என இரண்டாகக் கொள்ளினும், யாமளம் சைவாகம மன்று; வாம தந்திரம். அது சைவத்திற்குப் புறம்பானது. 'காலோத்தரம்' என்ற பெயரில் பல உள. ஒன்றேனும் மூலாகமம் அன்று. அதனால், வாம மதத்தினர் ஒருவர் தமது தந்திரத்தையும் திவ்வியாகமங்களில் ஒன்றாக்கிக் கொள்ள இத்திருமந்திரத்தை திரித்துவிட்டார் போலும்! அவ்விடத்தில் நாயனார் கூறிய இரு ஆகமங்கள் இவை என்பது அறியப்படாது போயினமை வருத்தத்திற்குரியது. 'நந்திபெருமான் சிறப்பாகப் பெற்ற ஆகமங்கள் ஒன்பது' என்பதற்கேற்ப அவர்பால் அவற்றைப் பெற்ற இந்நாயனார் இந்நூலையும் ஒன்பது தந்திரங்களாக அருளிச் செய்திருத்தல் அறியத்தக்கது. எனினும் ஒவ்வோர் ஆகமத்தையே ஒவ்வொரு தந்திரமாகச் செய்தார் என்பதற்கில்லை. ஏனெனில், அவ்வாறு செய்திருப்பின், அவற்றின் தொடக்கத்தில் 'இன்ன ஆகமத்தைச் செப்புகின்றேன்' எனச் சொல்லித் தொடங்கியிருப்பார். அவ்வாறன்றி முதற்கண் "சிந்தைசெய்து ஆகமம் செப்பலுற்றேனே" எனப் பொதுப்படக்கூறி அமைந்தமையானே அது பெறப்படுவதாம்.

ஆகமங்கள் பலவும் தனித்தனி வேறு வேறு பொருளைக் கூறுவன அல்ல; எல்லா ஆகமங்களும் எல்லாப் பொருளையும் கூறு வனவே எனினும், சிலவற்றைத் தொகுத்தும், சிலவற்றை விரித்தும் கூறுமாற்றால் வேறு வேறு ஆகமங்களாயின. ஆகவே, நந்திபெருமான் சிறப்பாகப் பெற்ற ஆகமங்களை உணரின், அனைத்து ஆகமங்களையும் உணர்ந்ததாம். அவற்றின் பொருளையே கூறினமையால், இந்நூலை உணரினும் அனைத்து ஆகமங்களும் உணர்ந்தவாறாதல் அறிக.

**108.** *தெளிவுரை :-* சிவபெருமான் தனது திருவருள் காரணமாக அருளிச்செய்த ஆகமங்கள் அளவின்றி இருப்பினும், அவற்றில் சொல்லப்பட்ட பொருளை மக்கள் அறியமாட்டாராயின், அவை

**109.** மாரியும் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
ஆரிய மும்தமி ழும்உட னேசொலிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே. 8

---

*அனைத்தும் அவர்கட்குப் பயனில்லாதனவேயாய் விடும்.*

*குறிப்புரை :- என்றது, வருகின்ற திருமந்திரங்கட்குத் தோற்றுவாயாகலின், 'அதனால் அவற்றின் பொருளை அறிதற் பொருட்டுப் பல மொழிகளை அவன் படைத்தனன்' என்பது குறிப்பெச்சமாக உரைக்க.*

**109. *தெளிவுரை :-*** *பெருகற்காலத்தும், சிறுகற்காலத்தும் நிறைந்த மெய்யுணர்விருக்கவும் அதனை நோக்காது புலனுணர்வே மிகப் பெற்று மக்கள் மெலிவுறுகின்ற காலத்து அம்மெலிவு நீங்குமாறு சிவ பெருமான் 'ஆரியம், தமிழ்' என்னும் இருமொழிகளை உமா தேவியார்க்கு ஒருங்கு சொல்லி உலகம் உய்யத் திருவருள் செய்தான்.*

*குறிப்புரை :- 'அவற்றையே பின்னர் பாணினி முனிவர்க்கும், அகத்திய முனிவர்க்கும் செப்பஞ் செய்யுமாறு உணர்த்தி, உலகில் பரவச் செய்தான்' என்க. 'வடமொழிக்கு இந்திரனால் செய்யப்பட்ட ஐந்திர வியாகரணமே முதல் நூல்' என்றல் பழங்கதையேயாக, உண்மையில் உள்ளது பாணினீயமே. அதனால்,*

*"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்"*

*- காஞ்சிப்புராணம்*

*என்றலே சிவநெறி மரபு என்க.*

*பலதலைப்பட்ட உணர்வுடையராய்ப் பரந்துசென்று ஆராயும் உலகர் பொருட்டு ஆரியமொழியும், அவ்வாறன்றி ஒருதலைப்பட அமைந்த உணர்வுடையராய் ஒழுக்கத்தில் நின்று பயன்பெற விரும்பும் நல்லோர் பொருட்டுத் தமிழ்மொழியுமாக இருமொழியை இறைவன் சொல்லியருளினான் என்பது,*

*"தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச் சாத்திரம்" - தி.10 பா.26*

*என நாயனார் மேலே அருளிச்செய்தவாற்றால் பெறப்படும்.*

*இவ்வாறு இவ்விரு மொழியையும் ஒப்பக்கொண்டதன்றி ஒன்றை உயர்ந்ததாகவும், மற்றொன்றைத் தாழ்ந்ததாகவும் ஆன்றோர் கொண்டிலர் என்பது இதனால் பெறப்பட்டது. இங்ஙனமாகவும் சிலர் இவற்றுள் ஒன்றைப் பற்றி மற்றொன்றனை இகழ்வர். அவர், இது முதல் மூன்று திருமந்திரங்களை, 'நாயனார் வாக்கல்ல' என விலக்கிச் செல்வர். அவர், "தமிழ்ச்சொலும் வடசொலும் தாள்நிழற் சேர" (தி.1 ப.77 பா.4) "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" (தி.6 ப.23 பா.5) என்றாற் போல்வனவற்றையும் அவ்வாறு விலக்கிப்போவர் போலும்!*

*மொழிகளது நிலை, 'நுண்மை, பொதுமை, இடைமை, பருமை' என நான்கு வகைப்படும். அவை முறையே, 'சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி' என வடமொழியிற் சொல்லப்படும். அவற்றுள், 'மத்திமை, வைகரி' எனப்படுகின்ற இடைமொழி பரு மொழிகள் தாம் ஆரியம், தமிழ் முதலிய பாகுபாடுகளைப் பெற்று நிற்கும். அவற்றிற்கு முந்திய நிலைகள் பாகுபாடின்றியே விளங்கும். அவற்றுள் பிரணவர் முதலியோரும் அனந்த தேவரும் ஆகமங்களைப் பெற்றது. 'சூக்குமை' எனப்படும் நுண்மொழியினாலாம். சீகண்டர் பெற்றது 'பைசந்தி' என்னும் பொதுமை மொழியால், சீகண்டரிடமிருந்து நந்தி முதலிய கணங்கள், தேவர், முனிவர், சித்தர் பெற்றது இடைமொழியாகிய மத்திமையினால். அவர்களிடமிருந்து மக்கள் பெற்றது 'வைகரி' எனப்படும் பருமொழியினால். 'சிலர்க்கு இயல்பாகவே மெய்யுணர்வு உண்டாயிற்று' என்றல் இறைவன் உள்நின்று நுண்மொழி இடைமொழிகளால் விளக்கியதே என்க. அதனால், கணங்கள் முதலியோர் பொருட்டே பாகுபட்ட மொழிகளை இறைவன் சொல்லினன் எனக் கொள்க. இவற்றுள், இடைமொழிக்கு (மத்திமைக்கு) முற்பட்டவற்றையே, "சொற்பிரிவிலாத மறை" (தி.3 ப.78 பா.2) என்று திருஞானசம்பந்தர் அருளிச் செய்தார். அதற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது 'சொற்கள் நீங்காது நிற்கின்ற மறை' என உரைப்பின் பொருள் படாமை அறிக. "எழுதா மறை" எனப்படுவதும் இச்சொற்பிரிவிலாத மறையே அதனையே ஆரிய வேதத்திற்கு மரபாகக் கொண்டனர் அந்தணர். 'எழுதா மறை' என்பதற்கு, 'எழுத வாராத மறை' என்பதே பொருளன்றி, 'எழுதாமல் இருப்பதையே மரபாகக் கொண்ட மறை' என்பது பொருளாகாது.*

> *"ஆற்றல் அழியும் என்று அந்தணர்கள் நான்மறையைப்*
> *போற்றிஉரைத் தேட்டின் புறத்தெழுதார்"*

**- *திருவள்ளுவமாலை. 15***

என்ற செய்யுளும், 'எழுதப்படுவதனை எழுதாதிருக்கின்றனர் அந்தணர்' என்றே கூறிற்று. எனவே, 'எல்லையிலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுது மறை' (தி.12 பெ. பு. ஞானசம். 75) என்பதில், 'எழுது மறை' என்றது, 'சொற்பிரிவிலாத மறையைத் 'தமிழ்' என 'ஒரு மொழியாய்ப் பிரிந்து தோன்றி எழுதப்படுமாறு வைத்த மறை' என்றவாறாயிற்று.

இதனால், மேலுலகத்தில் பிரணவர் முதலியோர்க்குச் சொல்லிய ஆகமங்கள் கீழுலகத்தார்க்கு விளங்குதற்பொருட்டு இறைவன் பருமொழிகளைப் படைத்தமை கூறப்பட்டது. 'ஆகமங்கள் விளங்குதற்பொருட்டே மொழிகளைப் படைத்தான்' என்றமையால், அம்மொழிகளில் அவ்வாகமங்களை அவன் கூறினமையும் பெறப்படும்.

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்"

- தி. 8 திருவாசகம், கீர்த்தி 9, 10

"கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்
துற்றஐம் முகங்க ளாற்பணித் தருளியும்"

- தி.8 திருவாசகம், கீர்த்தி 16-20

"வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந் தருளித்
துள்ளு வார்புனல் வேணியார் அருள்செயத் தொழுதே
தெள்ளும் வாய்மையின் ஆகமத் திறனெலாந் தெரிய
உள்ள வாறுகேட் டருளினாள் உலகைஆ ளுடையாள்"

- தி.12 பெ.பு. திக்குறிப்பு 50

என்றாற்போல வருவன பலவும் சிவபெருமான் தனது ஆகமங்களைப் பருமொழியால் விளக்கிய வரலாற்றைக் குறிப்பனவேயாம். இறைவன் படைத்த பருமொழியை இந்நாயனார், 'ஆரியம், தமிழ்' என இரண்டாகக் கூறினமையின், ஆகமங்கள் அவ் இருமொழியிலும் கூறப்பட்டன என்றல் பொருந்துவதே என்க. இதனானே, பிறநெறிகள் யாவும், ஆரியம் ஒன்றே கடவுள்மொழி; தமிழ் முதலிய பிறமொழிகள் யாவும் தேசியம் - அஃதாவது அவ்வந் நிலப்பகுதியில் வாழும் மக்கட்கு அமைந்த மொழி' என்னுமாயினும், சிவநெறி, ஆரியம், தமிழ் இரண்டையுமே கடவுள்மொழி என ஒப்பக்கொள்வது என்பது

**110.** அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறுஞ்
சிமிழ்த்தலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலு மாமே. **9**

**111.** பண்டித ராவார் பதினெட்டுப் பாடையும்
கண்டவர் கூறுங் கருத்தறி வார்என்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் அறஞ்சொன்ன வாறே. **10**

---

*பெறப்பட்டது. இந்நாயனார்க்குப் பல நூற்றாண்டுகட்குப் பின் பிறர் சிலரும் இவ்வாறு கொண்டனர்.*

**110.** *தெளிவுரை :- சிவபெருமான் உயிர்களைப் பாசத்தளையினின்றும் விடுவிக்கின்ற முறையையும், பின் அவற்றை அன்பு வாயிலாகத் தன்னிடத்தே நிலைபெறுவிக்கின்ற முறையையும், அங்ஙனம் நிலைபெறுவித்தற்கண் உயிர் தனது பண்டைப் பயிற்சி வயத்தால் பாசத்திலே பொருந்தி அலைவுறுகின்ற முறையையும், 'தமிழ்மொழி, வடமொழி' என்னும் இருமொழியுமே ஒருபடித்தாக உணர்த்தும்; அதனால், அவற்றுள் யாதொன்றையாயினும் முறைப்படி உணர வல்லார்க்குத் தத்துவ ஞானத்தையே யன்றிச் சிவஞானத்தைப் பெறுதலுங் கூடுவதாகும்.*

*குறிப்புரை :- சிமிழ்த்தலைப்படுதல் - கண்ணிமைத்தல் ஒழிதல். "உயிர்" எனப் பின்னர் வருதலின், வாளா, "அவிழ்க் கின்றவாறு" என்றார். "அது" என்றது, 'அவ்வினத்தை' என்றவாறு. 'சிமிட்டலை' எனவும் பாடம் ஓதுப. 'உணரலும்' என்ற உம்மை, உணர்தற்கு அருமை குறித்து நின்ற சிறப்பும்மை. 'ஆரியம், தமிழ் இரண்டனையும் உணர்தல் சிறப்புடைத்தாயினும் அஃது எல்லார்க்கும் கூடாமையின், ஒன்றை உணரினும் பயனைப்பெறுதல் தப்புதல் இல்லை' என்றவாறு. ஈற்றடி ஆசிடை வந்த மூன்றாம் எழுத்து எதுகை.*

**111.** *தெளிவுரை :- கற்றவர் போற்றுகின்ற பதினெண் மொழிகளும் சிவபிரான் தனது அறத்தைப் பொதுவாகவும், சிறப்பாகவும் உணர்த்தற்கு அமைத்த வாயிலே. அதனால் 'கற்றவர்' எனப்படுவார், பல மொழிகளையும் உணர்ந்து, அவற்றில் சொல்லியுள்ள முடிந்த பொருளை உணர்ந்தவரே என அறிக.*

***குறிப்புரை :-*** *'அவனன்றி ஓரணுவும் அசையாது' ஆதலின், உலகில் மொழிகள் பலவாய்த்தோன்றி வளர்தலும் சிவபெருமானது திருவுளத்தின்படியே எனவும், 'அங்ஙனம் அவன் திருவுளம் செய்தது, தான், பிரணவர் முதலியோர், அனந்ததேவர், சீகண்டர், உமையம்மை முதலியோர்க்குச் சொல்லிய ஆகமப் பொருள்கள் நிலவுலகில் அவரவர்க்கு ஏற்ற பெற்றியான் விளங்குதற்பொருட்டே' எனவும் கூறுவார். "பதினெட்டுப் பாடையும் அண்ட முதலான் அறம் சொன்ன ஆறே" என்றார். 'சொன்ன ஆறே' என்பதில் "சொன்ன" என்றதை "அன்போடியைந்த வழக்கு" (குறள். 73) என்பதில் 'இயைந்த' என்றது போலக் கொள்க.*

*ஆறு - வழி; வாயில்.* ***"பதினெட்டுப் பாடை" என்றது 'மொழிகள் பதினெட்டு' என்னும் வழக்குப் பற்றி****. எனவே, 'பன்மொழியும்' என்பதே அதற்குக் கருத்தாகும். ஆரியம், தமிழ் இரண்டும் முன்னர்க் கூறப்பட்டமையின், 'பன்மொழிகள்' என்றதில் அவை இரண்டும் ஒழிந்தனவே கொள்ளப்படும். "கண்டவர்" என்றது, "அறிந்தவர்" என்றபடி 'அவ்வம்மொழிகளில் வல்லோர் அவை வாயிலாக உயர்ந்த பொருள்களை மக்கட்கு உணர்த்துவாராதலின், அப்பொருள்களும் தமிழ்ச்சொல் வடசொற்களில் அமைந்த பொருளின் பகுதியவே; பிற அல்ல' என்பார், "பண்டிதராவார் பதினெட்டுப் பாடையும் கண்டவர் கூறும் கருத்தறிவார்" என்றார். "கருத்தறிவார்" என்றதனால், 'அச்சொற்களை அறிதல் வேண்டும் என்பதில்லை' என்றவாறாயிற்று. அங்ஙனமாகவே, 'அவற்றில் உள்ள பொருள்கள்' தமிழ்ச்சொல் வடசொற்களில் உள்ள பொருள்களின் பகுதியே என்பதும் உணர்த்தப்பட்டதாம். அதனானே, 'தமிழும், ஆரியமுமே தொன்மை மொழிகள்' என்பதும், 'பிறமொழிகள் இவற்றின் வழித்தோன்றின' என்பதும் போந்தன.*

*இதனால் வழிமொழிகளாகிய பிறமொழிகளும் பயனுடைய வாதலை அறிந்து அவற்றை இகழாமை வேண்டும் என்பது கூறப்பட்டது.*

## 4. உபதேசம்

**112.** விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே. 1

---

*"சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றேன்" (தி.10 பா. 12) என்றவாறே, சிவாகமப் பொருள்கள் அனைத்தையும் உள்ளத்தில் திரட்டிக்கொண்டு அவற்றைத் தமிழால் வெளியிடத் தொடங்கிய நாயனார், முதற்கண் அவ் ஆகமநெறிக்கண் கொள்ளப்படும் இறைவனாகிய சிவபெருமானது பெருமையையும், பின்னர் அவனது நூலாகிய வேத சிவாகமங்களின் சிறப்புகளையும் கூறிப் பின்னர் அவ்வாகமப் பொருள்கள் உபதேசமாக முப்பது திருமந்திரங்களால் தொகுத்தருளிச் செய்கின்றார். 'திரிமூர்த்திகளின் சேட்டகனிட்ட முறை' என்பது, ஐயமறுத்தல் வேண்டி இடைப்புக்கது என்க. "இறைவனையும் இறைவனால் இயம்பும்நூலும்" என்ற சிவஞான சித்தி (பரபக்கம் 10) யால் இம்முறை அறியப்படுதல் காண்க. உபதேசமாவது விரிந்த பொருளை ஒரு மொழியால் தொகுத்துணர்த்துவதாலின், அதனோடொத்த இத் தொகைப் பொருளை 'உபதேசம்' என்று அருளினார். உபதேசமாவது கூட இருந்து காட்டுவது என்னும் பொருளதாம். சீடனுடனிருந்து சிவனைக் காட்டும் உபகாரமே உபதேசம். அங்ஙனம் குரு உபதேசிக்கும் போது தன் அனுபவமும், குருபரம்பரை மரபும் பற்றி உபதேசிப்பார். இங்ஙனம் அருளிச் செய்கின்றவர், அப்பொருளை நூன்முறையாற் கூறாது, அநுபவ முறையானே கூறுகின்றார். சிவாகமப் பொருள்கள் நூல்களானும், பொருந்துமாற்றானுமன்றி, அநுபவத்தாலும் மெய்ம்மையாய் விளங்கும் என்றற்கு, "மூலன் உரைசெய்த முப்பதுபதேசம்" (தி.10) எனப் பின்னுள்ளோர் குறித்தது இதனையே. இம்முப்பது திருமந்திரங்களும் அந்தாதியாய்த் தொடர்ந்து மண்டலித்து முடிந்து ஒரு தனிச் சிறப்புப் பகுதியாய் நிற்றல் காணத்தக்கது.*

**112.** *தெளிவுரை :-* மேல், "அண்ட முதலான்" எனக் குறிக்கப்பட்ட அனைத்துலகிற்கும் முதல்வனாகிய சிவபெருமான், முன்னாளில், மேல்நிலையினின்றும் இறங்கி, என் வினைக்கேற்ற வகைகளாகத் தனது உண்மை நிலையை மாற்றிக்கொண்டு, கீழ்நிலையில் நின்ற தனது சத்தியை எனக்குப் பெருங்காவலாக அமைத்து நடாத்தித் தனது

*ஒப்பற்ற தனிப் பேரின்பத்தைத் தரும் அருள் நோக்கத்தை இன்று எனக்கு அளித்து, என் உள்ளத்தில் நீங்காது நின்று, அதனை அன்பினால் கசிந்து உருகப் பண்ணி, எனது மலம் முழுவதையும் பற்றற நீக்கினான்.*

***குறிப்புரை :-*** *'இழிந்து, கொண்டு நின்றதாள் என்க. "விண்" என்றது மேல்நிலையை. அது, 'பரநிலை' எனப்படுதலின், அந்நிலைக் கண் நிற்கும் அவனது சத்தி 'பராசத்தி' எனப் பெயர்பெற்று நிற்கும். அந்நிலையினின்றும் இறங்குதலாவது, உலகை நோக்குதல், அது முன்னை நிலையிற் கீழ்ப்பட்டதாகலின், "தண் நிறை" என்றார். தண்மை - தாழ்வு, "தண்பதத்தாற் றானே கெடும்" (குறள். 548) என்பதிற்போல 'மெய்யை வினைக்கீடாய்க் கொண்டு' என்க. மெய் - உண்மை நிலை. அஃது அறக்கருணையாய் நின்று விளக்குதலைச் செய்தல். அதனை மாற்றிக் கொள்ளுதலாவது, மறக் கருணையாய் நின்று மறைத்தலைச் செய்தல். சத்தியை, 'தாள் - திருவடி' என்றல் மரபு.*

*உலகை நோக்காது இயற்கையில் நிற்கும் பராசத்தி தனது ஒரு சிறு கூற்றில் 'ஆதி சத்தி' என நின்று உலகைத் தொழிற்படுத்தும். அந்நிலையில் அஃது உயிர்கட்குச் சிவத்தைக் காட்டாது உலகத்தையே காட்டி நிற்குமாதலின், 'திரோதாயி அல்லது திரோதன சத்தி' என்று சொல்லப்படும். 'மறைக்கும் ஆற்றல்' என்பது இதன் பொருள். இறைவனது சத்தி இவ்வாறு செய்தல். உயிர்களை அனாதியே பற்றியுள்ள ஆணவ மலத்தின் சத்தியை மெலிவித்தற் பொருட்டாம். அது மெலிவுறுதலே 'மல பரிபாகம்' எனப்படும். மல பரிபாகம் வந்தவுடன் அத்திரோதான சத்தி தானே அருட்சத்தியாய் மாறிப் பதிந்து, உயிரின் அறிவில் ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்கும். இவ்வுணர்ச்சி, உயிருக்கு ஓர் அதிர்ச்சியாய்த் தோன்றும். அதுபற்றி அருட்சத்தி பதிதலை, 'சத்தி நிபாதம்' என்பர். நிபாதம் - வீழ்ச்சி.*

*மலபரிபாகத்திற்கு முந்தின நிலை பாசத்தில் கட்டுண்டு கிடக்கும் நிலையாகலின் அது, 'பெத்தம், பெந்தம், பந்தம், கட்டு' என்றெல்லாம் சொல்லப்படும். மல பரிபாகத்திற்குப் பிந்தின நிலை பாசத்தினின்றும் விடுபட்ட நிலையாகலின் அது, 'முத்தி, மோட்சம், வீடு' என்றெல்லாம் சொல்லப்படும். பெத்த நிலையையே 'முன்' என்றும், முத்தி நிலையையே 'இன்று' என்றும் அருளிச் செய்தார். பெத்தநிலை திரோதான சத்திவழிப்பட்டே நிற்றலின் அதனை, "தலைக்காவல்" என்றார். "முன்" என்றதனை முதலில் வைத்து, "வைத்து" என்றதன் பின், "நடாத்தி" என்பது வருவித்து, 'இன்று, காட்டி உருக்கி அறுத்தான்'*

என முடிக்க. அதிகாரம் வேறாயவழியும் முன்னைத் திருமந்திரத்தோடு தொடர்பு தோன்ற எழுவாயை அதனின்றும் தோன்ற வைத்தார். களிம்பு உவமையாகுபெயர். இதனால், 'ஆணவ மலம் செம்பிற் களிம்பு போல அனாதியே உயிரில் கலந்துள்ளது' என்பதும், அங்ஙனம் கலந்த கலப்பால், 'உயிர் அனாதிபெத்த சித்துரு' என்பதும், 'அதனை அறுத்தான்' என்றதனால். 'சிவன் இயல்பாகவே மலம் இல்லாத அனாதிமுத்த சித்துரு' என்பதும், அவனது அருள் செம்பைக் களிம்பு நீக்கிப் பொன்னாக்குகின்ற இரசகுளிகை போல்வது என்பதும் பெறப்பட்டன. ஆனந்தக் கண் - ஆனந்தத்தைப் பயக்கும்கண்; அஃது அருட்கண். அதனை உணரச் செய்தலே வழங்குதலாகலின், "காட்டி" என்றார். 'முன், வைத்து நடாத்தி, இன்று, காட்டி, உருக்கி அறுத்தான்' என்றதனால், இது நாயனாரது அநுபவமேயாதல் பெறப்பட்டது.

> "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
> மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்".

என்றார் திருவாசகத்தும் (தி.8 சிவபுராணம். 31, 32). "ஆய்" என்றது, 'ஆக' என்பதன் திரிபு.

இதனால், 'உலகை நோக்காது நிற்கும் நிலையே இறைவற்கு உண்மைநிலை' என்பதும், உலகை நோக்கி நின்று செயல் புரியும் நிலை பொதுநிலை என்பதும், பொதுநிலையில் நிற்பனவெல்லாம் மறைப்பு நிலையே என்பதும், 'அந்நிலை பலவற்றையும் அவனது சத்தி திரோதான சத்தியாய் நின்றே செய்யும்' என்பதும், 'அச்செயல் களெல்லாம் செம்பில் உள்ள களிம்பைத் தேய்ப்பது போல உயிர்களைப் பற்றியுள்ள ஆவண மலத்தைத் தேய்க்கும் செயல்களே யாகும்' என்பதும், 'அம்மலம் தேய்வுற்றபொழுது அத்திரோதான சத்திதானே அருட்சத்தியாய் மாறி உயிரைப் பொதுநிலையினின்று நீக்கி, உண்மை நிலையை அடையச்செய்யும்' என்பதும், 'இவையே இறைவன் என்றும் உயிர்கள்பொருட்டு இடையறாது செய்துவரும் செயல்' என்பதும் கூறப்பட்டன. படவே, 'இறை, உயிர், தளை' என்னும் முப்பொருள்களின் இயல்பு பற்றிய ஆகமப்பொருள் பலவும் இவ்வொரு திருமந்திரத்தானே தொகுத்துக் கூறப்பட்டவாறு அறிந்து கொள்க. விண்ணின்று இழிந்து வினைக்கீடாய் மெய் கொண்டு என்பது பஞ்சாக்கினி வித்தை கூறியருளியது. விண் சுவர்க்கமும், மேகமும், மேகத்தை உணர்த்தும் போது இடவாகு பெயர். பஞ்சாக்கினி வித்தையாவது நல்வினை செய்த உயிர்கள் அந்நல்வினைப் பயனை நுகர்தற் பொருட்டுச் சுவர்க்கம் சென்று அவ்வினையுலந்த வழி பூதசார

**113.** களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே. **2**

---

*உடம்பு நீங்கச் சூக்கும உடம்போடு மேக மண்டலத்தை எய்தி, ஆண்டு நின்று, மழைத்தாரையினோடு கூடி நிலத்தினையடைந்து, நெல் முதலிய பைங்கூழில் விரவி நின்று, அவை உணவாய்ப் பரிணமித்த வழி அவற்றோடு கூடி, தந்தை வயிற்றுட் சென்று, ஆண்டுச் சுக்கிலமாய்ப் பரிணமித்து, தாய் வயிற்றுட் சென்று கருவாய்ப் பரிணமித்து, தூல தேகத்தோடு நிலத்துத் தோன்றுதலாகிய ஐந்து நிலைகளை எய்துதலின், நிலைகள் ஐந்தும் அங்கியாகவும், ஆன்மா ஆகுதியாகவும் தியானிக்கப்படுவதொரு சாதகம் என்க. ஆன்மாக்கள் உடலை மேற்கொள்வது தாமாகவன்று. இறைவன் அந்தந்த ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாக உடலொடு கூட்டுகின்றார்; உயிர்கள் கொள்கின்றன. இவற்றின் விரிவை, மெய்கண்டதேவ நாயனார் அருளிச் செய்த,*

*கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து*
*விண்படர்ந் தத்தூடு வினையினாற் - கண் செவிகெட்(டு)*
*உள்ளதே தோற்றம் உளமணுவாய்ச் சென்றுமனம்*
*தள்ள விழுங்கருவிற் றான்.*

*என்னும் சிவஞானபோத வெண்பாவானும், மாதவச் சிவஞான சுவாமிகளின் மாபாடியக் குறிப்புகளானும் நன்கறிக.*

**113. *தெளிவுரை :-* *என் மலத்தைப் பற்றற நீக்கியவனாகிய எங்கள் சிவபெருமான் நந்தி தேவரே. அவர் மேற்கூறியவாறு அருட்கண்ணை எனக்குத் திறப்பித்து ஆணவ மலமாகிய களிம்பை அறுத்து, அக்களிம்பு அணுக ஒண்ணாத சிவமாகிய மாற்றொளி மிக்க பொன்னை உணர்வித்து, பளிங்கினிடத்துப் பவளத்தைப் பதித்தாற் போல்வதொரு செயலைச் செய்தார். அவர் பதிப்பொருளேயன்றி வேறல்லர்.***

***கண்ணுதல் நந்தி - இரு பெயரொட்டு, ஆசாரியனும் சிவனும் ஒருவரே என்பார் இங்ஙனம் கூறினார். அருட்கண் விழிப்பித்து - திருவருட் பதிவால் விளைவதாகிய ஞானக் கண்ணைத் திறக்கச் செய்து ஞானம் பெற்றார்க்கு மலவிருள் மறையாது அகலுமாதலின் 'விழிப்பித்து அறுத்தான்' என்றார். அகன்ற களிம்பு நாட்பட நாட்படச் செம்பினிடமாக வெளிப்படுதல் போல ஆணவமலமும், சிவபூசையும்,***

**114.** பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கிற்பசு பாசம்நில் லாவே. **3**

---

*சிவனடியார் வழிபாடும், சிவாலய தரிசனமும், திருவைந்தெழுத்துச் செபமும் இல்லாதார்க்கு வாசனை வழியே மீளவும் வந்து தாக்குமாதலின் அங்ஙனம் தாக்காத வண்ணம் தனது அநந்தங் கதிர்களில் ஏகதேசமான ஒளியை உதவினான் சிவன் என்பதாம். மேலும் வெண்மைப் பளிங்கில் செம்பவளத்தைப் பதித்து வைத்தாற் போல மலமற்ற தூய்மையான மனத்தில் திருவருட் சத்தியாகிய செம்பவளத்தைப் பதித்து வைத்தான் என்பதாம். திருவருட் சத்தி செம்மை நிறம் என்பதைச் சிதம்பரத் திரையைக் கொண்டும் தெளியலாம்.*

***குறிப்புரை :-*** *பளிங்கு ஆன்மாவிற்கும், பவளம் சிவத்திற்கும் உள்ளுறை உவமமாய் நின்றன. எனவே, "பளிங்கிற் பவளம் பதித் தான்'' என்றது. 'ஆன்மாவாகிய என்னிடத்துச் சிவத்தை விளங்குவித்தான்' என்றதாயிற்று. பளிங்கு நீலமணியோடு சேர்ந்தவழி நீலமாயும், செம்மணியோடு சேர்ந்தவழிச் செம்மையாயும் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையுடையதாகலின், அவ்வுவமையால், 'ஆன்மாவும் பாசத்தொடு சேர்ந்தவழிப் பாசமாயும் சிவத்தொடு சேர்ந்தவழிச் சிவமாயும் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடையது' என்பதும், 'அத் தன்மைத்தாய ஆன்மா அனாதியே பாசத்தோடு சேர்ந்து நின்று பாச மாய்ப் பசுத்தன்மை எய்தி, அப்பாசம் நீங்கியவழிச் சிவத்தொடு சேர்ந்து பசுத்துவம் நீங்கிச் சிவமாம் தன்மையைப் பெற்று நிற்கும்' என்பதும், "நந்தி பதித்தான்" என்றதனால், "ஆன்மாவிற்குப் பாசத்தைப் பற்றறச் செய்து சிவமாந் தன்மையை எய்துவிப்பவன் ஆசான் மூர்த்தியே" என்பதும் உணர்த்தப்பட்டனவாம். இதனானே, 'எம் போலியர்க்கு (சகல வருக்கத்தினருக்குச்) சிவபெருமான் ஆசான் மூர்த்தி வாயிலாகவே உணர்த்துவன்' என்பதும் கூறியவாறு காண்க.*

*சிவம் செம்பொருளாகலின் பவளம் அதற்கு உவமையாயிற்று.*

**114. *தெளிவுரை :-*** *(பதி ஒன்றேயன்றோ என்றும் உள்ளது? ஏனைய பசு, பாசம் இரண்டும் எவ்வாறு தோன்றின? என்று ஐயுறும் மாணாக்கரைக் குறித்து). 'பதி, பசு, பாசம்' என்று சொல்லப்படுகின்ற மூன்று பொருள்களில் பதி தோற்றம் இன்றி என்றும் உள்ள*

**115.** வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனுங்
கோயி லிருந்து குடிகொண்ட கோன்நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎன்னும்
தோயம தாய்எழுஞ் சூரிய னாமே. 4

---

*பொருளாதல் போலவே, ஏனைப் பசுவும், பாசமும் தோற்றம் இன்றி என்றும் உள்ள பொருள்களாம். (இவ்வுண்மை அறியாதார் பலவாறு கூறி மலைவர் என்பது கருத்து) பாசங்கள் பசுவைப் பற்றுமேயன்றிப் பதியினிடத்து அணுகமாட்டா. பசு, பதியினிடத்து அணுகும்; அவ்வாறு அணுகும் பொழுது அதனைப் பற்றியுள்ள பாசங்கள் அதனைப் பற்றிநில்லாது விட்டு நீங்கும். (என்று அருளிச் செய்தார்).*

***குறிப்புரை :-*** *"அணுகின்" என்றதனால், 'அணுகுந் தன்மை உடையது' என்பதும், 'அதனை உடையதாயினும், பாசப் பிணிப்பால் அணுகமாட்டாதாயிற்று' என்பதும், 'அப்பிணிப்பு, கால எல்லையில் நெகிழுமாகலான் அங்ஙனம் நெகிழ்ந்தபொழுது பசு, பதியை அணுகும்' என்பதும் பெறப்பட்டன. பதி - கடவுள். பசு - உயிர். பாசம் - அவ்வுயிர்களைப பிணித்துள்ள பொருள்கள். இவை மூன்றும் முறையே, 'இறை, உயிர், தளை' எனத் தமிழிற் சொல்லப்படும்.*

*இத் திருமந்திரம் ஓர் ஐயம் அறுத்தது.*

**115. *தெளிவுரை :-*** *கால வழிப்பட்டு, 'குழவி, இளமை, முதுமை' என்னும் மாற்றங்களை உடையதாய் நிலையற்றதான இவ்வுடம்பு என்கின்ற கோயிலிலே நீங்காது குடிகொண்டு மறைந்திருக்கின்ற தலைவனாகிய சிவன், மூங்கிலில் மறைந்து நின்ற தீ, தான் வெளிப்படுங் காலத்து வெளிப்பட்டு விளங்குதல்போல, ஆன்மாவின் பக்குவ காலத்தில் மும்மல இருளை நீக்கி எழுகின்ற சூரியனாய் வெளிப்பட்டு விளங்குவான். அப்பொழுது அவன் தாயன்பினும் மிக்க பேரருளாகிய வெள்ளமாயும் நின்று பேரின்பத்தைத் தருவான்.*

*தாயினும் மும்மலம் மாற்றி என்பது ஆன்மாக்களுக்குள்ளது மும்மலப்பிணி. ஒரு தாய், குழந்தை வாத பித்த சிலேட்டுமங்களால் அவதிப்படுகின்ற காலத்து அக்குழந்தையுண்ணும் மருந்தைத் தான் உண்டும், குழந்தை வருந்தத்தான் வருந்தியும் தொடக் குண்ணுதல் போலத் தொடக்குண்ணாது, நோயை மட்டும் மாற்றிக் காத்தலின் தாயினும் என உறழ் பொருளமைய ஓதப் பெற்றமை காண்க.*

*தயா என்னும் தோயமது ஆய் - கருணையென்னுங்*

**116.** சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவ்வே
சூரிய காந்தமும் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே. **5**

---

*கடலுள்ளதாய் என்று கருணையைக் கடலாக உருவகித்தவாறு. தோயம் - நீர். ஆகுபெயராகக் கடலையுணர்த்திற்று.*

***குறிப்புரை :-*** *"எழும்" என்றதை இரட்டுற மொழிந்து, முற்றாயும், எச்சமாயும் கொண்டு முறையே முன்னும், பின்னும் இயைக்க. இதனால், 'ஆனந்தக் கண்காட்டிக் களிம்பறுத்தலையும், பளிங்கிற் பவளம் பதித்தலையும் சிவன் முன்னே செய்யாமைக்குக் காரணம் பக்குவம் இன்மை' என்பது கூறப்பட்டது. "வேயின் எழுங்கனல் போலே" என்றமையால், 'பளிங்கிற் பவளம் பதித்தான்' என்ற உவமை பற்றிச் சிவம் புதிதாக வந்து ஆன்மாவின்கண் புகுவது போலும் என மயங்குதல் கூடாது. முன்பு விளங்காது யாண்டும் உடனாய் நின்ற அதுவே பின்பு விளங்கும் என்பதை உவமை காட்டி விளக்கிற்று இத்திருமந்திரம். உயிர் உடலின்கண் அதுவே தானாய் நிற்றல்பற்றியும், இதயத்தானத்திலும், புருவ நடுவிலும் வைத்துத் தியானித்தலை உடன்பட்டுக் கொள்ளுதல் பற்றியும் உயிரின்கண் நிற்கின்ற சிவனை, உடம்பினுள் நிற்பவனாகக் கூறினார்.*

*"நிலாவாத புலாலுடம்பே புகுந்துநின்ற கற்பகமே" (தி.6 ப.95 பா.4) என அப்பரும்,*

> *"எந்தையே ஈசா உடல்இடங் கொண்டாய்*
> *யான்இதற் கிலன்ஓர்கைம் மாறே"*

*- தி. 8 திருவாசகம், கோயில்திரு. 10*

*என்று மாணிக்கவாசகரும் அருளிச் செய்தமையும் காண்க. "இம்மெய்" என்றது, 'நிலையற்றதான உடம்பு' எனப் பொருள் தந்தது.*

**116.** ***தெளிவுரை :-*** *'பதியினைப்போல் அனாதியே' என மேல் விளக்கப்பட்ட பசுக்களும், பாசங்களும் முறையே சூரியகாந்தக் கற்களும், அவற்றை மூடியுள்ள பஞ்சும் போல்வனவாம். அவற்றுள், சூரிய காந்தக் கற்கள் தனியே நிற்கும் பொழுது தமக்குக் கீழுள்ள பஞ்சுகளைச் சுடமாட்டா. அது போலப் பசுக்கள் தனியே நின்று*

117. மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தான்நற் சதாசிவ மான
புலங்களைந் தான்அப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தான்உள் நயந்தான் அறிந்தே. 6

---

*தம்மைப் பிணித்துள்ள பாசங்களை நீக்கமாட்டா. ஆயினும், அச்சூரிய காந்தக் கற்கள் சூரியன் வந்தபொழுது அதன் கிரணத்தைப் பெற்றுத் தமக்குக் கீழுள்ள பஞ்சுகளைச் சுட்டெரிக்குமாறுபோல, சிவன் ஞானாசிரியனாய் வந்த பொழுது பசுக்கள் அக்குருவின் அருளைப் பெற்றுத் தம்மைப் பிணித்துள்ள பாசங்களை அகன்றொழியச் செய்யும்.*

***குறிப்புரை :-*** *சூரிய காந்தம் - சூரியன் கதிர்பட்டவுடன் நெருப்பு உண்டாக்கும் ஒருவகைக் கண்ணாடிக்கல். "அவ்" என்பது வகர ஈற்றுச் சுட்டுப் பெயர். 'அவை' என்பது இதன் பொருள். இது மேல், "பசு, பாசம்" என்பவற்றைச் சுட்டி, அவற்றை நிரல்நிறை வகையால் சூரிய காந்தத்திற்கும், சூழ் பஞ்சிற்கும் உவமிக்கப்படும் பொருளாக்கி நின்றது. 'போலவே' என்பது பாடம் ஆகாமை அறிக. சூரியன் சந்நிதியில் சுடுதற்கு உபமேயம் கூறிய அதனால், தனியே நின்று சுடாமைக்கு உபமேயம் கொள்ளப்பட்டது. ஆரியன் - ஆசிரியன். "சுட்டிடா" எனவும், "சுடும்" எனவும் பொது உணர்வே பற்றிக் கூறினாராயினும், உண்மை உணர்வு பற்றி, 'சுடுந்தன்மையைப் பெறா' எனவும், 'பெறும்' எனவும் கூறுதலே கருத்தாதலின், உவமைக்கேற்ப, 'அகற்றும் மலங்களே' என்னாது "அற்ற மலங்களே" என்றார். இதனால் 'ஆன்ம அறிவு தன்னியல்பில் நின்று பாசத்தை நீக்குவதன்று; சிவனது அறிவைப் பெற்று அவ்வறிவாய் நின்றே நீக்கும்' என்பது உணர்த்தப்பட்டதாம். "வேயின் எழுங்கனல் போலே" என மேற்கூறியவாற்றால், 'விறகில் உள்ள தீ வெளிப்படுதற்கு அதனைக் கடைவோன் நிமித்தமாம் அளவே யல்லது, அதனிடத்து தீயைப் புகுத்துவோனாகாமைபோல, மாணாக்கனது அறிவின்கண் உள்ள சிவஞானம் வெளிப்பட்டுத் தோன்றுதற்கு ஞானாசிரியன் நிமித்தமாதலல்லது, அதனை அவனறிவின்கண் புகுத்துவானல்லன்' என்றற்கு, 'சூரியன் சந்நிதியில்' என உவமைக் கண்ணும், "ஆரியன் தோற்ற" எனப் பொருட்கண்ணும் கூறினார்.*

*"சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய*
*சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்*

*ஆரியனாம் ஆசான்வந் தருளால் தோன்ற*
*அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்"*

*- சிவஞானசித்தி. சூ. 8.28*

*என இதனை அருணந்தி சிவாசாரியார் இனிது விளக்கினமை காண்க. "அற்ற" என்றது முற்று. "சுட்டிடா" என்ற பன்மையால் உயிர்கள் பலவாதல் குறிக்கப்பட்டது.*

*இதனால் சிவஞானம் உண்டாதல் ஞானாசிரியனது வருகை இன்றியமையாமை சிறந்ததோர் உவமத்தால் விளக்கப்பட்டது.*

**117. *தெளிவுரை :- யாவரும் புகழும் அம்பலத்துள் ஆடுவோனாகிய சிவபெருமான், எனது பக்குவத்தை அறிந்து எனக்கு ஐந்து மலங்களையும் போக்கித் தன்னைத் தந்து, சுத்த தத்துவங்கள் ஐந்தினாலும் தான் ஐந்தொழில் புரிவோனாய் நிற்கும் கருத்தை என்னளவில் தவிர்த்தான். தவிர்த்து, நன்மையைத் தரும் திருவைந் தெழுத்தால் என் உள்ளத்தில் நீங்காது விரும்பி நின்றான்.***

***குறிப்புரை :-** 'மலங்கள் ஐந்தாம், தலங்கள் ஐந்தான், புலம் களைந்தான், நலங்கள் ஐந்தான்' எனப் பிரித்துப் பொருள் கொள்க. 'ஐந்தனானும்' என்பவற்றில் சாரியையும், உம்மையும் தொகுத்தல் பெற்றன. 'மலங்கள் ஐந்தாம் என' என்றதற்கு, 'மேல் அற்ற எனப்பட்ட மலங்கள் ஐந்து என்று சொல்லும்படி' என உரைத்து, ஐந்து மலங்களும் அற்றொழியுமாறு' என்பது அதனாற் போந்த பொருளாக உரைக்க. "அருளி" என்றது. 'தந்து' என்னும் பொருளது. அதற்கும், "அறிந்து" என்பதற்கும் செயப்படுபொருள் வருவித்து உரைக்கப்பட்டன. சுத்த தத்துவங்கள் சுத்த மாயையின் விருத்தியே (விரிவே) ஆகலின், அவற்றை "தலங்கள்" என்றார். "சதாசிவம் ஆன" என்றது, 'சதாசிவன் முதலாக நின்ற' என்றவாறு. 'அறிவு' என்னும் பொருளதாகிய 'புலம்' என்பது இங்குக் கருத்தின்மேல் நின்றது. திரோதான சத்தியோடு இயைந்து நின்று ஐந்தொழில் செய்வது பெத்தான்மாக்கள் பொருட்டேயாதலின், முத்தராகிய தம்மளவில் இறைவன் அக்கருத்தைத் தவிர்த்தான் என்றார். நலம் தருவனவற்றை, 'நலம்' என்றார். நலம் - வீடுபேறு. 'அதனைத் தரும் ஐந்து' எனவே, முத்தி பஞ்சாக்கரம் என்பது போந்தது. இஃது அற்ற மலங்களின் வாதனை வந்து மீண்டும் தாக்காதவாறு செய்யுமாகலின், உள்ளத்தில் சிவன் நீங்காது நிற்கும் நிலை அதனால் நிகழ்வதாகக் குறித்தார். 'மலங்கள் ஐந்து, தலங்கள் ஐந்து, நலங்கள்*

**118.** அறிவைம் புலனுட னேநான் றதாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போலக்
குறியறி விப்பான் குருபரனாமே. 7

---

*ஐந்து', என்பன இவை என்பதனைப் பின்னர் விளக்குவார். "அப்பொது" என்றதில் அகரம் பண்டறி சுட்டு.*

*இதனால் சிவன் குருவாய் வந்து செய்த அருட்செயல்கள் ஒருவாறு வகுத்துக் கூறப்பட்டன.*

**118. தெளிவுரை :-** *(பாசத்தில் அகப்பட்ட உயிரினது அறிவு தானே அதனின்றும் விடுபடமாட்டாதோ எனின், மாட்டாது, ஏன் எனின்) ஆணவமாகிய இயற்கைப் பாசத்தின் வழிவந்து பற்றியுள்ள மாயையின் காரியமாகிய பொறி, புலன் முதலிய செயற்கைப் பாசத்தில் உயிரினது அறிவு கட்டுண்டு, நீரின் ஆழத்தில் அமிழ்ந்து கரை ஏற அறியாத நிலைமைபோல, அவற்றினின்று விடுபடும் நெறியை அறியாது இடர்ப்படும். ஆகவே, அதற்கு அந்நெறியை அறிவிப்போன் நீராழத்தினின்றும் எடுத்துக் கரையேற்ற வல்லவன் போல்பவனாய், ஆசிரியர்க்குள் மேலானவனாகிய ஞானாசிரியனே.*

***குறிப்புரை :-*** *நான்றது - கட்டுப்பட்டது. "உற்ற நீராழம் போல" என்றாராயினும், 'நீராழத்தில் உற்றதுபோல' என்றல் கருத்தென்க. 'உற்ற நீராழம்போல நெறியறியாது' என மாற்றுக. "அறியாது" என்றது முற்று. இஃது எதிர்மறைத் தொழில் உவமம். 'நெறியாவது இது' என்பது அறிவித்தற்கு. 'அறிவு அறிவுள்ளே அழிந்ததுபோல' என்றார். 'உயிரினது அறிவு சிவத்தினது அறிவினுள்ளே பொருந்தித் தான் என்பதொரு முதல் இல்லாது அழிந்தொழிந்தது போலும்படி' என்பது அதன் பொருள். இதுவே, 'சிவமாந்தன்மை' எனப்படுவது. இந்நிலையைப் பன்னாள் பாவனையால் உணர்ந்து நிற்பின், பின்பு உண்மையிலேயே அஃது உண்டாவதாகும். இதனையே உபநிடதங்கள் 'சோகம் பாவனை' என்றும், சிவாகமங்கள் 'சிவோகம் பாவனை' என்றும் கூறும். சோகம் - அவன் நான் (ஆனேன்). சிவோகம் - சிவன் நான் (ஆனேன்) "சோகம் எனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றிப் - பண்டைமறைகளும் அது நான் ஆனேன் என்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே" என்று சிவஞானசித்தி (சூ. 9.7) நூல் இதனை எடுத்தோதுதல் காண்க. 'அகம்பிரம்மாஸ்மி, தத்துவமசி' முதலிய வேதாந்த மகாவாக்கிய உபதேசங்கள் சோகம் பாவனையையும், 'சிவத்துவமசி' என்னும்*

**119.** ஆமேவு பால்நீர் பிரிக்கின்ற அன்னம்போல்
தாமே தனிமன்றில் தன்னந் தனிநித்தம்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே. **8**

---

*சித்தாந்த மகாவாக்கிய உபதேசமும், பஞ்சாக்கர உபதேசமும் சிவாகம் பாவனையையும், 'சிவத்துவமசி' என்னும் சித்தாந்த மகாவாக்கிய உபதேசமும், பஞ்சாக்கர உபதேசமும் சிவாகம் பாவனையையும் அடைவிப்பனவாம். இவையெல்லாம் ஞானாசிரியனாலன்றி அடையலாகாமை அறிக.*

*இதனால், ஞானாசிரியனாலன்றி ஞானத்தை உணர்தல் கூடாமை உவமையால் உணர்த்தப்பட்டது.*

*ஞானம் இவனொழிய நண்ணியிடும் நற்கல்அனல்*
*பானு ஒழியப் படின்.*

*என்றார் திருவருட்பயன் (பா. 50).*

**119. *தெளிவுரை :-*** *தீமை பொருந்திய பல கருவிகளுடன் ஒட்டிக் கிடக்கின்ற வினைகளைக் குருபரனது அருள் ஆவின்பாலில் கலந்து நின்ற நீரை அன்னப் பறவை பிரிப்பது போலப் பிரித்து அழித்தலால், பிறப்பிற்கு ஏதுவாகிய அவ்வினைகள் முழுதும் எரி சேர்ந்த வித்துப் போலக் கெட்டொழியும்.*

***குறிப்புரை :-*** *"ஆமேவு பால்நீர்" என்றதனை, 'ஆவின் பால்மேவுநீர்' எனப் பொருட்கேற்ப மாற்றிக்கொள்க. 'தாம் மேவு, தீமை' என்பன, கடைக்குறைந்து நின்றன. தாம் மேவு நித்தம் - சத்திநிபாதர் சென்று காண்கின்ற நடனம். நித்தம் - நிருத்தம். குருவடிவமும் சிவ பெருமான் கொள்கின்ற சகளத்திருமேனிகளுள் ஒன்றாதல் பற்றி அதற்கு ஈடாக ஆடும் கோலத்தைக் குறித்தார். சத்திநிபாதர்க்கு அக் கோலமும் அப்பயனைத்தருதல் நோக்கி. ஆடும் கோலமும் சத்திநிபாதர்க்குப் பாசத்தை அறுத்துப் பேரின்பத்தைத் தருதலை,*

*மாயை தனைஉதறி, வல்வினையைச் சுட்டு, மலம்*
*சாய அமுக்கி, அருள் தான்எடுத்து - நேயத்தால்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான்அழுத்தல்*
*தானெந்தை யார்பரதந் தான்.*

*- உண்மை விளக்கம். 36*

*என்பதனால் அறியலாம்.*

**120.** வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற
ஒத்துப் புலனுயிர் ஒன்றாய் உடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே. **9**

---

*"உற்றன" என்றது வினையாலணையும் பெயராய் வினைகளைக் குறித்து நின்றது. அதன்பின் 'பிரிக்கும்; அதனால்' என்னும் சொல்லெச்சங்கள் வருவித்து, 'அன்னம்போல் நித்தம் கரணங்களுள் உற்றன பிரிக்கும், அதனால், பிறப்பு எரிசேர்ந்த வித்தாம்' என முடிக்க. 'பிரிக்கும்' என்பது சொல்லெச்சமாய் நின்றது. தாம் ஏழ் பிறப்பு - தாமாகிய எழு பிறப்பு. இங்கு "தாம்" என்றது "உற்றன" என முன்னர்க் கூறிய வினைகளை. 'அவையே பிறவிக்கு வித்து' என்பார், "தாம் ஏழ் பிறப்பு" என்றார். பிறப்பிற்குக் காரணத்தை, 'பிறப்பு' என்றது பான்மை வழக்கு.*

*'நுகர்வினை, கிடைவினை, வருவினை' என வினை மூன்றாகி நிற்கும். நுகர்வினை, இப்பிறப்பில் இன்பமாகவும், துன்பமாகவும் அனுபவிக்கப்படுவன. இவற்றை, 'பிராரத்தம்' என்பர். கிடைவினை, இனி வரக்கடவனாகிய எண்ணற்ற பிறவிகட்கு ஏதுவாய்த் திரண்டு கிடப்பவை; இவற்றை, 'சஞ்சிதம்' என்பர். வருவினை, நுகர்வினையை அநுபவிக்கும்பொழுதே செய்யப்பட்டு வருவன. இவற்றை, 'ஆகாமியம்' என்பர். இவற்றுள் கிடைவினையே எண்ணற்ற பிறவிகட்கு ஏதுவாய் நிற்றலால், குருவருள் அதனையே எரி சேர்ந்த வித்துப்போல அழிக்கும். அதனால் பிறவி அறும்; பிறவியற்ற நிலையே வீடு. எனவே, குருவருளால், பாசநீக்கமும், வீடுபேறும் உளவாதல் அறிக.*

*இதனால், குருபரன் அருள்செய்யுமாறும், அவ்வருளால் எய்தும் பயன்களும் கூறப்பட்டன. குருவருளால் கிடைவினை எரிசேர்ந்த வித்தாய்விடுதலை, "எல்லைஇல் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தன் ஒல்லையின் அகலும்" எனச் சிவப்பிரகாச (பா. 89) நூலும் கூறுதல் காண்க.*

**120. *தெளிவுரை :-*** ***குருவருளால் சிவயோகம் கைவரப் பெற்றவர்கள், பிறவிக்கு வித்தாகிய கிடைவினையை (சஞ்சித கருமத்தை) முற் கூறியபடி அழித்து, குரு அருளிச் செய்த உபதேச மொழியிலே உறைத்து நின்று, சுத்த துரிய நிலை மிகவும் தோன்றப் பெற்று, ஐம்புலன்களை நுகர்கின்ற உணர்வு அவற்றால் கட்டுண்ணாமலே அவற்றோடு பொருந்தி நிற்கச் சிவத்தோடு ஒன்றாய்***

121. சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகஞ் சாரா தவன்பதி போக
நவயோகம் நந்தி நமக்களித் தானே. 10

---

*உடம்பு உள்ளபொழுதே செத்தார்போல உலகத்தை நோக்காது புருவ நடுவிலே நிற்பார்கள். சிவயோகியரது இயல்பு கூறப்பட்டது.*

***குறிப்புரை :-*** *வியாக்கிரம் - முடிவிடம்; ஆறாவது ஆதாரம். உணர்வை, "உயிர்" என்றார் 'சிவத்தோடு' என்பது ஆற்றலால் வந்தது. மேற்குறித்த சிவோகம் பாவனையின் முதிர்ச்சியே 'சிவ யோகம்' எனப்படுவது. இது ஞானத்தில் யோகம். இது கைவரப் பெற்ற நிலையே சுத்த துரியம். இயமம் முதலிய எட்டுறுப்புக்களை உடைய யோகம் தவயோகம் என்க. சிவயோகத்தில் நிற்பவர்கள் காண்பவற்றையெல்லாம் சிவமாகக் காண்பதன்றிப் பிறவாகக் கண்டு விருப்பு வெறுப்புக்கள் கொள்ளுதலும், இன்பும், துன்பும், உறுதலும் ஆகிய வேறுபாடுகளுள் யாதொன்றும் இல்லாதிருத்தலை, "செத்திட்டிருப்பர்" என்றார். இதனால், குருவருளைப் பெற்றாரது நிலைமை கூறப்பட்டது.*

**121. *தெளிவுரை :-*** *மேற்குறிக்கப்பட்ட சிவயோகமாவது, 'சித்தாகிய (அறிவுடைப் பொருளாகிய) ஆன்மாவும், தானே அறியும் தன்மை இன்மையால் தானே அறிந்தும், அறிவித்தும் நிற்கின்ற சிவத்தை நோக்க அசித்தாம் (அறிவில்லாத பொருளேயாம்) என்றுணர்ந்து, ஏகமாந் தன்மையுள் மிகச்சென்று, சிவனது அருளொளியே தானாகப் பெற்று, பிற பொருள்களைச் சார்தலாகிய பயனில்லாத சேர்க்கையிற் செல்லாதபடி, மிகுகின்ற அன்பினால் விளைகின்ற சிவபோகத்தினைத் தருகின்ற புதியதோர் யோகம். அதனையே எங்களுக்கு நந்திதேவர் அளித்தருளினார்.*

*சிவயோகமாவது சித்துப் பொருள்கள் இவை, சடப்பொருள்கள் இவை என்று விவேகித்து அறிந்து, இயம நியமாதி தவத்தால் இயற்கையான சித்துப் பொருள்களோடு, உணர்த்த உணருஞ் சித்தாகிய ஆன்மா சென்று கூடுதலாகிய யோகத்தின் வாயிலாகச் சிவமாகிய ஒளியோடு கலந்திருப்பதேயாம். இத்தகையதொரு புதிய சிவராசயோகத்தை நமதாசாரியனாகிய திருநந்திதேவர் நாம் வீணான நெறிகளிலே சென்று பொருந்தாது சிவபெருமானுடைய திருவடிக் கரையைச் சேர நமக்கு அளித்தான் என்றவாறு.*

122. அளித்தான் உலகெங்குந் தானான உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருந்தாள்
அளித்தான்பே ரின்பத் தருள்வெளி தானே. **11**

---

***குறிப்புரை :-*** *சிவனை நோக்க உயிர் அசித்தாதலை, "அவனுக்கு இவனும் அசித்தாமே" (சிவஞானசத்தி. சூ. 11-11 1) என்பதனான் அறிக. 'தவப்புக்கு' என இயையும் தவ, உரிச்சொல், 'யோகம்' நான்கில் முன்னது ஒழிய ஏனை மூன்றும் 'ஒன்றாதல்' என்னும் காரணக் குறியேயாய் நின்றது. உலகப் பொருள்களைச் சார்தலை, 'அவயோகம்' என்றார். அது முன்னே பல காலும் பல துன்பங்கட்கு இடையே நுகர்ந்து நுகர்ந்து அலுத்து விட்ட சிற்றின்பத்தையே மீளத் தருதலின், "சிவயோகமேயோகம்; அல்லாத யோகம் - அவயோகம் என்றே அறி" என்றது திருக்களிற்றுப்படி (பா. 74)யும். அச்சிற்றின்பம் போல் துன்பத்தொடு விரவுதலும், வரையறைப்பட்டுக் கழிதலும் இன்றி எல்லையில்லாது புதிதுபுதிதாய்த் தோன்றி என்றும் இன்புறுத்துகின்ற சிவபோகம் முன்பு ஒருகாலும் கண்டறியாத தாகலின், அப்பயனை விளைவிக்கின்ற சிவயோகத்தை, 'நவயோகம்' என்றார். "சாராத அன்பு" என்றதற்குச், 'சாராமைக்கு ஏதுவாகிய அன்பு' என உரைக்க. அதிபோகம் - ஒப்புயர்வற்ற பேரின்ப நிலை. இதனால், 'மேற்குறித்த சிவயோகமாவது இது' என்பதும், 'அஃது இன்ன பயனைத் தரும்' என்பதும் கூறப்பட்டன. சிவயோகம் துரிய நிலையாதலின், அதனால் விளையும் சிவபோகம் துரியாதீத நிலை என்க.*

**122. *தெளிவுரை :-*** *மேற்கூறிய நவயோகத்தை எங்கட்கு அளித்தருளிய நந்தி தேவராகிய சிவபெருமான், அப்பொழுதே உலக முழுதும் தான் ஒழிவற நிறைந்து நிற்கும் மெய்ம்மையையும், மாயோன் முதலிய புத்தேளிராலும் அறியப்படாத தனது சிவலோக நிலையையும், திருமன்றுள் பேரின்ப நடனம் செய்தருளும் தனது எடுத்த திருவடியாகிய பற்றுக்கோட்டினையும், அப்பற்றுக் கோட்டினால் கிடைக்கின்ற அருளாகிய பேரின்ப வெளியையும் அளித்தருளினான் என்று சிவயோக வாயிலாக எமது குருநாதன் எமக்களித்த பேறுகள் இவை என்பது உணர்த்தப்பட்டது.*

***குறிப்புரை :-*** *என்றது, 'அச்சிவயோகத்தானே பராயோக அநுபவம், பதமுத்தி அநுபவம், சீவன்முத்தி அநுபவம், பரமுத்தி அநுபவம் ஆகிய அனைத்து அநுபவமும் உளவாயின' என்றவாறு. பராயோக அநுபவமாவது , அறிவு இச்சை செயல்கள் புறத்துப் பரவுங்*

*கால் காண்பன பலவும் சிவமேயாய்த் தோன்றுதல். பத முத்தி அநுபவமானது, அவ்விடத்து உளவாகும் சிற்றின்ப நுகர்ச்சிகளும் சிவபோகமாகவே விளைவது. சீவன் முத்தி அநுபவமாவது, சிந்தனைக்கு எட்டாத சிவனைச் சிந்தனைக்கு எட்டுபவனாகக் கண்டு வழிபட்டு இன்புறும் அனுபவம். பரமுத்தி அநுபவமானது, அறிவு இச்சை செயல்கட்குப் பிறிதொன்றும் புலனாகாது சிவமே புலனாக, அதன்கண், அழுந்தித் தன்னை இழந்து நிற்பது. இவையெல்லாம் இவ்வுடம்பு உள்ள பொழுதே பெறப்படுவனவே என்க. இவற்றைப் பெற்றோரே, 'அணைந்தோர்' எனப்படுவர். அணைந்தோர் - சிவனது திருவடி நிழலை அணைந்தவர். இவர், 'சீவன் முத்தர்' என வடமொழியிற் சொல்லப்படுவார்.*

> *"பெற்றசிற் றின்பமே பேரின்பமாய் அங்கே*
> *முற்ற வரும்பரி சுந்தீபற"*
>
> *- திருவுந்தியார் - 332*

*எனவும்,*

> *"உடம்புடைய யோகிகள்தாம் உற்றசிற் றின்பம்*
> *அடங்கத்தம் பேரின்பத் தாக்கில்"*
>
> *- திருக்களிற்றுப்படியார். 76*

*எனவும்,*

> *"காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனக்*
> *காணும் அடியார்"*
>
> *- தி. 8 திருவாசகம். பண்டாய. 6*

*எனவும் வருவனவற்றால் இவையெல்லாம் இவ்வுடம்புள்ளபொழுது தானே பெறத்தக்கனவாதல் அறிக.*

> *"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்*
> *சார்தரா சார்தரும் நோய்"*

*என்ற திருக்குறள் - 359 இச்சிவயோக, சிவபோக நிலைகளையே கூறுவது என்பதை,*

> *சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் என்றமையால்*
> *சார்புணர்தல்தானே தியானமுமாம்; சார்பு*
> *கெடஒழுகின் நல்ல சமாதியுமாம்; கேதப்*
> *படவருவ தில்லைவினைப் பற்று.*

*என்று கூறும் திருக்களிற்றுப்படி நூல். இதனால் மேல் தொகுத்துக் கூறப்பட்ட பயனை வகுத்துக் கூறியவாறாதல் அறிக.*

**123. தெளிவுரை :-** குருவருள் பெற்ற பின்னர் உயிரினது வியாபகம் சிவனது வியாபகத்துள் அடங்கி நிற்கும் முறைமையையும்,

123. வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறும்
தெளியும் அவரே சிவசித்தர் தாமே. 12

---

*உயிர் அவனிடத்துச் செய்யும் அன்பாகிய நெகிழ்ச்சி அவனது பேரருளாகிய நெகிழ்ச்சியினுள் அடங்கிநிற்கும் முறைமையையும், உயிரினது அறிவாகிய சிற்றொளி, சிவனது அறிவாகிய பேரொளியில் அடங்கி நிற்கும் முறைமையையும் அநுபவமாக உணர்கின்றவரே சிவனைப் பெற்றவராவர். சிவயோக வழிநின்று சித்தி பெற்றார் இயல்பு கூறப்பட்டது.*

*வெளியில் - ஆகாச வடிவினராகிய சிவத்திடத்தில், "எவர் பராசத்தியைத் தேவியாக உடையவரோ அவர் ஆகாயம்; எவருடைய சத்தி ஆகாயம் எனப் பெயர் உடையதாக விளங்குகிறதோ அவரும் ஆகாயம்" என்று உபபிருங்கணங்களும், "ஆகாசத்திலிருந்து எல்லாப் பொருள்களும் உண்டாகின்றன; முடியும் போதும் ஆகாசத்திலே முடிகின்றன; ஆகாசமே பெரியது; ஆகாசமே முடிவான உறைவிடம்" என்று சாந்தோக்கியமும் கூறுதலின் ஆகாசம் என்பது சிவத்தினை யுணர்த்தும். ஆதலின், சிவத்திடத்தில் என்பது பொருளாம். வெளி - "யோகிகளின் நித்தியத் தானமாகிய வியோமம்" என்று சுருதிகள் கூறுகின்றன; ஆகவே வெளியில் வெளிபோய் விரவுதலாவது பரம வியோமத்தில் வியோமம் கலத்தல் என்பது பொருள்.*

*ஒளியில் ஒளிபோய் ஒடுங்கியவாறும் - சிவ சூரியனது ஞான இச்சாக் கிரியா சத்தியாகிற ஒளியில் ஆன்மாவின் ஞான இச்சாக்கிரியா சத்திகளாகிற ஒளிகள் சென்று ஒடுங்கியவாறும் என்பது; எங்ஙனம் எனின், ஆன்மாவின் சத்திகள் தொழிற்படுவது சிவசூரியனின் சத்திகளாலாதலின் ஒடுங்கும் போதும் தோன்றியதிற் சென்றொடுங்குதல் மரபாதல் காண்க.*

*அளியில் அளிபோய் அடங்கியவாறும் - அருளில் அன்பு சென்று ஒடுங்கியவாறும் என்பது, இறைவன் கருணை எல்லையற்றது. எல்லாவற்றையும் ஒப்ப வியாபித்திருப்பது.* ***அன்பு உயிர்க்குணமாக அருளின் குழந்தையாக ஆன்மாவிடம் அமர்ந்திருப்பது. அது முறுகி வளர்ந்து முதல்வனைப் பற்றி நின்று பரம காரணனுடைய திருவருளில் ஒடுங்குகின்றது. அருளைவிட அதற்கு லயத்தானம் வேறின்றாதலின், இங்ஙனம் எம்மிடம் காணப்படும் சத்தியாகிய ஒளியும், வெளியும், அளியும் எல்லாம் அவனிடமே ஒடுங்குகின்றன என்று அநுபவத்தான்***

124. சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே. 13

---

*அறிபவரே சிவசித்தர். அங்ஙனமின்றி அணிமாதிகளின் மட்டும் நிற்பார் அவசித்தர் எனத் தெளிக.*

*இச்செய்யுட்கு இறைவனுக்குரிய பெருவெளி, பெரு நீதி, பேரறிவு இவற்றில் மனத்தின் இம்முத்தன்மைகளும் சென்று அடங்கின என்று மரபுவழிவாரா உரை கூறுவாருமுளர். அளி முதலியவற்றிற்கு நீதி முதலிய பொருள்கள் அவர்கள் கருத்தாக அமைந்தன.*

***குறிப்புரை :-*** *'அடயோகம் முதலியவற்றால் அணிமாதி ஆற்றல்கள் சித்திக்கப் பெற்றோர் 'சித்தர்' எனப்படினும், அவர் சிவஞானம் பெற்று பிறவியை அறுத்துக் கொள்ளாமையின் அவசித்தரே' என்றற்கு, குருவருளால் சிவஞானம் பெற்றுச் சிவப்பேறு சிந்திக்கப் பெற்றோரை, "சிவசித்தர்" என்றார். நாயனாரும் அத்தகைய சிவசித்தரேயாதல் அறிந்துகொள்க. இதனால், சிவயோக அநுபவத்தில் ஆன்மா வானது தன்னை இழந்து சிவமாய் நிற்கும் அநுபவம் கூறப்பட்டது.*

**124. *தெளிவுரை :-*** *சிவனைப் பெற்றவர் எனப்படுவோர், சிவலோகத்தை இவ்வுலகிலே கண்டவரும், வாக்குகளையும், அவற்றிற்கு முதலாகிய குடிலையையும் தம்முள் அடங்கக் கண்டு நீங்கினவர்களும், அழிவில்லாதவர்களும், மலமாசு அகன்றவரும், மனக் கவலை மாற்றினவரும், எல்லையில் இன்பத்தில் நிற்பவரும் ஆகியவரே. அவர்கள் விடுதலை எய்தியது கருவிகள் முப்பத் தாறினின்றுமாம்.*

***குறிப்புரை :-*** *கருவிகள் முப்பத்தாறாவன சிவ தத்துவம் ஐந்தும், வித்தியா தத்துவம் ஏழும், ஆன்ம தத்துவம் இருபத்து நான்குமாம்.*

*அவற்றுள் சிவ தத்துவம் ஐந்தாவன, 'சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை' என்பன. வித்தியா தத்துவம் ஏழாவன, 'காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை' என்பன. ஆன்ம தத்துவம் இருபத்து நான்காவன, 'சித்தம், புத்தி, அகங்காரம், மனம்' என்னும் அந்தக் காரணங்கள் நான்கும், 'செவி, தோல், கண், நாக்கு, மூக்கு' என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், 'வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம்' என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், 'சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம்' என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், 'ஆகாயம்,*

*வாயு, தேயு, அப்பு, பிருதிவி' என்னும் மாபூதங்கள் ஐந்துமாம். இவை இங்கு இவ்வாறு தோற்ற முறை பற்றிக் கூறப்பட்டன. இவற்றை எல்லாம் நாயனார் பின்னர் விளக்குவார்.*

*கருவிகள் முப்பத்தாறனுள்ளும் ஆன்மா கட்டுண்டு தன்னியல்லை அறியாது அவையே தானாக மயங்கி நிற்கும். அந்நிலை முழுவதும் கழிதலே முத்தி அல்லது விடுதலையாகலின், "தம் முத்தி முப்பத்தாறே" என்றார். முப்பத்தாறே என்றதன்பின் நீக்கப் பொருளில் வந்த ஐந்தாம் உருபும், முற்றும்மையும் தொகுத்தலாயின. மேற்காட்டிய முப்பத்தாறனுள் சிவதத்துவம் ஐந்தும் சுத்த மாயையின் காரியம் எனவும், வித்தியா தத்துவம் ஏழும் அசுத்த மாயையின் காரியம் எனவும், ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் பிரகிருதி மாயையின் காரியம் எனவும் உணர்க. இதனால் தத்துவங்களே மாயாமலமாதல் அறியப்படும்.*

*தத்துவங்கள் முப்பத்தாறின் கூறாகிய தாத்துவிகங்கள் அறுபதனுள் நால்வகை வாக்குகள் உயிர்க்குப் பரம பந்தம் (பெருங் கட்டு) ஆதலின், அவற்றினின்றும் நீங்குதலை முன்னர்க் கூறினார்.*

*இதனால், குருவருளால் பெறும், 'பாசநீக்கம் (சிவப்பேறு)' என்னும் பயன்கள் இரண்டனுள் பாச நீக்கத்தினது இயல்பு வகுத்துரைக்கப்பட்டது.*

*சிவனைப் பெற்றவர் நித்தல், நிமலர், நிராமயர், நீள் பரமுத்தர் ஆதலை, "நமனை அஞ்சோம், நரகத்தில் இடர்ப்படோம், நடலை இல்லோம், ஏமாப்போம், பிணியறியோம், பணிவோ மல்லோம், இன்பமே எந்நாளும் - துன்பமில்லை" (தி.6 ப.98 பா.1) என்பன முதலிய அருட்டிரு மொழிகளான் அறிக.*

*சத்தம் - நாதம். சத்த முடிவு - நாதாந்தம். நாதம் என்றது சர்வான்மாக்களுக்கும் அறிவை எழுப்புவித்து நிற்கின்ற நாதம். இந்த நாததத்துவத்தை மனத்தத்துவத்தாலே தியானித்துக் காணும் முறைமை யுடையவர்கள் சித்தர்கள் ஆவார்கள். இவர்கட்கு என்றும் அழிவில்லை. அதனால் நித்தர். மலம் கெட்டொழிதலின் நிமலர். பற்றாத உள்ளம் உடையலால் நிராமயர். பரமுத்தியாம் பெருநிலை பெறுதலால் நீள்பரர்.*

**125. தெளிவுரை :- *சிவசித்தர்கள் முப்பத்தாறு தத்துவங்களும் முத்தி நிலைக்கு ஏணிப் படிகளாக நிற்க அவற்றில் ஒவ்வொன்றாக ஏறிக் கடந்து, இணையற்ற இன்பவடிவாம் உள்ளொளியாகிய அருளே உருவாய் நின்று, அவ்வருட்கு முதலாகிய சிவத்தையும் கண்டு, பின்***

125. முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியா
ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப அரிய சிவங்கண்டு தான்தெளிந்
தப்பரி சாக அமர்ந்திருந் தாரே. 14

---

*அசைவின்றி அச்சிவமேயாய் இன்புற்றிருக்கின்றார்கள். தத்துவங்களோடு கூடி நின்றே முத்தியை நோக்கி மேற்செல்லல்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'தத்துவங்களை ஒவ்வொன்றாகச் சுட்டியறிந்து அவற்றினின்றும் நீங்குதல் வேண்டும்' என்பதும், 'தத்துவக் கூட்டமே தனக்கு நிலைக்களமாக நின்ற ஆன்மாவிற்கு அவற்றினின்றும் நீங்கிய பின்னர்ச் சிவனது அருளே நிலைக்களமாம்' என்பதும், 'அந்நிலைக்களத்து நீங்காது நிற்பின் அவ்வருட்கு முதலாகிய சிவம் வெளிப்படும்' என்பதும், 'அது வெளிப்பட்டவழி அதனிடத்து அசைவற நிற்கவே அதனால் பெருகி விளைகின்ற இன்பத்தில் மதுவுண்ட வண்டுபோல் ஆன்மா அழுந்தித் தன்னையும் மறந்து நிற்கும்' என்பதும் கூறியவாறாயிற்று. ஆகவே, இதனால், பாசத்தின் நீங்குமாறும், பின்னர்ச் சிவத்தைப் பெறுமாறும், பெற்றவழி இன்புற்றிக்குமாறும் கூறப்பட்டனவாம். இதனுள் "சிவம் கண்டு" என்றது சிவதரிசனம் செய்தலையும், "தான் தெளிந்து" என்றது அதில் அதீதப்படுதலையும் கூறியனவாம்.*

*யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்*
*அதனின் அதனின் இலன்.*

*என்னும் திருக்குற (பா. 341)ளும் தத்துவங்களை ஒவ்வொன்றாகச் சுட்டியறிந்து நீங்குதலின் மேல் நோக்குடைத்தாதல் அறிந்துகொள்க. சேக்கிழாரும், கண்ணப்பர் திருக்காளத்தி மலையின் உச்சியில் இருக்கும் இறைவனைக்காண வேண்டி அம்மலையின் படிகளைக் கடந்தமைக்கு,*

*"பேணுதத் துவங்கள் என்னும் பெருகுசோ பானம்ஏறி*
*ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல"*

*- தி.12 கண்ணப்பர் புராணம் - 103*

*என இத் தத்துவ முத்தரது செயலையே உவமையாகக் கூறமாற்றால் இதனை இனிது விளக்கினமை காண்க.*

**126.** ***தெளிவுரை :-*** *சிவத்தைக் கண்டு அசைவற நின்று அப்பரிசாக அமர்ந்துநின்ற சிவசித்தர்கள் தம்மை அணுவாகச் செய்த மலம் நீங்கப் பெற்றமையால், அங்கு இங்கு என்னாது எங்குமாய்,*

**126.** இருந்தார் சிவமாகி எங்குந் தாமாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே. **15**

---

*இறைநிறைவில் அழுந்தி நிற்பர். அந்நிலையில் அச்சிவன் உயிர்கள் பொருட்டுச் செய்கின்ற செயல்களையும், அச் செயல்கட்கு வாயிலாக அவன் தோற்றுவித்து நிறுத்தியுள்ள காலத்தின் தொழிற்பாட்டினையும் அறியும் ஆற்றலுடையவராய்த் தம்மை இழந்து நிற்றல் வந்தமையால் விளைந்த செயலறுதியிலே இருப்பர்.*

*சிவசித்தர்கள் சிவமாகியும், எங்குந் தாமாகியும் சிவன்செயல் அனைத்தையும் தெரிசித்துக் கொண்டு திரிகால ஞானிகளாய், தற்போதம் கழன்ற செயலற்ற நிலையில் இருந்தார்கள் என்றவாறு. சிவமாகி இருத்தலாவது, ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் போல ஆன்மா சிவமாகியிருத்தலன்று; பின் என்னையோவெனின், பண்ணும் ஓசையும் பழமும் சுவையும் போலக் கலந்து நிற்றலாகிய அவ்வளவே.*

*எங்கும் தாமாகி என்றது முத்தான்மா மல மறைப்பு நீங்கி யாவனாகவே எல்லாப் பொருள்களையும் தம்முட் காண்பானாதலின் இங்ஙனம் கூறப்பெற்றது. அன்றிச் சிவம் போல வியாபகமாய் எல்லாவற்றினும் தாமாகி நிற்றல் அன்று என்க.*

*சிவன் செயல் யாவையும் நோக்கி இருந்தார் என்றது அவன் உள் நின்றுணர்த்த அவன் ஐந்தொழிலையும் தரிசித்து நின்றார் என்றபடி நோக்கி என்ற குறிப்பு அத்துவித நிலையிலும் ஆன்மா ஐந்தொழிலாற்றும் வன்மை அற்றது என்பதை விளக்கி நின்றது.*

*முக்காலத்தியல்பைக் குறித்து அங்கு இருந்தோர் என்றது அருவமாகிய காலம் சார்த்தி அளத்தலான். இறப்பென்றும் எதிர்வென்றும், நிகழ்வென்றும் அறியப்படும் இயல்பினை ஆராய்ந்து, தாம் ஒன்றினும் சாராதே முக்காலத்தும் நித்தியப் பொருளாகிய சிவத்தைச் சார்ந்து அங்கிருந்தார் என்பதாம்.*

*இழவு வந்தெய்திய சோம்பிருந்தார் - என் வினையிலிருந்து ஒழிந்திருத்தலாகிய செயலிழத்தலால் வந்து எய்திய தொழிலற்ற நிலையில் இருந்தார் என்றவாறு. அதாவது சிவத்தைச் சார்ந்திருக்கின்ற நிலையில், சார்ந்திருக்கின்றோம் என்ற உணர்ச்சியும் அற்றுப்போக ஆனந்த வடிவமாகயமர்ந்திருந்தார் என்பதாம்.*

127. சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதும் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடம்
சோம்பர்கண் டார்அச் சுருதிக்கண் தூக்கமே. 16

---

***குறிப்புரை :-*** *"நோக்கி, குறித்து" என்றவற்றிற்கு இவ்வாறுரையா விடில், "இருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே" என்பதற்கு ஒவ்வாமை அறிக. தம்மை இழந்து செயலற்றவரது நிலை தாமத குண மிகுதியால் விளையும் சோம்பலில் நிற்பவர் நிலையோடு ஒத்தல்பற்றி "இருந்தார்.... எய்திய சோம்பே" என்றார். இது, பழிப்பதுபோலப் புகழ்ந்தது. பின்வருவதும் அது. சோம்பு, முதனிலைத் தொழிற்பெயர்; சோம்பு - செயலற்றிருத்தல். இழவு - தற்போதங்கெடல். இதன்கண் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. இதனால், 'சிவத்தைப் பெற்றவர் எல்லா அறிவாற்றலும் உடையராயினும், சிவத்தை அறிந்து அழுந்துதலல்லது பிறிதொன்றும் செய்யார்' என்பது கூறப்பட்டது.*

> *"எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர்ஒன்*
> *றல்லா தறியார் அற"*

*எனத் திருவருட் பயனிலும் ஓதியவாறு அறிக.*

**127. *தெளிவுரை :-*** *செயலறுதியில் நிற்கும் சிவசித்தர்கள் இருப்பதும் கிடப்பதும் மாசொடு படாததாய பரவெளியிலேயாம். ஆகவே, அவர்தம் உணர்வு நிற்கும் இடம், வேதம் எட்டமாட்டாது நின்று விட்ட இடமாம். அதனால், அவர்களும் அவ்வேதத்தை நோக்குதற்கண் மறதியே பெற்றார்.*

***குறிப்புரை :-*** *உலகத்தார் அறியும் பொருள்களில் 'வெளி' எனப்படும் வானமே எல்லை இல்லாததாக அறியப்படுவது அதனால் உண்மையில் எல்லை இல்லாத சிவ பரம்பொருளை, 'வெளி' என்று உருவகித்து நூல்கள் கூறும். அவ்வாறாயினும், 'உலக வெளியின் வேறாய் மேம்பட்டது' என்பது உணர்த்துதற் பொருட்டு, வாளா, 'வெளி' என்னாது, 'பரவெளி' என்று கூறும். இன்னும் அப் பரம்பொருள், ஞானமே வடிவாய் நிற்றலின், 'சிதாகாசம், சிற்பர வியோமம்' என்றெல்லாம் சொல்லப்படும். சிவபரம்பொருளை, 'சிவம், சத்தி' என வேற்றுமை கருதாவிடத்து சிவமே பரவெளியாம். அவ்வாறு வேற்றுமை கருதுமிடத்து, சத்தி பரவெளியாக, சிவம் அதனைத் திருமேனியாகவாயினும், இடமாகவாயினும் பெற்று நிற்கும் பொருளாகச் சொல்லப்படும்.*

*"ஆகாய வண்ணம் உடையாய் போற்றி" (தி.6 ப.57 பா.3) என்றாற் போல்வன வேற்றுமை கருதிக் கூறிய திருமொழிகளாம். இங்கு வேற்றுமை கருதாது கூறியது என்க. சோம்பர் - ஆன்ம சுத்தி பெற்றுச் செயலற்று இருக்கும் சித்தர்கள். தூக்கம் - சும்மா இருக்கும் நிலை.*

*"இருப்பது" என்றது தம்மை இழவாது நின்ற துரிய நிலையையும், ''கிடப்பது'' என்றது, தம்மை இழந்து நின்ற அதீத நிலையையுமாம். இவ்விடம், நாதமாகிய சொல்லைக் கடந்து நின்ற தாகலின், "சுருதி முடிந்திடம்" என்றார். 'முடிந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று "முடிந்த" என்றது, 'இளைத்து நின்ற' என்னும் பொருளது.*

*"..................நால்வேதத் தப்பால் நின்ற*
*சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற*
*சொலற்கரிய சூழலாய்; இதுஉன் தன்மை"*
*- தி.9 ப.5 பா.4*

*எனத் திருமுறையுள்ளும்,*

*"சொல்லும் இடமன்று; சொல்லப் புகும்இடம்*
*எல்லை சிவனுக்கென் றுந்தீபற*
*என்றால்நாம் என்செய்கோம் உந்தீபற"*
*- திருவுந்தியார் 29*

*எனச் சாத்திரத்துள்ளும் கூறப்பட்டமை காண்க.*

*இத்தகையோர்க்குச் சொல்வடிவாய வேதம் முதலிய நூல்களான் ஆகக்கடவது இன்மையின், 'சுருதிக்கண் தூக்கமே கண்டார்' என்றார். தூக்கம் - மறதி; என்றது விரும்பாமையை.*

*"கற்றாரை யான்வேண்டேன்; கற்பனவும் இனி அமையும்" (தி.8 திருவாசகம், திருப்புலம்பல் -3) என்றதூஉம் இந்நிலையில் நின்றமையாலாம். இதனால், அதீத நிலையினது இயல்பு கூறப்பட்டது.*

**128. தெளிவுரை :-** ***தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்? சிவசித்தர் வேதம் முதலாகிய கலைகளை உணர்தலையும் மறந்து நின்றமையால், சிவலோகம் முதலிய பல உலகங்களையும், சிவமுதற் பொருளோடே தாம் என்றும் ஒன்றாய் நிற்கும் பெற்றியையும், அதனானே சிவானந்தம் தமக்கு வேறாய் வந்து விளையாமல், தம் உள்ளே இருந்து ஊற்றெடுத்தலையும் தம் அறிவினுள்ளே விளங்கக்கண்டு வியந்தார்கள். ஆதலின், அவரது பெருமை சொலற் கரிதாம்.***

**128.** தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே. **17**

**129.** எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வா றருள்செய்வன் ஆதி யரன்தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கமே. **18**

---

*சிவலோகம் காணுதல் - மலவாதனையற சிவசாமீப்பியத் தியானமுறல்*

*சிவயோகம் காணுதல் - சாரூப நிலையில் தியானம் செய்தல்*

*சிவபோகம் காணுதல் - ஞானத்துள் அழுந்தி அநந்நியமாய் அனுபவித்தல்*

*குறிப்புரை :- 'தூங்குதல்' என்றது, தம் முனைப்பால் சிவமல்லாத பிற பொருளாகிய தம்மையும், தம்மைச் சார்ந்துள்ள உடம்பு, உலகம் என்பவற்றையும் அறிதலை மறந்து நிற்றலையாம். இதனையே அறிதுயில் எனவும், 'யோக நித்திரை' எனவும், 'தூங்காமல் தூங்குதல்' எனவும் கூறுவர். தம்மையும், தம்மைச் சார்ந்த பாசங்களையும் மறந்திருத்தலால் தூங்குதலும், சிவத்தை உணர்ந்து நிற்றலால் விழித்திருத்தலும் ஆகின்ற இரு நிலைமையும் ஒருங்கு நிகழ்தலை இவ்வாறு உணர்த்துவர் என்க.*

*இதனால், அதீதத்தில் நின்றாரது பெருமை கூறப்பட்டது.*

**129.** *தெளிவுரை :- அனாதியாய் நிற்கின்ற சிவன் ஆதியாய் நின்று ஆன்மாக்களது அறிவின் எல்லையை எவ்வெவ்வளவினவாகக் காண்கின்றானோ அவ்வவ்வளவிற்கேற்பவே அவைகட்குத் தானும் தனது திருவருளைத் தருவன். அவன், நிகரில்லாத அருள்வெளியில் தனது சத்தி துணையாய் நிற்கப் பல்வேறான பொதுச் செயல்களைப் புரிகின்ற, நடுவுநிலையாகிய வானத்தில் உள்ள ஞான சூரியனும், மாணிக்க மணியும் ஆகலின்.*

*குறிப்புரை :- ஒவ்வாத மன்று - எவ்வாற்றானும் தமக்கு யாதொன்றும் ஒப்பாகாத ஞானசபை. புருவ மத்தியாகிய சுழுமுனை என்பர் யோகியர். இருதயாகாசமாகிய தகராகாசம் என்பர் ஞானியர்.*

130. மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே. 19

---

*ஆன்மாக்களினது அறிவு, "களிம்பு" (தி.10 பா.112) எனக் குறிக்கப்பட்ட ஆணவ மல சத்தியினது வன்மை மென்மைகட்கு ஏற்பச் சிறிதாயும், பெரிதாயும் நிற்கும். அதனால் அவ்வறிவு கொண்டு அவற்றால் விரும்பப்படுகின்ற பொருள்களும் இழிந்தனவும், உயர்ந்தனவுமாய் இருக்கும். வேண்டுவனவற்றையன்றி வேண்டாதவனவற்றையே அளித்தால் பயன்படாது ஒழியுமாதலின், வேண்டுவோர் வேண்டுவன வற்றையே அவன் தருகின்றான் என்க.*

*"வேண்டுவோர் வேண்டுவதே ஈவான் கண்டாய்" - தி.6 ப.23 பா.1 என்று அருளிச் செய்ததும் இதனையேயாம். பின் இரண் டடிகளில் வெளிப்படைப் பொருள் இனிது விளங்கிக் கிடத்தலின், உள்ளுறைப் பொருளே உரைக்கப்பட்டது. 'பொதுச்செயல்' என்றது, 'தன்பொருட்டன்றி ஆன்மாக்கள் பொருட்டுச் செய்யும் செயல்' என்றபடி. 'அச்செயல்களை வேண்டுவார் வேண்டுமாறே செய்தலின், அஃது அவனுக்குக் கோட்டம் ஆகாது' என்றற்கு நடுவு நிலைமையைக் குறித்தார். அதனால், 'பெத்தான் மாக்களுக்கு உலகியலையும், முத்தான்மாக்களுக்கு வீட்டினையும் தருகின்றான்' என்பது போந்தது. படைப்புப் பல படியாய்க் காணப்படுதற்கும் இதுவே காரணம் என்பது உணர்க. "செவ்வானில் செய்ய செழுஞ்சுடர்" எனவந்த செம்மை இரண்டனுள் முன்னது நடுவு நிலைமையையும், பின்னது திரிபின்மையையும் குறிக்கும் குறிப்பு மொழியாய் நின்றன. திரிபின்மை மெய்யறிவின் இயல்பாகலின், அதுவே அதற்குப் பொருளாய் உள்ளது. செழுஞ்சுடர் சூரியன், மாணிக்கம் ஒப்புயர்வற்ற தன்மையைக் குறிக்க வந்த உவமை. இறுதிக்கண் 'ஆகலான்' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால், 'சொல்லொணாப் பெருமையை உடைய அதீத வாழ்வினைச் சிவன் பலர்க்கும் அளியாது, ஒரு சிலர்க்கே அளித்தல் என்னை' என்னும் ஐயம் அறுக்கப்பட்டது. இதனுள் உள்ளுறை உவமமாய் நின்ற பின்னிரண்டடிகளால் திருக்கோயிலுள் இருக்கும் திருமேனியது சிறப்பிற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது என்க. காண்பான் அறிவு தனக்கு எல்லை எவ்வாறு அவ்வாறு அருள்*

**131.** பெற்றார் உலகிற் பிரியாப் பெருநெறி
பெற்றார் உலகிற் பிறவாப் பெரும்பயன்
**பெற்றார்அம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு**
பெற்றார் உலகுடன் பேசாப் பெருமையே. 20

---

*செய்வான் - தம்முள்ளே காண்பவனாகிய சிவயோகியின் பரிபாக விசேடமும், சிவஞான முதிர்ச்சியும் எவ்வாறோ அவ்வாறு எழுந்தருளி அருள் வழங்குவான் என்பதாம்.*

**130. *தெளிவுரை :-*** *மாணிக்க மணிக்குள்தானே மரகத ஒளி வீசி னாற்போலவும், மாணிக்க மாளிகைக்குள்ளே மரகதநிலை காணப் பட்டாற்போலவும், மாற்றுயர்ந்த பொன்னாலாகிய அம்பலத்துள் நின்று அவன் ஆடுகின்ற* ***திருக்கூத்தினை விரும்பி வணங்கினோர் பெற்ற பேற்றினை இவ்வளவினது என்று சொல்லுதல் கூடுமோ!***

***குறிப்புரை :-*** *மேல், "அரன்" எனவும், "உமை" எனவும் குறிக்கப் பட்ட அப்பன், அம்மை இவரது நிறம் முறையே செம்மையும், பசுமையும் ஆகலானும், அம்மையது வடிவம் அப்பனது வடிவிற் பொருந்தி நிற்றலானும் "மாணிக்கத்துள்ளே... மாடமாய்" என்றார். ஆணிப் பொன் பிற பொன். எல்லாவற்றின் மாற்றினையும் அளத்தற்கு உரையாணியாய் நிற்கும் பொன், 'மன்றினில் நின்று' என ஒரு சொல் வருவிக்க. ''என்ன'' என்ற வினா, 'எத்துணையாவன' என்னும் பொருட்டாய், அளவின்மை குறித்து நின்றது. மாணிக்கம் - செந்நிற இரத்தினம், சிவம். மரகதம் - பச்சை நிற இரத்தினம் உமாதேவி.*

**131. *தெளிவுரை :-*** *மேற்கூறிய ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தினை அம்மன்றினின்றும் நீங்காது பேணித் தொழுகின்ற பேற்றினைப் பெற்றவர், இவ்வுடம்பு நீங்கியபின் சிவனோடு ஒன்றாகின்ற பெருநிலையையும், அதனால் விளையும் பிறவாமை யாகிய பெரும்பயனையும், அப்பயன் வடிவான திருக்கோயில் வழிபாட்டினை ஒழியாது செய்யும் பெரிய பேற்றினையும், அப்பேற்றினால் உலகத்தாரொடு பேசாது நிற்கும் பெருமையையும் பெற்றவராவர்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின் அவர்க்கு மீளப் பிறவிக்கு வித்தாகிய வினை உண்டாதல் இல்லை' என்பதாம். 'பேசுதல்' என்பது, 'அளவ ளாவுதல் - தொடர்புறுதல்' என்றவாறு. 'அஃது இல்லை' எனவே,* ***உலகத்தில் நின்றே அதனின் நீங்கிநிற்றல் பெறப்பட்டது****.*

**132.** பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்
அருமை எளிமை அறிந்தறி வாரார்
ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கி
இருமையுங் கெட்டிருந் தார்புரை அற்றே. **21**

---

132. ***தெளிவுரை :-*** *பிறரது பெருமை சிறுமைகளை அறிந்து அவற்றிற்கு ஏற்ப அரியனாயும், எளியனாயும் நிற்கின்ற முறைமையை எங்கள் சிவபெருமான் அறிவதுபோல அறிவார் பிறர் யார்? ஒருவரும் இல்லை. அதனால், மேற்குறித்த அவன் அன்பர் இவ்வொரு பிறப்பிலே, ஆமை தனது ஐந்துறுப்புக்களையும் தனக்குக் காவலாய் உள்ள ஓட்டிற்குள் அடக்குதல்போல, புலன் அவா ஐந்தனையும் தமக்கு அரணாய் உள்ள அவனது திருவருளினுள் அடக்கி, இம்மையின்பம், மறுமையின்பம் இரண்டையும் உவர்த்துக் குற்றம் அற்று இருக்கின்றனர்.*

***குறிப்புரை :-*** *"பெருமை, சிறுமை" என்பவை உலகியல் பற்றிக் கூறியவை. உலகியலில் பெரியராய்த் தன்னை நினையாதவர்க்கு இறைவன் அரியனாயும், உலகியலில் சிறியராயினும் தன்னை நினைவார்க்கு எளியனாயும் நிற்றலை,*

*"கனவிலும் தேவர்க் கரியாய் போற்றி*
*நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி"*
*- தி.8 போற்றித் திருவகவல். 143. 44*

*என்னும் திருவாசகத்தான் அறிக. 'அவனது இத்தன்மையை அறிந்து, அன்பர்கள் முனைப்பின்றி அவன்பால் அடங்கி நிற்பர்' என்றற்கு இவற்றை எடுத்தோதினார். 'கண்டறிவார், உண்டறிவார்' என்பன போல 'அறிந்தறிவார்' என்பது ஒரு சொல்லாய் நின்றது.*

*"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்*
*எழுமையும் ஏமாப் புடைத்து"*
*- குறள் 126*

*எனத் திருவள்ளுவர் புலனடக்கத்திற்கு இவ்வுவமையைக் கூறினார்.*

*"புலனடக்கித் தம்முதற்கண் புக்குறுவர் போதார்*
*தலன்நடக்கும் ஆமை தக"*

*எனத் திருவருட்பயனிலும் (பா.94) கூறப்பட்டமை காண்க. 'கேட்டிருந்தார்' என்பது பாடம் அன்று. புரையற்று - பொள்ளலற்று, கேள்வியால் தோட்கப்படாத செவியராய் இருந்தார்.*

**133.** புரைஅற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்
திரைஅற்ற சிந்தைநல் ஆரியன் செப்பும்
உரையற் றுணர்வோர் உடம்பிங் கொழிந்தாற்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே. 22

---

*இம் மூன்று திருமந்திரத்தானும், "அதீத நிலையில் நிற்போர்க்கு அறிவு இச்சை செயல்கள் உலகிடைச் செல்லுமாயின், அவை திருக்கோயில் வழிபாடு முதலிய அன்பு நெறியிற் செல்லுதலல்லது பிறிதாற்றிற் செல்லா" என்பது கூறப்பட்டது. இந்நிலை ஞானசம்பந்தர் முதலிய நால்வரது செயல்களால் இனிது விளங்கும்.*

**133.** *தெளிவுரை :-* குற்றம் அற்ற பாலில் உள்ள நெய் அப் பாலினுள் வேற்றுமையின்றிக் கலந்து நிற்றல்போல, ஞானாசிரியன் அறிவுறுத்த சொல்லை அலைவற்ற உள்ளத்தில் வேற்றுமை அற்றுக் கலந்து நிற்குமாறு உணர்ந்து அப்பொருளில் அழுந்திநிற்பவர், தம் உடம்பு இங்கு வீழ்ந்த பின்னர் அவரது ஆன்மாத் தன் இயற்கை வியாபகத்தைப் பெற்று, என்றும் வேற்றுமையின்றிக் கலந்து நிற்கின்ற மெய்ப்பொருளேயாய் விடும். தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்.

*குறிப்புரை :-* 'குற்றம்' என்றது வேற்றுப் பொருளாகிய பிரையை, பாலில் பிரை சேருமாயின், அஃது அதனைத் திரித்து அதன்கண் உள்ள நெய்யை வேறாகச் செய்யுமாதலின் அதனைப் 'புரை' என்றார். **உரை அறுதலாவது, சொல்லாய் வேறு நில்லாது பொருளாய் உணர்வோடு ஒன்றுதல்;** என்றது அநுபூதி நிலையை. எனவே, 'ஆசிரியனது அருண்மொழியை, கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் அளவிற் கொண்டொழியாது, நிட்டை நிலையில் அநுபவமாகக் கைவரப் பெற்றவர், உடம்பு நீங்கியபின் சிவனோடு இரண்டறக் கலத்தலாகிய சாயுச்ச பரமுத்தியை எய்துவர்' என்றவாறாம். 'கரையற்ற சோதியாய்' என்றார். பின்வரும் பொருட்குத் தோற்றுவாயாதற்கு. ஆக்கச்சொல் தொகுத்தல். சத்து - மெய்ப்பொருள்; சிவம். இக்கலப்பு முன்பே உள்ளதன்றிப் புகுவதன்றாகலின், 'அஃது இயற்கையாய் விடும்' என்றற்கு, "கலந்த சத்தாமே" என்றார். "அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே" (சிவஞானபோதம் சூ.8) என்றார் மெய்கண்ட தேவரும்.

இதனால், இவ்வுலகில் அதீதத்தைப் பெற்றோர் பின்னர் எய்தும் பயன் கூறப்பட்டது.

"காயம் ஒழிந் தால்சுத்த னாகி....

..................................

134. சத்த முதல்ஐந்துந் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரும்
அத்தம் இதுகுறித் தாண்டுகொள் அப்பிலே. 23

---

*மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீழ் இருப்பன்*
*மாறாத சிவானுபவம் மருவிக் கொண்டே"*[2]

*எனச் சிவஞான சித்தியானும் (சூ.11.1) இவ்வாறே கூறப்பட்டது.*

134. ***தெளிவுரை :-*** *சடமாகிய சத்தம் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்) முதலிய தன்மாத்திரைகள் முதலாக உள்ள கருவிகள் யாவும், சடமாகிய தத்தம் காரணத்துள்ளே சென்று சேர்ந்துவிடுமாயின் அதன்பின் சித்தாகிய ஆன்மாவிற்குச் சித்தாகிய சிவத்தையன்றிச் சாருமிடம் வேறுண்டோ? இல்லை. அதனால் அந்நிலையில் அப் பயனைத் தரக் கருதியே குருவாய் வந்து ஆண்டுகொண்ட திருவருளாகிய வெள்ளத்தின் செயலால், தூய பரவெளியில் விளங்கும் சிவமென்னும் ஞாயிறாகிய பேரொளியிடத்து ஆன்மா என்னும் விண்மீனாகிய சிற்றொளி சென்று சேர்ந்து ஒன்றாய்விடும். ஒடுங்கும் முறையை விளக்குகிறார்.*

***குறிப்புரை :-*** *பின்னர், 'சித்திற்குச் சித்து இடம்' என்பது வருதலால், முன்னர், 'சடத்திற்குச் சடம் இடம்' என்பது பெறப்பட்டது. 'ஒரு பொருள் தன்னினப் பொருளொடு சேர்தலன்றி, வேற்றினப் பொருளொடு சேராதாயினும், சித்தாகிய ஆன்மா, சடமாகிய தத்துவங்களோடு சேர்ந்திருந்தமை, மதுவுண்டவனுக்கு அம்மயக்கத்தால் உளதாகும் தலைதடுமாற்றம் போல, ஆணவ மலமாகிய குற்றச் சார்பினால் உளதாயது' என்பதும், 'அக்குற்றம் நீங்கவே, ஆன்மா அம் மயக்கம் நீங்கப் பெற்றுச் சிவத்தை அடையும்' என்பதும் உணர்த்துதற் பொருட்டுச் சடத்திற்குச் சடமும், சித்திற்குச் சித்துமே இடமாதலைக் குறித்தார். இன்னும், "சுடரில் சுடர்சேரும்" என்றதும் அதுபற்றி, இதனால், உயிருக்கு உலகை நோக்கிச் செல்லுதல் செயற்கையும், சிவத்தை நோக்கிச் செல்லுதல் இயற்கையும் ஆதல் பெறப்பட்டது. இச் செயற்கை இயற்கைகளை,*

*"சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்*
*சிறைசெய் புலன்உணர்வின் தீர்ந்து - சிறைவிட்*
*டலைகடலிற் சென்றடங்கும் ஆறுபோல் மீளா*

*துலைவில்அரன் பாதத்தை உற்று".*

என *(சிவஞானபோதம் சூ.8)* விளக்கினார் மெய்கண்ட தேவர்.

> *"தூநிழல் ஆர்தற்காருஞ் சொல்லார் தொகும்இதுபோல்*
> *தானதுவாய் நிற்கும் தரம்"*
>
> *- திருவருட்பயன் 61*

என்பதை திருவருட்பயனும் ஆன்மாவிற்குச் சிவத்தைச் சார்தலே இயற்கை என்பதை விளக்கிற்று.

'இருபொருள் ஒன்றாதல் எவ்வாறு' என்பார்க்கு விளக்கமாக, "சுடரில் சுடர் சேரும்" என்றார். சுடரில் சுடர் சேர்தல், நீரில் நீர் சேர்தல் போல, ஒரு பொருள்தானே பிற பொருளது இடையீட்டால் இரண்டாய் நின்று, அவ்விடையீடு நீங்கியபின் முன்போல ஒன்றாதலாகிய ஐக்கியம் அல்லாமை உணர்க. சுடரில் சுடர் சேர்ந்தவழியும் சேர்ந்தது பொருளால் வேறேயாய் நிற்குமாற்றை,

> "வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
> வெய்யோனை ஆகாத மீன்போல"
>
> *- சிவஞானபோதம் சூ.8*

என விளக்கினார் மெய்கண்டதேவர். இவ்வுண்மை அறியாதார், உடம்பு நீங்கியவழி ஆன்மா சிவத்தொடு சேர்ந்து ஒன்றாதல், குடம் உடைந்த வழி, அக்குடத்தினுள் நின்ற ஆகாயம், புறத்து நின்ற ஆகாயத்தோடு சேர்ந்து ஒன்றாதல் போலும் எனத் தமக்குத் தோன்றியவாறே உரைப்பர். தத்துவங்களுள் ஒடுக்க முறையில் முன் நிற்பன மாபூதங்களே யாயினும், அவை ஒடுங்கும் இடமாதல் பற்றியும், நிலம் நீர் முதலிய பூதங்கள் ஒன்றின் ஒன்று ஒடுங்கும் என்றல் சிவாகம நெறியாகாமை பற்றியும் என்க. உருவகமாய் வந்த அப்பு, ஆகுபெயராய் நின்றது. அருளையுடையோன் செயலை அருளின் செயலாகவே கூறினார். "அப்பில்" என்பதில் இல், ஏதுப் பொருட் டாகிய ஐந்தாம் உருபு.

இதனால், 'மேற்கூறியவாறு கரையற்ற சோதி கலந்த சத்தாமாறு இது' எனச் சிவசாயுச்ச பரமுத்தியில் ஆன்மா நிற்கும் நிலை கூறப்பட்டது.

**135. *தெளிவுரை :-* கடல்நீரில் ஒன்றாய் நிற்கும் உவர்ப்புப் பின் ஞாயிற்றின் வெப்பத்தால் அந்நீரின் வேறாய் உருவெய்தி 'உப்பு' எனப் பெயர்பெற்ற அப்பொருள், அந்நீரில் சேர்ந்தவழி அவ்வுருவொழிந்து**

135. அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே. 24

136. அடங்குபே ரண்டத் தணுஅண்டஞ் சென்றங்
கிடங்கொண்டதில்லை இதுவன்றி வேறுண்டோ
கடந்தொறும் நின்ற உயிர்கரை காணில்
திடம்பெற நின்றான் திருவடி தானே. 25

---

*வேறுகாணப்படாது அந்நீரோடு ஒன்றாகும் முறைமை போல, உயிர் சிவத்தோடு என்றும் ஒன்றாயே இருத்தற்குரியதாயினும், ஆணவ மலத்தின் தடையால், அநாதியே வேறாய்ப் பசுத்தன்மை எய்திச் சீவன் எனப் பெயர்பெற்று மாயை கன்மங்களையும் உடையதாய் உழன்று, அத்தடை நீங்கப்பெற்ற பின்னர்ச் சிவத்தோடு சேர்ந்து வேறாய் நில்லாது ஒன்றாய்விடும். சீவன் சிவத்துள் அடங்குவதை உணர்த்துகிறார்.*

***குறிப்புரை :-*** *செய்யுட்கு ஏற்ப, "உப்பெனப் பேர்பெற்று உருச்செய்த" என்றாராயினும் 'உருச்செய்து உப்பெனப் பேர் பெற்ற' என ஓதுதல் கருத்தென்க. "அவ்வுரு" என்றதில் "உரு" என்றது பொருளை. "கூடியது" என்பதில் "ஆயின்" என்பது வருவித்து, "கூடியதாயின்" என உரைக்க. "செப்பினில்" என்பதில், இன் எதுகை நோக்கித் தவிர்வழி வந்த சாரியையாய் நின்றது. 'செப்பிடில்' எனப் பாடம் ஓதுதலும் ஆம்.*

*இஃது **'ஆன்மாச் சிவத்தோடு ஒன்றாதலே இயற்கை; வேறு நிற்றலே செயற்கை'** என்பதனைத் தக்கதோர் உவமங்காட்டி வலியுறுத்தவாறு உப்பு, நீரின் குணமாகாது வேறு பொருளேயாதல் அறிந்துகொள்க.*

**136.** ***தெளிவுரை :-*** *எல்லாப் பொருளும் அடங்கி நிற்கும் இடமாகிய 'அண்டம்' என்னும் பேருருண்டையுள் அணு என்னும் சிறியதோர் உருண்டை அடங்கி நிற்பதல்லது, அதற்குப் புறம்பாய் வேறோரிடத்தில் நிற்றல் இல்லை. அதுபோலப் பலவகை உடம்புகளை எடுத்து அவற்றின் அளவாய் நிற்கின்ற சிற்றுயிர்களுக்குப் பிறவிக் கடலினின்றும் நீங்கி அலமராது நிலைத்து நிற்கும் கரையை அடைவதாயின் அக்கரை, என்றும் அலமரல் இல்லாது ஒருபெற்றியே*

137. திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ்சிந் திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே. 26

---

*நிற்பவனாகிய சிவபெருமானது திருவடியே. இதுவன்றி வேறு கரை உண்டோ?*

***குறிப்புரை :-*** *அண்டம் - உருண்டை; "அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்" (தி.8 திருவண்டப்பகுதி. 1) என்றார் மணிவாசகரும். 'இடங்கொண்ட தன்றி வேறில்லை' எனச் சில சொல் வருவித்து உரைக்க. "இதுவன்றி உண்டோ" என்பதனை இறுதிக்கண் வைத்து உரைக்க. கடம் - குடம். அஃது உவமையாகு பெயராய், உடம்பைக் குறித்தது.*

*இதனால், சிவம் பெரிய பொருளாதலும், உயிர் அதனிற் சிறிய பொருளாதலும் உணர்த்தி, மேற்கூறியவாறு சீவன் சிவத்துள் அடங்குமாறு கூறப்பட்டது. 'திடம்பெற நின்றானே' என்று ஒழியாது 'அவன் திருவடிதானே' என்றதும், சிவனது பெருமைக்கண் சீவன் சிறியதோர் அளவில் அடங்கும் என்றற்காம். இதனானே, உயிர்கட்குப் பயன் தருபவன் இறைவன் என்னாது, அவனது அடியே என நூல்கள் கூறுவதன் உண்மையும் விளங்கும். இன்னும் சித்தாந்த முத்தி, 'அடிசேர் முத்தி அல்லது அருள்சேர் முத்தி' எனப்படுமாறும் இதனானே விளக்கப்பட்டதாம்.*

**137. *தெளிவுரை :-*** *உண்மை நூல்களைத் தெரிந்தெடுத்து அவற்றில் சொல்லப்பட்ட பொருள்களைச் சிந்தித்து அறுதியிட்டுச் சொல்லுமிடத்து, மெய்ப்பொருளைத் தம் உள்ளத்தில் ஒருதலையாக உணர்ந்து பற்ற வேண்டுவோர்க்குச் சிவபெருமானது திருவடி ஒன்றே பரம்பொருளும், வீட்டுலகமும், துறக்க உலகங்களுமாகும். ஆதலின், அதனைத்தவிர உயிர்கட்குப் பற்றுக்கோடு வேறில்லை. சிவம், சிவலோகம், செல்கதி, அடைக்கலம் சிவனது திருவடியே.*

***குறிப்புரை :-*** *என்றது, 'மிகப்பெரியோனாகிய சிவபெருமானது பேராற்றலுள் ஒரு சிறு கூறுதானே எண்ணில்லாத உயிர்கட்கும் எல்லாமாய் நின்று பயன்தரும்' என்றவாறு. இதனானே, சத்தியைத் திருவடியாகக்கொண்டு, 'அத்திருவடி தானே எல்லாம் செய்ய வல்லது' எனவும், 'உயிர்கட்கு வீடுபேறாய் நிற்பது அத்திருவடி நிழலே' எனவும் கூறுதல் மரபாயிற்று என்பதும் உணர்ந்து கொள்ளப்படும். சத்தியே*

**138.** தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே. 27

---

*திருவடி. எனவே,* ***'ஞானசத்தி, கிரியாசத்தி' என்பனவே இரண்டு திருவடிகளாதல் உணரப்படும்.*** *இச்சை இவ்விரண்டினும் விரவி நிற்பதாம்.*

*கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅ ரெனின். - குறள் 2*

*என்பது முதலாகத் திருவள்ளுவ நாயனாரும் திருவடியையே பலவிடத்தும் கூறினார். திருநாவுக்கரசர், 'திருவடித் திருவிருத்தங்கள், திருவடித் திருத் தாண்டகங்கள்' என்பவற்றால் திருவடிகளின் பெருமையைப் பலபட விரித்தருளிச் செய்தார். மாணிக்கவாசகர் தி.8 திருவெம்பாவையின் இறுதித் திருப்பாட்டில் திருவடியே எல்லாமாய் நின்று ஐந்தொழில் செய்வனவாக அருளிச்செய்தார். இன்னும் திருமுறைகளில் யாண்டும் திருவடிப் பெருமையே பேசப்படுதல் வெளிப்படை. இவ்வாற்றால், 'யாவரும், யாவர்க்கும் சிவபெருமானது திருவடியே பற்றாதல் உணர்ந்து அதனைப் பற்றி வாழ்தல் வேண்டும்' என்பது பெறப்பட்டது. சிவலோகமே திருவடி. செல்கதி - மறுபிறவியில் சென்று அடையக் கூடிய இடம். தஞ்சம் - பற்றுக்கோடு.*

*இதனால் திருவடியது சிறப்புக் கூறும் முகத்தால் சிவனது சிறப்பு வகுத்துணர்த்தப்பட்டது. இதனானே* ***சிவநெறிக்குப் பொருளாவது யாண்டும் சிவனது திருவடியே என்பதும் முடித்துக் கூறப்பட்டதாம்.***

**138. *தெளிவுரை :-*** *'பெத்தநிலை நீங்கும் பருவத்துச் சிவன் குருவாய் வந்து தனது திருவடி ஞானத்தை வழங்குவான் எனவும், அத் திருவடி ஞானத்தைப் பெற்றபின் நிகழ்வன இவை' எனவும் முறைபடக்கூறி முடித்தபின், அப்பேறு அனைத்தையும் வழங்கிய குருமூர்த்தியை மறத்தல் பெரிதும் உய்தியில்லதோர் குற்றமாம் ஆதலின், அக்குற்றத்திற்கு ஆளாகாது என்றும் அக்குருமூர்த்தியை மறவாது, 'சிவம்' எனவே கண்டு வழிபடல் வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார்.*

*ஞான குருவினது திருவுருவைச் சிவனது அருட்டிருமேனியாகக்*

*காணுதல், அவரது திருப்பெயரைச் சிவனது திருப்பெயராகிய திருவைந்தெழுத்தோடு ஒப்பதாகக் கொண்டு எப்பொழுதும் சொல்லுதல், அவர் இடும் கட்டளை மொழிகளைச் சிவனது அருளாணையாகப் போற்றிக் கேட்டல், அவரது திருவுருவை உள்ளத்துள் உள்குதல் என்னும் இவைகளே உண்மை ஞானத்தைத் தருவனவாகும். காண்டல், கேட்டல், சிந்தித்தல், செப்பல்.*

***குறிப்புரை :-** ஐய உணர்வும், திரிபுணர்வும் ஞானம் ஆகாமையின், மெய்யுணர்வை, ''தெளிவு'' என்றார். தெளிவு தருவனவற்றைத் தெளிவாகப் பாற்படுத்து ஓதினார். ஞானாசிரியரைச் சிவமாக உணராது நம்மனோருள் ஒருவனாக எண்ணுதல் ஆணவ மலச் சார்பினால் நிகழ்வதாகலின், அச்சார்புடையார்க்கு உண்மை ஞானம் விளங்க மாட்டாது என்பதனை ஈற்றில் நின்ற தேற்றேகாரத்தால் பெற வைத்தார். அதனால் மலம் நீங்கப் பெற்றார்க்கு இவை இயல்பால் நிகழும் என்பது பெற்றாம்.*

*'உலகிற்கு ஆசிரியரும், அடைந்தவர்க்கு ஆசிரியரும், இருமை ஆசிரியரும்' என ஆசிரியர் முத்திறப்படுவர். அறம் முதலிய உறுதிப் பொருள் நான்கனுள் ஒன்றையாயினும், பலவற்றையாயினும் பற்றி முதலும், வழியும் ஆன நூல்களையாயினும், உரைகளையாயினும் செய்தோர் உலகிற்கு ஆசிரியர். இவர் திருவள்ளுவரும், ஞான சம்பந்தர் முதலிய சமயாசாரியர் நால்வரும் போல்வர். இனி உறுதிப் பொருள்களை வரலாற்று முறையாற் கேட்டுணர்ந்து தம்மை அடைந்தவர்கட்கு அவற்றைக் கேட்பித்தல் சிந்திப்பித்தல்களைச் செய்விப்போர் அடைந்தவர்க்கு ஆசிரியர். இவர்களை, 'தாதாரகுரு' என்பர். இவர் சந்தான குரவர் நால்வருள் மறைஞானசம்பந்தர் போல்பவர். மேற்கூறிய இருதன்மையும் உடையோர் இருமை ஆசிரியர். இவர் மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியர், உமாபதி சிவாசாரியர் போல்பவர். இம்மூவருள்ளும் சில குடியினர்க்கு மட்டும் ஆசிரியராய்க் குலகுருவாய் நிற்பாரும் உளர்.*

*இவருள் உலகாசிரியர் தவிர ஏனையோருள் எழுத்தும், சொல்லும் அவற்றின் வடிவளவில் கற்பிப்பவர் 'கணக்காயர்' எனப் படுவார். 'உபாத்தியாயர், ஓதுவிப்பவர்' என்றெல்லாம் கூறுதல் இவரையே. பலவகைச் செய்யுட்களையும், நூல்களையும் பொருள் உணர்வு பெறக் கற்பிப்பவர் 'கற்பிக்கும் ஆசிரியர்' எனப்படுவார். 'வித்தியா குரு' என்றல் இவரையே. மணவினை, பிற்கடன் (உத்தர கிரியை, அந்தியேட்டி) முதலியவற்றை முன்னின்று செய்விப்பார்.*

'பார்ப்பார்' எனவும், 'ஐயர்' எனவும் சொல்லப்படுவர். இவருள்ளும் சிலகுடியினர்க்கு மட்டும் உறுதி உணர்த்திக் குல குருமாராய் நிற்ப வரும் உளர் என்க. 'புரோகிதர்' என்றல் இவரையேயாம். இவர், தெய்வங்கட்குச் சீற்றந்தணிவிக்கும் கடன் முறைகளையும் செய்வர் என அறிக.

சமய விசேட தீக்கைகளால் சிவவழிபாட்டினைப் பிறர்க்கு அளிப்பவர்களும், திருக்கோயில்களில் சிவனது திருமேனிகளை உலக நலத்தின் பொருட்டு வழிபடுகின்றவர்களும் 'வழிபாட்டாசிரியர்' எனப்படுவர். 'கிரியாகுரு' எனப்படுவார். இவரே இனிச் சமய விசேட தீக்கைகளைப் பெற்றுச் சிவதன்மதத்திலும், சிவயோகத்திலும் பயின்றதன் பயனாக மலபரிபாகம் வரப்பெற்றவர்க்கு அப் பரிபக்குவத்தை அறிந்து நோக்கம், பரிசம் முதலியவற்றால் பாசத்தை அறுத்தலாகிய நிருவாண தீக்கையின்வழிச் சிவனது திருவடி ஞானத்தை உணர்த்துவோர் 'அருளாசிரியர்' எனப்படுவார். 'ஞானகுரு' என்றும், 'ஞானாசிரியர்' என்றும் சொல்லப்படுவோர் இவரே. இங்குக் கூறப்பட்டு வந்த ஆசிரியன்மார்கள் அம்முறையானே ஒருவரில் ஒருவர் உயர்ந்தோர் அனைவரிலும் உயர்ந்தோர் அருளாசிரியாராகிய ஞானகுருவே. சிவன் ஆசானாய் நிற்றல் இந்த ஞானகுருவிடத்தேயாம். அதனால், 'குருவேசிவன்' (தி.10 6 ஆம் தந்திரம்) என்றற்கு முழுதுரிமை உடையவர் ஞானாசிரியரே.

"எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" - நறுந்தொகை

"தெய்வத்தைப் போல மதிக்கிற்பான்"

- தொல். பாயிரம் உரை நச்சினார்க்கினியம்

என்றாற் போல ஏனை ஆசிரியன்மாரையும் இறைவனாகக் கூறுதல் முகமனுரையேயாம். அதனால், இத்திருமந்திரத்துள் "குரு" என்றது அனைவரிலும் மேலாய ஞானகுருவையே என்பது இனிது விளங்குதல் காண்க. இவரது சிறப்பினை இவ்வாறே,

ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்
நாதன்றன் பணி; ஞானி நாலினுக்கும் உரியன்;
ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்
யோகி; கிரி யாவான்தான் ஒண்கிரியை யாதி
யானஇரண் டினுக்குரியன்; சரியையினில் நின்றோன்
அச்சரியைக் கேஉரியன் ஆதலினால், யார்க்கும்

**139.** தானே புலன்ஐந்துந் தன்வச மாயிடும்
தானே புலன்ஐந்துந் தனவசம்போயிடும்
தானே புலன்ஐந்துந் தன்னில் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான்தனைச் சந்தித்தே. **28**

---

*ஈனமிலா ஞானகுரு வேகுருவும் இவனே*
*ஈசனிவன் றானென்றும் இறைஞ்சி ஏத்தே.*

*எனச் சிவஞான சித்தி (சூ.12.5) வகுத்துணர்த்தல் காண்க.*

**139. *தெளிவுரை :-*** *ஒருவன், 'நான்' என்னும் முனைப்பு இன்றி ஞானாசிரியரை அடுத்து நிற்பானாயின், அவனது ஐம்புல ஆசை தன்னியல்பில் உலகப் பொருள்கள் மேல் செல்லாது அவன் வழிப்பட்டுச் சிவனிடத்திற் செல்வதாய்ப் பள்ள மடையில் வீழ்ந்து பயனின்றிக் கழிந்துகொண்டிருந்த நீர் அம்மடை அடைக்கப்பட்ட வழித் தேங்கி நின்று மேட்டுமடையிற் போய்ப் பாய்ந்து பயன்தருதல் போலத்தன் அறிவினிடத்தே மாறுவதாகும்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின் ஞானத்தைப் பெற்றவனும், பயிற்சி வயத்தால் மீள அஞ்ஞான வயப்படாதிருத்தற்கு ஞானாசாரியரை விட்டு அகலாது நின்று வழிபடுதல் வேண்டும்' என்பது குறிப்பெச்சம். "புலன்" அவற்றின்மேல் செல்கின்ற ஆசை. அஃது ஒன்றேயாதல் பற்றி, "தானே" என ஒருமையாற் கூறினார். "தன்வசம்" இரண்டனுள் முன்னது, மாணவன்வசமும், பின்னது ஆசையின் வசமுமாம். தன் வசம் போயிடும் - சுதந்திரம் நீங்கப்பெறும். "தன்னில்" என்றதும், மாணவன் அறிவையே தன்முனைப்பு இழந்து செல்லுதலைத் "தனித்து" என்றார். 'தனித்துத் தானேயாய்' என மாற்றி ஆக்கம் வருவித்து உணர்க. எம் பிரானை - எங்கள் சிவபெருமானை. ஞானத்தை உணர்த்துபவன் அவனேயாகலின், குருவை இவ்வாறு கூறினார். சந்தித்து - தலைப்பட்டு என்றது 'பிரியா நின்று' என்றவாறு 'சந்தித்தலால்' என்பது 'சந்தித்து' எனத் திரிந்து நின்றது. 'சந்தித்தலால் ஆயிடும், போயிடும், மாறும்' என மேலே கூட்டுக.*

**140. *தெளிவுரை :-*** *நான் எப்பொழுதும் உடலால் பணிவது எனக்கு ஞானாசிரியராகிய நந்தி பெருமானது இரண்டு திருவடிகளையே. மனத்தால் நினைப்பது அவரது அருட்டிரு வுருவத்தையே. வாயாற் சொல்வது அவரது திருப்பெயரையே. என் அறிவினுள் நிலைத்து நிற்பது அவரது பொன்மொழியே.*

140. சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையால்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே. 29

141. போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினார்
நாதன் நடத்தால் நயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந்தார் விண்ணே. 30

---

***குறிப்புரை :-*** *'ஆதலின் பிறரும் தம் ஆசிரியரிடத்து நிற்க' என்பது குறிப்பெச்சம். செம்மை - திரிபின்மை. அதனை உடையது அருள் என்க. 'தாளிணை, மேனி, நாமம்' என்பவற்றில் இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. திருவை நாமத்திற்கும் கூட்டுக. 'வந்தித்தல்' என்பது இங்கு வழுத்துதலாகிய வழிபாட்டின்மேல் நின்றது.*

**141. *தெளிவுரை :-*** *உண்மை ஞானத்தை வழங்குகின்ற அருளுரு வினரான எங்கள் நந்தி பெருமானைத் தங்கள் நெஞ்சில் மறவாது நினைந்து ஞானம் முதிரப் பெற்றவர்களே இவ்வுலகில் சிவபெருமானது ஆனந்த நடனத்தால் கண்ணும் களிகூர வாழ்ந்து, இவ்வுடம்பு நீங்கிய பின் வேதமும் போற்றுமாறு சென்று பரவெளியை அடைந்தார்கள்; ஏனையோர் மீளவும் பிறவிக்கு ஆளாயினர்.*

***குறிப்புரை :-*** *"புண்ணியராயினார்" என்புழித் தொகுக்கப்பட்ட பிரிநிலை ஏகாரத்தால் ஏனையோரது நிலை குறிக்கப்பட்டது. இதனால், 'இப்பயனைப் பெறவேண்டின், பிறரும் அருளுருவான தம் ஆசிரியரை நினைக' என்பது குறிப்பெச்சமாய் நிற்றல் அறிக.*

## 5. யாக்கை நிலையாமை

142. மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்
திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே. 1

*சிவாகமப் பொருள்களைப் பின்னர் விரிப்பார் முதற்கண் அவற்றுள் சிறப்புப் பற்றி ஞானப்பாதப் பொருள்களையே அவற்றுள்ளும் முத்தி நிலையாகிய உண்மைப் பொருள்களையே - தொகுத்துக் கூறிய நாயனார், இவ்வரும்பெரும் பேற்றைப் பெறுதற்குரிய பிறப்பு மக்கட் பிறப்பேயாகலானும், அதுதானும் நிலையின்றிப் போவதாகலானும் அஃது உள்ள பொழுதே அப் பயனைப் பெற விரைதல் வேண்டுமன்றி, அவ்வுடம்பையே பொருளாகக் கருதி அதன்கண் பற்றுச் செய்தல் கூடாது என்றற்கு முதற்கண் யாக்கை நிலையாமையை, இருபத்தைந்து திருமந்திரங்களால் கூறுகின்றார். திருவள்ளுவ நாயனாரும் இவ்வாறு நிலையாமை (குறள். அதிகாரம். 34) பலவற்றையும் உணர்த்தினமை காண்க.*

142. ***தெளிவுரை :-*** *இரண்டு பாண்டங்கள் ஒருவகை மண்ணாலே செய்யப்பட்டனவாயினும், அவற்றுள் ஒன்று தீயிலிட்டுச் சுடப்பட, மற்றொன்று அவ்வாறு சுடப்படாதிருப்பின் அவற்றின்மேல் வானத்தினின்றும் மழை விழும்போது, சுடப்பட்டது கேடின்றி நிற்க, சுடப்படாதது கெட்டு முன்போல மண்ணாகிவிடும். மக்கள் குறிக்கோள் இல்லாது வாழ்ந்து, பின் இறக்கின்றதும் இதுபோல்வதே.*

***குறிப்புரை :-*** *'குறிக்கோள்' என்றது மக்கட் பிறப்பின் பயனாகிய மெய்யுணர்வை. அதனை, எடுத்த பிறப்பிலே அடையக் கருதுவார் அதன் பொருட்டு யோகம் முதலியவற்றால் உடம்பை நெடுங்காலம் நிலைப்பெறச் செய்வாராகலின், அத்தகையோரது உடம்பைத் தீயினாற் சுடப்பட்ட பாண்டத்தோடும், அக்கருத்தில்லாரது உடம்பைத் தீயினாற் சுடப்படாத பாண்டத்தோடும் உவமித்தார். இதனானே, பின்னர்க் கூறப்படும் காய சித்தி உபாயத்திற்கும் தோற்றுவாய் செய்யப்பட்டதாம்.*

*"எழிலை ஆழ் செய்கைப் பசுங்கலன் விசும்பின்
இன்துளி படநனைந் துருகி
அழலைஆழ் புருவம் புனலொடும் கிடந்தாங்கு"*

*- தி.9 ப.17 பா.7*

**143.** பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செல்லார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே. **2**

---

*என இவ்வுவமையைப் பிற்றை ஆசிரியர், திருவருள் கைவரப் பெற்றார், பெறாதாரது உணர்வுகட்குக் கூறினார். இனி இங்கும் அவ்வாறே கொண்டு, "மண்" என்றது உடம்பையும், "பாத்திரம்" என்பது அதனை ஏற்று ஒட்டி நிற்கின்ற உயிரது உணர்வையும் குறிப்பனவாக வைத்து உரைத்தலும் ஒன்று. இவ்வுரைக்கு மீண்டும் மண்ணாதல் மீளப் பிறவியில் வீழ்தலும், இறத்தல் பயனின்றி ஒழிதலுமாகும். ஆகவே, அவ்வாறாகாது, மட்பாண்டத்தை மழைவரும் முன்னே சுட்டுக் கொள்ளுதல் போல, மக்கட் பிறப்பில் அமைந்த உணர்வை அப்பிறப்பிற்கு இறுதிக் காலம் வருதற்கு முன்னே அருளுணர்வுடைய தாக்கிக் கொள்க. என்பது இதனாற் கூறப்பட்ட பொருளாகும். இரண்டுரைக்கும் விண்ணின்று விழும் வீர் உடம்பை வீழ்த்துகின்ற இறுதிக் காலமேயாம்.*

*இதனால், மக்கட் பிறப்பின் பயனை அடைய முயலுதலைப் பின்னர்ச் செய்வோம் என நினையாது, விரைந்து செய்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது.*

*"அன்றறிவாம் என்னா தறம் செய்க" - குறள். 36*

*எனவும்,*

*நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை*
*மேற்சென்று செய்யப் படும் - குறள். 335*

*எனவும் திருவள்ளுவ நாயனாரும் கூறினார்.*

**143. *தெளிவுரை :- பல பண்டங்களை நிரப்பிவைத்துள்ள இல்லம் போல்வதாகிய உடம்பு, உழைத்துத் தளர்ந்து வீழ்ந்தொழியுமாயின், அவ்வுழைப்பால் பயன் கொண்ட மனைவியரும், மக்களும் அவ்வுடம்பினுள் நின்ற உயிராகிய இல்லத் தலைவரைப் பின் தொடர்ந்து செல்லும் வலியிலராவர். இனிச் சுற்றமும் பொருளும் முதலாயினதாம் அவருடன் செல்லுமோ எனின், அவர் மேற்கொண்டு செய்த தவமும், அதன் பயனாக உண்டாகிய ஞானமும் அல்லது பிறிதொன்றும் அவரோடு உடன் செல்லாது.***

***குறிப்புரை :-** 'அதனால், பெண்டிர், மக்கள் முதலியோர்க்கு*

**144.** ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. **3**

---

*உழைத்தலை விடுத்து, அவ்விரண்டையுமே பெற முயல்க' என்பதாம், 'பெண்டிர் மக்களேயன்றிப் பிறவும் செல்லா' என்றற்கு, "நடவாதே" எனப் பின்னரும் கூறினார்.*

*கொல்லத் தான்நம னார்தமர் வந்தக்கால்*
*இல்லத் தார்செயல் ஆவதென் ஏழைகாள்!*
*நல்லத் தான்நமை ஆளுடை யான்கழல்*
*சொல்லத் தான்வல்லி ரேல்துயர் தீருமே. - தி.5 ப.43 பா.1*

*என்றார் அப்பரும்.*

**144.** ***தெளிவுரை :-*** *உடம்பு விழுந்தபின் இல்லத்தளவில் செயற்படுவோராகிய பெண்டிரும், மக்களுமேயன்றி, ஒருங்கு திரண்டு பலவற்றைச் செய்து முடிப்போராகிய ஊரவரேனும் பிரிந்தோருடன் செல்ல வல்லரோ எனின், அல்லர்; அவரும் அப்பெண்டிர் மக்களுடன் ஒருங்கு கூடி முன்னர்ப் பேரொலி உண்டாக அழுது, பின் அது காறும் அவர்க்குக் கூறி அழுத இயற்பெயர் சிறப்புப் பெயர்களை ஒழித்து, 'பிணம்' என்னும் பெயரையே சொல்லி எடுத்துக்கொண்டு போய், 'சூரை' என்னும் ஒருவகை முட்செடிகள் நிரம்பியுள்ள காட்டில் வைத்து எரித்து விட்டுத் தீட்டுப் போதற்கு நீரினுள் மூழ்கித் தூய்மை பெற்றாராய்ப் பின்பு அவரைப் பற்றிய நினைவும் இல்லாதவரே ஆவர்.*

***குறிப்புரை :-*** *'ஆதலால், ஊரவரையும் உறுதி என்று நினையாது, மேற்குறித்தவற்றைப் பெற முயல்க' என்பதாம். ஊர், ஆகுபெயர், ஊர், 'பிணம்' என்று பேரிட்டு எடுத்தலை,*

*தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணாதே*
*பெட்டப் பிணமென்று பேரிட்டுக் - கட்டி*
*எடுங்களத்தா என்னாமுன் ஏழைமட நெஞ்சே*
*நெடுங்களத்தான் பாதம் நினை.*

*- திருவெண்பா. 8*

*என ஐயடிகளும் கூறினார்.*

*இன்னும் அவர்,*

*இல்லும் பொருளும் இருந்த மனையளவே;*
*சொல்லும் அயலார் துடிப்பளவே - நல்ல*

**145.** காலும் இரண்டு முகட்டலக் கொன்றுள
பாலுள் பருங்கழி முப்பத்தி ரண்டுள
மேலுள கூரை பிரியும் பிரிந்தால்முன்
போலுயிர் மீளப் புகஅறி யாதே. **4**

---

*கிளைகுளத்து நீரளவே; கிற்றியேல் நெஞ்சே*
*வளைகுளத்துள் ஈசனையே வாழ்த்து.*

*- திருவெண்பா. 14*

*என அருளிச் செய்தமை அறிக. இல் - மனைவி. துடிப்பு - அடக்கம் செய்ய விரைதல்.*

**145.** *தெளிவுரை :- உடம்பாகிய இல்லத்திற்குத் தாங்கும் தூண்களும் (நடக்கின்ற கால்கள்) இரண்டு உள்ளன. மேட்டு உத்தரமும் (முதுகெலும்பு) ஒன்று உண்டு. அவ்வுத்தரத்தின் இருபக்கங்களிலும் சார்த்தப்படுகின்ற பருத்த கழிகளும் (விலா எலும்புகளும் - பக்கத்திற்குப் பதினாறாக) முப்பத்திரண்டு உள்ளன. மேலே வேயப்பட்ட கூரைகளும் (பலவகையான தோல்கள்) உள்ளன. இருப்பினும், உயிர் இந்த இல்லத்தில் நிலைத்திருப்பதில்லை; என்றாயினும் ஒரு நாள் புறப்பட்டுப் போய்விடும். போய்விட்டால் மீள வந்து முன்போல இதனுட் புகுதல் இல்லை.*

*குறிப்புரை :- 'கால் இரண்டும் முகட்டு அலக்கு ஒன்றும் உள' எனவும், 'மேற்கூரையும் உள' எனவும், 'உயிர் பிரியும்; பிரிந்தால் முன்போல் மீளப் புக அறியாது' எனவும் கொள்க. 'நில்லாது பிரிதலும், பிரிந்தால் மீளப்புகாமையும் உடைமையாலும், வேறாகச் சென்று புகப்படுவது இத்தன்மைத்தாய மக்களுடம்பேயாய் இருக்கும் என்றல் கூடாமையாலும் அங்ஙனம் பிரியுங்காலம் வருவதற்கு முன்பே மேற்குறித்தவற்றைத் தேடிக்கொள்க' என்பதாம்.*

*என்பினாற் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந்*
*திதுநம் இல்லம்*
*புன்புலால் நாறுதோல் போர்த்துப்பொல் லாமையான்*
*முகடு கொண்டு*
*முன்பெலாம் ஒன்பது வாய்தல்ஆர் குரம்பையின்*
*மூழ்கி டாதே*
*அன்பன்ஆ ரூர்தொழு துய்யலாம் மையல்கொண்*
*டஞ்சல் நெஞ்சே.*

*என (தி.2 ப.79 பா.8)ச் சம்பந்தரும்,*

**146.** சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற
ஆக்கை பிரிந்த தலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
காக்கைக்கு வுண்பலி காட்டிய வாறே. 5

**147.** அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்

---

*கால்கொடுத் திருகை யேற்றிக் கழிநிரைத் திறைச்சி மேய்ந்து*
*தோல்படுத் துதிர நீரால் சுவரெடுத் திரண்டுவாசல்*
*ஏல்வுடைத் தா அமைத்தங் கேழுசா லேகம் பண்ணி*
*மால்கொடுத் தாவி வைத்தார் மாமறைக் காட னாரே.*

*(தி.4 ப. 33 பா.4) எனவும்,*

"இருகாற் குரம்பை இதுதான் உடைய திது பிரிந்தால்
*தருவாய் எனக்குன் திருவடிக் கீழொர் தலைமறைவே"*

*(தி.4 ப. 113 பா.2) எனவும், அப்பரும் உடம்பை இல்லமாக உருவகித்தல் காண்க.*

**146.** *தெளிவுரை :- 'சீக்கை என்னும் வாயொலி உண்டாயிற்று; செயற்படுகின்ற உறுப்புக்கள் மடிந்து கிடையாகி விட்டன. உடம்பு உயிர்த் தொடர்பை நீக்கி விட்டது. எலும்புகள் வீங்கிவிட்டன' என்று பல அறிகுறிகளைச் சொல்லி, மூக்கில் கைவைத்துப் பார்த்து ஐயம் நீங்கி, மூடி எடுத்துக் கொண்டு போய் ஊரார் காக்கைக்குப் பலி ஊட்டிய அளவில் முடிவதாகும் உடம்பின் நிலைமை.*

*குறிப்புரை :- மேற்காட்டிய ஐயடிகள் வெண்பாவில் "தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணாமல்" என வந்ததனை நோக்குக. 'காக்கைக்குப் பலியிடுதல் ஒரு சடங்கு' என்பர். "காக்கைக்கே இரை யாகிக் கழிவரே" (தி.5 ப.90 பா.5) என்னும் அப்பர் திருமொழியால் உடல் மண்ணில் இடப்பட்டுப் பின் காக்கைக்கு இரையாதலும் கொள்ளப்படும். "முது காட்டில் காக்கை உகக்கும் பிணம்" (மூதுரை) என்ற ஔவையார் திருமொழியும் காணத்தக்கது. இனி, 'இன்னோரன்னவை முறைப்படி அடக்கம் செய்யப்படாத உடம்பின் நிலைமையைக் குறித்தன' என்று ஒழித்தலுமாம்.*

**147.** *தெளிவுரை :- உணவு சமைத்தற்கு வேண்டுவனவற்றை ஈட்டிக் கொணர்ந்து வைத்த தலைவர், சமைத்தாயின பின்பு அவ்வுணவை உண்டார்; பின் தம் இல்லக்கிழத்தியாரொடு தனிமையில்*

இடப்பக்க மேஇறை நொந்ததிங் கென்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே. 6

**148.** மன்றத்தே நம்பிதன் மாடம் எடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினான்
மன்றத்தே நம்பிமுக் கோடி வழங்கினான்
சென்றத்தா வென்னத் திரிந்திலன் தானே. 7

---

*இருந்து சிலவற்றை உசாவுதல் செய்தார்; அச்செயலுக்கிடையே, உடம்பில் இடப்பக்கம் சிறிது நோகின்றது என்று சொல்லி, அது நீங்குதற் பொருட்டு ஓய்வு கொள்ளுதற்குப் படுத்தார்; படுத்தவர் படுத்துவிட்டவரே யாயினார்; மீள எழுந்திருக்கவில்லை.*

*குறிப்புரை :-* 'இவ்வாறாகின்றது சிலரது வாழ்க்கை' என்றவாறு. 'நிலையாமை வரும் காலத்தை அறிந்தார் இல்லை; அதனால், செய்ய வேண்டுவதை விரைந்து செய்தலே அறிவுடைமை' என்பதாம்.

**148.** *தெளிவுரை :-* நம்பி (சிறந்த ஆடவன்) ஒருவன் தன் முயற்சி யாலே பெரும் பொருள் ஈட்டிப் பலரும் வியக்கப் பல மேல் நிலைகளோடு கூடிய மாளிகையைக் கட்டினான். அவன் அதனைக் கட்டியதும் வெற்ற வெளியான இடத்திலேதான், அவ்விடத்திற்றானே நான்கு பேர் சுமக்கின்ற ஒரு பல்லக்கைப்பெற்று அதில் ஏறினான். அங்கு அப்பொழுது அவன் தன் மனைவிக்கும், மகனுக்கும் ஊர்த் தோட்டிக்கும் ஒவ்வொரு புத்தாடையை வழங்கினான். ஆயினும், பலர் நின்று, 'தலைவனே' என்று கூப்பிட்டுக் கதறவும், திரும்பாமலே போய்விட்டான்.

*குறிப்புரை :-* 'எத்துணைப் பெருஞ் செல்வத்தாராயினும் 'இறந்தார்' என்னும் இகழ்ச்சியைப் பெறாதொழிந்தவர் இல்லை என்றவாறு.

*மலைமிசைத் தோன்றும் மதியம் போல் - யானைத்*
*தலைமிசைக் கொண்ட குடையர் - நிலமிசைத்*
*துஞ்சினார் என்றெடுத் தூற்றப்பட் டாரல்லால்*
*எஞ்சினார் இவ்வுலகத் தில்.* - நாலடியார் 21

என்று அறநூல் கூறுதலும் காண்க. "சிவிகை" என்றது, புகழ்வது போலப் பழித்தல். "முக்கோடி" என்றது சிலேடை.

**149.** வாசந்தி பேசி மணம்புணர் தம்பதி
நேசந் தெவிட்டி நினைப்பொழி வார்பின்னை
ஆசந்தி மேல்வைத் தமைய அழுதிட்டுப்
பாசந்தீச் சுட்டுப் பலியட்டி னார்களே. **8**

**150.** கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற
நெய்யட்டிச் சோறுஎண்ணும் ஐவரும் போயினார்
மையிட்ட கண்ணாளும் மாடும் இருக்கவே
மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. **9**

---

**149.** ***தெளிவுரை :-*** *குருக்கத்திக் கொடியின் கீழ்க் களவிற் கலந்து, பின் கற்பு நெறியில் மணம் செய்துகொள்கின்ற தலைவனும், தலைவியும் தலைநாளில் இருந்த காதல், நாள்செல்லச் செல்லத் தெவிட்டுவதாய் விடப் பின்பு ஒருவரை ஒருவர் நினைப்பதையும் விட்டு விடுவர். இறுதியில் பாடைமேல் வைத்துக் குறைவில்லாமல் அழுது, தங்கள் அன்போடு அவரையும் நெருப்பினால் பரித்துப் போக்கிவிட்டுத் தெய்வமாக வைத்துப் படையல் இடுவார்கள்.*

***குறிப்புரை :-*** *'இறவாதிருந்தால் தான் பெறுவது என்னை?' என்றற்கு முன்னிரண்டு அடிகளைக் கூறினார். வாசந்தி - குருக்கத்தி, இது களவிற்குரிய இடமாக இலக்கியங்களில் குறிக்கப்படும். 'முதற் கண் மிக்க காதலுடையராய் இருந்தார்' என்பது உணர்த்தற்கு இக்களவு முறையை எடுத்தோதினார். 'மணம் புணர்ந்தப் பதி' என்பது பாடம் அன்று. ஆசந்தி - பாடை. "பாசம்" என்றது, "பாசம் பரஞ்சோதிக்கு" (தி.8 திருவெம்பாவை - 2) என்பதிற்போல், 'அன்பு' எனப் பொருள் தந்து 'அன்பு', 'நார்' எனப்படுதலும் உணர்க. 'பாசமும்' என்னும் எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. அன்பை அறவே விட்டொழிதலை, அச் சுடுதலோடு ஒன்றாக ஓதினார்.*

**150.** ***தெளிவுரை :-*** *உடல் நிலையை நாடியால் ஆய்ந்துணர்வோர் அவ்வாறு ஆய்ந்து கைவிட்டுவிட, அதன்பின் அறிவு அழிந்து, உடலாகிய தேர்க்கு அச்சாய் இருந்த உயிர் நீங்கிவிட, சோற்றை நெற்கலந்து சுவைபட உண்டு வாழ்வனவாகிய ஐம்பூதக் கூறுகளும் அழிவன வாயின, அப்பொழுது, முன்பு, உடம்பால் தழுவப்பட்டிருந்த மனைவியும், செல்வமும் முன்போலவே இருக்கவும், அவ்வுடம்பு அவர்களை விட்டு வேறிடத்திற்குப் போக விடைபெறுவதுதான் கண்டது.*

***குறிப்புரை :-*** *'கண்டது' என்பது சொல்லெச்சம், "கை விட்டு"*

151. பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற
ஒன்பது வாசலும் ஒக்க அடைத்தன
துன்புறு காலந் துரிசுற மேன்மேல்
அன்புடை யார்கள் அழுதகன் றார்களே. 10

152. நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே. 11

---

*என்பதை 'கைவிட' எனத் திரிக்க, உடம்பைத் தாங்கி நடத்துதலின், உயிரை "அச்சு" என்றார். இஃது ஏகதேச உருவகம்.*

*"நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்"* - *திருவெண்பா. 1*

*என்று அருளினார் ஐயடிகளும், 'நெய்யட்டி உண்டும், மையிட்ட கண்ணாளோடு இன்புற்றும், செல்வத்தால் சிறப்பெய்தியும் நிற்பன வெல்லாம் உடம்பு உள்ள துணையுமே; ஆனால், அவ்வுடம்பு நிலைத்தல் இல்லையே' என்றபடி.*

**151.** *தெளிவுரை :- தீய ஊழ் விரைய வந்தமையால், தங்க நிழல் தரும் பந்தல்போல்வதாகிய உடம்பு நிலைகெட்டுவிட்டது. அதனால் அதற்குள் கருவூலம் போல இருந்த உயிர், காவலற்றுக் கொள்ளை போகும் நிலையை (யமதூதுவர் கொண்டு செல்லும் நிலையை) அடைந்துவிட்டது. பந்தலில் ஒன்பது வாயில்கள் அமைக்கப் பட்டிருந்தன; அவை அனைத்தும் அடைபட்டுவிட்டன. அன்புடைய சுற்றத்தார் என் செயவல்லார்! தொடர்ந்து அழுததோடு போய்விட்டனர்.*

*குறிப்புரை :- இத்திருமந்திரம் பிசிச் செய்யுள் உவமேயத்தை உவமானப் பொருளாற் குறிப்பித்துக் கூறுவது (தொல். பொ. 488). இவ்வாறு வருவன இந்நூலிற் பல உள. பின்வந்த 'சித்தர்' என்போர் இம்முறையைப் பெரிதும் கைக்கொண்டனர். துரிசு, விரைவுப் பொருட்டாகிய, 'துரிதம்' என்பதன் சிதைவு. நிலையாக நிற்கும் இடம் அன்மையால், உடம்பை 'வழியிலே தங்கும் பந்தல்' என்றார். திருவள்ளுவரும், 'துச்சில்' (திருக்குறள் 340) என்றார். 'மனைவி முதலாயினார் உண்மையில் அன்புடையர்களாயினும், அவர்களால் நிலையாமை விலக்க ஒண்ணாது' என்றபடி. 'அதனால், இறைவனைத் துணையாகப் பற்றுதலே நன்று' என்பதாம்.*

153. முப்பதும் முப்பதும் முப்பத் தறுவரும்
செப்ப மதிளுடைக் கோட்டையுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோட்டை சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஒட்டெடுத் தார்களே. 12

---

152. ***தெளிவுரை :-*** *ஒருவன் நமது நாட்டிற்கே தலைவன் தான்; 'அவன் நம் ஊரவன்' என்பதில் நமக்குப் பெருமைதான்; ஆயினும், நடைமுறையில் நிகழ்வது, அவனும் காட்டுக்குப் போதற்குரிய ஒரு பல்லக்கின் மேல் ஏறி, நாட்டில் உள்ளோர் பலர் பின்னே நடந்து செல்ல, முன்னே பறைகள் பல கொட்டச் செல்லுகின்ற முறைமை தான்; வேறில்லை.*

***குறிப்புரை :-*** *'காட்டுச் சிவிகை' என்பது அடைவேறுபடுத்துப் பொருள்புலப்படுத்தல். இதனை, 'வெளிப்படை' (வெளிப்படுத்தல்) என்பர். இங்ஙனங் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு. 'நிகழ்வது' என்பது சொல்லெச்சம். "நாட்டுக்கு நம்பி" என்றது, சுட்டளவாய் நின்றது. 'நம்பியும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. 'அரசராயினும் நிலையாமையைக் கடக்கமாட்டார்' என்றதாம்.*

**153.** ***தெளிவுரை :-*** *வினையாகிய மதிலால் சூழப்பட்ட உடம்பாகிய உட்கோட்டையில் வாழ்வன தொண்ணூற்றாறு தத்துவ தாத்துவிகங்கள், அவை அனைத்தும் அம்மதில் சிதைந்தால் ஒருசேர விரைய நீங்கும். முப்பது + முப்பது + முப்பத்தாறு = தொண்ணூற்றாறு.*

## தொண்ணூற்றாறு

*சைவ சமயச் சித்தாந்த நூல்கள் கூறும் தத்துவங்கள் முப்பத்தாறு. அவை கருவிகள் எனப்பெறும். தாத்துவீகங்கள் அறுபது. அவை கருவிக் கூறுகள் எனப்படும். ஆகக் கூடுதல் தொண்ணூற்றாறாகும். அவையாவன,*

| | | | |
|---|---|---|---|
| *1.* | *ஐம்பூதங்கள்* | *- நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்* | *- 5* |
| *2.* | *தன்மாத்திரைகள்* | *- சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்* | *- 5* |
| *3.* | *ஞானேந்திரியங்கள்* | *- மெய், வாய், கண், மூக்கு, செவி (அறிவுக்கருவிகள்)* | *- 5* |

| | | | |
|---|---|---|---|
| *4. கன்மேந்திரியங்கள்* | *- கருவாய், எருவாய், கால், கை, வாய் (செயற்கருவிகள்)* | *- 5* | *36 தத்துவங்கள்* |
| *5. ஆன்மதத்துவங்கள்* | *- மனம், புத்தி, சித்தம், அகங்காரம்* | *- 4* | |
| *6. வித்யாதத்துவங்கள்* | *- காலம், நியதி, வித்தை, கலை, அராகம், புருடன், மாயை* | *- 7* | |
| *7. சிவதத்துவங்கள்* | *- சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம்* | *- 5* | |
| *8. பிருதிவியின் கூறுகள்* | *- மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை* | *- 5* | *60 தாத்து-வீகங்கள்* |
| *9. அப்புவின் கூறுகள்* | *- நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை* | *- 5* | |
| *10. தேயுவின் கூறுகள்* | *- ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல்* | *- 5* | |
| *11. ஆகாயக் கூறுகள்* | *- குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சர்யம்* | *- 5* | |
| *12. வாயுக்கள் (ஒவ்வொரு பணிக்கும் உடலில் ஒரு வாயு, கொட்டாவி விட, தும்ம, கண் இமைக்க, எருவாய், வாயு வெளியேற)* | *- பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன்* | *- 10* | |
| *13. நாடிகள்* | *- இடைகலை, பிங்கலை, கழுமுனை, காந்தாரி, அத்தி, சுகுவை, அலம்புடை, சங்குனி, வைரவன், குகுதை (குரு)* | *- 10* | |

| | | |
|---|---|---|
| *14. ஆகாய வழி ஆசைகள்* | *- பொருள், மகன், உலகம்* | *- 3* |
| *15. சோத்திராதியின் விடயங்கள்* | *- சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்* | *- 5* |
| *16. வாக்காதி விடயங்கள்* | *- வசனம், கமனம், - தானம், விசர்க்கம், ஆனந்தம்* | *- 5* |
| *17. பிரகிருதியின் குணங்கள்* | *- சாத்விகம், இராசதம், தாமதம்* | *- 3* |
| *18. விந்துவின் வழிவாக்கு* | *- சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி* | *- 4* |
| | ***ஆகக் கூடுதல்*** | ***96*** |

***அந்தக்கரணங்கள் நான்கு :***

| | |
|---|---|
| *மனம்* | *- ஐம்புலன்களைப் பற்றும் தன்மையது* |
| *புத்தி* | *- உறுதிப்படுத்தும் தன்மையது* |
| *சித்தம்* | *- சிந்தித்து நிச்சயிக்க உதவுவது* |
| *அகங்காரம்* | *- அகங்கரித்து எழுச்சியை ஏற்படுத்துவது* |
| *ஐவர்* | *- மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள்*<br>*அறிவுக்கருவிகள் - ஞானேந்திரியங்கள் - இவை நுகர்வன, பற்றுவன.* |
| *ஐம்புலன்கள்* | *- சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.* |

## தத்துவங்கள் தோன்றும் முறை விளக்கம்




*இவ்வாறு கேவலத்தில் ஆணவ மலத்தில் மூழ்கிக் கிடந்த ஆன்மாவுக்கு மாயையில் இருந்து குடிலை 'மோகினி' மான் ஆகிய 36 தத்துவங்களால் தனு, கரண, புவனங்களைக் கொடுத்து, அவரவர் வினை பிராப்தம், அதாவது நுகர வேண்டிய வினைகளுக்கு ஏற்ப போகங்களையும் கூட்டுவித்து, இந்த பெத்த நிலையை, பிறவியை இறைவன் கொடுத்துள்ளான். இனிப் பிறவிப் பெருங்கடல் நீந்தப் பார்ப்போம். முக்தி அக்கரையில் உள்ளது.*

**154.** மதுவூர் குழலியும் மாடும் மனையும்
இதுவூர் ஒழிய இதணம தேற்றிப்
பொதுவூர் புறஞ்சுடு காடது நோக்கி
மதுவூர வாங்கியே வைத்தகன் றார்களே. 13

**155.** வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள்
அச்சக லாதென நாடும் அரும்பொருள்
பிச்சது வாய்ப்பின் தொடர்வுறும் மற்றவர்
எய்ச்சக லாநின் றிளைக்கின்ற வாறே. 14

---

***குறிப்புரை :-*** *செப்ப மதில் - செம்மையான மதில். மதில் இன்றிக் கோட்டை இன்மையால், மதில் சிதைதலை, 'கோட்டை சிதைதல்' என்றார். 'தத்துவதாத்துவிகங்களின் காரியமே உடம்பு' என்பதும், காரியம் தோற்றமும், முடிவுமாகிய எல்லைகளை உடையன ஆதலின், உடம்பாகிய காரியம் வினையின் எல்லையையே எல்லையாக உடையது என்பதும், 'அதனால், அவ்வினை நீங்கவே, உடம்புநீங்கும்; அதனால் நாடும், ஊரும் துணையாகா' என்பதும் கூறியவாறு.*

**154.** ***தெளிவுரை :-*** *எவன் ஒருவனையும் ஊரார் அவன் மனைவியும், செல்வமும், மாளிகையும் ஊரிலே நின்றுவிட, ஒரு நடைப்பரண்மேல் ஏற்றி, ஊர்க்குப் பொதுவாய்ப் புறத்தே உள்ள சுடுகாட்டை நோக்கிச் சுமந்து சென்று, உள்ளத்தில் அன்பு மேம்பட்டு எழ எடுத்து வைத்துவிட்டுப் போவதையே பார்க்கின்றோம்.*

***குறிப்புரை :-*** *'அதற்குமேல் அவர்களால் என்ன செய்ய இயலும்! ஆகவே, நாட்டுக்கு நாயகனாகியும், ஊருக்குத் தலைமகனாகியும் இருக்க முயல்வதனால் பயன் என்னை' என்பதாம். மது, தேன் போன்ற அன்பு. இதணம் - பரண்; ஈண்டு நடைப் பரணாகப் பாடையை உணர்த்திற்று.*

**155.** ***தெளிவுரை :-*** *இறந்தவனது உடம்பை ஊரார் கொண்டுபோய்ப் புறங்காட்டில் வைத்து நீங்கியதைக் காணும் பொழுது, என்றும் அச்சுப்போல உடன் இருந்து உதவும் என்று அறிவுடையோர் அறிந்து விரும்புகின்ற அந்த அரிய பொருளாகிய இறைவன் ஒருவனே பேரருள் காரணமாக அவரைப் பின்தொடர்ந்து செல்வான். பிறர் யாவரும் ஒன்றும் செய்யமாட்டாது இளைத்து வருந்துகின்றவர்கள் தாம்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின் அவனையே நாடுக' என்பது குறிப் பெச்சம். 'பிச்சு, எய்ச்சு' என்பன, 'பித்து, எய்த்து' என்பவற்றின் சிதைவு. அச்சு - உயிர்.*

**156.** ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும்
ஊர்த்துறைக் காலே ஒழிவர் ஒழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட் டெரிமூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே. 15

**157.** வளத்திடை முற்றத்தோர் மாநிலம் முற்றுங்
குளத்தின்மண் கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தால்அவை ஒடென்று வைப்பர்
உடலுடைந் தால்இறைப் போதும் வையாரே. 16

---

156. ***தெளிவுரை :-*** *கல்லென்று ஆரவாரித்து எழுகின்ற சுற்றத் தாரும், மனைவியாரும், மக்களும் ஆகிய எல்லாரும் ஊர் எல்லையைக் கடந்து அப்பால் வரமாட்டாது அவ்வெல்லைக்குள்ளே நின்றொழி வார்கள். அதன்பின் பிறர், மரங்களை, வேரும் முனையும் போகத் தறித்துக் கொணர்ந்த விறகின் மேல் வைத்து நெருப்பை நன்றாக மூட்டி எரியப் பார்த்துவிட்டு, நீரிலே சென்று தலை முழுகுவார்கள்.*

***குறிப்புரை :-*** *'காலத்தாலும், இடத்தாலும் கட்டுண்டு கிடக்கும் அவர்களைப் பற்றுவதால் பயனில்லை' என்பதாம். "கால்" என்றது எல்லை. அயன்மையை 'நீதியின்மை' என்றார்.*

157. ***தெளிவுரை :-*** *உலகமெங்கும் குயவர்கள் குளத்திலிருந்து மண்கொணர்ந்து தங்கள் அகத்தினுள்ளே முற்றத்தின்கண் பல குடங்களைப் பண்ணுகின்றார்கள். அக்குடங்கள் ஆளப்பட்டு உடைந்து விடுமானால், வறுக்கும் ஓடாகப் பயன்படும் என்று அகத்திலே சேமித்து வைப்பார்கள். ஆனால் பண்ணப்படும் முறையால் அக் குடத்தோடு ஒப்பனவாகிய உடம்புகள் சிதைந்தால், நொடிநேரமும் மக்கள் வீட்டில் வைத்திருக்க ஒருப்படார்.*

***குறிப்புரை :-*** *வளத்து இடைமுற்றத்து - வளப்பமான இடையாகிய முற்றத்திலுள்ள; என்றது மாதாவின் இடுப்பு ஆகிய முற்றம் என் படி குளத்தின் மண் கொண்டு - குளம்போன்ற நிதம்பத்தின் சுரோணிதமாகிய மண்ணைக் கொண்டு, குயவன் என்றது பிரமனை. மாதாவின் இடையைச் சார்ந்த அல்குலிலிருந்து உண்டாகிய சுரோணிதமாகிய மண்ணைக் கொண்டு பிரமன் உடலைப் படைத்தான் என்பதாம். இறைப்போதும் - கணப்போதும். ஒருப்படாமைக்குக் காரணம், சிதைந்த, உடம்பு பெரிதும் தீ நாற்றம் வீசி, மக்களுக்கு இன்னல் விளைத்துத் தானும் அழுகியொழிவதாய் இருத்தலே. "அதனால், பின்னர் அத்துணை நெருப்புக்கு முதலாகும் உடலை*

**158.** ஐந்து தலைப்பறி ஆறு கடையுள
சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப்
பந்தலும் ஒன்பது பந்தி பதினைந்து
வெந்து கிடந்தது மேலறி யோமே. **17**

---

*முன்னரே வெறுத்து உயிர்க்கு உறுதி தேடக் கருதுதலே அறிவுடைமையாம்" என்றவாறு. "ஓர் குயவன்" இனம் பற்றிய ஒருமை, உயிர் நீங்கியபின், உடல் பலராலும் வெறுக்கப்படும் பொருளாம் என்பதனை,*

*"கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்*
*உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே"*

*- தி.5 ப.90 பா.4*

*என்று அப்பரும் அருளிச்செய்தார். "வைப்பர்" என்றும், "வையார்" என்றும் உறழ்ந்து காட்டிய அதனால், பண்ணப்படும் முறையில் இரண்டும் ஒத்தல் பெறப்பட்டது. படவே, 'உடல்களும் உலகெங்கும் தந்தையது உடம்பினின்றும் ஒரு கூற்றை எடுத்துத் தாயின் வயிற்றில் வைத்து உருப்பெறுமாறு படைப்புக் கடவுளால் ஆக்கப்படும்' என்பது கொள்க. இத்திருமந்திரம் வேற்றுமையணி. பின்னிரண்டடிகள் உயிரெதுகை.*

**158. *தெளிவுரை :-* *தலைக்கூடைபோல உலகங்களைத் தாங்கி நடத்தும் சிவதத்துவங்கள் ஐந்து; அக்கூடையில் உள்ள பொருள்போல வித்தியா தத்துவம் ஏழும் பிரகிருதி ஒன்றும் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும் ஆகிய பதினெட்டு; ஒரு வீட்டினுள் அமைந்த பல கட்டுக்கள் போல உடலில் ஆறு ஆதாரங்கள்; அக்கட்டுக்களில் அமைந்த அகன்ற முற்றம்போல வாயுக்கள் பத்தும், நாடிகள் பத்தும், 'காமம் குரோதம் முதலிய குற்றங்கள் ஆறும், நால்வகை வாக்கும் ஆகிய முப்பது; அம்முற்றத்தை மூடிய பந்தல் போல யோனி பேதத்தால் ஒன்பதாகிய மக்கள் உடம்பு, அப்பந்தலில் அமர்ந்து உண்ணும் பந்திபோலச் சத்தாதி ஐந்தும், வசனாதி ஐந்தும், குணம் மூன்றும், இன்ப துன்பங்களாகிய பயன் இரண்டும் ஆகிய பதினைந்து உளவாகி இயங்கின. ஆயினும், உடம்பு வெந்து கிடப்பதையே பார்க்கின்றோம். மற்றவை என்னாயின என்பதை அறியோம்.***

***குறிப்புரை :-*** *பறி - கூடை. கடை - வாயில்; கட்டு. 'ஆறு சடை' என்பது பாடம் அன்று. சந்து - வெளி. வாயுக்கள் முதலியவற்றின் இயக்கமே உயிரின் உணர்வு நிகழ்ச்சிக்கு ஏதுவாகலின் அவற்றை நன்கு உலாவும் முற்றம் என்றார். சார்வு - சார்ந்த பொருள். "சார்வு பதினெட்டு" என்பதனை "தலைப் பறி" என்றதன்பின்னர்க் கூட்டுக.*

**159.** அத்திப் பழமும் அறைக்கீரை நல்வித்துங்
கொத்தி உலைப்பெய்து கூழட்டு வைத்தனர்
அத்திப் பழத்தை அறைக்கீரை வித்துண்ணக்
கத்தி எடுத்தவர் காடுபுக் காரே. **18**

---

*உண்ணப்படும் (நுகரப்படும்) பொருள்களாகிய சத்தம் முதலியவற்றை உண்பன போலக் கூறினார். இதனால், உடலின் ஆக்கப்பாடும், செயற்பாடும் கூறி, அவை அனைத்தும் நிலையாமை உடையவாதல் உணர்த்தியவாறு.*

**159. தெளிவுரை :–** *அட்டில் தொழில் செய்வார் வறிய குடும்பத் தலைவன் ஒருவனுக்கு அத்திப் பழத்தையும், அறைக் கீரை விதையையுமே திருத்தி உலையில் இட்டு உணவும், கறியுமாக ஆக்கி வைத்தார்கள். அந்த உணவை அக்கறியோடு உண்பதற்கு, வேண்டப்படாத கூரிய கத்தியை எடுத்து அவாவுடன் புகுந்த அத்தலைவன், அதற்குள்ளே சுடுகாட்டை அடைந்தான்.*

***குறிப்புரை :–*** *எனின், கருவாய், குழவியாய், பின் வளர்ந்தவர் இறந்துபட்டார் என நிலையாமை உணர்த்துதல் நுதலிற்று. அத்திப்பழமும் அரைக்கீரை விதையும் கொத்தி உலையிலிட்டுக் கூழாக்கிச் சமைத்து வைத்தார்கள்; அத்திப் பழத்தை அரைக்கீரை விதை உண்டு விட்டது; பின் கத்தி எடுக்கப்பெற்ற அவர் காட்டில் புக்கார் என்றவாறு. அத்திப்பழம் செந்நிறமாய்ப் பல வித்துக்களை உடையதாய் இருப்பது; அதுபோலச் சுரோணிதமும் செந்நிறமாய்ப் பல அணுக்களையுடையதாயிருப்பது. ஆகவே அத்திப்பழம் என்று உருவகித்தது சுரோணிதத்தை என்க. அரைக்கீரை வித்து - அரையாகிய உறுப்பிடத்திலுள்ள பால் போன்ற முளைக்குந் தன்மை வாய்ந்த பொருள் என்று குறிப்பிட்டது சுக்கிலத்தை என்க.*

*கீர்; இது கீரம் என்பதன் கடைக்குறை. பால் என்னும் பொருட்டு. அரை - இடுப்பு. அரையிலிருந்து பெறுகிற கீரையாகிய வித்து சுக்கிலம், கொத்தி - புணர்ச்சியில் முயன்று. உலைப்பெய்த - கருப்பாசயமாகிய உலையில் நிறைத்து, கூழட்டு - இரண்டுங்கலந்த குழம்பாக்கி. இதுவரை கலவியிலீடுபட்ட காதலர் செயல், சுரோணித அணுக்களைச் சுக்கில அணுக்கள் உண்ண என்றது சுக்கில அணு சுரோணித அணுவைக் கலந்து தன்மயமாக்க என்றவாறு.*

*கத்தி எடுத்தவர் - குழம்பி வளர்ந்தபின் குழந்தையாகிய பருவ முதிர்ந்து வெளிவருகிற காலத்துக் கத்த எடுக்கப்பெற்றவர். கத்தி என்னும் செய்தென் எச்சத்தைச் செயவெனச்சமாகவும், எடுத்தவர் என்னும் செய்வினையை எடுக்கப்பெற்றவர் எனச் செயப்பாட்டு வினையாகவும் கொண்டு உரைக்க. கருப்புகுந்து குழம்பிருந்து கருவாகி*

*உருப்பெற்றுக் கத்திக்கொண்டே வர எடுக்கப்பெற்றவர் இன்று இறந்து காடுபுக்கார் என்பது கருத்து. இம்மந்திரத்திற்கு, 'விரைய வருகின்றது நிலையாமை' என்பதாம். அத்தி, எலும்பு ஆகலின், அதனிற் பழுத்த பழம் போல்வது பருவுடம்பு, (தூல தேகம்) அறைக்கீரை, அறுக்க அறுக்கத் தளிர்த்து வளர்வதாகலின், அதனோடொப்பது, ஒரு பருவுடம்பு நீங்க, வேறு பருவுடம்பைத் தொடர்ந்து தரும் நுண்ணுடம்பு (சூக்கும தேகம்). இதனை, "காலம் உற்று - நீக்கிட மரம் பின் வேர் ஓர் நீள்மரம்" நிகழ்த்துமாபோல்" (சிவஞானசித்தி. சூ.2. 48) என்றார் அருள் நந்தி சிவாசாரியரும். 'கூழ்' என்னும் பொதுச் சொல்லால் உணவும், கறியும் கொள்ளப்பட்டன. அவ்விருவகை உடம்புகளாலும் உண்டாகும் பயனை அவையேயாகச் சார்த்திக் கூறினார். பருவுடம்பே புறப்பொருளை நுகர்வதாகலின் அதனை உணவாகவும்; அதற்குத் துணைசெய்து நிற்பதே நுண்ணுடம் பாகலின் அதனைக் கறியாகவும் உருவகித்தார். கொத்தி உலைப் பெய்து அடுதல் உயிரின் பக்குவத்திற் கேற்ப அமைத்தல். "உண்ணக் கத்தி எடுத்தவர்" என்றது மாம்பழம், பலாப்பழம் முதலியவை ஆயின் அவற்றை உண்ணக் கத்தி வேண்டும்; அத்திப் பழம்; அது தானும் வேவித்த பழம்; அதை உண்ணக் கத்தி எதற்கு என்னும் குறிப்பினது. "கத்தி எடுத்தவர்" என்றது, 'இறைவன் திருவருளை நாடியவர்' என்ற தாம். இறைவன் திருவருளைப் பிறவிக் கடலைக் கடத்தற் பொருட்டு நாடுதலே முறை, அதனை விடுத்து, உலகப் பயனைப் பெறுதற்கு நாடுதல் ஏன் என்பது பின்னிரண்டடிகளின் உள்ளுறைப் பொருள்.*

> *"பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்*
> *அக்கொழு நீஅறிந் துந்தீபற*
> *அறிந்தறி யாவண்ணம் உந்தீபற"*
>
> *- மெய். திருவுந்தியார் 38*

*எனவும்,*

> *"முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்*
> *தத்தி பழுத்தென் றுந்தீபற*
> *அப்பழம் உண்ணாதே உந்தீபற"*
>
> *- மெய். திருவுந்தியார் 41*

*எனவும் வரும் திருவுந்தியாரையும்,*

> *"முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்*
> *தத்தி பழுத்த தருளென்னும் - கத்தியினால்*
> *மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்*
> *ஏகக் கொடிஎழுங்காண் இன்று."*
>
> *- மெய். திருக்களிற்றுப்படியார் 38*

*எனவரும் திருகளிற்றுப்படியாரையும் காண்க.*

**160.** மேலும் முகடில்லை கீழும் வடிம்பில்லை
காலும் இரண்டு முகட்டலக் கொன்றுண்டு
ஓலையான் மேய்ந்தவ ரூடு வரியாமை
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளியே. 19

---

*இறைவனை உலகப்பயன் கருதி வழிபடுதல் 'காமிய வழிபாடு' என்றும், பயன் கருதாது வழிபடுதல் 'நிட்காமிய வழிபாடு' என்றும் சொல்லப்படும். அவற்றுள் காமிய வழிபாடு செய்யத் தொடங்கினோர் அது முற்றுப் பெறுதற்குள்ளே வந்து நிலையாமை பற்ற, கருதிய பயனையும் இழந்து மீளப் பிறவிக் கடலுள் மூழ்கலால் அந்நிலையாமையை உணர்ந்து காமிய வழிபாட்டை விடுதல் வேண்டும் என்றபடி "காமியம் செய்து காலங்கழியாதே" (தி.5 ப.22 பா.8) என்று அப்பர் அருளிச் செய்தார். காமிய வழிபாட்டு முயற்சியின் தன்மையை,*

> *"பரப்பமைந்து கேண்மின்இது பாற்கலன்மேற் பூஞை*
> *கரப்பருந்த நாடுங் கடன்"*
>
> *- திருவருட்பயன், 39*

*என விளக்குவர் உமாபதி சிவனார். "வித்துண்ண" என்றதன் இடையில் அடுக்கிவந்த இரண்டனுருபு தொகுத்தலாயிற்று.*

**160.** *தெளிவுரை :- ஓலையால் வேய்ந்த வீட்டை உடையவர் தாமே செய்யாமல், கூலியாளைக் கொண்டு செய்வித்தமையால் அவனால் செப்பமின்றி வேயப்பட்ட பொத்தற் குடில்போலும் உடம்பிற்கு மேலேயும் கவிப்பில்லை; கீழேயும் அடிநிலை இல்லை. ஒப்பிற்கு வைக்கப்பட்ட இரண்டு கால்களும், ஒரு நடு விட்டமுமே உண்டு.*

*குறிப்புரை :- 'அஃது எவ்வாறு நீடித்து நிற்கும்? விரைவில் வீழ்ந்தொழிந்தது' என்பது குறிப்பெச்சம். பின்னிரண்டடிகளை முன்னர் வைத்து உரைக்க. பின்னர், "வேலையான்" என்றலால் முன்னர் "மேய்ந்தவர்" என்றது உடையவரையாயிற்று. "மேய்ந்தவர்" என்றது, "வேய முயன்றவர்" என்றபடி, ஊடு - அத் தொழிலினுள்; இதன் பின், 'புக்கு' என்பது எஞ்சி நின்றது. 'வரியாமையால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. வரிதல் - கட்டுதல். வேலையான் - கூலிக்கு வேலை செய்பவன். காலத்தைக் குறிக்கும். 'வேலை' என்பது, அதனை முதலாகக் கொண்டு நிகழும் தொழிலைக் குறித்தலின், கருவியாகுபெயர். "கூலி கொடுத்து என்வேலை கொள்வாருண்டோ" (திருவிளையாடல் பு. மண்சுமந்தது. 18) என்பது முதலிய இடங்களிலும் இவ்வாறு வருதல் காணப்படும். 'வேலையாள் மேய்ந்த' என்று பாடம் ஓதுதலும் ஆம்.*

**161.** கூடங் கிடந்தது கோலங்கள் இங்கில்லை
ஆடும் இலயமும் அற்ற தறுதலும்
பாடுகின் றார்சிலர் பண்ணில் அழுதிட்டுத்
தேடிய தீயினில் தீயவைத் தார்களே. **20**

---

*"வெள்ளி" என்றதில் ளகர வொற்று, விரித்தல். பொத்தலை 'வெளி' என்றார். தளி - இல்லம். 'வேலையாள் நன்கு வேயாமையால் எடுத்தபொழுதே பொத்தற் கூரையாய்க் கிடந்தது; மற்றும் பல குறைபாடுகளும் உள' என்றதாம். தலையிலும் பிரமந்திரம் (பெருந்துளை) முதலிய புழைகள் இருத்தலின், 'மேலும் முகடில்லை' என்றார். கீழே அடிகள் நிலத்தினுள் ஊன்றாமை வெளிப்படை. "காலும்" என்ற இழிவு சிறப்பும்மையால், 'அது பெயருக்குக் 'கால்' அன்றி, உண்மைக்கால் அன்று' என்பது போந்தது. இல்லத்திற்குக் 'கால்கள்' எனப்படுவன, நிலத்தினுள் ஊன்றி நிலைத்து நிற்பன வல்லது சகடக் கால் போல உழலுவன ஆகா. "முகட்டு அலக்கு" என்றது முதுகெலும்பை. அதுவும் நேர்நிற்றல் அல்லது; மேலே குறுக்கிட்டு நின்றிலது. இதனால் அவை ஒப்பிற்கு வைக்கப்பட்டனவல்லது, உண்மையில் வைக்கப்படவில்லை என்றார். "உடையவர்" என்றது சிவபெருமானையும், 'வேலையாள்' என்றது பிரமனையும், 'உடையவர் இவ்வில்லத்தை ஓலையால் வேய நினைத்தார்' என்றது 'நிலையாக எடாமல், சிறிது காலத்திற்கு நிற்கவே எடுத்தார்' என்பது குறித்தவாறு. முன்பு 'பந்தல்' என்றதும் இக்குறிப்புத் தோன்றவேயாம். 'சிறிது காலத்திற்கு நிற்க எடுத்ததையும் தாமே செய்யாமல், பிறன் ஒருவனைக் கொண்டு செய்வித்தமையால், குறையுற்றுக் கிடந்தது' என்றவாறு.*

*இதனால், யாக்கையது இயல்பை உணரவல்லார்க்கு அதனது நிலையாமை எளிதின் விளங்கும் என்பது கூறப்பட்டது.*

**161.** *தெளிவுரை :- கூடம் ஒன்று முன்பு பல ஒப்பனைகளையும், கூத்துக்களையும் உடையதாய் இருந்தது. இப்பொழுதோ அக்கூடம் மட்டும் உள்ளது; அதில் இருந்த ஒப்பனைகளும், கூத்துக்களும் இல்லாது ஒழிந்தன; ஒழிந்தவுடன் மக்கள் திருப்பாடல்களைப் பண்ணோடு பாடுகின்றவர்களாயும், அழுகின்றவர்களாயும் நின்று, இறுதியில் அக்கூடத்தை, தேடிக்கொணர்ந்த விறகில் மூட்டப்பட்ட நெருப்பில் வேகவைத்துவிட்டார்கள்.*

*குறிப்புரை :- இதன் உள்ளுறைப் பொருள் வெளிப்படை. காரணத்திற்குரிய தேடப்பட்ட தன்மையைக் காரியத்தின்மேல் ஏற்றிக் கூறினார். இனி, "தீ" என்றது காரிய ஆகுபெயராய், விறகினை உணர்த்திற்று எனினும் ஆம். 'பண்ணில்பாடுகின்றாராயும், அழுதிட்டும்' என்க.*

**162.** முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்
இட்டது தானிலை ஏதேனும் ஏழைகாள்
பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினிற்
கெட்ட தெழுபதிற் கேடறி யீரே. **21**

---

*இதனால், 'யாக்கையது நிலையாமை, ஒரு கண்மாயம் போல வந்து நிற்பது' என்பது கூறப்பட்டது.*

162. ***தெளிவுரை :-*** *அறிவில்லாத மக்களே, தாய் வயிற்றில் முட்டையாய்த் தோற்றம் எடுத்த உடம்பு, முந்நூறு நாள் காலக் கணக்கில் அங்கே தங்கி வளர்ந்து பின்பு வெளிப்போந்தது. பின் பன்னிரண்டு ஆண்டுக் காலக்கணக்கில் அதற்கு மணவினை என்னும் பேச்சும் உலகத்தில் நிகழ்ந்தது; பின் எழுபது ஆண்டுக் காலக் கணக்கில் செயல் இழந்து கிடந்தது. இவ்வாறு அது ஒவ்வோர் இமையும் அழிவு நெறியிற் சென்று கொண்டிருத்தலை அறிந்திலீர். அதனால் உமக்குத் துணையாக நீவிர் தேடி வைத்துக் கொண்டது யாதும் இல்லை.*

***குறிப்புரை :-*** *முட்டை பிறந்தது முந்நூறு நாளினில் என்பது கருப்பையிற் புகுந்த கரு பத்துமாதம் மாதாவின் உதரத்திலிருந்து முதிர்ந்து மக்களாய்த் தோன்றியதை அறிவிப்பதாம். கரு கருப்பையில் மீன் முட்டைபோல் புகுதலின் முட்டை எனப்பட்டது. சேமித்தலை ''இட்டது'' என்றார். மணவினையைப் பெண்டிர்க்குப் பன்னிரண்டாண்டு அகவையினும், ஆடவர்க்குப் பதினாறாண்டு அகவையினும் நிகழ்த்துதல் பெரும்பான்மை வழக்கமாதலின், எல்லாம் அடங்க, "பன்னிரண்டாண்டினில் மணம் பட்டது" என்றார்.*

*எனவே, "மணம்" என்றதனை இரட்டுற மொழிந்து பெண்டிர்க்கு 'மணவினை' என்றும், ஆடவர்க்கு 'மணம் என்ற பேச்சு' என்றும் பொருள் உரைத்துக் கொள்க.*

*சுற்றத்தார் ஆடவர்க்குப் பன்னிரண்டாண்டிற்றானே. 'இவர்க்கு இன்னாளை வாழ்க்கைத் துணைவி ஆக்கல் வேண்டும்' என வரையறை செய்ய முயலுதல் இயல்பு என்க.*

*இதனால், உடம்பு, 'காலம்' என்னும் வாளின்வாய்ப்பட்டு இடையறாது அறுக்கப்பட்டு வருகின்றது என்பது கூறப்பட்டது.*

> *நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்*
> *வாள துணர்வார்ப் பெறின். - குறள். 334*

*என்றார் திருவள்ளுவ நாயனாரும்.*

> *வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்*
> *வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவார்;*

**163.** இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டால்
முடிஞ்ச தறியார் முழங்குவர் மூடர்
விடிஞ்சிரு ளாவ தறியா உலகம்
படிஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே. **22**

---

*வைகலும் வைகல்தம் வாழ்நாள்மேல் வைகுதல்*
*வைகலை வைத்துணரா தார்*

*என்ற நாலடியார்ச் செய்யுளும் நோக்கத்தக்கது.*

**163. *தெளிவுரை :-*** *அகல் இருப்பினும், இருளை ஒட்டிப் பொருள்களை விளக்குகின்ற சுடரை அணைத்து விட்டால், அவ்வகலுக்கு உள்ள வாழ்நாள் முடிந்ததாம். (அது போல்வதே உடம்பின் வாழ்நாளும், அஃதாவது, உயிர் உள்ள அளவே வாழ்வும், அது நீங்கிய பொழுதே கேடும் உடம்பிற்கு உளவாகும்). இதனை அறியாமல் உடம்பையே பொருளாகக் கருதி அறிவில்லாதவர் ஆரவாரிப்பர். பொழுது விடிந்ததும் இருளில் கிடத்தலோடு ஒப்ப வழியறியாது தடுமாறும் குருடரைப் போல, மேற்சொல்லிய உடம்பின் இயல்பு கண்கூடாக விளங்கிநிற்கவும் உலகம் அதனை அறியாது உடம்பைப் பற்றிய பற்றில் அழுந்திக் கிடந்து, அதற்கு மேற்குறித்த நிலை வரும்பொழுது துயருறுதல் இரங்கத்தக்கது.*

***குறிப்புரை :-*** *இடிஞ்சில் - உடல். விளக்கு - உயிர். "விளக்கெரி" வினைத்தொகை. அணைத்தலை, 'கொள்ளுதல்' என்றார். 'கொண்டான்' என்பது பாடம் அன்று. "முடிஞ்சது, விடிஞ்சு, படிஞ்சு" என்பவற்றில் நகர தகரங்கட்கு ஞகர சகரங்கள் போலியாய் வந்தன. முடிதலுக்கு வினைமுதல் வருவிக்கப் பட்டது. "விடிஞ்சிருளாவது போல" என உவம உருபு விரிக்க. 'குருடர்க்கு' என்பது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. 'உடம்பின் நிலையாமையை அறிதற்குக் காட்சியே அமைவதாகலின், நூல் வேண்டுவதில்லை' என்பதனை நாவுக்கரசர்,*

*"நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்,*
*சுடலை சேர்வது சொற்பிர மாணமே" (தி.5 ப.90 பா.4)*

*என்று அருளிச் செய்தார்.*

*இதனால், 'யாக்கை நிலையாமை காட்சியானே விளங்குவது' என்பது கூறப்பட்டது.*

**164. *தெளிவுரை :-*** *விடிந்தும் இருளாவது போலப் பெரிதும் அறியாமையில் கிடப்பவர், சிவபெருமான் படைத்த உடம்பும், உயிரும்*

**164.** மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த
உடலும் உயிரும் உருவம் தொழாமல்
இடர்படர்ந் தேழாம் நரகிற் கிடப்பர்
குடர்பட வெந்தமர் கூப்பிடு மாறே.

---

*கூடிவாழுங் காலத்தில் அவன் படைத்த குறிப்பின்படி அவனது திருமேனியை வழிபடாமல், வேறு பலவற்றையே செய்திருந்து, அவை பிரியுங்காலத்து, அச்சத்தால் குடர் குழம்பும்படி யமதூதர் வந்து இரைந்து அழைத்துப் பிடித்துச் செல்லும் வழியிலே மிக்க துயரத்துடன் சென்று, ஏழாகச் சொல்லப்படும் நரகங்களில் அழுந்துவர்.*

***குறிப்புரை :-*** *மாயன் - கள்வன். தோன்றாது மறைந்து நிற்றலின் இவ்வாறு கூறினார். படைத்தலை உயிர்க்கு ஏற்றுங்கால், புணர்த்தலாக உரைக்க. 'இடரொடு' என உருபு விரிக்க. 'நரகம் ஏழு' என்பதற்கு, முதல் நரகம் ஒன்றே ஏழு நரகங்களை உடையதாயிருக்கும் என்னும் கருத்தினாலாம் என்பதே ஆகம நெறியாகலின், 'ஏழ் நரகம்' என்னாது, 'ஏழாம் நரகு' என்றார். மேற்கூறியவாற்றால் நோக்க நரகம் எட்டாகும். அவை, 'இரௌரவம், துவாந்தம், சீதம், வெப்பம், சந்தாபம், பதுமம், மகாபதுமம், காலசூத்திரம்' என்பன. இவற்றுள் இரௌரவமே முதல் நரகம்; மற்றும் 'மகாநரகம்', இராச நரகம், இராச ராச நரகம் என்று மூவெட்டு நரகங்கள் உள்ளன என அவற்றின் பெயர் முதலியவற்றைச் சிவாகமங்கள் விரித்துக்கூறும். எல்லாவற்றிலும் முதலிற் சொல்லப்படுவன ஒழித்து ஏனைய கிளை நரகங்களாம். "நரகம் ஏழ்புக நாடின ராயினும்" (தி.3 ப.49 பா.7) என்ற ஞானசம்பந்தர் திருமொழியில் எழுந்த "நரகம் ஏழ்" என்பதற்கும் சிவாகமங்களின் வழி இவ்வாறே பொருள் உரைக்கப்படும். 'மக்கள் உடம்பை உயிர்கட்குச் சிவபெருமான் படைத்துக் கொடுத்தது, தன்னை வணங்குதற் பொருட்டே' என்பதை,*

*"மானிடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்*
*ஆனிடத்தைந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றோ"*

*(சிவஞான சித்தி. சூ. 2.92) என்பதனானும் அறிக.* ***'கொடுத்தவனது குறிப்பிற்கு மாறாகக் கொடுக்கப்பட்ட பொருளைப் பயன்படுத்துதல் உய்தியில் குற்றமாம்'*** *என்றபடி.*

*இதனால், 'யாக்கை நிலையாமையை உணர்ந்தோர் அஃது உள்ளபொழுதே அதனாலாகும் பயனைப் பெற முயலுதல் வேண்டும்; இல்லாவிடில் இடர் விளையும்' என்பது கூறப்பட்டது.*

**165.** குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண்
டிடையுமக் காலம் இருந்து நடுவே
புடையு மனிதரார் போகும்அப் போதே
அடையும் இடம்வலம் ஆருயி ராமே. 24

**166.** காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பாற்றுளி பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே. 25

**165. தெளிவுரை :-** *வாழ்நாளின் இடையாய காலத்தில் அமைச்சர் முதலிய மாந்தர் புடைசூழ, நடுவே வெண்கொற்றக் குடையும், பட்டத்துக் குதிரையும், வெற்றி வாளும் கொண்டு வீற்றிருந்து, அவர்களை விட்டுப் போகும் கடைமுறைக் காலத்தில் உயிர் சென்று அடையும் இடமே அதற்கு வலிமையைத் தருவது.*

***குறிப்புரை :-*** *எனவே, 'இம்மை வாழ்வைப் பெரிதாக நினையாது மறுமை நோக்கி முயல்க' என்பது கூறப்பட்டதாம். "இடையும்" என்றது 'இடையதாகின்ற' என்றவாறு, இனி, உம்மையை அசை நிலையாக்கினும் ஆம், "புடையும்" என்பதில் உள்ள உம்மை 'அயலும்' என இறந்தது தழுவிற்று. 'ஆர' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தல், 'இடையும் அக்காலம்' புடையும் மனிதர் ஆர, நடுவே குடையும், குதிரையும், வாளும் கொண்டு இருந்து போகும் அப்போது ஆருயிர் அடையும் இடமே வலம் ஆம் எனக் கூட்டுக. 'மனிதனார்' என்பது பாடம் அன்று, "அப்போதே" என்ற ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. வலம் - வலிமை.*

**166. தெளிவுரை :-** *உயிர் பிரிந்தபின் உடலுக்கு இயற்றப்படும் சடங்குகளால் பயன் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று. தோற்பை போன்றதாகிய இவ்வுடம்புள் இருந்து பல தொழில்களையும் செய்து இதனை உண்பிக்கின்ற கூத்தனாகிய உயிர் புறப்பட்டுப் போனபின் வெறுங்கூடு போல்வதாகிய இவ்வுடம் பினைப் பிறர் வாளாதே புறத்தில் எறிந்தமையால் காக்கைகள் கொத்தித் தின்னலும், கண்ணிற் கண்டவர் அருவருத்து இகழ்ந்து பேசு தலும் நிகழ்ந்தால் அதனால் இழக்கப்படுவது தான் யாது! சுற்றத்தார் ஈமக் கடனை நன்கு முடித்துப் பால் தெளித்து அடக்கம் பண்ணப் பலரும் புகழ்ந்து போற்றினாலும் அதனால் பெறப்படுவதுதான் யாது!*

***குறிப்புரை :-*** *'பெருமை சிறுமைகளும், பேறிழவுகளும் எஞ்ஞான்றும் உயிர்க்கே யன்றி உடம்பிற்கு இல்லை' என்றவாறு. உடம்பு உயிராகாமை உணர்த்துவார் அதனைக் கூத்தன் புனைந்து கொள்ளும் கோலத்தோடு உவமித்தற்கு, உயிரை "கூத்தன்" என்றார். அதனானே, உடம்பும், அது வாயிலாகச் செய்யப்படும் செயல்களும் உயிர்க்கு என்றும் உள்ளன வாகாது, சிறிது காலம் வந்து நின்று நீங்குவனவாதலும் பெறப்பட்டது. "புறப்பட்டுப் போன" என்றதன் பின், 'பின்' என்பது வருவிக்க. அவ்வாறு வருவியாதவழி, 'இக்கூட்டை' என்றது, உயிர் நீங்கிக் கிடந்த ஓர் உடம்பைச் சுட்டிக் கூறிற்றாக உரைக்க, 'இச்சட்டையை' என்னாது, "கூட்டை" என்றார். உடம்பினுள் உயிர், பறந்து திரியும் பறவையைப் பிடித்து அடைத்து வைத்த கூட்டினுள் அப்பறவை அடைபட்டுக் கிடத்தல் போலக் கிடந்து, வாய்ப்பு வந்துழி அப்பறவை அக்கூட்டினின்றும் பறந்து ஓடுதல் போல ஓடும் என்பது உணர்த்தற்கு.*

*நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்ந் தடக்கிலென்*
*பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்*
*தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்*
*கூத்தன் புறப்பட்டக் கால்.*

*என்னும் நாலடியார்ச் செய்யுள் இத்திருமந்திரத்தைச் சொல்லாலும், பொருளாலும், நடையாலும் பெரும்பான்மை ஒத்துநிற்றல் அறியத் தக்கது. இதன்கண் இன எதுகை வந்தது.*

## 6. செல்வம் நிலையாமை

167. அருளும் அரசனும் ஆனையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னந்
தெருளும் உயிரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பினைஅறன் மாதவ மன்றே. 1

---

*உடம்பு, தன்னின் வேறாகாது நிற்றலால் அதனையே தானாக மயங்கி அதன்கண் பற்றுச் செய்து சிவபெருமானை மறத்தலை நீக்குதற் பொருட்டு யாக்கை நிலையாமையை உணர்த்திய நாயனார், பின் அம்மயக்கத்தானே தன்னோடு இயைபிலதாயினும் உடம்போடு இயைபுடைய செல்வத்தைத் தன்னோடு இயைபுடையதாகவே மயங்கி அது காரணமாக எழும் செருக்கில் ஆழ்ந்து அவனை மறத்தலை நீக்குதற் பொருட்டு உடம்பு வழியாக வரும் அவ்வியைபுதானும் அவ்வுடம்புள்ள துணையும் முற்றநிற்பதன்றி இடையே அற்றொழிவதாம் எனச் செல்வத்தது நிலையாமை ஒன்பது திருமந்திரங்களான் உணர்த்துகின்றார்.*

167. ***தெளிவுரை :-*** *குடிகளிடத்து இரக்கங்கொள்ளும் நல்ல அரசனாயினும், யானை தேர் முதலிய படைகளையும் செல்வத்தையும் பகையரசர் கொள்ள அவை அவர்பாற் செல்வதற்கு முன்னே வாழ்நாள் உள்ளபொழுதே சிவபெருமானை அடைவனாயின் துன்பம் இலனாவன். இல்லையேல், அவற்றை அவர் கொண்ட பின்னர் துன்பக் கடலில் வீழ்ந்து கரைகாணமாட்டாது வருந்துவன், அவன் செய்த அறம் தன் வாழ்நாள் முழுதும் அரசனேயாய் வாழ்தற்கு ஏற்ற பேரறம் என்பது ஒரு தலையன்றாகலின்.*

***குறிப்புரை :-*** *தெருளலாவது - பதவி முதலியன நிலையற்றவை என்று தெளிதல். மருளல் - அச்சப்படுதல். "அருளும்", என்றது, பெயரெச்சம். "அரசனும்" என்ற உம்மை உயர்வு சிறப்பு. "ஆனையும், தேரும்" என்றது உபலக்கணம். "பிறர்" என்றது பகைவரை. "தெருளும், மருளும்" என்னும் செய்யுமென்முற்றுக்கள் ஆண்பாலில் வந்தன. தெருளலும், மருளலும் அலமரல் இன்மையையும், அதனை உடைமையையும் குறித்து நின்றன. 'சேரின் தெருளும்' எனவும் 'பினை மருளும்' எனவும் மாற்றிப் பொருள் கொள்க. "பின்னை" என்றது வினைமாற்றின்கண் வந்த 'மற்று' என்னும் பொருட்டாய் நின்றது. 'ஆதலின்' என்பது சொல்லெச்சம். 'அவன் மாதவமன்றே' என்பது பாடம் ஆகாமை அறிக. இதனுள், 'சிற்றம் பலமேய செல்வன் கழல்*

**168.** இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்கும்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே. 2

---

*ஏத்தும் செல்வமே நிலையுடைய செல்வம்; (தி.1 ப.80 பா.5) பிற செல்வங்கள் அன்ன வல்ல' என்றற்கு நாயனார் சிவபெருமானை இங்கு, "செல்வன்" எனக் குறித்தமை அறியத்தக்கது.*

*யானை எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்*
*சேனைத் தலைவராய்ச் சென்றோரும் - ஏனை*
*வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட*
*மனையாளை மாற்றார் கொள.*

*என்றார் நாலடி நானூற்றினும்.*

**168. *தெளிவுரை :–*** *வானத்தில் இயங்குதலைப் பொருந்திய நிலவு நிலைத்து நில்லாமல் இருட்பிழம்பு போல்வதாகிவிடுகின்ற துன்ப நிலையையே உடையது செல்வம் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. (நேற்று அரசனாய் இருந்தவன் இன்று அடிய னாயினமை கண்கூடாகப் பலராலும் அறியப்பட்டதே) ஆதலின், செல்வச் செருக்கில் ஆழ்தலை விடுத்து, துறக்கச் செல்வத்தினரான தேவர்கட்கும் அச்செல்வத்தை அவர்பால் வைத்தலும், வாங்குதலும் உடைய தலைவனாகிய சிவபெருமானை நினையுங்கள்; அவன் தன்னை நினைப்பவர்க்குக் கார்காலத்து மேகம் போலப் பெருஞ் செல்வத்தை ஒழியாமல் தருபவனாகின்றான்.*

***குறிப்புரை :–*** *பெயல் - மழை. கொண்டல் - பெருமழை பெய்யும் மேகம். இயக்கு - இயங்குதல்; முதனிலை திரிந்த தொழிற் பெயர். பொதுப்பட, "இயக்கு" என்றமையால், முற்பக்கமாகிய நற்காலம் காரணமாகத் திங்கள் வளர்ச்சியுறுதலும், பிற்பக்கமாகிய தீக் காலம் காரணமாக அது தேய்வுற்று இருட்பிழம்பு போலாவதும் ஆகிய இரு தன்மையும் கொள்ளப்படும். படவே, பொருட்கண்ணும், செல்வம் நல்லூழ் காரணமாக வளர்தலும், தீயூழ் காரணமாகக் குறைந்து மறைதலும் ஆகிய இரு தன்மைகளும் விளங்குவனவாம்.*

*கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்;*
*போக்கும் அதுவிளிந் தற்று.* *- குறள். 232*

*எனத் திருவள்ளுவர், செல்வத்தின் ஆக்கக் கேடுகட்கு உண்மைக் காரணமாக காலத்தை, அதன்வழி நிகழும் பொதுக் காரணத்தின்வழி*

169. தன்னது சாயை தனக்குத வாதுகண்
டென்னது மாடென் றிருப்பர்கள் ஏழைகள்
உன்னுயிர் போம்உடல் ஒக்கப் பிறந்தது
கண்ணது காணொளி கண்டுகொளீரே. 3

---

*உய்த்துணரக் கூறினமை உணர்க. மேல், "செல்வன்" எனக் குறிப்பாற் கூறியதனை இதனுட் கிளந்து கூறியவாறு காண்க. செல்வத்தைத் தருபவனை, "செல்வம்" என்றார்.*

*இவ்விரண்டு திருமந்திரங்களாலும், 'செல்வம் நில்லாது நீங்கும் இயல்பினது' என்பது கூறப்பட்டது.*

169. ***தெளிவுரை :-*** *தமது நிழல் தம் வெயில் வெப்பத்தைத் தணித்துக் கொள்ளுதற்கு உதவாமையைக் கண்டுவைத்தும், அறிவிலார், தமது செல்வம் தம் துன்பத்தைப் போக்கிக்கொள்ளுதற்கு உதவும் என்று இறுமாந்திருக்கின்றனர். கருதி உணரப்படுகின்ற உயிர் காணப்படும் உடம்போடே ஒன்றாய்ப் பிறந்தது. ஆயினும், அதுவே உடம்பில் என்றும் நின்று அதனைக் காவாது இடையே விட்டொழிகின்றது. (அங்ஙனமாக வேறாய் இடையே வந்த செல்வமோ நம்மோடு நிலைத்து நின்று நலம் செய்யும்!)*

*பொருள்களைக் காணும் ஆற்றல் உங்கள் கண்ணில் உள்ளது. அதனைக் கொண்டு நீங்கள் இவற்றை நேரே கண்டுகொள்ளுங்கள்.*

***குறிப்புரை :-*** *"தன்னது, என்னது" என்றவற்றில் னகர ஒற்று விரித்தல், "தனது தனக்கு" என்றவை, பன்மையொருமை மயக்கங்கள், மாடு - செல்வம். "எனது மாடு" என்றதன்பின், 'எமக்கு உதவும்' என்பது எஞ்சி நின்றது. உன் உயிர், வினைத்தொகை. உயிரை, "உன் உயிர்" என்றதனால், 'உடல் காணப்படுவது' என்பது பெறப்பட்டது. இவ்வாறு அவ்விரண்டன் தன்மைகளையும் எடுத்தோதியது 'இயைபில்லன ஒரு நிமித்தத்தால் தம்முள் இயைந்தன; அந்நிமித்தம் நீங்கியவழி அவ்வியைபும் நீங்கும்' என்பது உணர்த்தற்கு, நிமித்தமாயது வினை. "உடலோடு" என உருபு விரிக்கப்பட்டது. "போம்" என்றதனைப் "பிறந்தது" என்பதன் பின்னர்க் கூட்டுக. 'ஒக்கப் பிறந்தது போம்' என்றது, 'அவ்வாறு பிறவாதது போதல் சொல்ல வேண்டா' என்றற்கு. "கண்ணது காணொளி" என மிகுத்துக் கூறியது, 'பிறர் அறிவிக்க வேண்டாது நீங்களே எளிதின் அறிதல் கூடும்' என்றற்கு. தனது நிழல் தனக்கு உதவாமையை எடுத்துக் காட்டியது, தமக்கு உரியது தமக்குப்*

**170.** ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஒட்டித் துரத்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே. 4

---

*பயன்படாதொழிலைத் தெளிவித்தற்காம்.*

*“வெய்யிற் கொதுங்க உதவா உடம்பின் வெறுநிழல்போல்*
*கையிற்பொருளும் உதவாது காணுங் கடைவழிக்கே”*
*- கந்தரலங்காரம்*

*என்ற அருணகிரிநாதர் திருமொழியும் காண்க.*

*இதனால், ‘செல்வம் நில்லாது; நின்றபொழுதும் உதவுதல் இல்லை’ என்பது கூறப்பட்டது.*

**170.** *தெளிவுரை :- ஈக்கள் தேனைச் சேர்த்தற்குப் பூக்களின் மணங்களை அறிந்து அதன் வழியே பூக்களை அணுகித் தேனைச் சேர்த்துக் கொணர்ந்து ஒரு மரக்கிளையில் வைக்குமேயன்றி, அத்தேனைத் தாமும் உண்ணா; பிறர்க்கும் கொடா. ஆயினும், வலிமையுடைய வேடர் அவ் ஈக்களை அப்புறப்படுத்தி மீள வரவொட்டாது துரத்திவிட்டுத் தேனைக் கொள்ள, அவையாதும் செய்யமாட்டாது அத் தேனை அவர்கட்கு உரியதாக்கித் தாம் கைவிட்டுச் செல்வது போன்றதே, தாமும் உண்ணாது, பிறர்க்கும் கொடாது செல்வத்தை ஈட்டிச் சேமித்து வைப்போரது தன்மையும்.*

*குறிப்புரை :- அஃதாவது, வலியுடையார் புகுந்து தம்மைத் துன்புறுத்தி விலக்கிவிட்டுக் கைக்கொள்ளத் தாம் யாதும் செய்ய மாட்டாது விலகியொழிவர் என்பதாம். இரதமும் கூட்டி எடுத்த தேனில் நீர்த்தன்மை மிக்கு. சுவை குன்றியிருக்குமாதலின் வண்டுகள் நீர் வற்றிச் சுவைமிக, தன் கொடுக்கிலுள்ள தேன் விஷத்தைத் தேன் அடையிலுள்ள ஒவ்வொரு அறையிலும் குத்திச் செலுத்துமாதலின் இங்ஙனம் கூறினார்.*

*ஒட்டித் துரத்திட்டு - தேனடையில் தீப்பந்தம் காட்டி, புகைத்து, துளவியும் புகையிலையும் வாயிலிட்டு ஊதி ஒட்டி விட்டு.*

*ஈர்ங்கை விதிரார் கயவர், கொடிறுடைக்கும்*
*கூன்கைய ரல்லா தவர்க்கு. - குறள். 1077*

*என்னும் திருக்குறளால், கீழ்மக்களது செல்வம் அவர்க்கும், சுற்றத்தார்*

171. தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே. 5

---

*முதலியோர்க்கும் பயன்படாது; வலிமையால் துன்பம் செய்வார்க்கே பயன்படும் என்பது விளங்கும்.*

*உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றும்*
*கெடாஅத நல்லறமுஞ் செய்யார் - கொடாஅது*
*வைத்தீட்டி னாரிழப்பர்; வான்தோய் மலைநாட*
*உய்த்தீட்டுந் தேனீக் கரி. - நாலடியார் 10*

*என்ற நாலடி வெண்பாக் காணத்தக்கது. "ஈட்டிய", வினையெச்சம்.*

*இதனால், 'செல்வம் கொடுத்தும், துய்த்தும் இன்புறாது இறுகப் பிடித்தவிடத்தும் நில்லாதொழியும்' என்பது கூறப்பட்டது.*

**171. *தெளிவுரை :-* *அறிவுடையீர், செல்வத்தைத் துணைகொண்டு கூற்றுவனை வெல்லுதல் கூடுமோ! தெளிய உணராதோர் யாம் தெளிவிக்க கூடாது என்பதனை நன்கு தெளியுங்கள். கலக்கம் அடையாதீர்கள். இயற்கையே தெளிந்த அறிவுடையவர்கள் எம் உபதேசத்தால் மீட்டுக் கலங்காதீர்கள். உங்களிடத்தில் உள்ள செல்வம் உங்கள் உள்ளத்தையும் உடலையும், ஆற்றுவெள்ளம் தன்னுள் அகப்பட்டவரது உள்ளத்தைக் கலக்கி, உடலைப் புரட்டி ஈர்த்தல்போல செய்யாதவாறு அதனைத் தடுத்து நிறுத்தி நீக்குங்கள்.***

***குறிப்புரை :-* "தெற்ற" என்பது நீட்டலாயிற்று; தெற்றத் தெளிதல், நன்கு தெளிதல், 'கலக்கி மலக்கல்' என்பதொரு வழக்கு என்பது, "கலக்கி மலக்கிட்டுக்கவர்ந்துதின்ன" (தி.4 ப.1 பா.8) என்பதனால் அறிக. பெரிதும் கடிந்துரைத்தல் தோன்றச் "செல்வத்தை" என்றாராயினும், 'செல்வப் பற்றினை' என்றலே, கருத்து என்க. "ஆமே" என்ற ஏகாரம் எதிர்மறை உணர்த்திற்று. அதனை ஈற்றசையாக்கிக், 'களைந்தால் குதித்தல் கூடும்' என உரைப்பாரும் உளர். இதனால், 'செல்வம் பயன் தருவதாயினும், பெரும்பயன் தருதல் இல்லை' என்பது கூறப்பட்டது.*

**172. *தெளிவுரை :-* மகிழ்ச்சிக்கு ஏதுவாகிய பல நுகர்ச்சிப் பொருள்களும், கைப்பொருளும் எந்த நேரத்திலும் கவிழத்தக்கதாய் நீரின்மேல் மிதந்து செல்லுகின்ற மரக்கலம் திடீரென ஒருகால்*

**172.** மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம்போல்
அவிழ்கின்ற ஆக்கைக்கோர் வீடு பேறாகச்
சிமிழொன்று வைத்தமை தேர்ந்தறி யாரே. **6**

**173.** வாழும் மனைவியும் மக்கள் உடன்பிறந்
தாரு மளவே தெமக்கென்பர் ஒண்பொருள்
மேவு மதனை விரிவுசெய் வார்கட்குக்
கூவுந் துணையொன்று கூடலு மாமே. **7**

---

*கவிழ்ந்தொழிதலைப்போல விழுந்தொழிகின்ற உடம்பிற்கு ஒரு பேரின்பப் பேறுபோலக் காட்டி, உண்மையில் பெரியதொரு பிணிப்பாக வினையால் கூட்டுவிக்கப்பட்டிருத்தலை உலகர் அறிந்திலர்.*

*குறிப்புரை :- 'அதனால் அவற்றையே வீடுபேறாகக் கருதி அதன் கண் மயங்கி நின்று அழிகின்றனர்' என்றபடி. மாடு - காசு, பொன், பசு. செல்வம் - மணி, நெல் முதலிய ஏனைய வளங்கள். 'கவிழ்கின்ற கலம்' என இயையும். சிமிழ் - கட்டு. செல்வம் கட்டாதல், ஈட்டல் காத்தல்கள் காரணமாகச் செய்யப்படும் முயற்சிகளாலும், பற்றினாலும் உயிர்க்கு உறுதி நாடுதற்குக் காலம் பெறாதவாறு செய்தல். இம் மந்திரத்துள் மூன்றாம் எழுத்து எதுகை வந்தது.*

*இதனால், செல்வம் தான் நிற்கும் சிறிதுகாலத்திலும் பந்தமாயே நிற்றல் கூறப்பட்டது.*

**173.** *தெளிவுரை :- ஒத்து வாழ்கின்ற, 'மனைவி, மக்கள், உடன் பிறந்தார்' என்போரும் தம் தலைவரால் தங்கட்குக் கிடைக்கும் பொருள் எவ்வளவிற்று என்றே நோக்கி நிற்பர். அவரால் விரும்பப் படுகின்ற அப்பொருளை மிக ஈட்டுதல் ஒன்றையே செய்து வாழ்நாள் போக்குவார்க்கு இறுதிக்கண், 'அந்தோ! எம்மைக் காக்க எம்முடன் வருக' என்று அழைத்துச் செல்லும் துணை ஒன்றைப் பெறுதலும் கூடுமோ!*

*குறிப்புரை :- 'மனைவி முதலாயினார் உடன்வரும் துணையாக மாட்டாமை அறிந்து, அவர் பொருட்டாக பொருள் ஈட்ட முயலுதலை விடுத்துச் சிவபெருமானை வழிபட்டு வாழின், அவன் துணையாவான் ஆதலின் அவனையே வழிபடுக' என்பது கருத்து. 'வாழ்வும்' என்பது பாடம் ஆகாமை அறிந்துகொள்க. செல்வத்தை "ஒண் பொருள்" என்றது, மனைவி முதலானோர் கருத்துப்பற்றி, 'எமக்கு ஒண்பொருள் அளவு ஏது என்பர்' என மாற்றி உரைக்க. "கூடலும்*

174. வேட்கை மிகுத்தது மெய்கொள்வார் இங்கிலை
பூட்டுந் தறியொன்று போம்வழி ஒன்பது
நாட்டிய தாய்தமர் வந்து வணங்கிப்பின்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. 8

---

*ஆமே" என்றதற்கு, மேல், "குதிக்கலும் ஆமே" என்றதற்கு உரைத்த வாறே உரைக்க. ஈண்டும் ஏகாரத்தை ஈற்றசையாக்கி, 'ஒண்பொருள்'; என்றதனைச் சிவபெருமானாகக் கொண்டு, 'ஒண்பொருளாகிய அதனைச் செய்வார்கட்கு' எனக் கூட்டி உரைப்பாரும் உளர். இதனுள் உயிரெதுகை வந்தது.*

*இதனால், 'உயிர்ச்சார்பாகிய சுற்றத்தாரையும், அவர் தந்நலத்தராதல் நோக்கிப் பொருட் சார்பாகிய செல்வத்தோடு ஒப்ப வைத்துத் துறக்க' என்பது கூறப்பட்டது.*

**174. தெளிவுரை :-** *உயிராகிய பசுவைக் கட்டி வைத்துள்ள தறி ஒன்றே. அது கட்டவிழ்த்துக் கொள்ளுமாயின், ஓடிப்போவதற்கு ஒன்பது வழிகள் உள்ளன. அப்பொழுது செல்வத்தைத் தேடி அதனால் புறந்தரப் பட்ட தாயரும், பிற சுற்றத்தாரும் உடலைச் சூழ்ந்து நின்று, சென்ற உயிரைத் தெய்வமாக வணங்கிப் பின் தம்மைப் புறந்தந்தவர் பால் ஆசை மிக்குளதே ஆயினும், அவர் உடம்பைச் சுடுகாட்டிற்குக் கொண்டு செல்வோரிடம் காட்டிக் கொடுத்துக் கைவிட்ட நிலை உளதாவதன்றி, அவ்வுடம்பைத் தன்னிடமே வைத்துக் கொள்கின்றவர் இவ்வுலகில் ஒருவரும் இல்லை.*

**குறிப்புரை :-** *"வேட்கை மிகுத்தது" என்பதை மூன்றாம் அடியின் இறுதியிலும், "மெய்கொள்வார் இங்கிலை" என்பதை இறுதிக் கண்ணும் கூட்டி உரைக்க. "மிகுத்தது" என்பதன் பின் 'ஆயினும்' என்பதும், "கைவிட்டவாறே" என்பதன்பின் 'உளதாம்' என்பதும் எஞ்சி நின்றன. "தறி" என்றது உடம்பையும், "வழி ஒன்பது" என்றது அதில் உள்ள ஒன்பது வழிகளையுமாம். பூட்டுதலுக்குச் செயப் படு பொருள் வருவிக்கப்பட்டது.*

*இதனால், 'தந்நலம் கருதாத சுற்றத்தாராயினும் துணையாக மாட்டுவரல்லர்' என்பதுணர்த்தி, மேலது வலியுறுத்தப்பட்டது.*

**175. தெளிவுரை :-** *உடம்பொடு கூடிநின்ற உயிர், அவற்றிடையே நின்ற தொடர்பை விடுத்து நீங்கும்பொழுது, அதனோடு உடன்*

175. உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது
அடும்பரி சொன்றில்லை அண்ணலை எண்ணும்
விடும்பரி சாய்நின்ற மெய்நமன் தூதர்
சுடும்பரி சத்தையுஞ் சூழகி லாரே. 9

---

*செல்லும் பொருள் ஒன்றேனும் இல்லை. அவ்வுயிரை விட்டுத் தனித்து நிற்கும் உடம்பு பின் சுட்டெரிக்கப்படும் பொருளாய்விடும், யம தூதர் அதனையும் உடன்கொண்டுபோக நினைத்தல் இல்லையாதலால், ஆகவே, எல்லாவற்றையும் விடுத்துச் சிவபெருமானை நினையுங்கள்.*

***குறிப்புரை :-*** *'அடுக்கும்' என்பது இடைக் குறைந்து நின்றது. "பரிசு" மூன்றும் ஆகுபெயராய் அவற்றை உடைய பொருள்களைக் குறித்தன. 'அதனையும்' என்பது 'அத்தையும்' என மருவிற்று. அதன்பின், 'கொள்ள' என்பது எஞ்சிநின்றது. 'அத்தையும் நமன் தூதர் சூழகிலாரே' எனக் கூட்டுக. விடும் பரிசாய் நின்ற மெய் நமன் தூதர் - பிராரத்த கன்மம் உண்டு கழியும்வரை உடனிருந்த உயிர் உண்டு கழிந்த பின்பு, அவ்வுடம்பை விட்டு விடும் உபாயத்தை ஆராய்ந்து எதன் வழியாகச் சென்று இவ்வுயிரைக் கவர்வோம் என்றிருக்கின்ற எமதூதர்கள்.*

*இதனால், செல்வமும், சுற்றமும் துணையாகாமையைத் தொகுத்துக் கூறி, சிவபெருமானை அடைக' என முடித்துக் கூறப்பட்டது.*

## 7. இளமை நிலையாமை

*'செல்வச் செருக்கில் ஆழ்ந்து சிவனை மறத்தல் கூடாது' என்றற்குச் செல்வ நிலையாமை கூறிய நாயனார், யாக்கையும் நிற்பச் செல்வமும் நின்றதாயினும் அவ்விரண்டாலும் பயன் கொள்ளுதல் இளமைப் பருவத்தேயல்லது, அது கழிந்தபின் கூடாதாகலானும், அவ்விளமைதான், யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமைகளிலும் முற்பட வருதலும் உண்டாகலானும், இளமை நீங்கியவழி உலக இன்பத்தையேயன்றிச் சிவனது திருவடி இன்பத்தையும் பெறுதல் கூடாதாகலானும், 'இளமைச் செருக்கில்' ஆழ்ந்து சிவனை மறவாது, இளமையிற்றானே சிவனை அடையுங்கள்' என்றற்கு, இளமை நிலையாமையைப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*"வேண்டின் உண்டாகத் துறக்க" - குறள் 342*

*எனத் திருவள்ளுவரும்,*

*அழகி யோம்இளை யோர்எனும் ஆசையால்*
*ஒழுகி ஆவி உடல்விடு முன்னமே*
*நிழலதார் பொழில் நீலக் குடிஅரன்*
*கழல்கொள் சேவடிகைதொழு துய்ம்மினே. - தி.5 ப.72 பா.8*

*இளமை கைவிட்டகறலும் மூப்பினார்*
*வளமை போய்ப்பிணி யோடு வருதலால்,*
*உளமெ லாம்ஒளியாய்மதி யாயினான்*
*கிளைமை யேகிளை யாக நினைப்பனே.- தி.5 ப.97 பா.28*

*எனத் திருநாவுக்கரசரும் இவ்வாறு அருளிச் செய்தல் காண்க.*

*"நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர்*
*குழவி யிடத்தே துறந்தார்" - நாலடி நானூறு. 11*

*என்றார் நாலடி நானூற்றினும்.*

*இளமையிலே சிவபெருமானை அடைந்துவிட்டமையால், ''முன்னடைந்தான் சம்பந்தன்'' என ஞானசம்பந்தர் மகிழ்ந்து பாடினமையையும், நாவுக்கரசர் அவ்வாறு அடையாதொழிந் தமையின்,*

*"முன்பெலாம் இளைய காலம் மூர்த்தியை நினையா தோடி*
*கண்கண இருமி நாளும் கருத்தழிந் தருத்த மின்றிப்"*

**176.** கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே. **1**

---

*பின்பகல் உணங்கல் அட்டும் பேதைமார் போன்ற துள்ளம்"*

*- தி.4 ப.28 பா.1*

*"முன்ன மேநினை யாதொழிந் தேன்உனை*
*இன்னம் நான்உன சேவடி ஏத்திலேன்"*

*- தி.5 ப.57 பா.1*

*"தலையாலங் காடன் றன்னைச் சாராதே சாலநாள்*
*போக்கி னேனே" - தி.6 ப.7 பா.9*

*"புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள்*
*போக்கி னேனே" - தி.6 ப.54*

*என்றாற் போலப் பலபடக் கழிவிரக்கம் கொண்டமையும் கருதற் பாலன.*

*"முன்னிளங் காலத்தி லேபற்றினேன்"*

*- தி.11 மூத்த நாயனார் இரட்டை மணிமாலை 12*

*என்று மகிழ்கின்றார் கபிலதேவ நாயனாரும்.*

**176. *தெளிவுரை :-*** *நாள்தோறும், கிழக்கில் அழகிதாத் தோன்றிப் பின் வானில் செல்லுகின்ற பேரொளியும் வெப்பமும் உடையதாய ஞாயிறு, பின்பு மேற்கில் வெப்பமும், ஒளியும் குறைந்து சாய்தலைக் கண்ணொளியில்லாத மக்கள் ஒளியில்லாத அக்கண்ணால் கண்டும் காணாதவராகின்றனர். அதுபோல, அகன்ற உலகில் அறிவில்லாதிருக்கும் மக்கள், குழவியாய்ப் பிறந்த பசுக்கன்று அப்பொழுது துள்ளி ஆடிப் பின்பு சில நாளில் வளர்ந்து எருதாகி நன்கு உழுது, பின்னும் சில நாள்களுக்குப் பிறகு கிழமாய் எழமாட்டாது விழுதலைக் கண்ணாற் கண்டும், பிறந்த உடம்புகள் யாவும் இவ்வாறே இளமை நீங்கி முதுமையுற்று விழும் என்பதை அறியாதவராகின்றனர்.*

**177. ஆண்டு பலவுங் கழிந்தன அப்பனைப்**
**பூண்டுகொண் டாரும் புகுந்தறி வார்இல்லை**
**நீண்டன காலங்கள் நீண்டு கொடுக்கினுந்**
**தூண்டு விளக்கின் சுடரறி யாரே. 2**

---

*குறிப்புரை :- இஃது எடுத்துகாட்டுவமை. பிறந்த கன்று வளர்ந்து காளையாய்ப் பின் கிழமாதற்கு ஞாயிற்றின் தோற்றம் செலவு சாய்வு என்னும் இவை ஒருவாற்றான் உவமையாதல் அறிக. தமது இளமை நீங்குதல் அப்பொழுது காட்சிக்கு எய்தாதாயினும், காட்சிக்கு எய்துவதாயகன்றின் இளமை நீக்கமாகிய உவமையளவையின் வைத்தாயினும் உணர்தலே அறிவுடைமையாம் எனவும், அவ்வாறு உணர்வார் உளராயினும், உணர்ந்ததற்கேற்ப ஒழுகாமையின், அவரும் உணராதவரே எனவும் கூறுவார் இவ்வாறு கூறினார். இனி இங்ஙனம் எடுத்துக்காட்டுவமையாக்காது, ஞாயிற்றையும், கன்றோடு உடன்வைத்து இரண்டு உவமை அளவை கூறிற்றாக உரைப்பாரும் உளர். "எருதாய்" எனப் பின்னர் வருகின்றமையின், வாளா, "கன்று" என்று போயினார். வருவித்துரைத்தன பலவும் இசையெச்சங்கள். இதனால், இளமை நிலையாமை காட்சியானே உணரப்படுதலின், அதனையறிந்து தக்கது செய்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது.*

**177. தெளிவுரை :-** *மக்கள் பிறந்தபின் சில ஆண்டன்றிப் பல ஆண்டுகள் கழியினும், சிவபெருமானை அறிதலைக் கடனாகக் கொண்டு முயன்று அறிகின்றவர் யாரும் இல்லை. அவ்வாற்றால் இதுகாறும் நீடுசென்ற காலங்கள் இனியும் நீடுசெல்லுமாயினும், அவர் அவனை அறியமுயல்வாரல்லர்.*

**குறிப்புரை :-** *'ஆகவே, அவர் இளமை நிலையாமையை அறிவாரல்லர்' என்பதாம். ''கழிந்தன'' என்றதன்பின், 'எனினும்' என்பது வருவிக்க. பூண்டுகொள்ளுதல், கடனாக மேற்கொள்ளுதல், "நீண்டன" என்றது வினைப்பெயர். காலம் ஒன்றாயினும், நாள், திங்கள், யாண்டு முதலிய பாகுபாட்டால் பலதிறப்படுதலின், ''காலங்கள்'' எனப் பன்மையாற் கூறினார். "கொடுக்கினும்" என்ற உம்மை, எதிர்மறை, 'பேரொளி உடையவன்' என்பார், சிவபெருமானை, 'தூண்டப்பட்ட விளக்கின் ஒளி' என்றார். "தூண்டு சுடரனைய சோதி கண்டாய்" (தி.6 ப.23 பா.1) என அப்பரும் அருளிச் செய்தல் காண்க.*

*இதனால், உலகரது அறியாமை கூறுதல்போல, ஆண்டு தோறும் இளமை கழிந்து செல்லுதல் கூறப்பட்டது.*

178. தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை
ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்
பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை
ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே. 3

179. விரும்புவர் முன்னென்னை மெல்லியல் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயும்ஒத் தேனே. 4

---

178. ***தெளிவுரை :-*** *சிறிது சிறிதாகத் தேய்ந்து முடிகின்ற இளமைப் பருவம், கடைசியில் மிக நுணுகி முடிந்துவிட்ட பின்பு செயல்கள் யாவும் செய்தற்கரியனவாய் ஒழியும். (யாதொன்றும் செய்ய இயலாது என்பதாம்). ஆதலால், நன்கு இயங்கத்தக்க இளமை உள்ளபொழுதே சிவபெருமானது பெருமையை ஆய்ந்துணர்ந்து உள்ளத்திற் கொள்ளுங்கள்.*

***குறிப்புரை :-*** தேய்தல் - மெலிதல். *அறுதல் - சிறிது சிறிதாக இற்றுப்போதல். ஒழிதல் - இல்லையாதல். துணிவு பற்றி, "ஒழிந்த" என இறந்த காலத்தாற் கூறினார். அற்ற கங்கை - அடங்கிய கங்கையை உடைய. முதுமைக் காலத்தில் உயிர் செயலற்றுப்போதலின், அது செயலாற்றுதற்குரிய இளமைப் பருவத்தையே, "உயிருள்ள போது" என்றார். இதனால், முதுமைக்காலம் யாதொரு பயனையும் தாராத தாகலின், இளமை நிலையாமையை மறக்கலாகாமை கூறப்பட்டது.*

179. ***தெளிவுரை :-*** *முன்னெல்லாம் என்னை இளமங்கையர் கரும்பைப் பிழிந்து பயனாகக் கொண்ட அதன் சாறுபோலப் பெரிதும் விரும்புவர். இப்பொழுதோ அவர்கட்குக் கரும்புபோல் நின்ற யானே காஞ்சிரங்காப்போல (எட்டிக்காய்போல) நிற்கின்ற நிலையையும் காண்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *இது, முதுமை எய்தி, அதனால் நாணமும், துயருங் கொண்டு வருந்துவான் ஒருவனது கூற்றாகச் சொல்லப்பட்டது. இதன் பயன், 'இளையராயினார் பலரும் இளமைக்காலத்தே உயிர்க் குறுதியைத் தேடிக் கொள்ளாராயின், பின்னர் இவ்வாறு வருந்துதல் அன்றிப் பிறிதொன்றும் காணார்' என்பது உணர்த்துதல். திருநாவுக்கரசர்,*

*"தளையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்பமெய்த*
*இளையது மல்லேன் எந்தாய், என்செய்வான் தோன்றினேனே"*

*- தி.4 ப.78 பா.9*

*என்று அருளிச்செய்ததும் மேற்காட்டியவாறு, இளமையிலே பயன் பெறாது முதுமையில் துன்புறுதல்கருதி இரங்கியதேயன்றிப் பிறிதில்லை என்பது வெளிப்படை. அங்ஙனமாகவும், 'அவரும் மகளிரின்பத்தை இழந்தமையை எண்ணிக் கழிவிரக்கங் கொண்டார்' எனத் தமக்கு வேண்டியவாறே உரைத்து, எரிவாய் நிரயத்தைத் தேடிக் கொள்வாரும் உளர். "முன்விரும்புவர்" என்றது இயற்கைக்கண் வந்த காலவழுவமைதி. "முன்" என்றதனால், 'இது பொழுது' என்பது போந்தது. முடிவில் உளதாதல் பற்றிப் பயனை, "கடை" என்றார். 'கடையாக' என ஆக்கம் வருவிக்க. 'நீர் போல் விரும்புவர்' என மேலே கூட்டி முடிக்க. மூன்றாம் அடி, 'அவர்க்கு' என்னும் அளவாய் நின்றது. "கரும் பொத்து" என்றது வழிமொழிதல் (அனுவாதம்). அதனால், 'அந் நிலையை உடையனாய் இருத்த யானே, இந்நிலையை எய்தினேன்' என்பது பெறப்பட்டது.*

*இதனால், இன்பச் செருக்கும் இளமையோடே ஒழிதல் கூறப்பட்டது.*

*காலி னோடு கைகளும் தளர்ந்து காம நோய்தனால்*
*ஏல வார்கு ழலினா ரிகழ்ந்து ரைப்ப தன்முனம்*
*மாலி னோடு நான்முகன் மதித்த வர்கள் காண்கிலா*
*நீல மேவு கண்டனார் நிகழ்ந்த காழி சேர்மினே.*

*- தி.2 ப.97 பா.9*

*எனத் திருஞானசம்பந்தரும், இன்பச் செருக்கு இவ்வாறொழியும் என்று அருளிச் செய்தார். இன்னும் அவர்,*

*நிலைவெ றுத்தநெஞ்ச மோடு நேசமில் புதல்வர்கள்*
*முலைவெ றுத்த பேர்தொடங்கி யேமுனிவ தன்முனம்*
*தலைப றித்த கையர் தேரர் தாம்தரிப் பரியவன்*
*சிலைபிடித் தெயிலெய்தான் திருந்து காழி சேர்மினே.*

*- தி.2 ப.97 பா.8*

*என முதுமைக் காலத்தில் புதல்வர், பெயரர் என்பவராலும் வெறுக்கப் படுதலை அருளுதல் காண்க.*

**180.** பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலங் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலங் கடந்தண்டம் ஊடறுத் தானடி
மேலுங் கிடந்து விரும்புவன் நானே. **5**

**181.** காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்
மாலை படுவதும் வாழ்நாள் கழிவதும்
சாலும்அவ் வீசன் சலவிய னாகிலும்
ஏலநினைப்பவர்க் கின்பஞ்செய் தானே. **6**

---

**180.** *தெளிவுரை :- ஒன்றாய் நின்ற வாழ்க்கைக் காலம், 'குழவி, இளமை, முதுமை' என்னும் பருவ வேறுபாட்டால் முத்திறப்பட்டு ஒவ்வொன்றாய் பலவும் கடந்தொழிதலைக் காட்சியிற் கண்டு வைத்தும், உலகர் அவற்றை நினைக்கின்றிலர். (எனக்கோ அக்காலக் கழிவினால் பேரச்சம் உண்டாகின்றது). அதனால், நான் இந்நில வுலகையே அன்றி இதற்குமேல் உள்ள அண்டங்கள் பலவற்றையும் ஊடறுத்துக் கடந்து அப்பால் நிற்கின்ற சிவபெருமானது திருவடி என்னைத் தன்கீழ் வைத்திருந்தும், பிறிதொன்றை விரும்பாமல் அதனையே விரும்புவேன்.*

*குறிப்புரை :- "பாலன்" முதலிய மூன்றும், அப்பருவத்தையே குறித்து நின்றமை அறிக. தம் செய்தியைக் கூறியது நிலையாமையால் தமக்கு உளதாய அச்சத்தினை உணர்த்து முகத்தான் அறிகிலாதவரது அச்சமின்மை குறித்தற் பொருட்டாதலின், அது வருவித்துரைக்கப் பட்டது.*

*நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்*
*நெஞ்சத் தவலம் இலர். - குறள். 1072*

*எனத் திருவள்ளுவரும் அறிவிலாதாரது யாதும் அறியாநிலையை எடுத்து உள்ளுறையாக இகழ்ந்தோதினார். 'அடி, மேல்கிடந்தும்' என உம்மை மாற்றி உரைக்கப்பட்டது. 'பிறிதொன்றைச் சிறிது விரும்பினும் அது பிறப்பிற்கு ஏதுவாம்' என்பது கருத்து. அதனை, ஆலாலசுந்தரரது வரலாறு நன்கு உணர்த்துதல் காண்க. இதனால், 'இளமை நிலையாமை நோக்கிக் கவலாமை அறிவிலாதாரது இயல்பு' என்பது கூறப்பட்டது.*

**181.** *தெளிவுரை :- நாள்தோறும் காலையில் துயில்விட்டு எழுந்த மக்கள், மீண்டும் நாள்தோறும் மாலையில் துயிலுதலும், இவ்வாறே அவர்தம் வாழ்நாள் ஒவ்வொன்றாகக் கழிந்து முடிதலும் போதும்,*

**182.** பருவூசி ஐந்துமோர் பையினுள் வாழும்
பருவூசி ஐந்தும் பறக்கும் விருகம்
பருவூசி ஐந்தும் பனித்தலைப் பட்டால்
பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே. 7

---

*(இனியும் இவை நிகழ வேண்டுவது என்னோ!) சிவபெருமான் இவ்வாறு அவர்களை இவ்விரண்டனுட்படுத்துத் துன்புறுத்துகின்ற முனிவினனாயினும், தன்னை மிக நினைத்த பலர்க்கு இன்பத்தைத் தந்துள்ளான்.*

***குறிப்புரை :-*** *"நித்தலும்", இரண்டனுள் முன்னதனை முதலிற் கூட்டுக. "சாலும்" என்றது, 'அதனால் பயனில்லை' என்றவாறு. 'இச் சலவியன்' எனச் சுட்டு வருவித்துரைக்க. சலம் - சினம்; அது மறைத்தற் சத்தியாம். "முற்சினமருவுதிரோதாயி" என்றார் சிவப்பிரகாசத்தினும் (48) மிக நினைத்தலாவது, இளமை தொட்டே நெடுங்காலமாக நினைத்தல்.*

*"பவன் என்னும் நாமம் பிடித்துத் திரிந்து*
*பன்னாள் அழைத்தால்*
*இவன் என்னைப் பன்னாள் அழைப்பொழியான் என்று*
*எதிர்ப்படுமே" - தி.4 ப.112 பா.9*

*என அப்பரும்,*

*அரங்கமாய்ப் பேய்க்காட்டில் ஆடுவான் வாளா*
*இரங்குமோ எவ்வுயிர்க்கும் ஏழாய் - இரங்குமேல்*
*என்னாக வையான்தான் எவ்வுலகம் ஈந்தளியான்*
*பன்னாள் இரந்தாற் பணிந்து. - தி.11 அற்புதத் திருவந்தாதி 78*

*எனக் காரைக்கால் அம்மையாரும் சிவபெருமானைப் பன்னாள் வழிபடுதலை வலியுறுத்து ஓதுதல் காண்க. இதனால், 'இளமை நீங்குதற்கு முற்றொட்டே சிவபெருமானை நினைக' என்பது கூறப்பட்டது.*

**182. *தெளிவுரை :-*** *நூலால் தைக்கும் நுண்ணூசிபோலாது, சணற்புரியால் தைக்கின்ற பருவூசிகள் ஐந்தும் ஒரு சணற்பைக்குள் இருக்கின்றன. அவை பருவூசியாயினும் பறக்கும் தன்மை வாய்ந்த யானைகளாம். அத்தன்மையாவன அவை மெலிவடையுமாயின், அவை தங்கியுள்ள பையும் பறக்கின்ற தன்மையை உடையதாகிவிடும்.*

***குறிப்புரை :-*** *பொருள்களை அறியும் அறிவுடைப்பொருள் உயிரேயாகலின் அதனை, 'நுண்ணூசி' என்று வைத்து, அதற்கு*

**183.** கண்ணனுங் காய்கதி ரோனும் உலகினை
உண்ணின் றளக்கின்ற தொன்றும் அறிகிலார்
விண்ணுறுவா ரையும் வினையுறு வாரையும்
எண்ணுறும் முப்பதில் ஈர்ந்தொழிந் தாரே. 8

---

*வாயிலாய் நிற்றலின் தாமே அறிவுடையன போலத் தோன்றுகின்ற ஐம்பொறிகளைப் "பருவூசி" என்றார். "பை" என்றது உடம்பை. அறியுமாற்றால், 'ஊசி' எனத்தக்க ஐம்பொறிகள் தாமே அடங்காது புலன்கள் மேற் செல்லுமாற்றால் 'யானை' எனப்படுமாகலானும், 'அவ்வாற்றால் அவை யானை எனப்படினும், புலன்களைச் சென்று பற்றும் விரைவு பற்றிப் பறவையாகவும் கூறுதற்கு உரிய' என்பார், 'பறக்கும் விருகம்' என்றார். விருகம் - 'மிருகம்' என்பதன் சிதைவு. 'பல்விருகமாகி' (தி.8 சிவபுராணம்) எனத் திருவாசகத்தினும் வந்தது. 'மிருகம்' என்றது ஏற்புழிக் கோடலால் யானையாயிற்று. "ஆக மதத்தன ஐந்து களிறுள" (தி.10 - 5ஆம் தந்திரம்) என்பது போல ஐம்பொறிகளை யானையாக உருவகித்தல் பெரும்பான்மையாதல் அறிக. பனித்தல் - நடுங்கல்; தளர்ச்சி. பொறிகள் புலன்களைக் கவரும் ஆற்றலை இழப்பின் உடல் இறந்ததோடு ஒக்குமாதலின் 'பரு வூசி ஐந்தும் பனித் தலைப் பொருந்தினால் பையும் பறந்தது போல்வதே' என்றார். எனவே, 'அவைமெலிதலாகிய முதுமை வருதற்கு முன்னே ஈசனை நினைக' என்பதாம்.*

*இதனால் 'இளமையது நீக்கம் உடல் நீக்கத்தோடு ஒக்கும்' என அதனது இன்னாதநிலை கூறப்பட்டது.*

**183.** *தெளிவுரை :- திருமாலும், பகலவனும் உலகத்தை அதன் உள்ளிருந்தே அளக்கின்றதை உலகர் சிறிதும் நினைக்கின்றிலர். நினைப்பாராயின், அவ்விருவரும் வீடுபேற்றிற்கு உரியவரையும், பிறப்பிற்கு உரியவரையும் முறையே முப்பதுயாண்டு அகவையிலும், அறுபது யாண்டு அகவையிலும் இவ்வுலகத்தினின்றும் பிரிக்கின்றவ ராவார்.*

*குறிப்புரை :- 'திருமால் உலகத்தை அதன் உள்ளிருந்து ஈரடியாலே அளந்தான் என்பதனை என்றோ ஒரு காலத்து நிகழ்தொழிந்த நிகழ்ச்சியாக எண்ணுதல் கூடாது; என்றும் நிகழ்வ தாகவே எண்ணல் வேண்டும்; ஏனெனில், அக்கதையின் உட்பொருள், அவன் காத்தற் கடவுளாதலின், உயிர்கள் பிறக்கும் இடங்களிலெல்லாம் சென்று காத்தற்பொருட்டு அவ்விடங்களைத் தன்னுள் ஓர்ந்துணர் கின்றான் என்பதே ஆதலின் என்பது நாயனார் கருத்து. அதனால், உலகத்தைத் திருமால் இடவகையாலும், பகலவன் கால வகையாலும்*

அளக்கின்றவராதல் அறிக. இப்பொருள் உணரமாட்டாதார் "கண்ணனும்" என்னும் பாடத்தை, 'கண்ணதும்' என ஒதுப.

"எண்ணுறும் முப்பது" என்றதற்கு, 'முதல் முப்பது'. இரண்டாவது முப்பது மூன்றாவது முப்பது என்று இவ்வாறு எண்ணப்படும் முப்பது' என உரைக்க. இவற்றுள் முதல் முப்பதாண்டிற் குள்ளே கல்வி அறிவு ஒழுக்கங்களால் நிரம்பி, நிலையாமை உணர்வு பெற்று நின்றாரை இனி இவர் உலகருள் ஒருவராக வைத்து எண்ணற் பாலரல்லர் எனவும், அங்ஙனம் அவ்வுணர்வு பெறாதாரை அறுபதாண்டு வரையும் கண்காணித்து நின்று, அத்துணை ஆண்டுகள் கழிந்த பின்னரும் நிலையாமை உணர்வு வரப் பெறாதவரை, 'இனி இவர் இவ்வுலகத்தில் வாழ்ந்தும் வாழ்நாள் முடிந்தவரேயாவர்' எனவும் காத்தற் கடவுள் துணிந்தொழிதலின், அவ்விருதிறத்தாரும் அவ்வவ் ஆண்டளவில் அக்கடவுளால் உலகத்தினின்றும் பிரிக்கப்படுவோராதல் அறிக. காய்கதிரோன் காத்தற் கடவுளது துணிவிற்குக் கருவியாய் நிற்றல் பற்றி, அவனையும் அக்கடவுளோடு ஒப்பவைத்து எண்ணினார்.

பதினாறாண்டில் மணவினை முடிக்கப்பெற்று முப்பதாண்டின் காறும் உலகியலில் ஈடுபட்டிருப்பினும், கட்டிளமைக் காலம் முப்பதாண்டோடு முடிவுறுதலின், அதற்குள்ளே நிலையாமை உணர்வு பெறாதொழியின் அதன் பின்னர் அதனைப் பெறுதல் ஐயமேயாதலின், 'இவர் வீடு பெறுதற்கு உரியார்' எனக் காத்தற்கடவுள் துணிதற்கு அவ் யாண்டே எல்லையாயிற்று.

இனி, முப்பதாண்டிற்கு மேலாய் அறுபதாண்டின்காறும் செல்லும் காலம், 'இவர் இத்தன்மையாராவர்' என்னுந் துணிவினைப் பயவாது ஐயத்தையே தந்து நின்று, அதன்பின் நிலையாமை உணர்வு வருதல் பெரும்பான்மையும் இல்லையாதலின், 'இனி இவர்க்கு நிலையாமை உணர்வு வாராது' என்று துணிதற்கு அவ்யாண்டே எல்லையாயிற்று. அறுபதாண்டின் காறும் பற்ற விடப்பெறாதவர் பின் விடப்பெறுதல் பெரும் பான்மை இல்லை என்பதே ஆன்றோரது துணிபு. திருநாவுக்கரசு நாயனார்போல அறுபதுயாண்டின் பின்னரும் மெய்யுணர்வு பெறுதல் இறைவன் திருவருள் தானே முன்நிற்க நிகழும் அருஞ்செயல் என்க. அது பற்றியன்றே, அந்நாயனார் இறைவன் தம்மை ஆட்கொண்டநிலையைப் பெரிதும் சிறப்பித்துப் புகழ்கின்றார். இக்காலத்து உள நூலாரும், 'அறுபதுயாண்டின் பின்னர் ஒருவர்க்கு மனமாற்றம் உண்டாகாது' என்பர்.

முப்பதாம் ஆண்டளவில் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமல் தன்னுட் பெறானாயின் - செப்பும்

> கலையளவே யாகுமாம் காரிகையார் தங்கள்
> முலையளவே யாகுமாம் மூப்பு. - நல்வழி

என ஔவையாரும், 'மூவாசை நீங்கி மெய்ப்பொருளைப் பெறுதல் முப்பதாண்டிற்குள் உண்டாகவில்லையெனின், பின்னர் உண்டாதல் அரிது' என்றது காண்க.

இங்கு, 'முப்பது' என்றது கதிரளவை (சௌரமான) யாண்டேயாம். மதியளவை (சாந்திரமான) யாண்டு கதிரளவை யாண்டிற்குச் சிறிது ஏறக்குறைய நாற்பது நாள்கள் குறைவுடையது. இனிப்பிற கோள் அளவைகள் மிகக் குறைந்தும், கூடியும் நிற்கும். அதனால் கதிரளவையின் பத்துத் திங்களைப் பல்கோள்களின் பொதுயாண்டாக வைத்து, அவற்றின் பேராட்சி, உள்ளாட்சிகளை (திசா புத்திகளை)க் கணக்கிடுவர். அவ்வாற்றால் பலகோள் யாண்டின் ஒரு வட்டம், 'நூற்றிருபதுயாண்டு' எனப்படுகின்றது. எனினும், அது கதிரளவையின் நூற்றியாண்டேயாம். ஆகவே, மக்களின் நிறைவாழ்நாள் 'நூற்றியாண்டுக் காலம்' என்றல் இழுக்காதல் இல்லை. இஃது அறியாது இக்காலத்தார் கோள்களின், பேராட்சி உள்ளாட்சியாண்டுகளைக் கதிரளவையாண்டின் வைத்துக் கணக்கிட்டு, நடைமுறைக்குப் பொருந்தாவகை செய்கின்றனர். அது நிற்க.

சிலர், 'இங்குக் கூறிய முப்பதிற்றுயாண்டு பல்கோள் யாண்டே; அதனால் அவை கதிரளவையில் இருபத்தைந்துயாண்டே யாகலின், ஒருவனது வாழ்நாள் எல்லையாகிய நூற்றியாண்டினை நாற் கூறிட்டு ஒவ்வொரு கூற்றினும் முறையே மாணி (பிரமசாரி), இல்வாழ்வான் (கிருகத்தன்), நோன்பி (வானப்பிரத்தர்), துறவி (சந்நியாசி) என்னும் நிலைகளை உடையனாதல் வேண்டும். இந்நிலைகளில் நான்காம் நிலையிலே பற்றுறுதி உளதாகும். இவ்வாறன்றி முதல் நிலைக் கண்ணே பற்றுறுதி உடையனாய் நிலைமாணி (நைட்டிக பிரமசாரி) யாகி வீடுபேறு ஒன்றையே விரும்பி நிற்பவனே தலையாய மகனாகலின், அவனது நிலைபற்றியே முப்பது யாண்டு மெய்யுணர்வு பெறுதற்கு எல்லை எனப்பட்டது' எனவும். 'அவ்வாறின்றி மேற்கூறிய வாற்றால் இல்வாழ்க்கை முதலிய நிலைகளை மேற்கொண்டு செல்வார்க்கு யாக்கை நிலைநிற்றலும், பற்றறுதலும் ஒருதலையன் மையின், அவற்றை வீடுபேற்றிற்குரிய காலமாக - ஆன்றோர் கொண்டிலர்' எனவும் கூறுவர். அவையெல்லாம் ஒக்குமாயினும், முதல் நிலைக்கண்ணே பற்றற்று நிலைமாணிகளாய் நிற்போர் உலகத்து அரியராகலானும், இல்வாழ்க்கைக்குப் பின்னர் நோன்பியாய் இருத்தல் வேண்டும் என்பதும், முப்பதுயாண்டு இல்வாழ்க்கையில் நிற்றல்வேண்டும்

**184.** ஒன்றிய ஈரெண் கலையும் உடனுற
நின்றது கண்டும் நினைக்கிலர் நீசர்கள்
கன்றிய காலன் கருங்குழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. **9**

---

*என்பதும் பொதுவாகக் கொள்ளப்படுவனவன்றிக் கட்டளையல்ல ஆகலின், பற்றுறுதி உண்டாய வழி அறுபதிற்றி யாண்டிலாயினும், அதற்கு முன்னராயினும் முற்றத் துறத்தல் குற்றமன்று ஆகலானும், அறுபதிற்று யாண்டின் பின்னரே நோன்பினராதல் வழக்கின்கட் காணப்படுதலாலும், 'முப்பதுயாண்டு' என்பதனைக் கதிரளவை யாண்டாகக் கொள்ளுதலே பொருந்துவது என்க.*

*அஃது அவ்வாறாக, சிலர் நூற்றியாண்டின் மேலும் வாழக் காண்கின்றோம் ஆதலின், 'மக்கள் வாழ்நாள் எல்லை நூற்றியாண்டு' என்றல் எவ்வாறு பொருந்தும் எனின், அவையெல்லாம் கையிலும், காலிலும் சிலர் ஆறுவிரல், ஏழுவிரல் பெற்று பிறத்தல்போல அரிதிற் காணப்படுவனவாகலின், பொதுமுறைமை ஆகா என்க. இவ்வாற்றால் இத்திருமந்திரம் முப்பதிற்றுயாண்டளவையாகிய இளமையின் சிறப்பை உணர்த்தி, அதற்குள்ளே சிவனது திருவடி உணர்வைப் பெறல்வேண்டும் என வலியுறுத்தி முகத்தால், இளமை நிலையாமையைக் கூறியவாறு அறிக.*

**184. *தெளிவுரை :-* உன்மனை முதல் பதினாறு கலைகளும் ஒருசேர வந்து நிரம்பப் பெற்ற நிறைமதி, பின்பு சிறிது சிறிதாகத் தேய்ந்து மறைவதைப் பார்த்திருந்தும், 'இளமை நிலையாது' என்பதைக் கீழ்மக்கள் நினைக்கின்றார்கள் இல்லை. (அதன் பயனாக அவர்கள் இளமையுள்ள பொழுதே உயிர்கள் உறுதி தேடிக் கொள்ளாமையால்) அவர்களது தீவினை பற்றிச் சினங் கொள்கின்ற கூற்றுவன் அவர்களை நரகக் குழியில் தள்ளிய பின்பு அதில் சென்று வீழ்ந்து துன்புறுதலைத் தவிர, அத் துன்பத்தினின்றும் நீங்கும் வழியை அவர் அறியமாட்டுவாரல்லர்.**

***குறிப்புரை :-* "ஈரெண்கலை" என்றதனால், 'அதனை ஒருங்கு பெற்று நின்றது திங்கள்' என்பது விளங்கிற்று "நின்றது" என்றது அதன் நிலைமையைக் குறித்த ஆகுபெயர். "கருங்குழி" என்றது "இருட்குழி" என்றவாறு. 'கருக்குழி' எனப் பாடம் ஓதுதல் இவ் இடத்திற்கு ஏலாமை அறிக.**

***இதனால், இளமை சிறிது சிறிதாகக் கழியும் முறைமை உவமையில் வைத்துக் காட்டப்பட்டது.***

**185.** எய்திய நாளில் இளமை கழியாமை
எய்திய நாளில் இசையினால் ஏத்துமின்
எய்திய நாளில் எறிவ தறியாமல்
எய்திய நாளில் இருந்துகண் டேனே. **10**

---

*'தேய்தல் உண்மையும், பெருகல் உண்மையும்,*
*மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்*
*அறியா தோரையும் அறியக் காட்டித்*
*திங்கட் புத்தேள் திரிதருள் உலகத்து'*

*என்னும் புறநானூற்று (27) அடிகள் இதனோடு ஒருவாற்றான் வைத்து ஒப்புநோக்கத்தக்கன.*

**185.** *தெளிவுரை :- மக்களுக்கென்று பொருந்திய நூற்றியாண்டின் எல்லைகளுக்கு இடையே கூற்றுவன் வந்து அதனை அறுத்துச் செல்லுதலைப் பலர் அறியாது வாழ்ந்து, அக்கூற்றுவன் வந்த பொழுது துயருற்றமையை நான் எனது வாழ்நாளில் பன்முறை கண்டிருக்கின்றேன்; ஆதலால், வாழ்தல் பொருந்திய நாளில் இளமை நீங்கும் முன்பே அது பொருந்தி நிற்கின்ற நாட்களில் சிவபெருமானைப் பண்ணினால் பாடித் துதியுங்கள்.*

*குறிப்புரை :- 'பலரும் முதுமைவந்த பிறகுதான் இறப்பர்' என்ற கட்டளை இன்மையால், இளமையிலே சிவனைப் பெறுதல் வேண்டும் என்றபடி.*

*"அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க"*

*என்று திருக்குறளிலும் (36),*

*மற்றறிவாம் நல்வினை யாம் இளையம் என்னாது*
*கைத்துண்டாம் போழதே கரவா தறம்செய்மின்*
*முற்றியிருந்த கனியொழியத் தீவளியால்*
*நற்காய் உதிர்தலும் உண்டு.*

*என்று நாலடி நானூற்றிலும் (பா.19) கூறப்பட்டமை காண்க.*

*எய்திய நாள் - பிராரத்த வினையின் நுகர்ச்சிக்காக எடுத்த உடம்பிலே இவ்வளவு நாள் இருக்க என்று வரையறுக்கப்பட்ட நாள். எறிவது அறியாமல் - ரேசமாக வெளியேற்றப்படும் பிராணவாயு அறியாதபடி; என்றது பூரண கும்பக நிலையிலிருந்து ஏத்துங்கள் என்றது.*

*இதனால், இளமை நிலையாமையை உணர்ந்து இளமைக் கண்ணே சிவனைப் பெற முயலல் வேண்டும் என்பது முடித்துக் கூறப்பட்டது.*

## 8. உயிர் நிலையாமை

*பல்வகை நிலையாமைகளைக் கூறுமுகத்தான் உலகத்தது பெற்றியுணர்த்தப் புகுந்து முதற்கண் உயிரோடு ஒன்றாய் நிற்கும் யாக்கையது நிலையாமையும், அதன்பின், யாக்கை நின்றதாயினும், பலவகைத் துப்புரவைத் தருகின்ற செல்வத்தது நிலையாமையும், பின்னர் யாக்கையும், செல்வமும் நின்றனவாயினும் அவ்விரண்டாலும் பயன்கொள்ளுதற்குரிய இளமை நிலையாமையும் கூறிய நாயனார், இறுதியில், சிலர், 'இளமை கழிந்து முதுமை வந்தபொழுதாயினும், அல்லது இறக்கும் காலத்திலாயினும் செய்ய வேண்டுவனவற்றைச் செய்துகொள்வோம்' என்பாராகலின், 'அது கூடாது' என்றற்கு உயிர் நிலையாமை பத்துத் திருமந்திரங்களால் கூறுகின்றார். இங்கு "உயிர்" என்றது, உயிர்த் தன்மையாகிய உணர்வினை, 'உணர்வு நிலையாமை' என்றே பாடங்கொள்ளுதலும் ஆம் திருவள்ளுவரும்,*

> *நாற்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை*
> *மேற்சென்று செய்யப் படும்.* – *குறள். 335*

*என, இறந்தொழியாத முன்னரே உணர்வு அழிதலை உணர்த்தினார்.*

> *"புலன் ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்*
> *டைம்மேல் உந்தி"* – *தி.1 ப.130 பா.1*

*என இறப்பிற்கு முன்னர் அறிவழிதலை ஞானசம்பந்தரும் அருளிச் செய்தார். இது கருதியே அப்பரும்,*

> *தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த*
> *காமன் பொடிபடக் காய்ந்த கடல்நாகைக் காரோணநின்*
> *நாமம் பரவி நமச்சிவா யவ்வென்னும் அஞ்செழுத்தும்*
> *சாம்அன் றுரைக்கத் தருதிகண் டாய்எங்கள் சங்கரனே.*
>
> – *தி.4 ப.103 பா.3*

*என்றும்,*

> *"ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்*
> *ஒக்க அடைக்கும்போது உணர மாட்டேன்"*
>
> – *தி.6 ப.99 பா.1*

*என்றும் அருளிச் செய்தார்.*

> *சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி*
> *இறுகிறுகத் தோட்கோட்புக் கொள்ளார் – இறுகிறுகிப்*
> *பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்*
> *பொன்னும் புளிவிளங்கா யாம்.* – *நாலடியார், 328*

**186.** தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி எம்பெரு மானடி ஏத்தார்
அழைக்கின்ற போதறி யாரவர் தாமே. 1

---

*என்ற நாலடிச் செய்யுள், இறுதிக் காலத்துச் செயல் கெடுதலைக் கூறியவாறும் அறிக. சிவஞானசித்தி (சூ. 2.93.04) நூலும் யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமைகளுடன் அறிவு நிலையாமையையும் உணர்த்துதல் காண்க.*

**186.** ***தெளிவுரை :-*** *தண்ணிய பூங்கொம்பில் தளிர், தழை, பூ முதலாக அதனால் தோற்றுவிக்கப்படுகின்ற பலவும் அங்ஙனம் தோற்றுவிக்கப்பட்டவாறே நில்லாது உருமாறி அழிகின்றதைக் கண்டும் அறிவில்லாதவர், ஆசிரியர் உண்மையைச் செவியறிவுறுத்துச் சிவபெருமானது திருவடியை அடைய அழைக்கின்ற பொழுதே அவரது சொற்கடவாது அதனையடைதற்கு முயலாது, 'பின்பு முயல்வோம்' என்று புறக்கணித்திருப்பர்.*

***குறிப்புரை :-*** *'அவ்வாறிருப்பின், அவ்வுணர்வு முறுகி எழாது மெலிந்து, முன்போல உலகியலில் ஆழ்ந்து கெடும்' என உணர்வினது நிலையாமை கூறியவாறு காண்க. ஒன்றே செய்க; நன்றே செய்க; நன்றும் இன்றே செய்க' என, 'நல்லன செய்தல் வேண்டும்' என்ற உணர்வு உண்டாய வழி அப்பொழுதே செய்தல் வேண்டும்' எனக் கூறுதலும், உணர்வு நிலையாமையை நோக்கியேயாம். இன்னும், 'புராண வைராக்கியம், மசான வைராக்கியம்' முதலியவற்றாலும் உணர்வு நிலையாமையைக் கூறுப. "மலர்தலும் கூம்பலும் இல்லதறிவு" (குறள் - 425) என்றாற் போல்வனவற்றாலும் திருவள்ளுவர் உணர்வு நிலையாமையை உணர்த்தினார்.*

*'நின்னைஎப் போதும் நினையலொட் டாய்; நீ நினையப்புகின்*
*பின்னை அப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி'*

*- தி.4 ப.112 பா.4*

*என்றதனாலும் இவ்வுணர்வு நிலையாமை நன்கறியப்படும். உயிர் உளதாகவும் உணர்வு இவ்வாறு நிலையாது போதலின், அதற்குக் கொம்பு கேடின்றி நிற்கவும் அதன்கண் உளவாகின்ற தளிர் முதலியன உருமாறிக் கெடுதல் உவம அளவையாயிற்று. தளிர் முதலியன தோன்றுதல் இயல்பாயினும், அதற்குக் கொம்பு முதலாதலின் அதனால் ஆக்கப்படுவனவாகக் கூறினார். இழைத்தலுக்குக் காலத்தை முதலாக வைத்து உரைப்பினும் அமையும். பிழைப்பு - பிழைத்தல்; பிழை*

**187.** ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவர்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச்செய்யைக் காவல்விட்டாரே. **2**

---

*செய்தல். அஃதாவது அழைத்தவாறே உடன்பட்டுச் செல்லாலொழிதல்.*

*நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்*
*பேணாமை பேதை தொழில். - குறள். 833*

*என்பவற்றில் இது, "பேணாமை" என்னும் குற்றமாம்.*

*"அருபரத் தொருவன் அவனியில் வந்து*
*குரபர னாகி அருளிய பெருமையைச்*
*சிறுமையென் றிகழாதே". - தி.8 போற்றித் திருவகவல்-75-77*

*என மாணிக்கவாசகரும் அருளிச்செய்தார். எம்பெருமானடியை ஏத்த அழைப்பவர் ஞானாசிரியரேயாதல் அறிக. வேறு தொடராக்காது. 'அறியாரவர்தாம், அழைக்கின்றபோது பிழைப்பின்றி எம்பெருமானடி ஏத்தார்' எனக் கூட்டி உரைக்க.*

*இதனால், உணர்வு நிலையாமை உவம அளவையின் வைத்து உணர்த்தப்பட்டது.*

**187. *தெளிவுரை :-* *உடையான் ஒருவனால் ஐவர் உழவர்க்கு ஒரு நிலம் விளைவு செய்ய விடப்பட்டது. அவ் ஐவரும் அதனை நன்றாகவே பேணி வந்தமையால், அந்நிலமும் நன்றாகவே விளைவைக் கொடுத்தது. ஆயினும், உடையான் அந்நிலத்தை மாற்றக் கருதி அவர்களை விலகுமாறு ஓலை விடுத்தமையால், அவ் ஐவரும் அந்நிலத்தைக் கைவிட்டனர்.***

***குறிப்புரை :-* *'அந்நிலையில் அந்நிலம் விளைவைத் தருதல் எவ்வாறு' என்பது குறிப்பெச்சம். ஐவர், ஐம்பொறிகள், செய், உயிர், விளைதல், உணர்வு நிகழப்பெறுதல். நாயகன், சிவன், ஓலை, ஆணை; நியதி தத்துவத்தின் செயல். "காவல் விட்டார்" என்ற அளவே கூறினமையின், 'பொறிகள் ஆற்றல் அடங்கின' என்ற அளவே கொள்க. உயிர் உளதாகவும் பொறிகள் அடங்கின் உணர்வு ஒழிதல் காட்சியானேன் உணரப்படுதலின், ஒரு பொறியன்றி ஐம்பொறியின் வயப்பட்டு நிற்கும் உணர்வு ஒரு நிலையதாதல் எவ்வாறு என்பது கருத்து. ஓர் உணர்வு ஐம்பொறியின் வயப்பட்டுப் பலவாறாகச் சிதறுண்டலால் வரும் துன்பத்தினை மாணிக்கவாசகர்,***

**188.** மத்தளி ஒன்றுளே தாளம் இரண்டுள
அத்துள்ளே வாழும் அமைச்சும்அஞ் சுள்ளன
அத்துள்ளே வாழும் அரசனும் அங்குளன்
மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. 3

---

*"ஆனைவெம் போரில் குறுந்தூறெனப் புலனால் அலைப் புண்டேன்" எனவும்,*

*"எறும்பிடை நாங்கு ழெனப்புல னால் அரிப்புண்டலந்த*
*வெறுந்தமியேன்" - தி.8 நீத்தல் விண்ணப்பம் - 21, 25*

*எனவும் விளங்க ஓதினார். இன்னும்,*

*"அஞ்சினால் இயற்றப் பட்ட ஆக்கைபெற் றதனுள் வாழும்*
*அஞ்சினால் அடர்க்கப் பட்டிங் குழிதரும் ஆதனேன்"*

*- தி.4 ப.26 பா.5*

*என அப்பரும்,*

*"ஐவர் கொண்டிங் காட்ட ஆடி ஆழ்குழிப்பட்டழுந்து வேனுக்கு*
*உய்யு மாறொன் றருளிச் செய்யீர் ஓண காந்தன் தளியுளீரே"*

*- தி.7 ப.5 பா.1*

*என ஆரூரரும் அருளிச்செய்தலும் காண்க.*

*"பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு*
*அறிவென்ற பேர்நன் றற"*

*- திருவருட்பயன் - 15*

*என்றதும் உயிர் உணர்வு தனவயமுடைத்தாய் நிலை நில்லாமை பற்றியேயாம்.*

*"ஒருபுலன் நுகரும் போதங் கொன்றிலை; ஒன்றன் பாலும்*
*வருபயன் மாறி மாறி வந்திடும்; எல்லாம் மாறும்*
*ஒருபொழுது"*

*என்னும் சிவஞான சித்தி (சூ.2.94)ச் செய்யுள் இவ்வுணர்வு நிலையாமையை இனிது விளக்குதல் காண்க.*

*இதனால், உணர்வு நிலையாமை, இறுதிக்கால நிகழ்ச்சியாகிய காட்சியின் வைத்து உணர்த்தப்பட்டது.*

**188.** *தெளிவுரை :- எனின், உயிர் நீங்கின் உடல் மண்ணோடு மண்ணாம் என்றவாறு.*

*மண்ணாலாகிய கோயில் ஒன்று உண்டு. அதில் ரேசக பூரகங்*

*களாகிய தாளங்கள் இரண்டுள்ளன; மத்தளியில் வாழும் சிற்றரசர்கள் ஐவர் உளர். அங்கேயே முடிமன்னன் ஒருவனும் வாழ்கின்றான்; அவன் போய்விட்ட பின், அக்கோயில் மண்ணாயிற்று என்றவாறு.*

*மத்தளி - மண் + தளி என்பதன் சிதைவு. தளி - கோயில். மத்தளி ஒன்றுள - உடல் மாயையின் காரியமாதலின் மண்தளி எனப் பெற்றது. "தேரின் மண் மாயையாக" என்ற சித்தித் திருவாக்கும் சிந்திக்க. ஒன்று என்றதற்கு ஏற்ப உண்டு என முடிதல் வேண்டும். மத்தளி என்பது பால்பகா அஃறிணைப் பெயராதலானும் ஒன்று என்றது ஈண்டு எண் குறித்து நில்லாது ஒரு காரியங் கூறுவன் என்புழிப் போல உரைநடைச் சுவைதர நின்றது ஒன்றாதலானும் உள எனப்பன்மை முடிபேற்றது.*

*தாளம் இரண்டு உள - மூச்சுக் காற்றை உள்ளுக்கிழுத்தலாகிய பூரகமும், வெளிவிடுதலாகிய இரேசகமும் எனத் தாளங்கள் இரண்டுள்ளன. ரேசக பூரகங்களைத் தாளம் என்றது, பூரிக்குங்கால் மார்பு வீங்கி உயர்ந்தும், இரேசிக்குங்கால் ஒட்டித் தாழ்ந்தும் இயங்குதலின், தாளமிடுங்கால் கையுயர்ந்தும், ஒற்றுங்கால் கைதாழ்ந்தும் வருதல் இயல்பு. உடலை மத்தளி (மத்தளம்) என்றமைக்கு ஏற்பத் தாளம் இரண்டு என்றார்.*

*அத்துள்ளே வாழும் அரசரும் அஞ்சுள - உடலில் வாழும் அரசர் ஐவர். மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் ஐந்திடங்களைத் தமக்குரிய தலைநகராகக் கொண்டு வாழும் சிற்றரசர்களாகிய புலனுடையார் ஐவர் உளர். அரசரும் ஐவருளர் என முடிபேற்க வேண்டியது. அஞ்சுள என்ற அஃறிணை முடிபேற்றது அரசாக உருவகிக்கப் பெற்றவை அஞ்சு புலன்களுமே என்பது தெரிவிக்க.*

*அத்துள்ளே வாழும் அரசனும் அங்குளன் - மேற்குறித்த சிற்றரசர்களை அடக்கியாளும் பேரரசாகிய ஆன்மாவும் உளன் என்பதாம். அங்குளன் என்றது சிற்றரசர்கள் ஆளுமிடங்களிலும் பேரரசன் ஆணை செல்லுமாதலின் அங்ஙனம் கூறியது. 'காலன் ஓலை வர' என்றது அதிகார இயைபு நோக்கி வருவிக்கப்பட்டது.*

*மத்தளி மண்ணாய் மயங்கியவாறு - மாயையாகிய மண்ணின் காரியமாய்ப் பரிணாமப்பட்டு நின்றவுடல் மீட்டும் தங்காரணமாகிய மாயையாய்க் கழிந்தது என்பதாம்.*

**189. *தெளிவுரை :-* இங்ஙனம் பல்லாற்றாலும், உடம்பு உள்ள பொழுதும் உணர்வு நிலையாமையை உணர்ந்து, பின், உணர்வுக்குக் கருவியாயுள்ள உடம்பும் அடியோடு நிலையாது போதலை நினைந்து**

**189.** வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
வேங்கடம் என்றே விரகறி யாதவர்
தாங்கவல் லாருயிர் தாமறி யாரே. 4

---

*உள் இருந்து நடத்தும் இறைவனை ஞானத்தால் உணரமாட்டாதவர் தம் உயிரைத் தாங்கி நிற்கின்ற அரிய உயிரையும் அறியாதவரேயாவர்.*

***குறிப்புரை :-*** *வேம் கட நாதன் - வேகின்ற காட்டில் (சுடுகாட்டில்) ஆடும் கடவுள். இனி, 'வேங்கடமலைமேல் உள்ள நாதன்' என வேறொரு பொருளும் தோன்றக் கூறினமை காண்க. "வேங்கடத்து மேயானை மேவா உயிரெல்லாம் - வேங்கடத்து நோயால் வியந்து" (தி.11 கபிலர் அந்தாதி 15) என வருதலின், வேங்கடம் சிவதலமாதல் பெறப்படும். வேம் கடத்துள்ளே - வெந்தொழிவதாகிய நம் உடம்பினுள்ளே. இறைவன் நமது புலாலுடம்பினுள்ளும் உளனாதல் மேலே (தி.10 பா.115 - 116) காட்டப்பட்டது. வேம் கடம் என்று - வெந்தொழியும் உடம்பு என்று அறிந்து. விரகு - உபாயம்; உபாயத்தால், என உருபு விரிக்க. 'தாங்க வல்லதாகிய ஆருயிர்' என்க. 'உயிரை அதற்கு உயிராய் நின்று யாண்டும் காத்தலின்' இறைவனை, "தாங்க வல்ல ஆருயிர்" என்றார். "தன் கடன் அடியேனையும் தாங்குதல்" (தி.5 ப.19 பா.9) எனவும், "எடுத்துச் சுமப்பான்" (திருவருட்பயன் 55) என்றும் வருவனவும், இறைவன் உயிரைத் தாங்குவோனாதலை விளக்க எழுந்தனவாம். தாங்கவல்ல ஆருயிரை அறியாமையாவது, 'அவ்வுயிரே, தாங்கப்படுகின்ற உயிர்க்கு உணர்வைத் தருவது' என அறியாமை. 'அறிந்தால், தமது உணர்வு நிலையாமை உடையது என்பது விளங்கும்' என்பது கருத்து. 'சிவன் உயிர்க்குயிராய் நின்று உணர்த்தாவிடில், உயிருக்கு உணர்வு நிகழாது' என்பதனை,*

> *அக்கரங்கட் கெல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்*
> *மிக்க உயிர்க்குயிராய் மேவினோம் - எக்கண்ணும்*
> *நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று*
> *நல்லாகமம் ஓதும் நாடு. - உண்மை விளக்கம் 30*

*என்பதனான் அறிக.*

> *"நானேதும் அறியாமே என்னுள் வந்து*
> *நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்" - தி.6 ப.62 பா.2*

*என அருளிச்செய்ததும் இதனை.*

**190.** **சென்றுணர் வான்திசை பத்துந் திவாகரன்**
**அன்றுணர் வால்அளக் கின்ற தறிகிலர்**
**நின்றுண ரார்இந் நிலத்தின் மனிதர்கள்**
**பொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே.** **5**

---

*இதனால், உணர்வு உளதாகுமாறு கூறு முகத்தான், அதனது நிலையாமை கூறப்பட்டது.*

**190.** *தெளிவுரை :-* பகலவன் பத்துத் திசைகளையும், ஓடி உழன்று தனது ஒளியினால் காண்கின்றான். ஆனால், சிவபெருமான், அப் பகலவன் உண்டாதற்கு முன்னிருந்தே அனைத்தையும் தனது முற்றுணர்வால் கண்டு நிற்கின்றான். அதனையும், அவன் அனைத்துலகத்தும் உள்ள நிலையாத உணர்வை உடைய உயிர்களிடத்துக் கூட்டுவிக்கின்ற மாயப்பொருள்களின் தன்மையையும் இந்நிலவுலகத்தில் உள்ள மக்கள் ஆராய்ந்துணர் கின்றார்களில்லை.

*குறிப்புரை :-* ஒளி காரணமாகப் பகலவனை இறைவனோடு உவமித்தல் வழக்காதல் நோக்கி இறைவன் அவனினும் மிக்கவனாதலை விளக்கினார். இங்ஙனம் அவனது முற்றுணர்வின் பெருமையை எடுத்துக் கூறியது, அவ்வறிவாற்றலால் அவன் அனைத்துயிர்களையும் தன் இச்சைவழி நடாத்துகின்றான் எனக் கூறுதலை நிறுவுதற் பொருட்டாம். ''அன்று'' என்பதன்பின் 'முதல்' என வருவிக்க. அளக்கின்றதற்கு வினைமுதலாகிய ''நந்தி'' என்பது மேலைத் திருமந்திரத்தினின்றும் வந்து இயைந்தது. "அறிகின்றிலர், உணரார்" என இரு தொடராக வைத்து அருளியது, 'அவ்விரண்டும் தனித்தனி ஆய்ந்துணரத் தக்க சிறப்புடையன' என்றற்கு, "இந்நிலத்தின்" எனச் சுட்டிக் கூறினமையால், ஏனையிடத்தில் அனைத்துலகமும் கொள்ளப் பட்டன. மூன்றாம் அடியை இறுதியின் வைத்து உரைக்க. பொன்றுதல், இங்கு நிலையாமை. ''உணர்வார்'' என்பது, 'உணர்வு' என்பதன் அடியாகப் பிறந்த பெயர். அனைத்துயிர்களையும் உயர்திணையாக வைத்துக் கூறினார் என்க. மாயம் - அழிவு. சிவன் பெத்தத்தில் கருவிகள் வாயிலாக நிலையாத உணர்வையே உயிர்கட்கு உண்டாக்குகின்றான் என்பதை உணர்வார்க்கு உணர்வினது நிலையாமையும் விளங்கும் என்பது கருத்து.

இதனால், உணர்வு நிலையாமைக்குக் காரணம் கூறுமுகத்தால், அந்நிலையாமை வலியுறுத்தப்பட்டது.

191. மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை
பீறும் அதனைப் பெரிதுணர்ந் தாரிலை
கூறும் கருமயிர் வெண்மயி ராவதும்
ஈறும் பிறப்புமொ ராண்டெனும் நீரே. 6

192. துடுப்பிடைம் பானைக்கும் ஒன்றே அரிசி
அடுப்பிடு மூன்றிற்கும் அஞ்செரி கொள்ளி
அடுத்தெரி யாமற் கொடுமின் அரிசி
விடுத்தன நாள்களும் மேற்சென் றனவே. 7

---

191. ***தெளிவுரை :-*** *பாவும், உண்டையுமாக மாறிக் கூடும் இழைகளை நன்கு செப்பம் செய்து ஆக்கி விலைவரம்பு செய்கின்ற பட்டாடைகள் என்றும் அவ்வாறே இருப்பதில்லை; என்றாயினும் நைந்து கிழிவதை அனைவரும் காண்கின்றனர். அதுவன்றியும் குறிக்கப்படுகின்ற ஒரு நாளை ஓர்யாண்டின் முடிவாகவும், மற்றொரு நாளை அடுத்த ஆண்டின் தொடக்கமாகவும் கொண்டு ஒவ்வொரு வர்க்கும் கழிகின்ற ஆண்டுக்கணக்கே அவர்க்கு 'விரைவில் நரை வரும்' என்பதை அறிவிக்கும். அவையெல்லாம் இருந்தும் மக்கள், 'தம் அறிவும் ஆற்றலும் இன்றுள்ளவாறே என்றும் இருக்கும்' என்று மகிழ்ந்திருக் கின்றனர். இன்னதோர் அறியாமை இருந்தவாறு இரங்கத் தக்கது!*

***குறிப்புரை :-*** *மாறு, முதனிலைத் தொழிற்பெயர். அஃது ஆகு பெயராய், அதனை உடையவற்றைக் குறித்தது. "கூறும்" என்பதனை மூன்றாம் அடியின் இறுதியிற் கூட்டி, அவ்வடி முழுவதையும் இறுதியில் வைத்து உரைக்க. "ஈற்றினாலும் பிறப்பினாலும்" என்னும் உம்மைகள் தொகுத்தலாயின. 'ஓர்யாண்டின் இறுதிநாளை அடுத்த மற்றோர் யாண்டின் முதல்நாள் தொடங்கிவிடுகின்றது' என அவற்றின் இடையறாமையை உணர்த்தற்கு ஈற்றினை முன்னர்க்கூறினார். 'அதனைப் பெரிதறிவாரில்லை' என்னும் அத்தொடரினைப் பின்னும், "கூறும்" என்பதனுடன் கூட்டுக. இளமைக் காலத்துள்ள உணர்வாற்றல் முதுமைக் காலத்துத் தளர்ச்சியுறும் என்றவாறு.*

*இதனால், உணர்வு நிலையாமை மூப்பினது இழிவுணர்த்து முகத்தால் கூறப்பட்டது.*

192. ***தெளிவுரை :-*** *எனின், வரையறுத்த நாட்களுக்குள் வழி காணுக என்று உணர்த்துதல் நுதலிற்று.*

*அடுப்பில் ஏற்றித் துடுப்பிடப் பெற்ற பானையில் சமைத்தற்காக*

193. இன்புறு வண்டிங் கினமலர் மேற்போய்
உண்பது வாச மதுபோல் உயிர்நிலை
இன்புற நாடி யிளைக்கிலு மூன்றொளி
கண்புறம் நின்ற கருத்துள்நில் லானே. 8

---

*இடப்பட்ட அரிசி ஒன்றே. அங்ஙனம் அடுப்பிலிடப்பெற்ற துடுப்பு, பானை, அரிசி ஆகிய மூன்றிற்கும் இடப்பட்ட எரிகொள்ளி ஐந்தாம்; அவ்வெரி கொள்ளி வீணாக எரிந்து போகா வண்ணம், சமைக்கத்தக்க அரிசியைக் கொடுத்துக் கொண்டே இருங்கள். பிராரத்த பொசிப்புக் காக வரையறுக்கப்பட்ட ஆயுட்காலங்கள் கழிந்தன என்றவாறு.*

*அடுக்களையிலுள்ள அடுப்பும் துடுப்பும் பானையும் அரிசியும் எரிகொள்ளியும் இவற்றை உவமையாகக் கொண்டு, எடுத்த உடம்பும், அதனை இயக்குகின்ற இடைபிங்கலையாகிற காற்றை இயக்கும் வலமூக்கும், இடமூக்குமாகிய துடுப்பும், பரையமுதமாகிய அரிசியும், உடம்பும், பிராணன் அபானன் முதலான எரி கொள்ளிகளும் தோன்ற அமைத்து, அடுப்பில் அரிசியாக்குதல் போல உடம்பில் இடைபிங்கலை வழியாக உயிர்ப்பினை ஒழுங்கு செய்து, ஆயிரம் இதழ்த் தாமரையில் அமுதம் சமைப்பிக்கின்ற அருமையை எடுத்துக் காட்டியவாறு.*

*துடுப்பிடு பானைக்கும் அரிசி ஒன்றே என உலகியலில் அட்டிற் சாலையில் அமைக்கப்படும் உலைப்பானையையும், அகப்பையையும், அரிசியையும் உணர்த்திற்று.*

*அடுப்பிடு மூன்றாவன, அடுப்பிலே இடம் பெற்ற ஞாயினும், திங்களும், தீயுமாகிய மண்டலங்கள் மூன்றுமாம். எரிகொள்ளி - நெருப்பு எரிகிற விறகு. அஞ்சாவன - பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்பன.*

*அடுத்து எரியாமல் அரிசி கொடுமின் என்றது அவ்வெரி கொள்ளிகள் ஐந்தும் அடுப்பிலே அடுத்து வீணாக எரியாமல், பிராணாயாமமாகிய முயற்சியால் அமுதை அளியுங்கள் என்பதாம்.*

*நாள்களும் மேற்சென்றன என்பது பால்வரை தெய்வத்தால் வரையறுக்கப்பட்ட நாட்கள் கழிந்து அளவிற்கு மேல் ஆயின என்பதாம். இதனால், உடல் உள்ளபோதே சிவயோகத்தில் செறிந்து சிவாமுதம் உண்ணுக என்பது கருத்து.*

**193. *தெளிவுரை :-* தேனை விரும்புகின்ற வண்டு அதனை *உண்பது மலரிடத்தே சென்று அதன்கண் வீழ்ந்தேயாம். உயிரினுடைய***

**194.** ஆம்விதி நாடின் அறஞ்செய்மின் அந்நிலம்
போம்விதி நாடின் புனிதனைப் போற்றுமின்
ஆம்விதி வேண்டும தென்சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமைவல் லார்க்கே. **9**

---

*நிலைமையும் அத்தன்மையதே. அஃதாவது, இன்பத்தை விரும்புகின்ற உயிர் அதனைப் பெறுவது சிவனை அடைந்து அவனிடத்து அடங்கி நிற்கும்பொழுதேயாம். வண்டு தேனை உண்ண விரும்பிப் பிற இடங்களில் ஓடியிளைப்பினும் அது கிடையாததுபோல, உயிரும் இன்பம் பெற விரும்பிப் புறக்கண்வழி ஓடி இளைப்பினும் அங்ஙனம் ஓடுகின்ற உயிரில், அன்பின்ஊன்ற உள்ளெழும் சோதியாகிய (தி.12 பெ.பு. திருஞான - 835) சிவன் விளங்கமாட்டான். 'எனவே, இன்பம் கிட்டாது' என்பதாம். இறைவன் புறக்காட்சிக்குப் புலப்படான். அகக் காட்சியுள் நின்றருளுவான்.*

***குறிப்புரை :-*** *இங்ஙனமாகவே அகக்கண்ணில் நின்ற உயிர் உணர்விற்கு விளங்குவானாயிற்று. இனமலர் - கூட்டமாய மலர். இஃது ஒருமைக்குப் பன்மை உவமை. வாசம் - வசித்தல்; 'வாசத்தால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. "போல்" என்னும் முதனிலை முற்றுப் பொருளது. பொருட்கண், "இன்புற நாடி நினைக்கிலும் - கண்புறம் நின்ற கருத்துள் நில்லானே" எனப் பின்னுங்கூறி விரித்தமையால், உவமைக்கண்ணும் அவ்வாறு விரித்துரைக்கப்பட்டது. நினைக்கினும் என்பது பாடம் அன்று. 'கட்புறம்' என்பது, எதுகை நோக்கி மெலிந்து நின்றது. இது, புறக்கண் என்பதன் நிலைமாற்றம்.*

*இதனால், உணர்வு நிலையாமை, அதன் மறுதலை முகத்தால் கூறப்பட்டது. கண், ஞானமுமாம்.*

**194. *தெளிவுரை :-*** *மக்களாய்ப் பிறக்கின்ற ஊழைப் பெற்ற அருமை அறியவல்லார்க்கு மேலும் உயர்வடைகின்ற நெறி இன்றியமையாதது. அஃது என்ன என்பதைச் சொல்லுமிடத்து, இவ்வுலகில் மீளவும் பிறந்து உயர்ந்து நிற்கின்ற நெறியை விரும்புவீராயின், பசு புண்ணியத்தைச் செய்யுங்கள். அவ்வாறின்றிச் சிவலோகத்திற் சென்று சிவானந்தத்தை அடைகின்ற நெறியை விரும்புவீராயின், சிவபெருமானை வழிபடுதலாகிய சிவபுண்ணியத்தைச் செய்யுங்கள்.*

***குறிப்புரை :-*** *'மானிடர் ஆம் விதி பெற்ற அருமை வல்லார்க்கு ஆம் விதி வேண்டும்; அது என் சொலின்' என எடுத்துக்கொண்டு உரைக்க. ஈரிடத்தும் 'நாடி' எனவும் பாடம் ஓதுப. 'நாம் விதி வேண்டும்'*

**195.** அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்விகொ டுமின் தலைப்பட்ட போதே. 10

---

*என ஓதுதல் பாடம் ஆகாது. பின்னர் "அந்நிலம்" என்றதனால், முன்னர் 'இந்நிலம்' என்பது பெறப்பட்டது. "வல்லார்க்கு வேண்டும்" என்றது. வேறு முடிபாகலின், "செய்மின், போற்றுமின்" என்பன இடவழு ஆகாமை அறிக.*

**195. *தெளிவுரை :-*** *வாய்ப்பு நேரும்பொழுது அது கிடைத்துவிட்டதென்று புறங்கூறிப் பாவத்தைத் தேடிக் கொள்ளாதீர்கள். தீக்குணம் உடையாராய்ப் பிறர் பொருளைக் கள்ளாதீர்கள். நற்பண்பு உடையாராய் உயர்ந்து, உண்ணும்போது சிறிதாயினும் பிறருக்குக் கொடுத்து உண்ணுங்கள்.*

***குறிப்புரை :-*** *'இந்நெறியில் நின்றால் நிலையாமை நீங்கி இன்பம் பெறலாம்' என்பது குறிப்பெச்சம். அவ்வியம் - பொறாமை. அது, "பேசி" என்றதனால், அதனால் வரும் புறங்கூற்றைக் குறித்தது. "வெவ்வியர், செவ்வியர்", என்பன இடவழுவமைதி. 'வெவ்வியன், செவ்வியன்' என்பன பாடமாயின், பன்மை ஒருமை மயக்கமாகவும் கொள்க. தவ்வி - சிறிது. "யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி" எனப் பின்னரும் அருளுவார். 'செவ்வி தலைப்பட்ட போது' என ஒரு சொல் வருவித்து முதலிற் கூட்டுக. 'தவ்விக் கொடுண்மின்' என்பது பாடமன்று.*

*இவ்விரண்டு திருமந்திரங்களாலும், 'உணர்வு நிலையாமையை உணர்ந்து நிலைபெறுதற்குரிய நெறியில் நிற்றல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

## 9. கொல்லாமை

**196.** பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே. 1

---

*பல்வேறு நிலையாமையை உணர்த்தியருளிய நாயனார், 'நிலையாமையை உணர்ந்து உலகப் பற்றினை அறுத்துக் கொள்ளற் பாலராய மக்கள், அங்ஙனம் செய்யாது அவ்வுலகப் பற்றின் வழிபட்டு நிற்கின்றவழி மேற்கூறியவாறு (தி.10 பா.171 ப.193) 'பசு புண்ணியம், காமிய வழிபாடு' என்பவற்றையேனும் செய்யாது பாவச் செயலில் தலைப்பட்டு நிற்றல் பெரியதோர் இழுக்காம் ஆதலின் அவற்றைக் கடிவார், அவற்றுள் தலையாய 'கொலையை முதற்கண் இரண்டு திருமந்திரங்களால் விளக்குகின்றார்'.*

**196. *தெளிவுரை :-*** *மெய்யுணர்வு நிலைபெறுதற்குத் துணையாய குருவழிபாட்டிற்கும் பல மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை முதலியவை இன்றியமையாதனவே. ஆயினும், சிறப்புடைய மாலை பிற உயிர்களைக் கொல்லாமைகள் பலவும் இயைந்த பண்பே. இன்னும் சிறப்புடைய அசையா விளக்கு ஒருதலைப்பட்ட மனமும் , இலிங்கம் இருதயத்தில் பொருந்தி நிற்கும் உயிராகிய ஒளியின் முனையுமாம்.*

***குறிப்புரை :-*** *"குருபூசைக்கும்" என்ற உம்மை, 'சிவ பூசைக் கேயன்றி' என, இறந்தது தழுவிற்று. ''பன்மலர்'' என்பதன்பின், 'வேண்டும், ஆயினும்' என்பவற்றை வருவித்து. 'ஒண்மலர் நல் தார் கொல்லாமை' எனவும், 'தீபம் சித்தமும் அமர்ந்திடம் ஆவி உச்சியும்' எனக்கூட்டுக. "சித்தம்" என்றதை அடுத்து நின்ற குறிப்பால், 'உற்று ஆர்தல் இருதயத்தில்' என்பது தோன்றிற்று. "தீபமும்" என்ற உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. ''ஓர்'' என்றது 'ஒருவகை' என்னும் பொருட்டு, ''தார்'' என்றதனால் ''கொல்லாமை'' என்றது, 'கொல்லாமைகள்' எனப்பன்மையாய் நின்றமை பெறப்பட்டது. உயிர்ப் பன்மையால் கொல்லாமைகளும் பலவாயின. ஒருசார் உயிர்களைக் கொல்லாதார் மற்றொருசார் உயிர்களைக் கொல்வாராதலின், 'எல்லா உயிர்களிடத்தும் கொள்கின்ற கொல்லாமை நோன்பே வேண்டும்'*

*என்பார், 'கொல்லாமை மலர்' என்னாது, "கொல்லாமை மலர்த் தார்" என்றார். ஞான நெறியார் செய்கின்ற அகப்பூசைக்குக் கொள்ளப்படும் எட்டு மலர்களுள்ளும் கொல்லாமையே தலையாயதாகச் சொல்லப் படும். அவ்வெட்டு மலர்களாவன. 'கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு' என்பன. இவ்வாறு சிவஞான மாபாடியத்து (9 அதி. 3)க் கூறப்பட்டது. 'அமர்ந்த' என்னும் பெயரெச்சத்து கரம் தொகுத்தலாயிற்று. இறைவன் எழுந்தருளியிருந்து அன்பரது வழிபாட்டினை ஏற்றுக்கொள்ளும் இடம் இலிங்கமாதல் உணர்க. இருதயமாகிய ஆசனத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி ஆன்மாவும், மூர்த்திமான் சிவனுமாதல் பற்றித் திருநாவுக்கரசர், "காயமே கோயிலாக" (தி.4 ப.76 பா.4) என்னும் திருப்பாடலுள், "மனம் மணி இலிங்கமாக" என ஓதியருளினமை காண்க. "மனம்" எனப்படுவது ஆன்மாவே என்பது உணர்த்தற்கு, நினைகருவியாகிய மனத்தை, ''கடிமனம்'' என முன்னே அடைகொடுத்துப் பிரிந்தருளினார். உபநிடதங்களுள் தகரவித்தை கூறுமிடத்து, "இருதயமாகிய தாமரை மலரின் மேல் விளங்குகின்ற சுடரின் முனையில் பரமான்மா நிற்கின்றது" எனக் கூறப்படுவதில், 'சுடர் என்றது, சீவான்மாவை' என்பது பின்னர், 'பரமான்மா' என வருதலான் அறியப்படும் (மகா நாராயணோப நிடதம்). "எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே" என உண்மை விளக்க (32) நூலும் ஆன்மாவை 'இலிங்கம்' என்றது காண்க. ஆன்மாவேயன்றித் திருவைந்தெழுத்தும் சிவபெருமானுக்கு இலிங்கமாம். தனது சத்தியும் இலிங்கமாம். இவ்வாறு பல தலைப்படக் கூறுதல் என்னை என ஐயுறும் மாணாக்கர்க்கு, **'சிவபெருமானுக்குத் திருவைந்தெழுத்துத் தூல சரீரமும், ஆன்மா சூக்கும சரீரமும், சத்தி அதிசூக்கும சரீரமும் ஆதலின், அதுபற்றி ஐயமில்லை'** என்பதை மாபாடியம் உடையார் தமது சிவஞான சித்தி (சூ 9.9) உரையுள் இனிது விளக்கினார். 'கொல்லாமை என்னும் அறம் ஞான பூசையிலும் முதல் மலராகக் கொள்ளப்படும் சிறப்புடைத்து' என்பது கூறுவார், அப்பூசையின் உறுப்புக்கள் பிறவும் உடன் கூறினார் என்க.*

*இதனால், கொல்லாமையது சிறப்பு உணர்த்தப்பட்டவாறறிக.*

**197.** **கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை**
**வல்லடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச்**
**செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை**
**நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே.** **2**

---

**197.** *தெளிவுரை :- இதன் பொருள் வெளிப்படை.*

*குறிப்புரை :- "கொல்லிடு, சொல்லிடு" என்பவற்றில் இடு, துணைவினை. "நில்லிடும்" என்றதில் இடு, இசைநிறை, வல்லடிக்காரர். குறும்பாக வழக்காடுபவர்கள். யம தூதர், வலிக் கயிறு - வலிமையுடைய கயிறு; யம பாசம். இஃது அவர் நினைத்த அளவில் நினைக்கப்பட்டோரை இறுகிக் கட்டும் கடவுள் தன்மை பெற்றது. "நில்லென்று" என்றது, தம் தலைவன் முன் கொண்டுபோய் நிறுத்திக் கூறுவது.*

*இதனால், கொலைப் பாவத்தினது கொடுமை கூறும் முகத்தால் கொல்லாமை வலியுறுத்தப்பட்டது.*

## 10. புலால் மறுத்தல்

**198.** பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றியத் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. 1

---

*இனி அக்கொலையைச் சார்ந்து நிற்பதாய புலால் உண்டலை ஒரு திருமந்திரத்தானே விளக்குகின்றார்.*

198. ***தெளிவுரை :-*** *இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-*** *பொல்லாங்கு, கொலையால் வருவதாயும், கொலை செய்யத் தூண்டுவதாயும் இருத்தல். இது பற்றி அதனை உண்பாரை, 'புலையர்' என்றார். புலையர் - கீழ்மக்கள்.*

*"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்*
*தந்நோய்போற் போற்றாக் கடை" - குறள். 315*

*என்றவாறு, அருளில்லார், 'அறிவுடையார்' எனப்படாமை யானும்,*

*தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிதூன் உண்பான்*
*எங்ஙனம் ஆளும் அருள். - குறள். 252*

*என்பதனால் புலால் உண்பவர் அருளுடையாராதல் கூடாமையானும் அவர் 'உயர்ந்தோர்' எனப்படாது 'இழிந்தோர்' எனவேபடுவர் என்பது உணர்க. செல்லாக - சிதல்போல; சிதல் அரித்துத் தின்னும் இயல்புடையது. மறித்து - மீள ஒட்டாது மடக்கி.*

*உண்ணாமை உள்ள துயிர்நிலை ஊன்உண்ண*
*அண்ணாத்தல் செய்யா தளறு. - குறள். 255*

*எனத் திருவள்ளுவரும், 'புலால் உண்பவர் நிரயம் புகுந்து மீளார்' என்றார். இரண்டிடத்தும், 'மீளாமை' என்பதற்கு, 'நெடுங்காலம் கிடத்தல்' என்பதே கருத்து என்க.*

## 11. பிறன்மனை நயவாமை

**(பிறன் மனைவியை விரும்பாமை)**

**199.** ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே. **1**

---

*பின்னர், "கொலையே களவு கள் காமம்" என முறைப்படுத்தி அருளுமாறு புலால் உண்ணாமையின்பின் கள்ளுண்ணாமையே கூறற் பாலதாயினும், ஒருபயன் பற்றி அதனை இறுதிக்கட் கூறுவாராய் அதன் பின்னர்த்தாகிய காமம் பற்றி நிகழும் குற்றங்களை விலக்கப் புகுந்து, முன்னர், பிறன் மனை நயத்தலை மூன்று திருமந்திரங்களால் விளக்குகின்றார். நயத்தல் - விரும்புதல். திருவள்ளுவரும், 'பிறன்இல் விழையாமை' என்றே கூறினார். (திருக்குறள், அதிகாரம் - 15)*

**199. *தெளிவுரை :-* *அறமுதலிய நான்கற்கும் உறுதுணையாய் அமைந்த மனைவி தன் இல்லத்தில் இருக்க அவளை விடுத்துப் பிறன் தனது இல்லத்துள் வைத்துப் பாதுகாக்கின்ற மனைவியைக் கூடுதற்கு விரும்புகின்ற, எருதுபோலும் மாந்தரது தன்மை, தனது தோட்டத்தில் காய்த்துக் கனிந்துள்ள பலாப் பழத்தை உண்ண விரும்பாமல், அயலான் புழைக்கடையில் உள்ள ஈச்சம்பழத்தை உண்பதற்குக் களவினை மேற்கொண்டு துன்புறுந்தன்மை போல்வதாம்.***

***குறிப்புரை :-*** *ஆத்தம் - துணையாக நம்புதற்கு உரிய தகுதி. இஃது 'ஆப்தம்' என்னும் வடசொல்லின் திரிபு. இனி இதனை, 'யாத்த' என்பதன் மரூஉவாகக் கொண்டு, 'கட்டிய மனைவி' என்று உரைப்பாரும் உளர். பிறன்மனை நயத்தல், காமத்தோடு, 'களவு' என்னும் குற்றமுமாம் என்றற்கு, "காத்த மனையாள்" என்றார். "காத்த மனையாள்" என்பதற்கு மதிற்காவல், வாயிற்காவல் முதலிய புறக்காவலானும், கற்பு நிறை முதலிய அகக்காவலானும் காக்கப்பெற்ற பிறமனையாள் என்ற பொருளும் கொள்வர். இவற்றால் மக்கட்குரிய நெறிமுறை இலராதல் பற்றிப் பிறன்மனை நயக்கும் பேதையரை 'எருது போல்பவர்' என இழித்துக் கூறினார். காய்ச்ச, 'காய்த்த' என்பதன் போலி 'இயற்கையாய்ப் பழுத்த பழம்' என்றற்கு, 'கனிந்த' என்னாது "காய்த்த" என்றார். இயற்கையானன்றி இடையே பறித்துச் செயற்கையாற் பழுக்க வைக்கும் பழம் சுவையுடைத்தாகாமை அறிக. 'உண்ணமாட்டாமை, மடமையான் ஆயது' என்க. 'பேதைமை யாவது, ஏதம் கொண்டு ஊதியம் போக விடலே' (குறள் 831) யாதல் உணர்க.*

200. திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை
அருத்தமென் றெண்ணி அறையிற் புதைத்தப்
பொருத்தமி லாத புளிமாங் கொம்பேறிக்
கருத்தறி யாதவர் காலற்ற வாறே. 2

---

*தனது தோட்டத்தில் உள்ள பலாப்பழம் அச்சமும், இளிவரவும் இன்றி நாவாரவும், வயிறாரவும் உண்ணப்படுமாகலின் அதனை, அத்தன்மையளாய தனது மனையாட்கும், பிறனது புழைக் கடையில் உள்ள ஈச்சம் பழம் முள்ளுடைதாய அம்மரத்தியல்பானும், பிறனுடையதாகலானும் அச்சமும், இளிவரவும் தருவதாய் உண்ணப் போதாத சிற்றுணவாம் ஆதலின், அதனை, அத்தன்மையளாய பிறன் மனையாட்கும் உவமை கூறினார். அதனானே, பிறன்மனை நயப்பார் அறத்தையேயன்றித் தாம் கருதிய இன்பமும் பெறாமை பெறப்பட்டது. இக்கருத்தே பற்றித் திருவள்ளுவரும்,*

*அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை*
*நின்றாரிற் பேதையா ரில். - குறள். 142*

*என்றார். இன்னும் அவர்,*

*பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்*
*இகவாவாம் இல்லிறப்பான் கண். - குறள். 146*

*என்றலும் காண்க.*

*இதனால், பிறன்மனை நயத்தல் மடவோரது செயலாதல் கூறப்பட்டது.*

**200. *தெளிவுரை :-* தமக்கு உறுதியை அறியாதவர் ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே, பிறன் காத்த மனையாளைக் காமுறுதல், காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல் ஈச்சம் பழத்திற்கு இடருற்ற வாறன்றியும், தாம் செழிப்புறப் பேணி வளர்த்த தேமாமரத்தில் பழுத்த பழத்தைக் குறையுடையதென்று வீட்டில் புதைத்துவிட்டு, அயலான் வளர்த்த புளிமாமரத்தின் நுனிக்கிளையில் ஏறிக் கீழே விழுந்து கால் ஒடிந்ததையும் ஒக்கும்.**

***குறிப்புரை :-* தேமாமரத்தைத் திருத்தி வளர்த்தமை, மனைவி உள்ளத்தில் ஒத்த அன்பும், மனைமாட்சியும் வளர அவளோடு அளவளாவி வாழ்ந்தமையைக் குறித்தது. அறத்தொடும், புகழொடும் இயைந்த இன்பத்தையும், உண்டி முதலிய உபசரிப்பையும் தந்து எஞ்ஞான்றும் விரும்பப்படுதல் பற்றித் தன் மனைவியைத் தேமாங்**

**201.** பொருள்கொண்ட கண்டனும் போதத்தை யாளும்
இருள்கொண்ட மின்வெளி கொண்டுநின் றோரும்
மருள்கொண்ட மாதர் மயலுறு வார்கள்
மருள்கொண்ட சிந்தையை மாற்றகில் லாரே. **3**

---

*கனியாகவும், அவற்றிற்கெல்லாம் மறுதலையாதல் பற்றி அயலான் மனைவியைப் புளிமாமரமாகவும் கூறினார். அருத்தம் - பாதி; குறை. மாம்பழத்தை அறையில் புதைத்தல் பிறர் கொள்ளாமைப் பொருட்டு. பொருத்தம் இன்மை - இயைபின்மை; அயல். காலறுதல் கூறினமையால், கொம்பு, நுனிக் கொம்பாயிற்று. காலறுதல், அவளைக் கொண்டவனால் அவ்வழி வந்த கால் வெட்டப்படுதல். நாலடியுள், "காணிற் குடிப்பழியாம்; கையுறிற் கால்குறையும்" (நாலடியார், 84) என்றது காண்க.*

*'நுனிக் கொம்பர் ஏறினார்' (குறள் 476) வீழ்ந்து காலொடிதலும் இயல்பு. நுனிக் கொம்பர் செல்லலாகாத இடத்துச் சேறலைக் குறித்தது. ''காலற்ற வாறு'' என்றதில், இறந்தது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று.*

*இதனால், வேறும் ஓர் உவமையால் மேலது வலியுறுத்தப் பட்டது.*

**201. *தெளிவுரை :-* *செல்வச் செருக்கில் ஆழும் கீழ்மகனும், அறிவை மறைக்கின்ற அறியாமையாகிய இருளில் புல்லறிவாகிய மின்னல் ஒளியைப் பெற்று நிற்பவரும் ஒழுக்கம் இல்லாத பெண்டிரது மயக்கத்தில் வீழ்தலல்லது, அம்மயக்கத்தை உடைய மனத்தைத் தேற்றி நன்னெறிப்படுத்த மாட்டுவாரல்லர்.***

***குறிப்புரை :-*** ***கண்டன் - கீழ்மகன். 'கண்டகன்' என்பது இடைக் குறைந்து நின்றது. செல்வச் செருக்கினாலும், புல்லறிவினாலும் தூர்த்தராய்த் திரிவோ ராயினும், அவர்தம் உள்ளமும், இம்மையில் 'மழையைப் பெய்யெனப் பெய்விக்கும்' (குறள் 55) ஆற்றலையும், மறுமையில் புத்தேளிர் வாழும் உலகத்துப் பெருஞ் சிறப்பினையும் தருவது (குறள் 58) கற்பு என்று அதனது சிறப்பினைத் தெளிந்து அதன் கண்ணே நிற்கும் பெருந்தகைப் பெண்டிர்மாட்டுப்புகாது, அத்தெளிவின்மையால் அங்ஙனம் நிற்க மாட்டாது இழுக்கிச் செல்கின்ற பெண்டிர் மாட்டே புகுவராகலின், "மருள்கொண்ட மாதர் மயல் உறு வார்கள்" என்றார். இதனானே, அவ் இழுக்குடை மாதரும் கேடெய்துதலை உடம்பொடு புணர்த்துக் கூறினாராயிற்று.***

*திருவள்ளுவரும்,*

> *தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
> *சொற்காத்துச் சோர்விலாள் பெண். - குறள். 56*

*என்பதில் "தகைசான்ற சொற்காத்து" என்பதனால், அதனைக் 'காவாதவள் பெண்ணல்லள்' என்பதும்,*

> *சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்*
> *நிறைகாக்குங் காப்பே தலை. - குறள். 57*

*என்பதனால், 'சிறைக்காவல் நிறைக்காவலுக்குத் துணையாவதே யாகலின், அந்நிறைக்காவல் இல்வழிச் சிறைக்காவலாற் பயனின்றாம்' என்பதும்,*

> *புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்*
> *ஏறுபோற் பீடு நடை. - குறள். 59*

*என்பதனால், "கற்பென்னும் திண்மையால்" (குறள். 54) கொண்டார்க்குப் பெருமையைத் தந்து, அவர்க்குத் தம் பகைவர் முன்னே ஏறுபோல இறுமாந்து நடக்கும் பீடு நடையை உண்டாக்கும் பெண்டிரேயன்றி, தம்மைக் கொண்டார்க்குத் தம் பகைவர்முன்னே தலை கவிழ்ந்து நிற்கும் இளிவரவினை உண்டாக்கும் பெண்டிரும் உளர் என்பது குறிப்பாகவும், வெளிப்படையாகவும் கூறினமை காண்க. இவ்விழுக்குடையாளை, "இல்லிருந்து எல்லை கடப்பாள்" எனப் பிறருங் கூறி, அவளை, 'வல்லே அருக்குங் கோள்' (திரிகடுகம்) என்பதனால், 'உலகிற்கு ஆகாதவள்' என்றார்.*

*போதத்தையாளும் இருள் - ஆன்மாவின் அறிவை விளங்கவொட்டாது தடுத்து நிறுத்தும் ஆணவ மலம்.*

## 12. மகளிர் இழிவு

**(பொது மகளிரை விரும்புதல் ஒழிக)**

202. இலைநல வாயினும் எட்டி பழுத்தால்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே. 1

---

*இதனால், 'இம்மயக்கிற்குக் காரணம் செல்வச் செருக்கும், புல்லறிவாண்மையும் ஆம்' என்பது கூறுமுகத்தால், 'அக்காரணத்தை அகற்றியொழுகல் வேண்டும்' என்பது கூறப்பட்டது. பிறர் மனை நயப்பார், அதன் கண் இடையூறு தோன்றுதலை உணர்ந்து பொது மகளைப் புணர்வர் ஆதலின் அதுவும் கூடாது என்பதற்காக பிறர் மனை நயவாமைக்குப்பின் இவ்வதிகாரம் வைக்கப்பட்டது.*

*இத்திருமந்திரம், வருகின்ற அதிகாரத்திற்கும் தோற்றுவாய் செய்து நிற்றல் அறிக.*

*"காய்ச்ச பலாவின் கனி, திருத்தி வளர்த்த தேமாங்கனி" என்னும் உவமைகளால் மனையாளோடு கூடுதலை அறம் என்றே நாயனார் நேர்ந்தமையால், 'மகளிர் இழிவு' என்பது வரைவின் மகளிராகிய பொது மகளிரது இழிவையேயாம்.*

*அறத்தான் வருவதே இன்பம், மற்றெல்லாம்*
*புறத்த புகழும் இல.* - *குறள். 39*

*எனத் திருவள்ளுவரும், 'இல்லறத்திற்குத் துணையாகக் கொண்ட மனையாளோடு இன்பம் நுகர்தல் அறமும், புகழுமாம்' என உடன்பட்டும், பிறவகையால் இன்பம் நுகர்தல் அன்னவாகா என மறுத்தும் பொதுப்படக் கூறிப் பின்னரும் காமத்துப்பாலை விரிக்கும் முகத்தால் மனைவியின் இன்பத்தை உடன்படுதலையும், 'பிறனில் விழையாமை, வரைவின் மகளிர்' அதிகாரங்களால் பிற இன்பங்களை மறுத்தலையும் சிறப்பாகக் கூறினமை காண்க. பொது மகளிரோடு கூடுதலை ஐந்து திருமந்திரங்களால் விளக்குகின்றார்.*

202. ***தெளிவுரை :-*** ***இலை, தளிர் முதலியவற்றால் கண்ணைக் கவர்கின்ற எட்டியும், பின் பழம் பழுத்து அதனால் மேலும் கருத்தைக் கவருமாயினும், குலைமாத்திரத்தால் நல்லனவாய்த் தோன்றுகின்ற அதன் கனிகளைப் பறித்துண்டல் மக்கட்குத் தீங்கு பயப்பதாம்.***

**203.** மனைபுகு வார்கள் மனைவியை நாடில்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்கும்
கனவது போலக் கசிந்தெழும் இன்பம்
நனவது போலவும் நாடவொண் ணாதே. **2**

---

*அதுபோல உறுப்பழகுகளால் கண்ணைக் கவர்கின்ற பொது மகளிர், பின்பொய்ந்நகை காட்டி அதனால் மேலும் கருத்தைக் கவர்வாராயினும், நகைப்பு மாத்திரத்தால் அன்புடையராய்த் தோன்று கின்ற அவரது இன்பத்தினை நுகர்தல், அறம் பொருள்களை விரும்பி நிற்கும் நன்மக்கட்குக் கேடுபயப்பதாகும். ஆதலின், அவ்வாறு நன் னெறியை விட்டு விலகிச் செல்கின்ற மனத்தைத் தீங்கு தேடுவதாக அறிந்து அடக்குவீராக.*

***குறிப்புரை :-** எடுத்துக்காட்டுவமைக்கு ஏற்ற பொருள்கள் இசையெச்சமாய் நின்றமையின், அவை விரித்துரைக்கப்பட்டன. 'வெய்தாக' என ஆக்கம் வருவித்து உரைக்க. இதனால் வரைவின் மகளிரை அவரது வடிவழகு பற்றியும், பொய்ச்செயல் பற்றியும் விரும்புவார், பின் தீங்குறுவர் என்பது கூறப்பட்டது.*

***203. தெளிவுரை :-** இல்லறநெறியில் நிற்கக் கருதுவார்க்குத் தம் மனைவியது இன்பத்தை நினைக்கும்பொழுது சுனையில் உள்ள நீர், மூழ்குவார்க்குத் தண்ணிதாய்த் தன்னினின்று மீளாதவாறு தன்னுள் ஆழ்த்திக் கொள்வது போல இருவர்க்கும் அரும்பெறல் இன்பமாய் அவரைப் பிரியாவகைச் செய்யும். அந்நெறியில் நிற்கக் கருதாத பிறர்க்குப் பொது மகளிர் இன்பம் கனவில் பெறும் இன்பம்போல அவர்தம் உள்ளத்தில் மட்டும் சிறிது அரும்பிப் பின் மறைந்தொழியும். அதனால், பொது மகளிரது இன்பத்தை உண்மை என்று நினைத்தலும் கூடாது.*

***குறிப்புரை :-** மனை, மனைவி ஆகுபெயர்கள். முன்னர், "மனை புகுவார்கள்" என்றும், "மனைவியை நாடில்" என்றும் கூறினமையால், பின்னர், 'பிறர்' என்பதும் பொதுமகளிரை நாடில் என்பதும் பெறப்பட்டன. உண்மையை, "நனவு" என்றார் உண்மையாகாமையின், 'போல' என்றார். உம்மை, மாற்றி உரைக்கப்பட்டது. அற நெறியில் நிற்கும் ஆடவர் தம் மனைவியரைப் பிரிய மாட்டாமையை அகத்திணையுள், செலவழுங்கல், இடைச்சுரத் தழுங்கல் முதலிய துறைகளில் வைத்து இனிது விளங்கப்பாடுவர் நல்லிசைப் புலவர்.*

*இதனால், பொது மகளிரது உள்ளத்து அன்பின்மை கூறப்பட்டது.*

**204.** இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்
புயலுறப் புல்லிப் புணர்ந்தவர் எய்தும்
மயலுறும் வானவர் சார்விது என்பார்
அயலுறப் பேசி அகன்றொழிந் தாரே. 3

**205.** வையகத் தேமட வாரொடுங் கூடியென்
மெய்யகத் தோருளம் வைத்த விதியது
கையகத் தேகரும் பாலையின் சாறுகொள்
மெய்யகத் தேபெறு வேம்பது வாமே. 4

---

**204.** ***தெளிவுரை :-*** *ஒருவனிடத்து நில்லாது பலரிடத்துச் செல்லுதலையே வாழ்க்கையாக உடைய பொது மகளிரது தோளை மிகத் தழுவிக் கலந்த ஆடவர், தாம்கொண்ட மயக்கத்தால், 'நாம் அடையத் தக்க சுவர்க்க இன்பம் இதுவன்றி வேறில்லை' என்று கூறுவர். ஆயினும், அவர்தாமே அம்மகளிரைத் தமக்குச் சிறிதும் தொடர்பில்லாதவராகப் பேசி விலகி ஒழிவதைப் பார்க்கின்றோம்.*

***குறிப்புரை :-*** *இயல் - அழகு. 'இவ்விரண்டனுள் முன்னது பொருள் இருந்த காலத்து நிலைமை; பின்னது பொருள் அற்ற காலத்தில் உண்டாம் நிலைமை' என்பது கருத்து. இளம்பிடி, நடைக்கு உவமை, அன்னதொரு நடையாலும் ஆடவரை மயல்கொள்ளச் செய்தல் குறித்தவாறு. 'மயலால்' என உருபு விரிக்க. அயல் - அயன்மை. அஃது உறுமாறு பேசி அகன்றமையைக் கோவலன் வரலாற்றாலும் உணர்க. அயலுறப் பேசுதல், அவர் பொருளுடையார் பக்கம் போதலைக் காணும் பொழுதாம். ஆகவே, 'பொருட் பெண்டிராகிய அவரது பொய்ம் முகத்தால் மயங்கலாகாது' (குறள் - 913) என்பதாம்.*

*இதனால், பொதுமகளிரது நிலைஇன்மை கூறி, மயக்கத்தால் அவ்விழிபினை மறந்து அவரை விழைதல் கூடாது என்பது கூறப்பட்டது.*

**205.** ***தெளிவுரை :-*** *நிலவுலகத்தில் வாழும்பொழுது மகளிரோடும் கூடிப்பெறுவது யாதும் இல்லை. ஆயினும், உடம்பொடு கூடி நிற்பாரது உள்ளத்தில் ஊழ் கூட்டிய ஒரு மயக்கமே அக்கூட்டத்தின் கண் உளதாய விருப்பம். இன்னும் அவ்விருப்பம், கையிலே கிடைத்த கருப்பஞ்சாறு போன்ற சிவானந்தத்தை உடைய மக்களுடம்பில் ஒரு பக்கம் வைக்கப்பட்ட வேம்பு போல்வதுமாகும்.*

***குறிப்புரை :-*** *"கூடி என்" என்றது, அவ்வின்பம் கணத்தில் அழியும் சிற்றின்பமாதலேயன்றிப் பின்னரும் பல இடர்விளைத்தல் பற்றியாம். விதியின் பயனாகிய காரியத்தை, "விதி" எனக் காரணமாக்கிக்*

**206.** கோழை ஒழுக்கங் குளமூடு பாசியில்
ஆழ நடுவார் அளப்புறு வார்களைத்
தாழத் துடக்கித் தடுக்ககில் லாவிடில்
பூழை நுழைந்தவர் போகின்ற வாறே. 5

---

*கூறினார். "சாறுகொள்" என்றது ஒட்டணி. "வைத்த விதி" எனவும், "வேம்பதுவாம்" எனவும் கூறியவாற்றால், அவ்வின்பத்தை அறம் பொருள்கட்குத் துணையாக அமைந்த மனைவியிடத்து நுகர்தலோடு ஒழியாது., அறத்தோடும், பொருளோடும் சிறிதும் இயைபில்லாத பொதுமக்களிடத்தும் நுகர விரும்புதல் பெரும் பேதைமைத்து என்றவாறாம். பெறுவேம் பதுவாமே - பெற்ற வேம்பு போலக் கசப்பது இதுவாம் என்றார்.*

*இதனால், 'பொதுமகளிரது இன்பம் வேண்டத்தகாத தொன்று' என்பது கூறப்பட்டது. இத்திருமந்திரம், காமவின்பத்தினை முற்ற விலக்கும் நோக்குடைத்தாதலும் அறிக.*

**206. *தெளிவுரை :-* *வீரம் இல்லாத ஒழுக்கத்தால் பொது மகளிர் மயக்கத்தில் ஆழநினைத்து அதன்பொருட்டுத் தம்பொருளை அளக் கின்ற பேதையரை அறிவுடையோர் இடித்து வரை நிறுத்தி விலக்குதல் வேண்டும். அவ்வாறு செய்யாவிடில், அவரது நிலைமை படுகுழியில் வீழ்ந்தவர் மீளமாட்டாது அழுந்தியொழிதல் போல்வதேயாம்.***

***குறிப்புரை :-* *எனவே, 'படுகுழியில் வீழ்வாரை விலக்காதொழிந்த பாவம் அறிவுடையோர்க்கு உண்டாகும்' என்பது கருத்தாயிற்று. கோழை - உரன் (திட்பம்) இன்மை. அஃதாவது மனத்தை அடக்கும் வலி இன்மை. 'ஒழுக்கத்தால்' என உருபு விரிக்க. 'குளம் மூடு பாசியில்' என்றாராயினும், 'பாசி மூடு குளத்தில்' என்றலே கருத்து என்க. இஃது உருவகம், 'நாடுவார்' என்பது குறுகி நின்றது. நாடுவார், முற்றெச்சம். குளம், இயல்பால் விரும்பி ஆடத்தக்கதெனினும், பாசியால் மூடப்பட்டவாற்றால் இகழ்ந்தொதுக்கப்படுதல் போல, மகளிர் இயல்பால் விரும்பிக் கூடத்தக்கவர் எனினும், வரைவில் ஒழுக்கத்தால் இகழ்ந்தொதுக்கப்படுவர் என்றற்குப் பொதுமகளிரை, பாசி மூடிய குளமாக உருவகித்தார். இக்குளத்தில் மூழ்கினார் மாசுத் தீராமையேயன்றி மாசு மிகப்பெறுதலும் உடையாராவர் எனினும், ஒரு கால் மீண்டு வருதல் உண்டு; பொதுமகளிர்தம் இன்பத்தில் ஆழ்ந்தவர் பழி பாவங்களை எய்தன்மேலும், மீள அறம் பொருள்கட்கு உரியராகாது வெறுவியராவர் என்றற்கு, "பூழை நுழைந்தவர் போகின்றவாறே" என வேறும் ஓர் உவமை கூறினார். இவற்றையும்***

**207.** கொலையே களவுகள் காமம் பொய்கூறல்
மலைவான பாதக மாம்அவை நீக்கத்
தலையாம் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்
கிலையாம் இவைஞானா னந்தத் திருத்தலே. **6**

---

*கோவலன் வரலாறு முதலியவற்றான் அறிந்துகொள்க. பூழை - சிறு வாயில் (அ) துவாரம்.*

*இதனால், பொதுமகளிரது கூட்டம் உய்தியில் குற்றமாய் முடியும் என்பத கூறப்பட்டது.*

**207.** *தெளிவுரை :- 'பிற உயிரைக் கொல்லுதல், பிறர் பொருளைக் களவு செய்தல், கள்ளுண்டல், நெறிநீங்கிய காமத்து அழுந்தல், பொய் கூறல்' என்னும் இவை ஐந்தும், 'பேரறக் கடை - மாபாதகம்' என வேறு வைத்து எண்ணப்படும். ஆகவே, அவைகளை அறவே நீக்காத வழி மேற்கதி உண்டாகாது. சிவனடியை அடைந்து அவனது இன்பத்தைப் பெற்றவர்க்கு இவை உண்டாக வழியில்லை. அவனது அருள் இன்பத்தில் ஆழ்ந்திருத்தல் ஒன்றே அவர்க்கு உளதாம்.*

*குறிப்புரை :- மலைவு, அறத்திற்கு நேர்மாறாதல், எனவே, 'பெருந் தீவினை' என்றவாறாம். இவற்றை, 'பஞ்ச மாபாதகம்' என்பர். 'அவை நீக்கி' என்பது பாடம் அன்று. தலையாயதனை, 'தலை' என்றார். ஆம்- உண்டாகும். "அவை நீக்கத் தலை ஆம்" என்றதற்குக் கருத்து நோக்கி இவ்வாறு உரைக்கப்பட்டது. "இலையாம்" என்றதில் ஆம், அசைநிலை. இறுதிக்கண், 'உளதாம்' என்பது சொல்லெச்சம். ''இன்பம் சார்ந்தோர்க்கு" என்றது, கொலை முதலியன தோன்றாமைக்கு ஏது உணர்த்தற்பொருட்டும், "ஞானானந்தத்திருத்தல்" என்றது, அவையே யன்றிப் பிற தீங்கு நலங்களுள் யாதொன்றும் இல்லை என்பது உணர்த்தற்குமாம். எனவே, 'சிவனடியைச் சாராதவழி இவற்றை முற்றக்கடிதல் இயலாமையின், அவற்றை அடைதலே தக்கது' என்பதும், 'அவற்றை அடைந்தவழித் தீமை நீங்குதலேயன்றி, நன்மை பெருகுதலும் உளவாம்' எனவும் கூறியவாறாயிற்று.*

*இதனால், 'பெரிதும் குறிக்கொண்டு கடியத்தக்க பெருங் குற்றங்கள் இவை' என மேற்போந்தவைகளைத் தொகுத்துக் கூறி, அவற்றை முற்றக் கடிதற்கு வழியும் கூறப்பட்டது. களவையும், பொய் கூறலையும் வழிமொழிதல் வகையாற் கூறினார் எனவும் கள் உண்டலை எதிரது போற்றிக் கூறினார் எனவும் கொள்க. பின்னர் வரும் வாய்மை பொய் கூறாமையாகாது வேறாதல் அறிக. இதனானே, இத்திருமந்திரம் இவ்விடத்ததாதலும், 'புலால் மறுத்தலின்' கண்ணது ஆகாமையும் அறிந்துகொள்க.*

## 13. நல்குரவு
### (வறுமை)

208. புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப்பட் டார்களும் அன்பில ரானார்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்ட மில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே. 1

---

*சிவனடியை மறக்கச் செய்வனவாய உடற்பற்று செல்வச் செருக்கு, இளமைச் செருக்கு என்பவற்றையும் உடற்பற்றுக் காரணமாக நிகழும் கோறல், புலால் உண்டல், களவு செய்தல், கள்ளுண்டல் என்பவற்றையும், செல்வச்செருக்கு, இளமைச் செருக்கால் நிகழும் நெறிகடந்த காமத்தையும் விலக்கிய நாயனார், இனிச் செல்வச் செருக்கேயன்றி வறுமைத் துன்பமும் சிவனடியை மறக்கச் செய்தலால் அதனை ஐந்து திருமந்திரங்களால் விளக்குகின்றார். இங்கு 'நல்குரவு' என்பது, அதனான் வரும் உள்ளத் திரிபையேயாம். 'வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பி' (சிவஞான சித்தி - சூ.2.91) என்றவிடத்தும், 'வாழ்வு' எனவும், 'வறுமை' எனவும் கூறியொழியாது, "வாழ்வெனும் மையல்" எனவும், "வறுமையாம் சிறுமை" எனவும் கூறிப் போந்தவாறு அறிக. இவ்வாறாகவே, 'ஊழ்வழிப்பட்டு வருவதாய நல்குரவினை விலக்குதல் பயனுடைத்தாமாறு எங்ஙனம்' என்னும் ஐயத்திற்கு இடம் இன்மை அறிக. திருவள்ளுவரும் 'நல்குரவு' என்னும் அதிகாரத்தைக் கூறியது, நல்குரவான் வருந்தி இளிவந்தன செய்யாமைப் பொருட்டும், பின்னும் நல்குரவு எய்துதற்குரிய காரணங்களை உடையராகாமைப் பொருட்டுமாம் என்க.*

**பொருளிலார்க்கு ஒன்றும் இல்லை**

208. ***தெளிவுரை :-*** ***ஒருவர்க்கு அவர் உடுத்தியிருக்கும் ஆடை கிழிந்த ஆடையாய் இருந்ததென்றால், அவரது வாழ்க்கையும் கிழிந் தொழிந்ததேயாம். ஏனெனில், தம்மால் தமக்குத் துணையெனத் தெளியப்பட்ட வரும் தம்மாட்டு அன்பிலாராகின்றனர். நாட்டில் நடைப்பிணமான அவர்க்கு எவரோடும் கொடுத்தல் கொள்ளல்கள் இல்லை; அதனால் அவர் இல்லத்தில் யாதொரு விழாவும் இல்லை பிற உலக நடையும் இல்லை; ஆகையால்.***

***குறிப்புரை :-*** ***'கிழிந்ததேல்' என்னும் வினையெச்சம் "கிழிந்தது" என முற்றாய்த் திரிந்தது. "புடவை கிழிந்தது" என்பது, 'வறுமை வந்தது'***

**209.** பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்
றக்குழி தூர்க்கும் அரும்பண்டந் தேடுவீர்
எக்குழி தூர்த்தும் இறைவனை ஏத்துமின்
அக்குழி தூரும் அழுக்கற்ற போதே. **2**

---

*என்பதனை உணர்த்திய குறிப்புச்சொல். அடைதல், இங்கு அதன் காரணமாகிய தெளிதலை உணர்த்திற்று. தெளியப்பட்டார், பெண்டிரும், பிள்ளைகளும், பிற சுற்றத்தாருமாவர்.*

*அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்*
*பிறன்போல நோக்கப் படும். - குறள் 1047*

*என்றார் திருவள்ளுவரும். "இல்லானை இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்" என ஔவையாரும் நல்வழியில் கூறுதல் காண்க. வறுமை எய்தினார்க்குப் பிறர்பால் பொருள்கொடுக்கும் நிலை இல்லை என்றல் கூறவேண்டாமையின், இங்கு, "கொடை, கொள்ளல்" என்றவை, உறவு பற்றி நிகழும் மகட்கொடை, மகட்கோடலேயாம். அவை இன்மையால் கொண்டாட்டமும் இல்லையாயிற்று. பிற உலக நடையாவன, கண்டவழி இன்முகம் காட்டலும், முகமன் கூறலும் போல்வன. "இயங்குகின்றார்கட்கு" என்றது. 'பிறிது செயலில்லை' என்றவாறு. "நாட்டில் இயங்குகின்றார்கட்கு" என்பதனை, மூன்றாம் அடியின் முதற்கண் வைத்து உரைக்க.*

*இதனால், நல்குரவினது பெருமை கூறும் முகத்தால், அதனால் உள்ளந் திரியாமை நிற்றலின் அருமை குறிக்கப்பட்டது.*

***209. தெளிவுரை :-** 'பொழுது விடிந்து விட்டதே, காலை உணவுக்கு என் செய்வது' என்று நிலையில்லாத வயிற்றை நிரப்புதற்கு வருந்தி, அதற்குரிய அரிய பொருள்களைத் தேடி அலைகின்றவர்களே! நீவிர் உங்கள் வயிற்றை நிரப்பினாலும், உங்கள் சுற்றத்தார் வயிற்றை நிரப்பினாலும், வேறு யார் வயிற்றை நிரப்பினாலும், குற்றமில்லை. அவைகளை நிரப்பும் முயற்சியால் சிவனை மறவாதீர்கள்; மறவாது நின்று துதியுங்கள். அப்பொழுதுதான் வினை நீங்கும்; வினை நீங்கினால் வறுமை நீங்கும்.*

***குறிப்புரை :-** நாடொறும் எத்தனை முறை உண்டாலும் நிரம்பியது போல இருந்து மீளப்பசிக்கும் வயிற்றினது இழிபு உணர்த்த வேண்டி அதனை, 'பொய்க்குழி' என்னும் பெயரால் கூறினார். கூறவே, பின் வருவன வற்றையும் அதனோடு இயைய, "குழி" என்றார். எனவே, அதற்கேற்ப, 'தூர்த்தல்' என்றார். "தூர்த்து" என்னும் செய்தெனெச்சம்,*

**210.** கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்
அக்குழி தூர்க்கையா வார்க்கும் அரியதே
அக்குழி தூர்க்கும் அறிவை அறிந்தபின்
அக்குழி தூரும் அழுக்கற்ற வாறே. **3**

---

*"செய்தெ னெச்சத் திறந்த காலம்*
*எய்திட னுடைத்தே வாராக் காலம்"* - தொல். சொல். வினை

*என்பதனால், இங்கு எதிர்காலத்தில் வந்தது. அழுக்கு, வினைமாசு, ''புகலூர்ப் பாடுமின் புலவீர்காள் - இம்மையே தரும் சோறும் கூறையும்'' (தி.7 ப.3 பா.41) என அருளிச் செய்ததனாலும் சிவபெருமானை ஏத்துவார்க்கு வறுமை நீங்குதல் அறியப்படும்.*

*இதனால், 'சிவபெருமானை ஏத்தாமையே வறுமைக்குக் காரணம்' என்பது கூறும் முகத்தால், அவ்வறுமை வந்த காலத்து அது காரணமாக அவனை மறுத்தல் கூடாமை கூறப்பட்டது.*

**210. தெளிவுரை :-** *மக்கள் அன்னமே (சோறே) யன்றிச் சொன்னமும் (பொன்னும்) தேடுதல், இயல்பாகவே தூர்ந்து போவதாகிய மட்குழிபோலாது, தூர்க்கினும் தூராத கற்குழி போன்ற வயிற்றை நிரப்புதற்கேயாம். ஆயினும், அப்பொன்னை நிரம்ப குவித்து வைத்தவர்க்கும் வயிற்றை நிரப்புதல் இயலாததே எனினும், அதனை நிரப்புதற்கு வழி ஒன்று உண்டு; அவ்வழியை அறிந்தால் உள்ளம் தூய்மைப்பட்டு வயிறும் நிரம்பும்.*

**குறிப்புரை :-** *ஒருவேளை நிரம்பியபின் அஃது அற்றொழிய, மறுவேளை வெறுவிதயாய்விடுதல் பற்றி, ''அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது" என்றார். அங்ஙனம் தூராத குழியைத் தூர்க்கும் வழி பிறப்பை நீக்கிக் கொள்ளுதலேயாகலானும், பிறப்பு நீங்குதல் வினை நீங்கியவழியே யாகலானும், 'அது நீங்கும் வழியை அறிந்தால் வினை நீங்க அக்குழி தூரும்' என்றார். 'அழுக்கற்றவாற்றானே அக்குழி தூரும்' என உருபு விரித்து மாறிக் கூட்டுக. 'அவ்வழியாவது இறைவனை ஏத்துதலே' என்பது குறிப்பாதல், மேலைத் திருமந்திரம் பற்றி அறியப்படும்.*

*குழி என்றது வயிற்றை. கற்குழி என்றார் ஒன்றாலும் தூர்க்க முடியாமையின். வறுக்க முடியாததை 'கல்வரல்' என்றும், அறுக்க முடியாத வடுக்களைக் 'கல்வடு' என்றும் சொல்வது போலத் தூர்க்க முடியாத குழியைக் 'கற்குழி' என்றார்.*

**211.** தொடர்ந்தெழு சுற்றம் வினையினும் தீய
கடந்ததோர் ஆவி கழிவதன் முன்னே
உடந்தொரு காலத் துணர்விளக் கேற்றித்
தொடர்ந்துநின் றவ்வழி தூர்க்கலு மாமே. **4**

---

*அக்குழி தூர்க்கும் அறிவாவது, இறைவன் திருவடிக் கண்ணேயே ஒன்றியிருக்கும் திருவடி ஞானம். திருவடி ஞானம் பெற்றார்க்குப் பசி பிணி முதலியன இல்லை. அழுக்கென்றதற்கு மேலுரைத்தாங்கு உரைத்துக் கொள்க.*

*இதனால், 'வயிற்றை நிரப்பும் துன்பம் செல்வம் உடையவர்க்கும் நீங்காமையை அறிந்து வறுமையால் உள்ளம் வருந்தாது நிறைவெய்தி யிருத்தல் வேண்டும்' என்பது கருத்து.*

*"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி*
*வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்*
*நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்*
*கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்*
*உண்பது நாழி; உடுப்பது இரண்டே" - புறநானூறு 189*

*என்பதும் இக்கருத்தே பற்றி வந்தது.*

**211. *தெளிவுரை :-* *புதிய வினைகள் பலவற்றைச் செய்யத் தூண்டுதலால், 'ஒருவரைப் பற்றி மற்றொருவர், அவரைப் பற்றி வேறொருவர்' என்று இவ்வாறு தொடர்ந்துவரும் சுற்றத்தார் பழ வினையினும் பார்க்கக் கொடியோரே. அதனால், அவரைப் புறந் தருதலின் தனது நாள் பலவற்றைக் கடந்துவிட்ட ஓர் உயிர், அந்நாளை முற்றக் கடந்தொழிவதற்கு முன்னே என்றாயினும் ஒருநாளில் அச்சுற்றத்தை வெறுத்து மெய்யுணர்வாகிய விளக்கை ஏற்றினால், அவ்விளக்கொளியைப் பற்றிச் சென்று, பின்னும் அவர்களோடு கூடி வாழும் நாள் வரும் வழியை அடைத்தலும் கூடுவதாம்.***

***குறிப்புரை :-** 'உடன்று' என்பது, எதுகை நோக்கி, 'உடந்து' எனத் திரிந்தது. உணர், முதனிலைத் தொழிற்பெயர்.*

*வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்*
*வாழ்நாள் வழியடைக்கும் கல். - குறள். 38*

*என்பவாகலின், 'அவ்வழி தூர்த்தல்' என்பதற்று இதுவே பொருளாதல் அறிக.*

*"அதளெறிந் தன்ன நெடுவெண் களரின்*
*ஒருவன் ஆட்டும் புல்வாய் போல*

212. அறுத்தன ஆறினும் ஆனின மேவி
அறுத்தனர் ஐவரும் எண்ணிலி துன்பம்
ஒறுத்தன வல்வினை ஒன்றல்ல வாழ்வை
வெறுத்தனன் ஈசனை வேண்டிநின் றேனே. 5

---

*ஓடி உய்தலும் கூடும்மன்;*
*ஒக்கல் வாழ்க்கை தட்குமாகாலே". - புறநானூறு 193*

*எனச் சான்றோரொருவர் சுற்றத் தளைக்கட்பட்டு வருந்தினமை இங்கு அறியத்தக்கது. 'ஒருவர் உயிர்' என்னாது 'ஓர்உயிர்' என்றது, இழிவு பற்றி.*

*இதனால், 'சுற்றம் ஓம்புதலைப் பற்றுக் கொண்டு செய்யாது அறம்நோக்கிச் செய்யின் வறுமைத் துன்பம் உண்டாகாது' என, அத்துன்பம் நீங்குதற்கு வழி கூறப்பட்டது.*

*யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்*
*அதனின் அதனின் இலன். - குறள். 341*

*எனப் பின்னர்க் கூறலின், முன்னர்,*

*தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்கு*
*ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. - குறள். 341*

*என்ற திருவள்ளுவனார்க்கும் இதுவே கருத்தாதல் அறிக.*

***212. தெளிவுரை :-** ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்காறும் செல்ல வரையறுக்கப்பட்ட எழுவகைப் பிறவிகளிலும் உள்ள உயிர்களாகிய பசுக்கூட்டத்தில் ஐம்புல வேடர் புகுந்து தங்கினர். அவர்களால் அப்பசுக்களை அளவற்ற துன்பங்கள் வருத்தின. இவற்றிற்குக் காரணமான வினைகளோ ஒன்றல்ல; பல. (இவற்றை யெல்லாம் நோக்கி) நான் யாதோருடம்போடும் கூடி வாழ விரும்பாமல், சிவபெருமான் ஒருவனையே விரும்பி நிற்கின்றேன்.*

*ஆனினம் மேவி ஐவரும் அறுத்தனர் - பசுக் கூட்டங்கள் தன் விருப்பம் போல நாற்புறமும் சென்று அயற்புலமென்றும் ஆராயாது மேய்ந்து, உண்ணுதல் உறங்குதல் புணர்தல் புரிவது போல ஐம்பொறிகளும் புலன்களைப் பற்ற முயன்று வறுமை காரணமாக அஃதியலாமையின் கவலையாக உயிரை அறுத்துக் கொண்டேயிருந்தனர். அறுத்தன என்பதற்கு "உயிரீரும் வாள்" என்றற்கு உரைத்தாங்கு உரைக்க.*

***குறிப்புரை :-*** *'ஆனினம் ஆறினும்' என மாற்றுக. 'ஆறினும், ஐவரும்' (குறள். 43) என்றவை தொகைக் குறிப்பு. நல்லன, தீயனவற்றைப் பகுத்துணரும் அறிவும் ஐவரால் அடர்க்கப்படுதலின் அனைத்துயிரையும் வேடரால் கவரப்படுகின்ற பசுக்கூட்டமாகக் கூறினார். 'ஆனினம்' என்னாது, 'மானினம்' என ஓதுதலும் ஆம். 'அறுத்தல்' 'வேண்டி நின்றானே' என்பன பாடம் அல்ல. 'ஈசனையே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. அதனால், தேவர் வாழ்க்கையும் முற்கூறிய பசுவினங்களின் வாழ்க்கையோடு ஒத்ததாதல் குறிக்கப் பட்டதாம்.*

## 14. அக்கினி காரியம்

### (தீ ஓம்புதல் என்னும் செயலாகும்)

213. வசையில் விழுப்பொருள் வானும் நிலனும்
திசையுந் திசைபெறு தேவர் குழாமும்
விசையம் பெருகிய வேதம் முதலாம்
அசைவிலா அந்தணர் ஆகுதி வேட்கிலே. 1

---

*இதனால், பிறவியது இயல்பும், தமது ஒழுக்கமும் கூறும் முகத்தால், 'யாவர் ஒருவர்க்கும், தம் பொருட்டாயினும், தம் சுற்றப் பொருட்டாயினும், தம் ஐம்புல நுகர்ச்சிக்கண் உளதாகும் விருப்பமே வறுமைத் துன்பத்திற்குக் காரணம் என்பதுணர்த்தி, அவ்விருப்பத்தை விடுத்துச் சிவபெருமானை விரும்புக' என்பது முடித்துக் கூறப்பட்டது.*

*'நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்' (புறநானூறு 195) என்றபடி, சிவநெறியில் நிற்பார் அறநெறியுள் செய்வன செய்தலினும், தவிர்வன தவிர்தல் இன்றியமையாததாதல் பற்றி அவற்றுள் தலையாய சிலவற்றை எடுத்தோதி விலக்கிய நாயனார், பின்னர்ச் செய்வனவற்றுள் தலையாய சிலவற்றை எடுத்தோதிப் பணிப்பாராய், முதற்கண் அந்தணர்க்குரிய அக்கினி காரியத்தது சிறப்புப் பத்துத் திருமந்திரங்களால் கூறுகின்றார். அக்கினி காரியம் - நெருப்பின்வழிச் செய்யப்படும் செயல் என்பது முத்தீ வேள்வி.*

*அஃதாவது, தீ ஓம்புதல், உலகம் நலமடைய, பகை விலக, பொருள் மிக, ஞானம் சித்திக்க, தீயோம்புதல் இன்றியமையாதது; தீயோம்பாமையால் நாடு வளங்குன்ற மக்கள் நல்குரவால் நலிவுறுகின்றனர் என்ற இயைபை எடுத்துணர்த்த இது நல்குரவின் பின் வைக்கப்பட்டது.*

**213. *தெளிவுரை :-* வேட்பதால் விளையும் பயன்களை உணர்த்துகிறார். சோர்வில்லாத அந்தணர் அவியைச் சொரிந்து வேள்வி செய்த வழியே, மழையும், நிலமும், பல நாடுகளும், திசை காவலர் முதலிய தேவர்களும் குற்றம் அற்ற சிறப்பினைத் தரும் பொருளாவார்; அனைத்தும் வெற்றி மிகுதற்கு ஏதுவாகிய வேதமும் முதனூலாய் நிலைபெறும்; அது செய்யாதவழி அத்தன்மைகள் யாவும் இலவாம்.**

***வசையில் விழுப்பொருள் - அறவழியான் ஈட்டிய, பழியற்ற பெரும்பொருள். அக்கினி வெற்றித் தெய்வமென மறைகள் கூறுதலின் வான் முதலாயினவற்றிற்கு விசையம் பெருகும் என்றார். விழுப்பொருள்***

214. ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர்
போகதி நாடிப் புறங்கொடுத் துண்ணுவர்
தாம்விதி வேண்டித் தலைப்படு மெய்ந்நெறி
தாமறி வாலே தலைப்பட்ட வாறே. 2

---

*என்பதற்குத் தெய்வம் என்பாரும் உளர்.*

*வேதமுதலாம் அந்தணர், அசைவிலா அந்தணர் எனத் தனித்தனிக் கூட்டுக.*

*வேதமுதலாம் அந்தணர் - கைப்பொருளைக் கருதாது வேதத்தையே தமது வாழ்வின் மூலதனமாகக் கருதிய அந்தணர். அந்தணர் - கருணையும், ஒழுக்கமும் உடைய ஞானிகள்; சாதி குறித்த பெயர் அன்று.*

***குறிப்புரை :-*** *ஈற்றடியை முதலில் வைத்து உரைக்க. "விழுப்பொருள்" என்பது, வான் முதலிய நான்கு எழுவாய்கட்கும் உரிய பயனிலை.* ***வெற்றியாவது தத்தமக்குரிய பெருமையைத் தப்பாது பெறுதல். அதனைப் பெறுதற்குரிய வழியைக் கூறுவது வேதம். அது நிலைபெறுதலாவது, மறக்கப்பட்டொழியாது, ஓதப்பட்டு நிற்றல்*** *'ஒழுக்கம் ஒழிந்தபின், அதனைக் கூறும் நூலால் பயனின்றிப் போம்' என்பது கருத்து. இதனானே,*

*மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்*
*பிறப் பொழுக்கம் குன்றக் கெடும். - குறள். 134*

*எனக் கூறினார் திருவள்ளுவர்.*

*மழை விழுப்பொருளாதலாவது, காலத்தில் பொய்யாது பொழிதல், நிலம் விழுப்பொருளாதலாவது, விளைவு குன்றாது மிகுதல். நாடுகள் விழுப்பொருளாதலாவது, அவ்வந்நாட்டுப் பண்டங்கள் குன்றாது பெருகல். தேவர் விழுப்பொருளாதலாவது, உவகை மேலீட்டால் மேலானவற்றையெல்லாம் பயன்தரச் செய்தல். 'அந்தணர் வேத விதியை ஆறங்கங்களாலும் உணர்ந்து, உணர்ந்தவாறே வேள்வியைத் தப்பாது செய்தலாலே நாடு, பசியும் பிணியும் நீங்கி, வசியும் வளனும் சுரப்பதாகின்றது' என்பதனைத் திருஞானசம்பந்தரும்,*

*கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே*
*செற்றார் வாழ்தில்லை. (தி.1 ப.80 பா.1)*

*என்பதனால் குறித்தருளினார். உலக நலம் கருதி இதனைச்*

*செய்தலானே இவர் 'அந்தணர்' என்னும் காரணப்பெயர் எய்தினர். எனினும், 'புலால் மறுத்தும், கொல்லாதும், அனைத்துயிர்மேலும் அருளுடையார்க்கே அது முற்றப் பொருந்தும்' என்றதற்கு "அந்தணர் என்போர் அறவோர்'' (குறள்-30) என்றார் திருவள்ளுவர், சோர்வின்மை, நெறிமுறைகளில் உறைத்து நிற்றல்.*

*இதனால், முத்தீ வேள்வியது இன்றியமையாமை கூறப்பட்டது.*

**214. தெளிவுரை :-** *முத்தீ வேள்வி செய்கின்ற, அரிய வேதத்தை ஓதுகின்ற அந்தணர், மறுமை நலம் வேண்டி, பிறர்க்கும், பிறவுயிர்க்கும் இட்டுண்பர். இனி, அவர் அவ்வேத விதியானே அடைய விரும்பும் வீட்டுநெறி, அவரவர் அறிவின் எல்லைக்கேற்ப அடைதலாகவே முடியும்.*

**குறிப்புரை :-** *'முத்தீ வேள்வி செய்கின்ற' என்றதனால், தேவ யாகம் பிதிர் யாகங்களும், 'வேதத்தை ஓதுகின்ற' என்றதனால் பிரம யாகமும், 'பிறர்க்கும் பிற உயிருக்கும் கொடுத்து உண்பர்' என்றதனால், மானுட யாகம், பூத யாகங்களும் ஆகிய ஐவகை வேள்விகளும் குறிக்கப்பட்டன. எனவே, 'சிறப்பு பற்றி, அக்கினி காரியமே 'வேள்வி' எனப்படுமாயினும், இவையும் வேள்வியேயாக, வேள்வி ஐவகைத்து' என்பதும், 'ஐவகை வேள்வியையும் எஞ்சாமற் செய்பவரே சிறப்புடை அந்தணர்' என்பதும் கூறியவாறாயிற்று.*

> *இனைத்துணைத் தென்பதொன் றில்லை, விருந்தின்*
> *துணைத்துணை வேள்விப் பயன்.* - *குறள் 87*

*எனவும்,*

> *பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பார், விருந்தோம்பி*
> *வேள்வி தலைப்படா தார்.* - *குறள் 88*

*எனவும் விருந்தோம்பலைத் திருவள்ளுவரும் 'வேள்வி' எனக் குறித்தார். 'போங்கதி' என்பது தொகுத்தலாயிற்று. 'போகதி' வினைத்தொகை என்றலுமாம். "புறம்" என்றது "அயல்" என்னும் பொருட்டாய், பிற மக்களையும் உயிரையுங் குறித்து நின்றது. 'அறங் கறக்கும்' என்றல்போல, "புறங் கொடுக்கும்" என்றது நான்காவதன் தொகை.*

*'அந்தணர்க்கு வீட்டு நெறி அவரவர் அறிவிற்கேற்ப அமையும்' எனவே, 'கன்மமே வீடு பயக்கும்' என்று உணர்வார்க்கு, அக்கன்மத்தின்*

பயனாகிய துறக்கமே வீடாகும். 'பிரமம் ஒன்றே மெய்; பிறவெல்லாம் பொய் என்று உணர்வதாய பிரம ஞானமே வீடு பயக்கும்' என உணர்வார்க்கு அவர் பிறவெனக் கழிப்பன பிரகிருதி யளவேயாதலால், பிரகிருதிக்கு மேலேயுள்ள புருட தத்துவமே அவர்க்கு வீடாகும். தத்துவங்களும், அவற்றிற்கு வேறாய் உள்ள சீவான்மாவும், பரமான்மாவைப் போல வேறு முதல்களே; ஆயினும், தத்துவங்கள் சடமாயும், சீவான்மா தூல சித்தாயும் நிற்றலின், சூக்கும சித்தாகிய பரமான்மாவிற்கு அவை முறையே உடைமையும், அடிமையுமாய்ச் சுதந்திரமின்றி நிற்பனவாம் என்பதை உணர்ந்து யான், எனது என்னும் செருக்கு நீங்கிப் பரமான்மாவினது நிறைவில் அடங்கி நிற்றலே உண்மைப் பேறு என உணரும் பதி ஞானமே வீடு பயக்கும் என உணர்பவர்க்குப் பரமான்மாவே வீடாகும் என்பது பெறப்பட்டது.

இங்ஙனம் கூறிவந்த பலவற்றுள் ஒன்றையும் வேதம் ஒரு தலைப்பட உணர்த்தாது. எவ்வாறும் உணர நிற்றலின், வேதம் ஒன்றையே ஓதி வீடுபெற எண்ணுவார் மெய்ந்நெறியைப் பலபட உணர்ந்து தம்முள் இகலி நிற்பர் ஆகலின் ''தாமறிவாலே தலைப்பட்டவாறே" என்றார்.

வேதத்துட் கூறப்பட்ட பல திறப்பொருளையும் இஃது இன்ன அளவினது எனவும், 'எல்லாவற்றினும் மேலாக முடிந்து நிற்கும் பொருள் இது' எனவும் வரையறுத்து ஒருதலைப்பட உணர்த்துவன சிவாகமங்களேயாதலின், அவற்றை உணரும் சைவர் பிறரோடு இகலுதலின்றி மெய்ந்நெறியை உண்மையாகத் தலைப்படுவர் என்க.

வேதத்தை உடம்பட்டோர் அனைவர்க்கும் 'இம்மை, மறுமை, வீடு' என்பவற்றுள், 'வீடே சிறந்த பேறு' என்பது ஒப்ப முடிந்ததாகலின், 'அதனை இத்தன்மைத்து என உணரும் உணர்விற்கு ஏற்பவே, அவரது வேள்வி முறைகளும் அமையும்' என்றற்கு இது கூறினார். கூறவே, 'ஐவகை வேள்விகளும் அவற்றைச் செய்வாரது கருத்திற்கேற்ப இம்மை, மறுமை, வீடு' என்பவற்றைத் தரும் என்பது பெறப்பட்டது.

'அக்கினி காரியமேயன்றிப் பிறவும் வேள்விகளே' எனக் கூறியவாற்றால், 'சைவாகமங்கள், சிவபெருமானை அகத்தாலும், புறத்தாலும், அறிவாலும் வழிபடும் வேள்வியே சிறப்புடை வேள்வி' எனவும், 'அக்கினி காரிய வேள்வியுள்ளும் சிவபெருமானைப் பொது நீக்கித் தனிப்பெரு முதல்வனாக வைத்துச் செய்யும் வேள்வியே செய்யத்தக்கது' எனவும் கூறும்.

*இன்னும், "தாமறி வாலே தலைப்பட்டவாறே" என்றதனால், வேதத்தின் பொதுமை காரணமாக முத்தீ வேள்வியும் அவ்வாறு அமையும் என்பது கொள்க. அஃதாவது, பரிமேதம், பசுமேதம் முதலாகச் சொல்வனவற்றை உயிர்ப்பலி வேள்வியாகச் செய்தல் வேண்டும் எனக் கொண்டு ஊனை அவிசாக இட்டுச் செய்தலும், அவற்றிற்கெல்லாம் வேறு பொருள்கொண்டு பசுவிடத்துண்டாகும் நெய், பால் முதலியவற்றையும், நெற்பொரி, அரிசிமா, தேங்காய், வாழைப்பழம் முதலியவற்றையும் அவிசாகச் சொரிந்து செய்தலும் போல்வன. வேதத்துள் 'அஜத்தைக் கொண்டு வேட்க' என்பதற்குப் பிறரெல்லாரும் 'அஜம்' என்பதற்கு 'யாடு' என்பது பொருள் என்று கூறினர் எனவும், அகத்திய முனிவர், 'மூன்றியாண்டு கழிந்த நெல்' எனப்பொருள் கூறினர் எனவும் பாரதத்துட் கூறப்பட்டன. இங்ஙனம் வேறுபடுவாரது நிலையைத் திருஞானசம்பந்தர்,*

'ஊனொ டுண்டல் நன்றென ஊனொ டுண்டல் தீதென
ஆனதொண்டர்அன்பினால் பேசநின்ற தன்மையான்'

- *தி.3 ப.53 பா.9*

*எனக் குறித்தருளினார்.*

*அறவினை யாதெனிற் கொல்லாமை; கோறல்*
*பிறவினை யெல்லாம் தரும்.*

- *குறள் 321*

*. . . . . . , கொலைப் பாவம் ஏனை எல்லாவற்றினும் பெரிதாகலின், அதனோடு தொடர்புடைய யாதொன்றும் அறமாவதில்லை எனினும், செய்வாரது கருத்துவகையால் அதுவும் அறம் என வைக்கப்பட்ட தாயினும், அன்னதொரு வேள்வி கடைப்பட்ட வேள்வி எனக் கழித்து, உயிர்க்கொலை இல்லாத தூயவேள்வியே, வேள்வி என உயர்ந்தோர் கொள்வர் என்பது பற்றியே,*

*அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்*
*உயிர்செகுத் துண்ணாமை நன்று.* - *குறள் 259*

*எனப் பொதுப்படக் கூறுமிடத்து ஊனாகிய அவியையே பெரும் பான்மையும் குறிப்பாற் கீழ்ப்படுத்துக் கூறி,*

*நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்*
*கொன்றாகும் ஆக்கம் கடை.* - *குறள் 328*

*எனச் சிறப்பாகக் கூறுமிடத்து ஊன் வேள்வியை வெளிப்படை*

யாகவே மறுத்துக்கூறினார் திருவள்ளுவர். சைவ வேள்விகள் பலவும் சைவாகமத்துள்ளும், வழக்கத்துள்ளும் பசுவிடத்துண்டாகும் நெய், பால் முதலியவற்றையும், தாவரங்களினின்று பெறப்படும் நெல் முதலியவற்றான் ஆய பொருள்களையுமே அவிசாக இட்டுச் செய்யப்படும் தூய வேள்விகளாகவே காணப்படுதல் அறிக.

இதனால்,

பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும்
சிறப்பர் வாழ்தில்லை. - தி.1 ப.80 பா.2

என்றதனுள், "பசு" என்றது; 'பசுவிடத்து உண்டாகும் நெய் பால்கள்' எனப் பொருள்படுதலன்றிப் பிறிது பொருள்படாமை அறிந்து கொள்க. 'பிறிது பொருள்படும்' என்பார் உளராயின், அவர் சிவாகமங்களையே யன்றித் தில்லைக்கணுள்ள வழக்கத்தினையும் அறியாதவரே யாவர்.

"அவன்உகந் திட்டஇறைச்சி எனக்குநன்
மாதவர் இட்ட நெய்பால் அவியே". - தி.11 நக். திருமறம்

எனப் பதினொன்றாம் திருமுறையிலும், 'மாதவர், நெய்பால் அவியே இட்டுச் சைவ வேள்வியே வேட்பர்' என்பது சொல்லப்பட்டது. இவ்வாற்றானே, சிவபாத இருதயர் செய்யக் கருதியதாகச் சேக்கிழார்,

"ஆதி மாமறை விதியினால் ஆறுசூழ் வேணி
நாத னாரைமுன் னாகவே புரியும்நல் வேள்வி".
- தி.12 திருஞான. பு. 429

எனக் குறித்த நல்வேள்வியும், ஞானசம்பந்தர்தாமே,

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்"
- தி.12 திருஞான. பு. 821

எனக்குறித்த வேள்வி, 'உலகம் இன்புறச் சங்கரர்க்கு முன்வந்த அற்சனை வழிபாடுகளுள் ஒன்று' என அவர் (சேக்கிழார்) விளக்கிய சந்த வேள்வியும் எல்லாம் சிவநெறி வேள்வியாகிய தூய வேள்விகளே என்பது விளங்கும். இவற்றானே, தம் உணவினும் சைவராய் உள்ளவரே ஊன் வேள்வியை மறுத்தற்குரியரன்றி, உணவில் சைவராய் இல்லாதோர் ஊன் வேள்வியை மறுத்தற்கு உரியரல்லர் என்பதும் உணர்ந்து கொள்ளப்படும்.

**215.** அணைதுணை அந்தணர் அங்கியுள் அங்கி
அணைதுணை வைத்ததின் உட்பொரு ளான
இணைதுணை யாமத் தியங்கும் பொழுது
துணயணை யாயதோர் தூய்நெறி யாமே. 3

---

*புத்தர் புலால் உண்டலை விலக்காது, கொல்லுதலை மட்டுமே விலக்குவர்; சமணர் இரண்டனையும் விலக்குவர். அவ்வாற்றால் அவ்விருவரும் ஊன்வேள்வியை இகழ்தல் அவர்தம் மதத்திற்கு ஏற்புடைய தாயினும், வேள்வி செய்வார்க்கு வரும் பயனை உணராமை யானும் அவர் செயல் சிவநெறியாளரால் இகழப்படுவதாயிற்று என்க. இத்திருமந்திரத்துள் ஈரடி எதுகை வந்தது.*

*இதனால், வேள்விகளின் வகைகள் பலவும் வகுத்துக் கூறி, 'அவற்றுட் சிறந்தது சைவ வேள்வியே' என்பது கூறப்பட்டது.*

**215.** *தெளிவுரை :-* உயிர்கட்குப் பொருந்திய துணை அந்தணர் வளர்க்கின்ற தீயினுள் தீயாய் இருக்கும் இறைவனே. ஆகவே, தீ வேட்டு அதன் உள்ளீடான இறைவனாகிய அருந்துணையுடன் உலகியலில் ஒழுகும் பொழுதே உயிர் தான் செல்கதிக்குத் துணையாய மெய்ப் பொருளை அடைந்து நிற்றலாகிய நன்னெறிக்குத் தலைப்படுதல் உண்டாவதாகும்.

*குறிப்புரை :-* ''அணைதுணை'' இரண்டில் பின்னது ஆகு பெயராய், அணைதுணை உள்ள இடத்தைக் குறித்தது. 'இணை துணையோடு' என உருபு விரிக்க. யாமம் - இரவு; உலகியல் பிறவித் துன்பத்ததாகலின், அதனை 'இரவு' என்றார். ''துணை அணை'' என்றதில் அணை, முதனிலைத் தொழிற்பெயர்.

'வைதிக வேள்வி வேட்பார் தீயையே தெய்வமாகக் கொண்டு வேட்பர். அது பிறவியை நீக்கும் தூநெறியாகாது; சிவநெறி வேள்வி வேட்பார், தீயைத் தெய்வமாகக் கருதாதது, அத்தீக்கு உள்ளீடாய் நிற்கும் சிவபெருமானையே முதல்வனாகக் கொண்டு வழிபடுவர்; அதுவே பிறப்பை நீக்கும் தூநெறியாகும்' என இதனால் சிவநெறி வேள்வியின் சிறப்புக் கூறப்பட்டது. சிவநெறி வேள்வியில் அக்கினியைச் சிவாக்கினியாகப் பிறப்பித்து வளர்க்கும் முறையைச் சிவாகமங்களில் கண்டுணர்க.

**216.** *தெளிவுரை :-* இருவகை மலர்களின் வண்டுகள் போல்வன வாகிய உயிர்கள், தாம் தாம் விரும்பும் வழியில் வேட்கை மிக்குச்

**216.** போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு
மாதிரண் டாகி மகிழ்ந்துட னேநிற்கும்
தாதிரண் டாகிய தண்ணம் பறவைகள்
வேதிரண் டாகி வெறிக்கின்ற வாறே. 4

---

*செல்கின்றவாற்றால், அவற்றது நெஞ்சத் தாமரையில் வாழ்கின்ற சத்தியும் இருவேறு வகைப்பட்டு, உரிய காலத்தில் இருவேறு நூல்களைக் கற்கச் செய்து அவைகட்குக் கருணை புரிந்து, எஞ்ஞான்றும் அவைகளோடு உடனாய் நிற்பாள்.*

***குறிப்புரை :-*** *பின்னிரண்டடிகளை முதலில் வைத்து உரைக்க. போது - பொழுது. "இரண்டு ஓதி" என்றதில் இரண்டு, வேத சிவாகமங்கள், "ஓதி" என்பதில் பிறவினை விகுதி தொகுத்தலாயிற்று. மாது - சத்தி, அவள் இரண்டாதலாவது, திரோதான சத்தியும், அருட் சத்தியுமாய் அவ்வவ்வுயிருக்கேற்ப நிற்றல். திரோதானமும் ஒரு வகைக் கருணையே ஆதலின், 'அருள் செய்திட்டு' என்றார். "தாதிரண்டாகிய" என்பதில், ஆதல், மேற் சொல்லுதல், "இரண்டின் கண் ஆகிய" என உருபு விரிக்க. தாது இரண்டு - இருவகை மகரந்தம்; அவை, குவளை, ஆம்பல் முதலிய சிறு மலரின்கண் உள்ளனவும், தாமரையாகிய பெரு மலரின்கண் உள்ளனவுமாம். "தண்ணம் பறவை" என்பதில் தன்மை, சிறுமை மேல் நின்றது. அம், சாரியை. வண்டினை 'பறவை' என்றல் இலக்கிய மரபு. "பாம்பின் வாய்த்தேறல் சிறுபறவை" (தி.2 ப.76 பா.6) என்றார் திருஞானசம்பந்தரும், வேது - வேற்றுமை. இனத்தால் ஒன்றாயினும் விரும்பப்படும் தாது வேற்றுமையால் இரண்டாய் நிற்கின்ற வண்டு போல, உயிர்கள் அனைத்தும் இனத்தால் ஒன்றாயினும், விரும்பப்படும் பயனால் இரண்டு ஆதலாவது, உலகின்பமும், வீட்டின்பமும் ஆகியவற்றை விரும்புதலால் 'உலகர்' எனவும், 'சத்தி நிபாதர்' எனவும் இரு திறனாய் நிற்றல். எனவே, சிவசத்தி உலகர்க்குத் திரோதாயியாய் நின்று வேதத்தை ஓதுவித்து, அதன் பயனாக வைதிக வேள்வியை வேட்பித்து உலகின்பத்தை அடைவிப்பவளாயும், சத்திநிபாதர்க்கு அருட்சத்தியாய் நின்று சிவாகமங்களை ஓதுவித்து, அதன் பயனாகச் சிவநெறி வேள்வியை வேட்பித்துச் சிவானந்தத்தை அடைவிப்பவளாயும் நிற்பாள் எனக் கூறுமாற்றால் வேள்விகளது வகைகூறியவாறு. வெறித்தல் - மதர்த்தல். 'வெறிக்கின்றவாற்றால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று.*

*அந்தணரின் இயல்பு அறிவித்தலாக கீழ்க்காணுமாறும் இப்பாடலுக்கு உரை கொள்ளலாம். சுக்கில சோணிதங்களாகிய*

தாதுக்கள் இரண்டால் விளைந்த கருணையோடு கூடிய பறவைகள் வைகறையும் மாலையுமாகிய இரண்டு வேளைகளிலும் வேதங்களை ஓதிக்கொண்டு, விரும்பி அருள் வழங்கி, மனையாளோடு இரு பறவையாகி, மகிழ்ந்து இல்லறம் நடாத்தும் இங்ஙனம் ஆணும் பெண்ணுமாய வேறுபட்ட பொருள்கள் இரண்டாகி வெறித்துத் திரிகின்ற விதம் இதுவாம் என்றவாறு.

போது இரண்டு ஓதி - பிரமசரிய நிலையில் நிற்கும் அந்தணர்கள் காலை மாலையாகிய இது போதும் ஓதுதல் மரபாதலின் இங்ஙனம் அருளினார்.

மாது இரண்டும் ஆகி - மாதொடு இரண்டாகி; மகிழ்ந்து - ஒழுக்கந்தவறாது இல்லறம் நடத்தும்.

தாது இரண்டாகிய பறவைகள் - அந்தணர் எனப்படினும் அவர்கள், அனைவரையும் போலச் சுக்கில சோணிதக் கலப்பால் விளைதலாகிய பொதுவியல்பினை உடையவர்களே. பின்னர் ஓதி இல்லறம் காத்து ஒழுக்கம் தவறாமையின் அந்தணர் ஆகின்றார் என்று சிறப்பியல்பு தெரிவித்தவாறு.

தண்ணம் பறவை - அந்தண்மை பூண்ட பறவைகள். அந்தணரைப் பறவை என்றது அவர்கள் நாளைக்கென்று எதனையும் சேமித்து வைக்காமல், யாருக்கும் அடிமையாகாமல் வாழ்கின்றவர் களாதலின் என்க. இதனை விகங்கவிருத்தி என்பர் வடநூலார்.

வேதி இரண்டாகி - சரீரம் இரண்டாய். வேதி - மேடை. ஈண்டுப் பறவைகள் இருத்தற்கு மேடையாகிய உடலை உணர்த்திற்று.

வெறிக்கின்றவாறு - சரீரத்தில் அபிமானம் ஏற்பட்டுத் திரிகிற விதம் இதுவாம்; என்றது வேதம் ஓதி, ஆகுதி வேட்டு, அந்தண்மை பூண்டு ஒழுகவேண்டிய இவர்கள் இங்ஙனம் வெறித்தல் கூடாது என்பது உணர்த்தியவாறாம்.

பறவைகள் ஓதி, அருள் செய்திட்டு, ஆகி நிற்கும்; ஆகி வெறிக்கின்றவாறு (இதுவாம்) எனமுடிக்க.

> நெய்நின் றெரியும் நெடுஞ்சுட ரேசென்று
> மைநின் றெரியும் வகையறி வார்கட்கு
> மைநின் றவிழ்தரும் அத்தினம் ஆமென்றும்
> செய்நின்ற செல்வ மதியது வாமே.

இதனால், ‘உலகவேள்வி, சிவவேள்வி’ என்னும் வேள்விகளது

217. நெய்நின் றெரியும் நெடுஞ்சுட ரேசென்று
மைநின் றெரியும் வகையறி வார்கட்கு
மைநின் றவிழ்தரு மந்திர மும்என்றும்
செய்நின்ற செல்வமும் தீயது வாமே. 5

218. பாழி அகலுள் எரியும் திரிபோலிட்
டூழி அகலும் உறுவினை நோய்பல
வாழிசெய் தங்கி உதிக்க அவைவிழும்
வீழிசெய் தங்கி வினைசுடு மாமே. 6

---

*வகையும், பயனும் உணர்த்தப்பட்டன.*

217. ***தெளிவுரை :-*** *நெய் பொருந்துதலால் எரிகின்ற பெரிய வேள்வித் தீயின் வழியே சென்று, அஞ்ஞானம் வெந்தொழியும் நெறியை அறிகின்ற அந்தணர்கட்கு, அஞ்ஞானம் நீங்கும் வாயிலாகிய மந்திரமும், முயன்று பெற நிற்கின்ற முத்திப் பெருஞ் செல்வமும் வேள்வியேயாகும்.*

***குறிப்புரை :-*** *மை -இருள்; புற இருளைப் போக்குகின்ற தீயினை ஓம்புமாற்றானே, அக இருளையும் போக்கிக் கொள்ளுதல் கூடும் என்பது பற்றி "நெய்நின்றெரியும்.... வகை அறிவார்கட்கு" என்றார். அவ் வகையாவது, சிவபெருமானை முதல்வனாக உணர்ந்து பயன் கருதாது அன்பு மாத்திரத்தால் வேட்டல், அங்ஙனம் வேட்டோர் சிறப்புலி நாயனார், சோமாசிமாற நாயனார் முதலியாராதல் அறிக. "அவிழ்தரும்" என்னும் பெயரெச்சம் 'மந்திரம்' என்னும் கருவிப் பெயர் கொண்டது. செய்தல் - தேடுதல். "செய் நின்ற" என்பது "செய்ய நின்ற" என்னும் பொருட்டு. அவிழ் தரு மத்தினமாம் என்று மூன்றாமடியில் சில பதிப்புகளில் பாடபேதம் உள்ளது.*

*இதனால், 'அந்தணர் வேள்வி அவர்க்கு முத்தி சாதனமும்' ஆம் என்பது கூறப்பட்டது.*

218. ***தெளிவுரை :-*** *ஆழ்ந்த அகலில் நின்று எரிகின்ற திரிபோலச் சேர்க்கப்பட்டுப் பல்லூழி காலம் தொடர்ந்து நின்று வருத்துகின்ற மிக்க பாவப்பயனாகிய துன்பங்களோ பல. அவை அனைத்தும் ஓமாக்கினி அணையாது நின்று ஓங்க ஒழிவனவாம். அன்றியும், அவ்வக்கினியே வினைக்கட்டு முழுவதையும் அழித்தலையும் செய்யும்.*

***குறிப்புரை :-*** *அகலும் எரியும் திரியும் போல - உடலும் வினையும் நோயும் என்பதாம். பாழி - பள்ளம். 'வாழி, வீழி' என்பன,*

**219.** பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த
தருஞ்செல்வம் தந்த தலைவனை நாடும்
வருஞ்செல்வத் தின்பம் வரவிருந் தெண்ணிப்
பருஞ்செல்வத் தாகுதி வேட்கநின் றீரே. 7

---

*'வாழ்தல், வீழ்தல்' எனத் தொழிற் பெயராய் நின்றன. "வினைநோய்" என்றது, 'வினையால் வரும் நோய்' என வேற்றுமைத்தொகை, நோய் - துன்பம். 'துன்பத்தைத் தரும் வினை'. எனவே, 'பாவம்' என்பது போந்தது. பின்னர் நின்ற வினை, பொதுப்பட நிற்றலின், இரு வினையையுங் குறித்தது. 'பாவத்தை ஒழிக்குமாற்றால் நரகத்தின் நீக்கிச் சுவர்க்கத்தில் சேர்ப்பதும்' இருவினைகளையும் நீக்குமாற்றால் ஞானத்தைத் தோற்றுவித்து வீடு அடைவிப்பதும் வேள்வியா என்றபடி, இவற்றுள் முன்னது வைதிக வேள்வி என்பதும்,* ***பின்னது சிவநெறி வேள்வி என்பதும் உணர்ந்துகொள்க.*** *ஆழி செய்து அங்கி உதிக்க - வட்டமாக வலஞ்சுற்றி அங்கி எழ. அவை விழ - அவ்வினைகள் நழுவும்.*

*இதனால், இருவகை வேள்விகளின் பயனும் ஒருங்கு கூறப்பட்டன.*

**219.** ***தெளிவுரை :-*** *மறுமைக்கண் வருகின்ற சுவர்க்கச் செல்வத்தால் உளதாகின்ற இன்பம் வருமாற்றை மிக நினைந்து நும் அருஞ்செல்வமாகிய வேள்வியை வேட்க விரும்புகின்ற அந்தணர்களே, பெரிய 'செல்வம், வறுமை' என்னும் இரண்டன் காரணங்களையும் முதற் காலந்தொட்டே விளக்கி நிற்பதாகிய, அனைத்து நலங்களையும் தரும் வேதம் என்னும் அறிவுச் செல்வத்தை நுமக்குத் தந்த முதல்வனாகிய சிவபெருமானை நினையுங்கள்; பயன் எய்துவீர்.*

***குறிப்புரை :-*** *"என்று" என்னும் எண்ணிடைச் சொல்லின்பின், "இரண்டும்" என்னும் தொகை தொகுத்தலாயிற்று. படைத்தல் - சொல்லால் வெளிப்படுத்தல். 'நின்றாரே' என்பது பாடமாயின், ஏகாரத்தை ஈற்றசையாக்காது, விளியுருபாக்குக. மீமாஞ்சகர் வேதத்தைச் செய்த முதல்வனை அறியாது 'வேதம் அனாதி' என மயங்குதலாலும், பிறர் சிவபெருமானையே தலைவனாக உணராமையாலும் அவர்க்கு வேள்வி முத்தி சாதனமாதல் கூடாமையால், அவர்க்கு அஃது அன்னதாதற் பொருட்டு அவரை நோக்கி இது கூறினார்.*

*பெருஞ்செல்வம் - நெல்மணி முதலிய உலகச் செல்வம்*

**220.** ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை
ஒண்சுட ராகி என்னுள்ளத் திருக்கின்ற
கண்சுட ரோன்உல கேழுங் கடந்தஅத்
தண்சுடர் ஓமத் தலைவனு மாமே. **8**

---

அருஞ்செல்வம் - ஞானம்
வருஞ்செல்வம் - மோட்சம்
பருஞ்செல்வம் - தழல், அக்கினி

இதனால், வேள்விகளுள் சிவநெறி வேள்வியது இன்றியமை யாமை கூறப்பட்டது.

**220.** *தெளிவுரை :-* எல்லா ஒளிகட்கும் மேலான ஒளியாய் இருப்பவனும், இறப்பில்லாத முதல்வனும் ஆகிய அவனை நினைத்தால், ஒளி பெற்றுத் திகழ்கின்ற எனது உள்ளத்தில் வீற்றிருக்கின்ற, முச்சுடர்களையே மூன்று கண்களாக உடைய அப்பெருமானே உலகங் கடந்த தண்ணிய ஒளிப்பொருளாகிய முதற்பொருளும், வேள்விக்குத் தலைவனும் ஆவன்.

*குறிப்புரை :-* இங்குக் கூறியவாறே திருநாவுக்கரசரும்,

அண்டம் ஆரிரு ளூடு கடந்தும்பர்
உண்டு போலும் ஓர் ஒண்சுடர்; அச்சுடர்
கண்டிங் காரறி வார்! அறி வாரெலாம்
வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே.

-தி.5 ப.97 பா.2

என ஓதியருளுதல் காண்க. சிவபெருமான் வேள்வித் தலைவன் ஆதலை விளக்குதற்பொருட்டு அவனது முதன்மையை எடுத்துக் கூறினார். "நினைத்தால்" என்னும் சொல்லெச்சம் முன்னை மந்திரத்தினின்றும் வந்தது.

இதனால், வேள்வியைச் சிவநெறி வேள்வியாக வேட்டற்கு வழி கூறப்பட்டது.

**221.** *தெளிவுரை :-* எனின், ஓமாக்கினி கன்ம நெருப்பை அறிவிக்கும் கடல்போலும் என்பது உணர்த்துதல் நுதலிற்று. எமது இறைவன் ஓமாக்கினியின் உள்ளொளியாக விளங்குபவன். அவனே சர்வ சங்கார காலத்து இடுகாட்டு எரியாக இருந்து சுவைக்கிறான்.

221. ஓமத்துள் அங்கியின் உள்ளுளன் எம்இறை
ஈமத்துள் அங்கி இரதங்கொள் வானுளன்
வேமத்துள் அங்கி விளைவு வினைக்கடல்
கோமத் துளங்கிக் குரைகனல் தானே. **9**

222. அங்கி நிறுத்தும் அருந்தவர் ஆரணந்
தங்கி இருக்கும் தகையருள்செய்தவர்
எங்கும் நிறுத்தி இளைப்பப் பெரும்பதி
பொங்கி நிறுத்தும் புகழது வாமே. **10**

---

*சோம சூரியர்களாகிய அக்கினிகள் ஆகாயத்து விளைகின்றன. வினையாகிற கடலுக்கு, ஓம நெருப்பானது கடலை மிகவிடாது தடுக்கும் வடவைக் கனல் போலும் என்றவாறு.*

*ஆகம நெறியில் நிற்பார்க்கு ஓமத்தீ வாகீசுவரி வாகீசுவர கருப்பத்தினின்று எடுத்த சிவாக்கினியாகலின் அதன் உள்ளொளியாக இருப்பவன் இறைவனே என்றார்.*

*சர்வ சங்கார காலத்து, சங்கார காரணனாகிய முதல்வன் தீயாக நின்று எரிகின்றானாதலின் இடுகாட்டெரியை இரதமாகக் கொள்கின்றவன் என்றார்.*

*தீ மூன்றுள் முற்கூறிய அங்கி ஒழிய ஏனைய சோம சூரியர்களாகிய இரண்டும் ஆகாயத்தில் விளைதலின் இறைவனே பரமாகாயமாக இருத்தலின் 'அங்கி வேமத்துள் விளைவு' என்றார். வேமம் - வ்யோமம் என்றதன் திரிபு.*

*வினையாகிய நீர்க்கடற்கு ஓமாக்கினி சடசட ஒலியோடு கூடிய வடவைக்கனல் போல்வதாம் என்பது உணர்த்த 'வினைக்கடற்கு ஓமஅங்கி குரைகனல் தானே' என்றார். குரை கனல் ஒலியோடு கூடிய தீ.*

*இதனால், 'சிவபெருமானை வணங்கா தொழியினும் இகழ்தல் கூடாது; இகழின் உய்தியில் குற்றமாம்' என வேள்வி செய்வார்க்கு இன்றியமையாததோர் அறம் கூறப்பட்டது. இதற்குத் தக்கன் வரலாறு சிறந்த சான்றாதல் அறிக.*

**222. *தெளிவுரை :-* *வேள்வியை ஒழியாது வேட்கும் அந்தணர், வேத வழக்கு இவ்வுலகில் அழிந்தொழியாதவாறு காப்பவராவார். அவ்வேள்வியை எங்கும் நிகழச் செய்யுமாற்றால் அவர்க்கு மெய்***

*வருத்தம் பெரிதாயினும், இவ்வுலகில் எங்கும் மிக்கு விளங்குமாறு அவர் நிலைநாட்டும் புகழ் அச்செயலேயாம்.*

*எனின், ஆகுதி செய்கின்ற அந்தணர்க்கு வரும் பயன் அறிவித்தல் நுதலிற்று.*

*அகத்தும் புறத்தும் அங்கியை நிலைபெறச்செய்கின்ற அருந்தவரும், வைதீகாக்கினி இருக்கும் வகையை அருளிச் செய்தவரும் ஆகிய அந்தணர்கள் பெரிய பதமுத்திகளில் எங்கும் நிலைபெற்று இளைப்பெய்த, இம்மையில் மேலோங்கும் புகழ்மிக்கு உண்டாம் என்றவாறு.*

*வைதீகாக்கினியை வழிபடுகின்ற அந்தணர்க்குச் சொர்க்காதி பதமுத்திகளும் இம்மையில் புகழுமே விளையும் என்பது கருத்து.*

*ஆரணத்து அங்கி - வைதீகாக்கினி. இது சூரிய காந்தக் கல். அரணிக்கட்டை முதலியவற்றினின்று எடுக்கப்பட்டுச் சமற்காரஞ் செய்யப்படாத தீ.*

*இருக்கும் வகையருள் செய்தலாது, மந்திரங்களால் அதனை வளர்த்தல்.*

*பெரும்பதி எங்கும் நிறுத்தி இளைப்ப என மாறி, புகழதுவாம் என்பதனோடு கூட்டுக.*

***குறிப்புரை :-** ‘முத்தீ வழியாக அன்றிப் பிறவாற்றால் சிவ பெருமானை அடைதல் கூடுமாயினும், முத்தீ வேள்வி வேட்கப்படா விடின், வேதவழக்கு மறைந்தொழியும்; அது மறைந்தொழியின், கடவுட் கொள்கையும், சிவபத்தியும் போல்வன பலவும் அவ்வாற்றானே மறைந்தொழியும், ஆகவே அவ்வாறெலாம் நிகழாமைப் பொருட்டு முத்தீ வேட்டல் பேணற்பாற்று’ என்பதாம். எனவே, ‘சங்க இலக்கியம், திருக்குறள் முதலிய தமிழ் நூல்களிலும், சிவாகமம், திருமுறை முதலிய சைவ நூல்களிலும் முத்தீ வேள்வி சிறப்பிக்கப்படுதலும் இது பற்றி’ என்பது இனிது விளங்குவதாம்.*

***இதனால், அக்கினி காரியம் மரபு நிலையாதல் கூறப்பட்டது.***

## 15. அந்தணர் ஒழுக்கம்

223. அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றாங்கிட்டுச்
சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே. 1

---

*பிறப்பால் ஏனை உயிரினத்தினும் உயர்ந்து நிற்போராகிய மக்களை ஒழுக்கத்தால் உயர்ந்தோராக்குதற் பொருட்டு உயர்ந்தோர் வகுத்த நால்வகை வருணங்களுள் முதல் வருணத்தவராகிய அந்தணர்க்குரிய சிறப்பொழுக்கங்களைக் கூறுவார். அவற்றுள் தலையாயதாகிய அக்கினி காரியத்தைத் தனியாக எடுத்துக் கூறிய பின்னர், ஏனையவற்றைப் பதினான்கு திருமந்திரங்களால் உணர்த்தி அருள்கின்றார்.*

*223. **தெளிவுரை :-** ஒத்த பிறப்பினராய மக்களுள், 'அந்தணர்' என வேறு நிற்பவர்கள். 'ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்' என்னும் அறுதொழில்களைக் கடமையாகக் கொண்டவர்கள். அதனால் முத்தீ வேள்வியை அணையாது காத்து 'காலை, நண்பகல், மாலை' என்னும் மூன்று வழிபாட்டுப் பொழுதுகளிலும் (சந்தியா காலங்களிலும்) கடவுள் வழிபாடாகிய கடமையைத் தவறாது செய்து, அழகிய தவமாகிய அறச் செயலில் நின்று, வறியார்க்கும் விருந்தினர்க்கும் உணவு தந்து, வேதத்தையும் முறையாக ஓதி, உலகியலில் நல்லனவும், தீயனவுமாகிய நிகழ்ச்சிகளில் கடவுள் கடன்கள் பலவற்றையும் குறைவறச் செய்து முடிப்பவர்களே அப்பெயருக்கு (அந்தணர் என்பதற்கு) உரியவராவர்.*

***குறிப்புரை :-** தழல் ஓம்பல் முதலியவற்றைப் பின்னரும் எடுத்துக் கூறியவதனால், 'அவற்றை வழுவின்றி ஆர்வத்தொடு செய்தல் வேண்டும்' என்பது பெறப்பட்டது. "தழல் ஓம்பி" என்றதனால் வேட்டலையும், "சந்தியும் ஓதி" என்றதனால் ஓதலையும் வலியுறுத்தமை வெளிப்படை. ஆகவே, நற்கருமம் என்றது பிறர்க்கு உதவுதலாகிய "ஓதுவித்தல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்" என்னும் நான்கனையும் வலியுறுத்துவதாயிற்று. ஈதல் ஒழிந்த பிறவும் பொருளாசையின்றிச் செய்யின் அவர்க்கு அறமாதல் பற்றி அவற்றை, "அம் தவம்" என்றார். ஏற்றலாவது, குற்றக் கழுவாயாகவும் குறித்த பயனைத்தரும் அறமாகவும்*

**224.** வேதாந்தங் கேட்க விருப்பொடு முப்பதப்
போதாந்த மான பிரணவத் துள்புக்கு
நாதாந்த வேதாந்த போதாந்த நாதனை
ஈதாந்தம் என்னார்கண் டின்புறு வோர்களே. **2**

---

*கருதி உயர்ந்தோர்க்குக் கொடுக்கும் கொடையாகப் பிறர் தருவனவற்றை, அவர் நலங் கருதி ஏற்றல், அங்ஙனம் ஏற்ற பொருளை அவ்வந்தணர், தென்புலத்தார், தெய்வம் முதலிய அறவழியிலே செலவிடுதலன்றி, இவறுதல் செய்து ஈட்டிவையார் என்க. முப்போதும் நியமம் செய்தல் வேட்டலின் பகுதியாகவும், சடங்கறுத்தல் ஈதலின் பகுதியாகவும் வைத்து வற்புறுத்தப்பட்டன என்க. ''சடங் கறுப்போர்களே" என்ற ஏகாரம் பிரிநிலை. இங்ஙனம் பிரித்துக் கூறிய அதனால் இவ்வொழுக்கம் இல்லாதவர் பிறப்பால் அந்தணராயினும், அந்தணர் எனப்படார் என்பது பெறப்பட்டது. படவே, அந்தணர், அரசர் முதலிய வருணவகை ஒழுக்கம்பற்றி உயர்ந்தோரால் வகுக்கப்பட்டன வல்லது, "உடம்பிலே தானே அமைந்தது" என்னும் மிருதிநூற் கொள்கை அடாது என்றதாயிற்று. இங்கு 'பிறப்பு' எனப்படுவது. தம் குடியின் முன்னோர், தம் ஒழுக்கத்தால் பெற்ற வருணவகை.*

*'பிறப்பே குடிமை ஆண்மை' - தொல். பொருள் - 269*
*'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' - குறள் - 972*
*'பார்ப்பான் - பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்'*
*- குறள் - 134*

*என்பவற்றிலும், "பிறப்பு" எனப்படுவது இதுவே என்க. 'சாதிகள் நெறியின் தப்பா' (தி.12 திருநாட்டுச் சிறப்பு 34) என்பதில் சேக்கிழார் "சாதி" என்றதும் ஒழுக்கம் பற்றியதே என்பது, திருஞானசம்பந்தர் திருநீலகண்டப் பாணரையும், தில்லைவாழந்தணர் திருநாளைப் போவாரையும் "ஐயரே" என உயர்த்து அழைத்தாராக அவர் கூறிய குறிப்பால் விளங்குவதாகும். இன்னும் ஞானசம்பந்தர் நாவுக்கரசரை "அப்பர்" என்றே குறித்துப் போந்தமையும் நோக்கற்பாற்று.*

*இதனால் அந்தணர்க்குரிய ஒழுக்கங்கள் பலவும் தொகுத்துக் கூறப்பட்டன.*

***224. தெளிவுரை :-** வேதத்தின் முடிந்த பொருளை உணர்தற்கண் விருப்பம் உடையவராய், மூன்று கூறுகளை உடையதாய் நூல்களின் முடிவாகிய பிரணவ மந்திரத்தின் பொருள் நிலையில் நின்று, நாத முடிவான பொருட் பிரபஞ்சத்திற்கும், வேத முடிவான சொற்*

*பிரபஞ்சத்திற்கும், உயிர்களது அறிவின் எல்லைக்கும் அப்பால் நிற்கும் முதல்வனாகிய சிவபெருமானை உணர்ந்து, இன்பத்தின் எல்லை காணாராய் அதில் திளைத்திருப்பவரே அந்தணர் எனப்படுவோர்.*

***குறிப்புரை :-*** *வேதாந்தம் - வேதத்தின் முடிவாகிய உபநிடதங்கள். பிரணவம், ஓங்காரம். இதன் முக்கூறுகளாவன அகரம், உகரம், மகரம் அவற்றின் பொருள் நிலை பகுப்பும் (வியட்டியும்) தொகுப்பும் (சமட்டியும்) என இருவகைத்து. அகரம் தோற்றத்தையும், உகரம் நிலைபேற்றையும், மகரம் ஒடுக்கத்தையும் குறித்தல் பகுப்புப் பொருளாம். அவை அப்பொருளைக் குறித்தல் அவற்றின் பிறப்பியல் பால் அமைந்தது என்க. முத்தொழிலையும் உடைய மண் முதல் நாதம் ஈறாகச் சொல்வடிவாயும், பொருள் வடிவாயும் நிற்கும் உலகம் முழுவதையும் ஒருங்கு சுட்டி நிற்றல் அதன் தொகுப்புப் பொருளாம். அப்பொருந் நிலையில் நிற்றலாவது, 'முத்தொழிலை உடைய பொருள் செயற்கையாவதலல்லது இயற்கையாகாமையானும், செயற்கைப் பொருள் யாவும் அறிவிலவாதலல்லது அறிவுடையன வாகாமையானும் அவை, தாமே அங்ஙனம் தோன்றல், நிற்றல், ஒடுங்கல் என்பவற்றை எய்துதல் கூடாமையின், அவற்றை அங்ஙனம் தோற்றி நிறுத்தி ஒடுக்கும் பேரறிவும் பேராற்றலும் உடைய முதல்வன் ஒருவன் உளன்' என்பதை ஆசிரியர் அருளுரையும், நூற்கொள்கையும் சார்பாக நின்று ஓர்ந்து தெளிதல். அதன்பின் நாதனைக்காணுதலாவது, அங்ஙனம் உணரப்பட்ட அம்முதல்வனது அருட்குணங்கள் பலவற்றையும் அறிந்து அன்பு செய்து அவனிடத்தே அழுந்தி நிற்றல். அங்ஙனம் அழுந்தி நிற்கும் நிலையை மாற்றுதற்கு வேறு பொருள் இன்மையின், அந்நிலையில் விளையும் அவனது இன்பத்திற்கும் எல்லை இல்லையாம். ஆகவே, அந்தணர் எனப்படுவோர் இப்பேற்றினைப் பெற்று நிற்போரேயாவர் என்க.*

*'பிரமத்தை அறிந்தவனே பிராமணன்' என மிருதி நூலாரும் சொற்பொருள் கூறுவர். ஆயினும் அவர், 'பிரமத்தை அறியும் தன்மை பிராமணன் என்னும் பிறப்பிலே அமைவது; ஆதலின், அத்தன்மை இல்லாத பிற வருணத்தார்க்கு அவ்வறிவு கூடாது' என்பர். அவர் கூற்று வேதத்திற்கு ஒவ்வாததேயாம்.*

*"ஈதாந்தம்" என்பதில், 'அந்தம்' என்பது முதல்நீண்டு நின்றது. 'அந்தம் ஈது என்னார்' என மாற்றி, 'முடிவு இதுவென்று உணர்தல் இன்றி' என உரைக்க. இவ்வாறு உரைக்கவே, 'எல்லையற்ற இன்ப நுகர்ச்சியைப் பெற்று' என்பது அதனாற் போந்த பொருளாகும். என்னார், முற்றெச்சம். 'எனாது' என்பது பாடம் அன்று. "கண்டு"*

**225.** காயத் திரியே கருதுசா வித்திரி
ஆய்தற் குவப்பர் மந்திரமாங் குன்னி
நேயத்தே ரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துள் தோயா மறையோர்கள் தாமே. **3**

**226.** பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான திருக்கை யிருத்திச்
சொருபம தானோர் துகளில்பார்ப் பாரே. **4**

---

*என்பதனை "நாதனை" என்றதன் பின்னர்க் கூட்டி உரைக்க.*

225. ***தெளிவுரை :-*** *அன்பாகிய ஊர்தியின்மேல் சென்று முதற் பொருளை அடைந்து அதுவேயாய் அழுந்திநின்று உலகத்தில் பற்றற்று நிற்பவரே, அந்தணர்க்கும் உண்மை காயத்திரி, சாவித்திரி முதலாகச் சொல்லப்படுகின்ற ஞான சத்திகளின் வேறுபாட்டியல்புகளை எல்லாம் அவற்றிற்குரிய மந்திரங்களை நெஞ்சிற் பதித்து ஓர்தற்கு விரும்புவர்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'பிறரெல்லாம் அவ்விருப்பமின்றி, வாளா அம்மந்திரங்களைச் சிறிதுபொழுதும் ஓதுதலோடு ஒழிவர்' என்றது ஆயிற்று. ஆகவே, 'இந்நிலையுடையோரே சிறப்புடை அந்தணர்' என்பது பெறப்பட்டது. அநுபவத்திற்கு அறிவன்றி அன்பே நேர் வாயிலாகலின், "நேயத் தேர் ஏறி" என்றார். "நேயத்தாய்" என்றதில், நேயம், 'ஞேயம்' என்னும் வடசொல்லின் திரிபு. ஞேயம் - அறியப் படும் பொருள்; என்றது சிவத்தை.*

**226.** ***தெளிவுரை :-*** *பலநெறிகளையும் அடக்கிநிற்கும் பெருநெறியை உணர்த்தும் பிரணவ மந்திரத்தின் பொருளைச் சிந்தித்து, அருள் ஆசிரியர்தம் அருளுரையால், முடித்த பொருளை உணர்ந்து, நான்காகிய வேதத்திற் சொல்லப்பட்ட முத்திநெறியாகிய திருவருட்குத் தம்மைக் கொடுத்து, அத்திருவருட்கு முதலாகிய சிவத்தின் உண்மை நிலையைத் தலைப்பட்டவரே குற்றம் அற்ற அந்தணராவர்.*

***குறிப்புரை :-*** *மந்திரங்கள் அனைத்திற்கும் முதலாவது ஓங்காரமாதலின், அதனை அனைத்து நெறிகட்கும் இடம் என்றார். "உரை" என்றது விடாத ஆகுபெயராய், அதனால் உணர்த்தப்படும் முடிந்த பொருளைக் குறித்தது. 'வேதத்திற்குப் புறம்பான நெறிகளின்*

227. சத்திய முந்தவம் தாம்அவன் ஆதலும்
மெய்த்தகும் இந்தியம் ஈட்டியே வாட்டலும்
ஒத்த உயிர்உடன் உண்மை யுணர்வுற்றுப்
பெத்தம் அறுத்தலு மாகும் பிரமமே. 5

---

*முத்தி உண்மை முத்தியாகாது போலியாய்ப்போம்' என்றற்குத் 'திருநெறி' என வாளா கூறியொழியாது, "வேதத் திருநெறி" என விதந் தோதினார். பின் வந்த திரு. செல்வம்; அது 'சென்றடையாத' (தி.1 ப.98 பா.1) (தி.6 ப.87 பா.1) இறைவன் செல்வமாகிய திருவருளையே குறித்தது. திருவருளின் வசமாய் நிற்றலை, 'அதன் கையில் இருத்தி' என்றார்.*

227. ***தெளிவுரை :-*** *'பிரமஞானம்' என்ப, பக்குவம் எய்திய உயிர்கள், பொய்கூறாமையும், புலால் உண்ணாமை, கொல்லாமை, இன்னா செய்யாமை ஆகிய நோன்புகளும், தம் வழி நிறுத்தத் தக்க தாகிய மனத்தை அவ்வாறே பொறிவழிப் போகாது தடுத்து நிறுத்தலும், யோக சமாதியும் என்னும் இவை கைவரப் பெற்றுப் பின்னர் மெய் உணர்வெய்திப் பாசத்தை முற்ற அறுத்தலாகும்.*

***குறிப்புரை :-*** *மெய்த்தகுமிந்தியம் - மெய்யின்கட் கிடந்து புலன்களை நுகருந் தகுதியை உடைய இந்திரியங்கள்.*

*மீட்டியே வாட்டலும் - புலன்களிற் சென்று பற்றாது வாட்டுதலும்.*

*ஒத்த உயிர் உடல் உண்டாய் - எனது உடல் எனது உயிர் என்னாது யான் என்று வழங்கும் நிலையில் ஒன்றான உடலுயிர்கள்.*

*உணர்வுற்று - ஞானம் பெற்று, பெத்தம் அறுத்தலும் - பொறி புலன்களோடு கட்டுண்டு உலகின்பில் கட்டுண்டு நிற்கும் நிலையை நீக்குதலும், பெத்த மறுத்தலே பிரமம் என்றவாறு.*

*பசி நீக்கமே இன்பமாகாமை போலக் கட்டறுத்தலே வீட்டின்ப மாகாதாயினும், பிரமத்தோடு அநந்நியமாய் ஒன்றுகைக்கு உபாயமாதற்கிழுக்கின்மையின் இங்ஙனம் கூறினார்.*

**228.** வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை ஒழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே. **6**

**229.** நூலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ
நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமாம்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காணும் நுவலிலே. **7**

---

*இவை நான்கு திருமந்திரங்களானும் அந்தணர் ஒழுக்கமும், அவற்றது சிறப்பும் உடன்பாட்டு முகத்தால் வகுத்துக் கூறப்பட்டன.*

**228.** *தெளிவுரை :-* வேதத்தின் முடிந்த பொருள் ஆசையற்ற நிலையேயாம். அதனால், அப்பொருளை உணர்ந்தவர் ஆசையற்று நின்றார்கள். ஆயினும் சிலர் அப்பொருளை உணர விரும்பி உணர்த்து வாரை அடைந்து உணர்ந்தும், தம் ஆசையை விட்டாரில்லை.

*குறிப்புரை :-* 'அங்ஙனம் ஆசையறாது நின்று ஓதல் முதலிய அறு தொழில்களைப் பொருளாசை முதலியவற்றாற் செய்வோர் அந்தணராகார்' என்பதாம். பின்னிரண்டிகளை முதலில் வைத்து உரைக்க. 'ஒழிந்த' என்பதன் இறுதி நிலை தொகுத்தலாயிற்று. நிலையை, "இடம்" என்றார். வேட்கை - பொருள்கள் மேல் தோன்றும் பற்றுள்ளம். வேதாந்தம் படித்தும் வேட்கை ஒழியார், வேதியர் ஆகார் என்பதாம்.

229. *தெளிவுரை :-* முப்புரிநூலை விடாது அணிகின்ற அந்தணர்களே, ஆராய்ந்து சொல்லின், நீவிர் கொண்டுள்ள முப்புரி நூலும், குடுமியுமே பிரமமாகிவிடுமோ! நூல் பஞ்சும், சிகை மயிருமேயாம். உண்மையைச் சொல்லுமிடத்து, நூலாவது வேதத்தின் ஞானகாண்டச் செய்யுட்களே, நுண்ணிய சிகையாவது, அச் செய்யுட்களின் பொருள் தெளிவே, இதனை அறிந்துகொள்ளுங்கள்.

*குறிப்புரை :-* இங்ஙனமாகவே, 'முப்புரி நூலாகிய பஞ்சு நூல், அறிவு நூலாகிய வேதாந்தத்தைக் குறிக்கும் அடையாளமாகும், சிகை, அதன் முடிந்த பொருளைக் குறிக்கும் அடையாளமுமேயாய் அந்தணக் கோலத்திற்கு உரியவாயின. அப்பொருளைப் பெறாதவர் அவற்றைக் குறிக்கும் அடையாளமாகிய வேடமாத்திரங் கொள்வதால் அந்தண ராகி விடமாட்டார்' என்றதாயிற்று.

**230.** சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி
ஒத்த விடயம்விட் டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரன்உண்மை யுமின்றிப்
பித்தேறும் மூடர் பிராமணர் தாம்அன்றே. **8**

---

*இங்கும் பிரமஞானத்தையே ஒற்றுமை பற்றிப் பிரமமாகக் கூறினார். இங்குக் கூறிய பிரமஞானம் இல்லாதோர் வேட மாத்திரத்தால் பிராமணராகார் என்றவாறு. திருநாவுக்கரசரும்,*

*கோலும் புல்லும் ஒருகையிற் கூர்ச்சமும்*
*தோலும் பூண்டு துயரமுற் றென்பயன்*
*நீல மாமயி லாடு துறையனே*
*நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே.*

*- தி.5 ப.39 பா.8*

*என்பதனால், 'முப்புரிநூல் முதலிய வேடம் புனைந்தும் அபரஞான பரஞானங்களில்லாதார் அந்தணராதல் இல்லை' எனவும், 'அந்த ஞானங்களை உடையவர், முப்புரிநூல் முதலிய வேடங்கள் இன்றியும் அந்தணராவர்' எனவும் அருளிச் செய்தார். எனினும், நூலும், சிகையும் போல்பவை கலியூழிக் காலத்தில் பிறப்படையாளமேயாயின. கார்ப் பாசம் - பஞ்சு, கேசம் - தலைமயிர். சிறப்புடைய இவை இரண்டன் உண்மையைக் கூறவே, கோவண உடை முதலிய பிற அடையாளங்களின் உண்மையும் உணர்ந்து கொள்ளப்படும் என்க. இங்குக் கூறப்பட்ட பொருள் இன்றிப் பிறப்பு ஒன்றே காரணமாக வேடமாத்திரம் புனையும் பிராமணர் பிராமணராகாது, பிராமணப் போலிகள் ஆவர் என்பதனை இந்நாயனார், "பேர்கொண்ட பார்ப்பான்" (தி.10 2 ஆம் தந்திரம்) எனப் பின்னர்க் கூறுவார்.*

**230.** *தெளிவுரை :- மேல் (தி.10 பா.225) சத்தியமும் தவமும் முதலாகக் கூறப்பட்ட ஒழுக்கமும், சிவபத்தியும், சிவஞானமும் இன்றி, வயிறு வளர்த்தலில் விருப்பம் மிக்க அறிவிலிகள் ஒருபோதும் பிராமணராதல் இல்லை. சத்தியம் முதலாயின அந்தணர்க்கு இன்றியமையாதன என்று அறிவித்தவாறு.*

*குறிப்புரை :- என்றது, உடல் ஓம்புதல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டமை காரணமாக, 'பிராமணர் முதலிய வருண வேறுபாடு ஒழுக்கத்தாலன்றிப் பிறப்பிலே அமைந்தன' எனப் பிதற்றுவாரை வன்மையாக மறுத்தவாறு. விடயம் - ஐம்புலன். ஓர்தல்,*

231. திருநெறி யாகிய சித்தசித் தின்றிக்
குருநெறி யாலே குருபதஞ் சேர்ந்து
கரும நியமாதி கைவிட்டுக் காணுந்
துரிய சமாதியாந் தூய்மறை யோர்க்கே. 9

232. மறையோ ரவரே மறையவ ரானால்
மறையோர்தம் வேதாந்த வாய்மையில் தூய்மை
குறையோர்தல் மற்றுள்ள கோலா கலமென்
றறிவார் மறைதெரிந் தந்தண ராமே. 10

---

*மெய்ப்பொருளை; அது, கற்றும் கேட்டும் ஓர்ந்துணரப்படுவதாம். ''உணர்வு'' என்று அந்த அபர ஞானத்தை. பரன் உண்மை - முதற்பொருளின் சொரூபம். இவ்விடத்து, 'உணர்தல்' என்பது சொல்லெச்சமாய் நின்றது. பித்து, பேராசை. அதன்கண் பின்னும் உறைத்து நிற்றலின், 'ஏறும்' என்றும், கிடைத்தற்கரிய பிறவியைப் பிழைபடும் நெறியிற் போக்கலால் "மூடர்" என்றும் கூறினார்.*

*இவை மூன்று திருமந்திரங்களாலும் அந்தணர் ஒழுக்கத்தது சிறப்பு எதிர்மறை முகத்தால் கூறப்பட்டது.*

***231. தெளிவுரை :-** "சத்தியமும் தவம்" (தி.10 பா.227) என்னும் திருமந்திரத்துட் கூறப்பட்ட முறைமையில் நிற்கும் உண்மை அந்தணர்கட்கே சித்தாகிய தம்மையும், அசித்தாகிய பாசங்களையும் பொருளென உணரும் தன்மை நீங்கி, "வேதத் திருநெறி" (தி.10 பா.226) என மேற்கூறிய உபதேச பரம்பரை முறையிலே ஞானகுருவைத் தலைப்பட்டு, நாட்கடன் நோன்பு முதலியவை 'உறங்கினோன்கை வெறும்பாக்கென்னத் தானே தவிர' (சங்கற்ப நிராகரணம் - 4. 234) ஞேயம் ஒன்றையே கண்டிருக்கின்ற துரியாதீத நிலை கை கூடுவதாகும்.*

***குறிப்புரை :-** "சித்த சித்தின்றி" என்பதை முதலிற் கூட்டி, "தூய்மறையோர்க்கே ஆம்" என மாற்றி உரைக்க. "இன்றி" என்பது 'நீங்கி' என்றவாறு. காண்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. சமாதி 'அதீதம்' என்னும் பொருளது.*

*உண்மை ஞானம் அடைந்தார்க்குக் கன்மங்களும் நியமங்களும் பயனற்ற செயல்களாதலானும் அவை தாமே நழுவுமாதலானும், 'கரும நியமாதி கைவிட்டு' என்றார்.*

*துரிய சமாதி - சமாதியின் நான்காம் அவத்தை; அஃதாவது*

233. அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேருஞ் செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றாகும்
அந்தியுஞ் சந்தியும் ஆகுதி பண்ணுமே. **11**

---

*பிரபஞ்சம் தோன்றாமல் எல்லாம் சிவமயமாகக் காணுகை. பார்க்குமிடம் எங்குமொரு பரிபூரணானந்த போதமாகக் கண்ட தாயுமானசுவாமிகள் நிலைமை கொண்டு தெளியலாம்.*

**232. *தெளிவுரை :-*** *அந்தணர் என்று சொல்லப்படுவோர் அந்தணரேயாதல் உண்மையாயின், 'அந்தணர்க்குரிய வேத முடிவின் மெய்ப்பொருளால் அடையும் தூய்மையாவது, உயிர்களின் குறைபாட்டினை உணர்தலே' என்றும், "நூலும் சிகையும் முதலிய பிற வெல்லாம் வெளிப்பகட்டாகிய ஆரவாரங்களே" என்றும் அறிவார். அவ்வாறு அறிந்தவரே வேதம் உணர்ந்த அந்தணராவர்.*

***குறிப்புரை :-*** *'தெரிந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'அவரே அந்தணராம்' என வேறு தொடராக்கி உரைக்க.*

**233. *தெளிவுரை :-*** *உயிர்களிடத்து அழகிய அருளை மேற்கொண்டவரும் வேதாந்த மெய்ப்பொருளையே சிந்தை செய்பவரும் ஆகிய அந்தணர் வாழ்கின்ற நல்ல நாடு எவ்வாற்றானும் கேடுறுதல் இல்லை. அதனை ஆள்கின்ற அரசனும் நலம்பெற்று வாழ்வான். அந்தியிலும், ஏனைச் சந்தியா காலங்களிலும் வேள்விகள் குறைவின்றி நடைபெறும். இவர்கள் தம் கடமைகளைச் செப்பமுறச் செய்தால் தெய்வங்கள் மழைவளம் முதலியவற்றைக் காலம் தவறாது அளித்துக் காப்பாற்றும்.*

***குறிப்புரை :-*** *'அந்தணர்' என்னும் சொற்பொருள் 'அம் தணர்' எனவும், 'அந்த அணர்' எனவும் பிரித்து இருவகையாகக் கூறப்படுதலை முறையே பரிமேலழகர் உரையிலும் (திருக்குறள் 30) நச்சினார்க் கினியர் உரையிலும் காண்க (திருமுருகாற்றுப்படை - 96, மதுரைக்காஞ்சி - 474, கலி கடவுள் வாழ்த்து). இவ்விருபொருளும் இங்குக் கூறப்பட்டவாறு அறிக. 'நரபலி' என்பது வடசொல்லாதலின், அஃறிணை முடிபு ஏற்றது. அந்தியும் சந்தியேயாயினும் சந்தியாதற்குச் சிறப்புப் பற்றி வேறெடுத்து ஓதினார். ''பண்ணும்'' என்பது*

**234.** வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர்
நாதாந்த போதம் நணுகிய பேர்க்கது
போதாந்த மாம்பரன் பாற்புகப் புக்கதால்
நாதாந்த முத்தியுஞ் சித்தியும் நண்ணுமே. **12**

---

*'பண்ணப்படும்' என்னும் பொருட்டாய் நின்றது; ''எண்ணும் அஞ்செழுத்தே" (சிவஞானபோதம் சூ9) என்பதிற்போல, "நாடாயினும், காடாயினும், அவலாயினும், மிசையாயினும் எவ்வழி மக்கள் நல்லரோ அவ்வழி நிலனும் நல்லதாம்" (புறம் - 187) ஆகலின், நல்ல அந்தணர் வாழும் நாடு நலமிகப் படைத்தலை அறிந்து கொள்க. திருவள்ளுவரும் இக்கருத்தே பற்றி, 'தள்ளாவிளையுள் முதலியவற்றோடு, தக்காரை உடையதே நல்லநாடு' (குறள் - 731) என்றார்.*

**234.** *தெளிவுரை :- வேதாந்த அனுபவமின்றி வேதம் மட்டும் ஓதும் அந்தணர் அடையும் பயனை அறிவிக்கிறார். நாதமுடிவான தத்துவங்களின் ஞானத்தைப் பெற்றவர்க்கே அஃது ஆன்ம போதத்தைக் கடந்த இறைவனை அடையும் நெறியாக அமைவது, ஆதலின் அதுவே வேதாந்த ஞானமாம். அதனால் அந்த ஞானத்தை உணரும் ஊழ் இல்லாமையால் பிரகிருதிகாறும் உள்ள தத்துவங்களையே உணர்வார்க்கு மேற்கூறிய இறைவனை அடையும் பரமுத்தியாதல், அதற்குக் கீழாய்ச் சுத்த தத்துவ புவனங்களை அடையும் பதமுத்தியாதல் கிடைக்குமோ! கிடையா.*

*குறிப்புரை :- முதலடியை மூன்றாம் அடியின் பின்னர்க் கூட்டி, தொகுக்கப்பட்ட உருவை 'விதியிலோர்க்கு' என விரித்துக் கொள்க. புக்கது - கிடைத்த ஞானம். ''நண்ணுமே'' என்பதில் ஏகாரம் எதிர்மறைக்கண் வந்தது. பிரகிருதிக்குமேல் உள்ள வித்தியா தத்துவ சிவதத்துவங்களை உணர்தல் சிவாகமங்களை உணர்ந்தார்க்கன்றிக் கூடாமையால், சிவாகமங்களைக் கொள்ளாது, வேதத்தை மட்டுமே கொள்ளும் அந்தணர், அந்தணத்தன்மை நிரம்பப் பெற்றவர் ஆகார் என்றற்கு இவ்வாறு கூறினார்.*

*வேதமும், சிவாகமும் முறையே நூலும், உரையும்போல நின்று பொருள்களைக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் உணர்த்தி நிற்றலின், நூலுள் தொக்கு நிற்கும் பொருள்களை விரித்துரைக்கும் உரையின்றி நூலது பொருளை முற்ற உணர்தல் கூடாமை போல,*

சிவாகமங்கள் இன்றி வேதத்தின் பொருளை விளங்க உணர்தல் கூடாது. அதனால், சிவாகமங்களை இகழ்ந்து வேதத்தை மட்டுமே ஓதுவோர் வேதத்தின் பொருளை முற்ற உணரமாட்டாது ஒருபுடையே உணர்வர். வேதத்தின் பொருளை முற்ற உணராத பொழுது, வேதத்திரு நெறியின் முடித்த பயனைப்பெறுதல் இயலாது என்க.

வேதம், சிவாகமம் இரண்டையும் ஒப்ப உணரும் அந்தணருள், வழிபாட்டுச் செயல்கள் பலவற்றையும், வேதமந்திரங்களால் செய்வோர், 'வைதிக அந்தணர்' எனவும், ஆகமமந்திரங்களால் செய்வோர், 'சைவ அந்தணர்' எனவும் சொல்லப்படுவர். 'வைதிக அந்தணர்' எனினும், 'மகாசைவர்' எனினும் ஒக்கும். 'சைவ அந்தணர்' எனினும், 'ஆதி சைவர்' எனினும் ஒக்கும். 'சைவ அந்தணர், சிவவேதியர், சிவ மறையோர்' என்றாற்போலச் சிறப்பித்துக் கூறிய வழியே 'அந்தணர்' முதலிய சொற்கள் ஆதிசைவரைக் குறிக்கும். வாளா கூறியவழி அவை வைதிக அந்தணரையே குறிக்கும். எனவே, நாயனார் இங்குக் கூறுவனவெல்லாம் வைதிக அந்தணரையே குறிப்பனவாதல் அறிந்து கொள்ளப்படும். படவே, இவர் சிவாகமங்களையும் இகழாது வேதத்தொடு ஒப்ப மேற்கொள்ளுதல் வேண்டும் என நாயனார் கூறலின், 'சிவாகமவழித் தீக்கை பெற்று - மகாசைவராய் விளங்கும் மறையவர்களே அந்தணர் எனப்படுதற்கு உரியர்' என்பது நாயனாரது திருவுள்ளமாயிற்று. ஆகவே, மகா சைவரல்லாத வைதிகப் பிராமணரைப் புரோகிதராகவும், பரிசாரகராகவும் கொள்ளுதல் சைவர்க்கும், பரார்த்த பூசை முதலியவற்றிற்கும் குற்றமாதல் விளங்கும்.

இதனானே, நாயனார் தமிழையும், வடமொழியையும் ஒரு நிகராகவே கூறினமையின், 'வேத சிவாகமங்களோடு ஒத்து நிகழும் தமிழ் நூல்களையும் அந்தணராவார் இகழாது போற்றுதல் வேண்டும்' என்பதும், இங்ஙனம் வேதம், சிவாகமம், திருநெறித் தமிழ்நூல் என்பவற்றை ஒப்ப ஓதி உணர்வோருள் வழிபாட்டுச் செயல்களைத் தமிழ் மந்திரத்தால் செய்வோர் திருவந்தணர் என்றும், 'திருவாசிரியர்' என்றும் கொள்ளத்தகுவர் என்பதும் நாயனார்க்கு ஏற்புடையதாதல் விளங்கும்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த - மறைமொழி தானே மந்திரம் என்ப" (தொல். செய்யுளியல்) என்ற தமிழ்ச் செய்யுள் இலக்கணத்தால், தமிழ் மொழியில் மந்திரம் உளதாதல் தெற்றெனப் புலப்படும்.

இத்தன்மை உடைய மகாசைவருள் தில்லைவாழந்தணர்

*தில்லைக் கூத்தப் பெருமானுக்குத் தொண்டு பூண்டு அவனைக் காலந் தோறும் தவறாது வழிபடும் நியமம் உடையராதல்பற்றித் திருத் தொண்டருள் அவரே முதன்மை வாய்ந்தவர் என்னும் திருக்குறிப்பால் திருவாரூர்த் தியாகேசப் பெருமான், 'தம்மைத் திருத்தொண்டருக்கு அடியராக்கும் நாள் எந்நாளோ' என இறைஞ்சி நின்ற நம்பியாரூரர்க்கு, 'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என அடியெடுத்துக் கொடுத்துத் திருத்தொண்டத் தொகையில் முதற்கண் தில்லைவாழந்தணரை இடம்பெறச் செய்தருளினான் என்க. இவ்வுண்மை திருத்தொண்டத் தொகை தோன்றுதற்கு முன்பே குறிப்பாற் புலப்படுமாறு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தில்லை வாழந்தணரைச் சிவகாம நெறியாகிய, 'தீக்கை' என்னும் சிறப்புப் (மெய்ந்நெறிச் செய்கை) பெற்றமை பற்றி, "சிறப்பர்" (தி.1 ப.80 பா.2) என்றும், இச்சிறப்பால் இவர் சிவோகம் பாவனையைத் தலைப்பட்டுச் சிவனுரு எய்தி நின்றமையை,*

*"நீலத்தார் கரியமிடற் றார், நல்ல*
*நெற்றி மேலுற்ற கண்ணினார், பற்று*
*சூலத்தார், சுடலைப்பொடி நீறணி வார்சடையார்"*

*- தி.3 ப.1 பா.3*

*என்றும் அருளிச் செய்தார். இச்சிறப்புப் பற்றி இவர் 'தீக்கிதர்' எனப் பெயர் பெற்று நிற்றல் அறியற்பாற்று. இதனானோ 'தீக்கிதர்' என்னும் பெயருடைய பிற அந்தணரும் மகாசைவராதல் விளங்கும்.*

*தில்லைவாழந்தணர் சிவாகமங்களையும் வேதத்தோடு ஒப்ப மேற்கொண்டு ஒழுகுதலைச் சேக்கிழார்,*

*"வருமுறை எரிமூன்றோம்பி....*
*.....................................................................................*

*"அறுமறை நான்கி னோடா றங்கமும் பயின்றுவல்லார்"*

*"அறுதொழில் ஆட்சியாலே அருங்கலி நீக்கியுள்ளார்"*

*"ஞானமே முதலா நான்கும் நவையறத் தெரிந்துமிக்கார்"*

*- தி.12 தில்லைவாழந்தணர் பு. 5, 6, 7*

*என விளக்கினார்.*

*'இவர்கள் கூத்தப் பெருமானை வேதமந்திரங்களாலே வழிபடுவர்' என்பதனையும் அவர்,*

"மங்கலத் தொழில்கள் செய்து மறைகளால் துதித்து.......

..........................................................................................................................................................................................

அங்கணர் கோயி லுள்ளா அகம்படித் தொண்டு செய்வார்"

எனக் குறித்தருளினார்.

தில்லைவாழந்தணரைச் சேக்கிழார், "அகிலமெல்லாம்புகழ் திருமறையோர்" எனச் சிறப்பித்தார். அதனானே அவரால் "திரு மறையோர்" எனக் குறிக்கப்பட்ட அப்பூதியடிகள் முதலாயினாரும் மகாசைவராதல் அறியப்படும். ஞானசம்பந்தரது தந்தைவழி, தாய்வழி இரண்டும் மகாசைவ மரபே என்பதனைச் சேக்கிழார்,

"மரபிரண்டும் சைவநெறி வழிவந்த கேண்மையராய்" - தி.12

எனக் குறித்தருளினார். இவ்வாற்றானே, 'குங்குலியக் கலயர், முருகர், சண்டேசர், சோமாசிமாறர், நமிநந்தியடிகள், நீலநக்கர்' என்னும் நாயன்மார்களும் மகாசைவரேயாதல் பெறப்பட்டது. சேக்கிழார் தில்லைவாழந்தணர் முதலியோரைக் குறித்தவாறே உமாபதி தேவரும் பெரியபுராணத்துட் போந்த வைதிக அந்தணர் அனைவரையும் "திருமறையோர்" (சேக்கிழார் நாயனார் புராணம் - 36) எனக் குறிப்பிடுதல் காண்க.

சண்டேசுர நாயனாரது பதியாகிய திருச்சேய்ஞலூரைச் சேக்கிழார் "திருமறையோர் மூதூர்" என்றமையால், அதன்கண் வாழ்ந்த அந்தணரும் மகாசைவரே என்பது பெறுதும், எச்சதத்தன் சிவாபராதம் செய்து ஒறுக்கப்பட்டோனாதல் பற்றி அவனது சைவச் சிறப்பையும், அவனொடு வாழ்ந்த பிற அந்தணரது சைவச் சிறப்பையும் சேக்கிழார் விரித்திலர் எனினும், "வேதப் பயனாம் சைவமும் போல் மண்ணின் பயனாம் அப்பதி" என்பதனால் அங்குத் திகழ்ந்த சைவச் சிறப்பைக் குறித்தருளினார். இத்தகு சைவச்சிறப்பு அங்கு இல்லையேல், அவர் கூறியவாறு அவ்வூர் தில்லை வாழந்தணர்கள் சோழமன்னர்கட்கு முடிசூட்டும் தலங்கள் ஐந்தனுள் ஒன்றாயிருத்தல் கூடுமோ!

சைவ அந்தணர்க்கு நூல், சிகை என்பவற்றோடு காதில் சுந்தர வேடம் சிறப்படையாளமாம்.

சிவாகமத்தை இகழ்ந்தொதுக்குமாற்றால் அந்தணருட் சிலர் வேதத்தின் பொருளை முன்னொடு பின் முரணாதவாறு ஒருபடித்தாக உணரமாட்டாது, 'பூர்வ பாகமாகிய கன்மகாண்டமே வலியுடைத்து' என அதனையே சிறப்பாக மேற்கொண்டு, 'ஞானகாண்டம் புனைந்துரை' எனப் பொதுவகையால் தழுவி, 'தெய்வம் இல்லை' எனக்கூறி நாத்திகராய் ஒழிவாரும் (மீமாஞ்சகர்) 'உத்திர பாகமாகிய

**235.** தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட
நானே விடப்படு மேதொன்றை நாடாது
.......................................................................................... 13

**236.** பூமேவு நான்முகன் புண்ணிய போகனாய்
ஓமேவும் ஓரா குதிஅவி உண்ணவே
.......................................................................................... 14

---

*ஞானகாண்டமே வலியுடைத்து' என அதனையே சிறப்பாக மேற்கொண்டு, 'கன்ம காண்டம் மந்த பரிபாகிகட்கே உரியது; அதனால் அதனுள் வலியது இப்பகுதி, மெலியது இப்பகுதி என ஆராய்தல் பயனில் உழப்பாம்' என்று பொதுவகையால் தழுவிக் கிரியா மார்க்கத்தில் அனேககசுரவாதிகளாயும், ஞான மார்க்கத்தில் 'சீவான்மாவே பரமான்மா' என்னும் அகம்பிரமக்காரர்களாயும் நிற்பாரும் (மாயாவாதிகள்) 'கன்ம காண்டம், ஞானகாண்டம்' என்னும் இரண்டையும் ஒப்பக்கொள்ளினும், உலகத்தின் 'தோற்றம், நிலை, இறுதி' என்னும் முத்தொழிலையும் செய்பவனே முதல்வன் என உணரமாட்டாது, 'அவற்றுள் நிலையாகிய சாத்துவிகத் தொழிலைச் செய்பவனே முதல்வன்; ஏனை இராசதத் தொழிலாகிய தோற்றத்தைச் செய்பவனும், தாமதத் தொழிலாகிய இறுதியைச் செய்பவனும் முதல்வர் ஆகார்' என்று இகழ்ந்து, 'அவருள்ளும் தாமதத் தொழிலைச் செய்பவன், தோற்றத்தைச் செய்பவனிலும், கீழ்ப்பட்டவன்' எனக் கூறிச் சிவநிந்தகராவாரும் (பாஞ்சராத்திரிகள்) ஆவர். இவரை எல்லாம் சைவாகமங்கள் புறச்சமயிகள் என்றே ஒதுக்கும். இவருள் சிவநிந்தை செய்தொழுகுவாரை 'அகத்தியர், கௌதமர்' முதலிய முனிவர்களது சாபவயப்பட்ட தூர்ப் பிராமணர்கள் என்று காந்தம், கூர்மம் முதலிய உயரிய புராணங்கள் இகழ்ந்தொதுக்குதலை அறிந்துகொள்க. இன்னோரன்ன, குழறுபடிகள் பலவும் சிவாகமங்களைப் பொருட்படுத்தி உணராமையான் உளவாவன என அறிக.*

*இதனால், 'வேத சிவாகமஞானமும் வைதிக சைவ ஒழுக்கமும் உடைய அந்தணரே அந்தணத் தன்மை நிரம்பியவர்' என்பது வலியுறுத்தப்பட்டது.*

**235, 236.** *இவ்விரு திருமந்திரங்களின் ஏனையடிகள் கிடைத்தில. அதனால் இவற்றை ஒரு திருமந்திரத்தின் நான்கடிகளாகப் பலரும் மயங்கிக் கொண்டனர். இவை முற்றக் கிடையாமையால், பொருள் காண்டல் அரிது.*

### 16. அரசாட்சி முறை

237. கல்லா அரசனுங் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம்ஓரான் கொல்லென்பான்
நல்லாரைக் காலன் நணுகிநில் லானே. 1

238. நாடோறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாடோறும் நாடி அரன்நெறி நாடானேல்
நாடோறும் நாடு கெடும் மூட நண்ணுமால்
நாடோறுஞ் செல்வம் நரபதி குன்றுமே. 2

---

*நால்வகை வருணத்துள் அந்தண வருணத்து ஒழுக்கமே கடவுள் நெறிக்குச் சிறப்புடையதாயும், அறிதற்கு அரிதாயும் நிற்றலின் அதனை இன்னவென விதந்து கூறி, உடம்பாட்டினும், எதிர்மறையினும் வலியுறுத்திய நாயனார், இனி முறையானே அரசர் ஒழுக்கம் கூறுவாராய், அதனுள் உலகியற் பகுதியே பலவாதலின் அவற்றை விதவாது, கடவுள் நெறிப் பகுதியையே பத்துத் திருமந்திரங்களால் விதந்து கூறுகின்றார்.*

237. ***தெளிவுரை :-*** *நீதி நூலைக் கல்லாத அரசனும், கூற்றுவனும் யாவரிடத்தும் கொலையே புரிதலால் தம்முள் ஒருபடியாக ஒப்பர். ஆயினும் கல்லா அரசனின் கூற்றுவனே மிக நல்லவன். என்னை? கல்லா அரசன் தனது அறியாமை காரணமாக ஒரு குற்றமும் செய்யாதார்க்கும் ஆராயாமல் கொலைத் தண்டம் விதிப்பான்; கூற்றுவன் அறமுடையவர்பால் தண்டம் செய்தற்கு அடையான்.*

***குறிப்புரை :-*** *'அதனால் அரசர்க்கு நீதிநூற் கல்வி இன்றியமை யாதது' என்பது குறிப்பெச்சம். கற்றற்குச் செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. 'ஆயினும், என்னை' என்பன சொல்லெச்சம். "அறம்" என்றது நீதியை, "ஓரான்" என்பது முற்றெச்சம். நணுக நில்லான் என்புழி, 'தண்டம் செய்தற்கு' என்பது இசையெச்சம். 'நலியகில்லானே' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும் கல்லா அரசன் அறம் ஓராது கொல்லென்றலை, 'பெண்கொலை செய்த நன்னன்' (குறுந்தொகை - 292) முதலியோரிடத்துக் காண்க. இச்செய்யுள் வேற்றுமையணி.*

*இதனால், 'நீதிநூலை ஓதி உணர்தல் அரசர்க்கு முதற்கண் வேண்டப்படுவது' என்பது கூறப்பட்டது.*

238. ***தெளிவுரை :-*** *நீதிநூலைக் கற்ற அரசன், அந்நூலின் நோக்கு*

**239.** வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடம்மெய் வேடமே
வேட நெறிநில்லார் தம்மைவிறல்வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது வாகுமே. **3**

---

*முதற்கண் வைதிக நெறி மேலும், பின்னர்ச் சிவநெறி மேலும் ஆதலை யறிந்து, நாள்தோறும் தனது நாட்டில் அவை பற்றி நிகழ்வனவற்றை, நாள்தோறும் அயராது ஒற்று முதலியவற்றான் ஆராய்ந்து, அவை செவ்வனே நடைபெறச் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யானாயின், அவனது நாடும், செல்வமும் நாள்தோறும் பையப் பையக் குறைந்து, இறுதியில் முழுதுங் கெட்டுவிடும். அவற்றிற்குக் காரணம், யாண்டும் பாவச் செய்கையே மலிதலாம். நாட்டில் நீதிமுறை இல்லையெனில் நாடு வளங்குன்றி அரசு கெடும்.*

***குறிப்புரை :-*** *"நாட்டில்" என்புழி 'நிகழும்' என்பது வருவிக்க. 'அவன் நெறி' என்பது பாடம் அன்று. வைதிக நெறி பொதுமையான கடவுள் நெறியாதலின், அதனை, 'தவநெறி' என்றார். வைதிக நெறி சைவநெறிகளே நீதி நூலின் நோக்காதலை, மேற்கூறிய உண்மை அந்தணர் அந்நூலை ஓதுவிக்கும்வழி, அவர் அரசனுக்கு உணர்த்து வாராதலின், அரசன் அவ்வழியில் வழுவாது நிற்றல் வேண்டும் என்பதாம். 'நரபதி கெடும் குன்றும்' என உடைமையது தொழில்கள், உடையான்மேல் ஏற்றப்பட்டன. "மூடம்" என்றது அதன் காரியந் தோன்ற நின்றது, இத்தவநெறி சிவநெறிகளைப் புரத்தலில் வழுவாது நிற்பித்தற்பொருட்டே, 'அரசன் பெரியாரைத் துணைக் கொள்ளல் வேண்டும்' (திருக்குறள், 45 ஆம் அதிகாரம்) என்றார் திருவள்ளுவர். ஞானசம்பந்தர் "வேந்தனும் ஓங்குக" (தி.3 ப.54 பா.1) என அரசனை வாழ்த்தியதும் இது பற்றியே என்பதனைச் சேக்கிழார்,*

*"ஆளும் மன்னனை வாழ்த்திய தற்சனை*
*மூளும் மற்றிவை காக்கும் முறைமையால்"*

*- தி.12 திருஞான. பு. 4-822*

*என விளக்கினார். இவ்வரச ஒழுக்கத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திருத்தொண்டர் புராணத்துட் போந்த நாயன்மார் சிலரது அரசாட்சியைக் கண்டுகொள்க.*

*இதனால், அரசன், தன்கீழ் வாழும் மக்கட்கு, நிலை பேறில்லாத உடல்நலத்தை மட்டும் காப்பவனாகாது, நிலையுடைய உயிர் நலத்தையும் காப்பவனாதல் வேண்டும் என்று கூறப்பட்டது.*

***239. தெளிவுரை :-*** *யாதோர் உயர்ந்த தொழிற்கும் அதற்குரிய*

கோலம் இன்றியமையாதாயினும், அத்தொழிற்கண் செவ்வே நில்லாதார் அதற்குரிய கோலத்தை மட்டும் புனைதலால் யாது பயன்விளையும்! செயலில் நிற்பாரது கோலமே அதனைக் குறிக்கும் உண்மைக் கோலமாய்ப் பயன்தரும். அதனால், ஒருவகை வேடத்தை மட்டுமே புனைந்து, அதற்குரிய செயலில் நில்லாதவரை, **குறிப்புரை :-** பலவகைக் கடவுள் நெறிக் கோலத்தை உடை யாரையும் அவற்றிற்குரிய செயலில் நிற்பித்தல் அரசனுக்குக் கடமையாதலை உணர்த்துவார் இங்ஙனம் பொதுப்படக் கூறினார். 'வேடமே மெய்வேடம்' என, ஏகாரத்தை மாற்றி உரைக்க. ஒழுக்கம் இல்லாதார் வேடம் மாத்திரம் புனையின், உண்மையில் நிற்பாரையும் உலகம், 'போலிகள்' என மயங்குமாகலானும், அங்ஙனம் மயங்கின் நாட்டில் தவநெறியும், சிவநெறியும் வளராது தேய்ந்தொழியும் ஆகலானும் அன்ன போலிகள் தோன்றாதவாறு செய்தல் அரசற்குப் பேரறமாம் என்பார், 'அதுவே வீடாகும்' எனவும், இது செய்ய அரசற்குக் கூடும் ஆதலின் அதனை விட்டொழிதல் கூடாது என்பார், வேந்தனை, "விறல் வேந்தன்" எனவும் கூறினார். 'உண்மை வேடத்தாலன்றிப் பொய் வேடத்தாய் பயன் இன்று' என்பதை,

> வானுயர் தோற்றம் எவன்செய்யும், தன்னெஞ்சம்
> தானறி குற்றப் படின். - குறள், 272

எனவும், பொய்வேடத்தால் பயன் விளையாமையேயன்றித் தீமையும் பெருகுதலை,

> தவம்மறைந் தல்லவை செய்தல், புதல்மறைந்து
> வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று. - குறள், 274

> வலியில் நிலைமையான் வல்லுருவம், பெற்றம்
> புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. - குறள், 273

எனவும், வேடம் புனையாராயினும், உண்மையில் நிற்பார் உயர்ந்தோரே ஆவர் என்பதனை,

> மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
> பழித்த தொழித்து விடின். - குறள், 280

எனவும், திருவள்ளுவரும் வகுத்துக் கூறியருளினார்.

இதனால், கடவுள் நெறியில் போலிகள் தோன்றாதவாறு குறிக்கொண்டு காத்தல் அரசற்குக் கடமை என்பது பொதுவாகக் கூறப்பட்டது.

> எவரேனுந் தாமாக; இலாடத் திட்ட
> திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி,
> உவராதே அவரவரைக் கண்ட போதே

**240.** மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும்
பீடொன் றிலனாகும் ஆதலாற் பேர்த்துணர்ந்
தாடம் பரநூற் சிகையறுத் தால்நன்றே. **4**

---

*உகந்தடி மைத்திறம்நினைந்தங் குவந்து நோக்கி*
*இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி*
*இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்*
*கவராதே தொழும் அடியார் நெஞ்சி னுள்ளே*
*கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. - தி.6 ப.51 பா.3*

*என்றாற்போலும், திருமொழிகள் உலகியலைக் கடந்து அருள் நெறியில் நிற்கும் அன்புநெறி (பக்திமார்க்கம்) பற்றினவும், இங்குக் கூறிய பலவும் உலகியலைக் கடவாத நூல்நெறி (விதிமார்க்கம்) பற்றினவுமாம் ஆதலின் இவை தம்முள் முரணாகாமை அறிக.*

**240.** *தெளிவுரை :- 'பிரமத்தை உணர்ந்தவனே பிராமணன்' என்று வாய்ப்பறை சாற்றிவிட்டு, அப்பொழுதே அம்முயற்சி சிறிதும் இன்றி மூடத்தில் அழுந்திக்கிடப்போர் குலப்பெருமை கூறிக்கொள்ளுதற் பொருட்டுப் பிராமணர்க்குரிய சிகையையும், பூணூலையும் முதன்மையாக மேற்கொள்வாராயின், அத்தன்மையோர் உள்ள நாடும், நன்னெறி நிகழாமையால் வளம் குன்றும்; அந் நாட்டிற்குத் தலைவ னாகிய அரசனும் பெருவாழ்வுடையனாயினும், தன் கடமையைச் செய்யாமையால், பெருமை சிறிதும் இலனாவன். ஆதலால், அத்தன்மையாளரது உண்மை நிலையை அரசன் பல்லாற்றானும் ஆராய்ந்தறிந்து, வெளியாரை மருட்டும் அவரது பொய்வேடத்தைக் களைந்தெறியச் செய்தல், பலர்க்கும் நன்மை உண்டாகும்.*

*குறிப்புரை :- வேடமாத்திரத்தானே தம்மைப் பிராமணர் என மதித்துக் கொள்வோர் தம் மூடத்தை நீக்கிக்கொள்ள முயலாராகலான் அவர்க்கும், அவரது வேடத்தால் அவரை உயர்ந்தோர் எனக் கருதி அவர்க்குப்பிறர் செய்யும் தானங்கள், அவரது தீயொழுக்கத்தால் உலகிற் பல தீச்செயல்கள் நிகழ்தற்கே காரணமாதலின் உலகிற்கும் உளவாகின்ற தீமைகள் அனைத்தும் அப்பொய் வேடத்தைக் களையவே நீங்க, மெய் வேடத்தாரால் நன்மை விளையும் என்பது பற்றி, 'நூலையும் சிகையையும் அறுத்தால் நன்றே' என்றார்.*

*இதனால், 'அரசன் கடவுள் நெறியுள் வைதிக நெறியைக் காத்தல் வேண்டும்' என்பது சிறப்பாகக் கூறப்பட்டது.*

**241.** ஞானமி லாதார் சடைசிகை நூல்நண்ணி
ஞானிகள் போல நடிக்கின் றவர்தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞானமுண் டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே. **5**

**242.** ஆவையும் பாவையும் மற்றற வோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே. **6**

---

**241.** *தெளிவுரை :- சிவஞானம் இல்லாத வெறுவியர் சிவஞானம் பெற்றுச் சிவனே ஆயினார் போலச் சிவனுக்குரிய சடை, சிகை, பூணூல் என்பவற்றைப் புனைந்து கொண்டு சிவஞானிகள் போல நடிப்பார்களாயின், அவரை அரசன் சிவஞானிகள் வாயிலாகவே பரிசோதனை செய்து உண்மைச் சிவஞானிகளாகச் செய்தல் நாட்டிற்கு நன்மை பயப்பதாகும்.*

*குறிப்புரை :- எனவே, 'அது செய்யாவழி நாட்டிற்குத் தீமை உண்டாகும்' என்றதாயிற்று. ஞானம் உண்மையை அறிதல் அரசற்குக் கூடாமையின், 'ஞானிகளாலே சோதிக்க' எனவும், 'சிவசின்னத்தைக் களைக' எனக் கூறுதலும் குற்றமாதலின், 'அவர்க்குச் சிவஞானத்தை உண்டாக்குக' எனவும் கூறினார். 'சடை' என்னும் கோலத்தைக் கூறவே, ஞானம், சிவஞானமாயிற்று.*

*இதனால், 'அரசன் கடவுள் நெறியில் சிவநெறியைப் பழுது படாமல் காத்தல் வேண்டும்' என்பது சிறப்பாகக் கூறப்பட்டது.*

**242.** *தெளிவுரை :- ஆக்களையும், பெண்டிரையும், துறவறத்தாரையும், தேவர்களாலும் வணங்கப்படும் சிவனடியாரையும் பிறர் நலியாமல் காத்தற்குரியவன் அரசன். அவன் அதனைச் செய்யாதொழிவனாயின் மறுமையில் மீளாநரகம் புகுவான்.*

*குறிப்புரை :- 'பாவையரையும்' என்பது குறைந்து நின்றது. 'காப்பவன் காவலன்' என மாறிக் கூட்டுக. வைதிக வேள்வி சைவ வேள்விகட்கு அவியையும், சிவவழிபாட்டிற்குப் பால் முதலிய ஐந்தையும் தருவன ஆக்களும் (பசுக்களும்) 'அறவோர்க்களித்தல், அந்தணர் ஓம்பல், துறவோர்க்கெதிர்தல், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடல்', (சிலப்பதிகாரம் - கொலைக்களக் காதை) முதலியவற்றையும், சிவவழிபாடு செய்யும் ஆடவர்க்கு அதற்கு வேண்டுவனவற்றை அமைத்து உடன் இருந்து உதவுதலையும்*

**243.** திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின்
மறந்தும் அறநெறி யேஆற்றல் வேண்டும்
சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவும்
அறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றாமே. 7

---

*செய்வோர் பெண்டிரும், அறமுதற் பொருள்களை உலகர்க்கு உணர்த்துவார் துறவறத்தவரும், சிவஞான சிவபத்திகளைப் பரிபக்கு வர்க்குத் தருவார் சிவனடியாரும் ஆகலானும், இவரை நலியும் இயல்பு உடையார் முறையே புலையரும், தூர்த்தரும், நாத்திகரும், புறச்சமயி களும் ஆகலானும் அவரால் இவர்க்கு நலிவு வாராமைக் காத்தல் அரசற்குக் கடன் என்பதும்,*

*'அக்கடனை அவன் ஆற்றாதொழியின், ஆற்றுவார் பிறர் இன்மையின் உளவாகும் தீங்குகட்கு அவனே காரணன் ஆதலின், அவன் நிரயத்துன்பத்தை நெடுங்காலம் எய்துவன்' என்பதும் கூறியவாறு. மறுமைக்கு - மறுமைக்கண்.*

*இதனால், 'உலகியல், மெய்ந்நெறி' என்னும் இருவகை நன்னெறிகட்கும் ஊறுண்டாகாதவாறு காத்தல் அரசற்குக் கடன் என்பதும், அக்கடமையைச் செய்யாவழி அவற்கு உளதாகும் குற்றமும் கூறப்பட்டன.*

**243. *தெளிவுரை :-*** *பல சமய நூலாரும் தாம் தாம் அறிந்தவாறு கூறும் யாதொரு முத்தியைப் பெறவேண்டினும், இம்மை மறுமைச் செல்வங்களை எய்த வேண்டினும் அரசன் மறந்தும் தனது அறநெறியினின்றும் வழுவுதல் கூடாது. அதனால், அவன், தன்கீழ் வாழும் குடிகளிடத்து விரும்பற்பாலது அவர்தம் தொழில் வருவாயுள் ஆறில் ஒன்றேயாம்.*

***குறிப்புரை :-*** *ஆகவே, 'அதனின்மேற்பட விரும்புதல் அரசற்குக் குற்றமாம்' என்றபடி. இல்லறத்தார்* ***'தென்புலத்தார் முதலிய ஐந்திடத்து அறமும்' (குறள், 43) செய்ய வேண்டுதலின், ஆறில் ஒன்றிற்கு மேற்பட விரும்புதல் அரசற்குக் குற்றமாயிற்று****.*

*அரசரது ஒழுக்கம் கூறும்வழி அவர்க்குப் பொருள் வருவாயும் கூறவேண்டுதலின், அதனை அறத்தாற்றின் வழுவாது பெறல் வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது. 'உறுபொருளும், உல்கு பொருளும் தன்ஒன்னார்த் தெறுபொருளும்' (குறள். 756) பெறுதற்கண் அறத்தின் வழுவுதல் உண்டாகாமையின், அவை இங்குக் கூற வேண்டாவாயின. மக்கள் செய்யும் புண்ணிய பாவங்கள் இரண்டிலும் அரசர்க்கு ஆறில்*

244. வேந்தன் உலகை மிகநன்று காப்பது
வாய்ந்த மனிதர்கள் அவ்வழி யாநிற்பர்
பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தான்கொள்ளின்
பாய்ந்த புலியன்ன பாவகத் தானே. 8

245. கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப்
பால்கொண்டு சோமன் முகம்பற்றி உண்ணாதோர்
மால்கொண்டு தேறலை உண்ணும் மருளரை
மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே. 9

---

*ஒரு கூறு உண்டு.*

244. ***தெளிவுரை :-*** *அரசன் உலகத்தை மேற்கூறியவாற்றா லெல்லாம் காப்பது பலர்க்கும் நன்மையை மிகத் தருவதாகும். எவ்வாறெனில், அத்தகைய ஆட்சியில் பொருந்திய மக்கள் மேற்கூறிய நெறிகளிலே வழுவாது நிற்பராகலின், அரசன் அங்ஙனம் காத்தலினின்றும் பிறழ்ந்து தனது நாட்டைப் பகைமன்னர் வந்து கைப்பற்றுமாறு தான் தனது குடிமக்களைத் தமக்கும், அறத்திற்கும் உரியவராகக் கருதாது, தனது நலம் ஒன்றற்கே உரியதாகக் கருதி விடுவானாயின், அவன் தனது பசியின்பொருட்டுப் பிற விலங்குகளைப் பாய்ந்து கொல்லும் புலியோடொத்த தன்மையனே ஆவன்.*

***குறிப்புரை :-*** *'அறநெறி பிறழ்ந்த அரசற்குக் கெடுவது மறுமை யேயன்றி இம்மையுமாம்' என்பார், "இவ்வுலகைப் பிறர் கொள்ள" என்றார். கொடுங்கோல் அரசனோடு குடிகளும், பிறரும் மேவுதல் (குறள் - 740 உரை) இன்மையால், அவன் தற்காத்தலையும் செய்து கொள்ளமாட்டாது பகைவர்க்கு எளியனாவான் என்க. 'தாம்' என்பது பாடம் அன்று. "தான் கொள்ளின்" என்புழியும் 'கொள்ள' என்பதே பாடமாயின் பொருள் இதுவேயாம் என்க. பாவகம் - தன்மை, பாவனை முற்றிய நிலை.*

*இதனால், 'தன் கடமையினின்றும் வழுவுதல் அரசற்குப் பெருங்கேடு பயக்கும்' என்பது கூறப்பட்டது.*

245. ***தெளிவுரை :-*** *'கால் கட்டி மேல் ஏற்றிப் பால் கொண்டு சோம பானம் செய்க' என்பது யோகியரிடை வழங்குவதொரு குறிப்புச்சொல். அதன் பொருள் 'காற்றை (பிராண வாயுவை) இடைகலை பிங்கலை வழிச் செல்லாதவாறு தடுத்து, சுழுமுனை வழிமேல் ஏறச் செய்து, அதனால் வளர்கின்ற மூலக்கனலால் நெற்றியில்*

*உள்ள சந்திரமண்டலத்தினின்றும் வழிகின்ற அமுதத்தை உண்டு, காலத்தை வென்று சமாதியில் அழுந்தி இறை இன்பம் பெற்றுப் பரவசம் எய்தியிருக்க' என்பதேயல்லது, 'ஒருவனை இருகால்களையும் கட்டிக்கொண்டு பனை மரத்தின்மேல் ஏறச்செய்து, அவன் அதன் பாளையினின்றும் இறக்கிக் கொணர்கின்ற கள்ளை உண்டு அறிவிழந்திருக்க' என்பது பொருளன்று. அதனால் அவ்வுட்பொருளை உணரும் அறிவிலாதோர் தமக்குத் தோன்றிய வெளிப்பொருளே பொருளாக மயங்கித் தாமும் கள்ளுண்டு களித்துப் பிறரையும் அவ்வாறு களிக்கச் செய்வர். அப் பேதை மாக்களை ஒறுத்தலை அரசன் தனது முதற்கடனாகக் கொண்டு ஒறுத்தல் வேண்டும்.*

***குறிப்புரை :-*** *கால் - காற்று, பிராண வாயு. கால் கொண்டு கட்டுதல் - பிராணாயாமம் செய்தல். வேள்விக்கண் கொள்ளப்படும் சோமபானத்தைப் புகழ்ந்து கூறலும் இன்னதொரு மயக்க உரையே என்பது தோன்றுதற் பொருட்டுத் திங்களை அப்பெயராற் கூறாது, 'சோமன்' என்னும் பெயராற் கூறினார். அதனால் அன்னதொரு வேள்வியை உயிர்நலம் கருதாது உடல் நலத்தின் பொருட்டு அப்பானம் செய்தல் வேண்டி வேட் பார்க்கும் அரசன் அறிவு புகட்டல் வேண்டும் என்பது பெறப்பட்டது. இத்திருமந்திரத்துள், 'கால், மேலேற்றல், பால், சோமன்' என்னும் சொற்கள் இவ்விரு பொருள் பயந்து நிற்றல் அறிக. 'முகத்தின்கண் சோமனைப் பற்றிப் பால்கொண்டு உண்ணாதார்' எனக் கூட்டுக. செய், 'செய்கை', என்னும் பொருட்டாய முதனிலைத் தொழிற்பெயர்.*

> *"காயத்தின் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே*
> *மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற;*
> *வறட்டுப் பசுக்களென் றுந்தீபற" - திருவுந்தியார் 43*

*என்றார் திருவுந்தியாரிலும்.*

*இதனால், அரசன், 'கடவுள் நெறியில் பேதை மாக்களது கட்டுரைகள் நிகழ்ந்து குழறுபடை செய்யாதவாறு காத்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**246. *தெளிவுரை :-*** *சமயிகள் பலரும் தம் தம் சமய அடையாளங்களை மட்டும் உடையராய் அச்சமய ஒழுக்கத்தின் நில்லா*

**246.** தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண் டமுஞ்செய்யும் அம்மையில் இம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. **10**

---

*தொழிவாராயின, அனைத்துச் சமயங்கட்கும் தலைவனாகிய சிவபெருமான் தான் தனது ஆகமத்திற் சொல்லியுள்ள தண்டங்கள் அனைத்தையும் மறுமையில் அவர்க்குச் செய்தல் திண்ணம் ஆயினும், இம்மையில் அவர்க்குரிய தண்டத்தைச் செய்தல் அரசனுக்குக் கடமையாகும்.*

*குறிப்புரை :- அம்மை - மறுபிறப்பு. அம்மையில் திருத்துவது அரன் கடமை. இம்மையில் திருத்துவது அரசன் கடமை. 'மறுமைத் தண்டம், அதன்பின் வரும் பிறப்பில் அப்பாவம் தொடராது கழிதற்பொருட்டாதலானும், அதனைச் செய்தல் பிறர்க்கு இயலாதாகலானும் அதனைச் சிவபிரான் தானே செய்வானாய், இம்மையிற் செய்யும் தண்டம் அப்பாவம் மறுமையில் தொடராது கழிதற்பொருட்டாதலின், அதனை அவன் அரசனுக்குக் கடமையாக்கினான். ஆகவே, அரசன் அக்கடமையினின்றும் வழுவுதல் கூடாது' என்பதாம். சமயங்கள் பலவும் உயிர்களின் அறிவு வளர்ச்சிப் படிகளேயாதலின், 'அவற்றை மேற்கொண்டுள்ளோம்' என்பவர் அவ்வொழுக்க நெறி நில்லாராயின் பொய்ம்மையாளராய்ப் பிறரை வஞ்சித்துக் கேடெய்துவராகலின், அவ்வாறு ஆகாமைப் பொருட்டு அவரை ஒறுத்தல் அரசற்குக் கடமையாயிற்று.*

*இதனால், 'அவரவர் மேற்கொண்ட சமயங்கள் பலவற்றையும் பழுதுபடாமற் காத்தல் அரசற்குக் கடன்' என்பது கூறப்பட்டது.*

## 17. வானச் சிறப்பு

247. அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றும்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறும் காஞ்சிரை ஆங்கது வாமே. 1

---

*முதற்கண் பொது அறங்களுள் சிறப்புடையன சிலவற்றைக் கூறிப் பின்னர் வருவன ஒழுக்கங்களாகிய சிறப்பு அறங்களைக் கூறப் புகுந்த நாயனார் அவற்றுள்ளும் சிறப்புடையவற்றையே கூறக் கருதினாராகலின் சிறப்புடைய அந்தணர் அரசர் ஒழுக்கங்களையே கூறி, ஏனை வணிகர் வேளாளர் ஒழுக்கங்கள் கடவுள் நெறிக்கண் விதந்தோறும் தன்மை இல என விடுத்து, உலகத்தார் ஒழுக்கத்தின் இழுக்காது நிற்றலின் பயனாக உலகம் நடத்தற்கு முதலாகப் பெய்கின்ற மழையினது சிறப்பு இரண்டு திருமந்திரங்களாற் கூறுகின்றார்.*

*247. **தெளிவுரை :-** வற்றாத அமுது ஊற்றுப்போலச் சுரந்து பொழிகின்ற பெரிய மழைநீராலே பயன் சுரக்கின்ற பல மரங்கள் இயற்கையாக நிலத்தில் தோன்றி வளர்வனவாம். இனி உழவரால் பயிரிடப்படுகின்ற கமுகு, இனிய நீரைத் தருகின்ற தென்னை, கரும்பு, வாழை முதலியனவும் அம்மழையினாலே மக்கட்கு நிரம்பிய உணவைத் தருவனவாம். இனி எட்டி போன்ற நச்சு மரங்களும் அம்மழையினால் உளவாவனவேயாம். வானம் இட ஆகுபெயராய் மழையை உணர்த்திற்று.*

***குறிப்புரை :-** முதற்கண், "அமுதூறும்" என்பதன் இடையில் 'போல' என்னும் உவம உருபு விரிக்க 'நெறியைப் படைத்தான்' நெருஞ்சில் படைத்தான் (தி.10 ஆறாம் தந்திரம்) எனப் பின்னர்க் கூறுமாறுபோலவே, இயற்கை விளைவுகளைக் கூறியதேயன்றி, உழவரால் உளவாகும் செயற்கை விளைவுகளையும் கூறினார். சிறப்புடைய மக்களுலகம் அவற்றால் வாழ்தல் கருதி, "ஏரின் உழா அர் உழவர் புயலென்னும் - வாரி வளங்குன்றிக் கால்" (குறள்-141) என்றார் திருவள்ளுவரும். இதனானே உழவாகிய முதற்றொழிலும், ஓரிடத்து விளையும் பொருளைப் பிறவிடத்துக் கொண்டு கொடுக்கும் வாணிகம் முதலிய துணைத்தொழிலும் ஆகியவற்றால் பல்வேறு திறத்து மக்களது வாழ்விற்கும் மழை முதலாதல் போந்தது. போதரவே, மேல் கூறாதொழிந்த வணிகர், வேளாளர் என்பாரொடு ஏனைமக்களது ஒழுக்கங்களும் ஓராற்றால் கூறப்பட்டனவாயின. இங்கும் அமுதூறும் மரங்களுடன், நஞ்சூறும் மரங்களும் மழையினால் உளவாதல் கூறினார்.*

**248.** வரையிடை நின்றிழி வான்நீர் அருவி
உரையில்லை உள்ளத் தகத்துநின் றூறும்
நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்
கரையில்லை எந்தை கழுமணி யாறே. **2**

---

*''பார்மிசை'' எனக் கூறிய இந்நிலவுலகம் நல்வினை தீவினை இரண்டற்கும் இடமாகிய இருவினை உலகமாவதல்லது, சுவர்க்கமும், நரகமும் போல ஒரு வினை உலகமென்று என்பது அறிவித்தற்கு, எனவே, 'கன்ம பூமியாகிய இந்நிலவுலகம் நடத்தற்கு மழையே முதல்' என்பது கூறப்பட்டதாம். புல், பூடு முதலிய பலவும் இங்கு, 'மரம்' என அடக்கப்பட்டன. "மரப் பெயர்க் கிளவிக்கு அம்மே சாரியை" (தொல் - எழுத்து, 415) என்றாற்போல, ''காஞ்சிரையும்'' என்ற உம்மை தொகுத்தலாயிற்று. காஞ்சிரை அமுதூறலாவது நீர் வளத்தால் தன் நச்சுத்தன்மை குறைதல்.*

**248. *தெளிவுரை :-*** *எம்தந்தையாகிய சிவபெருமான் பொழிகின்ற திருவருளாகிய வெள்ளம் அன்பரது நெஞ்சத்தினின்றும் ஊறுகின்ற சூக்குமமாகிய தெளிநீராம் ஆதலின், அதற்கு உலகில் மழையால் மலையினின்றும் பாய்கின்ற வெள்ளிய அருவி நீர்க்கு உள்ளதுபோல இடமும், காலமும், சுட்டும் சொல்லில்லை; நுரை இல்லை; மேலே மூடுகின்ற பாசியில்லை; கரையில்லை.*

***குறிப்புரை :-*** *''நுரையில்லை மாசில்லை'' என்பதனை இறுதியடியின் முதலிற் கூட்டுக. "நுரை இல்லை" என்றது, 'பயன்படா தொழியும் கூறில்லை' எனவும் "மாசில்லை" என்றது, 'பாசத் தொடர்பு இல்லை' எனவும் கூறியவாறாம். எனவே, 'அமுத ஊற்று', என மேல் சிறப்பிக்கப்பெற்ற நீர்மழையினும் இறைவனது கருணைமழை மிகச் சிறந்தது என்பது கூறும் முகத்தால், 'இறைவனது கருணையானே மழை உளதாகும்' என்பது உணர்த்தப்பட்டதாம். "முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே - என்னப் பொழியாய் மழை'' என மாணிக்கவாசகர், மழையை இறைவன் கருணையோடு உவமித்ததும் இதுபற்றி, இக்கருத்தே பற்றித் திருவள்ளுவரும் வான்சிறப்பைக் கடவுள் வாழ்த்தினை அடுத்து வைத்தார். இதனானே மக்களது ஒழுக்கமும், ஒழுக்கம் இன்மையும், மழைக்கும், மழை இன்மைக்கும் நேரே காரணமாகாது, இறைவனது திருவுள்ளத்திற்கு உவகையும் வெகுளியும் உளவாக்கும் முகத்தால் காரணமாம் என்பது பெறப்பட்டது. சிறந்த ஒளியாதல் பற்றித் திருவருளை, "கழுமணி" என்றார்.*

*இதனால், மழை இறைவனது திருவருள் வடிவாதல் கூறப்பட்டது.*

## 18. தானச் சிறப்பு

249. ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந் தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே. 1

---

*சிவபிரான் தனது திருவருளால் மழையைத் தருதல் அதன் பயனைப் பலரும் பிறர்க்கும் பயன்படச் செய்து வாழ்தற் பொருட்டன்றித் 'தாமே தமியராய்' (குறள். 229) நுகர்தற்பொருட்டோ ஒருவர்க்கும் ஆகாதவாறு காத்து வைத்தற்பொருட்டோ அன்றென்பதற்கு அதன் பின்னர், தானச் சிறப்பு ஒரு திருமந்திரத்தானே கூறுகின்றார். இதனை வேறு பலவாற்றால் பல திருமந்திரங்களால் பின்னர் கூறுவாராகலின்;*

*ஒருவர் தமது பொருளைப் பிறர்க்குப் பயன்படச் செய்யும் முறை, 'தானமும், தருமமும்' என இருவகைப்படும். அவை முறையே, 'கொடை, ஈகை' எனத் தமிழில் சொல்லப்படும்.*

*கொடை உயர்ந்தோர்க்குக் கொடுத்தலும், ஈகை தாழ்ந்தோர்க்குக் கொடுத்தலும் ஆம், என்பது தமிழ் நூல்களில் வெளிப்படையாக அறியக் கிடப்பது. அவற்றுள் இங்குத் தருமத்தையும் தானத்துள் அடங்கி உயர்ந்ததனால் பெயர் கொடுத்தார் என்க.*

**249. *தெளிவுரை :-* *அறம் செய்தலில் விருப்பம் உடையவர்களே, அறம் வேண்டுமாயின், இரப்பாரை 'அவர் நல்லர் இவர் தீயர்' என அவரது தகுதி வேறுபாடுகளை ஆராயாது யாவர்க்கும் இடுங்கள். உண்ணும் காலத்தில் விரையச் சென்று உண்ணாது, விருந்தினர் வருகையை எதிர்நோக்கியிருந்து பின்பு உண்ணுங்கள்.***

***காக்கைகள் தமக்குக் கிடைத்த உணவை உண்ணும்பொழுது, தம் இனத்தையும் அழைத்துக்கொண்டு உண்ணுதலைக் காணுங்கள்; கண்டீராயின், முன்னோர் தேடி வைத்தனவும், நீவிரே முன்னே தேடி வைத்தனவும் ஆகிய பொருளைப் பொன்காக்கும் பூதம்போல வறிதே காத்திராது சுற்றத்தார் பலர்க்கும் உதவுங்கள்.***

***குறிப்புரை :-*** **'ஆர்க்கும் இடுமின், பார்த்திருந்துண்மின், பழம்பொருள் போற்றன்மின்' என்பவற்றால் முறையே 'தாழ்ந்தோர்,**

உயர்ந்தோர், ஒத்தோர்' என்னும் முத்திறத்தார்க்கும் உதவுதல் கூறப்பட்டமை காண்க.

தாழ்ந்தோர்க்கு உதவுதலே ஈகை அல்லது தருமம். அஃது 'அற்றார் அழிபசி தீர்த்தலே' (குறள். 226) ஆகலின், அதற்கு ஏற்பாரது தகுதியை ஆராயவேண்டுவதில்லை என்றார்.

"பார்த்திருந்து உண்மின்" என்றதனால், 'தக்கார்வரின், மகிழ்ந்து வரவேற்று அவரோடு உண்டலும், வாராதவழி வாராமைக்கு வருந்தித் தாமே உண்டலும் செய்க' என்றதாயிற்று. இதுவே 'விருந்தோம்பல்' என்றும், 'தானம்' என்றும் சொல்லப்படும். இவர்க்குப் பொருளும் கொடுக்கப்படும் ஆதலின், தகுதி வேண்டப்படுவதாயிற்று. திருவள்ளுவரும் 'தக்க விருந்தினரையே ஓம்புக' எனக் கூறுதல் அறிக. (குறள். அதி.9).

"பழம்பொருள் போற்றன் மின்" என்பதை இறுதியில் வைத்து உரைக்க. சுற்றம், அடுக்கிய சுற்றமாய் வருதலின் (குறள். 525) பழம் பொருளைப் போற்றாது வழங்குதலை அதற்கே கூறினார். எனினும் பொதுப்படவே ஓதினமையால், பிறவற்றிற்கும் கொள்ளப்படும். காக்கை கரைந்துண்ணுதலைத் திருவள்ளுவர் சுற்றந்தழாலுக்கே உவமையாகக் கூறுதலும், (குறள். 527). காக்கை தனது இனம் ஒன்றையே கரைந்து உண்ணுதலும் அறிக. "காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே" என்றாராயினும், 'உண்ணுங் காலம் காக்கை கரைதல் அறிமின்' என்றலே கருத்து என்க.

இதனால், 'தேடிய பொருளைப் பிறர்க்குப் பயன்படச் செய்தல் வேண்டும்' என்பதும், அங்ஙனம் செய்யுமாறும் கூறப்பட்டன.

## 19. அறஞ்செய்வான் திறம்

250. தாமறி வாரண்ணல் தாள்பணி வாரவர்
தாமறி வாரறந் தாங்கிநின் றாரவர்
தாமறி வார்சில தத்துவ ராவர்கள்
தாமறி வார்க்குத் தமன்பர னாமே. 1

251. யாவர்க்கும் மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கும் மாம்பசு வுக்கொரு வாயுறை

---

*அறத்தின் வகை அனைத்தையும் ஒரு திருமந்திரத்தால் தொகுத்துணர்த்திய நாயனார், அதன் இயல்புகள் பலவும் இனிது விளங்கப் பிறவாற்றால் உடம்பாட்டானும், எதிர்மறையானும் வகுத்துணர்த்த வேண்டி முதற்கண் 'அறம் செய்வான் திறம்' ஒன்பது திருமந்திரங்களால் உணர்த்தியருள்கின்றார். திறம் - தன்மை.*

250. ***தெளிவுரை :-*** *'சிவபெருமானது திருவடியை வணங்குதல், பிறர்க்கும் பிற உயிர்க்கும் உதவுதலை மேற்கொண்டு செய்தல், தத்துவ உணர்வு பெறுதல்' என்னும் இவற்றுள் ஒன்றையோ, பலவற்றையோ, உடையவரே அறிவுடையோராவர். அவர்க்கே சிவபெருமான் உறுதுணையாவான்.*

***குறிப்புரை :-*** *''தாள்பணிவார்'' முதலிய மூன்றனையும் எழுவாயாக்கியும், "தாமறிவார்" மூன்றனையும் அவற்றிற்குத் தனித்தனிப் பயனிலையாக்கியும் முடிக்க. இவற்றால் இவை மூன்றும் அறத்தின் வகையாதல் இறுதியடியில் பெறப்பட்டது. தொகுக்கப்பட்ட பிரிநிலை ஏகாரத்தை விரித்து, 'தாமறிவார்க்கே பரன் தமனாம்' எனக் கூட்டி உரைக்க. 'தமர்' எனப் பன்மையாக ஓதுதல் பாடம் அன்று, 'அறம் செய்வோரே அறிவுடையோர்' என்பது உணர்த்துவார், ஏனைய வற்றையும் உடன் கூறினார். ''விருந்தோம்பல் ஓம்பா மடமை மடவார்கண் உண்டு'' (குறள். 89) எனத் திருவள்ளுவரும் அறம் செய்யாமையை, 'மடமை' எனவும், அதனை உடையாரை, 'மடவோர்' எனவும் கூறுதல் காண்க.*

*இதனால், 'அறத்தை விரும்பிச் செய்தல் அறிவுடையோர்க்கே கூடுவது' என்பது, அறத்தின் வகையும் கூறப்பட்டன.*

251. ***தெளிவுரை :-*** *உண்ணப்புகும்பொழுது இறைவனுக்கு ஒரு பச்சிலை சூட்டி வணங்குதலும், பசுவிற்குச் சிறிது உணவு*

யாவர்க்கும் மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கும் மாம்பிறர்க் கின்னுரை தானே. 2

252. அற்றுநின் றாருண்ணும் ஊணே அறனென்னுங்
கற்றன போதங் கமழ்பவர் மானிடர்
உற்றுநின் றாங்கொரு கூவற் குளத்தினிற்
பற்றிவந் துண்ணும் பயன்அறி யாரே. 3

---

கொடுத்தலும், வறியார்க்குச் சிறிது சோறிடுதலும், அவ்வாறிடும் பொழுது இன்சொல் சொல்லுதலும் எல்லார்க்கும் இயல்வனவே.

*குறிப்புரை :- 'அதனால், யாம் பொருள் இலம் என்று அறஞ் செய்யாமைக்குக் காரணங் கூறியொழிதல் பொருந்துவதன்று' என்பது குறிப்பெச்சம், ஆம் - கூடும். "பச்சிலை" முதலிய நான்கன் பின்னும் முறையே, 'சூட்டல், கொடுத்தல், இடுதல், சொல்லல்' என்பன சொல்லெச்சமாய் நின்றன.*

*இதனால், மக்கள் யாவரும் 'அறத்தினைத் தத்தமக்கு ஒல்லும் வகையான் ஓவாதே செல்லும்வாயெல்லாம் செயல் வேண்டும்' (குறள். 33) என்பது கூறப்பட்டது.*

**252. தெளிவுரை :-** *'பொருள் இல்லாத வறியவர், பொருள் உடையவர் கொடுக்க உண்ணும் அதுவே பொருள் உடையவர்க்கு அறமாகி நிலை பெறும்' என்பதை நூல்களால் அறிந்த அறிவுச் செயலில் மணக்கப் பெறுபவரே மக்களாக மதிக்கப் பெறுவர். ஆயினும் அவ்வறிவைப் பெற்றும், சிலர், நீர்வேட்கையுடையார் பலரும், (பெரிய நீர் நிலையாகிய கடலை நோக்கிச் செல்லாது) ஊருணியாகிய சிறிய கிணறு குளங்களைத் தேடிச் சென்று உண்ணும் செயலின் தன்மையை அறிதல் இல்லை.*

*குறிப்புரை :- 'அறிந்தாராயின், செல்வத்துப்பயன் ஈதலே', (புறம். 189) என்று உணர்ந்து வறியார்க்கு ஈவர் என்பது கருத்து, "வறியார்க் கொன் றீவதே ஈகை; மற்றெல்லாம் குறியெதிர்ப்பை நீரதுடைத்து" (குறள். 221) ஆதலின், "அற்று நின்றார், உண்ணும் ஊணே அறன்" என்றார். "கூவல் குளத்தினில்" என்பது, 'கூவலிலாதல் குளத்திலாதல்' என்னும் பொருளது. 'கடல்நீர் பெரிதாயினும் நீர்வேட்கையுடையவர் அதனிடத்துச் செல்லாமை போலப் பெருஞ்செல்வராயினும் ஈயாதார் மாட்டு இரவலர் செல்லார்; அதனால், அப்பெருஞ்செல்வர் அச்செல்வத்தால் சிறிதும் பயன் பெறார் என்பதும், கூவலும், குளமும் சிறியவேயாயினும் நீர்வேட்கை யுடையார் அவற்றிடத்தே சென்று நீருண்டல்போலச் சிறிது செல்வம் உடையாராயினும் ஈபவரிடத்தே*

**253.** அழுக்கினை ஒட்டி அறிவை நிறையீர்
தழுக்கிய நாளில் தருமமுஞ் செய்யீர்
விழித்திருந் தென்செய்வீர்? வெம்மை பரந்து
இழுக்கவன் றென்செய்வீர்? ஏழைநெஞ் சீரே. **4**

**254.** தன்னை அறியாது தாம்நலர் என்னாதிங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடும் கூற்றம் வருமுன்னம்
தன்மமும் நல்ல தவஞ்செய்யும் நீரே. **5**

---

*இரவலர் சென்று தாம் வேண்டிய பெறுவர்; அதனால் அச்சிறு செல்வரே புகழும், அறமும் ஆகிய செல்வத்துப் பயனைப் பெறுவர் என உணர்ந்து ஈகையுடையராதல் வேண்டும்' என்பது பின்னிரண்டடி களாலும் உணர்த்தப்பட்டது.*

*"தெண் ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்*
*உண்ணா ராகுப நீர்வேட் டோரே;*
*ஆவும் மாவும் சென்றுணக் கலங்கிச்*
*சேறொடு பட்ட சிறுமைத் தாயினும்*
*உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்"*

*என்னும் புறப்பாட்டினைக் காண்க. (புறம். 204)*

*இதனால், 'அறிவுடை மக்களாயின், செல்வத்தின் பயன் அறம் செய்தலே யாம்' என்பது கூறப்பட்டது.*

***253. தெளிவுரை :- அறியாமை வழிப்பட்ட மனத்தை உடையவரே! நீவிர், 'செல்வத்துப் பயன் ஈதலே' என அறியும் அறிவை மறைத்து நிற்கின்ற அறியாமையை நல்லோர் இணக்கம் முதலியவற்றால் போக்கி அறிவை நிறைத்துக் கொள்ளமாட்டீர்; அதனால், செல்வக் காலத்தில் தருக்கிநின்று அறத்தைச் செய்கிலீர்; நும் செல்வத்தைக் குறிக்கொண்டு காத்து என்ன பயன் அடையப் போகின்றீர்? இறுதிக் காலத்தில் கூற்றுவன் வந்து கோபம் மிகுந்து கண்ணில் தீப்பொறி பரக்க நும்மைக் கட்டி இழுக்கும் பொழுது என்ன செய்ய வல்லீர்? தழுக்கிய நாளில் தருமமும் செய்யீர் - செல்வம் முதலியன சேர்ந்துள்ள நாளில் என்பது பொருள்.***

***குறிப்புரை :-** 'தருக்கிய' என்பது எதுகை நோக்கித் திரிந்தது. 'திரியாது ஓதுதலே பாடம்' எனினுமாம். 'கூற்றுவன்' என்பது வருகின்ற திருமந்திரத்தினின்றும் கொள்ள வைத்தார்.*

255. துறந்தான் வழிமுதற் சுற்றமும் இல்லை
இறந்தான் வழிமுதல் இன்பமும் இல்லை
மறந்தான் வழிமுதல் வந்திலன் ஈசன்
அறந்தான் அறியும் அளவறி வாரே. 6

---

254. ***தெளிவுரை :-*** *கூற்றுவன், தன்னைப் பிறர் காணாதபடியும், தன்னால் பற்றப்படுவர் நற்பண்பினை உடையர் என்றோ, தம்மையன்றித் தம் சுற்றத்தார்க்குக் களைகணாவரை இலர் என்றோ முதியர் என்றோ, இளையர் என்றோ எண்ணாமலும், பிறரால் தடுத்தற்கரிய ஆற்றலோடு வருவன், அவ்வாறு வருமுன்னே நீவிர் அறத்தையும், தவத்தையும் செய்து கொள்ளுங்கள்.*

***குறிப்புரை :-*** *'முதியர் என்று ஓராது' என்பது இசையெச்சம். தன்மம் செய்தல் கூறுவார். தவம் செய்தலையும் உடன் கூறினார். அதுவும் அறத்தின் வகையாதல் பற்றி, 'தவமும்' என்னும் உம்மை தொகுத்தல்.*

*இவை இரண்டு திருமந்திரங்களானும், 'யாக்கை முதலியவை நிலைத்துள்ள பொழுதே அறத்தைச் செய்துகொள்க' என்பது கூறப்பட்டது.*

255. ***தெளிவுரை :-*** *மெய்ம்மையை ஆராய்ந்தறியும் அறிவுடையீரே! முற்றத் துறந்தவனுக்குச் சுற்றத் தொடர்பு இல்லை. அதனால் அவன் இறைவனை மறவான். மறவானாகவே அவனுக்குக் கெடுவது யாதும் இல்லை. அங்ஙனம் முற்றத் துறக்கமாட்டாதவன் சுற்றத்தொடு கூடி வாழும்பொழுது அறஞ் செய்யாதே இறந்தொழிவனாயின், அதன் பின்னர் அவனுக்கு அறமேயன்றி அவன் விரும்பிய இன்பமும் இல்லையாம். அவன் தான் வாழுங்காலத்து இறைவனை மறவாதிருத்தல் கூடாமையின் இறைவனும் அவனுக்குத் துணைவாரான்; அதனால் அவன் இருமையும் இழப்பன். ஆகவே, நீவிர், 'இல்லறம், துறவறம்' என்னும் இருவகை அறங்களின் தன்மையை அறிந்து அவற்றுள் இயன்றதொன்றில் நில்லுங்கள்.*

***குறிப்புரை :-*** *வருவித்து உரைத்தன பலவும் இசையெச்சங்கள். "வந்திலன்" எனத் துணிவு பற்றி இறந்தகாலமாயிற்று. வழிமுதல் - பிற்காலம் "அறியும்" என்றது 'அறிந்து நில்லுங்கள்' என்றபடி, அளவு - உண்மை. இதனால், மக்கள் அறிவுடையராயின், இருவகை அறங்களுள் யாதானும் தமக்கு இயன்றதொன்றனைச் செய்தல் வேண்டுமன்றிச் செய்யாதொழிதல் கூடாது என்பது வலியுறுத்தப்*

**256.** தான்தவஞ் செய்வதாம் செய்தவத் தவ்வழி
மான்தெய்வ மாக மதிக்கும் மனிதர்காள்
ஊன்தெய்வ மாக உயிர்க்கின்ற பல்லுயிர்
நான்தெய்வம் என்று நமன்வரு வானே. 7

**257.** திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு
கிளைக்குந் தனக்கும்அக் கேடில் புகழோன்
விளைக்குந் தவம்அறம் மேற்றுணை யாமே. 8

---

*பட்டது. "அறத்தினூஉங் காக்கமும் இல்லை அதனை - மறத்தலினூஉங் கில்லை கேடு". (குறள். 32) என்றார் திருவள்ளுவரும்.*

**256.** *தெளிவுரை :- மக்கட்பிறப்பைப் பெற்றுடையீர், அறிவுடை மகனால் செய்யத்தக்கது தவம் ஒன்றே, தவநெறி சிவபிரானையே பரம்பொருளாக உணர்ந்து ஒழுகுதலாய் இருக்கும். பலர் இந்நெறி நில்லாது உடம்பையே தெய்வம்போலப் பேணி மூச்சு விடுகின்ற பிணங்களாய் நிற்கின்ற உலகாயத நெறியில் உள்ளனர். அவர்க்கு இறுதியில் யமன், 'தெய்வம் இல்லை என்ற உங்கட்குக் காட்சியளிக்கின்ற தெய்வம் நான்தான்' என்று சொல்லுவான்போலக் கண்முன் வந்து நிற்பான்.*

*குறிப்புரை :- 'தான் செய்வது தவமாம்' என மாறுக. 'தவமே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. தவத்து அவ்வழி - தவத்திற்குரிய அவ்வழி. மான் - பெரியோன். சிவபெருமானை வட மொழி 'மகாதேவன்' என்றும், தமிழ்மொழி 'பெரியோன்' என்றும் கூறுதலை அறிந்துகொள்க. மதிக்கும் - மதிக்கும் இயல்புடையதாகும். 'சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு' (கொன்றை வேந்தன்) என ஒளவையாரும் கூறினார். "மனிதர்கள்" என்பது விளி. 'மனிதர்காள்' என்பதே பாடம் எனலுமாம். "உயிர்க்கின்ற" என்பது முற்று. இழிவு தோன்ற அஃறிணையாகக் கூறினார். கூற்றங் குதித்தலும் அதனாலே கைகூடுவ தாகும் (குறள். 269) என்பதும் குறிப்பால் புலப்படுத்தப்பட்டது. ''தவம் செய்வார் தங்கருமம் செய்வார் மற்றல்லார் அவம்செய்வார் ஆசையுட் பட்டு" (குறள். 266) என்றார் திருவள்ளுவரும்.*

**257.** *தெளிவுரை :- எனின், முத்திமார்க்கம் இரண்டு என்பது உணர்த்துதல் நுதலிற்று. நம்மை ஆழ்த்தும் இருவினையாகிய கடலிலிருந்து கரையேறுதற்குரிய தோணியாயிருந்து நமக்கும் நமது*

**258.** பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக் கல்லது
உற்றுங்க ளால்ஒன்றும் ஈந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே. **9**

---

*சுற்றத்தாருக்கும் இளைப்பைப் போக்கிக் காக்கும் இரண்டு வழிகளுள்; அவை, அழியாப் புகழை உடைய அம்பலவாணரை நோக்கி ஆற்றப்படுகின்ற தவமும் அறமுமே; அவையே மறுமைக்குத் துணையாவன என்றவாறு:-*

*தோணியாய், கிளைக்கும் தனக்கும் இளைப்பினை நீக்கும் இரு வழி உண்டு; (அவை) புகழோன் விளைக்கும் தவம் அறம்; மேல் துணையாம் என முடிக்க.*

*திளைக்கும் வினைக்கடல் - ஆழ்த்துகின்ற நல்வினையும் தீவினையும் ஆகிய பெரிய கடல். எல்லையின்றி மீண்டும் மீண்டும் வருதலின் திளைக்கும் வினைக்கடல் என்றார். இருவினைக் கயிற்றால் மலக்கல் ஆர்த்தலின் என, வினையைப் பந்தித்து நிற்றலான் வினையைக் கயிறாக உருவகித்ததும் ஈண்டு ஒப்புநோக்கற்குரியது.*

*கடல் தீர்வுறு தோணி - கடலிலிருந்து கரை சேருதற்கு உரிய தோணி.*

*இளைப்பு - வினைக்கடலைக் கையால் நீந்துதலால் விளைந்த இளைப்பு. இருவழி என்றது பிற்கூறப்பெறும் தவமும் அறமுமாகிய இரண்டினை.*

*கேடில் புகழோன் - அழிவற்ற புகழை உடைய இறைவன்; "பொருள்சேர் புகழ்" என்பதற்குப் பரிமேலழகியார் உரைத்த குறிப்பை ஈண்டு உன்னுக.*

*நமக்கும் நமது சுற்றத்திற்கும் வினைக்கடலால் விளைந்த இளைப்பைப் போக்கும் தோணியாக இருப்பன. இறைவனை நோக்கி இயற்றப்படும் அறமும் தவமுமே என்பது கருத்து. அவையாவன, பதி புண்ணியங்களே என்பதாம்.*

**258. தெளிவுரை :-** ***சிவபெருமான் எவ்வுயிர்க்கும் உண்மைப் பற்றாய் உள்ள அறத்தை அஃது அரிய மறைபொருள் (இரகசியம்) என்று, அறநெறியில் நிற்பார்க்கன்றி ஏனையோர்க்கு உணர்த்துதல்***

*இல்லை. அதனை அவன் அருள்வழி நான் பெற்றவாற்றால் உங்கட்குக் கூறுவதாயின், ஒன்றேயாயினும், உங்களால் மனம் பொருந்திப் பிறர்க்கு ஈந்தது உண்டாயின், அதுவே உங்கட்குத் துணையாவது, இன்னும் அப்பெருமான் வகுத்த நன்னெறியை மேற்கொள்ளும் முறைமையும் அதுவேயாம்.*

***குறிப்புரை :-*** *''பற்று'' இரண்டனுள் பின்னது சுட்டுப் பெயரளவாய் நின்றது. "அற்றம்" என்புழி, 'என்று' என்பதும், 'ஒன்றும்' என்புழி, 'ஆயின்' என்பதும், எஞ்சி நின்றன. அறநெறி வேட்கையரை "அறநெறி" என்றார். 'அறநெறிக்கல்லது உரையான்' என முன்னே கூட்டி முடிக்க "அண்ணல்'' எனப் பின்னர் வருகின்றமையின், வாளா, "உரையான்", என்றார். 'ஒன்றாயினும், உங்களால் உற்று ஈந்ததுவே துணை' என மாறிக் கூட்டுக. 'மற்றும்' என்னும் எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. 'கொள்ளுமாறு' என்பதன்பின் எச்ச உம்மையும் 'அது' என்னும் பயனிலையும் எஞ்சி நின்றன. இதனால் 'அறம் ஒன்றே உயிர் உய்யும் நெறி' என்பது வரையறுத்துக் கூறப்பட்டது.*

## 20. அறஞ்செயான் திறம்

259. எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன்ன
ஒட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம்
வட்டி கொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டிப் பதகர் பயன்அறி யாரே. 1

---

*இனி, மேல் உடம்பாட்டு முகத்தாற் கூறியதனை எதிர்மறை முகத்தானும், பத்துத் திருமந்திரங்களால் வலியுறுத்தி உணர்த்துகின்றார்; அதனது இன்றியமையாச் சிறப்பு நோக்கி. அஃதாவது இறைவன் உதவிய செல்வத்தைக் கொண்டு அறங்களைச் செய்யாதவன் திறம் கூறுதல். இச்செல்வம் சிவன் தந்ததென்று கொடுக்க அறியாது இருக்கின்ற மனிதராதல் கூடாது.*

*259. **தெளிவுரை :-** எட்டி மரத்தில் பழுத்த பெரிய பழங்கள் ஒருவர்க்கும் பயன்படாது வீழ்ந்து அழிந்தாலொப்பனவாகிய, பொருந்திய நல்லறஞ் செய்யாத உலோபிகளது பொருள், வட்டி மிகப் பெறுதலாலே குவிந்து, மண்ணில் குழிபறித்துப் புதைக்கப் பட்டொழிவதேயாகும். பட்டிகளாகிய தீவினையாளர் அறத்தின் பயனை அறியார் ஆகலான்.*

***குறிப்புரை :-*** *“பழுத்த” என்றது, முதல்மேல் நின்ற சினைவினை. ‘வீழ்ந்தன’ என்பதே பாடம் எனினும், பொருள் இதுவே என்க.*

*‘மண் ணின் இடும்’ என இயையும். முகத்தல், மண்ணைப் பறித்தல். ‘இடும்’ என்பது செயப்பாட்டு வினையாய் நின்றமுற்று.*

*பட்டி - பட்டிமை; அஃதாவது வேண்டியவாறே ஒழுகுந்தன்மை. பொருள் முட்டுவந்துழி அது நீங்குதற்பொருட்டுக் கடன் கொள்பவர்பால் அம்முட்டுப்பாடே காரணமாக அவர் பொருளை ‘வட்டி’ என்னும் பெயரால் தாம் வேண்டும் அளவு பறிப்பார். தம் பொருளைப் பிறர்க்கு ஈயாதவரினும் கொடியராதல் பற்றி அவரை, பட்டிப் பதகர் என்றார்.*

*“பாதகர்” என்பது குறுகி நின்றது. கடன் கொடுப்பார் வட்டி பெறுதல் இயல்பாய் இருக்க அதனை மிகைபடக் கூறலாக எடுத்தோதிய அதனால், “வட்டி” என்று அளவிற்கு மேற்பட்டதனைக் குறித்தது. ‘ஆகலான்’ என்பது சொல்லெச்சம்.*

**260.** ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின
கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம்அறி யாரே. **2**

**261.** அறம்அறி யார்அண்ணல் பாதம் நினையுந்
திறம்அறி யார்சிவ லோக நகர்க்குப்
புறம்அறி யார்பலர் பொய்ம்மொழி கேட்டு
மறம்அறி வார்பகை மன்னிநின் றாரே. **3**

---

*இதனால், அறஞ் செய்யாதவரது பொருள் போமாறு கூறப்பட்டது. செல்வத்துப் பயனே ஈதல்.*

**260.** *தெளிவுரை :- உலகில் பல்லுயிர்கட்கும் அவை வாழுங் காலம் நிலைபெறாது ஒழிதலையும், உலகம் நிலைபெறு காலமாகிய ஊழிகளும் நில்லாது பல நீங்குதலையும், தாம் எண்ணிய எண்ணங்களும் கைகூடாது கனவுபோலக் கழிதலையும், பசி, பிணி, பகை முதலியவற்றால் பெருந்துன்பத்தை எய்துகின்ற தங்கள் உடம்பும் இறுதி நாள் நெருங்க, சாறு பிழியப்பட்ட கரும்பின் கோதுபோலாகி வலியழி தலையும் கண்டுவைத்தும் மக்களிற் பலர் அறத்தை நினைக்கின்றிலர்.*

*குறிப்புரை :- 'இஃது அறியாமையின் வலி' என்பது குறிப்பெச்சம். "ஒழிந்தன" முதலிய அத்தொழில்மேல் நின்ற வினைப்பெயர், முற்றாக வைத்து, 'அவற்றை' என்பது வருவித்து, அச்சுட்டு அத்தொழிலைக் குறித்ததாகவும் உரைப்பர்.*

*ஊழி பல நீங்குதல் உரையளவையால் அறியப்பட்டது. ஏனைய காட்சியால் அறியப்பட்டன. வேண்டுமிடங்களில் எச்ச உம்மை விரிக்க.*

*இதனால், அறஞ் செய்யாதவரது அறியாமை மிகுதி கூறப்பட்டது.*

**261.** *தெளிவுரை :- அறத்தை நினையாதவர் சிவபெருமானது திருவடியை நினைக்கும் முறையையும் அறியாதவரேயாவர். அதனால் அவர் சிவலோகத்தின் அருகிலும் நெருங்குதல் இயலாது. (நரகமே புகுவர் என்பதாம்) தம்மோடொத்த அறிவிலிகள் பலர் கூறும் மயக்க உரைகளைக் கேட்டு, அவற்றின் வழிநின்று பாவங்களைச் செய்பவர்*

**262.** இருமலுஞ் சோகையும் ஈளையும் வெப்புந்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகும்
உருமிடி நாக முரோணி கழலை
தருமஞ்செய் வார்பக்கல் சாரகி லாவே. **4**

---

*கட்கு அப்பாவமும் பொருளைக் கொடுத்தல் மீட்டல்களைப் பலரிடத்து உண்டாகும் பகைகளுமே எஞ்சுவனவாம்.*

*குறிப்புரை :-* *அறம் என்பது, சிவபெருமான் தனது திருவுளத்தின் விருப்பத்தைக் கூறியதேயாகலான், அதனைச் செய்யாதே நிகழ்த்தும் பிற செயல்கள் அவனது வழிபாடாம் எனக் கருதுதல் அறியாமை யாதல்பற்றி, "அறம் அறியார், அண்ணல் பாதம் நினையும் திறம் அறியார்'' என்றார். மறம் செய்வார் யாவராயினும் அவரைச் சிவபிரானது மறக்கருணை நரகிற் செலுத்தும் என்பதனை,*

*"இரப்பவர்க் கீய வைத்தார்; ஈபவர்க் கருளும் வைத்தார்;*
*கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநர கங்கள் வைத்தார்;*
*........................................ ஐயன் ஐயாறனாரே" - (தி.4 ப.38 பா.10)*

*எனத் திருநாவுக்கரசரும் வலியுறுத்தோதினார். திருமூலரும், திருநாவுக்கரசரும் முதலிய சிவநெறிப் பேரருளாசிரியர்கள் அறத்தினை இத்துணை வலியுறுத்தி அருளிச் செய்திருக்கவும், 'புறநெறியின்கண் உள்ளது போலச் சிவநெறியில் அறம் அத்துணை வலியுறுத்தப் படவில்லை' என்பார் உளராயின், அவரதுநிலை இரங்கத்தக்கதாம். மறம் (பாவம்) மன்னுதல் உடம்பொடு புணர்த்துக் கூறப்பட்டது.*

*இதனால், 'அறநெறி சிவநெறிக்கு இன்றியமையா உறுப்பு' என்பது கூறப்பட்டது.*

**262.** *தெளிவுரை :-* *பலவகை நோய்களும், இடைஇறப்பும் (அவமிருத்தும்) போல்வனவாகிய இம்மைத் துன்பங்கள் பலவும் அறம் செய்யாதவரிடத்தே செல்வன; அறஞ்செய்வார் இருக்கும் திசையையும் அவை நோக்கா.*

*குறிப்புரை :-* *இரண்டாம் அடியை ஈற்றடியின் முன்னே வைத்து உரைக்க. உரும் இடி - பேரிடி, நாகம் - பாம்பு, சோகை - இரத்தக்குறைவால் உண்டாகும் உடல் வீக்கம். ஈளை - காசநோய். வெப்பு - சுரநோய். உரும் - அச்சந்தரும். உரோணி - ரோகிணி; நோயுடையாள்; அஃது ஆகுபெயராய் அவளால் வரும் நோயைக் குறித்தது. இனி, 'உரோகிணியால் வரும் கழலை' என்றலுமாம். கழலை*

**263.** பரவப் படுவான் பரமனை ஏத்தீர்
இரவலர்க் கீதலை யாயினும் ஈயீர்
கரகத்தால் நீரட்டிக் காவை வளர்க்கீர்
நரகத்தில் நிற்றிரோ நாள்எஞ்சி னீரே. **5**

**264.** வழிநடப் பாரின்றி வானோர் உலகங்
கழிநடப் பார்கடந்தார்கரும் பாரும்
மழிநடக்கும் வினை மாசற வோட்டி
ஒழிநடக் கும்வினை ஓங்கி நின்றாரே. **6**

---

*- கட்டி. பக்கல் - திசை, இருமல் முதலியன இன்னவாதல் வினைவலி சீற்றத்தாலும், அருளாலுமாம்.*

*இதனால், அறம் செய்யாதவர்க்கும், செய்பவர்க்கும் இம்மையில் உளவாகும் நலந் தீங்குகள் கூறப்பட்டன.*

**263.** தெளிவுரை :- *வாழ்நாள் வாளா குறையப்பெற்ற மக்களே, நீவிர் யாவராலும் போற்றப்படுகின்ற சிவபெருமானைத் துதிக்கவும் இல்லை; இரப்பார்க்கு ஈதலும் இல்லை; குடத்தால் நீர்முகந்து ஊற்றிச் சோலைகளை வளர்க்கவும் இல்லை; ஆகவே, இறந்தபின் நரகத்தில் நீங்காதிருக்கப் போகின்றீர்களோ?*

குறிப்புரை :- *இவற்றுள் ஒன்றே செய்யினும் அறமாம் என்னும் கருத்தால் இவ்வாறு கூறினார். "ஈதலும் ஈயார்" என்பது, "உண்ணலும் உண்ணேன்" (கலி. பாலை, 22) என்பதுபோல நின்றது. தானே மரங்களை வைத்தாயினும், முன்பு உள்ள மரங்கட்கு நீரூற்றியாயினும் வளர்த்தலே அறம் என்றற்கு, 'கரகத்தால் நீரட்டி' என்றார்.*

*இக்காலத்தார் இவற்றைச் செய்யாதொழியினும் வளர்ந்துள்ள மரங்களை வெட்டாமலேனும் இருப்பார்களா என்பது தெரியவில்லை.*

*"நரகத்தில் நிற்றிரோ" என்றது "கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்" என்னும் (தி.4) அப்பர் திருமொழியை நன்கு வலியுறுத்துவதாகும். 'ஏத்தார்' என்பனபோலப் படர்க்கையாக ஓதுவன பாடம் அல்ல.*

*இதனால், அறம் செய்யாதார் நரகினை எய்துதல் கூறப்பட்டது.*

**264.** தெளிவுரை :- *அறவழியில் நடவாதவர்க்கு வினை மிகும்.*

**265.** கெடுவது மாவதுங் கேடில் புகழோன்
நடு அல்ல செய்தின்பம் நாடவும் ஒட்டான்
இடுவதும் ஈவதும் எண்ணுமின் இன்பம்
படுவது செய்யிற் பசுவது வாமே. 7

---

*உலகில் நல்வழியில் நடத்தல் இன்றி மேலுலகம் கிடையாதொழியும் தீய வழியிலே நடக்கின்றவரே பலர். அவரொழிய, ஞானம் நிகழும் செயல்கள், மிகப் பெற்ற சிலரே, கேடு நிகழ்தற்கு ஏதுவான பாவத்தை நீக்கி நரகத்தையும் கடந்தவராவர்.*

*குறிப்புரை :-* *இத்திருமந்திரத்துள் பாடங்கள் பல்வேறு வகை யாய்க் காணப்படுகின்றன. அவை, 'கடந்தார் - நடந்தார். கரும் பாரும்- கருப்பாரும், மழி - வழி, மாசற ஓட்டிட்டு ஒழி நடப்பார் வினை ஓங்கி நின்றாரே - மாசற ஓட்டிட வழிநடக்கும் மளவீழ்ந்தொழிந்தாரே' என்பன. வழிநடப்பாரின்றி - அறவழியில் நடப்பவராய் இல்லாமல். கழிநடப்பார் - சொர்க்க இன்பம் தம்மைப் பொருந்தாவண்ணம் விலக நடப்பார்.*

*'கழி' என்பது, 'கழிய' எனப் பொருள் தந்தது. கரும்பார் - இருளுலகம், நரகம். மழி - மழித்தல்; உள்ளலவற்றைக் கெடுத்தல். முதனிலைத் தொழிற்பெயர். 'ஒளி' என்பது, எதுகை நோக்கி 'ஒழி' எனத் திரிந்து நின்றது. ஒளி - ஞானம்.*

*இதனால், ஞான நெறியில் நிற்பார்க்கு அறம் தானே உளதாதல் கூறப்பட்டது. வினை ஓங்கி நின்றார் - நல்வினையில் சிறந்தார்.*

**265.** *தெளிவுரை :-* *உயிர்கள் நலம் பெறுதலும், தீங்குறுதலும் இறைவன் செய்யும் நடுவு நிலைமையே (நீதியே) அதனால், அவை அறம் அல்லாதவற்றைச் செய்து அவற்றானே இன்பம் அடைய விரும்புதலை அவன் ஒரு போதும் உடன்படான்.*

*ஆகையால் மாந்தரீர், இன்பம் கெடுதற்கு ஏதுவாகிய பாவத்தைச் செய்தல் விலங்கின் செயலேயாகி விடும்; அதனை அறிந்து நீவிர் உயர்ந்தோர்க்குக் கொடுத்தலையும், தாழ்ந்தோர்க்கு ஈதலையும் செய்ய நினையுங்கள். அழிவதும் ஆவதும் அவன்அருள். அவனருள் வழிநின்று அறஞ்செய்க என்றது.*

*குறிப்புரை :-* *கெடுவதும் ஆவதும் என்னும் எழுவாய்கள் 'நடு' என்னும் பெயர்ப் பயனிலை கொண்டன.*

**266.** இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
இன்பம் அதுகண்டும் ஈகிலாப் பேதைகள்
அன்பிலார் சிந்தை அறம்அறி யாரே. **8**

**267.** செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராமல்
இல்லங் கருதிஇறைவனை ஏத்துமின்
வில்லி இலக்கெய்த விற்குறி யாமே. **9**

---

*'நடு' என்னும் இடப்பெயர் முன்னர் அதன்கண் நிற்றலைக் குறித்துப் பின்நின்று செய்தலைக் குறித்தது. "செய்து" என்றது, "நாட" என்பதனோடு முடிந்தது. "நாடவும்" என்னும் உம்மை இழிவு சிறப்பு. "அது பசுவாம்" என மாற்றுக. இடுவதும், ஈவதும் - தக்கவர்க்கு இடுவதும், வறியவர்க்கு ஈவதும்.*

*பசு, ஆகுபெயர்.*

*இதனால், அறம் செய்பவரையே இறைவன் விரும்புதல் கூறப்பட்டது.*

**266.** *தெளிவுரை :- இறைவன் உயிர்கட்கு, 'இன்பம், துன்பம்' என்ற இரண்டை வகுத்து வைத்தது, அவை முற்பிறப்பில் செய்தவினை அறமும், மறமும் என இரண்டாய் இருத்தல் பற்றியேயாம். அதனால் முற்பிறப்பில் அறம் செய்தவர்கள் இப்பிறப்பில் இன்பம் நுகர்தலைக் கண்டுவைத்தும் இரப்பவர்க்கு ஈதலைச் செய்யாத அறிவிலிகள், உள்ளத்தில் அன்பு என்னும் பண்பு இல்லாதவரே யாவர். அவர் அறம் என்பதையும் அறியார். உபாயம் அறிந்தும் உய்யஇலாரே என்று இரங்குகிறார்.*

*குறிப்புரை :- இதனால், இப்பிறப்பில் விளையும் நலந் தீங்குகட்குக் காரணம் அற மறங்கள் என்பதும், அறத்திற்குக் காரணம் அன்பு என்பதும் கூறப்பட்டன.*

267. *தெளிவுரை :- அறிவுடையீர், சிலவிடத்துச் சிலராகவும் சில விடத்துப் பலராகவும் வாழ்வாரது பெருவாழ்வாகிய செல்வத்தைக் கண்டு, அதனானே அவர் ஈவர் என்று கருதி அற்பராயிருப்பாரைப்*

*புகழ்ந்து, பயன்கிடையாமையால் பின் மெலிவடைதலைச் செய்யாமல், நுமக்குப் புக்கிலாம் வீடு கருதி இறைவனைத் துதியுங்கள். அதுவே வில் வல்லோன் எய்த அம்புக் குறிபோலத் தப்பாது பயன் தருவதாகும். வறுமை நீக்கும் வழி இறைவனை ஏத்துதலே.*

***குறிப்புரை :-*** *'செல்வங் கருதி' என்பதனை, "வாழ்வெனும்" என்பதற்குப் பின்னர்க் கூட்டியுரைக்க. 'செல்வத்துப் பயனே ஈதல்' என்பதை அறியாது, ஈட்டலும், நுகர்தலுமே எனக் கருதுவாரை, "புல்லறிவாளர்" என்றார். 'சிலரும், பலரும் ஆகியோரது வாழ்வு' என்க. 'உயிர்க்கு உடம்பு துச்சில்' எனவும், 'வீடுபேறே புக்கில்' எனவும் திருவள்ளுவர் (குறள்.340) கூறுமாறு காண்க. இலக்கு - இலக்காய பொருள். "விற்குறி" என்பதில், வில் ஆகுபெயர்.*

> *இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்*
> *கனவிலும் தேற்றாதார் மாட்டு. - (குறள். 1054)*

*என்பராகலின், கரப்பார் மாட்டுச் சென்று இரத்தலே வறியார்க்கு இரப்பு என்னும் இழிதொழிலாதல் பெறப்பட்டது.*

*இதனானே,*

> *இரப்பன் இரப்பாரை யெல்லாம் இரப்பின்*
> *கரப்பார் இரவன்மி னென்று. - (குறள். 1067)*

*எனவும் கூறுப.*

*அதனால், 'கரப்பார்பால் சென்று இரவாமையே வறியார்க்கு ஒரு அறம்' என்பார் "புல்லறிவாளரைப் போற்றிப் புலராமல்" என்றும், 'பொருளிலார்க்கு ஈதலாகிய அறம் கூடா தாயினும், இறைவனை ஏத்துதலைவிட வேண்டாவன்றோ' என்பார், "இறைவனை ஏத்துமின்" என்றும் கூறினார்.*

*இதனால், வறியார்க்கு ஆகும் அறம் கூறப்பட்டது. "தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்" (தி.7 ப.34 பா.1) என்னும் சுந்தரர் திருப்பதிகம் இத்திருமந்திரத்தொடு வைத்து நோக்கற்பாற்று.*

**268. *தெளிவுரை :-*** *பொருள் உடையவரேயாயினும், இலரே யாயினும் அன்பால் இளகுகின்ற மனம் உடையவரே சிவபெருமானது*

**268.** கனிந்தவர் ஈசன் கழலடி காண்பர்
துணிந்தவர் ஈசன் துறக்கம தாள்வர்
மலிந்தவர் மாளுந் துணையுமொன் றின்றி
மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே. 10

---

*திருவடிகளை அடையும் நெறியைப் பெறுவர். அங்ஙனம் அந்நெறியைப் பெற்று அவனது திருவடிகளே எல்லா உயிர்கட்கும் பற்றுக்கோடு என ஒருதலையாக உணர்பவரே அவன் உலகத்தை அடைந்து வாழ்வர்.*

*அவன் திருவடியல்லாத பிற பொருள்களில் ஆசை நிறைந்தவர், தாம் இறக்குங்காறும் தமக்கு உய்யப்போவதொரு நெறியும் இன்றி, அறிவின்மை காரணமாக, தம்பால் வந்து இரப்பவரிடத்தும், 'இரப்பவர்க்கு இல்லை என்னாது ஈக' என்று அறிவுறுப்பாரிடத்தும் கொள்கின்ற சினமாகிய தீயில் விழுந்து அழிவர். ஈசன் துறக்கம் என்றது வீட்டுலகத்தை; வேள்வி முதலிய பசு புண்ணியம் செய்தார் எய்தும் சொர்க்கத்தை அன்று.*

***குறிப்புரை :-** காண்டல் - பொதுவகையான் உணர்தல். துணை - அளவு, உம்மை முற்றும்மை. ஒன்று - ஒருநெறி, மெலிந்த சினம் - அறிவு குறைந்தமையால் விளைந்த சினம். 'வீழ்ந்தார்' என்பது குறிப்பு உருவகம்.*

***இதனால் அறத்திற்கு முதலாவது அன்பு என்பதும், அவ்வன்பு தானே இறைவனை அடைதற்கும் வழி என்பதும் கூறப்பட்டன. இதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் செய்யப்பட்டது.***

## 21. அன்புடைமை

269. அன்புசிவம் இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. 1

---

*இனிமேல் தோற்றுவாய் செய்துகொள்ளப்பட்ட அன்பு உடைமையைப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்தியருள்கின்றார்.*

269. ***தெளிவுரை :-*** *எனின், சிவத்தின் சிறப்பியல்பும் அதனை அறிவார் எய்தும் பயனும் அறிவித்தல் நுதலிற்று. அன்பும் சிவமும் ஆக இருபொருள் உண்டு என்பர், அனுபவஞானம் இல்லாதார். அன்பே சிவமாவதை, உலகவர் யாவரும் அறியமாட்டார். அனைவரும் அன்பே சிவமாக இருப்பதை அறிந்தபின், அவர்களும் அன்பே சிவமாக இருப்பதை நுகர்ந்து மகிழ்ந்திருந்தார் என்றவாறு.*

*அன்பாவது தொடர்புடையார்கண் காதலுடையனாதல் எனக் கருவி நூல்கள் சொல்லும். இறைவன்மாட்டுச் செலுத்தப்பெறுவது என ஞானநூலாகிய இது நவிலும். உயிர்கள் மாட்டுச் செலுத்தப்படுவதாய அன்பு சுகதுக்க ஏதுவாய் உயிர்கட்கு ஊறாகும். சிவத்திடம் செலுத்தப்பெறும் அன்பு தன்னை உடையானைச் சிவம் ஆக்கும்.*

*அன்பு உயிரினின்று வெளிப்பட்டு இறைவனிடம் படர்ந்து உயிரைக் கனியவைத்துச் சிவமாக்கும் என்பது கருத்து. உயிர்களிடம் சிவம் அன்பு வடிவாக அமர்ந்து அருள் செய்வதை உலகவர் ஓராது, அன்பையும் சிவத்தையும் வேறாக எண்ணி மயங்குவர் என்றவாறு. உண்மையுணர்ந்தவர் அன்பே சிவமாக இருப்பர் என்பதாம்.*

*கடவுள் அன்பு வடிவர் என்பதற்கும். அன்பே கடவுள் என்பதற்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. உற்று உணர்க.*

*ஆரும் அறிந்தபின் என்பது அறிதற்கு அருமையும், அருள்துணை இருப்பின் யாவரும் எளிதில் அறிதல் கூடுதல் என்ற எளிமையும் விளக்கி நின்றது. அங்ஙனம் அறிந்தார் அறிபவனாகிய தானும் அறியப்படுபொருளாகிய சிவமும் அறிகருவியாகிய அன்பும் வேறாதலின்றி ஒற்றித்து நிற்பர் என்றவாறு.*

**270.** பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே. **2**

**271.** என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்பொன் மணியினை எய்தவொண் ணாதே. **3**

---

*'என்பர்', 'அறிந்தபின்' என்ற வினைகட்கு ஏற்ப அமர்ந்திருப்பாரே என்னாது அமர்ந்திருந்தாரே என்றது துணிவு பற்றிய காலவழுவமைதி.*

*"கற்பனை கடந்தசோதி கருணையே உருவமாகி", "இன்பமே என்னுடை அன்பே", "அருளுரு உயிர்கட்கு என்றே ஆக்கினன்" முதலிய ஞான நூற்றுணை கொண்டு தெளிக.*

**270.** *தெளிவுரை :- ஏனை அன்பினும் சிவபெருமானிடத்துச் செய்கின்ற அன்பின் பெருமையை நான் அறிந்தவாற்றால், என் உள்ளத்தில் சிறந்திருப்பது அந்த அன்பே.*

*குறிப்புரை :- கடந்து - வென்று. "துன்னிக்கிடந்த" என்பதில் 'தலையில்' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. தான் அசைநிலை, ஏகாரம் பிரிநிலை, அதனை "பொடியாடிக்கு" என்றதனோடு இயைக்க. தோலாடையால் அவனது பற்றற்றதன்மையையும், பிறைச் சூட்டால் அவனது அருளையும், பொடியாடுதலால் அவனது முதன்மையையும் உடம்பொடு புணர்த்தலாகக் கூறி, 'அவனே அன்பு செய்யப்படுதற்கு உரியவன்' என்பது உணர்த்தியவாறு.*

**271.** *தெளிவுரை :- மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றல், வேனிலில் ஐந்தீ நாப்பண் நிற்றல் முதலிய துணைச் செயல்களைச் செய்து, எலும்புகளை விறகாகக் கொண்டு இறைச்சியை அறுத்து நெருப்பில் வறுத்தல் போன்ற செயல்களைச் செய்து உடம்பை ஒறுத்தாராயினும், முதற்செயலாகிய அன்பு செய்தல் இல்லாதார் என்தலைவனாகிய சிவபெருமானை அடைதல் இயலாது.*

*குறிப்புரை :- "பொன்மணி" என்னும் உம்மைத்தொகை உவமை யாகுபெயராயிற்று. 'என்போல்' எனப் பாடம் ஓதி அதனை "எய்த"*

**272. ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை**
**ஈரம் உடையவர் காண்பர் இணையடி**
பாரம் உடையவர் காண்பர் பவந்தன்னைக்
கோர நெறிகொடு கொங்குபுக் காரே. **4**

**273.** என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியும்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. **5**

---

*என்பதனோடு இயைப்பாரும், முன்னே மூன்றாம் அடியோடு இயைப்பாரும் உளர். அவர் உரையிலெல்லாம், "மணி" என்பது ஒன்றே சிவபெருமானை வரைந்து சுட்டாமை அறிக.*

*இதனால், அன்பொடு கூடாத தவம் பயன்படாது என்பது கூறப்பட்டது. படவே, கடவுட் கொள்கை இல்லாத சமயிகள் கூறும் தவம் தவமாகாமையும் பெறப்படும்.*

**272.** *தெளிவுரை :- சிவபெருமானிடத்துப் பேரன்பு உள்ளவரே அவனை முற்றப் பெறுவர். சிறிது அன்பு உடையவர் அவனது அருளைப் பெறுவர். அன்பே இல்லாது குடும்ப பாரத்தை உடையவராய் இருப்பவர் பிறவிக் கடலையே காண்பவராய், கொடுமை நிறைந்த வழியிற்சென்று, காட்டை அடைந்தவர்போல் ஆவர்.*

*குறிப்புரை :- கொங்கு - தேன். ஈண்டு அதனுடைய காட்டுக்கு ஆயிற்று. கோங்கு புக்காரே எனப்பாடம் கொண்டு மாறுபட்டார் எனப்பொருள் கொள்ளுவாருமுளர். கோங்கு - மாறுபாடு, நரகம்.*

*இதனால் அன்புடையார் பெறும் பயனும், அன்பிலாதார் எய்தும் துன்பமும் கூறப்பட்டன.*

**273.** *தெளிவுரை :- உலகீர், நீவிரும் எனது அன்பு போன்ற அன்பைப் பெருக்கிச் சிவபெருமானைத் துதியுங்கள். நீவிர் முன்னே அதனைச் செய்யுங்கள்; அவன் பின்னேஉங்கட்கு அவ்வன்பு பெருகுமாறு வெளிப்பட்டுத் தனது அருள் எனக்குக் கைவந்தது போல உங்கட்கும் கைவரச் செய்வான்.*

*குறிப்புரை :- 'என் அன்பு போல உருக்கி' என்க. "தன் அன்பு" என்புழி "அன்பு" என்றது அருளை. 'தலை நின்றவாறு' என்பதன்பின், 'செய்வன்' என்பது சொல்லெச்சமாய் நின்றது. முன்னன்பு - தைலதாரை*

**274.** தானொரு காலம் சயம்புவென் றேத்தினும்
வானொரு காலம் வழித்துணை யாய்நிற்கும்
தேனொரு பால்திகழ் கொன்றை அணிசிவன்
தானொரு வண்ணம்என் அன்பில்நின் றானே. **6**

**275.** முன்படைத் தின்பம் படைத்த முதலிடை
அன்படைத் தெம்பெரு மானை அறிகிலார்
வன்படைத் திந்த அகலிடம் வாழ்வினில்
அன்படைத் தான்தன் அகலிடத் தானே. **7**

---

*போன்ற தலையாய அன்பு. தன்னன்பு - இறைவன் தன் கருணை.*

**274.** **தெளிவுரை :-** *வாய்ப்புடைய வழியில் தேன் ஒழுகுகின்ற கொன்றை மாலையை அணிந்த சிவபெருமான் யான் என்றும் ஒரு பெற்றியனாகும்படி எனது அன்பில் நிலை பெற்றுள்ளான். அவன் பிறர் தன்னை ஒருமுறை ஒருபெயரால் துதிப்பினும் அத்துதி பழுதுபடாதவாறு என்றேனும் ஒருநாள் வான்வழித் துணையாய் நின்றருளுவான்.*

**குறிப்புரை :-** *சயம்பு - சயம்பு என்பது சுயம்பு என்றதன் திரிபு. "தான்தோன்றி" என்று பொருள். உலகிலுள்ள அனைத்து தான் தோன்றிகளும் லிங்கங்களே. பிற தெய்வங்கள் தாமாகத் தோன்றாது. அவை கண்டிப்பாக பிரதிட்டை (நிறுவப்படும்) செய்யப்படும். லிங்கம் மட்டுமே தான்தோன்றி. வான் வழி - உயர்நெறி. சிவலோக நெறியுமாம். சடையிற் புனைதலால் தேன் ஏற்கும் வழியால் ஒழுகுதல் வேண்டிற்று 'தேன் உமாதேவி' என்பாரும் உளர். 'ஒருவண்ணம் ஆக' என ஆக்கம் வருவிக்க. 'தானொருவண்ணம்' என்னும் பாடமே பதிப்புக்களில் காணப்படுகின்றது. வான் ஒரு காலம் - விண் என்ற பூதமும் நீங்கும் காலம். பேரூழி.*

*இவ்விரண்டு திருமந்திரங்களானும் சிவனிடத்துச் செய்யும் அன்பின் சிறப்பு வகுத்துக் கூறப்பட்டது.*

**275. தெளிவுரை :-** *தனது உலகத்திலேயே விளங்கி நிற்பவனாகிய சிவபெருமான், துன்பத்தையே மிக உடையதாகிய இவ்வுலக வாழ்க்கையில், அத்துன்பத்தினின்றும் நீங்கி இன்பம் அடைதற் பொருட்டு 'அன்பு' என்னும் பண்பினையும் படைத்து வைத்துள்ளான். அவ்வாறு அன்பை முன்னதாகவும், இன்பத்தை அதன் பின்னதாகவும்*

**276.** கருத்துறு செம்பொன்செய் காய்கதிர்ச் சோதி
இருத்தியும் வைத்தும் இறைவஎன் றேத்தியும்
அருத்தியுள் ஈசனை ஆரருள் வேண்டில்
விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோனே. **8**

**277.** நித்தலுந் துஞ்சும் பிறப்பையுஞ் செய்தவன்
வைத்த பரிசறிந் தேயும் மனிதர்கள்
இச்சையு ளேவைப்பர் எந்தை பிரான்என்று
நச்சியே அண்ணலை நாடகி லாரே. **9**

---

*வைத்துள்ள அம்முதல்வனது அருளை அறிந்து, அவனிடத்தில் உலகர் அன்பு செய்கின்றாரில்லை.*

*குறிப்புரை :- மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. 'அம் முதலிடை' எனச் சுட்டு வருவிக்க. "எம்பெருமானை" என்பது சுட்டுப் பெயரளவாய் நின்றது. வன்பு - துன்பம். 'வன்பு அடைத்த' (தி.7 ப.92 பா.3) என்பதில் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. அடைத்தல் - நிறைதல்; நிறைத்தல் உலகத்தைத் திருஞானசம்பந்தரும், "துயரிலங்கும் உலகம்" என்றார். (தி.1 ப.1 பா.8)*

**276.** *தெளிவுரை :- கருத்தில் ஒளிரும் பொன்னொளியாகிய சிவபெருமானை உளத்திற்கொண்டும், புறத்தில் வைத்து வணங்கியும், 'இறைவனே' என்று துதித்தும், அன்பினால் அவனை அவனது அரிய அருளைத் தருமாறு வேண்டினால், தேவர் தலைவனாகிய அவன் அங்ஙனம் வேண்டுவார்க்கு அவர் விரும்பியவற்றைக் கொடுப்பான்.*

*குறிப்புரை :- 'கருத்துறு சோதி' என இயையும். அருத்தி - அன்பு, 'அருத்தியுள் நின்று' என ஒரு சொல் வருவிக்க. விருத்தி - வாழ்வு. "விண்ணவர் கோன்" என்றது, விண்ணவர் பலரும் தாம் வேண்டிய வாழ்வை அவன்பால் பெற்று நின்றமையைக் குறித்த குறிப்பு என்க.*

*இவை இரண்டு திருமந்திரங்களாலும் சிவபெருமானிடத்து அன்பு செய்யுமாறு கூறப்பட்டது.*

**277.** *தெளிவுரை :- எவ்வுயிர்க்கும் உறக்கமும், விழிப்பும் நாள்தோறும் நிகழுமாறு செய்தவன் அங்ஙனம் செய்த குறிப்பை அறியாதார் நிற்க, அறிந்தவர்தாமும் உலக ஆசையையே உள்ளத்தில் கொள்கின்றனர். அத்தலைவனை விரும்பி, அவனையே தமக்குப் பெருமானாக நினைக்கின்றிலர்.*

**278.** அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்
முன்பின்உள் ளான்முனி வர்க்கும் பிரானவன்
அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே அணைதுணை யாமே. 10

---

*குறிப்புரை :-* 'அவர்தம் அறிவு என்னோ' என்பது குறிப்பெச்சம். துஞ்சு, முதனிலைத் தொழிற்பெயர், 'உறக்கமும் விழிப்பும் நாள்தோறும் நிகழ வைத்தது. இறப்பும், பிறப்பும் மாறி மாறி விரையவரும் என்பதனை உணர்தற்பொருட்டு' என்பது கருத்து. அது பற்றியே 'உறக்கம் விழிப்பு' என்பவற்றை அவையேயாகக் கூறினார். திருவள்ளுவரும்,

உறங்கு வதுபோலும் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. - (குறள். 339)

என அறிவுறுத்தல் காண்க. இங்ஙனம் கூறியவாற்றால், 'சிவபெருமானிடத்து அன்பு செய்யாதார் அடைவது பிறப்பும், இறப்புமாகிய துன்பமே' என்பது கருத்தாதல் அறிக. துஞ்சுதல் - சாதல். இச்சை - காமம், புவன போகங்களிலே அழுந்தி நுகர்தற்காக அமைந்த காரியமாகிய மயக்கம். எந்தை - எமது தந்தை. பிரான் - வள்ளன்மை உடையவன்.

இதனால், சிவபெருமானிடத்து அன்பு செய்யாதார்க்கு வரும் குற்றம் கூறப்பட்டது.

278. **தெளிவுரை :-** உலகத்தோற்றத்திற்கு முன்னும், உள்ளவனாயும் ஞானிகட்கும் முதற் குருவாயும் உள்ள இறைவன் உயிர்களின் அகத்தே அன்புருவாயும், புறத்தே பல குறிகளாயும் இருக்கின்றான். முடிவாக அவன் அன்பினுள்ளே விளங்கிப் பிறவாற்றால் அறியப்படாதவன் ஆவன். ஆதலால் அன்பில் நிற்பவர்க்கே அவன் உறுதுணையாவான்.

*குறிப்புரை :-* இரண்டாம் அடியை முதலில் கொள்க. "புறத்தான்" என்பதில் ஆன், உருபு மயக்கமாக வந்த மூன்றன்உருபு. "புறத்தான்" எனவே, 'அகத்தான்' என்பது கொள்ளப்பட்டது. "உடல்" என்றது 'மூர்த்தி' என்றவாறு.

இதனால், 'சிவபெருமானை அடைதற்கு எவ்வாற்றானும் அன்பே வாயில்' என்பது முடித்துக் கூறப்பட்டது.

## 22. அன்பு செய்வாரை அறிவன் சிவன்

279. இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்
உகந்தருள் செய்திடும் உத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மகிழ்ந்தன்பு செய்யும் மருளது வாமே. 1

---

*'அன்பு செய்வாரை அறிவன்' என்பது, சிவபெருமான் 'அன்பு செய்தார் இவர்' எனவும், 'செய்யார் இவர்' எனவும் நன்கு பிரித்தறிந்து அன்பு செய்வார்க்கே தனது திருவருளை வழங்குவன் என்பதாம். எனவே,*

*தொழுது தூமலர் தூவித் துதித்துநின்*
*றழுது காமுற் றரற்றுகின் றாரையும்*
*பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்*
*எழுதும் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே. - (தி.5 ப.21 பா.7)*

*என்னும் பொருளையே கூறுவது இவ்வதிகாரம் என்பதாயிற்று. ஆகவே, அன்புடைமை கூறியபின்னர், அதனை உடையார்க்கு வரும் பயனைப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றார் என்க.*

279. ***தெளிவுரை :-*** *மக்கள் அன்பைப் போற்றாது இகழ்ந்து நடத்தலையும், இகழாது போற்றிப் பெற்று ஒழுகுதலையும் சிவபெருமான் நன்கறிவன். ஆதலின், முதற்படியாகிய அன்பை முதலிற் பெற்றுப் பின்பு அதன் முடிநிலையாகிய அருளை மிகச் செய்ய வல்லவர்க்கே அவன் விரும்பி அருள்புரிவன்; அதற்குக் காரணம், அன்பை உவந்து அதன்மேல் அவன் கொண்டுள்ள பித்தேயாம்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை மூன்றாம் அடியின் பின்னர்க் கூட்டி உரைக்க. 'இகழ்தலும், பெறுதலும் அன்பை' என்றது பின்வரும் குறிப்பால் விளங்கிற்று. கொழுந்து - இளையநிலை. "அருள் என்னும் அன்பீன் குழவி" என்ற திருக்குறளிலும், **'அன்பு காரணம்பற்றிப் பிறப்பது'** எனவும், **'அருள் காரணம் பற்றாது பிறப்பது'** எனவும் உணர்க. 'வல்லார்க்கே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. 'அன்பு செய்யும்' என்பதை, 'அன்பின்மேற் செய்யும்' என ஏழாவதாக விரிக்க. பெருவிருப்பை, 'பித்து' என்றார். "அது" என்பது ஆகுபெயராய், 'அதன் காரணம்' எனப் பொருள் தந்தது. 'அது மகிழ்ந்தன்பு... ஆம்' எனக் கூட்டுக. கொழுந்தன்பு - கொழுந்து போலக் கிளைத்தெழுமன்பு. கூர - மிகுவிக்க.*

**280.** இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன்
துன்பப் பிறவித் தொழில்பல என்னினும்
அன்பிற் கலவிசெய் தாதிப் பிரான்வைத்த
முன்பிப் பிறவி முடிவது தானே. **2**

**281.** அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி
இன்புறு கண்ணியொ டேற்க இசைந்தனன்
துன்புறு கண்ணிஐந் தாடுந் தொடக்கற்று
நண்புறு சிந்தையை நாடுமின் நீரே. **3**

---

*இதனால் இறைவன் அன்பு செய்வார்க்கே அருள் செய்தலும், செய்யாதார்க்கு அருள் செய்யாமையுமாகிய இரண்டும் தொகுத்துக் கூறப்பட்டன.*

**280.** *தெளிவுரை :-* *முத்திக்கு ஏதுவாகிய பிறவி வருதற்பொருட்டு அதற்கு ஏதுவாகிய துன்பப் பிறவியை அமைத்து வைத்துள்ள சிவபெருமான், அத்துன்பப் பிறவிக்கு உரியனவாகச் செய்யும் தொழில்கள் பலவாயினும், எவரிடத்தும் அன்பு நோக்கியே கலப்பவனாகிய அவன், முன்பே இப்பிறவி முடிதற்கு வைத்த வழி அவ்வன்பு ஒன்றே.*

*குறிப்புரை :-* *'பிறவிக்குச் செய்தவன்' என இயையும், 'செய்த' என்பதன், ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'ஆதிப் பிரான் முன்பு வைத்த இப்பிறவி முடிவு அதுதானே' எனக் கூட்டுக. துன்பப் பிறவித் தொழில் பலவாவன 'அறமும், மறமும்' என வகையால் இரண்டாய், விரியால் எண்ணிறந்தனவாய் உள்ள வினைகளை அறிந்து அவற்றை ஏற்ற காலத்தில் ஏற்குமாற்றால் கூட்டுதல். எனவே, பிறப்பிற்குக் காரணங்கள் பலவாயினும், வீட்டிற்குக் காரணம் அன்பு ஒன்றே என்றதாயிற்று.*

*இதனால், 'சிவபெருமான் அன்புடையாரிடத்தே கலந்து நின்று பிறவித் துன்பத்தை நீக்குவன்' என்பது கூறப்பட்டது.*

**281.** *தெளிவுரை :-* *அன்பு பொருந்திய உள்ளத்தில் பல்வகை நிலைகளிலு மேற்பட்டு விளங்குகின்ற சிவபெருமான், இன்பம் பொருந்திய அறக்கருணைக் கண்ணுடையவளாகிய சத்தியோடே அவ்வுள்ளங்களை ஏற்றுக் கொள்ளுதற்கு இசைந்து நிற்கின்றான். ஆதலால், துன்பம் பொருந்திய மறக்கருணைக் கண்ணுடையவளாகிய திரோதான சத்தி ஐம்புலன்களின் வழி நின்று ஆடுகின்ற ஆட்டமாகிய கட்டினின்றும் விடுபட்டு, அன்பு பொருந்திய மனத்தைப் பெறும்*

282. புணர்ச்சியுள் ஆயிழை மேல்அன்பு போல
உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல் லாருக்
குணர்ச்சியில் லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பமதுஇது வாமே. 4

---

*வழியை நீங்கள் நாடுங்கள்.*

***குறிப்புரை :–*** *"ஒளி" என்றது உருவகம். அஞ்ஞான இருளைப் போக்குதல் பற்றி இவ்வாறு உருவகித்தார். அவ்வொளி ஒன்றே யாயினும், நிலை வேறுபாட்டால் பலவாகக் கூறப்பட்டது. அந் நிலைகளை,*

*நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்*
*நல்லசிவ ஞானத்தால் நானழிய - வல்லதனால்*
*ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்*
*ஆரேனும் காணா அரன். - (திருக்களிற்றுப்படியார், 15)*

*என்பதனானும், பிறவாற்றானும் அறிக. அருட்சத்தியே சிவத்தை அடைவித்தலின், திரோதானசத்தி, தானே தொழில் செய்வதாகக் கூறினார். அருட்சத்தி அன்பின் வழியே சிவத்தை அடைவிக்கும் என்பதை "அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி" என உடம்பொடு புணர்ந்து ஓதினார். அதனானே, 'வீடுபெற வேண்டில்; உள்ளம் அன்புடையது ஆமாற்றை நாடுங்கள்' என்றார். "நண்பு" என்றது, அன்பை "நண்புறு சிந்தையை" என்றாராயினும், 'சிந்தை நண்புறுமாற்றை' என்பது கருத்து என்க. "நீர்" என்றது சிவனைப் பெற விரும்புவாரை 'ஐந்தோடு' என உருபு விரிக்க. இன்புறு கண்ணி - காமாட்சி. துன்புறு கண்ணி - துன்பத்தைத் தருகின்ற வலை.*

*இதனால், பெத்தர்களுக்கு விளங்காது நிற்கின்ற சிவபெருமான், முத்தர்கட்கு 'அன்பினில் விளையும் ஆரமுதாய்' (தி.8 பிடித்த பத்து, 3) விளங்கி நின்றருளுதல் கூறப்பட்டது.*

**282. *தெளிவுரை :–*** *பெண்டிரோடு கூடும் கூட்டத்தில் ஆடவர் அப்பெண்டிர்மேல் வைக்கின்ற அன்பிலே அறிவழிந்து நிற்றல்போல, சிவபெருமானிடத்துச் செய்கின்ற அன்பிலே தம் அறிவழிந்து அந்நிலையில் நிற்க வல்லார்க்கு அதனால் விளைகின்ற பேரின்பம் அவரைப் பின்னும் அந்நிலையினின்றும் பெயராத வகையிற் பெருகி விளங்கி, விழுங்கி இவ்வன்பே தானாகி நிற்கும்.*

***குறிப்புரை :–*** *"ஆயிழை" என்றது இனங்குறித்து நின்றது. பொருளிற் கூறப்பட்ட ஒடுங்குதலை உவமைக்குங் கூட்டுக. ஆயிழை*

**283.** உற்றுநின் றாரொடும் அத்தகு சோதியைச்
சித்தர்கள் என்றுந் தெரிந்தறி வார்இல்லை
பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுத்தவர் முன்புநின் றானே. 5

---

*மேல் அன்பை ஒடுங்குதல் மாத்திரைக்கே உவமைபோலக் கூறினா ராயினும், ஏனையவற்றிற்கும் ஆதலை அறிந்து கொள்க. இல்லாது - இல்லாதபடி பெருகுதலை, 'உலாவுதல்' என்றார். குலாவுதல் - விளங்குதல். "இன்பமது" என்றதில் அது, பகுதிப்பொருள் விகுதி. இஃது அதீதமாகிய முடிந்த அனுபவ நிலையைக் கூறியது. இவ்வாறே இந்நிலையை,*

*"சொற்பால் அமுதிவள் யான்சுவை என்னத்*
*துணிந்திங்ஙனே*
*நற்பால் வினைத்தெய்வம் தந்தின்று*
*நான் இவளாம் பகுதிப்*
*பொற்பார் அறிவார்" - (தி.8, திருக்கோவையார். 8)*

*"உணர்ந்தார்க் குணர்வரி யோன்தில்லைச் சிற்றம்*
*பலத்தொருத்தன்" - (தி.8, திருக்கோவையார். 9)*

*எனவும், மாணிக்கவாசகரும் குறித்தருளுதல் காண்க. 'இவ்வதீத நிலையும் அன்பானன்றி ஆகாது' என்றபடி, மெய்கண்ட தேவரும் இதனை, 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' (சிவஞானபோதம், சூ.1) என ஓதியருளினார். "அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே" (தி.10 பா.268) என்றது இதனையே என்க.*

*இதனால், 'அன்புடையார்க்கே சிவபெருமான் தன்னை முழுதும் கொடுப்பன்' என்பது கூறப்பட்டது.*

***283. தெளிவுரை :-** அடியவர்கள் தங்களுக்கு உளதாகிய அன்பினாலே சிவபெருமானை நிலத்தில் வீழ்ந்து பணிந்தும், கை கூப்பிக் கும்பிட்டும் பல்லாற்றானும் வழிபட அப்பெருமான் அவர்க்கு முத்தியைக் கொடுத்து, அவரது செயல் யாதொன்றிற்கும் தானே முன்னிற்பான். இவ்வாறு தன்னையே சார்ந்து நிற்கும் அவரோடே தானும் அவரையே சார்ந்து நிற்கின்ற சிவபெருமானது தன்மையைச் சித்தர்கள் ஆராய்ந்தறிகின்றார்களில்லை.*

***குறிப்புரை :-** 'அறிந்தாராயின், அவர் அவன்பால் அன்பையே வேண்டுதலல்லது, அணிமாதி சித்துக்களை வேண்டார்' என்பது*

284. கண்டேன் கமழ்தரு கொன்றையி னான்அடி
கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை
கண்டேன் கமல மலர்உறை வானடி
கண்டேன் கழலதென் அன்பினுள் யானே. 6

---

*குறிப்பெச்சம். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க, பயன் வேண்டுவாருட் சிறந்தவர் சித்தராகலின், அவரையே எடுத்து ஓதினார். ஓதவே, பிறரும் அத்தன்மையராதல், தானே பெறப்பட்டது. அடியவரது செயல்யாதாயினும் அதற்குச் சிவன்தானே முன்னிற்றலை,*

*"சிவனும்இவன் செய்தியெல்லாம் என்செய்தி என்றும்*
*செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்*
*பவமகல உடனாகி நின்று கொள்வன்;*
*பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே"*
*- (சிவஞானசித்தி - சூ. 10.1)*

*என்பதனான் அறிக. சிவபெருமான் தன்னையே சார்ந்து நின்றாரையே தானும் சார்ந்து நிற்றலை, 'அற்றவர்க்கு அற்ற சிவன்' (தி.3 ப.120 பா.2) என்று அருளியவாற்றான் அறிக.*

*"சித்தர்கள் என்றும் தெரிந்தறிவார் இல்லை" என்றதனால், பத்திமையாலே தொழாதார்க்குச் சிவபெருமான் முத்தி கொடுத்தலும், முன்னிற்றலும் செய்யாது, பிறப்பைக் கொடுத்து அவர் வினைக்கு அவரையே முதல்வராகச் செய்தல் பெறப்பட்டது.*

*இதனால், இருதிறத்தாரையும் சிவன் அறிந்து அவரவர்க்கு ஏற்றன செய்தல் கூறப்பட்டது.*

***284. தெளிவுரை :-** கொன்றை மாலையாகிய திருவடையாள மாலையால் பிரணவம் முதலிய மந்திரப்பொருள் தானேயாகியும், யானையை உரித்தமையால் ஆணவமலத்தைப் போக்குபவன் தானேயாகியும் நிற்றலால், அன்பால் நினைவாரது நெஞ்சத் தாமரையின்கண் விளங்குபவனும் தானேயாகிய சிவபெருமானது திருவடிகளை நானே கண்டேன்; ஏனெனில், அவை எனது அன்பிடத்தே உள்ளனவாதலால்.*

***குறிப்புரை :-** கொன்றை மாலையும், கரியுரியும் சில குறிப்படை யாளங்களாய் உள்ளன. அவற்றையும், மலர் உறைதலையும் வைத்த வைப்புமுறை அறிந்துகொள்க.*

**285.** நம்பனை நானா விதப்பொரு ளாகுமென்
றும்பரில் வானவர் ஓதுந் தலைவனை
இன்பனை இன்பத் திடைநின் றிரதிக்கும்
அன்பனை யாரும் அறியகி லாரே. 7

---

*கழலது என்ற ஒருமை, இனம்பற்றி வந்தது. ''அன்பினுள்'' என்றதன்பின், 'ஆதலால்' என்பது சொல்லெச்சமாய் நின்றது.*

*இதனால், 'மந்திரங்களின் உண்மையறிந்து ஓதி வழிபாடு செய்து அதனால் மலம் நீங்கப்பெற்று, அதன்பயனாக அன்பு நிகழப் பெற்றாரிடத்தே சிவன் உறைவன்' என்பது குறிப்பாற் கூறப்பட்டது.*

**285. *தெளிவுரை :-* *அனைத்துயிர்களாலும் விரும்பத்தக்கவனும், மேலிடத்துத் தேவர் பலராலும் 'எல்லாமாய் நிற்கும் கடவுள்' என்று சொல்லிப் போற்றப்படுபவனும், இன்ப அநுபவப் பொருளாய் உள்ளவனும், அப்பொருளில் நின்று எழுகின்ற இன்பமானவனும், அன்பிலே விளங்குபவனும் ஆகிய சிவபெருமானை அன்புடையவ ரல்லது பிறர் அறியமாட்டார்.***

***குறிப்புரை :-* "நம்பனை" என்பது முதலியவற்றால், 'அன்பு செய்யப்படுபவன் சிவபெருமானே யாதலைக் தெரித்துணர்த்தி, அவ்வாறாகவும் அதனைப் பலர் செய்கின்றிலர்' என்று இரங்கியவாறு.**

***"இன்பம்" இரண்டும் ஆகுபெயர்கள். "இரதிக்கும்" என்றது 'ரதிக்கும்' என்னும் ஆரியச்சொல்லின் திரிபு. "அன்பன்" என்றதனால், அறியமாட்டாதவர் அன்பில்லாதவர் என்பது போந்தது. இரதித்தல் - சுவைத்தல்.***

***இதனால், அன்பில்லாதவர்க்குச் சிவன் அறியப்படானாதல் வகுத்துக் கூறப்பட்டது.***

**286.** முன்பு பிறப்பும் இறப்பும் அறியாதார்
அன்பில் இறைவனை யாம்அறி வோம்என்பர்
இன்பப் பிறப்பும் இறப்பும் இலான்நந்தி
யன்பில் அவனை அறியகி லாரே. **8**

**287.** ஈசன் அறியும் இராப்பக லுந்தன்னைப்
பாசத்துள் வைத்துப் பரிவுசெய் வார்களைத்
தேசுற் றறிந்து செயலற் றிருந்திட
ஈசன்வந் தெம்மிடை ஈட்டிநின் றானே. **9**

---

**286.** *தெளிவுரை :- இனி எதிர்ப்படுதற்குரிய பிறப்பு இறப்புக்கள் இல்லாதவரே, 'சிவபெருமானிடத்து அன்பு செய்து அவனை அடைவோம்' என்னும் துணிவினராவர். (அவர் இப்பொழுது எடுத்துள்ள பிறப்பும், அது நீங்குதலாகிய இறப்பும் அவருக்கு இன்பத்திற்கு ஏதுவாவனவேயாம்). அத்தகைய பிறப்பு இறப்புக்களை இல்லாமையால் மேலும் பிறந்து இறந்து உழலும் வினையுடையோர் அவனிடத்து அன்பு செய்து அவனை அறியும் கருத்திலராவர்.*

*குறிப்புரை :- முன்பு இடமுன் ''அறியாதார்'' என்றது, 'இல்லாதவர்' என்றபடி, "நந்தி அன்பு" என்றது 'நந்தி மேல் செலுத்தும் அன்பு' என்றதாம்.*

*இதனால், அன்பினால் சிவனை அடைதல் பக்குவர்க்கே கூடுவதும், ஏனையோர்க்கு அது கூடாமையும் கூறப்பட்டன.*

287. *தெளிவுரை :- இரவும், பகலும் இடைவிடாது தன்னையே தம் அன்பிற்கு உரியவனாகக்கொண்டு, அன்பு செய்கின்ற அன்பர்களைச் சிவபெருமான் நன்கறிவன். ஆதலால், ஞானத்தைப் பெற்று அன்பினால் வசமிழந்து நின்றமையால், அவன் எங்களிடையே வந்து எங்களைத் தன்னோடு அணைத்துக் கொண்டான்.*

*குறிப்புரை :- 'இருந்திடில்' என்பது பாடம் அன்று. "எம்" என்றது, தம்மோடு ஒத்தாரை, ஈட்டுதல், 'ஈண்டுதல்' என்னும் தன்வினைச் சொல் திரிந்த பிறவினைச்சொல், ஈண்டுதல் - சேர்தல்; ஈட்டுதல் - சேர்த்தல்.*

*இதனால், அன்பும், அதன் பயனும் கைவரப்பெற்ற தம் அனுபவம் கூறப்பட்டது.*

**288.** விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியைத்
தொட்டுத் தொடர்வன் தொலையாப் பெருமையை
எட்டும்என் னாருயி ராய்நின்ற ஈசனை
மட்டுக் கலப்பது மஞ்சன மாமே. 10

---

**288.** *தெளிவுரை :- மேலான ஒளி (பரஞ்சோதி) ஆகிய சிவபெருமானை இடைவிட்டு நினைவதால் பயன் என்னை? தன்னை அடைய முயல்கின்ற எனக்கு என் ஆருயிர் போல்பவனாகிய சிவபெருமானைத் தேன் போல்* **இனியவனாக அறிந்து அவனை இடைவிடாது நினைந்து நிற்றலே அவனுக்குச் சிறந்த திருமஞ்சனமாம்.** *ஆதலால், அவனது முடிவில்லாத பெருமையை நான் பற்றிய பின்னர் விடுதல் என்பது இன்றித் தொடர்ந்து பற்றிக் கொண்டுள்ளேன்.*

*குறிப்புரை :- 'அதனால் அவன் என்னைக் கைவிடாமை திண்ணம்' என்பது குறிப்பெச்சம். "ஆருயிரால்" என்பதில் ஆக்கம் உவமை குறித்து நின்றது. 'மட்டுப்போல' என உவம உருபு விரித்து, 'அறிந்து' என்பது வருவிக்க. அன்பே பெருமானுக்கு மஞ்சனமாதலை.*

*'நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய ஆட்டி' (தி.4)*

*என்பதனால் அறிக. அன்பு சிவபெருமானுக்குப் பிறவுமாதலை,*

*'அறவாணர்க்கன்பென்னும் அமுதமைத்தற் சனைசெய்வார்'*
*- (தி.12 பெ.பு. வாயிலார், 8)*

*என்பதனால் அறிக.*

## 23. கல்வி

289. குறிப்பறிந் தேன்உடலோடுயிர் கூடிச்
செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை
மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்
கறிப்பறி யாமிகுங் கல்விகற் றேனே. 1

---

*இதுகாறும் ஒழுக்கமும், பண்புமே கூறி, இனி அவ்வொழுக்கத்திற்கும் பண்பிற்கும் ஏதுவாவது கல்வி என்பது தோன்ற அதனது சிறப்பைப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*அஃதாவது கற்கவேண்டியவற்றைக் கற்றல். கற்க வேண்டியன ஞான நூல்கள், அதனைக் கற்றலாவது, ஆசான் முன்பிருந்து நூலை ஓதுதலும், அவன் தன்னனுபவங்களைக் கூறப்பயிறலும் என இருவகையானும் கற்றல், நூலாற்றெரியாத நுணுக்கங்கள் வழிவழி வந்த ஆசாரியனுடைய அனுபவ உரையால் தெளியுமாதலின், நூற் பயிற்சியைக் காட்டிலும் அனுபவப் பயிற்சி மிக மிக இன்றியமையாதது. இறைவனிடத்து இடைவிடா அன்பு பூண்டார்க்கு அன்றி இத்தகைய பயிற்சிகள் எய்துதல் அரிதாகலின் அன்புடைமையின் வகைக்குப் பின் இது வைக்கப் பெற்றது.*

**289. *தெளிவுரை :-*** ***மாசில்லாத, உயர்ந்த கல்வியை யான் கற்றேன்; அதனால் உயிர் உடலோடு கூடிநின்றேனாய், அறியத்தக்க பொருளை அறிந்தேன்; அதன் பயனாக இறைவனை உள்ளத்திலே இருத்தத் தெரிந்தேன். அதனால், அவனும் மீண்டு போகாதவனாய் என் உள்ளத்திலே வந்து புகுந்து நின்றான்.***

***குறிப்புரை :- 'ஆகவே, நீவிரும் இப்பயன் வேண்டின் மாசில்லாத உயர்ந்த கல்வியைக் கற்றுக்கொள்ளுங்கள்' என்பது குறிப்பெச்சம். ஈற்றடியை முதலிற் கொள்க. 'உடலுயிரது' என்பது பாடம் அன்று. "கூடி" என்றது, 'கூடியதன் பயனைப் பெற்று' என்றவாறு. 'கூடிக் குறிப்பறிந்தேன்' எனவும், 'தேவர் பிரானைச் செறிப்பறிந்தேன்' எனவும் முன்னே கூட்டுக. மறிப்பு - தடை. கறிப்பு - உணவினின்று உமிழப்படுவது; மாசு 'கற்பவையே கற்றல் வேண்டும்' (குறள், 391) என்றற்கு, "கறிப்பறியா மிகுங்கல்வி" என்றார். யார்க்கும் எஞ்ஞான்றும் வெறுப்பு அளிக்காத விருப்பம் மிக்க கல்வி.***

**290.** கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதி உரைசெய்யுங்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே. **2**

---

*இதனால் 'சிறப்புடைக் கல்வியே கல்வி' என்பதும், அதனால் பெறும் பயனும் கூறப்பட்டன.*

**290.** *தெளிவுரை :-* *கல்வியைக் கற்ற அறிவினையுடையோர் அவ்வறிவால் கருதியுணருங் காலத்து, கல்வியைக் கற்ற அறிவினை உடையோர் பலரது உள்ளத்திலும் சிறப்பாக ஒருகண் இருத்தல் புலனாகும். இனி அக்கற்ற அறிவினையுடையோர் ஆராய்ந்து சொல்லுகின்ற கல்வியறிவுரை, பாலை நிலத்திலே கயல்மீனைப் பிறழச் செய்தாற் போலும் நன்மையைப் பயக்கும். கல்வியைக் கற்றவருக்கு அகத்தில் ஒரு கண்ணுண்டு.*

*குறிப்புரை :-* *"பாம்பறியும் பாம்பின்கால்" (பழமொழி நானூறு) என்றபடி, கற்றாரது நிலைமையைக் கற்றவரே உணர்வரல்லது மற்றவர் உணர மாட்டார் ஆதலின், ''கற்றறிவாளர் கருதிய காலத்து.... கண்ணுண்டு" என்றார். "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" (மூதுரை) என ஔவையாரும் கூறினார். ''ஓர் கண்'' என்றது, பலர்க்கும் முகத்தின்கண் உள்ள ஊனக் கண்ணல்லாத வேறொருவகைக்கண் என்றவாறு. அது ஞானக்கண். ஞானக்கண்ணே சிறப்புடைத்தாதலை,*

*கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு*
*புண்ணுடையர் கல்லா தவர். - (குறள். 393)*

*எனத் திருவள்ளுவரும் குறித்தருளினார். கண் காணுமேயன்றி காட்டாது. காணும் கண்ணுக்கு காட்டும் அறிவு சிவஞானம். நான்கிடத்தும் 'கற்ற' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயின. கற்ற அறிவு - கற்றதனால் உண்டாகிய அறிவு; "கற்றறி" என்பதில் அறி, அறிவு; முதனிலைத் தொழிற்பெயர், காடு, இங்குப் பாலை நிலம். "அக்கயல்" என்பதில், சுட்டுப்பண்டறி சுட்டாய், 'நீரினுள் வசிக்கும் அத்தன்மை உடைய' என அதன் இயல்பை விதந்தவாறாய், நீர் நிறைந்து நிற்றலைச் சுட்டுங் குறிப்பாயிற்று. 'காட்டில்' என ஓதுதலும் ஆம். 'பாலையை மருதம் ஆக்கினாற்போல, அறியாமையாற் பாழ்பட்டுக் கிடக்கும் உள்ளத்தை அறிவுடையதாய் நலனுறச் செய்யும்' என்பதாம். 'கற்ற அறிவு கயலை உளவாக்கும்' என்க. எனவே, 'அவர் சொல் கேட்கத்தக்கது' என்பதும் குறிக்கப்பட்டதாம்.*

291. நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்மின் கழிந்தறும் பாவங்கள்
சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்
மற்றொன் றிலாத மணிவிளக் காமே. 3

---

*இதனால், கல்வியின் சிறப்பும், அது தன்னை உடையார்க்கே யன்றிப் பிறர்க்கும் பயன் தருதலும் கூறப்பட்டன.*

291. ***தெளிவுரை :-*** *இளமை உள்ள பொழுதே என்றும் ஒரு பெற்றியனாய் நிற்கின்ற சிவபெருமானது திருவடிச் சிறப்பைத் தெளிவிக்கின்ற நூல்களைக் கற்கின்ற செயல்களைத் தப்பாது செய்யுங்கள்; அவ்வாறு கற்றலானே பாவங்கள் பற்றறக்கழியும்; பின்பு அக்கல்விகள் வெறுங்கல்வியாய் ஒழியாதவாறு அத்திருவடிகளை வணங்குங்கள்; வணங்கினால் அவை, தன்னை ஆக்குவதற்கும், தூண்டுவதற்கும் பிறிதொன்றனை வேண்டாது இயல்பாகவே என்றும் ஒளிவீசி நிற்கும் மணிவிளக்குப் போல நின்று உங்கட்கு உதவுவனவாம்.*

***குறிப்புரை :-*** *நிற்கின்றபோது - பிராரத்த நுகர்ச்சிக்காக எடுத்த உடலில் இவ்வுயிர் நிற்கின்றபோது. கற்றற்கு வேண்டுவது இளமைக் காலமே யாதலின், அஃது இங்கு ஆற்றலாற் கொள்ளக் கிடந்தது. இளமை முதலிய நிலையாமையுடையார்க்கு நிலைபேறாவது இறைவன் திருவடியே என்றற்கு, 'நிலையுடையான் கழல்' என்றும், 'அதனை விளக்கும் கல்வியே கல்வி' என்றற்கு, "கழல் கற்கின்ற செய்மின்" என்றும், "அக்கல்வியால் வினைமாசு, நீங்கும்" என்பதுபற்றி "கழிந்தறும் பாவங்கள்" என்றும்,*

> *கற்க கசடறக் கற்பவை கற்றபின்*
> *நிற்க அதற்குத் தக. - (குறள், 391)*

*என்றவாறு கற்றவண்ணம் நில்லாதபொழுது கற்றலாற் பயனில்லை யாகலானும்,*

> *கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்*
> *நற்றாள் தொழாஅ ரெனின். - (குறள், 2)*

*என்பவாகலின், கல்வியின் உண்மைப் பயன் இறைவன் திருவடியைத் தொழுதலேயாகலானும், "சொற்குன்றல் இன்றித் தொழுமின்" என்றும், திருவடிக் கல்வியால் வினை நீங்கப்பெற்றார் அத்திருவடியைத் தொழுவாராயின் அதனைப் பெற்று - இன்புறுவராகலின், "தொழுதபின் மணி விளக்காம்" என்றும் கூறினார். 'திருவடிக் கல்வியே கல்வி' என்பதனை,*

**292.** கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்
பல்லி யுடையார் பரம்பரிந் துண்கின்றார்
எல்லியுங் காலையும் ஏத்தும் இறைவனை
வல்லியுள் வாதித்த காயமு மாமே. **4**

---

*'சிவமுயன் றடையும் தெய்வக் கலைபல திருந்த ஓதி'*
*- (தி.12 பெ.பு. மனுநீதி. 18)*

*எனவும்,*

*'உள்ளம்நிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப்பயின்றவற்றால்*
*தெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலிற் செறிவு'*
*- (தி.12 பெ.பு. சிறுத்தொண்டர். 4)*

*எனவும் சேக்கிழார் குறிப்பிடுதல் காண்க. "கற்றதனாலாய பயன் என்கொல்" என மேற்காட்டிய திருக்குறளைக் கூறிய திருவள்ளுவனார்க்கும் இதுவே கருத்தாதல் உணர்க. வினைமாசினை அறுக்கும் திருவடிக்கல்வியை,*

*'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்*

*(ஆகிய)*

*உவமையிலாக் கலைஞானம்' - (தி.12 பெ.பு. திருஞான. 70)*

*எனவும், இறைவன் திருவடியைப் பலவாற்றானும் தொழுது அடைதலாகிய அனுபவத்தை, அதே பாட்டில்,*

*"பவம் அதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்*

*(ஆகிய)*

*உணர்வரிய மெய்ஞ்ஞானம்" - (தி.12 ஞான. 70)*

*எனவும் சேக்கிழார் விரித்தமை காண்க.*

*சொல் - சொல்வடிவாகிய கல்வி. இதனை, 'வாசக ஞானம்' என்றல் அறிக. குன்றல் - பயனின்றிக் கெடுதல்.*

*இதனால், 'உண்மைக் கல்வியாவது இது' என்பது, அதன் பயன்களும் தெரித்துக் கூறப்பட்டன.*

**292. *தெளிவுரை :-* *கல்வியைக் கற்றவர்களிலும் சிலர் (அதன் பயனாகிய இறைவழிபாட்டினைக் கொள்ளாமையால்) வாளா இறந்தொழிகின்றனர். இனிக் கற்றதன் பயனாகிய இறைவழிபாடு உடையவர் இறையின்பத்தை இப்பொழுதே அன்பினால் நுகர்கின்றனர். ஆகையால், கல்வியைக் கற்கின்ற நீவிர் இரவும், பகலும்***

**293.** துணையது வாய்வருந் தூயநற் சோதி
துணையது வாய்வருந் தூயநற் சொல்லாம்
துணையது வாய்வருந் தூயநற் கந்தம்
துணையது வாய்வருந் தூயநற் கல்வியே. **5**

**294.** நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்
பாலொன்று பற்றினாற் பண்பின் பயன்கெடும்
கோலொன்று பற்றினாற் கூடா பறவைகள்
மாலொன்று பற்றி மயங்குகின் றார்களே. **6**

---

*இறைவனைத் துதியுங்கள். அவ்வாறு துதித்தால் அவனது சத்தி உள்நின்று தாங்குவதாகிய அருள் உடம்பும் உங்கட்குக் கிடைக்கும்.*

***குறிப்புரை :-*** *'கல்வியுடையாரும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. பல்லி - பலிதம்; பயன். 'பாம்பரிந் துண்கின்றார்' என்பது பாடம் அன்று என்பதற்கு, யாப்புச் சிதைதலே சான்று.*

*இதனால், கல்வியின்வழி நிற்குமாறு கூறப்பட்டது.*

**293. *தெளிவுரை :-*** *உயிர்கட்குச் செல்கதிக்குத் துணையாய் வருகின்ற இறைவன், என்றும் உறுதுணையாகப் பற்றுமாறு நல்லாசிரியரால் அறிவுறுத்தப்படுகின்ற தூய நல்ல உறுதிச் சொல்லே (உபதேச மொழியே) யாய் நிற்பன். அச்சொல்லும் மலரோடு ஒட்டியே வருகின்ற மணம்போலத் தூயநல்ல கல்வியோடு ஒட்டியே வருவதாம்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின் அதனைக் கற்க' என்பது குறிப்பெச்சம். 'கந்தம்போல்' என உவம உருபு விரிக்க. ஒடுவின் பொருளில் வந்த ஏழாவது இறுதிக்கண் தொக்கது.*

*இதனால், உண்மைக்கல்விஆசிரியர் உறுதி மொழியைத் தெளிவிக்கும் முகத்தால் இறைவனை அடைவித்தல் கூறப்பட்டது.*

**294. *தெளிவுரை :-*** *வருந்தியாயினும் நூல் ஏணியைப்பற்றி ஏறுவோர் மதிலின் உச்சியை அடைந்து கோட்டையைப் பிடிப்பர். அது செய்ய மாட்டாதார் பக்கத்தில் உள்ள சில வழிகளைப் பற்றி ஏறின் இடையே நின்று பயன்பெறார். அதுபோல நுண்ணிதாயினும் மெய்ந்நூல்களுள் ஒன்றைப் பற்றி ஒழுகுவோர் ஆன்ம லாபமாகிய முடிந்த பயனைப் பெற்று இன்புறுவர். அது மாட்டாது அயலாகிய மயக்க நூல்களுள் ஒன்றைப் பற்றி ஒழுகுவோர் பிற சில சிறுபயன்களைப் பெறுதலோடு ஒழிவர்; ஆன்ம லாபத்தைப் பெறார்.*

295. ஆய்ந்துகொள் வார்க்கரன் அங்கே வெளிப்படும்
தோய்ந்த நெருப்பது தூய்மணி சிந்திடும்
ஏய்ந்த இளமதி எட்டவல் லார்கட்கு
வாய்ந்த மனமல்கு நூல்ஏணி யாமே. 7

---

***இன்னும் ஓர் உணவுப் பொருளைக் காப்பவர் கையில் கோல் ஒன்றை உடையாராய் இருப்பின் அப்பொருளைக் கவர எண்ணும் பறவைகள் அணுகமாட்டா. அதுபோல மெய்யறிவு உடையாராய் இருப்பாரது மனத்தை ஐம்புலன்கள் அலைக்க அணுகா.*** *இவற்றையெல்லாம் அறியாது மக்கள் அறியாமையுள் நின்று மயங்குகின்றார்களே. இஃது இரங்கத்தக்கது!*

***குறிப்புரை :-*** *இத்திருமந்திரம் ஒட்டணி. "மயங்குகின்றார்களே" என்ற தேற்றேகாரம், இரக்கங் குறித்து நின்றது.*

*இதனால் மயக்க நூற்கல்வியது குற்றம் கூறப்பட்டது.*

**295. *தெளிவுரை :-*** *பகலவனது கதிர்கள் எங்கும் பரவி நிற்பினும் தூயதாகிய சூரியகாந்தக் கல்லே அதனால் நெருப்பை உமிழ்வதாகும். அதுபோல, இறைவன் திருவருள் எங்கும் நிறைந்திருப்பினும் கற்றவரே அத்திருவருளால் இறைவனைக் காண்பவராவார். ஆகவே, இளம்பிறையை அணிந்த சிவபெருமானை அடையும் ஆற்றலுடையார்க்குப் பொருந்திய மனம் நிறைந்த மெய்ந்நூல்களே ஏணிபோல உதவுவனவாம்.*

***குறிப்புரை :-*** *எடுத்துக்காட்டுவமையாய் நின்ற இரண்டாம் அடியை முதலிற் கொள்க ''வெளிப்படும்'' என்றாராயினும், உவமைக்கேற்ப 'வெளிப்படக் காண்பர்' என்றல் கருத்து என்க. தோய்ந்த நெருப்பு - சூரிய கிரணத்தில் தோய்ந்ததனால் உண்டாகிய நெருப்பு. "இளமதி" என்பது, "கனங்குழை" (குறள். 1081) என்றாற்போல அதனையுடையான் மேல் நின்றது.*

*இதனால், மெய்நூற் கல்வியது இன்றியமையாமை கூறப்பட்டது.*

**296. *தெளிவுரை :-*** *வானுலகமும், பிற உலகங்களுமாய் நின்று எல்லா உயிர்கட்கும் எவ்விடத்தும் துணையாய் நிற்கும் பேராற்றலும், பேரருளும் உடையவனாகிய இறைவன், கல்வியால் யாவர்க்கும் நன்னெறித் துணையாயும், அமுதமாயும் நிற்கின்றவர்கட்கே விளங்கித் தோன்றிப் பெருந்துணையாய் நிற்பன். கல்வி இல்லாதவர்க்கு அவர்*

296. வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன்
கழித்துணை யாம்கற் றிலாதவர் சிந்தை
ஒழித்துணை யாம்உம் பராய்உல கேழும்
வழித்துணை யாம்பெருந் தன்மைவல் லானே. 8

---

*உள்ளம் தன்னை நீங்குதற்கே துணையாவன். (அறியாமையை மிகுவிப்பன் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *கழித்துணை - நீக்கிவிடத்தக்க அளவு. வழித்துணை யாதலும், "யாண்டு பலவாயினும் நரையிலவாக்கி" அமுதமாதலும் கற்றார்க்கன்றிக் கூடாமையின், கல்வியால் என்பது ஆற்றலால் விளங்கிற்று. இதனாலும் கல்வியது சிறப்புக் குறிக்கப்பட்டது. 'கழிதுணை, ஒழிதுணை' என்பன எதுகை நோக்கி விரித்தல் பெற்றன. கழி, உரிச்சொல், "கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" (தி.1 ப.1 பா.2) "கல்லா நெஞ்சின் நில்லான் ஈசன்" (தி.3 ப.40 பா.3) என்பன திருஞானசம்பந்தர் வாக்காதல் அறிக.*

*இதனால், 'திருவருள் பெறுதல் கல்வியானே ஆவது' என்பது கூறப்பட்டது. கண்ணப்பர் முதலாயினார் கல்வி இன்றியும் திருவருள் பெற்றாரால் எனின், அவரெல்லாம் முற்பிறப்பிற் கற்று இப்பிறப்பில் அதன் பயனை எய்தினார் என்பதனை,*

*'கலிமலிந்த சீர்நம்பி கண்ணப்பன்' - (தி.7 ப.39 பா.2)*

*என்பது முதலிய அருட்டிருமொழிகளான் அறிந்துகொள்க. இதுபற்றியன்றே திருவள்ளுவர்,*

*ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்*
*கெழுமையும் ஏமாப் புடைத்து. - (குறள். 398)*

*எனவும்,*

*யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்*
*சாந்துணையும் கல்லாத வாறு. - (குறள். 397)*

*எனவும் ஓதுவாராயினர் என்க.*

**297. தெளிவுரை :-** *யாதொரு செயலாயினும் அது முற்றுப் பெறுகின்ற அந்நிலைமையெல்லாம் முதற்கடவுளது திருவருள் பெற்றவழியே ஆவதாம். 'எல்லாவற்றையும் முடிக்க வல்ல வன்மையை உடையோம்' எனத் தம்மை மதித்துக்கொள்கின்ற தேவரேயாயினும், அவனது இயல்பை உணர்த்தும் நூல்களைக் கற்றவரே அவனது பேரின்பத்தை அடைந்தனர்; ஏனையோர் அடைந்திலர். அதனால்,*

**297.** பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்
முற்றது எல்லாம் முதல்வன் அருள்பெறில்
கிற்ற விரகிற் கிளரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்றுநின் றாரே. **9**

**298.** கடலுடை யான்மலை யான்ஐந்து பூதத்
துடலுடை யான்பல ஊழிதொ றூழி
அடல்விடை யேறும் அமரர்கள் நாதன்
இடமுடை யார்நெஞ்சத் தில்லிருந் தானே. **10**

---

*நீவிர் நல்லதொரு துணையைப் பற்றவேண்டின், சிவபெருமானையே அறிந்து பற்றுதல் வேண்டும்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின் அவனை அறிவிக்கும் கல்வியை ஒழியாது கற்றுக்கொண்மின்' என்பது குறிப்பெச்சம். முதலடியை இறுதியிற் கூட்டி உரைக்க. முற்று அது, வினைத்தொகை 'ஆவதாம்' என்பதும், 'ஆயினும்' என்பதும், சொல்லெச்சம். 'கற்றவரே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. கிற்ற விரகில் - உபாயங்களில் வல்ல.*

*இதனால், எத்தகையோர்க்கும் மெய்ப்பொருட் கல்வி இன்றி வீடு எய்தலாகாமை கூறப்பட்டது. முனிவரும், தேவரும், கணங்களும் போல்வாரும் சிவபெருமானிடம் வேதாகமங்களைக் கேட்டுணர்ந்தன ராகக் கூறும் புராண வரலாறுகளை நினைவு கூர்க.*

**298. *தெளிவுரை :-*** *சிவபெருமான் ஊழிகள் பலவற்றிலும் கடல், மலை, ஐம்பூதங்களின் உரு முதலியவற்றிற் கலந்திருப்பினும், கல்வியாற் கனிந்துள்ளாரது நெஞ்சத்தையே தான் வாழும் இல்லமாகக் கொண்டுள்ளான்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடியை முதலில் கொண்டு, அதன்பின், பல, "ஊழிதொறூழி" என்றதனைக் கூட்டி உரைக்க. உருவத்தை "உடல்" என்றார். 'பூதம்' என்றே ஒழியின், கட்புலனாகாதது, அருவமாயுள்ள தத்துவ மாத்திரையே குறிக்குமாகலின், கட்புலனாம் உருவை உணர்த்த வேண்டி இது கூறினார். இடம், "இடனில் பருவம்" என்புழிப் போல ஏற்புடைத்தாய நிலை. 'அது கல்வியானாயது' என்பது அதிகாரத்தால் விளங்கிற்று.*

*இதனால், சிவபெருமான் எங்கும் நிறைந்து நிற்பவனாயினும் கற்றாரது நெஞ்சத்திலே இனிது விளங்குதல் கூறுமாற்றால், 'அவனைக் கண்டு பெறுதற்கு அவனது அருள்நூற் கல்வி இன்றியமையாதது' என்பது அறுதியிட்டுக் கூறப்பட்டது.*

## 24. கேள்வி கேட்டமைதல்

**299.** அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்
மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும்
புறங்கேட்டும் பொன்னுரை மேனியெம் ஈசன்
திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே. 1

---

*இனி அக்கல்வியின் பகுதியாய கேள்வியது சிறப்புப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றார். 'கல்வியும், கற்றவர்பால் கேட்பதேயாதலின், கல்வி, கேள்வி என்பவை தம்முள் வேற்றுமை யாது' எனின், கருதியதொரு நூற்பொருளை முதற்றொட்டு முடிவு காறும் நல்லாசிரியர் ஒருவரிடத்தே முறைப்பட ஒருகால், இருகால், முக்காற் கேட்டு அதனையே பலரொடு பலகாலும் பயின்று, பிறர்க்கு உரைத்தலையும் செய்து அந்நூலில் வல்லராதல் கல்வியாம். அவ்வாறின்றி 'எனைத்தானும் நல்லவை கேட்க' (குறள். 416) என்றாங்கு யாதோரிடத்து, யாதொருகாலத்து, யாதொரு பொருளை, கற்றார் யாவர் ஒருவரேனும் சொல்லக்கேட்டல் கேள்வியாம். இவை தம்முள் வேற்றுமை என்க. அமைதல் நிரம்புதல்; என்றதனானே, கல்வி, கேள்வியானே நிரம்புதல் கூறப்பட்டதாம்.*

**299. *தெளிவுரை :-*** ***நீதிகளைக் கேட்டும், அந்தணர்களது அறிவுரைகளைக் கேட்டும், பாவங்கள் இவையெனப் பகரும் விதி நூல்களைக் கேட்டும், தேவர்கள் வாய்மொழியாகிய மந்திரங்களைக் கேட்டும், பிற நூல்களைக் கேட்டும், பொன்னென்று உரைக்கப் படுகின்ற திருமேனியையுடைய எமது ஈசன் இயல்புகளைக் கேட்டும் பெற்றன சிவகதியே என்றவாறு.***

***அறமாவது, உலகியல் ஒழுக்கங்களை உள்ளவாறு உணர்த்தும் நீதி நூல்கள், அதனைக் கேட்டலாவது, விளக்கிக் கூறும் ஆற்றல் உடையார் வாய்க் கேட்டல்.***

***அந்தணர் இலக்கணம் முன்னர்க் கூறப்பட்டது, அவர் வாய்மொழியாவது, தன்னலம் பற்றாமல் எல்லோரும் இன்புற்றிருக்க நினைத்து அருளும் உபாயமொழிகள். மறமாவது மக்கள் விலகி உய்வதற்காக இவை, இவை பாவங்கள் எனக் கூறும் நூல்கள்.***

***வானவர் மந்திரம் - தெய்வ மனமாகத் திகழ வைக்கும் தியானத்துக்குரிய தேவ மந்திரம். புறம் - இவை பற்றிக் கூறும் புற***

**300.** தேவர் பிரான் றனைத் திவ்விய மூர்த்தியை
யாவர் ஒருவர் அறிவார் அறிந்தபின்
ஓதுமின் கேண்மின் உணர்மின் உணர்ந்தபின்
ஓதி உணர்ந்தவர் ஓங்கிநின் றாரே. **2**

**301.** மயன்பணி கேட்பது மாநந்தி வேண்டின்
அயன்பணி கேட்ப தரன்பணி யாலே
சிவன்பணி கேட்பவர் தேவரு மாவர்
பயன்பணி கேட்பது பற்றது வாமே. **3**

---

*நூல்களாயினும் செம்பொருட்டுணிவைச் சிதைக்காதவற்றைப் பயிறலாம் என்பது மரபு. ஈசன் திறம் சிவத்தின் பொதுவும் சிறப்புமாகிய இயல்புகளைக் கூறும் ஞானசாத்திரங்கள்.*

*அறங்கேட்டல் நூலறிவும், வாய்மொழி கேட்டல் உபதேச அறிவும், மறங்கேட்டல் எதிர்மறையறிவும், மந்திரங் கேட்டல் சாதன அறிவும், புறங்கேட்டல் துணையறிவும் ஆகலின் இவற்றால் பெற்ற அறிவெல்லாம் இறைவனது தடத்த சொரூப இலக்கணங்களை அறிந்து அனுபவித்தலால் விளைவதாகிய சிவகதியே எனத் தெளியலாம்.*

300. *தெளிவுரை :- 'சிவபிரானை உள்ளவாறு உணர்ந்தோர் யாவர்' என்பதனை முன்னே அறிந்து, பின்னர் அவர்பால் கற்றலையும், கேட்டலையும் செய்யுங்கள், கற்றும் கேட்டும் அறிந்தபின், சிந்தித்துத் தெளியுங்கள். ஏனெனில், கற்றுக் கேட்ட பின்னர்ச் சிந்தித்துத் தெளிந்தவரே சிவனைப் பெற்று உயர்ந்து நின்றனர்.*

*குறிப்புரை :- 'என்பதை' என்பதும், 'அவர்பால்', என்பதும் சொல்லெச்சங்கள். இதனால், யாதொரு பொருளாயினும் அதனை வல்லாரிடத்தே கற்றலும், கேட்டலும் செயற்பாலதல்லது பிறரிடத்து ஆகாது என்பதும், கல்வி கேள்விகட்குப் பின்னர்ச் செயற்பாலன இவை என்பதும் கூறப்பட்டன. திருவள்ளுவரும், "ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்லே கேட்கற்பாற்று" (குறள். 415) என்றார். "கற்றபின் நிற்க அதற்குத் தக" (குறள், 391) என்றது கல்வியின் பகுதியானாற் போலக் கேள்வியோடு இயைபுடையனவும் இங்குக் கேள்வியின் பகுதியாயின. இதனுள் இரண்டடி எதுகை வந்தது. சிவநூல்களை இடைவிடாது ஓதி, கேட்டு, உணர்ந்து கொண்டிருங்கள்.*

**301.** *தெளிவுரை :- திருமால், பிரமன் முதலிய தேவரை வழிபடும் முறைகளும் கேட்கத்தக்கனவாதல், சிவபெருமானது ஆணைவழியே*

**302.** பெருமான் இவனென்று பேசி யிருக்குந்
திருமானுடர்பின்னைத் தேவரு மாவர்
வருமா தவர்க்கு மகிழ்ந்தருள் செய்யும்
அருமா தவத்தெங்கள் ஆதிப் பிரானே. **4**

---

*யாம். அதனால், முதல்வனாகிய அப்பெருமானை வழிபடும் முறையைக் கேட்டு, அவனை வழிபடுதலே சிறந்தது. ஆகவே, மக்கட் பிறப்பின் பயனும், உயிர்க்கு உறுதுணையாவதும் சிவபெருமானை வழிபடும் முறையைக் கேட்டலேயாம்.*

***குறிப்புரை :-*** *சிவநூல்களை ஓதினால் திருமால் நமது ஏவலைக் கேட்டு நடப்பான். அயனும் சொன்ன பணியைச் செய்வான். 'மாயன்' என்பது முதற் குறுகி நின்றது. அத்தேவர் எனவும், அப்பணி கேட்பது எனவும் சுட்டு வருவிக்க. பற்றும் என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. திருமால் முதலிய தேவர், தாம் செய்த புண்ணியத்தின் பயனாகச் சிவபெருமானால் தத்தமக்குப் பொருந்திய எல்லையளவும் தலைவராக அருள் புரியப் பட்டமையின், அவரை வழிபடுதலும் சிவபெருமான் ஆணையே ஆயிற்று. ஆயினும், மேன்மேல் உள்ளாரை வழிபடுபவர் கீழ்க்கீழ் உள்ளாரை வழிபடு வோர் எய்தும் பயனோடு அதனின் மேம்பட்ட பயனையும் பெறுவாராகலின், எல்லார்க்கும் மேலோனாகிய சிவபெருமானை வழிபடுதலே சிறந்ததாதல் தெளிவு. காண்பவன் சிவனேயானால் அவனடிக் கன்பு செய்கை மாண்பறம் (சிவஞானசித்தி. சூ.2.27) என்றது காண்க. இப்பயனை அவர் வழங்கமாட்டாமையைச் சுட்டும் முகத்தால், சிவனது வழிபாட்டின் சிறப்பு உணர்த்தப்பட்டது. இதனுள் இன எதுகை வந்தது.*

*இதனால், மெய்ந்நெறிக் கேள்வியின் இயல்பு வகுத்துக் கூறப்பட்டது.*

**302. *தெளிவுரை :-*** *உலகியலை விட்டு மெய்ந்நெறி நோக்கி வருகின்ற தவத்தோர்க்கு அதனை அருளுபவன் அரிய தவக் கோலத்தையே தனது கோலமாக உடைய எங்கள் சிவபெருமானே. அதனால், இவனே யாவர்க்கும் தலைவன் என்று உணர்ந்து அவனது புகழைத் தம்மிடையே பேசிக் களிக்கும் திருவுடை மக்களே பின்னர் எப்பயனையும் எளிதிற் பெறுவர்.*

***குறிப்புரை :-*** *அதனால் அவன் புகழையே கேட்க என்பது குறிப்பெச்சம்.*

**303.** ஈசன் அருளும் இறப்பும் பிறப்பையும்
பேசி யிருந்து பிதற்றி மகிழ்வெய்தின்
நேசமு மாகும் நிகழொளி யாய்நின்று
வாச மலர்க்கந்தம் மன்னிநின் றானே. **5**

---

*செவிகாள் கேண்மின்களோ - சிவன்*
*எம்மிறை செம்பவள*
*எரிபோல் மேனிப் பிரான்திறம் எப்போதும்*
*செவிகாள் கேண்மின்களோ - (தி.4 ப.9 பா.3)*

*என்று அருளிச் செய்தார் திருநாவுக்கரசரும். பேசுதல், கருத்துக்களைக் கொண்டும், கொடுத்தும் அளவளாவுதல் "உன் திருவார்த்தை - விரிப்பார் கேட்பார் மெச்சுவார்" (தி.8 கோயில் மூத்த திருப்பதிகம்-9) என்ற திருவாசகத்தைக் காண்க. திரு - நற்பேறு. "பேசி இருக்கும் திருமானுடர்" என் உடம்பொடு புணர்த்து ஓதியதனால், 'அவ்வாறு பேசி இருத்தலே திருவாம்' என்பது பெறப்பட்டது. ''மாதவர்'' என்றதனால், 'அவர் மெய்ந்நெறி விருப்பினர்' என்பதும், "அருமாதவன்" என்றதனால் 'அவர்க்கு அருள் புரிய வல்லான் அவனே' என்பதும் பெறப்பட்டன. அருமாதவம் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன.*

*இதனால், மெய்ந்நெறியுள் சிவநெறிக் கேள்வியது சிறப்புத் தனித்தெடுத்துக் கூறப்பட்டது.*

***303. தெளிவுரை :-** சிவபெருமானது திருவருளின் பெருமையையும், இறப்புப் பிறப்புக்களது சிறுமையையும் ஒருவரோடு ஒருவர் உசாவி அறிந்து, அவனது திருவருளையே காதலித்துப் பிதற்றி மகிழ்ந்தால், அப்பெருமான்மேல் அன்பு, முறுகி வளரும். வளர்ந்தால், அப்பெருமான் அவ்வன்பில் விளங்குகின்ற பேரொளியாய் எதிர்ப்பட்டு நின்று, பின்னர் மலரில் நின்ற கமழும் மணம்போல உள்ளே நிலைபெற்று, இன்பம் தருவான்.*

***குறிப்புரை :-** 'அருளையும்' என்னும் இரண்டனுருபு தொகுத்தல். இறப்புப் பிறப்பு, உம்மைத் தொகை, அருள் முதலிய மூன்றும் ஆகுபெயரால் அவற்றின் தன்மையை உணர்த்தின. "எய்தி ஆகு" எனப் பாடம் ஓதி, 'ஆகு' என்பதனை ஏவல்வினையாக்கி உரைப்பாரும் உளர். 'வாசமலர்' என்பது பிறிதின் இயைபு நீக்கிய விசேடணம். 'கந்தம் போல' என உவம உருபு விரிக்க.*

*"சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது" - (தி.105 ஆம் தந்திரம்)*
*எனவும்,*

**304.** விழுப்பமும் கேள்வியும் மெய்ந்நின்ற ஞானத்
தொழுக்கமும் சிந்தை உணர்கின்ற போது
வழுக்கி விழாவிடில் வானவர் கோனும்
இழுக்கின்றி எண்ணிலி காலம தாமே. **6**

---

*"உற்ற ஆக்கையின் உறுபொருள், நறுமலர்*
*எழுதரு நாற்றம்போல்*
*பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்"*

*- (தி.8 அதிசயப் பத்து 9)*

*எனவும் ஓதுதல் காண்க.*

*இதனால், சிவநெறிக் கேள்வி பயன்தரும் முறைமை கூறப்பட்டது.*

**304.** *தெளிவுரை :- 'உண்மையான கல்வியும், கேள்வியும், ஞானச் செய்தியும் யாவை' என்று ஒருவனது உள்ளம் ஓர்கின்ற காலத்து, அது பிழைபட்டுப் பொய்ம்மையில் விழாதிருப்பின், சிவபெருமான் அவனுக்குத் தடையின்றிக் காலம் கடந்த பொருளாய் வெளிப்பட்டு நிற்பன்.*

*குறிப்புரை :- விழுப்பம் - பெருமை. 'கல்வி விழுச்செல்வம்' (குறள். 400) ஆதலின், அதனை, "விழுப்பம்" என்றார். மெய்நின்ற - மெய் நிலைபெற்ற; இது 'விழுப்பம், கல்வி' என்றவற்றோடும் இயைந்தது. வழுக்கி விழுதலாவது, பொய்யை மெய்யெனத் துணிதல். காலம் எல்லாப் பொருளினும் நுண்ணிதாய் அவற்றை நடத்துவதாயினும் வரையறை உடைத்தாகலின், அதனைக் கடந்த நிலையை, "எண்ணிலி காலம்" என்றார். மேற்கூறிய சிறப்புப்பற்றிக் காலத்தையே கூறினாராயினும், அதனொடொத்த 'முதற்பொருளாகிய' (தொல். பொருள்) இடமும் கொள்ளப்படும். படவே, மெய்ம்மையான கல்வி கேள்வி ஞானச்செய்திகளை உடையார் காலத்தானும், இடத்தானும் வரையறுக்கப்படாத இறை நிறைவை எய்துவர் என்றதாயிற்று. கேள்வியே கூறப்புகுந்தாராயினும் அத்தன்மையாதல் பற்றி ஏனையவற்றையும் உடன் கூறினார். 'வழுக்கி விடாவிடில்' என்பது பாடம்.*

*இதனால், மயக்க நூலைக் கற்றலும், மயக்க உரைகளைக் கேட்டலும், அவற்றின்வழி அறிந்த நெறியின் நிற்றலும் ஆகாமை கூறப்பட்டது.*

**305.** *தெளிவுரை :- சிறுமகார் தம் விளையாட்டு விருப்பம் காரணமாகத் தாம் சோறாகக் கருதிக்கொண்ட மணலாலே வயிறு*

**305.** சிறியார் மணற்சோற்றில் தேக்கிடு மாபோல்
செறிவால் அனுபோகஞ் சித்திக்கும் என்னில்
குறியாத தொன்றைக் குறியாதார் தம்மை
அறியா திருந்தார் அவராவர் அன்றே. 7

**306.** உறுதுணை யாவ துயிரும் உடம்பும்
உறுதுணை யாவ துலகுறு கேள்வி
செறிதுணை யாவ சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே. 8

---

*நிரம்பினார் போலத் தேக்கெறிந்து கொள்ளுதல்போல, உலகப்பற்றுக் காரணமாகச் சுற்றத் தொடக்குண்டு வாழும் வாழ்க்கையாலே இன்பம் கிடைத்துவிடும் என்பவர் உளராயின் அவர், தம்மையும், தலை வனையும் அறியாத மடவோரேயாவர். ஐம்புல நுகர்ச்சி உடையார்க்கு சிவானுபவம் சித்தியாது.*

***குறிப்புரை :-*** *'அதனால் அங்ஙனம் கொள்ளற்க' என்பது குறிப்பெச்சம். செறிவு - கூடியிருத்தல். இதற்கு, செறியப் படுவார் இவர் என்பது வருவிக்கப்பட்டது. "அநுபோகம்" என்பது சிறப்பினால் இன்ப நுகர்ச்சியையே குறித்தது. 'அவர் குறியாதாரும், இருந்தாரும் ஆவர்' என்க. குறியாதது ஒன்று - சுட்டிறந்த முதற்பொருள், சிறப்புப் பற்றி இதனை முன்னர்க்கூறினார். 'தம்மையுணர்ந்து, அதனானே தலைவனையும் உணர்பவரே ஞானத் தலைவர்' என மெய்கண்ட தேவரும் கூறினார் (சிவஞானபோதம் அவையடக்கம்).*

*இதனால், உலகாயதம் பேதைமைத்தாதல் கூறுமாற்றால், 'ஆகா' என விலக்கிய கல்வி கேள்வி ஒழுக்கங்களுள் பெரிதும் கூடாதன இவை என்பது கூறப்பட்டது.*

*"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே*
*படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்" - (தி.5 பா.31 பா.6)*

*என அப்பரும் அருளிச் செய்தல் காண்க.*

**306.** ***தெளிவுரை :-*** *உயிரும் உடம்பும் ஒன்றற்கு ஒன்று உறுதுணை யாவன. அவை அவ்வாறு நிற்றற்கு உறுதுணையாய் நிற்பதே உலகியல் பற்றிய கேள்வி; (என்றது, யாண்டும் உயிர் உடம்பொடு நிற்றலாகிய பிறப்பு நிலையை நீக்க மாட்டாது; அதன்கண் சில நன்மையைத் தருவதே என்றபடி) இனி உயிரோடு ஒட்டி நிற்கும் துணையாவன சிவபெருமானது திருவடிச் சிந்தனையைத் தூண்டும் சிவநெறிக் கேள்விகளே; பெறுதற்குரிய துணையாகிய அக்கேள்வியைக் கேட்டபின், பிறப்பு இறப்புக்கள் இல்லாத வீடு கூடுவதாம். உலகுறு*

**307.** புகழநின் றார்க்கும் புராணன்எம் ஈசன்
இகழநின் றார்க்கும் இடும்பைக் கிடமா
மகிழநின் றாதியை ஓதி உணராக்
கழியநின் றார்க்கொரு கற்பசு வாமே. **9**

---

கேள்வி - உலகம் எதற்காக எவ்வாறு வந்தது என்பதைப் பற்றி ஆயுங் கேள்வி.

*குறிப்புரை :-* "ஆவது" என்ற ஒருமையால், 'உயிர் உடம்பிற்குத் துணையாவது, உடம்பு உயிர்க்குத் துணையாவது' எனத் தனித்தனி உரைத்தல் கருத்தாயிற்று. இத்தொடரின்பின், 'அதற்கு' என்பது எஞ்சி நின்றது. சிந்தை, ஆகுபெயர். பெறுதுணை - சிவனடியைத் துணையாகப் பெறும் காலஅளவு முத்திப்பேறு வரையில் என்பதாம்.

இதனால், 'சிவநெறிக் கேள்வியே விழுமியது' என்பது கூறப்பட்டது.

**307.** *தெளிவுரை :-* எங்கள் சிவபெருமான், ஒருப்பட்டு நிற்கும் அன்பர்க்கும், ஒருப்படாது முரணி, இகழ முற்பட்டு நிற்கும் வன்பர்க்கும் மூதாதையே, எனினும் தம்மொடு மேவாத மைந்தரிடத்து அன்பு செய்யாத தந்தையர்போல, தன்னை இகழ்ந்து, தனது பெருமையை மகிழ்ச்சியுண்டாகக் கற்றும் கேட்டும் உணராது நீங்கி நிற்பார்க்குத் துன்பத்திற்கு ஏதுவாக, பால் கறவாத கற்பசுப்போல அருள்செய்யாது நிற்பன்.

*குறிப்புரை :-* 'புகழ நின்றார்க்கும், இகழ நின்றார்க்கும் புராணன் எம் ஈசன்' எனவும், 'கழிய நின்றார்க்கு இடும்பைக் கிடமாக் கற்பசுவாம்' எனவும் கூட்டுக. இனி, 'இடும்பைக் கிடமா கழிய நின்றார்க்கு' என இயைத்தலுமாம். "கற்பசுவாம்" என்றதில் ஆக்கம், உவமை குறித்து நின்றது. 'கேட்டு' என்பது அதிகாரத்தால் வந்தது. 'உணராது' என்பது ஈறு குறைந்து நின்றது. ஒன்று - சிறுமை; பயன்படாமை. "கழிய நின்றார்க்குக் கற்பசுவாம்" எனவே, கழியாது பற்றி நின்றார்க்குப் பாற்பசுவாதல் பெறப்பட்டது. கற்பசு - கல்லில் செதுக்கிய பசு.

இதனால், சிவநெறிக் கேள்வியுடையோர் பேரின்பம் எய்தலும், அஃது இல்லாதார் அதனை எய்தாமையும் கூறப்பட்டன.

**308.** *தெளிவுரை :-* சிவபெருமானை மனம் ஒருங்கி உணர்ந்தவனே அப்பெருமானை மனத்தால் நினைத்தும், வாயால் வாழ்த்தியும் அவன் திருக்குறிப்போடு ஒத்து உணர்ந்தவன் ஆவான். அவனுக்கு உடற் கூறுகள் தம்மில் ஒவ்வாறு நிற்ப, உடலாகிய தேரைத்

308. வைத்துணர்ந் தான்மனத் தோடும்வாய் பேசி
ஒத்துணர்ந் தான்உரு ஒன்றொடொன் றொவ்வா
தச்சுழன் றாணி கலங்கினும் ஆதியை
நச்சுணர்ந் தார்க்கே நணுகலு மாமே. 10

---

*தாங்குகின்ற உயிராகிய அச்சு உழன்று, அவ்வச்சிடத்து அத்தேரின் ஆழியை நிலைபெறுத்தும் ஊழாகிய கடையாணியும் கழன்றாலும் அவன் சிவபெருமானைத் தப்பாது அடைவான்.*

***குறிப்புரை :-*** *"ஆதியை, மனம்" என்பன முதலிலும் சென்று இயையும், "வைத்துணர்ந்தான்.. ஒத்துணர்ந்தான்" என்றதனால், வாளா நினைத்தலும், வாழ்த்தலும் செய்வார் அதனை உண்மையாற் செய்தவர் ஆகாமை பெறப்பட்டது. 'கல்வி கேள்விகளானன்றி அறியாமை நீங்காமையின், அவை இல்லாது செய்வது அறிவின் வழிப்பட்ட தாகாது, ஏரல் எழுத்துப் போல்வதொரு விழுக்காடாம்' என்பது கருத்து. இஃதே பற்றி,*

*கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்*
*கொள்ளார் அறிவுடை யார். - (குறள். 404)*

*எனவும்,*

*"தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால்" - (குறள். 249)*

*எனவும் கூறினார் திருவள்ளுவர். இங்ஙனம் கூறவே, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் ஆயிற்று.*

*ஞானத்தால் தொழுவார் சிலஞானிகள்;*
*ஞானத்தால் தொழுவேன்உனை நானலேன்;*
*ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு,*
*ஞானத்தாய் உனை நானும் தொழுவனே. - (தி.5 ப.91 பா.3)*

*என்றருளியதும் இப்பொருட்டு.*

*சிவபெருமானது திருக்குறிப்பு, உயிர்கள் தன்னை ஞானத்தால் அடைதல் வேண்டும் என்பதேயாதலின், வைத்துணர்ந்தான் ஒத்துணர்ந்தானாவன். இவ்வொருமைச் சொற்கள் இனத்தின் மேல் நின்றன. இதனை 'ஒருபால் வழக்கு' (தொல். பொருள். 218) என்பர் தொல்காப்பியர். உரு - உடம்பு; என்றது அதன் கூறுகளை. அவை வாத பித்த ஐ முதலியவை. "ஒவ்வாது" என்றதின்பின் 'ஆக' என்பது வருவிக்க. 'உழன்று' என்னும் எச்சம் எண்ணின்கண் வந்தது. 'நச்சி' என்பதன் இகரம் தொகுத்தலாயிற்று. ஏகாரம் இரண்டனுள் முன்னது தேற்றம்; பின்னது ஈற்றசை. 'உணர்ந்தார்க்கு' என்பது பாடம் அன்று, அறிவால் தன்னை அடைந்தாற்கு.*

## 25. கல்லாமை

309. கல்லாதவருங் கருத்தறி காட்சியை
வல்லா ரெனில் அருட் கண்ணான் மதித்துளோர்
கல்லாதார் உண்மைபற் றாநிற்பர் கற்றோருங்
கல்லாதார் இன்பங் காணகி லாரே. 1

---

*'புலன் ஐந்தும், பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐ மேல் உந்தி, உயிர் அலமரும் நிலை', வந்ததாயினும், அவரைச் சிவபெருமான், 'அஞ்சேல்' என்று அருள்செய்வான் (தி.1 ப.130 பா.1) ஆகலின், "நச்சி உணர்ந்தார்க்கே நணுகலும் ஆம்" என்றார்.*

*இதனால், சிவபெருமானைக் கல்வி கேள்விகளின் வழி அடைதலே சிறந்தது என்பது வலியுறுத்தப்பட்டது.*

*இனி, அக்கல்வி கேள்விகளின் மறுதலையாகிய கல்லாமையது குற்றம் பத்துத் திருமந்திரங்களாற் கூறி, மேலனவற்றை வலியுறுத்து கின்றார். கற்றவரன்றிக் கல்லாதவரே கேட்டலின் விருப்பம் இல்லாதவராவர். கல்லாமையின் இழிவு கூறி எதிர்மறை முகத்தானும் கற்றலின் இன்றியமையாமையை உணர வைக்கிறார்.*

**309. *தெளிவுரை :-* *கல்லாதவரும் கருத்தறிகாட்சியை வல்லார் எனில் - ஆசிரியர்பால் சென்று முறையாய்க் கற்காமல் பண்டைய தவத்தால் அவர்களது கருத்தில் தெய்வக்காட்சியை உணரவல்லா ராயின், அருட்கண்ணான் மதித்துளோர் - அவர்கள் இறைவன் அருளால் அநுக்கிரகம் செய்யப்பெற்றவராவர், கல்லாதார் உண்மை பற்றா நிற்பர் - இத்தகையோர் (அனுபவமுடையோர்) உலகைப் பற்றாமல் சிவத்தைப் பற்றி நிற்பர், கற்றோரும் கல்லாதார் இன்பம் காணுகிலார் - முறையாய்க் கல்வி கற்றோரும் கல்லாதவராய்க் கருதப்பட்டவர் பெற்ற சிவானுபவத்தை அடைவதில்லை.***

***குறிப்புரை :-*** *கருத்தறி காட்சி - கருத்தில் புலனாகும் காட்சிப் பொருள். அருட்கண்ணான் - சிவன்.* ***கற்றறிந்தோரும் உண்மை அனுபவம் இல்லாதவர் எனில் கல்லாதவரேயாவர்.***

*இதனால், கல்லாமை எவ்வாற்றானும் கடியப்படும் குற்றமாவதன்றி, ஒருவாற்றானும் கொள்ளப்படும் குணமாகாமை கூறப்பட்டது.*

**310. *தெளிவுரை :-* *கல்வி கேள்விகளில் வல்லவர்கள் மெய்ந்நெறியை ஒன்றாகத் துணிந்து அதன்கண் பொருந்தி உயர்வர்,***

**310.** வல்லார்கள் என்றும் வழியொன்றி வாழ்கின்றார்
அல்லாதவர்கள் அறிவு பலஎன்பார்
எல்லா இடத்தும் உளன்எங்கள் தம்இறை
கல்லா தவர்கள் கலப்பறியாரே. **2**

**311.** நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்காள்
எல்லா வுயிர்க்கும் இறைவனே யாயினும்
கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே. **3**

---

*அவ்வன்மை இல்லாதவர்கள் மெய்ந்நெறியைப் பலவாகக் கண்டு தடுமாற்றம் எய்தி ஒன்றினும் நில்லாது தாழ்வார். அதனால் எங்கள் சிவபெருமான் எங்கும் நிறைந்து நிற்பினும்; கல்லாதவர் அவனை அடையும் நெறியை உணரமாட்டார்கள்.*

***குறிப்புரை :-*** *'வழி, அறிவு' என வேறு வேறு நின்ற இருசொற் களையும் ஏனையிடத்தும் கூட்டி, ஈரிடத்தும் 'அறிவு வழி' என உரைக்க. "பல என்பார், வாழ்கின்றார்" என்பவற்றால், ஒன்றெனலும், தாழ்தலும் பெறப்பட்டன. "இறை" என்பதன் பின் 'ஆயினும்' என்பது எஞ்சி நின்றது. ஐய உணர்வு உள்வழியும் மெய்ப்பொருட் காட்சி நிகழாதாகலின், 'அவர் கலப்பறியார்' உள்வழி என்றார். "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கே வானம் நணித்து" (குறள். 453) என்றார் திருவள்ளுவ நாயனாரும்,*

*இதனால் கல்வி, கேள்வி இல்லாதார்க்கு ஐயம் நீங்குமாறின்மை கூறப்பட்டது.*

***311. தெளிவுரை :-*** *நிலைபெறாத இயல்பினை உடைய பொருள் களையே நிலைபெற்ற பொருள்களாக நெஞ்சில் நினைத்து, அதனானே, நிலைபெறாத உடம்பையும் நிலைபெற்றதாக நினைக்கின்ற புல்லறிவாளரே, எங்கள் சிவபெருமான் எல்லா உயிர்கட்கும் முதல்வன் என்பது உண்மையேயாயினும், உம்மைப் போலக் கல்லாத புல்லறிவாளர் நெஞ்சில் அவனைக் காண இயலாது.*

***குறிப்புரை :-*** *'கற்றவர் நெஞ்சில் மட்டுமே காண இயலும்' என்பதாம். நிலை - இயல்பு; அஃது அதனை உடைய பொருளைக் குறித்தது. "நெஞ்சத்து" என்றதன்பின், 'நினைத்தலால்' என்பது எஞ்சி நின்றது.*

*நில்லாத வற்றை நிலையின என்றுணரும்*
*புல்லறி வாண்மை கடை. - (குறள். 331)*

**312.** கில்லேன் வினைதுய ராக்கும் அயலானேன்
கல்லேன் அரனெறி கல்லாத் தகைமையின்
வல்லேன் வழங்கும் பொருளே மனத்தின்உட்
கல்லேன் கழியநின் றாடவல் லேனே. **4**

---

*என்ப ஆகலான், நில்லாக் குரம்பை நிலையென்றுணர்தல் புல்லறி வாண்மை யாதலும், "கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை" (தி.8 கண்டபத்து, 4) என்றமையால், கல்லாதார்க்கு உள்ளது அப் புல்லறிவே என்பதும் பெறப்பட்டன. மேலைத் திருமந்திரத்துள், "எங்கள்தம் இறை" என்றது இதனுள்ளும் வந்து இயைந்தது.*

*"ஒண்ணாதே" என்னும் ஏகாரம் தேற்றம்.*

*இதனால், கல்வி கேள்வியில்லாதார்க்கு உளதாவது புல்லறிவே (திரிபுணர்வே) என்பது கூறப்பட்டது. கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்.*

**312. *தெளிவுரை :-* *நான் சிவன்நெறியைக் கல்லாதிருக்கும் தன்மையர் முன் கல்வி இல்லாதவனாய்த் தோன்றுகின்றேன். அதனால், அவர் போல வினையைச் செய்ய வல்லேனல்லேன்; உலகியலில் நின்று துன்புறுவார்க்கும் அயலாகினேன். கிடைத்த பொருளைப் பலர்க்கும் வழங்க வல்லனாயினேன்; அதனால், எதற்கும் மனத்தில் அச்சங் கொள்ளமாட்டேன்; இவற்றால் பற்றுக்கள் பலவும் நீங்கி நின்று களிநடம் புரிய வல்லேனாயினேன்.***

***குறிப்புரை :-* *கில் என்பது ஆற்றல் பொருளைத் தரும் இடைச்சொல், அதனடியாகப் பிறந்த வினைமுற்று கில்லேன் என்பது. திருவருள் வழியே நிற்றலைக் கில்லென் எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது. வினைத்துயர் ஆக்கும் மயல் ஆனேன் - பிராரத்த வினையை நுகரும்போதே யான் செய்தேன்; இவர் செய்தார் என்று அகந்தையால் அழுந்தி அனுபவிக்க மேல்வினையேறுதலின் வினையும் அதனால் துன்பமும் விளைவதாயிற்று என்பதாம்.***

***அரனெறி - அரனால் ஆன்மாக்களுய்ய அருளிச் செய்யப்பட்ட சரியையாதி மார்க்கங்கள் அறியாத் தகைமையின் - ஆணவத்தின் செயலால்.***

***வழங்கும் பொருளே வல்லேன் - இன்ப ஏதுவாக இந்த உலகில் வழங்கும் பொருளைச் சேர்ப்பதிலேயே வல்லேன். பிறர்க்குக் கொடுப்பதற்கென்றே உதவப் பெற்ற பொருளை வழங்காது சேர்ப்பதில் வல்லேன் என்றும், ஐம்புல வாயிலாகப் பொருளை அறிய வல்லேன் என்றும் உரைப்பாரும் உளர். அன்றி, அறியாத்தகைமையின் வல்லேன்; வழங்கும் பொருளே (நின்னை) மனத்தினுட்கல்லேன் எனப் பிரித்துக்***

**313.** நில்லாது சீவன்நிலையன் றெனவெண்ணி
வல்லார் அறத்தும் தவத்துளும் ஆயினார்
கல்லா மனித்தர் கயவர் உலகினில்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே. **5**

---

*கூட்டி, அறியாமையில் வல்லேன்; எனக்குத் தனு கரண புவன போகங்களை வழங்கும் முதற் பொருளே நின்னை மனத்தினுட் கல்லேன் என உரைத்தலுமாம். இரண்டாம் அடியை முதலில் கொண்டு உரைக்க. தகைமை - தன்மை; தன்மை உடையாரை 'தன்மை' என அஃறிணையாகக் கூறினார்; இழிபு பற்றி 'அறியாத் தன்மையர்முன் கல்லேனாகின்றேன்' என்றதனால், 'அறிந்த தன்மையர் முன் கற்றேனாய் விளங்குகின்றேன்' என்பது போந்தது. இதனால், கற்றாரைக் கல்லாதார் அறிவிலர் என்று இகழ்தல் பெறப்பட்டது. அதனை,*

> *உருவமும், உணர்வும், செய்தி ஒத்திரா; கன்மம் என்னின்*
> *மருவுகை விரல்கள் தம்மின் வளர்வுடன் குறைவுண்டாகி*
> *வருவதிங் கென்ன கன்மம் செய்துமுன்? மதியி லாதாய்,*
> *பெருகுபூ தங்கள் தம்மின் மிகுகுறைப் பெற்றி யாமே.*
>
> *- (சிவஞானசித்தி பரபக்கம், உலகாயதன் மதம் - 9)*

*என்பார் போல்பவரிடத்துக் காண்க.*

> *சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்*
> *பேணிக்கொள் வேமென்னும் நோக்கு - (குறள் 976)*

*என்றார் திருவள்ளுவரும் 'வினை கில்லேன், தகைமையின் கல்லேன், பொருளே வல்லேன்' என முன்னே கூட்டி முடிக்க, "தகைமையின்" என்பதில் சாரியை நிற்க, 'முன்' என்னும் பொருட்டாய கண்ணுருபு தொக்கது "வழங்கும் பொருளே வல்லேன்" என்றாராயினும், 'பொருள் வழங்கவே வல்லேன்' என்றல் கருத்து என்க. 'உட்கலேன்' என்பது விரித்தல் பெற்றது.*

*இதனால், கல்லாதார் வினை செய்தல், துயர்ப்படல், இவறன்மை, சாக்காடு முதலியவற்றிற்கு அஞ்சுதல் என்னும் குற்றங்களை உடையராதல், எதிர்மறை முகத்தாற் கூறப்பட்டன.*

***313. தெளிவுரை :-** கற்று வல்லார், இப்பிறப்பின் நிலையாமையை அறிந்து, 'இல்லறம், துறவறம்' என்னும் இருவகை அறத்துள் தமக்கு இயைந்த தொன்றில் நிற்பர். இனிக் கல்லா மனிதர், கீழ்மக்கள் ஆதலின் தீவினையால் விளைகின்ற துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பர்.*

**314.** விண்ணினின் உள்ளே விளைந்த விளங்கனி
கண்ணினின் உள்ளே கலந்தங் கிருந்தது
மண்ணினின் உள்ளே மதித்து மதித்துநின்
றெண்ணி எழுதி இளைத்துவிட் டாரே. **6**

---

***குறிப்புரை :-*** *சீவன் - உடம்பொடு நிற்கும் உயிர்; என்றது அதன் நிலையை. "அறம்" என்றது துறந்தார் முதலியோர்க்குத் துணை செய்தலை "ஆதலின்" என்பது சொல்லெச்சமாய் நின்றது. போகம் செய்தல் - அனுபவித்தல்.*

*இதனால் கல்லாதார், தம் உயிர்க்கு உறுதி தேடிக்கொள்ளாமை கூறப்பட்டது.*

**314. *தெளிவுரை :-*** *நன்கு கனிந்து இனிதாகிய விளாம்பழம், வானளாவ உயர்ந்த கிளையிலே உள்ளது. அதனைக் கண் உடையவர் கண்டு தக்க வாற்றாற் பெற்று உண்டு களிக்கின்றனர். கண் இல்லாதவர், அதனைச் சொல்லளவால் அறிந்து நிலத்திலே கிடப்பதாக நினைத்து, உதிர்ந்து கிடக்கின்ற கருக்காய், வெதும்பிக் காய்ந்த பிஞ்சு முதலியவைகளைக் கையால் தடவி எடுத்து, இத்துணைய என்று எண்ணித் தொகையை மனத்துட் பதித்து, உண்டு பார்க்கும்பொழுது இனித்தில் இன்றிக் கைத்தும், புளித்தும் நிற்றலைக் கண்டு துன்புற் றொழிகின்றனர்.*

***குறிப்புரை :-*** *'இந்நிலை கண் இல்லாமையான் ஆயதன்றோ' என்பது குறிப்பெச்சம். 'முப்பத்தாறு தத்துவங்களையும், ஆன்ம போதத்தையும் கடந்து அப்பால் உள்ளது எல்லையில்லாத சிவானந்த மாகிய பேரின்பம்; அதனைக் கல்வி உடையவர் அறிந்து தவ ஞானங்களால் அடைந்து திளைக்கின்றனர். கல்வி இல்லாதவர், பேரின்பம் ஐம்புலப் பொருள்களில் உள்ளதாக நினைத்து அவற்றைத் தமக்கு இயலுந் திறத்தால் பல தொழில்வழி முயன்று ஈட்டித் தொகை பண்ணி, அத்தொகையை மறவாமைப் பொருட்டு ஏட்டிலும் எழுதிக் காத்து, அவற்றை நுகருமிடத்துப் பேரின்பம் பயவாது பெருந் துன்பத்தையும், சிறிது இன்பத்தையும் பயந்து நிற்றலை அறிந்து தளர்ச்சி எய்துகின்றார்கள்; இந்நிலை கல்லாமையான் ஆயதன்றோ! என்பது இதனாற் பெறுவிக்கப்பட்ட பொருள், இம் மந்திரம் பிசிச் செய்யுள்.*

**315.** கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடாக் காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்கும்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே.

7

*ஐம்புலப் பொருள்களைத் தேடி இளைத்தலால் பயனில்லை; இறைவன் திருவடியை அடைதலே பயன் தருவது என்பதைத் திருநாவுக்கரசர்,*

*மாடு தேடி மயக்கினில் வீழ்ந்துநீர்*
*ஓடி எய்த்தும் பயனிலை; ஊமர்காள்,*
*சேடர் வாழ்சேறைச் செந்நெறி மேவிய*
*ஆட லான்அடி யேஅடைந் துய்ம் மினே.*

*- (தி.5 ப.77 பா.4)*

*எனக் கல்லாதாரை நோக்கி இரங்கி அருளிச்செய்தமை காண்க.*

**315. *தெளிவுரை :-* *நூல்களைக் கற்றறிந்தவரே அந்நூலறிவால் மெய்ப் பொருளின் இயல்பை உணர்ந்து, பரவெளியில் கலந்து நிற்கும் முறையையும் உணர்கின்றனர். ஆதலின், நூல்களைக் கற்றறியாதவர்க்கு அவை கூடாவாம்.***

***குறிப்புரை :-* *பின் இரண்டு அடிகளை முதலிற் கூட்டி, "கல்வி கற்றறிந்தாரே" என்பதனை முதலிற் கொண்டு உரைக்க. கணக்கு - நூல். அதனை, கீழ்க்கணக்கு, மேற்கணக்கு, கணக்காயர் முதலிய வழக்குக்களான் அறிக. கணக்கு நான்கனுள் முன்னிரண்டும் தொகை என்னும் பொருளிலும், மூன்றாவது எல்லை என்னும் பொருளிலும், நான்காவது அளவு என்னும் பொருளிலும் வந்தது.***

***கணக்கு - தத்துவங்களின் தொகை, அஃதாவது, சிவதத்துவம் ஐந்தும், வித்தியாதத்துவம் ஆறும் ஆன்ம தத்துவம் இருபத்தைந்தும் ஆகிய முப்பத்தாறுமாம், இவற்றை அறிதலாவது ஆன்ம வியாபகத்தைத் தடைப்படுத்துவன என்று அறிதல்.***

***கணக்கு எல்லையாகிய அந்தத்தை அறிந்து, மெய்ஞ்ஞானத்தைக் கண்டு அணுக நிற்கும் அளவை அறிந்தவர்களே சிவஞானம் பயின்றவர் என்பது கருத்து.***

***"உண்மை, அண்டம்" என்பன 'உண்மையைக் காண ஒண்ணாது, அண்டம் காட்சி கைகூடா' என முன்னரும் சென்று இயைந்தன.***

**316.** **கல்லாத மூடரைக் காணவும் ஆகாது**
**கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன் அன்று**
**கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்**
**கல்லாத மூடர்கருத்தறி யாரே. 8**

**317.** **கற்றுஞ் சிவஞானம் இல்லாக் கலதிகள்**
**சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கள்**
**மற்றும் பலதிசை காணார் மதியிலோர்**
**கற்றன்பில் நிற்போர் கணக்கறிந் தார்களே. 9**

---

*உண்மை - மெய்ப்பொருள். அஃது அதன் இயல்பைக் குறித்தது. அண்டம் - பரவெளி. "கைகூடா" என்ற பன்மை, பெறுவாரது பன்மை பற்றி வந்தது.*

*இதனால், கல்லாதார் மெய்ந்நெறியை அறிதலும், அதன் பயனைப் பெறுதலும் இல்லாமை கூறப்பட்டது.*

**316.** **தெளிவுரை :-** *கல்வி இல்லாதவர் மூடரே ஆதலால், அவர் யாதோர் உறுதியினையும் அறியார். அதனால் அவரைக் காணுதலும், அவர் சொல்லைக் கேட்டலும் தகுதியாவன அல்ல. அவர்க்கும், அவர் போலும் கல்லாத மூடரே தக்கவராய்த் தோன்றுதலன்றிக் கற்ற அறிவினர் தக்கவராய்த் தோன்றார்.*

*குறிப்புரை :- கல்லாத மூடர் - கல்லாமையோடு அறியாமையும் மிகுந்தவர்கள், கல்லாமை - பரிபாகமின்மை, மூடம் இயற்கையேயுள்ள மறைப்பாகிய அஞ்ஞானத்தால் அறிவு தொழிற்படாது அடங்கியிருத்தல்.*

*கல்லாதார் - சிவஞானம் பயிலாதார். இவர்கள் பரிபாகம் இன்மையால் உண்மை ஞானத்தை உணர மாட்டாரேயன்றித் தீமை செய்யார்; மூடர்கள் அதுவும் செய்வர் ஆதலின் கல்லாதார் நல்லர் என்றார். கருத்த - உண்மை ஞானம். அதுவே திருவுளக் கருத்து. ஈற்றடியை முதலிற்கொண்டு உரைக்க. அதன் இறுதியில் 'ஆதலால்' என்பது எஞ்சி நின்றது. "காணவும்" என்ற உம்மை இழிவு சிறப்பு. இழிவு, காட்சியளவில் பெறுவதும் தீமையேயாதல்.*

*இதனால், கல்லாதாரால் உலகிற்குத் தீங்கு உண்டாதல் கூறப்பட்டது.*

**317.** **தெளிவுரை :-** *சிவநூல்களைக் கற்றும், அவற்றை மனம் பற்றி ஒழுகாதவர், அடுத்தாரைக் கெடுக்கும் முகடிகளாவர். அவர்*

**318.** ஆதிப் பிரான்அம ரர்க்கும் பரஞ்சுடர்
சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்
ஓதி உணரவல் லோம்என்பர் உள்நின்ற
சோதி நடத்தும் தொடர்வறி யாரே. 10

---

*தாமேயும் புறப்பற்றும், அகப்பற்றும் விட அறியார்; அவ்விருவகைப் பற்றும் விட்ட அறிவர் பலர் பலவிடங்களில் இருத்தலைக் கண்டும் அவற்றை விட அறியார். அதனால் அவர் கற்றும் கல்லாத மூடரே யாவர். ஆதலின், கற்றவண்ணம் ஒழுகுபவரே கற்றறிவுடையோராவர்.*

*குறிப்புரை :-* 'ஞானம், அன்பு' என்பன அவற்றின்வழி நிகழும் ஒழுக்கத்தின்மேல் நின்றன. கல்லாது ஒழுக்கம் இல்லாதார், தம் தீயொழுக்கத்தை, 'நல்லது' என மருட்ட வகையறியார்; கற்று ஒழுக்கம் இல்லாதார் அவ்வகையை நன்கறிவராகலின் அவரை, 'மூடர்' என்று மட்டும் கூறியொழியாது, "கலதிகள்" என்றும் இகழ்ந்தார். 'மேலைத் திருமந்திரத்துள் கூறப்பட்ட **கல்லாதாரால் உலகிற்கு உளவாகும் தீங்கினும், இக் கற்றாரால் உலகிற்கு உளவாகும் தீங்கு பெரிது' என்பது கருத்து,** 'விடார்' என்பது நீண்டு நின்றது. 'வீடார்' என்றே கொண்டு, உடைமையது தொழில். உடையார்மேல் ஏற்றப்பட்டது எனலுமாம். துரிசு - மனமாசு, திசை, ஆகுபெயர், "மூடர்கள், மதியிலோர்" என இருகாற் கூறியது, தாமே உணர்தலும், பிறரைக் கண்டு உணர்தலும் ஆகிய இரண்டும் இலர் என்றற்கு.

*ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்*
*பேதையிற் பேதையார் இல். - (குறள் 834)*

என்றார் திருவள்ளுவரும், நிற்போரே கணக்கறிந்தார்கள் என ஏகாரத்தைப் பிரித்துக்காட்டி உரைக்க.

இதனால், நூலைக் கற்றும் ஒழுக்கத்தைக் கல்லாதவர் கல்லாதவரே; கற்றவராகார் என்பது கூறப்பட்டது.

**318.** ***தெளிவுரை :-*** உயிர்க்கு உயிராய் அவற்றது அறிவினுள் நிற்கும் பேரறிவாகிய முதற்பொருள், பெத்தம், முத்தி இருநிலையினும் அவ்வாறு நின்று நடத்தும் அருள் தொடர்பினை அநுபவத்தால் அரிய மாட்டாதார், 'யாம் முதல்வனது இயல்பு அனைத்தையும் கல்வி கேள்விகளானே முற்ற உணரவல்லோம்' என்று கூறுவர். ஓதுதல் - கற்றல். உணர்தல் - தெளிதல். முன்னதும், பின்னதும் கூறவே கேட்டல், சிந்தித்தல்களும் அடங்கும் என்றவாறு.

***குறிப்புரை :-*** *'அது நிரம்பாது' என்பது குறிப்பெச்சம். 'உள்நின்ற சோதி' என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. 'ஆதிப்பிரான்' முதலிய நான்கும் முதல்வனது இயல்பை வகுத்தோதியவாறு. ஆதிப்பிரான் முதற்கடவுள்; வேறு பலரைத் தொழிற் கடவுளாக நிறுத்தி உலகை நடத்துபவன். அமரர்க்கும் பரஞ்சுடர் - தேவர்க்கும் நெறிகாட்டும் மேலான விளக்கு. சோதி - எல்லையில் பேரொளி. அடியார் தொடரும் பெருந்தெய்வம் - தன்னை அடைந்தவர் விடாது தொடர்வதற்குக் காரணமான இன்பப் பெருக்கினை உடையவன். இதன்பின், 'அவனை' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால், கல்வியின் நிறைவாகிய அனுபவம் இல்லாதாரும் ஓராற்றாற் கல்லாதவரேயாதல் கூறப்பட்டது.*

## 26. நடுவு நிலைமை

319. நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானும்நின் றேனே. 1

---

*அறங்கள் பலவற்றுள் நடுவுநிலைமை அறங்கூறவையத்தார்க்குச் சிறப்பாக உரித்தாகலானும், அவ் அவையத்துக் கற்றவர் இருப்பினும், நடுவுநிலைமை நிலைபெறுவதும், கல்லாதர் இருப்பின் அது நிலைபெறாதொழிவதுமாம் ஆதலின், அது கல்வி கல்லாமைகளோடு இயைபுடைத்தாகலானும் அவற்றின் பின் 'நடுவுநிலைமை' என்னும் அறத்தின் சிறப்பினை மூன்று திருமந்திரங்களான் உணர்த்துகின்றார்.*

319. ***தெளிவுரை :-*** *நடுவுநிலைமையிற் பிறழாதவர் ஒருபோதும் நரகம் புகார். தேவராய்த் துறக்கம் புகுதலும் செய்வர்; அதுவேயன்றி ஞானமும் பெற்று வீடெய்துவர். அதனால், நானும் அவர் வழியிலே நிற்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *ஞானம் பெறுதல் இறுதியிற் கூறற்பாலதாயினும், சிறப்புப்பற்றி முன்னர்க் கூறினார். அதனை எதிர்மறை முகத்தாற் கூறியது. 'துறவறத்திற்கு முதலாகிய அருளுடைமை நடுவு நிலைமை இன்றியமையாச் சிறப்பிற்று' என்பது உணர்த்தற்கு. அது,*

*தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூன்உண்பான்*
*எங்ஙனம் ஆளும் அருள். - (குறள். 251)*

*தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ*
*மன்னுயிர்க் கின்னா செயல். - (குறள். 318)*

*என்றாற்போல்வனவற்றால் அறியப்படும். உம்மைகள் எச்ச உம்மைகள்.*

320. நடுவுநின் றான்நல்ல கார்முகில் வண்ணன்
நடுவுநின் றான்நல்ல நான்மறை யோதி
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவார்
நடுவுநின் றார்நல்ல நம்பனு மாமே. 2

நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரும மாவர்
நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு நானும்நின் றேனே.

321. தோன்றிய எல்லாந் துடைப்பன் அவன்அன்றி
ஏன்றுநின் றாரென்றும் ஈசன் இணையடி
மூன்றுநின் றார்முதல் வன்திரு நாமத்தை
நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே. 3

---

320. ***தெளிவுரை :-*** *நடுவுநிலைமை பிறழாதவர் மால் அயனாம் நிலைகளைப் பெறுதலேயன்றிச் சிவஞானிகளாய்ச் சிவமாந் தன்மையையும் பெறுவர்.*

***குறிப்புரை :-*** *“ஓதி” என்பது பெயர். “கார் வண்ணன், மறை யோதி” என்னும் ஈரிடத்தும் ‘ஆவன்’ என்பது எஞ்சி நின்று. அவற்றோடு இயைய, ‘‘நடுவு நின்றான்’’ என ஒருமையாற் கூறினாராயினும், ஏனையபோலப் பன்மையாற் கூறுதலே கருத்து என்க. இனி ‘கார்வண்ணன், மறையோதி’ என்பவற்றை எழுவாயாக்கி, அவற்றை ‘நின்றான்’ என்பவற்றோடு முடிப்பாரும் உளர். ‘நடுவுநின்றார்’ என்று ஒழியாது, “சிலர்” என்றது, ‘நடுவுநிற்றல் அரிது’ என்பது உணர்த்துதற்கு, ‘சிவமாதல் ஞானம் இன்றி அமையாது’ என்றற்கு அதனை இடையே விதந்தோதினார்.*

*இவ்விரண்டு திருமந்திரங்களானும் நடுவுநிற்றலின் பயனே கூறப்பட்டது.*

*பதிப்புக்களில் இதன்பின் காணப்படும் பாடல் இடைச் செருகல்.*

321. ***தெளிவுரை :-*** *தோன்றிய பொருள்கள் அனைத்தையும் ஒடுக்குபவன் சிவபெருமானே, அதனால் ‘அயன், அரி, அரன்’ என்னும் பிறர் மூவரும் என்றும் அவனது ஆணையை ஏற்று நிற்பவரே. ஆதலின், அம்மூவர்க்கும் முதல்வனாகிய சிவபெருமானது திருப்பெயராகிய*

*திருவைந்தெழுத்து மந்திரத்தையே, 'மற்றுப் பற்றின்றிப்' (தி.7 ப..48 பா.1) பற்றி நிற்பவரே உண்மையான நடுவு நிற்பவராவர்.*

***குறிப்புரை :-*** *சிவபெருமானே முதற்கடவுள் என்பது உரை யளவையான் அன்றிப் பொருந்துமாற்றானும் துணியப்படும் என்றற்கு, "தோன்றிய எல்லாம் துடைப்பன் அவன்" என்றார். 'எல்லாவற்றையும் ஒடுக்கியபின், எஞ்சிநிற்பவன் அவற்றை ஒடுக்கியவனே ஆதலாலும், அவனை ஒடுக்குவார் பிறர் இன்மையாலும், 'ஒடுக்கக் காலத்தில் வேறு சிலரும் ஒடுங்காது நிற்பர்' எனின், அதனை 'முற்றழிப்புக் காலம்' (சருவ சங்கார காலம்) என்றல் கூடாமையானும் ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றுவிப்பவன் ஒடுக்குபவனேயாதல் தெற்றென விளங்கும்; விளங்கவே, ஒடுக்கத்தைச் செய்பவனே உலகத்தைத் தோற்றி நிறுத்தி ஒடுங்கும் முதற்கடவுள் என்றற்கு ஓர் ஐயமில்லையாம்' என்பது கருத்து.*

*'வெந்த சாம்பல் விரையெனப் பூசியே*
*தந்தை யாரொடு தாய் இலர்' - தி.3 ப.54 பா.3*

*என்ற திருப்பாசுரத்திற்கும் இதுவே கருத்து என்றார் சேக்கிழார். (தி.12 பெ.பு. திருஞான. 828 : 829) எனவே, "ஈமம்இடு சுடுகாட்டகத்தே - ஆகம் குளிர்ந்தன லாடும் எங்கள் அப்பன்" (அம்மை மூத்த திருப்பதிகம் 1,3) என்றாற்போலும் திருமொழிகளில் சிவபெருமானைச் சுடுகாட்டில் ஆடுவானாகக் கூறுதலின் உண்மையும், முற்றழிப்புக் காலத்தில் அவன் ஒருவனே நின்று, ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றுவிக்குமாற்றை எண்ணுதலே யாதல் விளங்கும். இவ்வுண்மை உணரமாட்டாதார், "கோயில் சுடுகாடு" (தி.8 திருச்சாழல், 3) என்பதற்கு, 'திருக்கோயில்கள் பலவும் பெரியாரை அடக்கம் செய்த சமாதிகள்' என்பதே பொருள் எனக் குழறிவழிவாரும், 'உருத்திரன் கோயில் மயானபூமி யாதலின், அதனுட் புகலாகாது' எனக் கூறி எரிவாய் நிரயத்திற்கு ஆளாவாரும் ஆவர் என்க. இங்ஙனம் பலவாற்றானும் உண்மை விளங்கி நிற்றல் பற்றியே, மெய்கண்ட தேவர்,*

*"அந்தம் ஆதி என்மனார் புலவர்"*
*- (சிவஞானபோதம், சூ. 1)*

*என்றும்,*

*"சங்காரமே முதல்"*
*- (சிவஞானபோதம் அதிகரணம்-3)*

*என்றும் அறுதியிட்டுரைத்தார்.*

*செய்யுளாதலின், "அவன்" எனச் சுட்டுப் பெயர் முன் வந்தது. "அன்றி" என்பது, 'மற்று' என்னும்பொருட்டு, மூன்று நின்றார் - மூன்று என்னும் எண்பெற நின்றார். இதனை முன்னருங் கூட்டுக. தோன்றிய எல்லாம் துடைப்பன் ஈசன்; அன்றி மூன்று நின்றார், என்றும் அவன் இணையடி ஏன்று நின்றார்; அதனால், அம்மூன்று நின்றார்க்கும் முதல்வன் திருநாமத்தை நான்று நின்றாரே நடுவாகி நின்றார்' என இயைத்துரைக்க.*

*'பலரது வழக்குகளைக் காய்தல், உவத்தல் இன்றி நடுவு நின்று ஆராய்ந்து உண்மை கண்டு கூறுவார், இச்சமய வழக்கினையும் அவ்வாறு ஆராய்ந்து கண்டு கூறாதொழியின், அவர்க்கு நடுவு நிலைமை நிரம்பாது' என்பதாம்.*

*இதனால், உண்மை நடுவு நிலைமை இது என்பது கூறப்பட்டது.*

## 27. கள்ளுண்ணாமை

322. கழுநீர்ப் பசுப்பெறிற் கயந்தொறும் தேரா
கழுநீர் விடாய்த்துத்தங் காயஞ் சுருக்கும்
முழுநீர்க் கள்ளுண்போர் முறைமை அகன்றோர்
செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே. 1

---

*இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்*
*திருநீக்கப் பட்டார் தொடர்பு. - குறள், 920*

*என்றவாறு, 'வரைவின் மகளிர் கூட்டம், கள்ளுண்டல், சூதாடல்' என்னும் தீயொழுக்கங்கள் பெரும்பான்மையும் பொருட்கேட்டிற்குக் காரணமாதலின், பொருள் நூலிலே கடியப்படுவன வாயினும், பொருட்கேடு வாயிலாகப் பிற பாவங்களையும் உளவாக்குதல் பற்றி அறநூலிலும் கடியப்படுவனவாம். அவ்வாற்றால் வரைவின் மகளிர் கூட்டத்தை ஏனை அறங்கூறும் வழி விலக்கிய நாயனார்க்கு ஏனைக் கள்ளுண்டலையும் ஆண்டே விலக்குதல் கருத்தாயினும், அது நெறியிலா மக்களால் விரும்பப்படுதலேயன்றி ஒருசார்ச் சமயிகளாலும் விரும்பப்படுதலின் அதனையும் விலக்கல் வேண்டி இத்தந்திரத்துள் இத்துணைப் போதந்து இறுதிக்கண் பதினொரு திருமந்திரங்களால் எடுத்தோதி விளக்குகின்றார். கள்ளுண்டல் அறத்திற்கு வாயிலாகிய பொருளை மட்டுமன்றி எல்லாவற்றிற்கும் வாயிலாகிய அறிவையும் அழித்துக் கேடுபயத்தலால் பெருந்தீவினைகளுள் ஒன்றாக வைத்து எண்ணப்படுவதாயிற்று. 'சூதாடல் பெரும்பான்மையும் பொருள் நூலிலே விலக்கப்படுவது' என்னும் கருத்தால் நாயனார் அதனை எடுத்தோதி விலக்கக் கருதிற்றிலர்.*

322. ***தெளிவுரை :-*** ***பசுக்கள், அரிசி கழுவிய நீரைப் பெற்று உண்டு பழகிவிட்டால், பின்பு குளத்தில் உள்ள தூயநீரை நாடிச் செல்லா; அக்கழுநீர்க்கே விடாய்த்துக்கொண்டு உடல் மெலியும். அத்தன்மையவாய பசுக்கள் தம் இயல்பின் நீங்கினவாம். அதுபோல, கள்ளினைச் சுவையும், வலிமையும் நிறைந்த பருகுபொருளாக (பானமாக) நினைத்துக் கள்ளுண்பவர் மக்கள் இயல்பின் நீங்கினோராவர். மற்று, வளமையுடைய பருகுபொருள், சிவபெருமானது திருவடி இன்பமாகிய தேனே.***

***குறிப்புரை :-*** ***'ஆதலின், அதுவே மக்கள் பருகற்பாலது' என்பது குறிப்பெச்சம். 'ஞானிகள் கள்ளுண்டு களிப்பர்' என்னும் வழக்கிற்குப்***

**323.** சித்தம் உருக்கிச் சிவமாஞ் சமாதியில்
ஒத்த சிவானந்தத் தோவாத தேறலைச்
சுத்தமது வுண்ணச் சுவானந்தம் விட்டிடா
நித்தல் இருத்தல் கிடத்தல்கீழ்க் காலே. **2**

**324.** காமமும் கள்ளுங் கலதிகட் கேயாகும்
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனிதன் இணையடி
ஓமய ஆனந்தத் தேறல் உணர்வுண்டே. **3**

---

*பொருள் இதுவேயன்றிப் பிறிதன்று என்பது மேலே விளக்கப்பட்டது. கழுநீர், வினைத்தொகை. முழுமை - நிறைவு. "முழுநீர், செழுநீர்" என்பவற்றில் நீர், நீர்த்தன்மையுடைய பொருளைக் குறித்தது. முதல் அடியின் உண்மைப் பாடம் வேறாதல் வேண்டும். "கழுநீர் பெறிற்பின் கயந்தேரா தேரா" என்பதாதல் கூடும்.*

*இதனால், கள்ளுண்போர் மாக்களாதல் கூறப்பட்டது. மாக்களே, உண்ணப்படும் பொருளால் பின் விளைவதை அறியாது, கேடு பயக்கும் பொருளையும் உண்ணும் என்க.*

**323. *தெளிவுரை :-* *சித்தத்தைச் சிவன்பாலே வைத்துச் சிவமாய் நிற்கின்ற, அதீத நிலையில் விளைகின்ற சிவானந்தமாகிய தேனே தூய மதுவாம். அதனை உண்டால், இயற்கை இன்பம் நீங்காது நிற்கும். அஃதல்லாத பிற மதுக்களை நாள்தோறும் உண்டு மகிழ்தலும், செயலற்றுக் கிடத்தலும் பிறபொருட் கலப்பாலாகிய செயற்கை விளைவேயாம்.***

***குறிப்புரை :-* சித்தம் உருக்கி - இரும்பை உருக்குதல் போலச் *சித்தத்தைத் தன் தன்மை நெகிழச் செய்து. "சிவானந்தத்து" என்பதில் அத்து, அல்வழிக்கண் வந்த சாரியை. "செயற்கை விளைவு மயக்கமே யன்றி, உண்மையன்று" என்பது கருத்து, 'கீழ்க்காலன' என்பவற்றை, "கீழ்க்கால்" என்றார். கீழ்க்காலன - கீழிடத்தன; இழிந்தன. எனவே, அவற்றை உண்டல் நன்மக்கட்கு ஆகா என்றதாயிற்று. செயற்கையை, 'இழிந்தன' எனவே, 'இயற்கை உயர்ந்தது' என்பது பெறப்பட்டது.*

*இதனால், கள்ளுண்டல் நன்மக்கட்கு ஆகாமை பெறப்பட்டது.*

**324. *தெளிவுரை :-*** *காமக் களிப்பும், கள்ளுக் களிப்பும் கீழ் மக்கட்கே உரியனவாம். அதனால், அவற்றைச் சிறப்பித்துச் சொல்கின்ற,*

**325.** வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்
காமத்தோர் காமக்கள் ளுண்டே கலங்குவர்
ஓமத்தோர் உள்ளொளிக் குள்ளே உணர்வர்கள்
நாமத்தோர் அன்றே நணுகுவர் தாமே. **4**

---

*அறியாமையும் மயக்க உணர்வும் பொருந்திய சமயத்தில் நிற்பவர்க்கு அறிவு அழிவதேயாகும். தூயோனாகிய சிவபெருமானது திருவடியி னின்றும் உண்டாகின்ற, மாசற்ற, நிறைந்த இன்பத் தேனில், அறிவு நிலைபெற்று நிற்கும்.*

***குறிப்புரை :-*** *என்றது, "காமம், கள் என்பவற்றிலும் சுத்த அதீத நிலையிலும் அறிவு நிகழாமை ஒன்றேயாயினும், காமத்திலும், கள்ளிலும் உண்டாகும் இன்பம் அறிவு அழிதலால் யாதும் அறியாது கிடக்கும் துன்பநிலையையே இன்பநிலையென மயங்கும் மயக்கமே. அதீத நிலையில் உண்டாகும் இன்பம் ஞேயப் பொருளையொழிந்த பிறவற்றை அறியாது அதனையே அறிந்து நிற்றலாகிய உண்மை இன்பமாம்" என்றவாறு. கலதிகள் - கீழோர்.*

*மாமலம் - ஆணவம். 'மயலும்' என உம்மை விரித்து, 'மயலும் உறும் சமயத்துள் மதி போவதாகும்' என மாற்றிக் கொள்க. 'இணையடி ஆனந்தத் தேறல்' என இயையும் ஓ - ஓவுதல்; நீங்குதல். மயம் - நிறைவு. 'தேறலின்கண்' என உருபு விரிக்க. கள்ளினை விலக்குவார். ஒப்புமை பற்றிக் காமத்தையும் விலக்கினார்.*

***325. தெளிவுரை :-*** *'சத்தியை வழிபடுகின்றோம்' என்று சொல்லிக் கொள்ளும் அவைதிகராகிய வாம மதத்தினரும், அக் கொள்கை இல்லாதே கள்ளுண்ணும் மடவோர் போலக் கள்ளுண்டு அறிவு அழிபவரேயன்றிச் சிறப்பு ஒன்றும் இலர். இனிக் காமத்தை மட்டும் விரும்புபவர் அறிவு அழியப்பெறாராயினும், மயக்கம் உடையவரே. (ஆகவே, கள், காமம் இரண்டையும் போற்றிக் கூறும் சமயங்களால் உய்தி கூடாது) அவ்விரண்டையும் வெறுத்தொதுக்கும் வைதிக சமயிகளே வழிமுறைக் காலத்தில் அறிவினுள் அறிவாய் நிற்கின்ற முதற்பொருளினுள் ஒடுங்கி அதன் இன்பத்தை நுகர்வர். சிவநாமத்தை உய்யும் வழியாகப் பற்றும் சித்தாந்த சைவர் அவ்வின்பத்தை இடையீடின்றி அப்பொழுதே பெறுவர்.*

***குறிப்புரை :-*** *ஓமத்தோர் - சிவவேள்வி செய்வோர். உள்ளொளிக்கு உள்ளே உணர்பவர்கள் - ஆக்ஞையின் கண்ணே எழும்*

ஒளிக்குள்ளே ஒளியாய் உணர்பவர்கள். நாமத்தோர் - திருவைந் தெழுத்து ஓதுவோர். நணுகுவர் - அணுக்கத்தொண்டராய் அரனடியை அடைவர். தந்திர மார்க்கத்தார் காமம் முதலிய தீயொழுக்கங்களைப் போற்றிக் கொள்ளுதலை,

வாழவே வல்லை, வாமி; வலக்கைதா; என் உயிர்க்குத்
தோழன்நீ; உன்னை ஒப்பார் சொல்லிடின் இல்லை கண்டாய்;
கோழைமா னுடர்தீ தென்னும் கொலைகள வாதி கொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச் சுடரெனத் தோன்றினாயே.

- (சிவஞானசித்தி - பரபக்கம் - உலகாயதன் மதம் - 15)

என்னும் உலகாயதன் கூற்றாலும், அவர் ஒழுகுமாற்றாலும் அறிக; வாமம் முதலிய மதங்கள் தங்கள் நூல்களையும் 'ஆகமம்' என்று சொல்லிக் கொள்வதால், ஆகமங்கள் 'சுரௌதம், அசுரௌதம்' என இருவகைப்படும் எனப் பிரித்து, 'வேதநெறியோடு முரணாத ஆகமங்கள் சுரௌதம்' என்றும், அதற்கு முரணான ஆகமங்கள் 'அசுரௌதம்' என்றும் சொல்லப்பட்டு, அசுரௌதமாகிய ஆகமங்களே 'தந்திரம்' எனவும், அவற்றை உடைய சமயங்கள், 'தந்திர மார்க்கங்கள்' எனவும் விலக்கப்பட்டன. சிலவிடத்து, 'தந்திரம்' என்றும், சிலவிடத்து 'ஆகமம்' என்றும் கூறி அவற்றை இகழும் பகுதிகள் அசுரௌதமாகிய தந்திரங்களை இகழ்வனவேயாம். இவ்வேற்றுமை அறியாதார், சுரௌதமாகிய 'திவ்வியாகமங்கள்' எனப்படும் சைவாகமங்களும் அத்தகையன போலும் என மயங்கிக் கூறியொழிவர். தந்திர மார்க்கங்களும் சைவாகமத்தை ஒருவாற்றால் தழுவுதல் பற்றி ஓரோவிடத்து, 'சைவம்' எனக் கூறப்படுதலால், வேத சிவாகமங்களை யன்றிப் பிறவற்றை முதல் நூலாகக் கொள்ளாத சிவநெறியை, 'வைதிக சைவம்' என அடைகொடுத்து வழங்குதலும் உண்டு. எனவே உண்மை வைதிகத்திற்கும், சைவத்திற்கும் கள்ளுண்டலோடு சிறிதும் இயைபில்லாமை அறிக. இதனால், 'சத்திக்கு உவப்பைத் தருவன கள்ளும் ஊனும்' என்று அவற்றை அவட்குப் படைத்துத் தாமும் உண்டு மகிழ்தல் வைதிகரும், சைவரும் ஆய உயர்ந்தோரல்லாத தாழ்ந்தோர்க்கேயாதல் உணர்க.

வாமத்தோர் - வாம மதத்தவர், இவர்கள் சத்தியே உலக முதல்வி என்று அவளை வணங்குவோர், இதனால், இவர்மதம், 'சாத்தேயம்' எனப்படும். 'அறிவழிதலின் இறந்தாரொடு ஒப்பர்' என்றற்கு, "மாள்பவர்" என்றார். "நஞ்சுண்பார் கள்ளுணர்பவர்" (குறள் 926)

**326.** உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்
வள்ளன்மை நாதன் அருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகஞ் சேர்வுறார்
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே. **5**

**327.** மயக்குஞ் சமய மலமன்னும் மூடர்
மயக்கும் மதுவுண்ணும் மாமூடர் தேறார்
மயக்குறு மாமாயை மாயையின் வீடும்
மயக்கில் தெளியின் மயக்குறும் அன்றே. **6**

---

*என்பது திருவள்ளுவர் வாக்கு. "ஓமத்தோர்" என்றது, 'வைதிகர்' என்றவாறு. பின்னர், 'அன்றே' என்றமையால், முன்னர், 'வழிமுறைக் காலத்தில்' என்பது பெறப்பட்டது. உணர்தல் நணுதல்கட்குச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது.*

**326.** *தெளிவுரை :- கள்ளினை உண்டு களிக்கும் அவைதிகராகிய வாம மார்க்கத்தவர் வேதாகமங்களின் கருத்துக்களை உணர மாட்டாமையின், 'சுரௌதம்' எனப்படும் திவ்வியாகமங்களாகிய சிவாகமங்களில் சொல்லப்பட்ட 'பதி, பசு, பாசம்' என்னும் மூன்று பொருள்கள் உண்மையை உணர்தலும், அவ்வுணர்வால் அவற்றுள் மேலானவனாகிய பதியின் அருளைப் பெற விழைதலும், அவ்விழைவால் சரியை கிரியா யோகங்களாகிய இறப்பில் தவத்தில் நின்று அதன் பயனாகத் தெளிந்த உண்மை ஞானமாகிய சிவஞானத்தைப் பெறுதலும், அச்சிவஞானத் தெளிவினால் சிவனோடு ஏகமாகிய இறைபணி நின்று இன்புறுதலும் இலராவர்.*

*குறிப்புரை :- ஈற்றடியை முதலிற் கொண்டு, 'ஆதலின்' என்பது வருவித்து உரைக்க. சைவாகம ஞானபாதப் பொருள் அடைவைக் கூறி, அப் படிமுறையானே சைவ சமயிகள் பெரும்பயன் பெறுதலையும், தாந்திரிகர்க்கு (தந்திரமார்க்கத்தவர்க்கு) அது கூடாமையும் விளக்கு முகத்தால் அவர் விரும்பும் கள்ளுண்டலை விலக்கினார் என்க. உள்ளாயவற்றை உள் என்றார்.*

327. *தெளிவுரை :- மயக்கத்தைத் தருகின்ற மயக்க நோய், மயக்கம் இல்லாதாரையும் மயங்கச் செய்யும் மருந்தால் நீங்கும் எனக் கூறுவார் கூற்றைத் தெளிந்து அம்மருந்தை உண்ணின் உண்டாவது பெரு மயக்கமேயன்றி வேறுண்டோ! இல்லை. அதுபோல, 'உலகப் பற்றாகிய*

328. மயங்குந் தியங்குங்கள் வாய்மை அழிக்கும்
இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி
முயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்தார்
இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே. 7

---

*மயக்கம், அறிவை மயக்குவதாகிய கள்ளினால் நீங்கும்' எனக் கூறி மயக்குகின்ற அறியாமையையுடைய சமயத்தில் உறைத்து நிற்கும் அறிவிலிகள், அவ்வறியாமையால் அறிவை அழிக்கும் கள்ளை உண்டு மேலும் பேரறியாமையில் அழுந்துவர்; அவரைத் தெளிவித்தல் இயலாது.*

***குறிப்புரை :-*** *பின்னிரண்டு அடிகளை முதலிற் கொண்டு உரைக்க. 'மலச் சமயம்' என்பது பின்முன்னாகநின்றது. "தேறார்" என்பது வேறு முடிபு. "மாமாயை" என்பதும், "மாயை" என்பதும் மாயைபோல மயக்கும் நோயையும், மருந்தையும் குறித்தன. இன், ஏதுப் பொருளில் வந்த ஐந்தாம் உருபு. "வீடும்" என்பதன் பின், 'என்னும்' என்பது வருவிக்க. மயக்கு - மயக்க உரை. தெளியின் - தெளிவு கொண்டால், அன்றே, தேற்றம். 'மாயை மாயையால் நீங்கும்' என்றல், 'நோய் நோயால் நீங்கும்' என்றல்போலும் என்பது கருத்து.*

*'களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்*
*குளித்தானைத் தீத்துரீஇ யற்று' - (குறள். 929)*

*என்றவாறு, கள்ளுண்பார்க்கே உண்மை தெளிவித்தல் கூடாதபொழுது 'அது சமய ஒழுக்கம்' என்பாரைத் தெளிவித்தல் எவ்வாறு கூடும் என்பார், "தேறார்" என்று அறுதியிட்டுக் கூறினார்.*

*இவை நான்கு திருமந்திரங்களானும், 'கள்ளுண்டல் சமய ஒழுக்கமே' என்பாரது கூற்று அடாது என்பது கூறப்பட்டது.*

**328.** ***தெளிவுரை :-*** *தடுமாற்றத்திற்கும், அறியாமைக்கும் ஏதுவாகிய கள், வாய்மை முதலிய நல்லொழுக்கங்களைக் கெடுக்கும். அதனால் அதை உண்பவர் நாணம் இன்றித் தெருவில் திரிகின்ற பொதுமகளிர் இன்பத்தையே பெற்று, தாம் தம் இல்லாளொடு முயங்கிப் பெறும் இன்பத்தைத் தரும் அறிவைத் தலைப்படமாட்டார். அவர்க்கு என்றும் நீங்காத, இடையீடில்லாத இன்பம் உண்டாகுமோ!*

***குறிப்புரை :-*** *வாய்மை, உபலக்கணம்.*

**329.** சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி அழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானம் தன்னில் தலைப்பட்டுச்
சத்திய ஞானஆ னந்தத்திற் சார்தலே. **8**

---

*பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று. - குறள். 913*

*என்பதனால், பொருள் காரணமாகப் பொய்யாக முயங்கும் பொது மகளிரது இன்பம், பொருள் இல்வழி இழக்கப்படுதலேயன்றி உள்ள பொழுதும் உண்மையாவதன்று' என்றற்கு "இடையறா ஆனந்தம் எய்துமே" என்றார். 'வெண்ணெயைப் பெற்றும் நெய்க்கு அழுவான் போல, கற்புடை இல்லாளைப் பெற்றும் அவளால் இன்பத்தைப் பெறாது பொருட்பெண்டிரை நாடித் திரியும் பேதை மகன், கிடைத் தற்கரிய சிவானந்தத்தைப் பெயர்தானும் கேட்டறிவனோ' என்பதும், "இடையறா ஆனந்தம்" என்ற சொல்லாற்றலால் பெறுதும், ஏகாரம், எதிர்மறைப் பொருள் தந்தது. நயங்கொண்ட ஞானம் - நல்ஞானம்.*

*இதனால், கள்ளுண்டல் கழிகாமத்தையும், பொய், களவு முதலிய பல குற்றங்களையும் தருதல் கூறப்பட்டது.*

***329. தெளிவுரை :-** சத்தியின் அருளைப் பெறவேண்டிச் சத்தி மதத்தார் (வாம மதத்தவர்கள்) கள்ளுண்பார்கள். அதன் பயனாக அவர்கள் பெறுவது இயல்பாகத் தமக்கு அமைந்த சத்தியையும் (வலிமையையும்) இழத்தலேயாம். (ஆகவே, அவர்தம் கொள்கை அறியாமை வழிப்பட்டது என்பது தெளிவு. அஃது எவ்வாறு எனில், கள்ளுண்ட பின் அவர் நினைவிழந்து வீழ்ந்து செயலற்றுக் கிடத்தலால்) உண்மையில் 'சத்தி' என்பது சிவபெருமானது அறிவு வடிவாகிய ஆற்றலே; அச்சத்தியால் பெறும் பயன், அதன்வழி நின்று, நிலைபேறும், தெளிவும் உடைய சிவானந்தத்தைப் பெறுதலே.*

***குறிப்புரை :-** "சத்தி" நான்கில் முதலது ஆகுபெயர். 'அச் சமயத்தார்' எனச் சுட்டு வருவிக்க. தன்னில் - அந்த ஞானத்தில். 'சார்தலே பயன்' என ஒருசொல் வருவிக்க. சத்திய ஞான ஆனந்தம் - உண்மையறிவானந்தம் - சச்சிதானந்தம்.*

*இதனால், 'சாத்தேயம்' எனப்படும் மதம் போலியாதல் கூறும் முகத்தால், அவர்தம் ஒழுக்கமாகிய கள்ளுண்டல் கடியப்படுவதாதல் கூறப்பட்டது.*

330. சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாம்
சத்தி அருள்தரிற் சத்தன் அருளுண்டாம்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையு மாமே. 9

331. தத்துவம் நீக்கி மருள்நீக்கித் தானாக்கிப்
பொய்த்தவம் நீக்கிமெய்ப் போகத்துட் போக்கியே
மெய்த்த சுகமுண்டு விட்டுப் பரானந்தச்
சித்திய தாக்குஞ் சிவானந்தத் தேறலே. 10

---

**330.** *தெளிவுரை :-* *சத்திமானும் (சத்தியை உடையவனும்) சத்தியும் தன்மையால் இரண்டாதலல்லது, பொருளால் இரண்டாதல் யாண்டும் இல்லை. (இதனைத் தெரிவிக்கவே, 'சிவன்' என்னாது சத்தன் என்றார்) ஆகவே, சிவமும், சத்தியும் தம்முள் வேறல்லர் என்பது வெளிப்படை. அதனால், முதற்பொருளை அடைய வேண்டுவார், 'சத்தி, சிவம்' ஆகிய இரண்டனையும் ஒப்பக்கொள்ளல் வேண்டுமன்றி, அவற்றுள் ஒன்றனையே புகழ்ந்து கொள்ளுதலும், ஏனையதை இகழ்ந்து நீக்கலும் கூடாவாம். மேற்கூறியவாறு அவ்விரண்டனையும் ஒப்பக்கொண்ட வழியே எப்பயனும் கிடைத்தல் உறுதி.*

*குறிப்புரை :-* *இரண்டிடத்தும் "தரின்" என்பவற்றில் பிரிநிலை ஏகாரங்கள் தொகுத்தலாயின. 'சிவன், சத்தி என்னும் இருவருள் ஒருவர் அருள் இன்றி ஏனையோரது அருள் உண்டாக மாட்டாது' என்பது முதல் இரண்டடிகளில் கூறப்பட்டது. "சத்தி சிவம்" செவ்வெண். "தன்" என்றது, வழிபடுவோனை, சத்தியம் - உண்மை; இது தனிமுடிபு; இதற்கு, 'இது' என்னும் தோன்றா எழுவாய் வருவித்து, இறுதியில் வைத்து உரைக்க. "எண்சித்தி தன்மையும்" என்ற உம்மையால், 'பிறவும்' என உரைக்க. எண்சித்தி, அணிமா முதலியன.*

*இதனால், வாமமதம் போலியாதல் தெளிவிக்கப்பட்டது.*

**331.** *தெளிவுரை :-* *மேல் பலவிடத்தும் சொல்லிவந்த சிவானந்த மாகிய தேன், உயிர், நிலமுதல் நாதம் ஈறாகிய தத்துவங்களே தானாய்த் தன்னை அறியாது நிற்கும் நிலையே முதற்கண் நீக்கி, அதன்பின்னர், தன்னைச் சடமாகிய தத்துவங்களின் வேறாகக் கண்ட உயிர் 'யான் சித்தாகிய பிரமமே' என மயங்கும் மயக்கத்தையும் போக்கிச் சிவமாகச் செய்து, காமியத்தவங்களைக் கைவிடப்பண்ணி, இன்பத்தைத் துய்ப்ப தாகிய அவ்வுயிர் இன்பத்தை கொடுப்பதாகிய சிவத்தின்பால் சென்று*

**332.** யோகிகள் கால்கட்டி ஒண்மதி ஆனந்தப்
போத அமுதைப் பொசித்தவர் எண்சித்தி
மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற்
றாகும் மதத்தால் அறிவழிந் தாரே. **11**

---

*அடங்கி இன்புற வைத்து உடம்பு உள்ள துணையும் நிற்பதாகிய இவ்வுலகத்தின் இன்ப துன்ப நுகர்ச்சியை உடல் ஊழாக நுகர்ந்து கழித்து, உடம்பு நீங்கிய பின்னர்ப் பேரா இன்பப் பெருவாழ்வாகிய பரமுத்தியைத் தலைப்படச் செய்யும்.*

*குறிப்புரை :-* 'ஆதலின், ஏனைநெறிகளை விடுத்து அத்தேனைத் தரும் நெறியாகிய சிவநெறியைப் பற்றிப் பயனடைதல் சமயிகள் பலரும் செய்யத்தக்கது' என்பது குறிப்பெச்சம் வாம மதத்தின் இழிபுணர்த்துவார், ஏனை மதங்களின் சிறப்பின்மையும் உடன் கூறினார். போகம் தருவதனை, 'போகம்' என்றார். மெய்த்த - மெய்யின் கண்ணதான.

இதனால், சிவநெறியது சிறப்புக் கூறும் முகத்தால் பிறநெறிகளது தாழ்வு கூறிக் கள்ளுண்ணும் வாமம் முதலிய மதங்கள் கடியப்பட்டன.

**332.** *தெளிவுரை :-* உண்மை யோகிகள் ஆவார், பிராண வாயுவைத் தடுத்து அதனால் எழும் மூலக் கனலால் புருவ நடுவில் உள்ள சந்திர மண்டலத்தில் ஊறும், அறிவை வளர்க்கின்ற, இனிய அமுதத்தை உண்பவரே. (அவ்வமுதம் சிவானந்தத் தேறலில் இச்சையுண்டாகும்) அந்நிலையைப் பெறாத சிலர் அணிமா முதலிய சித்திகளில் இச்சையுடையராய்க் கள்ளை உண்டு மயக்கம் உற்று, அம்மயக்கத்தால் எழும் உன்மத்தம் உடையராய் அறிவழிகின்றனர்.

*குறிப்புரை :-* எனவே, 'வாம மதத்தவரேயன்றி, யோகம் முற்றப் பெறாது இடைநிற்கும் சிலரும் வாம மதத்தவரோடு ஒத்த ஒழுகினும், அவர் ஒழுக்கம் கொள்ளத்தக்கது அன்று' என்றதாயிற்று. கால்கட்டி - பிரணாயாமம் செய்து சுழுமுனை நாடியாகிய மதிமண்டலத்தில் ஊறுகின்ற சிவஞானானந்தத் தேனைப் பொசிக்கிறவர்கள் அட்டமாசித்தி அடைவர் என்பது கருத்து.

இதனால், 'கள்ளுண்பார் சிலர் சித்தியுடையராயும் இருத்தலைக் காண்கின்றோம் ஆகையால், அவர் ஒழுக்கம் இகழற்பாலது அன்று' என்பாரை நோக்கி, அவரது நிலையும் உயர்வுடையது ஆகாமை காட்டி, 'எவ்வாற்றானும் கள்ளுண்டல் ஒழுக்கம் ஆகாது' என்பது வலியுறுத்தப்பட்டது.

*முதல் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.*

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# இரண்டாம் தந்திரம்

## 1. அகத்தியம்

**333.** நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றானே. 1

---

*முதல் தந்திரத்துள் பொதுவாய் அறங்கள், பலவும் சிவநெறிக் கண் அமைந்தவாற்றானே சிறந்து நிற்றலை அருளிச் செய்த நாயனார், 'புராணங்கள்' எனப்படும் கடவுட் பழங்கதை பலவும் சிவபெருமானது பெருமையை விளக்குவனவாகவே இருத்தலை இவ்விரண்டாந் தந்திரத்துள் காமிக ஆகமத்தின் தெளிவாய் அருளிச் செய்கின்றார். இதனால், இது* ***'புராண தந்திரம்'*** *எனப் பெயர் பெறற்பாற்று. முதல் தந்திரத்தின் தொடக்கத்தில் சிவபரத்துவம் கூறியது பொருண்மை உணர்த்தியது. இஃது அதனை வலியுறுத்தும் முறையில் சான்று காட்டியது; இவையே வேறுபாடு என்க.*

*காமிக ஆகமத்தின் தெளிவாகிய இரண்டாம் தந்திரம் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். இதனுள் அகத்தியம் என்பது முதலாக இருபத்தைந்து அதிகாரங்களான புராண வரலாறுகளின் தத்துவமும், ஐந்தொழிற் சிறப்பும், உயிர்கள் பிறக்கும் முறையும், உயிர்களின் வகையும், எவ்வகையானும் யாரையும் நிந்தித்தல் கூடாது, பெரியோரைத் துணைக் கொண்டு ஒழுகவேண்டும் என்னும் ஒழுக்கமும், பிறவும் உரைக்கப்புகுந்து, முதற்கண், அகத்தியரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளின் தத்துவ விளக்கத்தை உணர்த்துகின்றார் ஆசிரியர் திருமூலதேவ நாயனார்.*

*புராண வரலாறுகள் பலவற்றுள் 'தமிழ் ஆகமம்' எனப்படும் இந்நூற்கு ஏற்புடைய தமிழ்முனிவராகிய அகத்திய முனிவரது வரலாற்றை முதற்கண் இரண்டு திருமந்திரங்களால் குறிக்கின்றார். அகத்தியம் - அகத்தியரது பெருமை கூறும் பகுதி.*

**333.** ***தெளிவுரை :-*** *ஒருபொழுது நிலம் சமனாய் நின்று உயிர்களைத் தாங்காது, ஒருபாற் சாய்ந்து கீழ்மேலாகப் புரண்டு*

*அழியும் நிலை உண்டாக, அதனை அறிந்த தேவர்கள் அச்சுற்றுச் சிவபெருமானிடம் விண்ணப்பித்து முறையிடுதலும், அப்பெருமான் அகத்திய முனிவரை அழைத்து, 'இருதய வெளியுள் பரஞ்சுடரை எப்பொழுது இருத்தி நிற்றலால் அகத்தியன் (அகத் தீயன் - அகத்தில் உள்ளொளியைப் பெற்றவன்) எனப்பெயர் பெற்ற முனிவனே, உலகத்தை நிலைநிறுத்த வல்லவன் நீ ஒருவனுமே ஆவை; ஆதலால், விரையக் கெடும் நிலை எய்திய நிலத்தில், மேல் எழுந்த இடத்தில் நீ சென்று அமர்ந்து சமன்செய்' என்று அருளிச் செய்தான்; அதனால், இவ்வுலகம் நிலை பெற்றது.*

***குறிப்புரை :-***

*சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்*
*தாங்காது மன்னோ பொறை. - (குறள். 990)*

***என்றவாறு உலகம் சான்றாண்மை குன்றி, அழிவெய்தும் நிலை உண்டாகின்றபொழுது, தனது திருவருள் காரணமாகத் தக்காரை நிலவுலகில் விடுத்து அதனைச் செந்நெறி நிற்கச் செய்பவன் சிவபெருமானே என்பது இவ்வரலாற்றால் அறியத்தக்க உண்மை என்பது நாயனாரது திருவுள்ளக்கிடை என்பது இதன்கண் இருபொருள் படவைத்த சொற்குறிப்புக்களால் அறியப்படும்.***

***எனவே, ஒருபொழுது இவ்வுலகம் நடுவு நிலைமை பிறழ்ந்து, மகவெனப் பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்க்கும் நிலையின்றித் (தி.11 திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, 7) தமக்கும், தம்மைச் சார்ந்தவர்க்கும் உளவாகும் நன்மை ஒன்றே பற்றிப் பிறர்க்குக் கேடு சூழும் தன்மை உடையதாய்த் தீநெறிக் கண் சென்றதாக, அதனைப் பெறாது வேண்டிய நல்லோர் சிலரது தவம் முன்னிலையாகச் சிவபெருமான், உயர்ந்த சிவஞானத்தால் அந்நடுவுநிலை உடைய பெரியோர் ஒருவரை விடுத்துச் செந்நெறி நிறுத்தினான் என திருமந்திரம் பிறிதொரு பொருளையே சிறப்பாகத் தோற்றுவித்தல் அறிந்து கொள்க. இதனானே, 'உலகில் செந்நெறி பிறழுங்காலத்து அதனை நிலைநிறுத்துதற்குக் கடவுளே வந்து பிறக்கின்றான் என்றல் சிவநெறிக்கு ஒவ்வாது' கடவுள் தனது, திருவருள் வழி நிற்கும் பெரியோரை விடுத்தே செந்நெறி நிறுத்துகின்றான் என்பதே சிவநெறிக்கு ஒப்பது என்பதும் கூறியவாறாயிற்று.***

*"எம்பெருமான்" என்றது விளி. என்ன - என்று சொல்லி*

முறையிட. இதற்கு, 'தேவர்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. "நடுவுள அங்கி அகத்திய" என்றற்கு. 'இருதயத்தின்கண் உள்ள ஒளியை உடைய அகத்திய' எனவும், 'நடுவு நிலைமை உடைய ஞானத்தை உடைய அகத்திய' எனவும், இரு பொருள் கொள்க. இரண்டாவது பொருட்கு, "நடுவுள" என்பது 'அகத்திய' என்பதனோடு இயையும். உடலின் நடுவிடத்து இருக்கும் இருதயத்தை "நடு" என்றது ஆகுபெயர். முன் - மேல்நிலம்; முதன்மை இடம்.

சிவபெருமான், மலைமகளை மலையரையனிடம் சென்று மணம் புரிந்த ஞான்று தேவர், முனிவர், கணங்கள் முதலிய பலரும் ஒருங்கு கூடினமையால் நிலம் தென்பால் எழுந்து, வடபால் வீழ்ந்து புரள்வதாகலும் தேவரது வேண்டுகோளுக்கு இரங்கிய சிவபெருமான் அகத்திய முனிவரைத் தென்பால் பொதிய மலையிற் சென்று இருக்கச் செய்து, நிலம் முன்போலச் சமனாகும்படி நிறுத்திய வரலாற்றின் விரிவைக் கந்த புராணத்துட் கண்டு கொள்க. 'தேவர் முதலிய பலர்க்கு முனிவரொருவர் நிகர்ப்ப இருந்தார்' என்பதனால், சிவனடியாரது பெருமை தோற்றுவித்தவாறாயிற்று. இவ்வரலாற்றுள் நிலம் நிலை குலைந்தமைக்குரிய காரணத்தை நாயனார் எடுத்தோதாது, வரலாறு பற்றியே உணர வைத்தார் என்க.

புராண வரலாறுகள் பலவும், உண்மை நிகழ்ச்சியை மருட்கைச் சுவைபடப் பெரிதும் புனைந்துரைப்பனவும், உண்மைக்கருத்துக்களை உருவகமாக்கி உரைப்பனவும் என இருதிறப்படும் காலப் பழமையால் அவ் இருவேறு திறத்துள் இஃது இத்திறத்தது எனப் பகுத்துணர்தல் அரிது. ஆயினும் அவ் வரலாறுகளைப் புராணங்கள் பலவிடத்தும், பலகாலத்தும் வலியுறுத்திவருதல், அவற்றின் உண்மை மக்கள் உள்ளத்தில் மறவாது நிற்றற் பொருட்டே என்பது நாயனாரது திருவுள்ளம் என்பதனை இத்தந்திரம் பற்றி உணர்ந்துகொள்க. இத் தந்திரத்துள் குறிக்கப்படும் வரலாறுகளும், இவை போல்வனவவுமான தொன்மையான வரலாறுகள் சிவபெருமானையன்றிப் பிற கடவுளருக்கும் அவர்தம் அடியவர்க்கும் சொல்லப்படாமை கருதற்பாலது என்பது நாயனாரது கருத்து என்க.

இதனால் அகத்திய முனிவர் பொதிகை சென்ற வரலாற்றால் அவரது பெருமை கூறப்பட்டமை வெளிப்படை.

**334.** அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்
அங்கி உதயஞ்செய் மேல்பா லவனொடும்
அங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி
எங்கும் வளங்கொள் இலங்கொளி தானே. **2**

---

334. ***தெளிவுரை :-*** *அங்கி உதயஞ்செய் வடபால் அகத்தியன் - அகத்தியர் உலோபா முத்திரையாரை மணந்து இல்லறமேற்ற அந்தணனாதலின் நாள்தோறும் வைகறைப் போதில் அக்கினி காரியம் செய்பவன் என்பதாம்.*

*அங்கி உதயங்செய் மேல்பாலவனொடும் - அக்கினிப் பிழம்பாக உதயம் செய்து மேற்றிசைக் கண்ணோனாகின்ற சூரியனோடும்.*

*எங்கும் வளம் கொள் இலங்கு ஒளி தானே - சூரியன் எங்கும் தன்னுடைய வெங்கதிரால் வளப்பம் மிகுவிப்பது போல அகத்தியரும் எங்கும் ஞானவளங் கொள்ளச் செய்பவராதலின்,*

*அவரை விளங்குகின்ற ஒளியாம் என்றார், மேம்பாலவனொடும் இலங்கொளியாம் என்றது சூரியனொடும் ஒக்க உரைக்கின்ற நிலையில் ஒளிப் பொருளாம் என்றவாறு.*

*இதனால் இறைவனால் உயர்ந்த நிலத்து முன்னிற்க எனப் பணிக்கப் பெற்ற அகத்தியன் சூரியனோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்க ஒளிப் பொருளாம் என்பது கருத்து.*

## 2. பதிவலியில் வீரட்டம் எட்டு

**335.** கருத்துறை அந்தகன் றன்போல் அசுரன்
வரத்தின் உலகத்துயிர்களை எல்லாம்
வருத்தஞ்செய் தானென்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன்றானே. 1

---

*இது முதல் எட்டுத் திருமந்திரங்களால் சிவபெருமானது வீரத்தை விளக்கும் அட்ட வீரட்ட வரலாறு கூறுகின்றார். 'வீரத்தானம்' என்பது 'வீரட்டானம்' எனத் திரிந்தது. 'வீரட்டம்' என மருவிற்று. சிவபெருமான் செய்தனவாகப் புராணங்கள் கூறும் வீரச்செயல்கள் பலவற்றுள் சிறப்புடைய எட்டனைக் குறிக்கும் தமிழ்நாட்டுத் தலங்களே 'அட்ட வீரட்டம்' எனப்படுவன. இறைவன் மறக்கருணை காட்டி ஆட்கொண்ட வீரத்தானங்கள் எட்டு. வீரத்தால் அட்ட இடம் - வீரட்டானம். வீரட்டங்கள் வேறு எந்த நாட்டிலும் இல்லை.*

*சிவபெருமானைத் தம் நலத்தின் பொருட்டாயினும், பிறர் நலத்தின் பொருட்டாயினும் வழிபடக் கருதும் நல்லோர், அப்பெருமானது அருள் வரலாறுகளுள் தாம் கருதிய பயனுக்கு ஏற்புடையவற்றை நினைந்து அவனை அச்செயலைச் செய்தவனாகவும், அப்பெயரை உடையவனாகவுமே கருதி இலிங்கம் நிறுவி வழிபடுவர். அதனால், அவ்வரலாறுகள் நிகழ்ந்த இடம் அவையேயாகக் கொள்ளப்படும். இதுவே தலபுராணங்களின் உண்மை. அவை அங்ஙனம் கருதி வழிபடுவோர்க்கு அப்பயனைத் தப்பாது தருதலின், அக்கருத்து 'பொய்' எனப்படாது, மெய்யேயாம், என்னை? மெய்ப்பயன் தருவதல்லது, பொய் ஒருஞான்றும் பயன் தாராதாகலின், அவ்வாற்றானே, 'அட்ட வீரட்டம்' என்னும் தலங்களும் அமைந்தன என்க.*

***335. தெளிவுரை :-** அக இருளாகிய ஆணவமலத்தை ஒத்து, அந்தகன் எனப் பெயர் பெற்ற அசுரன் ஒருவன் தான் பெற்ற வரத்தினால் உலகத்து உயிர்களை எல்லாம் துன்புறுத்த, அது பற்றி வருந்தி முறையிட்ட தேவர்கள் பொருட்டுச் சிவபெருமான் சூலத்தின் நுனியில் அவனை ஏற்றித் துன்புறுத்தி அழித்தார்.*

***குறிப்புரை :-** இவ்வீரச் செயலைக் குறிப்பது 'திருக்கோவலூர் வீரட்டம்' என்னும் தலமாம். அந்தகன் - இயமன். எல்லா உயிர்கட்கும் இறுதி செய்பவன். குருத்து - நுனி.*

*ஆணவமலம் அறிவை அழித்தல் பற்றி அதற்கு, 'மிருத்தியு' என்ற ஒரு பெயர் உண்டு. 'அந்தகன்' என்பதற்கு 'இறுதியைச் செய்பவன்' என்பது பொருள். அதனால் இவ்விரு பெயர்களும் ஒரு பொருளவாதல் பற்றி, "கருத்துறை அந்தகன்றன்போல் அசுரன்" என்றார். கூற்றுவனுக்கு 'அந்தகன்' என்ற பெயர் கூறப்படுதலும் இப்பொருள் பற்றியேயாம். அதனால், 'மிருத்தியுவைக் கடத்தல்' என்பதற்கு, 'ஆணவ மலத்தின் நீங்குதல்' என்பதே உண்மைப் பொருள் என்பர். உபநிடதங்கள் 'இருளைக் கடந்து மேற் போகின்றான்' என்றலும், ஆணம மலத்தின் நீங்கி இறைவனை அடைதலையேயாம். எனவே, சிவபெருமான் அந்தகாசுரனை மூவிலை வேலால் அழித்த வரலாறு,* ***'அவன் ஆணவ மலத்தை இச்சா ஞானக் கிரியை வடிவாய்த் தொழிற்படும் தனது சத்தியைக் கொண்டு அழிப்பவனாவன் என்னும் உண்மையை விளக்கும்'*** *என்பதும், 'அப்பயன் கருதி அவனை வழிபடுதலே சிறந்தது' என்பதும் நாயனாரது திருவுள்ளக் கிடையாதல் அறிக. குருத்து - நுனி 'குருத்தினால்' என உருபு விரிக்க. 'உயர் சூலம் கைக்கொண்டு குருத்தினாற் கொன்றான்' எனக் கூட்டுக. இச்செயல் வைரவக் கடவுளைக் கொண்டு செய்வித்ததேயாயினும், 'அரசன் ஆலயம் எடுத்தான்' என்பது போல, ஏவுதற் கருத்தாவாய் நின்று செய்வித்தமை பற்றிச் சிவபெருமான் தானே செய்ததாக வைத்து அருளிச் செய்தார். 'அந்தகனை அயிற் சூலத் தழுத்திக் கொண்டார்' (தி.6 ப.96 பா.5) என்பது திருநாவுக்கரசர் திருமொழி.*

*'இரணியன், (இரணிய கசிபு) இரணியாட்சன்' என்னும் இருவருள் இளையவனாகிய இரணியாட்சன் மகன் அந்தகாசுரன். இவன் சிவபெருமானை வழிபட்டுப் பெற்ற வரத்தினால் வலிமை மிக்கவனாய்த் திருமால் முதலிய தேவரையெல்லாம் துன்புறுத்த, அவர்கள் அவனுக்கு ஆற்றாது மகளிர் உருவங்கொண்டு ஓடிக் கயிலையில் அம்பிகையின் தோழியர் கூட்டத்துள் மறைந்திருந்தனர். அதை அறிந்த அந்தகாசுரன் அங்கும் சென்று போர் செய்ய நினைத்த பொழுது, தேவர்கள் முறையீட்டிற்கு இரங்கிச் சிவபெருமான் வைரவக் கடவுளை ஏவ, அவர் தமது சூலத்தலையில் அவனை ஏற்றிப் பலநாள் துன்புறச் செய்து பின் முத்தி பெற அருளிய வரலாற்றின் விரிவைக் காஞ்சிப் புராணம் அந்தகேசுரப் படலத்தில் காண்க. 'சிவதீக்கை பெற்றோர் குற்றம் செய்யின், அவர் கூற்றுவனால் தண்டிக்கப்படார். இவ்வாறு வைரவக் கடவுள் சூலத்தில் ஏற்றித் தண்டிக்கப்படுவர்' என்பது சிவாகம நூற் கருத்து என்பது இங்கு உணர்ந்து கொள்க.*

*இதனால், சிவபெருமான் அந்தகாசுரனை அழித்த வரலாறும், அதன் உண்மையும் கூறப்பட்டன.*

**336.** கொலையிற் பிழைத்த பிரசாபதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தான்அங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையைப் பரிந்திட்டுச் சந்திசெய் தானே. **2**

**337.** எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியும்
தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்னற
அங்கச் சுதனைஉதிரங்கொண் டானே. **3**

---

**336. *தெளிவுரை :-*** *தக்கன் சிவபெருமானை இகழ்ந்து செய்த வேள்வியை அப்பெருமானது அருளாணையின்வழி வீரபத்திரக் கடவுள் சென்று அழித்தபொழுது, தக்கனது இகழ்ச்சியை மறவாது உடன்பட்டிருந்த தேவர் பலரையும் பலவாறு ஒறுத்தலோடு ஒழித்து, அவ் இகழ்ச்சியைச் செய்தவனாகிய தக்கனது தலையை வெட்டித் தீக்கு இரையாக்கி, 'சிவனை இகழ்ந்தவர் பெறும் இழிநிலைக்கு இவன் தக்க சான்றாகற்பாலனாகலின், அதன் பொருட்டு இவன் உலகிற்கு இன்றியமையாத ஒருவன்' எனக் கருதி அவனை அழித்தொழியாது ஆட்டுத் தலையைப் பொருத்தி உயிரொடு இருக்கச் செய்தார்.*

***குறிப்புரை :-*** *இவ்வீரச் செயலைக் குறிப்பது திருப்பறியலூர் வீரட்டம்.*

*கொலையில் - வேள்வியை அழித்தபொழுது. பிழைத்த - பிழைசெய்த, பிரசாபதி - பிரமன்; இப்பெயர் அவன் மகனாகிய தக்கனுக்கும் வழங்கும். அதனால், அவனை, 'தட்சப் பிரசாபதி' என்பர். பிரசாபதி இங்கு, தட்சப் பிரசாபதியே. "தான்" என்றது வீரபத்திரக் கடவுளை நிலை - இழிநிலை; இதில் நான்கனுருபு தொகுத்தல். "தலையை அரிந்திட்டு" என்பதில், "ஆட்டுத் தலையை" என்பது ஆற்றலாற் கொள்ளக்கிடந்தது. சந்தி செய்தல் - பொருத்துதல். இவ் வரலாறு கந்தபுராணத்துள் விரித்துக் கூறப்படுதல் காண்க. இவ்வரலாறும் சிவபெருமான் ஏவுதற் கருத்தாவாய் நின்று செய்ததே யாதல் உணர்க.*

*இதனால் தக்கன் வேள்வியை அழித்த வரலாறும், சிவ நிந்தை உய்தியில் குற்றமாதலாகிய உண்மையும் கூறப்பட்டன.*

**337. *தெளிவுரை :-*** *ஆகாயத்தினும் மேலாய்ப் பரந்து எல்லாப் பொருட்கும் இடங்கொடுத்தும், பூமியினும் கீழாய் நின்று அனைத்தையும் தாங்கியும் நிற்கும் தன்மைத்தாகிய சிவபெருமானது*

*திருவடியின் பெருமையை மறவாது உணர்ந்து அடங்கி ஒழுகற் பாலராய தேவர்கள், தம் அதிகாரச் செருக்கால் ஓரொாவழி அதனை மறந்து மாறுபடுகின்ற காலத்து அவர்தம் செருக்கைச் சிவபெருமான் அழித்து அவரைத் தெருட்டுதற்கு அறிகுறியாகப் பிரமன் செருக்குற்ற பொழுது அவன் தலையை, வைரவக் கடவுளை விடுத்து அரிந்து, அத்தலை ஒட்டில் தேவர் பலரது உதிரத்தையும் பிச்சையாக ஏற்பித்து, முடிவில் திருமாலது உதிரத்தையும் கொள்வித்துச் செருக்கொழித் தருளினான்.*

***குறிப்புரை :-*** *இவ்வீரச் செயலைக் குறிப்பது திருக்கண்டியூர் வீரட்டம்.*

***ஒருமுறை பிரமனும் மாலும் மகாமேரு மலையின் சிகரம் ஒன்றில் சேர்ந்திருந்தபொழுது தேவர், முனிவர் முதலிய பலரும் அங்கு வந்து அவரை வணங்கி, 'நீவிர் எங்களைப் படைத்துக்காக்கும் தலைவராதலின், அனைத்துலகிற்கும் முதல்வனாய், உயிர்க்குயிராய் நிற்கும் முதற்கடவுள் யாவன் என்னும் ஐயத்தினையும் நீக்கி உண்மையை உணர்த்தல் வேண்டும்' என வேண்டினர். அதுபொழுது பிரமனும், மாயோனும் தம் அதிகாரச் செருக்கால் மயங்கித் தாங்களே முதற்கடவுளாகத் தனித்தனிக் கூறி வாதிட்டனர். வேதங்களும் மந்திரங்களும் உருவாய் வெளிப்பட்டு, 'நும்மில் ஒருவரும் முதல்வரல்லீர்; சிவபெருமானே அனைத்துயிர்க்கும் முதல்வன்' எனக் கூறவும் தெளிவு பெறாது வாதிட்டனர். அதனால் சிவபெருமான் அவர்கள் முன்பு ஒரு பேரொளியாய்த் தோன்றி, அதனின்றும் உமையொருபாகனாய் வெளிப்பட, திருமால் தெளிந்து அச்சுற்று 'எம் தந்தையே, பிழைபொருத்தருள்க' என வணங்கினார். ஆயினும், பிரமன் செருக்கு நீங்காதவனாய் அன்று ஐந்து தலைகளோடு இருந்த அவன், தனது உச்சித் தலை வாயினால், 'என் மகனே வருக' என்று அழைத்து இகழ்ந்தான். அதனால், சிவபெருமான் வைரவக் கடவுளை உண்டாக்கி 'நம்மை இகழ்ந்து பேசிய இப்பிரமனது நடுத்தலையைக் கிள்ளிக்கொண்டு, இப்பிரமனேயன்றிச் செருக்கால் மயங்கி நம்மை இகழ்ந்து நிற்போர் யாவராயினும், அவர்தம் உதிரத்தைப் பிச்சையாகப் பிரம கபாலத்தில் ஏற்று, அவரது செருக்கை நீக்கித் தெளிவுபெறச் செய்க' என்று அருளிச் செய்து மறைந்தார். திருமாலும் தம் உலகை அடைந்தார். வைரவக் கடவுள் அவ்வாறே தமது நகத்தால் பிரமனது உச்சித் தலையைக் கிள்ளி எடுத்த உடன் அவனது உதிரம் உலகை அழிக்கும் வெள்ளம் போல் பெருக, அவன் நினைவிழந்து வீழ்ந்தான். பின்பு வைரவக் கடவுள், தமது நெற்றிக் கண்ணால் உதிர வெள்ளத்தை***

*வற்றச் செய்து, பிரமனையும் உயிர்ப்பிக்க, அவன் நல்லறிவு பெற்று வணங்கிப் பிழைபொறுக்க வேண்டினான். அப்பால் வைரவக் கடவுள் அவனை மன்னித்து, அவனை என்றும் நான்முகனாகவே இருக்கச் செய்து, தாம் ஏந்திய பிரம கபாலத்துடன் தேவர், முனிவர் முதலானவர்களில் செருக்கை கொண்டவர்பால் சென்று, 'எனது கபாலம் நிறைய உங்கள் உதிரத்தைத் தாருங்கள்' என்று கேட்க, அவர்கள் அனைவரும் அச்சத்தால், ஏற்ற பெற்றியில் தம் தம் உடம்பினின்றும் இரத்தத்தைப் பிரம கபாலத்தில் சொரிந்து சோர்வுறலாயினர். பின்பு வைரவக் கடவுள் அவர்களுக்கும் உயிர்ப்பிச்சை தந்து தெளிவை உண்டாக்கி, வைகுந்தம் சென்று, அங்குத் தம்மைத் தடுத்த சேனா முதலியாகிய விடுவச் சேனனைச் சூலத்தின்மேல் கோத்தெடுத்துக் கொண்டு செல்லத் திருமால் இதனை அறிந்து எதிர்வந்து வணங்கி, 'எந்தையே நீ வேண்டுவது யாது' என, வைரவக் கடவுள் 'உன் கபாலத்தின் வழியாக எனது பிரம கபாலம் நிறைய உதிரம் தரல் வேண்டும்' என்றார். திருமால் தாமே நமது நகத்தால் தம் நெற்றியினின்றும் ஒரு நரம்பைப் பிடுங்கிப் பிரம கபாலத்தில் விட, அது வழியாக உதிரம் பல்லாண்டு காறும் ஒழுகிற்று. திருமால் நினைவிழந்து வீழ்ந்தார். ஆயினும், வைரவரது கைக் கபாலம் பாதியாயினும் நிறைந்ததில்லை. அதனைக் கண்ட சீதேவி, பூதேவி என்னும் இருவரும் நடுக்கங் கொள்ள, வைரவக் கடவுள் அவர்கள் மீது இரக்கம் வைத்து திருமாலை உயிர்ப்பித்துத் தந்து விடுவச் சேனனையும் சூலத்தினின்றும் இறக்கிவிட்டுச் சிவபெருமான் முன்பே தமக்காகப் படைத்துக் கொடுத்த கணங்களுடன் தமது புவனத்தில் தங்கி அண்டங்கள் பலவற்றைக் காத்து வருவாராயினார். இவ்வாறு கந்த புராணத்துள்ளும், காஞ்சிப் புராணத்துள்ளும் இவ்வரலாறு விரித்தும் பேசப்படுதல் காண்க.*

*"அவன் தான் உணர் தேவர்கள் பொங்கும் சினத்துள் அயன் தலை முன் அற (பின்) அச்சுதனை உதிரங் கொண்டான்" என்றதனால், 'செல்வம், அதிகாரம்' முதலியவற்றால் எழும்செருக்குக் காரணமாக முதல்வனாகிய கடவுளை மறந்து 'யான்' என்றும் 'எனது' என்றும் செருக்கித் திரிவாரை அம்முதல்வனது திருவருள் ஒறுத்து அடக்கும் என்னும் உண்மையை வலியுறுத்தவே இவ்வரலாற்றைப் புராணங்கள் வலியுறுத்துகின்றன என்பது உணர்த்துதல் நாயனாரது திருவுள்ளக் கிடையாதல் பெறப்படும். தக்கன் வரலாறு என்றும் செருக்குடை யாராய் இருப்பவரை ஒறுத்தலையும், இஃது ஓரோவழிச் செருக்குறுவாரை ஒறுத்தலையும் குறிக்கும். இவையே இவற்றிடை உள்ள வேற்றுமை.*

**338.** **எங்கும் கலந்தும்என் உள்ளத் தெழுகின்ற**
**அங்க முதல்வன் அருமறை யோதிபாற்**
**பொங்குஞ் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்**
**அங்கு விரற்குறித் தாழிசெய் தானே.** **4**

---

*பரத்தல் 'இடங்கொடுத்தல்' என்னும் பொருட்டு. இதனால், ஆகாயத்தையும் அடக்கிநிற்றல் பெறப்பட்டது. நிலத்தையும் தாங்குதல் கூறினமையால், அதற்கும் நிலைக்களமாதல் பெறப்பட்டது. 'தங்கும் படித்தாகிய தாள்' என்க. அவன் பண்டறி சுட்டு, 'உணர் தேவர்கள்' என்னும் முக்கால வினைத்தொகை, அஃது அவர்க்குரிய பண்பாதல் விளக்கி நின்றது. பொங்கும் சினம் - மிகக் கொண்ட சினம் 'தேவர்கள் கொண்ட சினம்' என்க. சினம் - பகை. இஃது இங்கு மயக்கத்தால் கொள்ளும் மாறுபாட்டினைக் குறித்தது. சினத்துள் என்பது வினை செய்யிடத்தில் வந்த ஏழாம் வேற்றுமை. எனவே, 'சினங்கொண்ட பொழுது' என்பது பொருளாயிற்று. முன் - முதலில். "முன் அயன் தலை அற" என்றதனால், 'பின் அச்சுதனை உதரங்கொண்டான்' என்பது போந்தது. இதுவும் சிவபெருமான் ஏவுதற் கருத்தாவாய் நின்று செய்ததேயாதல் அறிக.*

*இதனால், பிரமனது தலையை அரிந்த வரலாறும், அதன் உண்மையும் கூறப்பட்டன.*

**338.** *தெளிவுரை :- எல்லா இடங்களிலும் நிறைந்து நிற்பினும், என் உள்ளத்தில் விளங்கி நிற்கின்றவனும், ஆறங்கம் அருமறைகளை அருளிச்செய்த முதல்வனும் ஆகிய சிவபெருமானிடம். மிக்க சினத்தை உடைய 'சலந்தரன்' என்னும் அசுரன் போர் செய்யச் சென்றபொழுது, அப்பெருமான் அவனது வரத்தின் தன்மையை அறிந்து அதற்கு ஏற்பத் தமது காற்பெருவிரலால் நிலத்தில் ஒரு சக்கரத்தைக் கீறி அதனை அவனாலே எடுப்பித்து அதன்வழி அவன் தன்னாலே தான் அழிய செய்தான்.*

*குறிப்புரை :- இவ்வீரச் செயலைக் குறிக்கும் தலம் திருவிற்குடி வீரட்டம்.*

*ஒருமுறை சிவபெருமான், தமது கயிலைக்கு வந்த இந்திரன் முன், ஒரு திருவிளையாடலால் வேற்றுருக் கொண்டபொழுது, உண்மையறியாத இந்திரன், அப்பெருமானை இகழ்ந்து நோக்க, அதனால் அவர் உருத்திர வடிவுடன் நின்று கொண்ட சினத்தைக் கண்டு இந்திரன் அஞ்சி வணங்கினான். அதனால், சிவபெருமான் தாம்*

**339.** அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரே. **5**

---

*சினத்தீயை மேற்றிசைக் கடலில் எறிய, அஃது ஓர் அசுரக் குழந்தை யாயிற்று. அதனைக் கடல் அரசனாகிய 'வருணன்' வளர்த்தான். சலத்தால் (நீரால்) தாங்கப்பெற்ற காரணத்தால் 'சலந்தரன்' எனப் பெயர் பெற்ற அவ்வசுரன் மிக்க வன்மை உடையவனாய்த் தேவரைத் துன்புறுத்தத் திருமால் முதலிய தேவர் பலரும் அவனுக்கு அஞ்சி ஓடிக் கயிலையில் வசித்தனர். அதனை அறிந்த சலந்தராசுரன் சிவபெருமானோடு போர் செய்யக் கருதி கயிலை நோக்கிச் சென்றான். இதனை அறிந்த தேவர்கள் சிவபெருமானிடம் சென்று முறையிட அப்பெருமான், அவன் தன்னாலே தான் அழிய வேண்டியவனாதலை உணர்ந்து, ஓர் அந்தண வடிவில் அவன்முன் சென்று, 'சலந்தரனே, உனது ஆற்றலை அளந்து காணவே யாம் வந்தோம்; உன்னால் இயலுமாயின், இச்சக்கரத்தை எடுத்துச் சுமக்க' என்று சொல்லித் தமது காற்பெருவிரலால் நிலத்தில் ஒரு சக்கரத்தைக் கீறினார். சலந்தரன் செருக்குக் கொண்டு அதனை அரிதில் பெயர்த்து மிக முயன்று உயர எடுத்துத் தன் தலைமேல் வைத்துக்கொள்ள, அச்சக்கரம் சிறந்த படைக்கலமாய் அவன் உடலை இருகூறு செய்து, சிவபெருமானிடம் மீண்டது; தேவர் துன்பம் நீங்கி இன்புற்றனர். இவ்வாறு இவ்வரலாறு கந்தபுராணத்துட் கூறப்பட்டது. இது சிவபெருமான், தான் நேரே செய்த வீரச்செயலாதல் அறிக.*

*'அறம், மறம் அனைத்திற்கும் நிலைக்களமாய் உள்ளவன் இறைவன். அவன் உரிய காலத்தில் மறத்தினை வெளிப்படுத்தி, ஏற்கும் முறையால் அதனை அழித்து அறத்தினை வளர்த்தருளுவான் என்பது இதனால் அறியத்தக்க உண்மை' என்பது நாயனார் திருவுள்ளமாதல், "எங்கும் கலந்தும் என் உள்ளத்தெழுகின்ற அங்க முதல்வன் அருமறை ஓதி" என்ற குறிப்பால் அறியப்படும்.*

*இதனால், 'சலந்தரன்' என்னும் அசுரனை அழித்த வரலாறும், அதன் உண்மையும் கூறப்பட்டன.*

**339. *தெளிவுரை :-* *சிவபெருமான் திரிபுரம் எரித்த வரலாற்றைப் புராணங்கள் கூறக் கேட்கின்ற அறிவிலாதார் அவ்வரலாற்றை மட்டுமே கேட்டு, அவ்வளவில் சிவபெருமானைப் புகழ்ந் தொழிகின்றனர். ஆயினும், அவ்வரலாற்றால் அறியத் தக்க உண்மையை அறிகின்றவர்***

*எத்துணையர்! மிகச் சிலரே. அதனால், 'இரும்பு, வெள்ளி, பொன்' என்பவற்றால் ஆகிய மூன்று கோட்டைகளும் முறையே 'ஆணவம், மாயை, கன்மம்' என்னும் மும்மலக் கட்டினைக் குறிப்பவனாக, 'சிவபெருமான் அக்கோட்டைகளை எரித்துச் சாம்பலாக்கினான்' என்பது 'அம்மும்மலங்களின் வலியை அழித்துக் கட்டறுத்தருளுவன்' என்னும் உண்மையையே சிறப்பாக உணர்த்தி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *இவ்வீரச் செயலைக் குறிக்கும் தலம் திருவதிகை வீரட்டம். ஏனைய பலவற்றினும் இது சிறப்புடையதாய் பண்டைத் தமிழ் நூல்களிலும் பயின்று வருவதாகலின், இதன் உண்மையை நாயனார் கிளந்தோதினார் என்க.*

*"தாரகாக்கன், கமலாக்கன், வித்தியுன்மலி" என்னும் மூவர் அசுரர் சிவபத்தியிற் சிறந்தவராய் மயன் வகுத்த 'பொன், வெள்ளி, இரும்பு' இவற்றால் ஆகிய மூன்று கோட்டைகளும் நினைத்த இடத்தில் பறந்து சென்று இறங்கும் சித்தியை அடைந்து, அதனால் உலகிற்கு இடர் விளைத்தனர். அதனைத் தேவர்கள் சிவபெருமானிடம் சென்று வணங்கி விண்ணப்பித்து, அவ்வசுரர்களை அழித்தருளுமாறு வேண்டினர். சிவபெருமான் 'நம்பால் பத்தி பண்ணுவோரை அழித்தல் ஆகாது' என்று அருளிச் செய்யத் திருமால் புத்தனாக உருக்கொண்டு பிடக நூலை செய்து, நாரத முனிவரைத் துணைக்கொண்டு முப்புரத் தவர்பால் சென்று சிவநெறியை இகழ்ந்து, புத்த மதத்தையே சிறந்ததாகக் காட்டி மருட்டினார். அதனால் அம்மாயோன் மயக்கில் அகப்பட்ட முப்புரத்தசுரர் சிவநெறியைக் கைவிட்டுச் சிவனை இகழ்ந்து புத்தராயினர். அதன்பின் திருமால் முதலியோர் சிவபிரானிடம் சென்று வணங்கி, முப்புரத்தவர் சிவநிந்தக ராயினமையை விண்ணப்பித்து, அவர்களை அழித்தருள வேண்டினர். சிவபெருமான் அதற்கு இசைவுதரப் பூமியைத் தேர்த்தட்டாக அமைத்துத் தேவர் பலரும் தேரின் பல உறுப்புக்களாயினர். வேதங்கள் நான்கும் குதிரைகளாக, அவற்றை ஓதும் பிரமன் தேரை ஓட்டும் சாரதியாயினான். திருமால் அம்பாக, வாயுதேவன் அம்பின் சிறகுகளும், அக்கினி தேவன் அம்பின் அலகும் ஆயினர். சிவபெருமான் வாசுகியை நாணாகக் கொண்டு மகாமேரு மலையை வில்லாக வளைத்துத் திருமால் முதலியோரால் அமைந்த அம்பைப் பூட்டித் திரிபுரங்களை நோக்கியபொழுது, அவரிடத்து உண்டாகிய கோபச் சிரிப்பால் முப்புரங்களும் வெந்து நீராயின. இவ்வாறு திருவிற்கோலப் புராணம், காஞ்சிப் புராணங்களில் இவ்வரலாறு விரித்துக் கூறப்பட்டது.*

**340.** முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்
அத்தி யுரிஅர னாவ தறிகிலர்
சத்தி கருதிய தாம்பல தேவரும்
அத்தீயி னுள்ளெழுந் தன்று கொலையே. **6**

---

*இதனுள் தேவர் பலரும் சிவபெருமானுக்குக் கருவியாகயினமை, 'அப்பெருமானே கருத்தா' என்பதை விளக்கும் பூட்டிய அம்பினை எய்யாமலே திரிபுரத்தைச் சிரித்து அழித்தமை, அவன் யாதொரு செயலையும் கருவியாலன்றி நினைவு மாத்திரத்தானே செய்பவனாதலை விளக்கும். மலையை வில்லாக வளைத்தமை அவன் எல்லாம் வல்லனாதலைக் குறிக்கும். இவ்வாறு இத்திரிபுரம் எரித்த வரலாறு பல அரிய உண்மைகளை விளக்குவதாம். அவற்றுள் சிறந்த தொன்றினை எடுத்தோதியதனானே ஏனையவற்றையும் தழுவிக் கொள்ள வைத்தார்.*

*இதனால், திரிபுரம் எரித்த வரலாறும், அதன் உண்மையும் கூறப்பட்டன.*

**340.** *தெளிவுரை :- முனிவர் சிலர் செய்த வேள்வியுள் எழுந்த யானை உருவினனாகிய கயாசுரனால் தம் ஆற்றலையே பெரிதாகக் கருதியிருந்த தேவர் பலரும் அன்று அங்குச் சென்று கொலை யுண்டாரேயாகச் சிவபெருமான் ஒருவனே அவனை அழித்து அவனது தோலைப் போர்வையாகக் கொண்டான் என்பதைக் கேட்டும் அப்பெருமானது பெருமையைச் சிலர் அறியாது, ஏனைத் தேவருள் அவனையும் ஒருவனாக வைத்து எண்ணுகின்றனர்.*

*குறிப்புரை :- 'அஃது அவர் வினையிருந்தவாறு' என்பது குறிப்பெச்சம். சிவபெருமான் செய்த இவ்வீரச் செயலைக் குறிக்கும் தலம் திருவழுவூர் வீரட்டம்.*

*சிவபெருமான் யானையை உரித்த வரலாறு கந்த புராணத்துட் சொல்லப்பட்டது. அதில் அவன் பிறப்பு வரலாறு சொல்லப்பட வில்லை. ஆயினும், நாரத முனிவர் செய்த வேள்வியுள் ஆட்டுக்கிடாய் ஒன்று தோன்றித் தேவர் முதலிய பலரையும் துன்புறுத்தினமை கந்த புராணத்தால் அறியக் கிடப்பதுபோல, முனிவர் சிலர் செய்த வேள்வியுள் கயாசுரனாகிய யானை தோன்றித் தேவர்களைத் துன்புறுத்தினமை இத்திருமந்திரத்தால் அறியக் கிடக்கின்றது.*

**341.** மூலத் துவாரத்து மூளும்ஒரு வனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங் கியோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே. 7

---

*சிவபெருமான் யானையை உரித்த பொழுது அவர் கொண்டிருந்த உருத்திரத் திருமேனியின் ஒளியையும், வீரச் செயலையும் காணமாட்டாது உமாதேவியை உள்ளிட்ட பலரும் நடுக்கங் கொள்ளச் சிவபெருமான் யானையை உரித்து அத்தோலைப் போர்வையாக அணிந்து அவர்களது அச்சத்தைப் போக்கினமை கந்த புராணத்துட் கூறப்பட்டது.*

*ஐம்பொறிகளை யானையாகக் கூறுதல் மரபாகலின், ஏனைத் தேவர் பலரும் மதங்கொண்ட யானைபோலும் அவ்வைம்பொறிச் சூழலில் அகப்பட்டுச் சூழலும் பசுக்களேயாக, அவற்றை வென்று நிற்கும் பதி சிவபெருமான் ஒருவனே என்பதை இவ்வரலாற்றால் அறியத்தக்கது என்பதை நாயனார் உய்த்துணர வைத்திருத்தலை நுண்ணுணர்வால் நோக்கி உணர்க. இதுவும் சிவபெருமான் நேரே செய்த வீரச்செயலாம். இதனைக் காசியில் நிகழ்ந்ததாகவே கந்தபுராணம் கூறிற்று.*

*கொளுவதற்கும், முழங்குதற்கும் "முனிவர்" என்னும் எழுவாய் வருவித்து. "கொளுவி முழங்கு" என இயைக்க. முழங்குதல் - மந்திரத்தை உரைத்து உச்சரித்தல். வேள்வியுள் அத்தி - வேள்வியுள் எழுந்த யானை. "உரி" என்னும் முதனிலைத் தொழிற்பெயர். ஆகுபெயராய், "உரித்தவன்" எனப் பொருள் தந்தது. தாம், அசைநிலை. "பல தேவர்தாமும்" என்பது மாறி நின்றது. உம்மை, முற்றுமை, "தீயின்" என்றதும், 'தீச் சாலையின்' என ஆகுபெயராயிற்று. 'அத்தீயினுள்' என்பதே பாடமாயின் 'தீ' என்பது குறுக்கல் பெற்றது என்க. எழுந்து - சென்று தங்கி. "கொலையே" என்றதன்பின் "உண்டார்" என்பது சொல்லெச்சமாய் நின்றது. முத்தீ - காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினியம்.*

*இதனால், சிவபெருமான் யானையை உரித்த வரலாறும், அதன் உண்மையும் கூறப்பட்டன.*

**341.** *தெளிவுரை :- சிவபெருமான் நிலவுலகில் உள்ள திருக்கடவூரில் காலால் காலனை உதைத்துத் தள்ளி ஓர் யோகி போல் இருத்தல் வியப்பைத் தருவது.*

*குறிப்புரை :-* இது காலசங்கார மூர்த்தியைத் திருக்கடவூரில் உள்ள ஓர் யோகிபோல வைத்துச் சிலேடையால் உவமித்தது. இதனை,

யோகிக்கு ஏற்ப உரைக்குங்கால்,

'மூலாதாரமாகிய இடத்தில் வைத்துக் கீழ்நோக்கித் துயில்கின்ற நாகராசனை அதன்மேல் உள்ள சுழுமுனைக்கு மேலதாகிய புருவ நடுவாகிய இலாடத் தானத்தை நோக்கி நிற்குமாறு எழுப்பி, அதன் பொருட்டு வாயுக்களுள் முதலாவதாகிய பிராண வாயுவைச் சுழுமுனை நாடியின் அடியில் அசைவற நிறுத்தி, அத்தகைய வாயுப் பயிற்சியாலே, தனக்கு அளந்த வாழ்நாள் எல்லைக்கண் கூற்றுவன் வந்து தன்னை அணுகாதவாறு தடுத்துத் திருக்கடவூரில் நலத்துடன் நீடு வாழ்கின்றமை 'வியப்பு' எனவும்,

காலசங்கார மூர்த்திக்கு ஏற்ப உரைக்குங்கால்,

'முப்பத்தாறு தத்துவங்களும் கீழ் நிற்பதாகிய நிலத்தின்கண் அமைந்த கோயிலிலே வழிபாட்டில் முனைந்து நின்ற மார்க்கண்டேய முனிவரை நாதமாகிய மேல்தத்துவ புவனத்தில் மேலான அபர முத்தராய்ச் சென்று வாழுமாறு கடைக்கணித்து, அவர் வழிபட்ட இலிங்கத் திருமேனியில் வெளிப்பட்டு அவர்மேல் வந்த காலனைக் காலால் உதைத்துத் தள்ளி, அருளோடு நீடு நிற்றல் வியப்பு' எனவும் உரைத்துக் கொள்க.

நாகராசன், குண்டலினி. இதனைப் பெண்பாலாகக் கூறுதல் மரபாயினும், 'நாகராசன்' என்னும் வழக்குண்மை பற்றி ஆண்பாலாக ஓதினார். இரண்டாவது பொருட்கு, துவாரம் - வாயில்; கருவி. முதல் உரையுள் "நோக்கி" என்பது அதன் காரியம் தோன்ற நிற்கும். 'சிவபெருமான்' என்னும் எழுவாய் அதிகாரத்தால் வந்தியைந்தது. 'அங்கியோகமாய்' என்பதில், யகரம் வருவழி இகரங் குறுகிற்று (தொல் எழுத்து, 411) 'யோகியாய்' என்றபாலதனை, "யோகமாய்" என்றார். ஆக்கம் உவமை குறித்து நின்றது. இறுதியில் 'வியப்பு' என்பது சொல்லெச்சம். இங்ஙனம் சிலேடித்ததனானே, **அடயோகம் செய்வார், வாழ்நாள் சிறிது நீட்டிக்கப் பெறுதலையும், சிவயோகம் செய்வார், ஞானம் பெற்று வீடு அடைதலையும் குறிப்பால் உணர்த்திச் சிவனது திருவருட் பெருமையை விளக்கினார் என்க**. எனவே, சிவபெருமான் காலனைக் காலால் உதைத்த வரலாறு 'யோக மதத்தவர், சிவநெறியாளர்' என்னும் இருத்திறத்தார்க்கும் ஏற்ற பெற்றியால் மேற்குறித்த இரண்டு உண்மைகளையும் விளக்கி நிற்றல் பெறப்பட்டது. கால் - காற்று. தசவாயுக்களுள் பிராணன் முதலாவதாகலின் அது "முற்கால்" எனப்பட்டது.

**342.** இருந்த மனத்தை இசைய இருத்திப்
பொருந்திய லிங்க வழியது போக்கித்
திருந்திய காமன் செயலழித் தங்கண்
அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ந்ததே. **8**

---

*மிருகண்டு முனிவர் புத்திரப்பேறு இன்மையால் தம் இல்லாளோடும் சிவபெருமானை நோக்கித் தவம் செய்யச் சிவபெருமான் வெளிப்பட்டு 'உங்கட்கு அறிவிலியாய் நூறாண்டு வாழும் மகன் வேண்டுமோ, அறிவுடையவனாய்ப் பதினாறாண்டு வாழும் மகன் வேண்டுமோ', என வினாவ, தவம் புரிந்த இருவரும், 'அறிவுடைய மகனே வேண்டும்' என்றனர். அதன்படி கொடுத்து மறைந்த சிவபெருமானது வரத்தின்படி அவர்கட்கு மார்க்கண்டேய முனிவர் பிறந்து, கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்து விளங்கும் பொழுது பதினாறாவது ஆண்டு வந்து அடைய, பெற்றோர் இருவரும் மகனைக் காணுந்தோறும் வருந்திக் கண்ணீர் விடுத்தனர். மார்க்கண்டேயர் அவர்களது வருத்தத்திற்குக் காரணத்தை அவர்பால் கேட்டறிந்து அவர்களிடம் விடைபெற்றுச் சென்று சிவபெருமானை இலிங்க வடிவில் பூசை செய்திருந்தார். அவருக்கு அளந்த நாள் முடிவில் கூற்றுவன் வந்து அவரை அழைக்க, அவர் சிவபெருமானையே தஞ்சமாக அடைந்து நின்றார். கூற்றுவன் அம்முனிவர் பற்றியிருந்த இலிங்கத்தோடு அவரைப் பாசத்தாற் பிணித்து இழுத்தபொழுது, சிவபெருமான் அவ் இலிங்கத்தினின்றும் வெளிப்பட்டுத் தமது இடக் காலால் கூற்றுவனை உதைத்துத் தள்ளி, மார்க்கண்டேயரை என்றும் பதினாறாண்டாக இருக்க அருள் புரிந்து மறைந்தார். இவ்வாறு இவ்வரலாறு கந்த புராணத்துள் விரித்துக் கூறப்பட்டது. இவ்வீரச் செயலைக் குறிக்கும் தலம் திருக்கடவூர் வீரட்டம் என்பதை நாயனாரே அருளிச் செய்துள்ளார். இது காசியில் கங்கா நதியின் மணி கண்ணிகைத் துறையில் நிகழ்ந்ததாகவே கந்த புராணத்தில் சொல்லப்பட்டது. இதுவும் சிவபெருமான் நேரே செய்த வீரச்செயல்.*

*இதனால் சிவபெருமான் காலனை உதைத்த வரலாறும், அதன் உண்மையும் கூறப்பட்டன.*

***342. தெளிவுரை :-** சிவபெருமான் திருக்குறுக்கை வீரட்டத்தில் எழுந்தருளியுள்ள நிலை, தன்வழி நின்ற மனத்தை நம் வழிப் பொருந்துமாறு நிறுத்திப் பின் மகளிரோடு மெய்யுறுதலை அறவே விடுத்து, எத்தகையோர்க்கும் காமத்தை விளைத்தலில் வல்ல காமவேளது குறும்பை அழித்து, அந்நிலைக்கண் நாம் அசையா திருக்கத்தக்க அரிய தவயோக நிலையேயாம்.*

***குறிப்புரை :-*** *'இந்நிலை பல சமயத்தார்க்கும் பொது' என்பது பற்ற, 'அருந்தவ யோகம்' எனப் பொதுப்படக் கூறிப் போந்தார். லிங்கம் - குறி, வழி - ஒழுக்கம். சிவபெருமான் காமனை எரித்த வரலாற்றால் அறியக் கிடக்கும் உண்மை வெளிப்படை என்பது பற்றி, இவ்வாறு இனிது விளங்க ஓதியொழிந்தார். "அங்கண்" என்றதன்பின் 'நிற்கும்' என ஒருசொல் வருவிக்க. 'குறுக்கை' என்பது, 'கொறுக்கை' என மருவிற்று. 'குறுக்கை' என்பதே பாடம்' எனலுமாம். 'சிவபெருமான் கொறுக்கை அமர்ந்தது, இருத்தி, போக்கி, அழித்து நிற்கும் யோகமே' என வினை முடிவு செய்க.*

*உமாதேவி 'தக்கன் மகள்' என்னும் நிலையை மாற்றிக் கொள்ள விரும்பிச் சிவபெருமானது அருளிப்பாட்டின்படி மலையரையனுக்கு மகளாய்த் தோன்றி வளர்ந்து இமயமலையில் தவம் செய்து கொண்டிருக்க, சிவபெருமான் சனகாதி நால்வர் முனிவர்கட்கு உண்மை ஞானம் உணர்த்த வேண்டித் திருக்கயிலையில் தென்முகக் கடவுளாய் யோக நிலையில் இருந்த பொழுது, திருமாலின் சொற்படி, பிரமன் முதலிய தேவர்கள் தமக்குத் துயர் விளைத்த சூரபதுமனாதி அசுரரை அழித்தற்குச் சிவபெருமான் உமாதேவியாரைக் கூடி முருகப் பெருமானைத் தருதற் பொருட்டு அவருக்குக் காமத்தை விளைக்குமாறு காமவேளை ஏவினர். அவன் சென்று சிவபெருமான் மீது தனது மலர் அம்புகளை விடுத்தபொழுது, சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணைச் சிறிதே திறக்க, அதனின்றும் புறப்பட்டுப் படர்ந்த தீயால் காமவேள் சாம்பராயினன். இவ்வரலாற்றைக் கந்தபுராணம் விரித்துக் கூறும். இவ்வீரச் செயலைக் குறிக்கும் தலம் திருக்குறுக்கை வீரட்டம் என்பதையும் நாயனார் தாமே எடுத்தோதினார். இதுவும் சிவபெருமான் நேரே செய்த வீரச்செயல்.*

*இதனால், சிவபெருமான் காமனை எரித்த வரலாறும், அதன் உண்மையும் கூறப்பட்டன.*

*சிவபெருமானது அட்ட வீரட்டங்களையும் அவை குறிக்கும் வீரச்செயல்களோடு கூறும் பழைய தனிப்பாட்டு ஒன்று வருமாறு:*

*பூமன் சிரம்கண்டி, அந்தகன் கோவல், புரம் அதிகை*
*மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மாவழுவூர்,*
*காமன் கொறுக்கை, யமன்கட வூர்இந்தக் காசினியில்*
*தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே.*

*- தனிப்பாட்டு*

*(பூமன் - பிரமன், மாமன் - தக்கன், தேம் மன்னு - தேன் மிகுந்த, சேவகம் - வீரம்).*

*இவற்றுள் வழுவூர் ஒன்றும் வைப்புத்தலம்; ஏனைய தேவாரப் பாடல் பெற்ற தலங்கள்.*

*இவ்வாறு நாயனார் "வீரட்டம்" எனச் சிறப்புப் பெற்றத் தலங்களைக் குறித்தருளினமையால், பிறவகையில் சிவபெருமானது அறக்கருணைச் செயல் மறக்கருணைச் செயல்களைக் குறிக்கும் தலங்களும், அவை பற்றிய வரலாறுகளும் சிவநெறி நிற்பார்க்கு இன்றியமையாதனவாதல் அறியப்படும். இவ்வாற்றானே சமயக் குரவர்கள் நால்வரும் தமது திருப்பாடல்களாலும், சென்று வணங்கிய திருநெறி ஒழுக்கத்தாலும், அதியற்புத விளைவுகளாலும் திருக்கோயில்களின் இன்றியமையாமையை இனிது விளக்கினமை கருத்திற் கொள்ளற்பாலது.*

| வ. எண் | தலத்தின் பெயர் | நடந்த நிகழ்வு | சிறப்பு |
|---|---|---|---|
| 1. | திருக்கோவிலூர் வீரட்டம் | அந்தகாசுரனைத் தண்டித்தது | ஆணவ மலத்தை இச்சா, ஞான, கிரியா வடிவாய்த் தொழிற்படும் சத்தியைக் கொண்டு ஒடுக்குதல் |
| 2. | திருப்பறியலூர் வீரட்டம் | தக்கன்தலை அரிந்தது | என்றும் செருக்குடையாரை ஒறுத்தல் |
| 3. | திருக்கண்டியூர் வீரட்டம் | சலந்தராசுரவதம் | ஒரோவழிச் செருக்குறுவாரை ஒறுத்தல் |
| 4. | திருவிற்குடி வீரட்டம் | பிரமனின் சிரம் கொய்தது | மறத்தை அழித்து அறத்தை வளர்த்தது |
| 5. | திருவதிகை வீரட்டம் | திரிபுரம் எரித்தது | முப்புரமெரித்தது மும்மல காரியம் |
| 6. | திருவழுவூர் வீரட்டம் | யானையை உரித்துப் போர்த்தது | ஐம்பொறி யானையை வெல்பவன் சிவன் ஒருவனே |
| 7. | திருக்கடவூர் வீரட்டம் | காலனைக் காலால் உதைத்தது | சிவயோகம் செய்வார் ஞானம் பெற்று வீடடைவார் |
| 8. | திருக்குறுக்கை வீரட்டம் | காமனைக் காய்ந்தது | இச்சைக்கு அதி தெய்வம் காமன். அவனை அழித்தல் – சென்று பற்றும் சிந்தையே நிறுத்துதல் |

*60, 75, 80, 100 ஆண்டுகள் அகவை நிறைவுபெற்று மங்கல நாண் விழாக் கொண்டாடும்போது மணவினை ஆசான்கள் எட்டுக் கலசங்களை நிலைபெறச் செய்து எட்டுத்தல வீரட்ட மூர்த்தங்களை எழுந்தருளச் செய்து அட்டாங்க யோகம், அட்டமாசித்திகள் அருளிய எண்குணத்தானாம் அட்டமூர்த்திக்குச் சிறப்புபூசை வழிபாடு செய்தலை இருபத்தொன்றாம் நூற்றாண்டில் காணும் பேற்றை நாம் பெற்றுள்ளோம்.*

## 3. இலிங்க புராணம்

343. அடிசேர்வன் என்ன எம் ஆதியை நோக்கி
முடிசேர் மலைமக னார்மக ளாகித்
திடமார் தவஞ்செய்து தேவர் அறியப்
படியார அற்சித்துப் பத்திசெய் தாளே. 1

*அட்ட வீரட்டங்கள் பற்றிச் சிவபெருமானது வீரத்தைக் குறித்தருளிய நாயனார், பிற வரலாறுகளாலும் அப்பெருமானது முதன்மை விளங்குமாற்றை ஆறு திருமந்திரங்களால் உணர்த்து கின்றார். 'இலிங்கபுராணம்' என்பது இங்கு அப்பெயருடைய புராணம் முதலாக உள்ள சிவபுராணங்களை. இலிங்கத்தில் எழுந்தருளிய சிவபெருமானின் தொன்மையான வரலாறு கூறுதல்.*

**343.** *தெளிவுரை :- எனின், திருவருட்சத்தி இறைவனைப் பூசித்த வரலாறு உணர்த்துதல் நுதலிற்று. சத்தியானவள், எம் முதற்கடவுளாகிய சிவபெருமானின் திருவடியைச் சேருவேன் என்று அவரையே நோக்கி கொடுமுடிகள் பலவுடைய இமய மலையரசன் மகளாராகி, உறுதியான தவஞ்செய்து தேவர்கள் அனைவரும் தரிசித்து உய்யப் பூமியில் மனமாரப் பூசித்து அன்பு செய்தாள் என்றவாறு.*



**344.** திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை
அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டா
புரிவுடை யாளர்க்குப் பொய்யலன்ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே. 2

---

*இறைவனோடு ஒன்றாயுள்ள சத்தி பூமிக்கண்ணுள்ளார் பூசனை செய்யுமாற்றையும் அதன் பயனையும் கண்டு உய்யத் தாம் மலைமகளாகி, அவரையே நோக்கித் தவஞ் செய்து, பூமியில் வந்து பூசித்து அன்பு பூண்டாள் என்பது கருத்து.*

*இது, காஞ்சியில் கம்பையாற்றங்கரையில் காமாட்சியம்மை மணலால் சிவலிங்கம் செய்து வழிபட்டமையையும், இமயமலையில் கௌரி சிருங்கம் என்ற உச்சியில் இறைவனையே மணாளனாக அடைய வேண்டிக் கடுந்தவம் செய்தமையையும் உணர்த்துவது.*

*திடமா தவம் என்றது இறைவனே கிழவேதியனாக வந்து, சிவபெருமானுடைய பல வரலாற்றைக் குறைத்துக்கூறியும் கலங்காத உறுதியுடன் இருந்தமையை உணர்த்துவது.*

*தேவரறிய என்றது, காமியப் பூசையையன்றி அடி சேர் ஞானம் அடையப் பூசனை செய்யவறியாத தேவர்களும் அறிய என்றவாறு.*

*படி ஆர அர்ச்சித்து - பூமியில் எல்லா வகைகளும் நிரம்பப் பூசித்து என்றது, இவள்செய்த பூசனையிலேயே உலகம் எல்லா மேன்மையையும் எய்திற்று என்பதாம்.*

*அடிசேர்வன் என்னப் பத்தி செய்தாள் என்ற இயைபு அடிசேர் ஞானத்தை அடைவிப்பது பத்திநெறியொன்றே என்று உணர்த்தியவாறு.*

**344. *தெளிவுரை :-* *'முப்புரத்தை எரித்த முதல்வனாகிய சிவபெருமான் உமையம்மை போன்றார்க்கன்றி நம்மனோர்க்குக் கிடைத்தற்கரியன்' என்று தளர்ச்சி எய்த வேண்டா, அன்புடையார் யாவராயினும் அவர்க்கு அவன் எளியனே. அன்புடையார்பால் அருளுடையவனாய் நின்று அவரவர்க்குத் தக்கவகையில் அவன் அருள் செய்வான்.***

***குறிப்புரை :-*** *புரிவு - விருப்பம்; அன்பு. பொய், இங்கு அருமை. பரிவு - தன்மை; தகுதி, 'அவரவர்க்குத் தக அருள்புரிவான்' என்றதனால், 'பயன் கருதியும் அவனை வழிபடலாம்' என்பது உணர்த்தப்பட்டதாம்.*

**345.** ஆழி வலங்கொண்டயன்மால் இருவரும்
ஊழி வலஞ்செய்ய ஒண்சுடராதியும்
ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி
வாழி பிரமற்கும் வாள்கொடுத் தானே.

---

*'அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்*
*நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ'*

*- (தி.5 ப.23 பா.9)*

*என அப்பரும் அருளிச் செய்தார். இதனால், ''யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை" (தி.10 பா.251) என மேற்குறித்த வழிபாடு அவரவர்க்கு இயலுந் திறத்தால் சிவனுக்குச் செய்தல் தக்கது என்று கூறப்பட்டது.*

**345. *தெளிவுரை :-*** *மிக்க வலிமை பொருந்தித் தம்மில் போர் செய்த பிரமன், திருமால் என்னும் இருவரும் தம்முன் தீப்பிழம்பாய்த் தோன்றிய சிவபெருமானைப் பின்பு இலிங்கத் திருமேனியில் நெடுங்காலம் வழிபட, அவர்கட்குச் சிவபெருமான், திருமாலுக்குச் சக்கரப்படையையும், பிரமனுக்குத் தண்டாயுதத்தையும் வழங்கி, முறையே, காத்தல் படைத்தல்களைச் செய்யுமாறு அருள்புரிந்தான்.*

***குறிப்புரை :-*** *குற்றம் செய்தலை இயல்பாக உடைய உயிர்கள் தாம் செய்த குற்றத்திற்குச் சிறந்த கழுவாய் (பிராயசித்தம்) ஆகச் செய்யத்தக்கதும் சிவ வழிபாடே என்றதாயிற்று. ஆழி இரண்டில் முதற்கண் உள்ளது. 'ஆழம்' எனப் பொருள்தந்து, மிகுதியை உணர்த்திற்று. வலம் இரண்டில் முன்னது வலிமை. அஃது அதனால் ஆகிய போரைக் குறித்தது. 'கொண்ட' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. வாள் - படைக்கலம். 'வாள் பெற்றான்' என்றே கொள்ளுதலும் பொருந்தும். ஆழி - அண்ணாமலை, சக்கரம். ஊழி - முறைமை.*

*ஒரு கற்பத்தில் பிரமனும், மாலும் தாம் தாமே உலகிற்கு முதல்வர் எனத் தருக்கிப் போர்புரிய, அவர்க்கு இடையே சிவபெருமான் அடிமுடி அறியப்படாத அனற் பிழம்பாய்த் தோன்றியருள, அவ்விருவரும் 'இதன் அடி முடிகளை அறிபவரே முதல்வர்' என வரையறுத்துக்கொண்டு அவற்றைக் காண முயன்றனர். திருமால் வராக வடிவங்கொண்டு நிலத்தைப் பிளந்து பல்லாயிரம் யாண்டு கீழ்சென்று*

*அடியைக் காண முயன்று முடியாதவராய், 'இது சிவபெருமானது திருவிளையாடல்' என்று அறிந்து தருக்கொழிந்தார். பிரமன் அன்னப்பறவை உருவங்கொண்டு பல்லாயிரம் யாண்டு மேலே பறந்து சென்றும் முடியைக் காண இயலாதவனாய், திருமால் அடியைக் கண்டிருப்பார் என்னும் கருத்தினால் அவர்முன் வந்து 'யான் முடியைக் கண்டேன்' என்று பொய் கூறினான். அவன் பொய்ம்மொழிக்குச் சான்றாகச் சிவபெருமானது முடியினின்றும் வீழ்ந்த தாழை மலர் நின்றது. பிரமன் பொய் கூறுதலைப் பொறாத சிவபெருமான் அக்கினித் தம்பத்தைப் பிளந்துகொண்டு உக்கிரவடிவத்துடன் காட்சியளித்துப் பிரமதேவனுக்கு இவ்வுலகில் எங்கும் கோயில் உண்டாகாதவாறு சபித்தும், தாழை மலரைத் தமக்கு ஆகாது என்று விலக்கியும் ஒறுத்தருளினார். பின்பு பிரமதேவன் அஞ்சி வணங்க, அவனுக்கு அந்தணர் இல்லமே கோயிலாகவும், அவரைப் பிறர் வழிபடும் வழிபாடே அவனுக்குச் செய்யும் வழிபாடாகவும் அருள் செய்தார். பின்பு மால் அயன் இருவரும் வேண்டச் சிவபெருமான் தம் வழிபாட்டிற்குரிய இலிங்கவடிவாயினார். அவ்வடிவில் இருவரும் சிவபெருமானைப் பூசித்துப் பயன் பெற்றனர். இதுவே இலிங்கத் தோற்றத்திற்குப் புராணம் கூறும் வரலாறு. இவ் வரலாற்றை விரித்துக் கூறும் புராணமே "இலிங்க புராணம்" என்பது "சைவ புராணம்" என்பதன் மறுபெயர்.*

*பிரமன் அரிஎன் றிருவருந்தம் பேதைமையால்*
*பரமமியாம் பரமமியாம் என்றவர்கள் பதைப்பொடுங்க*
*அரனா ரழலுருவாய் அங்கே அளவிறந்து*
*பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ.*

*- தி.8 தோணோக்கம், 12*

*என மாணிக்கவாசகர் இவ்வரலாற்றை எடுத்தோதியருளினார். "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடி" - தி.8 தெள்ளேணம், 1 என்று பிறவிடங்களிலும் குறித்தருளுவார். தேவாரத் திருமுறை களுள் இவ்வரலாறு பயின்று வருதல் வெளிப்படை. திருநாவுக்கரசர் இலிங்க புராணத் திருக்குறுந்தொகை' என ஒரு திருப்பதிகமே அருளிச் செய்தார்.*

*இதனால், சிவபெருமானே முதல்வனாதலை விளக்கும் இலிங்க வரலாறு கூறப்பட்டது. இதனானே அப்பெருமான், உயிர்கள் தன்னை*

**346.** தாங்கி இருபது தோளுந் தடவரை
ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி
ஆங்கு நெரித்தம ராவென் றழைத்தபின்
நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே. **4**

**347.** உறுவ தறிதண்டி ஒண்மணல் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே. **5**

---

*வழிபடுதற்குக் கொண்ட வடிவங்களுள் இலிங்கத் திருமேனியே சிறப்புடையதாதலும் பெறப்பட்டது. இது அருவுருவ வழிபாடெனப்படும்.*

**346. *தெளிவுரை :-*** *சிவபெருமான் தனது கயிலைப் பெரு மலையைத் தூக்கி எறியக் கருதி இருபது தோள்களாலும் மேல் எழுமாறு தாங்கி எடுத்த இராவணனது நிகரில்லாத பேராற்றலைத் தனது கால் விரலால் விரைய ஊன்றி அவன், இறைவனே என்று அழைத்து அலறி முறையிட்ட பின் அவனை விடுத்து, அழிவில்லாத வரத்தையும் கொடுத்தருளினான்.*

***குறிப்புரை :-*** *இவ்வரலாறு இராமாயணம் உத்தர காண்டத்துள் சொல்லப்பட்டது.*

*இதனால், சிவபெருமான் இராவணனுக்கு மறக்கருணையும், அறக்கருணையும் செய்தமை கூறப்பட்டது. வழிபட்டவர்க்கே அறக்கருணை செய்வான் என்க.*

**347. *தெளிவுரை :-*** *'செய்யத்தக்க செயல் இது' என்பதை முற்பிறப்பிற் செய்த தவமுதிர்ச்சியால் தெளிந்த சண்டீசநாயனார் மணலால் இலிங்கம் அமைத்து, வினை கெடும் வகையில் பசுவின் பாலையே எல்லாத் திருமஞ்சனப் பொருளுமாகக் கருதி ஆட்டி வழிபட, அவரைப் பெற்ற தந்தை தன்மகன் வேள்விக்குரிய பாலை வீணாக்குவதாக நினைத்து வெகுண்டு ஒறுக்க வேண்டித் தண்டுகொண்டு அடித்து, அது பயன்படாமையால், இலிங்கத் திருமேனியைக் காலால் அழிக்க, நாயனார் சினந்து, தாம் ஆனிரை மேய்க்கும் கோலை எடுத்தபொழுது அதுவே மழுவாய் மறுவடிவங் கொள்ள, அதனாலே அவன் காலை வெட்டி, அதற்குப் பரிசிலாகச்*

*சிவபெருமான் சண்டேசுர பதவியில் இருத்தித் தன் முடிமேல் இருந்து எடுத்துச் சூட்டிய கொன்றை மாலையைப் பெற்றார்.*

## மூலட்டானத்தில் சிவலிங்கம் தாபிக்கும் விதிகள்

### சிவலிங்கத் திருமேனியில் கலா தத்துவ நியாசங்கள்




*அத்துவா என்றால் வழி என்பது பொருளாகும். வினைகளை ஈட்டுவதற்கும், கழிப்பதற்கும், உண்டான வழிகள் என்று சைவ சித்தாந்த உரைகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை சொற் பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சம் என்று இரண்டாகச் சொல்லப்பட்டுள்ளன.*

| | | | |
|---|---|---|---|
| *சொற் பிரபஞ்சம்* | *மந்திரம் (11)* | *பதம் (81)* | *வன்னம் (எழுத்து) (51)* |
| *பொருட் பிரபஞ்சம்* | *புவனம் (224)* | *தத்துவம் (36)* | *கலை (5)* |

*இவற்றையெல்லாம் சிவலிங்கத்தில் பதிய (நியாசம் செய்தல்) வைத்தல் என்ற கிரியை கும்பாபிடேகத்தின் போது நடைபெறும்.*

*பிரம்ம, விட்டுணு, உருத்திர பாகங்களில், ஈசானம், தத்புருடம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் என்ற ஐந்து முகங்களில் முழு சொற்பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சம் என்ற அவர் படைத்த அனைத்தையுமே மந்திரங்களால் சிவலிங்கத்தில் பதிய வைத்துப்பின், சிவபெருமானால் படைக்கப்பட்ட பஞ்சபூதங்களின் வழி அவர்தம் அருளாற்றல் பெற்றுள்ள யாகசாலையின் கடதீர்த்தங்கள் சுவாமிக்கு அபிடேகம் செய்யப்படுவதால் பெறற்கரிய மந்திரசக்திகள் பெற்று மூலட்டானம் திருவருள் நிலையமாகத் திகழ்கிறது. அனைத்து தனு, கரண, புவன போகங்களுடன், நம்மையும் அவருக்கே சமர்ப்பித்துக் குடமுழுக்கை நிறைவு செய்கிறோம். அவர் அருள் பாலிக்கட்டும்.*

## கருவறையில் தேவதாபனம் (பிரதிட்டை)




*கருவறையில் அமைக்கும் தெய்வத் திருவுருவங்களை அவரவர்க்கு விருப்பப்பட்ட இடத்திலோ அல்லது மையத்திலோ*

*வைக்கக்கூடாது. சிற்ப சாத்திரப்படி அவ்வவற்றுக்குரிய இடங்களில்தான் வைக்கவேண்டும். கருவறையின் நடுமையத்தில் கிழக்கு மேற்காகச் செல்லும் நூலுக்கு பிரம்மசூத்திரம் அல்லது பூர்வசூத்திரம் என்றும் தெற்கு வடக்காகச் செல்லும் நூலுக்கு சோமசூத்திரம் அல்லது தாராசூத்திரம் என்றும் பெயர். பிரம்ம சூத்திரமும், சோமசூத்திரமும் சேரும் நடுவிடத்தில் சிவலிங்கத்தை மட்டும்தான் தாபனம் (பிரதிட்டை) செய்யவேண்டும். சோம சூத்திரத்துக்குப்பின் மீதமுள்ள பகுதிகள் 10 பாகமாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு தெய்வத்தையும் ஒவ்வொரு பாகத்தில் பிரதிட்டை செய்யலாம். பிரும்மசூத்திரத்துக்கு முன்பாக அதாவது கருவறையின் முன்பாதிப் பகுதியில் எந்தத் திருவுருவத்தையும் பிரதிட்டை செய்யக்கூடாது.*

*கர்ப்பகிரகம் அல்லது கருவறையின் உட்பகுதியில் மத்தியிலிருந்து பின் பகுதியை 10 பாகம் செய்து மத்தியில் சிவலிங்கத்தையும் 10ஆவது பதத்தில் சைவ மகேச்சுர பிம்பங்களையும், 9வது பதத்தில் நான்முகனையும், 8ஆவது பதத்தில் திருமாலையும், 7ஆவது பதத்தில் சண்முகரையும், 6ஆவது பதத்தில் சரசுவதி முதலியவர்களையும், 5ஆவது பதத்தில் சூரியன், சாஸ்தா போன்றோர்களையும், 4வது பதத்தில் விநாயகரையும், 3ஆவது பதத்தில் பைரவரையும், 2ஆவது பதத்தில் சத்தியையும், 1ஆவது பதத்தில் பூதங்கள், நாகம் இவற்றையும் பிரதிட்டை செய்யவும்.*

***குறிப்புரை :-** எனவே, 'சிவ வழிபாட்டின் மிக்க வழிபாடும் இல்லை; அதனை இகழ்தலின் மிக்க பாவமும் இல்லை' என்பதும், அங்ஙனமாகவே, 'அவ்வழிபாட்டினை இகழ்வார் எவராயினும் அவரைப் பாவிகளாகக் கருதி ஒறுத்தல் பேரறமாம்' என்பதும் குறித்தவாறாயிற்று. தமிழ் நாட்டில் வரலாற்று முறையால் உலக வழக்கிலும், செய்யுள் வழக்கிலும் வழங்கி வந்த இவ்வரலாற்றினை நாயனார் திருமந்திரமாக ஆக்கியருளினார். இச்சிறப்புக் கருதித் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமது திருப்பாசுரத் திருப்பதிகத்துள்,*

> *கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு, நல்ல*
> *படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு*
> *முடிசேர்ந்த காலை அறவெட்டிட முக்கண் மூர்த்தி*
> *அடிசேர்ந்த வண்ணம் அறிவார் சொலக் கேட்டு மன்றே.*
> 
> *- தி.3 ப.54 பா.7*

*என்று அருளிச் செய்தார்.*

*தழைத்ததோர் ஆத்தி யின்கீழ்த் தாபரம் மணலால் கூப்பி*
*அழைத்தங்கே ஆவின் பாலைக் கறந்துகொண்*
*டாட்டக்கண்டு*
*பிழைத்ததன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்*
*குழைத்ததோர் அமுதம் ஈந்தார் குறுக்கை வீரட்டனாரே.*
*- தி.4 ப.49 பா.3*

என அப்பரும் இதனை வகுத்தோதியருளினார்.

இவையெல்லாம் பற்றித் தொகையாகவும், வகையாகவும் அவ்வக் காலத்தில் வெளிப்பட்ட திருத்தொண்டர் வரலாற்றினை விரிவாகச் செய்தருளிய சேக்கிழார் நாயனார் தமது திருத்தொண்டர் புராணத்துள் இவ்வரலாற்றை விரித்தருளியவாறு இது.

'சோழநாட்டில் திருச்சேய்ஞலூரில் வைதிக அந்தணர் குலத்தில் 'எச்ச தத்தன்' என்னும் தந்தைக்கும், பவித்திரை' என்னும் தாய்க்கும், 'விசார சருமர்' என்னும் அரும்பெறற் புதல்வர் ஒருவர் தோன்றினார். அவர் முன்னைத் தவமுதிர்ச்சியால் கல்வியைச் சிறக்கக் கற்று, உபநயனம் பெற்று, வேதம் முதலிய கலைகளினும் வல்லவராய், 'சிவபெருமானே முழுமுதற் கடவுள்' என்று உணர்ந்து, அவனது திருவடிக்கண் அன்பு மீதூர்ந்து நின்றார். அவர் ஒருநாள் பிற மாணாக்கருடன் வேதம் ஓதிச் செல்லுகையில் வழியில், அவ்வூர்ப் பசு மேய்க்கும் ஆயன், தன்னை முட்டிய பசு ஒன்றினைக் கோலால் நன்கு புடைத்ததைக் கண்டு வருத்தமும் சினமும் கொண்டு, 'பசுக்களின் பெருமையை அறியாத நீ இனி இவற்றை மேய்த்தல் வேண்டா; இன்று முதல் யானே இவற்றை மேய்க்கின்றேன்' என்று அன்று முதல் அவ் ஆனிரைகளை அவரே மேய்த்து வருவாராயினார்.

அவர் அப்பசுக்களிடத்துக் கொண்ட உண்மை அன்பால் அப்பசுக்களும் அவரிடம் பேரன்பு கொண்டன. நல்ல மேய்ப்பினால் அவை தம்மை உடையவர்க்கு முன்னையினும் மிகுதியாகப் பால் தந்தன. அதனால், 'இம் மாணியின் மேய்ப்பே நல்ல மேய்ப்பு' என ஊர் அந்தணர் பலரும் மகிழ்ந்தனர்.

பசுக்கள் பலவும் விசாரசருமரைக் காணும் பொழுது தம் கன்றினைக் கண்டாற்போல அன்பு பெருகி நின்றமையால் அவற்றின் மடியில் பால் தானாகவே விம்மிப் பெருகுவதாயிற்று. சிவ வழிபாடு ஒன்றற்கே உரிய பசுக்களின் பால் வீணாவதைக் கண்ட விசார சருமர், அதனைச் சிவபெருமானுக்கு ஆக்கக் கருதித் தாம் பசுமேய்க்கும் மண்ணியாற்றங்கரையில் மணல் இலிங்கம் அமைத்து அப்பாலைக் குடங்களில் ஏற்று ஆட்டி வழிப்பட்டார்.

*இவ்வாறு நாள் பல செல்ல, இதனை அறிந்த ஒருவன், ‘பசு மேய்க்கின்ற சிறுவன் பாலைக் கறந்து மண்ணியாற்று மணலில் ஊற்றுகின்றான்’ என்று அந்தணர்களிடம் சென்று கோள் உரைத்தான். அந்தணர்கள், தமக்குப் பால் குறைவறக் கிடைப்பினும், விசார சருமரது வழிபாட்டின் சிறப்பை அறியாதவர்களாய் அவர் தந்தையாகிய எச்சதத்தனிடம் கூறினர். எச்ச தத்தன், ‘நாளை முதல் இச்செயல் நிகழாதவாறு செய்கின்றேன்’ என்று உறுதி கூறி, விசார சருமர் பசு மேய்க்கச் சென்றபின், அவர் அறியாதவாறு அவர் பின்னே சென்று மண்ணியாற்றங்கரையில் ஒரு குராமரத்தின் மேல் ஏறி மறைந்திருந்து, தன் மகனாரது செயல் பலவற்றையும் நோக்கியிருந்தான்.*

*அவர் முன்புபோல் மணலால் கோயிலும், இலிங்கமும் செய்து, பாலைக் கொணர்ந்து வைத்துப் பூ முதலியவைகளையும் சேர்த்துக் கொணர்ந்து வழிபாட்டில் அமர்ந்து அன்புடன் வழிபடுவாராய்ப் பாலை எடுத்துக் குடம் குடமாக ஆட்டும்பொழுது எச்சதத்தன் சீற்றம் மிகுந்து, இறங்கிச்சென்று மகனாரைவைது, கோல் ஒன்றினால் முதுகில் புடைத்தும் நின்றான்.*

*ஆயினும் அவற்றை விசார சருமர் பூசை நினைவால் அறிந்திலர். அதனால் எச்ச தத்தன் கோபம் மூண்டு சென்று, அவர் வழிபடும் மணல் இலிங்கத்தைக் (**இலிங்கத்தை இடறினமையை வாயால் சொல்லுதலும் கூடாது என்று சேக்கிழார் பாற்குடத்தை இடறியதாகக் கூறினார்**) காலால் சிதைத்தான். அதனால் மிக வெகுண்ட விசார சருமர், தம் பக்கத்திலிருந்த பசுமேய்க்கும் கோலை எடுக்க, திருவருளால் அது மழுவாயுதமாக மாறிற்று. அதனாலே அவர் எச்சதத்தனது இரண்டு கால்களையும் துணிந்து வீழுமாறு வெட்டினார். எச்சதத்தன் அலறித்துடித்து மண்ணில் விழுந்தான்.*

*விசார சருமர், ‘இனிச் சிவபூசைக்கு வரும் இடையூற்றை நீக்குவதற்குக் கருவியாக இம் மழுப்படை திருவருளால் கிடைத்தது’ என்று மகிழ்ந்து மீளவும் சிவபூசைக்கு ஆனவற்றைச் செய்ய முயன்றார்.*

*அப்பொழுது சிவபெருமான் தேவர், முனிவர், கணங்கள் புடைசூழத் தோன்றிக் காட்சியளித்து, ‘நம் பொருட்டு நின் தாதையைத் தடிந்த நினக்கு இனி நாமே தந்தை; நீ நம் மகன்’ என்று திருவாய் மலர்ந்து, தம் கையால் அவரைத் தழுவி எடுத்து மார்போடு அணைத்து, உச்சிமோந்து சீராட்ட, விசார சருமர் முன்னை மாயா உடம்பு நீங்க, அருளுடம்பு பெற்றுச் சிவகுமாரர் ஆயினார்.*

*பின்பு சிவபெருமான், 'நம்மை வழிபடுவோர் நமக்கு ஆக்கிப் பெறும் நின்மாலியப் பொருள்கள் உனக்கு மட்டுமே உரியனவாக' என அருளிச் செய்து, சிவனடியார் பலர்க்கும் தலைமையாய் அவர்கட்கு அவர் தம் திருத்தொண்டின் பயனை வழங்கும் சண்ட பதவியை அவருக்கு அளித்து, அதற்கு அடையாளமாகத் தமது திருமுடியில் உள்ள கொன்றை மாலையை எடுத்துச் சூட்டியருளினார்.*

*நாயனாரால் தண்டிக்கப் பெற்றமையால், எச்சதத்தனும், அவனைச் சார்ந்தோறும் சிவாபராதத்தால் 'எரிவாய் நிரயம் புகாது நீங்கிச் சிவலோகத்தை எய்தினர்'.*

*'சண்டேசுரர்' என்பது இவரது பதவியாற் பெற்ற பெயர். கையில் தண்டு கொண்டு ஆனிரை மேய்த்து, அத்தண்டே மழுவாகப் பெற்றுப் பிழைசெய்தவனை ஒறுத்தமை பற்றி, 'தண்டீசர்' எனவும் அழைக்கப்படுகின்றார். சிவகுமாரர் ஆயினமைபற்றி இவர், 'பிள்ளையார் - சேய்ஞலூர்ப் பிள்ளையார்' எனப்படுகின்றார்.*

**சண்டேசுவரர்**



அண்டர் பிரானுந்தொண்டர் தமக்கதிபனாக்கி "அனைத்து நாம்
உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்காகச்
சண்டீசனுமாம் பதந்தந்தோம்" என்றங்கவர் பொற்றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை வாங்கிச் சூட்டினார்
– பெரிய புராணம்

*திருத்தொண்டத் தொகை அடியவருள் ஒருவராயினமை பற்றி நாயன்மார்களுள் இவரும் அவருள் ஒருவராய் நின்று திருக்கூட்டத்து வழிபடப்படுதலே யன்றிச் சிவபெருமான் இவருக்கு அளித்த தனிச்சிறப்புக் காரணமாகச் சண்டேசுர நிலையில் நின்று தனி வழிபாடும் பெறுகின்றார்.*

*அதனால் இவரை நாயன்மார்களுள் ஒருவராகமட்டும் வைத்து வழிபட்டுச் சண்டேசுரராக வழிபடாது ஒழிபவர் சிவபெருமானது அருளாணையைக் கடந்தவராவர். அவர்கட்குச் சிவவழிபாட்டின் பயன் கிட்டுதல் அரிது.*

*இவ்வரலாற்றால் சிவவழிபாடு வீடுபேற்றைத் தரும் என்பது அறியப்படும் மற்றும், 'சிவவழிபாட்டிற்கு இடையூறு விளைப்பாரை ஒறுத்தல் பெருஞ் சிவபுண்ணியமாம் என்பது இதனால் விளங்குவது' எனச் சேக்கிழார் திருப்பாசுரத் திருக்குறிப்பருளலில் குறித்தல் காண்க. (தி.12 திருஞான - 839).*

*'சிவனடியாரால் ஒறுக்கப்பெற்றவர் தம் குற்றம் முழுதும் நீங்கித் தூயராவர்' என்பது, நாயனாரால் தண்டிக்கப்பெற்ற எச்சதத்தன் குற்றம் நீங்கிச் சிவலோகம் புகுந்தமையால் அறியப்படும். 'சிவவழிபாடு நன்கு நடைபெறுதல் காரணமாகச் செய்யப்படும் செயல்கள்யாவும் சிறந்த சிவபுண்ணியங்களே' என்பதை மாணிக்கவாசகர்,*

> *தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்*
> *சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்*
> *சேதிப்ப ஈசன் சிவனருளால் தேவர்தொழப்*
> *பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்.*
>
> *- தி. 8 தோணோக்கம், 7*

*என நன்கு எடுத்து அருளிச்செய்தார்.*

> *ஏத நன்னிலம் ஈரறு வேலி*
> *ஏயர்கோன் உற்ற இரும்பிணி தவிர்த்துக்*
> *கோத னங்களின் பால்கறந் தாட்டக்*
> *கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற*
> *தாதை தாளற எறிந்தசண் டிக்குன்*
> *சடைமி சைமலர் அருள்செயக் கண்டு*
> *பூத வாளிநின் பொன்னடி அடைந்தேன்*
> *பூம்பொ ழில்திருப் புன்கூ ருளானே. - தி.7 ப.55 பா.3*

*என்று நம்பியாரூரர் இனிது விளங்க எடுத்தருளிச்செய்தமை காண்க.*

**348.** ஓடிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்
வாடி முகமும் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி இறைவா நமஎன்று கும்பிட
ஈடில் புகழோன் எழுகவென் றானே. **6**

---

*இதனால், சிவபெருமான் சண்டேசுர நாயனாருக்கு வியத்தகும் அறக்கருணை செய்தமை கூறப்பட்டது.*

**348. *தெளிவுரை :-*** *தேவர் பலரும் பற்பல காலங்களில் பற்பல துன்பங்களை அடைந்து சிவபெருமானிடம் முறையிட்டு அத்துன்பம் நீங்குதல் வேண்டி அப்பெருமானை அவன் திருப்பெயர்கள் பலவற்றையும் சொல்லி மலர்தூவிப் போற்றிசெய்து வழிபட, சிவபெருமான் அவர்களை அத்துன்பங்களினின்றும் நீங்கச் செய்தான்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'இங்கும், மேலேயும் கூறியவாறு தேவர், மூவர், முனிவர், அசுரர், இராக்கதர் முதலிய யாவரும் சிவபெருமானை வழிபட்டே தாம் கருதிய பயனை அடைந்தனர்' என்பது முடித்துக் கூறியவாறாயிற்று.*

## 4. தக்கன் வேள்வி

**349.** தந்தைபி ரான்வெகுண் டான்தக்கன் வேள்வியை
வெந்தழல் ஊடே புறப்பட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தினர் அண்ணல் சினஞ்செய்த போதே. 1

---

*சிவபெருமானது எட்டு வீரச் செயல் முதலியவற்றைக் கூறும் வரலாறுகளால் அவனது முதன்மையை உணர்த்திய நாயனார், அட்ட வீரட்டங்களுள் ஒன்றாகத் தொகுத்துணர்த்திய தக்கன் வேள்வி அழிப்பைச் சிறப்பு நோக்கி இங்கு ஒன்பது திருமந்திரங்களால் வகுத்துணர்த்துகின்றார். திருவாசகத்துள் திருவுந்தியார் முழுவதினும் இது விரித்தோதப்படுதலும், தேவாரத் திருப்பதிகங்களிலும் இது பல இடங்களில் சிறந்தெடுத்து அருளிச்செய்யப்படுதலும் கருதத்தக்கன. இதன் சிறப்பாவது சிவபெருமானது தலைமையை இனிது விளக்கி, அவனைப் பொதுநீக்கி வழிபடச் செய்தலாம்.*

**349.** *தெளிவுரை :-* *தக்கனது வேள்விக் குண்டத்தில் தீ நன்கு வளர்க்கப்பட்டபொழுது அங்குக் கூடியிருந்த தேவர், யாவர்க்கும் தந்தையும், தலைவனுமாகிய சிவபிரானை இகழ்ந்த அத்தக்கனுக்கு, முதல் ஆகுதியைச் சிவபெருமானுக்குச் செய்யுமாறு அறிவு புகட்டி அவ்வாறு செய்வித்து அவ்வேள்வியை முடிக்க மாட்டாதவராய், அவனுக்கு அஞ்சி முறை திறம்பித் திருமாலுக்கு முதல் ஆகுதியைச் செய்ய இசைந்திருந்தமையால், பின் அப்பெருமான் சினந்து வீரபத்திரரை விடுத்தபொழுது அவரால் அனைவரும் அழிந்தனர்.*

*குறிப்புரை :-* *இது முதலாகக் கூறுவன பலவற்றையும் கந்த புராணத்துட் பரக்கக் காண்க. 'வெந்தழல் ஊடே புறப்பட' என்பதை முதலிற் கொள்க. 'குண்டத்தின்' என்பது வருவிக்க. 'பிரானை' என்னும் இரண்டனுருபு தொகுத்தலாயிற்று. வெகுண்டானாகிய தக்கன் என்க. 'முந்திய பூசையால்' என உருபு விரிக்க. 'முடியார்' என்றது முற்றெச்சம். 'கெடுதலால்' என்பது 'கெட்டு' எனத் திரிந்து நின்றது. பிரான் - வள்ளன்மை உடையவன். வெகுண்டான் என்றது கொல்வதற்காக அல்ல. பொல்லா வினை போக்கிப் புனித ஞானம் வழங்க என்றவாறு. அடித்துத் திருத்தி அறிவு புகட்ட வரும் ஆசானைக் கண்டு மாணவன் அஞ்சியோடக் கூடாது.*

350. சந்தி செயக்கண் டெழுகின் றரிதானும்
எந்தை யிவனல்லம் யாமே உலகினிற்
பந்தஞ்செய் பாதத்து வீழ்ந்து தவஞ்செய்ய
அந்தமி லானும் அருள்புரிந் தானே. 2

351. அப்பரி சேஅய னார்பதி வேள்வியுள்
அப்பரி சேஅங்கி அதிசய மாகிலும்
அப்பரி சேஅது நீர்மையை யுள்கலந்
தப்பரி சேசிவன் ஆலிக்கின் றானே. 3

---

*இதனால் அச்சம் காரணமாகச் சிவநிந்தையைத் தடுக்க மாட்டாது உடன்பட்டிருந்த தேவரைச் சிவபெருமான் ஒறுத்து முறைப்படுத்தினமை கூறப்பட்டது.*

**350. *தெளிவுரை :-*** *வீரபத்திரர் தன்மேற்கொண்ட சினந்தணிந்து நின்றதை அறிந்து அச்சம் நீங்கி எழுந்த மாயோன் 'எம் தந்தையே; நாங்கள் இத்தக்கன் போலச் சிவநிந்தை செய்பவர் அல்லேம். (ஆதலின், எங்களைத் துன்புறுத்தாதீர்) என்று சொல்லி மண்ணில் பதிந்த அவரது பாதங்களில் வீழ்த்து துதிக்க, சிவனேயாயுள்ள அவரும் அவன்மேல் இரக்கங்கொண்டு ஒறுத்தலை ஒழித்தார்.*

***குறிப்புரை :-*** *வீரபத்திரர் மாயோனை வெகுளாது சினம் தணிந்தது, அவர் அவனை ஒறுக்கச் சென்றபொழுது சிவபெருமான், வான் மொழியாக, 'சினம் தவிர்தி' என்று கூறினமையாலாம். 'எழுகின்ற' என்பதன் ஈறு தொகுத்தலாயிற்று. தான், அசைநிலை. உம்மை, சிறப்பு. "யாமே" என்ற ஏகாரம் அசைநிலை. இதன்பின், 'என்று' என்பது எஞ்சி நின்றது. பந்தம் - சம்பந்தம், 'உலகினில் பந்தம்செய் பாதம்' என்றது. அவ்வாறாதலின் அருமை குறித்தவாறு. 'பாசம்' என்பது பாடம் அன்று "தவம்" என்பது துதியை.*

*இதனால், சிவபெருமான் மாயோனது பிழையைப் பொறுத்து அவனுக்கு அருள்செய்தமை கூறப்பட்டது.*

**351. *தெளிவுரை :-*** *மாயோன் வீரபத்திரரிடம் கூறியவாறே சிவ நிந்தை செய்பவனாகிய தக்கனது தலைமையான வேள்வியில் அக்கினிதேவன் ஏனையோர் வேள்வியிற் போலவே கிளர்ந்தெழுந்து தன் கடமையைச் செய்யமுற்பட்டது வியப்பு என்றாலும், தக்கனோடேயன்றி ஏனைத் தேவரோடும் மாறுபடுதற்கு அஞ்சிய*

352. அப்பரி சேஅயன் மால்முதல் தேவர்கள்
அப்பரி சேயவ ராகிய காரணம்
அப்பரி சங்கி யுளநாளும் உள்ளிட்
டப்பரி சாகி அலர்ந்திருந் தானே. 4

---

*அவனது நிலைமையைத் திருவுளத்தடைத்து அவனுக்கு அளித்திருந்த ஆற்றலை மாற்றாது சிவபெருமான் வாளா இருந்தான்.*

***குறிப்புரை :-*** *'அயன்' என்பது தக்கனுக்கும் பெயராய் வழங்கும். பதி - தலைமை. 'அந்நீர்மை' எனற்பாலதனை, "அது நீர்மை" என்றார். 'அப்பரிசாய அந்நீர்மை' என்க. ஆலித்தல் - மகிழ்தல்; இசைந்திருத்தல் இதனால், சிவபெருமான் அக்கினிதேவனை மன்னித்தருளினமை கூறப்பட்டது. அக்கினி தேவன் கையை வெட்டினமை திருவாசகத்துட் திருவுந்தியாரில் கூறப்பட்டது. 'அது பெருந் தண்டம்' அன்று என்னும் கருத்தால் அவனது சுடும் சத்தியை மாற்றாதிருந்தமை கூறினார் என்க.*

**352. *தெளிவுரை :-*** *மாயோன் வீரபத்திரரிடம் கூறியவாறே அயன், மால் முதலிய தேவர் பலரும் சிவனை நிந்தியாதொழியினும், நிந்தித்த தக்கனைத் திருத்தமாட்டாதவராயினர், அன்னராயினும், தக்கனது வேள்வியில் அவர் ஒருங்கு கூடியிருந்து அவனுக்கு ஊக்கம் மிகச்செய்தமைக்குக் காரணம், தானும் அவர்போலவே அச்சங் கொண்டவனாகிய அக்கினி தேவன், ஏனை இடங் காலங்களிற் போலவே தன் கடமையுட்பட்டுத் தன் செயலைச் செய்யக் கிளர்ந்து நின்றமையேயாம்.*

***குறிப்புரை :-*** *'காரணமாவது' என்று தொடங்கினமையால் அலர்ந்திருந்தான்; அதுவே, என உரைக்க. உளநாள் - பிற இடங்களில் உள்ள காலம். "நாளும்" என்பது பாடமாயின், "உள்ள பல நாள்களிலும் போல" என உரைக்க. அங்கியுளநாளும் என்றது இறைவனது அட்ட மூர்த்தங்களுள் ஒன்றாகிய அக்கினியும், அத்தீயினுள் இறைவன் கலந்திருத்தலும் நித்தியமானது என்று அறிவித்தவாறு.*

*இதனால், தக்கன் வேள்வியில், குற்றத்திற்கு ஆளானவருள் அக்கினி தேவன் முதல்வனாயினமை கூறி, அவ்வாறாகவும் மன்னித் தருளினமை குறிக்கப்பட்டது. அக்கினி தேவன் தன் காரியத்தைச் செய்யாதொழியின், வேள்வி நடத்தற்கே வழி இல்லையாதல் அறிக.*

*'தேவர் பலர்க்கும் இடும் அவியைத் தான் சுமக்கலாற்றாத*

**353.** அலர்ந்திருந் தானென் றமரர் துதிப்பக்
குலந்தருங் கீழங்கி கோளுற நோக்கிச்
சிவந்த பரமிது சென்று கதுவ
உவந்த பெருவழி யோடிவந் தானே. **5**

---

*அக்கினிதேவன் ஒருமுறை நீருள் ஒளிந்துகொள்ளத் தேவர் பலரும் வருந்தித் தேடியபொழுது மீன்கள் சில அவன் நீருள் ஒளிந்திருத்தலை அறிவிக்க, அறிந்து அவனைப் பிடித்துச் சென்றனர்' என்பதொரு வரலாறு காஞ்சிப் புராணச் சகோதர தீர்த்தப் படலத்துள் கூறப்படுதலை நோக்குக.*

**353. *தெளிவுரை :-*** *அக்கினிதேவன் கிளர்ந்தெழுந்தமைக்குத் தக்கன் முன்னிலையில் தேவர் பலரும் அவனைப் புகழத் தேவ கூட்டத்துள் கடைப்பட்டவனாகிய அக்கினிதேவன் முதற் குற்றவாளி யாயினமையை அறிந்து சிவபெருமான் கொண்ட சினமாகிய மேலான தீ அவ்வேள்விச் சாலையிற் சென்று பற்ற அக்கினிதேவன் தனக்குப் பொருந்தியதொரு பெரிய கள்ள வழியினால் வேள்விச் சாலையை விட்டு வெளியே ஓடி வந்துவிட்டான்.*

***குறிப்புரை :-*** *வைதிகருள் கருமகாண்டிகள், தேவர் பலர்க்கும் அவரது அவியைச் சுமந்து சென்று கொடுத்தல்பற்றி அக்கினிதேவனை, 'தேவர் பலர்க்கும் கீழ்ப்பட்டவன் - விண்டு பரமன். அக்கினி அவமன்; அவ்விருவர்க்கும் இடையே எல்லாத் தேவரும் (சிவஞானபோத மாபாடியம் சூ.1 அதி.2) என்பர். அவர் கொள்கையே தக்கன் வேள்விக்குப் பொருந்தியது ஆதலின், 'குலந்தரும் கீழ் அங்கி' என்றார். 'குலத்தால் தரப்பட்ட கீழ்மையை உடைய அங்கி' என்க. கோள் - குற்றம், சிவந்த கோபித்த. சிவத்தற்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. சிவந்த இது - சினந்ததனால் வந்த இத் தீ 'அது' எனின், அக்கினித் தேவனைச் சுட்டுமாகலின், 'இது' என்றார். "கீழ் அங்கி" என்றதற்கு ஏற்ப, "பரம் இது" என்றார்,* ***கீழான தீ மேலான தீயின்முன் நிற்கலாற்றுமோ என்பது நயம்****. சிவபெருமானது சினத்தீயாவது, வீரபத்திரரே என்பது வெளிப்படை. "தீ" என்றதற்கு ஏற்ப, "கதுவ" என்றார்.*

*இதனால், தக்கன் வேள்வியுள் ஓட்டமெடுத்தவருள் முதல்வன் அக்கினிதேவன் என்பது கூறப்பட்டது.*

**354. *தெளிவுரை :-*** *சிவபெருமானது கருணையைப் பெறாமையால், தலை, முகம், கை, தோள் என்பவற்றை இழந்த குற்றவாளிகள் முறையே, 'மால், அயன், தக்கன்' என்பவரும், சூரிய சந்திர கலை மகளும், அக்கினிதேவனும், அழகிய இந்திரனும் ஆவார்.*

**354.** அரிபிர மன்தக்கன் அருக்க னுடனே
வருமதி வாலையும் வன்னிநல் இந்திரன்
சிரம்முகம் நாசி சிறந்தகை தோள்தாம்
அரனருள் இன்றி அழிந்தநல் லோரே. **6**

---

*குறிப்புரை :- "தலை" என்பதைத் திருமாலுக்கு 'தலைமை' என்றவாறாகக் கொள்க. எண்ணொடுவின் பொருட்டாகிய "உடனே" என்றதனால், 'சூரிய சந்திரர்' என ஒரு தொகையாக்குக. வாலை வெண்ணிறம் உடையவள். இதனைத் தக்கன் மனைவிதன் பெயர் என்பாரது உரைக்குச் சான்றில்லை. தக்கன் மனைவி பெயர் 'வேதவல்லி' என்றே கந்தபுராணத்துட் கூறப்பட்டது. இதனுள்ளன்றித் திருவாசகத்தும்,*

*"நாமகள் நாசி சிரம்பிர மன்படச்*
*சோமன் முகனெரித் துந்தீபற;*
*தொல்லை வினைகெட உந்தீபற"*

*- தி.8 திருவுந்தியார், 13.*

*என நாமகள் நாசி அறுபட்டமை கூறப்பட்டது. 'முகம்' என்பது 'வாய்' எனவும் பொருள்தருமாகலின், அதனை இரட்டுற மொழிந்து, 'அருக்கன் (சூரியன்) பல்லிழந்தான்' என்க.*

*"சூரிய னார்தொண்டை வாயினிற் பற்களை*
*வாரி நெரித்தவா றுந்தீபற;*
*மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற"*

*- தி.8 திருவுந்தியார், 15.*

*என்றருளினமை காண்க.*

*இந்திரன் போகியாதலைக் குறிக்க. 'நல் இந்திரன்' என்றார். 'நல்லோர்' என்றது இகழ்ச்சி பற்றி.*

*இதனால், தக்கன் வேள்வியில் தேவர் பலரும் பலவாற்றால் ஒறுக்கப்பட்டமை கூறப்பட்டது.*

**355. *தெளிவுரை :-*** *தம் ஆசிரியர் தம் செவியிலே சொல்லக் கேட்ட மந்திரத்தை அவ்வாறே பொருளறியாது ஒப்புவிக்கின்ற அதனையே தவமாகக் கொண்ட நிலத்தேவர் (பூ சுரர்) ஆகிய அந்தணர்கள் அந்நிலை பிறழ்ந்து தக்கன் ஆணைவழியே யாகசாலை அமைத்து, அதில் நெருப்புக் குண்டம் விளைத்து, சிவபெருமானைப் புகழ்ந்து கூறும் மந்திரங்களைப் பிறரைப் புகழ்ந்து கூறும் மந்திரங்களாக மாற்றும் முகத்தால் அப்பெருமானை இகழ்ந்து,*

**355.** செவிமந் திரஞ்சொல்லுஞ் செய்தவத் தேவர்
அவிமந் திரத்தின் அடுக்களை கோலிச்
சவிமந் திரஞ்செய்து தாமுற நோக்குங்
குவிமந் திரங்கொல் கொடியது வாமே. 7

**356.** நல்லார் நவகண்டம் ஒன்பதும் இன்புறப்
பல்லார் அமரர் பரிந்தருள் செய்கென
வில்லார் வரையை விளங்கெரி கோத்தனன்
பொல்லா அசுரர்கள் பொன்றும் படிக்கே. 8

---

*தாங்கள் நலம் பெற நினைத்து மிகச் சொல்லிய மந்திரங்கள், அவரையே கொல்கின்ற மரண மந்திரங்களாய் விட்டன.*

***குறிப்புரை :-*** *அவி மந்திரம் - அவிசை வழங்கும் இல்லம், யாகசாலை. அடுக்களை - அட்டில்; என்றது தீக் குண்டத்தை, சவித்தல் - சபித்தல்; இகழ்தல், மூன்றாம் அடியிலும், செவி மந்திரம் என ஓதுதல் பாடம் அன்று, குவி மந்திரம் - குவித்த மந்திரங்கள். "கொடியது" என்றது பன்மை மயக்கம். "ஆம்" என்றது. 'அவை அன்னவாதல் இயல்பு' என்றவாறு.*

*இதனால், சிவபெருமானை இகழ்ந்தவர்க்கு மந்திரங்கள் கேடு விளைத்தமை கூறப்பட்டது.*

**356. *தெளிவுரை :-*** *நல்லோர்கள், நவகண்டமாகிய ஒன்பது கூறுபட்ட இடங்களிலும் துன்பம் நீங்கி இன்புற்று வாழ்தற் பொருட்டுத் தேவர் பலரும், 'எமக்கு விரைந்து அருள்செய்க' என வேண்ட, மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானே, தீய அசுரர்கள் அழியும்படி ஒளிவிடுகின்ற நெருப்பாகிய அம்பைத் தொடுத்தான்.*

***குறிப்புரை :-*** *அவ்வாறாக, அத்தேவர் தக்கன் வேள்வியில் அவியை உண்ண அப்பெருமானை விலக்கித் தாம் மட்டுமே சேர்ந்திருந்தது என்னை என்பது குறிப்பெச்சம். மாணிக்கவாசகரும் இவ்வாறே,*

*"சாவமுன் னாள்தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சம் அஞ்சி*
*ஆவஎந் தாய்என் றவிதா இடும்நம் மவர் அவரே"*

*- தி.8 திருச்சதகம், 4*

*எனத் தேவரது இரங்கத்தக்க நிலையை எடுத்தோதியருளினார். 'நல்லோர் இன்புற' என இயையும். 'நவகுண்டம்' என்பது பாடம் அன்று. "ஒன்பதும்" என்றது, 'முழுதும்' என்றவாறு. 'ஒன்பதன் கண்ணும்' என உருபு விரிக்க. நாவலம்பொழில் ஒன்பது கண்டமாதல் பற்றி*

**357.** நெளிந்தார் கலங்கினும் நீகலங் காதே
அளிந்தாங் கடைவதெம் ஆதிப் பிரானை
விளிந்தா னதுதக்கன் வேள்வியை வீயச்
சுளிந்தாங் கருள்செய்த தூய்மொழி யாளே. **9**

---

*உலகத்தை 'நவகண்டம்' எனக் குறித்தல் வழக்கு. ஐ - தலைவன். 'ஐயே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தல். 'பொன்றும்படிக்கு விளங்கு எரி கோத்தனன் வில்லார் வரை ஐ' எனக் கூட்டுக. மூன்றாம் அடியின் பாடம் பலபட ஓதப்படுகின்றன.*

*இதனால், தேவர்கள் தக்கன் வேள்வியில் சென்றமை நன்றி கோறலாதல் கூறப்பட்டது.*

***357. தெளிவுரை :-** சிவபெருமானை இகழ்ந்தமையால் அப்பொழுதே செத்தவனாகிய தக்கனது வேள்வியை அழியுமாறு வைதும், பின்னர் அழிந்த அனைவரையும் மீள எழுமாறு வாழ்த்தியும் அருளிச்செய்த வாய்மையை உடைய எங்கள் உமாதேவியே, யாவர் தங்கள் மனத்திட்பத்தை இழந்து நிலைகலங்கிப் பிறரைச் சார்ந்த போதிலும், நீ நிலை கலங்காமலே நின்று அன்போடு அணைவது எங்கள் சிவபெருமானையே யன்றோ!*

***குறிப்புரை :-** படர்க்கையில் வைத்து வியக்கற்பாலளாய உமாதேவியை முன்னிலைப்படுத்து வியந்தார். அச்சுவை மிக்கு விளங்குதற் பொருட்டு. பின் இரண்டடிகளை முதலில் வைத்து உரைக்க. நெளிதல் - நெகிழ்தல். 'தெளிந்தார்' என்பது பாடம் அன்று. 'ஆர் நெளிந்து கலங்கினும்' என மாற்றுக. அளிந்து - அன்பு மிக்கு. 'ஆதிப்பிரானையே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. "விளிந்தான்" என்றது துணிவு பற்றி எதிர்காலத்தை இறந்த காலமாகக் கூறியது. சுளிந்து - வெகுண்டு. 'சுளிந்துகூறி' என ஒரு சொல் வருவிக்க. தக்கன் தனது வேள்வியைத் தொடங்கியபொழுது, உமை அம்மைத் தன்னை அவன் அழையாதிருக்கவும் சென்று அவனுக்கு அறிவுரை கூறியும் கேளாமையால், அவனது வேள்வி அழியும்படி சபித்து மீண்டமையும், பின்னர் வீரபத்திரரால் யாவரும் அழிந்து கிடந்தமையைச் சிவபெருமானுடன் அங்கு அவள் எழுந்தருளிய பொழுது கண்டு இரக்கம் உற்று அவர்களை உயிர்ப்பித்தருளுமாறு சிவபெருமானை வேண்டினமையும் கந்தபுராணத்தால் அறிகின்றோம். அம்மையே வியக்கும் முகத்தால் தேவரது இழிபுணர்த்தியவாறு.*

*இதனால், உமாதேவி தனது செயலால் ஏனையோர்க்கும் உண்மையுணர்த்தினமை கூறப்பட்டது.*

## 5. பிரளயம்

**358.** கருவரை மூடிக்கலந்தெழும் வெள்ளத்
திருவருங் கோவென் றிகல இறைவன்
ஒருவனும் நீருற ஓங்கொளி யாகி
அருவரை யாய்நின் றருள்புரிந் தானே. 1

**359.** அலைகடல் ஊடறுத் தண்டத்து வானோர்
தலைவன் எனும்பெயர் தான்தலை மேற்கொண்
டுலகார் அழற்கண் டுள்விழா தோடி
அலைவாயில் வீழாமல் அஞ்சலென் றானே. 2

---

*"பிரளயம்" ஆவது அனைத்துலகங்களையும் ஒடுக்கும் பெருநீர் வெள்ளமாகும். உயிர்கள் பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியிலிருந்து விடுபட்டு சற்றே இளைப்பாற அனைத்துலக உயிர் ஒழுக்கத்தை சிவபெருமான் இப்பெருவெள்ளத்தின் மூலம் மேற்கொள்கிறான். அப்பொழுது அவர் ஒருவர் மட்டுமே இருப்பார். அப்பிரளயகாலத்து நிகழ்ந்த வரலாறு. இது கொண்டு இங்குச் சிவபெருமானது முதன்மையை ஐந்து திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**358.** *தெளிவுரை :- கரிய மலைகள் பலவற்றையும் உள்ளடக்கிக் கொண்டு மேல் எழுந்து பரந்த பிரளய வெள்ளத்திடையே மால், அயன் இருவரும் தாமே தலைவர் எனத் தனித்தனிக் கூறிப் போர் புரியச் சிவபெருமான் ஒருவனும் அந்நீர் வறப்பச் செய்து அவர்க்கிடையே ஓங்கிய ஒளியாகிய, அணுகுதற்கு அரிய நெருப்பு மலையாய் நின்று, பின்னர் அவர்கட்கு அருள் செய்தான்.*

*குறிப்புரை :- இவ்வரலாறு மேலே (தி.10 பா.345) காட்டப்பட்டது. கோ-தலைவன். இது பன்மை ஒருமை மயக்கமாயிற்று. 'ஆகிய' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. இகலுதல் - மாறுபடுதல்.*

*இதனால், பிரளய காலத்தில் அயன் மால் இருவரும் இகலினமை இனிது விளங்கக் கூறப்பட்டது.*

359. *தெளிவுரை :- சிவபெருமான் பிரளய வெள்ளத்தில் மேற்கூறியவாறு அனற்பிழம்பாய்த் தோன்றியபொழுது அலைகின்ற கடலை ஊடறுத்துக் கீழ்ப்போகியும், வானத்தை ஊடறுத்து மேற்போகியும் அடி தலை தெரியாவகை நின்று, தேவர்க்கும் முதல்வன்*

**360.** **தண்கடல் விட்ட தமரருந் தேவரும்**
**எண்கடல் சூழெம் பிரானௌன் றிறைஞ்சினர்**
**விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்புறங்**
**கண்கடல் செய்யுங் கருத்தறி யாரே.** **3**

---

*என்னும் சிறப்பினைத் தான் உடையவனாய் இருத்தலின், உலகம் தான் கொண்ட தழல் வடிவைக் கண்டு வெருண்டு அதனுள் வீழ்ந்து ஒடுங்காதவாறும், அதனின்றும் சேய்மையில் ஓடிப் பிரளய வெள்ளத்தில் வீழ்ந்து அழியாதவாறு அவற்றிற்கு, "அஞ்சல்" என்று அபயந்தந்து காத்தருளினான்.*

*குறிப்புரை :-* எனவே, 'தெறலும், அளியும் அவ்வவர்க்கு ஏற்ற வாற்றாற் செய்யும் அவனது தலைமைப்பாடு இனிது விளங்கும்' என்றவாறு.

'கொள்ளுதலால்' என்பது 'கொண்டு' எனத் திரிந்து நின்றது. தான் தலைவன் எனப்படுதலால் அவனுக்கு உளதாவது ஒரு பயன் இல்லை. அனைத்தையும் உய்விக்கும் சுமையே உளதாவது என்றற்கு. "தலைவன் எனும் பெயர், தான் தலை மேற்கொண்டு" என்றார், இதற்குக் காரணம் கைம்மாறு கருதாத கருணையே என்பதாம். "எடுத்துச் சுமப்பான்" என்றார் திருவருட்பயனில் (பா.65).

இதனால், சிவபெருமான் தெறலும் அளியும் அக்காலத்துச் செய்து நின்றமைக் கூறப்பட்டது.

**360.** *தெளிவுரை :-* தண்ணிய கடல் பொங்கி வந்து மலைகளை மூடிய நிலையின் நீங்கி அடங்கிற்று; எனவே, பிரளய வெள்ளம் வற்றிற்று. அதுபொழுது தேவர்கள், 'ஏழ்கடலோடு பெரும்புறக் கடலும் தன்னைச் சூழ்ந்து நிற்கத் தான் ஓங்கிய அழலாய் நின்றவன் எங்கள் சிவபெருமானே' என அவனைப் பலவாற்றால் துதித்து வணங்கினர். அதன்பின்பு அவர்கள் விண்ணுலகத்தைக் கடல்போலப் பரக்க அமைத்துக்கொண்டு, அங்குச் சென்று குடிபுகுந்தனர். அதன்பின்பு அவர்கள் தங்கள் சுவர்க்க இன்பத்தில் திளைக்கின்றனரேயன்றிச் சிவபெருமானை நினைந்து காதலாகிக் கசிந்து, கண்ணீரால் கடலை உண்டாக்கும் எண்ணமே இலராயினர்.

*குறிப்புரை :-* எண்கடல் - அன்பர் எண்ணமாகிற கடல். கண்கடல் செய்தல் - காதலாகிக் கசிந்து கண்ணிலிருந்து நீரைக் கடல் போலப் பெருக்குதல்.

இதனால், ஊழிதோறும் உயிர்கள் சிவபெருமானது முதன்மையை மறந்து வினையிற் சுழலுதல் கூறப்பட்டது.

361. சமைக்கவல் லானைச் சயம்புவென் றேத்தி
அமைக்கவல் லாரிவ் வுலகத்து ளாரே
திகைத்ததெண் ணீரிற் கடலொலி ஓசை
மிகைக்கொள அங்கி மிகாமைவைத் தானே. 4

362. பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்
கண்பழி யாத கமலத் திருக்கின்ற
நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம்
விண்பழி யாத விருத்திகொண் டானே. 5

---

*361.* ***தெளிவுரை :-*** *சிவபெருமான் ஒளிப்பிழம்பாய்த் தோன்றிப் பிரமவிட்டுணுக்களது மயக்கத்தை நீக்கித் தெளிவித்தபின், யாவரும் திசை தெரியாது திகைக்கும்படி எழுந்த பிரளய வெள்ளம் குறையச் செய்து, பின்பு கடல் ஒலிக்கின்ற ஓசை மிக, அதனைக் கேட்டு அக்கடல் அடங்கி என்றும் அளவுட்பட்டு நிற்குமாறு அதன் நடுவில் வடவைத் தீயை வைத்தான். இவ்வாறு ஒன்றோடு ஒன்று ஒத்தும், ஒவ்வாதும் நிற்கும் ஆற்றல்களை ஏற்குமாற்றாற் கூட்டி உலகம் நெறிப்பட்டு நடக்குமாறு ஆக்கிக் காத்து நடத்த வல்லவனும், அவ்வாறு தன்னை ஆக்குவார் ஒருவர் இன்றித் தானே அத்தன்மையன் என்று அறிந்து துதித்து உளத்துள் இருத்த வல்லவர் இவ்வுலகத்து உளரோ! இல்லை.*

***குறிப்புரை :-*** *பின் இரண்டு அடிகளை முதலிற்கொண்டு உரைக்க, சயம்பு 'சுயம்பு' என்பதன் திரிபு. சுயம்பு - தானே தோன்றியவன். 'உலகத்து உளாரே' என்னாது 'உலகத்துள் ஆரே' என்றலுமாம். அது மிகாமை அங்கி வைத்தான் என்க. இக்கருத்து முன்னேயும் (தி.10 பா.57) கூறப்பட்டது. இதனுள் ஈரடி எதுகை வந்தது. சமைக்க வல்லான் - படைக்க வல்லான்.*

*இதனால், சிவபெருமான் ஊழி முதல்வனாதல் கூறப்பட்டது.*

*362.* ***தெளிவுரை :-*** *சிவபெருமான் ஒளிவடிவாய்த் தோன்றி தனது தலைமையைப் பலவாற்றானும் விளக்கியருளியபொழுது, வேதங்கள் அவனை நல்ல இசைகளால் துதித்தன. அப்பால் அப்பெருமான் தாழ்வின்றிச் சிறந்து நிற்கின்ற இடமாகிய தாமரைப் பொகுட்டில் வீற்றிருக்கின்ற பிரமன் முன்னே செல்ல, அவன், 'மகனே' என விளித்து இகழ்ந்ததனால் உண்டாகிய குற்றத்தை உடையவனாயினமை பற்றி அவன் மேற் சென்று கிள்ளிக்கொண்ட அவனது ஐந்து தலைகளில் தன்னை இகழ்ந்த நடுத்தலையில் ஏனைத் தேவரும் அவனைப் போலத்*

*தன்னைப் பழித்துக் குற்றத்திற்கு ஆளாகாதவாறு அவரிடத்தெல்லாம் உஞ்ச விருத்தியை (பிச்சை ஏற்றலை) மேற்கொண்டான்.*

***குறிப்புரை :-*** *"பண் பழி" என்றதற்கு, 'பண்ணாற் பழிச்சுதல்' என உரைக்க. 'இப்பழிச்சுதலாகிய வழிபாட்டினைச் செய்தவை வேதங்கள்' என்பது ஆற்றலால் கொள்ளப்பட்டது. விதிமுறையாகிய பண்பை அழித்தலைச் செய்கின்ற வழிபாடு. இவ்வாறன்றி, "பண்" என்றதனை ஆகுபெயராக்கி, 'வேதம்' என்று உரைப்பினும் ஆம் முதற்கண் 'சென்ற' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தல். கண் - இடம். சென்ற - கழிந்த. பழியாத - இகழப்படாத; என்றது; 'புகழத்தக்க' என்றவாறு. இத்தகைய சிறந்த இடத்தில் இருப்பவன் அதற்கேற்ற அறிவுபெற்றிருக்கவில்லை என்பது குறிப்பு. நண்பழி, வினைத்தொகை. ஆளன் - அதனை உடையவன். "சென்று" என்றது, சென்று கொய்த தன் காரியம் தோன்ற நின்றது. 'சிரத்தின்கண்' என உருபு விரிக்க. பழியாத விருத்தி - இகழாமைக்குக் காரணமான தொழில். விருத்தி - பிழைப்பு.*

*இதனால், மேல், "அயன்தலை முன் அற" (தி.10 பா.337) என ஓதப்பட்ட வரலாறும் இப்பொழுதே நிகழ்ந்தது என்பது கூறப்பட்டது.*

## 6. சக்கரப்பேறு

**363.** மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரங்
கால்போதங் கையினோ டந்தரச் சக்கரம்
மேல்போக வெள்ளி மலைஅம ரர்பதி
பார்போக மேழும் படைத்துடை யானே. 1

---

*பிரளய கால வரலாற்றில் பிரமதேவனைச் சிரம் அரிந்த மறக்கருணை கூறிய இயைபு பற்றி, அவனோடு ஒத்த திருமாலுக்கு அப்பெருமான் அறக்கருணை செய்தமை கூறி, அவனது முதன்மை உணர்த்துவாராய், அப்பெருமான் அவனுக்குச் சக்கரம் அளித்தமையை நான்கு திருமந்திரங்களால் அருளிச் செய்கின்றார்.*

**363.** *தெளிவுரை :-* 'திருமால் அறத்தை அறிவுறுத்தும் ஆசிரியன்' என்னும் சிறப்பு நிலைபெறுதற் பொருட்டு, இவ்வுலகில் கீழோர் தம் அகங்காரத்தை வெளிப்படச் செய்யும்பொழுது, அவனது கையோடே சக்கரப்படையும் அகங்கரித்தவர் மேற்சென்று அழித்து நிலை நிறுத்தும்படி திருக்கயிலையில் வீற்றிருக்கின்ற தேவர் தலைவனாகிய சிவபெருமான் ஏழுலகத்து இன்பத்தையும் படைத்துள்ளான்.

*குறிப்புரை :-* 'சக்கரம் மேல்போக ஏழும் படைத்துள்ளான்' என்றாரேனும், 'ஏழு பார் போகமும் படைத்து அவற்றை நிலை நிறுத்தச் சக்கரம் மேற்போக அளித்துள்ளான்' என்றல் கருத்து என்க. போதகன் - போதிப்பவன். இதற்கு 'அறம்' என்னும் செயப் படுபொருள் வருவித்துக்கொள்க. திருமால் அறத்தைப் போதித்தல் சில நூல்களாலும், கொடியோரை அழிக்கும் செயலாலுமாம், கால் போது - வெளிப்படுத்தும்பொழுது என்றது. 'செருக்கினால் அறத்தை அழிவுசெய்து ஒழுகும்போது' என்றதாம். 'அங்கையினோடு' என்றது. 'வறுங்கையால் போர் செய்யாது வலியதொரு கருவி கொண்டு போர் செய்தற்கு' என்றபடி. அம் - அழகு. தரம் - மேன்மை. 'மேல் சலந்தராசுரனை அழித்தற் பொருட்டுச் சிவபெருமான் உண்டாக்கியதாகக் கூறிய சக்கரத்தைத் திருமால் பெற விரும்பிச் சிவபெருமானை நாள்தோறும் ஆயிரம் தாமரை மலர்களால் அருச்சித்து வழிப்பட்டு வர, ஒருநாள் அவற்றுள் ஒரு மலரைச் சிவபெருமான் மறைத்தருளத் திருமால், அம்மலருக்கு ஈடாகத் தமது கண்ணைப் பறித்து அப்பெருமான் திருவடியில் சாத்தினார். அதனால் மகிழ்ச்சியுற்ற சிவபெருமான் அவருக்கு அக்கண்ணை அளித்து, அவர் விரும்பிய அச்சக்கரப் படையையும் அளித்தருளினார்' என்பதும் கந்த

**364.** சக்கரம் பெற்றுநல் தாமோ தரன்தானும்
சக்கரந் தன்னைத் தரிக்கவொண் ணாமையால்
மிக்கரன் தன்னை விருப்புடன் அற்சிக்கத்
தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே. 2

---

*புராணத்துள் அங்குத் தானே கூறப்பட்டது. கண்ணைத் தாமரை மலராகச் சாத்தினமையால், திருமாலுக்குச் சிவபெருமான், 'பதுமாட்சன்' (தாமரைக் கண்ணன்) என்னும் பெயரையும் அளித்தார் என்பது, காஞ்சிப் புராணத் திருமாற்பேற்றுப் படலத்துட் கூறப்பட்டது. இவ்வரலாறு,*

*சலமுடைய சலந்தரன்ற னுடல்தடிந்த நல்லாழி*
*நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ,*
*நலமுடைய நாரணன்தன் நயனம்இடந் தரனடிக்கீழ்*
*அலராக இடஆழி அருளினன்காண் சாழலோ.*

*- தி.8 திருச்சாழல், 18*

*எனவும்,*

*பங்கயம் ஆயிரம் பூவினில்ஓர் பூக்குறையத்*
*தங்கண் இடந்தரன் சேவடிமேல் சாத்தலுமே*
*சங்கரன் எம்பிரான் சக்கரம்மாற் கருளியவா*
*றெங்கும் பரவிநாம் தோணோக்கம் ஆடாமோ.*

*- தி.8 திருத்தோணோக்கம், 10*

*எனவும் திருவாசகத்து எடுத்தோதப்பட்டது.*

*இதனால், திருமால் தமது காத்தல் தொழிலை இனிது நடத்தற் பொருட்டு அவருக்குச் சிவபெருமான் சக்கரம் அளித்தருளினமை கூறப்பட்டது. இவ்வரலாற்றைக் குறிக்கும் தலங்கள் திருவீழி மிழலையும், திருமாற்பேறுமாம், இதனை திருஞானசம்பந்தர், நாவுக்கரசர் தேவாரங்களால் அறிக.*

**364.** *தெளிவுரை :- சக்கரத்தைப் பெற்ற திருமால் பின்பு அதனைத் தாங்கும் ஆற்றல் இல்லாமையால் மீளவும் சிவபெருமானை அன்புடன் வழிபட, அவர்க்கு அதனைத் தருதற்பொருட்டு அப்பெருமான் தனது சத்தியைக் கூறிட்டமை வியக்கத்தக்கது.*

*குறிப்புரை :- இவ்வரலாறு இந்நூலாலே அறிகின்றோம். 'மிக்க'*

**365.** கூறது வாகக் குறித்தநற் சக்கரம்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக்
கூறது செய்து தரித்தனன் கோலமே. **3**

**366.** தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பால்
தக்கன்றன் வேள்வியில் தாமோ தரன்தானுஞ்
சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட
வக்கி உமிழ்ந்தது வாயுக் கிரத்திலே. **4**

---

*என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "செய்தது" என்றதன்பின், 'வியப்பு' என்பது எஞ்சிநின்றது.*

*இதனால், சிவபெருமான் திருமாலுக்குச் சக்கரத்தை அளித்ததே யன்றி, அதனைத் தாங்கும் ஆற்றலையும் அளித்தமை கூறப்பட்டது.*

**365. *தெளிவுரை :-*** *சிவபெருமான் சலந்தராசுரன் உடலைப் பிளக்கக் கருதி உண்டாக்கிய சக்கரத்தைத் திருமாலுக்கு உரியதாகக் கொடுத்தான்; அதன்மேலும், அச் சக்கரத்தைத் தாங்குதற்பொருட்டுத் தனது சத்தியைக் கூறிட்டு அவனுக்குக் கொடுத்தான். அச் சத்திக்குத் தனது திருமேனியையே கூறிட்டுக் கொடுத்தான்.*

***குறிப்புரை :-*** *'அவனது கருணைப்பெருக்கு அளவிடற்கரிது' என்பது குறிப்பெச்சம். 'சிவபெருமான்' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. 'சத்தி' என்பது மூன்றாம் அடி முதலிலும் சென்று இயைந்தது.*

*இதனால், இயைபு பற்றி சிவபெருமானது வள்ளன்மையின் பெருமை கூறப்பட்டது.*

**366. *தெளிவுரை :-*** *தக்கன் வேள்வியை அழித்த சிவகுமாரராகிய வீரபத்திரர்மேல் திருமால் போருக்குச் சென்று சந்திரனை அணிந்த அவரது தலையை அறுக்க என்று, முன்பு தான் சிவபெருமானிடம் பெற்ற சக்கரத்தை ஏவ, அஃது அவர் தமது வாயாற் செய்த உங்காரத்தாலே நாணி வலியிழந்தது.*

***குறிப்புரை :-*** *இவ்வரலாற்றையும் கந்தபுராணத்துட் காண்க. 'வட்கி' என்பது திரிந்து நின்றது, உமிழ்தலுக்கு, 'வலிமை' என்னும் செயப்படு பொருள் வருவிக்க. வாய் உக்கிரம், உங்காரம்.*

*இதனால், சிவபெருமானது ஆற்றற் சிறப்பு அவ்வாற்றானே கூறப்பட்டது.*

## 7. எலும்பும் கபாலமும்

**367.** எலும்புங் கபாலமும் ஏந்தி எழுந்த
வலம்பன் மணிமுடி வானவ ராதி
எலும்புங் கபாலமும் ஏந்தில னாகில்
எலும்புங் கபாலமும் இற்றுமண் ணாமே. 1

---

*'சிவபெருமான் பிரம விட்டுணுக்களுக்கும் மேலானவன்' என்பதை உணர்த்திவரும் முறைமையில், அவ்விருவரும் அடிமுடி தேடிய வரலாற்றை இயைபுபட வைத்துக் கூறுதலே முறையாயினும் அவரோடு தொடர்புடைய சிருட்டி முதலியவற்றை இடையீடன்றி அதன்பின் உணர்த்தக் கருதி, 'சிவபெருமான் ஏனைத் தேவரின் மேலானவன்' என்பதனை விளக்கும் அவனது எலும்பும், கபாலமும் தாங்கிய கோலத்தை இடையே ஒரு திருமந்திரத்தாலே கூறி முடிக்கின்றார்.*

**367.** *தெளிவுரை :- அயன், அரி மற்றும் இறந்தாரது எலும்புகள் பலவற்றையும், தலைகள் பலவற்றையும் தாங்கி நிற்பவனாகிய சிவபெருமான், அவ்வாறு காட்சியளிக்கின்ற வெற்றிப்பாடு, அவன் தேவர் பலர்க்கும் முதல்வனாதலை விளக்கும். அதுவன்றியும், அவன் அவற்றை தாங்கா தொழிவனாயின், அவை உலகில் நிலைபெறாது அழிந்தொழியும்.*

*குறிப்புரை :- "ஏந்தி" என்பது பெயர். வினையெச்சமாகக் கொண்டு எழுவாய் வருவித்தலுமாம். வலம் - வெற்றிப்பாடு. 'பல் வானவர்' என இயையும். "வலம்" என்று எழுவாய் "ஆதி" என்றதன்பின் எஞ்சி நின்ற 'என்னும்' என்பதனோடு முடிந்தது.*

*'சிவபெருமான், இறந்த தேவரது எலும்புகள் பலவற்றையும், பிரமரது தலைகளையும் மாலையாகக் கோத்து அணிந்தும், ஒருகாலத்தில் சேர இறக்கும் பிரம விட்டுணுக்களது கங்காளத்தினை (எலும்புக் கூட்டினைத்) தோள்மேல் சுமந்தும் நிற்கின்றான்' என்பது, 'அவர் யாவரும் வினைவயத்தால் பல்காலும் பிறந்து இறக்கின்ற பசுக் கூட்டத்தினரேயாகத் தான் ஒருவனே பிறப்பு இறப்பு இன்றி என்றும் ஒரு பெற்றியனாய் நின்று அனைத்துயிர்கட்கும் பந்தம் வீடுதரும் பதியாகின்றான் என்பதை விளக்கும்' என்பது கூறியவாறு. மாணிக்கவாசகரும்,*

*நங்காய்இ தென்னதவம், நரம்போ டெலும்பணிந்து*
*கங்காளந் தோள்மேலே காதலித்தான் காணேடீ!*

*கங்காளம் ஆமாகேள், காலாந் தரத்திருவர்*
*தங்காலம் செய்யத் தரித்தனன்காண் சாழலோ.*

*- தி.8 திருச்சாழல், 11*

*என்று அருளிச்செய்தார்.*

*'அரிபிரமேந்திராதி தேவர் பலரும் நிலையாமையுட்பட்ட பசுக்களேயாகச் சிவபெருமான் ஒருவனே என்றும் ஒருபெற்றியனாய பதி' என்பதனைத் திருநாவுக்கரசர்,*

*நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்;*
*ஆறு கோடிநா ராயணர் அங்ஙனே;*
*ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்;*
*ஈறி லாதவன் ஈசன் ஒருவனே.*

*- தி.5 ப.100 பா.3*

*என விளக்கியருளினார்.*

*'எலும்பையும், தலையையும் அணிந்த கோலம் மேற்குறித்த உண்மையேயன்றி, அவன் காரியப் பிரபஞ்சத்தைத் தாங்கி நிற்றலையும் உணர்த்தும்' என்பது பின்னிரண்டடிகளிற் கூறப்பட்டது. இதனானே, 'சாம்பலை அணிதல், காரணப் பிரபஞ்சத்தைத் தாங்கி நிற்றலை உணர்த்தும்' என்பது கொள்ளப்படும்.*

*சிவபெருமான் கங்காளத்தை ஏந்தி நிற்றலைக் குறிக்கும் தலங்களே 'காயாரோகணம்' எனப்படுகின்றன. காயாரோகணம் 'காரோணம்' என மருவி வழங்கும்.*

*இதனால், 'சிவபெருமான் எலும்பு முதலியவற்றை அணிந்த கோலத்தினன்' என்பதன் உண்மை விளக்கப்பட்டது.*

## 8. அடிமுடி தேடல்

**368.** பிரமனும் மாலும் பிரானேநான் என்னப்
பிரமன்மால் தங்கள்தம் பேதைமை யாலே
பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க
அரனடி தேடி அரற்றிநின் றாரே. 1

---

*மேல் 'பிரளயத்துள்' இலிங்க வரலாற்றில், வேறோர் அதிகாரமாகச் சிறந்தெடுத்து உணர்த்த வேண்டிக் கூறாது விடுத்த அடிமுடி தேடிய வரலாற்றை இங்குப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றார். இவ்வரலாறு 'சைவம், இலிங்கம், காந்தம்' என்னும் புராணங்களிலும், மற்றும் பலவிடங்களிலும் பெரும்பான்மையாக எடுத்தோதப்படும் சிறப்புடையது. அதற்குக் காரணம், சிவபெருமானது முதன்மையை இஃது இனிது விளக்கி நிற்பதே. இது பற்றித் திருநாவுக்கரசர் இதனை, 'இலிங்க புராணத் திருக்குறுந்தொகை' என்பதொரு திருப்பதிகமாக அருளிச் செய்தார். திருஞானசம்பந்தர் தமது திருப்பதிகங்களில் ஒன்பதாவது திருப்பாடல்தோறும் இதனை ஓதி அருளினார். இவ்வரலாற்றை விளக்கும் தலம் திருவண்ணாமலை ஆகும்.*

**368.** *தெளிவுரை :- பிரமனும், திருமாலும் 'நானே கடவுள், நானே கடவுள்' என்று சொல்லிப் போர் புரிய, அவர்களது பேதைமையை நீக்குதற் பொருட்டுச் சிவபெருமான் அனற் பிழம்பாய் ஒளிவீச நிற்க. அவ்விருவரும் அவனது திருவடியைத் தேடிக் காணாமல் புலம்பினர்.*

*குறிப்புரை :- இவ்வரலாறு மேலே காட்டப்பட்டது. (தி.10 பா.345) 'நானே பிரான்' என மாற்றித் தனித்தனிக் கூட்டி உரைக்க. பின்னும் "பிரமன் மால்" என்றது சுட்டுப் பெயரளவாய் நின்றது. தங்கள் தம் பேதைமை - தம் தம் பேதைமை. 'பேதைமையாலே நிற்க' என்றது, "கள்வனால் திரண்டனர் மக்கள்" என்பதுபோல நின்றது, "அரனடி தேடி" என அடியை மட்டுமே குறித்தது, அவ்வரலாற்றைத் தொகுத்துக் கூறியபடி "அரற்றுகின்றாரே" என்பதே பாடமாக ஓதுகின்றனர்.*

*இதனால், சிவபெருமான் பேதைமையாளர்க்கு அறிய ஒன்னாதவன் என்பது கூறப்பட்டது.*

**369.** அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண்டிலேன்என் றச்சுதன் சொல்ல
முடிகண்டேன் என்றயன் பொய்மொழிந் தானே. **2**

**370.** ஆனே முலகுற நின்றஎம் அண்ணலுந்
தானே முலகில் தழற்பிழம் பாய்நிற்கும்
வானே முலகுறும் மாமணி கண்டனை
யானே அறிந்தேன் அவன்ஆண்மை யாலே. **3**

---

**369.** *தெளிவுரை :- மாலும் பிரமனும் முறையே சிவசோதியின் அடியையும் முடியையும் காண முயன்று அவற்றின் உருவத்தைக் காணமாட்டாதவராய் மீண்டும் முன்பு இருந்த இடத்தில் வந்து கூடிய பின்பு, திருமால், 'நான் அடியைக் காணவில்லை' என்று உண்மையைச் சொல்ல, பிரமன் 'நான் முடியைக் கண்டேன்' என்று பொய் சொன்னான்.*

*குறிப்புரை :- 'அதனால் அவன் இவ்வுலகில் தனக்குக் கோயில் இலனாயினான்' என்பது குறிப்பெச்சம். 'அடி, முடி' என்பவற்றை "அயன் மால்" என்பவற்றோடு எதிர்நிரனிறையாக இயைத்தல் வேண்டும் என்பது பின்னிரண்டடிகளில் விளங்கும். இத்திருமந்திரம் பாயிரத்ததாகாது. ஈண்டையதே என்பதுமேலே குறிக்கப்பட்டது.*

*இதனால் மால், அயன் என்னும் இருவரது தகுதி வேறுபாடுகள் கூறப்பட்டன.*

370. *தெளிவுரை :- விரிந்த பரந்த அனைத்துலகிலும் நுண்ணியனாய் நிறைந்து நிற்கின்ற சிவபெருமான், பிரம விட்டுணுக்களது போர் காரணமாக அவ்விடங்களிலெல்லாம் பெரிய அனற் பிழம்பாய் நின்றருளினான். நின்றும் அவனை அவ்விடங்களில் ஓரிடத்தும் ஒருவரும் கண்டிலர். ஆயினும், நான் அவனை எல்லா இடத்திலும் காண்கின்றேன். அது நான் அவனுக்கு ஆட்செய்கின்ற முறைமையாலாம்.*

*குறிப்புரை :- 'ஆம் தாம்' என ஓதுவன பாடம் அல்ல. ஆன் - அவ்விடம் இவ்வாறு சேய்மையாகச் சுட்டியது உலகத்தின் பரப்பு உணர்த்துதற்கு. "யானே அறிந்தேன்" என்றமையால், பிறர் அறிந்திலர் என்பது இனிது விளங்கிற்று. அடிமுடி காணாமையேயன்றி, 'அது சிவசோதி' என்பதனையும் அறியாது திகைத்தமையின், 'பிறர்*

**371.** ஊனாய் உயிராய் உணர்வங்கி யாய்முன்னஞ்
சேணாய்வா னோங்குந் திருவுரு வேஅண்டத்
தாணுவும் ஞாயிறுந் தண்மதி யுங்கடந்
தாண்முழு தண்டமு மாகிநின் றானே. 4

---

அறிந்திலர்' என்றும், எவ்விடத்தும் எப்பொருளையும் நாயனார் சிவமாகக் காணுதலால், "யானே அறிந்தேன்" என்றும், **'சிவனை அறிதல் அவனுக்குத் தொண்டு புரிந்து நிற்பதனாலேயன்றிப் பிற ஆற்றல்களால் அன்று'** என்பதற்கு, 'அவன் ஆண்மையாலே' என்றும் கூறினார். இக்கருத்தையே திருநாவுக்கரசு நாயனார் தமது இலிங்கபுராணத் திருக்குறுந்தொகையிலும் (தி.5 100) பலபட வகுத்தோதினார். சேக்கிழாரும் இவ்வரலாற்று உண்மையை,

தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாய கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்தும் துதித்துய்ந்த படிவிரித்தார்.

- தி.12 பெ.பு. திருஞான. 78

என விளக்கினார்.

தேடிக் கண்டு கொண்டேன்; - திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன். - தி.4. ப.9. பா.12

என்று அருளிச்செய்ததும் இக்கருத்தினைப் புலப்படுத்துவதாம்.

இதனால், மாலும், அயனும் அடிமுடி காணமாட்டாராயதற்குக் காரணம் கூறப்பட்டது.

**371. தெளிவுரை :-** இயல்பாகவே பல உடம்புகளாயும், அவ்வுடம்பில் உள்ள உயிர்களாயும், அவ்வுயிர்களினுள் அறிவொளியாயும் எல்லையற்ற தனது பேராற்றலால் நிறைந்து நின்ற வடிவமே, பிரம விட்டுணுக்களின் முன் அண்டத்தைத் தாங்குகின்ற தூண்போல்வதாய் நீண்டு, சூரியசந்திர மண்டலங்களைக் கடந்து, தன்னால் ஆளப்படுகின்ற அண்டம் முழுதும் ஊடுருவ நின்றான் அம் மணிகண்டன்.

372. நின்றான் நிலமுழு தண்டத்துள் நீளியன்
அன்றே அவன்வடி வஞ்சின ராய்ந்தது
சென்றார் இருவர்திருமுடி மேற்செல
நன்றாங் கழலடி நாடவொண் ணாதே. 5

---

*குறிப்புரை :- 'அதனால், அவனது வியாபகத்துள் ஒரு பகுதியிலே அடங்கிக் கிடப்பவராகிய பிரம விட்டுணுக்கள் அவனை அளவிடுதல் எங்ஙனம் கூடும்' என்பது குறிப்பெச்சம். முன்னம் - முன்பே. "தாணுவும்" என்புழி 'ஆய்' என்பது விரிக்க.*

*"பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்*
*போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே"*

*- தி.8 திருவெம்பாவை, 10*

*"பாதம் இரண்டும் வினவிற் பாதாளம் ஏழினுக் கப்பால்*
*சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை"*
*- தி.8 குயிற்பத்து, 1*

*என்றாற்போலும் திருமொழிகளும் சிவபெருமானது அளவிடப்படாத பெருநிலையை விளக்க எழுந்தனவாம். "ஆகி" என்றதனை, 'ஆக' எனத் திரிக்க. இது முதலாக இவ்வதிகாரத்தில் உள்ள திருமந்திரங்கள், 'சாருவோபாதாளம்' என வேறோர் அதிகாரமாகச் சில பிரதிகளில் உள்ளன என்பர். "திருவுரு" என்பதில் உரு, நிலை. முன்னை மந்திரத்தில் உள்ள 'மணிகண்டன்' என்பதைச் சுட்டுவதாகிய 'அவன்' என்பது தோன்றா எழுவாய்.*

*இதனால், சிவபெருமானது பெருமை கூறும் முகத்தால், பிரம விட்டுணுக்களது சிறுமை கூறப்பட்டது.*

**372. தெளிவுரை :-** *சிவபெருமான், மண்ணும், விண்ணும் ஆகிய உலகம் முழுதும் நின்றும் வளர்ந்தும் நிற்பவன் அல்லனோ! அதனால், அவனது திருவுருவத்தைக் கண்டு பிரம விட்டுணுக்கள் இருவரும் அஞ்சுதலும், அறியாமையால் அதனை அளந்தறியச் சென்றவழி எய்த்து வருந்துதலும் இயல்பே.*

***குறிப்புரை :-*** *'அவன்" என்றதனைத் தாப்பிசையாக முதலிலும் கூட்டி எழுவாயாக்குக. நீளியன் - நீண்டிருப்பவன்; "திருமுடி மேல்*

**373.** சேவடி ஏத்துஞ் செறிவுடை வானவர்
மூவடி தாவென் றவனும் முனிவரும்
பாவடி யாலே பதஞ்செய் பிரமனும்
தாவடி யிட்டுத் தலைப்பெய்யு மாறே. **6**

---

*செல, கழலடி நாட ஒண்ணாது" என்றது, திருமுடியை அறிந்தார் ஒருவருமிலராயினும், 'திருவடியை அறிந்தார் பலர்; அதுவும் இவர்கட்கு அகப்படாதாயிற்று' என்றபடி 'கழலடியும்' என்ற உம்மை தொகுத்தலாயிற்று. ஈற்றில் உள்ள ஏகாரமும் தேற்றப் பொருட்டு. திருமுடி முடிவையும், திருவடி தொடக்கத்தையும் குறிப்பனவாதலின், திருவடி சிலராலேனும் காணப்பட்டதாகும். 'அவன் வடிவை அஞ்சினராய் அது ஆய்ந்து சென்றார் இருவர் நாட ஒண்ணாதே' என முடிக்க.*

*இதனால், பிரம விட்டுணுக்களது இயல்பாய சிறுமை, செருக்குக் காரணமாகப் பின்னும் மிகுதிப்பட்டமை கூறப்பட்டது.*

**373. *தெளிவுரை :-* *சிவபெருமானிடம் எஞ்ஞான்றும் குறை யிரத்தற்குக் கூடுபவர்களாகிய தேவர்களுட் சிலராகிய, மாவலியை நேரே பொருது வெல்லமாட்டாது வஞ்சனையால் மூவடி மண் இரந்து வென்ற மாயோனும், தானே அறிந்து உலகங்களைப் படைக்கின்ற பிரமனும், அவருட் சிலரை நோக்கித் தவம்செய்து சிலவற்றைப் பெறும் முனிவர்களும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை எதிரிட்டுக் காண வல்லராவரோ!***

***குறிப்புரை :-*** *"முனிவர்" என்றது, கருமகாண்டிகளை, அவர் தேவரைத் தெளியாராயினும், அவரை நோக்கிச் செய்யும் கருமங்கள் பயன் தரும் என்னும் தெளிவுடையார். இறுதிக்கண் கூறற்பாலராய அவரைச் செய்யுள் நோக்கி இடையே கூறினார். தா அடி, படைவீரர் போர்க்கு அணிவகுத்து நடக்கும் நடை. அஃது இங்குச் செருக்கினால் எதிரிட்டுக் காண முயலுதலைக் குறித்தது. தலைப்பெய்தல் - சந்தித்தல்; காணுதல். இறுதிக்கண், 'கூடுமோ' என்பது சொல்லெச்சம். 'வானவரும்' என்னும் உம்மை தொகுத்தல்.*

*இதனால், அயன், மால் என்பவரோடு இனம்பற்றிப் பிறரது சிறுமைகளும் தோன்றக் கூறப்பட்டன.*

**374.** தானக் கமலத் திருந்த சதுமுகன்
மானக் கருங் கடல் வாழித் தலைவனும்
ஊனத்தின் உள்ளே உயிர்போல் உணர்கின்ற
தானப் பெரும்பொரு ளண்மைய தாமே. 7

**375.** ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்னங்கண்
டோலிங் கனஞ்செய் துலகம் வலம்வருங்
கோலிங் கமைஞ்சருள் கூடலு மாமே. 8

---

**374. தெளிவுரை :-** *தாமரை மலரை இடமாகக் கொண்டு இருக்கின்ற பிரமனும், பெரிய கடலில் நீங்காது, கிடக்கின்ற திருமாலும் எஞ்ஞான்றும் தங்கள் உடம்பினுள்ளே உள்ள உயிர் போலக் கருதி உள்கத்தக்க பெரும் பொருளாகிய சிவபெருமான், அவர்தம் புறக்கண்ணிற்கு அகப்படுவானோ!*

**குறிப்புரை :-** *'கமலத் தானம்' என மாற்றிக்கொள்க. 'சதுமுகனும்' என்னும் உம்மைத் தொகுத்தல். மானம் - பெருமை. கருமை இன அடை, 'உணர்கின்றதான' என்பதன் பின் பகரமெய் விரித்தல். "அண்மையதாமே" என்புழி, "அவர்க்கு" என்பது அவாய் நிலையான் வந்தது. ஏகாரம், எதிர்மறை உணர்த்திற்று. "தானக் கருங்கடல், ஊழித் தலைவன், தன்மையதாம்" என்பன பாடம் அல்ல.*

*இதனால் மாலும் பிரமனும் ஆயினும் சிவபெருமானை உள்குவோரன்றி, அவனால் உள்கப்படுவோர் ஆகாமை கூறி, அவர் அடிமுடி அறியமாட்டாமை வலியுறுத்தப்பட்டது.*

**375. தெளிவுரை :-** *அண்டங்கள் பலவற்றையும் பொருந்தி நின்ற சிவசோதி, அதன்பின் இவ்வாறு பிரம விட்டுணுக்களால் அடிமுடி அறியப்படாத நிலைமையைக் காட்டி நிலைபெறச் செய்த மேலான சிவநெறியை முன்னர் அறிந்து, உலகம் முழுதும் ஒருங்கே வழிபடுகின்ற இலிங்க வடிவை வணங்கித் தம் குறையை எடுத்துக்கூறி முறையிட்டு, மக்கள் இவ்வுலகப் பயனையேயன்றி அவன் அருளைப் பெறுதலாகிய ஞானத்தையும் அடையலாம்.*

**குறிப்புரை :-** *மூன்றாம் அடியிலும் முதலில் வந்தசொல் வருதலும் மோனை சிதைதலும் பொருந்தாமையால், அவ்விடத்து*

**376.** வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்கள்
ஆள்கொடுத் தெம்போல் அரனை அறிகிலர்
கோள்கொடுத் தின்பங் கொடுத்துக்கோ ளாகத்தன்
தாள்கொடுத் தானடி சாரகி லாரே. **9**

---

'ஆலிங்கனம் செய்து' என ஓதுதல் பாடம் ஆகாமை அறிக. ஓலம், 'ஓல்' எனவருதல் செய்யுட்கண் ஏற்றதேயாம். ஓலம் செய்தல் - முறையிடுதல். கோல் - தறி, இலிங்கம். 'அமைத்து' 'அமைஞ்சு' எனப் போலியாயிற்று. அமைதல் - மனம்பற்றி வணங்குதல். 'அமைஞ்சு ஓல் இங்ஙனம் செய்து அருள்கூடலும் ஆம்' எனக் கூட்டுக. கோலிங்கம் அஞ்சு - பஞ்சபூதலிங்கங்கள் ஐந்து. ஈசானாதி பஞ்சப் பிரமலிங்கங்கள் என்றும் கொள்ளலாம்.

இதனால், அடிமுடி தேடிய நிகழ்ச்சியால் விளைந்த பயன் கூறப்பட்டது.

**376.** *தெளிவுரை :-* சிவபெருமான் திருமால் முதலிய தேவர்க்கும், இராவணன் முதலிய அரக்கர்க்கும் படைக்கலங்களை அளித்தருளிய செய்தியை அறிந்த அவ்வாறே தாமும் பலவற்றைப் பெற விரும்பி அவனை வழிபடுகின்ற தேவர்கள், எம்மைப் போல அவனுக்குத் தம்மை ஆளாகக் கொடுத்து அன்பினால் அவனை நினைப்பதில்லை. அதனால், தன் அடியார்களுக்கு முதலில் ஞானத்தைக் கொடுத்து, பின் பேரின்பத்தைத் தந்து, என்றும் புகலிடமாகத் தனது திருவடியை வழங்குகின்ற அவனது திருவடியை அத்தேவர்கள் காண்பதில்லை.

*குறிப்புரை :-* வாள் - ஒளி. ஆள் கொடுத்து - அடிமையாக ஆத்மார்ப்பணம் செய்து. கோள் - கொள்ளப்படும் பொருள். மூன்றாம் அடியிலும் "ஆள்கொடுத்து" என ஓதுதல் பாடம் அன்று.

இதனால், மேல் "கோலிங்க அமைஞ்சருள் கூடலுமாமே" என்றவாறும், "வானிடத்தவரும் மண்மேல் வந்தரன்றனை அர்ச்சிப்பர்" (சிவஞானசித்தி சூ. 2.92) என்றவாறும் இவ்வுலகில் தேவர் பலர் வந்து சிவபெருமானை வழிபட்டமை அறியப்படுகின்றதாயினும், அவர் தம் வழிபாடு பயன் கருதாத அன்பு வழிபாடாகாமையால், சிவபெருமான் அவர்கட்கு அரியனே ஆகின்றான் என, மால் அயன் என்பவரோடு, இனம்பற்றி ஏனைத்தேவரும் சிவபெருமானை வழிபட்டும் அவனை

377. ஊழி வலஞ்செய்தங் கோரும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலைநீர் விதித்திது தாவென
ஊழிக் கதிரோன் ஒளியைவென் றானே. 10

---

*அறியாராயினமைக்குக் காரணம் கூறப்பட்டது.*

377. ***தெளிவுரை :-*** *பிரளய வெள்ளத்தில் ஆலிலைமேல் மிதந்து எங்கும் திரிந்து 'இனி என்ன செய்வது' என்று ஆராய்கின்ற திருமாலுக்கு மகனாக நான்முகன் தோன்றுவான். அதன்பின் ஊழிக் காலத்தில் எரிகின்ற சூரியனது ஒளியையும் வென்ற திருமேனியனாகிய சிவபெருமான், 'அழித்த இவ்வுலகத்தை நீவிர் மீளப் படைத்துக் காமின்' என்று பணித்தருளுவான். அவ்வாற்றால் பின்பு படைப்பு முதலிய தொழில்கள் நிகழும்.*

***குறிப்புரை :-*** *வீழ் இதலை நீர் விதித்து இது தா என - விரும்பத்தக்க இந்தத் தலையில் தேவரீர் இன்னபடியென்று எழுதி, இந்தப் படைப்புத் தொழிலைத் தருக என வேண்டிக்கொள்ள, வீழ்தல் - விரும்புதல், தாம் வீழ்வர் மென்றோள் என்புழிப்போல.*

## 9. படைப்பு (சருவ சிருட்டி)

**378.** ஆதியோ டந்தம் இலாத பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாம்
தீதில் பரைஅதன் பால்திகழ் நாதமே. 1

---

*புராண வரலாறுகள் பலவற்றைக் கூறியருளிய பின்னர், அவை உலகத் தோற்ற ஒடுக்கங்களைப் புனைந்து கூறுவதாய இயைபு பற்றி அவற்றை உண்மையான் உணர்த்த வேண்டி முதற்கண் முப்பது திருமந்திரங்களால் சருவ சிருட்டி கூறுகின்றார். 'சருவம்' என்பது இனிவரும் திதி முதலியவற்றோடு இயையும்.*

**378.** *தெளிவுரை :-* இம் மந்திரத்தின் பொருளைக் கீழ்வரும் குறிப்புகள் பற்றி உரைத்துக் கொள்க.

*குறிப்புரை :-* முதற்பொருளாகிய கடவுட்பொருள், பொருளால் ஒன்றேயாயினும், 'சிவம், சத்தி' எனத் தன்மையால் இரண்டாய் இருக்கும். அஃது யாதொரு செயலையும் மேற்கொள்ளாது இயல்பாய் இருக்கும் நிலையில் 'ஒன்றைத் தொடங்குவது' என்பதும் 'முடிப்பது' என்பதும் இல்லையாகையால், அந்நிலை ஆதி அந்தம் இல்லாததாம். அந்நிலையில் நிற்கும் கடவுட்பொருளை, 'பராபர சிவம்' என்னும் பெயரால் குறிப்பர்.

'பராத்பரம்' என்பது மருவி, 'பராபரம்' என வழங்கும். பராத்பரம் - மேலானவற்றுக்கும் மேலானது; (தனக்குமேல் ஒன்று இல்லாதது) சிவம் பராபரமாய் நிற்கும்பொழுது அதன் சத்தி 'பராபரை' எனப்படும். பராபரமாய் நிற்பதே சிவத்தின் சொரூபநிலை; அஃதாவது அதன் இயற்கைத் தன்மை. பராபரையாய் நிற்பதே சத்தியின் சொரூபநிலை; இயற்கைத் தன்மை. 'பராபரை' என்னும் இயற்கை நிலையில் சத்தி, அறிவேயாய் (ஞானமேயாய்) நிற்கும். ஆகவே 'ஞானமே சத்தியின் சொரூபம்' என்பது விளங்கும். இதனையே சிவஞானசித்தி, (சூ. 1.62) "சத்தியின் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்" என்றது இதுவே இங்கு, "போதம தாகிப் புணரும்" எனப்பட்டது. போதம் - அறிவு; ஞானம்.

இவ்வாறு இயற்கை நிலையில் உள்ள பராபர சிவம் உயிர்களை

உய்விக்க வேண்டும்' என்னும் விருப்பத்தால் உலகத்தை உண்டாக்க நினைக்கும். அந்நிலை உலகத் தோற்றத்திற்குத் தொடக்க நிலையாதலால், அந்நிலையில் நிற்கும் சிவம் 'ஆதி சிவன்' என்றும், அதன் சத்தி 'ஆதி சத்தி' என்றும் சொல்லப்படும். ஆதி சிவனே 'பரசிவன்' என்னும் பெயர்க்கும் ஆதி சத்தியே 'பராசத்தி' என்னும் பெயர்க்கும் உரியவராதல் இந்நூலில் பெறப்படுவது. சிவஞானசித்தி முதலிய சாத்திரங்கள் இங்குக் கூறிய பராபர சிவனையே, 'பரசிவன்' என்றும், பராபரை என்னும் சத்தியையே 'பராசத்தி' என்றும் கூறி, ஆதி சிவனையும், ஆதி சத்தியையும் அப் பெயராலையே கூறும். இந்நிலையில் சிவம் சத்திகள் இவ்வாறு, 'ஆதி சிவன், ஆதி சத்தி' எனப்படுதலால், பராபர சிவனும், பராபர சத்தியும் முறையே அநாதி சிவன், அநாதி சத்தியாதல் விளங்கும். இவ்வாறாகவே "சோதியதனில் பரம் தோன்றத் தீதில் பரை தோன்றும்" என்றார். "சோதி" என்றது பராபர சிவத்தை. வாளா "தோன்றும்" என்றாராயினும், 'பராபர சத்தியினின்றும் தோன்றும்' என்பது ஆற்றலால் இனிது விளங்கிற்று. எனவே, இத்தோற்ற முறை பின்வருமாறு அமைதல் அறியப்படும்.

| பராபர சிவம் (அநாதிசிவன்) | பராபரசத்தி (அநாதிசத்தி) (பராபரை) |
|---|---|
| ⇓ | ⇓ |
| பரசிவம் (ஆதிசிவன்) | பராசத்தி (ஆதிசத்தி) (பரை) |

ஆதி சத்தியே, 'திரோதான சத்தி, திரோதாயி' என்றெல்லாம் சொல்லப்படும். அளவிலா ஆற்றலுடைய கடவுட் பொருள் உலகத்தை ஆக்குதற்கு அதன் ஆற்றலுள் ஒருசிறுகூறேபோதும் ஆதலின், 'பராபர சிவத்தில் ஆயிரத்தில் ஒரு கூறே பரசிவன்' (ஆதிசிவன்) என்றும் 'பராபர சத்தியில் ஆயிரத்தில் ஒரு கூறே பராசத்தி' (ஆதிசத்தி) என்றும் ஆகமங்கள் அளவிட்டுரைக்கும். 'பரசிவம், பராசத்தி' (ஆதிசிவன், ஆதிசத்தி) என்னும் வேறுபாடுகள் முதல்வன் தன்னில்தான் கொண்டுள்ள வேறுபாடுகளேயன்றி மற்றொரு பொருளினால் கொள்ளும் வேறுபாடுகள் அல்ல. பரமசிவத்தின் ஆற்றல் பராசத்தி. இது பரையென்றும் சொல்லப்படும்.

பராபரசிவன் ஆதி சிவனாய் நின்று உலகைச் செயற்படுத்து மிடத்துத் தனது ஆற்றலாகிய ஆதி சத்தியாலே எல்லாவற்றையும் செய்தலின், அச்சத்தி செயற்படுமாற்றிற்கு ஏற்பவே தான் அதனோடு கூடியிருப்பான்.

இயற்கை நிலையில் ஞானமாத்திரமாய் இருக்கும் சத்தி, பின்

**379.** நாதத்தில் விந்துவும் நாதவிந் துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி என்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த இச்சையில் வந்தெழும் விந்துவே. **2**

---

*உலகைத் தொழிற்படுத்த விரும்பும் நிலையில் அவ்விருப்பமாகிய இச்சையும், அத்தொழில் முறையை அறியும் ஞானமும், அறிந்தவாறே செய்யும் கிரியையும் என மூன்றாக்கி நிற்கும். ஆகவே 'இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி' என ஆதி சத்தி ஒன்றே மூன்றாகும். இம்மூன்று சத்திகளுள் இச்சா சத்தி, ஏறுதல், குறைதல், ஒடுங்கல் என்பன இன்றி, எப்பொழுதும் ஒரு நிலையிலே நிற்கும், ஏனைய ஞானம் கிரியை இரண்டும் 'ஏறுதல், குறைதல், ஒடுங்கல்' என்னும் வேறுபாடுகளை உடையனவாகும். அவ்விடத்து ஆதி சிவன் தனது ஆதிசத்தியின் வழி முதற்கண் எழுத்தோசையைத் தோற்றுவிக்க விரும்பி அதனைத் தோற்றுவிக்குமாற்றை ஞான சத்தியால் பொதுவாக அறிவான். அதனால், அவனே அந்நிலையில், 'நாதம்' எனப் பெயர் பெறுவான். இறைவனை 'நாதன்' எனக் கூறுதல் இதுபற்றியே என்பர். இவ்வாறு 'நாதம்' என்னும் நிலையில் நின்ற சிவன் எழுத்தோசையின் பொது நிலையாகிய நாதத்தைத் தோற்றுவித்தற்பொருட்டு அதன் தோற்றத்திற்கு நிலைக்களமாகிய நாததத்துவத்தைச் சுத்தமாயை யினின்றும் தோற்றுவித்து, அதன்கண் நிற்பான், நாதனாகிய சிவன் ஆதி சத்தியின் வழித் தோன்றுதலின், "அதன்பால் திகழ் நாதம் தோன்றும்" என்றார். "தோன்றும்" என்பது சொல்லெச்சம். இதனால் இத்தோற்றம் பின்வருமாறு அமைதல் அறியலாம்.*

*பராபர சிவம் (அநாதிசிவன்)* ⇓ *ஆதிசிவன்*

*பராபரசத்தி (அநாதிசத்தி)* ⇓ *ஆதிசத்தி* ⇓ *நாதன்*; *சுத்த மாயை* ⇓ *நாத தத்துவம்*

*'பராபரம் பராபரையைப் புணரும்' எனவும் 'பராபரை பராபரத்தைப் புணரும்' எனவும் இருவகையாகவும் இயைத்துக் கொள்ளவைத்தார். அவை இருவேறு பொருள்கள் அல்ல என்பது விளங்குவதற்கு.*

*இதனால், படைப்புத் தொடக்கம் கூறப்பட்டது.*

**379. *தெளிவுரை :-*** *இதன் பொருளையும் கீழ்வரும் குறிப்புரை பற்றி உரைத்துக்கொள்க.*

***குறிப்புரை :-*** *மேற்கூறிய நாதன் என்னும் சிவன், பொதுவாய் நாத மாத்திரமாய்த் தோன்றிய எழுத்தோசையைச் சிறப்பாகத் தோற்றுவிக்க விரும்பிக் கிரியா சத்தியால் பொதுவாக முயல்வான். அவ்வாறு அவன்பால் எழும் முயற்சியே 'விந்து' என்னும் சத்தியாவாள். அவள், மேற்குறித்த நாத தத்துவத்திலிருந்து 'விந்து' என்னும் தத்துவத்தைத் தோற்றுவித்து அதன்கண் நிற்பாள். அதனால் "நாதத்தில் விந்துவும்" என்றார்.*

*பின்னர் "நாத விந்துக்களின்" என்றதில் இன் சாரியையின் பின் 'கீழ்' எனப் பொருள் தரும் கண்ணுருபு விரிக்கப்படும்.*

*"ஞானம், கிரியை" என்றது சிவன் சத்திகளுக்கு நிரல் நிறை. "சிவன் சத்தி என்ன" என்றது, 'சிவன் என்றும், சத்தி என்றும் இருவர் தோன்றுவர்' என்றவாறு. 'பேதித்து ஞானம் கிரியை பிறத்தலால்' என்றது. 'ஆதி சத்தி தானே, ஞானம், கிரியை என்னும் வேறு பாட்டோடு தோன்றுதலால்' என்றவாறு. எனவே, 'முதல்வன் ஞானசத்தியால் சிறப்பாக அறியும் நிலையிலே சிவன் என நிற்பான்' என்பதும், 'அவன் கிரியாசத்தியால் சிறப்பாக முயலும் நிலையே சத்தி என்னும் நிலை' என்பதும் விளங்கும்.*

*'சிவன்' எனப் பெயர் பெற்று நின்ற சிவன் மேற்கூறிய விந்து தத்துவத்திலிருந்து 'சிவம்' என்னும் தத்துவத்தைத் தோற்றுவித்து அதனை இடமாகக் கொண்டு நிற்பான். 'சத்தி' எனப் பெயர் பெற்று நின்ற சத்தி, 'சிவம்' என்னும் தத்துவத்திலிருந்து 'சத்தி' என்னும் தத்துவத்தைத் தோற்றுவித்து அதனை இடமாகக் கொண்டு நிற்பாள். இவ்வாற்றால் இத்தோற்றம் பின்வருமாறு அமையும்.*

| ஆதிசத்தி | சுத்தமாயை |
|---|---|
| ⇓ | ⇓ |
| (1) நாதம் | நாதம் |
| ⇓ | ⇓ |
| (2) விந்து | விந்து |
| ⇓ | ⇓ |
| (3) சிவன் | சிவம் |
| ⇓ | ⇓ |
| (4) சத்தி | சத்தி |

*இவற்றுள் சிவன் சத்திகட்கு உள்ள பெயர்களே, அவர்களால்*

தோற்றுவிக்கப்பட்டுத் தமக்கு இடமாகக் கொள்ளப்படுகின்ற தத்துவங்கட்கும் பெயராதல் விளங்கும்.

இங்கு இந்நாயனார் கூறிய இம்முறை சில ஆகமங்களுட் கூறியவாறாகும். வேறு சில ஆகமங்கள் இங்கு, 'நாதம், விந்து' என்றவற்றை, 'சிவம், சத்தி' என்றும், இங்கு 'சிவன், சத்தி' என்றவற்றை, 'நாதம், விந்து' என்றும் மாற்றிக் கூறும். அம்முறை பற்றியே சிவஞானசித்தி (சூ.2-74).

"சிவம் சத்தி நாதம் விந்து....
ஒன்றின் ஒன்றாய்ப் பவந்தரும்"

என்று கூறிற்று. எவ்வாறாயினும், இந்நான்கும் முதல்வனது அருவத் திருமேனிகள் என்பதில் மாறுபாடில்லை. இனி முன் இரண்டு நிலைகளை முறையே பரநாதம், பரவிந்து என்றும், பின் இரண்டு நிலைகளை அபரநாதம், அபரவிந்து என்றும் கூறுதல் எல்லா ஆகமங்களுக்கும் ஒப்ப முடிந்தது.

"வாதித்த இச்சையில் வந்தெழும் விந்துவே" என்றது 'சிவம் சத்திகள் தம்மில் தாம் வேறுபட்ட விருப்பம் காரணமாகச் சுத்த மாயை வேறு வேறு நிலைகளாக விருத்திப்பட்டு நிற்கும்' என்றவாறு. இச்சையில் - இச்சையின்படி.

"விந்து" (பிந்து) என்பது "சுத்தமாயை, அதன் ஒருவகை நிலை, அதனை இடமாகக் கொள்ளும் சத்தி" என்னும் மூன்றற்கும் பெயராகும். அவற்றுள் ஒன்றைக் கொள்ளவேண்டிய இடத்தில் மற்றொன்றைக் கொள்ளலாகாது. இவ்வாறே, 'நாதம்' என்பதும், சிவனது நிலைகளில் ஒன்றற்கும், அவன் இடமாகக் கொள்ளுகின்ற தத்துவத்திற்கும் பெயராய் நிற்கும். நாயனார் சொற்சுருக்கம் கருதி ஏற்ற பெற்றியால் பொருள் கொள்ள ஓதினார். எனவே, முன் மந்திரத்தில் "அதன் பால் திகழ் நாதமே" என்றதற்கு நேர்பொருளாக, 'ஆதி சத்தியினிடமாக நாதம் என்னும் சிவன் தோன்றுவன்' எனவும், ஒற்றுமைப் பொருளாக, 'அச்சிவனால் நாத தத்துவம் தோன்றும்' எனவும் கொள்ளப்படும். அவ்வாறே இம்மந்திரத்தில் "நாதத்தில் விந்துவும்" என்றதற்கு, நேர்பொருளாக, 'நாதம் என்னும் சிவனிடத்து விந்து என்னும் சத்தி தோன்றுவாள்' எனவும் ஒற்றுமைப் பொருளாக, 'அவளால் நாத தத்துவத்திலிருந்து விந்து என்னும் தத்துவம் தோன்றும்' எனவும், "நாத விந்துக்களில் சிவன், சத்தி தோன்றும்" என்றதற்கு நேர்பொருளாக, 'நாத விந்துக்களின் கீழ் விந்து' என்னும் சத்தியினின்றும் சிவன் என்னும் சிவன் தோன்றுவான்; அவனிடமிருந்து சத்தி என்னும் சத்தி தோன்றுவாள்' எனவும்,

ஒற்றுமைப் பொருளாக, ‘விந்து என்னும் தத்துவத்திலிருந்து சிவம் என்னும் தத்துவமும், சிவம் என்னும் தத்துவத்திலிருந்து சத்தி என்னும் தத்துவமும் தோன்றும்’ எனவும் கொள்ளப்படும் என்க.

‘மாயை’ என்பது குடத்திற்கு மண்போல, உலகமாகிய காரியப் பொருட்கு முதற்காரணமாவது, அது பல்வேறு வகைப்பட்ட சட (அறிவில்லாத) ஆற்றல்களின் தொகுதி (சத்திகளின் சமூகம்). அதனைச் சிவபெருமான் தனது இச்சைப்படி ஞானக் கிரியா சத்திகளால் தொழிற்படுத்துவான். அந்த மாயைதான் ஆணவ மலத்தின் தர தம நிலைகளோடு கலந்து தூய்மை இழந்தும் கலவாது தூய்மையாயும் இரு பகுதிப்பட்டு நிற்கும். தூய பகுதியே ‘சுத்த மாயை’ என்றும், தூய்மை இழந்த பகுதியே ‘அசுத்த மாயை’ என்றும் சொல்லப்படும். ‘மாயை’ என்றால் ‘மயக்குவது’ எனக் கருதப்படுவதால், சுத்த மாயையை ஆகமங்கள் ‘மாயை’ என்று குறிப்பதே இல்லை. **‘விந்து, குடிலை, குண்டலினி’ என்றாற்போலவே குறிப்பிடும் மாயை எனக் கூறவேண்டின், ‘மகாமாயை’ என்றும், ‘ஊர்த்துவ மாயை’ என்றும் குறிப்பிடும். மகத்து - பெரிது, ஊர்த்துவம் - மேல் உள்ளது; வியாபகம். எனவே, “மாயை” என வாளா கூறுமிடத்தெல்லாம், “அசுத்த மாயை” என்றே கொள்ளுதல் வேண்டும். சுத்த மாயையை ஆகமங்கள் “விந்து” எனக் கூறுதல்போல, அசுத்த மாயையை “மோகினி” என்று கூறும்.** மோகினி மயக்கற் கருவி. எனவே, “அசுத்த மாயையே மயக்கத்தைத் தரும்” என்பதும், “சுத்த மாயை மயக்கத்தைத் தராது” என்பதும் அறிந்துக் கொள்ளப்படும். மயக்கமாவது, ஐம்புல இன்பங்களையே பெரியனவாகக் கருதி, அவற்றால் விளையும் துன்பங்களை அறியாதிருத்தல்.

இறைவன் உலகைத் தோற்றுவித்து நடத்தக் கருதும்பொழுது “அருவம், அருவுருவம், உருவம்” என்னும் மூவகைத் திருமேனிகளைக் கொண்டு விளங்குவன். அங்ஙனம் விளங்குமிடத்துச் சுத்தமாயை யினின்று தோற்றுவிக்கப்படுகின்ற தத்துவங்களையே தான் இடமாகக் கொண்டிருப்பன். அதனால் அத்தத்துவங்கள் அசுத்த மாயா தத்துவங்களைப் பெற்று நிற்கும் உயிர்களுக்கு உடம்பாய் வந்து பொருந்துதல் இல்லை.

முதற்காரணப்பொருள் காரியப்படும் முறைகள் பல. அவற்றுள் சிவாகமங்களிற் கொள்ளப்படுவன, ‘விருத்தி, பரிணாமம்’ என்னும் இரண்டுமேயாம். அவற்றுள் விருத்தியாவது சுருங்கிக் கிடப்பது

*விரிவடைந்து நிற்றல். இதற்கு 'படம்குடிலானாற்போல' என உவமை கூறுவர். அஃதாவது கட்டிச்சுருட்டி ஒடுக்கி வைக்கப்பட்டிருந்த துணி, பின், விரித்து அமைக்கும்பொழுது பெரிய கூடாரமாகக் காட்சியளிப்பது போல்வதாம். பரிணாமமாவது ஒரு பொருள் மற்றொரு பொருளாய் உருமாறி நிற்பது. மண் குடமாவதும், பால் தயிராவதும் போல்வன இதற்கு உதாரணமாகும். பரிணாமமும், 'முழுவதும் பரிணமித்தல், ஒரு கூற்றிற் பரிணமித்தல்' என இருவகைப்படும். பால் தயிராவது முழுவதும் பரிணமித்தல், வெண்ணெயில் புழுத் தோன்றுதல் ஒருகூற்றிற் பரிணமித்தல், இவ்விரண்டனுள்ளும் சிவாகமங்களில் கொள்ளப்படும் பரிணாமம் ஒரு கூற்றிற் பரிணமித்தலே. "விருத்தி, பரிணாமம்" இரண்டனுள், சுத்தமாயை காரியப்படுவதெல்லாம் விருத்தி முறையிலாம். அசுத்த மாயை காரியப்படுவதெல்லாம் பரிணாம முறையிலாம். 'பரிணாமம் ஒரு கூற்றிற் பரிணமித்தலே' என்பதை மறக்கலாகாது.*

*முதல்வன் உலகத்தைக் கருதாது பராபர சத்தியோடு கூடிப் பராபரனாய்த் தன்னியல்பில் நிற்கும் நிலையே இயற்கை நிலை. அதுவே "சொரூபம்" எனப்படும். பிறவெல்லாம் உலகத்தைக் கருதி அதற்கேற்ப வேறுபட்டு நிற்கும் நிலையாதலின், அவையெல்லாம் செயற்கை நிலையே. இவை 'தடத்தம்' எனப்படும். தடத்தம் - சார்பு பற்றியது. "சொரூபம், உண்மை : தன்னிலை" என்பன ஒருபொருட் சொற்கள். முதல்வனை, சொரூப நிலையில் வைத்துக் கூறும்பொழுது, "சொரூப சிவன்" என்றும், தடத்த நிலையில் வைத்துக் கூறும்பொழுது, "தடத்த சிவன்" என்றும் கூறுவர். சொரூப சிவனுக்கு உருவம், பெயர், தொழில், ஒன்றும் இல்லை; தடத்த சிவனுக்கு அளவற்ற உருவம், பெயர் தொழில்கள் உள்ளன என்க. உருவம், பெயர், தொழில் ஒன்றும் இல்லாதவன், அவைகளை மேற்கொள்வது உயிர்களை உய்விக்க வேண்டும் என்னும் கருணையினாலேயாம். அதனை, அவ்வுருவம், பெயர், தொழில்யாவும் அருள்மயமானவையே; நம்மனோரது உருவம் முதலியன போல மாயாமயம் ஆனவை அல்ல; அருள் அவனது சத்தியேயாதலால், எல்லாம் வல்ல அச்சத்தியால் தனது இச்சைப் படியான உருவம் முதலியவற்றை அவன் தானே கொள்வான்; அதனால், அவைகளை அவனுக்குப் படைத்துதர வேறொருவர் வேண்டுவதில்லை.*

*இதனால், படைப்புத் தொடர்ச்சி சிறிது வகுத்துக் கூறப்பட்டது.*

**380.** இல்லது சத்தி இடந்தனில் உண்டாகிக்
கல்லொளி போலக் கலந்துள்ளிருந்திடும்
வல்லது ஆகவழிசெய்த அப்பொருள்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே. **3**

**381.** தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்
ஆர்வத்து நாதம் அணைந்தொரு விந்துவாய்ப்
பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்கும்
சார்வத்துச் சத்திஓர் சார்த்துமா னாமே. **4**

---

**380. தெளிவுரை :-** *சிவத்தை விட்டு தனியாய் இல்லாத சத்தி, உலகம் செயற்படுதற்பொருட்டு இவ்வாறு அச்சிவத்தினிடமாகத் தோன்றி வேறு நிற்பது போலச் சொல்லப்பட்டாலும், சத்தி எஞ்ஞான்றும், மணியில் ஒளிபோலச் சிவத்தோடு ஒன்றி நிற்றலன்றித் தனித்து நிற்றல் இல்லை. சிவமும் சத்தியைவிட்டுத் தனித்து நிற்றல் இல்லை. எனவே, 'சிவபேதம், சத்திபேதம்' எனப் பிரித்து வழங்குதல், அறிவு, செயல் (ஞானம், கிரியை) என்னும் வேறுபாடு பற்றிக் கொள்ளப்படும் உருவு, பெயர், தொழில் என்பன பற்றியேயாம் என்பதாயிற்று. இவ்வாறு தன்னின் வேறாகாத சத்தியை அதுதானே எல்லாம் செய்யவல்லதாக வேறு நிறுத்தி உலகம் செயற்படுதற்கு வழியை உண்டாக்கிய அந்தப் பெரும்பொருளை (முதல்வனை) 'இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன்' (தி.6 ப.97 பா.10) என்று சொல்லாற் சொல்லி விளக்கப்புகின், அஃது ஒருவாற்றானும் இயலாது. ஏனெனில், சொற்கும், அப்பொருட்கும் இடையேயுள்ள வெளி மிக மிக நீண்டது.*

*இதனால், உலகிற்கு முதலாய் நிற்கும் சிவம் சத்திகள் இரு பொருளாகாமையும், மேல் சிவமும், சத்தியும் வேறுவேறு போலக் கூறியது தடத்த நிலை பற்றி என்பது விளங்குதற் பொருட்டுச் சொரூப நிலையினது பெருமையும் கூறி, அவை மேற்கூறியவாற்றால் இருபொருள் போலும் என எழும் ஐயம் அகற்றப்பட்டது. வல்லது - மாயைக்கு மற்றொரு பெயர்.*

**381. தெளிவுரை :-** *சொல்லுக்கு எட்டாது நின்ற முதல்வனோடு நின்ற பராபரை அவனைத் தொடர்ந்து நின்றே 'ஆதி' என்னும் பெயருடைய சத்தியாய்ப் பின்பு, நாதமாய் நின்ற அச்சிவனை அன்போடு கூடி, 'விந்து' எனத்தோன்றி, பின் அச்சிவன்தானே சதாசிவன் முதலிய ஐவராய் நின்று நில முதலிய ஐந்து தத்துவங்கட்கும் தலைவனான பொழுது அவனது அந்நிலைகள் ஐந்தினும் உடன் கொள்ளப்படும் துணைவியாய் நிற்பாள்.*

*குறிப்புரை :-* *இங்கு 'நாதம், விந்து' என்றது, அபர நாத விந்துக்களை. எனவே, பரநாத விந்துக்களை விதந்திலர் என்க. அபர விந்துவினின்றும் சதாசிவர் தோன்றுவர். அவரிடமிருந்து 'மகேசுரர், உருத்திரர், மால், அயன்' என்பவர் முறையே ஒருவரில் ஒருவராகத் தோன்றுவர். 'அயன், மால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐவரும் முறையே நிலம், நீர், தீ, காற்று, வானம்' என்னும் பூதங்கட்குத் தலைவராவர். சதாசிவன் முதலிய ஐவர்க்கும் உரிய சக்திகள் முறையே மனோன்மணி, மகேசுவரி, உமை, திருமகள், கலைமகள் என்பவராவர். இச்சத்திகளெல்லாம் அபர விந்து முதலிய சத்தி பேதங்களினின்றே ஒருவரில் ஒருவராகத் தோன்றுவர். இங்கு கூறப்பட்ட உருத்திரன், மால், அயன் என்னும் மூவரும் சிவனின் வேறானவர் அல்லர்; சிவன் தானே கொள்ளும் நிலைகளாம். இவ்வாறு சிவன் தானே பல்வேறு நிலைகளில் பல்வேறு வடிவம், பெயரும், தொழிலும் கொண்டு நிற்றல் 'சம்பு பட்சம்' எனப்படும். அணுபட்ச சம்புபட்சங்களைக் கூறுமிடத்து, 'மகேசுரனுக்குக் கீழ் சம்புபட்சம் இல்லை; உருத்திரனுக்கு மேல் அணுபட்சம் இல்லை என்பவரும், சம்புபட்சம் எல்லா நிலைகளிலும் உண்டு என்பவரும், 'எல்லா நிலைகளிலும் இருபட்சங்களும் உண்டு' என்பவருமாகப் பலதிறத்தர் ஆசிரியர். அவருள் எல்லா நிலைகளிலும் இருபட்சங்களும் உண்டு என்பவரது கொள்கையே இந்நாயனாரது கருத்தாகத் தெரிகின்றது.*

*சார் வத்து - சார்பாய பொருள்; தலைமைப் பொருள். இதன் பின் 'ஆக' என்பது எஞ்சி நின்றது. சார்த்துமான் - துணையாக உடன்வைத்து எண்ணப்படுகின்ற பெண்; துணைவி.*

*சதாசிவமூர்த்தி ஞானம், கிரியை இரண்டும் சமமாய் நிற்கும் நிலையினர். இவர் தோற்றுவித்து இடமாகக் கொள்ளும் தத்துவம் சாதாக்கியம். இது மேற்கூறிய அபரவிந்துவிலிருந்து தோன்றுவதாம். ஞானம் குறைந்து, கிரியை மிகுந்திருப்பதே மகேசுர நிலை, மகேசுரன் சாதாக்கியத்திலிருந்து ஈசுர தத்துவத்தைத் தோற்றுவித்து அதனைத் தனக்கு இடமாகக் கொள்வான். கிரியை குறைந்து ஞானம் மிகுந்த நிலையில் சிவன் வித்தியேசுரன் என நின்று, ஈசுர தத்துவத்திலிருந்து 'சுத்த வித்தை' என்ற தத்துவத்தைத் தோற்றுவித்து அதன்கண்ணே 'உருத்திரன், மால், அயன்' என மூன்று நிலைகளில் நிற்பன். அதனால், வித்தியேசுரனை வேறு வைத்து எண்ணுதல் இல்லை.*

*இதுகாறும் கூறிவந்தவாற்றால், பரநாதம், அபரநாதம், சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன்' எனச் சிவபேதம் ஏழும், 'பரவிந்து, அபரவிந்து, மனோன்மணி, மகேசுவரி, உமை, திருமகள், கலைமகள்' எனச் சத்திபேதம் ஏழும் ஆதல் விளங்கும். எனினும், பரநாதத்திலிருந்து*

**382.** மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்
கானின்கண் நீருங் கலந்து கடினமாய்த்
தேனின்கண் ஐந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்கண் நின்று பொருந்தும் புவனமே. **5**

---

*அபரநாதம் தோன்றாமல், இடையே பரவிந்து தோன்ற, அதனின்றே அபரநாதம் தோன்றுதலானும், அவ்வாறே அபரநாதத்திலிருந்து சதாசிவன் தோன்றாமல், இடையே அபரவிந்து தோன்ற, அதினின்றே சதாசிவன் தோன்றுதலானும், பர அபர விந்துக்களாகிய சத்தி பேதங்களையும் சிவபேதமாகக் கூட்டி எண்ணி 'சிவபேதம் நவந்தருபேதம்' என்கின்றன ஆகமங்கள். அதனையே சிவஞானசித்தி (சூ.274) நூல்,*

*சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், திகழும் ஈசன்,*
*உவந்தருள் உருத்திரன்றான், மால், அயன் ஒன்றின் ஒன்றாய்ப்*
*பவந்தரும்; உருவம்நால்; இங்கருவம்நால்; உபயம் ஒன்றாய்*
*நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்*

*எனக் கூறிற்று. இதனுள், 'பரநாதம், பரவிந்து, அபரநாதம், அபரவிந்து, என மேலே கூறிய நான்கும் அருவத் திருமேனிகள்' என்பதும், 'மகேசுரன், உருத்திரன், மால், அயன் எனக் கீழே உள்ள நான்கும் உருவத் திருமேனிகள்' என்பதும், 'இடையே உள்ள சதாசிவமூர்த்தம் ஒன்றும் அருவுருவத்திருமேனி' என்பதும் கூறப்பட்டவாறு அறிக. அருவுருவத் திருமேனி என்பதே மேல் கூறப்பட்ட இலிங்க வடிவம். எனவே, சதாசிவ மூர்த்தமாவது இலிங்க வடிவமே என உணர்க.*

*இதனால், சுத்த மாயையில் நிகழும் படைப்புக் கூறி முடிக்கப்பட்டது.*

**382. *தெளிவுரை :-* *'மகத்து' எனப்படும் தத்துவத்தினின்றே ஐம் பூதங்கள் தோன்றுவனவாம். அவை தோன்றுமிடத்து, அவற்றின் சாரம் எனத் தக்கனவாய், 'சூக்கும பூதம்' எனப் பெயர்பெற்று நிற்கும் தன் மாத்திரைகளினின்றே தோன்றும். அவை தோன்றுதல், 'வானம், காற்று, தீ, நீர், நிலம்' என்னும் முறையிலாம். தன்மாத்திரை ஒவ்வொன்றிலும் இருந்தே மேற்கூறிய வானம் முதலிய ஒவ்வொரு பூதமும் தோன்றும். பூதங்கட்கு அவ்வவற்றிற்குரிய தன் மாத்திரைகளே காரணமல்லாது, ஒரு பூதத்திற்கு மற்றொரு பூதம் காரணம் அல்ல, அதனால் ஒரு பூதத்திலிருந்து மற்றொரு பூதம் தோன்றுவதில்லை. ஒரு தன்மாத்திரை***

*யிலிருந்து ஒரு பூதம் தோன்றியபின், மற்றொரு தன்மாத்திரையிலிருந்து மற்றொரு பூதந்தோன்றம். இவ்வாறே ஐந்து தன்மாத்திரைகளினின்றும் ஐந்து மாபூதங்களும் மேற்கூறிய அம்முறையிலே தோன்றுவனவாம். அவற்றுள் இறுதியில் உள்ள நிலம் என்னும் பூதத்துட்பட்டனவே நாம் காணும் இவ்வுலகம்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'வானத்திலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் தோன்றும்' எனக் கூறுதல் தூலாருந்ததி நியாயமாகப் பொதுப் படக்கூறுதலே; உண்மையாற் கூறுமிடங்களில் தன்மாத்திரையினின்று பூதங்கள் தோன்றும் என்றே கூறப்படும் என்பதாயிற்று.*

*'மகத்து' என்னும் வடசொல், தமிழில், "மான்" எனப்படும். நம்மனோர் உலகிற்கு இதுவே முதற்காரணமாதலால் இது, 'மகத்து' எனப்படுகின்றது. 'பிரகிருதி' எனவும், 'முலப் பிரகிருதி' எனவும் கூறப்படுவது இதுவே. சிவாகமங்கள் இதனை, 'பிருகிருதி மாயை' எனவும் கூறும். பிற சமயங்கள், 'இது பிறவற்றிற்குக் காரணமாவதல்லது காரியம் ஆகாது' எனவும், 'அதனால் இதுவே உலகிற்குப் பரம முதற்காரணம்' எனவும் கூறும். ஆயினும் சிவாகமங்கள், 'இது அசுத்தமாயை யினின்றும் தோன்றுகின்ற, கலை என்னும் தத்துவத்தினின்றும் தோன்றும் காரியமே' எனக் கூறும்.*

*'சுத்த உலகம், மிச்சிர (கலப்பு) உலகம், அசுத்த உலகம்' என உலகம் மூவகைத்து என்பதும், 'அதனால், அதற்கு முதற்காரணமும் மூன்றாதல் வேண்டும்' என்பதும், அம்மூன்றாவன, "சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை" என்பன என்பதும், "அவற்றுள் சுத்த மாயையும், அசுத்த மாயையுமே எஞ்ஞான்றும் காரணமாயே நிற்பன; பிரகிருதி மாயை தன் காரியங்களை நோக்கக் காரணமாய் நிற்பினும், அசுத்தமாயையின் காரியமேயாம்" என்பதும் சிவாகமங்களின் துணிவு, சுத்த மாயை, 'விந்து' எனப்படுதலால், அதன் காரியங்கள் யாவும், 'வைந்தவம்' என்றும், அசுத்த மாயையே 'மாயை' எனப்படுதலால் அதன் காரியங்கள் யாவும் 'மாயேயம்' எனவும், பிரகிருதியின் காரியங்கள் யாவும் 'பிராகிருதம்' எனவும் கூறப்படும். பிராகிருதத்தையும், மாயேயமாக அடக்கிக் கூறுதல் உண்டு.*

*"மானின்கண் பூதங்கள் ஐந்தும் தோன்றும்" என்று தொகுத்துக் கூறி ஒழியாது, வகுத்துக் கூறினார். அவற்றின் தோற்றமுறை உணர்த்தற்கு, "கனலின்கண்" என்பது திரிந்து நின்றது. 'கான்- காடு. அஃது ஆகுபெயராய்த் தீயை உணர்த்திற்று' எனவும் உரைப்பர். "நீரும்" என்றதற்கு, 'நீர் வெளிப்பட்டபின்' என்பது பொருள். "கலந்து" என்றது*

'அவற்றொடுகூடி 'பூதங்கள் நான்கு' என்று ஆகிய பின்' என்றபடி. "கடினம்" என்றது ஆகுபெயரால், அக்குணத்தையுடைய "நிலம்" என்னும் பூதத்தை உணர்த்திற்று. "கடினமாய்" என்பதில் "ஆய்" என்பதனை "ஆக" எனத் திரிக்க. ஆதல், தோன்றுதல்.

தேன் வடித்தெடுத்த தேறல் ஆதலின், அதுபோலப் பூதங்களின் நுண்ணிலையாய அவற்றின் காரண நிலையை, "தேன்" என்றார். இக்காரண நிலையே தன்மாத்திரையாதல் அறிக. இவற்றைத் தேன் என்றதனானே, காரணத்தன்மை காரியத்தினும் உளதாகும் முறைமை பற்றிச் சுத்தம் முதலிய தன்மாத்திரைகளது தன்மை அவற்றின் காரியங்களாகிய வானம் முதலிய பூதங்களினும் காணப்படும் என்பது குறிப்பாற் கூறப்பட்டதாம். 'தேனின்கண் செறிந்த பூதமாய்' என்று ஒழியாது, "ஐந்தும் செறிந்து ஐந்து பூதமாய்" என இருமுறை தொகை கொடுத்து ஓதினார். 'ஒரு தன்மாத்திரையிலே ஐந்து பூதமும் தோன்றுதலும் ஒரு தன்மாத்திரையிலே ஒரு பூதந்தோன்ற, அதன்பின், ஒரு பூதத்திலிருந்து மற்றொரு பூதம் தோன்றுதலும் இன்றி, வேறு வேறாய ஐந்து தன்மாத்திரைகளிலிருந்து, ஒரு தன்மாத்திரையில் ஒரு பூதமாக ஐந்து தன்மாத்திரையில் ஐந்து பூதமும் தோன்றும்' என்றற்கு ஐந்தும் தேனின்கண் செறிந்து ஐந்துமாம் என்றது, 'ஐந்து பூதங்களும் முன்பு தனித்தனிக் காரணநிலையில் நின்று, பின் காரியமாகத் தோன்றும்' என்றவாறு. இவ்வாறு உரையாக்கல், இத்திருமந்திரத்துள் மூன்றாம் அடி வெற்றெனத் தொடுத்தலாய் முடியும் என்க. "பூதமாய்" என்பதில் "ஆனபின்" என்பது, "ஆய்" எனத் திரிந்து நின்றது. 'இப்புவனம்' எனச் சுட்டு வருவித்துக்கொள்க. இப்புவனம், பிருதிவி தத்துவ புவனம். எனவே, "இவ்வாறே ஏனைத் தத்துவங்களினும் புவனங்கள் உள" என்பதும் குறித்தவாறு காண்க. இவ்வாற்றால் இங்குக் கூறிய தத்துவத்தோற்றம் பின்வருமாறாதல் காண்க.

மான் (பிரகிருதி)

தன்மாத்திரை

| சத்தம் (ஓசை) | பரிசம் (ஊறு) | உருவம் (ஒளி) | இரதம் (சுவை) | கந்தம் (நாற்றம்) |
|---|---|---|---|---|
| வானம் (ஆகாயம்) | காற்று (வாயு) | தீ (தேயு) | நீர் (அப்பு) | நிலம் (பிருதிவி) |

> *"சுவை ஒளி ஊறோசை நாற்றம்என் றைந்தின்*
> *வகைதெரிவான் கட்டே உலகு"* - குறள், 27
>
> *"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்*
> *கலந்த மயக்கம் உலக மாதலின்"* - (தொல். பொருள்)

என்றற்றொடக்கத்தனவாக இவ்வுலகம் பற்றிப் பெரும்பான்மையாக யாண்டும் யாவரும் அறியக் கூறப்படுவன தன்மாத்திரைகளும், ஐம்பெரும் பூதங்களும் ஆகிய தத்துவங்களேயாதலின், 'சிறப்புடைப் பொருளைத் தான்இனிது கிளத்தல்' என்னும் முறையால் அவற்றின் தோற்றத்தையே சிறந்தெடுத்துக் கூறினார்.

எனவே, மானின்கண் தோன்றுவனவாக (பிரகிருதியின் காரியங்களாக) வேறும் சில தத்துவங்கள் உள என்க. அவை அந்தக் கரணங்களும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்களுமாம். ஆகவே, மானின் காரியங்கள் அனைத்தையும் பின்வருமாறு கண்டுகொள்க.




குணதத்துவமே 'சித்தம்' என்னும் அந்தக்கரணமாம். ஆகவே, "சித்தம், புத்தி, அகங்காரம், மனம்" என்னும் அந்தக்கரணம்-4, ஞானேந்திரியம்-5, கன்மேந்திரியம்-5, தன்மாத்திரை-5, பூதங்கள்-5, ஆக 24 மானின் காரியங்கள் என உணர்க.

*இதனால், பிரகிருதி மாயையில் உளவாகும் படைப்புக் கூறப்பட்டது. இடைநின்ற அசுத்த மாயைப் படைப்பினை நாயனார் இங்கு விதிந்திலர். எனினும், அசுத்த மாயா காரியங்களை இங்கு ஒருங்கு இயையக் காட்டுதும்:-*




*காலம், 'இறப்பு, நிகழ்வு, எதிர்வு' என மூன்றாகி, முறையே ஒரு கன்மத்திற்கு எல்லையையும், மற்றொரு கன்மத்திற்குப் பயனையும், வேறொரு கன்மத்திற்குப் புதுமையையும் உண்டாக்கும். நியதி, அவரவர் செய்த கன்மத்தை அவரவரே நுகருமாறு நியமிக்கும். கலை, வித்தை, அராகம் என்பன முறையே ஆன்மாவின் 'கிரியை, ஞானம், இச்சை' என்னும் சத்திகளை விளங்கச்செய்யும். காலம் முதலிய ஐந்தும் வந்து பொருந்திய பொழுதுதான், ஆணவமல மறைப்பால் சடம்போலக் கிடந்த ஆன்மா கன்ம நெறியில் நின்று ஒன்றை அறியவும், விரும்பவும், செய்யவும் உரியதாய், 'புருடன்' எனப் பெயர் பெற்று நிற்கும். அதனால், 'புருடன்' என்பது ஒரு தனித் தத்துவம் அன்று, ஆன்மா காலம் முதலிய ஐந்தொடும் கூடி வினைநெறியில் செல்லும் நிலையே புருட தத்துவமாம். 'மாயை' என்பது, காலம் முதலிய ஐந்தும் தோன்றுவதற்கு ஏதுவாக அசுத்த மாயையில் பக்குவப்பட்ட ஒரு பகுதியேயாம். எனவே, இது மற்றவைப்போலக் காரியமாகாது காரணமேயாயினும், பக்குவப்பட்டமை பற்றி மற்றைய தத்துவங்களோடு ஒன்றாக வைத்து எண்ணப்படுகின்றது. எனவே, 'காலம், நியதி, கலை, வித்தை, அராகம்,*

**383.** புவனம் படைப்பார் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானாய்ப்
புவனம் படைப்பான்அப் புண்ணியத் தானே. **6**

---

*புருடன், மாயை' என அசுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் ஏழாதல் அறியப்படும். சுத்த மாயையில் தோன்றும் தத்துவம் ஐந்து. அசுத்த மாயையில் தோன்றும் தத்துவம் ஏழு, பிரகிருதி மாயையில் தோன்றும் தத்துவம் இருபத்து நான்கு என நின்ற இவை முறையே 'சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்ம தத்துவம்' எனப் பெயர்பெறும். இவைகளில் இங்கு எடுத்தோதியவைபோக, ஏனையவற்றை நாயனார் பின்னர் ஆங்காங்கு இடம் வந்துழி வந்துழிக் குறித்தருளுவார்.*

**383. *தெளிவுரை :-*** ***உலகத்தைப் படைப்பவர் ஒருவனும், (சிவனும்) ஒருத்தியும் (சத்தியும்) அவர்கட்குப் புதல்வர் ஐவர். (சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன். எனவே, அவரைக்கொண்டு, அருளல் முதலியவற்றைச் செய்விப்பவன் என்றதாம்) ஐவருள் படைப்புத் தொழிலுக்குத் தான் செய்த புண்ணியத்தால் உரிமை பெற்றவன் தாமரை மலரில் என்றும் இருந்து அத்தொழிலைச் செய்வான்.***

***குறிப்புரை :-*** *எனவே, 'சிவபெருமான் தானே நேர்நின்றும் தக்கார் பிறரைக் கொண்டும் உலகத்தை நடத்துவான்' என்பதாம். தானே நின்று நடத்துதல் சுத்த மாயையில். ஏனை இருமாயைகளிலும் பிறரைக் கொண்டு நடத்துவன் என்க. தோற்றுவிக்கப்படுபவரை, "புத்திரர்" என்றார். "படைப்பானும்" என்னும் உம்மை எதிரது தழுவிய எச்சம். ஆகவே, ஏனை நால்வரும் தத்தமக்கு ஏற்ற வகையில் நின்று காத்தல் முதலியவற்றைச் செய்வர் என்பது பெறப்பட்டது.*

*இதனால், சிவபெருமான் படைத்தல் முதலியவற்றைச் செய்யுமாறு கூறப்பட்டது.*

**384. *தெளிவுரை :-*** ***புண்ணியனாகிய சிவபெருமான் உலகெங்கும் நிறைந்து, எளிய உயிர்களை வளர்ப்பான். அவ்வாறே சத்தியும் சிவனது சங்கற்பரூபமாய் அவனோடு பூவில் மணம் போலப் பொருந்தி எங்கும் நின்று, அவன் கருதும் செயல்களை யெல்லாம் செய்வாள்.***

384. புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்
தண்ணிய மானை வளர்த்திடும் சத்தியுங்
கண்ணியல் பாகக் கலவி முழுதுமாய்
மண்ணியல் பாக மலர்ந்தெழும் பூவிலே. 7

---

*குறிப்புரை :-* "இயமானனை" என்பது குறைந்து நின்றது. இயமானன் - ஆன்மா. "கலவி" என்றது, கலத்தலோடு கலந்து நின்று செய்யும் செயலையும் குறித்தது. "உலகெங்கும் பொருந்தி" என்றதனால் சிவபெருமான் ஐந்தொழில் செய்யுங்கால் உலகுயிர்களோடு அத்துவிதமாய் (கலப்பினால் ஒன்றாய்ப் பொருள் தன்மையால் வேறாய், உயிர்க்குயிராதல் தன்மையால் உடனாய்) நின்று செய்பவன் என்பதும், "இயமானனை வளர்த்திடும்" என்றதனால், அவன் அவ்வாறு நின்று ஐந்தொழிலைச் செய்வது உயிர்கட்கு மலபாகம் வருவித்து அவைகளை வீடடையச் செய்தற் பொருட்டே என்பதும், "சத்தியும் கலவி முழுதுமாய்" எனவே, அவன்தான் செய்யும் தொழில்கள் பலவற்றையும் தனது சத்தியால் செய்பவன் என்பதும், 'பூவில் மணம்போல' என்றதனால், சத்தி அவனின் வேறாகாது, மரமும் காழ்ப்பும்போலக் குணகுணி பாவத்தால் இருதிறப்பட்டுத் தாதான்மியமாய் நிற்கும் என்பதும் பெறப்பட்டன.

தண்மை, இங்கு எளிமை, "தண்பதத்தால் தானே கெடும்" (குறள், 548) என்பதிற்போல, "சத்தியும் கலவி முழுதுமாய்" எனவே, சிவமும் அத்தன்மையதாதல் பெறப்பட்டது. கண்ணுதல் - கருதுதல். கண் இயல்பாய் - கருதுதல் வடிவாய். எனவே, 'சிவபெருமான் தான் செய்தனவற்றை நினைவு மாத்திரத்தால் செய்வதல்லது, சில கருவிகளைக் கொண்டு செய்பவனல்லன்' என்பது போந்தது. அக் கருதுதல் தானே அவனது சத்தி வடிவம் என்க. 'மண்' என்னும் பூதத்தின் சிறப்புப் பண்பு நாற்றமாதல் பற்றி நாற்றத்தை, "மண்ணியல்பு" என்றார். 'பூவில் மண் இயல்பாக மலர்ந்தெழும்' என மாற்றி உரைக்க. 'மலர்ந்து எழுதல்' பல்வேறு வகைப்பட்ட நினைவுகளாய் விரிந்து, நினைந்தவாறே ஆக்குதல். இத்தகைய சத்தியானே அவன் எங்கும் நிறைந்தவன் ஆகின்றான் என்பதும் குறிப்பால் உணர்த்தியவாறு.

இதனால், ஐந்தொழில் செய்யுமிடத்துச் சிவபெருமான்

**385.** நீரகத் தின்பம் பிறக்கும் நெருப்பிடை
காய்கதிர்ச் சோதி பிறக்கும்அக் காற்றிடை
ஓர்வுடை நல்லுயிர் பாதம் ஒலிசத்தி
நீரிடை மண்ணின் நிலைப்பிறப் பாமே. **8**

---

*உயிர்களோடு நிற்கும் முறைமையும், அம்முறைமைக்குத் துணையாகின்ற அவனது சத்தியின் நிலைமையும், அச்சத்திக்கும், அவனுக்கும் இடையே உள்ள தொடர்பு வகையும் கூறப்பட்டன.*

**385. *தெளிவுரை :-*** *சத்தி நீரின்கண் 'சுவை' என்னும் பண்பாயும், நெருப்பின்கண் எரிகின்ற 'ஒளி' என்னும் பண்பாயும், காற்றின்கண் 'ஊறு' என்னும் பண்பாயும், வானின்கண் 'ஒலி' என்னும் பண்பாயும் விளங்குவாள். நீரால் சூழப்பட்ட 'மண்' என்னும் பூதத்தில்தான் பல்வேறு நிலைகளையுடைய உயிர்கள் தோன்றி வளரும்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'எஞ்சிய நாற்றம் அதன்கண் உள்ளது' என்றாராயிற்று. சுவையை, "இன்பம்" என்றார். உயிர்ப் பண்பாகிய உணர்தல் தன்மையில் முதலாவது ஊற்று உணர்வேயாதலின், அதனையே "உயிர்" என்றார். ஊற்று உணர்வு முதல் என்பதனை "ஓரறிவுயிர்" என்பவை பற்றி அறிக.*

*"ஓர்வுடை நல்லுயிர்" எனச் சிறப்பித்தலும் அதுபற்றி. பாதம் - அடி; முதல் அது முதலாவதாகிய பூதத்தை உணர்த்திற்று. "சத்தி" என்னும் எழுவாய் இறுதிக்கண் நின்றது. உலகத்தோற்றம் முதலியவற்றை நம்மனோர் காணும் இவ்வுலகியல்பில் வைத்தே உணர்த்துகின்றாராதலின், ''நீரிடைமண்'' எனவும், ''மண்ணின் நிலைப்பிறப்பாம்" எனவும் கூறினார். மேல், 'பூவின் கண் நின்று பொருந்தும் புவனமே' (தி.10 பா.382) என்றாற்போல. "இன்பம், சோதி, உயிர், ஒலி" என்றவற்றில் 'ஆய்' என்பது விரிக்க. மேல், 'சிவசத்தியே உலகைப் பலவாறு ஆக்கி நடத்தும்' என்றதற்கு ஏற்ப இங்கு 'சத்தியே இவ்வாறு வெளிப்பட்டு நிற்கும்' என ஒற்றுமைபற்றிக் கூறினார்.*

*இதனால், மேல் தோற்றம் கூறப்பட்ட பூதங்களின் பயப்பாடு கூறப்பட்டது. இடைநின்ற இரண்டு திருமந்திரங்கள் இயைபுடைய வற்றை இடையே விதந்தனவாம்.*

**386.** உண்டுல கேழும் உமிழ்ந்தான் உடனாகி
அண்டத் தமரர் தலைவனாம் ஆதியும்
கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும்
பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. **9**

**387.** ஓங்கு பெருங்கடல் உள்ளுறு வானொடும்
பாங்கார் கயிலைப் பராபரன் தானும்
வீங்குங் கமல மலர்மிசை மேலயன்
ஆங்குயிர் வைக்கும் அதுவுணர்ந் தானே. **10**

---

**386.** *தெளிவுரை :-* உலகம் முழுதுடையான் சிவபெருமானே யாயினும், 'அயன், அரி, அரன்' என்னும் மூவர்தாமும் உலகிற்குக் காரணக் கடவுளராய் நின்று ஒரோவொரு தொழிலைச் செய்தல், தத்தம் புண்ணிய மிகுதிக்கு ஏற்ப அப்பெருமானால் தரப்பெற்று நடத்துதல் பற்றியேயாம்.

*குறிப்புரை :-* "அதற்குக் காரணம் அறியற்பாற்று" என்பது குறிப்பெச்சம். பிரகிருதி புவனங்கட்குப் பதியாதல் பற்றித் திருமாலையே உலகினை ஒடுக்கியும், வெளிப்படுத்தியும் நிற்பவனாக வைத்து, "உலகத்தை உண்டு உமிழ்ந்தவன்" எனக் கூறுதல் வெளிப்படை. "உடனாகி, ஓடு" என்பன எண்ணின்கண் நின்றன. சிவபெருமானுக்குரிய "ஆதி" என்னும் பெயரை அவனது உருவைப் பெற்ற உருத்திரனுக்கு ஆக்கிக் கூறினார். அதனால் அவனே தேவர் பலர்க்கும் மேலானவன் என்பது விளங்குதற்கு, "அண்டத்தமரர் தலைவனாம்" என்றார். கண்டம் - சிறுமை. இறுதியிற் கூறுதல் பற்றி "முன்னை இருவரினும் மேம்பட்டவன்" என்பது படாமைப் பொருட்டு "கண்டச் சதுமுகன்" என்றார்.

இதனால், உலக முதல்வனாகிய காரணனைப் பற்றி ஓர் உண்மை உணர்த்தற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.

387. *தெளிவுரை :-* சிவபெருமான் தனது தொழில்களுள் ஒவ்வொன்றைத் திருமாலும், பிரமனும் ஏற்றுச் செய்யுமாறு திருவுளம் பற்றினான்.

*குறிப்புரை :-* 'அதனால், அவரும் உலக காரணர் எனப்படுகின்றனர்' என்பதும் குறிப்பெச்சம். மாலும், அயனும்

**388.** காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்
நாரணன் என்றும் நடுவுட லாய்நிற்கும்
பாரணல் அன்பிற் பதஞ்செய்யும் நான்முகன்
ஆரண மாய்உல காயமர்ந் தானே. **11**

---

*சிவபெருமானது ஆணையை ஏற்ற அதிகார மூர்த்திகளாதலின் அது பற்றி "உலக முதல்வன் சிவபெருமானே" என்றற்கு இழுக்கில்லை என்பது கருத்து. இரண்டாம் அடியை முதலில் வைத்து உரைக்க. "தானும்" என்பதில் தான், அசைநிலை, உம்மை, "அவர் தவம் செய்யத் தானும் அதற்கு இசைந்தான்" என இறந்தது தழுவிற்று. வீங்கு - மணம் மிக்க. "உயிர் வைத்தல்" என்றது, படைத்தல், காத்தல் இரண்டனையும் இரட்டுற மொழிதலால் குறித்ததாம். உணர்ந்தான் - எண்ணினான். திருவுளம் பற்றினான். உருத்திரனை வேறாக எண்ணுவோர் சிவபெருமானை முதல்வன் என்பாரோடு மாறுபடாமை பற்றி இங்கு மால், அயன் இருவரைப் பற்றி மட்டுமே கூறினார் என்க. எனவே, உருத்திரனும் அத்தகையோனாதல் பெறப்பட்டது. "அயன், மால், உருத்திரன்" என்னும் மூவரும் முறையே "படைப்பவன், காப்பவன், அழிப்பவன்" என்பது வெளிப்படை.*

*இதனால், புராணங்களில் சிறந்தெடுத்துப் பேசப்படுகின்ற காரணர் மூவர் பற்றிய உண்மை தெளிவிக்கப்பட்டது.*

**388. *தெளிவுரை :-*** *சிவபெருமான் ஒருவனே தனது பேரருளால் எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் அறிந்தும், செய்தும் நிற்பவன். திருமால், "தூல சரீரம், சூக்குமு சரீரம், குண சரீரம், கஞ்சுக சரீரம், காரண சரீரம்" என்னும் ஐவகை உடம்புள் முதல் உடம்பாகிய தூலசரீரம் முதல் நடுவுடம்பாகிய குண சரீரங்காறும் நிறைந்து நின்று செயலாற்றுவான். பிரமன், முதல் உடம்பாகிய தூல சரீரத்துள்ளும், பிருதிவி தத்துவத்தளவிலே நிறைந்து சென்று செயலாற்றுவன். பிரமனை, 'வேத முதல்வன், உலகத் தந்தை' என்றெல்லாம் சொல்வது இந்த அளவில்தான்.*

***குறிப்புரை :-*** *இங்கு, "முதல் உடம்பு" என்றது, ஒடுக்கமுறை பற்றி என்க. மேற்கூறிய தத்துவம் முப்பத்தாறனுள், "ஞானேந்திரியம், கன்மேந்திரியம், மாபூதம் என்னும் பதினைந்தும் தூல சரீரமாம்" எனவும், "தன் மாத்திரை ஐந்தும், மனம் அகங்காரம் புத்தி என்னும் அந்தக்கரணங்களும் ஆகிய எட்டும் சூக்குமு சரீரமாம்" எனவும், "சித்தம், குணம், பிரகிருதி என்று பலவகையாய் நிற்கும் ஒன்றே குண சரீரமாம்"*

**389.** பயன்எளி தாம்பரு மாமணி செய்ய
நயன்எளி தாகிய நம்பஒன் றுண்டு
வயன்ஒளி யாயிருந் தங்கே படைக்கும்
வயனெளி தாம்வய ணந்தெளிந் தேனே. **12**

---

*எனவும் "வித்தியா தத்துவங்கள் ஏழனுள் மாயை தவிர ஏனைய ஆறுமே கஞ்சுக சரீரமாம்", "மாயை காரண சரீரமாம்" அறிந்து கொள்க. இவற்றுள் நிலமுதல் பிரகிருதி அளவுமே திருமால் வியாபகன் ஆதலின், "நாரணன் என்றும் நடுவுடலாய் நிற்கும்" என்றும், நான்முகன் பிருதிவி அளவிலே வியாபகனாதலின் "நான்முகன் பார் அண்ணல்" என்றும் கூறினார். சிவபெருமானை விடுத்து இவ்விருவருள் ஒருவனை முதல்வன் எனச் சிலர் மயங்குதலின்றி, உருத்திரனைச் சிவபெருமானின் வேறாக எண்ணி மயங்குவார் இலராதல் பற்றி இவ்விருவரது வியாபக எல்லைகளை மட்டுமே உணர்த்தி அருளினார். சீகண்ட உருத்திரன் மாயாதத்துவங்காறும் வியாபகன் எனவும், சதாசிவன் நாத தத்துவங்காறும் வியாபகன் எனவும் உணர்ந்துகொள்க.*

*"அன்பு" இரண்டில் முன்னது அருள்; பின்னது ஆசை. 'அன்பிற் செய்யும்' என இயையும். பதம் - உலகம். செய்தல் - படைத்தல்.*

*இதனால், சிவபெருமானது முதன்மைக்கண் நிகழும் ஐயத்தினை முற்ற நீக்குதற் பொருட்டு, அதிகார மூர்த்திகளது அதிகார எல்லைகள் கூறப்பட்டன.*

**389. *தெளிவுரை :-* பிரம தேவன் அறிவுடையவனாய் இருந்து படைத்தல் தொழிலை வெற்றிபெறச் செய்கின்ற காரணத்தை நான் நன்கு அறிந்தேன். அஃது என்றும் நிலையாயுள்ள இன்பம் எளிதாகக் கிடைத்தற் பொருட்டுத் தன்னை விரும்பினால், அப்பயனை அவ்வாறே எளிதில் தருகின்ற பருத்த இரத்தினம் ஒன்று அவனிடம் உள்ளது என்பதே.**

***குறிப்புரை :-* பின்னிரண்டடிகளை முதலில் வைத்து, அதன் பின், 'நம்பப் பயன் எளிதாம் மணி ஒன்றுண்டு' என்பதைக் கூட்டி உரைக்க. பருமாமணி, சிவபெருமான். செம்மை - மாறுபாடின்மை. நயன் -**

**390.** போக்கும் வரவும் புனிதன் அருள்புரிந்
தாக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து
மேக்கு மிகநின்ற எட்டுத் திசையொடுந்
தாக்குங் கலக்குந் தயாபரன் தானே. **13**

---

*இன்பம். "ஆகிய" என்பது "செய்யிய" என்னும் வினையெச்சம். நம்புதல் - விரும்புதல். "நம்பன்" என்பது பாடம் ஆகாமை வெளிப்படை. "உண்டு" என்னும் குற்றியலுகரத்தின்முன் உயிர் உடம்படு மெய் பெற்றது. அங்கே - அவ்வாறே; அறிந்தவாறே, வயன் - வெற்றி, வயணம் - காரணம். படைத்தலைச் செய்பவனையே முதல்வனாக உலகம் மயங்குதல் இயல்பு என்பது பற்றிச் சிவபெருமான் பிரமனுக்கு உள்ளொளியாய் நிற்றலையே விதந்தார்.*

*இதனால், படைத்தல் முதலியவற்றைச் சிவபெருமான் பிறரால் செய்விக்கும் முறைமை கூறப்பட்டது.*

**390. தெளிவுரை :-** ***சிவபெருமான் உயிர்கள்மாட்டு அருள் கூர்தலால், உலகம் ஒடுங்கல், தோன்றல், நிற்றல் என்னும் செயல்கள் அவனது திருவுள்ளத்தில் எழுந்தபொழுது, எல்லையின்றிப் பரந்து நிற்கின்ற மாயையைத் தனது சிற்சத்தி வழியாகப் பொருந்தி அதனைக் காரியப்படுத்துபவன் அவனே.***

***குறிப்புரை :-*** ***எனவே, 'அவனது அதிகார சத்தி பதிவால் அயன், அரி, அரன் என்போர் தமது படைத்தல் காத்தல் அழித்தல் தொழில்களைச் செய்கின்றனரல்லது, தாங்களே தங்கள் விருப்பப்படி செய்கின்றாரல்லர்' என்பதாம். ஆக்கம் - வளர்ச்சி. இதனை "வரவும்" என்றதன் பின்னர்க் கூட்டுக. 'புரிதலால்' என்றது 'புரிந்து' எனத் திரிந்து நின்றது. மேக்கு - உயரம். மாயையை 'மேக்கு மிகநின்ற எட்டுத்திசை' என ஆகாயமாக உருவகம் செய்தார். தாக்குதல் - தோய்தல். கலக்குதல் - காரியப்படுத்துதல். இங்கு 'சத்தி வழியாக' என்பது ஆற்றலால் வந்தியைந்தது.***

***இதனால், மேல் 'ஒளியாய்' எனக் குறிக்கப்பட்ட ஒளியாவது, அதிகார சத்தி என்பது கூறப்பட்டது.***

**391.** நின்றுயி ராக்கும் நிமலன்என் னாருயிர்
ஒன்றுயி ராக்கும் அளவை உடலுற
முன்றுய ராக்கும் உடற்குந் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே. 14

**392.** ஆகின்ற தன்மைஇல் அக்கணி கொன்றையன்
வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்
போகின்ற சீவன் புகுந்துட லாய்உளன்
ஆகின்ற தன்மைசெய் ஆண்டகை யானே. 15

---

**391. தெளிவுரை :-** *சிவன் முதல்வனாய் நின்று, உடலோடு கூடிய உயிர்களைப் படைக்கும்பொழுது, முதலில் அவைகட்கு வினைகளை வரையறுத்துக் கூட்டுவான். பின் அவற்றை அவை நுகர்தற்கு உடலுக்கும் துணையாய் நின்று அதனை இயக்குவான். ஏனெனில், அவன் அவரவர் செய்திக்குத் தக்க பயனை அவரவர்க்குத் தப்பாமல் ஊட்டுவித்து நிற்கும் நடுவுநிலைமையனாதலின்.*

*குறிப்புரை :-* *'உயிர்களைப் படைத்தல் என்பது, அவைகளை உடலொடு பொருந்தச் செய்தலாம்' என்பது விளக்குதற்கு. "ஒன்றுயிர்" என்றார். அளவை - கால வரையறை. "துயர்" என்றது அதற்கு ஏதுவான வினைகளை. 'உயிர்ப்பிப்பான்' என்னாது 'உயிர்ப்பான்' என்றார். அவையே தானாய் நிற்கும் ஒற்றுமை தோன்றற்கு. வினைகளைக் கூட்டுவிப்பவன் முதல்வனாயின், நல்வினை ஒன்றையே கூட்டுவியாது, தீ வினையையும் கூட்டுவித்தல் என்னை என்னும் வினாவை விடுத்தற்கு "நடுவு நின்றான்" என்றார். எனவே, படைப்பு ஒருபடித்தாகாது பலபடித்தாய்த் தோன்றுதற்கும். உலகில் நன்மையோடு தீமையும் உளதாதற்கும் காரணங்கூறியதாயிற்று.*

*இதனால், சிவபெருமான் உலகத்தைத் தொழிற்படுத்தும்வழி நெறியின்றித் தொழிற்படுத்தாது, உயிர்களின் வினைக்கேற்பவே தொழிற்படுத்துவன் என்பது கூறப்பட்டது.*

**392. தெளிவுரை :-** *பிறக்கும் தன்மை இல்லாத சிவபெருமான், உயிர் ஓர் உடலை எடுக்கின்ற காலத்து அதற்கு அதனைக் கொடுக்கின்ற தலைவனும், பின்பு அவ்வுயிர் அவ்வுடலை விட்டு நீங்குகின்ற காலத்தில் பின்னர்ச் சென்று புகும் மற்றோர் உடலையும் அதற்குக் கொடுத்து, அங்கும் அதற்குத் துணையாய் நிற்பவனுமாவன்.*

*குறிப்புரை :-* *எனவே, 'உயிர்களுக்கு வினைக்கீடாகத் தரப்படும்*

**393.** ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்
இருவர் விளையாட்டும் எல்லாம் விளைக்கும்
பருவங்கள் தோறும் பயன்பல வான
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே. **16**

---

*பிறப்பு ஒன்றன்று; 'பல' என்றவாறு. அக்கு - எலும்பு. செம்பொனின் மேலணி மேனியன் - செவ்விய பொன்னின்மேலே உள்ள அழகு (நிறம்) போலும் மேனியன். 'புகுந்த' என்பதன் ஈறு தொகுத்தல்.*

*இதனால், சிவபெருமான் எண்ணற்ற உயிர்களுள் ஒவ்வொன்றற்கும் எண்ணற்ற உடலைக் கொடுத்துக் கூட்டியும், நிறுத்தியும், பிரித்தும் நடத்தும் முறைமை கூறப்பட்டது.*

**393.** *தெளிவுரை :- ஒருவனும் ஒருத்தியுமான இருவர் (சிவனும், சத்தியும்) விளையாடலை மேற்கொண்டுள்ளார்கள். அவ்விளையாடல் அவர்கட்குப் பொழுது போக்காகாது, எண்ணிலா உயிர்கட்கு எண்ணிலாப் பயனை விளைப்பது. அப்பயனும் உயிர்களின் பக்குவ நிலைதோறும் அதற்கேற்ப வேறு வேறாய் விளைவனவாம், உயிர்கள் வீடுபெறின், அவ்வொருவன் ஒருத்தியரது உலகத்தின் தொழிற்பாடு முற்றுப்பெறும்.*

*குறிப்புரை :- 'சிவம், சத்திகட்கு உலகை மேற்கூறியவாறு பலபடச் செயற்படுத்தல் பெருஞ்செயலாய்த் துன்பம் விளைப்பதன்று; நினைத்த அளவிலே எளிதில் நிகழ்வனவாம்' என்றற்கு "விளையாடல் உற்றார்" என்றும், 'விளையாட்டு' என்பதேபற்றி, 'வீண்தொழில்' என்றாதல், 'தம் நலம் கருதியது' என்றதால் கருதலாகாது என்றற்கு, 'எல்லாம் விளைக்கும்' என்றும், 'எல்லாம்' எனப் பொதுப்படக் கூறினும், எல்லாப் பயனும், எல்லார்க்கும், எப்பொழுதும் ஆவனவல்ல என்றற்கு, "பருவங்கள் தோறும் ஆன" என்றும், 'படைப்பின் குறிக்கோள் உயிர்களை வீடடைவித்தலே' என்றற்கு, "திரு ஒன்றின் செகம் செய்கை முற்றும்" என்றும் கூறினார்.*

*"காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" (தி.8 திருவெம்பாவை, 12) என்றாற் போல, இறைவன் உலகை நடாத்துதலை 'விளையாட்டு' என்றல் வழக்காதலும், "ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின் - உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்" (தி.8 திருவெம்பாவை, 11) என்றாற்போல, அவனது செயல் உயிர்களை உய்வித்தற் பொருட்டு நிகழ்வதாதலும் அறிந்துகொள்க. "போகமும்*

**394.** புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முடிக் காகிநின் றாரே. **17**

---

*திருவும் புணர்ப்பானை" (தி.7 ப.59 பா.1) என்பதனால் 'திருவாவது வீடுபேறு' என்பது இனிது பெறப்படும். திரு - நன்மை. வீடுபேறே முடிந்த நன்மையாதல் அறிக. உயிர்கள் வீடு பெற்ற பின்பும் அவ்வின்பத்தை நுகர்தல் முதல்வனது அருட் செயலின்றி அமையாது என்பதனை, "இன்பம் கொடுத்தல் இறை" (உண்மை விளக்கம், 50) எனவும்,*

*மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்*
*சாய அமுக்கிஅருள் தானெடுத்து - நேயமுடன்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்*
*தானெந்தை யார்பரதந் தான். - உண்மை விளக்கம், 36*

*எனவும் கூறுமாற்றால் அறிந்து கொள்க. இக்கருத்துப் பற்றியே, "முதல்வன் செயல் முற்றுப்பெறும்" என்னாது "செகத்தின் செய்கை முற்றுப்பெறும்" என்றார் என்க. இக்கருத்துணராதல், 'உயிர்கள் வீடு பெற்ற பின்னை முதல்வர்க்குச் செயல் இல்லை போலும்' என மயங்குப.*

*இதனால், படைப்பு முதலியவைபற்றி அறியற்பாலன சில கூறப்பட்டன.*

***394. தெளிவுரை :-** 'உருத்திரன், மால், அயன்' என்னும் மூவரும் தம் தம் எல்லையளவும் உயிர்க்குயிராய் நிறைந்து நின்று அங்குள்ள நிலைகளையெல்லாம் நன்குணர்வர். ஆயினும், அவரெல்லாம் எங்கும் அவ்வாறு நின்று உணரும் சிவபெருமானாகிய தலைவனுக்கு உரிய அடியரேயாவர்.*

***குறிப்புரை :-** 'ஆகவே, அவனை அடைதலே வீடுபெறுதலாம்; ஏனையோரை அடைதல் யாவும் பந்தமே' என்பது குறிப்பெச்சம். எனவே, சிவபெருமான் தனது படைத்தல் முதலிய தொழில்களின் பயனாக உயிர்கட்கு முடிவில் தன்னையே வழங்கியருள்வான் என்பது போந்தது. புவனாபதி - உலக காரணியாகிய உமைக்குத் தலைவன். முடி - தலைமை. அது தலைமையை உடையான் மேல் நின்றது.*

395. ஆணவச் சத்தியுள் ஆம்அதில் ஐவருங்
காணியர் காரண ஈசர் கடைமுறை
பேணிய ஐந்தொழி லால்விந்து விற்பிறந்
தாணவம் நீங்கா தவரென லாகுமே. 18

---

*இதனால், முடிந்த வீடுபேறு (பரமுத்தி) ஆவது இது என்பது கூறப்பட்டது.*

395. ***தெளிவுரை :-*** *ஆணவல மலத் தொடக்கினுள் அகப்பட்டு நிற்கின்ற அந்நிலையில், அசுத்த மாயை பிரகிருதி மாயைகளில் நிற்கின்ற அயன், மால், உருத்திரன், சீகண்டர், அனந்தர் என்னும் ஐவரும் பிறரால் கண்காணிக்கப்படும் காரியக் கடவுளரே. இனிக் காரணக் கடவுளராவர், மேற்சொல்லிய அந்நிலைக்குப் பின்னர்த் தாம் முன்னர் மேற்கொண்டிருந்த அத்தொழில்களாலே பக்குவம் முதிரப் பெற்று ஆணவம் நீங்கி அதன் வாதனை மாத்திரம் உடையராய்ச் சுத்த மாயையில் உடம்பு முதலியவற்றைப் பெற்று நிற்பவர்களே.*

***குறிப்புரை :-*** *அவர், 'அணுபட்ச அயன், மால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன்' என்னும் ஐவர் என்க. அதில் - அந்நிலையில். காணியர் - காணப்பட்டவர். 'காரியர்' என்றேயும் ஓதுப. 'கடைமுறை' என்றது, 'பின்' என்றவாறு. பின்னர், "விந்துவிற் பிறந்து" என்பதனால், முன்னர் மோகினி மான்களின் நிற்றலைக் கூறுதல் கருத்தாதல் அறிக. ''ஐந்தொழில்'' என்றதற்கு, காரியர் ஐவருள் சீகண்டரை மறைப்பவராகவும், அனந்தரை அருள்பவராகவும் கொள்க. 'செலுத்துவோர் காரணர்' எனவும், 'செலுத்தப்படுவோர் காரியர்' எனவும் உணர்க. "பிறந்து நீங்காதவர்" என்றாராயினும், 'நீங்காது பிறந்தவர்' என்றலே கருத்து என்க. நீங்காமை, பற்றறக் கழியாமை, 'காரியர் பக்குவம் முதிரப் பெற்றபின் ஞானத்தை அடைந்து வீடுபெறுவர்' என்பதும், 'காரணர் ஞானம் முதிரப் பெற்று வாதனை நீங்கியபின் வீடு பெறுவர்' என்பதும் உய்த்துணர வைத்தமை காண்க. அனந்தர் சுத்தமாயையில் உள்ளவராயினும், தூல வாசனை உடையராய் அசுத்த மாயையைத் தொழிற்படுத்துதல் பற்றி ஆணவத் தொடக்குடையவராக ஓதினார்.*

*இதனால், மேல், 'பந்த நிலையினர்' எனக் குறிக்கப்பட்டவரது பந்த நிலைகள் வகுத்துக் கூறப்பட்டன.*

**396.** உற்றமுப் பாலொன்று மாயாள் உதயமாம்
மற்றைய மூன்றும்மா மாயோ தயம்விந்து
பெற்றவந் நாதம் பரையிற் பிறத்தலால்
துற்ற பரசிவன் தொல்விளை யாட்டிதே. **19**

**397.** ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய ஈசன் அரன்மால் பிரமனாம்
ஆகாயம் பூமிமுன் காண அளித்தலே. **20**

---

**396. *தெளிவுரை :-*** *நிலமுதல் மாயை ஈறாக உள்ள முப்பத்தொரு தத்துவங்களும் அசுத்த மாயையின் காரியங்கள். அதற்கு மேல் உள்ள "சுத்த வித்தை ஈசுரம், சாதாக்கியம்" என்னும் மூன்றும் 'மகாமாயை' எனப்படும் சுத்த மாயையின் காரியங்கள் சாதாக்கியத்திற்குமேல் உள்ளது விந்து. அவ்விந்துவைப் பெற்ற அந் 'நாதம்' என்னும் தத்துவம், பரவிந்துவிற் பிறத்தலால், யாவும், எல்லாத் தத்துவங்களையும் தனது உடைமையாக உடைய பராசத்தியோடு கூடிய பரமசிவனது பழைய திருவிளையாடலேயாம்.*

***குறிப்புரை :-*** *இங்குக் கூறிய தத்துவங்கள் இவை என்பதை மேலே காண்க. (தி.10 பா.124).*

*இதனால், அனைத்தையும் தனது விபூதியாக (சிறந்த உடைமையாக) உடையவன் பரமசிவன் என்பது வகுத்துக் கூறப்பட்டது.*

**397. *தெளிவுரை :-*** *'வானம், காற்று, தீ, நீர், நிலம்' என்னும் பூதங்கள் ஐந்தற்கும் முறையே, 'சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன்' என்னும் ஐவரும் தலைவராவர் என்று உணர். இவர் அனைவரும், யாதொரு பொருளையும் விட்டு நீங்காது நிறைந்து நிற்கும் சிவசத்தி பதிய ஒருங்குதோன்றியவாரே. இவருள் மகேசுரன் முதலிய நால்வரும் உருவம் உடையவர். (சதாசிவன் அருவுருவினன்) இவர் ஐவர் தொழிலும், மேற்கூறிய ஆகாயம் முதல் பூமி ஈறான பூதங்களைக் காரியப்படுத்தலாம்.*

*போகாத சத்தி - நித்தியமாகிய மாயாசத்தி. சதாசிவன் சத்தி மனோன்மணி. மகேசுவரன் சத்தி கௌரி. உருத்திரன் சத்தி உமை. மால் சத்தி லட்சுமி. அயன் சத்தி சரஸ்வதி. சதாசிவனாதியர் தோன்றுமுறையாவது ஞானமும் கிரியையும் சமமாய் ஒத்த சதாசிவர்,*

**398.** அளியார் முக்கோண வயிந்தவந் தன்னில்
அளியார் திரிபுரை யாம் அவள் தானே
அளியார் சதாசிவ மாகி அமைவாள்
அளியார் கருமங்கள் ஐந்தும்செய் வாளே. **21**

---

*அவரிலிருந்து மகேசர், அவரிலிருந்து உருத்திரர், அவரிலிருந்து திருமால், அவரிலிருந்து அயன் எனத் தோன்றுதல், இவர்கள் ஐவருள் மகேசர், உருத்திரன் முதலியோர் இறைவனுடைய நவந்தரு பேதங்களில் சகள வடிவம் நான்கனுட்பட்டு, சுத்த வித்தியா தத்துவங்களில் வைகும் காரணேசுவரர்காளவர், சகலரில் தவ விசேடத்தால் அதிகாரம் பெற்ற காரியேசுவரர்களல்லர் என்பது தெளிக.*

*மாகாய ஈசன் - மகேசன், மா கு ஆய ஈசன். கு சாரியை, தவிர்வழி வந்தது, மா ஆய ஈசன் - மகேசன், அரன்.*

***குறிப்புரை :-*** *'ஆகாயமாதிக்குச் சதாசிவன் ஆதியோர் தலைவர்' எனத் தொகுத்தலாயும், சொல்லெச்சமாயும் நின்ற சொற்களை விரித்துரைத்துக்கொள்க. என் - என்று உணர். "உட்போத" என்பது, "உட்போந்து" எனத் திரிந்து நின்றது. மா காயம் - தூலவடிவம்; உருவம். "அளித்தல்" என்றது 'ஆளுதல்' என்னும் பொருட்டாய் நின்றது. 'அளித்தலே தொழில்' எனச் சொல்லெச்சம் வருவித்து முடிக்க.*

*இதனால், மேல், தத்துவங்களை, 'பரமசிவனது விபூதி' என்று கூறியபின், அத்தத்துவத் தலைவர்களும் அவனது விபூதியேயாதல் கூறப்பட்டது.*

**398. *தெளிவுரை :-*** *சுத்தமாயையின் காரியமாகிய பரவிந்து, அபரநாதம், அபரவிந்து என்னும் மூன்று நிலைக்களமாகத் தோன்றும் சாதாக்கிய தத்துவத்தினைத் தோற்றுவிக்கும். அருள் காரணமாக, 'திரிபுரை' என்னும் சத்தி தோன்றுவாள். அவளே அத்தத்துவத்தின் தலைவனாகிய சதாசிவனோடு ஒற்றுமைப்பட்டு நின்று, அருளல் முதலிய ஐந்தொழிலையும் செய்வாள்.*

***குறிப்புரை :-*** *இவளே மனோன்மனி என்பதனை அடுத்து வரும் திருமந்திரத்துள் அறிக. இவளது சிறப்பை நாயனார் நாலாந் தந்திரத்துள் விரித்தோதுவார். அளி - அருள்.*

*இதனால், மேற்கூறிய தத்துவங்களும், தத்துவத் தலைவர்களும் பரமசிவனது விபூதியாதற்குக் காரணம் தோன்றுதற் பொருட்டு,*

**399.** வாரணி கொங்கை மனோன்மனி மங்கலை
காரணி காரிய மாகக் கலந்தவள்
வாரணி ஆரணி வானவர் மோகினி
பூரணி போதாதி போதமு மாமே. **22**

**400.** நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கும் அரன்திரு மாலவன்
மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராக இசைந்திருந் தானே. **23**

---

*அவனது சத்தியே எல்லாம் செய்யும் முறைமை கூறப்பட்டது.*

**399. தெளிவுரை :-** *அத்திரிபுரையே 'மனோன்மனி' எனப்படுவாள். அவளே நித்திய சுமங்கலை. எல்லாவற்றிற்கும் காரணி. அதுவேயன்றிக் காரியப்பட்ட பொருள்களிலும் கலந்து நிற்பாள். 'உமை, வாணி, திருமகள், மகேசுவரி' என்றும் பாகுபட்டு நிற்பாள். உயிர்கட்குச் சுட்டறிவையும், சுட்டிறந்த வியாபக அறிவையம் தருவாள்.*

***குறிப்புரை :-*** *'வாரணி - யானைத் தோலைப் போர்த்தவள்' என உருத்திரனது சத்தியைக் குறித்தது. ஆரணி - வேதம் ஓதுபவள். வானவர் மோகினி - தேவர்களை மாயையால் மயக்குபவள். பூரணி - நிறைந்த தலைமை உடையவள். செய்யுள் நோக்கி இவர்களை முறை பிறழ வைத்தார்.*

**400. தெளிவுரை :-** *மகேசுவரி முதலாகப் பாகுபட்ட அச்சத்தியே தானாய் நிறைந்த மகேசுரனே, உருத்திரன், திருமால், அயன் என்பவரிடத்தும் சென்று உலாவி அவர்களேயாயிருந்து அவர்களது தொழில்களை இயற்றுவிப்பன்.*

***குறிப்புரை :-*** *என்றது, மகேசுரன் முதலாகக் கீழுள்ள நிலைகளே அதிகார நிலை எனக் கூறியவாறு. சதாசிவ நிலை, 'போக நிலை' எனவும், அதற்குமேல் உள்ள நிலைகள் இலய நிலை எனவும் உணர்க. இறைவன் உலகத்தைத் தொழிற்படுத்தும் பொழுது இவ்வாறு, 'இலயம், போகம், அதிகாரம்' என மூன்று நிலைகளில் நின்று தொழிற்படுத்துவன் என்பது முதல் திருமந்திரத்தே குறிக்கப்பட்டது. இதனை இங்குக் கூறியது, மேற்கூறியவற்றால், 'சத்தியே எல்லாம் செய்யச் சிவன் வாளாவிருப்பான் போலும்' எனவும், 'அதனால்*

401. ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளித்தான்
ஒருவனு மேஉல கேழும் துடைத்தான்
ஒருவனு மேஉல கோடுயிர் தானே. 24

402. செந்தா மரைவண்ணன் தீவண்ணன் எம்இறை
மைந்தார் முகில்வண்ணன் மாயஞ்செய் பாசத்தும்
கொந்தார் குழலியர்க் கூடிய கூட்டத்தும்
ஐந்தார் பிறவி அறுத்துநின் றானே. 25

---

*அவ்விருவரும் வேறு வேறு நிற்பவரே போலும்' எனவும் ஐயம் நிகழாது, 'சத்தியும் சிவனும் யாண்டும் உடனாகியே நிற்பர்' என்பதும், 'அதனால் சத்தி செய்வனவெல்லாம் சிவன் செய்வனவே' என்பதும் உணர்த்தற்பொருட்டாம்.*

*இதனால், மேலது பற்றி எழுவதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

401. ***தெளிவுரை :-*** *முன்னை மந்திரத்திற் கூறியவாற்றால், எல்லா உலகங்களையும் படைத்துக் காத்து அழிப்பவனும், அறிவில் பொருள், அறிவுடைப் பொருள் ஆகிய அனைத்திலும் நீக்கம் அறநிறைந்து இருப்பவனும் ஆகிய முதற்கடவுள் ஒருவனே என்பது தெற்றென விளங்கும்.*

***குறிப்புரை :-*** *'அவ் வொருவன் சிவபெருமானே' என்பது கருத்து.*

*இதனால், சிவபெருமானது முழுமுதற் றன்மை வலியுறுத்திக் கூறப்பட்டது.*

402. ***தெளிவுரை :-*** *எங்கள் இறைவனாகிய சிவபெருமானே செந்தாமரை மலரில் உள்ள அழகிய பிரம தேவனும், மேகம்போலும் நிறத்தையுடைய திருமாலும், நெருப்புப் போலும் நிறத்தையுடைய உருத்திரனுமாவான். ஆதலின், அவனே மாயை என்னும் முதற் காரணத்தினாலும் ஐந்து கூறாய்ப் பொருந்தும் உடம்புகளைத் தோற்று வித்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *முதலில் உள்ள வண்ணம் - அழகு; பொன்னிறம் இறுதியிற் கூறத்தக்க தீவண்ணனைச் செய்யுள் நோக்கி இடை வைத்தார். "எம் இறை" என்றதனை முதலில் வைத்துப் பிரிநிலை ஏகாரம் விரிக்க. "செந்தாமரை வண்ணன்" முதலிய மூன்றும் "எம் இறையே" என்னும் எழுவாய்க்குப் பயனிலைகளாய் நின்றன. "முகில்*

**403.** தேடுந் திசைஎட்டுஞ் சீவன் உடல்உயிர்
கூடும் பிறவி குணஞ்செய்த மாநந்தி
ஊடும் அவர்தம துள்ளத்துள் ளேநின்று
நாடும் வழக்கமும் நான் அறிந் தேனே. **26**

---

*வண்ணன்" என்பதன் பின், 'அவனே' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. 'ஆடவர்' என்பது சொல்லெச்சம்.*

*உடம்பின் ஐந்து கூறுகளாவன, ஐங்கோசங்கள். அவை, 'அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம்' என்பன. இவற்றின், விளக்கம் பின்னர்க் காணப்படும். இவற்றுள் அன்னமய கோசம் பிரம தேவனது ஆளுகைக்கும், பிராணமய கோசம் மாயோனது ஆளுகைக்கும், மனோமய கோசம் சீகண்ட உருத்திரரது ஆளுகைக்கும் ஏனை இரு கோசங்களும் அனந்த தேவரது ஆளுகைக்கும் உட்பட்டு இயங்குவனவாம். இவற்றுள், முதல் மூன்றும் பிரகிருதி மாயையின் காரியங்களும், ஏனை இரண்டும் அகத்த மாயையின் காரியங்களுமாகும்.*

*இதனால், படைப்பு வேறுபாடு ஒருவாறு தொகுத்துக் கூறப்பட்டது.*

*இவ்வாறாகவே, 'படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் சிவபெருமான் சுத்தமாயையில் தான் நேரே செய்வன்' என்பதும், 'அசுத்த மாயையில் அனந்த தேவரை வாயிலாகக் கொண்டு (அதிட்டித்து நின்று) செய்பவன்' என்பதும், 'பிரகிருதி மாயையில் அனந்த தேவர் வழியாகச் சீகண்ட உருத்திரனை வாயிலாகக் கொண்டு செய்வன்' என்பது போதரல் காண்க.*

*இதனால், சிவபெருமான் மும்மாயையிலும் படைத்தல் முதலியவற்றைச் செய்யுமாறு கூறப்பட்டது.*

**403. *தெளிவுரை :- பல்கோடி அண்டங்களிலும் தனக்காவதொரு புக்கிலை (நிலையான வீட்டைத்) தேடி அலைகின்ற சீவான்மாவின் பொருட்டு, உடலும், உயிரும் கன்மத்தால் தொடர்பு கொள்கின்ற பல பிறவிகளை அவ்வவ்வுயிர்க்கு ஏற்றவாறு மேற்கூறிய வாற்றால் மாயை யினின்றும் தோற்றுவிக்கின்ற பரமான்மாவாகிய சிவபெருமான் தான் தனது திவ்வியாகமங்களுள் கூறியுள்ள அப்படைப்பு முறைகளைத் தெளியமாட்டாது அவற்றொடு மாறுபடுகின்றவரது உள்ளத்துள்ளே***

*நின்று, அவரது அறிவோடே ஒத்துக்கூறிய பல சமயக் கொள்கை களையும் யான் அறிவேன்.*

***குறிப்புரை :-*** *அக்கொள்கைகளாவன, 'பூதங்கள் நான்கே; அவை தம்முட் கூடுதல் பிரிதல்களால் உலகம் தோன்றும்; அழியும் அதனால், அச்செயல்கட்கு முதல்வன் ஒருவன் வேண்டுவதில்லை' என்பதும், (இவ்வாறு கூறுவோர் உலகாயத மதத்தினர்) 'வித்தின் கேட்டில் அங்குரம் (முளை) போல எல்லாப்பொருளும் ஒன்றன் கேட்டில் மற்றொன்றன் தோற்றமாக ஒரு கணத்தில் தோன்றி, மறுகணத்தில் அழிந்து செல்லும், இத்தொடர்ச்சி பொருட்பெற்றியானே நிகழும்; இதற்கொரு முதல்வன் வேண்டுவது இல்லை' என்பதும், (இவ்வாறு கூறுவோர் புத்த மதத்தினர்) 'உளதாதல், இலதாதல் என்னும் இரண்டு தன்மையும் ஒருங்கே உடைமையால் இத்தன்மைத்தென வரையறுத்துச் சொல்லொணாத இவ்வுலகம் உளதாதல் தன்மையால் தோன்றி, இலதாதல் தன்மையால் அழிதல் இயல்பாதலின், இதற்கொரு முதல்வன் வேண்டுவது இல்லை' என்பதும், (இவ்வாறு கூறுவோர் சமண மதத்தினர்) 'பிரகிருதிக்கு மேல் மாயை இல்லை; அதனால், அதன் காரியமாகிய இருபத்து நான்கிற்கு மேல் தத்துவம் இல்லை' என்பதும், (இவ்வாறு கூறுவோர் ஏகான்மவாதிகள், யோகர், சாங்கியர் முதலிய பலருமாவார். இவருள் ஏகான்மவாதிகள் மாயை 'அநிர்வசனம் - இன்னதெனச் சொல்லொணாதது, எனக்கூறி, அதனுள் சக சீவ பரங்கள் விவர்த்தனமாய் - மயக்கக் காட்சியாய் - தோன்றும்' எனவும், ஏனையோர், 'மாயையை உள்பொருள்' எனவும், 'அதனால், அதன் காரியங்களும் உள்பொருளே' எனவும், கூறுவர். சாங்கியருள் ஒரு சாரார், 'மாயை தானே தனது காரியத்தைத் தோற்றுவிக்கும்; இறைவன் வேண்டா' என்பர்.) இன்னோரன்ன பலவுமாம். மேல் "பருவங்கள் தோறும் பயன் பலவாகும்" (தி.10 பா.393) என்று அருளிச் செய்தபடி, சிவபெருமான் அவ்வவ்வுயிர்களின் பரிபாகத்திற்கேற்ப அவற்றின் வழி நின்று துணைபுரிவனாதலின், அதனை, 'அவர் தமதுள்ளத்துள் நாடும் வழக்கம்' என்றார். வழக்கம் - மரபு; கொள்கை.*

*'திசை எட்டும் தேடும் சீவன்' என மாற்றி, 'சீவனுக்கு' என நான்காவது விரிக்க. குணம் - பிரகிருதி.*

*இதனால், 'பிறநெறிகளுட் கூறப்படும் முறைமைகள் பலவும் பூர்வபக்கம்' என்பது கூறும் முகத்தால், 'சிவநெறியுட் கூறப்படும் முறைமையே சித்தாந்தம்' என மேலன பலவும் வலியுறுத்தப்பட்டன.*

**404. தெளிவுரை :-** *'படைத்தல், காத்தல், அழித்தல்' என்னும் தொழில்களை இயற்றுவோரும், அறிவுடைப் பொருள், அறிவில்*

**404.** ஓராய மேஉல கேழும் படைப்பதும்
ஓராய மேஉல கேழும் அளிப்பதும்
ஓராய மேஉல கேழும் துடைப்பதும்
ஓராய மேஉல கோடுயிர் தானே. **27**

---

*பொருள் என்பவற்றில் தங்கி நின்று அவற்றை இயற்றுவோரும் பல்கோடி தேவர்களாகச் சொல்லப்படினும், அவர் யாவரும் சிவபெருமான் ஒருவனது ஆணையைத் தாங்கி அவன் குறிப்பின்வழி நின்று இயங்கும் ஒரு குழாத்தினரே யாவர்.*

***குறிப்புரை :-*** *'வேத சிவாகமங்களில் பூதம் முதலிய தத்துவங் கட்கும், பல்வேறு பிறவிகளில் நிற்கும் உயிர்கட்கும், அவற்றது உடம்பில் அமைந்த பல்வேறு உறுப்புக்களுக்கும், அவ்வுடம்புகட்கு நிலைக்களமாய் 'அண்டம்' எனவும், 'புவனம்' எனவும் பெயர் பெற்று நிற்கும் இடங்கட்கும் தலைமை தாங்கி அவ்வவற்றை ஏற்ற பெற்றியான் இயக்கும் கடவுளர் எண்ணிறந்தோர் எனக் கூறி, அவர்க்கு உரிய உருவம், பெயர், தொழில் முதலியனவும், இடம் பொருள் ஏவல்களும், அவரை வழிபடும் முறைகளும் பலபட எடுத்துச் சொல்லப்பட்டாலும், அவர் பலரும் தாம் தாம் தம் இச்சைவழி நின்று செயல்புரிவோரல்லர்; சிவபெருமானது அடியவர் குழாங்களே எனத் தெளிவித்தவாறு, 'அமைப்பால் வேறுபட்ட பல கூட்டமாயினும், ஒருவனது பணி யாளராம் முறைமையால் ஒரு கூட்டமே' என்றற்கு, "ஓர் ஆயமே" என்றார். ஆயம் - கூட்டம். சிவத்தின் கூறு உயிரும், சத்தியின் கூறு உடலும் ஆதலின் உடலோடு உயிர் தானே என்றருளினார். பிருங்கி முனிவர் வரலாற்றைக் காண்க.*

*இதனால், **அனேகேசுர வாதம்** பற்றி எழும் ஐயம் பொது வகையான் அகற்றி, மேலே வலியுறுத்தப்பட்டது. மேல் "ஒருவனுமே" (தி.10 பா.401) என்ற மந்திரம் ஒருவனே பலராய் நின்று காரியம் செய்தல் கூறியது. இது பலரும் ஒருவனது ஏவலரே எனக் கூறியது. இவை தம்முள் வேற்றுமை.*

**405.** ***தெளிவுரை :-*** *தலைவனாகிய சிவபெருமான் ஒருவனும், அவனது அருட்கு உரியராயினமையின் நல்லோராகிய 'மால், அயன்' என்னும் இருவரும் ஆக மூவரும் தீயது, நல்லதுமாகிய முக்குணங் களைக் கூட்டிக் குழைத்து உலகை ஆக்குகின்றனர். எனினும், "அடியேங்கட்கு இடும் பணியாது" என்று விண்ணப்பித்து அவற்றைச்*

405. நாதன் ஒருவனும் நல்ல இருவரும்
கோது குலத்தொடுங் கூட்டிக் குழைத்தனர்
ஏது பணியென் றிசையும் இருவருக்
காதி இவனே அருளுகின் றானே. 28

---

*செய்ய இசைந்து நிற்கும் நல்ல இருவருக்கும் நாதனாகிய சிவபெருமானே அவர் செய்யத்தக்க பணியை அருளிச் செய்கின்றான்.*

***குறிப்புரை :-*** *கோது - குற்றம்; தீமை. குலம் - நன்மை. இராசதமும், தாமதமும், "கோது" எனப்பட்டன. சாத்துவிகம், "குலம்" எனப்பட்டது. 'ஏனைத் தேவர் பலரும் தலைவராகாதொழியினும், புராணங்களிலும், பிறவிடத்தும் தலைவராகச் சிறந்தெடுத்துப் பேசப்படுகின்ற மூவர் தலைவராகாமை இல்லை போலும்' எனப் பௌராணிக மதம் பற்றி மீளவும் எழும் மலைவை நீக்கியவாறு.*

*"முக்குணத்தால் உலகை ஆக்குகின்றனர்" என்ற குறிப்பால் 'குணாதீதனாகிய சிவன் முதல்வனாதலன்றிக் குணவயப்பட்ட ஏனையோர் முதல்வராமாறு இல்லை' என வழிவகை கூறித் தெளிவித்தவாறாயிற்று. உருத்திரனைச் சிவபெருமானின் மேம்பட்ட வனாக மயங்கிக் கூறுவார் இன்மையின், அழித்தல் தொழிலைப் பேறாக உடைய உருத்திரனைப் பற்றி விளக்கம் கூறிற்றிலர்.*

*இதனால், தலைமை பற்றி, 'பௌராணிகம், ஐரணியகருப்பம், பாஞ்சராத்திரம்' என்னும் மதம் பற்றி எழும் ஐயத்தைச் சிறப்பு வகையான் அகற்றி மேலது வலியுறுத்தப்பட்டது.*

*சிவமும், சதாசிவமும், மகேச்சுரனும் சுத்தம் அசுத்தமாகிய மாயைகளைக் கலக்கினர், அப்போது, எங்களுக்குரிய பணி ஏது என்று வினவும் அரி அயற்குச் சிவமே அவரவர்க்குரிய தொழில்களை அருளிச் செய்கின்றான் என்றவாறு.*

*நாதன் ஒருவன் - சிவன், நல்ல இருவர் - ஞான சத்தியும், கிரியா சத்தியுமாகிய தாதான்மிய சத்திகள் இருவர், ஆக மூவரும், கோது குலத்தோடும் கூட்டி - அசுத்தமாயா கூட்டமாகிய தனுவாதிகளோடு கூடச் செய்து, குழைத்தனர் - பரிபாகப்படுத்தினர் என்பாரும் உளர், நல்ல இருவர் என்பதற்கு அவ்விருவரும் எனப் பொருள் கோடல் பொருந்தாது என்பதைச் சிவஞான மாபாடியத்து முதற்காரண முடிபின் இறுதிப் பகுதியில் தெளிக.*

**406. தெளிவுரை :- 'எண்பத்துநான்கு நூறாயிரம்'** *எனச்*

**406.** அப்பரி செண்பத்து நான்குநூ றாயிரம்
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கும்
பொய்ப்பரி செய்திப் புகலும் மனிதர்கட்
கிப்பரி சேஇருள் மூடிநின் றானே. **29**

---

*சொல்லப்படும் வேறுபாடுகளை உடைய பிறவிகள் பலவும் மேற்கூறிய முறையிலே உடம்புகளாய் உருவெடுத்து வளர்ந்து, அவைதாமே உயிர் போல இயங்கிநிற்கும். அதனை அறியாது பொய்ச்சமயங்களைப் பொருந்தி நின்று உலகத் தோற்றத்தை மேற்காட்டியவாறு பலபடத் தம்முள் முரணிக் கூறுவோர்க்குச் சிவபெருமான் அவரது அறிவை இன்று உள்ளவாறே அவர்கள் அறியாமையால் மூடி வைப்பவனாகின்றான்.*

***குறிப்புரை :- "உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனிபேதம்"** (தி.1 ப.132 பா.3) என்றற்றொடக்கத்தனவாகப் பலவிடத்தும் பிறப்பு வகை வேறுபாடுகள் எண்பத்துநான்கு நூறாயிரம் என்பது கூறப்படுதல் காண்க. இவை அனைத்தும், 'அண்டசம், சுவேதசம், உற்பீசம், சராயுசம்' என்னும் நால்வகைத் தோற்றமும், 'தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்' என்னும் எழுவகைப் பிறப்புமாய் அமைவனவாம். அண்டசம் - முட்டையில் பிறப்பன. சுவேதசம் - வியர்வையில் (அழுக்கில்) பிறப்பன. உற்பீசம் - வித்து, வேர், கிழங்கு முதலியவைகளைப் பிளந்து கொண்டு மேல்நோக்கி முளைப்பன. சராயுசம் - கருப்பப் பைக்குள் உரு நிரம்பிப் பிறப்பன. எண்பத்து நான்கு நூறாயிரமும் எழுவகைத் தோற்றத்துட் பொருந்துமாறு:-*

*தோற்றிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில்*
*துதைந்துவரும் உற்பீசம் சராயுசங்கள் நான்கில்*
*ஊற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தாகும்;*
*ஊர்வபதி னைந்தமரர் பதினொன்றோ; டுலவா*
*மாற்றருநீர் உறைவன, நற் பறவைகள்நாற் காலி*
*மன்னியிடும் பப்பத்து; மானுடர்ஒன் பதுமாம்;*
*ஏற்றியொரு தொகையதனில் இயம்புவர்கள் யோனி*
*எண்பத்து நான்குநூ றாயிரமென் றெடுத்தே.*

*- சிவப்பிரகாசம் - 47*

*என்பதனால் விளங்கும். இதனை,*

*ஊர்வ பதினொன்றாம் ஒன்பது மானுடம்*

**407.** ஆதித்தன் சந்திரன் அங்கிஎண் பாலர்கள்
போதித்த வானொளி பொங்கிய நீர்புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிகள்
ஓதுற்ற மாயையின் விந்துவின் உற்றதே. **30**

---

*நீர்பறவை நாற்கால்ஓர் பப்பத்துச் - சீரிய*
*பந்தமாந் தேவர் பதினால் அயன்படைத்த*
*அந்தமில்சீர்த் தாவரம்நா லைந்து.*

*- திருக்குறள், 62, பரிமேலழகர் உரை மேற்கோள்*

*எனச் சிறிது வேறுபடவும் கூறுவர். எவ்வாறாயினும், 'எண்பத்து நான்கு நூறாயிரம்' என்பதில் மாறுபாடில்லை.*

*'இத்துணை வேறுபட்ட பிறவிகளில் ஏனையவற்றிற் செல்லாது மானுடப் பிறப்பினுள் வருதல் பெரிதும் அரிது' என்பதை,*

*அண்டசம் சுவேத சங்கள் உற்பிச்சம் சராயு சத்தோ*
*டெண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயிரத்தால்*
*உண்டுபல் யோனி; எல்லாம் ஒழித்துமா னுடத்துதித்தல்*
*கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரியங்காண்.*

*எனச் சிவஞான சித்தி (சூ.2.89) நூல் கூறிற்று.*

*"மூடி" என்பது பெயர். "மூடியாய்" என ஆக்கச்சொல் விரிக்க. இனி, வினையெச்சமாகக் கொண்டு, 'இருளால் மறைத்து நின்றான்' என உரைத்தலுமாம்.*

*இதனால், படைப்பு எண்பத்து நான்கு நூறாயிர வேறுபாடுகளை உடைத்தாதல் கூறப்பட்டது.*

**407. *தெளிவுரை :-* அசுத்த மாயையில் உளவாகின்ற தத்துவ தாத்துவிகங்களோடு ஒத்த தத்துவ தாத்துவிகங்களும், பிறப்பு வகைகளும் சுத்த மாயையின்கண்ணும் உளவாவனவாம்.**

***குறிப்புரை :-* பிறப்பு வகைகள் பலவற்றையும் உபலக்கணத்தாற் கொள்ளுதற்கு, 'எண் பாலர்கள்' என்றார், எண் பாலர் - திசைக் காவலர். போதித்த - சிறப்பித்துச் சொல்லப்பட்ட. ஒளி - தேசசு; நெருப்பு. 'ஒலி' என்பது பாடம் அன்று. வாதித்த - வாதத்தோடு கூடிய, வாதம் - காற்று. 'கூடிய' என்றது, 'சொல்லப்பட்ட ஐம்பூதங்களோடு கூடிய' என்றவாறு. "சத்தாதி" என்றதை 'தன்மாத்திரை விடயம்' என**

*இரட்டுற மொழிந்து கொள்க. ''ஆதி'' என்றதனை ''வாக்கு'' என்றதனோடும் கூட்டுக. வாக்காதி, 'வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம்' என்னும் கன்மேந்திரியங்கள்; இவற்றைக் கூறவே 'செவி, தோல், கண், மூக்கு, நாக்கு' என்னும் ஞானேந்திரியங்களும், சத்தாதி ஞானேந்திரிய விடயங்களைக் கூறவே, 'வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம்' என்னும் கன்மேந்திரிய விடயங்களும் கொள்ளப்படும். மனாதி, 'மனம், அகங்காரம், புத்தி, சித்தம்' என்னும் அந்தக்கரணங்கள். 'ஆதித்தன், சந்திரன்' என்றது, உபலக்கணத்தால் தாத்துவிகங்களைக் கொள்ள வைத்ததாம்.*

*'தத்துவங்கள் முப்பத்தாறு' எனவும், 'அவற்றுள், சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் ஐந்தும் சுத்த மாயையில் உள்ளவை; ஏனைய அசுத்த மாயையில் உள்ளவை' எனவும் மேற் கூறியவாற்றால், 'சுத்த மாயையில் உள்ள தத்துவங்கள் மேற்கூறிய ஐந்துமே; பிற இல்லை' என்பது பட்டமையின் அதனை விலக்கி, 'மேற்கூறிய ஐந்தும் சுத்த மாயையின் சிறப்புத் தத்துவங்கள்; அவை அசுத்த மாயையில் இல்லை; ஏனைய முப்பத்தொரு தத்துவங்களும் சுத்தமாயை, அசுத்த மாயை இரண்டற்கும் பொதுத் தத்துவங்கள்; அதனால் அவை அவ் இருமாயையிலும் உள்ளன. சுத்த மாயையில் அவை மலகன்மங்களோடு கலவாமல் சுத்தமாய் உள்ளன; அசுத்த மாயையில் அவை அவற்றொடு கலந்து அசுத்தமாய் உள்ளன; அவ்வளவே வேறுபாடு' எனத் தெரித்துக் கூறியவாறு.*

*'இதுவே சிவாகமங்களின் துணிபு' என்பது.*

> *"காலம் முதல் நிலம் ஈறாகிய தத்துவங்கள் எல்லாம் அசுத்த மாயையிற்போலச் சுத்த மாயையினும் உள; அவை இவை போலன்றிச் சுத்தமாய் உள்ளன என்னும்* ***பௌட்கர வசனத்தான் அசுத்த தத்துவ புவனங்களின் உள்ளன அனைத்தும் சுத்த தத்துவ புவனங்களினும் சுத்தமாய் உளவாம் என்பது போதருதலானும்"***

***எனச் சிவஞானபோத மாபாடியத்தும் (சூ.2 அதி.2) இனிது எடுத்து விளக்கப்பட்டமை காண்க. அசுத்த மாயை உலகத்தவராகிய அயன், மால், உருத்திரன் முதலியோர்போலச் சுத்த மாயையிலும் அப்பெயர் முதலியன உடையோர் உளர் என்றலும் இதுபற்றி என்க. இனி, பூலோக புவர்லோக, சுவர்க்கலோகம் முதலிய உலகங்களில் கீழ் உலகத்துள்ளனபோல மேல் உலகத்தும் உள்ளன பொருள்கள் என்றலும் இவ்வாற்றானே அமைதல் அறிந்துகொள்க.***

*இனி, 'சுத்த மாயை மேலே உள்ளது; அசுத்த மாயை கீழே உள்ளது' எனக் கூறுதல், சூக்கும தூல முறைமையால் வியாபக வியாப்பியமாதல் பற்றியல்லது, ஒருமரத்தில் அதன் அரையும், கிளையும் போல இட வேறுபாடு பற்றியன்றாதலால், சுத்த மாயையில் உள்ளன பலவும் அசுத்த மாயையில் தோய்வின்றி வியாபகமாய் நிற்கும் என்பதும் நுண்ணுணர்வால் உணர்ந்துகொள்க. அங்ஙனம் அல்லாக்கால் மந்திரங்களும், அவற்றிற்கு உரியராய கடவுளரும் அசுத்த மாயா புவனத்தில் உள்ளார்க்குப் பயன் தருமாறு இல்லை என்க.*

*'மாயையிற் போல' என ஒருசொல் வருவிக்க. "உற்றது" என்பது தொழிற்பெயராய் நின்றது. 'உற்றவே' என ஓதுதலும் ஆம்.*

*இதனால், படைப்புப் பற்றியதொரு புறனடை கூறப்பட்டது.*

## 10. காப்பு (திதி)

408. புகுந்துநின் றான்வெளி யாய்இருளாகிப்
புகுந்துநின் றான்புகழ் வாய்இகழ் வாகிப்
புகுந்துநின் றான்உட லாய்உயி ராகிப்
புகுந்துநின் றான்புந்தி மன்னிநின் றானே. 1

409. தானே திசையொடு தேவரு மாய்நிற்கும்
தானே உடலுயிர் தத்துவ மாய்நிற்கும்
தானே கடல்மலை யாதியு மாய்நிற்கும்
தானே உலகில் தலைவனு மாமே. 2

---

*இனித் திதித் தொழிலை (காத்தல் தொழிலை) ஒன்பது திருமந்திரங்களால் உணர்த்துகின்றார். திதி முதலியவற்றை ஓரோவொன்று பத்துத் திருமந்திரங்களால் உணர்த்தினார் எனக் கொள்ளக்கிடத்தலின், கிடையாதொழிந்த திருமந்திரத்திற்கு ஈடாகச் சிருட்டியில் வந்த திருமந்திரம் ஒன்றையே ஏடெழுதினோர் இங்குச் சேர்த்தனர் போலும்!*

**408.** *தெளிவுரை :- என்றும் உள்ளவனாய், எனது உள்ளத்தில் புகுந்து நீங்காது நிற்கின்ற சிவபெருமான், 'ஒளி, இருள் - புகழ், இகழ் - உடல், உயிர்' முதலிய மறுதலைப் பொருள்களிலும் அவை அவையாய்த் தொடர்ந்து நீங்காது நிற்கின்றான்.*

*குறிப்புரை :- 'அதனாலே அவை நிலைத்து நிற்கின்றன' என்பது குறிப்பெச்சம். ஈற்றடியை முதலிற்கொண்டு உரைக்க. இதில் 'நின்றான்' இரண்டில் முன்னது வினைப்பெயர்; பின்னது முற்றெச்சம். ஒவ்வோர் அடியிலும் எச்சங்களை முதலிலே கூட்டி முடிக்க. 'வெளி' எனினும் 'ஒளி' எனினும் ஒக்கும். இங்கு "ஒளி" என்றது, ஆன்ம அறிவை விளக்கும் மாயா காரியங்களை. ''இருள்'' ஆணவமாதல் வெளிப்படை. அதனுள்ளும் இறைவன் நிற்றல், அதன் சத்தியை இடையறாது தொழிற்படச் செய்து மெலிவித்தற்காம். புகழ்வு - புகழ்தல். இகழ்வு - இகழ்தல், இத்தொழிற் பெயர்கள் ஆகுபெயராய்ச் செயப்படு பொருளாய அவ்வச்சொன்மேல் நின்றன. இவற்றால் அவன் அச்சொற் கட்குப் பொருளாம் உயர்பொருள் இழிபொருள்களின் நிற்றல் குறிக்கப்பட்டது. "உடல்" என்றது சடப்பொருள்கட்கு உபலக்கணம். புந்தி - அறிவு.*

409. *தெளிவுரை :- சிவபெருமான் தான் ஒருவனே பல*

410. உடலாய் உயிராய் உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்குந்தா னாகி
அடையாய் பெருவெளி அண்ணல்நின் றானே. 3

411. தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்கும்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்கும்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்கும்
தானொரு காலந்தண் மாயனு மாமே. 4

---

*பொருள்களினும் நிறைந்து நின்று அவற்றை நிலைப்பித்தலுடன், அவற்றைத் தன் இச்சைவழி நடத்துபவனுமாகின்றான்.*

***குறிப்புரை :-*** *'அதனால், அவை இயங்கிவருகின்றன' என்பது குறிப்பெச்சம். முதல் மூன்றடிகளும் அனுவாதம்.*

*இவை இரண்டு திருமந்திரங்களாலும், 'காத்தலாவது, அழியாது நிற்பித்தலும், நடத்தலுமாம்' என்பது கூறப்பட்டது.*

**410. *தெளிவுரை :-*** *சிவபெருமான் இவ்வாறு எல்லாப் பொருளிலும் நிறைந்து நிற்றல், அவன் பிறபொருள்களால் அமைக்கப் படாத பெருவெளியாய் நிற்றலினாலாம்.*

***குறிப்புரை :-*** *"உலகம்" என்றது, விதந்தோதாதன பிறவற்றை. வான் - மேகம். இடை - வெளி; ஆகாயம். உலப்பிலி எங்கும் - அளவில்லாத இடம் எங்கணும். "அடையாப் பெருவெளி அண்ணல்" என்றது உடம்பொடு புணர்த்தல். அன்றி, 'அண்ணல் ஆதலின்' எனச் சொல்லெச்சம் வருவித்துரைத்தலுமாம். அங்ஙனம் வருவிப்பின், இத்தொடர் முதலில் வைத்து உரைக்கப்படும்.*

*இதனால், 'ஒருவன் பிற எல்லாப் பொருளிலும் நிற்றல் எவ்வாறு கூடும்' என்னும் ஐயத்தினை, இங்கும் நீக்குதற்கு அங்ஙனம் நிற்குமாறு கூறப்பட்டது.*

*பதிப்புக்களில் சிருட்டி அதிகாரத்தில் வந்த "தேடுந்திசை எட்டும்" என்னும் மந்திரம் இங்கு மீளவும் காணப்படுகின்றது.*

**411. *தெளிவுரை :-*** *சிவபெருமான் உயிர்களது அறிவு நிலைக்கு ஏற்பக் கதிர்க்கடவுள், வளிக்கடவுள், மழைக்கடவுள், (இந்திரன்) முதலிய பல்வேறு கடவுளராய்த் தோன்றுவான். ஆதலின், அவன் திருமாலாய்த் தோன்றுதலில் வியப்பில்லை.*

412. அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்
இன்பமும் இன்பக் கலவியு மாய்நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தில் அமர்ந்துநின் றானே. 5

---

*குறிப்புரை :- ஒருகால் - ஒரு காலத்தில்; என்றது, 'உயிர்களின் பக்குவ நிலையில்' என்றவாறு. சுடர் முதலியன அவற்றை இயக்கும் கடவுளரைக் குறித்தன. தண்மை, சத்துவக்குணத்தைச் சுட்டியது. 'பிறர் சத்துவக்குணத்தை யுடையவனாகக் கூறும் மாயோன்' என்றவாறு. மாயோன் தொழிலால் மட்டுமே சத்துவன்; குணத்தால் தாமதனே, சிவபெருமான் பல்வேறு கடவுளராய்த் தோன்றலாவது, அவர் அவர் அறிவிற்கு ஏற்ப அவரையே முதற்கடவுளாக மயங்குமாறு அவர்பால் தனது ஆணையை வைத்துத் தத்தமக்கு இயலும் அளவு உலகத்தை நடத்தச் செய்தல், 'அவ்வாற்றால் காக்கும் ஆணையைத் திருமாலிடத்து வைத்து நடத்துகின்றானாதலின், அத்திருமாலையே காத்தற் கடவுளாக உண்மை நூல்கள் ஓரோர் இடங்களிற் கூறுதலும், அங்ஙனம் கூறுதலின் உண்மையை உணரமாட்டாதார் அவனையே காத்தற் கடவுளாகவும், முதற்கடவுளாகவும் மயங்குதலும் இயல்பாகலின், அது பற்றி ஐய மில்லை' என்பதாம். சண்டம் - வேகம். மாருதம் - காற்று. தளி - துளி.*

*இதனால், 'காப்பவன் மாயனன்றோ' எனப் பௌராணிக மதம் பற்றி எழும் ஐயத்தினை நீக்கி, 'காப்பவனும் சிவனே' என்பது இங்கும் வலியுறுத்தப்பட்டது.*

**412. தெளிவுரை :-** *திருவருளால் ஐம்பூதங்களிலும் நிற்கும் சிவபெருமானே, குணங்கள் மூன்றாயும், காலங்கள் மூன்றாயும் நிற்பான்.*

*குறிப்புரை :- 'அதனால், சத்துவ குணத் தொழிலாகிய காத்தலைச் செய்பவனும் அவனே' என்பதாம். அன்பு முதலாக இன்பம் ஈறாகக் கூறியவை சத்துவ குணத்தை விரித்தவாறும், இன்பக் கலவி தாமத குணத்தைக் குறித்தவாறுமாம். முன்புறு காலம் - உலகத்தது தோற்றக்காலம். ஊழி அதன் இறுதிக் காலம். இவை முறையே இறப்பும் எதிர்வும் குறித்தன. இராசத குணமும், நிகழ்காலமும் உபலக்கணத்தாற் கொள்ளநின்றன.*

*சிவபெருமான் எட்டுருவினன் (அட்டமூர்த்தி) ஆதலும், அவற்றுள் ஐம்பூதங்கள் முக்குண வடிவினவாதலும் பலரும் அறிந்தன வாதலின், அவனை, 'தாமத குணம் ஒன்றே உடையவன்' எனவும்,*

413. உற்று வனைவான் அவனே உலகினைப்
பெற்று வனைவான் அவனே பிறவியைச்
சுற்றிய சாலும் குடமுஞ் சிறுதூதை
மற்றும் அவனே வனையவல் லானே. 6

414. உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றான்நந்தி
வெள்ளுயி ராகும் வெளியாய் விளங்கொளி
உள்ளுயிர்க் கும்உணர் வேயுட லுட்பரந்து
தள்ளுயி ராம்வண்ணந் தாங்கிநின் றானே. 7

---

*'அதனால், அழித்தலையே செய்வன்' எனவும் கூறுதல் அறியாதார் கூற்றேயாம் என்றபடி இனி அவன் குணாதீதன் ஆதலும் நூல்களால் நன்குணர்த்தப்படுவது என்றற்குக் காலங்கள் மூன்றாதலையும் உடன் கூறினார்.*

*இதனால், 'சிவபெருமான் காத்தற்கு உரியனல்லன்' எனப் பிணங்கிக் கூறும் பாஞ்சராத்திர மதத்தை மறுத்து, மேலது வலியுறுத்தப்பட்டது.*

413. ***தெளிவுரை :-*** *முதற்கண் உலகுயிர்களை அவற்றிற்கு அம்மை அப்பனாய் நின்று படைப்பவனும் சிவபெருமானே. பின்பு அவற்றைத் தன் மக்களாகக் கொண்டு புரப்பவனும் அவனே. இவை 'தேவர், மக்கள்' என்னும் சிறப்புடைப் பிறப்பினர்க்கு மட்டுமன்று; விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்னும் சின்னஞ்சிறிய பிறவிகட்குமாம்.*

***குறிப்புரை :-*** *"வனைதல்" மூன்றனுள் முன்னது 'ஆக்குதல்' எனவும், இடையது 'திருத்தல்' எனவும், ஈற்றது 'இரண்டனையும் செய்தல்' எனவும் பொருள் தந்தன. "உலகு, பிறவி" என்பன சொல் வேறுபட்டுப் பொருட்பின்வருநிலை அணியாய் நின்றன. சால், குடம், தூதை முதலியன பெரியனவும், சிறியனவுமாய உடம்புகளை உணர்த்தி நின்றன. மற்றும் - ஏனைய கலங்களும். தூதையை, 'மொந்தை' என்பர். 'தூதையும்' என்னும் உம்மை தொகுத்தல். 'வனையவல்லான்' என்றதனால், இது குறிப்புருவகம்.*

*இதனால், சிவபெருமானது ஆற்றலின் பெருமையை மீளவும் நினைப்பித்து, மேலது வலியுறுத்தப்பட்டது.*

414. ***தெளிவுரை :-*** *'தூய உயிர்' எனப்படும் பரமான்மாவாகிய பெருவெளியாய், தூய்மையின்றி மாசுண்டு கிடக்கும் சீவான்மாவாகிய*

415. தாங்கருந் தன்மையும் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்தும் மாற்றோர் பிறிதில்லை
ஓங்கி எழுமைக்கும் யோகாந்தம் அவ்வழி
தாங்கிநின் றானும்அத் தாரணி தானே. 8

---

*உயிரினுள் அறிவு தோன்றுதற்கு ஏதுவாய் நிற்பதாய இயற்கை அறிவே உயிரின் உடலையும் இடமாகக் கொண்டு நிற்கும் 'பரம்பொருள்' எனப்படுவது. அதனை இழந்துநிற்கும் உயிர் அதுவாம் வண்ணம், அதன் உடலாயும், அவ்வுடல் வாழ்வுறுதற்கு அதனுள் நிற்கும் உயிர்ப் பாயும் உள்ள சிவபெருமானே அதனைக் காத்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடி முதலாகத் தொடங்கி, "தாங்கி நின்றான்" என்பதை உள்ளவாறே நிறுத்தி முடிக்க. "விளங்கொளி" என்பதன்பின் 'ஆய்' என்பது விரிக்க. 'நிலங்கொளி' என்பது பாடமன்று. "தள் உயிர்" என்பதில் "தள்ளுதல்", தவறவிடுதல். இதன்பின் 'அது' எனப் பரம்பொருளைச் சுட்டும் சுட்டுப்பெயர் எஞ்சி நின்றது. 'பரம்பொருளை அறியாது நிற்கும் உயிர் அதனை அறியும் வண்ணம் பக்குவம் முதிர்தற் பொருட்டே அதனை உடலில் - நிறுத்திப் புரக்கின்றான் என்றவாறு. "உயிர்ப்பாய்" என்றதனால் உடலை நிற்பித்தலையும், "உடலாய்" என்றதனால் உயிரை அஃது எடுத்த பிறப்பில் நிறுத்துதலையும் குறித்தவாறு. இறைவன் உடலினுள் உயிர்ப்பாதலை.*

"என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்ப ரீசனே" - *தி.5 ப.21. பா.1*

*என்பதனான் அறிக.*

*இதனால், காத்தல் தொழிலின் பயன் கூறப்பட்டது.*

**415. *தெளிவுரை :-*** *சிவபெருமான் பல உயிர்களையும் அவற்றது உடலில் நிறுத்திக் காக்கின்ற காலத்தில் அக் காத்தல் தொழிலை அரிதாகுமாறு செய்பவரும், அவைகளை அவற்றது உடம்பினின்றும் பிரிக்கின்ற காலத்தில் அப்பிரித்தல் தொழிலை அரிதாகுமாறு செய்பவருமாக அவனுக்கு எதிராவார் பிறர் இல்லை. இனி விடாது வந்த எழுவகைப் பிறப்பிற்கும் முடிவாவது ஞானமே. அந்நெறியில் அவ்வுயிர்களைப் பிறழாது நிற்பிப்பவனும் அச் சிவபெருமானே.*

***குறிப்புரை :-*** *தன்மையைச் செய்வாரை, "தன்மை" என்றது ஒற்றுமை வழக்கு. பின் முன் உள்ள சொற்குறிப்புக்களால், 'தாங்கிய காலத்து' என்பது முன்னரும், 'வாங்கருந் தன்மையும்' என்பது பின்னரும் வருவித்துக் கொள்ளக் கிடந்தன. அதனால், 'தாங்கிய*

416. அணுகினுஞ் சேயவன் அங்கியிற் கூடி
நணுகினும் ஞானக் கொழுந்தொன்றும் நல்கும்
பணிகினும் பார்மிசைப் பல்லுயி ராகித்
தணிகினும் மன்னுடல் அண்ணல்செய் வானே. 9

---

*காலத்துத் தாங்கருந் தன்மை செய்வாரும், வாங்கிய காலத்து வாங் கருந்தன்மை செய்வாருமாக மற்றோர் பிறரில்லை' என்பது முன்னிரண்டடிகளின் பொருளாயிற்று. மாற்றோர் - எதிராவார். "அந்தம்" என்றது, 'எழுமைக்கும்' என்றதனோடும் இயையும். 'ஓங்கிய' என்னும் அகரம் தொகுத்தலாயிற்று. யோகத்தின் அந்தத்தில் தோன்றுவதனை "யோகாந்தம்" என்றார். 'ஞானம்' என்னாது "யோகாந்தம்" என்றதனானே, 'சரியை முதலிய தவங்களில் நிறுத்திக் காப்பவனும் அவனே' என்பது போந்தது. தார் - (கொன்றை) மாலையை. அணி- அணிந்தவன். 'மற்றோர் பிறிதில்லை' என்பது பாடம் அன்று. தாரணி - உலகம். எழுமைக்கும் - மூலாதாரம் முதல் ஆறும் கடந்த துவாத சாந்தப் பெருவெளியாம். யோகாந்தம் - யோகத்தின் முடிந்த இடம். ஏழாவது இடம்.*

*இதனால், வருகின்ற அதிகாரங்கட்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

***416. தெளிவுரை :-** அண்ணலாகிய சிவபெருமான், உயிர்களோடு உடனாய் நிற்பினும், அவற்றால் அறிதற்கரியனே. யோக முறையால் பிராண வாயுவை அடக்கி மூலாதாரத்தினின்றும் எழுப்பப்படும் அங்கியின்வழி மேல்நிலமாகிய புருவ நடுவை அடைந்து தியான சமாதிகளால் அவனை உணரினும், உண்மையில் ஞான முதிர்ச்சி ஒன்றுமே அவனைப் பெறுவிக்கும். அதனால், சரியை முதலிய மூன்றால் அவனை வழிபடும் தவநெறியில் நிற்பினும், அதனில் செல்லாது உலகரோடு கூடி அவநெறியில் தாழினும் அவன் பிறவியை அறுத்தல் இன்றி அதனைக் கூட்டவே செய்வான்.*

***குறிப்புரை :-** 'ஒன்றுமே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தல். 'அவனை நல்கும்' எனச் செயப்படுபொருள் வருவித்துக் கொள்க. தணிதல் - தாழ்தல்; கீழ் நிலையை எய்தல். மன் உடல் - நீங்காது வரும் பிறப்பு. செய்வான் - உண்டாக்குவான். "மண்ணுடல்" என்பது பாடமன்று. பணிதல் - விழுந்து வணங்குதல். தணிதல் - தன் முனைப்பு அடங்குதல்.*

*இதனால், அருளல் தொழிலது சிறப்பை உணர்த்துமுகத்தான், அதற்குச் சிறப்பு வகையால் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

## 11. ஒடுக்கம் (சங்காரம்)

417. அங்கிசெய் தீசன் அகலிடஞ் சுட்டதவ்
வங்கிசெய் தீசன் அலைகடற் சுட்டதவ்
வங்கிசெய் தீசன் அசுரரைச் சுட்டதவ்
வங்கிஅவ் வீசற்குக் கைஅம்பு தானே. 1

---

*மேற்கூறியவாற்றால் சருவ திதி உணர்த்தியபின், முறையானே இளைப்பாறற் பொருட்டாக சருவ சங்காரத்தினைப் பத்துத் திருமந்திரங்களான் உணர்த்துகின்றார்.*

**417.** *தெளிவுரை :- சிவபெருமான் உலகம் முழுவதையும் அழித்ததும், கடல்நீரை மிக்கு வாராதவாறு அடங்கியிருக்கச் செய்ததும், முப்புரத்தவர் முதலிய அசுரர்களை அழித்ததும் நெருப்பை உண்டாக்கியேயாம். அதனால், நெருப்பே அவன் கையம்பாய் விளங்குகின்றது.*

*குறிப்புரை :- கடவுட் கொள்கை இல்லாதவருள் சிலர் (உலகாயதரும், மீமாஞ்சகரும்) 'உலகம் தோன்றலும், அழிதலும் இல்லாது என்றும் உள்ளதேயாகும்' என்பர். கடவுட் கொள்கை உடையவருள்ளும் சிலர் (பாஞ்சராத்திரிகள் முதலியோர்) 'உலகத்தைக் கடவுள் அழிக்கமாட்டான்' என்பர். 'அவரெல்லாரும் 'நெருப்பு' என்ற ஒரு பொருள் இருப்பதை உற்று நோக்குவாராயின், தமது மயக்கம் நீங்குவர்' என்றற்கு நெருப்பு இறைவனுக்கு அழித்தற் கருவியாய்ப் பயன்படுமாற்றைக் கூறினார். ''அழிப்பு இளைப்பாற்றல்'' (சிவஞானசித்தி. சூ. 1.37) என்று இதனை முதற்கண் எடுத்துக் கூறியதும் இதுபற்றி என்க. உலகம் அழிபொருளாதலை உணர்வர் என்க. பூதங்கள் ஐந்தனுள் ஆகாயம் ஒழிந்த, காட்சிப் பொருளாய் நிற்கும் ஏனை நான்கும் படைத்தல் முதலிய மூன்றனையும் செய்யுமாயினும் நிலத்திற்கு உரிமைத் தொழில் படைத்தலும், நீருக்கு உரிமைத்தொழில் காத்தலும், நெருப்பிற்கு உரிமைத் தொழில் அழித்தலும் ஆதல் பற்றி அதனையே இறைவனுக்கு கருவியாக அருளிச்செய்தார். 'நிலம், நீர், தீ' என்ற மூன்றற்கும், 'பிரமன், மால், உருத்திரன்' என்பவரை உரிமைக் கடவுளராகக் கூறலின், சிவாகமங்கட்கும் கருத்து இதுவாதல் அறிந்து கொள்ளப்படும்.*

*இதனால், 'இறைவன் உலகத்தைப் படைத்தல் காத்தல்களுடன் அழித்தலும் செய்வன்' என்பது கூறப்பட்டது.*

418. இலயங்கள் மூன்றினுள் ஒன்றுகற் பாந்தம்
நிலையன் றழிந்தமை நின்றுணர்ந் தேனால்
உலைதந்த மெல்லரி போலும் உலகம்
மலைதந்த மாநிலம் தான்வெந் ததுவே. 2

---

418. ***தெளிவுரை :-*** *மூவகைச் சங்காரங்களுள் 'கற்ப சங்காரம்' என்பதும் ஒன்று. அதில் எல்லாப் பொருளும் சங்கரிக்கப்பட் டொழிந்தமையை ஏனைய இரண்டு சங்காரங்களில் நிற்குமாற்றால் நான் கருதியுணர்ந்து கொண்டேன். கால வயப்பட்டு நிற்கும் உலகம் உலையில் இடப்பட்ட அரிசிபோல்வதாம். ஆகவே, என்றும் அழியாதன போல மலைவைத் தந்து நிற்கும் இப்பெரு நிலம் முடிவில் அழிந்தொழிந்தது.*

***குறிப்புரை :-*** *'மூவகைச் சங்காரம் இவை' என்பது, வருகின்ற திருமந்திரங்களுள் கூறப்படும். 'நனவு நிலையில் நிற்பவன் அந்நிலையில் ஒருபெற்றியே நிற்கமாட்டாது காலவயத்தால் கனவு முதலியவற்றிற் சென்று அறிவு கெடுதலையும், பிறந்த உயிர் அந்நிலையிலே நிற்கமாட்டாது காலவயத்தால் அவ்வுடலைவிட்டு இறந்தொழி தலையும் உற்றுநோக்கினால், உலகம் முழுதும் இவ்வாறே காலவயப் பட்டு அழிந்து பின்பு தோன்றியதாகும் என்பது விளங்கும்' என்பார். "கற்பாந்தம் நிலையன்றழிந்தமை நின்றுணர்ந்தேன்" என்றார். நிலை - நிலைத்தொழிலை உடைய பொருள்கள்; ஆகுபெயர். இது, 'நீவிரும் அவ்வாறு உணர்மின்' என்றவாறு இவ்வாறே திருவள்ளுவரும்,*

*உறங்கு வதுபோலும் சாக்கா டுறங்கி*
*விழிப்பது போலும் பிறப்பு. - குறள், 339*

*என்று உடலின் அழிவுதோற்றங்களை அறிவின் அழிவின் தோற்றங்களில் வைத்துத் தெளிவித்தார். முன்பு இருவகை அழிப்பின் வைத்து உலக அழிவை வலியுறுத்தினாராகலின், "உலை தந்த மெல்லரி போலும் உலகம்" என அதன் நிலையாமையைப் பின்னர் வலியுறுத்தி, "மாநிலம் தான் வெந்ததுவே" என நிலவுலக அழிவை முடிவில் நிறுவினார். அரி - அரிசி, மலை - மலைவு; மயக்கம்; முதனிலைத் தொழிற்பெயர். பிரம கற்பம், விட்டுணு கற்பம் முதலாகக் கற்பங்கள் தாம் பல. அவற்றுள்ளும் அவரவர் உறங்கும் காலம் அவரவர்க்கு நித்திய கற்பமாகவும், இறக்குங் காலம் மகாகற்பமாகவும் சொல்லப்படும். கற்பம் - ஊழி, காணப்பட்ட உலகத்தை "வெந்தது" என்றது. முன்னை ஊழியிறுதி நோக்கியாம். எனவே, 'பின் தோன்றியது'*

**419.** பதஞ்செய்யும் பாரும் பனிவரை எட்டும்
உதஞ்செய்யும் ஏழ்கடல் ஓதம் முதலாங்
குதஞ்செய்யும் அங்கி கொளுவி ஆகாச
விதஞ்செய்யும் நெஞ்சின் வியப்பில்லை தானே. **3**

---

*என்பதும் பெறப்படும். ஆகவே, 'வெந்தது' என்பது இறந்தகால வினைப்பெயர்.*

*மூன்றாவன தினப் பிரளயம், கற்பாந்தப் பிரளயம், மகாப் பிரளயம் என்பன. மகாப்பிரளயமாகிய பேரூழி தன்னாலறியப்படாத ஒன்று. கற்பாந்தம் வரையில் நான் அறிவேன் என்றருளியது, திருமூல தேவநாயனாரது கற்பம் வரையுள்ள வாழ்வைக் காட்டுவதாகலாம்.*

*உலையிலிட்ட அரிசி மேலும் கீழுமாக மாறிச் சுழன்று வேதல் போல இவ்வுலகமும் துன்ப இன்பப் புயலிற்பட்டுச் சுழல்கிறது. இறுதியில் வெந்தொழியும் என்றவாறாம்.*

*இதனால், உலக சங்காரம் இல்லை என மயங்குவார்க்கு, 'அது உண்டு என்பது' கருதலளவையின் வைத்து வலியுறுத்தப்பட்டது.*

**419. *தெளிவுரை :-* *பல உயிர்கட்கு இடம் அளிக்கின்ற அகன்ற நிலமும், குளிர்ந்த எட்டு உயர்மலைகளும், நீரை மிகத் தருகின்ற ஏழுகடல் நீர்ப்பரப்பும் முதலாக அனைத்துப் பொருள்களையும் சிவபெருமான் தனது நினைவு மாத்திரத்தால் காய்தலைச் செய்யும் நெருப்பை வைத்து அழித்து உருவில்லனவாகச் செய்துவிடுவான். இதில் வியப்பில்லை.***

***குறிப்புரை :-* 'உதகம், குரோதம்' என்பன இடைக் குறைந்து நின்றன. உதம் - நீர். குதம் - மிகுதி. அங்கி - தீ. பார் - உலகம். ஐம்பூதங்களுள் ஆகாசம், அருவப் பொருளாதலின், உருவழிந்த நிலையை அதன் வகையாக ஓதினார். விதம் - வகை, 'விதமாக' என ஆக்கம் வருவிக்க 'நெஞ்சின் செய்யும்' என மாறுக. கிடந்தவாறே வைத்து, 'நெஞ்சின் என, வேண்டா கூறி, வியப்பின்மையை வலியுறுத்தினர்' என்றலுமாம்.**

***இதனால், நிலமேயன்றிப் பிறவும் அழிதல் கூறுமாற்றால், மகாசங்காரம் உண்மை கூறப்பட்டது.***

**420. *தெளிவுரை :-* *மேகங்கள் மலைக்கண் தங்குதலால் நிலத்தில் இறங்கிய நீராகிய குலமகள் உலகத்தில் தங்கியும், கடலாகியும் நின்று***

420. கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
அண்டத்துள் ஊறி யிருந்தெண் டிரையாகி
ஒன்றின் பதஞ்செய்ய ஓம்என்ற அப்புறக்
குண்டத்தின் மேல்அங்கி கோலிக்கொண் டானே. 4

---

*இனிய உணவுகளை உண்டாக்கிக் கொண்டிருக்கும் பொழுதே இறைவன் 'நாதம்' என்னும் அவ்விடத்ததாகிய குண்டத்தில் விளங்கும் மேலான நெருப்பை வளர்த்துவிட்டான். அஃதாவது, 'அழித்தல் தொழிலை மேற்கொண்டான்' என்பதாம்.*

***குறிப்புரை :-*** *'வானின்று உலகம் வழங்கி' வருதல் பற்றி காத்தற் சத்தியை, 'மழை' என்றே கூறினார். நீரைப் பெண்ணாகக் கூறுதல் மரபாதல் அறிக. 'நிற்ப' என்பது "நின்று" எனத் திரிந்தது. மேகம் மலைமேல் தங்கியே மழை பொழிதல் வெளிப்படை. "அண்டம்" என்பது. 'உலகம்' என்னும் அளவாய் நின்றது. திரை, ஆகுபெயர். பதம் - உணவு, செய்தல் - உண்டாக்குதல். 'செய்ய' என்பது நிகழ்காலத்தின்கண் வந்தது. புறம் - இடம். 'உலக நெருப்பன்று; தனது அழித்தற் சத்தியே' என்றற்கு, "ஓம் என்ற... அங்கி" என்றார்.*

*மேகங்கள் சூழ்ந்த மலையினின்றிழிந்த குலக்கொடியாகிய விந்துசத்தி, பொருட் பிரபஞ்சம் எல்லாவற்றிலும் பரந்திருந்தது, திக்குக்காலம் முதலியவற்றை இடமாகக் கொண்டிருந்த பின்பு, ஓம் என்ற பிரணவமாகிய நாதத்தில் ஒடுங்கி, மூலாதாரத்தில் குண்டலினியாக அமைத்தனன் என்றவாறு.*

*கொண்டல்வரை என்றது அருள் மாலையாகிய சிவத்தை, குலக்கொடி விந்துசத்தி இழிதலாவது சிவம் சிருஷ்டியுன் முகரான காலத்து வெளிப்பட்ட பராசத்தியின் பதினாயிரத்தில் ஒரு கூறான ஆதிசத்தியின் கூறான விந்துவாக எளிவந்து இரங்கி என்றவாறு.*

*அண்டத்துள் ஊறியிருத்தல் அதாவது சத்தப் பிரபஞ்சமாக வியாபித்திருத்தல்.*

*எண்திசையாதி ஒன்றின் பதம்செய்த ஓம் என்ற அப்புறம் - பொருட்பிரபஞ்சமாகக் காரியப்பட்டுப் புவன போகங்களாக விரிந்து மீட்டும் நாதத்தில் ஒடுங்கிய பின்பு.*

*குண்டத்தின்மேல் அங்கி கோலிக் கொண்டான், எல்லாவற்றையும் தம் மூலாதாரத்தில் கரந்து கொண்டனன் என்று சர்வசங்காரத்தை யோக முறையில் அமைத்துக் காட்டியவாறு.*

421. நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்
வைத்தசங் காரமுஞ் சாக்கிரா தீதமாம்
சுத்தசங் காரந் தொழிலற்ற கேவலம்
உய்த்தசங் காரம் பரன்அருள் உண்மையே. 5

---

*இதனால், நிலைத் தொழில் அதன் கால எல்லையில் முற்றுப் பெறும் என்பது கூறி, ஒடுக்கம் நிகழ்தல் வலியுறுத்தப்பட்டது.*

421. ***தெளிவுரை :-*** *நித்திய சங்காரமாவது நாளொடுக்கமாகிய அன்றாடம் கீழாலவத்தையில் அறிவிழந்திருத்தல். பிறவி எடுத்த எல்லா உயிர்கட்கும் பொதுவாக வைக்கப்பட்ட ஆயுட் சங்காரமாவது விழித்தல் இல்லாத உறக்கமாகிய இறப்பாகும். சருவ சங்காரமாவது ஆன்மா செயலற்று ஆணவத்திலே அழுந்திச் சடம்போலக் கிடத்தல். அதனால், உயிரை நீங்கா இன்பத்தில் செலுத்துதலாகிய உய்த்த திருவருட் சங்காரமாகிய அருளலே இறைவனது உண்மை நிலையைப் பெறுதலாகும். தொழிலற்ற ஒடுக்க நிலை சுத்த சங்காரம்.*

***சங்கார வகையும் இயல்பும்***

**I. *நித்த சங்காரம்*** – *தினப்பிரளயம். அன்று உழைத்த உழைப்பினால் உண்டாகிய களைப்பினை ஆற்றுவது. சங்காரம் – ஒடுக்கம் அல்லது அழிப்பு என்று பொருள்படும். உறக்கத்தால் ஒன்றையும் உணராதிருக்கும் நிலை. சில கருவி கரணங்கள் மட்டும் காரியப்பட மற்றவை மயங்கிக் கிடக்கும். சூக்கும, தூல உடம்புகளைக் கடந்து ஒட்டாது நீங்கி நிற்றல்.*

**II. *ஆயுட் சங்காரம்*** – *தூல உடம்பு அழிந்தொழிதல். உயிர் உடலைத் துறத்தல். அடியோடு தூல உடம்பை விடச் செய்தல். பிறப்பினால் உண்டான களைப்பை ஆற்றுவது. இப்பிறவியிலே ஏற்படும் மரணம் அல்லது இறப்பு.*

**III. *சருவ அல்லது சுத்த சங்காரம்*** – *சூக்கும உடம்பும் நீங்குதல். எல்லாக் கருவிகளும் முற்ற அழிந்தொழியும். ஆனாலும் சிவப் பேறன்று. ஆணவத்துக்குள் அழுந்திக் கிடக்கின்ற கேவல நிலை. மனமும் செயலற்று மடங்க இருத்தல்.*

422. நித்தசங் காரம் இரண்டுடல் நீவுதல்
வைத்தசங் காரமும் மாயாசங் காரமாம்
சுத்தசங் காரம் மனாதீதந் தோய்வுறல்
உய்த்தசங் காரஞ் சிவன்அருள் உண்மையே. 6

423. நித்தசங் காரங் கருவிடர் நீக்கினால்
ஒத்தசங் காரம் உடலுயிர் நீவுதல்
சுத்தசங் காரம் அதீதத்துள் தோய்வுறல்
உய்த்தசங் காரம் பரனருள் உண்மையே. 7

---

**IV. திருவருட் சங்காரம்** – *அருளுதல். பிறத்தல், வாழ்தல், இறத்தலற்ற நான்காம் நிலையாகிய வீடுபேறு. சிவமாதல். துரியாதீதத்தில் சிவசத்தியோடு ஒடுங்கி இருத்தல்.*

***குறிப்புரை :-*** *மீளச் சாக்கிரம் எய்தாத நிலையை, "சாக்கிராதீதம்" என்றார். எனவே, இது விழியா உறக்கமாயிற்று. "சுத்தம்" என்றது, ஒன்றும் இன்மையைக் குறித்தது. நீள்மூடம் - உறக்கத்தில் அறிவு அடங்கி இருத்தல்.*

**422. *தெளிவுரை :-*** இன்னும் வேறொருவகையாற் கூறுமிடத்து, *'நித்திய சங்காரம், தூலம், சூக்குமம்' என்னும் இரண்டு உடம்புகள் உள்ளபொழுதும் அவற்றோடு ஒட்டாது நீங்கி நிற்றல்' எனவும், 'ஆயுட் சங்காரம் தூல உடம்பு அழிந்தொழிதல்' எனவும், 'சருவ சங்காரம் சூக்கும உடல் நீங்குதல்' எனவும் கூறுதற்குரியன. எனவே, திருவருட் சங்காரமாகிய அருளலே சிவப்பேறாகும்.*

***குறிப்புரை :-*** இரண்டுடலும் உள்ளபொழுதே ஒட்டாதிருத்தல் *உறக்கத்திலாம். 'சூக்கும சரீரம் முத்தி பெறுங்காறும் நீங்காது நிற்கும்' எனக் கூறுதல். ஆயுட் சங்காரத்தை நோக்கியாம். "மாயா சங்காரம்" என்றதில், "மாயை" என்றது பிரகிருதியை. சகல வருக்கத்தினருக்குப் பிரகிருதியளவு சங்கரித்தலே சருவ சங்காரமாதல் பற்றி "சுத்த சங்காரம் மனாதீதம் தோய்வுறல்" என்றார். "மனம்" என்றது பிற அந்தக் காரணங் கட்கும் உபலக்கணம். நீவுதல் - துடைத்தல்.*

**423. *தெளிவுரை :-*** *இனி, நித்திய சங்காரம் தூல உடம்பொடு நிற்கும் பொழுதே அதனொடு கூடாதிருக்கச் செய்வதென்றால், ஆயுட் சங்காரம் அதனை அடியோடு விடச் செய்வதாகும். சருவ சங்காரம் சூக்கும உடம்பையும் விடப்பண்ணுவது. ஆகவே, திருவருட்*

424. நித்தசங் காரமும் நீடிளைப் பாற்றலின்
வைத்தசங் காரமும் மன்னும் அனாதியில்
சுத்தசங் காரமுந் தோயாப் பரன்அருள்
உய்த்தசங் காரமுன் நாலாம் உதிக்கிலே. 8

---

*சங்காரமாகிய அருளலே சிவனை அடைதல் என்பது கடைப்பிடித்து உணரத்தக்கது.*

***குறிப்புரை :-*** *"கரு" என்றது, கருவாய்த் தோன்றி வளரும் தூல உடலை அதன் இடர் நீங்குதல் - அதனால் வரும் அனுபவம் இன்மை. "நீங்கினால்" என்னும் எச்சம் தெளிவின் கண் வந்து, பின் வருவதும் அத்தன்மையது என்பதனை தெரிதற்கு ஏதுவாய் நின்றது. "நீரின்றமையா துலகெனின்" (குறள்-20) என்றாற்போல.*

**424. *தெளிவுரை :-*** *நித்திய சங்காரம், அன்று உழைத்த உழைப்பினால் உண்டாகிய இளைப்பினை ஆற்றக் காண்டலால், ஆயுட் சங்காரமும் அப்பிறப்பில் உண்டான இளைப்பை ஆற்றுதற் பொருட்டு என்றும் உளதாய்நிற்கும். 'சருவ சங்காரத்தில் எல்லாக் கருவிகளும் முற்ற அழிந்தொழிவதால், அதுவே சிவப்பேறு போலும்' எனின், அன்று; திருவருட் சங்காரம் உண்டாய வழியே 'பிறத்தல், வாழ்தல், இறத்தல்' என்னும் மூன்றும் அற்ற நான்காம் நிலையாகி 'வீடுபேறு' எனப்படும் சிவப்பேறாம்.*

***குறிப்புரை :-*** *தோயா அருள் - அருள் தோயாதது. 'உய்த்த சங்காரம் முன்உதிக்கில் நால் ஆம்' எனக் கூட்டுக. நான்கு, 'நால்' என நின்றது. இவை நான்கு திருமந்திரங்களாலும், 'இலயங்கள் (சங்காரங்கள்) மூன்று (தி.10 பா.417) இவை' என்பதும் அவற்றின் இயல்புகளும் பலவாற்றால் விளங்கக் கூறி,* ***சங்காரத்தையே வீடுபேறு என மலைவார்க்கு அங்ஙனம் மலையாமைப்பொருட்டு அதனையும் ஒரு சங்காரமாக வைத்து அதன் இயல்பு உணர்த்தப்பட்டது.*** *தத்துவம் முப்பத்தாறனுள் மா பூதம் - 5. ஞானேந்திரியம் - 5, கன்மேந்திரியம்-5 ஆகப் பதினைந்தும் தூல சரீரம். 'அன்னமய கோசம்' என்பதும் இதுவே. தன்மாத்திரை - 5, சித்தம் ஒழிந்த அந்தக்கரணம் - 3 ஆக எட்டும் சூக்கும சரீரம். 'பிராணமய கோசம்' என்பதும் இதுவே. எட்டுத் தத்துவம் கூடியதால் பற்றி இதனை 'புரியட்டச் சரீரம்' எனவும் கூறுவர். இந்த 23-க்கு மேல் 24 ஆவதாகிய குண தத்துவமே சித்தம்' என்பது மேலே (தி.10 382 ஆம் பாடலின் குறிப்புரை) சொல்லப்பட்டது.*

**425.** பாழே முதலா எழும்பயிர் அப்பயிர்
பாழாய் அடங்கினும் பண்டைப்பாழ் பாழாகா
வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம் பயிராய் அடங்கும்அப் பாழிலே. **9**

---

*குண தத்துவத்திற்குமேல் உள்ள 'புருடன்' என்பது ஒரு தனித் தத்துவம் அன்று. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் - ஐந்தும் கூடியது கஞ்சுக சரீரம். விஞ்ஞானமய கோசம் என்பதும் இதுவே. 'மாயை' என்னும் தத்துவமே காரண சரீரம். 'ஆனந்தமய கோசம்' என்பதும் இதுவே. சிவ தத்துவங்கள் 'நம்மனோர்க்கு உடம்பாய் வந்து பொருந்துதல் இல்லை' என்பது மேலே கூறப்பட்டது. (தி.10 பா.379).*

425. ***தெளிவுரை :-*** *மாயை வித்தாக, அதனினின்றும் முளைக்கின்ற பயிராய் உலகம் தோன்றும். பின்பு அப்பயிராகிய உலகம் வித்தாகிய அம்மாயையினிடத்தே ஒடுங்குவதாம். அவ்வாறு ஒடுங்கினும், என்றும் உளதாகிய மாயை ஒன்றிலும் ஒடுங்குதல் இல்லை. உலகம் மாயையின் ஒடுங்குதலாகிய சருவ சங்காரமின்றிப் பிரகிருதி காறும் அழிவதாகிய அந்தச் சங்கார காலத்திற்கு உட்பட்டே மால், அயன் செய்திகளாகிய காத்தல் படைத்தல்கள் நிகழும். ஆகவே, தத்தம் கால எல்லையில் மடிந்து போகின்ற பயிர்போல, உலகம் முழுவதும் ஒடுங்குவது மாயையிலல்லது பிரகிருதியில் அன்று.*

***குறிப்புரை :-*** *"பாழ்" என்பது முதற் காரணம் தனது காரியத்தைத் தோற்றுவியாத நிலை. இது பற்றியே பிரகிருதியையும் 'பாழ்' என்ப (பரிபாடல்.... ..... "பாழெனக் காலெனப் பாகெனத் தொண்டென") இவ்வாறன்றி முதல்வனைப் 'பாழ்' என்றல் பொருந்தாமை அறிக. உலகம் மாயையின் ஒடுங்காது பிரகிருதியின் ஒடுங்கிய பொழுது பரசரீரம் உளதாயினும் போகம் நிகழாதாகலின், அதனை, 'வாழாச் சங்காரம்' என்றார். இச்சங்காரம் குணிருத்திரனால் செய்யப்படுவதாதல் அறிக. (சிவஞான மாபாடியும் - முதற் சூத்திரக் கருத்துரை விளக்கம்) குண சரீரம், கஞ்சுக சரீரம், காரண சரீரம் இம் மூன்றன் தொகுதியே பர சரீரம் அல்லது அதி சூக்கும சரீரம். "பயிராய்" என்பதில் ஆக்கம் உவமை குறித்து நின்றது.*

*இதனால், 'அசுத்தமும், சுத்தமும் ஆய மாயைகளில் அவ்வவ் வுலகம் ஒடுங்குவதே சருவ சங்காரம்' என்பதும், அவற்றிற்குக் கீழ் நடைபெறுவன எல்லாம் அவாந்தர (இடைநிகழ்) சங்காரம் என்பதும் கூறப்பட்டன.*

426. தீயவைத் தார்மின்கள் சேரும் வினைதனை
மாயவைத் தான்வைத்த வன்பதி ஒன்றுண்டு
காயம்வைத் தான்கலந் தெங்கும் நினைப்பதோர்
ஆயம்வைத் தாய்உணர் வாரவைத் தானே. 10

---

426. ***தெளிவுரை :-*** *நிலையில்லாததாகிய உலகத்தை உண்டாக்கி நிறுத்திய சிவன், அதனையே உயிர்களுக்கு என்றும் வாழிடமாக வையாது அழிய வைத்து, அழிவின்றி வைத்த வாழிடம் ஒன்று உள்ளது. அதனை அறிந்து அடைதற் பொருட்டே உடம்பையும், பல உட்கருவிகளையும், நூல்களையும் தந்தருளினான். அவற்றைக் கொண்டு, தற்போதத்தால் ஈண்டும் வினைகளை ஈண்டாதபடி அழித்து. அந்த வாழிடத்தை அடைந்து இன்பத்தை நுகர்மின்கள்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடி முதலாகத் தொடங்கி, 'சேரும் வினைகளைத் தீய வைத்து ஆர்மின்கள்' என மாற்றி முடிக்க. வன்மை - அழிவின்றி நிலைபெறுதல். பரமுத்தி நிலையை இவ்வாறு உருவகம் செய்தார் என்க. திருவள்ளுவர் "புக்கில்" என்றது காண்க. 'ஒன்று உண்டு' என்ற குறிப்பால், பின் வருவன அதனை அடைதற் பொருட்டுக் கொடுக்கப்பட்டனவாதல் போந்தது. காயம், இடத்தால் வரையறை உடைய தூல சரீரம். "எங்கும் கலந்து நினைப்பது" என்றதனால், 'அஃது அவ்வரையறையைக் கடந்த சூக்கும சரீரம் பர சரீரங்களைச் சுட்டிற்று என்பதும், "ஆயம்" என்றதனால், 'அவைதாம் தன்மாத்திரை அந்தக் காரணங்களும் வித்தியா தத்துவங்களும் ஆகியவற்றது தொகுதிகள்' என்பதும் போந்தன. ஆய் உணர்வு ஆர - ஆராய்ச்சி அறிவு நிரம்புதற்கு; என்றதனால் அதன்பொருட்டு வைக்கப்பட்டவை நூல்கள் என்பது இனிது விளங்கிற்று. இதனானே, அந்நூல் நுதலிய பொருளை ஒரு சொல்லானும், நூற்பொருளை பல சொல்லானும் அறிவுறுத்தும் அருளாசிரியர்களை வைத்தமையும் பெறப்படும். "நினைப்பது" எனக் கருவி வினைமுதல் போலக் கூறப்பட்டது. இவ்வொருமை ஆயத்தின் மேல் நிற்றல் அறிக.*

*இதனால், 'மேற்பல இடத்தும், 'உய்த்த சங்காரம்' எனப்பட்ட திருவருட் சங்காரத்தையே பயனாக உடையன பிற சங்காரங்கள்' என அதன் சிறப்பு உணர்த்தப்பட்டது. இங்ஙனம் அருளலையும் சங்காரமாக வைத்துக் காட்டியது. இறைவன் செய்யும் தொழில் ஐந்து என்னாது மூன்று எனக் கூறும் வழியும் மறைத்தல் காத்தலுள்ளும், அருளல் அழித்தலுள்ளும் அடங்கி நிற்கும் என்பது உணர்த்துதற்கு என்க.*

## 12. மறைப்பு (திரோபவம்)

427. உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே. 1

---

*அஃதாவது, பரம கருணாநிதியாகிய பரசிவம் உயிர்கள் மல பரிபாகமடைய போகங்களைப் புசிப்பித்து, கன்மங்களை நீக்குமளவும் தன்னையும் அவர்கள் முற்பிறவி நிகழ்வுகளையும் மறைத்து, உலக போகங்களை உண்மை என்று கருதச் செய்து, கன்மங்களிற் சுவை உண்டாக்கி கன்ம பலன்களாகிய போக்கியப் பொருள்களில் அழுந்தச் செய்யும் அனுக்கிரகமாம். இதனைப் பத்துத் திருமந்திரங்களான் உணர்த்துவான் எடுத்துக் கொண்டார்.*

**427.** *தெளிவுரை :-* சிவன், ஆன்ம அறிவேயாயும், அவ்வறிவுக்கு அறிவாயும், அதனில் சிறிதும் பிரிவின்றியும் அதனோடு யாண்டும் உடனாயே நிற்பினும் அவ்வறிவு மல மறைப்பால் அவனது இருப்பை அறியமாட்டாது.

உள்ளம் - ஆன்மா, காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் என்புழிப்போல இறைவன் ஒன்றாயும், தெற்றென விளங்குகின்ற சோதியாயும் பிரிவற்றும் உடனாயிருக்கினும் அவன் மறைப்புச் சத்தியால் அவன் உருவை அறியாது என்பது கருத்து, அன்புளங்கொண்டதாய் அருமை மகனுக்கென்று சமைத்த உணவை மறைத்து, அவாவை எழுப்பி, அதனைச் சுவைத்து உண்ணச் செய்யுமாறு போல இறைவன் தன்னை மறைத்து வினைப்போகத்தில் அழுந்தி அனுபவிக்கச் செய்கிறான் என்பதாம்.

*குறிப்புரை :-* 'அம்மறைப்பு நீங்குதற் பொருட்டே திரோபவம் (மறைத்தல்) செய்யப்படுகின்றது' என்பது குறிப்பெச்சம். 'மலமறைப் பால்' என்பது ஆற்றலால் வந்து இயைந்தது. "உள்ளம்" என்றது ஆன்ம அறிவை. 'ஓரடி' என்றது இடச்சிறுமை குறித்தது. இதனானே, காலச் சிறுமையும் கொள்ளப்பட்டது. உண்மை அளவாகப் பொதுப்பட உணரப்படுவதனை ''உரு'' என்றார். மறைத்தலைச் செய்வதாகிய மலத்தின் வழி நின்று அதனைச் செய்வித்தலால், அம்மலத்தின் ஆற்றல் தேய்ந்தொழியும் என்க. மாயை கன்மங்களால் பிறவியில் ஆழ்த்துதலே, 'மறைத்தல்' எனச் சிறப்பாகக் குறிக்கப்படும். இதுவும் ஆணவத்தைத் தேய்த்தற் பொருட்டேயாம். மறைத்தலைச் செய்வதையே, 'இறைவன் பந்தத்தையும் தருபவன்' என்பர்.

**428.** இன்பப் பிறவி படைத்த இறைவனுந்
துன்பஞ்செய் பாசத் துயருள் அடைத்தனன்
என்பிற் கொழுவி இசைந்துறு தோல்தசை
முன்பிற் கொளுவி முடிகுவ தாமே. **2**

---

*இதனால், திரோபவத்திற்குக் காரணம் கூறப்பட்டது.*

*இத்திருமந்திரத்துள் நாயனார் ஆன்ம அறிவை 'உள்ளம்' என்னும் சொல்லாற் குறித்தருளினார். இவ்வாறே மெய்கண்ட தேவரும் குறித்தார். இவைகளால், திருவள்ளுவர், "ஓர்த்துள்ளம் உள்ள துணரின்" என்றதில் 'உள்ளம்' என்றதும் ஆன்மாவையே யாதல் விளங்கும்.*

**428.** *தெளிவுரை :-* *பின்னர் இன்பத்தைப் பெறுதற்குக் கருவியாம் பிறப்பை உயிர்கட்குக் கொடுத்த சிவன், அப்பிறப்பினுள் நிற்கும் பொழுது துன்பமயமான வினையால் விளையும் துயருள் அழுந்தவே வைத்துள்ளான். பிறவியால் வரும் மாசுடம்புகள் முன்னே சில காலம் துன்பத்தைத் தந்து, பின்பு ஒழிவனவாகும்.*

*குறிப்புரை :-* *இன்பப் பிறவி - இன்பத்திற்கு ஏதுவாம் பிறவி; இஃது இயைபின்மை நீக்கிய விசேடணம், உடம்பு துன்பமாகாது துன்பம் வெளிப்படுதற்கு வாயிலாகவே வினையே துன்பம் தருவது ஆகலின், "துன்பஞ்செய் பாசம்" என்றது வினையையேயாம். வினை இன்பமும் செய்வதாயினும், முன்னும் பின்னும் துன்பத்தோடே தொடர்புற்று நிற்றலின், துன்பம் செய்வதாகவே கூறினார். என்பு முதலியவற்றாலான உடம்பையே பெரும்பான்மையும், 'உடம்பு' என வழங்குப ஆகலான், அவற்றையே எடுத்தோதினார். 'கொழுவி இசைந்துறு தோல் தசை' என்றது, அவ்வாறியன்றி உடம்பின்மேல் நின்றது. முன்பு - ஆணவமலம் நீங்குதற்கு முன்பு, "முன்பில் கொளுவி" என்பதில் கொளுவுதற்கு, 'துன்பம்' என்னும் செயப்படு பொருள் வருவிக்க. கொளுவி - இரண்டும் சேர்த்தி அல்லது பொருத்தி.*

*இதனால், திரோபவமும், அறுத்தும், சுட்டும் சிலநோயைத் தீர்க்கின்ற மருத்துவன் செய்கைபோல அருளே (மறக்கருணை) யாதல் கூறப்பட்டது.*

**429.** *தெளிவுரை :-* *'உருத்திரன், மால், அயன்' என்னும் காரணக் கடவுளர்தாமும், மேல் உள்ள சீகண்ட உருத்திரரால் தமக்குத் தரப்பட்ட சிறந்த இயந்திரமாகிய உடம்புகள் கிடைக்கப் பெற்றுப் பொருந்தி நின்று உள்ளத்துள் ஒளிந்து நிற்கும் கள்வனாகிய சிவன்*

**429.** இறையவன் மாதவன் இன்பம் படைத்த
மறையவன் மூவரும் வந்துடன்கூடி
இறையவன் செய்த இரும்பொறி யாக்கை
மறையவன் வைத்த பரிசறி யாரே. **3**

**430.** காண்கின்ற கண்ணொளி காதல்செய் தீசனை
ஆண்பெண் அலியுரு வாய்நின்ற ஆதியை
ஊண்படு நாவுடை நெஞ்சம் உணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கை செயலணை யாரே. **4**

---

*தம்மாட்டு வைத்த மறைப்பினை அறிய மாட்டார்கள்.*

***குறிப்புரை :-*** *"இன்பம்" என்றது ஆகுபெயராய் மேற்குறித்த பிறவியை உணர்த்திற்று. "மூவரும்" என்ற உம்மை சிறப்பு; முற்றன்று. 'யாக்கை வந்த உடன் கூடி' என முன்னே கூட்டுக. "இறையவன்" என்பது உருத்திரன் மேலதாய், முன்னர்க் குணி ருத்திரனையும், பின்னர்ச் சீகண்டவுருத்திரனையும் குறித்தது. "மறையவன்" இரண்டில் பின்னது, 'கள்வன்' என்னும் பொருட்டு 'மறைப்பறியாரே' என ஓதுதல் சிறக்கும்.*

*இதனால், மும்மூர்த்திகளும் திரோபவத்துட் பட்டவராதல் கூறப்பட்டது.*

**430.** ***தெளிவுரை :-*** *சிவபெருமானைப் பொருள்களைக் காண்கின்ற கண்ணினது ஒளியைக் காதலிப்பதுபோலக் காதலித்து, சுவையற்ற நாவினை உடைய மனத்தால் நினைந்து, நெடுங்காலமாக வருகின்ற பிறப்பு இறப்புகளை விட்டொழிதற்கு ஏதுவான தவத்தில் தலைப்படுகின்றிலர் உலகர்.*

***குறிப்புரை :-*** *'அது சிவபெருமானது மறைத்தல் தொழிலால், நிகழ்வதே' என்பது குறிப்பெச்சம். 'சுவையை வெறுத்த உணர்வுடை நெஞ்சம்' என்பதனை "ஊண்படு நாவுடை நெஞ்சம்" என்று ஓதினார் முன்பு உண்ட அறுசுவையைப் பின்னும் நாடி நிற்பது மனமாகலின், அதனை எடுத்துக் கூறினார். "நெஞ்சம் உணர்ந்து" எனச் சினைவினை முதல்மேல் நின்றது. 'பொய் + கை' எனப் பிரித்து நிலையாமை உவர்த்துவிடுகின்ற எனப் பொருள் கூறுக. கை செயல் - கைத்து விடுதற்கு ஏதுவான செயல். 'கண்ணொளியைப்போல' என விரிக்க.*

*இத்திருமந்திரம் காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டலின், அயரா அன்பின் அரன்கழல்*

431. தெருளும் உலகிற்குந் தேவர்க்கும் இன்பம்
அருளும் வகைசெய்யும் ஆதிப் பிரானும்
சுருளுஞ் சுடருறு தூவெண் சுடரும்
இருளும் அறநின் றிருட்டறை யாமே. 5

---

*செல்லவேண்டிய ஆன்மா, அதனை மறந்து அயர்கின்றதே என்பதை அறிவித்தவாறு. சேண்பாடு பொய்கை என்ற உருவகம், பராகாயத்திலுள்ள அமுதத் தடாகத்தை உணர்த்தி நின்றது. அதன் செயலாவது அதிலிருந்து அமுத மானது ஊறி உள்ளங்கால்வரை வியாபித்து இன்பமயமாகச் செய்தல்.*

*இதனால், மறைத்தல் தொழிலால் இறைவன் உயிர்கள் தன்னை அறியாதவாறு மறைத்தல் கூறப்பட்டது.*

**431. *தெளிவுரை :-*** *ஆதிப் பிரானாகிய சிவபெருமான், பரிபாகம் பெற்ற உயிர்கட்கும், பரிபாகத்தால் ஞானத்தை எய்தினோர்க்கும் தனது திருவருள் நன்கு புலப்படும் வகையில் விளக்கத்தைத் தருவான். ஏனையோர்க்குப் பகலவனும், நிலாவும் பகலிலும், இரவிலும் இருள் நீங்க எரிப்பினும் இருள் பொதிந்து நிற்கும் அறைபோல நின்று மறைத்தலையே செய்வன்.*

***குறிப்புரை :-*** *'ஒளியுடையோர்' என்னும் பொருட்டாகிய 'தேவர்' என்னும் பெயர். இங்கு இடுகுறியாகாது காரணமாய் நின்று, 'ஞானிகள்' எனப் பொருள் தந்தது. இறைவன், பரிபாகிகட்கு அறிவாயும் ஞானிகட்கு இன்பமாயும் விளங்குவன். இவை இரண்டுமே, 'அருளல்' எனப்படும் என்க. முன்னர், "தெருளும் உலகிற்கும் தேவர்க்கும்" என்றதனால், பின்னர், 'ஏனையோர்க்கு' என்பது போந்தது. "செய்யும்" என்றது முற்று. சுருளும் சுடர் - எதிர்ப்பட்ட பொருள்கள் வெதும்பி மடிதற்கு ஏதுவாகிய ஒளி; ஞாயிறு 'நின்றும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தல். 'நிற்ப' என்பது 'நின்று' எனத் திரிந்துநின்றது. "இருட்டறை" இறந்த கால வினைத்தொகை. இருளுதலை, 'இருட்டுதல்' எனவும் வழங்குப. "ஆம்" என்றது, "போல்வான்" என உவமமாய் நின்றது.*

***இதனால், மறைத்தல் பரிபாகம் இல்லாதார் மேலதாயே நிகழ்தல் கூறப்பட்டது.***

**432. *தெளிவுரை :-*** *தான் ஒருவனே, நிலமுதல் நாதம் ஈறாய கருவிகள், நால்வகை வாக்குக்கள், நான்காகவும் எட்டாகவும் பத்தாகவும் மற்றும் பலவாகவும் சொல்லப்படுகின்ற திசைகள்,*

432. அரைக்கின்ற அருள்தரும் அங்கங்கள் ஓசை
உரைக்கின்ற ஆசையும் ஒன்றொடொன் றொவ்வாப்
பரக்கும் உருவமும் பாரகந் தானாய்க்
கரக்கின் றவைசெய்த காண்டகை யானே. 6

433. ஒளித்துவைத் தேனுள் ளுறவுணர்ந் தீசனை
வெளிப்பட்டு நின்றருள் செய்திடு மீண்டே
களிப்பொடுங் காதன்மை என்னும் பெருமை
வெளிப்பட்டிறைஞ்சின்நும் வேட்சியுமாமே. 7

---

*ஒன்றோடு ஒன்று ஒவ்வாது பல்வேறு வகையினவாய் நிற்கின்ற உடம்பு களும் பிறவுமாகிய உருவங்கள், நிலவுலகம் முதலிய உலகங்கள் இவை அனைத்துமாய் நின்று, மெய்யுணர்வைத் தடுக்கின்ற அப்பொருள்களை ஆக்கிய, எல்லா உயிர்களாலும் அறிந்து அடையத்தக்க இறைவனே அத்தடையை நிகழ்விக்கின்ற மறக்கருணையைச் செய்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அரைக்கின்ற கரக்கின்ற' என்பவற்றின் ஈற்று அகரங்கள் தொகுத்தலாயின. அரைக்கின்ற அருள் - துன்புறுத்துகின்ற கருணை; மறக்கருணை; என்றது திரோபவத்தை. 'அரிக்கின்றருள்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். "தரும்" என்றது முற்று. தனித்து நில்லாது தொக்குநின்று காரியத்தைத் தோற்றுவித்தலின், நிலம் முதலிய கருவிகளை, "அங்கங்கள்" என்றார். அங்கங்கள் முதலாக வேண்டும் இடங்களில் தொகுக்கப்பட்ட எண்ணும்மைகளை விரித்துக் கொள்க. "தான்" என்பதனை முதலில் வைத்து உரைக்க.*

*இதனால், சிவபெருமான் உலகத்தை ஆக்கி, அதனுட் கரந்து நின்று திரோபவிக்குமாறு கூறப்பட்டது. ''அருள்'' என்றதனால், மறைத்தலும் அருளேயாதல் குறித்தார்.*

**433. *தெளிவுரை :-*** *மறைத்தலைச் செய்கின்ற அவனை அவன் என்னோடு உடனாய் நிற்கின்ற அருட்தொடர்பை உணர்ந்து பிறர் அறியாதவாறு என் உள்ளத்திலே மறைத்து வைத்தேன். அதனால், இனி அவன் எனக்கு வெளிப்படையாகத் தோன்றி அருள்புரிதல் திண்ணம். நீவிரும் என்னைப்போலவே அவனது அருட்தொடர்பை உணர்ந்து, அவ்வுணர்வினால் எழுகின்ற இன்பத்தோடு கூடிய 'பேரன்பு' என்னும் சிறப்புத் தன்மை வெளிப்பட, அவனை அகத்தும், புறத்தும் வழிபடு வீர்களாயின், 'அவன் எமக்கு எப்பொழுது வெளிநிற்பான்' என்று ஏக்கமுற்றிருக்கின்ற உங்கள் வேட்கை நிரம்புவதாகும்.*

**434.** ஒருங்கிய பாசத்துள் உத்தம சித்தன்
இருங்கரை மேலிருந் தின்புற நாடி
வருங்கரை ஓரா வகையினிற் கங்கை
அருங்கரை பேணில் அழுக்கது வாமே. 8

---

***குறிப்புரை :-*** *மெய்யுணர்வினால் உணர்பவர் உள்ளத்தில் இறைவன் இனிது வெளிப்பட்டு நிற்கவும், பிறர் அவனை 'யாண்டுளன்' எனத்தேடி எய்க்கின்றாராதலின், மெய்யுணர் வுடையார், இறைவனைத் தங்கள் உள்ளத்தில் ஒளித்து வைத்திருப்பதாகவும், வெளியே புறப்பட ஒட்டாது தளையிட்டு வைத்ததாகவும் கூறுதலைப் பின்வரும் திரு மொழிகளாலும் உணரலாம்.*

*ஆர்வல்லார் காண அரனவனை! அன்பென்னும்*
*போர்வை யதனாலே போர்த்தமைத்துச் - சீர்வல்ல*
*தாயத்தால் நாமும் தலைநெஞ்சி னுள்ளடைத்து*
*மாயத்தால் வைத்தோம் மறைத்து.*

*- தி.11 அம்மைத் திருவந்தாதி, 96*

*முன்னை ஞான முதல்தனி வித்தினைப்*
*பின்னை ஞானப் பிறங்கு சடையனை*
*என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்*
*றன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே.*

*- தி.5 ப.91 பா.2*

*'அவ் வீசனை' எனச் சுட்டு வருவித்து உரைக்க. வேட்சி - வேட்கை. உம்மை இறந்தது தழுவிற்று.*

*இதனால், மறைத்தலைச் செய்பவனாகிய இறைவனை அருளலைச் செய்பவனாகப் பெறும் முறை கூறப்பட்டது.*

*(இம் மந்திரத்தின்பின் பதிப்புக்களில் காணப்படுகின்ற 'நின்றது தானாய்' என்னும் மந்திரம், மேல் 400 ஆவது திருமந்திரமாக வந்தது).*

**434. *தெளிவுரை :-*** *கடலில் அகப்பட்டவன் அதன் கரையை அடைந்து இன்புறவேண்டி நீந்தும்பொழுது அக்கரை அருகில் வருவதை அறியாதிருத்தல் போலவும், கங்கைக்கரையில் நிற்பவன் அதனுள் மூழ்காமல் கரையிலே நிற்றல்போலவும் மேலான சித்தாகிய ஆன்மா, கீழான மலத்துள் நின்று மாசும் துன்பமும் உடையதாகின்றது.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடி முதலாகத் தொடங்கி, 'உத்தம சித்தன் பாசத்துள் அழுக்கதுவாம்' எனக் கூட்டி முடிக்க.* ***சித்தாகிய***

**435.** மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
அண்ணலும் இவ்வண்ண மாகிநின்றானே. **9**

---

*உயிரை, **'சித்தன்'** என ஆண்பாலாக ஓதியது வடமொழி முறை. "வருங் கரை" என்றது, கடற்கரையை என்பது ஆற்றலால் விளங்கிற்று. பேண், முதனிலைத் தொழிற்பெயர். இல் இரண்டும் ஒப்புப் பொருளில் வந்த உருபுகள். "அழுக்கு" என்றது, துன்பம், மாசு இரண்டிற்கும் ஒப்பக் கூறியது. துன்பம் நீங்காமைக்கும், மாசு நீங்காமைக்குமாக வேறு வேறான இரண்டு உவமைகள் கூறினார். 'நாடி' என்றது பெயர்.*

*இதனால், பரிபாகம் இல்லாத உயிர் மறைத்தலுட் படுமாறு கூறப்பட்டது.*

*இதனால், மலபரிபாகம் இல்லாத உயிர்கள் மறைத்தல் தொழிலுட்படுதல் கூறப்பட்டது.*

**435. தெளிவுரை :-** *மண் ஒன்றே கலங்கள் (பாத்திரங்கள்) பலவற்றிலும் பொருந்தி நிற்கின்றது. அதுபோலச் சிவபெருமான் ஒருவனே உயிர்கள் அனைத்தினுள்ளும் நிற்பான். ஆயினும், கண் பிற பொருளைக் காணுமாயினும், தன்னையும், தன்னொடு பொருந்தியுள்ள உயிரையும் காணாததுபோல, உயிர்கள் பிறவற்றை அறியுமாயினும், தம்மையும், தம்மோடு உடனாய் நிற்கின்ற சிவனையும் அறிதல் இல்லை.*

**குறிப்புரை :-** *முதற்காரண நிமித்த காரணமாய வேறுபாடு உண்டாயினும், ஒன்று பலவற்றுள் நிற்றல் மாத்திரைக்கு மண்ணை உவமை கூறினார். பொருளால் உவமத்துள் கண் உயிரைக் காணாமையும், உவமத்தால் பொருட்கண் தம்மைக் காணாமையும் கொள்ள வைத்தார். "இவ்வண்ணம்" என்றது; 'உயிர் கண்ணினது காட்சிக்கு அகப்படாது நிற்றல் போல' என்றவாறு. உயிர் காணாமையை இறைவன் மேல் வைத்து ஓதினார், இங்குக் கூறுகின்றது அவன் தொழிலாதல்பற்றி. இத்திருமந்திரப் பொருளே பற்றி மெய்கண்டதேவர்,*

*காட்டிய கண்ணே தனைக்காணா; கண்ணுக்குக்*
*காட்டிய உள்ளத்தைக் கண்காணா - காட்டிய*
*உள்ளம் தனைக்காணா; உள்ளத்தின் கண்ணாய*
*கள்வன்றான் உள்ளத்தின் கண்.*

*- சிவஞானபோதம் - சூ 9, அதி 1.*

*என ஓதினமை காண்க.*

## 13. அருளல் (அநுக்கிரகம்)

**436.** எட்டுத் திசையும் எறிகின்ற காற்றொடு
வட்டத் திரையனல் மாநிலம் ஆகாயம்
ஒட்டி உயிர்நிலை என்னும்இக் காயப்பை
கட்டி அவிழ்ப்பன் கண்ணுதல் காணுமே. 1

**437.** உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை
நச்சியே இன்பங்கொள் வார்க்கு நமன்இல்லை
விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத்
தச்சு மவனே சமைக்கவல் லானே. 2

---

*இனி முறையானே சருவ அநுக்கிரகமான மலபரிபாகமுற்ற உயிர்களைச் சிவபெருமான் தன் திருவடிகளில் சேர்த்துக் கொள்ளுதலை ஒன்பது திருமந்திரங்களான் உணர்த்துகின்றார்.*

**436.** தெளிவுரை :- *'காற்று, நீர், நெருப்பு, நிலம், வானம்' என்னும் ஐம்பெரும் பூதங்களும் ஒருங்கியைத்துப் பின்னிய 'உயிருக்கு இடம்' எனச் சொல்லப்படுகின்ற இந்த உடம்பாகிய பைக்குள் உயிர்களை முன்பு அடைத்துக் கட்டிவைத்துப் பின்பு அவிழ்த்து வெளிவிடுகின்றான் சிவபெருமான்.*

*குறிப்புரை :- "வட்டத்திரை", கடல்; பின்மொழி ஆகுபெயர். இது நீரைக் குறித்தது. "ஒட்டி" என்பதன்பின் 'ஆக்கிய' என ஒருசொல் வருவிக்க. 'கட்டியவன் கட்டியவாறே விட்டொழிதல் இல்லை; அவிழ்க்கின்றான்' என அருளலாகிய அறக்கருணையது சிறப்பை உணர்த்தினார்.*

*இதனால், பந்தமாகிய மறைத்தலையேயன்றி, வீடாகிய அருளலைச் செய்பவனும் சிவபெருமானே என்பது கூறப்பட்டது.*

> *கட்டிய நீயே அவிழ்க்கின் அல்ல*
> *தெட்டனை யாயினும் யான் அவிழ்க் கறியேன்.*
>
> *- திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது-9*

*என்று அருளியதும் இதனை.*

**437.** தெளிவுரை :- *தம் தலைக்குப் பன்னிரண்டங்குலத்திற்கு மேலாய் ஓங்கி, அறிவு வடிவாய் ஒலிக்கின்ற சிவபெருமானது திருவடிச் சிலம்பொலியையே விரும்பிக் கேட்டு அதனால், இன்பம் அடைபவர்கட்கு இறப்பு இல்லை. உலகமாகிய தேர்க்கு உறுப்புக்*

*களாகிய நிலம் முதலிய பூதங்களும், முச்சுடர்களும் ஆகிய பொருள்களையும் படைத்து, அவற்றால் அத்தேரினைப் பண்ணி இயங்க விடுகின்ற தச்சராகிய வினைஞர்களைப் படைப்பவனும் அவனேயாகலின்.*

***குறிப்புரை :-*** *'பிறப்பு இறப்புக்களைத் தந்து நிற்பவனாகிய தலைவனை அடைதலையன்றி, அவ்வல்லல் தீர்வதற்கு வழி வேறில்லை' என்றவாறு. இறப்பாவது, இப்பிறப்பிற்கு ஏதுவாக முகந்துகொண்ட வினை முடிவெய்த, மறு பிறப்பிற்கு ஏதுவாம் வினை வந்து நிற்றலின் இவ்வுடல் நீங்குதலாம். இந்த நீக்கத்தையே யமன் செய்வன். இறைவனது திருவருள் பெற்றோர்க்கு அவர் பல பிறப்புகளிலும் ஈட்டக் குவிந்து கிடக்கும் சஞ்சித வினை அவனது அருள்நோக்கத் தானே சுட்டெரிக்கப்படுதலின், அவர்க்கு மறுபிறப்பிற்கு ஏதுவாய் வரும் வினை இல்லையாம். ஆகவே, அவர்க்கு இவ்வுடம்பு நீங்கியபின் கிடைப்பது முத்தியேயாகும்.* ***இந்நீக்கத்தினை இவர்க்கு 'நீலருத்திரர் செய்வார் எனச் சிவாகமங்களும், 'சிவகணத்தினர் செய்வர்' எனப் புராணங்களும் கூறும். ஆகவே, 'இவர்கட்கு நமன் இல்லை' என்றார்.*** *எனவே, 'சாவா நிலை' எனப்படுவது இதுவே என்பது இனிது விளங்கும். இஃது அறியாதார், 'உடல் நீக்கம் யாவும் சாவே' என மயங்கி 'இறைவன் திருவருள் பெற்றாரும் சாவாதிருந்திலர்' என்று இகழ்தலும், 'உடல் நீங்காது நிலைக்கப்பெறுதலே திருவருள் நிலை' எனக்கொண்டு அதனைப்பெற பெரிதும் விழைதலும், உழத்தலும் செய்வர். அவையெல்லாம் அருளாசிரியரது அருள்மொழிகளின் பொருளை உள்ளவாறு உணரும் ஆற்றல் இல்லாமையால் விளைவனவே என உணர்க. அருளாசிரியராயினார் ஒருவரும் உடலை நிலைக்கப்பண்ண எண்ணாமை அறிக. திருவருள் பெறாதார் எடுத்த உடலினின்று நீங்குதல், ஒருவர் குடியிருந்த வீட்டிற்கு உடையவர் அவரை அதனின்றும் போக்கப்போவது போல்வதும், திருவருள் பெற்றார் எடுத்த உடலின் நீங்குதல் பிறர் வீட்டில் குடியிருந்தவர் தமக்கென வீடு அமைந்தமையால் குடியிருந்த வீட்டை விடுத்துப்போதல் போல்வதுமாம். ஆகவே, இருதிறத்தாரும் தாம் இருந்த வீட்டை விடுத்துச் செல்லுதல் காணப்படுமாயினும் அச்செலவு இரண்டினிடை உள்ள வேறுபாடு பெரிதாதல்போல, சாகின்றவரும், வீடுபெறுகின்ற வரும் எடுத்த உடலின் நீங்குவாராயினும், அவ்விருவரது நீக்கத்திடை உள்ள வேறுபாடு பெரிது என்க.*

*வித்து, 'விச்சு' என மருவிற்று, ''விச்சதின்றியே விளைவு செய்குவாய்" (தி.8 திருச்சதகம், 96) "விச்சின் றிநாறுசெய்வானும்" (தி.4*

**438.** குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணைக்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப் போல்எங்கள் கோன்நந்தி வேண்டில்
அசைவில் உலகம் அதுஇது வாமே. **3**

---

*ப.4 பா.2) என்பவற்றிற் போல 'உலகப் பகுதிகள் எட்டு' என்னும் வகைபற்றி ஓதுகின்றாராதலானும், மேலைத் திருமந்திரத் தொடர்பானும் உலகிற்கு வித்துப் பூதங்களாகவே உரைக்கப்பட்டது. தச்சனை, "தச்சு" என்றது, 'அரசு, அமைச்சு' என்பனபோல ஒற்றுமை வழக்கு. இது குறிப்புருவகமாகலின், 'வித்து, உலகு' என்பவற்றிற்கு உரிய உருவகங்களும் விரித்து உரைக்கப்பட்டன.*

*இதனால், பிற தொழில்களைப் பிறர்பால் வைத்துச் செய்யினும், அருளல் தொழிலை அவனன்றிச் செய்வார் இல்லை என்பது கூறப்பட்டது.*

*'பட்டிப் பசுவைக் கால்சேரக் கட்டியவனே அதற்கு அப்பட்டித்தன்மை நீங்கியபின்னர் அவிழ்த்தல்போல, இறைவனும் ஆணவம் உடைய உயிர்களைக் கன்மம் மாயைகளுட் படுத்து, ஆணவம் நீங்கியபின்னர் அவற்றினின்றும் விடுப்பன்' என்றற்கு, "கட்டி அவிழ்ப்பன்" என்று முதற்கண் அருளிச்செய்தவர், அவிழ்க்கின்ற அவ்வருளின் சிறப்புத் தோன்றுதற் பொருட்டு அவன் கட்டுங் காலத்துக் கட்டியவாற்றை எல்லாம் விரிக்கின்றார். இதுமேல் போந்த விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத் தச்சும் அவனே சமைத்தலின் விரிவாதல் உணர்க.*

**438. *தெளிவுரை :-* *மட்கலத்தை வனைகின்ற குயவன் மண்ணைக் கொண்டு ஒருவகைக் கலத்தையே வனையாது, குடம் சால் கரகம் முதலாகப் பல்வேறு வகைப்பட வனைவன். அதுபோலவே, எங்கள் சிவபெருமானது இச்சையால் தளர்வில்லாத உலகம் பல்வேறு வகைப்படத் தோன்றும்.***

***குறிப்புரை :-* "அது இது ஆம்" என்றது, 'பல்வேறு வகையினவாம்' என்றவாறு. 'அங்ஙனம் பல்வேறாகத் தோற்றுவிக்க விரும்புதல், உயிர்களது கன்மத்துக்கு ஏற்பவாம்' என்பது, குயவன் பல்வேறாக வனைதல், கொள்வார் விருப்பம் நோக்கியதாலாகிய உவமத்தால் பெற்றாம். உவமைக்கேற்ப, 'வேண்டி உலகத்தை அது இதுவாக வனைவான்' என்று இறைவன் மேல் வைத்து ஓதாது, "உலகம் அது இது ஆம்" என உலகின்மேல் வைத்து ஓதினார். குயவன் கருவியால் செய்தல்போலச் செய்யாது இறைவன் நினைவு**

**439.** விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேஉல காக்கும்
கொடையுடை யான்குணம் எண்குண மாகும்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே. **4**

*மாத்திரையானே செய்ய அவனது முன்பில் உலகம் தொழிற்படும் என்றற்கு.*

*இதனால், கட்டிய வகை ஒன்றன்றிப் பல என்பது பொது வகையால் கூறப்பட்டது. இதனானே, அவிழ்க்கும் காலத்து அவை அனைத்தையும் முற்ற நீக்குதல் பெறப்பட்டது.*

**439. தெளிவுரை :-** *நன்மையே (மங்கலமே) வடிவாய் உள்ள சிவபெருமான் உலகியலின் வேறுபட்டவன்; அஃது அவன் இடபத்தையே ஊர்தியாகவும், பூதங்களையே உறுதிச் சுற்றமாகவும் கொண்டிருத்தலால் விளங்கும். அதனால், உயிர்களின் வினைகட்குத் தக்க பரிசாக உலகத்தைப் படைத்துக் கொடுக்கும் கொடையாளனும், கொடுத்து அவ்வுயிர்களின் அறிவிற்கறிவாய் நின்று வினைப்பயனைத் துய்ப்பித்து அவை செவ்வி முதிர்ந்த காலத்தில் வீடுபெறச் செய்கின்றவனும் அவனே.*

***குறிப்புரை :-*** *''குணமே குணமாகும் சடையுடையான்'' என்பதனை முதற்கண் வைத்து, 'விகிர்தன்' என்றதனை அதன் பின்னர் கூட்டி, அதன்பின்னும், ''படையுடையான்'' என்பதன் பின்னும் ''ஆதலின்'' என்னும் சொல்லெச்சங்கள் வருவிக்க. ''குணம்'' இரண்டனுள் முன்னது 'நன்மை' என்னும் பொருட்டு, "குணம் நாடிக் குற்றமும் நாடி" (குறள், 504) "குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டி" (தி.8 திருவம்மானை, 20) "குன்றே யனைய குற்றங்கள் குணமாம் என்றே நீ கொண்டால் - என்றான் கெட்டது" (தி.8 குழைத்த பத்து, 3) "குற்றம் செய்யினும் குணம்எனக் கருதும் கொள்கை கண்டு" (தி.7 ப.55 பா.4) என்பவற்றிற் போல 'குணம் எண்குணமாம்' எனவும் பாடம் ஓதுப.*

*இதனால், சிவபெருமானே கட்டவும், அவிழ்க்கவும் வல்லனாதல் தெளிவிக்கப்பட்டது.*

> *"கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேறாதே*
> *இடபம்உகந்து ஏறியவாறு எனக்கறிய இயம்பேடீ"*
>
> *- தி.8 திருச்சாழல், 15*

*என்றருளியவாற்றால், இடப ஊர்தி உலகியலுக்கு ஒவ்வாமை பெறப்படும்.*

440. உகந்துநின் றேபடைத் தான்உல கேழும்
உகந்துநின் றேபடைத் தான்பல ஊழி
உகந்துநின் றேபடைத் தான்ஐந்து பூதம்
உகந்துநின் றேஉயிர் ஊன்படைத் தானே. 5

441. படைத்துடை யான்பண் டுலகங்கள் ஏழும்
படைத்துடை யான்பல தேவரை முன்னே
படைத்துடை யான்பல சீவரை முன்னே
படைத்துடை யான்பர மாகிநின் றானே. 6

---

**440.** *தெளிவுரை :- சிவபெருமான் 'சுத்தம், மிச்சுரம், அசுத்தம்' என்பனவாக உலகங்களை முத்திறத்துப் பல்வேறு வகைப்படப் படைத்ததும், 'நல்லூழி, தீயூழி, பொதுவூழி' என்பனவாகக் காலங்களை முத்திறத்துப் பல்வேறு வகைப்படப் படைத்ததும், 'நிலம், நீர், தீ, வளி, வான்' எனப் பூதங்களை ஐந்தாகப் படைத்ததும், உடம்புகளை, தேவ உடம்பு, மக்கள்உடம்பு முதலாக ஏழு வகையாகப் பல்வேறு வகைப்படப் படைத்ததும் எல்லாம் உயிர்கள் உய்ய வேண்டும் என்று விரும்பியேதான்.*

*குறிப்புரை :- எனவே, சிவன் குயவன் போலத் தன் நலம் கருதிப் பலபடப் படையாது, உயிர்களின் நலம் கருதியே அவ்வாறு படைக்கின்றான் என்றதாம்.*

*இதனால், படைப்பினை இறைவன் பலபடப் படைத்தற்கண் நிகழ்வதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

441. *தெளிவுரை :- சிவபெருமான் மேற்கூறியவாறு பலவற்றையும் படைத்து, அவற்றுள்* ***சித்துப்பொருளை அடிமைகளாகவும், சடப் பொருளை உடைமைகளாகவும் கொண்டு, தான் தலைவனாய் நின்று, அவையனைத்தையும் ஆள்கின்றான்.***

*குறிப்புரை :- 'ஆகவே, அடிமைகளாகிய உயிர்கட்கு, வேண்டுங் காலத்து வேண்டுவனவற்றைத் தருதல் அவனுக்குக் கடன்' என்பது குறிப்பெச்சம். "பல சீவர்" என்றது, தேவர் ஒழிந்த பிற உயிர்களை. தேவர், 'அமரர்' (இறவாதவர்) எனப்படுதல்பற்றி அவர் பிறவாதவரோ என ஐயம் நிகழுமாதலின், அது நிகழாமைப் பொருட்டு அவரை வேறு கூறினார்.*

*இதனால், உயிர்கட்குப் பந்தமும், வீடும் தருதல் அவனுக்குக்*

**442.** ஆதி படைத்தனன் ஐம்பெரும் பூதம்
ஆதி படைத்தனன் ஆசில்பல் ஊழி
ஆதி படைத்தனன் எண்ணிலி தேவரை
ஆதி படைத்தவை தாங்கிநின் றானே. 7

**443.** உண்ணின்ற சோதி உறநின்ற ஒருடல்
விண்ணின் றமரர் விரும்பும் விழுப்பொருள்
மண்ணின்ற வானோர் புகழ்திரு மேனியன்
கண்ணின்ற மாமணி மாபோதமாமே. 8

---

*கடனாதல் கூறப்பட்டது.*

**442.** *தெளிவுரை :-* *மேற்கூறிய பலவற்றையும் படைத்த சிவபெருமான், படைத்ததனோடு ஒழியாது அவற்றைக் காத்தும் நிற்கின்றான்.*

*குறிப்புரை :-* *'அதனால், அருளலும் அவனது கடன்' என்பது குறிப்பெச்சம். முதல் மூன்று அடிகள் அனுவாதம்.*

*இதனால், ஏதுக் காட்டி மேலது வலியுறுத்தப்பட்டது.*

443. *தெளிவுரை :-* *ஆன்ம அறிவினுள் நிற்கின்ற அறிவாயும், ஆன்ம அறிவின்வழி உடலை இயக்குதலின் உடலாயும், தேவர்களும் விரும்பி அடையும் இன்பப் பொருளாயும், 'மண்ணுலகத்தேவர்' (பூசுரர்) என்று சொல்லப்படுகின்ற அந்தணர்கள் வேதம் முதலியவற்றால் புகழ்கின்ற அருட்கோலத்தை உடையவனாயும் உள்ள சிவபெருமானே, கண்ணில் உள்ள கருமணி, உடல் செல்லுதற்குரிய நன்னெறியைக் காட்டுதல்போல, உயிர் செல்லுதற்கரிய ஞானநெறியைக் காட்டுகின்ற பேராசிரியனாய் வருவன்.*

*குறிப்புரை :-* *'அவ்வாறு வந்து ஞானத்தை அருளுதலே அநுக்கிரகம் எனப்படுவது' என்பது குறிப்பெச்சம். 'போதகன்' என்பது குறைந்து நின்றது. இனி 'ஆம்' என்பதனைச் சொல்லெச்சமாகக் குறைந்து 'மாபோதகனே' என்றும் பாடம் ஓதுப.*

*இதனால், அநுக்கிரகமாவது, இது என்பது கூறப்பட்டது.*

**444.** ஆரும் அறியாத அண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே
நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்
சோராமற் காணுஞ் சுகம்அறிந் தேனே. **9**

---

**444.** *தெளிவுரை :-* *ஒருவராலும் அறியப்படாத சிதாகாசத் திருமேனியனாகிய சிவபெருமான், மண் முதலிய பூதக் கூட்டுறவாலாகிய மானுட உடம்பிலே நிற்கின்ற உயிரின்கண், நீரிற் கலந்த பால்போல வேறற நின்று, செவ்வி பெற்ற உயிர்கட்கு அருள் புரிகின்ற செம்மையை அறியாமையால் மறந்தொழியாது, அறிவால் அறிந்துநின்று, அதனால் விளைகின்ற இன்பத்தையும் நான் பெற்றேன்.*

*குறிப்புரை :-* *'ஆரும் அறியா அகண்டத் திருவுரு' எனப் பாடம் ஓதுதலும் ஆம், கடம் சிறப்புருவகம். இதனால், "நீர்" என்றது உயிராதல் பெறப்பட்டது. இவ்வுயிர், மலம் நீங்கிய சுத்தான்மசைதன்னியம் என்க. 'இதனையே இறைவன் தானாக ஆவேசித்து நின்று பக்குவிகளுக்கு ஞானத்தை உணர்த்துவன்' என்பது.*

*"இனி, இவ்வான்மாக்கட்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என்றது, அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்" (சிவஞானபோத வார்த்திகம் - சூ.8)*

*என்றதனானும், அதன் உரையானும் உணர்க. நேர்மை - செம்மை. திரோபவம் அவனுக்கு இயற்கையன்றாக அநுக்கிரகமே இயற்கையாதல் பற்றி "நேர்மை" என்றார். இனி, 'நேர்மை - நுட்பம்' எனினுமாம். இவ்வாறு சிவனே குருவாய் நிற்றலை அறிதலும், அறிந்த பின்னும் பயிற்சி வயத்தால் மறத்தலை ஒழிதலும் அரியவாதல் பற்றி "சோராமல் காணும்" என்றார், காணும் சுகம் - காண்பதனால் விளையும் இன்பம். அது அநுபவத்தாலன்றிக் காட்டப்படாமையின், 'அறிந்தேன்' என்றார். இத்திருமந்திரப் பொருளையே மெய்கண்ட நூல்கள் பரக்க எடுத்து விரித்தல் அறிக.*

*இதனால், அநுக்கிரகத்தின்கண் படுவனவெல்லாம் தொகுத்துக் கூறப்பட்டன.*

## 14. கரு உற்பத்தி (கர்ப்பக்கிரியை)

445. ஆக்குகின் றான்முன் பிரிந்த இருபத்தஞ்
சாக்குகின் றானவன் ஆதிஎம் ஆருயிர்
ஆக்குகின் றான்கர்ப்பக் கோளகை யுள்ளிருந்
தாக்குகின் றான்அவன் ஆவ தறிந்தே. 1

*படைப்பு முதலிய ஐந்தொழிலையும் உணர்த்திய பின்னர் உடம்பின்மேல் நிகழும் முதல் மூன்றனுள் காத்தலும், அழித்தலும் அவற்றிற்கு வாயிலாவனவற்றால் கட்புலனாக நிகழ்தல் பற்றி ஓராற்றான் அறியப்படுதலான் அவற்றை ஒழித்துப் படைத்தல், நிகழுமாற்றை உணர்த்துதற்பொருட்டு அதனை இவ்வுலகத்தில் சிறப்புடைய மக்கட் பிறப்பின்மேல் வைத்து நாற்பது திருமந்திரங்களான் உணர்த்துகின்றார். இது கருப்பையுள் தோன்றும் பிற பிறப்புக்களுக்கும் பெரும்பான்மை ஒக்கும். ஏனையவற்றிற்குச் சிறுபான்மை ஒக்கும். கருப்பக் கிரியை - கருவுறுதற்பொருட்டுச் சிவபெருமான் செய்யும் திருவருட் செயல். வாதவூரடிகளும், "மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து" என்று எடுத்துக்கொண்டு, கரு அழியாது நின்று வளர்தலின் அருமையைக் கூறுமுகத்தால், அங்ஙனம் வளர்த்து நிற்கும் இறைவனது கருணைத் திறத்தை உய்த்துணரவைத்தார். ''கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லினுள் தேரைக்கும் - விருப்புற்றமுதளிக்கும் மெய்யன்" (திருவள்ளுவர் வரலாறு) எனப் பிறவிடத்தும் கூறப்பட்டது.*

*கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை*
*கருநரம்பும் வெள்ளெலும்புஞ் சேர்ந்தொன்றாகி*
*உருவாகிப் புறப்பட்டிங் கொருத்தி தன்னால்*
*வளர்க்கப்பட் டுயிராருங் கடைபோ காமே.*

*- தி.6 ப.25 பா.6*

*என அப்பரும் இதனை விளக்கும் திருவுள்ளத்தால் அருளிச் செய்தார்.*

**445.** *தெளிவுரை :- ஓர் உயிரைக் கருப்பையுள் தோற்றுவிக்கின்ற சிவபெருமான் அதன் முன்னைத் தூல உடம்போடு ஒழிந்த ஐந்து ஞானேந்திரியம், ஐந்து கன்மேந்திரியம், ஐந்து பூதம், சத்தாதி ஐந்து விடயம், வசனாதி ஐந்து விடயம் என்னும் இருபத்தைந்தையும் மீள அதன் சூக்கும உடம்பினின்றும் தோற்றுவிப்பான். அங்ஙனம் தோற்றுவித்தல், அக் கருப்பையுள் அத்தோற்றத்திற்குத் தடையாகவரும் ஊறுபாடுகளையறிந்து அவற்றை நீக்குதற்பொருட்டு அவ்விடத் திருந்தேயாம்.*

*குறிப்புரை :-* *முதற்கண் "ஆக்குகின்றான்" என்பது பெயர். ஏனைய, சொற்பொருட்பின்வருநிலையாய் நின்றன. 'ஆதியும் எம் ஆருயிருமாகிய அவன்' என மாற்றியுரைக்க. கோளகை - வட்டம்; இங்குக் கருப்பை.*

*இதனால், சிவபெருமான், கருவைத் தோற்றுவித்தல் கூறப்பட்டது.*

## குழந்தைப் பிறப்பு



***யானை முதலா எறும்புஈ றாய***
***ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்***
***மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து***
***ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்***
***ஒருமதித் தான்றியின் இருமையில் பிழைத்தும்***
***இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும்***
***மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்***
***ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்***
***அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்***
***ஆறு திங்களில் தாழ்புவி பிழைத்தும்***
***எட்டுத் திங்கள் கட்டமும் பிழைத்தும்***
***ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்***
***தக்க தசமதி தாயொடு தான்படும்***
***துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்***









***1வது வாரம்***




***2வது வாரம்***




***3வது வாரம் - இதயம், மத்திய நரம்பு மண்டலம்***




***4வது வாரம் - கண், இதயம், கால்***






***5வது வாரம் - கண், இதயம், கால்***






***6வது வாரம் - கண், பல், கால், இதயம்***






***7வது வாரம் - 5 விரல்கள், கண்,***
***இரத்தநாளம், கல்லீரல்***






***8வது வாரம் - கண், காது, மூளை, கை, மூட்டு***




***9வது வாரம் - காது, கண், தோள், விரல்கள்***




***10வது வாரம் - மூளை, வயிறு, சிறுநீரகம், ஜீரண செயல்பாடு***

***20வது வாரம் - முழு உருவம்,***
***வெளிப்புற ஒலியை உணர்தல்***

***40வது வாரம் - பார்வை,***
***செவித்திறமை, சுவை, தொடு உணர்வு,***
***தாயின் ஒலியை உணரும் தன்மை***



**The Development of a Baby in**
**THE WOMB IS A MIRACLE**
To develop from a tiny egg the size a grain of salt to a new born baby in the womb in 9 months is a miracle

446. அறிகின்ற மூலத்தின் மேல்அங்கி அப்புச்
செறிகின்ற தானத்துச் செந்தாள் கொளுவிப்
பொறைநின்ற இன்னுயிர் போந்துற நாடிப்
பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே. 2

---

446. ***தெளிவுரை :-*** *ஆறு ஆதாரங்களினும் முதலாவதாக அறியப்படுகின்ற மூலதாராத்திற்குமேல் உதராக்கினியும், உணவாக உண்ணப்படும் நீரும் நிறைந்திருக்கின்ற சுவாதிட்டானத் தானத்தில், 'பூதசார சரீரம், யாதனா சரீரம்' என்பவற்றிற்கேனும், அவை இரண்டுமின்றித் தனக்கேனும் (சிவனுக்கேனும்) சுமையாய் நின்ற உயிர் வந்து பொருந்துமாற்றை எண்ணி, முதற்கண் செந்நீராகிய நிலைக்களத்தை நிற்பித்து, அந்நிலையை அக்கரு வெளிப்போதுதற்குப் 'பத்துத் திங்கள்' என்னும் சுமைக் காலத்தையும் சிவபிரான் ஆக்குகின்றான்.*

***குறிப்புரை :-*** *செந்நீர் - தாயின் கருப் பையுள் நின்று கருவைத் தாங்கி வளர்ப்பது. நிலைக்களத்தை, "தாள்" என்றார். நிலவுலக உடலாகிய பூத உடம்பை விட்ட உயிர் நுண்ணுடம்போடு சென்று, நல்வினை, பயன்தருமாயின், அவ்வுடம்பு பூதசார சரீரத்தைத் தோற்றுவிக்கப் புத்தேள் (தேவ) உடம்பு பெற்றுத் துறக்கத்தை (சுவர்க்கத்தை) அடையும், தீவினை, பயன் தருமாயின் நுண்ணுடம்பு யாதனா சரீரத்தைத் தோற்றுவிக்க அதனைப் பெற்று நிரயத்தை (நரகத்தை) அடையும். இரண்டும் இல்லையாயின், நுண்ணுடம்போடே கல்லுப்போல் அதற்குரிய புவனங்களுள் யாதானும் ஒன்றிற் செயலற்றுக் கிடக்கும். அம்மூன்று நிலைகளுமே முறையே பூதசார சரீரம், யாதனா சரீரம், இறைவன் திருவருள் என்பவற்றிற்குச் சுமையாகச் சொல்லப்பட்டன. உயிர் நுண்ணுடம்பைப் பற்றி நின்று கருவில் வந்து பொருந்தித் தூல உடம்போடு பிணிப்புண்டு, அதுவே தானாய் ஒற்றுமைப்பட்டு, அதற்கேற்ற உணர்வுகள் அனைத்தும் பொருந்துதற்குப் பத்துத் திங்கள் கால எல்லை வேண்டுவதாதலை யறிந்து இறைவன் அத்துணைக் காலமும் அக்கருவைத் தாய்க்குச் சுமையாமாறு வைத்துக் காக்கின்றான் என்றபடி. இதனானே ஊழ் வேறுபடுமாயின், சில திங்களுக்குள்ளே அவ்வுயிர் 'அந்நிலை யினின்றும் நீங்கிப் பிறிது நிலையை அடையச் செய்வான்' என்பதும் பெறப்பட்டது. "அங்கி அப்புச் செறிகின்ற தானத்து" என்றதனால் "அவ் விரண்டாலும் அக்கரு அழிவுறாது காக்கின்றான்" என்பதும் கூறியவாறாயிற்று 'ஞானத்து' என்பது பாடம் அன்று. அங்கி அப்பு -*

**447.** இன்புறு காலத் திருவர்முன்பூறிய
துன்புறு பாசத் துயர்மனை வானுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்
அன்புறு காலத் தமைத்தொழிந் தானே. **3**

**448.** கருவை ஒழிந்தவர் கண்டநால் மூவேழ்
புருடன் உடலில் பொருந்தும்மற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுந்த
துருவம் இரண்டாக ஓடி விழுந்ததே. **4**

---

*ஜாடாராக்கினி என்னும் உணவைச் சீரணிக்க செய்யும் பித்த நீர். வெப்பமானது.*

*இதனால், அப்பெருமான் கருவை வளர்த்தல் கூறப்பட்டது.*

**447.** *தெளிவுரை :- முதற்கண் தந்தை தாயர் இன்பம் நுகர்கின்ற காலத்து அவர்தம் உடம்பினின்றும் வெளிப்படும் வெண்டுளி செந்துளிகளால் அமைந்த இல்லமாவது உடம்பு துன்பத்தைத் தருகின்ற வினையின்வழி அதனை நுகரும் அவ்வில்லமாகிய உடம்பின்கண் அதன் தலைவனாகிய உயிர்க்கிழவன் பலவகைப் பண்புகள் பெற்று வாழும் காலத்தையும், அக் காலத்து அவனுக்கு உளவாகின்ற வாழ்க்கை முறைகளையும் கருவைத் தோற்றுவித்து வளர்க்கத் திருவுளம் பற்றிய அப்பொழுதே அதன்கண் அமையுமாறு சிவபெருமான் அமைத்து விடுகின்றான்.*

*குறிப்புரை :- 'முன்பு இருவர் இன்புறு காலத்து ஊறிய மனை' என்க. காரணப் பொருளின் தன்மையைக் காரியப்பொருள்மேல் ஏற்றி, "ஊறிய மனை" என்றார். "நூலாக்கலிங்கம்" (பதிற்றுப்பத்து 2ஆம் பத்து 2) என்பதிற்போல. வான் - பெருமை; தலைமை. உளம் - ஆன்மா; அதனை 'உளன்' என ஆண்பாலாக ஓதினார். அன்றி, இறுதிப் போலியாகக் கொள்ளினும் ஆம். அருளை, "அன்பு" என்றார்.*

*இதனால், கருவில் உள்ள உயிர் பிறந்தபின் வாழ்தற்குரிய முறைகளைச் சிவபெருமான் முன்பே வகுத்தமைத்தல் கூறப்பட்டது.*

> *"பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்காடென்னும்*
> *ஆறும்முன் கருவுட் பட்டது"*

*எனச் சிவஞானசித்தி (சூ.2.9) கூறுதல் காண்க.*

**449.** **விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி**
**ஒழிந்த முதல்ஐந்தும் ஈரைந்தொ டேறிப்**
**பொழிந்த புனல்பூதம் போற்றுங் கரணம்**
**ஒழிந்த நுதல்உச்சி உள்ளே ஒளித்ததே.** **5**

---

**448.** ***தெளிவுரை :-*** *மெய்யுணர்வால் பிறப்பின் நீங்கிய அறிவர் கண்ட, நில முதல் புருடன் ஈறாக உள்ள இருபத்தைந்து கருவிகளும் (தத்துவங்களும்) தந்தை உடலிலே பொருந்தியிருந்து, பின் தாயது கருப்பைக்குள்ளே, ஆண், பெண், இரண்டில் யாதேனும் ஓர் உருவமாமாறு புகும். இதனை மெய்யுணர்வில்லார் அறியார்.*

***குறிப்புரை :-*** *மற்று, அசைநிலை. "ஓரார்" என்றதனை ஈற்றில் வைத்து உரைக்க. 'புகுந்த அது' என்பதில் அகரம் தொகுத்தல்; புகுதலை அனுவாத முகத்தாற் கூறினார் என்க.*

*இதனால், சிவபெருமான் தாயது கருப்பைக்குள் மட்டுமன்றி, அதிற் புகுமுன்பே தந்தையது உடம்பில் அதனை வைத்துக் காத்தல் கூறப்பட்டது.*

**449.** ***தெளிவுரை :-*** *தந்தையது உடலில் பொருந்தியிருந்த இருபத்தைந்து கருவிகளும் தாயின் கருவில் புகுதற்கு அவ்விருவரது கூட்டம் நிகழும். அப்பொழுது ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, பூதம் ஐந்து ஆகிய பதினைந்து கருவிகளால் பருவுடம்பு வளருமாறு தந்தை உடம்பினின்றும் வெண்பால் (சுக்கிலம்) பொழியும் அதன்பின் பருவுடம்பு வளர ஏனைத் தன்மாத்திரைகளும், அந்தக் கரணங்களும் அவ்வுடம்பினுள் புருவ நடுவிலும், தலையிலும் பொருந்தி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *'தன்மாத்திரைகளும், அந்தக்கரணங்களும்' என்றது 'நுண்ணுடம்பு' என்றவாறு. அதனை இவ்வாறு கருவியாக வகுத்தோதியது, மேல், (தி.10 பா.448) "நால் மூவேழ்" என்றதனோடு இயைதற் பொருட்டு. 'பொழிந்தது' என்பது ஈறு குறைந்தது.*

*பூதத்தின் காரணத்தைப் "பூதம்" என்றார். 'ஒழிந்த' இரண்டும், 'நுண்ணுடம்பிற்கு வேறாய்' எனப் பொருள் தந்தன.*

*இதனால், தந்தை உடலில் தொகுத்து வைத்துக் காத்த இருபத்தைந்து கருவிகளைப் பின் தாயுடலில் வகுத்து வைத்துச் செயற்படுத்துதல் கூறப்பட்டது.*

**450.** பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவும்
தாவி உலகில் தரிப்பித்த வாறுபோல்
மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவுங்
கூவி அழும்தான் குறிக்கொண்ட போதே. **6**

**451.** போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
மூழ்கின்ற முத்தனும் ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டுடன் நாலு புரவியும்
பாகன் விடானெனிற் பன்றியு மாமே. **7**

---

**450.** ***தெளிவுரை :-*** *பூவின் மணத்தைக் காற்றே உலகிடை எங்கும் பரவச்செய்தல்போல, நுண்ணுடம்பின் செயல்களைத் தச வாயுக்களே பருவுடம்பில் கூவி அழுதல் முதலிய தொழில்களாக நிகழச் செய்யும். அவ்வாறு செய்விக்கச் சிவபெருமான் நினைந்தபொழுது.*

***குறிப்புரை :-*** *தசவாயுக்கள், 'பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன்' என்பன. சீவன் - உடம்போடு கூடிய உயிர் அஃது இங்கு உடம்பையே குறித்தது. 'பிராணன் முதலிய வாயுக்கள் இல்லையேல் நுதலிலும், உச்சியிலும் நிற்கும் அந்தக்கரணங்களின் ஆற்றல் பயன்படாது' என்பதாம். கூவி அழுதல் - அழைத்து அழுதல். 'அவிழும்' என்பது பாடம் அன்று. பிறந்த குழவிக்கு முதற்செயல், வாய்விட்டு அழுதல். ஆதலின், அதனையே எடுத்தோதி ஏனையவற்றை உடன்கொள்ள வைத்தார். நுண்ணுடம்பின் செயலாற்றலே தூல உடம்பில் செயலாக வெளிப்படும். அதற்குத்துணை செய்வன தச வாயுக்கள் என்க.*

*இதனால், குழவி பிறந்தபின் அதனைச் சிவபெருமான் தச வாயுக்களின் வழிச் செயற்படுத்தல் கூறப்பட்டது.*

**451.** ***தெளிவுரை :-*** *புரியட்டக சரீரம் முதலியவற்றை இறைவன் உபகரியாவிடின் இழிந்த பிறவியாம் என்றல் நுதலிற்று.*

*உள்ளே போகின்ற புரியட்டக சரீரங்களும், அவற்றுடன் புகுகின்ற வாயுக்கள் பத்தும், அவற்றோடு கூடிய காமாதி எட்டுக் குணங்களும், அவற்றுடன் அழுந்தியிருக்கிற ஆன்மாவும், ஒன்பது வாயில்களும் எட்டு நாகங்களும், நான்கு குதிரைகளும் பாகனாகிய இறைவன் உபகரியாவிட்டால் பன்றியைப் போல இழிந்த பிறவியாய்விடும் என்றவாறு.*

**452.** ஏற எதிர்க்கில் இறையவன் றானாகும்
மாற எதிர்க்கில் அரியவன் றானாகும்
நேரொக்க வைக்கின் நிகர்போதத் தானாகும்
போரொத்த மைந்தனும் பேரரசாளுமே. **8**

---

*போகின்ற எட்டு - சூக்கும சரீரதத்துவங்களாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், புத்தி, மான், அகங்காரம் என்பன புகுகின்ற பத்து - பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன் நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன.*

*புகுகின்ற எட்டு - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்கரியம், துன்பம், அகங்காரம் என்பன, மூழ்கின்ற முத்தன் - இவற்றுள் திளைத்து நிற்கின்ற ஆன்மா, ஒன்பது வாய்தல் - கண், காது, மூக்கு, வாய், குதம், குய்யம் என்பன, நாகம் எட்டு - ஞானேந்திரியங்களாகிய மெய் ஒன்றும், வாய் ஒன்றும், கண்ணிரண்டும், காது இரண்டும், மூக்கு இரண்டுமாய பாம்புகள் எட்டு ஞானேந்திரியங்களை நாகமாக உருவகித்தலை ஐவாய் அரவு என்பதனாலும் அறியலாம்.*

*நாலுபுரவி - உயிர் ஏறிச் சென்று பொறிவழியாகப் புலன்களைச் சென்று பற்ற உதவும் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன, இக்கருவி கரணங்களை இறைவன் உதவாவிடின் பன்றியைப் போல இழிந்த பிறப்பினவாம் என்பது விளக்கியவாறு.*

*இதற்கு இவ்வாறன்றி, சூக்கும சரீரதத்துவங்கள் எட்டும், உட்புகின்ற பூதம் புலன் புரியட்டகம் ஆகிய பதினெட்டும் விடுகின்ற ஆன்மாவும், நவத் துவாரங்களும், குண்டலினியும் பன்னிரண்டு விரற் கிடையளவு புறம் போந்து போகும் பிராணன் ஆகிய குதிரையும் பாகன் விடாவிடில் பன்றியும் ஆம் என உரைப்பாருமுளர்.*

*இதனால், சிவபெருமான் உயிர்ப்பு வழியாகப் பருவுடம்பை நிலைப்பித்தல் கூறப்பட்டது.*

**452.** *தெளிவுரை :- தந்தையும் தாயும் கூடுங்காலத்துக் காமம் மிக்கிருப்பின், பிறக்கும் மகன் தாமத குணம் மிக்கிருப்பான். காமம் குறைந்திருப்பின், மகன் சத்துவகுணம் மிக்கிருப்பான். காமம் மிகுதலும் குறைதலும் இன்றி அளவிற்பட்டதாக இருப்பின், மகன் இராசதகுணம் மிக்கிருப்பான். இம்முத்திறத்து மைந்தருள் சத்துவ குணம் மிக்கவன் அரசனாதற்கும் உரியவனாவான். இது ஆண் பெண்களின் சுக்கில*

**453.** ஏயங் கலந்த இருவர்தஞ் சாயற்றுப்
பாயுங் கருவும் உருவா மெனப்பல
காயங் கலந்தது காணப் பதிந்தபின்
மாயங் கலந்த மனோலய மானதே. **9**

---

*(வெண்துளி ஆகிய விந்து) சுரோணிதங்கள் (செந்துளி ஆகிய கருமுட்டை) ஏறியும், இறங்கியும் ஒத்தும் இருப்பதனால் விளையும் குணமாறுபாடு கூறியதானது.*

***குறிப்புரை :-*** *எதிர்த்தல் - கூடுதல். இறைவன் - உருத்திரன், "அரியவன்" என்பதில் அவன், பகுதிப்பொருள் விகுதி, 'மைந்தன் அரசும் ஆளும்' என உம்மையை மாற்றி உரைக்க. உருத்திரன், மால், அயன் என்னும் குணமூர்த்திகள் மூவரும் தொழிலால் முறையே தாமதம், சாத்துவிகம், இராசதம் என்னும் குணத்தினராதலின், அக்குணம் மிக்க மைந்தரை அவர்களாகவே கூறினார். அதனானே, 'அம்மைந்தர்க்கு அத்தேவர், இயக்கத் தேவராய் (அதிதேவராய்) நிற்பர்' என்பதும் கொள்ளப்படும். இருவரிடத்தும் காமம் ஒருவகையாய் நில்லாது மாறி நிற்பின், இங்குக் கூறிய பயன் தந்தையின்பால் வைத்துக் கொள்ளப்படும். என்னை வித்தின்கண் உள்ளதே விளைவின் கண்ணுமாம் ஆதலின், "மகனறிவு தந்தையறிவு" (நாலடியார், 367) எனப் பிறவிடத்தும் கூறப்படுதல் காண்க.*

*தக்கார் தகவில ரென்ப தவரவர்*
*எச்சத்தாற் காணப் படும்.*

*என்னும் திருக்குறளும் (குறள், 114) இப்பொருள்மேல் நோக்குடையதே யாம். இதனால், 'தோன்றும் கருவினது வினைக்கு ஏற்பச் சிவன் தந்தை தாயரது கூட்டத்தில் அவர்கட்கு இந்நிலையே விளைப்பன்' என்றவாறு. 'பேர் ஒத்தமைந்தன்' என்பதில், "பேர்" என்றது, முன்னர்க் கூறிய மூன்றனுள் "அரி" என்பது அரசனை மால் எனக் கூறும் வழக்குப் பற்றிக் கொள்ளப்படும். ஏறுதல் முதலியவற்றிற்குத் தந்தை உடற் பொருளாகிய வெண்டுளியையே வினை முதலாக உரைப்பர்; அது பொருளாயின் எடுத்தோதலே வேண்டும் என்க.*

*இதனால், "பண்புறுகாலமும்" என மேற்கூறப்பட்ட (தி.10 பா.445) பண்புகளைச் சிவபெருமான் கருவில் அமைக்குமாறு கூறப்பட்டது.*

**453. தெளிவுரை :-** *காமம் பொருந்திய ஒருவனும் ஒருத்தியுமே பற்றுக்கோடாக நின்று அவரின் நீங்கிப் பாய்கின்ற கருமுதற்*

454. கற்பத்துக் கேவலம் மாயாள் கிளைகூட்ட
நிற்குந் துரியமும்பே தித்து நினைவெழ
வற்புறு காமியம் எட்டாதல் மாயேயம்
சொற்புறு தூய்மறை வாக்கினாஞ் சொல்லே. 10

---

*பொருள்கள், பின்பு கருப்பதிந்து உருவாதற் பொருட்டுப் பதிவிற்கு முன்பே அப்பொருள்களில் அவர் உடம்புகளிலே பல கூட்டுப் பொருள்கள் வந்துசேர, கருப் பதிந்தபின் அக்கருவிற்குக் குணங்கள் மேற்கூறிய முறையில் அமையும்.*

***குறிப்புரை :-*** *'அதனால், மேற்கூறியவாறு நிகழும் கூட்டத்தினால் பிறக்கும் மைந்தர் மேற்கூறிய வகையினராய் இருப்பர்' என்பது குறிப்பெச்சம். ஏயம் - இழிவு; காமம். 'தஞ்சம்' என்பது 'தஞ்சு' எனக் கடைக்குறைந்து நின்றது. 'நிறம்' என்னும் பொருட்டாகிய 'சாயம்' என்னும் திசைச்சொல் நாயனார் காலத்து இன்மையின் 'சாயத்து' என்பது பாடம் ஆகாது. கரு, ஆகுபெயர். உருவாம் என - உருவாய்த் தோன்றும் என்னும் காரணத்தால். காயம் - கூட்டுப்பொருள், கலந்து, 'கலக்க' என்பதன் திரிபு. "அது" என்றது. 'கரு' என்றதன் இயற்பெயர்ப் பொருளை. காண - உருத்தோன்றுமாறு. மாயம் - நிலை இல்லாது மாறிவருகின்ற. மனம் - அந்தக்கரணம். அவை ஒடுங்குதல் குண தத்துவத்திலாகலின், ''மனோலயம்'' என்றது ஆகுபெயரால், முக்குணத்தை உணர்த்திற்று. ஆனது - பொருந்திற்று.*

*இதனால், மேலதற்குக் காரணம் கூறப்பட்டது. இதனானே கருவில் நின்ற உயிர்க்குச் சிவபெருமான் 'மனோமய கோசம்' எனப்படும் குண சரீரத்தைக் கூட்டுமாறும் பெறப்பட்டது. குண சரீரம், பர சரீரம் முத்திறத்தினுள் ஒன்று. பரசரீரத்தின் முத்திறம், 'காரண சரீரம், கஞ்சுக சரீரம், குண சரீரம்' என்பன. இவைமுறையே 'ஆனந்தமய கோசம், விஞ்ஞானமய கோசம், மனோமய கோசம்' எனவும் பெயர்பெறும்.*

*இதனால், கருவினுள் நின்ற உயிர்க்குச் சிவபெருமான் சூக்கும தேகத்தையும் வாக்குகளையும் தருதல் கூறப்பட்டது.*

**454. தெளிவுரை :-** *கருப்பையுள் முதற்கண் அதீத நிலையில் உள்ள குழவிக்குப் பின் 'மாயை' (அசுத்த மாயை) என்பவள் தனது சுற்றமாகிய வித்தியா தத்துவங்களைச் சேர்ப்பிக்கத் துரிய நிலையைப் பெறும். பின்பு அத் துரிய நிலையும் நீக்கிச் சுழுத்தி சொப்பன சாக்கிரங்களாகிய நிலைகள் கூடுமாறு வலிமை மிக்க வினைப்பயன்*

**455.** **என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்**
**செம்பால் இறைச்சி திருந்த மனைசெய்து**
**இன்பால் உயிர்நிலை செய்த இறையோங்கும்**
**நன்பால் ஒருவனை நாடுகின் றேனே.** **11**

---

*களாகிய, 'தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதன்மன், அஞ்ஞானம், அவைராக்கியம் அநைசுவரியம்' என்னும் பாவங்கள் எட்டும் மாயேயமாய்ப் பொருந்தும். அதனால், குழவி தனது வினை நுகர்ச்சிக்குரிய தன்மைகள் யாவும் நிரம்பப் பெறும்.*

*குறிப்புரை :-* *"மாயாள்" எனவும், 'கிளை' எனவும் உருவகமாக்கிக் கூறியது. குழவியது அறிவைச் செவிலிபோல வளர்த்தல் தோன்றுதற்கு. 'துரியமும்' என்பது பாடம். 'கான்மிகம்' என்பது "காமிகம்" என நின்றது. தன்மம் முதலிய புத்தி குண பாவங்களைக் கூறியது, குழவி நிரம்பிய வளர்ச்சி உடையதாதலைக் குறித்தவாறு. 'பொருந்தும்' என்பது சொல்லெச்சமாய் நின்று "எழ" என்ற எச்சத்திற்கு முடிபாயிற்று. 'மாயேயம் எட்டாதல் பொருந்தும்' என மாற்றி உரைக்க. 'மறை வாக்குப் போலச் சொல் உளதாம்' என்க. அஃதாவது 'தெளிவான உணர்வுநிலை உளதாம்' என்றபடி. இதனால், சிவபெருமான் குழவிக்கு உணர்வு நிரம்பச் செய்யுமாறு கூறப்பட்டது.*

**455. தெளிவுரை :-** *எலும்புகளைக் கழிகளாகவும், நரம்புகளை கயிறுகளாகவும் குருதியாகிய நீராற் பிசைந்த இறைச்சியாகிய மண்ணைச் சுவர்களாகவும் பொருந்த அமைத்து, உயிர் இன்புற்று வாழ்தற் பொருட்டு இல்லம் ஒன்றை ஆக்கி, அளித்த, உயிர் மிக்கவனாம் நல்லவனாகிய ஒருவனை (சிவபெருமான்) நான் நினைக்கின்றேன்.*

*குறிப்புரை :-* *'அவ் இல்லத்தில் வாழும் நீவிரும் அவனை நினைத்தல் வேண்டும்; நினையீராயின், நன்றிகொன்றீராவிர்' என்பது கருத்து. மிடைந்து - கழிகள் நெருங்க வைத்து. "என்பால்" என்றற்கேற்ப, 'நரம்பால், செம்பாலால்' என உருபு விரிக்க. வரி - வரிய; இறுக. செம்பால் - இரத்தம். இறைச்சி திருந்த - ஊன் பதப்பட. "இன்பால்" என்பது "நிலை" என்னும் தொழிற்பெயர் கொண்டது. நிலை - நிற்றல்; இஃது ஆகுபெயராய், நிற்கும் இடத்தைக் குறித்தது. இறை - இறைமை; நடுவு நிலைமை. "இறைபுரிந்து" (குறள், 541) என்றார் திருவள்ளுவரும். நன்பால் ஒருவன் - நன்மைப் பகுதிக்கண் நிற்கின்ற ஒப்பற்றவன். இது*

**456.** பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனி பகலோன்
இதஞ்செய்யும் ஒத்துடல் எங்கும் புகுந்து
குதஞ்செய்யும் அங்கியின் கோபந் தணிப்பான்
விதஞ்செய்யும் மாறே விதித்தொழிந் தானே. **12**

---

*தூலதேகத்தின் ஆக்கப்பாட்டினை விரித்தவாறு. இவ்வாறே,*

*“என்பினால் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந்*
*திதுநம் மில்லம்*
*புன்புலால் நாறுதோல் போர்த்துப்பொல் லாமையான்*
*முகடு கொண்டு*
*முன்பெலாம் ஒன்பது வாய்தலார் குரம்பையின்*
*மூழ்கி டாதே.* *-தி.2 ப.79 பா.8*

*என ஞானசம்பந்தரும்,*

*“என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட் டென்னையோ*
*ருருவ மாக்கி”* *- தி.4 ப.5 பா.2*

*என நாவுக்கரசரும் அருளுமாறு அறிக.*

*இதனால், கருவுள் நின்ற உயிருக்குச் சிவபெருமான் தூல சரீரத்தைக் கூட்டுதல் பெறப்பட்டது.*

**456.** *தெளிவுரை :- கருவிற்குத் தூலதேகம் அமைந்த பின்னர் தாயது சந்திரகலையாகிய மூச்சுக் காற்றுச் சூரிய கலையொடு மாறு கொள்ளாமல் இயங்கிக் குழவியது தூலதேகம் முழுதும் பரவிக் குளிர்ச்சியைத் தந்து வளரப்பண்ணும். அவளது சூரிய கலையாகிய மூச்சுக் காற்றும் அவ்வாறே சென்று குழவியின் உடலில் வெப்பத்தை உண்டாக்கி அதனை அழியாதிருக்கச் செய்யும். இவ்வாறு அவ்விருவகைக் காற்றினையும் சிவபெருமான் தாயது மூலத்தின்கண் உள்ள வெப்பம் மிக்கெழாது அளவில் நிற்குமாறு அமைக்கின்றான்.*

*குறிப்புரை :- ‘ஒத்து எங்கும் புகுந்து’ என்பதை முன்னும் கூட்டி, ‘பால்வண்ணன் ஒத்து மேனி எங்கும் புகுந்து பதம் செய்யும்’ எனவும் ‘பகலோன் ஒத்து உடல் எங்கும் புகுந்து இதம் செய்யும்’ எனவும் உரைக்க. பால்வண்ணன் சந்திரன். கருவில் நிற்கும் குழவிக்குத் தாயது மூச்சே மூச்சாவதின்றி வேறில்லையாகலின், பொதுப்பட வாளா ஓதினார். தேகத்தை அழியாமல் இருக்கச் செய்வது வெப்பமே யாகலின், அதனை, ‘‘இதம்’’ என்றார். பதம் குளிர்ச்சியாதல் வெளிப்படை.*

**457.** ஒழிபல செய்யும்வினையுற்ற நாளே
வழிபல நீராட்டி வைத்தழு வாங்கிப்
பழிபல செய்கின்ற பாசக் கருவைச்
சுழிபல வாங்கிச் சுடாமல்வைத் தானே. 13

---

*இதனால், சிவபெருமான் கருவினுள் குழவியது தூல தேகத்தை வளர்த்தல் கூறப்பட்டது.*

*457. **தெளிவுரை :-** கருவினுள் வீழ்ந்த உயிர் அவ்விடத்தே இறக்கும் ஊழ் உளதாயின், பதிந்த கருவைச் சிவபெருமான் பல நிலைகளில் பல்லாற்றான் அழிந்தொழியச் செய்வான். அவ்வாறின்றிப் பிறந்து வாழும் ஊழ் உளதாயின், இடையூறுகள் பலவற்றால் தாக்கப்படுகின்ற வினைக்கட்டுடைய அக்கருவைச் சிவபெருமான் அது பிறப்பதற்கு முன்னுள்ள இடைக்காலத்தில் கழிகளில் அகப்படாது, ஆற்றில் நீராட்டுதல் போலவும் எரிகின்ற வைக்கோற் குவையிலிருந்து வாங்கிச்சுடாது வைத்தல் போலவும் தாயது வயிற்றில் உள்ள நீராலும், நெருப்பாலும் அழியாது காப்பான்.*

***குறிப்புரை :-*** *ஒழி - ஒழிதல்; அழிதல். முதனிலைத் தொழிற்பெயர். "செய்யும்" என்பது முற்று. "வினையுற்ற நாள்" என்பது தாப்பிசையால் முன்னரும் சென்றியையும். மூன்றாம் அடியை முதல் அடியின் பின்னர்க் கூட்டுக. உயிர் மண்ணில் வாராது கருப்பையுள் நிற்கும் காலத்தை "வழி" என்றார். "சுழிபல வாங்கி நீராட்டி, வைத்தழு வாங்கிச் சுடாமல் வைத்தான்" எனக் கூட்டுக. வை - வைக்கோல், வைக்கோற் குவையைத் 'தழு' என்றல் வழக்கு.*

*இதனால், கருவைச் சிவபெருமான் வினைக்கேற்றவாறு அங்கே அழித்தல், காத்தல் இரண்டனையும் செய்தல் கூறப்பட்டது.*

*குழவி கருவினுள் அழியாது தப்புதலை மாணிக்கவாசகர் போற்றித் திருவகவலுள் பலபட விரித்தருளிச் செய்தார்.*

> *"கருவினுள் அழிவ தாயும் கழிந்திடா தழிவதாயும்*
> *பரிணமித் தழிவதாயும் பாலனாய் அழிவதாயும்"*

*எனச் சிவஞான சித்தி (சூ.2.93)யும் கூறிற்று.*

*458. **தெளிவுரை :-** தந்தையது வெண்டுளி தோன்றும் நரம்பு வழியாகப் போந்த வெண்டுளியும், அவ்வாறே தாயது செந்துளி*

458. சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்
அக்கிர மத்தேதோன் றும்மவ்வி யோனியும்
புக்கிடும் எண்விரல் புறப்பட்டு நால்விரல்
அக்கரம் எட்டும்எண் சாணது வாகுமே. 14

459. போகத்துள் ஆங்கே புகுந்த புனிதனும்
கோசத்துள் ஆகங் கொணர்ந்த கொடைத்தொழில்
ஏகத்துள் ஆங்கே இரண்டெட்டும் மூன்றைந்தும்
மோகத்துள் ஆங்கொரு முட்டைசெய் தானே. 15

---

*தோன்றும் நரம்பு வழியாகப் போந்த செந்துளியும் கலந்து, பன்னிரண்டு அங்குலமாகிய தாயது மூச்சுக்காற்றில் நான்கு அங்குலம் புறத்தே போந்தொழிய, எட்டங்குலமே உட்புகுதலால், அக் கரு தனது கையால் எண்சாண் அளவினதாய் வளரும்.*

***குறிப்புரை :-*** *யோனி, ஆகுபெயர். மூச்சுக் காற்று நான்கு அங்குலம் ஒழிய, எட்டு அங்குலம் உட்புகும் என்பது நன்கறியப்பட்ட தாகலின், அக்காற்றினை எடுத்தோதாராயினார். புறப்பட்டு 'புறப்பட' என்பதன் திரிபு. "அக் கரம்" என்றது, 'அக்குழவியின் கரம்' என்றவாறு. எட்டும் - நீட்டியளக்கின்ற.*

*இதனால், உடம்பு எண்சாண் ஆகுமாறு கூறப்பட்டது.*

**459. *தெளிவுரை :-*** *வித்து என்பதே விந்து என மருவிற்று. யோனி பெண்ணின் கருஉறுப்பு. அதில் தோன்றும் கருமுட்டை சுரோணிதம் எனப்படும் செந்நீர். சுக்கில நாடி - ஆணின் விந்துக்குழாய். அக்கரம் எட்டு - எழுத்தெட்டு - நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பெரும் பூதங்களின் பீஜம் (அ) வித்தெழுத்துக்கள் ல, வ, ர, ய, அ மற்றும் பிரணவத்தின் அகார, உகார, மகாரங்கள் எனலுமாம். ஒருவன், ஒருத்தி ஆகிய இருவரது இன்ப நுகர்ச்சிக் காலத்தில் கருவைத் தோற்றுவிக்கப் புகுந்த சிவபெருமான், அவ்வொருத்தியது கருப் பையினுள் ஓர் உடம்பைக் கொணர்ந்து வைத்த கொடைத் தொழிலாலே வெள்ளிய துளிகள் பலவற்றுள் ஒரு துளியின்கண்ணே முப்பத்தொரு கருவிகள் ஆகிய மாயா காரியங்கள் சேர, அவற்றால் முதற்கண் ஒரு பிண்டத்தை அமைக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *மோகம் - மோகினி. ஆன்ம தத்துவத்திற்கும் இது வழிமுறையாற் காரணமாதல் பற்றி இதனையே கூறினார்.*

'இரண்டெட்டும், மூவைந்துமாகிய மோகத்துள்' என்க. மோகம், கருவியாகுபெயர். "கோசம்" என்பது உயிரெதுகை.

இதனால், பரசரீரத்துள் குண சரீரமே யன்றிக் கஞ்சுக சரீர காரண சரீரங்களும் கூட்டப்படுதல் கூறப்பட்டது.



460. பிண்டத்தி னுள்ளுறு பேதைப் புலன்ஐந்தும்
பிண்டத்தி னூடே பிறந்து மரித்தன
அண்டத்தி னுள்ளுறு சீவனும் அவ்வகை
அண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே. 16

461. இலைப்பொறி யேற்றி யெனதுடல் ஈசன்
அலைப்பொறி யிற்கரு ஐந்துடல் நாட்டி
நிலைப்பொறி முப்பதும் நீர்மை கொளுவி
உலைப்பொறி ஒன்பதில் ஒன்றுசெய் தானே. 17

---

460. ***தெளிவுரை :-*** *உடம்பிலே பொருந்தியுள்ள மயக்கத்தை உடைய ஐம்பொறிகளும் அவ்வுடம்பையே என்றும் பற்றுக்கோடாகக் கொள்கின்றன. அதுபோலவே முட்டை வடிவாகத் தோன்றும் கருவைப் பற்றியுள்ள உயிரும் அக்கருவையே பற்றுக்கோடாக கொண்டு தாயின் கருப்பைக்குள் இருக்கும்.*

***குறிப்புரை :-*** *இது, கைகால் முதலிய உறுப்புக்கள் இல்லாத பிண்டமாகிய கருவில் உயிர் செயலற்றிருத்தல் எவ்வாறு என்பார்க்கு. 'செயலின்றி, அறிதல் மாத்திரையாய் நிற்கும்' என ஐயம் அகற்றியவாறு. "பிண்டம்" என்றது உடம்பை. 'மரித்தது' என்பது பாடம் ஆகாமை அறிக. விந்துவை அடக்கிக் கொள்ளுதலால் கருப்பை "நாதம்" எனப்பட்டது. 'பிறவற்றை நோக்க அறிவாய் நிற்கின்ற ஐம்பொறிகள், அவ்வறிவுத் தன்மையில்லாத உடம்பிலே நிற்றல் போல, சடம் போல்வதாகிய பிண்டத்தில் சித்தாகிய உயிர் நிற்கும்' என்பதாம்.*

*இதனால், மேலது பற்றி எழுவதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

461. ***தெளிவுரை :-*** *எனது உடலில் நிற்கின்ற சிவபெருமான் ஒவ்வோர் உயிர்க்கும் கருவில் அதன் விதியாகிய எழுத்தோலையைத் தலையிலே வைத்து, தானே இயங்குதல் உடைய யந்திரம் போன்ற ஐந்து உடல்களை நிலைபெறச் செய்தளித்து, அவ் ஐந்துடல்களில் வேறுபட்ட, நிலையான முப்பது கருவிகளை அமைத்து, ஒன்பது வாய்களை உடைய ஒரு துருத்தியைச் செய்து தருகின்றான்.*

***குறிப்புரை :-*** *ஓலையை "இலை" என்றது, 'பத்திரம்' என்னும் வடநூல் முறை, அதன்கண் பொறிக்கப்படுவது எழுத்து. "அலைப் பொறி" என்பதில் அகரத்தைத் துகரமாக மயங்கினமையின், பாடம், "துலைப்பொறி" எனப் பிழைப்பட்டது.*

462. இன்புற் றிருவர் இசைவித்து வைத்தமண்
துன்பக் கலசம் வனைவான் ஒருவனே
ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே. 18

---

*ஐந்து உடல், மேலே சொல்லப்பட்டன. (பாடம் - 402, 424) நிலைத்தல், தம் காரியம் அழியினும் தாம் அழியாது நிற்றல், முப்பது கருவிகள், ஆன்ம தத்துவம் வித்தியா தத்துவங்களில் புருடன் ஒழிந்தவை. புருடன் தனித் தத்துவம் அன்றாதலின் அதனை நீக்கி ஓதினார். 'நீர்மையாக' என ஆக்கம் வருவித்து 'அவற்றின் தன்மை தோன்ற' என உரைக்க.*

*உலைப் பொறி - துருத்தி. 'ஒன்பதில் உலைப்பொறி ஒன்று செய்தான்' என மாறிக் கூட்டுக. ஒன்பது, எண் ஆகுபெயர். 'ஒன்பதில்' என்பதில் இல், ஐந்தாம் உருபு. "கரு" என்றதை "ஈசன்" என்றதன் பின்னர்க் கூட்டி, இரண்டையும் முதற்கண் வைத்து உரைக்க. ஒன்பது வாயையுடைய துருத்தி. இல் பொருள் உவமை. இஃது உவமையாகு பெயராய், உடம்பைக் குறித்தது. 'ஒன்பது வாய்கள்' இவை என்பதை அடுத்துக் காண்க.*

*இதனால், துருத்திபோல் அமைந்த தூல உடம்போடே ஏனை நான்குடம்புகளும் ஒட்டிக்கிடக்கச் செய்தல் கூறப்பட்டது.*

***462. தெளிவுரை :-** ஒருவனும், ஒருத்தியும் ஆகிய இருவர் இன்பம் நுகர்தற்கண் பொருந்த வைக்கும் மண்ணால் துன்பத்திற்கு ஏதுவான கலங்கள் பலவற்றையும் செய்பவன் ஒருவனே. அப் பல கலங்கள் ஆவன, நீர்ச்சால்கள் ஒன்பதும், அவற்றில் நீரை முகந்து ஆள்கின்ற கலயங்கள் பதினெட்டுமாம். இவ்வாறு குயவனது சூளை கலங்களை உருவாக்கிற்று. அதனாலே கலங்கள் உளவாயின.*

***குறிப்புரை :-** மண், கருப் பிண்டம். "கலசம்" என்றது, 'கலம்' எனப் பொதுப்பட நின்றது. உடம்பு ஒன்றேயாயினும், அதன் உட்கூறுகளைப் பகுத்துணர்த்துதற்குப் பலவாகக் கூறினார். அணைவான், உயிர், ஒன்பது, ஒன்பான் துளை (நவத்துவாரம்) அவை, கண் இரண்டு, காது இரண்டு, மூக்கு இரண்டு, வாய் ஒன்று, எருவாய் ஒன்று, கருவாய் ஒன்று. இவை நீர்வடிவாய்க் கழியும் கழிவுப் பொருள்கள் வெளிப்படும் பெருவாயில்களாதல் பற்றி "நீர்ச்சால்"*

**463.** அறியீ ருடம்பினில் ஆகிய ஆறும்
பிறியீரதனில் பெருகுங் குணங்கள்
செறியீர் அவற்றினுட் சித்திகள் இட்ட
தறிவீர் ஈரைந்தினு ளானது பிண்டமே. **19**

---

*என்றார். பதினெட்டாவன, நானூற்று ஐம்பதாம் திருமந்திரத்தில் குறிக்கப்பட்ட கருவிகள், அவை அருவப் பொருளாய் நின்று இவ்வாயில்கள் பயன்படச் செய்தலின், 'கலயம்' என்றார். சூளை இறைவன் செயல், விளைந்தது, கிடைத்தது, இவ்வொருமை தொகுதி மேல் நின்றது. 'தான், ஏ' அசைநிலைகள்.*

*இதனால், உயிர்களின் பொருட்டு உடம்பை அமைக்கு மாறெல்லாம் கூறப்பட்டன.*

**463.** *தெளிவுரை :- உலகீர், வாழ்க்கையில் வரும் நிகழ்ச்சிகளாகிய ஆறும் கருவிலே அமைக்கப்பட்டன என்பதை அறியமாட்டீர். அதனால், அவற்றில் அழுந்துதலின்றி நீங்கமாட்டீர் அவ்வுடம் பிற்றானே நல்லன பல பெருகுமாற்றையும், சிவபெருமான் அந்நல்லன வற்றால் பல பயன்கள் விளைய வைத்திருத்தலையும் உணர்ந்து அடைய மாட்டீர்; ஆயினும், நீவிர் அனைவரும் பிண்டமாகிய உங்கள் உடம்புகள் தாயர்தம் வயிற்றில் பத்துமாதம் தங்கி வளர்ந்து வந்ததை அறிவீர்கள்.*

*குறிப்புரை :- 'அதனால், பயன் என்னை' என்பது குறிப்பெச்சம். வாழ்வில் நிகழும் ஆறு மேலே சொல்லப்பட்டன. (தி.10 பா.440) 'அதனில்', என்பதில் சுட்டு, ஆக்கத்தைக் குறித்தது. குணங்கள் தன்மைகள். அவை அறவுணர்வும், இறையுணர்வும் பற்றி எழும் விருப்பமும், செயல்களும். சித்திகள் - அவற்றின் பயன்கள். 'இட்டது ஆனது' என்பன தொழிற் பெயர்கள். 'ஏனையவற்றை அறியாவிடினும், பிண்டம் பத்து மாதம் தங்கிப் பிறந்ததை அறிவீர்' என இகழ்ந்தவாறு. இவ்விகழ்ச்சி, முற்கூறிய அறியாமை பற்றியதாதல் அறிய.*

*இதனால், சிவபெருமான், 'வேம்பினோடு தீங்கரும்பும் விரவி ஊட்டுதல்போல' (தி.7 ப.46 பா.2) உயிர்கட்கு வினைப்போகத்தை நுகர் வித்தலோடு, மெய்யுணர்வைப் பெறுவித்தற் பொருட்டும் உடம்பைக் கருவினுள் தோற்றுவித்துக் காத்துத் தருகின்றான் என அதன் பயன் கூறப்பட்டது.*

**464.** உடல்வைத்த வாறும் உயிர்வைத்த வாறும்
மடைவைத்த ஒன்பது வாய்தலும் வைத்துத்
திடம்வைத்த தாமரைச் சென்னியுள் அங்கிக்
கடைவைத்த ஈசனைக் கைகலந் தேனே. **20**

**465.** கேட்டுநின் றேன்எங்குங் கேடில் பெருஞ்சுடர்
மூட்டுகின் றான்முதல் யோனி மயனவன்
கூட்டுகின் றான்குழம் பின்கரு வைஉரு
நீட்டிநின் றாகத்து நேர்பட்ட வாறே. **21**

---

**464.** ***தெளிவுரை :-*** *சிவபெருமான், உடலை அமைத்து, அதில் உயிரைக் கூட்டிய குறிப்பை உணர்ந்து, அவ்வுடல் நிலை பெறுதற் பொருட்டு அதில் நீர்மடைபோல் உள்ள ஒன்பான் துளைகளையும் அமைத்து, உறுதிப்பாடுள்ள நெஞ்சத் தாமரையின் மேல் தனது உருவத்தைத் தீயின் முனைபோல வைத்துள்ள அவனையே கூடி நான் இன்புறுகின்றேன்.*

***குறிப்புரை :-*** *'நீவிரும் அவ்வாறு அவற்றை உணர்ந்து அவனைக் கூடுதலே உடல் எடுத்ததன் பயன்' என்பது கருத்து. ''உயிர் வைத்தவாறும்" என்பதன்பின், 'உணர்ந்து' என ஒருசொல் வருவிக்க. "மடைவைத்த" என்பதில் வைத்த, உவம உருபு. திடம், உண்மை, அன்பு. 'இருதய கமலத்தின் மேல் இறைவனை தீக்கொழுந்து வடிவாய் உள்ளான்' என, உபநிடதங்களில் தகர வித்தை கூறும் வழிகூறப்பட்டது. யோகியர் அதனையே நினைத்தலின், "தாமரைச் சென்னியுள் அங்கிக் கடைவைத்த ஈசன்" என்றார். "சென்னி" என்றது மேல் இடத்தை. உடம்போடு நிற்குங்கால் தியானத்தாலும், பாவனையாலும் இறைவனைக் கூடும் இடம் இருதயமும், புருவ நடுவுமேயாக, அவற்றை யொழித்து 'சென்னித் தாமரை' என மொழிமாற்றி, உடம்பை விட்டுப் போகுங்கால் பற்றும் இடமாகிய பிரமரந்திரத்தைக் கொள்ள வேண்டாமை அறிக. "கைகலந்தேன்" என்பதில் கை, இடைச்சொல்.*

*இதனால், உடம்பினை அளித்த தலைவனது குறிப்பை உணர்ந்து, அதன்கண்ணே அவனைக் கூடும் முறையறிந்து கூடுதல் வேண்டும் என்பது கூறப்பட்டது.*

**465.** ***தெளிவுரை :-*** *நான்கு வேத சிவாகமங்கள் அனைத்திலும் கேட்டு நின்றது. 'என்றும் அழிவில்லாத பேரொளியாகிய சிவபெருமானே உலகனைத்திற்கும் முதற்காரண வடிவாய் நின்று அவற்றைக் கோக்கின்றான்' என்பது. எனவே, தாயது வயிற்றில்*

**466.** பூவுடன் மொட்டுப் பொருந்த அலர்ந்தபின்
காவுடைத் தீபங் கலந்து பிறந்திடும்
நீரிடை நின்ற குமிழி நிழலதாய்ப்
பாருடல் எங்கும் பரந்தெட்டும் பற்றுமே. **22**

---

*நெகிழ்ந்துபட்ட கருவை உறுதிப்படுத்தி உருவாக அமைப்பவன் அவனே. ஆதலின், தந்தை தாயாரது உடற்கூட்டம் அவனது செய்கைக்கு ஒரு கருவியாய் அமையும் அளவேயாம்.*

*குறிப்புரை :-* மூட்டுதல், தேர் உறுப்புக்களை ஒருங்கிணைத்துத் தேராக்குதல்போல, உலகுறுப்புக்கள் பலவற்றைத் தொகுத்து உலகமாக்குதல். 'யோனி' என்பதற்கு 'வாயில் அல்லது காரணம்' என்பதே பொருள். உலகிற்கு முதற்காரணம் மாயையாயினும், வித்திற்கு நிலம் போல இறைவன் அதற்கு நிலைக்களமாதல் பற்றி அவனையே, 'முதற்காரண வடிவினன்' என்று நூல்கள் சில இடங்களிற் கூறும். அவ்வாற்றால், "முதல் யோனி மயன் அவன்" என்றார். 'அவன் மூட்டுகின்றான்' என முன்னே கூட்டுக. "கேட்டு நின்றேன்" என்பதன் பின், 'அது' என்னும் எழுவாயும், "மூட்டுகின்றான்" என்பதன்பின், 'என்பது' என்னும் பயனிலையும் அவாய் நிலையாய் நின்றன. மூட்டுதற்கு, 'உலகம்' என்னும் செயப்படுபொருள் வருவிக்க. 'கருவை உருவாக நீட்டி நின்று கூட்டுகின்றான்' என்க. 'ஆகத்து உளவாதல்' என ஒரு சொல் வருவிக்க. நேர்படுதல் - நினையாததொன்றாய் இடைவருதல். இவ்வாறு கூறியது, அதன் தலைமையின்மை உணர்த்தற்கு.

*இதனால், கருவை உருப்படுத்துகின்றவன் சிவபெருமான் என்பதே உண்மை நூல் துணிபாதல் கூறப்பட்டது.*

**466.** *தெளிவுரை :-* தாய் தந்தையரது கூட்ட உறுப்புக்கள் தம்மிற் கூடிய காலத்து முன்பு தந்தையுடலில் நின்ற கரு, தாயது கருப்பையுட் சென்று கலந்து முட்டை (பிண்டம்) ஆகும். அம்முட்டையினுள் நீர்க்குமிழியில் நிழல்போல நுண்ணுடம்புக் கருவிகள் எட்டும் பருவுடல் எங்கும் பரந்து அதனைத் தாங்கி நிற்கும்.

*குறிப்புரை :-* 'இவ்வாறு தாங்கி நிற்றல், அவன் திருவுளக் குறிப்பால் அல்லது ஆகாது' என்பது கருத்து. காவுடை - சுமையாதல் உடைய. "தீபம்" என்றது, கருவை என்பதை 478 ஆம் திருமந்திரம் பற்றி அறிக. இவை இரண்டானும், 'கரு, பருவுடம்பு' என்பது கூறினார்.

**467.** எட்டினுள் ஐந்தாகும் இந்திரி யங்களும்
கட்டிய மூன்று கரணமு மாய்விடும்
ஒட்டிய பாச உணர்வென்னுங் காயப்பைக்
கட்டி அவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. **23**

---

*நுண்ணுடம்புண்மையை உணராதார், 'இப்பருவுடம்பே உடம்பு' என மயங்குவராதலின், அவர், 'கருவுற்பத்தியில் இறைவன் திருவருள் என்பது இல்லை' என்றலும் மயக்க உரையேயாம் என்றற்குப் பருவுடம்பிற்குப் பற்றுக்கோடு நுண்ணுடம்பாதலை ஓதினார். குமிழியில் நிழல், நுண்ணிதாய் உள்நிற்றற்குக் கூறிய உவமை. பாருடல் - பருவுடல். இத்திருமந்திரம் ஈரடி எதுகை பெற்றது.*

*இதனால், மேலதற்கு ஏதுக்கூறி வலியுறுத்தப்பட்டது.*




**467. தெளிவுரை :-** *நுண்ணுடம்புக் கருவிகள் எட்டனுள் தன் மாத்திரைகள் ஐந்தனையும் புலன்களாகக் கொள்கின்ற ஞானேந்திரியங்கள் ஐந்தும், அப்புலன்களைத் தம்பால் பற்றிக் கொள்கின்ற, எஞ்சிய 'மனம், அகங்காரம், புத்தி' என்கின்ற அந்தக் கரணங்கள் மூன்றும் கூடிய உடம்பென்னும் பையினுள் உயிர் என்கின்ற சரக்கைச் சிவபெருமான் முன்னர்க் கட்டிவைத்துப் பின்னர் அவிழ்த்துவிடுவான்.*

*குறிப்புரை :- நுண்ணுடம்பு இல்லையேல், பருவுடம்பு பயனிலதாம் என்பது கூறியவாறு. ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் வான் முதலிய மாபூதங்கள் ஐந்தனையும் முறையே தோற்றுவித்துப் பின் அவற்றின் குணமாய்ச் செவி முதலிய ஞானேந்திரியங்கட்குப் புலனாய் வந்து பொருந்துதலால், 'நிருவிகற்ப ஞானம்' எனப்படும் பொதுவுணர்வும், பின் அவற்றை மனம் முதலிய அந்தக்கரணங்கள் பற்றிக் கொள்ளுதலால் 'சவிகற்ப ஞானம்' எனப்படும் சிறப்புணர்வும் தோன்றுதலின், 'நுண்ணுடம்பு இல்வழி, யாதோர் உணர்வும் நிகழாது' என்பதனை,*

> *"ஓசைநற் பரிச ரூப இரதகந் தங்கள் என்று*
> *பேசுமாத் திரைகள் ஐந்தும் பிறக்கும்பூ தாதிகத்தின்;*
> *நேசஇந் திரியங் கட்கு நிகழறி விதனாற் காண்டும்"*

*எனவும்,*

> *"சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற் சத்த முன்னாத்*
> *தோற்றும்வான் வளிதீ நீர்மண் தொடக்கியே*
> *ஒன்றுக்கொன்றங்*
> *கேற்றமாம் ஓசை யாதி இருங்குணம் இயைந்து நிற்கும்"*
> *- சிவஞானசித்தி சூ. 2, 64, 65*

*எனவும்,*

> *அந்தக் கரணம் அடைவே உரைக்கக் கேள்*
> *அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் - புந்தியிவை*
> *பற்றிஅது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்தங்*
> *குற்றதுசிந் திக்கும் உணர். - உண்மைவிளக்கம்-17*

*எனவும் கூறுமாற்றான் அறிக. மாயா காரியங்களாகிய இக்கருவிகளின் வழி வரும் உணர்வெல்லாம் புறவிடயமேயாகலின், அவையெல்லாம் பாசஞானமே என்க. ஒட்டிய பாசம் - அவையே தானாகப் பொருந்திய மாயாகாரியங்கள். "உணர்வென்னும் காயம்" எனக் காரணத்தைக் காரியமாக ஒற்றுமை வழக்காற் கூறினார். கட்டி அவிழ்த்தற்கு 'உயிர்' என்னும் செயப்படுபொருள் வருவித்துக்கொள்க. இது முதற் பதின்மூன்று திருமந்திரங்கள் அந்தாதியாய் வரும்.*

*இதனால், பருவுடற்கு நுண்ணுடம்பு இன்றியமையாததாதல் கூறுமுகத்தால் மேலது வலியுறுத்தப்பட்டது.*

468. கண்ணுதல் நாமங் கலந்துடம் பாயிடப்
பண்ணுதல் செய்து பசுபாசம் நீக்கிட
எண்ணிய வேதம் இசைந்த பரப்பினை
மண்முத லாகவகுத்துவைத் தானே. 24

469. அருளல்ல தில்லை அரன்அவன் அன்றி
அருளில்லை யாதலின் அவ்வோர் உயிரைத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே. 25

---

468. ***தெளிவுரை :-*** *உயிர்கள் தூலமும், சூக்குமமும் ஆய உடம்புகளையே உடம்பாகப் பற்றிநில்லாது, சிவபெருமானது திருப்பெயராகிய திருவைந்தெழுத்தே தம்முள் ஒன்றித் தமக்கு உடம்பாகுமாறு அதனை மொழிதல் (வாசகம்), முணுமுணுத்தல் (உபாஞ்சு), கருதல் (மானதம்), உணர்தல் (சுத்தமானதம்) என்னும் முறைகளில் கணித்து (செபித்து)ப் பாசங்களினின்றும் நீங்குமாறு வேதம் முதலாகப் பொருந்திய பரந்த நூல்களை மண்ணுலகம் முதலிய எல்லா உலகங்களிலும் வகுத்து வைத்துள்ளான்.*

***குறிப்புரை :-*** *நூல்கள் என்றது சொற்பிரபஞ்சத்தை. அவை நிவிர்த்தி முதலிய கலைகளில் வைகரி முதலிய வாக்குக்களாய் நிற்றலை அறிந்துகொள்க. வாக்குகள் சுத்த மாயையின் காரியங்களாம். அதனால், அவை மயக்கத்தை நீக்கித் தெளிவுதரும் என்க. 'பாச ஞானத்தால் மயங்கும்படி பொருட் பிரபஞ்சத்தால் உயிர்களைக் கட்டி வைத்த சிவபெருமான், பின்னர் அதனின்றும் நீங்கிப் பசுஞானமும், பதிஞானமும் முறையானே எய்தி வீடுபெறுதற்குச் சொற் பிரபஞ்சத்தையும் அமைத்துள்ளான்' என்றவாறு. 'வேதமொடு' என்ற எண்ணிடைச் சொல் தொகுத்தல்.*

*இதனால், மேல் "கட்டி அவிழ்த்திடும்" என்றவழி, 'அவிழ்த்தற்கு வாயிலாவன எவை என்னும் அவாய்நிலை நிரப்பப்பட்டது'. சிவபெருமான் கருவினுள் வாக்குகளைக் கூட்டுதல் மேலே (தி.10 பா.454) கூறப்பட்டது.*

469. ***தெளிவுரை :-*** *அருளின்றிச் சிவன் இல்லை. சிவனின்றி அருள் இல்லை. ஆகவே, என்றும் அருளோடே நிற்கின்ற அவன், கருவில் வீழ்கின்ற அந்த ஓர் உயிரை வளர்க்கத் தருகின்றபொழுது திரோதான சத்தி, அதனை வளர்க்கின்ற செவிலித் தாய் என்னும் இரு தாயாரிடத்து அன்பை உண்டாக்கித் தருவான்.*

**470.** வகுத்த பிறவியை மாதுநல் லாளும்
தொகுத்திருள் நீக்கிய சோதி யவனும்
பகுத்துணர் வாகிய பல்லுயிர் எல்லாம்
வகுத்துள்ளும் நின்றதோர் மாண்பது வாமே. **26**

---

*குறிப்புரை :- அருளும், சிவனும் ஒன்றாதலைக் காட்டியது உயிரை வளர்த்தற்குக் காரணமும், வளர்க்கின்ற தாயும் அவனே ஆகின்றான் என்பதும் தோன்றுதற்கு. 'அருட்சத்தியே உயிருக்கு நற்றாய்' என்னும் கருத்தால், திரோதான சத்தியையும் செவிலியாகக் கூறினார்.*

*இதனால், கருவைப் பிறப்பித்த பின்னர் வளர்ப்பவனும் சிவபெருமானேயாதல் கூறப்பட்டது.*

**470. தெளிவுரை :-** *பாசஞானத்தைத் தருகின்ற உடம்பை வளர்க்கின்ற அம்மையும், நூல்களை மிக உணர்த்திப் பாச ஞானத்தைப் போக்கிப் பசுஞான பதிஞானங்களைத் தருகின்ற அப்பனும் செய்யும் செயல்களாவன முறையே, ஐம்புலன்களைப் பகுத்துணரும் வகையில் உயிர்கட்குப் பலவகைப் பிறப்புக்களைத் தருதலும், அவற்றின் அறிவுக்கறிவாய் நிற்றலைப் புலப்படுத்துதலும் ஆகும்.*

*குறிப்புரை :- 'பிறவியை வகுத்த' என மாற்றிக்கொள்க. தொகுத்தற்குச் செயப்படுபொருள் மேல் (தி.10 பா.468) 'வேதம் முதலாக இசைந்த பரப்பினை' என்பதனால் பெறப்பட்டது. அருளை அம்மையாகவும், சிவனை அப்பனாகவும் கூறும் முறை பற்றியும் உடலை வளர்ப்பவள் தாயும், அறிவை வளர்ப்பவன் தந்தையுமாகிச் சொல்லப்படும் வழக்குப் பற்றியும் 'அருளே பிறப்பைத் தருவது' எனவும், 'சிவனே வீடு தருபவன்' எனவும் இருபொருளும் வேறு வேறு போலக் கூறினார். அங்ஙனம் கூறினாராயினும், 'இருபொருளும் ஒன்றே' என்பது மேலைத் திருமந்திரத்தால் இனிது விளக்கப்பட்டது. "வகுத்த, நீக்கிய" என முன்னர் உடம்பொடு புணர்த்தலால் பொது வாகச் சுட்டியவற்றைப் பின்னர்ச் சிறப்பாக இனிது விளக்கினார் என்க.*

*இதனால், கண்ணுதல்தானே உயிர்களைக் கட்டியும் அவிழ்த்தும் நிற்குமாறு (தி.10 பா.467) கூறப்பட்டது. அஃதாவது திரோதான சத்தி வழியே கட்டுப்படுத்தும், அருட் சத்தியால் வீடுபெறுவித்தும் நிற்பான் என்றவாறு.*

**471. தெளிவுரை :-** *மாட்சியமையோடு கருப்பையுள் வளர்கின்ற கருவைச் சிவபெருமான் செய்வது, 'ஆண், பெண், அலி' என்னும்*

471. மாண்பது வாக வளர்கின்ற வன்னியும்
காண்பது ஆண்பெண் அலியென்னுங் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
ஆம்பதி செய்தான்அச் சோதிதன் ஆண்மையே. 27

472. ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகிற் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும்
தாண்மிகு மாகில் தரணி முழுதாளும்;
பாணவ மிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே. 28

---

*மூவகை அச்சாக. அவ்வச்சுக்கள் அமைவது, மாதா பிதாக்களின் உடற்கூறாகிய காரணப் பொருட்கு ஏற்பவாம். அவற்றிற்கெல்லாம் தக்கவாறே அப்பெருமான் தனது ஆற்றற் பதிவைச் செய்கின்றான்.*

*குறிப்புரை :-* தந்தை தாயரது வெண்டுளி செந்துளிகளை 'வன்னி நெருப்பு' என்றார். அவை அப்பூதத்தின் கூறாதல் பற்றி. அச்சு வடிவை அமைப்பதாகலின் அதனைக் "கற்பனை" என்றார். 'கற்பனையாக' என ஆக்கம் வருவிக்க. 'பூண்பது' என்பது தொழிற்பெயர். வழி - வாயில்; காரணம். பதிவை "பதி" என்றது முதனிலைத் தொழிற்பெயர். ஆண்மை - ஆற்றல். "ஆம்பதி" என்றது இன எதுகை.

இதனால், கருவைச் சிவபெருமான் மூவகை அச்சுப்பொருந்த அமைத்தல் கூறப்பட்டது.

472. *தெளிவுரை :-* கலவியால் கருப்பையுள் கலக்கும் பொருள்களில் ஆண்மகனது வெண்டுளி (சுக்கிலம்) மிகுந்திருக்குமாயின் பிறக்கும் குழவி ஆணாகும். பெண்மகளது செந்துளி (சுரோணிதம்) மிகுந்திருக்குமாயின் பிறக்கும் குழவி பெண்ணாகும். இரண்டும் சமமாய் இருக்கின் பிறக்கும் குழவி அலியாகும். அதுவன்றி, மிகுந்துள்ள வெண்டுளியில் உயிராற்றல் மிக்கிருக்குமாயின் பிறக்கும் மகன் ஆற்றல் மிக்கவனாய் அரசாளுதற்கும் உரியவனாவான். அவ்வாறன்றி மிகுந்திருக்கும் செந்துளியில் அழிக்கும் ஆற்றல் மிக்கிருக்குமாயின் பதிந்த கருப்பயனின்றி அழிந்தொழியும்.

*குறிப்புரை :-* வெண்டுளி கருவாதலும், செந்துளி அதனை வளர்ப்பதும் ஆகும். அதனால், அவை இரண்டின் தன்மைக்கும் ஏற்பக்

473. பாய்ந்தபின் அஞ்சோடில் ஆயுளும் நூறாகும்
பாய்ந்தபின் நாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்ந்திடும் வாயுப் பகுத்தறிந் திவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலு மாமே. 29

---

*கரு அமையும் என்க. பாழ் நவம், 'பாணவம்' எனப்புணர்ந்தது. நவம் - புதிது புதிதாய்த் தோன்றும் பொருள். பாழ் நவம் - பாழாதற்கு ஏதுவாம் பொருள். ஆண், பெண் என்பவற்றுள் முன் வந்தவை ஆகுபெயர்கள்.*

*இதனால், முன்னை மந்திரத்துள் "பூண்பது மாதா பிதாவழி போலவே" என்றது விளக்கப்பட்டது.*

473. ***தெளிவுரை :-*** ***துணையர் (தம்பதிகள்) கூட்டத்தில் வெண்டுளி கருப்பையினுள் சென்றபின்பும் ஆடவனுக்கு ஐந்துமூச்சு நிகழுங்காறும் இருவரும் பிரியாது முன்போலவே புல்லிக் கிடப்பாராயின், பிறக்கின்ற குழவியது வாழ்நாள் நூறாண்டாக அமையும். நான்கு மூச்சு நிகழுங்காலம் பிரியாதிருப்பாராயின் அஃது எண்பது ஆண்டாக அமையும். இவ்வாறே ஒரு மூச்சிற்கு இருபது ஆண்டாகக் கணக்கிட்டு அறியலாம். ஆயினும், மூச்சுக்களின் கணக்கை உண்மையாக அறிவதோ, மூச்சினை நெறிப்படுத்தி இயக்குதலோ பொதுமக்களுக்கு இயலாது. யோகிகளாயின் அக்கணக்கினை அறியவும், அதன்படி மூச்சினை நெறிப்படுத்து இயக்கவும் வல்லராவர்.***

***குறிப்புரை :-*** ***வெளிக்காற்றை ஒருமுறை உள்ளே வாங்கிச் சிறிது நிறுத்திப் பின் வெளியே செல்லவிடுத்து மீண்டும் அவ்வழியே வாங்கி உள்ளே நிறுத்துதல் 'ஒருமூச்சு' எனப்படும். இஃது எல்லா மக்கட்கும் இயல்பில் நிகழ்வதே. ஆழ்ந்த நினைவு இயற்கைக்கு மாறுபட்ட வழிச்செலவு, வருந்திச் செய்யும் தொழில் முதலியவற்றில் மூச்சின் இயக்கம் இயற்கை நிலையினின்றும் வேறுபடும். அவ்வாற்றால் கலவி முடிவின்கண்ணும் அது மாறுபடுதல் இயல்பே. அதனால், கலவிக்குப் பின்னும் கலந்தோர் இருவரும் தம் இயற்கை நிலையில் இருத்தல், கருக்குழவியது உடற்கட்டு முதல் நிலையிலே நன்கு அமைதற்கு வாயிலாய் அமைகின்றது என்க. மூக்கு, வாய் என்பவை வழியாக மூச்சு நிகழ்தலே வெளிப்படையாக விளங்கினும், உடம்பு முழுதும் உள்ள நுண்டுளைகள் அனைத்து வழியாகவும் அது நிகழ்வதேயாம். அதனால்,***

**474.** பாய்கின்ற வாயுக் குறையிற் குறளாகும்
பாய்கின்ற வாயு இளைக்கின் முடமாகும்
பாய்கின்ற வாயு நடுப்படிற் கூனாகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லைப் பார்க்கிலே. **30**

**475.** மாதா உதரம் மலமிகில் மந்தனாம்
மாதா உதரம் சலமிகில் மூங்கையாம்
மாதா உதரம் இரண்டொக்கில் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே. **31**

---

*தந்தை தாயரது - சிறப்பாகத் தந்தையது - மூச்சுக்காற்று, கருவுற்ற குழவிக்குப் பயன்தருவதாகும் என்க.*

*பாய்ந்திடும் யோகிக்கு - மூச்சு நெறிப்பட இயங்கி நிற்கும் யோகிக்கு - பாய்ந்திடும் யோகிக்கு இவ்வகை பகுத்தறிந்து பாய்ச்சலும் ஆம் எனக் கூட்டுக. "பாய்ச்சல்" என்றது, இங்கு மூச்சுக் காற்றினை.*

*இதனால், சிவபெருமான் குழவிக்கு வாழ்நாளை வரையறுக்குமாறு கூறப்பட்டது.*

**474.** *தெளிவுரை :- முன்னை மந்திரத்துள், 'அஞ்சு, நாலு' எனக் குறிக்கப்பட்ட மூச்சுக்காற்று அங்ஙனம் இயங்கும்பொழுது இயல்பாக இயங்கும் அளவில் சிறிதே குறையுமாயின், குழவி குறளாய் (வளராது குட்டையாய்க் கிடப்பதாகப்) பிறக்கும். மிகக் குறையுமாயின் குழவி கைகால்கள் முடமாகப் பிறக்கும். இஃது ஆடவரது மூச்சுக் கணக்கேயன்றி மகளிரது மூச்சுக் கணக்கன்று.*

*குறிப்புரை :- எனவே, மகளிரது அப்போதைய மூச்சின் அளவு குழவி உடலைத் தாக்குதல் இல்லை என்பதாம்.*

475. *தெளிவுரை :- கலவிக் காலத்தில், தாயது வயிற்றில், நீங்கற் பாலதாகிய மலம் நீங்காது தங்கியிருக்குமாயின், அவள் வயிற்றில் தந்தையிடமிருந்து வந்து கருவாய்ப் பொருந்திய குழவி, மந்த புத்தி உடையதாய் இருக்கும். நீங்கற் பாலதாகிய நீர் நீங்காது அவள் வயிற்றில் தங்கியிருக்குமாயின், குழவி ஊமையாகும். மலம், நீர் இரண்டுமே நீங்கற்பாலன நீங்காது தங்கியிருக்கின், குழவி குருடாகும்.*

*குறிப்புரை :- 'ஆதலின், கலவிக் காலத்தில் துணையர் மல சல உபாதிகள் இல்லாதவராய் இருத்தல் வேண்டும்' என்பதாம். இவ்வாறு*

**476.** **குழவியும் ஆணாம் வலத்தது வாகில்**
**குழவியும் பெண்ணாம் இடத்தது வாகில்**
**குழவி இரண்டாம் அபானன் எதிர்க்கில்**
**குழவி அலியாம் கொண்டகால் ஒக்கிலே.** **32**

---

*இருத்தற்கு அவர் இயல்பிலே நல்லுடல் உடையராதல் வேண்டும். இந்நிலை குழவி வளர்ச்சிக் காலத்தில் எனவும் கருதுவர். நாயனார் முன்னும் பின்னும் கலவிக்காலத்தையே கூறி வருதல் நோக்கத்தக்கது.*

*இவ்விரண்டு திருமந்திரங்களாலும் குழவியது வினைக்கீடாகச் சிவபெருமான் அதன் புற உறுப்புக்களையும், அகக் கருவிகளையும் அமைக்குமாறு கூறப்பட்டது.*

**476.** *தெளிவுரை :- கலவிக் காலத்தில் கணவனுக்கு மூச்சுக்காற்று வலமூக்கின் வழி சூரியகலை இயங்கிக் கொண்டிருப்பின், குழவி ஆணாய் அமையும். இடமூக்கின் வழி சந்திரகலை இயங்கிக் கொண்டிருப்பின், குழவி பெண்ணாய் அமையும். இருவழியிலும் மாறி மாறி இயங்கிக் கொண்டிருப்பின், குழவி அலியாய் அமையும். இவை நிற்க. கருத் தங்கும் காலத்தில் தாய் வயிற்றில் கீழ்ப்போகும் காற்றுப் போக்கப் படாமல் தடுக்கப்பட்டு மேலெழுந்து பாயுமாயின், இரண்டு கரு தங்கும். பிராண வாயுவோடு அபான வாயு எதிர்த்துப் போரிடின் இரட்டைக் குழந்தைகளாம்.*

*குறிப்புரை :- ஆண், பெண் அலியாதற்குத் தந்தையது கூறே முதற் காரணமாதலோடு, 'பாய்கின்ற வாயு மாதர்க்கில்லை' என மேல் (பா.474) எடுத்தோதியதனால், 'வலத்தது' முதலியன தந்தையது மூச்சு என்பதும், குழவி ஒன்றும் பலவுமாய்க் கருக்கொண்டு பிறத்தற்குத் தாயது கருப்பையில் உள்ள பூப்புப் பொருளே முதற்காரண மாதலோடு, ''மாதா உதரம் மலம்மிகில்'' என மேல் (பா.475) எடுத்தோதியதனால், "அபானன் எதிர்க்கில்" என்றது தாயது வயிற்றிலே என்பதும், பின்னர், "கொண்ட கால் ஒக்கில்" என்றதனால், "வலத்தது, இடத்தது" என்றதும் அக்காற்றையே யாதலும் அறியப்படும். மூன்றாம் அடியை இறுதியில் வைத்து உரைக்க. மேல் (பா.472) "ஆண்மிகில் ஆணாகும்'' என்றற்றொடக்கத்தனவாகக் கூறினமையின், இங்கு வலத்ததுவாதல் முதலாகக் கூறப்பட்டவை, அவை அவ்வாறு மிகுதற்குக் காரணங்கள் ஆதல் பெறப்படும். அதனால் இவை, துணைக்காரணமும் மேற்கூறியவை முதற்காரணமும் ஆதல், விளங்கும்.*

477. கொண்டநல் வாயு இருவர்க்கும் ஒத்தெழில்
கொண்ட குழவியுங் கோமள மாயிடும்
கொண்டநல் வாயுஇரு வர்க்குங் குழறிடில்
கொண்டதும் இல்லையாம் கோல்வளை யாட்கே. 33

---

*அபானன் எதிர்த்தலும் துணைக்காரணமேயாம். அதனால், இவை, அவற்றிற்கு இவ்வாறு ஒருதலையாக வேண்டப்படாமையும் பெறப்படுவதாம். இவை எல்லாம் தந்தை, தாய், குழவி இவரது வினைக்கீடாகவே நிற்கும் என்பது அறிக.*

*இதனால், குழவியது அச்சு அமைப்பிற்கும், எண் அமைப்பிற்கும் துணைக்காரணமாவன இவை என்பது கூறப்பட்டது.*

*477. **தெளிவுரை :-** கலவிக் காலத்தில் மூச்சுக் காற்று இருவர்க்கும் வலம், இடம் என்னும் வகையில் ஒருவகையிலே, ஓரளவிலே இயங்குமாயின், தங்கிய கருச் சிதையாது மேற்கூறியவாறு குழவி ஆணும், பெண்ணுமாய் நிலைபெறுதலோடு, அழகாயும் இருக்கும். அவ்வாறின்றி அவர்க்கு மாறி மாறி இயங்கின், தங்கிய கரு பின் நிலைபெறாது அழியும்.*

***குறிப்புரை :-*** *"ஒத்து" என்றது, இடம், அளவு இரண்டற்கும் ஒப்பக் கூறியது. அதனானே, 'அளவு ஒவ்வாதொழியின், அழகின்றி யிருக்கும்' என்பது பெறப்படும். 'மாறிடில்' என்னாது, "குழறிடில்" என்றார். 'பன்முறை மாறி நிகழின்' என்பது அறிவித்தற்கு.*

*குழவி ஆணும், பெண்ணும் ஆதற்குத் தந்தையது மூச்சுக் காற்றுத் துணைக்காரணம் என்பது மேற்கூறி, இதனால், 'அதனோடு தாயது மூச்சுக்காற்று ஒத்தல் அழகிற்குக் காரணம்' என்பதும், தாயது மூச்சு ஒவ்வாமை கரு நிலைபெறாதொழிதற்குக் காரணம் என்பதும் கூறினார்.*

*"கொண்டதும்" என்ற உம்மை, சிறப்பு. 'கோல்வளையாட்கு' என்பதனை, 'கோல்வளையால் கண்' எனத் திரித்து, 'கோல்வளையாள் கண்' கொண்டதும் இல்லையாம்' என மாற்றுக. கொண்டது - கொண்ட கரு. கோல்வளை - திரண்ட வளையல். கோமளம் - அழகு, கானல்நீர்.*

*478. **தெளிவுரை :-** தாய் தனது கருப்பையில் ஏற்றுக்கொண்ட குழவி, முதற்கண் தந்தையது நடுநாடியில் தீயின் கூறாக விளங்கி முதிர்ந்து, பின் தாயது கருப்பையினுள்ளே ஞாயிற்றின் நிறம்போலும்*

478. கோல்வளை உந்தியிற் கொண்ட குழவியும்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே. 34

---

*செந்நிறத்தை உடையதாய் முற்றி, அதன்பின்னர், வகைபடத் தோன்றுகின்ற உறுப்புக்களை உடையதாகும்.*

***குறிப்புரை :-*** *தால் - தாலு; நாக்கு. நாக்கின் முதலிடம் நடுநாடி (சுழுமுனை) ஆதல் பற்றி இவ்வாறு கூறினார். சோதி - தீ, பால் - பகுதி. 'சோதியாம் பாலாய்' என ஆக்கம் கொடுக்க. இரண்டிடத்தும், 'உள்ளே வளர்ந்து' என மாற்றுக. 'தந்தையது, தாயது' என்பன ஆற்றலாற் பெறப்பட்டன. பொருந்துதல் - வளர்ந்து பொருந்துதல். கரு, தாயது செந்நீரால் முதற்கண் செந்நிறம் உடையதாயே இருக்கும் என்க.*

*தந்தையரது வெண்டுளியை, 'நீர்க் கூறு' என்பராயினும், அதன்கண் உள்ள உயிராற்றல் தீயின் கூறேயாதலை இந்நூலால் அறிகின்றோம். இவ்வுயிராற்றலை, இக்காலத்தார் 'அணு' என்பர். 'நீர்' என்னாது, 'துளி' (விந்து) என வழங்குதலும் நுண்ணிதாதல் பற்றியும், கருவாகி நிலைபெறுதல் சிறிதளவேயாதல் பற்றியுமாம். தந்தையது உடற் கூற்றில் வளரும் உயிராற்றல், தாயது கருப்பையில் உள்ள பூப்புப் பொருளினுள் புகுந்து கெடாது நிற்றலே கருத்தங்குதலாம். குழவி ஒன்றாதல் பலவாதற்கும் உயிராற்றல் புகப்பெறும் பூப்புப் பொருள்களின் எண்ணிக்கையே காரணம். இக் காரணங்கள் முதற் காரணங்கள் ஆதலின், பிறவாறு மேற்கூறியன பலவும் துணைக் காரணங்களேயாம் என்க. தாயது வயிற்றில் வந்த பின் வளருமாறு கூறுவார். அதற்கு முன்னர் வளர்ந்தவாறும் உடன் கூறினார். இதனால், கரு வளருமாறு கூறப்பட்டது.*


Age (weeks)
1
2
3
4
5
6
zygote to formation of embryonic disc
embryo
primitive streak
2–3 mm
4 mm
8 mm
13 mm
Zygote cleaves: blastocyst implants
Two layered embryo forms: amniotic cavity and yolk sac open
Gastrulation occurs: notochord and beginning of neural tube form
Neural tube closes; heart beats; arm buds, tail, and gill grooves form
Incipient eye parts—retina (as optic cup) and lens (as lens pits)—form; leg buds form; brain enlarges
Webbed fingers and external ear form; pigment appears in retina; tail and gill grooves disappearing
Age (weeks)
7
8
9
10
11
12
embryo
fetus
18 mm
30 mm
50 mm
61 mm
73 mm
87 mm
Webbed toes form; bones begin to harden; back straightens; eyelids form
Upper limbs bend at elbows; genitalia begin to differentiate; fingers are distinct
Toes separate; eyelids develop; major parts of brain are present
Chin grows; nostrils separate; face appears human; genitals appear male or female
Well-defined neck appears; genitalia are complete; sucking reflex appears
Age (months)
4
5
6
7
8
9
fetus
140 mm
190 mm
230 mm
270 mm
300 mm
350 mm
Blood cells form; all major organs form; head and body hair appear; movements are felt by mother
Fetus may be viable if born; eyelids open; lungs and lung circulation develop; may suck thumb; fat deposited under skin
Fetus usually viable if born; fat deposits increase; body hair is lost; head hair is well developed; most senses are well developed; fetus turns head down in uterus

479. உருவம் வளர்ந்திடும் ஒண்டிங்கள் பத்தில்
பருவம தாகவே பாரினில் வந்திடும்
மருவி வளர்ந்திடு மாயையி னாலே
அருவம தாவதிங் காரறி வாரே. 35

480. இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்
தட்டான் அறிந்தும் ஒருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன் இம்மாயையின் கீழ்மைஎவ் வாறே! 36

---

479. ***தெளிவுரை :-*** *தங்கிய கருவின் உருவம் பத்துத் திங்கள்காறும் கருப்பையிலே வளரும். பத்தாந்திங்களே பிறக்கும் பருவமாக, அப்பொழுது நிலத்தில் வந்து சேரும். வந்தபின் தாய் தந்தையரைப் புறந்தருபவராகப் பொருந்தி வளரும். அவ்வளர்ச்சி, சுவரெடுத்தல், ஆடைநெய்தல், மாலைதொடுத்தல் முதலியவற்றிற்போலக் கட்புலனாகாது மாயையினாலே கணந்தோறும் நிகழ்தலை ஒருவரும் காணவல்லரல்லர்.*

***குறிப்புரை :-*** *'வளர்ந்தபின் அவ்வளர்ச்சியைக் கண்டு வியப்ப தல்லது, வளர்ச்சி கட்புலனாகாது' என்றற்கு "மாயையினாலே" என எடுத்தோதினார். இதனால், மாயையின் ஆற்றலும் அறியப்படும் என்க. அருவம் கட்புலனாகாமை. ஆவது - வளர்வது; என்றது தொழிற்பெயர். 'அருவமதாகிய ஆவது' என்க.*

*இதனால், கரு, கருப்பையுள் வளர்ந்து குழவியாய்ப் பிறக்குமாறும், பிறந்து வளருமாறும் கூறப்பட்டன.*

480. ***தெளிவுரை :-*** *கருவை இட்டவனாகிய தந்தையும் அதனை இட்டமை இடாமைகளை அறிந்தானில்லை. ஏற்றவளாகிய தாயும் அதனை ஏற்றமை ஏலாமைகளை அறிந்தாளில்லை. அக்கருவாகிய பொன்னைக் குழவியாகிய அணியாக்குகின்ற பொற்கொல்லனாகிய பிரமன் அவற்றை அறிந்திருந்தும் அவருள் ஒருவர்க்கும் சொல்லிற்றிலன். வினை நிகழ்ச்சி இருந்தவாறே அப்பொற் கொல்லனுக்குப் பணிக்கின்ற தலைவனாகிய சிவனும் அவ்விருவ ரோடே இருக்கின்றான்; அவனும் அவர்க்கு அவ்வினைவியல்பையே உரைத்திலன். அந்தோ! இம்மாயையின் வஞ்சனை எவ்வகையினதாய் உள்ளது!*

481. இன்புற நாடி இருவருஞ் சந்தித்துத்
துன்புறு பாசத்தில் தோன்றி வளர்ந்தபின்
முன்புற நாடி நிலத்தின்முன் தோன்றிய
தொண்புற நாடிநின் றோதலு மாமே. 37

---

***குறிப்புரை :-*** *தட்டு - பூவிதழ், தட்டான் - பூவிதழில் உள்ளவனாகிய பிரமன். 'இதனினின்றும் உயிர்கள் உய்திபெறுதல் எவ்வாறு' என்பது குறிப்பெச்சம். "பட்டாங்கு" என்பதில் படுதற்கு வினை முதலாகிய 'வினை' என்பது வருவிக்க. சொல்லுதல் - பணித்தல். "பரமன்" என்றது, 'தலைவன்' என்னும் பொருட்டு. கெட்டேன், இரக்கக் குறிப்பு இடைச்சொல். தட்டானும், பரமனும் உரையாமை, இட்டானும் ஏற்றாளும் தம்மை எண்ணாமையாலாம்.*

*இதனால், கருவினது தோற்றம் முதலியவற்றிற்குத் தந்தை தாயரே உண்மை நிமித்த காரணர் அல்லாராதல், அவர் மாயையின் வலியைக் கடக்கமாட்டாமையின் வைத்து வலியுறுத்தப்பட்டது.*

**481. தெளிவுரை :-** *ஒருவன், ஒருத்தி ஆகிய இருவர் தம்முள் இன்பம் நுகரவே விரும்பிக் கூட, துன்பத்திற்குக் காரணமான அவ்விருப்பத்தால் ஓர் உயிர் பிறந்து வளர்ந்தபின், அவ்வுயிர், தான் நிலத்தில் வந்து சேர்தற்கு முன்பு கருப்பையினுள் உள்ள துன்பத்தால் 'விரைவில் வெளிப்படல் வேண்டும்' என்று விரும்பிப் பெரிதும் முயன்று வெளிப்பட்டுப் பிறந்த செய்தியைப் பின் அறிவுடையோர் அவ்வுயிரும் தம்போல அறிவைப் பெறுமாறு அதற்குச் சொல்லுதல் கூடுமோ!*

***குறிப்புரை :-*** *'இருவரும் கூடினமை தம் இன்பம் கருதியல்ல, ஓர் உயிர் மக்கள் உடம்பைப் பெற்று உய்தல் வேண்டும் என்னும் கருத்தினால் அன்று' என்பார் "இன்புற நாடி இருவரும் சந்தித்து" என்றும், 'அக்கூட்டத்தால் அவர் பின்பு குழந்தையை வளர்க்கக் கடமைப்பட்டவராய்த் துன்புறுகின்றனர்' என்பார், "துன்புறு பாசத்தில் தோன்றி" எனவும் கூறினார். இவையெல்லாம் பெரும்பாலராய் உலகியலின் நிற்பாரது செயல்பற்றிக் கூறியன. 'உலகுய்ய மகப்பெறுவான்' (தி.12 பெ.பு. திருஞான - 59) சந்திப்பாரும் உளர் என்க. "சந்தித்து" என்றதனை, 'சந்திக்க' எனத் திரிக்க. "நிலத்தின்" எனப் பின்னர் வருகின்றமையின் "உற நாடி" என்றொழிந்தார். ஒண்மை, 'ஒண்பு' என வந்தது. ஒண்மை - அறிவு. 'பிறத்தற்கு முன் தான் பட்ட*

**482.** குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட் டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்
இயக்கில்லை போக்கில்லை ஏனென்ப தில்லை
மயக்கத்தால் யாக்கை வளர்க்கின்ற வாறே. **38**

---

*துன்பத்தை உணரின், அவ்வுயிர் மீளப் பிறவி எய்தாது வீடடைய விரையும்; அறிவிப்பினும் அதனை அறியமாட்டாமையால் மேலும் அது பிறவிக்கே வழிதேடுகின்றது; இஃது அதன் வினையிருந்தவாறு' என்றதாம். நான்காம் அடி இன எதுகை 'தொன்பு' என்பது பாடம் அன்று.*

*இதனால், இட்டான், ஏற்றாள் என்பவரேயன்றி இடப்பட்ட அது தானும் தனது நிலையைத் தான் அறியாது நிற்றல் கூறப்பட்டது.*

**482. தெளிவுரை :-** *குயிற்குஞ்சாகத் தக்கமுட்டையை* **அவ்வாறாதற் பொருட்டு அதன் தாய் காக்கையினது கூட்டில் இட, காக்கை அதனைச் சிறிதும் வேறாக நினையாது தன் முட்டை என்றே கருதி அடைகாத்தல் போல, சிவன் தனது மகவாகிய உயிர், உடல் பெற்றுச் செயற்படுதற் பொருட்டுக் கருவிலே இட, தாய் அதனைச் சிறிதும் வேறாக நினையாது, உடல் வருந்தத் தொழில் செய்யாமலும், அதனைப் போக்கிவிட நினையாமலும், 'ஏன் வந்தது' என்று மனம் வருந்தாமலும் பேணிக் காத்தல் மயக்கத்தாலாவதே.**

**குறிப்புரை :-** *குயில் தன் முட்டையை அடைகாத்துக் குஞ்சு பொரிக்க அறியாமையால் காக்கையின் கூட்டில் அதனை இடும் என்பர். வளர்த்தல், இங்கு முட்டையை அடை காத்தல். "குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட்டிட்டால்" என்றது சுட்டிக்கூறா உவமம் ஆதலின், அதற்கேற்ற பொருள் வருவிக்கப்பட்டது. அங்ஙனம் காக்கப்பட்ட கரு, தாயது விருப்பம்போல் இல்லாமையும் காணப்படுதலால், அது, காக்கையது விருப்பத்திற்கு மாறாய்த் தோன்றும் குயிற்குஞ்சு போல்வதே என்றபடி "இல்லை" என்பவற்றை 'இன்றி' எனத் திரிக்க. 'வளர்க்கின்றவாறு மயக்கத்தாலாம்' என்க.*

**இதனால், 'கருவாய்த் தோன்றும் குழவி, உண்மையில் சிவன்** *மகவே' என்பது கூறப்பட்டது.*

**483. தெளிவுரை :-** *மரவகைகளுள் சில, கிழங்காய் நின்றே பயன்படும்; சில, முளையானபின் பயன்படும்; சில, முளைக்குப் பின் புதலாய் நின்று பயன்படும்; சில, காய்த்துப் பழமாய்ப் பயன்படும். அந்த அந்த மரவகைக்கு அந்த அந்தப் பொருளே உளதாகிப் பயன்*

**483.** முதற்கிழங் காய்முளை யாய்அம் முளைப்பின்
அதர்ப்புத லாய்ப்பல மாய்நின் றளிக்கும்
அதற்கது வாய்இன்ப மாவது போல
அதற்கது வாய்நிற்கும் ஆதிப் பிரானே. **39**

**484.** பரத்திற் கரைந்து பதிந்தநற் காயம்
உருத்தரித் திவ்வுடல் ஓங்கிட வேண்டின்
திரைக்கடல் உப்புத் திரண்டது போலத்
திரித்துப் பிறக்குந் திருவரு ளாலே. **40**

---

*தருதல்போலச் சிவபெருமான் மக்கள் உயிர்க்கேயன்றிப் பிற உயிர்கட்கும் அவ்வவற்றின் தோற்றத்திற்கு ஏற்ப அத்தோற்றப் பொருள்களாய் நின்று அவற்றைத் தோற்றுவிப்பன். அவனுக்கு இன்பமாவது உயிர்கட்கு அருள்செய்தலே என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *'எல்லா மரங்களும் பழமாய்த்தான் பயன்படும் என்பதின்றிப் பல்வேறு வகையில் பயன்படுதல்போல, எல்லா உயிர்களும் மக்களேயாய் - அல்லது கருப்பையில் தோன்றுவனவே யாய் நின்று தோன்றும் என்பதின்றிப் பல்வேறு வகையில் தோன்றும்' என்றற்கு இவ்வாறு உவமை கூறினார். 'மரவகை' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. அதர் - வழி. இதனால், மக்கள் உயிர்களின் தோற்றத்தை இவ்வாறு செய்விக்கின்ற சிவபெருமான், பிற பிற உயிர்களையும் அவ்வவற்றிற்கு ஏற்ற பெற்றியால் தோற்றுவிப்பன் என்பது இதுபற்றி அறியப்படும் என ஒரு திருமந்திரத்தால் தொகுத்து உணர்த்தப்பட்டது.*

**484. *தெளிவுரை :-*** *உலகம் ஒடுங்குங் காலத்து உடம்பும் பல தத்துவங்களாய் ஒடுங்கி, முடிவில் எல்லாவற்றுடனும் மாயையில் ஒடுங்கும். ஒடுங்கிய உடல் மீளவும் முன்போலத் தோன்றுதல் வேண்டும் எனச் சிவபெருமான் திருவுளம் கொள்ளின், கடல் நீரில் தோன்றாது நின்ற உவர்ப்புச் சுவை பின் தோன்றி நிற்கும் உப்பாகத் திரண்டு உருவெடுத்தல்போல, அவனது திருவருட் செயலாலே மீளவும் முன் போலத் தோன்றும்.*

***குறிப்புரை :-*** *மாயையில் ஒடுங்கும் உலகத்தை, அதற்கு நிலைக்களமாதல் பற்றி முதல்வனிடத்தில் ஒடுங்குவதாகக் கூறினார். "வேண்டில்" என்றது இச்சையையும், "திருவருளாலே" என்றது கிரியையும் என்க. திரித்து - மீண்டு.*

*இதனால், உடம்பு ஒடுக்கமும், தோற்றமும் உடையதாதல் கூறப்பட்டது.*

## 15. மூவகைச் சீவ வர்க்கம்

**485.** விஞ்ஞானர் நால்வரும் மெய்ப்பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவரும் தாங்கு சகலத்தின்
அஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதியர் வேற்றுமை தானே. 1

---

*ஐந்தொழிலின்பின் படைத்தலின் விரியாகக் கருப்பக் கிரியை உணர்த்திய நாயனார், இனி அப்படைத்தல் முதலியவற்றின் பயனைப் பெறுகின்ற உயிர்களின் வகைகளை எட்டுத் திரு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*(இவ்வதிகாரத்தின் முதல் மந்திரமாகப் பதிப்புக்களில் காணப்படும் மந்திரம் பின்னர் வருவது)*

**485.** *தெளிவுரை :- எல்லா உயிர்களும் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகையுள் அடங்கி நிற்கும். அம்மூவகையினருள் விஞ்ஞானகலர் நான்கு வகையினர்; பிரளயாகலரும், சகலரும் தனித்தனி மும்மூன்று வகையினர்; ஆக அனைவரும் பத்து வகையினராவர்.*

*குறிப்புரை :- விஞ்ஞானம் - விசேட ஞானம்; மெய்யுணர்வு. விஞ்ஞானாகலர் என்பது 'விஞ்ஞானகலர்' என மருவி வழங்கும். அகலர் - கலை நீங்கினவர். கலை - மாயாகாரியம் என்றல் முக்குண வடிவாகிய பிரகிருதியை. விஞ்ஞானத்தால் கலை நீங்கியவர் விஞ்ஞானாகலர்; விஞ்ஞானமாவது, சிவனால் உணர்த்தப்படும் விசேட ஞானம். இது வருதற்கு ஆணவமலத்தின் சத்தி மெலிதாதல் வேண்டும். அஃது இயல்பாகவே அமையப் பெற்றார், இயற்கை விஞ்ஞானகலர்; இயற்கையாகவன்றித் தவத்தால் இந்நிலை வாய்க்கப்பெற்றுச் சிவனால் உணர்த்தப்படும் ஞானத்தைப்பெற்றுக் கலை நீங்கினோரும் மேற்கூறியவரோடு ஒப்பர் ஆதலின், அவர் செயற்கை விஞ்ஞானகலராவர்.*

*பிரளயாகலர் - பிரளயத்தில் (உலகம், யாவும் ஒடுங்கிய காலத்தில்) கலை நீங்கப் பெற்றவர். எனவே, 'இவர் உலகம் ஒடுங்கிய காலத்தில் ஆணவ மலத்தின் சத்தி மெலிவடையப் பெற்றவர்' என்பது விளங்கும். இவர் இயற்கைப் பிரளயாகலர்; உலக ஒடுக்கத்திற்கு முன் இந்நிலையைப் பெற்றோர், செயற்கைப் பிரளயாகலர்.*

**486.** விஞ்ஞானர் கேவலத் தாராது விட்டவர்
தஞ்ஞானர் அட்டவித் தேசுரம் சார்ந்துளோர்
எஞ்ஞானர் ஏழ்கோடி மந்திர நாயகர்
மெய்ஞ்ஞானர் ஆணவம் விட்டுநின் றாரே. **2**

---

*சகலர் - பாசப்பற்று நீங்காதவர்; அஃதாவது ஆணவமல சத்தி வலிதாகப் பற்றப்பட்டவர். இவ்வன்மை மென்மைகளை 'தூலதரம், தூலம், சூக்குமம்' எனப் பகுப்பர். ஆணவமலப் பிணிப்புத் தூல தரமாக (மிக வன்மையாக) உடையவர் சகலர்; தூலமாக (சிறிது வன்மையாக) உடையவர் பிரளயாகலர். சூக்குமமாக (மென்மையாக) உடையவர் விஞ்ஞானகலர். இவருள், 'நால்வர்' மூவர், மூவர்' எனப்பட்டோர் இவர் என்பது வருகின்ற திருமந்திரத்தால் விளங்கும்.*

*தம் ஞானம் - பசுஞானம். அஞ்ஞானம் - பாசஞானம் ஒரு புடை ஒற்றுமைகொண்டு சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலரது ஞானத்தைப் பாசஞான பசுஞான பதிஞானங்களாக ஓதினார் என்க. "விஞ்ஞானராதியர் வேற்றுமை" என்றது 'அனைவரது வகையும்' என்றவாறு.*

*இதனால், 'உயிர்கள் மூவகைப்படும்' என்பதும், 'அவற்றின் உள்திறங்கள் பத்தாம்' என்பதும் கூறப்பட்டன.*

**486. தெளிவுரை :-** ***மேற்கூறியோருள் விஞ்ஞானகலர் நால்வராவார், 'ஆணவமலத்தில் அழுந்தாத அவ்வளவில் நிற்போரும், அட்ட வித்தியேசுரபதவி, சத்தகோடி மகாமந்திரங் கட்குத் தலைவராம் பதவி இவற்றைப் பெற்றோரும், ஞானம் முதிரப் பெற்றோரும், அம்முதிர்ச்சியால் ஆணவமலம் பெரிதும் நீங்கப்பெற்ற முத்தரும்' என இவராவர்.***

***குறிப்புரை :-*** ***மூவகை உயிர் வருக்கத்திலுள்ளாரும், 'அபக்குவர், பக்குவர்' என இருதிறத்தினராய் இருப்பர். அபக்குவர் 'சிவனைப் பெறவேண்டும் என்னும் ஆர்வம் இன்றித் தாம் உள்ள உலகத்துப் போகங்களை நுகர்ந்திருப்போர். பக்குவர் சிவனைப் பெறவேண்டும் என்னும் ஆர்வத்தால் அவனை அடைந்திருப்பர். ஆர்வம் உளதாய வழி அடைதற்கு இடையீடில்லை. இந்த ஆர்வம் சத்திநிபாதத்தால் உண்டாவதாகும். இவருள், "கேவலத்து ஆராது விட்டவர்" என்றது அபக்குவரை. கேவலமாவது ஆணவ மலத்தில் மூழ்கி அதுவேயாய்க் கிடத்தல், எனவே, இதுவே, 'விஞ்ஞானகலர்' என்பவரது இயல்பாதல்***

*பெறப்பட்டது. அவர் பக்குவம் எய்திய வழி ஞானத்தைப் பெற்று மூவகை நிலையில் நிற்பர். அஃதாவது, ஆணவ மலம் நீங்கியதாயினும் அதன் வாசனை, 'இலயம், போகம், அதிகாரம்' என்னும் மூன்று நிலையினதாய் நீங்காது நிற்கும். இவை ஒன்றின் ஒன்றுமிக்க வன்மையுடையன; அவற்றுள் இலயமல வாசனை உடையவரையே, "ஆணவம் விட்டு நின்றார்" என்றார். "விட்டு" என்றதனால் மலம் நீங்கப் பெற்றமையும், "நின்றார்" என்றதனால், இலய வாசனையளவாய் நிற்கப் பெற்றமையும் பெறப்பட்டன. இவர் சாந்திய தீத கலையில் சக்தி சிவ தத்துவ புவனங்களில் உள்ள போகங்களை நுகர்ந்திருப்பர். 'அபரமுத்தர்' எனப்படுவோர் இவரே என்க. ஆணவம் விட்டபின் இவர்போல நில்லாது, சிவனோடு இரண்டறக் கலந்து சிவனது பேரின்பத்தையே நுகர்ந்திருப்பவர் பரமுத்தராவர். அவரை உயிர் வருக்கத்தினருள் வைத்து எண்ணுதல் கூடாமையின், அவரைக் குறித்திலர்.*

*இனிப் போகமல வாசனை உடையவரையே 'ஆணவம் விட்டார்' என்னாது "மெய்ஞ்ஞானர்" என்று மட்டும் குறித்தார். இவர் சாந்தி கலையில் சதாசிவ தத்துவத்தில் உள்ள புவனங்களில் அமைந்த போகங்களை நுகர்ந்திருப்பர். ஆகமங்களைக் கேட்டவராகச் சொல்லப்படும் 'பிரணவர்' முதலிய பதின்மரும் இந்நிலையினராகவே சொல்லப்படுகின்றனர். உயிர் வருக்கத்தினராய்ச் சதாசிவ புவனத்துள் சாலோகம் முதலிய நிலைகளைப் பெற்று நிற்றலின் இவர்கள், 'அணு சதாசிவர்' எனப்படுகின்றனர்.*

*அட்ட வித்தியேசுரராவார், அனந்தர், 'சூட்சுமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டர், சிகண்டி என்போர். இவர்கள் சிவாகமங்களைப் பலர்க்கும் உணர்த்துபவராதலின் 'வித்தியேசுரர்' எனப் பெயர் பெற்றனர்.*

*சத்த கோடி மகா மந்திரங்கள், 'நம, ஸ்வாஹா, ஸ்வதா, வஷட், வௌஷட், பட், ஹும் பட்' என்னும் ஏழு முடிபுகளை உடையன. கோடி - முடிபு. இம் மந்திரங்களைக் கணிப்போருக்கு அவற்றின் பயனைத் தரும் தலைவராய் உள்ளோரே 'மந்திர மகேசுரர்' எனப்படுவர். இவ்விருதிறத்தாரும் இப்பதவிகளைப் பெற்றுச் சாந்தி கலையில் ஈசுர தத்துவ புவனங்களில் வாழ்பவராவர். அதனால், இவ்விருவரும் ஒருவகையினரே என்க.*

**487.** இரண்டா வதில்முத்தி எய்துவர் அத்தனை
இரண்டாவ துள்ளே இருமல பெத்தர்
இரண்டாகு நூற்றெட் டுருத்திரர் என்பர்
முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. **3**

---

*இவருள், அனந்த தேவர் சுத்த வித்தியா தத்துவத்திலும் சென்று அங்குள்ள பிரமனுக்கு வேதத்தையும், சீகண்டவுருத்திரருக்குச் சிவாகமத்தையும் அறிவுறுத்தி அங்குள்ள உருத்திரன், மால், அயன், இந்திரன் முதலியோர் வழியாக வித்தியா கலையுட்பட்ட புவனங்களையும், சீகண்ட உருத்திரர் வாயிலாகப் பிரதிட்டை நிவிர்த்தி கலைகளுட்பட்ட புவனங்களையும் நடத்துவர். இங்ஙனம், விஞ்ஞானகலர் நால்வரது இயல்பு ஒருவாறு கண்டுகொள்க.*

*எஞ்ஞானர் - எல்லா ஞானமும் உடையோர்; என்றது, 'மந்திரம் கணிப்போர் அனைவரது செயலையும் உணர்வர்' என்றபடி "விஞ்ஞானர்" என்றது, 'விஞ்ஞான வகையினராவர்' என்றவாறு, இறுதியில் 'இந்நால்வருமே' என்னும் தொகை எஞ்சி நின்றது. வித்தியேசுரர்களும் மந்திர மகேசுரர்களும் ஒருவகையினரேயாதல் வெளிப்படை.*

*இதனால், மேல், "விஞ்ஞானர் நால்வர்" எனப்பட்டார் இவர் என்பது கூறப்பட்டது.*

***487. தெளிவுரை :-** இனிப் பிரளயாகலர் மூவராவார், 'அபக்குவரும், பக்குவரும்' என இருதிறப்படும் நிலையில் பக்குவர், 'சுத்தவித்தையில் நின்று அசுத்த மாயா புவனங்களைக் காவல் செய்பவரும், குண தத்துவத்தில் நின்று பிரகிருதி மாயா புவனங்களைக் காவல் செய்பவரும், எனத் தனித்தனி நூற்றெண்மராம் உருத்திரர்களாவர்'. எனவே, இவ்விருவரோடு, பெத்தராகிய அபக்குவரும் கூடப் பிரளயாகலர் மூவராகின்றனர். இனிச் சகலராவார் 'ஆணவம், கன்மம், மாயை' என்னும் மும்மலமும் உடையவரே.*

***குறிப்புரை :-** "இரண்டாவது முத்தி எய்துவார்" என்றது, 'அடுத்த படைப்பில் முத்தி எய்துபவர்' என்றவாறு. எனவே, இது 'பிரளயாகலர்' என்னும் பொருளதாயிற்று. எய்துவார்" என்றது பெயர். அத்தனை - அத்துணையார், அஃதாவது 'இரண்டாவது' என்பதில் அமைந்த 'இரண்டு' என்னும் துணையினர். 'அத்தனையராவர் பெத்தரும், உருத்திரரும் என்பர்' என முடிக்க. மீள "இரண்டாவதுள்ளே" என்றது,*

**488.** பெத்தத்த சித்தொடு பேண்முத்தச் சித்தது
ஒத்திட் டிரண்டிடை யூடுற்றார் சித்துமாய்
மத்தத்து மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாரே. **4**

---

*பிரளயாகலர் என்னும் வகையுள்' என்றவாறு. "உருத்திரர்" என்பதன்பின் 'உளர்' என்னும் பயனிலை எஞ்சி நின்றது. முரண் - (ஆணவமலத்தின்) வலிமை. மேல் "ஆணவம் விட்டு நின்றார்" என்றதனால் 'விஞ்ஞானகலர் ஆணவம் ஒன்றே உடையார்' என்பதும், 'கலை, என்பது மாயையைக் குறிப்பதாகலின், 'அகலராகிய பிரளயாகலர்க்கு அஃது இல்லை' என்பதும் போந்தன. "பெத்தர்" என்று ஒழியாது, 'இருமல பெத்தர்' என்றது, அவரது இயல்பை விதந்தவாறு. "நூற்றெட்டு" என்னும் தொகைச்சொல் ஒரு சொல் தன்மைப்பட்டு நிற்க, "இரண்டாகும்" என்றது, அத்தொகை முழுவதையும் விசேடித்தது. 'சகலராவார் இவர்' என்பதனையும் ஈற்றடியான் ஈண்டே கூறினார்.*

*இதனால், 'பிரளயாகலர் மூவர் இவர்' என்பது கூறப்பட்டது. பன்மை பற்றி இவரையே எடுத்தோதி, சுத்தவித்தையில் நிற்கும் உருத்திரன், மால், அயன், இந்திரன், சீகண்ட உருத்திரர், நந்தி, கணங்கள் என்பவரையும் உபலக்கணத்தால் தழுவிக்கொள்ள வைத்தார் என்க. 'பிரளயாகலர் மூவரும் தவத்தால் விஞ்ஞான கலரோடொத்து அவரது நிலைகளில் நிற்றல் உண்டு' என்பதுமேலே குறிக்கப்பட்டது.*

**488. *தெளிவுரை :- சகலரும், 'அபக்குவர், பக்குவர்' என இருதிறப்பட்ட நிலையில் பக்குவர், 'சாதகரும், சீவன்முத்தரும்' என இருவகையினர் ஆவர்.***

***குறிப்புரை :-** எனவே, 'அபக்குவர்', சாதகர், 'சீவன் முத்தர்' எனச் சகலரும் மூவராகின்றனர்.*

*பெத்தத்த சித்து, ஆன்மா, முத்தச் சித்து, சிவம், இவ்விரண்டும் ஒருமைப்பட இரண்டிலும் நிற்பவரே, 'சீவன்முத்தர்' எனப்படுவர். சித்துமாய் (சிவமாயும்) மலமயக்கத்தை முற்றக் கழிக்கமாட்டாமல் அதனைக் கழித்தற்பொருட்டு முயல்பவரே 'சாதகர்' எனப்படுவர். சித்தாயும் என உம்மையை மாற்றியுரைக்க. சத்தம் - உலக ஆரவாரம்.*

*ஈற்றடியினால் சகலருள் அபக்குவரது தன்மையை விளக்கினார்.*

**489.** விஞ்ஞானர் ஆணவ கேவல மேவுவோர்
தஞ்ஞானர் மாயையில் தங்கும் இருமலர்
அஞ்ஞானர் அச்சக லத்தர் அகலராம்
விஞ்ஞான ராதிகள் ஒன்பான்வே றுயிர்களே. 5

---

*எனவே, அந்நிலையை உடையார் அபக்குவர் என்பது போந்தது. ஊடு, ஏழனுருபு. மத்தம் - மயக்கம். 'சகலத் துளார் ஊடுற்றாரும், மாட்டாரும் ஆவர் என முடிக்க. 'ஆவர்' என்பது சொல்லெச்சம்.*

*இதனால், 'சகலர் மூவராவர் இவர்' என்பது கூறப்பட்டது. இவருள்ளும் தவத்தால் பிரளயாகலரோடு ஒப்பவும், விஞ்ஞான கலரோடு ஒப்பவும் அவ்வப்புவனங்களிற் செல்வார் உளர் என்பது மேலே குறிக்கப்பட்டது.*

*(இதன்பின், பதிப்புகளில் காணப்படும் மந்திரம் இவ்வதிகாரத்தின் இறுதியதாம்).*

**489.** *தெளிவுரை :- இயற்கையில் அகலராய் நில்லாது, தவமாகிய செயற்கையால் அகலராய் நிற்பார் ஒன்பது வகைப்படுவர். அவரும், 'விஞ்ஞானகலர், பிரளயாகலர்' என்னும் பெயரைப் பெறுவர். அவ்வொன்பதின்மராவர், விஞ்ஞானகலருள் அபக்குவர் ஒழிந்த, 'உருத்திரர், மால், அயன், இந்திரன், பிறகடவுளர்' என்னும் ஐவருமாவர்.*

*குறிப்புரை :- இங்கு, 'வித்தியேசுரர், மகேசுரர்' இருவரையும் வேறெண்ணியும், உருத்திரராவர் அனைவரையும் ஒன்றாக வைத்து ஏனையோரை உடன் வைத்து எண்ணியும் தொகை கூறினார். 'சகலரும் இவ்வாறெல்லாம் ஆவர்' என்பது உணர்த்துதற்கு.*

*மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, 'சகலத்தர் அகலராம் ஒன்பானான வேறுயிர்களாவார்' என்று எடுத்துக்கொண்டு, கேவலம் மேவுவோரும், தங்கும் இருமலரும் ஆவர்' என முடிக்க. 'விஞ்ஞானராகிய மேவுவோரும்' எனவும், 'தஞ்ஞானராகிய இருமலரும்' எனவும் இயையும். 'இருமலரும்' என்பதன் பின் 'ஆவர்' என்பது எஞ்சி நின்றது. "வேறுயிர்கள்" என்றது, 'இயற்கையாலன்றிச செயற்கையால் உயரும் உயிர்கள்' என்றதாம். சகலரை இவ்வாறு கூறவே, பிரளயாகலரும் விஞ்ஞானகலராதல் சொல்லாலே அமைந்தது.*

**490.** வெஞ்ஞான கன்மத்தால் மெய்யகங் கூடியே
தஞ்ஞான கன்மத்தி னால்சுவர் யோனிபுக்
கெஞ்ஞான மெய்தீண்டி யேயிடை யிட்டுப்போய்
மெய்ஞ்ஞான ராகிச் சிவமேவல் உண்மையே. **6**

---

*இதனால், விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்னும் வகையைச் செயற்கையால் பெறுவோரும் உளர் என்பது கூறப்பட்டது.*

*'கேவலம்' என்பது, இங்கு 'ஒன்று என்னும் பொருள்பட நின்றது. இத்திருமந்திரத்தைப் பாடம் பலபட ஓதுவாரும், 'விஞ்ஞானகலர் முதலிய ஒவ்வொரு வகையினருள்ளும் அங்ஙனமே விஞ்ஞானகலர் முதலிய மூவர் உட்பிரிவினராக உளர்' என இயற்கை நிலையினரே வேறோராற்றால் ஒன்பது வகையினராவர் என்பது இதற்குப் பொருளாக உரைப்பாருமாவர். அவ்வுரையால் சிறப்பு ஒன்றும் இல்லாமை அறிக.*

**490. தெளிவுரை :-** ***சகல வருக்கத்தினர் வெவ்விய ஞானமாகிய சீவபோதத்தால் செய்துகொண்ட வினைகளில் சில நல்வினை காரணமாக மக்களுடம்பைப் பெற்றுப் பூலோகத்தில் வாழ்ந்து, அங்கும் அந்தச் சீவபோதத்தால் செய்த கன்மங்களில் சில நல்வினை காரணமாகச் சுவர்க்கலோகத்தில் தேவராய் இன்பந்துய்த்துப் பின் எம் ஞானம் போல்வதாகிய மெய்ஞ்ஞானத்தைத் தலைப்பட்டு, அது முதிராமையால் இடையீடுபட்டுப் பதமுத்தி அபரமுத்திகளில் நின்று, முடிவில் மெய்ஞ்ஞானம் முதிரப்பெற்றுச் சிவத்தோடு இரண்டறக் கலத்தல் உள்ளதே.***

***குறிப்புரை :- 'அதனால் அவர் பிரளயாகலர் விஞ்ஞான கலராதற்குத் தடையில்லை' என்பது குறிப்பெச்சம். இதனானே, சகல வருக்கத்தினர் மேல்நிலையை எய்துமாறு கூறப்பட்டவாறு அறிக. சகலர்க்குக் கூறிய இம்முறை பற்றி ஏனை இருவகையினர் மேல் நிலை எய்துமாறு அறியப்படும்.***

***'கூடி, புக்கு, போய், மேவல்' என்பதற்கு, 'சகலத்தார்' என்னும் எழுவாய், மேலைத் திருமந்திரத்தினின்றும் வந்து இயைந்தது. 'விஞ்ஞான, அஞ்ஞான' என்பன பாடம் அல்ல.***

491. ஆணவந் துற்ற அவித்தா நனவற்றோர்
காணிய விந்துவாம் நாத சகலாதி
ஆணவ மாதி யடைந்தோர்க்க வரன்றே
சேணுயர் சத்தி சிவதத்வ மாமே. 7

---

*இதனால், ஏதுக் கூறி மேலது வலியுறுத்தப்பட்டது.*

*491. **தெளிவுரை :-** ஆணவத்தால் மிகுவிக்கப்பட்ட அறியாமையில் நிகழும் சாக்கிரம் முதலிய அவத்தைகளைக் கடந்தவர்க்கே, நாதம், விந்து முதலிய எல்லாத் தத்துவங்களும் தெளிவாய் விளங்கும். ஏனெனில், ஆணவமும், அதுவழியாகக் கன்ம மாயைகளும் ஆகிய அவற்றுட் கட்டுண்டு நின்றவர் பொருட்டன்றோ அவ் விந்து நாதம் முதலிய தத்துவங்கள் தோன்றுகின்றன!*

*__குறிப்புரை :-__ துற்ற - செறிவித்த. 'அவித்யா' என்னும் ஆரியச்சொல்; 'அவித்தா' எனத் திரிந்தது. "நனவு", என்றது உபலக்கணம். அஞ்ஞானத்தில் நிகழும் சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகள், கேவல சாக்கிராதியும், சகல சாக்கிராதியுமாம். அவற்றை நீக்கினோர் சுத்த சாக்கிரம் முதலியவற்றை எய்துவர். அவர்கட்கே தத்துவங்கள் பலவும், 'உருவம் தரிசனம், சுத்தி' என்னும் முறையில் படிப்படியாக விளங்கும். அங்ஙனம் விளங்கவே மாயா காரியங்களாகிய அத்தத்துவங்களும், அவற்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு நிற்கும் கன்மங்களும் நீங்கும். இவற்றின் நீக்கத்திற்கு, மூலமலமாகிய ஆணவம் நீங்கியதே காரணமாகும். அதனால், "ஆணவம் துற்ற... சகலாதி" என்றார்.*

*காணிய 'செய்யிய' என்னும் வினையெச்சம். 'காணிய ஆம் விந்து நாத சகலாதி' என மாற்றுக. சகலம் - எல்லாம். "சகலாதி" என்றதில் ஆதி, தத்துவம், இது தமிழ் வழக்காய்ப் பன்மை குறித்து நின்றது. ஈற்றடியையும் 'சிவதத்துவம் சத்தியாம்' என மாறிக் கூட்டுக. 'தத்வம்', ஆரியமாயே நின்றது. 'நாதம், விந்து முதலிய தத்துவங்களும் அவற்றின் காரியமாகிய தாத்துவிகங்களும் ஆணவமாதி அடைந்தோர் பொருட்டு' எனவே, ஆணவமாதி உள்ள துணையும் இவை இனிது காட்சிப்படா என்பது விளங்குதலின், ஆணவ முதலிய அகன்றோர்க்கு அவை காட்சிப்படுதல் அருத்தாபத்தியால் பெறப்படும் என்றவாறு. 'அவர் அன்றே' என்பது பாடம் அன்று.*

**492.** சிவமாதி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்
அவமாகாச் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்
பவமான தீர்வோர் பசுபாசம் அற்றோர்
நவமான தத்துவம் நாடிக்கண் டோரே. **8**

---

*இதனால், 'விஞ்ஞானகலரேயாயினும் மெய்ஞ்ஞானமின்றி வீடு அடையார்' என்பது கூறப்பட்டது.*

**492.** *தெளிவுரை :- ஐவகை மலங்களையும் முற்றக்கெடுத்துச் சிவமானவரே முடிந்த பயனைப்பெற்ற வல்லுநர். அதனால், அவமே பரமுத்தியாகிய சிவசாயுச்சத்தைப் பெற்று என்றும் இன்புறுவர். இனி வியப்பைத் தருவனவாகிய தத்துவங்களின் இயல்பை ஆராய்ச்சியால் உணர்கின்றவர் பாசஞான பசுஞானங்களின் நீங்கினாராயினும், அதன் பின்னர் அவற்றைத் தெளிய உணருங்காலத்தே பதிஞானம் எய்தி வீடுபெறுவர்.*

*குறிப்புரை :- நாடிக் காணுதலே, 'தத்துவ தரிசனம்' எனப்படும். தெளியக் காணுதலே தத்துவ சுத்தியாம். தத்துவ சுத்தி எய்தினோர் ஆன்மதரிசனமும் சிவரூபமும் உடன் நிகழப்பெற்றுப் பின் சிவதரிசன சிவயோகங்களால் ஆன்மசுத்தி எய்தப் பெறுவராகலின் "பசுபாசம் அற்றோர்" என்றாற்போல இறந்தகாலத்தாற் கூறாது, "பவமான தீர்வோர்" என எதிர்காலத்தார் கூறினார். 'பசு பாசம்' என்பன, அந்த ஞானத்தைக் குறித்த ஆகுபெயர்கள். 'நாடிக்கண்டோர் அற்றோர், தீர்வோர்' எனக்கூட்டுக.*

*இதனால், 'ஞானம் பெறினும் அது முதிராவழிப் பரமுத்தி கூடாது' என்பது கூறப்பட்டது. இவ்விரு திருமந்திரங்களும், 'விஞ்ஞானகலராதலே வீடுபேறு போலும்' என மலையாமைப் பொருட்டு அருளிச் செய்யப்பட்டமையின், இவ்வதிகாரத்தவாயின.*

## 16. பாத்திரம்

**493.** திலமத் தனையே சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரும்
நிலமத் தனைப்பொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. 1

---

*ஐந்தொழிலின்பின் படைத்தலோடு இயல்புடையனவாதல் பற்றிக் கருப்பக் கிரியை மூவகைச் சீவவருக்கங்களைக் கூறிய நாயனார், படைப்பில் இவ்விடத்திற்கு இன்றியமையாத மக்கட் பிறப்பில் 'நல்லோர் இவர், தீயோர் இவர்' என்பவற்றைப் பாத்திர அபாத்திரங்களின்மேல் வைத்துக் கூறுவாராய், முதற்கண் பாத்திரத்தை நான்கு திருமந்திரங்களால் கூறுகின்றார். பாத்திரம் - கொள்கலம். இஃது இங்குச் சிறப்புப்பற்றி நல்லதன்மேல் நின்றது. நல்லதனை 'சற்பாத்திரம்' என்பர். கொள்கலம் போல்வாரை, 'கொள்கலம்' என்றல் ஒப்புமைப் பற்றிய பான்மை வழக்கு. அதாவது அறவழியில் ஈட்டிய பொருளை வருபயன் கருதிச் சேமவைப்பாக வைக்குமிடமே. அதற்கு உரியார் சிவஞானியர் என்பதாம். அவரே ஈதற்கும், இருந்து கேட்டற்குமுரிய சற்பாத்திரமாவர் என்பதை உணர்த்துகின்றார்.*

**493.** *தெளிவுரை :- கொடுக்கப்படுவது எள்ளளவு பொன்னேயாயினும் அதனைச் சிவஞானம் கைவரப்பெற்ற ஒருவர்க்குக் கொடுத்தால், அது தன் பயனாக எண்பெருஞ் சித்திகளையும், பதமுத்தி அபரமுத்திகளையும், பரமுத்தியையும் தரும். வேட மாத்திரத்தால் சிவஞானிகள் போல நின்று யாதும் அறியாத முழுமூடர்க்கு நிலமத்தனைப் பொன்னைக் கொடுப்பினும், அது யாதும் பயன் தாராமையேயன்றி, ஞானம் குறைதற்கு ஏதுவாயும் விடும்.*

*குறிப்புரை :- சிவஞானியர்க்குச் செய்யப்படுவதைச் சிவன் தனக்குச் செய்ததாக ஏற்றுக்கொள்ளுதலால், அது பெரும்பயன் தரவல்லதாகின்றது. யாதும் அறியாதார்க்கு ஈவது வஞ்சரை வளர்க்கும் செய்கையாய் முடிவதால், அது கருதிய பயன் தாராமையேயன்றிக் கெடுதற்கும் ஏதுவாம் என்க.*

*இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்*
*துணைத்துணை வேள்விப் பயன். - குறள், 87*

*எனவும்,*

*தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்*
*வான்சிறிதாப் போர்த்து விடும். - நாலடியார், 38*

*எனவும் உயர்ந்தோர்க்குக் கொடுத்தலின் சிறப்பு இவ்வாறே யாண்டும் எடுத்தோதப்படுதல் அறிக.*

*ஈண்டுக்கூறுவன தற்போதம் இறவாத நூனெறி பற்றியனவும், "எவரேனுந் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி" (தி.6 ப.1 பா.3) என்றற்றொடக்கத்தன தற்போதம் இறந்த பத்திநெறி பற்றியனவும் ஆகலான், இவை தம்முள் முரணா என்க.*

*ஈதல், இங்கு, 'கொடுத்தல்' என்னும் பொருளது அறங்கருதித் தாழ்ந்தோர்க்கு அவர் வந்து இரந்தவழி ஈதல் ஈகையாகும். குறித்ததொரு பயனுக்குத் தடையாய் நிற்கும் தீவினை நீங்குதலும், அதற்கு ஏதுவாய நல்வினை கிடைத்தலும் கருதி உயர்ந்தோரை வருவித்து அவரை வழிபட்டுக் கொடுத்தல் கொடையாகும். இவற்றுள் கொடை செய்யும் வழிக் கொள்பவரையே, 'பாத்திரம்' என்பர். அதனால், இவ்வதிகாரம் கொடை செய்வாரை நோக்கியதன்றி, ஈகை செய்வாரை நோக்கியது ஆகாமை அறிக. இதனானே, இது பயன் கருதிச் செய்யப்படுவதாதலின், பின்னர் (தி.10, 7ஆம் தந்திரம்) வருகின்ற, பயன்கருதாத 'மாகேசு பூசையின்' வேறாதல் அறிக.* ***கொடை, 'தானம்' என்றும், ஈகை, 'தருமம்' என்றும் சொல்லப்படும். ஈகை, 'ஐயம்' எனவும்படும். திருவள்ளுவர் கொடையை விருந்தோம்பலில் கூறினார். ஈகையை, ஈகை என்றே வைத்துக் கூறினார்.*** *ஔவையாரும், 'ஐயம் இட்டுண்' 'தானமது விரும்பு' (ஆத்திசூடி) என்றார். பயன்பெரிதாதலும், பயன் கெடுதலும் இனிது விளங்குதற்பொருட்டு அபாத்திரத்தையும் இங்கு உடன் வைத்துக் காட்டினார். இத்திருமந்திரப் பொருளே பற்றி,*

*சிவஞானச் செயலுடையோர் கைமில் தானம்*
*திலமளவே செய்திடினும் நிலம்மலைபோல் திகழ்ந்து*
*பவமாயக் கடலில் அழுந் தாதவகை எடுத்துப்*
*பரபோகம் துய்ப்பித்துப் பாசத்தை அறுத்துத்*
*தவமாரும் பிறப்பொன்றில் சாரப் பண்ணிச்*
*சரியைகிரி யாயோகம் தன்னினும்சா ராமே*
*நவமாகும் தத்துவஞா னத்தைநல்கி*
*நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்குந் தானே.*

*எனச் சிவஞானசித்தி (சூ. 8 - 26) நூல் கூறுதல் காண்க. "சித்தி" என்றதை*

494. கண்டிருந் தார்உயிர் உண்டிடுங் காலனைக்
கொண்டிருந் தார்உயிர் கொள்ளுங் குணத்தனை
நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனைச்
சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே. 2

495. கைவிட்டி லேன்கரு வாகிய காலத்தும்
மெய்விட்டி லேன்விகிர் தன்னடி தேடுவன்
பொய்விட்டு நானே புரிசடை யானடி
நெய்விட் டிடாத இடிஞ்சிலு மாமே. 3

---

*"முத்தி" என்பதற்கு முன்னர்க்கூட்டுக.*

*இதனால், கொடை செய்வோர் சற்பாத்திரத்தால் எய்தும் பயன் கூறப்பட்டது.*

**494. *தெளிவுரை :-*** *உலகத்தில் உணர்வுடையார் சிலரே, உயிர்கள் அனைத்தையும் ஒவ்வொரு கால எல்லையில் கூற்றுவன் கொண்டு போதலை மனத்துட் கொண்டார்கள். பின்னும் தன்னை உட்கொண்டவரது உயிரைத் தான் தன்னுட்கொள்ளும் குணம் உடையவனும், நன்னெறியாகிய ஞானநெறியில் சென்றவர்மாட்டு அருள்மீக் கூர்கின்றவனும் ஆகிய சிவபெருமானை அந்நன்னெறியிலே சென்று உணர்ந்தார்கள். அவர் மேன்மக்களாதலன்றியும், 'தேவர்' எனவும் போற்றப்படுதற்கு உரியராவர். நோயறிந்தும், அதற்குரிய மருந்து இருந்தும் மக்கள் உணராராயினர். உணர்ந்தவர் தேவராவர். இறப்பாகிய நோயும் அதனை நீக்கு மருந்தாக இறைவன் உயிருக்குயிராக உள்ளேயிருப்பதும் அறியாமல் பலர் வீணே அழிகின்றனர் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *'அதனால், அவரே சற்பாத்திரர்' என்பது குறிப்பெச்சம். 'உயிர்கொள்ளும் குணத்தான்' என்றதனை, தி.8 'உயிருண்ணிப் பத்து' என்பதனோடு வைத்து நோக்குக. 'ஆம்' என்பதனை நாயனார் படர்க்கை ஐம்பாற்கும் உரித்தாகவே ஓதுவர்.*

*இதனால், சிவஞானிகள் சிலரேயாதல் கூறப்பட்டது.*

**495. *தெளிவுரை :-*** *நான் சிவபெருமானது திருவடியைக் கருவில் இருந்தபொழுதும் மறந்திலேன், பிறந்து வாழ்கின்ற இப்பொழுதும் அதனை மெய்யன்போடே நான் தேடுகின்றேன். அதனால், அத்திருவடி எனக்கு நெய்விட்டு ஏற்றாது இயல்பாகவே ஒளிவிடும் விளக்காகும்.*

**496.** ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவன்
ஏவின செய்யும் இலங்கிழை யோனே. **4**

---

***குறிப்புரை :-*** *'அவ்விளக்கினை அடைந்தோரே சற்பாத்திரர்' என்பது குறிப்பெச்சம். மெய் - உடம்பு. 'விட்டிலேன்' என்றது, அதனொடு கூடி வாழ்தலைக் குறித்தது. இடிஞ்சில் - அகல், அஃது ஆகுபெயராய விளக்கை உணர்த்திற்று. 'இடிஞ்சிலும் ஆம்' என்ற உம்மை, 'காணப்படு பொருளும் ஆம்' என ஆக்க உம்மை. "அவனருளாலே அவன் தாள் வணங்கி" (தி.8 சிவபுராணம், 18) என அருளிச் செய்தமை காண்க. ஈற்றடியை, 'நெய் விட்டிலாத' என ஓதி, "ஆமே" என்பதற்கு, 'பயன்தருமோ' என உரைத்து, சிவஞானம் இல்லாதவரால் பயன் இன்றாதலை ஒட்டணி வகையால் பெறுவாரும், 'புரிசடையான் அடியாகிய நெய்' என உருவகமாக்கி அப்பொருள் பெறுவாரும் ஆவர். அவருள் முன்னையோர்க்கு 'அடி' என்பதனை இருகாற் கூறவேண்டாமையும், பின்னையோர்க்கு இடிஞ்சிலாதற்கு ஏற்புடைய பொருள் கூறப்படாமையும் உணர்க. திருவடியாகிய திருவருட்பற்று இல்லாதவர் சிவஞானியர் ஆகார்.*

**496.** ***தெளிவுரை :-*** *விளங்குகின்ற மெய்ந்நூலை உணர்ந்தவன், 'ஆகற்பாலன ஆகுமேயன்றி அழியா; அழியற்பாலன அழியுமேயன்றி அழியாதொழியா; நீங்குவன நீங்குமேயன்றி நில்லா; வருவன வருமே யன்றி நீங்கா' என்பதனை உணர்ந்து, ஒன்றையும் தானே காணாது, அவை அனைத்திற்குங் காரணனான சிவன் காட்டியதைக் கண்டு, அவன் அருளாணையால் ஏவிய செயல்களையே செய்திருப்பான். எல்லாம் சிவன் என்று இருப்பவனே சிவஞானி என்றல் நுதலிற்று.*

***குறிப்புரை :-*** *'அவனும் சற்பாத்திரனே' என்பது குறிப்பெச்சம். காவலன் - அரசன்; முதல்வன். 'கண்டு, அவன் ஏவின செய்யும்' என்க. இழை - நூல். "இலங்குநூல்" (குறள், 410) என்றார் திருவள்ளுவரும். 'இளங் கிளையோன்' எனப் பாடம் ஓதி, 'புத்தடியான்' எனப் பொருள் உரைப்பாரும் உளர். சிவன் காட்டிற்றையே கண்டு அவன் ஆணை வழியே நிற்றல் புத்தடியாற்குக் கூடாமை அறிக. அன்றியும் இத்திரு மந்திரம் பின்னர் ஓரிடத்தில் உள்ளவாற்றையும் நோக்குக.*

*இதனால், சற்பாத்திரராய சிவஞானியருள் நூனெறியாளரது சிறப்புக் கூறப்பட்டது.*

## 17. அபாத்திரம்

497. கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்கும்
சீலமும் நோன்பும் இலாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது ஆகுமே. 1

498. ஈவது யோக இயம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
ஆவ தறிந்தன்பு தங்கா தவர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொ ளீரே. 2

---

*இனி அபாத்திரத்தையும் நான்கு திருமந்திரங்களால் கூறுகின்றார். அபாத்திரம் - அசற்பாத்திரம். தானத்திற்குரிய பாத்திரமாவார் இவர் என்பதை உடன்பாட்டு முறையில் விளக்கிய ஆசிரியர் ஆகார் இவர் என்பதையும் எடுத்துக்காட்டி "அபாத்திரத்தை" விளக்குகிறார்.*

**497.** **தெளிவுரை :-** *சிவநெறி ஒழுக்கமும், தவமும் இன்மையால் உயர்வுபெறாத மக்களை வேடமாத்திரத்தால் வழிபட்டுத் தானம் செய்வது, வறட்டுப் பசுவைப் பிறவி மாத்திரத்தால் வணங்கி உணவளித்துப் பாலைக் கறந்து பருக நினைத்தலோடு ஒக்கும். இனித் தானத்தை உயர்ந்தோரை அறிந்து செய்யாமல் எவரிடத்தும் செய்தல், ஒரு பயிரைக் காலம் அறிந்து செய்யாது, எக்காலத்திலும் செய்தலையும் ஒக்கும். அசற்பாத்திரத்துக்கு ஈவதில் பயனில்லை.*

*குறிப்புரை :- பசுவினது வறட்டுத் தன்மையை அறிதலினும், காலத்தை அறிதல் அரிதாதல் பற்றி, உயர்ந்தோரை அறிதலின் அருமையை விளக்கப் பின்னும் அவ்வுவமையைக் கூறினார். இரண்டு உவமைகளானும் உயர்ந்தோர் எய்தியவழி இகழ்ந்திராது ஏற்று வழிபட்டுத் தானம் செய்க என்பதும் பெற்றாம். "குனிந்து" என்பது பொருளினும் சென்று இயையும். "ஈந்தது" என்றே போயினாராயினும், 'ஈந்து பயன்பெற நினைப்பது' என்பது உவமையால் விளங்கும். 'அது பயிரும் ஆகும்' என்க. உம்மை, தொகுத்தல்.*

*இதனால், அசற்பாத்திரத்தில் செய்த தானம் பயன்படாமை கூறப்பட்டது.*

**498. தெளிவுரை :-** *பொருளைத் தானம் செய்தல், யோக நெறியில் இயம நியமங்களாகச் சொல்லப்படும் தவிர்வன செய்வன அறிந்து அந்நிலைக்கண் உறைத்து நிற்கும் உரனுடையோர்க்கேயாம். அவ்வாறன்றி, அவ்வுரனிலார்க்குச் செய்தல் பெருங்குற்றமாம் என்பதை உணர்மின்கள். யோகமும் அன்பும் உடையார்க்கன்றி ஏனோர்க்கு ஈவது பிழை.*

**499.** ஆமா றறியான் அதிபஞ்ச பாதகன்
தோமாறும் ஈசர்க்குந் தூய குரவற்குங்
காமாதி விட்டோர்க்குத் தூடணம் கற்பிப்போன்
போமா நரகில் புகான்போதங் கற்கவே. **3**

---

*குறிப்புரை :-* "ஈவது" முதலிய நான்கும் தொழிற்பெயர்கள். 'தவிர்வன செய்வன' என்னாது "யோக இயம நியமங்கள்" என்றார். 'அறநெறியளவில் நில்லாது, கடவுள் நெறியினும் சென்றவராதல் வேண்டும்' என்றற்கு, 'அன்பால் தங்கும்' என உருபு விரிக்க. பின்னர் வந்த, ''அறிந்து'' என்னும் எச்சம் ''தாங்காதவர்'' என்பதன் எதிர்மறையோடு முடிந்தது. இத்தொடர், 'அந்நிலையில் நில்லாதவர்' என்னும் சுட்டளவாய் நின்றது. 'அவர்க்கே' என்னும் ஏகாரம் தொகுத்தலாயிற்று. ''அன்றி'' என்பது முதலியவற்றை வேறு தொடராக்குக. 'தகாதார்க்குக் கொடுக்கப்படும் பொருள் தீய வழியிற் சென்று பலர்க்கும் தீங்கு விளைக்குமாகலின், அக்குற்றம் பொருளை ஈந்தாரையே முன்னர்ச் சாரும்' என்பதும் கருத்து.

*அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினால் அலறு முந்நீர்த்*
*தடங்கடல் நடுவுள் தீவு பலஉள அவற்றுள் தோன்றி*
*உடம்பொடு முகங்கள் ஒவ்வார் ஊழ்கனி மாந்தி வாழ்வார்*
*மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேல் மன்ன ரேறே.*

*- சீவகசிந்தாமணி - முத்தியிலம்பகம், 27*

*என்றதும் காண்க.*

*இதனால், அசற்பாத்திரத்தில் இட்ட தாளம் பயன்படா தொழிதன் மேலும், துன்பம் பயக்கும் என்பது கூறப்பட்டது.*

**499.** ***தெளிவுரை :-*** *குற்றம் நீங்குதற்கு நிமித்தனாய சிவபிரானுக்கும், சிவகுரவர்க்கும், சிவயோகியர்க்கும் குற்றம் கற்பித்து இகழ்பவன் பின் விளைவதை அறியான். அவன் பஞ்ச மாபாதகனினும் பெரும்பாதகன், அதனால், அவன் பின்னர்ப் பெருநரகில் வீழ்வான். இகழ்ந்து நிற்கும் அவன் பின்னொரு ஞான்று நல்லறிவைப் பெற்று அவர்களைப் புகழ்ந்து வழிபடுவானாயின், முன் செய்த பாதகத்தினின்றும் நீங்கி நரகம் புகாதொழிவான்.*

*குறிப்புரை :-* *முதலடியை மூன்றாமடிக்குப் பின்னர் வைத்து 'மா நரகில் போம்' எனவும், 'போதம் கற்கப் புகான்' எனவும் கூட்டி உரைக்க.*

*இதனால், சற்பாத்திரராய் உள்ளாரை அசற்பாத்திரராக இகழ்தலால் வரும் குற்றம் கூறப்பட்டது. இதுவும் தானம் செய்வார்க்கு ஆகாமை பற்றி இவ்வதிகாரத்திற் கூறப்பட்டது. சிவஞானியர்க்கு*

**500.** **மண்மலை யத்தனை மாதனம் ஈயினும்**
**அண்ணல் சிவனென்றே யஞ்சலி யத்தனாய்**
**எண்ணி இறைஞ்சாதாற் கீந்த இருவரும்**
**நண்ணுவர் ஏழாம் நரகக் குழியிலே.** **4**

---

*ஈந்தவன் நரகிற் புகான்.*

**500.** *தெளிவுரை :-* *'தலைவனே, சிவபெருமானே' என்று அவனது நாமத்தைச் சொல்லி கைகூப்பி அவனை நினைத்து வணங்கித் தானம் வாங்க அறியாதவர்க்கு, நிலத்தளவும், மலையளவுமான பெரும் பொருளைத் தானமாகக் கொடுத்தாலும் அப்பொருளால் பயன் பெறாது, ஈந்தோனும் ஈயப்பட்டோனும் (ஏற்போனும்) ஆகிய இருவரும் மீளாத நரகக் குழியிலே வீழ்வர்.*

*குறிப்புரை :-* *"அத்தனை" என்றதனை, 'மண்' என்றதற்கும் கொள்க. 'இறைஞ்சாதார்க்கு ஈயினும்' என மேலே கூட்டுக. தானம் வாங்குவோர் அதனைத் தமக்கு உரியதாக நினையாது சிவனுடையதாக நினைந்து, 'சிவனுக்கு ஆகுக' (சிவார்ப்பணமஸ்து) எனக் கூறியே ஏற்றல் வேண்டும். அவ்வாறு ஏலாதார் சிவனது பொருளைக் கவர்ந்த சிவத் துரோகிகளாவர். அதனால், 'அவரும், அவருக்குக் கொடுத்தோரும் நரகுறுவர்' என்றார். தானம் வாங்காது தம் பொருளை நுகர்வோரும் அங்ஙனமே நினைத்தல் வேண்டுமாயினும், அவர், அங்ஙனம் நினைக்கும் உயர்ந்தோர்' எனத் தம்மைக் கூறிக் கொள்ளாமையின் அவர்க்கும், அவரொடு பழகுவோர்க்கும் 'பெருங்குற்றம் இல்லை'. தானம் வாங்குவோர் அத்தன்மையுடைய உயர்ந்தோராகத் தம்மைக் கூறிக்கொண்டு, தானம் செய்வாரை வஞ்சித்தலின் குற்றமுடைய ராகின்றனர். இதனை உட்கொண்டே திருவள்ளுவரும்,*

*நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து*
*வாழ்வாரின் வன்கணார் இல்.*

*- குறள் - 276*

*என்றார். இனிக் கொடுப்பாரும் அவ்வாறே சிவனை நினைந்து, ஏற்போரைச் சிவனாகவும், பொருளைச் சிவனுடையதாகவும் கருதி 'சிவனுக்கு ஆகுக' என்று சொல்லிலே கொடுத்தல் வேண்டுமாதலின் "இருவரும்" என்றார். "ஈந்த" என்னும் பெயரெச்சம் வினைமுதற் பொருண்மையும், கோடற் பொருண்மையுமாக இருநிலைமை எய்தி நின்றது. ஈவாரும், ஏற்பாரும் இறையுணர்வு இலராயின் நரகு எய்துவர்.*

*இதனால், மேல், "பெரும்பிழை" எனப்பட்ட, அசற்பாத்திரத்தில் இடும் குற்றத்தால் விளையும் துன்பம் கூறப்பட்டது.*

## 18. தீர்த்த உண்மை

501. உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியி லோரே. 1

---

*படைக்கப்பட்ட மக்களது இயல்புணர்தலாகிய இயைபு பற்றிப் பாத்திர அபாத்திரங்களைக் கூறிய நாயனார், அவ்வழித் தானம் இயைபு பட்டமையின், அதனோடொத்த தீர்த்த யாத்திரையின் இயல்பை அதன் பின்னர் ஆறு திருமந்திரங்களால் உணர்த்துகின்றார். தீர்த்தம் - தெய்வத்தன்மை உடைய நீர். புனிதமுறுத்துகின்ற தீர்த்தங்களும் புறத்தே இல்லை. எல்லாம் அகத்தே என்கிறார்.*

**501.** *தெளிவுரை :- உள்ளத்திற்றானே நற்பண்புகளாகிய பல தீர்த்தங்கள் உள்ளன. வினை நீங்குமாறு அவற்றில் மூழ்குதலை மெல்லப் பயிலாத வஞ்ச மனம் உடைய அறிவிலிகள். புறத்தே பல தீர்த்தங்களைத் தேடிப் பள்ளமும், மேடும் கடந்து நடந்து இளைக்கின்றனர்.*

*குறிப்புரை :- கல்வி, அத்தீர்த்தத்தில் மூழ்கக் கற்றல்.*

*இதனால், அகத்தூய்மையின்றிப் புறத்தே தீர்த்தத்தில் மூழ்குதலால் பயனில்லை என்பது கூறப்பட்டது.*

*கங்கை யாடிலென்! காவிரி யாடிலென்!*
*கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்!*
*ஓங்கு மாகடல் ஓதநீ ராடிலென்!*
*எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே. - தி.5 ப.99 ப.2*

*கோடி தீர்த்தம் கலந்து குளித்தவை*
*ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்*
*ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி*
*மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே. - தி.5 ப.99 பா.9*

*என அப்பரும் அருளிச்செய்தல் காண்க.*

**502.** *தெளிவுரை :- தெளிந்த ஞானிகளது உள்ளத்தில் வீற்றிருப்பவனாகிய சிவபெருமான், அன்பினால் கண்ணீர் துளிக்கத் தெரிந்தவர்க்குக் குளிர்ச்சி உடையனாய் விளங்குவான். யோகநெறியில் மூச்சை அடக்க அறிந்தவர்க்கும் அவன் ஒருகால் விளங்குதல் கூடும்.*

502. தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றும்
குளியறி வாளர்க்குக் கூடவும் ஒண்ணான்
வளியறி வாளர்க்கு வாய்க்கினும் வாய்க்கும்
தெளியறி வாளர்தஞ் சிந்தையு ளானே. 2

503. உள்ளத்தினர் உள்ளே உணரும் ஒருவனை
கள்ளத்தின் ஆருங் கலந்தறி வாரில்லை
வெள்ளத்தை நாடி விடும்அவர் தீவினைப்
பள்ளத்தில் இட்டதோர் பத்தல்உள் ளானே. 3

---

*ஆயினும், ஞானம், அன்பு, யோகம் என்ற இவற்றுள் ஒன்றும் இன்றித் தீர்த்தத்திலே மட்டும் சென்று முழுகத் தெரிந்தவர்க்கு அவன் அடைதற்கு அரியன்.*

***குறிப்புரை :-*** *நான்கு, இரண்டாம் அடிகளை ஒன்று நான்காம் அடிகளாக வைத்து உரைக்க. தளி-நீர்த்துளி. "தண்ணிது" என்பது பண்புப்பெயராய் நின்றது. குளி - குளித்தல், முதனிலைத் தொழிற்பெயர். "கூடவும்" என்ற உம்மை, சிறப்பு. தியான சமாதிகளிற் செல்லாது இயம நியம பிராணாயாமங்களில் நிற்பவர்க்கு எளிதன்மை கூறுவார், "வளியறிவாளர்க்கு வாய்க்கினும் வாய்க்கும்" என்றார். வளி-காற்று.*

*இதனால், ஞானமாகிய அன்பும் இல்லாதவர் தீர்த்தத்தில் சென்று முழுகின் பயன் இல்லை என்பது கூறப்பட்டது.*

**503. தெளிவுரை :-** *அகத்தே உயிர்க்குயிராக உணரப்படும் ஒருவனாகிய சிவபெருமானை அவ்வுள்ளத்துள் அன்பில்லாது ஆரவார மாத்திரையாகச் செய்யும் செயல்களால் ஒருவரும் அடைதல் இயலாது. ஆகவே, அன்புமிகும் வழியை நாடாமலே புறத்தில் தீர்த்தங்கள் பலவற்றை நாடிச் செல்பவர், தீவினையாகிய கிணற்றில் போடப்பட்ட பத்தலேயாவர். அதனால், அவருள்ளத்தில் அவன் விளங்குவனோ!*

***குறிப்புரை :-*** *"நாடிவிடும்" என்பது ஒருசொல். 'பத்தலாவர்' எனவும், 'அவருள் உள்ளானே' எனவும் இருதொடராகக் கொள்க. பத்தல் - நீர்முகக்கும் கருவி. 'அன்பின்றித் தீர்த்தத்தில் முழுகுதலாலே சிவனைப் பெறுதல் கூடுமாயின், நீர்ப்பத்தலும் சிவனை அடையும்' என நகையுண்டாகக் கூறியவாறு.*

*இதனால், தீர்த்தங்களில் மூழ்குவார் மேற்கூறியவாறு தளியறிவினராதல் வேண்டும் என்பது கூறப்பட்டது.*

504. அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானைச்
செறிவான் உறைபதஞ் சென்று வலங்கொள்
மறியார் வளைக்க வருபுனற் கங்கைப்
பொறியார் புனல் மூழ்கப் புண்ணியராமே. 4

---

*504. **தெளிவுரை :-** சிவபெருமானை அறிவால் அறிகின்றவரே அமரர் (இறப்பும், பிறப்பும் இல்லாதவர்) ஆவர். அவரே சிவலோகத்தில் சென்று வீடு பெற்று வாழ்ந்து, பின் மீளாநிலையைப் பெறுவர். ஆகவே, சிலர் அவனை அங்ஙனம் அறிவால் அறிதலைச் செய்யாமலே, தன்னிடத்து மூழ்குவாரை ஈர்த்துச் செல்ல வருகின்ற கங்கையாற்றில் மரக்கலம் செல்லத்தக்கவாறு ஆழ்ந்தும் அகன்றும் ஓடும் நீரில் முழுகிய துணையானே அறிவராய் விடுவரோ!*

*குறிப்புரை :- 'ஆதிப்பிரானை அறிவார்' என முன்னே கூட்டுக. செறிவான் - எங்கும் செறிந்தான்; (தி.8 திருவம்மானை, 13) சிவன். அவன் உறைபதம், சிவலோகம். 'திருக்கோயில்கள்' என்பாரும் உளர். அவற்றிற்கு இங்கு இயைபின்மை அறிக. வலம் - வெற்றி; வீறு. "கொள்" என்னும் முதனிலை, 'கொண்டு' என எச்சப்பொருள் தந்தது. "மறியார்" என்பதைப் பெயராக்கி, 'வலங்கொள் மறியார்' என வினைத்தொகை யாக்கலுமாம். வளைத்தல் - ஈர்த்து ஆழ்த்தல். 'வளைக்கைக் கங்கை' எனப்பாடம் ஓதி, உமையம்மையது கைவிரல்களினின்றும் கங்கை தோன்றிய புராண வரலாற்றை அதற்குப் பொருளாக உரைப்பாரும், பிற கூறுவாருமாவார். வளைக்கை வருபுனல், இறைவனுடைய திருக்கண்களை உமையம்மை புதைத்த ஞான்று உலகம் இருண்டதாக, இறைவன் நெற்றிக்கண்ணை திறந்து உலகிற்கு ஒளிதந்தார், அவ்வெப்பம் தாங்காது அம்மையின் திருக்கரங்கள் வியர்த்தன. அம்மை கையை உதறினாள். அவளுடைய பத்து விரல்களின் வழியாகச் சிந்திய வியர்வையிலிருந்து பத்துக் கங்கைகள் உண்டாயின என்பது புராண வரலாறு. பொறி - துளி, ஏகாரம் ஈற்றசையன்று. பொறி - எந்திரம். காற்றால் இயங்குதலின், பாய்மரக் கப்பலையே அக்காலத்தார் எந்திரமாகக் கருதினர். "புண்ணியர்" என்றது, 'ஞானியர்' என்னும் பொருளது.*

*இதனால், தீர்த்தங்களில் மூழ்குவார் மேற்கூறியவாறு தெளியறிவினராதல் வேண்டும் என்பது கூறப்பட்டது. சரியை முதலியன இறைவனை அறிவால் அறியும் முறையேயாதல் அறிக.*

**505.** கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்
உடலுற்றுத் தேடுவார் தம்மையொப் பாரிலர்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்
றுடலிற் புகுந்தமை ஒன்றறி யாரே. **5**

**506.** கலந்தது நீர துடம்பிற் கறுக்கும்
கலந்தது நீர துடம்பிற் சிவக்கும்
கலந்தது நீர துடம்பில் வெளுக்கும்
கலந்தது நீர்நிலங் காற்றது வாமே. **6**

---

505. ***தெளிவுரை :-*** *சிவபெருமானை, 'எங்குளன்' என்று தீர்த்தங்களில் வருந்தி முழுகிக் காணச் செல்பவரது செயல், கடலில் போடப்பட்ட பொருளைக் குளத்தில் எடுக்கச் செல்பவரது செயல்போல்வதாம். அவரை ஒத்த அறிவிலிகள் பிறர் இலர். ஏனெனின், என்றும் ஒரு பெற்றியனாகிய சிவபெருமான், தனது திருவருள் காரணமாக யாவர் உடலிலும் புகுந்து நிற்றலைச் சிறிதும் உணராமையால். இறைவனை இடம்விட்டு இடம் தேடுவார் அஞ்ஞானிகள் என்றார்.*

***குறிப்புரை :-*** *"தேடுவார்" என்றது ஆகுபெயர், 'உடலிலே நிற்பவனை அவ்வுடலைப் பெற்றிருந்தும் பிறவிடத்துக் காண முயன்று வருந்துதல் அறியாமைப்பாலது' என்பதாம். உயிருள் நிற்பவனை உடலில் நிற்பவனாக ஓதியது, அவனை அதனுள் நிற்பவனாக நினைத்து யோகநெறியில் முயல்வார்க்கு அவன் அங்கு வெளிப்படுதல் பற்றி.*

*இதனால், 'தீர்த்தங்களில் முழுகுவார்' மேற்கூறியவாறு தளியறிவினராதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**506. *தெளிவுரை :-*** *நீர்தான், 'நிலம், காற்று' என்பவற்றில் கலப்பினும் அது அதுவாம் இயல்புடையது. ஆதலின், அஃது எவ்வுடம்பிற் கலந்ததாயினும் அவ்வுடம்பின் தன்மைக்கு ஏற்பக் கறுத்தும், சிவத்தும், வெளுத்தும் நிற்பதாம். முக்குணங்களையும் திருவருள், நீரால் கழுவச் சொல்கிறார்.*

***குறிப்புரை :-*** *'அதனால், சிவஞானமின்றி வாளா தீர்த்தத்தில் மூழ்குவோர்க்கு அவரவர்க்கு உள்ள குணமே பின்னும் மிகுந்து நிற்கும்' என்றவாறு. நான்கிடத்தும், "கலந்தது" என்றதன்பின், 'ஆயின்' என்பன*

*சொல்லெச்சமாய் நின்றன. "கலந்ததேல்" என்றே பாடம் ஓதுதலும் ஆம், ஈற்றடி நீரின் தன்மையைக் கூறிற்று; நீர் காற்றாதல் ஆவியாய்க் கலந்தபொழுதாம். ஈற்றடியை முதலில் வைத்து, "நிலம், காற்று" என்றவற்றிலும் "உடம்பில்" என்பனபோல இல்லுருபு விரிக்க. "நீரது" நான்கிலும் அது பகுதிப்பொருள் விகுதிகள். கறுத்தல் முதலிய மூன்றும் தாமத இராசத சாத்துவிக குணங்களை மிகுவித்தலைக் குறித்த குறிப்பு மொழிகள். 'கலந்ததன் இயல்பாகும்' என்றதனால், "உடம்பு" என வாளா கூறினாரேனும், கறுத்தல் முதலிய மூன்றிலும், 'அவ்வக் குணமுடைய உடம்பு' என்பது கொள்ளப்படும்.*

*இதனால், 'தீர்த்தம் தெய்வ நீராதல், உள்ளத்துணர்வாலன்றி இல்லை' என்பது கூறப்பட்டது. அப்பரும், நீராண்ட புரோதாயம் ஆடுங்காலத்து, 'மாதேவா மாதேவா என்று வாழ்த்தி ஆடப்பெற்றோம்' (தி.6 ப.93 பா.3) என்று அருளிச்செய்தமை அறியற்பாற்று.*

## 19. திருக்கோயிற் குற்றம்

507. தாவர லிங்கம் பறித்தொன்றில் தாபித்தால்
ஆவதன் முன்னே அரசு நிலைகெடும்
சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடும்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. 1

---

*இயைபு பற்றித் தீர்த்த உண்மை உணர்த்திப் பின் முறையானே மூர்த்தி இருக்கும் திருக்கோயிற் குற்றம் உணர்த்துவாராய் அவற்றைக் காக்கும் முறையையே ஐந்து திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

507. ***தெளிவுரை :-*** *ஒரு திருக்கோயிலில் உள்ள அசையாத சிவக்குறையைப் பெயர்த்தெடுத்துக் கொண்டுபோய் வேறொரு திருக்கோயிலில் நிறுவினால், அச்செயல் முற்றுப்பெறுவதற்கு முன்பே அரசனது ஆட்சி நிலைகுலையும்; அச்செயலுக்கு உரியவன், தான் இறப்பதற்கு முன்பு தொழுநோய் கொண்டு துன்புற்று இறப்பான். இவ்வாறு எங்கள் தலைவராகிய நந்திபெருமான் எங்கட்கு உறுதிப்பட உரைத்தார்.*

*தாவரலிங்கம் - நிலைபெறுத்தப் பெற்ற சிவபெருமானது திருவுரு. சிவலிங்கமுமாம் இலிங்கத்தைப் பறித்து வேறொரிடத்தில் தாபித்தாலே இத்துணைக்கேடு விளையுமாயின் தாபிக்காமல் விடின் விளையும் பயன் எத்துணையோ என்று எண்ணுக.*

*ஆவதன் முன்னே - தாபித்தல் ஆதற்கு முன்பு, கேட்பார்க்கு உறுதி பிறக்க இது சிவனாணை என்று விளக்கியவாறு.*

***குறிப்புரை :-*** *எனவே, 'அரசன் தனது நாட்டில் இச்செயல் எங்கும் நிகழாதவாறு காத்தல் வேண்டும்' எனவும், 'அரசன் அறியாதவாறு இச்செயலை முடித்துவிட ஒருவரும் எண்ணலாகாது' எனவும் கூறியவாறாம். 'இலிங்கம் இல்லாத கோயிலின் நலம் கருதி இலிங்கம் உள்ள கோயிலைப் பாழாக்கிவிடுதல் கூடாது' என்பதும், ஒரு கோயிலில் உள்ள இலிங்கம் எப்பொழுது யாரால் நிறுவப் பெற்றதோ அதனை அவர்களது கருத்திற்கு மாறாகப் பெயர்த்துக் கொண்டு போய் வேறிடத்தில் வைத்தல்கூடாது என்பதும் கருத்து, 'சிறந்து விளங்கும் கோயிலில் உள்ள இலிங்கத்தைக் கொண்டுபோய்ப் புதிய கோயிலில் நிறுவினால் அக்கோயிலுக்குச் சிறப்பு உண்டாகும்; இதனால் குற்றமில்லை' என்று எண்ணும் சிலரது அறியாமையைப்*

**508.** கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்அபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ணவன் ஆணையே. **2**

---

*போக்குதற் பொருட்டு இத்திருமந்திரத்தை அருளிச்செய்தார். இதனானே, ஒரு கோயிலில் முன்பு உள்ள மூர்த்தியைத் தக்க காரணம் இல்லாமல் நீக்கி வேறொரு மூர்த்தியை நிறுவுதலும் குற்றம் என்பது பெறப்பட்டது.*

*இதனால், திருக்கோயிலில் உள்ள மூர்த்திக்குச் செய்யும் குற்றம் விலக்கப்பட்டது.*

**508. *தெளிவுரை :-*** *திருக்கோயிலில் மதிலைக்கட்டுவித்தவரே பின்பு பொருளாசை முதலிய காரணங்களால் அதினின்றும் ஒரு கல்லை எடுப்பினும், சாதாக்கிய தத்துவத்தில் இருந்துகொண்டு ஆகமங்களை அருளிச்செய்த சதாசிவ மூர்த்தியின் ஆணை அவரை அழிக்கும். அக்குற்றம் நிகழாவாறு காவாமைபற்றி, அப்பொழுது முடிசூடி ஆள்கின்ற அந்நாட்டு அரசரையும் அவ்வாணை இடருறச் செய்யும். அக்குற்றத்தைச் செய்தவர், 'முனிவர்' என்று உயர்த்துச் சொல்லப்படுகின்ற அந்தணாராயினும், அவ்வாணை அவரைக் கொலையுண்டு மடியவே செய்யும்.*

***குறிப்புரை :-*** *'கட்டுவித்தவர்க்கே இவ்வாறாம் எனின், பிறர் அது செய்யக் கருதுவாராயின் என்னாவார்' என்பது சொல்ல வேண்டாவாயிற்று, இதனானே, கோயில் மதில் முதலியவற்றிற்கே யன்றி அதன் உள்ளிடம், திருக்குளம், நந்தவனம் முதலியவற்றிற்கும் பழுதுண்டாக்கலாகாமை அறிந்துகொள்க. "வாங்கிய" என்பதன்பின், 'அவரை' என்பது வருவிக்க.*

*இதனால், திருக்கோயில் முதலிய இறைவன் இடத்திற்குச் செய்யும் குற்றம் விலக்கப்பட்டது.*

**509. *தெளிவுரை :-*** *பூசை தவறுதலால் ஏற்படும் தீமைகள் இவையிவையென அறிவிக்கிறார். சிவபெருமானது திருக்கோயில்களில் அன்றாட வழிபாடு, சிறப்புநாள் விழாக்கள் முதலியவை இல்லாதொழியினும், ஆகமங்களில் சொல்லப்பட்ட முறை தவறி நடப்பினும், நாட்டில் தீர்க்கலாகாத நோய்கள் பரவி, மழையும்*

**509.** ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே. **3**

**510.** முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு ள்நந்தி எடுத்துரைத் தானே. **4**

---

*பொய்த்துப்போக, சிற்றரசரால் வணங்கப்படுகின்ற பேரரசர்களும் பகைவரை வெல்லும் வலியிலராய்த் தம் நாட்டை இழப்பர்.*

***குறிப்புரை :-*** *ஆதலால், அரசர் தம் நாட்டில் திருக்கோயில்களில் நித்திய நைமித்திகங்கள் செவ்வனே நடைபெறச் செய்தலைத் தம் தலையாய கடமையாகக் கொள்ளல் வேண்டும் என்பதாயிற்று. "அவனி" என்றது, அக்கோயிலில் உள்ள நாட்டைக் குறித்தது. "பூசை" என்றது நைமித்திகத்தையும் அடக்கியேயாம். 'மழை குன்றும்' என்பதும் பாடம்.*

**510. *தெளிவுரை :-*** *சிவபெருமானது திருக்கோயில்களில் மேற்கூறிய குறைகள் உளவாகுமாயின், அரசர்கள் வலிமை இழத்தலேயன்றிப் பிற தீமைகளையும் அடைவர். நாட்டில் விளையும், பிற வருவாய்களும் குறையும். மாளிகைகளில் கன்னம் இட்டுக் களவாடுதல், கொள்ளை முதலிய பிற களவுகள் மிகுதியாகும். எங்கள் அருளாசிரியராகிய நந்திபெருமான் எங்கட்கு இவ்வாறு எடுத்து அருளிச்செய்தார்.*

***குறிப்புரை :-*** *முதலடி அனுவாதம். கன்னம் இடுதலை முன்னர்ப் பிரித்தமையின், "களவு" என்றது பிறவற்றையாயிற்று. 'காசினிக்கு' என்பதும் பாடம்.*

*இவ் இரண்டு திருமந்திரங்களாலும் திருக்கோயில்களில் நித்திய நைமித்திகங்கட்குக் குறையுண்டாகச் செய்தல் விளக்கப்பட்டது.*

**511. *தெளிவுரை :-*** *பிறப்புப் பற்றிப் பலராலும் சொல்லப்படுகின்ற பார்ப்பான் என்னும் பெயரை மட்டும் பெற்றுச் சிவபிரானிடத்து அன்பும், சிவாகம அறிவும், ஒழுக்கமும் இல்லாத அந்தணன் திருக்கோயிலில் சிவபெருமானைப் பிறர் பொருட்டு*

511. பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தாற்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாம்என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. 5

---

*வழிபடுவானாயின், அக்கோயிலை உடைய நாட்டில் உள்நாட்டுக் கலகங்களும், வெளிநாட்டுப் போர்களும் விளைதலோடு, அந்நாட்டில் கொடிய நோய்களும், வயல்கள் வன்னிலங்களாய் விளைவில்லாது பஞ்சமும் உளவாகும் என்று எங்கள் திருமரபின் முதல்வராம் சிறப்புப் பொருந்திய நந்திபெருமான் எங்கட்கு ஆகமங்களை ஆய்ந்துரைத் தருளினார்.*

***குறிப்புரை :-*** *“மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்” (குறள். 134) எனவும், “அந்தணர் நூல்” (குறள், 543) எனவும் கூறியவாற்றல், வேதம், அரசரும், வணிகரும்'' என்னும் ஏனையிருவர்க்கும் பொதுமையின் உரியதாயினும், அந்தணர்க்கே சிறந்ததாதல் அறியப்படும். படவே, ‘வேதம் ஓதுதலைத் தொழிலாக உடையோரே அந்தணர்’ என்பதும் போதரும்.*

*திருவள்ளுவர், “பார்ப்பான் பிறப்பு ஒழுக்கம் குன்றக் கெடும்” (குறள், 134) என்று ஓதுதலானும், பிறப்புப் பற்றிவரும் பெயரைப் பெறாமல், வேதாகமங்களை ஓதும் தொழிலாகிய சிறப்பை மட்டும் பெற்ற அந்தணன் சிவபிரானைப் பிறர் பொருட்டு அர்ச்சித்தலை இங்கு நாயனார் விலக்காமையானும் பிறப்பை விடச் சிறப்பே அர்ச்சனைக்கு யாண்டும் வேண்டப்படுதல் விளங்கும். பிறப்பாவது சில பல தலைமுறைகளில் உள்ளார். ஒழியாது ஒரு தொழிலே கடைப் பிடித்தமை பற்றி அவர் அந்தணர் முதலிய பெயரைப் பெற்று நிற்க, அவர்தம் வழித் தோன்றலாய்ப் பிறந்தோரும் அப்பிறப்புப் பற்றி அப்பெயரை உடையராதல், சிறப்பாவது அவரவர் அவ்வப்பொழுது தத்தமக்குரியதாகக் கொண்ட தொழில்.*

*சிறப்பு நிலையில் சிவபெருமானையே முதற் கடவுளாகக் கொண்டு திருநீறும் உருத்திராக்கமும் ஆகிய சிவசின்னங்களை அணிந்து அப்பெருமானை வழிபடுவோர் யாவரும் ‘சைவர்’ எனப்படுவர். அவருள் சிவாகமத்தின் வழித் தீக்கை பெற்றோர் ‘சிறப்புச் சைவர்’ எனவும், அவ்வாறு தீக்கை பெறாதோர், ‘பொதுச் சைவர்’ எனவும் பெயர் பெறுவர். சிறப்புச் சைவருள் உபநயனமும் பெற்றுச் சிவாகமத்தைப் பொதுவாகவும், வேதத்தைச் சிறப்பாகவும் ஓதுதலையே*

தொழிலாகக் கொண்டு சிவபெருமானை வேத மந்திரங்களால் வேத விதிப்படி வழிபடுவோர் 'மகா சைவர்' என்றும், வேதத்தைப் பொதுவாகவும், சிவாகமத்தைச் சிறப்பாகவும் ஓதுதலையே தொழிலாகக் கொண்டு, சிவபெருமானைச் சிவாகம மந்திரங்களால், சிவாகம விதிப்படி வழிபடுவோர் 'ஆதி சைவர்' எனவும் பெயர்பெறுவர். மகாசைவரும், ஆதிசைவரும் உபநயனமும் பெற்று வேதாகமங்களை ஓதுதலையே தொழிலாக உடைமையால், 'அந்தணர்' எனவும் படுவர். ஆகவே, மகா சைவர் 'மகாசைவ அந்தணர்' என்றும், 'ஆதிசைவ அந்தணர்' என்றும் சொல்லப்படுவர். இவருள் மகாசைவ அந்தண சிவாகமவழி நில்லாமையால், அவருக்கு ஆசாரியாபிடேகமும், அதன்வழி வரும் ஆசிரியத் தன்மையும் இல்லை. அதனால், அவர் சைவரல்லாத பிறர்க்கே ஆசிரியராதற்கு உரியர். ஆதி சைவ அந்தணர் சிவாகமத்தையே சிறப்பாக ஓதி அவற்றின்வழி நிற்றலால், அவருக்கே அபிடேகமும், அதன்வழி ஆசிரியத் தன்மையும் பெறும் உரிமை உண்டு.

உபநயனம் இன்றி வேதத்தில் உரிமை கிட்டாதது போலச் சிவ தீக்கையின்றிச் சிவாகமத்தில் உரிமை கிட்டாது. அதனால், சிவ தீக்கையின்றி உபநயனம் மட்டுமே பெற்று வேதத்தை ஓதுதல், ஓதுவித்தல், வேதத்தின்வழி வேட்டல், வேட்பித்தல்களைச் செய்து, சிவபெருமானையே முதற்கடவுளாகக் கொள்ளுதலில் வழுவாது நிற்போர், 'வைதிக சைவர்' எனப் பெயர்பெறுவர். அதனால், இவர், 'வைதிக சைவ அந்தணர்' எனப்படுவர், இவர் பொதுச் சைவரே. இவர் சிவாகமங்களை இகழார்.

வேதத்தை ஓதுதல், ஓதுவித்தல், அவற்றின்வழி வேட்டல், வேட்பித்தல்களைச் செய்யினும், சிவபெருமானை முதல்வனாகக் கொள்ளாமல் பிறவாறு கொள்வோருள் சிவாகமங்களையும், அவற்றின் வழி நிகழும் தீக்கை முதலியவற்றையும் இகழ்வோர் ஒருவாற்றானும் 'சைவர்' எனப்படாமையேயன்றி, அவர் அந்தணராதலும் இல்லை என்னும் கருத்தால், 'துர்ப்பிராமணர்' எனச் சைவர்களாலும், சைவ நூல்களாலும் இகழப்படுவர். செந்நெறியில் நில்லாது கொடுநெறியில் செல்லுதலால் இவரை, 'கொடுநெறி அந்தணர்' எனலாம்.

பிறப்பு மாத்திரத்தால் ஆதி சைவ அந்தணரும், மகாசைவ அந்தணருமாய்ப் பிறந்து, அவற்றிற்குரிய நெறியில் நில்லாதோர் 'அப் பிராமணர்' எனப்படுவர். இவரை 'ஒழுக்கமில் அந்தணர்' எனலாம். இன்னும் புறத்தே சிவவேடம் புனையினும், அகத்தே சிவபிரானை முதற்கடவுளாகக் கொண்டு சிறப்பு வகையில் அன்பு செய்யாத

*அந்தணரும் அப்பிராமணரேயாவர். இவர் யாவரும் 'பார்ப்பார்' எனப்படுகின்றனர். அதனால், ஆதிசைவப் பார்ப்பார், மகாசைவப் பார்ப்பார், வைதிகசைவப் பார்ப்பார், கொடுநெறிப் பார்ப்பார், ஒழுக்கமில் பார்ப்பார் எனப் பெயரால், பார்ப்பார் ஐவகையராகின்றனர். 'இவருள், ஆதிசைவப் பார்ப்பாரே தலையாயவர்' என்பது மேற்கூறியவாற்றானே இனிது விளங்கிக் கிடத்தலால், அவரையே 'உண்மைப் பார்ப்பார்' என வைத்து ஏனை நால்வரையும் நாயனார் பேர்கொண்ட பார்ப்பாராக ஓதினார் என்பது நன்கு பெறப்பட்டது.*

*"அர்ச்சிக்கில்" என்பதில் அர்ச்சித்தல், 'பிறர்பொருட்டு' என்பது, பின்னர்க் கூறிய தீய விளைவுகளை நாட்டிற்கு ஓதிய குறிப்பால் நன்கறியப்படும். பிறர்பொருட்டு வழிபடுதல், "பரார்த்த பூசை" எனப்படும். ஆன்மார்த்த பூசையை அவரவரும் தமக்கென எழுந்தருளு வித்துக்கொள்ளும் விருப்பக் குறி (இட்டலிங்கம்) ஆகிய பெயர்வுடைக் குறியில் (சல லிங்கத்தில்) செய்தல், எளிதின் இயலவேண்டியதே அன்றித் திருக்கோயிலில் உள்ள பெயராக் குறியில் (அசல லிங்கத்தில்) செய்தல் விலக்கப்பட்டதன்று. திருக்கோயிலில் சென்று ஆன்மார்த்த பூசையைச் செய்தல் அரிதாதலின், அது பண்டே அருகிவிட்டது. ஆன்மார்த்த பூசையைச் சைவர்கள் திருக்கோயிலில் சென்று செய்து வந்தமைக்குத் தி.12 திருத்தொண்டர் புராணத்தில் உள்ள திருநீலநக்க நாயனார். அரிவாட்டா நாயனார் இவர்களது வரலாறுகளே போதிய சான்றாகும். இவ்விருவரும் செய்த பூசை ஆன்மார்த்த பூசையே என்பது அவ்வரலாறுகளிலேயே தெற்றென விளங்கிக்கிடப்பது. திருக் கோயில்களில் மூல இலிங்கமேயன்றி, அதனைச் சூழ வேறு சில இலிங்கங்கள் காணப்படுதல், அங்குச் சென்று ஆன்மார்த்த பூசை செய்வோர் அவைகளையே மூல இலிங்கமாகக் கருதிக்கொண்டு அவற்றில் அவ்வழிபாட்டினைச் செய்தற்பொருட்டேயாம். இனி, மூல இலிங்கங்கள் தாமும் ஒரொரு காலத்தில் ஓரோவொருவர் ஓரோஒரு பயன்கருதி நிறுவித் தம் பொருட்டாக வழிபட்டு அப்பயன்களைப் பெற்றுப் பின் நிலையாக வைத்துச் சென்றனவே எனத் தல புராணங்கள் பலவும் இனிதெடுத்து விளம்புதலும் கருதத்தக்கது.*

*'ஆன்மார்த்தம், பரார்த்தம்' என்னும் பகுப்புப் பூசையின் பயனைப் பெறுவாரை நோக்கியதன்றிப் பூசிக்கப்படும் மூர்த்தியை நோக்கியதன்றாதல் வெளிப்படை. அஃதாவது, பூசைசெய்பவர், 'அப் பூசையின் பயன் தமக்கு ஆகுக' என நினைத்துச் செய்தல் ஆன்மார்த்த*

பூசையும், 'பிறர்க்கு ஆகுக' என நினைத்துச் செய்தல் பரார்த்த பூசையும் ஆகும். அதனால், திருக்கோயிலில் உள்ள மூர்த்தியையே தம் பொருட்டாகப் பூசிக்கின் அஃது ஆன்மார்த்த பூசையாதலும், தாம் எழுந்தருளுவித்துக் கொண்ட மூர்த்தியை பிறர் பொருட்டாகப் பூசிக்கின் பரார்த்த பூசையாதலும் தாமே விளங்கும். எனினும், பெரும்பான்மை பற்றித் திருக்கோயில் பூசை பரார்த்தமாகவும், தம் பொருட்டாய மூர்த்தி பூசை ஆன்மார்த்தமாகவும் சொல்லப் படுகின்றன. 'இவற்றுள் திருக்கோயிலில் உள்ள மூர்த்தியைப் பிறர் பொருட்டாகப் பூசிக்கு உரிமை சிறப்புச் சைவ அந்தணருக்கே சிறப்பாக உரியது' எனவும், 'அவருள்ளும் ஆதிசைவ அந்தணர்க்கே சிறப்பாக உரியது' எனவும் வைத்து, ஏனைய அந்தணர்க்கு அஃது இல்லை என்பதையே நாயனார் இத்திரு மந்திரத்தால் அருளிச் செய்தமை அறிக. 'மக்களுட் சிறந்தார் அந்தணர்' என்பதே பற்றி, சிறப்புச் சைவரல்லாத ஏனை அந்தணரையும் திருக்கோயிலில் பரார்த்த பூசைக்கு உரியராக்குதலையே நாயனார் இத்திருமந்திரத்தால் விலக்கினாரன்றிச் சிறப்புச் சைவருள் ஒருவரையும் விலக்கினாரல்லர் என்பது நுண்ணுணர்வான் நோக்கி உணர்ந்து கொள்க.

மேற்கூறிய ஆதிசைவர், மகாசைவரேயன்றிப் பிற சைவரும் உளர். அவர் 'அனு சைவர், அவாந்தர சைவர், பிரவர சைவர், அந்திய சைவர்' என இவர். சிவபெருமானைப் பொதுநீக்கி வழிபடுவாருள் நாடாளும் தொழில் உடையவரும், வாணிகத்தொழில் உடையவரும் அனு சைவர். உழவுத்தொழில் செய்வோர் அவாந்தர சைவர். பிறதொழில் செய்வோர் பிரவர சைவர். இவரெல்லாரும் சுதந்திரர், யாதொரு தொழிலாயினும் அதனைப் பிறருக்கு அடியவராய் இருந்து செய்பவர் அந்திய சைவர். எனினும், அமைச்சர், படைத்தலைவர் போன்றோர் அரசரோடொப்ப மதிக்கப்படுதலால் அனுசைவரே ஆவர். இங்குக் காட்டிய அறுவகைச் சைவரோடு சதாசிவக் கடவுளையும், 'அனாதி சைவர்' என வைத்துச் சைவர் எழுவராகச் சொல்லப்படுதலை, 'சைவ சமயநெறி, சிவதருமோத்தரம்' முதலிய நூல்களிற் கண்டுகொள்க.

ஆதிசைவரும், மகாசைவரும் சிறப்புச் சைவரேயன்றி, அவருள் பொதுச் சைவர் இல்லை. ஏனைய அனுசைவர் முதலிய நால்வரும் தீக்கை பெறாது இருப்பின் பொதுச் சைவரும், தீக்கை பெற்று இருப்பின் சிறப்புச் சைவரும் ஆவர். எவ்வாற்றானும் சிவனை வழிபடாதவரும், வழிபடினும் பொது நீக்கிச் சிறப்பாக வழிபடாதவரும் 'சைவர்' எனப்படார்.

*ஊன் உணவும், கட்குடியும் இல்லாதவரே சிவதீக்கை பெறுதற்கு உரியர். அவற்றை உடையோர் சிவதீக்கையைப் பெறின் அவரும், அவருக்கு அதனைப் பெறுவித்தோரும் நிரையம் புகுவர். அதனால், தீக்கைக்கு உரியரல்லாதார் பொதுச் சைவராயே இருந்து சிவநூலை ஓதல், கேட்டல், சிவாலயத்திற்கும், சிவனடியார்க்கும் ஏற்புடைத் தொண்டு செய்தல் என்னும் இவற்றையே மேற்கொண்டு வாழக்கடவர்.*

*இனி, சிவதீக்கையும் அவரவர் ஆற்றலுக்கேற்ப 'சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம்' என நால்வகைத்தாகும். அவற்றால் அவற்றைப் பெற்றோரும் 'சமயிகள், புத்திரர், சாதகர், ஆசிரியர்' என நால்வகைப்படுவர்.*

*சமய தீக்கையாவது, சிவ மூல மந்திரமாகிய திருவைந்தெழுத்தை முறையறிந்து கணித்தற்கும், 'சிவாகமம் திருமுறை, சாத்திரம்' என்னும் சைவப் பெருநூல்களை ஓதுதற்கும், சரியை முறையால் சிவபெருமானைச் சிறக்க வழிபடுதற்கும் உரிமைதந்து, சிறப்புச் சைவராகச் செய்வது, இச்சமய தீக்கை பெற்றோரே 'சமயிகள்' எனப்படுவர்.*

*விசேட தீக்கையாவது, மேற்கூறியவற்றோடு கிரியை முறையாலும், யோக முறையாலும் சிவபெருமானை வழிபட்டு அவனுக்கு அணுக்கராயும், அவனோடு ஒப்பவும் இருக்கும் உரிமையைத் தருவது. இதனைப் பெற்றோரே 'புத்திரர்' எனப்படுவர்.*

*நிருவாண தீக்கையாவது, சரியை, கிரியா யோகங்களின் பயனாக மலம் பரிபாகமாயிட, இருவினையொப்பும் நாலாம் சத்தி நிபாதமும் வரப்பெற்று, அதனால் சிவனையே அடையும் அவா உண்டாகப் பெற்றவர்க்கு அவனை அடையுமாற்றை அறிந்து அடைதற் பொருட்டு முப்பொருளின் இயல்பை இனிதுணர்த்துவது. இங்ஙனம் உணர்த்தப் பெற்றவர் சிவபெருமானை அடையும் நெறிக்கண்ணே நிற்றலின், 'சாதகர்' எனப்படுவர்.*

*சமயம் முதலிய தீக்கை மூன்றும் 'சாதிகாரை, நிரதிகாரை' எனத் தனித்தனி இருவகைப்படும். அவற்றுள் சாதிகாரையாவது, நித்திய வழிபாட்டோடு, 'நைமித்திகம், காமியம்' என்னும் இரு வழிபாடுகளையும் இயற்றுதற்கு உரிமை தருவது. நிரதிகாரையாவது, நித்திய வழிபாடு ஒழிந்த ஏனை இருவழிபாட்டிற்கும் உரிமை தாராதது.*

*நித்திய வழிபாடாவது அன்றாடம் காலை, மாலை என்னும் இருபொழுதினும் நீராலும், நீற்றாலும், மந்திரங்களாலும் தம்மைத்*

*தூய்மை செய்துகொண்டு, தருப்பணம் செய்து, சிவபெருமானது திருவைந்தெழுத்தைக் கணித்தலும், வேத சிவாகம திருமுறை சிவ புராணங்களை ஓதுதலும், கேட்டலும், சிவாலய தரிசனம் செய்தலும், அழல் ஓம்பலும், சிவனடியார்களை வரவேற்று உணவு முதலியன அளித்தலுமாம்.*

*நைமித்திக வழிபாடாவது யாதானும் ஒரு சிறப்புப் பற்றிச் சில நாட்களில் செய்வது. அது, அட்டமி, பூரணை, பிரதோடம், சதுர்த்தசி, மாதப்பிறப்பு, அயனப்பிறப்பு, சூரிய சந்திர கிரணங்கள் முதலிய காலங்களில் மேற்கூறியவற்றைச் சிறப்பாகச் செய்யும் வழிபாடாகும். வேதமாதிய நூல்களைத் தக்கார்க்கு ஓதுவித்தலும் நைமித்தகமேயாம்.*

*காமியமாவது தான் செய்த தீவினை நீங்குதல் கருதிச் செய்யப்படும் கழுவாயும் (பிராயச்சித்தமும்) இம்மை மறுமைப் பயன்களில் ஒன்றையாயினும், பலவற்றையாயினும் வேண்டி அவ்வவற்றிற்கு ஏற்ற முறையில் செய்யும் வழிபாடுமாம்.*

*இவற்றுள் சாதிகார தீக்கை அதனைப் பெற்றபின்னர் நைமித்திகத்தையும், காமியத்தையும் தவறாது செய்யும் ஆற்றல் உடையார்க்கே செய்யப்படும். அவ்வாற்றல் இல்லாதார்க்கெல்லாம் நிரதிகார தீக்கையே செய்யப்படும். நிரதிகார தீக்கை பெற்றோர் ஓரோவொருகால் தம்பொட்டாக நைமித்திகமும் காமியமும் செய்ய விரும்புவாராயின், சாதிகார சாதகர் ஆசாரியர் என்போரால் செய்வித்துக் கொள்ளுதல் வேண்டும்.*

*சாதிகார சமய விசேட தீக்கைகளுக்குமேல், சாதிகார நிருவாண தீக்கை பெற்றோர், நைமித்திக காமியங்களைப் பிறர் பொருட்டாகச் செய்யும் உரிமையையே அபிடேகத்தாற் பெறுவர். அவ்வுரிமையும் ‘அங்க உரிமை, அங்கி உரிமை’ என இருவகைத்து. அங்க உரிமையாவது, அங்கிக்கு இன்றியமையாத கழிப்பு (சாந்தி) மண்கோள் (மிருத்துசங்கிரகணம்) முளை தெளித்தல் (அங்குரார்ப் பணம்) குட நீர்கோள் (கலசாகருடணம்) முதலியவற்றைச் செய்யும் உரிமை. அங்கி உரிமையாவது தீக்கை செய்தல், திருக்கோயில்களில் சிறப்புக் காலங்களில் விழா எடுத்தல், குடவழிபாடு செய்தல் (கலச பூசை செய்தல்) வேள்வி (யாகம்) செய்தல் முதலியவற்றில் பெறும் உரிமையாம். ஆன்மார்த்த மூர்த்தியைப் பிறருக்கு எழுந்தருளுவித்தலும் ‘விசேட தீக்கை’ எனத் தீக்கை செய்தலுள் அடங்குவதாம்.*

*இவற்றுள், அங்க உரிமைமட்டும் பெற்றோர் ‘சதகாசாரியர்’ எனவும், அங்கி உரிமையைப் பெற்றோர் ‘ஆசாரியர்’ எனவும் சொல்லப்படுவர். சதாகாசாரியர், மணவினை, மாய்ந்தோர்வினை முதலியவற்றில் வேட்டல் முதலியவற்றைச் செய்வித்தற்கும், சிவன் கோயிலில் நித்திய பூசைக்கும் பிறகோயில்களில் நித்திய, நைமித்திக, காமியத்திற்கும் உரியராவர். அங்கி உரிமையைப் பெற்ற ஆசாரியர் எல்லாவற்றிற்கும் உரிமையுடையராதலின், அவரது உரிமை ‘பேரதிகாரம்’ எனப்படும்.*

*ஆசிரியராதற்குச் சத்திநிபாதம், ஒழுக்கம் என்னும் இவை மட்டுமே போதா; சிறந்த பல நூற்கல்வியும், நல்லுடலும், செய்முறைப் பயிற்சியும் வேண்டும். அவற்றுடன் இரண்டு தலைமுறைக்குக் குறையாத முன்னோர், ஊனுங் கள்ளும் உண்டறி யாதவராயும், அவற்றை உண்பாரொடு உறவுகொள்ளாதவராயும் இருத்தல் வேண்டும். அதனால், அபிடேகத்திற்கு உரியவர் ஒருசிலரேயாவர். அவரும் முன்னர்ச் சாதகாசாரியராய் இருந்து பின்னர் ஆசிரியராதலே பெரும் பான்மை. பெரும்பான்மை ஆதிசைவ அந்தணருள்ளும் சிறு பான்மை ஏனைச் சைவருள்ளும் ஆசாரியராய் உள்ளவரே சிவன் கோயிலில் பிறர்பொருட்டுச் செய்யும் பூசையைச் செய்தற்கு உரியர் எனின், வைதிகப்பார்ப்பார் முதலிய பிற பார்ப்பனர் எங்ஙனம் திருக்கோயிற் பூசைக்கு உரியராவார். அதுபற்றியே நாயனார், ‘பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை அர்ச்சிக்கில்... பஞ்சமும் ஆமே’ என்று விலக்கினார். அபிடேகம் பெற்றாருள் சாதகாசாரியர் சிறுபான்மை பிற பிழைப்புத் தொழில் செய்யினும், ஆசாரியர் ஒருபோதும் அவற்றைச் செய்யார்.*

*அபிடேகம் பெறாது நிருவாண தீக்கை பெற்றோரை, ‘சாதகர்’ என்னாது ‘விசேடபுத்திரர்’ என்றும், அபிடேகத்தால் அங்கவுரிமை பெற்றோரையே ‘சாதகர்’ என்றும் கூறுப. ஆதிசைவருள் ஆசாரியராயினாரை, ‘சிவாசாரியார்’ என்றும், பிற சைவருள் ஆசாரியராயினாரை, ‘சைவாசாரியர்’ என்றும் குறியிட்டு வழங்குவர்.*

*மாணாக்கர், (பிரமச்சாரிகள்) இல்வாழ்வார், (கிருகத்தர்) இல்லந்துறந்தார், (வானப்பிரத்தர்) முற்றத்துறந்தார் (சந்நியாசிகள்) என்னும் நால்வகை நிலையினருள் மாணாக்கர், ‘இற்புகா மாணாக்கர்’ (நைட்டிகப் பிரமச்சாரிகள்) என்றும், ‘இற்புகு மாணாக்கர்’ (பௌதிகப் பிரமச்சாரிகள்) என்றும் இருவகைப்படுவர். மணம்புரிந்து கொள்ளாது*

*வாழ்நாளளவும் மாணக்கர் நிலையில் நின்றே வீடு பெறுவோர் இற்புகா மாணாக்கராவர். அவ்வாறின்றி வாய்க்கும் காலத்தில் மணம் புரிந்து கொண்டு இல்லறம் நடத்த விரும்புவோர் இற்புகு மாணாக்கராவர். 'இல்வாழ்வார் ஆசாரியராதல் ஆதிசைவ ருள்ளேயன்றிப் பிற சைவருள் இல்லை' என்றும், 'பிறசைவர் ஆசிரியராதல் வேண்டின், அவர் இற்புகா மாணாக்கராயிருத்தல் வேண்டும்' என்றும் சில ஆகமங்களில் விதி காணப்படுகின்றது. எனினும் அதனை, 'இவ் யுகத்திற்கு ஒவ்வா விதி' என விடுத்து, எல்லாச் சைவருள்ளும் அபிடேகத்திற்கு மேற்குறித்த தகுதியெல்லாம் உடையவர் உரியவர் என்னும் விதியே கொள்ளப்படுகின்றது. அதனால், சிவன்கோயிலில் பிறர்பொருட்டுச் செய்யப்படும் நித்திய, நைமித்திக காமிய வழிபாடுகட்குப் பிற சைவாசாரியர்களும் மேற்குறித்த சாதக, ஆசாரிய முறையின்படி உரியவரேயாவர். ஆயினும், வழக்கில் ஆதிசைவ சாதக, ஆசாரியர்களே சிவன்கோயிலில் பரார்த்த பூசைக்கு உரியவராய் விளங்குகின்றனர். அங்குப் பூக்கொய்து கொடுத்தல், மாலை கட்டித் தருதல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கேற்றுதல் முதலிய புறத்தொழிலில் மட்டுமின்றித் திருவமுது அமைத்தல், திரு மஞ்சனநீர் நிரப்புதல், தூபம், தீபம் முதலிய பொருள்களை எடுத்துக் கொடுத்தல் முதலிய அகத்தொழிலுக்கும் எல்லாச் சைவரும் உரிமை பெறத்தக்கவரே. எனினும், வழக்கத்தில் ஆதிசைவ அந்தணர்க்கேற்ப, மகாசைவ அந்தணரேயன்றி வைதிக அந்தணரும் அத்தொழிலில் உரிமையுடையாராய் உள்ளனர். 'சிவ தீக்கை பெற்றவருள்ளும் சிலர் தாம் திருக்கோயிலில் அகத்தொழின்மைக்கு உரியர்' என்பது சொல்லப்படுமாயின், தீக்கையே இல்லாதவரை அதற்கு உரியராக்குதல் எத்துணை முறைகேடான செயல் என்பதை எடுத்துக்கூற வேண்டுவது இல்லை.*

*"செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு நற்கலை*
*தெரிந்த அவரோ(டு)*
*அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்யஅமர்*
*கின்ற அரன்ஊர்.............. வீழிநகரே"* – *தி.3 ப.80 பா.4*

*தடங்கொண்டதோர் தாமரைப் பொன்முடி தன்மேல்*
*குடங்கொண்டடி யார்குளிர் நீர்சுமந் தாட்டப்*
*படங்கொண்டதோர் பாம்பரை யார்த்த பரமன்*
*இடங்கொண்டிருந் தான்றன் இடைமரு தீதோ.*
– *தி.1 ப.32 பா.2*

*நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாள்தோறும்*
*முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்*
*சிறைகொண்ட வண்டறையும் செங்காட்டங் குடியதனுள்*
*கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே.*

*- தி.1 ப.61 பா.1*

*பாலினால் நறுநெய்யால் பழத்தினால் பயின்றாட்டி*
*நூலினால் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்தச்*
*சேலினார் வயல் புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்*
*காலினால் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே.*

*- தி.1 ப.61 பா.5*

*என்றாற்போலும் அருள்திருமொழிகளால் 'வடமொழி, தென்மொழி' என்னும் மொழி வேறுபாடும், 'ஆதிசைவர், பிறசைவர்' என்னும் இன வேறுபாடும் இன்றி இருமொழிகளாலும் அனைத்துச் சைவரும் திருக்கோயிலில் சிவபிரானைப் பல்வகையாலும் நாள்தோறும் முறை வகுத்துக்கொண்டு வழிபாடு செய்தல் வழக்கத்திலிருந்தமை நன்கறியப் படுதலால், அதற்கு மாறாக, ''ஆதிசைவர் ஒருவர்தாம் வட மொழியானே திருக்கோயிலில் வழிபாடு செய்தற்கு உரியர்'' எனக் கட்டளை வகுத்தல், விருத்திப் பொருட்டாகச் செய்யப்பட்டது என்றே கொள்ளப்படும். இன்னோரன்ன கட்டளைகள் கங்கைகொண்ட சோழன் (முதல் இராசேந்திர சோழன்) காலத்திற்குப் பிறகே தமிழ்நாட்டில் தோன்றினவாதல் வேண்டும். ஏனெனில், "அச்சோழ மன்னன் கங்கைக் கரையிலிருந்து ஆதிசைவர் பலரைக் கொணர்ந்து தமிழ்நாட்டில் ஆங்காங்குக் குடியேற்றினான்" என்பது சித்தாந்த சாராவளி உரையிலேயே சொல்லப்பட்டுள்ளது.*

*இனி, "முப்போதும் திருமேனி தீண்டுவார்" (தி.7 ப.39 பா.10) என்ற சுந்தரர் வாக்கும், பிறப்பு வேறுபாடு மொழிவேறுபாடுகளைக் குறிக்கும் கடப்பாடுடையதன்று; என்னை? அஃது உடையதாயின், "தில்லை வாழந்தணர்" எனவும், "திருநீலகண்டத்துக் குயவனார்" எனவும், ''திருநீலகண்டத்துப் பாணனார்'' எனவும் பிறப்பினை எடுத்தோதினாற் போல எடுத்தோதப்பட்டிருக்கும் என்க.*

*இனி, முப்போதுந் திருமேனி தீண்டுவாரைப் பற்றிக் கூறுமிடத்தில் நம்பியாண்டார் நம்பிகள் தாமும், "நீடாகமத்தின் அறிவால் வணங்கி அர்ச்சிப்பவர்" (தி.11 திருத்தொண்டர் திருவந்தாதி, 74) என்று, 'சிவபெருமானிடத்து அன்பு உண்டாதற்குச் சிவாகம*

ஞானம் இன்றியமையாதது' என்னும் அளவே குறித்ததன்றி இன வரையறையும் மொழி வரையறையும் கூறினாரில்லை. எனவே, சேக்கிழார் நாயனார், "முப்போதும் அர்ச்சிப்பார் முதற் சைவராம் முனிவர்'' எனவும், 'வருங் காலமானவற்றின் வழிவழியே திருத்தொண்டின் விரும்பிய அர்ச்சனைகள் சிவ வேதியர்க்கே உரியன; அப் பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ' (தி.12 முப்போதும் திருமேனிதீண்டுவார் புராணம்) எனவும், 'முப்போதும் திருமேனி தீண்டுவார் ஆதிசைவரே' என்றும், ''அவர்தாம் வழி வழிவரும் பிறப்புரிமையர்" என்றும் வரையறுத்துக் கூறியது அஃது அங்ஙனம் அவர்க்குச் சிறப்புரிமையாதல் குறித்தேயாம். அங்ஙனம் கொள்ளாக்கால், மேற்காட்டிய ஞானசம்பந்தரது திருவாக்கோடும், அனுபவத்தோடும் முரணும் என்க. எனவே, இது, முந்நூலணிதலும், வேதம் ஓதுதலும் அந்தணர்க்கேயன்றி அரசர் வணிகர்கட்கும் உரித்தாயினும், வேதத்தை "அந்தணர் நூல்" (குறள் 543) என்றும், ''அதற்குரியார் அந்தணரே" (திருவள்ளுவ மாலை, 23) என்றும், பிறவாறும் கூறுதல் போல்வதும், அந்தணரையே "முந்நூல் மார்பர்" எனவும், "இருபிறப்பாளர்" எனவும், "மறையவர், வேதியர்" எனவும், குறிப்பிடல் போல்வதும் ஆம் என்பது ஓர்ந்துணர்ந்து கொள்ளப்படும்.

"குல விச்சை கல்லாமல் பாகம் படும்" (பழமொழி நானூறு, 6) ஆகலின் யாதொரு செயலும் அது வழிவழியாக இடையறாது வருவதொரு குடியிற் பிறந்தார்க்குச் சிறப்புரிமை உடைத்தாதல் இயல்பே. அஃதே பற்றிப் பிறகுடியிற் பிறந்தாரும் தமது சிறப்பினால் பெறும் உரிமை விலக்கப்படாதாம். அது கருதியே பிறப்புரிமை கருதிய தமிழ்நூல்களில் யாண்டும் சிறப்புரிமை விலக்கப்பட்டிலது என்பது அறியற்பாலது. பிறப்பினாலன்றிச் சிறப்பினால் உரிமை பெற்றவராக வடநூல் முனிவருள்ளும் பலர் கேட்கப்படுகின்றனர். தமிழாசிரியருள்ளும் திருநாவுக்கரசரை அப்பூதியடிகளும், மெய்கண்ட தேவரை சகலாகம பண்டிதரும் தம்மின் மிக்காராய்த் தமக்கு நெறியருளவல்ல ஆசிரியராகக் கொண்டமை வெளிப்படை. "இவ்வாறாகவும், பிறப்புரிமை ஒன்றே கொள்ளப் படுவது; சிறப்புரிமை கொள்ளப்படாது" என முரணிக் கூறுதல் விருத்தி வேண்டுவராது கூற்றேயாய் முடியும் என்க.

இதனால், திருக்கோயிலில் நிகழும் பெருவழிபாடு பற்றிய குற்றம் விலக்கப்பட்டது.

## 20. அதோமுக தரிசனம்

*புராண வரலாற்று இயைபு பற்றித் திருக்கோயில் முறைமை உணர்த்திய நாயனார், "சுத்த தத்துவங்களையே இடமாகக் கொண்டு நிற்பவனாகிய சிவன், பிரகிருதி உலகத்தார் செய்யும் வழிபாட்டினை ஏற்றருளுதல் எங்ஙனம்'' என்னும் ஐயத்தை நீக்க வேண்டி, அக்கோயிலில் நின்று நிலவுலகத்தார்க்கு அருள்புரியும் அதோ முகத்தினது இயல்பினை ஆறுதிருமந்திரங்களால் உணர்த்துகின்றார். அதோமுகம், ஈசானம் முதலிய ஐந்து முகங்கட்கும் கீழ், கீழ்நோக்கி நிற்கும் முகம். தரிசனம், அதனை உணரும் முறைமை.*

*சிவபெருமானை, நிட்கள சகளத்திருமேனி (அருவுருவத் திருமேனி)யாகிய சதாசிவ மூர்த்தம் கொண்ட சாதாக்கிய தத்துவத்தில் நின்று ஐந்தொழிதல் முதல்வனாம் நிலையில், "ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்'' என்னும் ஐந்து திருமுகங்களை உடையவனாய் விளங்குவன் என்பதும், அவ் ஐந்து திருமுகங்களும் முறையே, மேலிடம், கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்னும் திசைகளில் நின்று அத்திசையை நோக்கி நிற்கும் என்பதும், 'படைத்தற் சத்தி முதலிய ஐந்துசத்திகளே சத்தியோசாதம் முதலாக எதிரிட்டு எண்ணவரும் ஐந்து திருமுகங்கள்' என்பதும் ஆகமங்களில் நன்கறியப்படுவன. அதனால், ஐந்தொழிற்கும் முதல்வனாம் சிவபெருமானை அம் முதன்மை தோன்ற அவ் ஐந்து முகங்களுடன் சாதாக்கிய தத்துவத்தில் வைகும் சதாசிவ மூர்த்தியாகவே இந் நிலவுலகத்திலும் கருதி வழிபடுதல் ஆகம முறையாயிற்று. ஆயினும், நிலவுலகத்தார் செய்யும் வழிபாட்டில் அவர்க்குத் தோன்றாது நின்று அருள் புரியும் ஆற்றலை, அவ் ஐம்முகங்களினும் வேறாய்த் தோன்றாது நிற்கும் ஆறாவது முகமாகவே - அஃதாவது 'அதோ முகம்' என்னும் முகமாகவே ஆகமங்கள் கூறும் என்பது இதனால் அறியத்தக்கது.*

*'கிழக்கு முதலிய நான்கும், மேல் கீழ் என்னும் இரண்டும் ஆகிய பெருந்திசை ஆறனுள் கீழ் ஒழிந்த ஏனைத் திசைகளை நோக்கி நிற்கும் முகங்களை உடைய சிவபெருமானுக்கு, ஏனைக் 'கீழ்' என்பதனையும் நோக்கிநிற்றல் இயல்பே' என்பதும், 'அதுதான் வழக்கத்தில் காணப்படாமையால், தோன்றாது நிற்கும்' என்பதும் பொருந்துமாறு பற்றியும் உணரப்படும். வெளிப்பட நில்லாது கருதியுணரத்தக்கதாய் இருத்தலின், 'அறிஞராயோர் சிந்திக்கும்.... திருமுகம்' (கந்தபுராணம், உற்பத்தி காண்டம், திருவதாரப்படலம், 43) என்றும், 'அன்ன தாயினும்*

512. எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல
அம்பவழ் மேனி அறுமுகன் போய்அவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே. 1

---

*அதுவும் ஏனைய முகங்களோடும் ஒப்பதே' என்பது பற்றி, "தொல்லைத் திருமுகம்" என்றும் கூறினார் கச்சியப்ப சிவாசாரியார்.*

512. ***தெளிவுரை :-*** *பிரகிருதி புவனத்தில் நிலவுலகத்தில் வாழ்ந்த சூரபதுமனாகிய அசுரனால் விளைந்த துன்பத்தை இயற்கை மணம் கமழும் மேனியராகிய தேவர்கள் விண்ணப்பித்து, 'எம் பெருமானே, இறைவனே, முறையோ' என்று சொல்லி முறையிட, 'அழகிய பவழம் போலும் மேனியை உடைய அறுமுகன் சென்று அவர்தம் பகைவனை அழிக்க' என்று திருவுளம் பற்றிய பெருமான் சாதாக்கிய தத்துவத்தில் சதாசிவனாய் நிற்கும் அவனே.*

***குறிப்புரை :-*** *'ஆகவே, அவன் சுத்தமாயையில் உள்ளார்க்கு மட்டுமின்றி, ஏனை அசுத்தமாயை பிரகிருதி மாயைகளில் உள்ளார்க்கும் அருள் புரிபவனே; அதனால், எவ்விடத்து அவனை வழிபடினும் அவ்விடத்து அவன் ஏற்ற பெற்றியால் நின்று அருள் புரிவன்; எனவே, நிலவுலகத்துத் திருக்கோயில்களில் திருமேனிகளில் அவன் நின்று அருள் புரிதற்கு ஐயமில்லை' என்பது குறிப்பெச்சம்.*

*"தாபர சங்கமங்கள் எனும் இரண் டுருவில் நின்று*
*மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்"*

*என்ற சிவஞானசித்தி (சூ.2, 28) இங்குக் காணத்தக்கது.*

*வம்பு - மணம். "வலி" என்றது, அதனால் விளைந்த துன்பத்தைக் குறித்தது. 'பவழம்' என்பது கடைக்குறைந்து நின்றது. 'பவளம்' என்றேயும் பாடம் ஓதுப. "பவளத் தன்ன மேனி" (குறுந்தொகைக் கடவுள் வாழ்த்து) என, வேறிடத்தும் முருகனது மேனிக்கு பவழம் உவமையாகக் கூறப்பட்டது. பகைவனை 'பகை' என்றது ஒற்றுமை வழக்கு.*

*பல்லாற்றானும் தீமையைத் தேய்த்து நன்மையை வளர்த்து நிலவுலகத்து உயிர்களைப் புரந்தருளுதல் கூறுவார், கந்தபுராண வரலாற்றை எடுத்தோதியருளினார். அதோ முகத்தது இயல்பு கூறுகின்றாராதலின், அது வெளிப்படை நின்ற இவ்வரலாற்றையே எடுத்தோதியருளினார். தற்பரன் - மேலானவன்.*

*இதனால், சிவபெருமான், மேலுலகத்துள்ளார்க்கேயன்றிக் கீழுலகத்துள்ளார்க்கும் அருள்புரிதல் கூறப்பட்டது. இவர்க்கு*

**513.** அண்டமொ டெண்டிசை தாங்கும் அதோமுகம்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே. 2

---

அருளுதலே 'அதோ முகம்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டமை காண்க.

**513.** *தெளிவுரை :-* சிவபெருமானது அதோமுகமே நிலவுலகத்தைப் புரப்பது. அதற்கு அறிகுறியாகவே அது கறுத்த கண்டத்தையுடைய வடிவினதாய்த் தோன்றுதலை அறிபவர் ஒருவரும் இல்லை. அதனால், பலரும், 'அது நஞ்சுண்டது' என்று மட்டுமே கூறி ஒழிகின்றனர். இனி அவ்வடிவாகிய கறைமிடற்றண்ணலுக்கு மார்பில் அணியும் மாலையும் இறந்தாரது வெள்ளிய தலைகளால் ஆயதே, அதனது உண்மையையும் அறிவாறில்லை.

*குறிப்புரை :-* "அண்டமொடு எண்டிசை" என்றது, 'உலகம்' என்னும் பொருளது. 'உலகம்' என வாளா கூறின், நிலவுலகத்தையே குறித்தல் வழக்கு. 'அதோமுகம் தாங்கும்' என மாற்றி உரைக்க. 'அதோ முகமே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. அதனால் பிரிக்கப்பட்டன ஈசானம் முதலிய ஏனைத் திருமுகங்கள். ஆகவே, சுத்த மாயையில் ஐந்தொழில் செய்வனவாகச் சொல்லப்படுகின்ற அவை, 'நிலவுலகத்துள்ளார்க்கு வந்து அருள்புரிதல் யாங்ஙனம்' என்பார்க்கு, 'நிலவுலகத்துள்ளார்க்கு வந்து அருள்புரிதல் ஆறாவதாகிய மற்றொரு திருமுகமாம் அதோ முகமே' என மலைவு நீக்கியவாறாயிற்று.

'அதோமுகம்' என்பதற்குப் பொருள், 'கீழ்நோக்கி நிற்பது' என்பதேயாகலின், அது கீழ் உலகத்தார்க்கு அருளுதல் குறித்த கருணையே என்பது சொல்லாமே அமைந்தது. "அது கண்டம் கறுத்த கருத்தறிவார் இல்லை" என்றதனால், 'அத்திருமுகமே நிலவுலகத் தார்க்குக் கறைமிடற்றண்ணல் வடிவினதாய்த் தோன்றும்' என்பது அனுவாத முகத்தாற் பெறப்பட்டது. இதனுள் 'அது' என்பது தோன்றா எழுவாய். கருத்து என்றது, 'அகலரையன்றிச் சகலரையும் ஏற்றுக் கொள்ளும் கருணையது' என்பதனை.

'அஃது எவ்வாறு பெறப்படும்' எனின், மூவகைச் சீவ வருக்கத்தார்க்கும் ஆணவமலம் உளதேயெனினும், சகல வருக்கத்தார்க்கே அது பெரிதும் உளது எனப்படுவதாலும், ஆணவ மலம், 'இருள், மூர்ச்சை, மிருத்து' முதலிய பெயர்கட்கும் உரித்தாய் நிற்றலானும் இறைவனது கண்டத்தில் உள்ள கறை (இருள் - நஞ்சு)

*ஆணவமலத்தை அவன் நீக்கியருளுதற்குச் சிறந்த அடையாளமாம் என்க. இனி, அக்கறைதானும் மார்பு, வயிறு முதலிய பிற இடங்களில் நில்லாது முகத்திற்குக் கீழ்க் கண்டத்திலே நிற்றல், அஃது ஆறாவதாகிய அதோ முகத்தின் வடிவாதல் குறிக்கும். ஆகவே, 'இத்துணை உண்மைகளும் உணரற்பாலனவாக, அவற்றைவிடுத்து நஞ்சுண்ட தாகிய வரலாற்றை மட்டுமே கூறியொழிதல் கூடாது' என்றற்கு, "கருத்தறிவார் இல்லை;* ***உண்டது நஞ்சென்றுரைப்பர் உணர்விலோர்" என்றார்.***

***அதோமுகம் பிரகிருதி மாயையில் தொழிற்படுத்த அவன் விரும்பி மேற்கொண்டது.*** *உலகங்கட்கு வந்த* ***இடையூறுகளைப் போக்கவே அவர் கண்டங் கறுத்தாரே அன்றி நஞ்சு உண்டதாலன்று என்பதாம். மூவகை யாருயிர்வர்க்கமாகிய பாற்கடலை நல்வினையாகிய தேவர்களும், தீவினையாகிய அசுரர்களும் ஆன்மபோதம் என்ற மந்தரமலையிட்டுப் பாச ஞானமாகிய அஞ்ஞானமும், மோகம், மதம், அராகம், விஷாதம், சோஷம், வைசித்திரியம், அரிசம் முதலியவைகளும் ஆகிய நஞ்சு திரண்டு உயிர்களை மறைக்கத் தொடங்கியபோது இறைவன் அந்நஞ்சை விழுங்கி, இவ்வண்ணம் எஞ்ஞான்றும் காப்பேம் என்பதற்கு அறிகுறியாகத் திருமிடற்றில் வைத்தனன் என்பதே தத்துவக் கருத்தாக இருக்க இதனையறியாமல் வரலாறு என்று கருதுவார் அறிவிலார் என்பது கருத்து, இதனை உடம்பொடு புணர்த்தி அதோ முகத்திற்கு அடைமொழி யாக்கி அண்டமொடு எண்திசை தாங்கும் அதோமுகம் கண்டம் கறுத்த கருத்து எனத் திருவாய் மலர்ந்துள்ளமை தெளிக.***

***"உண்டது" என்றது முற்று. "நஞ்சு" என்றதில் இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. இறுதிக்கண் வருவித்துரைக்க. 'அதனையும் அறிவாரில்லை' என்பது இசையெச்சம். 'கறைமிடற்றண்ணல் மார்பில் உள்ள மாலையாக அமைந்த வெண்டலைகள் அமரர் தலைகளே' எனப்படுதலால், 'அவரும் ஏனை மக்கள் போலச் சகலரே என உணர்தல் வேண்டும்; அங்ஙனம் உணரவே, அவர் பொருட்டு நஞ்சுண்ட வரலாறு அனைத்துச் சகலர்க்கும் அருள்புரிதலைக் குறித்தல் விளங்கும்' என்றற்கு அதனையும் உடன் கூறினார்.***

***இனி, பரமசிவன் ஐந்தொழில் செய்யுங்கால் அவற்றைச் சுத்த மாயையில் தானே நேர்நின்று செய்வன் என்பதும், 'அசுத்தமாயையில் அனந்தேசுரர் வாயிலாகச் செய்வன்' என்பதும், 'பிரகிருதி மாயையில் அனந்ததேவர் வழிச் சீகண்ட உருத்திரர் வாயிலாகச் செய்வன்' என்பதும் ஆகமங்களின் முடிபு ஆதலால், சுத்த மாயைக்குச் சாதாக்கிய***

*தத்துவத்தில் சதாசிவனாய் நின்று நேராகவும், அசுத்தமாயைக்குச் சுத்த வித்தியா தத்துவத்திலே வித்தியேசுரனாய் நின்று அனந்ததேவர் வாயிலாகவும் ஐந்தொழில் செய்தல் போலப் பிரகிருதி மாயைக்கும் சுத்த வித்தியா தத்துவத்திலேயே சீகண்டனாய் நின்று அனந்த தேவர் வழிச்சீகண்ட உருத்திரர் வாயிலாக ஐந்தொழில் செய்பவன் என்பது பெறப்படும்; என்னை? அசுத்த மாயையில் நிகழும் காரியத்திற்கு 'அனந்தர்' என்னும் வித்தியேசுரர் கர்த்திருத்துவம் பெறுதற்குப் பரமசிவன் வித்தியேசுரனாய் நிற்றல் இன்றியமையாதவாறு போல, பிரகிருதி மாயையில் நிகழும் காரியத்திற்குச் சீகண்ட வுருத்திரன் கர்த்திருத்துவம் பெறுதற்கும் பரமசிவன் சீகண்டனாய் நிற்றல் இன்றியமையாதாகலின், சுத்தமாயையில் போக (பரிபாலன்) மூர்த்தியாய் நிற்கும் பரமசிவனுக்கு உரித்தாய், நிற்றலின், போக தத்துவம் (சாதாக்கிய தத்துவம்) ஒன்றேயாக, அதற்குக்கீழ் அதிகார தத்துவம் அவ்வாறு ஒன்றாகாது, 'ஈசுரம், வித்தை' என இரண்டாயினமை, ஒன்றுமேல் நின்று சுத்தமாயையில் அதிகாரம் புரிதற்கும், மற்றொன்று கீழ்நோக்கி நின்று அதிகாரம் புரிவித்தற்குமேயாம். முன்னையதில் கிரியா சத்தி மிக்கு நிற்றல் செயலாற்றுதற் பொருட்டு என்பதும், பின்னையதில் ஞானசத்தி மிக்கு நிற்றல் பிறரை ஏவுதல் மாத்திரையாய் நிற்றற் பொருட்டும் என்பதும் தெரிந்து கொள்ளப்படுமாறு அறிக.*

*பரமசிவனது 'இலயம், போகம், அதிகாரம்' என்னும் மூன்று நிலைகளுள் அதிகாரம் ஒன்றாகாது 'சூக்குமம், தூலம்' என இரண்டாயினமை, முறையே செய்தலும், செய்வித்தலும் பற்றியேயாம். அவற்றுள் தூல அதிகாரமாகிய செய்வித்தல் நிலையில் நிற்றற் பொருட்டே 'சுத்த வித்தை' என்னும் சுத்த தத்துவம் உளதாயிற்று என உணர்க.*

*இனி, இலய தத்துவமும் ஒன்றாகாது இவ்வாறே தூலம், சூக்குமம் என இரண்டாவது, அபர முத்தருள்ளும் அதிகாரமல வாசனை நீங்குங்கால் தூல லயமாயும், சூக்குமலயமாயும் இவ்வாறு படி முறையானன்றி நீங்குதல் கூடாமையின், அவ்வந்நிலையினின்று அவரவர்கட்கு அருளுதற்பொருட்டேயாம் என்பதும் உணர்ந்து கொள்க. இலய தத்துவம் இரண்டனுள் 'சத்தி தத்துவம் தூல லயம்' என்பதும், 'சிவ தத்துவம் சூக்கும லயம்' என்பதும் நன்கறியப்பட்டவை.*

*இனி அசுத்த மாயையிலும், பிரகிருதி மாயையிலும் பிறர்வழி நிகழ்த்தும் 'ஐந்தொழில்களுள்' 'அருளல்' என்பது அபர ஞானமாகிய சிவாகமங்களை அறிவுறுத்தலேயாம். பரஞானத்தை அசுத்த மாயையில் உள்ளார்க்கும் வித்தியேசுரனாயும், பிரகிருதி மாயையில் உள்ளார்க்குச்*

சீகண்டனாயும் நிற்கும் பரமசிவனே ஏற்றபெற்றியால் அருளுவான். என்னை? சீகண்ட உருத்திரனும், அனந்தேசுரனும் மலம் நீங்கப்பெற்ற முத்தரேராயினும், அதிகார மலம் நீங்கப் பெறாதவரேயாதலின், மலம் முழுவதையும் பற்றறக் கழிக்கும் பரஞானத்தை அவரைப் பற்றி நின்று பரமசிவன் உணர்த்துதல் கூடாமையின், "சகலருக்குப் பரமசிவன் ஞானத்தை அருளுதல் சீகண்ட உருத்திரன் வழி" என்னாது, "ஆசான் மூர்த்தி வழியேயாம்" என ஆகமங்கள் கூறுதலும் இது பற்றியே என்க. எனவே, பிரளயாகலருக்குப் பரமசிவன் பரஞானத்தை அருளுதலும் இவ்வாறு ஏற்ற பெற்றியானேயாம் என்பது உணரப்படும்.

இங்ஙனமாகவே, ''அறுபான் மும்மை நாயன்மார் முதலியோர்க்குப் பற்றற்ற பரஞானத்தை அருளியவன் பரமசிவனே" என்பதும், ஆகவே, 'அவர் அடைந்த பரமுத்தி அபர முத்திகள் அவனுக்கு நேரே இடமாய சுத்த மாயையின்கண் உள்ள புவனங்கள்' என்பதும் தானே பெறப்படும். இவ்வாறு சீகண்டனாய் நிற்கும் பரமசிவனும், அவனது அருளால் அவனோடு ஒத்த உருவமும், பெயரும், பிறவும் பெற்று விளங்கும் சீகண்ட உருத்திரனும் வேறு வேறு என்பது உணரமாட்டாதார், "அறுபான் மும்மை நாயனார் முதலாகப் பரஞானத்திற்கு உரியராய் நிற்போர்க்கு அருளுபவனும் சீகண்ட உருத்திரனே" எனவும், "அவர் அடைந்த முத்திப் பேறும் அவனது இடமே" எனவும் மயங்கிப் பெறவரும் பேறு பெற்ற உயர் ஞானத்தினராகிய பலரை ஏனைப் பொதுத் தவத்தாரோடு ஒப்ப வைத்து எண்ணுபவராவர்.

சமய தீக்கை பெற்றுச் சரியையில் நிற்போர்க்குச் சிவநூல்களை ஓதினும் தத்துவ ஞானம் விளங்காமையானும், விசேட தீக்கை பெற்றுக் கிரியையிலும், யோகத்திலும் நிற்பார்க்கு அவை விளங்குதல், ஒரு நாட்டினை நேரே சென்று காணாது அதன் படத்தைக் காண்பார்க்கு அந்நாட்டியல்பு விளங்குதல் போலப் பாவனையானன்றி, உண்மையான் அன்றாகலானும் அவ்விருவர்க்கும் பரமசிவன் சீகண்ட உருத்திரர் வழியாகவே அருள்புரிபவன். நிருவாண தீக்கை பெற்றார்க்குத் தத்துவஞானம் உண்மையான் விளங்குமாகலின், அவர்க்குப் பரமசிவன் பற்றற்ற பரஞானத்தால் சீவன் முத்தராய் நிற்கும் ஆசான் மூர்த்திகளது சுத்தான்ம சைதன்னியத்தில் விளங்கி அவராய் நின்றே அருள்புரிவன். ஆகவே, சமய தீக்கையின்பின் விசேட தீக்கை பெற்றுக் கிரியை அனுபவமும், யோக அனுபவமும் பெற்றார்க்குச் செய்யப்படும் நிருவாண தீக்கையே உண்மை நிருவாண தீக்கையாகும். ஏனையோர்க்கு அதனைச் செய்தல் நாடக மாத்திரையேயாம். இன்னும் முன்னைப் பிறவியிலே ஆசான் அருள்பெற்று நிட்டைகூட

514. செய்வான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகழும் மனிதர்காள்
மெய்யே யுரைக்கில்அவ் விண்ணோர்தொழச் செய்வன்
மைதாழ்ந் திலங்கு மணிமிடற் றோனே. 3

---

*மாட்டாதவராய் அது கூடுதற்பொருட்டு நிலவுலகில் பிறந்தார்க்கும் சீகண்டனாய் நிற்கும் பரமசிவன் தானே நேர் நின்று அருள்புரிவன் என்க.*

*மேன்மேல் உள்ள தத்துவங்கள் கீழ்க்கீழ் உள்ள தத்துவங்களினும் வியாபகமாவனவேயன்றி, இயைபின்றி மேலே நிற்பன அல்ல என்பது மேலேயும் (388, 407 பாடல்கள்) காட்டினாம் ஆதலின், இங்குக் கூறப்பட்டன அனைத்தும் பொருந்துவனவாதல் அறிந்துகொள்க.*

*சமயம் முதலிய மூவகைத் தீக்கைகளைப் பெற்றச் சரியை முதலிய நான்கினும் நிற்போர் திருக்கோயில் வழிபாட்டினைச் செய்தும், செய்வித்தும் நிற்கும்பொழுது பரமசிவனைத் தத்தம் இயல்பிற்கு ஏற்பவே உணர்ந்து நிற்பராகலான், பரமசிவனும் அவர்தம் உணர்விற்கு ஏற்ப மேற்கூறிய முறையானே அங்கு நின்று அருள்புரிவன் என்பது,*

*'திருக்கோயி லுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவன்எனவே கண்டவர்க்குச் சிவன் உறைவன் அங்கே'*

*'உருக்கோலி மந்திரத்தால் என நினையும் அவர்க்கும்'*

*'உளன் எங்கும் இலன் இங்கும் உளன் என்பார்க்கும்'*

*விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்
மந்திரத்தில் வந்துதித்தும், மிகும்சுரபிக் கெங்கும்
உருக்காண; ஒண்ணாத பால்; முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல் வெளிப்பட்டருளுவன் அன்பர்க்கே*

*எனச் சிவஞான சித்தியுட் (சூ. 12.4) கூறப்படுதல் காண்க.*

*இதனால், சிவபெருமான் கீழுலகத்துள்ளார்க்கு அதோமுகத்தின் வழியாகவே அருள்புரிதல் கூறப்பட்டது.*

**514. தெளிவுரை :- படைப்பவனாகிய பிரமதேவனது அண்டம் எனப்படும் நிலவட்டத்தின் கண் நின்றுகொண்டு அறியாமை காரணமாக வேறு வேறு தேவரை, 'முதற்கடவுள்' என்று சொல்லிக் கொண்டாடுகின்ற மனிதர்கள், அறியாமை நீங்கிப் பரமசிவன் தமக்குக் கறைமிடற்றண்ணலாய் (சீகண்டனாய்) நின்று அருள்புரிதலை**

**515.** நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்திக் கலந்துட் சிவனென நிற்கும்
உந்திக் கலந்தங் குலகம் வலம்வரும்
அந்தி இறைவன் அதோமுக மாமே. **4**

---

*உணர்ந்து புகழவல்லாராயின், அவ்வண்ணல் அவர்களை முன்பு அவரால் புகழப்பட்ட தேவர்களே வந்து வணங்குமாறு உயர் நிலையில் வைத்தருளுவன்.*

***குறிப்புரை :-*** *எனவே, நிலவுலகத்தார்க்குச் சீகண்ட உருத்திரன் மற்றும் குணிருத்திரன், மால், அயன், இந்திரன் முதலாகப் பலரிடத்தும் நின்று அருள்புரிவது பரமசிவனது அதோமுகமே என்பதாம்.*

*'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே*
*மாதொரு பாக னார்தாம் வருவர்'*

*என்ற சிவஞானசித்தி (சூ.2.25)க்கும் இதுவே கருத்தாகக் கொள்க.*

*இங்கு "மெய்" எனப்பட்டது, "பொருள்சேர் புகழ்" (குறள், 5) எனத் திருவள்ளுவர் கூறிய புகழையாம்.*

*மேல், 'அதோமுகந்தானே கண்டங் கறுத்து நின்றது' எனக் கூறினமையால், இங்கு "மைதாழ்ந்திலங்கு மணிமிடற்றோன்" என்பது அம்முகத்தையே குறித்தல் இனிது விளங்கும்.*

*"தொழப்படுந் தேவர்தம் மால்தொழுவிக்குந்தன் தொண்டரையே" (தி.4 ப.112 பா.5) என்ற அப்பர் திருமொழியை இங்கு, "விண்ணோர் தொழச்செய்வன்" என்றதனோடு வைத்துக்காண்க.*

**515. *தெளிவுரை :-*** *சிவபெருமானது அதோமுகம் வடதிசைத் தீ, (ஆகவநீயம் தென்றிசைத்தீ. (தக்கிணாக்கினி) என்னும் இரண்டற்கும் நடுவிலே இல்லத் தீ, (காருகபத்தியம்) எனப் பெயர்பெற்று வளர்ந்து எரிகின்ற தீயினுள் நின்று அதனைச் சிவாக்கினியாகச் செய்யும். இனி ஏனைய இரண்டு தீயினுள்ளும் சென்று கலந்து உலகம் முழுதும் பரவியும் நிற்கும்.*

***குறிப்புரை :-*** *எனவே, "நிலவுலகில் இல்லத்து வைத்துச் செய்யும் வழிபாட்டில் நின்று அருள்புரிவதும், திருக்கோயில்களில் வைத்துச் செய்யும் வழிபாட்டில் நின்று அருள்புரிவதும் சிவபெருமானது அதோமுகமே' என அத்திருமுகம் நிலவுலகத்தார்க்கு அருள்புரியும் வகைகளைக் கூறியவாறாயிற்று. "செந்தீ" என்றே போயினாராயினும், அதன் வடிவாய்ப் பல பொருள்களால் அமைந்த இலிங்கங்களையும்*

*கூறியதேயாம்.*

> *'இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்*
> *செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை'*
>
> *- தி.8 திருவெம்பாவை, 17*

> *'நின் அடியார் பழங்குடில்தொறும் எழுந்தருளிய பரனே'*
>
> *- தி.8 திருப்பள்ளியெழுச்சி*

*என்றாற் போலும் திருமொழிகள் இறைவன் தன் அடியவர் இல்லத்துக் கொண்ட குறியினுள் நின்று அருள்புரிதலைக் குறிப்பனவேயாம். அக்குறியை அந்தணரும், ஆசாரியரும் நித்தியாக்கினியாகவும், ஏனையோர் ஆன்மார்த்த லிங்கமாகவும் கொள்வர் என்க. "செந்தீ" என்பது குறுகி நின்றது.*

*இனி, "நடுவுற ஓங்கிய செந்தீ" என்றதும், "உந்திக் கலந்து அங்கு உலகம் வலம்வரும்'' என்றதும் முறையே அகத்தே இருதயத்துள் சுடர்வடிவில் நிற்றலையும், மூலாதாரத்தினின்று, சுவாதிட்டானம், மணிபூரகம் முதலாக மேலோங்கி உடல் முற்றும் பரவும் மூலாக்கினியையும் குறித்துப் பொதுமையில் நிற்பனவேயாம். அதனால், கிரியையாளர் செய்யும் அகவழிபாட்டிலும், யோகியர்கள் செய்யும் யோக பாவனைகளிலும் நின்று அவர்க்கு அருள்புரிவதும் அவ்வதோமுகமே என்பதும் பெறப்பட்டது. "உலகம் வலம் வரும்" என்று உடலையும் உலகம் போலவே கூறியொழிந்தது, சிவபெருமானது அதோமுகத்துடன் தோன்றிய அறுமுகக்கடவுள் "உலகத்தை எல்லாம் ஒரு நொடியில் வலம் வந்தான்" என்ற புராண வரலாறும் இவ்வுண்மையையே விளக்கும் என்பது தோன்றுதற்கு. அந்தி இறைவன் - அந்திச் செவ்வானம் போலும் நிறமுடைய சிவன். ''காலை, நண்பகல், அந்தி'' என்னும் காலங்களில் செய்யும் வழிபாடுகளில் அந்தியில் வழிபடப்படும் இறைவன் என்றலுமாம்.*

*இதனால், அதோமுகம் நிலவுலகத்தார்க்கு நின்று அருள் புரியுமாறெல்லாம் கூறப்பட்டன.*

***516. தெளிவுரை :-** அதோமுகத்தால் அதோ மாயையாகிய அசுத்த மாயையின் காரியங்களாகிய அண்டங்களில் நிறைந்து நிற்கும் பழையோனாகிய சிவபெருமான், அவ்வதோமுகத்தோடே எங்கும் பொருந்தி நின்று செயலாற்றுவான். அதனால், தாமரைமலர் மாலையை அணிந்த பிரமதேவனும், பிரம கற்பத்திற்குத் தலைவனும் அவனேயாவன்.*

516. அதோமுகங் கீழண்ட மான புராணன்
அதோமுகந் தன்னொடும் எங்கும் முயலும்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
சதோமுகன் ஊழித் தலைவனு மாமே. 5

517. அதோமுக மாமல ராயது கேண்மின்
அதோமுகத் தாலொரு நூறாய் விரிந்து
அதோமுக மாகிய அந்தமில் சத்தி
அதோமுக மாகி அமர்ந்திருந் தானே. 6

---

***குறிப்புரை :-*** *நூற்றிதழ்த் தாமரை, 'சதோமுகம்' எனப்பட்டது. 'நிவிர்த்தி கலைக்குத் தலைவன் எனப்படுகின்ற பிரமனாகி நிற்பதும் அதோமுகமே' என்றவாறு.*

*இதனால், அதோமுகமே கீழுலகத்தார்க்கு அருளுவது என்பது வேறோராற்றால் வலியுறுத்தப்பட்டது.*

**517. *தெளிவுரை :-*** *சிவபெருமானது அதோமுகம் பெரியதொரு தாமரை மலராய் நிற்கும் முறையினைக் கேண்மின்கள்; சுத்த மாயையினின்றும் கீழ்நோக்கி வருகின்ற அவனுடைய அளவில்லாத சத்திகள் அதோமுகமாகி நூறிதழ்களை உடையதாய் விரிந்து நிற்க. அம்மலரின் கண்ணே சிவபெருமான் அமர்ந்திருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *"நூறு" என்றது, பன்மை குறித்தற்கு ஓர் எண் கூறியவாறு. ஒன்றாகிய சிவனது சத்திதானே காரியங்களை நோக்கிப் பலவாய் நிற்குமாதலின், அதனை ஒரு மலரின்கண்ணே உள்ள பல இதழ்களாக உருவகித்தார். 'அளவிறந்த காரியங்கள்' என்றவற்றை, 'வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி' என்னும் கலைகளோடே ஒன்றின் ஒன்று வியாப்பியமாய் நிற்கும் ஏனைத் தத்துவங்களையும் எண்ணாற் கூறி, அவற்றில் நிகழற்பாலனவாகிய காரியங்களின் விரியைக் கருதி உணர்ந்துகொள்க. சத்திமான் இன்றிச் சத்தி செயற்படாதாகலின், அவன் அவற்றோடெல்லாம் இயைந்து நிற்றலையும் உணர்த்தினார். "ஆகி" என்றது, 'ஆக' என்பதன் திரிபு. மூன்றாம் அடியை இரண்டாம் அடிக்கு முன்னே கூட்டியுரைக்க.*

*இதனால், 'சிவபிரானது அதோமுகம் எனப்படுவது, அசுத்த மாயை பிரகிருதி மாயைகளில் நிறைந்து நின்று காரியங்களைச் செய்யும் அவனது சத்தியே' என்பது கூறப்பட்டது.*

## 21. சிவநிந்தை கூடாமை

518. தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே
அளியுறு வார்அம ரர்பதி நாடி
எளியனென் றீசனை நீசர் இகழில்
கிளியொன்று பூசையின் கீழது வாமே. 1

---

*திருக்கோயிற் குற்றங் கூறிய இயைபுபற்றி அங்கு நின்று அருள்புரியும் அதோமுகதரிசனத்தைக் கூறிப் பின்னர் அங்ஙனம் அதோமுகனாய் நின்று அருள்புரிகின்ற சிவபெருமானை முழுமுதற் கடவுள் என உணராது நிந்தித்து இகழ்தலாகாமையை நான்கு திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

518. ***தெளிவுரை :-*** *யாவர்க்கும் முதல்வனாகிய சிவபெருமானது திருக்கோலத்தின் உண்மைகளை நூல்களாலும், நாட்டில் அமைந்த திருக்கோயில்கள், அவற்றில் நிகழும் விழாவகைகள் முதலியவற்றாலும் ஓர்ந்துணர்ந்து, அதனால் தெளிவுபெற்ற ஞானத்தை உடையராய் உள்ளத்தில் அன்புமிகப் பெறுவோர் பின்னர்த் தேவராவர். அவ்வாறு ஓர்ந்துணரவும், தெளியவும் மாட்டாத கீழ்மக்கள் அப்பெருமானை, எலும்பு, தோல், சாம்பல், வெண்டலை முதலியவைகளை உடையவனாய்ச் சுடுகாட்டில் ஆடுதல், தலையோடு ஏந்தி இரத்தல் முதலியவைகளையே நோக்கிச் சிறுதெய்வமாகக் கருதி இகழ்வார் களாயின், அச்செயல், கிளி ஒன்று தானே பூனையின் அருகுசென்று அகப்பட்டு நின்றது போல்வதாய்விடும்.*

***குறிப்புரை :-*** *"பதி நாடி" என்றதனை முதலிற்கூட்டி உரைக்க. அளியுறுதல் - அன்பினால் நெகிழ்ந்து உருகுதல். 'அமரராவர்' என்னும் ஆக்கம் விரித்துரைக்க. பதி - தலைவனாம் தன்மை. "ஈசன்" என்பது முன்னே 'பதி' என்றதனோடும் ஆறாவதன் பொருள்படச் சென்று இயைந்தது. ''அமரர்'' என்றது பொதுப்பட உயர்நிலையைக குறித்ததாகலின், பதமுத்த, அபரமுத்தர் முதலிய பலரது நிலைகளும் கொள்ளப்படும். 'அமராபதி' என்பது பாடம் அன்று. கீழது - கீழ்நின்றாற்போல்வதொரு செயல். கீழ் நிற்கும் நிலையை, "கீழ்" என்றார். இதற்குக் 'கீழ்தல் - கிழித்தல்' எனப்பொருள் உரைப்பாரும் உளர். இங்குக்கூறிய உவமையை, 'கூற்றத்தைக் கையால் விளித் தற்று' (குறள். 894) என்றாற் போல்வனவற்றோடு வைத்துக் காண்க. சிவபெருமானது முதன்மையை அறியாது நிற்றல்தானே தீங்கு பயப்பதாக, அதன்மேலும் அப்பெருமானை இகழ்தல் விரையப் பெருங்கேடு எய்துவிப்பதாம்*

519. முளிந்தவர் வானவர் தானவர் எல்லாம்
விளிந்தவர் மெய்ந்நின்ற ஞானம் உணரார்
அளிந்தமு தூறிய ஆதிப் பிரானைத்
தளிர்ந்தவர்க் கல்லது தாங்கஒண் ணாதே. 2

---

*என்பது இவ்வுவமையாற் பெறப்படுவது. 'இதற்குத் தக்கன் வரலாறு சிறந்த எடுத்துக்காட்டு' என்பது முன்னர் கூறப்பட்டது. (தி.10 பா.336 உரை)*

*நிந்தனை செய்வாரது இழிநிலை இனிது விளங்குதற்கு, துதித்தல் செய்வாரது உயர் நிலையையும் உடன் கூறிக்காட்டினார்.*

*இதனால், சிவநிந்தை உய்தியில் குற்றமாதல் கூறப்பட்டது.*

519. ***தெளிவுரை :-*** *'தேவர்' எனவும், 'அரசர்' எனவும் சொல்லப்படுவோர் பேராற்றல் உடையவர்போலச் சொல்லப்படினும், அவரெல்லாம் வினைவெப்பத்தில் அகப்பட்டு உயர்கின்றவர்களும், அழிகின்றவர்களுமேயாவர். அதனால் அவர் திரிபின்றி நிலைபெறும் உணர்வை அடைந்திலர். ஆகவே, தன்னை உணர்வாரது உணர்வில் அமுதம் கசிந்து ஊறுவதுபோல ஊறி நின்று இன்பம் பயக்கும் சிவபெருமானை நினைந்து உள்ளம் குளிர்பவர்க்கல்லது உண்மை ஞானத்தைப் பெறுதல் இயலாது.*

***குறிப்புரை :-*** *'அமரர்' எனப்பெயர் பெற்றாராயினும் கற்ப காலங்களை வருணிக்கும் நூல்களில் அவர் இறந்தமை நன்கெடுத்துக் கூறப்படுதலாலும், அசுரர் பலர் தம் அகந்தையால் அழிந்தமை, பலராலும் நன்கறியப்பட்டதாகலானும், "எல்லாம் விளிந்தவர்" என்றும், இறப்பைக் கடக்க மாட்டாமையால் வினையின் நீங்காமை பெறப்படுதலால், "முளிந்தவர்" என்றும், வினையுள்ள துணையும் ஞானம் விளங்காதாகலின், "மெய்ந்நின்ற ஞானம் உணரார்" என்றும் கூறினார். மெய்ம்மை - திரிபின்மை. 'மெய்யாய்' என ஆக்கம் விரிக்க. 'தாமே ஞானத்தை எய்தாதார் பிறர்க்கு ஞானத்தைத் தருதல் எவ்வாறு' என்பது கருத்து. 'உயிர்கட்குப் பெருந்துன்பந்தருவது அஞ்ஞானமும், பேரின்பம் தருவது மெய்ஞ்ஞானமுமேயாகலின், அவற்றை முறையே போக்குதலும், ஆக்குதலும் மாட்டாதாரைப் புகழ்தலும், அவை வல்லானை இகழ்தலும் பேதைமைப் பாலவாம்' என்றவாறு. அறியுடையோர் பலர் தேவரைப் புகழ, அறிவிலார் சிலர் அசுரரையும்,*

**520.** அப்பகை யாலே அசுரருந் தேவரும்
நற்பகை செய்து நடுவே முடிந்தனர்
எப்பகை யாகிலும் எய்தார் இறைவனைப்
பொய்ப்பகை செய்யினும் பொன்றுப தாமே. **3**

---

*அவரொடு ஒத்த தீய தெய்வங்களையும் (துர்த்தேவதைகளையும்) புகழ்ந்து அடைதல் பற்றித் தானவரையும் எடுத்தோதினார். தளிதல் - குளிர்தல்; அன்பு செய்து மகிழ்தல். தாங்குதலுக்கு மேல் நின்ற 'ஞானம்' என்னும் செயப்படுபொருளை வருவிக்க.*

*இதனால், சிவநிந்தை குற்றமாதற்கு ஏதுக் கூறப்பட்டது.*

**520. *தெளிவுரை :-*** *அசுரரும், தேவரும் அறியாமையாகிய பகை தம் உணர்விலே நின்று கெடுத்தலால் தம்முள் மிக்க பகைகொண்டு தம் வாழ்நாள் முடிவதற்கு முன்பே அழிந்தனர். ஆகவே, சிவபெருமானை உண்மையில் இகழும் கருத்தினரல்லாதவரும், அவனை இகழ்வார்க்கு அஞ்சித் தாமும் இகழ்வார் போல நிற்பினும் அவர் அழிவே எய்துவர். இறைவனை விளையாட்டாகவும் கூட நிந்தித்தல் கூடாது.*

***குறிப்புரை :-*** *'பகையாகிய தீக்குணம் அழிவைத் தருதலல்லது ஆக்கத்தைத் தாராது' என்பது உணர்த்துதற்குத் தேவாசுரரது நிலைமையை எடுத்துக்காட்டினார். 'இவ்வாறு எவ்விடத்தும் தீமையையே பயக்கும் பகை, சிலரது உள்ளத்தில் சிவபிரானைப் பற்றி தோன்றின், அவர் பெருந்தீங்கிற்கு உள்ளாதல் சொல்ல வேண்டுமோ' என்பது பின்னிரண்டு அடிகளால் பெறப்படும் கருத்து.*

*தேவர்கட்கு இறப்பில்லையாயினும், இறந்தாரொடு ஒப்பக் கரந்துறைதலும், அசுரர்க்கு அடிமைசெய்து நிற்றலும் ஆகிய நிலையை இறத்தலாக வைத்துக் கூறினார். "எப்பகையாலும் எய்தார்" என்றது, 'உள்ளத்தில் சிறிது பகையும் இல்லாதவர்' என்றவாறு. தமக்குப் பகையில்லையாயினும், பகைகொண்டாரைத் திருத்தும் வலியின்மையால் தாமும் பகைகொண்டு சிவபிரானை இகழ்வார்போல நிற்பார் அழிதற்கு, தக்கன் வேள்வியில் சென்றிருந்த தேவர்களே சான்றாவர். 'எய்தாரும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று.*

*இதனால், எளியன் என்று எண்ணும் எண்ணத்தினாலன்றிப் பகையால் சிவநிந்தை செய்தலின் குற்றமும், அச்செயலுக்கு உடன்படுதலின் குற்றமும் கூறப்பட்டன.*

**521.** **போகமும் மாதர் புலவி யதும்நினைந்**
**தாகமும் உள்கலந் தங்குள ராதலின்**
**வேதிய ராயும் விகர்தனாம் என்கின்ற**
**நீதியுள் ஈசன் நினைப்பொழி வாரே.** **4**

---

**521.** ***தெளிவுரை :-*** *வேதத்தை ஓதும் உரிமை பெற்றமையால் 'வேதியர்' எனப் பெயர் பெற்றிருந்தும் சிலர், மகளிர் இன்பத்தில் பற்று நீங்காமையால், சிவபெருமானை வழிபட நினையாமல், பிற தெய்வங்களை வழிபடுதலில் முனைந்து நிற்பர்.*

***குறிப்புரை :-*** *"வேதியராயும்" என்பதனை முதலிற்கொள்க. "மாதர்" என்பது தாப்பிசையாய் நின்றது. 'மாதரது போகத்தையும் புலவியையும் நினைந்து தமது நெஞ்சேயன்றி உடம்பும் அவர் வசப்பட்டு கிடக்கின்றாராதலின், நினைப்பொழிவார்' என்க. விகிர்தனாம் நீதி - உலகியலுக்கு வேறுபட்ட முறைமை. அது, மணிமுடி சூடாது சடைமுடி தாங்குதல், பொன்னாலும் மணியாலும் இயன்ற அணிகளை அணியாது எலும்பும் தலையும் பாம்பும் அணிதல், சந்தனம் குங்குமம் பூசாது சாம்பலைப் பூசிக் கொள்ளுதல், பட்டும் துகிலும் உடுத்தாது தோலை உடுத்தும் போர்த்தும் நிற்றல், யானை குதிரை சிவிகைகளில் ஏறாது எருதின்மேல் ஏறிவருதல் முதலிய ஒழுகலாறு. இதுபற்றி 'அவன் இகமும் பரமுமாய செல்வம், இன்பம், வெற்றி என்பவற்றை அருள வல்லனல்லன்' என விடுத்து, அவற்றின் பொருட்டு அவனின் வேறாய ஒரு தெய்வத்தையோ, பல தெய்வங்களையோ அன்போடு வழிபடும் அறியாமையுடையார் வேதியருள்ளும் சிலர் உள்ளனர் என்பது பின்னிரண்டடிகளில் கூறப்பட்டது. எனவே, "இது கற்றறிவுடையார்க்குச் சிவநிந்தையாம்" என்பதும், "இந்நிந்தையால் அவர் விரும்பிய பயன் கைகூடாமையே அன்றி, அவற்றிற்கு நேர்மாறாய தீங்கு விளைதலும், ஒரோவொருகால் பயன் கைகூடினும் அது நிலைபெறாது இடையே நீங்குதலும் உளவாம்" என்பதும் கூறியவாறாயிற்று. இவற்றிற்கு, அமுதம் வேண்டிக் கடலைக் கடைந்த தேவர்க்கு ஆலகாலவிடம் கிடைத்ததும், நூறு பரிமேத வேள்வி செய்து இந்திரபதவியை அடைந்த நகுடன் அதனை ஒரு நொடியில் இழந்து மலைப்பாம்பாய் நெடுங்காலம் இன்னலுற்றதும் போல்வனாகிய வரலாறுகள் சிறந்த எடுத்துக் காட்டாதல் அறிக. 'வேதத்தை ஓதும் வேதியர் தாமே அதன் விழுப் பொருளை உணரமாட்டாது இன்னராவார் எனின், ஏனையோரைப் பற்றிச் சொல்லவேண்டுமோ' என்றவாறு. இவ்வேதியர் சுமார்த்தரும், வைணவரும் போல்வார் என்க. "நீதியுள் நின்று" என ஒருசொல் வருவிக்க.*

*"சிவபெருமான் முத்தியைக் கொடுப்பவன்" என்பது எங்கும் எடுத்துச் சொல்லப்படுதற்குக் கருத்து, "முத்தியை அவனன்றிக் கொடுப்பவர் பிறரில்லை" என்பதேயன்றி, அவன் அதனிற் பன்மடங்கு சிறுமையுடையனவாய இகபர நலங்களை அருளமாட்டான் என்பதன்று. இது செயற்கரியவற்றைச் செய்யவல்லார் செயற்கெளிய வற்றைச் செய்தல் தானே பெறப்படும் முறைமை பற்றி விளங்குவதாம். இம்முறைமையை விளக்குவதற்கு, 'தண்டா பூபிகா நியாயம்' (தண்டம்-கழி, அபூபம் - பணியாரம். 'பணியாரத்தைப் பூனை வந்து விழுங்காதிருத்தற்கு அதனை ஒரு கழியில் கட்டி வைத்திருக்க, ஒரு பூனை அந்த கழியை விழுங்கிவிட்டது என்பது அறியப்பட்டால், பணியாரத்தை விழுங்கியது என்பது தானே அமைதல்போல' என்பதே தண்டா பூபிகா நியாயம். மற்றைப் பூனைகளால் விழுங்கத்தக்க பணியாரத்தை எளிதின் விழுங்குதல் தானே பெறப்படுதல் போலப் பிற கடவுளால் தரமுடியாத முத்தியைச் சிவபெருமான் கொடுப்பன் என்றால், அவன் பிற தெய்வங்களால் தரப்படுகின்ற இகபர நலங்களை எளிதின் வழங்குதல் தானே பெறப்படும் என்பது இங்குக் கொள்ளத்தக்கது) என்றொரு நியாயம் கூறுவர் நியாய நூலார்.*

*இக்கருத்துப் பற்றியே திருமுறைகளில்,*

*"சிவபுரம் நினைபவர் திருமகளொடு திகழ்வரே, செயமகள் தலைவரே, கலைமகள் தர நிகழ்வரே, எழில்உரு உடையவர்களே, சிவபுரம் நினைபவர் புகழ்மிகும் உலகிலே, குலன் நிலனிடை நிகழுமே, வழி புவிதிகழுமே" - தி.1 ப.21*

*"அன்பன்அணிஆரூர் - நன்பொன் மலர்தூவ*
*இன்பம் ஆகுமே"*

*"ஐயன்அணிஆரூர் - செய்ய மலர்தூவ -*
*வையம் உமதாமே" - தி.1 ப.91*

*"நீலமாமிடற் - றாலவாயிலான் - பாலதாயினார்*
*ஞாலம் ஆள்வரே"*

*"அண்ணல் ஆலவாய் - நண்ணினான்றனை -*
*எண்ணியேதொழத் - திண்ணம்இன்பமே"*

*"அம்பொன் ஆலவாய் - நம்பனார்கழல் -*
*நம்பிவாழ்பவர் - துன்பம் வீடுமே" - தி.1 ப.94*

*"அண்ணல் மருதனைப் பண்ணின் மொழிசொல்ல*
*விண்ணுந்தமதாமே"*

*"எரியார் மருதரைத் தரியா தேத்துவார்*
*பெரியார் உலகிலே"*

*"எந்தை மருதரைச் - சிந்தை செய்பவர் - புந்தி நல்லரே"*

*"மறையார் மருதரை - நிறையால் நினைபவர் -*
*குறையார் இன்பமே" - தி.1 ப. 95*

*"அரவன் அன்னியூர் - பரவுவார் விண்ணுக் -*
*கொருவ ராவரே" - தி.1 ப. 96*

*என்றாற் போல்வன பலவும் ஆங்காங்குப் பலபட எடுத்துக் கூறப்படுகின்றன. எனினும் வேதியரேயாயினும், இன்னோரன்ன அருள் முழக்கங்கள் செவியில் ஏறப்பெறுதலும், அவற்றில் தெளிவுண்டா தலும் முன்னைத் தவத்தாலன்றி ஆகாவாம்.*

*இனி, முத்தி சிவபெருமானால் அன்றிப் பிறரால் தரப்படாமையை,*

*பரசிவன் உணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையும் என்றும்*
*விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைதும் என்றல்*
*உருவமில் விசும்பின் தோலை உரித்துடுப் பதற்கொப் பென்றே*
*பெருமறை இயம்பிற் றென்னில் பின்னுமோர் சான்றுமுண்டோ.*
*- கந்தபுராணம் - தட்ச காண்டம் - உபதேசப்படலம், 25*

*மானுடன் விசும்பைத் தோல்போற் சுருட்டுதல் வல்ல னாயின்*
*ஈனமில் சிவனைக் காணா திடும்பைதீர் வீடும் எய்தும்;*
*மானாமார் சுருதி கூறும் வழக்கிவை ஆத லாலே*
*ஆனமர் இறையைக் காணும் உபாயமே அறிதல்வேண்டும்.*
*- காஞ்சிப்புராணம், சனற்குமார படலம், 43*

*அவனவ ளதுவெனு மவைதொ றொன்றுமிச்*
*சிவனலால் முத்தியில் சேர்த்து வாரிலை;*
*துவளரும் இம்முறை சுருதி கூறுமால்;*
*இவனடி வழிபடின் முத்தி எய்துவாய்.*
*- காஞ்சிப்புராணம், திருநெறிக்காரைக் காட்டுப் படலம், 29*

என்றாற் போல்வனவற்றால் நன்கறியப்படும். வீடாவது பிறவியறுதலே ஆகலின், 'அதனைப் பிறவியுடைய வேறு சிலரும் தருவர்' என்றல் பேதைமைப்பாலதேயாம். இவற்றுள், 'சுருதி என்றது அதர்வணவேதம்' என்பது காஞ்சிப்புராண வயிரவேசப் படலத்துள் கூறப்பட்டது.

*இதனால், பேதைமையால் சிவபெருமானை இகழ்தலும் குற்றமாதல் கூறப்பட்டது.*

## 22. குரு நிந்தை கூடாமை

522. பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்காள்
உற்றிருந் தாரை உளைவன சொல்லுவர்
கற்றிருந் தார்வழி உற்றிருந் தாரவர்
பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே. 1

ஓரெழுத் தொருபொருள் உணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
வாரிடைக் கிருமியாய் மாய்வர் மண்ணிலே.

---

*சிவநிந்தையை விலக்கிய நாயனார், 'குரு லிங்க சங்கமம்' என்னும் மூவகை வடிவங்களில் இலிங்க நிந்தனை விலக்குதல் மேல் திருக்கோயிற் குற்றம் விலக்கிய அதனானே அமைந்தமையின், குருநிந்தனையை ஐந்து திருமந்திரங்களால் இங்கு விளக்குகின்றார்.*

522. ***தெளிவுரை :-*** *கீழ்மக்களாயுள்ளார் ஏனைப் பெரியோரைப் பேணிக் கொள்ளாமையேயன்றித் தம்மைப் பெற்ற தாய் தந்தையரையும் பேணமாட்டார். மற்றும் உறவினராய் உள்ளவரையும் அவர் மனம் நோகத்தக்க சொற்களைச் சொல்லி இகழ்வர். தாய் தந்தையரையும், உடன் பிறந்தார் முதலிய சுற்றத்தாரையும் தக்கவாற்றால் பேணுதல் ஆகிய சான்றோர் நெறியில் நிற்பவரன்றி நல்லன பலவும் வேறு யாவர் பெறும் பேறாகும்!*

***குறிப்புரை :-*** *"கற்றிருந்தார்" என்றது "கற்று வல்ல சான்றோர்" என்றவாறு. "உற்றிருந்தாரவர்" என்றதில் அவர் பகுதிப்பொருள் விகுதி. "நல்லன பலவும்" என்பது ஆற்றலாற் கொள்ளக்கிடந்தது.*

*தாய், தந்தை, தமையன்மார் மாதுலன் முதலிய மூத்த உறவினர் இவரெல்லாம் "குரவர்" எனப்படுவராகலின், "அவரை நிந்தித்தல் கூடாது" என்பதனையும் இவ்வதிகாரத்துள் முதற்கண் வைத்துக் கூறினார். இனி "கல்வி கற்பிக்கும் ஆசிரியர் குரவராதல்" வெளிப்படை அவரை, "கற்றிருந்தார்" என்பதனுள் அடக்கினார்; அவர்தாம் எழுத்தறிவிப்பவரும், நூற்பொருள் உணர்த்துபவரும், தொழில் கற்பிப்பவரும் முதலாகப் பல திறத்தராதலின். இதனை அடுத்துப் பதிப்புக்களில் காணப்படும் "ஓரெழுத்தொரு பொருள்" என்னும்*

**523.** **பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்**
**சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்**
**அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடும்**
**சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே.** **2**

**524.** **மந்திரம் ஒன்றே உரைசெய்த மாதவர்**
**சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்**
**பிந்திச் சுணங்காய்ப் பிறந்தொரு நூறுரு**
**வந்து புலையராய் மாய்வர்கள் மண்ணிலே.** **3**

---

*பாடல் முழுவதும் யாப்பு வேறுபட்டுக் கிடத்தலின், அது நாயனார் திருமொழியன்றாம். அதன் பொருளும், "மந்திரம் ஒன்றை" என வரும் திருமந்திரத்துள் பெறப்படுகின்றது.*

**523.** *தெளிவுரை :- கற்புடை மகளிர், சிவனடியார்கள் தத்துவ ஞானம் உடையவர்கள் இவர்களது மனம் வருந்தும்படி அவர்தம் நெறிக்கு அழிவு செய்தவரது செல்வமும், வாழ்நாளுள் ஓராண்டுக்குள்ளே அழிந்தொழியும். இஃது, எங்கள் நந்தி பெருமான்மேல் ஆணையாக, உண்மை.*

*குறிப்புரை :- "பத்தினிகள்" என்பதில் விகுதி தொகுத்தலாயிற்று. தத்துவஞானம் நூலானும், அநுபவத்தானும் வருவது. பத்தினிகள் முதலிய மூவரும் நேரே குரவராகாவிடினும், தமது ஒழுக்கத்தால் உலகம் நன்னெறி நிற்கச்செய்தலால் உலக ஆசிரியராதல் பற்றி அவர்கட்குத் தீங்கு செய்வது உலகிற்கே தீங்கு செய்வதாய் முடிதலின், அதனால் விளையும் தீமை பெரிதாயிற்று. சதாநந்தி - சதா ஆநந்தி; எப்பொழுதும் இன்பம் உற்றிருப்பவர்.*

*இவை இரண்டும் திருமந்திரங்களாலும், உபதேச குரவரையே அன்றிப் பிற குரவரை இகழ்தலும் கூடா என்பது கூறப்பட்டது.*

524. *தெளிவுரை :- மந்திரமாவனவற்றுள் ஒன்றையே உபதேசித்தவராயினும், அவரது மனம் நோவத் தீமைகளைச் செய்தவர்கள், இம்மண்ணுலகில் யாவரும் இகழ்ந்து ஒதுக்குகின்ற நாயாய் நூறுமுறை பிறந்து, பின்பு மக்களாய்ப் பிறக்கினும் புலையராய்ப் பிறந்து, இம்மை மறுமைகளில் யாதொரு பயனையும் எய்தாது வாளா இறந்தொழிவர்.*

**525.** **சன்மார்க்க சற்குரு சந்நிதி பொய்வரின்**
**நன்மார்க்க முங்குன்றி ஞானமுந் தங்காது**
**தொன்மார்க்க மாய துறையும் மறந்திட்டுப்**
**பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே.** **4**

**526.** **கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு**
**வெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றும்**
**நெய்ப்பட்ட பால்இள நீர்தயிர்தான் நிற்கக்**
**கைப்பிட்டுண் பான்போன்றும் கன்மிஞா னிக்கொப்பே.** **5**

---

*குறிப்புரை :-* "ஒரு பிறப்பில் குருவை இகழ்ந்தவர் பல பிறப்புக்களில் பலரானும் இகழும் நிலையை அடைவர் என்பதாம். மந்திரத்தைப் பன்முறை கணித்துப் பயன் பெற்றவரை "மாதவர்" என்றார். 'சுணங்கன்' என்பது கடைக்குறைந்தது. இத்திருமந்திரத்தின் பாடம் பெரிதும் வேறுபட்டுள்ளது.

இதனால், மந்திர குருவை (கிரியா குருவை) நிந்தித்தல் விலக்கப்பட்டது.

இதன்பின்னர் உள்ள, "ஈசனடியார்" என்னும் திருமந்திரம் அடுத்த அதிகாரத்ததாம்.

**525. தெளிவுரை :-** ஞானநெறியை உணர்த்துகின்ற ஞானகுருவின் திருமுன்பில், 'பொய், குறளை, கடுஞ்சொல், பயனில சொல்' என்னும் தீயசொற்கள் எவர் வாய்வழியாக நிகழினும் உலகில் நன்னெறி அழிந்து, மெய்யுணர்வும் இல்லாதொழியும். தொன்றுதொட்டு வரும் உலகியல் துறைகளும், மெய்ந்நெறித் துறைகளும் மக்களால் மறக்கப்பட்டுப் பல சமயங்களும் கெட, நாட்டில் பஞ்சமும் உண்டாகும்.

*குறிப்புரை :-* ஞானநெறி, 'சன்மார்க்கம்' என வழங்கப்படுதலை அறிந்துகொள்க. "பொய்" என்பது உபலக்கணம்.

இதனால், ஞானகுருவை இகழ்தல் பெரிதும் தீமை தருவதாம் என, அது விலக்கப்பட்டது.

**526. தெளிவுரை :-** கன்மி ஞானிக்கு ஒப்பாதல் - அஃதாவது, ஞானிக்கு ஒப்பாகக் கருதி, ஞானகுரு இருக்கவும் அவனை விடுத்துக் கன்மியைக் குருவாகக் கொள்ளுதல், கையில் மாணிக்கம்

*கிடைத்திருக்கவும் அதனை எறிந்துவிட்டு, வெயிலால் வெதும்பிக் கிடக்கும் பரற்கல்லைக் கையில் எடுத்துச் சுமப்பவன் செயல்போலவும், கையில் நெய்யுள்ள பாலும், இளநீரும், தயிரும் இருக்க அவற்றை உண்ணாமல், பின்புதான் அழிதற்கு ஏதுவாகிய எட்டிப்பழத்தை முயன்று பெற்று உண்பவன் செயல் போலவும் ஆம்.*

***குறிப்புரை :-*** **ஒப்பு - ஒத்தல். இஃது ஒப்பாகக் கருதிச்செய்யும் செயலின் மேல்நின்றது. கன்மி - 'கன்மமே முத்தி தரும்; ஞானம் வேண்டுவதில்லை என்பவன். இக்கொள்கையினரை, 'கன்ம காண்டிகள்' என்பர். கன்மி ஞானிக்கு ஒத்தல், சுமப்பான் விதி போன்றும், கைப்பு இட்டு உண்பான் (செயல்) போன்றும் ஆம் என ஒரு சொல் வருவித்து முடிக்க.**

***இதனால், உண்மைக் குரவரது பெருமையை அறியாமையும் குற்றமாதல் கூறப்பட்டது.***

## 23. மாகேசுர நிந்தை கூடாமை

527. ஆண்டான் அடியவ ரார்க்கு விரோதிகள்
ஆண்டான் அடியவர் ஐயமேற் றுண்பவர்
ஆண்டான் அடியாரை வேண்டாது பேசினோர்
தாந்தாம் விழுவது தாழ்நர காகுமே. 1

---

*குரு லிங்க சங்கமங்களுள் எஞ்சிநின்ற சங்கமங்களை இகழ்தலை இவ்வதிகாரத்தில் நான்கு திருமந்திரங்களால் விலக்குகின்றார். 'சங்கமர், சிவனடியார், மாகேசுரர்' என்பன ஒருபொருட்சொற்கள். மாகேசுரர் - மாகேசுரனை வழிபடுபவர். மேல் (பா-523) "பத்தர்கள்" என்றது உலகியலில் நின்றே இறைவனிடத்து அன்புடையவர்களை, இங்கு 'மாகேசுரர்' என்பது சிவவேடங்களைச் சிறக்கப் பூண்டு "பாரம் ஈசன் பணியலது ஒன்றிலராய்" (தி.12 பெ.பு. திருக்கூட்டச் சிறப்பு. 9) ஈசன் பணியும், அடியவர் பணியும் முட்டவரின், அவற்றின் பொருட்டு ஏனை எல்லாவற்றையும் துறக்கும் இயல்புடையோர். இவருட் கல்லாடை புனைவார் வெளிப்படையான மாகேசுரர். அது புனையாதார் மாகேசுரர் என அறிதற்கு அரியர். ஆதலின், அவ்வேடம் உடையவர் வெளிப்படக் குற்றமுடையராய வழியல்லது இகழ்தற்குரியரல்லர்.*

527. ***தெளிவுரை :-*** *சிவனடியார் உலகில் உள்ளாரில் யார்க்கு என்ன தீங்கு செய்கின்றனர்! அவர்கள் அறவுள்ளம் உடையார். இடுகின்ற பிச்சையை ஏற்று உண்டு போகின்றார்கள். ஆதலின், அவரிடத்து வெறுப்புக் கொண்டு இகழ்ந்து பேசியவர் அடைவது மிகக் கீழான நரகமே.*

***குறிப்புரை :-*** *"சிவனடியாரை வெறுத்துப் பேசுதற்குக் காரணம், செல்வம் முதலியவற்றால் வரும் செருக்கும், சமயக்காழ்ப்பும் போல்வனவேயன்றிப் பிறிதில்லை" என்றற்கு முதல் இரண்டடிகளைக் கூறினார். "ஊர்கள்தோறும் அட்டுண்பார் இட்டுண்பார் விலக்கார் ஐயம்" (தி.6 ப.98 பா.2) என்றதும், 'சிவனடியார்க்கு உலகத்தாரோடு உறவினாலாதல், பகையினாலாதல் தொடர்பில்லை என்பதும் விளக்கியதேயாம்."*

*இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்.* - *குறள், 1062*

*என்றதில், "இரத்தல் இல்வாழ்வார் மேற்கொள்ளும் தொழில்களுள்*

ஒன்றன்று” என்றதன்றி.

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. - குறள். 41

என்புழிக் கூறப்பட்ட இயல்புடைய மூவரை விலக்கியதன்று. இனி,

துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. - குறள். 42

என்புழி “துறந்தார்” என்றது கிளைஞரால் கைவிடப்பட்டவரை, இவரை, “அனாதைகள்” என்பர், இவர் சிறுமகாரும், கழிமூப்பினரும், “காணார், கேளார், கால் முடம்பட்டார்” (மணிமேகலை, காதை 13, வரி 111) முதலியோருமாய், முயற்சி செய்யமாட்டாதவராய் இருப்பவர். இவர் தாமே கிளைஞரால் கைவிடப்படாதவழி, அவரால் வயிறு நிரம்பப் பெறாராயின், ‘‘துவ்வாதவர் வறியார்’’ எனப்படுவர். “இவர்க்கும்” “இல்வாழ்வான் துணை” என்றமையால், இவரையும் மேற்காட்டிய “இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின்” என்னும் குறள் விலக்கியதின்றாம். ஆகவே, இவரையெல்லாம் பொதுப் பட நோக்கியே, “ஈகை” (குறள் அதிகாரம், 23) என்னும் அதிகாரமும்,

இரப்பாரை யில்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. - குறள். 1058

என்னும் குறளும் சொல்லப்பட்டனவாம். இவ்வாசிரியரும் “யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி” (பா.51) என்றதும் இவரை நோக்கியேயாம்.

இங்ஙனம் நூல் முழுவதையும் முற்றநோக்கி உண்மை உணரமாட்டாதார். ‘இங்குக் காட்டியன பலவும் தம்முள் ஒன்றி நில்லாது ஒன்றை ஒன்று விலக்குவனவாய் முரணிநிற்கும்’ என்று இகழ்வர். அவர் “ஏற்பதிகழ்ச்சி, ஐயம் இட்டுண்” (ஆத்திசூடி 8, 9) என்றாற் போல்வனவற்றையும் அன்னவாக வைத்து இகழ்தல் சொல்ல வேண்டுமோ என்பது.

சிவனடியாராகிய மாகேசுரரை நல்விருந்தினராக வரவேற்று ஓம்புவார் சத்திநிபாதர். அவர் உலகத்து அரியராக, இரவலராக வைத்து ஐயம் ஏற்று உண்டலையே கூறினார். ஐயம் இடுவோர் அவரின் மிக்குளதாதல் பற்றி இங்கு ஆர்க்கும் விரோதிகள் என்பது பாடமாயின், ‘ஆண்டான் அடியவராய யார்க்கும் விரோதிகளாய் ஐயம் ஏற்றும் உண்பவராய அவ்வடியவரை வேண்டாது பேசினார்’ என உரைத்தலன்றிப் பிறவாறுரைத்தல் பொருந்தாமை அறிக. ‘தாந் தாம் விழுவது’ என்பதில் இரண்டாவது ‘தாம்’ அசைநிலை.

இதனால், மாகேசுர நிந்தை மாபாதகமாதல் கூறப்பட்டது.

528. ஈசனடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசம தாயிடும் நம்நந்தி யாணையே. 2

---

528. ***தெளிவுரை :-*** *சிவனடியாரது உள்ளம் எவ்வாற்றாலேனும் நோகுமாயின், அதற்குக் காரணமாய் உள்ள மண்ணுலக நாடும், அதன் சிறப்புக்களும் அழிதலேயன்றி விண்ணுலக வேந்தன் ஆட்சி பீடத்துடன் மண்ணுலக மன்னன் ஆட்சி பீடமும் அழிந்தொழியும். இஃது எங்கள் நந்திபெருமான்மேல் ஆணையாகச் சொல்லத்தக்க உண்மை.*

***குறிப்புரை :-*** இவ்வாறே

*தாம் அடங்க இந்தத் தலம் அடங்கும்; தாபதர்கள்*
*தாம்உணரில் இந்தத் தலம்உணரும் - தாம்முனியில்*
*பூமடந்தை தங்காள்; புகழ்மடந்தை போயகலும்;*
*நாமடந்தை நில்லாள் நயந்து.*

*எனத் திருக்களிற்றுப்படி (பா.68)யும் கூறிற்று. இதனால், சிவனடியாரது மனம் நோவாமைக் காத்தல் நாடாளும் அரசர்க்கு முதற்கடமையாதல் பெறப்படுதலின், அது பற்றியே நாயனார் முன்னர்,*

*ஆவையும் பாவையும் மற்றற வோரையும்*
*தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்*
*காவலன் காப்பவன்; காவா தொழிவனேல்,*
*மேவும் மறுமைக்கு மீளா நரகமே. - தி.10 பா.242*

*என விதித்தார்.*

*"மதுரையில் ஆளுடைய பிள்ளையாரோடு வாதில் தோற்ற சமணரை நின்றசீர் நெடுமாறர் கழுவில் ஏற்றியது, அவர்தாமே, 'வாதில் அழிந்தோமாகில் - வெங்கழு வேற்றுவான் இவ் வேந்தனே' (தி.12 பெ.பு. ஞானசம். 798) என உடன்பட்டமையை முதன்மையாகக் கொண்டென்று; அதற்கு முன்பே பிள்ளையார் எழுந்தருளியிருந்த திருமடத்தில் இரவில் தீயிட்டுத் திருக்கூட்டத்தார் பலரை உளம் நடுங்கச்செய்த மாபாதகம் அவரையும், தன்னையும், பின்பு தொடராமைப் பொருட்டே" என்பதையும் "அஃது அன்னதாகலின் அதனை விலக்கின் தமக்கும் குற்றமாம் என்பது கருதியே பிள்ளையார் அரசன் செயலைத் தடுத்திலர்" என்பதையும் சேக்கிழார்,*

*மன்னவன் மாறன் கண்டு மந்திரி யாரை நோக்கித்*
*துன்னிய வாதில் ஒட்டித் தோற்றஇச் சமணர் தாங்கள்*

*முன்னமே பிள்ளை யார்பால் அனுசிதம் முற்றச் செய்தார்*
*கொன்னுனைக் கழுவில் ஏற்றி முறைசெய்க என்று கூற.*
*- தி.12 பெ.பு. ஞானசம். 853*

*எனவும்,*

*புகலியில் வந்த ஞான புங்கவர் அதனைக் கேட்டும்*
*இகல்இலர் எனினும் சைவர் இருந்துவாழ் மடத்தில் தீங்கு*
*தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே*
*மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த எல்லை.*
*- தி.12 பெ.பு. ஞானசம். 854*

*எனவும் இனிது விளங்க அருளிச்செய்தார். ஆயினும், அவற்றைச் செவிமடாது, 'பிள்ளையார் வேந்தன் செய்கையை விலக்காதிருந்தமை அவர்க்கு அறமாதல் இல்லை' எனக் கூறிப் பிணங்குவார் உளராயின், அவர்க்கு நாம் கடவதொன்றிலை. தண்டியடிகள் நாயனாரோடு ஒட்டித் தோற்ற சமணரைச் சோழமன்னன் ஊரைவிட்டு அகற்றியது அவர் செய்த தீமையை ஒப்பநாடி அத்தக ஒறுத்ததேயாதல் அறிக. (புறம். 10)*

*இச் சிவாகமப் பொருளை மணிமேகலைக் காப்பியத்துள் புத்தர்க்கு ஏற்றியுரைத்தார் அதன் ஆசிரியர். (காதை. 14, 29, 29, 21, 22).*

*இதனால் மாகேசுர நிந்தையால் விளையும் கேடு கூறப்பட்டது.*

**529. *தெளிவுரை :-* 'சிவஞானியை நிந்திப்பதே நலம்' என்று கருதி நிந்திப்பவனும், அவ்வாறன்றி, 'வந்திப்பதே (வணங்குவதே) நலம்' என்று அறிந்து வந்திப்பவனும் முறையே நல்வினையின் நீங்கித் தீவினையை எய்துபவனும், தீவினையின் நீங்கி நல்வினையை எய்துபவனுமாவர். ஏனெனில், சிவஞானிகட்கு அடியவரான பின்பே எவர்க்கும் சிவபெருமானது திருவருள் கிடைப்பதாகலின்.**

***குறிப்புரை :-* "ஞானி" என்றது கிளைப்பெயர். "நல்வினை தீவினை தீர்வார்" என்றதனை, மேல் "நிந்திப்பவன், வந்திப்பவன்" என்றவற்றோடு நிரனிரையாக இயைக்க. 'அவன்வயமாக' என ஆக்கம் வருவிக்க. போதல் - அடைதல். 'ஈசனுக்கு அன்பில்லார் அடியவர்க்கன்பில்லார்' (சிவஞானசித்தி. சூ.12-2) ஆதலின், "அவன் வயமானபொழுதே புகும் சிவபோகம்" என்றார். இவ் ஏகாரம் பிரிநிலை. சிவனது திருவருளால் கிடைப்பது சிவானந்தமாகலின், அத்திருவருள் புகுதலைச் சிவானந்தம் புகுதலாகவே கூறினார். இங்கு "நல்வினை, தீவினை" எனப்பட்டவை, சிவ நல்வினை தீவினைகளேயாதலின், சிவ ஞானிகளை வந்திப்பவர் சிவபுண்ணியச் சீலராய் சிவஞானம் பெற்று அதன் வழிச் சிவானந்தத்தை எய்துதலும், சிவஞானிகளை நிந்திப்பவர்**

**529.** ஞானியை நிந்திப் பவனும் நலனென்றே
ஞானியை வந்திப் பவனுமே நல்வினை
யான கொடுவினை தீர்வா ரவன்வயம்
போன போழுதே புகுஞ்சிவ போகமே. **3**

**530.** ஞானம் விளைந்தவர் நம்பிட மன்னவர்
சேனை வளைந்து திசைதொறுங் கைதொழ
ஊனை விளைத்திடும் உம்பர்தம் ஆதியை
ஏனை விளைந்தருள் எட்டலு மாமே. **4**

---

*சிவாபராதிகளாய் அருநரகும், இழிபிறப்பும் எய்துதலும் பெறப்பட்டன. இதனாலன்றோ,*

> *'நமக்கு உண்டுகொலோ, தொண்டர்க்குத்*
> *தொண்டராம் புண்ணியமே' - தி.4 ப.101*

*என அப்பரும் திருவாய்மலர்ந்தருள்வாராயினர்.*

*இதனால், 'சிவனடியாரை வந்தியாதொழியினும், நிந்தித்தல் ஆகாது' என்பது கூறப்பட்டது.*

*530. **தெளிவுரை :-** சிவஞானம் கிடைக்கப்பெற்ற சிவனடியார்களை விரும்பி வழிபட்டால், எவ்விடத்தும் அரசர்கள் தம் படையுடன் வந்து வணங்க, சிறுபயன்களைத் தருகின்ற தேவர்க் கெல்லாம் முதல்வனாகிய சிவபெருமானை அவன் அருளால் அடைந்து பேரின்பம் எய்துதல் கூடும்.*

***குறிப்புரை :-** 'விளைந்தவரை என்னும் இரண்டனுருபு தொகுத்தலாயிற்று. நம்புதல் - விரும்புதல்; அன்புசெய்தல், 'ஊனம்' என்பதும், 'ஏனையது' என்பதும் கடைக்குறைந்து நின்றன. ஊனம் - குறையுடையது. 'அருளால்' என உருபு விரிக்க. ஈற்றடியில் உள்ள சொற்களை, 'அருளால் எட்டி, ஏனையது விளைதலும் ஆம்' எனப் பின்முன்னாக நிறுத்தி, விகுதிபிரித்துக் கூட்டி உரைக்க. விளைதல் - விளையப் பெறுதல். 'வணங்குவார்க்கு இப்பயனெல்லாம் விளையும்' எனவே, 'வணங்காது பிணங்குவார்க்கு இவற்றின் மறுதலையாய அரச தண்டமும், இருளுலகமும் கிடைக்கும்' என்பது பெறப்பட்டது.*

*இதனால், மாகேசுர நிந்தை செய்வார்க்கு வரும் குற்றம் மறுதலை முகத்தாற் கூறப்பட்டது.*

*இங்கு நிற்கத்தக்கதாய இத்திருமந்திரம், பதிப்புகளில் அடுத்த அதிகாரத்தில் காணப்படுகின்றது.*

## 24. பொறையுடைமை

531. பற்றிநின் றார்நெஞ்சிற் பல்லிதான் ஒன்றுண்டு
முற்றிக் கிடந்தது மூக்கையும் நாவையும்
தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
வற்றா தொழிவது மாகமை யாமே. 1

---

*பிறர்க்கு, 'மாகேசுர நிந்தை ஆகாது' என்பது உணர்த்திய நாயனார், இனி அம் மாகேசுரருக்கு ஆவன சிலவற்றை உணர்த்துவாராய் முதற்கண் பொறையுடைமை இரண்டு திருமந்திரங்களால் உணர்த்துகின்றார். பொறையுடைமையாவது பிறர் தீயன செய்த வழிப் பொறுத்தலையுடையனாதல்.*

531. ***தெளிவுரை :-*** *பற்றறாதவர் உள்ளத்தில் பல்லி ஒன்று உள்ளது; அஃது அவரது மூக்கையும், நாக்கையும் பற்றிக் கிடந்து, எந்த நேரமும், எவற்றையேனும் படபடவென்று சொல்லிக் கொண்டிருக்கின்றது. பற்றுக்களைத் துடைத்தவரது உள்ளத்திலோ பெரிய பொறுமை என்னும் நீர் வற்றாது நிறைந்து நிற்கின்றது.*

***குறிப்புரை :-*** *கடுஞ்சொற் பேசுதற்குக் காரணமான வெகுளியை, அடக்கமின்றிப் பலகாலும் படபடத்து ஒலிக்கின்ற பல்லியாக உருவகித்தார். அது மூக்கையும் நாக்கையும் மூடிக்கிடப்பதாகக் கூறியது, அவை இரண்டுமே எழுத்தொலி புறப்படும் இடமாய் இருத்தல் பற்றி வெகுளியால் முணுமுணுக்கின்றவர்கட்குப் பேச்சுப் பெரும் பான்மையும் மூக்கின் துணையோடே நிகழ்தல் அறிக. தெற்றுதல் - துடைத்தல், ''பற்றி நின்றார்'' என்றதற்குச் சொல்லெச்சத்தால் வந்தியைந்த 'பற்று' என்பது தானே 'தெற்றுதல், சிதைத்தல் என்பவற்றிற்கும் செயப்படு பொருளாதல் காண்க. 'காமம், வெகுளி, மயக்கம்' என்னும் முக்குற்றங்களுள் நடுவுநின்ற வெகுளியுளதாயின் ஏனை இரண்டு நீங்கினவாகா ஆதலின், அவ்விரண்டையும் விட்ட மாகேசுரர் வெகுளியுடையராதல் கூடாது என்பதனை வலியுறுத்தற்கு, வெகுளி, காமமும், மயக்கமும் உடையாரையே பற்றி நின்று கடுஞ்சொற் பிறப்பித்தலை உடன் கூறினார். அதனானே, மாகேசுரர் கடுஞ்சொற் கூறலாகாமையும் பெறப்பட்டது. ஆளுடைய பிள்ளையார் சமணரால் இடப்பட்ட தீயைப் 'பாண்டியன்பால் செல்க' என வெஞ்சோற் சொல்லியது மாகேசுரராய அவர்க்குத் தகுவதோ என ஐயுறாமைப் பொருட்டன்றே அவர், "செல்க" என வாளா கூறாது.*

"பையவே செல்க" எனப் பணித்தமையை எடுத்துக்காட்டி, "பையவே" என்றாராயினும் "செல்க" என்றது என்னை என்பார்க்கு,

> "......................... அரசன்பால் அபராதம் உறுதலாலும்
> மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்
> வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்
> தீண்டியிடப் பேறுடையன் ஆத லாலும்
> தீப்பிணியைப் பையவே செல்க என்றார்"
>
> -தி.12 பெ.பு. ஞானசம். 705

என விளக்கியருளினார் சேக்கிழார். அப்பர் பெருமான், தம்மை நீற்றறையில் இடுதல் முதலியவற்றைச் செய்தும், செய்வித்தும் நின்றார் மாட்டு வெகுளுதலும், வெஞ்சோற் சொல்லுதலும் இன்றிவாளா அமைத்திருத்தமை, மாகேசுரரது பொறையுடைமைக்கு எல்லையாய் அமைந்ததோர் எடுத்துக்காட்டாதல் அறிக.

"வற்றாதெழுவது" என்றது குறிப்புருவகம், 'வற்றாதொழிவது' என்பது பாடம் அன்று. பயிர்வளர்வதற்கு நீர்போலச் சிவபத்தி வளர்வதற்குப் பொறையுடைமை இன்றியமையாததாதலின் அதனை நீராக உருவகம் செய்தார்.

> மெய்ம்மையாம் உழவைச் செய்து
> விருப்பெனும் வித்தைவித்திப்
> பொய்ம்மையாம் களையை வாங்கிப்
> பொறையெனும் நீரைப்பாய்ச்சித்
> தம்மையும் நோக்கிக் கண்டு
> தகவெனும் வேலியிட்டுச்
>
> செம்மையுள் நிற்பராகில் சிவகதி
> விளையு மாறே. -தி.4 ப.76 பா.2

என்று நாவுக்கரசரும் அருளிச் செய்தார்.

இதனால், 'மாகேசுரர் பிறர் செய்யும் மிகையைப் பொறுத்துக் கொள்ளல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.

இதன் பின் பதிப்புக்களில் காணப்படும், "ஓலக்கம் சூழ்ந்த" என்னும் திருமந்திரம் சிறிது வேறுபட முன்பு வந்துள்ளதே. (பா.91)

**532.** **வல்வகையால்உம் மனையிலும் மன்றினும்**
**பல்வகை யாலும் பயிற்றிப் பதஞ்செய்யும்**
**கொல்லையில் நின்று குதிகொள்ளுங் கூத்தனுக்**
**கெல்லையி லாத இலயமுண்டாமே.** **2**

---

**532.** *தெளிவுரை :- காட்டில் ஆடுகின்ற கூத்தனுக்கு அளவு கடந்த பொறுமையே பொருளாக அமைவது. அதனால், மாகேசுரர்களே, நீவிர் வாழும் இடத்திற்கு உள்ளும், புறமும் இயன்ற அளவில் பலவகையாலும் உள்ளத்தைப் பொறுமையோடு இருக்கப் பழக்கிப் பக்குவப்படுத்துங்கள்.*

*குறிப்புரை :- மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. செய்யும் - செய்யுங்கள். பயிற்றிப் பதஞ்செய்தற்கு, 'உள்ளம்' என்னும் செயப்படுபொருள் வருவித்துக்கொள்க. 'கொல்லை, காடு' என்பன ஒருபொருட் சொற்கள். இலயம் - ஒடுக்கம்; பொறுமை, உண்டு ஆம் - உள்ளதாய் (பொருளாய்) நிற்கும். பொருண்மையாவது உளதாந் தன்மையாதலின். பொருளை 'உள்ளது' என்றார். இங்ஙனம் அன்றிக் கிடந்தவாறேகொண்டு, 'பதம் செய்தால் உம்மிடத்துக் கூத்தனுக்கு எல்லையில்லாத ஒற்றுமை (இரக்கம்) உண்டாகும்' என உரைத்தலும் ஆம். வெகுளியுடைய உள்ளத்தில் அன்பும், அருளும் தோன்றா ஆதலின், அன்பையும், அருளையும் பொருளாக விரும்பும் சிவபெருமான் அதற்கு முதலாகிய பொறையைப் பொருளாகப் விரும்புவன் என்பது உணர்க.*

*இதனால், மகேசுரனுக்கு இனிதாவனவற்றுள் பொறையுடைமை முதலதாதல் கூறப்பட்டது.*

*இவ்வாறு, பொறையுடைமையை விதிக்கவே, அதனடியாகப் பிறக்கும் இன்னா செய்யாமையும் விதிக்கப்பட்டதாம். புலால் உண்ணாமையாகிய இயைபு பற்றி, கொல்லாமை முன்பே விதிக்கப்பட்டது.*

## 25. பெரியாரைத் துணைக்கோடல்

533. ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
தேடவல் லார்க்கருள் தேவர் பிரானொடும்
கூடவல் லாரடி கூடுவன் யானே. 1

---

*அஃதாவது அன்புநாண் முதலியவற்றால் பெரியாரைத் தமக்கு துணையாகவும் உறு துணையாகவும் கோடலாம் பொறையுடையார்க்கு அன்றி, தன்முனைப் படங்கித் தன்னிற் பிறரை மதிக்கும் குணமும், அவரைத் துணையாகக் கோடலும் அமையாமையின் பொறையுடைமையின் பின் இது வைக்கப் பெற்றது.*

533. ***தெளிவுரை :-*** *சிவபிரானை அடைய விரும்பிய யான், பத்தி காரணமாக, அவன் வெளிப்படும் இடங்கட்கெல்லாம் ஓடியும், அவனையே புகழ்ந்து பாடியும் இன்னோரன்னவற்றால் அவனை அடையவல்லாரது அடிநிழலைப் பிரியாது சேர்ந்திருப்பேன்.*

***குறிப்புரை :-*** *எனவே, ''அச் சேர்ச்சிதானே அவனை அடைவிக்கும்" என்பதாம். "ஓடவல்லார், பாடவல்லார்" என்றதும் கூட வல்லார் கூடுமாற்றை விதந்தவாறேயாம். ஆகவே, 'நடாவுவன், வாழ்குவன்' என்பனவும், "கூடுவன்" என்றதனை வகுத்தோதியவாறாம். 'ஓட வல்லராகிய தமர்' என்க. "சிவனையடைய விரும்புவார்க்கு அவனடியவரே உறவினர்" என்பதை,*

*"உறவாவார் உருத்திரபல் கணத்தினோர்கள்"*

*- தி.6 ப.98 பா.4*

*என்பதனாலும் அறிக. 'ஒலியொடு' என உருபு விரிக்க. ஒலியொடு வாழ்தலாவது தாமும் அவரொடு சேர்ந்து பாடுதல். பாடவல்லாரை, "பரமனையே பாடுவார்" (தி.7 ப.39 பா.10) எனத் திருத்தொண்டத் தொகையுள் அருளிச் செய்தமை காண்க. 'பாடவல்லாரொடு' என்றே பாடம் ஓதுதலும் ஆம். தேடுதல் - அடையுமாற்றாலெல்லாம் முயலுதலும். "ஓட வல்லார்" முதலிய நான்கும், பெரியாராவாராது இயல்பு இவை என்றவாறாம்.*

*பாடிற் றிலேன்; பணி யேன்; மணி நீயொளித்*
*தாய்க்குப்பச்சூன்*
*வீடிற் றிலேனை விடுதிகண் டாய்; வியந்*
*தாங்கலறித்*

**534.** தாமிடர்ப் பட்டுத் தளிர்போல் தயங்கினும்
மாமனத் தங்கன்பு வைத்த தில்லையாகும்
நீயிடர்ப்பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்னொடும் போதுகண் டாயே. **2**

---

*தேடிற் றிலேன், சிவன் எவ்விடத் தான் எவர்*
*கண்டனரென்*
*றோடிற் றிலேன்; கிடந்துள்ளுரு கேன்; நின்*
*றுழைத்தனனே. - தி.8 நீத்தல். 45*

*என்றதனையும் நோக்குக. இங்கு, கூடவல்லார் அடி கூடுவன் என்றாற் போலவே,*

*'கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்*
*அவர்கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே'.*
*- தி.6 ப.96 பா.10*

*'............... ஆதியை நாளும்*
*இறைவன் என்றடி சேர்வார்*
*எம்மையும் ஆளுடை யாரே'. - தி.7 ப.75 பா.1*

*என்றற்றொடக்கத்தனவாக வருவன பலவற்றுள்ளும் அடியார்க்கு அடியவராதலே சிறந்தெடுத்துப் பேசப்படுதல் அறிக. "யான்" என்றது இசையெச்சத்தால், "சிவபிரானை அடைய விரும்பிய யான்" எனப் பொருள் தருதல் காண்க.*

*இதனால், ''பெரியாரைத் துணைக்கோடலே இறைவனை அடைவிக்கும் என்பது கூறப்பட்டது".*

**534. தெளிவுரை :-** ***நெஞ்சே, நீ உன்னை அகப்படுத்துகின்ற துன்பத்தில் அகப்பட்டுத் தீயில் வீழ்ந்த தளிர்போல் வாட்டமுற்றாலும் சிவபெருமானிடத்து அன்பு வைத்திலை. இவ்வாறு அத்துன்பத்திலே இருந்து நீ என்ன செய்யப் போகின்றாய்? நான் போகின்ற இடத்திற்கு நீயும் என்னோடு வா.***

***குறிப்புரை :- 'தாவும்' என்னை பெயரெச்சத்து உகரம் கெட்டது. தாவுதல் - அகப்படுத்தல். "தளிர்போல்" என்றாராயினும், தீயில் வீழ்ந்த தளிர்போல்" என்றல் கருத்தாதல் அறிக. நெஞ்சை முன்னிலைப் படுத்தமையின், அதற்கும் ஒரு மனம் இருப்ப போலக் கூறினார். "என் செய்வாய்" என்றது, "வேறு யான் என்ன பெறப்போகிறாய்" என்றவாறு, "பெறுவது ஒன்று இன்மையால் என்னொடு வருதலால் இழப்பில்லை"***

**535.** அறிவார் அமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் சிவதத் துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன் கூடல் பேரின்ப மாமே. **3**

**536.** தாழ்சடை யான்றன் தமராய் உலகினிற்
போர்புக ழால்எந்தை பொன்னடி சேருவார்
வாயடையா உள்ளந் தேர்வார்க் கருள்செய்யுங்
கோவடைந் தந்நெறி கூடலு மாமே. **4**

---

*என்பதாம். ''சிறியார் பெரியாரை அணுகவாரார்'' என்பது தோன்றுதற்குப் "பெரியோரிடத்து" என்னாது, "போமிடத்து" எனப் பொதுப்படக் கூறினார். 'போந்தால் அத்துன்பம் நீங்கும்' என்பது குறிப்பெச்சம். "கண்டாய்" முன்னிலை அசை. இத்திருமந்திரத்துள் மூன்றாம் அடி உயிர் எதுகை பெற்றது.*

*இதனால், 'பெரியாரைத் துணைக் கொள்வார்க்குத் துன்பம் நீங்கும்' என்பது கூறப்பட்டது.*

535. ***தெளிவுரை :-*** *அறிவுடைய பெரியோர், தேவர்க்குத் தலைவனாகிய சிவபிரானை அடையும் வழிகளையெல்லாம் ஆராய்ந்து; அவற்றானே அவனை அடைவர். பின்னர் அவனேயாய் நிற்பர். ஆதலின், தாமும் நன்னெறியில் உறைத்துநின்று, பிறரையும் அவ்வாறு நிற்கச்செய்து உலகிற்கு நயம்புரிகின்ற பெரியாருடன் கூடுதலே பேரின்பம் எய்துவதற்கு வழியாகும்.*

***குறிப்புரை :-*** *'அறிவார் செறிவார்' எனவும், 'நெறி நின்று' எனவும் இயையும். 'ஆதலின்' என்பது சொல்லெச்சம். பேரின்பத்தைத் தருவதனைப் பேரின்பம் என்றார்.*

*இதனால், பெரியாரைத் துணைக்கோடல் பேரின்பத்தைத் தருதல் காரணத்துடன் கூறப்பட்டது.*

**536.** ***தெளிவுரை :-*** *நீண்ட சடையை உடைய சிவபெருமானுக்கு அடியவராயினமையினால் உலகம் முழுதும் போர்த்த புகழை உடையவராய், அப்பெருமானது அழகிய திருவடியையன்றிப் பிறிதொன்றையும் அடைய விரும்பாதவராகிய அவரிடத்துச் சென்று சேர்ந்து உள்ளம் தெளிவடைபவரிடத்துச் சிவபெருமான் அருளுடை*

**537.** உடையான் அடியார் அடியா ருடன்போய்ப்
படையா ரழலான்மேனிப் பதிசென்று புக்கே
கடையார நின்றவர் கண்டறி விப்ப
உடையான் வருகென ஓலமென் றாரே. 5

---

*யவனாவன். அதனால், அவன் அருள் புரியும் நெறி வாய்க்கப்பெற்று, அவனோடு ஒன்றுதலாகிய பேற்றினையும் பெறுதல் கூடும்.*

***குறிப்புரை :-*** *"தார் சடையான்" என்பது பாடம் அன்று. "போர் புகழ்" வினைத்தொகை. "வாய்" என்றது ஏழனுருபு. "கோ அருள் செய்யும்" என மாற்றுக. "அந்நெறி அடைந்து (அவனைக்) கூடலும் ஆம்" என்க. இத்திருமந்திரத்துள் இன எதுகை வந்தது.*

*இதனால், பெரியாரைத் துணைக்கோடல், பிரானருளைப் பயத்தல் கூறப்பட்டது.*

***537. தெளிவுரை :-*** *சிவபெருமான் அடியவர் யாவரும் தம்மைப் போலும் அடியாருடன் கூடியே சிவபுரத்தை அடைந்து அதன் வாயிலில் நின்றனர். அப்பொழுது அவ்வாயிலில் உள்ள கணங்கள் சிவபெருமானிடம் சென்று, 'அடியவர் குழாமாக வந்துள்ளனர்' என்று விண்ணப்பிக்க, அப்பெருமான், 'அவர்கள் உள்ளே வருவாராக' எனத் திருவாய் மலர்ந்தருள, அவ்வருளிப்பாட்டினை அக் கணங்களால் உணர்ந்து, 'முறையோ' என்று ஓலமிட்டுச் சென்று தம் குறை தீர்ந்தனர்.*

***குறிப்புரை :-*** *என்றது, "சிவனடியார்கள் பலரும் பெரியாரைத் துணைக்கொண்டே அவனை அடைந்தார்கள்" என்றபடி இதற்குச் சேரமான்பெருமாள் நாயனார் வரலாறு சிறந்த எடுத்துக்காட்டாகும். படை - சூலம். "படையும், ஆரழலும் உடையவன்" என்க. "புக்கு, அறிவிப்ப" என்னும் எச்சங்கள் இரண்டும், "என்றார்" என்பதனோடு முடிந்தன. அடியாருடன் புக்கே' என்ற ஏகாரம், தனித்துப் புகாமையை விளக்கி நின்றது.*

*இதனால், சிவனை அடைதற்கு அவனை அடைந்த பெரியாரைத் துணைக்கோடல் இன்றியமையாததாதல் கூறப்பட்டது.*

***538. தெளிவுரை :-*** *எல்லாம் வல்லவனாகிய சிவபெருமானை உணர்த்தும் நூலறிவினால் வருகின்ற பெருமையை உடைய கலைஞன்,*

**538.** அருமைவல் லான்கலை ஞானத்துள் தோன்றும்
பெருமைவல் லோன்பிற விச்சுழி நீந்தும்
உரிமைவல் லோன்உணர்ந் துழியிருக்கும்
திருமைவல் லாரொடு சேர்ந்தனன் யானே. **6**

---

*காலக் கழிவின்கண் பிறவிக் கடலைக் கடந்து சிவபெருமான் திருவடியை அடைவான். அந்நூலறிவைத் தனதாக்கிக் கொள்ளும் அனுபூதிமான், அப்பொழுதே சிவனைப் பெற்று, உலகம் உள்ளளவும் வாழ்வான். ஆகையால் சிவமே பெறும் திரு நெறியொழுக்கம் வல்ல சிவானுபூதிச் செல்வரோடெ யான் சேர்ந்திருக்கின்றேன் (தி.8 திருச்சதகம்).*

*திரிமை என்பது எதுகை நோக்கித் திருமை என வந்தது முற்கூறிய அருமை, பெருமை, உரிமை ஆகிய மூன்றும் ஒருசேர வாய்க்கப்பெற்ற சிவஞானியாரோடு சேர்ந்தேன்; அதனால் அடியேன் கலைஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும் திருப்பெருகு சிவஞானமும் பெற்றுப் பிறவிச் சுழியினின்றும் நீந்திப் பெருவாழ்வு எய்தி என்றும் சிவனடிக் கீழ்ச் சேர்ந்திருப்பேன் என்று அருளியவாறு.*

*குறிப்புரை :- அருமை வல்லான் - பிறரால் ஆகாதவற்றையும் செய்ய வல்லவன்; சிவபெருமான். வல்லான் கலை என்னும் ஆறாவதன் தொகை “வனைகலத்தது திகிரி” என்பதுபோல, செயப்படுபொருள் ஆகிய காரகத்தின்கண் வந்தது. ‘ஞானத்துள்’ என்றது வேற்றுமை மயக்கம். “தோன்றும்” என்றது எச்சம். ‘நீந்தும், இருக்கும்’ என்ற செய்யுமென் முற்றுக்கள் எதிர்காலம் உணர்த்தி நின்றன. ‘ஆகையால்’ என்பது சொல்லெச்சம். “திருமை” என்பதில் “மை” உடையராந் தன்மை குறித்து நின்றது. “யானே” என்ற பிரிநிலை ஏகாரம் “வல்லாரொடு” என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது. அதனால், “அவரொடு சேர்தல் பெரும்பயன் உடைத்தாதல்” விளங்கிற்று.*

*இதனால், “பெரியாருள்ளும் மிகப் பெரியாரைத் துணைக் கொள்ளுதல் பெரும்பயன் தரும்” என்பது கூறப்பட்டது.*

*இங்கு உரைத்தவாற்றானே இறுதியிரண்டு அதிகாரங்களும் பொது அறம் ஆகாது ஈண்டே கூறுதற்குரிய சிறப்பறம் ஆதல் அறிந்துகொள்க.*

*இரண்டாம் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.*

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# மூன்றாம் தந்திரம்

## 1. அட்டாங்க யோகம்

**539.** உரைத்தன வற்கரி ஒன்று முடிய
நிரைத்த இராசி நிரைமுறை எண்ணிப்
பிரைச்சதம் எட்டும் முன்பேசிய நந்தி
நிரைத்த இயமம் நியமஞ்செய் தானே. 1

---

*இரண்டாம் தந்திரத்தில் புராண நூற்பொருள்களையும் அவற்றோடு இயைபுடைய சிலவற்றையும் கூறிய நாயனார், அதன் பின் சாத்திரப் பொருள்களைக் கூறுவாராய், அதுதான் தவமும் ஞானமும் என்று இருவகைப்படுதலானும், அவ்விரண்டனுள் முன் நிகழ்வது தவமே யாதலாலும் அதனுட் சிறந்த யோகத்தினை மூன்றாம் தந்திரத்தால் உணர்த்துகின்றார்.*

*இது வீராகமத்தின் சாரமாக அமைந்தது என்பது தொல்லோர் மரபு. இத்திருமந்திரத்தினுள், யோக உறுப்புக்களாகிய இயம் நியமாதி களின் இயல்பும், அவற்றிற் சிறிதுந் தவறாது நிற்பதால் விளையும் பயனும், அணிமாதி, கலை நிலையும், எடுத்த உடல் ஞானம், எய்தி வீடுபேறெய்தும் வரை தீங்கின்றி நீடு வாழ்தற்கேற்ற உபாயங்களும், காலசக்கரமும், ஆயுள் இவ்வளவு என நிச்சயித்தற்கு உரிய உபாயங்களும், பிராணன் இன்னின்ன நாட்களில் முதன் முதலாக இன்னின்ன நாடிகள் வழியாக இயங்கும் என்பதும், யோகப் பாகுபாடுகளும், அவற்றின் இயல்பும், பயனும், பிறவும் முந்நூற்று முப்பத்தைந்து திருமந்திரங்களால் உணர்த்த எடுத்துக்கொண்ட திருமூலதேவ நாயனார் முதற்கண் அட்டாங்க யோகத்தின் இயல்புகளை வகுத்துணர்த்துகின்றார்.*

*அஃதாவது கரநியாசம், அங்கநியாசம் இவற்றைச் செய்து, உறுதியாக நிலைத்த மனத்தோடு, இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டு யோக சாதனங்களையும் இயற்றுவார்க்கு ஞான வாயில் திறக்கும். வீட்டையடையலாம் என்பதனை நான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார் திருமூலதேவர்.*

**539. *தெளிவுரை :-*** *கணிநூலில் (சோதிட நூலில்) சொல்லப்பட்ட வரிசையான பன்னிரண்டு இராசிகளையும் யாடும் (மேடமும்) அரிமாவும் (சிங்கமும்) முதலாய் நிற்பத் தொடங்கி முடியும் வகைகளில் முறையானே எண்ணி யோக உறுப்புகள் எட்டனையும் முன்பு உணர்த்தியருளிய நந்திபெருமான், அவைகளில் முறையான விலக்கு விதிகளை அருளிச் செய்தார்.*

***குறிப்புரை :-*** *வற்கு - யாடு. பன்னிரண்டு இராசிகளை எண்ணும் பொழுது மேடம் முதலாக எண்ணுதலேயன்றி, சிலவற்றிற்குச் சிங்கம் முதலாக எண்ணுதலும் உளதாதலின், "வற்கு அரி ஒன்று முடிய" என்றார். ஒன்று முடிய - ஒன்றாகத் தொடங்கி முடிய "நிரைத்த இராசி" என்றதனை, "உரைத்தன" என்றதன் பின்னர்க் கூட்டுக. "இராசியை எண்ணி" என்றது, யோக நூற்குக் கணிநூல் துணையாக நிற்றல் கூறியவாறு. பிராசாதம் - யோகம்; அது, 'பிரைச்சதம்' என மருவி நின்றது. யோக உறப்புகள் எட்டு. பின்னர்க் கூறப்படும். 'இயமம், நியமம்' என்பன இங்கு யோக உறுப்புகளைக் குறியாது 'விலக்கு, விதி' என்னும் பொருளவாய் நின்றன. மூடிய என்று பாடபேதம் கொண்டு கீழ்க்காண் முறையிலும் உரை கொள்ளலாம்.*

*வற்கரி - குதிரைக் கயிறு என்றது மூச்சுக் காற்றாகிய பிராணனை யுணர்த்திற்று என்பர். பிராணனைப் பின்வருந் திருமந்திரங்களில், உய்யக் கொண்டேறுங் குதிரை (564) குதிரை இரண்டுள (565) புள்ளினும் மிக்க புரவி (566) எனக் குதிரையாகவே உருவகிப்பார். ஆதலின் ஈண்டுக் குதிரைக் கயிறு அல்லது கடிவாளம் என உருவகித்த தாகக் கோடல் பொருந்தாது. ஆதலின் வற்க + அரி என்பது வற்கரி யெனத் திரிந்ததாகக் கொண்டு கயிற்றொடு அல்லது கடிவாளத்தொடு கூடிய குதிரை எனப் பொருள் கோடவே சிறந்தது. வற்கம் - கடிவாளம். அரி - குதிரை, ஒன்று மூடியவற்க அரி - இரேசக பூரகங்களில் ஒரு நாடியை மூடிய மூச்சு இராசியென்றது பன்னிரண்டு என்னும் எண் மாத்திரையாய் நின்றது, இராசி நிரைமுறை எண்ணுதலாவது. பன்னிரண்டு மாத்திரையளவு பூரித்தலும் இரேசித்தலும் செய்தல். இதனைப் பின் பன்னிரண்டானைக்குப் பகலிரவில்லையே என்றதானாலும் காண்க.*

**540. தெளிவுரை :-** மேற்கூறியவாறு நந்திபெருமான் *அருளிச் செய்த விலக்கு விதிகளால் சமாதி நிலையை அடைந்து யாவரும் உய்தற்பொருட்டு, ஞானம் இறுதித் தந்திரங்களில் வர நிறுத்தி, முன்னே உள்ள சில தந்திரங்களில் கிரியைகளாகிய கவசம், நியாசம், முத்திரை*

**540.** செய்த இயம நியமஞ் சமாதிசென்
றுய்யப் பராசக்தி உத்தர பூருவம்
எய்தக் கவச நியாசங்கள் முத்திரை
எய்த வுரைசெய்வன் இந்நிலை தானே. **2**

**541.** அந்நெறி இந்நெறி என்னாதே அட்டாங்கந்
தன்னெறி சென்று சமாதியி லேநின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்
புன்னெறி ஆகத்திற் போக்கில்லை யாகுமே. **3**

---

*முதலியவைகளுடன் யோக நெறியையும் கூறுவேன். 'இயம நியமத்தால்' என உருபு விரிக்க.*

*குறிப்புரை :-* *'உத்தரம் பராசக்தி எய்த, பூருவம் கவசம் நியாசங்கள் முத்திரை இந்நெறி எய்த உரைசெய்வன்' எனக் கூட்டுக. ஞானமாவது திருவருளே யாதலின், ''பராசக்தி'' என்றார். 'முத்திரையோடு' என உருபு விரிக்க. "இந்நிலை" என்றது மேல் 'பிரச்சதம்' எனக்கூறிய யோகத்தை. நியாசம் - சிவத்தை நிலைபெறுத்தி தன் உடல் தன் உறுப்புக்களை சிவனுடையதாகச் செய்தல். அது கர நியாசம், அங்க நியாசம் என இருவகைப்படும். முத்திரை - அடையாளம்.*

*இதனால், சரியை கிரியை யோகங்களாகிய தவங்கள் ஞானத்திற்கு சாதனமாதல் கூறப்பட்டது.*

**541.** ***தெளிவுரை :-*** *'நாம் கொண்ட நெறி நன்றோ, இது வல்லாத பிறிதொரு நெறி நன்றோ' என்று ஐயுற்று அலமராது, எந்நெறிக்கும் வேண்டப்படுவதாகிய அட்டாங்கத்தை உடைய யோக நெறியிலே சென்று, உம்மால் விரும்பப்படுகின்ற பொருளிலே உள்ளம் ஒடுங்குங்கள். இவ்வாறு ஒடுங்கும் நன்னெறியில் நிற்பவர்க்கு ஞானத்தை எளிதில் தலைப்படுதல் கூடும். பின்பு அந்த ஞானத்தின் பயனாகப் பிறவியாகிய இழி நெறியிற் செல்லுதல் இல்லையாம்.*

*குறிப்புரை :-* *யோகம் மெய்ந்நெறியாளர் பலர்க்கும் வேண்டப்படுவது ஆதலின், அவர் அனைவர்க்கும் பொதுவாயிற்று. புறத்துச் சென்று அலமந்த மனம் அவ்வலமரல் நீங்கி ஒருக்கம் உற்றபின், பொருளியல்புகள் எளிதில் உள்ளவாறு விளங்குமாகலின், "இந்நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகல் ஆம்" என்றார். "ஆம்" என்றது எளிதிற் கூடும் என்றவாறு. 'பிற நெறிகளால் பொருளியல்பு*

542. இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணாயா மம்பிரத்தி யாகாரம்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே. 4

---

*உள்ளவாறு விளங்குதல் அரிது' என்பதை விளக்கவே, 'இந்நெறி அந்நெறி என்னாது' என முதற்கண் கூறினார். 'போலும்' என்பது ''போன்ம்'' என நிற்றல்போல் ''நில்லும்'' என்பது உம்மையுள் உகரங்கெட, "நின்ம்" என நின்றது. 'நின்மின்' என்பது பாடமாயின், "இந்நன்னெறி" எனச் சுட்டு வருவிக்க. ஆகம் - உடம்பு.*

*இதனால், ஞானத்திற்குச் சிறந்த வழி யோகமாதல் கூறப்பட்டது.*

542. ***தெளிவுரை :-*** *அட்டாங்கம் (யோகத்தின் எட்டுறுப்புகள்) ஆவன, 'இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி' என்பன.*

***குறிப்புரை :-*** *"எண்ணிலா ஆதனம்" என்றதனால் 'ஆதனங்கள் பல' என்பதும், ''நயமுறும் பிரணாயாமம்'' என்றதனால், 'பிரணாயாமமே மனத்தின் அலமரலாகிய இன்பத்தைத் தரும்' என்பதும், "சய மிகுதாரணை" என்றதனால், 'தாரணை கைவரப் பெற்றவரே மனத்தை அடக்குதலில் வெற்றிபெற்றவராவர்' என்பதும் பெறப்படும் நயம் - இன்பம். சயம் - வெற்றி. அயம் - குதிரை. அயம்உறும் - குதிரை அடங்கப்பெறுகின்ற. "குதிரை" என்பது, உவம ஆகுபெயராய் வேகம் மிக்க மனத்தைக் குறித்தல் யோகநூல் வழக்கு. குதிரைக்கு வடமொழியில் "வாசி" என்பது பெயராகையால் அஃது அடங்குதற் பொருட்டுச் செய்யப்படும் யோகம் "வாசி யோகம்" எனப்படுகின்றது.*

*இதனால், யோகத்தின் எண்வகை உறுப்புகளும் தொகுத்து உணர்த்தப்பட்டன. இவை எட்டும் இங்குக் கூறிய முறையானே முதற்படி, இரண்டாம்படி முதலியவாய் அமையும் என்பது உணர்ந்து கொள்க.*

## 2. இயமம்

**543.** **கொல்லான்பொய் கூறான் களவிலான் எண்குணன்**
**நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய**
**வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கட்காமம்**
**இல்லான் நியமத் திடையில்நின்றானே. 1**

---

*இனி, மேல் தொகுத்துணர்த்திய உறுப்புகளை முறையானே வகுத்துணர்த்துவான் புகுந்து, முதற்கண் இயம யோகத்தினை ஒரு திருமந்திரத்தால் உணர்த்துகின்றார்.*

*பதிப்புகளில் இங்குக் காணப்படும். "எழுந்து நீர் பெய்யினும்" என்னும் திருமந்திரம் முன்பே (பா.11) வந்துள்ளது.*

**543.** *தெளிவுரை :-* கொல்லாமை, பொய்யாமை, விருப்பு வெறுப்புகள் இன்மை, கரவாமை, மாசின்மை, கள்ளுண்ணாமை, காமம் இன்மை என்னும் பத்தனையும் முற்ற உடையவனே இயமயோகம் கைவரப் பெற்றவனாவான்.

*குறிப்புரை :-* எனவே, 'யோகியாக வேண்டுவான், முதற்கண் இந்நிலையை முற்றுப்பெறுதல் வேண்டும்' என்பதும், 'முற்றப் பெறாத வழி, முற்றுப்பெறுமாற்றின் முயலுதல் வேண்டும்' என்பதும் பெறப்பட்டன. செய்யுட்கு ஏற்பச் சிலவற்றை உடம்பாட்டு முகத்தாற் கூறினாரேனும், எல்லாவற்றையும் எதிர்மறையாகக் கூறுதலே கருத்தாம்; என்னை, 'இயமம்' என்பதற்கு 'விலக்கியன ஒழிதல்' என்பதே பொருளாதலின்.

ஒருயிரையும் கொல்லாதவனும் பொய் கூறாதவனும், திருடாதவனும், எண்ணத்தக்க குணங்களையுடையவனும், நல்லவனும், அடக்கமுடையவனும், நடவுநிற்றலை உடையவனும், எல்லார்க்கும் பகிர்ந்து மீதியைப் பின்பு தான் உண்பவனும், குற்றமற்றவனும், கள், காமம் என்ற இத்தீய குணமில்லாதவனும் ஆகிய இவ்விலக்கண முடையானே இயமத்தான் என்றவாறு.

கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, காமமின்மை, பொறையுடைமை, உறுதியுடைமை, தயை, நேர்மை, அளவறிந் துண்டல், தூய்மை இப்பத்தும் இயமமாம் என்று யோக நூல் கூறும்.

*இவற்றுட் கொல்லாமையாவது, மனம் வாக்கு காயங்களாற் பிறவுயிர்களைக் கொலை செய்யாமை, வருத்தாமையுமாம். அது, தன்னாற் செய்யப்படுவது, செய்விக்கப்படுவது, மற்றவன் செய்யத் தான் ஒத்து மகிழ்வது என மூன்று வகைப்படும். இவற்றை வடநூலார் முறையே கிருதம், காரிதம், அனுமோதி தம் என்பர். இவை ஒவ்வொன்றும் விருப்பையடியாகக் கொண்டதும், வெறுப்பை யடியாகக் கொண்டதும், அறியாமையையடியாகக் கொண்டதும் என மூவகைப்படும். இவற்றின் விரிவை யோக நூல்களுட் காண்க.*

*வாய், கண் முதலிய பொறிகளாற் கண்டவற்றை அப்படியே அறிவித்தலாம் இறைவனே உண்மைப் பொருள்; ஏனையவை யாவும் பொய்யென்னும் உறுதியும் வாய்மையாம் என்பர், இதன் பயன் விண்ணுலகையும் வழங்கும் வாக்குவன்மை.*

*கள்ளாமை, தன்னுடையது அல்லாத மணி, பொன், நெல், துரும்பு முதலானவற்றை எக்காரணம் பற்றியும் கவர எண்ணாதிருத்தல், சிதசித்தாகிய உயிரிடத்துச் சடந்தன்மை ஏற்றாதிருத்தலுமாம் என்பர் தத்துவ ஞானியர் இதன் பயன் உயர்ந்த மணிகளைப் பெறுதல்.*

*காமமின்மை, தன் மனைவியை விதித்த காலத்து புணர்ந்து பிறர் மனைவியரை எண்ணாதிருத்தல், இது எட்டு வகைப்படும். பெண்களை விருப்போடு எண்ணுதல், அவர்களைப் பற்றிப் பேசுதல், அவர்களுடன் விளையாடுதல், அவர்களை இடைவிடாது பார்த்தல், தனித்துப் பேசுதல், அடைய எண்ணுதல், உறுதி கோடல், செயலற்றுப் போதல் ஆகிய இவைகள் இல்லாமையாகிய எட்டுமாம். இறைவனிடத்து என்றும் நீங்காத மனமுடைமையும் என்பர். இதன் பயன், எல்லாவற்றையும் எண்ணியாங்கு இயற்றும் வன்மையடைதலாம்.*

*பொறை, பகைவர் முதலானோர் தமக்குத் தீங்கு செய்யினும் அவற்றைத் தாங்கும் பொறுமை. இதனாற் பயன் உடற்பற்று நீங்குதல்.*

*உறுதியுடைமை, செய்த தவத்தாலேயே சமசார பந்தம் நீங்கும்; வேறு விதத்தால் நீங்காது என்னும் உறுதி பெறுதல். யான் உயிர்; இறைவனை எய்துதற்குரியன் என்னும் உறுதியும் இதுவேயாம். இதனால் பயன் இச்சித்த பயனை எய்துதல்.*

*கருணையுடைமை, பிறவுயிரையும் தமது உயிர் போலப் பேணுதல், இது எல்லாரையும் வசப்படுத்தும்.*

## 3. நியமம்

544. ஆதியை வேதத்தின் அப்பொரு ளானைச்
சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்
பாதியுள் மன்னும் பராசக்தி யோடுடன்
நீதி யுணர்ந்து நியமத்த னாமே. 1

தூய்மை அருளூண் சுருக்கம் பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமம் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே.

---

*பொதுமை, பகை, நொதுமல், நண்பு, சுற்றம் ஆகிய எல்லாரிடத்தும் எப்போதும் சம்பாவனை செய்தல், இதனால் மன மலர்ச்சியுண்டாம்.*

*அளவான உணவு, அரைவயிறு உணவும், கால் வயிறு நீரும், கால்வயிறு காற்றுமாக உட்கொள்ளுதல், இதன் பயன் ஆரோக்கியம்.*

*தூய்மை, உள்ளும் புறமும் தூய்மையாக இருத்தல், இது அகத்தூய்மை, புறத்தூய்மையென இருவகைப்படும். அகத்தூய்மை ஞானசௌசம் என்றும் வழங்கப்பெறும், அகந்தூய்மை வாய்மையாதல் காணப்படும் என்ற வள்ளுவம் சிந்திக்க புறந்தூய்மையாவது நீரால் கழுவிக் கொள்வது. புறந்தூய்மை நீரானமையும் என்றமையும் காண்க.*

*இனி, நியமத்தினை இரண்டு திருமந்திரங்களால் உணர்த்துகின்றார். நியமம் - ஒழியாது மேற்கொள்ளுதல். ஒழிதற் பொருட்டாய "யமம்" என்பது 'நி' என்னும் இடைச்சொற் பெற்று "ஒழியாமை" என்னும் பொருளதாம்.*

***544. தெளிவுரை :-** சிவபெருமானைச் சத்தியோடு உடனாய் நிற்பவனாக உணர்பவனே நியமித்தல் நிற்க வல்லவனாவான்.*

***குறிப்புரை :-** 'சிவபெருமானது ஒறுக்கும் ஆற்றலையும், அருளும் ஆற்றலையும் உணர்பவனே இயம நியமங்களில் நிற்க வல்லவனாவான். ஆயினும், இயமத்தையும் அன்பின் வழிக்கொள்ளுதலே சிறப்பு என்பார் இதனை இங்குக் கூறினார். இயமம் இறைவனது ஒறுப்பிற்கு அஞ்சும் அச்சத்தினாலும், நியமம் அவனது அருளை விரும்பும் அன்பினாலும் ஆகற்பாலனவாதலை அறிந்துகொள்க.*

**545.** தவம்செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்
சிவன்றன் விரதமே, சித்தாந்தக் கேள்வி,
மகம்சிவ பூசைஒண் மதிசொல் ஈரைந்து
நிவம்பல செய்யின் நியமத்த னாமே. 2

---

*“அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்*
*நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ” - தி.5 ப.23 பா.9*

*என அப்பரும் அருளிச்செய்தார்.*

*வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்*
*வஞ்சித்தோம் என்று மகிழன்மின் - வஞ்சித்த*
*எங்கும் உளன் ஒருவன் காணுங்கொல் என்றஞ்சி*
*அங்கங் குலைவ தறிவு.*

*என்றார் குமரகுருபரஅடிகள். அங்கி - அக்கினியாய் நிற்பவன் நீதி நடுவுநிலைமை; அஃதாவது பொல்லார்க்கும், நல்லார்க்கும் தெறலும், அளியும் அவரவர் செயலுக்குத் தக்காங்கு செய்தல். உடன் நீதி - உடனாய் நின்று செய்யும் நீதி. “அளி, தெறல் இரண்டும் கருணையே” என்றற்கு, பராசத்தியோடு உடனாய் நிற்றலை எடுத்தோதினார்.*

*இதனால், இயம நியமங்கள் வருமாறு கூறப்பட்டது.*

*இதன்பின் பதிப்புகளில் காணப்படும் “தூய்மை அருளூரன் சுருக்கம்” என்ற பாடல் இயமத்தையே கூறுதலானும், அதன் பொருள் மேலே, “கொல்லான் பொய் கூறான்” என இயமத்துள் கூறப்பட்டமை யானும், மூன்றாம் அடிப் பொருத்தமற்றதாகக் காண்கையிலும் அது பிறர் பாடலாதல் அறியப்படுகின்றது.*

**545. *தெளிவுரை :-* *தவம் முதலாக மதி ஈறாகச் சொல்லப்பட்ட பத்தினையும் நியமாகக் கொண்டவன் நியம யோகியாவான்.***

***குறிப்புரை :-* *தவம், நெறியப்பட்ட வாழ்க்கை. செபம், வாய்ப்புப் பெற்றுழி மந்திரங்களை மிகுதியாகக் கணித்தல். ஆத்திகம், நூல்களில் சொல்லப்படும் கடவுள், இருவினை, மறுபிறப்பு, துறக்க நிரையங்கள் உள்ளன என உணரும் உணர்வு சந்தோடம் ‘உள்ளது போதும்’ என்னும் உள்ள நிறைவு. தானம், பொருளை நல்வழியில் ஈட்டி, உயர்ந்தோர்க்குக் கொடுத்தல். சிவன் விரதம், சிவனுக்குரிய சிறப்பு நாள்களில் தவச்செயல்களை மிகச் செய்தல். சித்தாந்தக் கேள்வி,***

*சிவாகமங்களில் ஞானபாதப் பொருளைக் கேட்டல். மகம், இயன்ற பொழுது தீ வேட்டலைச் செய்தலும், செய்வித்தலும். சிவபூஜை, சிவலிங்க வழிபாட்டினை இன்றியமையாததாகக் கொண்டு, விடாது செய்து வருதல், ஒண்மதி, நற்பண்பு, நியமமும் இவ்வாறு "பத்து" என வரையறுத்து ஓதப்படினும், இவை போல்வன பிறவும் கொள்ளப்படும் என்க. நிவம் - நிபந்தம். மகம், உயிரெதுகை.*

*இதனால், நியமம் சிறப்பாகப் பத்தாதல் கூறப்பட்டது. இதனை,*

*பெற்றதற் குவத்தல் பிழம்புநனி வெறுத்தல்*
*கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை*
*பூசனைப் பெரும்பயன் ஆசாற் களித்தலொடு*
*நயனுடை மரபின் நியமம் ஐந்தே.*

*என்றார் நச்சினார்க்கினியர்.*

## 4. ஆதனம் (ஆசனம்)

546. பங்கய மாதி பரந்தபல் ஆதனம்
அங்குள வாம்இரு நாலும் அவற்றினுள்
சொங்கில்லை யாகச் சுவத்தி யெனமிகத்
தங்க இருப்பத் தலைவனு மாமே. 1

547. ஓரணை யப்பதம் ஊருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே. 2

---

*இனி முறையானே ஆதனத்தை (இருக்கையை) ஆறு திருமந்திரங்களால் வகுத்துணர்த்துகின்றார். ஆதனமாவது யோகம் புரிவதற்குக் கை, கால், உடல் உறுப்புகளைத் தக்கவாறு அமைத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் முறை.*

**546. *தெளிவுரை :-*** *"பதுமம்" முதலியவற்றின் வடிவத்தால் அவ்வப் பெயரைப் பெற்று பரந்து நிற்கும் ஆதனங்கள் யோக முறையில் பல உள்ளன. அவற்றுள் எட்டு ஆதனங்கள் தாழ்வில்லாது உயர்ந்தனவாய் நிற்க, அவற்றுள்ளும், "சுவத்தி" ஆதனத்தில் ஒருவன் இருப்பனாயின் யோகத்தில் மிக்கவனாவான். சுவத்திகாசனமாவது முழந்தாளுக்கு தொடைக்கும் நடுவில் இரண்டு பாதங்களையும் வைத்து உடல் நிமிர்ந்து செவ்வையாக உட்கார்ந்திருப்பது. இவ்வாசனம் தியானத்திற்கும், பல்வேறு உடற்பயிற்சிகளுக்கும் ஏற்றது.*

***குறிப்புரை :-*** *சுவத்திகம் - எது சரிப்படுகிறதோ அது. சுகமானது. எனவே "சுவத்தி ஆதனம் ஏனை எல்லாவற்றினும் மேலானது" என்பது பெறப்பட்டது. பங்கயம் - பதுமம்; தாமரை 'அவற்றுள் இருநாலும் சொங்கில்லை' எனக்கூட்டுக. சொங்கு - இழிவு. "இழிவில்லை" என்றது "உயர்ந்தன - உத்தமம்" என்றவாறு. உத்தமாதனங்களை வருகின்ற திருமந்திரங்களுட் காண்க.*

*இதனால், ஆதனங்களின் இயல்பு தொகுத்துக் கூறப்பட்டது.*

**547. *தெளிவுரை :-*** *பாதங்கள் துடைகளின்மேல் ஒன்றாகப் பொருந்துமாறு ஏற்றி, பின் நன்றாக வலித்து இழுத்து அவை*

*துடைகளின் புறம் நிற்குமாறு செய்து, அப்பாதங்களின்மேலே இரு கைகளையும் மலர வைப்பின், அந்நிலை தாமரை மலர் வடிவிற்றாய், "பருமாதனம்" (பத்மாசனம்) என்று சொல்லுதலைப் பெறும்.*

*அஃதாவது வலது தொடையின்மேல் இடது பாதத்தையும் இடது தொடையின் வலது பாதத்தையும் உள்ளங்கால் மலர நன்றாக இழுத்துப் பொருத்தி, அதன் மேல் இரு கைகளையும் மலர்த்தி வைப்பது பதுமாசனமாம் என்பது கருத்து.*

*ஓரணைப்பதம் - ஒருபக்கம் அணைந்த காலை ஆரவலித்த - மிக இழுத்து, இரண்டு புறங்கால்களையும் முயற்சியால் தொடையின் மேல் சேர்த்து, ஒரு தொடையின் மத்தியிலும் இரண்டு கைகளையும் ஒன்றன்மேல் ஒன்றாக மலர்ந்த பாவனையில் வைத்து, மூக்கு நுனியில் பார்வையை அசைவற நிறுத்தி, முன் பற்களின் இரு புறத்திலும் நாவை வளைத்து நிறுத்தி, மார்பில் மோவாய் கட்டையை வைத்து வாயுவை எழுப்புதல் பதுமாசனமாம் என்று யோகநூல் கூறும். மந்திரத்திற்கும் அதற்கும் பல ஒற்றுமைகளிருத்தலை அறிக.*

*இவ்வாசனத்தில் மச்சேந்திர பதுமாசனம் என்றும் முக்த அல்ல பத்த பதுமாசனம் என்றும் இருவகையுண்டு. பத்தபதுமாசனமாவது, முற்கூறியவாறு பதுமாசனத்தைச் செய்து, இரண்டு கைகளையும் சம்புடமாகச் சேர்த்து, மடியில் வைத்துக் கொள்ளுதலாம்.*

***குறிப்புரை :-** ஆதனங்களில் விலக்குண்ணாத இடங்களில், "உடலை நேரே நிமிர நிறுத்தி, இருகண்களாலும் மூக்கு நுனியை நோக்கி நிற்றல்" என்பது பொதுவாகச் சொல்லுதலை உடைத்து, இதனுள், உடலை நேராக நிறுத்தலைப் பத்திராதனத்திலும், மூக்கு நுனியை நோக்குதலைச் சிங்காதனத்திலும் எடுத்தோதுவர். ஓர் அணைய - ஒன்றாகச் சேர, ஊரு - துடை. "அழகுற" என்றது, "மலர" என்றவாறு "தன்" என்றது, பாதத்தை, "அதனை, தன்" என்பன பன்மை ஒருமை மயக்கம்.*

***இதனால், உத்தமாதனங்கள் எட்டனுள் பதுமானத்தின் இயல்பு கூறப்பட்டது.***

**548. *தெளிவுரை :-*** *"பதுமானத்தைச் சிறிது வேறுபடுக்கப் பத்திராதனமாம்" என்கின்றார். பத்திரம் - வாள்.*

*பதுமாதனத்தினின்றும், வலக்காலை எடுத்து இடமுழந்தாள் மேலாக ஊன்றி, இரண்டு கைகளையும் அவ்வலக்கால் முழந்தாளின்மேல் நீட்டி, உடலை நேர் நிற்க நிறுத்தினால், அந்நிலை*

**548.** துரிசல் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து
அரிய முழந்தாளில் அங்கையை நீட்டி
உருசி யொடும்உடல் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே. 3

**549.** ஒக்க அடியினை யூருவில் ஏறிட்டு
முக்கி யுடலை முழங்கை தனில்ஏற்றித்
தொக்க அறிந்து துளங்கா திருந்திடிற்
குக்குட ஆசனங் கொள்ளலு மாமே. 4

---

*வாளின் வடிவிற்றாய், 'பத்திராதனம்' என்னும் பெயரைப் பெறும்.*

*குற்றமற்ற வலக்காலை விளங்கும்படி மேல் வைத்து, முழந்தாளின் மேல் கைகளை நீட்டி தளர்ந்த உடலைச் செவ்வையாக இருத்தி நன்மையைப் பெறுவது பத்திராசனமாம் என்றவாறு. யோக நூல்கள் பீஜத்தின் கீழ்ப்பாகமாகிய நரம்பினது இரு பக்கங்களிலும் காற்பரடுகளைச் சேர்த்து அஃதாவது, இடது புறத்தில் இடது பரட்டையும் வலது புறத்தில் வலது பரட்டையும் சேர்த்து இரண்டு பாதங்களையும் இறுகப் பிடித்துக் கொண்டிருப்பது என்னும் இம்முறை கோரக்கரால் பயிலப்பட்டமையால் கோராக்காசனம் எனவும் கூறப்படும். திருமூலர் முறைக்கும் இதற்கும் உள்ள வேறுபாடு ஊன்றி அறியத்தக்கது.*

***குறிப்புரை :-** "அது பத்திராசனப் பரிசு பெறும்" என மாற்றுக. பரிசு - தன்மை என்றது. பெயரை. இதனைப் பிற நூல்கள் பிறவாறும் கூறும்.*

*இதனால், பத்திராதனத்தின் (பத்திராசனத்தின்) இயல்பு கூறப்பட்டது.*

***549. தெளிவுரை :-** "பதுமாதனத்தை வேறொரு வகையாக மாற்றக் குக்குடாதனமாம்" என்கின்றார். குக்குடம் - கோழி.*

*பதுமாதனத்தில் மேல்வைக்கப்பட்ட கைகளை உள்ளே விடுத்து நிலத்தில் அழுந்த ஊன்றி, அவ்வாறே முயன்று முழங் கையளவாக மேலெழுந்து சுமைமுழுதும் கைகளில் நிற்றலை அறிந்து வீழாது நின்றால், அந்நிலை கோழி வடிவிற்றாய், "குக்குடாதனம்" எனக் கொள்ளத்தகுவதாகும்.*

550. பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி
ஆதர வோடும்வாய் அங்காந் தழகுறக்
கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமெனச் செப்புமே. 5

---

*குறிப்புரை :- முதல் அடி பதுமாதனத்தின் பகுதியைக் குறித்தது, "கொள்ளலும்" என்ற உம்மை சிறப்பு. பிருட்டங்கள் குதிகால்களின் மேல் நிற்க. கால் விரல்களை நிலத்தில் ஊன்றிக் குதிகால்கள் மேல்நிற்க எழுந்து முழங்கால்களின் மேல் கைகளை வைத்து எளிதின் இருத்தலும் ஒருவகைக் குக்குடாதனமாம். எனினும், சிறப்புடையதனையே கூறினார் என்க.*

*இதனால், குக்குடாதனத்தின் இயல்பு கூறப்பட்டது.*

**550. *தெளிவுரை :-*** *''குக்குடாதனத்தை வேறுபடுக்கச் சிங்காதனமாம்" என்கின்றார்.*

*இருகைகளையும் இருமுழந்தாள்களின் இடையே புகச் செலுத்தி இருபாதங்களிலும் படுமாறு நீட்டி, வாயைத் திறந்து கொண்டு, இரு கண்களும் மூக்கு நுனியை நோக்க இருக்கின், அவ் இருக்கை சிங்க வடிவிற்றாய், 'சிங்காதனம்' என்று பெயர் சொல்லப்படும்.*

*பாதநுனிகளைப் பூமியிலூன்றி முழங்காலில் கைகளை நீட்டி, அன்போடு வாயைப் பிளந்து கொண்டு அழகு பொருந்தக் குற்றமற்ற கண்களை மூக்கு நுனியிலே வைத்திருப்பது புகழமைந்த சிம்மாசனம் என்று புகலப்படும் என்றவாறு.*

*இதன் விளக்கத்தைப் பீஜத்தின் கீழ்நரம்பு இரண்டிடத்திலும் காற்பரட்டை ஊன்றி உட்கார்ந்து, முழங்கையை முழங்காலிலே வைத்து, விரல்களை விரித்து, நாசியைப் பார்த்திருத்தல் என்னும் யோக நூல் கருத்தால் உணர்க.*

***குறிப்புரை :-*** *'கோடி' என்பது குறுகிநின்றது. செப்பும் - செய்யப்படும். இதனால், சிங்காதனத்தின் இயல்பு கூறப்பட்டது.*

*பதுமாதனம் முதலியவற்றை முறையானே கூறிவந்த நாயனார் குன்றக்கூறார் ஆதலால், 'கோமுகாதனம், வீராதனம், சுகாதனம், சுவத்திகாதனம்' என்பவற்றையும் கூறிய திருமந்திரங்கள் கிடையாதொழிந்தன என்றே கொள்க. இங்ஙனமாகவே அவற்றது*

**551.** பத்திரங் கோமுகம் பங்கயம் கேசரி
சொத்திரம் வீரம் சுகாதனம் ஒரேழும்
உத்தம மாம்முது ஆசனம் எட்டெட்டுப்
பத்தொடு நூறு பல ஆசனமே. **6**

---

*இயல்பு பிற நூல்களின் வழிக் கொள்ளப்படுவனவாம்.*

**551. தெளிவுரை :-** *'பத்திரம், கோமுகம், பதுமம், சிங்கம், திரம், வீரம், சுகம்' எனப் பெயர் பெற்ற ஏழ் ஆதனங்களுக்கு உத்தம ஆதனங்களாம். அவற்றோடு உத்தமோத்தம ஆதனமாக முதலிற் கூறப்பட்ட சுவத்திகாதனமும் கூடச் சிறப்புடைய ஆதனங்கள் எட்டாகும். ஆதனங்களை இவ்வாறு 'எட்டு' என்பதேயன்றி, 'பத்து' என்றும் 'நூறு' என்றும் மற்றும் பலவாகவும் கூறுவர்.*

*பத்மாசனம்*



**வஜ்ராசனம்**



**சிரசாசனம்**



**உட்கடாசனம்**



**பக்ஷிமோத்தாசனம்**



*குறிப்புரை :- 'அவற்றுள் மிகச் சிறப்புடைய எட்டு ஆதனங்களையே யான் கூறினேன்' என்றவாறு. எனவே, இவையே சிவயோகத்திற்கு அமையும் என்பதும் 'வேண்டுழிச் சிறுபான்மை பிறவும் கொள்ளத்தகும்' என்பது பெறப்பட்டன. சொல்லப்பட்ட ஆதனங்களுள் குக்குடாதனத்தை இங்குக் கூறாது, சொல்லப்படாத 'திரம்' என்பதனைக் கூறியவாற்றால் 'திராசனம்' என்பது குக்குடாதனமே யாதல் பெறுதும்.*

*இங்கு எடுத்துச் சொல்லப்படாத ஆதனங்களுள் சிறப்பு உடையன சில வருமாறு:-*

*மச்சம் (மீன்), கூர்மம் (ஆமை), மகரம் (முதலை), தனுசு (வில்), பச்சிமோத்தானம் (பின்பாகம் மேல் எழுதல்), மயூரம் (மயில்), மண்டூகம் (தவளை), மற்கடம் (குரங்கு), ஏகபாதம் (ஒற்றைக்கால்), சிரசு (தலை), அலம் (கலப்பை), நௌகம் (ஓடம்), சருவாங்கம் (முழுதுடல்), சவம் (பிணம்) முதலியன மற்றும் இவற்றைப் பலவாகச் சிறிது சிறிது வேறுபடுத்துக் காட்டுவர்; வேண்டுவோர் அடயோக தீபிகை, பதஞ்சலி சூத்திரம் முதலிய யோக நூல்களுள்ளும், சில உபநிடதங்களினு கண்டுகொள்க.*

*முது ஆதனம் - முன்னே சொல்லப்பட்ட ஆதனம்; சுவத்திகாதனம். 'முது ஆதனத்தோடு எட்டு' என உருபு விரித்து முடிக்க. இனி, 'எட்டு, எட்டு, பத்து, நூறு' எனக் கூறப்பட்ட தொகைகளை ஒருங்கு கூட்டி, ஆதனங்கள் 'நூற்றிருபத்தாறு' என வரையறை காண்பாரும் உளர்.*

1. சுவஸ்திகாசனம்
2. கோமுகாசனம்
3. வீராசனம்
4. கூர்மாசனம்
5. குக்குடாசனம்
6. உத்தானகூர்மாசனம்
7. தனுராசனம்
8. மச்சேந்திராசனம்
9. பச்சிமதானாசனம்
10. மயூராசனம்
11. சவாசனம்
12. மச்சேந்திரசித்தாசனம்
13. சித்தாசனம்
14. வச்சிராசனம்
15. பதுமாசனம்
16. மச்சேந்திரபதுமாசனம்
17. முக்தபதுமாசனம்
18. சிம்மாசனம்
19. பத்திராசனம்
20. வல்லரியாசனம்
21. குப்சிகாசனம்
22. பாரிகவோபாதாசனம்
23. யோகாசனம்
24. கபாலாசனம்
25. டிட்டிபாசனம்
26. பூர்வதானாசனம்

27. அர்ப்பகாசனம்
28. காமதகனாசனம்
30. கேசரியாசனம்
31. கோபகிரியாசனம்
32. பரியங்காசனம்
33. பத்தாசனம்
34. லௌல்யாசனம்
35. பத்தயோனியாசனம்
36. பேகனாசனம்
37. மகாபேகனாசனம்
38. பிரானாசனம்
39. அபானாசனம்
40. சமானாசனம்
41. பைரவாசனம்
42. மண்டூகாசனம்
43. மர்க்கடாசனம்
44. ஏகபாதலாசனம்
45. பணிந்திராசனம்
46. யோகநித்திராசனம்
47. சுகாசனம்
48. தண்டாசனம்
49. சக்கிராசனம்
50. வர்த்துலாசனம்
51. அர்த்தாசனம்
52. பர்வதாசனம்
53. யோனிமுத்திராசனம்
54. திருடாசனம்
55. பவனமுத்தாசனம்
56. வாமபாதபவன முத்தாசனம்
57. தட்சிணாபாதமுக்தாசனம்
58. தீராசனம்
59. சுவாசகமனாசனம்
60. வாதாயணாயனாசனம்
61. அர்த்தபாதாசனம்
62. ஊர்த்துவபத்மாசனம்
63. பூர்ணாபாதாசனம்
64. தட்சிணாசனம்
65. அத்துவாசனம்
66. வாமதட்சிணபாதாசனம்
67. திவிபாதசிரசாசனம்
68. விருட்சாசனம்
69. வாமபாதசிராசனம்
70. தட்சிணாபாதசிரசாசனம்
71. தாடாசனம்
72. ஊர்த்துவதனுராசனம்
73. வாமசித்தாசனம்
74. விவேகாசனம்
75. தர்காசனம்
76. நிதவாசாசனம்
77. அர்த்தகூர்மாசனம்
78. கருடாசனம்
79. திரிகோணாசனம்
80. பிரார்த்தனாசனம்
81. பாதத்திரிகோணாசனம்
82. பாதத்திரிகோணாசனம்
83. அஸ்தபயங்கராசனம்
84. அங்குஷ்டாசனம்
85. உத்தகடாசனம்
86. அர்த்தபாதாசனம்
87. அஸ்தபுஜாசனம்
88. வாமக்கிராசனம்
89. ஜாந்த்வாசனம்
90. சாகாசனம்
91. திரிஸ்தம்பாசனம்
92. பாதஅபானகமனாசனம்
93. அசத்சதுஷ்கோணாசனம்
94. கூர்மாசனம்
95. கர்ப்பாசனம்

96. ஏகபாதவிருட்சாசனம்
97. முத்தஅஸ்தவிருட்சாசனம்
98. துவிபாதபாரிகவாசனம்
99. கந்தபிடாசனம்
100. பிரௌடபாதாசனம்
101. உபாதானாசன
102. ஊர்த்துவ சம்யுக்த பாதாசனம்
103. அர்த்தசலாசனம்
104. வேறு அபனாசனம்
105. யோனியாசனம்
106. வேறுபர்வதாசனம்
107. பர்வதாசனம்
108. சலபாசனம்
109. கோகிலாசனம்
110. லோலாசனம்
111. உத்தமாங்காசனம்
112. உட்டிராசனம்
113. அம்சாசனம்
114. வேறுபிராணசனம்
115. கார்முகாசனம்
116. ஆனந்தமந்திராசனம்
117. கம்புநாசனம்
118. கிரந்திபேதனாசனம்
119. சமாசனம்
120. புஜாங்காசனம்
121. பலனாசனம்
122. மச்சாசனம்
123. மகராசனம்
124. விருஷாசனம்
125. சங்கடாசனம்
126. சர்வாங்காசனம்

## 5. பிராணாயாமம்

552. ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்கும் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே. 1

553. ஆரியன் அல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவின் அருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே. 2

*இனிப் பிராணாயாமத்தினைப் பதினான்கு திருமந்திரங்களான் உணர்த்துகின்றார். பிராணாயாமம் - மூச்சை அடக்கல் அல்லது கட்டுப்படுத்துதல். பிராணன் - மூச்சுக்காற்று. ஆயாமம் - அடக்குதல்.*

552. ***தெளிவுரை :-*** *ஐவர் பணியாளர்க்குத் தலைவன் ஒருவன்; அவனே அவ்வூர்க்கும் தலைவன். அவன், தான் நலன் அடைதற் பொருட்டுத் தனதாகக் கொண்டு ஏறி உலாவுகின்ற குதிரை ஒன்று உண்டு. அது வல்லார்க்கு அடங்கிப் பணிசெய்யும்; மாட்டார்க்கு அடங்காது குதித்து அவரைக் கீழே தள்ளிவிட்டு ஓடிவிடும்.*

***குறிப்புரை :-*** *குதிரை - பிராண வாயு. 'ஆகவே, அதனை அடக்க வல்லராதலைப் பயிலுதலே ஆண்மையுடையோர்க்கு அழகாகும்' என்பது குறிப்பெச்சம். ஐவர் - செய்கருவிகள் (பஞ்சேந்திரியங்கள்). அவ்வூர் என்றது உடலை உணர்த்திற்று. உடலுக்குத் தலைவன் உயிர்.*

*இத்திருமந்திரம் பிசிச் செய்யுள். இதனை, 'ஐவர், ஐம்பொறிகள்; நாயகன்; உயிர்க்கிழவன்; ஊர், ஐம்பொறியும் தங்கியுள்ள உடம்பு; குதிரை பிராணவாயு; துள்ளி விழுத்தல், வாழ்நாள் முடிவில் அவரறியாதவாறு விட்டு நீங்குதல்' என விடுத்துக் கண்டுகொள்க. "மெய்யர், பொய்யர்" என்பன வன்மை மென்மை பற்றி வந்தன. 'பொய்யரை வீழ்த்திடும்' எனவே, 'மெய்யரை வீழ்த்தாது செல்லும்' என்பது பட்டு, மெய்யர்க்கு வாழ்நாள் நெடிது செல்லுதலும், அவர் விடுத்து நீக்க நீங்குதலும் உளவாதலை உணர்த்தி நிற்கும்.*

*இதனால், பிராணாயாமம் செய்வார் மக்களுடம்பை நெடிது நிறுத்திப் பயனடைதல் கூறப்பட்டது.*

553. ***தெளிவுரை :-*** *எல்லா மக்களிடத்தும் "நல்லன்" என்றும் "அல்லன்" என்றும் இரண்டு குதிரைகள் உள்ளன. அவைகளைக்*

554. புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டாற்;
கள்ளுண்ண வேண்டா; தானே களிதரும்;
துள்ளி நடப்பிற்கும் சோம்பு தவிர்ப்பிக்கும்
உள்ளது சொன்னோம் உணர்வுடை யோர்க்கே. 3

---

*கடிவாளம் இட்டு அடக்குதற்குரிய சூழ்ச்சியை அறிகின்றவர் அவருள் ஒருவரும் இல்லை. அறிவுத் தலைவனாகிய குருவின் அருளால் அச்சூழ்ச்சியை அறிந்து அதன்வழி அடக்கினால், அக்குதிரைகள் இரண்டும் அடங்குவனவாம்.*

***குறிப்புரை :-*** *விரகு - உபாயம். அஃதாவது இவை இத்துணை மாத்திரையினவாக இருத்தல் வேண்டும் என்பதும், அவற்றைப் பயிலும் முறையும். கூரிய - நுண்ணிய, நாதனே குருவாக வருதலின் நாதன் குருவின் என இயைத்துக் கூறினார், வாரிப் பிடிக்க - இரண்டு குதிரைகளையும் சேர்த்துப் படிக்க அங்ஙனம் சேர்த்துப் படித்தால் இடநாசி வலநாசிகளின் வழியாக இயங்கும் இயக்கம் தடைப்பட்டுச் சுழுமுனை திறக்கும் அப்போது இரண்டையும் பிடித்தது போலாகும் என்பது கருத்து. வசப்படுதல் - போக்குவரவற்று நிலைத்தல். "ஆரியன்" என்றது 'நல்லன்' என்னும் பொருளது. "ஆரியன், அல்லன் என்பன" இயற்பெயர்த் தன்மையவாய் விரவி, அஃறிணைக்கண் வந்தன. மேல் "குதிரை ஒன்று உண்டு" என்று கூறி இங்கு "குதிரை இரண்டுள" என்றது, 'இடவகையால் இரண்டு' என்னும் குறிப்பினதேயாதலின், மாறு கொள்ளாது என்க. எனவே, 'ஒன்று' எனப்பட்ட பிராணவாயு, 'இடகலை, பிங்கலை' என்னும் இரண்டு நாடிகளின் வழி இரண்டாய் இயங்கும்' என்பது கூறப்பட்டதாம். இடகலை நாடி, வலக்கால் பெருவிரலினின்று தொடங்கி மேலேறிப் படரும், பிங்கலை நாடி இடக்கால் பெருவிரலினின்று தொடங்கி மேலேறிப் படரும்; இவை இரண்டும் கொப்பூழில் பிணைந்து இடைகலை இடப்பக்கமாகவும், பிங்கலை வலப்பக்கமாகவும் மாறி, முதுகு, பிடர், தலை வழியாகச் சென்று, முறையே மூக்கின் இடத்துளை, வலத்துளைகளில் முடியும். அதனால் இரு நாடிகளும் பிணையும் இடமாகிய உந்தியில் (கொப்பூழில்) மூக்கின் வழியே அந்நாடிகளின்வழி வந்துநின்ற காற்று, மீளவும் அவற்றின் வழி வெளிச்செல்லும். அதனால், பிராணவாயு ஒன்றே இரண்டாகச் சொல்லப்படுகின்றது என்க. கடிவாளம், உயிர்க்கிழவனது ஆற்றல் அதனை வீசி அக்குதிரைகளை அடக்க வேண்டும் என்றார். அது தன்னை முறையறிந்து செய்ய வேண்டுதலின், "அறிவார் இல்லை" எனவும், "குருவின் அருளால் அறிந்து பிடிக்க" எனவும் கூறினார். "கூரிய" என்றதில், "கூர்ப்பது அறிவு" என்க. இனி,*

**555.** பிராணன் மனத்தொடும் பேரா தடங்கிப்
பிராணன் இருக்கிற் பிறப்பிறப் பில்லை
பிராணன் மடைமாறிப் பேச்சறி வித்துப்
பிராணன் அடைபேறு பெற்றுண் டீரே. **4**

---

*'அம்முறைதான் அசபா மந்திரத்தால் ஆவது' என்பதை நான்காந் தந்திரத்துட் கூறுவார். இதனுள், 'வீசி' என்பது உயிரெதுகை.*

*இதனால், 'பிராணாயாமம் செய்யும் முறையைக் குருவருளால் அறிந்து செய்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**554.** *தெளிவுரை :-* பறவையினும் விரைய ஓடுகின்ற பிராண னாகிய அக்குதிரையின்மேல் ஏறிக்கொண்டால், களிப்பிற்கு வேறு கள்ளுண்ண வேண்டுவதில்லை; அது தானே மிக்க களிப்பைத் தரும்.

அக்களிப்பினாலே துள்ளி நடக்கச் செய்யும்; மனமகிழ்வும், சுறுசுறுப்பும், வன்மையுமுண்டாம்; சோம்பலை நீக்கச் செய்யும்; இவ்வுண்மையை, நாம் சொல்லியவாறே உணரவல்லவர்க்கே சொன்னோம். பிராணாயாமத்தின் பயனை உணர்த்துகிறார்.

*குறிப்புரை :-* மேற்கொள்ளுதல், ஏறிச்செல்லுதல். அஃது இங்கு அடக்கி ஆளுதலைக் குறித்தது. உடலின் உள்ளுறுப்புகள் யாவும் - சிறப்பாக இருதயம் - நன்கு செயற்படுதலும், படாமையுமே உடலின் வலிமைக்கும், வலிமை இன்மைக்கும் காரணம். அவ்வுறுப்புக்களின் நன்மை, குருதி ஓட்டத்தின் தன்மையைச் சார்ந்தது. குருதி ஓட்டம் மூச்சுக் காற்றின் இயக்கத்தை ஒட்டியது. ஆகவே, அவ் இயக்கத்தை வழிப்படுத்தினால், உடல் வலிமை பெற்று, உள்ளமும் கிளர்ச்சி அடைவதாம்.

இதனால், பிராணாயாமம் உள்ளக் கிளர்ச்சியைத் தருதல் கூறப்பட்டது.

**555.** *தெளிவுரை :-* பிராண வாயுவால் கிளர்ச்சியுற்று ஓடும் இயல்புடைய மனத்தை உடன்கொண்டு, அப்பிராண வாயு வெளியே ஓடாது உள்ளே அடங்கி இருக்குமாயின், பிறப்பு இறப்புக்கள் இல்லா தொழியும் ஆகவே, அந்தப் பிராண வாயுவை அதன் வழியினின்றும் மாற்றி வேறு வழியில் செல்லச் செலுத்தி, அதனால் மோனநிலையை எய்தி, பிராண வாயுவால் அடையத்தக்க பயனை அடைந்து இன்புற்றிருங்கள்.

*குறிப்புரை :-* மனம் செயற்பட்டுப் பயன் தருதற்பொருட்டு

**556.** ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பகம் அறுபத்து நால்அதில்
ஊறுதல் முப்பத் திரண்ட திரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே. **5**

---

*அமைந்ததே பிராண வாயுவாயினும், இங்கு நுதலிய பொருள் பிராண வாயு ஆதல் பற்றி அதனைத் தலைமைப் பொருளாக வைத்து, 'மனத் தொடும் அடங்கிப் பிராணன் பேராது இருக்கின்' என்றார். 'மனத் தொடும்' என்றதில் ஒடு, 'கைப்பொருளோடு வந்தான்' என்றாற்போல உடைமைப் பொருட்கண் வந்தது. எனவே, பிராணாயாமத்தால் மனம் அடங்குதலாகிய பயன் கூறப்பட்டதாம். வழியை 'மடை' என்றது ஒப்புமை வழக்கு.*

*பிராண வாயு உலாவும் வழி இட நாடி (இட மூக்கு) ஆகிய இடைகலையும், வல நாடி (வல மூக்கு) ஆகிய பிங்கலையும், நடு நாடி (முதுகுத்தண்டைச் சார்ந்துள்ள வழி) ஆகிய சுழுமுனையும் என மூன்று. அவற்றுள் பிராணவாயு இயல்பாக உலாவும் வழி இடைகலை பிங்கலைகளாம். அவைகளை மாற்றிச் சுழுமுனையில் செலுத்து தலையே, "மடை மாற்றி" என்றார். "நடை மாற்றி" என்னாது "மடை மாற்றி" என்றதனால், அதற்கு 'இடைகலை பிங்கலைகளுள் ஒன்றின் வழியாகவே விடுதலும் வாங்குதலும் செய்தல்' என உரைத்தல் கூடாமை அறிக. 'பேச்சறுதல்' என்பது 'மோனம்' என்பது குறித்தவாறு. உண்மை மோனம், வாய் வாளாமையோடு ஒழியாது மனம் அடங்குதலேயாம் என்க. உண்ணுதல் இங்கு துய்த்தல். இத்திருமந்திரம் சொற்பொருட் பின்வருநிலை.*

*இதனால், பிராணாயாமத்தால் மன அடக்கம் உளதாதல் கூறப்பட்டது.*

**556. தெளிவுரை :-** ***இது முதல் பிராணாயாமம் செய்யும்முறை கூறுகின்றார்.***

***(பிரணாயாமம், "பூரகம், கும்பகம், இரேசகம்" என்னும் மூன்று வகையினை உடையது அவற்றுள்) 'பூரகம்' என்பது வெளியே உள்ள தூயகாற்று உடலினுள் புகுதற்கு உரித்தாய செயல். (எனவே, உயிர்க்கிழவன் தனது முயற்சியால் அக்காற்றினை உள்ளாக இழுத்தலாம்) இதன் உயர்ந்த அளவு பதினாறு மாத்திரை. இஃது இடைநாடியால் இடமூக்கு வழியாகச் செய்யற்பாலது. "கும்பகம்" என்பது உள்ளே புகுந்த காற்று அங்கே அடங்கி நிற்றற்கு உரித்தாய செயல். (எனவே, அங்கே நில்லாது ஓடுகின்ற அதனை அங்ஙனம் ஓட***

*வொட்டாது தடுத்து நிறுத்தலாம்) இதன் உயர்ந்த அளவு அறுபத்து நான்கு மாத்திரை. ''இரேசகம்'' என்பது உள் நின்ற காற்று வெளிப்போதற்கு உரித்தாய செயல். (எனவே, உயிர்க்கிழவன் அதனை வெளிச் செல்ல உந்துதலாம்) இதன் உயர்ந்த அளவு முப்பத்திரண்டு மாத்திரை. இம்மூன்றும் ஒருமுறை இவ்வளவில் அமைவது ஒரு முழு நிலைப் பிராணாயாமமாகும். பூரகம் முதலிய மூன்றும் தம்முள் இவ்வாறு இவ்வளவில் ஒத்து நில்லாது ஒன்றில் மாறுபடுதலும், பிராணாயாமம் புரைபடுதற்கு ஏதுவாம்.*

***குறிப்புரை :-*** *"பூரகம் வாமத்தால் ஈரெட்டாக ஏறுதல்; கும்பகம் அறுபத்து நாலாக அதில் ஆறுதல்; இரேசகம் முப்பத்திரண்டாக ஊறுதல். ஒன்றின்கண் மாறுதல் வஞ்சகமாம்" எனக் கூட்டுக. 'பூரகம் இடைநாடியால்' எனவே 'இரேசகம் பிங்கலையால்' என்பது சொல்லாமை அமைந்தது. 'ஏறுதல்' முதலிய மூன்றும் காரிய ஆகுபெயராய், அவற்றிற்குரிய செயல்களை உணர்த்தின. மாத்திரைகள் மந்திரங்களின் வழி அறியப்படும். அம்மந்திரங்கள் அவரவர் தம் தம் குருமுகத்தால் பெறற்பாலர். அனைவர்க்கும் பொதுவாக நிற்பது ''பிரணவம்'' எனப்படும் ஓங்காரம் அதனை ஒரு மாத்திரை வேண்டும்பொழுது "உம்" என்றே கொள்வர். இது சமட்டியாகக் கொள்ளும் முறை. இதனையே, "அம், உம்" எனப் பகுத்து வியட்டியாகக் கொள்வ. சமட்டியாக ஓதுபவர் இரண்டு மாத்திரைக்கு 'ஓம்' என்றும், அதனின் மிக்க மாத்திரைக்கு அவ்வளவான அளபெடை கூட்டியும் ஓதுவர். "அம்" என்பதன்பின் "சம்" என்பது கூட்டி, "அம்ச மந்திரம்" எனக் கொண்டு ஓதுதலைப் பெருவழக்காகச் சொல்வர். 'ஓம்' என்பது போலவே, "ஆம், ஈம், ஊம், ஏம், ஐம், ஔம்" என்பனவும், "அம், உம்" என்பன போலவே, "இம், எம், ஓம்" என்பனவும் முதல் (மூல) மந்திரங்களாம் என்பதனை நாயனார் நாலாந் தந்திரத்துள் அருளிச் செய்வார். மந்திரங்களில் ஒற்றெழுத்தின் மாத்திரையைக் கணக்கிடுதல் இல்லை. மந்திரங்களைக் கணிக்கும் முறை "வாகசம், உபாஞ்சு, மானதம்" என மூன்று. வாசகம், தன் செவிக்கும், பிறர் செவிக்கும் கேட்குமாறு வெளிப்படக்கூறுதல். உபாஞ்சு, நாப்புடை பெயருமளவாக மெல்ல உச்சரித்தல். இதனை "முணுமுணுத்தல்" என்றல் வழக்கு. மானதம், நாவாற் கூறாது மனத்தால் நினைத்தல். இவற்றுள், "வாசிகம் சரியை யாளர்க்கும், உபாஞ்சு கிரியையாளர்க்கும், மானதம் யோகியர்க்கும் உரியன" எனப் பெரும்பான்மை பற்றிக் கூறப்படும் என்க. மந்திரத்தில் பற்றில்லாதவர் செய்யும் பிரணாயாமம் பெரும்பயன் தாராது.*

*ஈரெட்டு முதலிய எண்கள், அவ்வவ்வளவினதாகிய மாத்திரையைக் குறித்தன. 'ஊருதல்' என்பது எதுகை நோக்கித் திரிந்தது.*

**557.** வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வெட்ட வெளியனு மாமே. **6**

---

*'ஊருதல்' என்பதே பாடம் எனினுமாம். ஊருதல் - மேலே (வெளியே) செல்லுதல். "முப்பத்திரண்டது" என்றதில், அது பகுதிப் பொருள் விகுதி. 'மாறுதலும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. வஞ்சகம் - பொய்; போலி. பூரிக்கும் அளவில் நான்மடங்கு கும்பித்த வழியே அக்காற்று உடற்குப் பயன்படுவதாகும். எனினும், பூரித்த காற்று முன்னுள்ள காற்றுடன் பயன்பட்டபின் நிலை வேறுபடுதலால், மேற்குறித்த கால அளவில் இரேசகம் வேண்டப்படுகிறது.*

*இதனால், பிரணாயாமத்தின் இயல்பு கூறப்பட்டது.*

*இதனுள், 'கும்பக மாத்திரை பூரக மாத்திரையின் நான் மடங்காம்' என்பதும் 'இரேசக மாத்திரை கும்பக மாத்திரையின் அரை மடங்காம்' என்பதும் உய்த்துணர வைக்கப்பட்டவாறு அறிந்து கொள்க. 'இஃது உயரளவு' எனவே, 'அவ்வளவை எட்டுதற்கு, முதற்கண் சிறிது சிறிதாக அம்முறையிற் பயிலுதல் வேண்டும்' என்பது பெறப்பட்டது. பிராண வாயுவை இவ்வாறு நெறிப்படச் செய்வதால், உடல் தூய்மை பெற்று, ஆற்றல் மிகுந்து, நற்பண்புகளுக்கு இடமாகும்.*

**557.** *தெளிவுரை :- ஒருவன் தன் பிராண வாயுவை வளைத்துத் தன்வயப்படுத்தி ஆள வல்லனாயின், ஆண்டுகள் பல செல்லினும் அவனது உடல் முதுமை எய்தாது, பளிங்கு போல அழகிதாய் இளமையுற்று விளங்கும். அந்நிலையில் அவனது உணர்வு தெளிவு பெறுதற்கு, ஞான குருவின் அருளைப் பெறுவானாயின், அவன் சாந்தி, சாந்தியதீத கலைகளில் உள்ள புவனங்களை அடையும் அபர முத்தி நிலைகளை அடைவான்.*

*குறிப்புரை :- எனவே, 'யோக முதிர்ச்சி, ஞானத்தின் பயனை எளிதில் தரும்' என்றவாறாம். உடல் நெடுநாள் நிற்றற்குப் பயன், பிறிது பிறவி வேண்டாது, எடுத்த பிறவியிலே ஞானத்தைப் பெறுதலாம். இவ்வாறன்றி, அணிமாதி அட்ட சித்திகளையும், பிறவற்றையுமே யோகத்தின் பயனாகக் கொள்வோர், உபாய யோகிகளேயன்றி, உண்மை யோகிகள் அல்லர்; அவர்க்கு வினையும், அதன் விளைவாகிய பிறப்பும் நீங்கா என்க.*

*'யோக சாக்கிரம், யோக சொப்பனம், யோக சுழுத்தி, யோக*

**558.** எங்கே இருக்கினும் பூரி இடத்திலே
அங்கே அதுசெய்ய ஆக்கைக் கழிவில்லை
அங்கே பிடித்தது விட்டள வுஞ்செல்லச்
சங்கே குறிக்கத் தலைவனு மாமே. 7

---

*துரியம், யோக துரியாதீதம்' என்னும் யோகாவத்தை ஐந்தனுள் இயமம் முதல் பிராணாயாமம் ஈறாக உள்ளவை யோக சாக்கிரம். பிரத்தி யாகாரம் முதலாக உள்ள நான்கும் முறையே யோக சொப்பனம் முதலிய நான்குமாம். ஆகவே, 'யோக சாக்கிரத்தின் முதிர்வாகிய பிரணாயாமம் கைவந்தோர் ஏனைய நான்கையும் அடைதல் தப்பாது' என்பது பற்றி இதனையே யோக முடிவுபோல வைத்துக் கூறுதல் வழக்கு. அம் மறையே பற்றி நாயனாரும் ஈண்டே யோகத்தின் பயனைக் குறித்தருளினார். 'பழுக்கினும்' என்றது 'ஆண்டளவையால் முதுமை பெறினும்' என்றவாறு 'பழுக்கினும், காயம் பளிங்கொத்துப் பிஞ்சாம்' என மாறிக் கூட்டுக. 'முதிரினும்' என்னாது "பழுக்கிலும்" என்றதனால், 'முதுமை வந்தபின் இது செய்யினும் அது நீங்கும்' என்பது கொள்க. குரு, ஞான குரு ஆதல், யோகிகட்கு ஏனைக் குரு வேண்டாமை பற்றி அறியப்படும். "வளி வெளி" என்பவை சாந்தி. சாந்தியதீத கலைகளைக் குறித்து நின்றன. இவ்வாறன்றி, வாயுத் தம்பனமும், ஆகாயத் தம்பனமும் வல்லராதற்கு ஞான குரு வேண்டாமை அறிக. ஈற்றடியைப் பிறவாறு ஓதுவன பாடம் அல்ல.*

*இதனால், பிரணாயாமம் யோகத்தின் சிறப்புறுப்பாய்ப் பயன் தருதல் கூறப்பட்டது.*

**558. *தெளிவுரை :-* எந்த ஆசனத்தில் இருந்து பிரணாயாமம் செய்யினும், பூரகத்தைச் செய்தல் இடைநாடி வழியாகவேயாம். அவ்வாறு செய்தலால், உடலுக்கு ஊறு ஒன்றும் உண்டாகாது. அந்த ஆசனத்திலே பூரகம், கும்பகம், இரேசகம் என்பவற்றை மேற்கூறியவாறு செய்யச் சங்கநாதம் முதலிய ஓசைகளை உள்ளே கேட்கும் நிலைமை உண்டாகும். அஃது உண்டாகப் பெற்றவன் பின்னர் யோகருள் தலைவனாய் விளங்குவான்.**

***குறிப்புரை :-* "எங்கு" என்னும் இடப்பெயர் இங்கு யோகா சனத்தைக் குறித்தது. பூரி, முதனிலைத் தொழிற்பெயர். இங்கும், 'பூரித்தல் இடமூக்கு வழியாக' எனவே, 'இரேசித்தல் வலமூக்கு வழியாக' என்பதும் கூறியதாயிற்று. இவ்வாறு வலியுறுத்து ஓதியதனால், "மூக்குத் துளை இரண்டாகப் படைக்கப்பட்டது பூரக இரேசகங்களை இவ்வாறு செய்தற் பொருட்டே" என்பது விளங்கும். விளங்கவே,**

**559.** ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே. **8**

---

*வாய்வழியாக அவற்றைச் செய்தல் கூடாமையும் பெறப்படும். 'அது' என்றது பிராண வாயுவை. பிடித்தல், பூரித்தல், விடுதல், இரேசித்தல், அளவும் - மேற்குறித்த உயரளவுகாறும். விடுதல், இரேசித்தல், அளவும் - மேற்குறித்த உயரளவுகாறும். செல்ல - பிரணாயாமத்தில் பயில. சங்க நாதம் முதலிய தச நாதங்கள் (பத்து ஒலிகள்) இவை என்பது பின்னர்க் கூறப்படும்.*

*இதனால், 'ஆசன வேறுபாட்டால் பிரணாயாம முறை வேறுபடுதல் இல்லை' என ஐயம் அறுக்கப்பட்டது.*

**559.** *தெளிவுரை :-* பிராண வாயுவை இடை நாடியால் உட்புகுத்திப் பூரிக்கும் கணக்கையும், பிங்கலை நாடியால் இரேசிக்கும் கணக்கையும் அறிந்து, அதனானே கும்பிக்கும் கணக்கையும் நன்கு அறிகின்றவர் இல்லை. அக்கணக்குகளை ஆசிரியன் அறிவுறுத்தும் யோக நூல் வழியாக மேற்கூறியவாறாக நன்கு உணர்பவர்கட்குக் கூற்றுவனை வெல்லும் பயன் அம்முறையிற் பயிலுதலேயாய் முடியும்.

பிராணாயாமத்தில் கனிஷ்டம், மத்திமம், அதமம் என மூவகையுண்டு. அவற்றுள் கனிஷ்டமாவது பன்னிரண்டு மாத்திரையளவு பூரக கும்பக ரேசகங்கள் செய்யப்படுவதாம். இதனைப் ''பன்னிரண்டானைக்கு'' என்னும் மந்திரத்தால் விளக்குவார். மத்திமமாவது இருபத்து நான்கு அல்லது முப்பத்திரண்டு மாத்திரை அளவினதாம். உத்தமம் அறுபத்து நான்கு மாத்திரையளவினதாம். கோரக்கர் தாமியற்றிய யோக சூடாமணியில் பிராணாயாமத்தில் அதமம் பன்னிரண்டு மாத்திரை, மத்திமம் அதனிருமடங்கு, உத்தமம் அதன் மூன்று மடங்கு என்பர்.

*குறிப்புரை :-* இரு கால் - முதற் காற்று. (இடை நாடி வழியது) கடைக்காற்று (பிங்கலை வழியது) என்பன. இது தொகை நிரல்நிறை. "பூரிக்கும்" என்பதன்பின், இரேசிக்கும் என்பது எஞ்சி நின்றது. 'பூரிக்கும், இரேசிக்கும், பிடிக்கும்' என்னும் எச்சங்கள், 'கணக்கு' என்னும் ஒரு பெயர் கொண்டன. ''இரு கால்'' மேலே கூறப்பட்டமையின், பின்னர் "காற்று" என்றது இடைக்காற்றாதல் (நடு

**560.** மேல்கீழ் நடுப்பக்கம் மிக்குறப் பூரித்துப்
பாலாம் இரேசகத் தாலுட் பதிவித்து
மாலாகி உந்தியுட் கும்பித்து வாங்கவே
ஆலாலம் உண்டான் அருள்பெற லாமே. **9**

---

*நாடி வழியது) விளங்கும். குறி - குறிக்கோள்; இலட்சியம். துணிவு பற்றி, வழியையே பயனாக அருளினார்.*

*இதனால், பிரணாயாமத்தைச் செம்மையாகச் செய்தலின் அருமை கூறப்பட்டது.*

**560. *தெளிவுரை :-*** *பிராண வாயுவை உடல் முழுதும் பரவுமாறு பூரகத்தையும், அந்த வாயுத் தூய்மையாயிருத்தற் பொருட்டு இரேசகத்தையும், நீண்ட வாழ்நாளையும், மிக்க ஆற்றலையும், பெறுதற் பொருட்டுக் கும்பகத்தையும் மேற்கூறிய முறையிற் செய்து பிராண வாயுவை வசப்படுத்தினால், இப்பிறப்பிற்றானே சிவபெருமானது திருவருளைப் பெறலாம்.*

*மேல் என்றது சிரம், கண், செவி இவற்றில் பூர்த்த வாயு பரவித் தாக்குதல். கீழ் என்றது கால் பெருவிரல், மயிர்த்துவாரங்கள் வரை பரவுதல். நடு என்றது நாபி, இதயம் முதலிய இடங்களில் பரவுதல். பால் ஆம் ரேசகம் - கொல்லன் உலைத்துருத்தி போலது மேல் விடும் ரேசகம்.*

***குறிப்புரை :-*** *"பாலாம்" என்பதனை "பால்போல ஆகின்ற" என விரிக்க. பால் தூய்மைக்கு உவமை ''ஆம்'' என்ற பெயரெச்சம் "இரேசகம்" என்னும் ஏதுப் பெயர் கொண்டது. "இரேசகத்ததால் உட் பதி வித்து" என்றது இரேசகம் இல்லாது ஒழியின் கும்பகம் தூய்மை யாகாது என்பதனைப் புலப்படுத்தி, இரேசகத்தின் இன்றியமை யாமையைக் குறித்தது. நெடுங்காலம் வாழ்தலால் 'அமரர்' எனப்படும் தேவர் பலருள்ளும் வாழ்நாள் மிக்கவன் மாயோனாதலின் "மாலாகி" என்றது நெடுங்காலம் வாழ்தலைக் குறித்தது. ''ஆகி'' என்னும் ஆக்கச்சொல் உவமை மேல் நின்றது. உலக காரணன் ஆகத்தக்க ஆற்ற லால் நான்முகனை உந்தி வழித்தோற்றுவித்தோனாதல் பற்றி, உந்தித் தானத்தில் கும்பகம் செய்து ஆற்றல் மிகுதற்கும் அவனையே உவமை யாகக் கூறினார். வாங்குதல் - வளைத்தல். "இப்பிறப்பிலே" என்பது ஆற்றலால் கொள்ளக்கிடந்தது. நெடுங்காலம் வாழ வேண்டுதற்குக் காரணம் கூறுவார். "ஆலாலம் உண்டான் அருள்பெறலாமே" என்றார்.*

561. வாமத்தில் ஈரெட்டு மாத்திரை பூரித்தே
ஏமுற்ற முப்பத் திரண்டும் இரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக இவ்விரண்
டோமத்தால் எட்டெட்டுக் கும்பிக்க உண்மையே. 10

---

*இதனால், பூரகம் முதலிய மூன்றின் பயன் வகுத்துணர்த்தப் பட்டது. கும்பகத் தானம் உடம்பொடு புணர்த்துக் கூறப்பட்டது.*

561. ***தெளிவுரை :-*** *பூரக இரேசகங்களை முற்கூறியவாறு இடைகலை பிங்கலைகளால் செய்தலே முறையாம். கும்பகத்தை ஓமத்தானமாகிய உந்தித் தானத்திற் செய்தலே முறையாம். நாபியாகிய ஓமகுண்டத்தில், ஓம் என்ற பிரணவ பஞ்சாக்கர தியானத்துடன் அதாவது இரண்டு மாத்திரையுடன், 64 மாத்திரை காலம் கும்பிக்க வேண்டும் என அளவு முறை கூறியவாறு. இதுவே சகர்ப்ப பிராணாயமம் எனப்படும்.*

***குறிப்புரை :-*** *'உண்மை' என்பது "இவ்விரண்டு" என்பதனோடும் இயையும். "வாமத்தில் பூரித்து, பிங்கலைக்கண் இரேசித்து ஆக, இவ்விரண்டு உண்மை; ஓமத்தால் கும்பிக்க உண்மை" என்க. ஆதல் - முடிதல். 'இவ்விரண்டு' என்ற சுட்டு, பூரக இரேசகங்களைச் சுட்டிற்று. உண்மை - செம்மை. 'ஓமம்' என்பது ஆகுபெயராய் அதற்குரிய இடத்தை உணர்த்திற்று.* ***அகப் பூசையில் இருதயம் பூசைத் தானமாகவும், நாபி ஓமத்தானமாகவும், புருவ நடு தியானத் தானமாகவும் கொள்ளப்படுதல் அறிக.*** *"ஓமத்தால்" என்பது உருபு மயக்கம். இதற்கு "ஓம்" என்னும் அம்மந்திரத்தால் எனவும் உரைப்பர். "ஆக, கும்பிக்க" என்ற எச்சங்கள் "உண்மை" என்னும் குறிப்பு வினை கொண்டன. "உண்மையது" எனற்பாலதனை "உண்மை" என்றே கூறுதல் பிற்கால வழக்காயிற்று. ஆகவே, அப்பண்புச் சொல் பண்பின்மேல் நின்றதாக உரைத்துக் கொள்ளப்படும். "கும்பிக்க" என்பதன்பின் "அஃது" என்னும் தோன்றா எழுவாய் வருவிக்க.*

*இதனால், மேல் உடம்பொடு புணர்த்துக் கூறப்பட்டது. எடுத்தோதி வலியுறுத்தப்பட்டது, முன்னவை இரண்டும் அனுவாதம்.*

562. ***தெளிவுரை :-*** *இறைவன் உயிரைக் குடிவைத்ததாகிய அந்த இல்லம் (உடம்பு) தளர்வுறா வண்ணம் வீணே போக்கப் படுவதாகிய பிராணவாயுவை அங்ஙனம் போகாதவாறு பிராணாயாமத்ததால் பயன்படச் செய்யின் இறப்பு இல்லையாகும். (நீண்ட நாள் வாழலாம் என்பதாம்).*

**562.** இட்டதவ் வீடிள காதே யிரேசித்துப்
புட்டி படத்தச நாடியும் பூரித்துக்
கொட்டிப் பிராணன் அபானனுங் கும்பித்து
நட்டங் கிருக்க நமனில்லை தானே. **11**

**563.** புறப்பட்டுக் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட உள்ளே நின்மல மாக்கில்
உறுப்புக் சிவக்கும் உரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே. **12**

---

*குறிப்புரை :-* அவ்வீடு - அத்தன்மையதாகிய வீடு. எனவே, 'அஃதழியின் உயிர் தீங்கெய்தும்' என்பதாம். புட்டி - வடசொல்; 'நிறைவு' என்பது பொருள். தச நாடிகளாவன, 'இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, சங்குனி, வைரவன், குகுதை' என்பன.

கொட்டி - கொட்டப்படுவது. இஃது யோகியரல்லாதாரது செயல் பற்றிக் கூறியது. பிராணன், மூக்கு வழியாக இயங்கும் காற்று. அபானன், எருவாய் வழியாக வெளிப்படும் காற்று. **பிராணனை மூக்கு வழிப் புறப்படாது கும்பிக்கும்பொழுது, அஃது எருவாய்வழிப் புறப்பட முயலும். அதனை அடக்குதலையே, "அபானனைக் கும்பித்தல்" என்றார். எனவே, இயல்பாக வெளிச்செல்லும் அபானனைக் கும்பிக்கக் கூறினாரல்லர் என்க.** "அங்கு நட்டு இருக்க" என மாற்றுக. அங்கு - உந்தித் தானத்தில். நடுதல் - நிலைபெறுத்தல். இக்கும்பகத்தால் முதுகெலும்பின் அடியில் உள்ள "சுழுமுனை" என்னும் நாடியுள் பிராணவாயுச் செல்வதாகும். அதனால் பல நலங்கள் விளையும். அது பற்றி "நமன் இல்லை" என்றார் "நட்டம் இருக்க" என்பது பாடம் அன்று.

இதனால், "கும்பகம் ஓட்டை போகாதவாறு காத்தல் வேண்டும்" என்பது கூறப்பட்டது.

**563.** *தெளிவுரை :-* வெளி வருவதும், உட்புகுவதுமாய்ப் பயனின்றி அலைகின்ற பிராண வாயு, மேற்கூறிய நெறிக்குட்பட்டு நிற்குமாற்றால் தூயதாகச் செய்யின், உடம்பு ஒளிவிட்டு விளங்கும்; தலை, முகம் முதலானவற்றில் உள்ள மயிர்கள் நரையாது கறுப்பனவாம். இவற்றினும் மேலாகச் சிவபெருமான் அத்தகைய யோகியின் உள்ளத்தை விட்டுப் புறம்போகான்.

**564.** கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஒடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற்கோலம் அஞ்செழுத் தாமே. 13

---

***குறிப்புரை :-*** *"புறப்பட்டுப் போகான்" என்றது 'தியானம் சலியாது' என்றவாறாம். எனவே, "இதுவே பிராணாயாமமாகிய பேருழைப்பிற்குச் சிறந்த பயன்" என்பது போந்தது.*

*இதனால், பிராணாயாமம் மேல்வரும் யோக உறுப்புக்கட்கு இன்றியமையாச் சாதனமாதல் கூறப்பட்டது.*

**564.** ***தெளிவுரை :-*** *ஆடரங்கு ஒன்றை அமைத்து, அதனுள் ஆடப்புகுந்த மங்கையர் இருவர் தாங்கள் ஆடும்பொழுது பன்னிரண்டங்குல தூரம் முன்னோக்கிச் செல்கின்றனர்; ஆயினும், பின்னோக்கி வரும் பொழுது எட்டங்குல தூரமே வருகின்றனர். ஆகவே, அவர் ஒவ்வொரு முறையிலும் நாலங்குல தூரம் கூடத்தை விட்டு நீங்குபவராகின்றனர். (இவ்வாறே அவர்களது ஆட்டம் நடைபெறுமாயின் எப்பொழுதாவது அவர்கள் அவ்வாடரங்கை முழுதும் விட்டு அப்பாற் போதலும், மீள அதன்கண் வாராமையும் உளவாதல் தப்பாதன்றோ!) ஆகையால், ஒவ்வொரு முறையும் அந்த நாலங்குல தூரமும் அவர்கள் மீண்டு வருவராயின், அக்கூடத்தின் அழகு என்றும் அழியா அழகாய் நிலைத்திருக்கும். இழந்த நாலங்குலத்தையும் சேர்த்துக் கொள்வாராயின் திருவைந்தெழுத்தின் வடிவாவர் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *"ஓடுவர் பன்னிரண்டங்குலம்; மீளுவர் எண்விரல்" என நிரல்நிரையாக்கிப் பின், "நீடு உவர் இவ்வாற்றால் நால் விரல் கண்டிப்பர்; (அதனையும் அவர்) கூடிக்கொளின், கோலம் அஞ்செழுத்தாம்" எனக் கூட்டி உரைக்க. நீடு உவர் - ஆட்டத்தில் நீடு நிற்கின்ற இவர். கண்டிப்பர் - துணிப்பர். மந்திரங்களே அழிவில்லன; அவற்றுள்ளும் அஞ்செழுத்து மந்திரம் அழிவிலதாதலின், அழியாமை குறித்தற்கு, அஞ்செழுத்தாக்கி அருளிச்செய்தார். அஞ்செழுத்து, திருவைந்தெழுத்தும், வியட்டிப் பிரணவமுமாம். இனி, ஓவியத்தின் மறுபெயராகிய 'எழுத்து' என்பதும், "கோலம்" என்பதுபோலவே ஆகுபெயராய் அழகினைக் குறித்தது எனக் கொண்டு, ஏகாரத்தை எதிர்மறை வினாவாக்கி, 'அழியுமோ என்று அஞ்சப்படும் அழகாகுமோ! ஆகாது' என உரைத்தலுமாம். இனி, இதற்கு*

565. பன்னிரண்டானைக்குப் பகல் இர வுள்ளது
பன்னிரண் டானையைப் பாகன் அறிகிலன்
பன்னிரண் டானையைப் பாகன் அறிந்தபின்
பன்னிரண் டானைக்குப் பகல்இர வில்லையே. 14

---

*"அஞ்செழுத்துருவமாதற்கு ஏற்றதாகும்" என உரைத்தலுமாம். ஆடல் மங்கையர் அப்பாற்போய், மீளவும் அதனுள் வாராதொழியின், ஆடரங்கு அழிந்தொழியும் என்பதாம்.*

*கூடம், உடம்பு, ஆடல் மங்கையர், இரு மூக்கு வழியாக இயங்குகின்ற பிராண வாயு, "மக்களது மூச்சுக் காற்று இயல்பாக வெளிச் செல்லும் பொழுது பன்னிரண்டங்குல அளவு செல்லும்" என்பதும் "மீண்டு அஃது உட்புகும்பொழுது. முன்சென்ற அளவு புகாது. இயல்பாக எட்டங்குல அளவே புகும்" என்பதும் யோகநூல் வரையறை. எனவே, "வெளிச் சென்ற காற்றில் மூன்றில் இரண்டு பங்கே உட்புக, ஒருபங்கு இழப்பாகின்றது" என்பதும் "அவ் இழப்பினாலே நாள்தோறும் வாழ்நாள் அளவு குறைந்துகொண்டே வருகின்றது" என்பதும், 'அவ்வாறாகாது தடுப்பது பிராணாயாமம் என்பதும்' கருத்தாதல் அறிந்து கொள்ளப்படும்.*

*இதனால், பிரணாயாமத்தால் வாழ்நாள் நீட்டிக்குமாறு தெரிந்துணர்த்தப்பட்டது.*

565. ***தெளிவுரை :-*** *பன்னிரு முழ உயரமுள்ள யானை ஒன்று பகலும், இரவுமாய் மாறிவரும் காலச் சூழலில் அகப்பட்டுள்ளது. அஃது அவ்வாறிருத்தலை அதன் பாகன் தனது பேதைமையால் அறிந்தானில்லை. அதனை அவன் அறிவானாயின், அந்த யானை அச்சூழலைக் கடந்து நின்று, அவனுக்கு உதவுவதாகும்.*

***குறிப்புரை :-*** *பன்னிரண்டு ஆனை - பன்னிரண்டு மாத்திரையளவு இயங்கும் பிராணவாயு. ஒவ்வொரு மாத்திரையையும் ஒவ்வோர் யானையாக உருவகித்தார். அடங்காத யானை பழக்கப்படின் அடங்குதல் போலப் பிராணனும் அடங்குதலின் இங்ஙனம் கூறப்பட்டது. பகல் இரவு - தோற்றம் நாசம்; அல்லது அறிவு அறியாமையுமாம். ஆனை, மூச்சுக்காற்று, வசப்படுத்துதற்கு அருமை நோக்கி அதனை யானையாக அருளிச்செய்தார். 'சிறந்த யானை ஏழுயர் யானை' என்பது யானை நூல் மரபு. அதனோடொப்ப 'பன்னிரண்டு யர்ந்த யானை' என்றார். 'முழம்' எனவும், 'உயர்ந்தது' எனவும் கூறாது, பொதுமையில் நயம்பட 'பன்னிரண்டு' என்றது. மேல், 'அங்குலம்'*

என்றதனோடும், "முன்னோக்கி ஓடும்" எனக் கூறியவற்றோடும் மாறு கொள்ளாமைப் பொருட்டு. "பகல் இரவு" என்றது, பகல், இரவு, நாள், பக்கம், திங்கள், யாண்டு என்ற பலவாற்றாற் காலம் கழிதலைக் குறித்தவாறு. 'பிராணாயாமம் செய்யின், அங்ஙனம் கழிதலாற் கெடுவதொன்றில்லை' என்பதாம். பாகன் - உயிர்.

இதனால், 'பிராணாயாமத்தில் மனவெழுச்சி செல்லாமை அறியாமையினாலாம்' என்பது கூறப்பட்டது.

'பிராணாயாமத்துள் பூரகம், கும்பகம், இரேசகம் மூன்றும் தனித்தனியானவை அல்ல; மூன்றும் யாண்டும் கூடி நிற்பனவே அவற்றுள் "பூரகம், கும்பகம், இரேசகம்" என்னும் முறையால் செய்யப்படுவது இரேசகம். "பூரகம், இரேசகம், கும்பகம் மறித்தும் பூரகம்" என்னும் முறையால் செய்யப்படுவது பூரகம், "பூரகம், இரேசகம், கும்பகம்" என்னும் முறையால் செய்யப்படுவது கும்பகம் எனவே, இவை இறுதியில் நிகழ்வனவற்றால் பூரகம் முதலிய பெயர்களைப் பெற்றன' எனக்கொண்டு, அவ்வாறே, "ஏறுதல் பூரகம் மேல்கீழ் நடுப்பக்கம், வாமத்தில் ஈரெட்டு" என்னும் திருமந்திரங்களை முறையே "இரேசகம், பூரகம், கும்பகம்" என்பவற்றைக் கூறுவனவாக அரசஞ் சண்முகனார் தமது பாயிர விருத்தி (பக். 45, 46)யுள் எழுதியுள்ளார். இன்னும் அவர் பிராணாயாமம் 'இம்மூன்றல்லாது 'நிலை' என்ற நான்காவதும் உடையது' எனக்கொண்டு, "இட்டதவ் வீடு கூடம் எடுத்து, பன்னிரண்டானைக்கு" என்னும் திருமந்திரங்கள் அதனையே கூறுகின்றன என்கின்றார். ஆயினும், "நிலை" என்பதைக் குறிக்கும் வடமொழிப் பெயர் இது என்பதனை அவர் கூறவில்லை. 'தாபித்தல்' என்ற ஒரு சொல் திருமந்திரத்திற் காணப்படுகின்றது; அதனையே கருதினாரோ என்னவோ! இனி, கும்பகம் என்பது காற்றை உள்ளே நிறுத்துதலன்று வெளியே நிறுத்துதல் என்கின்றார் விவேகானந்த அடிகள் இவையெல்லாம் முன்னை மரபிற்கு வேறானவையாய் உள்ளன.

## 6. பிரத்தியாகாரம்

**566.** கண்டுகண் டுள்ளே கருத்துற வாங்கிடிற்
கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை
இன்றுகண் டிங்கே இருக்கலு மாமே. 1

---

*இது முதற் பத்துத் திருமந்திரங்களால் 'பிரத்தியாகாரம்' என்னும் உறுப்பினது இயல்பை அருளிச் செய்கின்றார். பிரத்தியாகாரமாவது, மனத்தைப் பொறிவழிகளினின்றும் பிரித்து அகமுகமாக ஆதாரங்களில் நிற்கச் செய்தல். இதனை, நாயனாரே இறுதியிற் குறித்தருளுவார், பிரத்தியாகாரத்தை, 'தொகைநிலை' என்பர் நச்சினார்க்கினியர் (தொல். பொருள். புறம். 20). இயல்பாகவே விடய சுகங்களிற் சென்று பற்றும் பொறிகளை வலிந்திழுத்து அடக்கல் எனவும், எதனையும் நீக்கமற நிறைந்த சிவமாகப் பாவித்தல் எனவும் கால், விரல், கரடு, கணைக்கால், முழந்தாள், தொடை, பாயு, இலிங்கம், நாபி, இருதயம், கழுத்து, மிடறு அண்ணம், நாசி, கண், பிருவநடு, நெற்றி, சிரம் என்னும் பதினெட்டிடங்களிலும் பிராணனை ஏற்றியும் இறக்கியும் நிலை பெறுத்துதல் எனவும், நித்தியகர்மங்களின் பலத்தை விடுதல் எனவும் இறப்பு வரையில் இயற்றும் சுத்தம் அசுத்தம் அனைத்தையும் சிவார்ப்பணமாகச் செய்தல் எனவும், பசுகரணங்களைப் பதிகரணமாக்கல் எனவும், வாயுவை முற்கூறிய பதினெட்டிடங்களிலும் ஓரிடத்திலிருந்து ஓரிடத்திற்கு மாற்றுதலெனவும், சகல விஷயங்களிலும் பராமுகமாயிருத்தல் எனவும், தனது புத்தியையிழுத்துச் சமசித்தம் உள்ளவனாக வேற்றுமையும் பற்றுமின்றி உயிரினிடமாக நிறுத்துதல் எனவும் நாதபிந்து உபநிஷத், திரிசிகியுபநிஷத், சாண்டில்யோபநிஷத், விஷ்ணு புராணம் முதலியவைகள் கூறுகின்றன. இவை அனைத்தையும் இணைத்து எண்ணும்போது, பிராணனை நிறுத்துதலே பிரத்தியாகாரம் என்பது பெறப்படும்.*

***566. தெளிவுரை :-** மனத்தை அகநோக்கிலே காணத்தக்க ஆதார நிலைகளைக் கண்டு கண்டு நிற்குமாறு அடக்கினால், அங்குத்தானே களிப்புப் பெற்று பயன்கள் பலவற்றை அடையலாம். முடிவில் பழைய வேதங்கள் எல்லாம் காண விரும்பிப் பண்டு தொட்டு எங்கும் சென்று தேடியும் காணாத சிவனை இன்றே, இவ்விடத்தே கண்டு, அமைதியோடு இருத்தலும் கூடும். நுண்ணிய இடங்களை அறிந்து அங்கே வாயுவை நிலைக்கச் செய்க.*

**567.** நாபிக்குக் கீழே பன்னிரண் டங்குலந்
தாபிக்கும் மந்திரந் தன்னை அறிகிலர்
தாபிக்கும் மந்திரந் தன்னை அறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடியிருந் தானே. 2

---

***குறிப்புரை :-*** *'கருத்தினை உள்ளே கண்டு கண்டு உறவாங்கிடின்' என மாறிக் கூட்டுக. காணுதல், கொள்ளுதல், இவற்றிற்குச் செயப்படு பொருள்கள் வருவிக்கப்பட்டன. ஆதார நிலைகள் இனிக் கூறப்படும். "குணம்" என்பது, "கோளில் பொறியிற் குணமிலவே" (குறள். 9) என்பதிற் போல, 'பயன்' எனப் பொருள் தந்தது, தேடி - தேடப்பட்டவன்.*

*இதனால், பிரத்தியாகாரத்துச் சிறப்புக் கூறப்பட்டது.*

**567. *தெளிவுரை :-*** *உந்திக்குக் கீழ்ப்பன்னிரு விரற்கிடையளவில் உள்ள இடத்தில் மனத்தை நிலைபெறச் செய்வதாகிய இரகசிய முறையை உலகர் அறியார். அதனை அறிந்து மனத்தை அங்கே நிறுத்துவாராயின் இறைவன் தானே வந்து அவர்களைத் தன்பால் வர அழைத்து, அங்கு வீற்றிருப்பான்.*

***குறிப்புரை :-*** *இதில் குறிக்கப்பட்ட இடம் மூலம் (அடிநிலை) எனப்படும். இது முதல் ஆதாரம். இஃது எருவாயுமன்று; கருவாயு மன்று; இரண்டிற்கும் இடைப்பட்ட இடம் என்பது பின்னர் இனிது விளங்கும். தாபித்தல் நிலைபெற வைத்தல். அவ்வாறு வைப்பதனையே ''மந்திரம்'' என்றாராகலின், ''தாபிக்கும்'' என்ற பெயரெச்சம் வினைப்பெயர் கொண்டதாம். "மந்திரம்" என்றது, 'இரகசியம்' என்னும் அளவாய் நின்றது. இனி, 'மந்திரம்' என்றே பொருள் உரைப்பின், "அறிகிலர்" எனப் பிறரை இகழ்கின்ற நாயனார் தம் மாணாக்கர்க்கு அதனை அறிவியாது வாளாபோதல் அடாதாம். அன்றியும், இஃதொன்றற்கேயன்றி ஏனைப் பலவற்றிற்கும் மந்திரம் உண்மையின் அவ்விடங்களிலும் அவற்றைக் கூறல் வேண்டும் அவ்வாறு கூறிற்றிலர். இனி, மந்திரமேயன்றி அதிதேவர், அக்கரம், அடையாளம் முதலாக மற்றும் பல உள ஆகலின், அவற்றையும் குறியாது போதல் குன்றக் கூறலாம். அங்ஙனமாயின் அவையும் எடுத்தோதற்பாலனவாகலின் அவற்றை அவ்வாறு ஓதாதுபோதல் என்னை எனின், அவையெல்லாம் யோகத்துட் கிரியையேயாய் நூல்கள் தோறும் வேறு வேறாகக் கொள்ளப்படும் வழிபாட்டு முறைகளேயாதலால், சிவநெறியாளர் அனைவர்க்கும் பொதுப்பட அருளிச் செய்யும் இந்நூலால் அவற்றுட் பொதுவாவன சிலவற்றையன்றி ஏனையவற்றை வரையறுத்தோதுதல் ஆகாமையின், "அவற்றை அவரவர் தம் தம் வாய்ப்பிற்கு ஏற்பப் பெற்றுக் கடைப்பிடிக்க" என்னும் கரத்தால் வாளா போகின்றார்; ஆதலின், அது நாயனார்க்குக் குற்றமாதல் எங்ஙனம் என்க. சைவாகமங்*

**568.** மூலத் திருவிரல் மேலுக்கு முன்நின்ற
பாலித்த யோனிக் கிருவிரற் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளெழுஞ் செஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழதே. **3**

**569.** நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்யும்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாமே. **4**

---

*களுள்ளும் இவற்றுள் சிலவற்றை வேறு வேறாகக் கூறப்படுதற்கும் காரணம். 'இவையெல்லாம் சில வழிபாட்டு முறையே' என்னும் கருத்தினாலேயாம்.*

*யோகமும், மன ஒருமைக்கும், ஆன்ம பரிபக்குவத்திற்கும் உரிய ஒரு சாதனமேயன்றிப் பொருளியல்பை உள்ளவாறுணரும் தத்துவ ஞானம் (மெய்யுணர்வு) அன்று' என்பது உணரமாட்டாதார் யோகத்தையே, "ஞானம்" என மயங்கி, ஒரு நெறியையே பற்றிப் பிறவற்றை இகழ்வர், இங்கு யோகத்தை உணர்த்தும் நாயனார், பின்னர் ஞானத்தையே முடிவாக உணர்த்துதல் காண்க.*

*இவ்வாறாயினும், இவ்வழிபாட்டு முறைகளுள் சிலவற்றை இவ்வதிகாரத்திறுதியில் சிறிது காண்போம். பிற அறங்களினும், பிற தெய்வ வழிபாட்டினும், சிவதன்மமும் சிவ வழிபாடும் வேறாதல் போலப் பிற யோகங்களினும் சிவயோகம் வேறு, சரியை முதலிய நான்கனுள் மூன்றாவதாகிய யோகம் சிவயோகமே என்பது உணர்க.*

*இதனால், பிரத்தியாகாரத்தில், 'மூலாதாரம்' என்னும் முதல் ஆதார நிலை கூறப்பட்டது.*

**568. *தெளிவுரை :-* *எருவாய்க்கு இருவிரற்கிடைமேலாகவும், வெளியே தோன்றி நின்று கருவைப் பயக்கும் கருவாய்க்கு இருவிரற்கிடை கீழாகவும் நிற்கின்ற வட்ட வடிவான குண்டலி சத்தியுள்ள தோன்றுகின்ற செவ்வொளியின் இடம், உந்திக்கு நாக்கு விரற்கிடை கீழே உள்ளது.***

***குறிப்புரை :-* *இங்கு "மூலம்" என்றது எருவாயை எனவே, இஃது ஆதாரங்களுள் முதலாவதாகிய மூலாதாரத்தினை இனிது விளங்கக் கூறியதாயிற்று. ஞாலம் - பூமி; இடம். இதில் 'அத்து' வேண்டாவழிச் சாரியை. "குண்டலி" எனப்படுவது சுத்த மாயையில் தோன்றும் எழுத்தோசையாகிய நாதமே. இதற்கு வட்டமே வடிவாகக் கொள்ளப்படுதலின், "குண்டலி" எனப் பெயர் பெற்றது. "கோலித்த" என்றதும் இதன் வடிவைக் குறித்ததேயாம். "வட்டமாய் வளைந்து நிற்பது" என்பது பற்றி, இது பாம்பாக வைத்துப் பாவிக்கப்படுகின்றது. இது பற்றியே உலகத்துப் பாம்பையும் வழிபாட்டிற்கு உரியதாகக் கருதும் வழக்கம் உளதாயிற்று. உண்மையாகச் செய்யும் வழிபாடு***

யாதாயினும், அதற்குப் பயன் தருபவன் சிவபெருமான் என்பதை நினைவு கூர்க.

"குண்டலி எனப்படும் பாம்பு ஐந்து தலைகளை உடையது" என்றல், வாக்குகள் சுத்த மாயையின் பஞ்ச கலைகளில் விருத்திப்பட்டு நிற்றலைக் குறிப்பது, சிவாலயங்களில் சிவலிங்கத் திருமேனிக்கு ஐந்து தலைப்பாம்பைக் கவசமாகச் சாத்தி வழிபடுதலும் சிவபெருமான் தனது சத்தி நிவிர்த்தி முதலிய ஐந்தாகிச் சுத்தமாயையின் ஐந்து கலைகளிலும் நிற்க, அவ்விடங்கள் எல்லாவற்றிலும் சிவன் நிற்றலையே குறிக்கும்.

மந்திரங்கள் அனைத்தும் நால்வகை வாக்கு வடிவமாகிய சுத்த மாயையின் காரியங்களே. அக் கருத்து விளங்குதற் பொருட்டு 'அனைத்து மந்திரங்கட்கும் மூலமாகிய ஓங்காரமே குண்டலி சத்தி' என்பர். நால்வகை வாக்கினாலேயே யாவர்க்கும் பொருளுணர்வு உண்டாகின்றது. அவ்வுணர்வு ஆணவத்தின் சார்பால் உலகப் பொருள்களையே உணர்ந்து நிற்குங்காறும் "அறிவு" எனப்படாது "அறியாமை" என்றே சொல்லப்படும். அதனால், உலகர் எல்லாரிடத்தும் உள்ள குண்டலி சத்தியாகிய பாம்பு, கண்ணை விழியாது உறங்கிக் கிடப்பதாகின்றது.

உலக நடையிலும் அறிவு புருவ நடுவாகிய மேலிடத்திலும்




ஆறு ஆதாரங்களின் தோற்றம்



மூலாதாரம்

பஞ்சபூதம் - நிலம்
வடிவம் - நாற்கோணம்
ஐந்தெழுத்து - யநமசி

*வம் சம் ஷம் ஸம் என்ற நான்கு எழுத்துடன் கூடிய, நான்கு தளமுடைய கமலம், வீணாதண்டத்தின் அடிப்பாகத்திலுள்ளது. சித்தலக்ஷமி, வல்லபை என்ற இரண்டு சக்திகளுடன் கணபதி வீற்றிருக்கின்றார். அறியாமை மூலாதாரமாகிய கீழிடத்திலும் உள்ளன என்பதால், "குண்டலிப் பாம்பு தனது அறிவுக்கு நிலைக்களமாகிய*

*தலையை அறியாமைக்கு இடமாகிய மூலாதாரத்திலும், அறிவுக்கு நிலைக்களமாகாத வாலை அறிவுக்கு இடமாகிய நெற்றியிலும் வைத்துத் தலைகீழாகக் கிடந்து உறக்கத்தில் ஆழ்ந்துள்ளது" எனவும், ''அரணியில் அடங்கியுள்ள அக்கினி, பிராணாயாம பிரத்தியாகாரங்களால் மூண்டெழுந்து தாக்க, அக்குண்டலிப் பாம்பு கண் விழித்து எழுந்து தலைமேலாகவும், வால் கீழாகவும் சுழன்று, இயற்கை நிலையில் நிற்கும்" எனவும் யோகநூல்கள் கூறும். இவற்றால் எல்லாம் பெறப்படுவது, "யோக நெறியிற் பழகினால் உயிரினது உணர்வு புறப் பொருள்களாகிய உலகத்தைப் பற்றி நிற்றலை ஒழிந்து, உயிர்க்குயிராய் நிற்கின்ற இறைவனை உள்ளுணர்வாற் பற்றும்'' என்பதே. அதற்குச் சிறந்த துணையாவன பிரணவம் முதலிய மந்திரங்களும், பாவனைகளும், மனத்தால் அகத்தே செய்யும் வழிபாடுகளுமாகும். அவ்வழிபாடுகட்கு முதலாய் நிற்கும் திருமேனிகள் முன்பு உருவத் திருமேனியாய் நின்று, பின்பு அருவுருவத் திருமேனியாய், முடிவில் அருவத் திருமேனியாகும் என்க.*

*இதனுள், 'குண்டலியுள் எழும் செஞ்சுடர்' என்றது இறைவனது அருவுருவத் திருமேனியை. இது புறத்தே இலிங்கமாக வணங்கப்படுதல் போல, அகத்தே யோகத்தில் பேரொளிப் பிழம்பாகக் கொண்டு தியானிக்கப்படும். அதன் விளக்கம் எல்லா ஆதாரங்களிலும் நிறைந்து நிற்பதாயினும், இங்குக் குறிக்கப்பட்ட இடமே அஃது இருக்கும் இடம் என்பது இதனால் பெறப்பட்டது.* ***இது பற்றியே இவ்விடம் "சுவாதிட்டானம்" எனப் பெயர் பெற்றது. "தனது இடம்" என்பது இப்பெயரின் சொற்பொருள். தான், உள்ளெழும் சோதி சோதியின் இயல்பு கீழிருந்து மேல் நோக்கி எழுவதாகலின், பிரத்தியாகாரப் பயிற்சியால் இது மேல் நோக்கி வளர்ந்து காட்டும். மூலாதாரம் குண்டலிக்கு இடமாயினமையின், அதற்கு மேலுள்ள இதுவே இச்சோதிக்கு இடமாயிற்று. இஃது இரண்டாவது ஆதாரம். இதன் இயல்பு கூறவே, "மனத்தை மூலாதாரத்தில் நிறுத்திப் பயின்றபின், இவ்விடத்து நிறுத்திப் பயில்க" என்றதாயிற்று.***

***இதனால், "சுவாதிட்டானம்" என்னும் இரண்டாம் ஆதார நிலை கூறப்பட்டது.***

***மூன்றாவது ஆதாரம் "மணிபூரகம்" என்பது; இஃது உந்தித் தானமே, "மாலாகி உந்தியுட் கும்பித்து வாங்க" என மேற்கூறியதானே இதுவும் ஓர் ஆதாரமாதல் அறியப்படுதலின், இவ்விடத்தும் மனத்தை நிறுத்துதல் உய்த்துணர்வகையால் பெறப்படுதல் பற்றி எடுத்தோதா***

570. சோதி இரேகைச் சுடரொளி தோன்றிடிற்
கோதில் பரானந்தம் என்றே குறிக்கொண்மின்
நேர்திகழ் கண்டத்தே நிலவொளி எய்தினால்
ஓதுவ தும்முடல் உன்மத்த மாமே. 5

571. மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்திது தானே. 6

---

*ராயினார், வாயுவைக் கும்பிக்கும் சிறந்த இடமாதல் பற்றி "மணிபூரகம்" எனப் பெயர் பெற்றது.*

569. ***தெளிவுரை :-*** *மூக்கிற்குப் பன்னிரு விரற்கிடை கீழாக உள்ள இடத்தில் தீ மனத்தை நிறுத்தித் தியானிக்கவல்லையாயின், அட்டமா சித்திகளைத் தரும் சித்தியோகம் தானே வந்து உன்னை அடையும், உடம்பிற்கு அழிவு இல்லையாகும்.*

***குறிப்புரை :-*** *மூக்கிற்குப் பன்னிரு விரற்கிடைக்கீழ் உள்ளது இருதயத்தானம். இஃது 'அனாகதம்' எனப்படும்; 'வரவற்றது' என்பது இப்பெயரின் பொருள். மனத்தின் இடம் இதுவே' என்பது கருத்து. 'இவ்வளவிலே பன்னிரண்டடிகள் உணர்த்தின. அட்டமாசித்திகளைப் பயனாக உடைய யோகம் 'ஹட யோகம்' எனவும், உடம்பு நரை திரை மூப்பு இன்றி நெடுங்காலம் நிற்றலைப் பயனாக உடைய யோகம் 'ராஜயோகம்' எனவும் சொல்லப்படும். இவையெல்லாம் ஞானத்தைப் பயவாமை மாத்திரையேயன்றி, அதற்குத் தடையாவனவுமாம்; ஆதலின், ஞானத்தை விரும்புவோர் இவற்றை விரும்புதல் இல்லை. இதனுள் மூன்றாம் அடி மூன்றாம் எழுத்து எதுகை.*

*இதனால், 'அனாகதம்' என்னும் நான்காவது ஆதார நிலை கூறப்பட்டது.*

570. ***தெளிவுரை :-*** *'சுவாதிட்டானத்தில் உள்ளது' என மேலே சொல்லப்பட்ட பேரொளி, உங்களுக்குக் கீற்றுப்போன்ற விளக்கொளியாகப் புலப்படுமாயின், 'அப்பொழுதே பேரின்பம் கிடைத்துவிட்டது எனக் கொண்டு' அவ்வொளியை நோக்குதலையே குறியாகக் கொள்ளுங்கள். இருதயத்திற்கு அடுத்ததானமாய்*



சுவாதிட்டானம்

பஞ்சபூதம் - அப்பு(நீர்)
வடிவம் - பிறைவட்டம்
ஐந்தெழுத்து - வயநமசி

*பம் முதல் லம் வரையிலுள்ள ஆறு எழுத்துடன் கூடிய ஆறு தளமுடைய கமலம். கசேருதண்டத்தின் அடிப்பாகத்திலிருந்து கொஞ்சம் மேல் பாகத்திலுள்ளது. சாவித்திரி, காயத்திரி ஆகிய இரு சக்திகளுடன் பிரமன் வீற்றிருக்கிறார்.*



## மணி பூரகம்

பஞ்சபூதம் - நெருப்பு(தேயு)
வடிவம் - முக்கோணம்
ஐந்தெழுத்து - நமசிவய

*பம் பம் ணம் தம் த்தம் தம் தம் நம் பம் ப்பம் ஆகிய பத்து எழுத்துக்கள்.*

*[3]டம் முதல் [2]பம் வரையிலுள்ள பத்து எழுத்துக்களுடன் கூடிய பத்துத் தளமுடைய கமலம். தொப்புள் பிரதேசத்திலுள்ளது. பூமி, லக்ஷ்மி என்ற இரு சக்திகளுடன் விஷ்ணு வீற்றிருக்கிறார்.*

572. எருவிடும் வாசற் கிருவிரல் மேலே
கருவிடும் வாசற் கிருவிரற் கீழே
உருவிடுஞ் சோதியை உள்கவல் லார்க்குக்
கருவிடுஞ் சோதி கலந்துநின் றானே. 7

---

*விளங்குகின்ற கண்டத்தில் (மிடற்றில்) நிலைத்துள்ளதாகிய அவ்வொளியைத் தலைப்பட்டால், அதன் பயனாகச் சொல்லப்படுவது, அதுகாறும் கண்டறியாத ஒரு புதிய இன்ப அனுபவமாம்.*

***குறிப்புரை :-*** *இங்ஙனங் கூறவே, 'ஞான நாட்டம் உடையோரே முன்கூறிய நிலையின் மேலும் முயன்று இவ்வொளியைக் காண்பர்' என்பதும், 'அந்த நாட்டம் இல்லாதோர் முன்கூறிய நிலையோடே நின்றொழிவர்' என்பதும் பெறப்பட்டன. கண்டம் 'விசுத்தி' எனப்படும். 'மிக்க தூய்மை' என்பது இதன் பொருள். ஞான நெறியிற், செல்லும் முதல் இடமாதல் பற்றி இப்பெயர் பெற்றது. 'நிலவொளி' வினைத்தொகை. "ஆம் அதுவே" என்பதில் 'அது' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால் 'விசுத்தி' என்னும் ஐந்தாவது ஆதார நிலை கூறப்பட்டது.*

**571. *தெளிவுரை :-*** *(மாணவனே! பிரத்தியாகாரத்தில் நீ விசுத்திக்கு மேலும் செல்ல விரும்புவையாயின், கும்பகத்தால் நின்ற வாயு கீழே போகாமல்) எருவாய்ப் புழையை இறுக அடைத்து, (அவ் வாயு மேல் அண்ணத்தில் உள்ள துளை வழியாக மூக்குத் துளையை அடைந்து புறப்படுமாறு) மனத்தை அவ் அண்ணத்தின் துளையிடத்தே வைத்துப் புருவ நடுவில் நில் - அந்நிலையில் (அக்காற்று, கண் காதுகள் வழியாகவும் பரவிப் புறப்படும் ஆதலின்) கண்களை இமையும் கொட்டாமல் விழித்திரு. இதுவே நீ காலத்தை வெல்லும் முறை.*

***குறிப்புரை :-*** *தந்துரைத்தன எல்லாம் இசையெச்சங்கள், புருவ நடுவாகிய இடம், 'ஆஞ்ஞை' (ஆக்ஞை) என்னும் பெயருடையது. 'அறிவிற்கு நிலைக்களம் என்பது இதன்பொருள். இஃது 'இலாடம்' என்றும் சொல்லப்படும். இயல்பாக மூக்கின் வழியாக உட்புகுந்து மீண்டும் மூக்கின்வழியே வெளிச் செல்லுகின்ற காற்றை அவ்வாறு செல்லாமல் தடுத்து நிறுத்தி, மூலாதாரத்தின் மேல் உள்ள முதுகெலும்பின் அடிப்பாகத்திலிருந்து அம் முதுகெலும்பின் உள்ளால்*

*செல்லும்படி செலுத்தினால், அது சிறிது சிறிதாக அவ்வழியே அண்ணத்தில் உள்ள துளையை அடையும். அதனை வாய்வழி வாராது தடுத்தால், உச்சியை அடைந்து மூக்கு வழியாக வெளிவரும். இந்த மாற்று வழியால் உடலுக்குப் பல நன்மைகள் உண்டாதலுடன், தொழிற்படாமலே மடிந்து கிடக்கின்ற அறிவுக் கருவிகள் பலவும் எழுச்சியுற்றுத் தொழிற்படும். அதனால், உண்மைகள் பல எளிதிற் புலனாகும். இம்முறையைத் தான், 'இருவழியை (இடைகலை பிங்கலைகளை) அடைத்து, ஒரு வழியை (சுழுமுனையை)த் திறத்தல் வேண்டும்' என்று யோக நூல்கள் கூறுகின்றன. ஞானசம்பந்தரும்,*

> *ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி, ஒண்சுடர்*
> *ஞான விளக்கினை ஏற்றி, நன்புலத்(து)*
> *ஏனை வழிதிறந்(து) ஏத்துவார்க்(கு), இட*
> *ரான கெடுப்பன அஞ்செ ழுத்துமே. - தி.3 ப.22 பா.3*

*என்றும்,*

> *"ஐம்புலன், நாலாம் அந்தக் காரணம்,*
> *முக்குணம், இருவளி ஒருங்கிய வானோர்*
> *ஏத்த நின்றனை". - தி.1 ப.128*

*என்றும் அருளிச் செய்தார். இவ்வாறு மூச்சை அடக்கும்பொழுது இருதயத் துடிப்பும் நிற்கலாம். ஆயினும் அஃது இருதயம் கெட்டொழிந்ததாகாது. சிறிதுபொழுது அதன் செயலை நிறுத்திவைத்து, மீட்டும் தொடங்குவதேயாகும். இது, கடிகாரத்தில் ஊசலியை - பெண்டுலத்தைச் சிறிதுபொழுது நிறுத்திவைத்து, மீட்டும் அசைய விடுவது போன்றது. இவ்வாறாகவே, இது வாழ்நாள் நீட்டிப்பதற்கு ஏதுவாதல் விளங்கும். எவ்வாறாயினும், இவையெல்லாம் முறையறிந்து செய்யாத வழிப் பெருந்தீங்கு விளைப்பனவாகவே முடியும்.*

*'மூச்சைப்பிடிப்பது' என்றால், முருட்டுத்தனமாக, விடாமலே பிடித்துக் கொண்டிருப்பது என்பது பொருளன்று; முறையறிந்து சிறிது சிறிதாகப் பயின்று, இயன்ற ஒரு கால எல்லை அளவேதான் பிடிக்கத்தக்கது. 'சிரசாசனத்தில் இருப்பது' என்றால், "எப்பொழுதும் அப்படியே இருப்பது" என்பது பொருளாகாதது போலத்தான், பிராணாயாமம், பிரத்தியாகாரம் முதலியயாவும். சிறிது நேரம் செய்த சிரசாசனம், பின் பல நேரத்திற்குப் பயன் தருதல் போலத்தான் பிராணாயாமம் முதலியவைகளும் பயன்தரும்.*



## விசுத்தி

பஞ்சபூதம் - ஆகாயம்
வடிவம் - வட்டம்
ஐந்தெழுத்து - சிவாயநம

*அம் ஆம் இம் ஈம் உம் ஊம் ரும் ரூம்*
*லும் லூம் ஏம் ஐம் ஓம் ஔம் அம் அ:*
*ஆகிய பதினாறு எழுத்துகள்.*

*அம் முதல் அ: (விஸர்க்கம்) வரையிலுள்ள பதினாறு தளமுடைய கமலம். தாலுவின் அடிப்பாகத்திலுள்ளது. இதில் உன்மனீ, வாக்வாதினி என்ற இரு சக்திகளுடன் மகேச்வரன் வீற்றிருக்கிறார்.*




*கம் க்கம் கம் $^{4}$கம் ஙம் சம்*
*ச்சம் $^{3}$ஜம் $^{4}$ஜம் ஞம் டம் ட்பம்*
*ஆகிய பன்னிரண்டு எழுத்துகள்*

*கம் முதல் டம் வரையிலுள்ள பன்னிரண்டு எழுத்துக்களுடன் கூடிய பன்னிரண்டு தளமுடைய கமலம், ஹ்ருதயத்திலுள்ளது. கௌரி, அம்பிகை என்ற இரு சக்திகளுடன் ருத்ரன் வீற்றிருக்கிறார்.*

*மூக்கு வழியாக உட்புகுந்த காற்று மீளவும் அவ்வழியே திரும்பிப் போகாதவாறு தடுத்து, அதனைச் சுழுமுனை வழியாகச் செலுத்தி உச்சியினின்றும் மூக்கு வழியாக மீளச் செய்கின்ற யோகிகள், தங்கள் உடலை விட்டுப் போய்விடக் கருதுவார்களாயின், உச்சியை அடைந்த காற்று மூக்கு வழியாகப் புறப்பட ஒட்டாமல் மூக்கைப் பிடிப்பர்; அதனால், அக்காற்று உச்சியில் மென்மையாக மூடப்பட்டிருக்கும் பெருந்துளையை (பிரமரந்திரத்தை)த் திறந்து கொண்டு வெளியேறி விடும். அதனுடன் 'உடல்' என்னும் இயந்திரம் செயலற்று வீழ்ந்துவிடும். இது பற்றற்ற நிலைமையில் வீடுபெறும் விருப்பத்தால் இறை நினைவுடன் செயப்படுதலின், பாவமாதல் இல்லை. யோகியர் பலர் இவ்வாற்றால் உடல் விடுத்துச் சென்றதை நூல்களால் அறிகின்றோம். இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு, பெருமிழலைக் குறும்ப நாயனாரது செயலாகும். அதனைச் சேக்கிழார் பின் வருமாறு எடுத்தோதுவார்,*

*மண்ணில் திகழுந் திருநாவ லூரில் வந்த வன்றொண்டர்*
*நண்ணற் கரிய திருக்கயிலை நாளை எய்த நான்பிரிந்து*
*கண்ணிற் கரிய மணிகழிய வாழ்வார் போல வாழேன் என்(று)*
*எண்ணிச் சிவன்தாள் இன்றேசென் றடைவன் யோகத்தால்*

*என்பார்.*

*நாலு கரணங் களும்ஒன்றாய் நல்லஅறிவு மேற்கொண்டு*
*காலும் பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபாலநடு*
*ஏலவே முன் பயின்றநெறி எடுத்த மறைமூ லந்திறப்ப*
*மூல முதல்வர் திருப்பாத மடைவார் கயிலை முன்னணைந்தார்.*

*(மறை மூலம் - மூல மறை; மூல மந்திரம்; திருவைந்தெழுத்து 'கபால நடுவை மூல மந்திரம் திறக்க' என்க).*

*காலத்தே வெல்லுதல் - காலத்தால் தடைப்படாது, முக்காலப் பொருளையும் ஒருங்குணர்தல். இப்பேரறிவு பிறக்கவே, கருவி கரணங்களின் வழிச்செல்லும் ஏகதேச அறிவில் விருப்பம் நிகழாது என்க. 'மேலைத் துவாரத்தில்' என்னாது, "மேலைத் துவாரத்தின் மேல்" என்றதனால், 'நிற்றல் புருவ நடுவில்' என்பது பெறப்பட்டது.*

**573.** ஒருக்கால் உபாதியை ஒண்சோதி தன்னைப்
பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவைக்
கரைத்துணர் வுன்னல் கரைதல்உள் நோக்கல்
பிரத்தியா காரப் பெருமைய தாமே. **8**

**574.** புறப்பட்ட வாயுப் புகவிடா வண்ணந்
திறப்பட்டு நிச்சயஞ் சேர்ந்துடன் நின்றால்
உறப்பட்டு நின்றதவ் வுள்ளமும் அங்கே
புறப்பட்டுப் போகான் பெருந்தகை யானே. **9**

---

**572.** ***தெளிவுரை :-*** *சுவாதிட்டானத்தில் நின்று மூலாதாரத்திலும் ஊடுருவி விளங்குகின்ற பேரொளியைப் புருவ நடுவில் நின்று தியானிக்க வல்லவர்கட்கு, பிறப்பை நீக்குகின்ற ஞான மயனாகிய இறைவன் இரண்டற நின்று, அவரே தானாகி விளங்குவான்.*

***குறிப்புரை :-*** *'பிரத்தியாகாரத்தை ஆஞ்ஞையில் செய்ய வல்லவர்க்குச் சிவோகம் பாவனை கைவர, அவரே சிவமாய் நின்று, எல்லாம் செய்ய வல்லராவர்' என்றவாறு. முதலிரண்டடிகள், "மூலத் திருவிரல்" என்னும் திருமந்திரத்திற்போல மூலாதாரத்தை வரையறுத் துணர்த்தின. "உருவிடும்" என்ற "விடு" துணைவினை, "கருவிடும்" என்றதில் விடுதல், நீக்குதல்.*

*இவை இரண்டு திருமந்திரங்களாலும், 'ஆஞ்ஞை' என்னும் ஆறாவது ஆதார நிலை கூறப்பட்டது.*

**573.** ***தெளிவுரை :-*** *மனத்தை ஒருக்குதலால், கருவி கரணங்களின் தொடக்கையும், ஆன்ம அறிவையும் வேறு பிரித்துக் காணுதலும், அவ்வாறு காணும் காட்சியையும் மெல்ல மெல்ல மறந்து, அறிவு வடிவாகிய இறைவனை உணர்தலும், அந்த உணர்வினால் அவனிடத்து அன்பு மிகப் பெறுதலும், அந்த அன்பினால் அவனிடத்தே அழுந்திக் கிடக்க முயலுதலும் ஆகிய இவையே பிரத்தியாகாரத்தால் அடையும் பெரும் பயன்களாம்.*

***குறிப்புரை :-*** *இதனானே, 'பிரத்தியாகாரமாவது இது, என்பது விளங்கும். "ஒருக்கு" பிறவினையாய முதனிலைத் தொழிற்பெயர். உபாதி - குற்றச் சார்பு; அது மாயேயத்தொகுதி, சடமாய அவையும் ஒருவாற்றால் "சோதி" எனப்படுமாகலின், சித்தாய ஆன்ம அறிவை, "ஒண்சோதி" எனறார். உணர்வு, தொழிற்பெயர். பிரிவும், உணர்வும் ஆகுபெயர்கள். கரைத்தல் - அழித்தல். கரைதல் - இளகுதல். "உள"*



# ஆக்ஞை

*ஹம் ஷம் என்ற இரு அக்ஷரங்களுடன்*
*இரண்டு தளங்களையுடைய கமலம்*
*புருவமத்தியில் உள்ளது. இதில் மனோன்மநீ, தர்மசக்தி என்ற*
*சக்திகளுடன் சதாசிவன் குருவடிவமாக வீற்றிருக்கிறார்.*

*அம் முதல் அ: (விஸர்க்கம்) வரையிலுள்ள பதினாறு தளமுடைய கமலம். தாலுவின் அடிப்பாகத்திலுள்ளது. இதில் உன்மனீ, வாக்வதினி என்ற இரு சக்திகளுடன் மகேச்வரன் வீற்றிருக்கிறார்.*



**பிரும்ம ரந்திரம்**

*அதன்மேல் ஆயிரம் தளமுடைய கமலம், பிரமரந்திர ஸ்தானத்திலுள்ளது. அதில் பராசக்தியுடன் பரமசிவன் வீற்றிருக்கின்றார்.*

575. குறிப்பினின் உள்ளே குவலயந் தோன்றும்
வெறுப்பிருள் நீங்கி விகிர்தனை நாடுஞ்
சிறப்புறு சிந்தையைச் சிக்கென் றுணரில்
அறிப்புறு காட்சி அமரனு மாமே. 10

---

*என்பதன்பின், "ஆதல்" என்பது வருவிக்க. 'பயன்' என்னாது, 'பெருமை' என்றார். 'சித்தி, காயகற்பம் முதலியன சிறந்த பயன்கள் அல்ல' என்றற்கு.*

*இதனால், பிரத்தியாகாரத்தின் சிறப்புப் பயன் கூறப்பட்டது.*

574. ***தெளிவுரை :-*** *பிராணாயாமத்தை அறியாத முன்னெல்லாம் சிறிதும் நின்று பயன் தராமல் வெளியே போய்விடுகின்ற பிராணவாயு, பிராணாயாமத்தில் பூரகத்தால் உள்ளே புகுதலும் அது முன்போலப் போய்விடாதவாறு யோகி கும்பகம் செய்தலில் உறுதி பெற்று நிற்றலால் அவ்வாயு உண்மையாக அவனோடு ஒத்து நிற்குமாயின், மனமும் அவனால் அடையப்பட்ட பொருளாய், அவன், வழிப்பட்டு நின்றதேயாம். அதனால், இறைவன் அவ்யோகியினது உள்ளத்தினின்று புறம் போகான்; (சிவனை மறக்கும் நிலை உண்டாகாது என்றபடி).*

***குறிப்புரை :-*** *"புக" என்பது, "நின்றால்" என்பதனோடு முடிந்தது. "திறப்பட" என்னும் செயவெனெச்சம் காரணப் பொருட்டாகலின், "திறப்பட்டு" எனத் திரிந்து நின்றது. இதற்கு "யோகி" என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. 'நின்றது' என்பது, துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாய் வந்த கால வழுவமைதி.*

*இதனால், பிரத்தியாகாரத்தினது இன்றியமையாமை கூறப்பட்டது. இது கூறுவார், இதற்குப் பிராணாயாமம் இன்றியமையாமையும் உடன் கூறினார்.*

575. ***தெளிவுரை :-*** *பிரத்தியாகாரத்தை மனப்பயிற்சி அளவில் செய்தால், கால வரையறை இடவரையறைகள் இன்றி, எல்லாவற்றையும் ஒருங்கே உணரத்தக்க யோகக் காட்சியைப் பெறுதலே அதற்குப் பயனாய் முடியும். அதனை அஞ்ஞான இருள் நீங்கி இறைவனை உணரும் கருத்தோடு செய்யின், தான் இறைவனை உணர்தலேயன்றிப் பிறரையும் உணரச் செய்கின்ற கடவுள் தன்மையையும் உடையவனாகலாம்.*

*குறிப்புரை :-* *மனத்தைக் குறித்த இடத்தில் செல்லச் செய்தலால் பற்றிப் பிரத்தியாகாரத்தை, "குறிப்பு" என்றார். வெறுப்பு இருள் - வெறுக்கப்படுவதாகிய அறியாமை. "நாடும்" என்பது எச்சம். சிக்கென்று உணர்தல் - உறுதியாகப் பற்றுதல். 'அறிவிப்பு' என்பது இடைக்குறைந்து நின்றது. 'பிறருக்கு உணர்த்தும் தன்மை' என்றது, குருவாகும் தன்மையை, எந்நிலையிலும் குரு இறைவனேயாதல் பற்றி, "அமரன்" என்றார்.*

*இதனால், பிரத்தியாகாரத்தின் கன்ம வகை ஞானவகைகளின் பயன்கள் கூறப்பட்டன. 'தாரணை, தியானம், சமாதி' என்பவற்றையும் இங்ஙனம் பகுத்துக் கூறுதல் காண்க.*

*உயிருக்கு மாயாபந்தத்தின் அடிநிலை, மாயாகாரியங்களை மறவாது உணர்ந்து நிற்கும் பொருள் உணர்வேயாம். இவ்வுணர்வு சொல்லால் உண்டாகலின், அவ்வுணர்வு சொல் வடிவிலே அமைவதாகின்றது. ஆகவே, அப்பந்தத்தினின்றும் நீங்குதற்குச் சொற்களைச் சுட்டி உணர வேண்டியுள்ளது.*

*சொற்கள் அளவில்லனவாயினும், அச் சொற்களுக்கு மூலமாய் உள்ள எழுத்துக்கள் அளவிற்கு உட்பட்டன. ஆகவே, எழுத்துக்களைச் சுட்டி உணரின், அது சொற்களை உணர்வதே ஆகும். அதனால், அனைத்து எழுத்துக்களையும் மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களில் ஏற்ற பெற்றியில் வைத்துச் சிந்திக்கும் முறை யோக நூல்களில் கூறப்படுகின்றது.*

*'அனைத்து மொழிகளில் உள்ள எழுத்துக்களும் வடமொழி எழுத்துக்களில் அடங்கிக் கிடக்கின்றன' என்பது வேத மதங்களின் கொள்கை. அதனால், அவற்றை அவை, 'மாத்துருகாட்சரம்' (எல்லா மொழிக்கும் மூலமாய் உள்ள எழுத்துக்கள்) எனக் கூறும்.*

*வடமொழியில் உள்ள எழுத்துக்கள் ஐம்பத்தொன்று. க்ஷகாரத்திற்குப் பின்பும் வேறு இரண்டெழுத்தைச் (க:வ!) சேர்த்து 'ஐம்பத்து மூன்று' என்று ஒருசிலர் (நன்னூலார் முதலியோர்) கூறுவர். பாணினியார் முதலாகப் பலரது கொள்கையும் 'ஐம்பத்தோரெழுத்து' என்பதே. அவற்றுள்ளும் 'லகாரம் ளகாரங்கட்கும் தம்முள் வேற்றுமை இல்லை' என்று கொண்டு, ளகரத்தை நீக்கி, 'ஐம்பதெழுத்து' என்றே கூறுவர். க்ஷகாரமே நீக்கற்பாலது என்பது மற்றொரு கொள்கை. 'ளகாரம் க்ஷகாரம்' இரண்டையுமே நீக்கி, 'நாற்பத்தொன்பது எழுத்து'*

என்றே கொள்ளவேண்டும் என்பது வேறொரு கொள்கை. 'ஆல வாயுக் கடவுள் அகாரத்திற்கு உரியவனாய் நிற்க, ஆகாரம் முதலிய ஏனை நாற்பத்தெட்டிற்கு நாற்பத்தெண்மர் புலவர்களாக, கடைச்சங்கப் புலவர் கண்ணுதற் கடவுளை உள்ளிட்டு நாற்பத்தொன்பதின்மராயினர்' எனத் திருவிளையாடற் புராணம் கூறுவது, இறுதியிற் கூறிய கொள்கையை வலியுறுத்துவதாய் உள்ளது. எனினும், இந்நாயனார் (திருமூலர்) பலவிடத்தும் ஐம்பதெழுத்தே கூறுகின்றார்.

வடமொழிக்குச் சிறப்பெழுத்தாகக் கூறப்படுவன பல இருப்பினும், அதற்குச் சிறப்பிற் சிறப்பாக உள்ள எழுத்து முப்பத்து மூன்றாவது மெய் (ஹ என்னும்) எழுத்தே, உயிரெழுத்தில் இறுதியில் உள்ள ஒன்றும், இம்மெய்யின் சார்புடையதே. 'அ' என்றால் பிறமொழி; 'ஹ' என்றால் வடமொழி; 'ஆம் ஊம், ஓம்' என்றால் பிற மொழி; 'ஹாம், ஹூம், ஹோம்' என்றால் வடமொழி எனக் கொள்ளப்படுகின்றது. வடமொழியைத் 'தெய்வமொழி' என்றும், அதனால் 'அதுவே மந்திர மொழி' என்றும் சொல்வதற்குச் சிறந்த காரணம், இம்முப்பத்து மூன்றாம் மெய்யைச் சிறப்பாக ஆள்வதேயாகும்.

தமிழில் ஆய்த எழுத்திற்கு இத்தன்மை உண்டு. பிற மொழிகளிலும் இந்த மெய்யெழுத்து உண்டு. என்றாலும், அம்மொழிகள் இவ்வெழுத்திற்குத் தனிச் சிறப்புக் கொடுக்கவில்லை. ஆகவே, இந்த முப்பத்து மூன்றாவது மெய்யை யோகநூல்கள் ஆறு ஆதாரங்களில் மேலானதாகிய ஆஞ்ஞையில் (புருவ நடுவில்) வைத்துத் தியானிக்கும்படி கூறுகின்றன. அதனோடு கணக்கில் கொள்ள வேண்டாத க்ஷகாரமும் அங்குச் சேர்க்கப்படுகின்றது. ஆஞ்ஞைக்குக் கீழ் உள்ள விசுத்தியில் (கண்டத்தில்) உயிரெழுத்துப் பதினாறும், அதற்குக் கீழுள்ள நான்கு ஆதாரங்களிலும் கீழிருந்து முறையே ககாரம் முதலாக, 'பன்னிரண்டு, பத்து, ஆறு, நான்கு' என்னும் அளவிலான மெய்யெழுத்துக்கள் ஸகாரம் ஈறாக வைத்துத் தியானித்தல் கூறப்படுகின்றது. ஆகவே, 2 + 16 + 12 + 10 + 6 + 4 = 50 எழுத்துக்களும் 6 ஆதாரங்களில் வைத்துத் தியானிக்கும் முறை பெறப்படுகின்றது. இதில் ளகாரம் சேர்க்கப்படாமை குறிப்பிடத்தக்கது. எழுத்துக்களின் முறைவைப்பில் முன்முன் உள்ளவை சிறப்புடையன : பின் பின் உள்ளவை சிறப்பில்லன.

ஒவ்வோர் எழுத்தும் தாமரை மலரின் ஒவ்வோர் இதழின் மேல் உள்ளனவாகத் தியானித்தல் வேண்டும் எனப்படுகின்றது. எனவே, மூலாதாரம் முதலாக ஆறு ஆதாரங்களும் முறையே நான்கு, ஆறு, பத்து, பன்னிரண்டு, பதினாறு, இரண்டு என்னும் இதழ்களை உடைய

தாமரை மலர்களாகச் சொல்லப்படுகின்றன. இருதய கமலம் எட்டிதழ்த் தாமரையாகக் கூறப்படுதல் தத்துவக் கோட்பாடு பற்றியது; ஆகவே, அதற்கும், இதற்கும் தொடர்பில்லை. உணர்வு, தொடக்கம் முடிவு இரண்டிலும் குவிந்தே இருக்கும். இடைநிலையில் விரிந்திருக்கும்; தொடக்கத்தில் உள்ள குவிவிற்குக் காரணம் அறியாமையும், முடிவில் உள்ள குவிவிற்குக் காரணம் அடக்கமும் ஆகும். ஆகவே, கீழே உள்ள மூலாதாரக் கமலமும், மேலே உள்ள ஆஞ்ஞைக் கமலமும் குறைந்த இதழ்களைக் கொண்டவையாகவும், இடையில் உள்ள ஆதாரங்கள் மிக்க இதழ்களைக் கொண்டவையாகவும் குறிக்கப்படுகின்றன.

இனி, ஆறு ஆதாரங்களில் மேலானதாகிய ஆஞ்ஞை 'விந்துத்தானம்' எனப்படுதலால், அதற்குக் கீழ் உள்ள விசுத்தி முதல் நான்கு ஆதாரங்கட்கு அதிதேவராய் அங்குள்ள கமல மலராகிய ஆசனத்தின் மேல் வீற்றிருக்கின்ற கடவுளர் முறையே, 'சதாசிவர், மகேசுரர், உருத்திரர், திருமால்' என்பவராவர். இந்த நால்வரும் முறையே, 'ஆகாயம், வாயு, தேயு, அப்பு' என்னும் பூதங்கட்கு அதிதேவர். ஆதலால், அப்பூதங்களுக்குரிய பீச மந்திரங்களாகிய 'ஹம், யம், ரம், வம்' என்பன அத் தாமரை மலர்ப்பொகுட்டின்கண் வைத்து எண்ணப்படுகின்றன. இவற்றிற்கேற்ப மூலாதாரத்தில் பிருதிவிக்கு அதி தேவராகிய பிரமாவையும், அதற்குரிய பீசமாகிய 'லம்' என்பதையுமே வைத்துத் தியானித்தல், வேண்டுமாயினும், மூலாதாரம் 'குண்டலிக்கு இடம்' எனப்படுதலால், அதற்குரிய விநாயகரையும், பிரணவத்தையுமே அங்கு வைத்துத் தியானித்தல் சொல்லப்படுகின்றது.

இனி, மந்திரத்தை மட்டும் 'லம்' என்பதாகவே வைத்துத் தியானித்தலும் காணப்படுகின்றது. ஆகவே, உலகில் கோயிலைப் பெறாத பிரம தேவர். ஆதாரங்களிலும் பிரமசாரியாராகிய விநாயகர் இடத்தில், அல்லது தமது தோற்றத்திற்கு முதலாகிய திருமாலிடத்தில் அடங்கி நிற்பவராகின்றார். இனி, சுவாதிட்டானம் முதலாகப் பிரமா முதலிய தேவர்களை வைத்து, சதாசிவரை ஆஞ்ஞையில் கொள்வாரும் உளர். சதாசிவரை விசுத்தியில் கொள்ளும் நிலையில் ஆஞ்ஞையில் சதாசிவருக்கு மேல் உள்ள சத்தியே தியானிக்கப்படுவாள். இவ்வாறெல்லாம் மனத்தை அகமுகப்படுத்தி நோக்க, புற நோக்குக் குறைந்து, அகநோக்கு மிகுவதாம் என்க. இத்துணையும் பிரத்தியாகாரம் கூறியவாறு.

## 7. தாரணை

*இதுமுதல், ஒன்பது திருமந்திரங்களால் தாரணை உணர்த்துகின்றார். தாரணையை, ''பொறைநிலை'' என்பர் நச்சினார்க்கினியர் (தொல். பொருள். புறம். 20) "பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி'' என்னும் நான்கையும் முறையே ஞானத்துள்; கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்னும் நான்கும் போலக்கொள்க. அஃதாவது, பொறிவழிச் சென்ற மனத்தை மூலாதாரம் முதலிய ஆதாரங்களின் வழிச் செலுத்துதல் பிரத்தியாகாரம்; அங்ஙனம் சென்ற மனத்தை மீளவும் புறத்தே பொறிவழிச் செல்லாது தடுத்து அவ்வாதாரங்களிலே நிறுத்துதல் தாரணை; அங்ஙனம் நின்ற மனத்தால் அவ்வாதார நிலைகளை எல்லாம் ஊன்றி நினைத்தல் தியானம்; அத்தியான முதிர்ச்சியால் தன்னை மறந்து அவ்வாதாரப் பொருளேயாய் விடுதல் சமாதி என்க. ஆதன, பிராணாயாமங்களாகிய மேல்நிலைகளில் நிற்கும் பொழுதும் கீழ்நிலைகளாகிய இயம நியமங்கள் யோகியால் விடப்படாதவாறு போலப் பிரத்தியாகாரம் முதலிய மேல்நிலைகளில் நிற்கும்பொழுதும் கீழ்நிலைகளாகிய ஆதன பிராணயாமங்கள் அவை தாமாக நீங்கினல்லது, அவனால் விடப்படா. தாரணை - தரிக்கச் செய்தல், நிலைபெறச் செய்தல்.*

*இயமம், நியமம் முதலிய எட்டும் யோகத்தின் உறுப்புக் களாயினும், அவற்றைப் பெறுதலே "இயம யோகம், நியம யோகம் முதலாக எண்வகை யோகமாகச் சொல்லப்படும். இனி, பதுமம் முதலிய ஆசனங்களில் இருக்கும் ஆசன யோகமும் ''பதுமாசன யோகம், கூர்மாசன யோகம்" முதற் பலவாகவும், பிராணாயாம யோகம், "பூரக யோகம், கும்பகயோகம், இரேசக யோகம்'' என மூன்றாகவும் சொல்லப்படும். இனிப் பிரத்தியாகாரம் முதலிய நான்கும் தன்மையால் நான்காயினும், ஆதாரத்தில் நிற்றலாகிய பொதுமையால் "ஆதார யோகம்" என ஒன்றேயாம். அதனால், இந்த ஆதார யோகமும் மேற்கூறியன போல மூலாதார யோகம், சுவாதிட்டான யோகம் முதலிய ஆறாகும். இவ்வாறுக்கு மேற்பட்டது நிராதார யோகம். அது பின்னர்ச் சொல்லப்படும். இயமம் முதலிய எட்டு உறுப்புக்களுக்கும் யோகம் கைகூடுதலே உண்மைப் பயனாயினும், ஒவ்வோர் உறுப்பிற்கும் இடைநிலைப் பயனும் வேறுவேறு உள என உணர்க.*

*யோகசூடாமணியில், மூன்று நொடியளவுள்ள காலம் மாத்திரை; மாத்திரை பன்னிரண்டு கொண்ட காலம் பிராணாயாமம் எப்போது நிலைக்கிறதோ அப்போது பிராணன் பிரமரந்திரம் வரை செல்கிறது;*

576. கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாத்தண் டூடே வெளியுறத் தான்நோக்கிக்
காணாக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே. 1

---

*பிரமரந்திரத்தை அடைந்த பிராணன் இருபத்தைந்து விபலம் வரையில் நிலைத்தால் அது பிரத்தியாகாரமாம்; ஐந்து நாழிகை வரை நிலைத்தால் தாரணையாம்; அறுபது நாழிகை நிலைத்தால் தியானமாம்; பன்னிரண்டு நாள் நிலைத்தால் சமாதியாம் என்று கூறப்பெற்றுள்ளதையும் ஈண்டுச் சிந்திக்க.*

***576. தெளிவுரை :-*** *கோணுதல் (புலன்வழி ஓடுதல்) உடையதாய் இருந்த மனம், பிரத்தியாகாரத்தில் அதனை விடுத்து ஒருவழிப்பட, அதனை அவ்வழியில் முன்போல மீளாதவாறு குறிக்கொண்டு தடுத்து, சுழுமுனை வழியாக மேலே செல்கின்ற வாயுவே பற்றுக்கோடாக மேற்செலுத்தி, ஆஞ்ஞையை அடையுமாற்றால் அவ்விடத்திலே செய்யும் தியானத்தால் ஐம்பொறிகள் செயலற்றிருக்கும் நிலையை எய்தினவர்கட்கு, அந்நிலைதானே பிறவி வரும் வழியை அடைக்கின்ற உபாயமாகிவிடும்.*

***குறிப்புரை :-*** *வீணாத்தண்டு - முதுகந்தண்டு. இடகலை பிங்கலைகள் முதுகந்தண்டின் இருபுறமும் பின்னிச் செல்லச் சுழுமுனை முதுகந்தண்டின் உட்புறமாக விளங்குதலின் வீணாத் தண்டூடே நோக்கி என்றார். வெளியுற - அங்ஙனம் நடுநாடியின் வாயிலாகப் பரவெளியைப் பார்த்து. பரவெளி - சிதாகாசம். அங்ஙனம் இருப்பார்க்குக் கருவி கரணங்கள் காரியப்படாமையின் கண் விழித்திருந்தாலும் புலன் சென்று பற்றாது; காதுகளில் பலவொலிகள் வந்து வீழ்ந்தாலும் சிந்தையிற் செல்லாது; ஆதலின் காணாக்கண் கேளாச் செவியென்று இருப்பார் என்றார். விழித்த கண் குருடாய்த் திரியும் வீரர்கள் பலரால் என்றதும் நோக்குக. தானே சென்று புலன்களைப் பற்றுவதாகிய கண்ணையும், புலன்கள் வந்து பற்றக் கொள்வதாகிய செவியையும் கூறவே இத்தன்மையுடைய ஏனைய பொறிகளும் காரியப்படா என்பது குறிப்பித்தவாறாம். வழி - உபாயம். கீழ் - கீழ்மையான வாயில்; அவை ஐம்பொறிகள் கட்டுதல், இங்கு, ''தடுத்தல்'' என்னும் பொருளது. விலா எலும்பு, நாடிகள் முதலியவைகளைக் கட்டியுள்ளமையால், முதுகெலும்பைத் தந்திகள் முதலியவற்றை உடைய வீணைத் தண்டோடு உவமித்தல் நூல் வழக்கு.*

577. மலையார் சிரத்திடை வானீர் அருவி
நிலையாரப் பாயும் நெடுநாடி யூடுபோய்ச்
சிலையார் பொதுவில் திருநட மாடும்
தொலையாத ஆனந்தச் சோதி கண் டேனே. 2

---

*''சிவபெருமான் திரிவிக்கிரமரது முதுகெலும்பை வீணையாகக் கொண்டார்'' என்பது புராணம். ஆஞ்ஞை ஆகாயமாகச் சொல்லப்படுதலின், ''வெளி'' என்றார். நோக்கப்படும் பொருள் அவரவர்க்கு ஏற்ற பெற்றியான் அமைதலின், அதனைக் கூறாராயினர். "கண், செவி" என்பவை பிற பொறிகளையும் தழுவி நின்ற உப லக்கணம். 'என்று', என்னும் எண்ணிடைச் சொல்லின்பின் 'இவற்றை உடையராய்' என்பது வருவிக்க. இனி, 'காணா கண் கேளா செவி' என முற்றுத் தொடராகப் பாடம் ஓதுதலுமாம். "வாணாள் வழி அடைக்கும் வழி" என்பதனை, "வாழ்நாள் வழியடைக்குங் கல்" (குறள், 38) என்னும் திருக்குறளோடு ஒப்பிட்டு நோக்குக. "பிறவாமைக்கு வழியாதல், ஞானத்தின் வழியாக" என்க.*

*இதனால், 'தாரணையாவது இது' என்பதும், அதனது சிறப்பும் கூறப்பட்டன.*

577. ***தெளிவுரை :-*** ***மேருமலையின் உச்சியினின்றும் வானீர் அருவி எப்பொழுதும் வீழ்ந்து கொண்டிருக்கும். வில் வடிவாய் அமைந்த அம்பலத்தில் ஒளிவடிவாகிய சிவன், எல்லையில் இன்பத்தைத் தரும் ஆனந்தத் திருக்கூத்தினை எப்பொழுதும் ஆடிக் கொண்டே இருப்பான். இவ்விரண்டையும் நான் நீண்ட சுழுமுனை நாடி வழியாகச் சென்று கண்டேன்.***

***குறிப்புரை :-*** ***நீங்களும் இவற்றைக் காண முயலுதலேநன்று என்பது குறிப்பெச்சம். 'மலை' என்பதனை உயர்வு பற்றி, "மலையார்" என உயர்திணையாக்கிக் கூறினார். 'மலை' என்பது தலைமை பற்றி மேருவைக் குறித்தது. முதுகெலும்பை, 'வீணைத் தண்டு' என்பது போல, 'சந்திரசூரியர்' எனப்படுகின்ற இடைநாடி பிங்கலை நாடிகளால் சூழப்பட்டுள்ளமை பற்றி, 'மேருமலை' எனக் கூறலும் யோகநூல் வழக்கு. 'அதன் தலை' என்பது, 'புருவநடு, தலை' என்பவற்றை ஏற்ற பெற்றியாற் குறிக்கும். இங்கு அது புருவநடுவைக் குறித்தது. 'வானீர்' என்பது சிலேடையாய் 'ஆகாய கங்கை' (வான்நீர்) என்றும், 'விந்து' எனப்படும் வெண்பால் - சுக்கிலம்' (வால் நீர்) என்றும் இருபொருள் குறித்து, உருவக நயத்திற்கு இயைந்து நின்றது.***

***'கருவிற்கு வித்தாகிய வெண்பால், நெற்றியில் தோன்றிப் புருவநடுவில் உருப்பட்டு நிற்கின்றது'*** *என்பதும், 'அஃது இயற்கையாக இடைநாடி பிங்கலைநாடிகள் வழியாகக் கீழ் இறங்கிச் சுவாதிட்டானத்தை அடைவதனாற்றான் பால் உணர்ச்சியாகிய இழி நிலை உண்டாகின்றது' என்பதும், 'அவ் இழிநிலை எவ்வாற்றானும் உடற்குக் கேடுபயப்பதே' என்பதும், அதனை அவ்வாறு அவ் இரு நாடிகள் வழியாக இறங்காது, யோகசாதனையால் நடுநாடியாகி சுழு முனை வழியாக இறங்கச் செய்தால், 'அஃது உடலுக்கு வலுவூட்டி, நரை திரை மூப்புப் பிணிகள் வாராமற் காக்கும் அமுதமாய்ச் சிறந்து நிற்கும்' என்பதாம் யோகநூற் கொள்கைகள். அதுபற்றியே அவை இவ்வெண்பாலை, 'அமுதம்' என்றே குறிப்பிடுதலுடன், அவற்றை நடுநாடிவழியாக ஏற்பதை, 'பருகுதல்' என்றேயும் கூறுகின்றன.*

*சிறப்புமுதலாய காரணங்கள் பற்றி இவற்றையெல்லாம் ஆடவரை நோக்கியே அவை கூறுகின்றனவாயினும், பெண்டிர்க்கும் இவை ஒத்தன என்பதே கருத்து, எவ்வாறெனில், யாதொரு சாதனையும் பெண்டிரை விலக்கி, ஆடவர்க்கு மட்டுமேயாகக் கூறுதல் வேத ஆகமங்களின் கருத்தன்று ஆதலின். சாதனங்களை மேற்கொள்ளும் முறைகளில் சிறிது மாறுபடுதல் கூடும்; அவ்வளவே வேற்றுமை. அதனால், 'புருவநடு விந்துத்தானம்' என்பது பெண்டிர்க்கும் பொதுப்படக் கூறுவதேயாம். ஆயினும், அவர்கட்குப் பால் உணர்ச்சி காரணமாய நீர் மணிபூரகத்தை அடையும்பொழுதே கருப்பையிற் கலந்து செம்பாலாக (சோணிதமாக) மாறிப் பின் சுவாதிட்டானத்தை அடைவதாகும்.*

*"பாயும் நாடும்" என்பன முற்றுக்கள். "நெடுநாடி ஊடு போய்" என்பதனை, "கண்டேன்" என்பதற்கு முன்வைத்து உரைக்க. புருவ நடு பிறைவடிவிற்று ஆதலாலும், அங்கு இறைவனது நடனம் உளதாதலாலும் அதனை "சிலை ஆர் பொது" என்றார். இஃது உயிர்கட்கு அறிவைப் பயக்கும் பர நடனம் - அதிசூக்கும நடனம்' என்பதை ஞான நூல்களை நோக்கி அறிக. இருதயத்தில் செய்யும் நடனம் சூக்கும நடனமேயாம். இருதயம் அருள்வெளி - சிற்றம்பலம். புருவநடு ஆனந்த வெளி - பேரம் பலம். 'சோதி திருநடம் ஆடும்' என மேலே கூட்டி, ''ஆடும்'' என்பதன்பின், இவற்றை' என்னும் சொல்லெச்சம் வருவித்துக் கொள்க.*

*இதனால், ஆஞ்ஞைத் தாரணையின் இயல்பு கூறப்பட்டது.*

578. மேலை நிலத்தினாள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தில் துயில்கின்ற மூர்த்தியை
ஏல எழுப்பி இவளுடன் சந்திக்கப்
பாலனும் ஆவான் பராநந்தி ஆணையை. 3

---

578. ***தெளிவுரை :-*** *கருவை ஏற்றுக் குழவியாக மாற்றித் தருகின்ற பெண், மேல் மாடத்தில் எதிர்நோக்கி இருக்கின்றாள். அவளுடன் சேர வேண்டிய ஆடவனோ அடித் தலத்தில் உறங்கிக் கொண்டிருக்கின்றான். அவனை நன்றாக விழித்தெழச் செய்து அப் பெண்டுடன் கூடப்பண்ணினால், நல்ல பாலகன் பிறப்பான்; இதற்கு என் குருவின்மேல் ஆணை.*

***குறிப்புரை :-*** மேலை *நிலம், ஆஞ்ஞை.* வேதகம் *- இரசவாதம்; இங்கு, பாசஞான பசுஞானங்களைப் பதி ஞானமாக மாற்றுதல். பெண் பிள்ளை, திரோதான சத்தி, இவளது செயல் உயிரின் உணர்வைப் பக்குவப்படுத்துதலின், "வேதகப் பெண்பிள்ளை" என்றார், எழுகின்ற - எழுப்பினால் எழத்தக்க; இஃது எதிர் காலத்தில் நிகழ்காலம். 'துயில்கின்ற' எனப் பாடம் ஓதுதலே சிறக்கும். மூர்த்தி, உறங்கிக் கிடக்கின்ற குண்டலியோடு சேர்ந்து அதுவேயாய், அறியாமையாயுள்ள உயிரின் உணர்வு. இஃது எழுந்து மேலுள்ள ஆதாரங்களையும் கடந்து ஆஞ்ஞையை அடைந்து, அங்குநின்று அறிவைப் பயக்கின்ற திரோதான சத்தியை உணருமாயின், அவ்வுணர்வு, 'யான், எனது' என்னும் பற்றுக்களினின்றும் நீங்கித் தூய்மை பெறுவதாகும். அதனையே "பாலன்" என்றார். "பாலனும்" என்ற சிறப்பும்மையால், 'அப் பாலன் இம்மை மறுமை நலங்களுடன், வீட்டையுந் தரத்தக்கவன்' என உரைக்க. இனி "மூர்த்தி" என்பதற்கு, 'விநாயகர்' என்றாயினும், 'பிரமன்' என்றாயினும் பொருள் கொள்ளின் "பெண்பிள்ளை" என்றவளை வல்லபை, வாணி' என ஏற்ற பெற்றியான் உரைத்துக் கொள்க. இவ்விருவர்க்கும் பிள்ளை இல்லையாயினும் 'பிறப்பான்' என்பதனை உம்மையால் உரைத்துக் கொள்க. இவ்வாறு பொருள் உரைப்பினும், கருத்து மேற்கூறியதே யாம் 'ஆதல்' - உண்டாதல்.*

*இதனால், ஆஞ்ஞைத் தாரணையது சிறப்புக் கூறப்பட்டது.*

579. ***தெளிவுரை :-*** *பூரக இரேசகம் செய்து கும்பிக்கப்பட்ட பிராணவாயு கீழ்ப் போகாதவாறு எருவாயை அடைத்து அதனால் போகாது நின்ற வாயுவை மூலாதாரம், சுவாதிட்டானம் முதலாக மேல் நோக்கிப் போகச் செய்து, ஆஞ்ஞைக்குக் கீழ் உள்ள இடை*

**579.** கடைவாச லைக்கட்டிக் காலை எழுப்பி
இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி
மடைவாயிற் கொக்குப் போல் வந்தித் திருப்பார்க்
குடையாமல் ஊழி இருக்கலு மாமே. **4**

---

*ஆதாரங்கள் ஒவ்வொன்றிலும் மனத்தை நன்றாகப் பொருந்த வைத்து, நீர் மடையில் கொக்கு, தான் வேண்டுகின்ற மீன் வரும் வரையில் அதனையே குறிக்கொண்டு நோக்கிச் செயலின்றியிருத்தல் போல, அங்குக் கருதப்படுகின்ற கடவுளரால் அவ்வாதாரயோகம் கைவரு மளவும் அவரை வழிப்பட்டிருப்பவர்கட்கு, யோகநிலை முற்றும் கைவரும் காலம் வரையில் இறவாமலே இருத்தலும் கூடும்.*

***குறிப்புரை :-*** *'மடை வாயிற்கொக்கு', "கொக்கொக்க கூம்பும் பருவத்து" (குறள், 490) "இரைதேர் கொக்கொத் திரவுபகல் ஏசற்றிருந்தே வேசற்றேன்" (தி.8 கோயில் மூத்த திருப்பதிகம், 5) மடைத்தலையில் - ஓடுமீனோட உறுமீன் வருமளவும் - வாடியிருக்குமாம் கொக்கு" (மூதுரை, 16) எனப் பலவிடத்தும் கூறப்படுதல் காண்க.*

*யோகம் கைவருதல், ஆதார யோகங்கள் ஆறும் பெற்று, அதற்குமேல் நிராதார யோகத்தை அடைந்து, அப்பால் மீதானத்தை உணர்ந்து நிற்றலாம். 'அந்நிலை கைகூடுதற்கு நெடுங்காலம் செல்ல வேண்டியிருப்பினும், 'அதுகாறும் உடல் அழியாது நிற்கும் நிலையும் தாரணையாலே உளதாகும்' என்பார், "உடையாமல் ஊழி இருக்கலும் ஆமே" என்றார். உம்மை, யோகம் கைவருதலைத் தழுவிநின்ற எச்ச உம்மை. முதல் மூன்று அடிகள் தாரணையைச் செய்யும்முறை கூறின. வந்தித்தலுக்குச் செயப்படுபொருளாகிய 'கடவுளர்' என்பது சொல்லெச்சமாக வந்து இயைந்தது. 'சிவயோகம் பயில்வார்க்கு இக்கடவுளர் சம்பு பட்சத்தவர்' எனவும், 'பிறயோகம் பயில்வார்க்கு இவர் அணுபட்சத்தினர்' எனவும் உணர்க.*

*இதனால், தாரணை செய்யுமாறு கூறப்பட்டது. ஒரு கருத்துப் பற்றித் தாரணை வாழ்நாள் நீட்டிப்பிற்கு ஏதுவாதலும் உடன் கூறப்பட்டது.*

**580.** ***தெளிவுரை :-*** *காலத்தால் கலந்திடப்பட்ட உயிருடன் அக்காலம் கலந்து நிற்கும் இயல்பை ஆராய்ந்து அறியின், அது பிராண வாயுவின் திட்பமேயாம். ஆகவே, அந்த உயிர் பிராண வாயுவை அடக்கும் முறையை அறிந்து கொள்ளுமாயின், உயிர் நிற்பது*

580. கலந்த உயிருடன் காலம் அறியில்
கலந்த உயிரது காலின் நெருக்கம்
கலந்த உயிரது காலது கட்டிற்
கலந்த உயிருடல் காலமும் நிற்குமே. 5

581. வாய்திற வாதார் மனத்திலோர் மாடுண்டு
வாய்திறப் பாரே வளியிட்டுப் பாய்ச்சுவர்
வாய்திற வாதார் மதியிட்டு மூட்டுவர்
கோய்திற வாவிடிற் கோழையு மாமே. 6

---

*போலவே அதனைக் கலந்து நிற்கின்ற காலமும் ஓடாது ஒரு நிலையாய் நிற்கும்.*

***குறிப்புரை :-*** *"அஃதாவது வாழ்நாள் கழியாது" என்பதாம். இஃது ஒருவாறு முன்னே கூறப்பட்டதாயினும், துணிவு பிறத்தற்பொருட்டு இங்கும் இனிது விளங்கக் கூறினார். இவ்வாறு இன்றியமையாத இடங்களில் சிலவற்றைப் பின்னரும் இவ்வாறு வலியுறுத்தி அருளிச் செய்வார். கால் - காற்று, பிராண வாயு. காலின் நெருக்கம் - பிராண வாயுவின் நெருக்கம் - கும்பகம்.*

*இதனால், "தாரணை, வாழ்நாள் நீட்டிப்பிற்கு ஏதுவாம்" என மேற்கூறியதற்கு ஏதுக் கூறப்பட்டது.*

**581. *தெளிவுரை :-*** *யாவரிடத்திலும் உள்ளமாகிய கருவூலத்தில் ஒரு பெருஞ்செல்வம் உள்ளது. ஆயினும், அக்கருவூலத்திற்கு வாயிலாய் உள்ள சுழுமுனை வழியைத் திறக்க மாட்டாதவர் அச்செல்வத்தை எய்தப் பெறார். அவ்வழியைத் திறக்க விரும்புவோர் பிராண வாயுவை அங்குக் கும்பகம் செய்து திறந்து கும்பித்த அவ்வாயுவை உள்ளே பாய்ச்சுவர். அது செய்யாதோர் மேற்கூறிய செல்வத்தைப் பெறுதற்குத் தம் அறிவை அக்கருவூலத்தின் புறத்தே மோதவிட்டு அல்லற்படுவர். கருவூலத்தைத் திறவாமலே அதிலுள்ள செல்வத்தைப் பெற முயலுபவன் அதனைப் பெறாது பாழுக்கு உழைப்பவனாதலேயன்றி, 'அறிவிலி' என அறிவுடையாரால் இகழவும் படுவான்.*

***குறிப்புரை :-*** *"வாய்திறவார்" என்பது யோகியரல்லாத பலரையும் குறித்தது. "மனம்" என்றது அதற்கு இடமாகிய ஆதாரங்களை "வாய் திறத்தல்" என்பதனை "உரையாடல்" எனக் கொண்டு, அதற்கு இயையவும் உரை உரைப்பர். அவர், "மதி" என்பதனைச் சந்திர*

**582.** வாழலு மாம்பல காலம் மனத்திடைப்
போழ்கின்ற வாயு புறம் படாப் பாய்ச்சுறில்
ஏழுசா லேகம்இரண்டு பெருவாய்தற்
பாழி பெரியதோர் பள்ளி அறையே. 7

---

*மண்டலமாகக் கொள்வர். "வளியிட்டுப் பாய்ச்சுவர்" என்பதற்கு, "பிராணவாயுவைப் பாழ்படுத்துவர்" என்னும் பொருள் ஏலாமை யாலும், பிறவாற்றாலும் அஃது உரையாகாமையறிக. "கோயில்" என்பது கடைக்குறையாயிற்று. "கோய், செப்பு; சிமிழ்" எனவும் கொள்வர்.*

*இதனால், தாரணையது இன்றியமையாச் சிறப்புக் கூறப்பட்டது.*

582. ***தெளிவுரை :-*** ***சுழுமுனை வழியை ஊடறுத்துச் செல்ல வல்லதாகிய பிராணவாயுவைப் புறத்துப் போகாதவாறு தடுத்து அச்சுழுமுனை வழியுட் பாய்ச்சினால் ஏழு பலகணிகளையும், 'தலைவாயில், கடைவாயில்' என்னும் இரண்டு பெரு வாயில்களையும் உடைய பாழ் வீடு இன்பமாகக் கிடந்து உறங்கத் தக்க நல்ல பள்ளியறை யாய்விடும்.*** *அப்பொழுது அதில் ஆதாரங்களாகிய கட்டிலிற் கிடந்து பல காலம் இன்புற்றிருக்கலாம்.*

***குறிப்புரை :-*** *சாலேகம் - பலகணி, சன்னல். பாழி - குகை. முதலடியை இறுதியில் வைத்துரைக்க. இங்கு, "பாய்ச்சுதல்" என்பது "புறப்படாப் பாய்ச்சுதல்" என விளக்கிக் கூறப்பட்டமை காண்க. ஏழு சாலேகம், கண், காது, மூக்கு இவற்றின் ஆறு துளைகளுடன், சிறுநீர் வழித்துளை, தலைவாயில், வாய் கடை வாயில், எரு வாய், பாழி - பாழை உடையது. இத் துணை அமைப்புகள் இருந்தும் ஆன்மா அதனைத் தூய்மைசெய்து, விளக்கேற்றி வைத்து இன்பமாக வாழாமல் வாளா இருத்தலால், உடம்பை, "பாழ் வீடு" என்றார். "இயமம், நியமம், பிராணாயாமம் என்பவற்றால் அவ்வீடு தூய்மையும், விளக்கமும் செய்யப்பட்டால், தாரணையில் பல காலம் நலம் பெற்று வாழலாம்" என்பார். "பெரிய தோர் பள்ளியறை; வாழலுமாம் பலகாலம்" என்றார். பிறவற்றை உருவகம் செய்து, ஆதாரங்களை வாளா கூறினமையால், இது வியநிலை உருவகம். "இரண்டுவாசல் - ஏலுடைத்தா அமைத்தங் கேழு சாலேகம் பண்ணி" (தி.4 ப.33 பா.4) "பாழறை உனக்குப் பள்ளி யறையாக" (தி.11 கழுமல) என்னுந் திருமொழிகளை இங்கு நினைவு கூர்க. பள்ளியறை - சகத்திராரம்.*

***யோக நெறியில் நிற்பவர் உடம்பு ஓங்கி நிற்பதொரு கோபுரம் போல்வதும், ஆதாரங்கள் அக்கோபுரங்களில் உள்ள நிலைகள்***

**583.** நிரம்பிய ஈரைந்தில் ஐந்திவை போனால்
இரங்கி விழித்திருந் தென்செய்வை பேதாய்
வரம்பினைக் கோலி வழிசெய்கு வார்க்குக்
குரங்கினைக் கோட்டை பொதியலு மாமே. 8

முன்னம் வந்தனர் எல்லாம் முடிந்தனர்
பின்னை வந்தவர்க் கென்ன பிரமாணம்
முன்னுறு கோடி உறுகதி பேசிடில்
என்ன மாயம் இடிகரை நிற்குமே.

---

***போல்வனவும், மனம் அக்கோபுரத்தினைப் பற்றி ஏறுதற்குரிய கை கால் முதலிய உறுப்புப் போல்வனவும், பிராண வாயு அவ்வுறுப்புக்களுக்குப் பற்றுக்கோடாய் உதவும் நூலேணி போல்வதும் ஆகும்.*** *ஆகவே, கோபுரத்தின்மேல் ஏறிச் செல்பவர்க்கு நூலேணி இன்றியமையாதது போல, யோகிகட்குப் பிராணாயாமம் இன்றியமையாததாம், அதனால், "யோகம்" என்றாலே, பிறவற்றை எல்லாம் விடுத்து, "மூச்சை அடக்குதல்" என்றே பொதுவாகக் கொள்கின்றனர். நாயனார் ''போழ்கின்ற வாயுப் புறப்படாப் பாய்ச்சுறில்'' என இங்கும், இவ்வாறே பல விடத்தும் பிராணாயாமத்தை எடுத்தோதிப் போதல், அதன் இன்றியமையாமை பற்றியேயாம் என்க.*

*இதனால், ''பிராணாயாம பிரத்தியாகாரங்களைப் பயின்றவர்க்குத் தாரணைக்கண் சலியாது நிற்றல் அரிதன்று" என்பது கூறப்பட்டது.*

**583.** ***தெளிவுரை :-*** *ஒன்றும் அறியாத மாணவனே! உடம்பினுள் நிறைந்திருக்கின்ற பத்து வாயுக்களில் இயங்கும் வாயுக்கள் ஐந்து வீணாய்ப் போய்விட்டால், நீ விழித்திருந்தும் என் செய்ய மாட்டுவாய்! கழிந்ததற்கு இரங்கி நிற்பவனேயாவாய். ஆகையால், பிராணா யாமத்திற்குக் கூறிய முறையைக் கடைப்பிடித்துப் பிராண வாயு மேலேறுதற்கு வழியை உண்டாக்குபவர்கட்கு, மனமாகிய குரங்கை ஆதாரங்களாகிய கோட்டையை விட்டுப் புறத்தே குதித்து ஓடாதபடி நிற்கச் செய்தலும் கூடும்.*

***குறிப்புரை :-*** *அஃதாவது, "தாரணையைப் பெறுதலும் கூடும்" என்பதாம். ''ஈரைந்து, ஐந்து'' என்பவை அதிகார இயைபால் வாயுக்களைக் குறித்து நின்றன. "இரங்கி" என்பது பெயர். இதன்பின் "ஆவாய்" என்பது எஞ்சிநின்றது. "குரங்கு, கோட்டை" என்பது குறிப்புருவகங்கள்.*

**584.** அரித்த வுடலைஐம் பூதத்தில் வைத்துப்
பொருத்தஐம் பூதம்சத் தாதியிற் போந்து
தெரித்த மனாதிசித் தாதியிற் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே. **9**

---

*உடம்பின்கண் உள்ள வாயு, "இயங்குவதும், நிற்பதும்" என இருவகைத்தாம். ''நிற்பது'' என்றல், இயங்குவதை நோக்கியாம். அவற்றுள் இயங்கும் வாயு மூக்கு வழியாக வெளிச் செல்லின் 'பிராணன்' என்றும், வாய் வழியாக வெளிச்செல்லின் 'உதானன்' என்றும், எரு வாய் வழியாக வெளிச் செல்லின், 'அபானன்' என்றும், உடம்பெங்கும் செரிப்பிக்கும் பொழுது 'வியானன்' என்றும் இவ்வாறு ஐந்தாகி நிற்கும். இனி நிற்கும் வாயுவும், தும்மல் இருமல்களாக வலிதிற் புறப்பட்டு வேண்டாப் பொருளைப் புறத்திடும் பொழுது 'நாகன்' என்றும், கண்ணைப் பல திசைகளிலும் நோக்குமாறு இயக்கும் பொழுது 'கூர்மன்' என்றும், சோம்பல் காரணமாகப் பிராணவாயுவை இயல்பு திரிந்து கொட்டாவி முதலியனவாக ஆக்கும்பொழுது 'கிரிகரன்' என்றும், கண் இமைத்தல் வாயசைத்தல் முதலியவற்றைச் செய்யும்பொழுது 'தேவதத்தன்' என்றும், குருதியில் உளதாகும் நோய் காரணமாக உடலை வேறுபடுத்தி நிற்கும்பொழுது 'தனஞ்சயன்' என்றும் இவ்வாறு ஐந்தாகும். ஆகப், பத்து வாயுக்களில் முதலாவதாகிய பிராணனே ஏனை இயங்கும் காற்று நான்கிற்கும் ஆற்றல் தருவது; இயங்கும் காற்றுக்கள் ஆற்றல் கெட்டவிடத்து, நிற்கும் காற்றும் தம் தொழிலைச் செய்யமாட்டா. ஆகவே "நிரம்பிய ஈரைந்தில் ஐந்து போனால் என் செய்வை" என்றார். பிராண வாயு இங்கு அதிகாரப் பட்டமையால், அதன் வழியவாகிய அனைத்தையும், "இவை" எனச் சுட்டினார்.*

*'பிராணன், உதானன், அபானன், சமானன், வியானன்' என்பவற்றை முறையே, 'உயிர் வளி, எழுவளி, விழு வளி, நிறை வளி, அறு வளி' எனவும், 'நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன்' என்பவற்றை முறையே, 'தும்மு வளி, நோக்குவளி, சோம்பு வளி, நுண் வளி, பரு வளி' எனவும் தமிழிற் கூறலாம்.*

*இதனால், யோகத்திற்குச் சிறந்ததாகிய பிராண வாயுவின் சிறப்புக் கூறுமுகத்தால், பிராணாயாமம் அதற்கு மேல் உள்ள யோகங்கட்கு இன்றியமையாமை கூறப்பட்டது.*

*(இதன் பின்னர், "முன்னம் வந்தனர்" என்னும் பாடல் இடைச் செருகலாய் உள்ளது).*

584. ***தெளிவுரை :-*** *தாரணையை மேற்கூறிய பாவனையளவில் செய்யாது, தத்துவ ஞானத்தைப் பெற்று அதன் வழிச் செய்யின், அஃது இறைவனோடே ஒன்றி நிற்பதாகும்.*

***குறிப்புரை :-*** *அரித்த உடல் - பசி பிணி மூப்புக்களால் அரிக்கப்பட்ட உடம்பு. இவ்வாறு கூறியது, 'உதிரம் முதலிய தாதுக்களால் ஆகிய தாத்துவ தூல தேகம்' என்பது விளங்குதற்கு. பொருத்த - ஒன்றாக்க; 'ஒடுக்க' என்றபடி. உதிரம் முதலிய தாதுக் களாலான தேகம் ஐம்பூதங்களின் காரியமாகலின், அஃது ஐம் பூதங்களில் ஒடுங்குவதாயிற்று. ஒடுக்குதல், இங்கு, 'அவற்றின் காரியம்' என்று உணர்தல். சத்தாதி - சத்தம் முதலிய தன்மாத்திரைகள். தன் மாத்திரைகளின் காரியங்களே பூதங்களாதலின், அவை தன்மாத்திரை களுள் ஒடுங்குவனவாம். மனாதி "மனம், அகங்காரம், புத்தி" என்னும் அந்தக் கரணங்கள். சித்த ஆதி - சித்தமாகிய முதல்; சித்தமாயும், குண தத்துவமாயும் நிற்பது மூலப் பிரகிருதியேயாகலின், "சித்தாதியிற் செல்ல" என்றது, "மூலப்பிரகிருதியில் ஒடுங்க" என்றதாம். மனம் அகங்காரத்திலும், அகங்காரம் புத்தியிலும், புத்தி சித்தத்திலும் ஒடுங்குமாயினும், சித்தம் முடிவாக நிற்றல் பற்றி, "மனாதி சித்தாதியில் செல்ல" என்றார். தத்துவ ஒடுக்கங்களை இங்கு ஒருவாறு சிறிது கூறினாரன்றி, முற்றும் விரித்துக் கூறிற்றிலர், இஃது அதற்கு இடமன்மையில், "பொருத்த, செல்ல" என்பனபோல, 'போத' எனச் செய்தவனைச்சமாக ஓதாது, திரித்து ஓதினார்; முன்னின்ற எச்சங்கள் இரண்டும் எண்ணின் கண் வந்தமை தோன்றுதற்கு, 'ஆன்மா, தத்துவங்கள் அனைத்தினும் நீங்கின் சிவமே, அதற்குச் சார்பாய் விடுமாதலின், மனத்தை அவ்வகையிற் பயிற்றும் யோகம், அந்த ஞானத்தை நிலை பெறுவிக்கும்' என்பதாம். சித்தாதி - சித்தம், புத்தி, அகங்காரம், மனம். சத்தாதி - சத்த, பரிச, ரூப, ரச, கந்தம்.*

*இதனால், ஞான தாரணையின் இயல்பும், பயனும் கூறப்பட்டன.*

## 8. தியானம்

585. வருமாதி யீரெட்டுள் வந்த தியானம்
பொருவாத புந்தி புலன்போக மேவல்
உருவாய சத்தி பரத்தியானம் உன்னும்
குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே. 1

---

*இது முதல் பத்தொன்பது திருமந்திரங்களால், தியான உறுப்பு உணர்த்தியருளுகின்றார். தியானம் - இடைவிடாது நினைத்தல். ஒன்றையே உன்னுதல்.*

585. ***தெளிவுரை :-*** *தாரணை இறுதிக்கண் சொல்லியவாறு, 'பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, அந்தக்கரணம் நான்கு, பிரகிருதி ஒன்று' என்னும் பதினைந்துடன் புருடன் ஒன்று கூடப் பதினாறையும் தியான முறைப்படி அவ்வவ் வாதாரங்களில் வைத்துத் தியானித்தல், கருவி கரணங்களினின்று நீங்கிநிற்கும் சாதன யோகமாகவே முடியும். அதற்குமேல் ஒளி வடிவாகிய சத்தியையும், அதற்குமேல் அருவாய் நிற்கும் சிவத்தையும் தியானித்தலே சாத்திய யோகமாம். ஆகவே, தியான யோகம், சாதன சாத்திய வகையால் இங்ஙனம் இருகூறாய் நிற்கும் என்க.*

***குறிப்புரை :-*** *வரும் - வந்த; தாரணையுள் சொல்லிப் போந்த. ஆதி - முதல்; தத்துவம். அவைகளை ஆதாரங்களில் வைத்துத் தியானிக்கும் முறை "நிலம்" என்னும் பூதத்தையும், அதற்குரிய "கந்தம்" என்னும் தன்மாத்திரையையும் மூலாதாரத்திலும், பின்னும் முறையே ஏனைய பூதங்களையும், தன்மாத்திரைகளையும் சுவாதிட்டானம் முதலியவற்றிலும் வைத்தும், அந்தக்கரணங்களை "மனம், அகங்காரம், புத்தி, சித்தம்" என்னும் முறையில் சுவாதிட்டானம் முதலாக முறையே வைத்தும், சித்தமே பிரகிருதியாய் அடங்கப் புருடனை ஆஞ்ஞையில் வைத்தும் தியானித்தல். பொருவாத புந்தி புலன் போக மேவல் - ஆன்ம அறிவொடு மாறுபட்டு வாதிக்கின்ற பொறி புலன்களின் வாதனை அற்றுப்போக, அமைதியுற்று நிற்றற்குரிய சாதனையாம். புந்தி, மேவல் இவை ஆகுபெயர்கள். ஆஞ்ஞையில் புருடனை விழுங்கி நிற்கும் ஒளி வடிவாக இறைவனைத் தியானிப்பின், அது சத்தித் தியானமாகும். பரம் - மேலானது. ஒளிவடிவிற்கு மேலானது அருவம். இறைவனை நிராதாரமான உச்சியில் அருவமாகத் தியானித்தல் சிவத்தியானமாகும். இந்தச் சத்தி சிவத் தியானமே சாத்திய யோகத்தியானம் என்க. 'பரத் தியானமாக' என ஆக்கம் வருவிக்க. குரு - திட்பம்.*

**586.** கண்ணாக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணாக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு
அண்ணாக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
பிண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே. **2**

---

*இதனால், ஞான யோகத்தின் நிலைகள் இவை என்பது கூறப்பட்டது. இயமம் முதலிய எட்டனுள் 'தியானம் சமாதி' என்னும் இறுதி இரண்டுமே யோகத்தில் சாத்தியக் கூறாதலின், இதனை, ஈண்டுப் போதந்து கூறினார்.*

**586. தெளிவுரை :-** ***கண் முதலிய பொறியறிவின் சேர்க்கையால் நம்மைப் பண்படுத்தி நின்ற முதற்பொருள் ஒன்று உளது. அஃது, எல்லையற்ற பேரொளியாயினும், அதனை நாம் உள் நாக்கினை ஒட்டி உள்ள சிறிய துளை வழியில் சென்று காண்கின்ற ஒரு சிற்றொளியாகத் தரிசிக்கச் செய்தவாற்றால், 'பாம்பு' எனப்படுகின்ற குண்டலி சத்தி நம்மை உய்வித்தது வியக்கத்தக்கது. பண்ணாக்குதல் - பரநாத ஒலியை உண்டாக்குதல்.***

***குறிப்புரை :-*** *ஞானக்கூட்டம் - ஞானத்தொடு கூடும் கூட்டம். கருவி கரணங்களாகிய மாயேயங்களோடு கூடுதலால் உயிர் பெறுவது அறிவு விளக்கமும், அவ்விளக்கத்தை அவ்வாற்றால் உயிர்கள் பெறச் செய்வது திருவருளும் ஆதலால், "பண்ணாக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு" என்றார். அப்பொருளை இங்ஙனம் சிறப்பித்துக் கூறவே, 'அதனைக் காணுதலே உயிர் பெறத்தக்க பேறு' என்பது போந்தது. 'இனி அப்பேற்றை அடைய வழியறியாது திகைக்கின்ற உயிர்க்கு வாசி யோகத்தின் வழிக் கிடைக்கும் குண்டலி சத்தியே அதனை அடைவித்து உதவி செய்வது' என்பார். "அண்ணாக்கின்.... பிழைப்பித்தவாறே" என்று அருளினார். 'வியக்கத்தக்கது' என்பது சொல்லெச்சம். 'கொல்லும் இயல்புடைய பாம்பு, பிழைக்கச் செய்தது வியப்பு' என்பது நயம். பிள் நாக்கி - பிளவுபட்ட நாவை யுடையது; பாம்பு அண்ணாக்கினை அடுத்துள்ள துளைவழி உச்சியை அடைகின்ற பிராணவாயு. அவ்வுச்சி வழியாகப் புருவ நடுவை அடையும் சுழுமுனை நாடியைத் தாக்குதலால், ஆஞ்ஞையில் அனுபவம் நிகழ்தல் பற்றி, "அண்ணாக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டி" என்றார். "நம்மைப் பிழைப்பித்தவாறே" எனத் தமது அனுபவத்தைக் கூறியவாற்றால், 'அவ்வொளியைக் காண வேண்டுவார்க்கு வழி இதுவே' என்பது குறிப்பெச்சமாயிற்று. இங்ஙனம், சுருங்கக் கூறினாராயினும், 'தாரணையில் மின்னல்போலத் தோன்றுகின்ற அவ்வொளியை இடைவிடாது உன்ன, அவ்வொளி*

587. ஒண்ணா நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணாமல் நின்றது பார்க்கலு மாமே. 3

588. ஒருபொழு துன்னார் உடலோ டுயிரை
ஒருபொழு துன்னார் உயிருட் சிவனை
ஒருபொழு துன்னார் சிவனுறை சிந்தையை
ஒருபொழு துன்னார் சந்திரப் பூவே. 4

---

*மறைவின்றி நின்று பயன் தரும்' என விரித்துரைத்துக் கொள்ளப்படும்.*

587. ***தெளிவுரை :-*** *புறத்தில் உள்ளவர்களால் பார்க்க இயலாத கண்ணில் (திறவாது மூடியிருக்கின்ற நெற்றிக் கண்ணில்) மின்னல் போலத் தோன்றிய ஒளியைப் பின் அக்கண் நிரம்பக் குறைவின்றிப் பார்த்து, அதனொடு உணர்வு ஒன்றியிருப்பின், பிற முயற்சிகளுள் யாதும் செய்யாமலே அந்த ஒளியை நன்கு தரிசித்திருக்கலாம்.*

***குறிப்புரை :-*** *ஒண்ணா நயனம் - விடயங்களில் சென்று பற்றாது ஒன்றிய கண். பிறர் 'கண்' என்று உடன்படவே முடியாத கண். 'அக் கண்ணார' எனச் சுட்டு வருவிக்க. விண் ஆறு - வான்வழி. 'சென்று' எனற்பாலது, "வந்து" என இடவழுவமைதியாய் நின்றது. "கண்டிட" என்பது, 'அளந்தறியுமாறு' என்றபடி. அஃதாவது, 'வான் வெளி முழுதும் ஓடி' என்பதாம். 'ஓடிப் பண்ணாமல்' என்றது, 'இவ்வாறெல்லாம் உழல வேண்டாமல்' என்றவாறு 'ஞான யோகம் செய்ய மாட்டாமையால் இறைவனைக் காணுதற்குச் சிலர் தாம் பெற்ற சித்தியால் ஆகாயத்தில் சென்று அவனைப் பல இடங்களில் தேடியும், பிரமன் முதலிய தேவர்கள் வானவெளியில் தேடி உழன்றும் எய்க்கின்றனர்; அவை வேண்டா' என்றபடி. 'நின்று பார்க்கலும் ஆம்' என இயையும். உம்மை, சிறப்பு. விண்ணாறு - பராகாயம். பண்ணாமல் நின்றது - சுயம்பு சிவம்.*

*இதனால், ஆஞ்ஞைத் தியானத்தின் சிறப்புக் கூறப்பட்டது.*

**588.** ***தெளிவுரை :-*** *உலகர் பலரும் அழிபொருளாகிய உடம்பை உணர்கின்றார்களே யன்றி, அதனோடு வேறறக் கலந்து நிற்கின்ற அழிவில் பொருளாகிய உயிரை அறிதல் இல்லை. இனி, ஒரு சிலர் உயிரை அறியினும், அவ்வுயிர்க்கு உயிராய் நிற்கின்ற சிவனை அறிகின்றார்களில்லை. இனிச் சிலர், 'உயிர்க்குயிராய்ச் சிவன் ஒருவன்*

**589.** மனத்து விளக்கினை மான்பட ஏற்றிச்
சினத்து விளக்கினைச் செல்ல எருக்கி
அனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்கது மாயா விளக்கே. 5

---

*இருக்கின்றான்' என்று உணரினும், 'அவன், ஆஞ்ஞைத் தியானத்தால் காணத்தக்கவன்' என்று உணரமாட்டாதவராகின்றனர். இன்னும் ஒரு சிலரோ, 'அவ்வாறு காணத் தக்கவன்' என்று உணர்ந்தும் ஒரு நொடி நேரமாயினும் அந்தத் தியானத்தைத் தலைப்பட எண்ணாமலே யிருந்தொழிவர்!*

*குறிப்புரை :- 'இஃது இரங்கத்தக்கது' என்பது குறிப்பெச்சம். 'தியானத்தின் சிறப்பை அறிந்திருந்தும் அதில் நில்லாதவர் அறியாதாரோடு ஒப்ப அறிவிலிகளே' என்றற்கு இங்ஙனம் அறியாமையது நிலையைப் பலபட வகுத்துரைத்தருளினார். நான்கிடத்தும் 'ஒரு பொழுதும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. "சிந்தை" என்பது, ஆகுபெயராய்ச் சித்தத்திற்கு இடமாகிய ஆஞ்ஞையைக் குறித்தது. பூ - பூமி; நிலம். 'சந்திரப் பூ' என்றது, 'சந்திர மண்டலம்' என்றவாறு. இனி, "சந்திரன்" என்றது 'பொதுமையில் பிறையைக் குறித்தது' எனக்கொண்ட, "பிறை வடிவாகிய ஆதாரம்" என்று உரைத்தலும் ஆம். எவ்வாறு உரைப்பினும், பொருள் 'ஆஞ்ஞை' என்பதேயாம். "சந்திரப் பூவே" என்பதற்கு அவரவரும் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்.*

*இதனால், ஆஞ்ஞைத் தியானத்தினைச் செய்யாதாரது குற்றங் கூறப்பட்டது.*

**589.** *தெளிவுரை :- மேல் மாடத்தில் ஏற்ற வேண்டுவதாகிய விளக்கை நன்றாக ஏற்றிய பின்னும், மாளிகையை அழிக்க அதன் ஒரு பக்கத்தில் பற்றியுள்ள 'சினம்' என்னும் நெருப்பை முற்ற அணைத்து விட்டுக் கீழ் நிலையில் உள்ள மற்றைய விளக்குகளும் அணைந்து போகாதபடி எல்லாவற்றிலும் திரியை ஒருசேரத் தூண்டி வைத்தால், முன்பு மேல் மாடத்தில் ஏற்றப்பட்ட விளக்கு உண்மையில் ஏற்றப்பட்டதாகும்.*

*குறிப்புரை :- 'மனம்' என்பது இங்குச் செய்யும் உருவகத்திற்கு ஏற்ப, 'மேல்மாடம்' எனப் பொருள் தருதலை, அதனை எடுத்தல் ஓசையாற் கூறிக் காண்க. அவ்வாறே "அனைத்து விளக்கும்" என்பதும் இங்கு உரைத்தவாறே பொருள் படுதலைப் படுத்தல் ஓசையாற்*

**590.** எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதினைக் கண்டறி வாரில்லை
உண்ணாடி உள்ளே ஒளிபெற நோக்கிடில்
கண்ணாடி போலக் கலந்துநின் றானே. 6

---

*கூறியறிக. சினத்து விளக்கு, உருவகம். இதில் உள்ள "விளக்கு" என்பது காரண இடுகுறியாய் நில்லாது, காரண அளவில் நின்று, நெருப்பைக் குறித்தது. எருக்குதல் - அழித்தல். 'நெருக்கி' என்பது பாடம் அன்று. "அனைத்து விளக்கு" என்றது, கருவி கரணங்களை. "திரிதூண்ட" என்பதில், சினை முதலொடு சார்த்தப்பட்டது. மனத்து விளக்கு அது - மனத்தில் ஏற்றத்தக்க விளக்காகிய அந்த விளக்கு, சிவ ஒளி. "மாயா விளக்கு" என்று, மனத்து விளக்கின் இயல்பைத் தெரிவித்து:க காட்டியது. இதன்பின் நின்ற தேற்றேகாரம், அஃது அத்தன்மைத்தாயே நிலைபெறுதல் காட்டி நின்றது. இங்கு, 'ஆகும்' என்பது எஞ்சி நின்றது.*

*'தியானம்' என்பது, உலகர்கொள்ளும் உறக்கம் போல்வது அன்று என்பதற்கு, "அனைத்து விளக்கும் திரியொக்கத்தூண்ட" என்றார். எனவே, 'யோகநிலையில் நிற்பவர்கட்குக் கருவி கரணங்கள் செயற்படாது நிற்குமேயன்றி, மடிதல் இல்லை' என்பது விளங்கும். இதனை விளக்கவே இந்நிலையே, 'யோக நித்திரை, அறி துயில்' என்னும் பெயர்களால் கூறுவர். இவ்வாறன்றிக் கேவல சுழுத்தியாகிய உறக்கம் வருமாயின், இருள் மூடிக் கொள்வதல்லது விளக்கேற்றிய தாகாது; அதனைக் குறிக்கவே, பின்னிரண்டடிகளை அருளிச் செய்தார். இஃது அறியாது ஏகான்மவாதிகள், 'அன்றாடம் உலகர்க்கு வருகின்ற கேவல சுழுத்தியே பேரின்ப நிலை' எனக் கூறி மகிழ்வர். "சினத்து விளக்கினைச் செல்ல எருக்கி" என்று வெகுளி நீக்கம் கூறியதனால், ஏனைக் காமம், மயக்கம் என்பவற்றது நீக்கமும் கொள்ளப்படும். 'காம வெகுளி மயக்கங்கள் அற்றிருத்தல்' என்றால் 'உறங்கிக் கிடப்பது என்பது பொருளன்று' என்றதற்கு, "அனைத்து விளக்கும் திரியொக்கத் தூண்ட" என்றார்.*

*இதனால், தியானத்தில் செயற்பாலன, தவிரற்பாலன கூறப்பட்டன.*

**590. *தெளிவுரை :-* நெடுங்காலம் யோகம் செய்யினும், மேற்கூறிய தியான நிலையை அடைய முயல்பவர் அரியர். அந்நிலையை அடைந்தால், சிவன், கண்ணாடியுள்ளே இருக்கின்ற பொருள் இனிது விளங்குதல்போல், உயிர்க்குயிராய் நிற்கின்ற நிலை இனிது விளங்கும்.**

591. நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமும் இல்லை சிவன்அவன் ஆமே. 7

---

*குறிப்புரை :-* *"கண்" என்றது, மேற்கூறிய அகக்கண்ணை மூன்றாம் அடி, தியானத்தைப் பெறும்முறையை நினைப்பித்தது. "உள்ளே" என்றதை, "கண்ணாடி" என்பதன் பின்னும் கூட்டுக.*

*"அடுத்தது காட்டும் பளிங்குபோல்" (குறள், 706) என்பதையும் நோக்குக. உள்நாடி - புருவ மத்தியில் உள்ள சுழுமுனை. சுழுமுனை நாடியுள் ஒளிவடிவாகத் தியானிக்க வேண்டும்.*

*இதனால், ஆஞ்ஞைத் தியானம் இல்வழி யோகத்தால் பயன் இன்மை கூறப்பட்டது.*

**591. தெளிவுரை :-** ஒருவன் ஆஞ்ஞைத் தியானம் செய்தால் *துன்பம், இறப்பு, கவலை, "எனது" என்னும் பற்று, "யான்" என்னும் முனைப்பு, இவை காரணமாகச் சிலவற்றைத் தேட முயலும் முயற்சி ஆகிய அனைத்தும் அவனுக்கு இல்லாதொழியும். பின்பு அவன் சிவனேயாய் விடுவான்.*

*குறிப்புரை :-* *எனவே, "இன்பமே உளதாகும்" என்பதாம். "நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்தல்" என்பது, கிரியை நிலையில் செபம் முதலியவற்றில் இருவிழிகளையும் மூடி யொழியாமலும், அலர விழியாமலும் சிறிது திறந்த பார்வையுடன் மூக்கின் இருதுளைக்கும் மேலே உள்ள நுனிமூக்கை நோக்கி நிற்றலைக் குறிப்பது. இடகலை, பிங்கலையாகிய நாடிகளைக்கட்டி நடுநாடியாகிய சுழுமுனையில் அதாவது புருவ மத்தியில் தியானித்தலே "நடுமூக்கில் வைத்தல்" என்றும் சொல்லப்படும். அத்தொடரை இங்கு இயைபுபட எடுத்தோதி, "நான், சிவன்" என்னும் இரண்டு எண்ணத்தையும் புருவ நடுவிலே வைத்தல் என "நாட்டம் இரண்டு" என்பதற்கு உட்பொருள் கொள்ள வைத்தார். மனை, உடம்பு.*

*இதனால், தியானிப்பவர் தியானப் பொருளாகவே ஆவர் என்பது கூறப்பட்டது.*

**592.** நயனம் இரண்டையும் நாசிமேல் வைத்திட்
டுயர்விழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லை தானே. **8**

**593.** மணிகடல் யாஅனை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாம்இவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கஒண் ணாதே. **9**

கடலொடு மேகங் களிறொடும் ஓசை
அடவெழும் வீணை அண்டரண் டத்துச்
சுடர்மன்னு வேணுச் சுரிசங்கின் ஓசை
திடமறி யோகிக்கல் லாற்றெரி யாதே.

---

**592.** *தெளிவுரை :-* *ஆஞ்ஞைத் தியானத்தை முறைப்படி செய்து அதனால் இன்புற்றிருப்பவர்க்கு இவ்வுடம்பு தரும் பயன் இவ்வின்ப நிலையேயாம். ஆகவே, இப்பயனை இவ்வுடம்பு தாராதொழியின், அதனால் பயன் வேறில்லை.*

*குறிப்புரை :-* *உயர் விழா - உயர்தலினின்று தாழாத, உயர்தல் மேனோக்கியே செல்லுதல். விழாமை - தாழாமை; என்றது அபானன் முதலியவாகக் கழியாது, நிச்சுவாசமாக வெளிப்படாது பிரமரந்திரம் வரை மேலேறிச் சென்று ஆஞ்ஞையிலேயே நிலைத்திருத்தல். உயர்வு என்பது விகுதி கெட்டு உயர் என முதனிலை மாத்திரையாய் நின்றது. விழா வாயு என்பது ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.*

*துயர் - துயர்வு; தொடக்கு. துயர் அறா நாடி - தொடக்கறாத நாடி. நாடிகள் ஒன்றோடொன்று பற்றியே நிற்பனவாகலின் இங்ஙனம் கூறினார். தூங்குதல் அசையாதிருத்தல்; ஈண்டு நிலைத்த தியானித்திருத்தலை உணர்த்திற்று. ''துயர் அற'' என்றதனால், ''இன்புற்று'' என்பது பெறப்பட்டது. ''தூங்குதல்'' என்பது, அமைதியுற்றிருத்தலைக் குறித்தது. "இந்நிலை கூடுதல் அரிது" என்றற்கு, "வல்லார்க்கு" என்றார். 'வல்லார்க்குப் பயன்' எனவே, "பயம் இல்லை" என்றது மாட்டாதார்க்கு ஆயிற்று.*

*இதனால், "இந்நிலையைப் பெறாத வழி, யோகமேயன்றி, உடம்பும் பயன் இலதாம்" என்பது கூறப்பட்டது.*

**594.** ஈசன் இயல்பும் இமையவர் ஈட்டமும்
பாசம் இயங்கும் பரிந்துயி ராய்நிற்கும்
ஓசை அதன்மணம் போல விடுவதோர்
ஓசையாம் ஈசன் உணரவல் லார்க்கே. 10

---

**593.** ***தெளிவுரை :-*** *'மணி நா ஓசை, கடல் ஓசை, யானை பிளிறும் ஒலி, குழல் இசை, மேகத்தின் முழங்கு குரல், வண்டு, தும்பி இவற்றின் ஒலி, சங்கநாதம், முரசின் முழக்கம், யாழ் இசை' என்னும் ஒலிகள் போன்ற மெல்லிய ஒலிகள் பத்தினையும் ஆஞ்ஞைத் தியானத்தை அடைந்தவர்கட்கல்லது, மற்றையோர்களுக்குக் கேட்டல் கூடாததாகும்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'கேட்கப்படுதல் தியானித்தல் நிலைத்து நின்றமைக்கு அறிகுறி' என்றவாறாயிற்று. இவ்வோசைகள், பிராண வாயு மேற்கூறிய பத்து நாடிகளிலும் நிற்றலால் உளவாவனவாம். 'இந்த இந்த நாடியில் இன்ன இன்னவாறு ஓசை எழும்' என வரையறுத்தும் சில நூல்கள் கூறும். வார் - நீண்ட. அணி - அழகு. தனிந்து எழுநாதம் - மெல்ல ஒலிக்கின்ற ஓசை. எனவே, "மேக ஒலி" என்றது "இயமத்து ஈண்டி இன்குரல் பயிற்றி" (புறம். 34) என்றாற்போல மழை பொழிய வரும் மேகம் மெல்லென முழங்கும் முழக்கத்தையாயிற்று. பணிந்தவர் - (தியானத்துள்) அடங்கியவர். "அல்லது பார்க்க ஒண்ணாதே" என எதிர்மறையாற் கூறினமையின், ''இஃது அறிகுறி'' என்பது பெறப்பட்டது. படவே, தியான நிலையில் நிற்போர் அவ்வோசையைக் கேட்டலிலும் செல்லுதல் கூடாமை அறிந்துகொள்ளப்படும்.*

*பேரொலி, பேரோசையாகக் கேட்க ஆரம்பித்து நுண்ணொலி கேட்பதில் நிறைவுறும். இவை தியான நிலை உணரும் அடையாளங்கள்.*

*(இதற்குப் பின் உள்ள "கடலொடு மேகம்" என்னும் பாடல் நாயனார் திருமொழியன்று).*

**594.** ***தெளிவுரை :-*** *தியான யோகத்தால் இறைவனை உணர மாட்டாதவர்க்கு அவனது இயல்பும், தேவர் கூட்டம் முதலிய பிற எல்லாப் பொருள்களும், அவரது உணர்வைத் தம்பால் ஈர்த்து அடக்கி அவரது உணர்வேயாய் நிற்கின்ற, மேற்கூறிய, "மணி கடல் யானை" முதலிய ஓசைகளாகவே தோன்றும். அவ்யோகத்தால் அவனை உணர வல்லவர்க்கு அவ்வாறின்றி, ஈசன் இயல்பு முதலிய யாவும், "அவ்வோசையின் வாசனை" எனச் சொல்லத்தக்கவாறு, அவ்வோசை நீங்கிய பின்னும் நிலைபெறுவதொரு நுண்ணிய ஓசையாய் விளங்கும்.*

**595.** நாத முடிவிலே நல்லாள் இருப்பது
நாத முடிவில்நல் யோகம் இருப்பது
நாத முடிவிலே நாட்டம் இருப்பது
நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே. **11**

---

***குறிப்புரை :-*** *"பாசமாய்" என ஆக்கச் சொல் வருவிக்க. பாசம் பிறவற்றிற் செல்லாதவாறு தடுத்துத் தம்பால் ஈர்ப்பவை. "இயங்கும் நிற்கும்" என்னும் எச்சங்கள், "ஓசை" என்னும் ஒரு பெயர் கொண்டன. "உயிர்" என்றது, அதன் உணர்வை ஓசை நிகழ்ச்சியை "பாசம்" என்றதற்கு ஏற்ப, அதன் நீக்கத்தை "விடுவது" என்றார். "விடுவது" என்றது விட்டபின் நிலைபெறுவதாகிய தன் காரியம் தோன்ற நின்றது. 'ஈசனை' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. இதனால், சொல்லியவை, 'மணி கடல் யானை முதலிய ஓசையின் வழி இறைவனை உணர்தல் தியான யோகத்தின் முதல் நிலை' என்பதும், 'அவை அடங்கப்பெற்று அவனை உணர்தலே அவ்யோகத்தின் முடிவு நிலை' என்பதுமாம். "ஓசையெலாம் அவற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின் ஓசை" என்றார் திருக்களிற்றுப் படியாரிலும் (வெண்பா, 33).*

*இதனால், தியான யோகத்தின் முதல் நிலை முடிவு நிலைகள் இவை என்பது கூறப்பட்டது.*

**595. *தெளிவுரை :-*** *தத்துவ நிலையிலும் சத்தியும் சிவமும் இருப்பது நாத தத்துவத்திற்கு அப்பாலாகலின், தியான யோகத்தின் முடிவு நிலையும் மேற்கூறிய பத்து வகை ஓசைகள் அடங்கிய இடமேயாம். அதனால், யோகியரது நோக்கம் அவ்விடத்திற் செல்வதே.*

***குறிப்புரை :-*** *முதற்கண்ணதாகிய நாதமுடிவு நாதத்த்வ முடிவு. சத்தியினின்று நாதம் பிறத்தலின் முடியும் போது அது அச்சத்தியினிடமே ஒடுங்குதலின் நாத முடிவிலே நல்லாளிருப்பது என்றருளினர்.*

*இரண்டாவதாகிய நாதமுடிவு ஓசையற்ற இடம். யோகம் கைவரவேண்டுமாயின், புறவோசையும் அகவோசையும் அற்ற இடம் சிறந்தாகலின் இங்ஙனம் அருளியது.*

*மூன்றாவதாகிய நாதமுடிவு ஒலிகள் சென்று மடங்குதற் கிடமாகிய பிரமரந்திரம். அங்கே அகப்பார்வையாகிற தியானம் பதிய வேண்டும் என்பதாம்.*

*நான்காவதாகிய நாத முடிவு சுத்தமாயையையுங் கடந்த நிலை.*

**596.** **உதிக்கின்ற ஆறினும் உள்ளங்கி ஐந்தும்**
**துதிக்கின்ற தேசுடைத் தூங்கிருள் நீங்கி**
**அதிக்கின்ற ஐவருள் நாதம் ஒடுங்கக்**
**கதிக்கொன்றை ஈசன் கழல்சேர லாமே.** **12**

---

**596.** *தெளிவுரை :- ஆதார மூர்த்திகள் வெளிப்படும் இடமாகிய ஆறு ஆதாரங்களுள்ளும் உள்ளொளியாகிய பிரமன் முதலிய ஐவரையும் தியானிக்கும் தியானத்தால், புகழப்படுகின்ற ஒளியை உடைய, ஆயினும், சிவனைத் தலைப்பட ஒட்டாத - மயக்கம் நீங்க. அதன்பின், மேம்பட்டவராக மாயோனை முதலில் வைத்து இறுதிக்கண் நாதமூர்த்தியைக் கூட்டி எண்ணும் ஐவருள் நாதமூர்த்தியும் ஒடுங்கக் காணின், பரமசிவனது திருவடியை அடைதல் கூடும்.*

*குறிப்புரை :- எனின், ஓசையொடுங்கத் திருவடி ஞானம் சித்திக்குமென்பது உணர்த்துதல் நுதலிற்று. ஆதாரங்கள் ஆறினும் தோன்றுகின்ற ஐந்து ஒலிகளாலும், எல்லா நூல்களானும் புகழப்படுகின்ற ஒளி படைத்த மிக்க இருளாகிய ஆணவம் நீங்கப் பெற்று, ஐந்து தன்மாத்திரைகளிலும் சிறந்ததான ஓசை ஒடுங்க, கொன்றை மாலையை அணிந்த ஈசன் திருவடியைச் சேரலாம் என்றவாறு.*

*ஆறினும் உதிக்கின்ற ஐந்து உள்ளங்கி: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், விசுத்தி, அநாகதம், ஆஞ்ஞை என்ற ஆறு ஆதாரங்களிலும் தோன்றுகின்ற சந்திரன், சூரியன், அக்கினி, தீபம் பெருவெளியாகிய ஐந்தொளிகள்.*

*ஆணவம் துதிக்கப்படுதலாவது தன்னையுங் காட்டாமல் தலைவனையுங் காட்டாமல் ஆன்ம அறிவைத் தடுத்து நிற்பது என ஆகமங்களால் புகழப்படுதல். தேசு - ஒளி. தூங்கு இருள் - செறிந்த இருள் வடிவான ஆணவம்.*

*ஐவருள் அதிக்கின்ற நாதம் என மாற்றிக் கூட்டுக. ஐவர் - புலன்கள். அதிக்கின்ற - சிறந்த. ஓசையே புலன்களிற் சிறந்ததென்பது.*

*பஞ்சேந்திரியங்களையும் விடயங்களிற் செலுத்தி அதிட்டித்து நிற்கின்ற மாயை எனலுமாம். இப்பொருளில் ஐவர் - பொறிகள்; அதித்தல் - இயக்குதல்; நாதம் - மாயை.*

597. பள்ளி அறையில் பகலே இருளில்லை
கொள்ளி அறையிற் கொளுந்தாமற் காக்கலாம்
ஒள்ளி தறியில்ஓர் ஓசனை நீள்இது
வெள்ளி அறையில் விடிவில்லை தானே. 13

---

*கதியாக, கழல் சேரலாம் என விரித்துப் பொருள் கொள்க.*

*இதனால், தியானயோகம் முதிர்ச்சி பெறுமாறு கூறப்பட்டது.*

597. ***தெளிவுரை :-*** *மேற் (பா.568-573) கூறிவந்த இடங்களுள் முடிவாகிய பள்ளியறையில் பகலன்றி இரவே இல்லை. இவ்வொளி யிடத்தை அடைய நினைத்தால் இஃது ஒரு யோசனை தூரத்தில் உள்ளது. இதனை அடைந்துவிட்டால், வீட்டை எக்காலத்தும் தீப்பற்றிக் கொள்ளாமலும் காப்பாற்றலாம். இப்பள்ளியில் சென்றவர் விழித்தெழுந்து வெளிப்போத வேண்டுவதில்லை.*

***குறிப்புரை :-*** *எனின், ஆஞ்ஞை அனுபவம் அறிவித்தல் நுதலிற்று. பராசத்தி தங்குமிடமாகிய பிரமரந்திரத்தில் ஒளியேயன்றி இருளில்லையாம். அறையாகிய உடலில், அக்கினி கொளுத்தாமல் காக்கலாம். ஒளியுடையதாகிய இதனையறியில் ஓர் யோசனை நீளமானது. இவ்வண்ணமான வெள்ளிய அறையில் விடிவேயில்லை என்றவாறு.*

*பள்ளியறை - பராசத்தியைக் கூடுமிடமாகிய ஆஞ்ஞை. பகலே என்றது எப்போதும் ஒளி மயமாக இருத்தலின், அறையில் கொள்ளி கொளுந்தாமல் காக்கலாம் என்றது உடலின் மரணத்தால் கொள்ளி கொளுத்தாதபடி காக்கலாம் என்றவாறு இது மரணமில்லை என்பதை விளக்கியவாறு. பிரமரந்திரத்தில் வெப்பந்தாக்காதவாறு காக்கலாம் எனலுமாம்.*

*ஒள்ளிது - ஒளியுடையதாகிய இந்நிலையை. ஓர் ஓசனை நீளிது - ஓர் தியானத்தால் எய்தப் பெறுவது, ஓசனை - தாரம்; தியானமும் ஆம். இப்பொருளில் யோசனை என்பதன் விகாரம்.*

*வெள்ளி அறையில் - வெண்மையான மதிமண்டலமாகிய பிரமரந்திரத்தில். விடிவு இல்லை - எப்போதும் ஒளி பரந்திருத்தலின் விடிவேயில்லை என்பதாம்.*

598. கொண்ட விரதம் குறையாமல் தான்ஒன்றித்
தண்டுடன் ஓடித் தலைப்பட்ட யோகிக்கு
மண்டலம் மூன்றினும் ஒக்க வளர்ந்தபின்
பிண்டமும் ஊழி பிரியா திருக்குமே. 14

599. அவ்வவர் மண்டல மாம்பரி சொன்றுண்டு
அவ்வவர் மண்டலத் தவ்வவர் தேவராம்
அவ்வவர் மண்டலம் அவ்வவர்க் கேவரில்
அவ்வவர் மண்டலம் ஆயம்மற் றோர்க்கே. 15

---

598. ***தெளிவுரை :-*** *இயமம் முதலாகத் தான் மேற்கொண்ட நோன்புகள் சிறிதும் குறைவுறாதவாறு அவற்றில் உறைத்து நின்று, பிராணாயாமத்தால் சுழுமுனை நாடி வழியே சென்று ஆஞ்ஞையை அடைந்த யோகிக்கு, உடம்பு, 'அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம்' என்னும் மூன்று பகுதிகளிலும் செம்மையுற்று, நிற்க வேண்டிய முறையில் சிறிதும் பழுதின்றி நிற்கும் ஆதலால், அஃது ஊழிக் காலம் வரினும் நீங்காத தன்மையைப் பெற்றிருக்கும்.*

*குறிப்புரை :-* *''ஆறு ஆதாரங்களுள்,* ***மூலாதாரம், சுவாதிட்டானம் இரண்டும் அக்கினிமண்டலம்; மணிபூரகம், அனாகதம், விசுத்தி மூன்றும் சூரியமண்டலம், ஆஞ்ஞையும் பிரமரந்திரமும் சந்திரமண்டலம்"*** *என்பது யோக நூற்கருத்து. இம்மூன்று மண்டலங்களிலும் உடல் செம்மையுற்றிருத்தல் வேண்டும். அவ்வாறில்லாமல் ஆங்காங்குப் பழுதுறுவதினாலே வாழ்நாள் குறைகின்றது. யோகப் பயிற்சியால், உடற் செம்மை தானே அமைந்துவிடுதலின், யோகியர்க்கு வாழ்நாள் நீடுவதாம் என்க.*

*இதனால், மேல், "கொள்ளி அறையிற் கொளுந்தாமற் காக்கலாம்" என்றது, ஏதுக்காட்டி வலியுறுத்தப்பட்டது.*

599. ***தெளிவுரை :-*** *(அக்கினி மண்டலம் முதலாகக் கூறிய மண்டலங்கள் மூன்றுக்கும் சிவபெருமான் ஒருவனே முதல்வனாக அறிந்து, எவ்விடத்தும் அவனையே தியானித்து அவனாகின்ற யோகமே உண்மை யோகம்; அது சத்தி நிபாதர்க்கல்லது கூடாது. அது நிற்க). அம் மூன்று மண்டலங்கட்கும் அக்கினி முதலிய மூவரையே முதல்வராகக் கருதி ஆங்காங்கு அவ்வவரைத் தியானித்து அவராகின்ற பொதுமுறைமையும் உண்டு. (அது சத்திநிபாதரல்லா*

**600.** இளைக்கின்ற நெஞ்சத் திருட்டறை உள்ளே
முளைக்கின்ற மண்டலம் மூன்றினும் ஒன்றித்
துளைப்பெரும் பாசம் துருவிடு மாகில்
இளைப்பின்றி மார்கழி ஏற்றம தாமே. **16**

---

தார்க்கு உரியதாம் மூன்று மண்டலங்கட்கும் மூவர் முதல்வராகிவிடின், கலாம் விளையுமன்றோ எனின்). மூவரையும் முதல்வராக எண்ணுவோர் ஒருவர் மற்றை இருவர்க்கும் தோழமையுடையவராக, மூவரிடை இணக்கமே கொள்ளுதலின், கலாம் விளையாதாம்.

*குறிப்புரை :-* "அவ்வவர் மண்டலம் ஆம் பரிசு" என்றது. "மூன்று மண்டலங்களையும் தனித்தனி மண்டலங்களாகக் கருதும் முறை" எனவும், "அவ்வவர் மண்டலத்து" என்பது "அம்முறையுள்" எனவும், "அவ்வவர்க்கே வரில்" என்றது, "அவரவருக்கே உரியதாய்விடின்" எனவும் கூறியவாறாம். "அவ்வவர் மண்டலம் மற்றோர்க்கு ஆயம்" என மாறிக் கூட்டுக. ஆயம் - தோழமை.

இதனால், "இறப்பில் தவம்" (சிவஞானபோதம், சூ.8, அதி.1) எனப்பட்டு ஞானத்தைப் பயக்கும் சிவயோகத்தின் வேறான யோகமும், "யோகம்" எனச் சிலரால் மேற்கொள்ளப்படுகின்றது எனமேல் (பா.557) கூறியதனை,

உளத்துட் கொண்டு, அம்முறை பற்றிய மும்மண்டலங்களின் இயல்பு ஈண்டுக் கூறப்பட்டது.

**600.** *தெளிவுரை :-* ஒவ்வொரு பயனைத் தருபவர் ஒரோவொரு தேவராக நினைந்து அவர் அனைவரிடத்தும் ஓடி இளைக்கின்ற நெஞ்சத்தைத் தனது சரக்காக உடைய இருட்டறையாகிய உடலினுள்ளே தனித்தனி முதன்மை பெற்றுத் தோன்றுகின்ற மண்டலங்கள் மூன்றிலும் பொருந்தி ஊடுருவிச் செல்வதாகிய பெரிய நூல் அவ்வாறு அவற்றை ஒன்றுபடக் கோத்துச் செல்லுமாயின், உயிர் மேற்கூறிய இளைப்பை அகன்று, மார்கழி நீராட்டுப்போல இன்ப வெள்ளத்தில் மூழ்கிச் சிறக்கும்.

*குறிப்புரை :-* இருட்டறை அறியாமைக்கு இடமாகிய உடம்பு. "நிட்டையிலா உடல்" (தி.9 திருப்பல்லாண்டு, 3) என்றாற்போல, ஞானத்திற்கு ஏதுவாகாத குறையை உடல்மேல் ஏற்றிக் கூறுதலும் மரபாதல் அறிக. 'அறியாமை காரணமாக மூன்றும் மூன்று தனி

**601.** முக்குண மூடற வாயுவை மூலத்தே
சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிடம் நாழிகை சாதிக்க
வைக்கும் உயிர்நிலை வானவர் கோனே. **17**

---

*மண்டலங்களாய்த் தோன்றுகின்றன' என்பது உணர்த்துதற்கு, "இருட்டறை யுள்ளே முளைக்கின்ற மண்டலம் மூன்றினும்" என்றார். துளை, முதனிலைத் தொழிற்பெயர். 'துளைத்தலை யடைய பாசம்' என்க. துளைப்பது ஊசியேயாயினும், 'இஃது ஊசியின்றியே உருவிச் செல்வதோர் அதிசய நூல்' என்றவாறு. இது குண்டலி சத்தி என உணர்க. சத்திநிபாதரல்லாதவர்க்கு இம் மண்டலங்களைத் துளைத்துக் கோத்து ஒன்றாக்கமாட்டாது நிற்கும் இந்நூல், சத்திநிபாதர்க்குத் துளைத்து ஒன்றாகக் கோக்கும் வன்மையுடையதாம் என்பார், 'பெரும்பாசம்' என்றார். பாசம் - நூல்; கயிறு. நெளிவும், வளைவும் உடையதாதல் பற்றி, 'பாம்பு' எனப்படுகின்ற இதனை, இங்கு, 'பாசம்' என்றார். 'பிறர்க்குப் பல தெய்வ உணர்வைத் தருகின்ற குண்டலிசத்தி, சத்திநிபாதர்க்குச் சிவனது தனிப்பெரு முதன்மையைத் தந்து நிற்கும்' என்பது கருத்து. சிவயோகம் அல்லாத யோகம் பிறவியைப் போக்காமையேயன்றி அதனை வருவித்தலும் செய்யுமாகலின், அது பவயோகமாம். "மார்கழி" என்பது, அத்திங்களில் ஆடும் நீராட்டைக் குறித்தது. 'மார்கழி போல' என உவம உருபு விரிக்க.*

*இதனால், சிவத் தியானயோகமே பேரின்பத்தைத் தருவது என்பது கூறப்பட்டது.*

**601.** தெளிவுரை :- *பிராணாயாமம் முதலியவற்றை முறைப்படி பயில வல்லவர்க்கு அவற்றின் பயனைத் தருபவன், தேவ தேவனாகிய சிவபெருமானே: (அவன் வழி நிற்போராகிய ஏனைய தேவர் அது மாட்டார்).*

*குறிப்புரை :- 'அதனால், அவனைத் தியானிப்பார்க்கல்லது துன்பம் நீங்காது' என்பதாம். முதல் மூன்று அடிகளும் பிராணாயாம முறையை அனுபவித்தவாறு. 'இராசதம், தாமதம், சாத்துவிதம் என்னும் முக்குணங்களாகிய பந்தத்தினின்று விடுபடுதற் பொருட்டு மேற்கொள்ளப்படுவதே யோகம்; அப்பயன் சிவயோகத்தாலன்றி எய்தாது' என்பதனை "முக்குணம் மூடு அற வாயுவைப் பிடித்திட்டு" என உடம்பொடு புணர்த்து ஓதினார். 'உயிரை அவ்வந் நிலையில்*

**602.** நடலித்த நாபிக்கு நால்விரல் மேலே
மடலித்த வாணிக் கிருவிரல் உள்ளே
கடலித் திருந்து கருதவல் லார்கள்
சடலத் தலைவனைத் தாமறிந் தாரே. 18

**603.** அறிவாய் அசத்தென்னும் ஆறா றகன்று
செறிவான மாயை சிதைத்தரு ளாலே
பிரியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான அன்பர் நிலையறிந் தாரே. 19

---

*வைக்கும்' என்க. நாழிகை - ரேசக, பூரககும்பகங்களுக்கு முன்னர் விதிக்கப்பட்ட மாத்திரையளவு. உயிர்நிலை - உடல், உயிர் நிற்றற்கு இடம்.*

*இதனால், மேலதற்குக் காரணம் கூறப்பட்டது.*

**602. *தெளிவுரை :-*** *சிவயோகியரேயாயினும், அனாகதத்தளவிலே நிற்பவர் ஆன்ம நிலையையே உணர்வர்; சிவ நிலையை உணர மாட்டார்.*

***குறிப்புரை :-*** *''ஈத்த'' என்பனவும், ''ஈத்து'' என்பதும் குறுக்கலாயின. அவற்றுள் இறுதியில் நின்றது உவம உருபு. நடல் - நடுதல்; நிலைநிறுத்தல். பிராண வாயுவைக் கும்பித்தல். நாபி - மணிபூரகம். மடல் - தாமரை இதழ். வாணி - வாக்கு. ஆகுபெயராய் மத்திமை வாக்குக்கு இடமான விசுத்தியைக் குறித்தது. "உள்ளே" என்றது, 'கீழே' என்றவாறு. "கீழே" எனப் பாடம் ஓதுதலும் ஆம். மணி பூரகத்திற்கும் விசுத்திக்கும் இடையில் உள்ளது, ''அனாகதம்'' எனப்படும் இருதயம். கடல் - கடலின் தன்மை. அது கரை இன்மையும், ஆழம் அறியப்படாமையும், தெளிவுமாம். சடலம் - உடல் அதன் தலைவன் உயிர் "தியான யோகத்தை இருதயமாட்டாகச் செய்து அப்பால் ஏறமாட்டாதவர், ஆன்ம இயல்பையே உணர்வர்" என்பதாம்.*

*இதனால், "தியான யோகத்தை முற்றப் பயிலல் வேண்டும்" என்பது வலியுறுத்தப்பட்டது.*

**603. *தெளிவுரை :-*** *யோகத்தை முறைப்படி பயின்ற அடியவரே, முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து அறிவுருவாய் நின்று, அதனால், வலிய மாயையின் மயக்கத்தையும் வென்று, இறைவனது திருவருளால்,*

*வேறு நில்லாது அவனது தன்மையையே தமது தன்மையாகப் பெற்று நிற்கின்ற ஞானத்தை நிலைபெற உணர்ந்தோராவர்.*

***குறிப்புரை :-*** *யோகமும் வழிபாடேயாதலின், அதனைச் செய்வோரை, "அன்பர்" என்றார். "அன்பரே" என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. "நிலையாக" என ஆக்கம் வருவித்துரைக்க. "அறிந்தார்" என்றதனை, "அறிவறிந்த மக்கட் பேறு" (குறள். 61) என்றாற் போல, "அறிதற்கு உரிமையுடையார்" எனக் கொள்க. 'துணிவுபற்றி, எதிர்காலம் இறந்த காலம் ஆயிற்று' என்றலுமாம். "நெறியான அன்பர்" என்பதை முதலில் வைத்து உரைக்க.*

*இதனால், "யோகம் முற்றியவர்க்கே ஞானம் கூடும்" என யோகத்தது இன்றியமையாமை கூறப்பட்டது. இதனைச் சமாதி இறுதியிற் கூறாது ஈண்டுக் கூறினார். தியானத்திற்கும், சமாதிக்கும் இடையே உள்ள வேற்றுமை சிறிதேயாகலின்.*

*இனி எண்வகை உறுப்புக்களுள் இறுதிக்கண்ணதாகிய சமாதியை இதுமுதல் பதின்மூன்று திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

## 9. சமாதி

604. சமாதி யமாதியிற் றான்செல்லக் கூடும்
சமாதி யமாதியிற் றானெட்டுச் சித்தி
சமாதி யமாதியிற் றங்கினோர்க் கன்றே
சமாதி யமாதி தலைப்படுந் தானே. 1

605. விந்தும் நாதமும் மேருவில் ஓங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்

---

*சமாதியாவது, உயிரும் இறையும் இரண்டற ஒன்றி, சங்கற்ப விகற்பங்கள் அற்று இருக்கும் நிலை.*

604. ***தெளிவுரை :-*** *"சமாதி" என்னும் முடிவுநிலை, இயமம் முதலிய ஏனை உறுப்புக்களில் வழுவாது நிற்றாலாலே வாய்ப்பதாம். இச்சமாதியேயன்றி அட்டமாசித்திகளும், இயமம் முதலிய அவ்வுறுப்புக்களால் விளையும். இத்துணைச் சிறப்புடைய இயமம் முதலியவற்றை முற்றிச் சமாதியில் நிலைபெற்றவர்க்கேயன்றோ யோகம் முற்றுப்பெறுவது!*

***குறிப்புரை :-*** *"யமாதி" என்பது ஆரியப்புணர்மொழி. "இன்" மூன்றும், ஏதுப் பொருளில் வந்த ஐந்தாம் உருபு. "தான்" என்பது பிரிநிலை ஏகாரப் பொருளது: இதனை, ''தங்கினோர்க்கு'' என்பதனுடன் கூட்டுக. செல்லல் - வாய்த்தல். இரண்டாம் அடியில், "சமாதியோடு" எனவும், மூன்றாம் அடியில், "சமாதிக்கண்" எனவும் ஏற்கும் உருபு விரித்துக் கொள்க. நான்காம் அடியை, "யமாதியும், சமாதியும் தலைப்படும்" என மாற்றி உம்மை விரித்து 'யோகம்' என்பது அதன் கருத்தாக உரைக்க. "சித்தி" என்பதன்பின், "உளவாம்" என்னும் பயனிலை எஞ்சிநின்றது.*

*இதனால், சமாதியே யோகத்தின் முடிவுநிலை என்பதும், அஃது அதற்கு முன்னே செயற்பாலனவற்றால் அடையத்தக்கது என்பதும், அட்டமாசித்திகள் இயமம் முதலியவற்றின் இடைநிலைப் பயன் என்பதும் கூறப்பட்டன.*

605. ***தெளிவுரை :-*** *கருவிற்கு வித்தாய வெண்பாலும் (சுக்கிலமும்) குண்டலி சத்தியும் ஆஞ்ஞைத்தானத்தில் சோர்வின்றி நிற்குமாயின், அவ்விடத்தில் ஆன்மா சமாதியைத் தலைப்படும். அத்தலைப்பாட்டில்*

அந்த மிலாத அறிவின் அரும்பொருட்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே. **2**

**606.** மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு
மன்மனம் எங்கில்லை வாயுவும் அங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே. **3**

---

*ஏகதேச உணர்வு நீங்கிய வியாபக உணர்வு தோன்ற, அதன்கண் அடைதற்கரிய பொருளாகிய அழகிய சிவம் விளங்கும்.*

*குறிப்புரை :- விந்து - சத்தி. நாதம் - சிவம். சுழுமுனை சதாசிவம் எழுந்தருளியிருக்கும் இடம் எனச் சித்தாந்த சாராவளி கூறும். சதாசிவம் சிவசத்தி கூடிய அருவுருவத் திருமேனி. ஆகவே மேருமலையாகிய இவ்வுடலின் உச்சியாகிய பிரமரந்திரத்தில் விந்து நாதமாகிய சதாசிவம் விளங்க, அதனை ஆன்மாச் சந்தித்து நிலைபெறுதலே சமாதி என்பது கருத்து. அங்ஙனம் சமாதி கூடும்போது அநாதி நித்தமான ஞானசொரூபியான பரம்பொருள் அழகான சோதியாகக் காட்சி வழங்கும் என்பதாம். வெண்பால் (சுக்கிலம்) சோராமை, ஆன்மா புறப் பொருளையும், தன்மையும் மறந்து தியானப் பொருளோடு ஒன்றுதலாம். குண்டலியாவது "வாக்கு" என்பதை மேலே குறித்தாம். அதுவும் மேற்குறித்த இரு பொருளையும் பற்றாது நிற்றலை, "ஆஞ்ஞையில் நிற்றல்" என்றார். இதனை நாவுக்கரசர் அரம்பையர் ஆடல் பாடலைக் கண்டு அகம் இளையாதிருந்த ஞானநிலையோடு ஒப்பிட்டு உணர்க. இவ்விரண்டும் உயிர், சமாதிநிலை கூடினமைக்கு அறிகுறி என்றவாறாயிற்று. ஆகவே, தியான நிலையில் இவ்விரண்டும் இந்நிலையினின்றும் சோர்தல் உண்டு என்பது பெறப்பட்டது. "விந்து, நாதம்" என்பவற்றிற்கு இங்குப் பிறவாறு உரைத்தல் ஏலாமை அறிக. சுழுமுனையாகிய நடுநாடியின் உச்சியாகிய புருவ நடுவை, "மேரு" என்றல் வழக்கு என்பது மேலேயும் கூறப்பட்டது. பின்னிரண்டடிகள் சமாதியில் சிவ நிலை அனுபவமாய் விளங்குதல் கூறப்பட்டது. தியான நிலையில் பாவனை மாத்திரமே உளதாம் என்க.*

*இதனால், சமாதி நிலையில் விளைவன கூறப்பட்டன.*

606. *தெளிவுரை :- புறப்பொருளிடத்தும், ஆன்மாவிடத்தும் நிற்கின்ற மனம் எப்பொழுது உண்டோ, அப்பொழுதெல்லாம் பிராண*

**607.** விண்டலர் கூபமும் விந்தத் தடவியுங்
கண்டுணர் வாகக் கருதி யிருப்பர்கள்
செண்டு வெளியிற் செழுங்கிரி யத்திடை
கொண்டு குதிரை குசைசெறுத் தானே. **4**

மூலநாடி முகட்டல குச்சியுள்
நாலு வாசல் நடுவுள் இருப்பிர்காள்
மேலை வாசல் வெளியுறக் கண்டபின்
காலன் வார்த்தை கனாவிலும் இல்லையே.

---

*வாயுவின் இயக்கமும் உளதாகும்; அத்தன்மையான மனம் இல்லாத பொழுது, பிராணவாயுவின் இயக்கமும் இல்லையாம். மேற்கூறிய இரண்டையும் விடுத்து தேயப்பொருளில் (தியானிக்கப்படும் பொருளில்) நிலைபெற்ற மனத்தால் அல்லல் அற்று இன்புற்றிருப்பவர்க்கு, அத்தேயப் பொருளிடத்தே அவரது மனம் ஒடுங்கி நிற்கும். மனத்திற்கும் பிராண வாயுவுக்கும் உள்ள இயைபு உணர்த்தப்படுகிறது. மனமொடுங்க மனோலயமாகிய சிவம் தோன்றும்.*

*குறிப்புரை :- ''மன் மனம்'' நான்கில் முதலன மூன்றும் வினைதொகை. மன்னும் இடங்கள் ஏற்ற பெற்றியாற் கொள்ளப் பட்டன. இறுதியது, 'தலைமைப் பொருளது மனம்' என ஆறாவதன் தொகை. 'மனம் மனத்தில் ஒடுங்கும்' என்னும் நயம் தோன்ற 'மன் மனத்துள்ளே மனோலயம் ஆம்' என்றாரேனும், 'மன்னுள்ளே' என்பதே கருத்தாம். மூன்றாம் அடியில், 'மனத்தால்' என மூன்றாவது விரிக்க. 'மனோலயம் உளதாம்' என்பதே சொற்பொருளாயினும் கருத்து நோக்கி மேற்கூறியவாறு உரைக்கப்பட்டது.*

*இதனால், 'சமாதி நிலையில் உயிர்ப்புத் தானே அடங்கி நிற்கும்' என அந்நிலையில் உளதாகின்ற மற்றொன்று கூறப்பட்டது. இதற்குக் கீழ்ப்பட்ட நிலைகளில் உயிர்ப்பை யோகியர் தமது முயற்சியால் அடக்குவர். இவற்றை, தியான யோக துரியமும், சமாதி யோக துரியாதீதமுமாதல் பற்றி அறிந்து கொள்க.*

607. *தெளிவுரை :- சமாதிநிலை எய்தினவரைப் பிறர், மனத்தைப் புற விடயங்களில் ஓடவிட்டிருப்பவராகக் கருதிக் கொண்டிருப்பார்கள். ஆயினும், அவர்களோ தமது மனத்தைத் தேயப் பொருளில் ஒடுக்கி விட்டிருப்பர்.*

*குறிப்புரை :- 'குதிரையேற்றம் வல்லான் ஒருவனது*

*குதிரையேற்றத்தைக் காணவேண்டிச் செண்டு வெளியில் (குதிரையேறிக் காட்டு இடம்; இதனை 'வையாளி வீதி' எனவும் கூறுவர்) கூடியிருந்தோர் பலவும், 'அவன் தனது குதிரையை, மலை, பாழ்ங்கிணறு முதலியவை நிறைந்த காடுகளில் ஓட்டிக்காட்டி வருவான்' என்று நினைத்திருந்தார்கள். அவனோ அவ்வாறு ஒன்றும் செய்யாமல், அச்செண்டு வெளியில் உள்ள ஒரு பெரிய மலையின் பக்கத்தில் கொண்டுபோய் அக்குதிரையை எங்கும் போகவொட்டாமலே கட்டிவிட்டான் என்பது இத்திருமந்திரத்தின் சொற்பொருள். அஃது உள்ளுறை உவமமாய் நின்று மேல் உரைத்த பொருளைத் தோற்றுவித்தது என்க.*

*விண்டு - மலை. 'விண்டுவும்' என உம்மை விரிக்க. அலர் கூபம் - வாய் விரிந்த கிணறு; பாழ்ங்கிணறு. 'விண்டலர் கூபம்' என ஒன்றாக்கி உரைப்பினுமாம். இப்பொருட்டு, விண்டு அலர்தல், ஒரு பொருட் பன்மொழி. விந்தத்து அடவி - விந்த மலையைச் சூழ்ந்துள்ள காடு. 'இதுவே மிக்க இன்னல் உடையது' என்றல் நம்நாட்டு வழக்கு.*

*'சிந்தாகுல இல்லொடு செல்வமெனும்*
*விந்தாடவி என்று விடப்பெறுவேன்' - (கந்தர் அநுபூதி, 33)*

*என்றார் அருணகிரியாரும். 'உயிர் பூத உடலைவிட்டுக் கூற்றுவன் உலகிற்குச் செல்லும்பொழுது இடையில் இத்தன்மைத்ததான ஒரு காட்டினைக் கடக்கும்' எனப் புராணம் கூறும். கண்டு உணர்வாக - கண்டறிந்து வருவானாக. கருதியிருத்தற்கும், குசை செறுத்தற்கும் எழுவாய்கள் வருவித்துக்கொள்க. குசை - கடிவாளம். செறுத்தல் - கட்டுதல். 'குசையொடு செறுத்தான்' என்க. 'கிரியத்திடை' என்பதில் அத்து, வேண்டாவழிச் சாரியை. இனி 'கிரி உண்டு; அதனிடை' என உரைத்தலுமாம். குதிரை, மனம், குசை, பிராண வாயு, கிரி, தியானிக்கப்படும் பொருள்.*

*இதனால், சமாதி நிலை புறத்தாரால் அறிதற்கு அருமை கூறப்பட்டது.*

*இதன்பின், 'மூலநாடி' எனக் காணப்படும் செய்யுள் நாயனார் திருமொழியன்று.*

**608. *தெளிவுரை :-* *நாடு சுற்றும் ஒருவன் அங்ஙனம் சுற்றி வரும் நாடுகள் ஐந்து; அவற்றில் உள்ள மலைகள் பன்னிரண்டு; அங்கு வாழும் குடிகள் நாற்பத்தெட்டு வகையினர். அவைகளை எல்லாம்***

**608.** மண்டலம் ஐந்து வரைகளும் ஈராறு
கொண்டிட நிற்குங் குடிகளும் ஆறெண்மர்
கண்டிட நிற்குங் கருத்து நடுவாக
உண்டு நிலாவிடும் ஓடும் பதத்தையே. **5**

**609.** பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத்
தேட்டற்ற அந்நிலஞ் சேரும் படிவைத்து
நாட்டத்தை மீட்டு நயனத் திருப்பார்க்குத்
தோட்டத்து மாம்பழந் தூங்கலு மாமே. **6**

---

*முழுதும் காணவேண்டும் என்று விரும்பிய அவனது மனம் இடையே ஒரு பெருவெள்ளத்தைக் கண்டு அதில் அழுந்திவிட, அவன் அதனையே குடித்தும், அதனுள்ளே மூழ்கியும் இன்புற்றிருக்கிறான்.*

*குறிப்புரை :-* மண்டலம் ஐந்து, பஞ்சபூதங்களின் எல்லைகள், வரைகள் பன்னிரண்டு, பிரணவ கலைகள், குடிகள் நாற்பத்தெட்டு, வடமொழி அக்கரங்கள் (ஐம்பதில் க்ஷகாரம், ளகாரம் என்னும் இரண்டும் ஒழித்து ஏனையவை. அடிநிலை எழுத்தாகிய அகரமும் இங்குக் குறிக்கப்படவில்லை, அது சிவமாதல் பற்றி) இவை மூலாதாரம் முதல் விசுத்தி வரையில் உள்ள ஐந்து ஆதாரங்களிலும் மேலே காட்டப்பட்டவாறு நிற்றலின் "குடிகள்" என்றார். 'இவற்றைக் கண்டிட விரும்பும் கருத்து' என்க. அஃதாவது, இவற்றையே நோக்கி நிற்கும் எண்ணம். "நிலா விடும்" என்ற செய்யுமென்முற்று ஆண்பாலில் வந்தது. இதற்கு, 'சமாதி எய்தினோன்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. "ஓடும்" என்னும் அடைமொழியால் 'பதம்' வெள்ள நீரைக் குறித்தது. வெள்ளம், சிவானந்தம்.

இதனால், சமாதிநிலை எய்தினோர் பிறவற்றை எய்த விரும்பாமை கூறப்பட்டது.

**609.** *தெளிவுரை :-* கிணற்றில் உள்ள பூட்டைச் சுழல்போல, உடலில் முன்னும் பின்னுமாய் இயங்குதல் தன்மைபெற்று நிற்கும் பிராண வாயுவை, பிற பொருள்களைத் தேடித் திரியாது நிலைத்து நிற்கின்ற ஆஞ்ஞையில் சேர்ந்து அசையாதபடிநிறுத்தி, அதனாலே மனத்தையும் வெளிப்போகாதவாறு தடுத்துத் தியானப் பொருளில் நிலைத்து நிற்பவர்க்கு இன்பம் அங்கு தானே கிடைக்கும்.

*குறிப்புரை :-* பொறி - இயங்குந் தன்மை. நாட்டம் - நாடுதல்;

**610.** உருவறி யும்பரி சொன்றுண்டு வானோர்
கருவரை பற்றிக் கடைந்தமு துண்டார்
அருவரை யேறி அமுதுண்ண மாட்டார்
திருவரை யாமனந் தீர்ந்தற்ற வாறே. 7

---

*தொழிற்பெயர்; இது மனத்தின் தொழில். இதனை மீட்டல், மனத்தைத் தடுத்து நிறுத்துதலாம். நயனம் - கண். கண் போன்று உயிர்க்குயிராய் உள்ள பொருள். 'மாம்பழம் தோட்டத்துத் தூங்கலும் ஆம்' என மாற்றிக் கொள்க. ஈற்றடி, ஒட்டணி. மாம்பழம் - சிவம். எளிமையில் துய்க்கலாம். தேட்டம் - தேடுதல். இதனால், சமாதிநிலை தளர்வுறுதல் உளதாயின், பிராணாயாம தாரணை தியானங்களால் அத்தளர்ச்சியை நீக்கி அதன் கண் உறைத்து நிற்குமாறு கூறப்பட்டது.*

**610.** *தெளிவுரை :-* அகத்தே ஆஞ்ஞையாகிய மலையின் உச்சியை அடைந்து அங்குள்ள அமுதத்தைத் தேவர்களும் உண்ண மாட்டாராய்ப் புறத்தே பெரிய மலையைப் பெயர்த்துக் கொணர்ந்து திருப்பாற் கடலைக் கடைந்து, அதினின்றும் தோன்றிய அமுதத்தையே உண்டார்கள். (ஆயினும், அதனால் அவர் இறவாதிருக்கின்றார் களில்லை; ஆகவே இறவாமைக்குப் பொருளாக அறியும் வழி ஒன்றே உண்டு; அஃது ஐம்புல வேட்கையை முடிவின்றிக்கொள்ளும் மனம் முற்றும் ஒடுங்கிய நிலையேயாம். வானோர்க்கும் கிட்டாத பேறு சமாதியாளருக்குக் கிட்டும்.

*குறிப்புரை :-* 'ஆதலின், அதனையே பெற்றுப் பேணிக்காக்க' என்பது குறிப்பெச்சம். முதல் தொடரை இரண்டாம் அடியின் பின் வைத்து நான்காம் அடிக்கு முன்னே கூட்டி உரைக்க. உரு - பொருள்; மெய்ம்மை 'உருவாக' என ஆக்கம் வருவிக்க. 'ஒன்றே' என்னும் தேற்றேகாரமும், 'வானொடும்' எனும் சிறப்பும்மையும் தொகுத்தலாயின. கருமை - பெருமை. ஏறுதற்கு அருமைபற்றி "அருவரை" என்றார். 'மாட்டாராய் உண்டார்' என எச்சமாக்கி மேலே கூட்டி முடிக்க. 'இது மாட்டாமையால் அதனை உண்டார்' என்றதனால், உண்டதனால் கருதிய பயன் விளையாமை பெறப்பட்டது. 'திரு' என்பது, 'முயற்சி திருவினையாக்கும்' (குறள், 616) என்பதிற்போல நின்றது. கருவரை - வலிய பெரிய மந்தர மலை. உரு - சொரூபம். அஃதாவது இறைவனது சிறப்பியல்பு. இதனால் சமாதிநிலையது அருமையும், பெருமையும் கூறப்பட்டன.

**611.** நம்பனை ஆதியை நான்மறை ஓதியைச்
செம்பொனின் உள்ளே திகழ்கின்ற சோதியை
அன்பினை யாக்கி அருத்தி ஒடுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே. **8**

**612.** மூலத்து மேலது முற்சது ரத்தது
காலத் திசையிற் கலக்கின்ற சந்தினில்
மேலைப் பிறையினில் நெற்றிக்குநேர் நின்ற
கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே. **9**

---

**611.** *தெளிவுரை :-* *சிவனது பெருமையை உணர்ந்தோர் அவன்பால் அன்பு செய்து, அவ்வன்பினாலே பிற ஆசைகளை ஒழித்து, அவனையே நோக்கி ஆஞ்ஞையை அடைந்து அவனை வணங்கி, அவனொடு ஒன்றாய்க் கலந்தார்கள்.*

*குறிப்புரை :-* *எனவே, 'சிவனை அடைய விரும்புவோர் செய்யத் தக்கன அவையே' என்பதாம். 'சிவனது பெருமையை உணர்ந்த வழியே அவனிடத்து அன்பு செல்லும்' என்றதற்கு அவனது பெருமைகளை உடம்பொடு புணர்த்துக் கூறினார். நம்பன் - விரும்பத் தக்கவன். நான்மறையை ஓதியது, அனைவரும் தன்னை அடையு மாற்றை அறிதற்கு. 'பொன்னில் நின்று ஒளிர்கின்ற மாற்றுப்போல, உயிரில் நின்று ஒளிர்பவன்' என்பது இரண்டாம் அடியின் பொருள். ஆக்குதல் - பெருக்குதல். அருத்தி - ஆசை. "கொம்பு" என்றது, சுழுமுனையை. "ஏறி" என்றதனால், அதன் உச்சியை அடைதல் பெறப்பட்டது. கூட்டம் - கூடுதல், புணர்தல்; இரண்டறக் கலத்தல். கோலத்தின் கோலம் - அழகின் வடிவம்.*

*இதனால், சமாதி கூடுதற்கு இயமம் முதலியவற்றில் நிற்குமிடத்தும் அன்புடையராதலும், உலகப்பற்றை விடுதலும் வேண்டும் என்பது கூறப்பட்டது.*

**612.** *தெளிவுரை :-* *மூலாதாரத்திற்குமேல் முதற்கண் காணப்படுகின்ற நாற்கோண வடிவுள்ள இடத்தில் (சுவாதிட்டானத்தில்) நிற்பதாகிய பிராணவாயு அவ்விடத்தில் உள்நுழைகின்ற புழையின் (சுழுமுனை நாடிக்கு) மேலிடத்தில், வானத்தில் உள்ள பிறைபோன்ற புருவநடுவில் நிற்கின்ற பொருளின் வடிவங்கள் பலவாய்த் தோன்றும்.*

*குறிப்புரை :-* *இது தியான நிலையாம். 'மேலதாகிய சதுரம்'*

**613.** கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று
சிற்பனை எல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பனை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே. **10**

**614.** தலைப்பட் டிருந்திடத் தத்துவங் கூடும்
வலைப்பட் டிருந்திடும் மாதுநல் லாளும்
குலைப்பட் டிருந்திடும் கோபம் அகலும்
துலைப்பட் டிருந்திடந் தூங்கவல் லார்க்கே. **11**

---

*எனவும், 'சதுரத்ததாகிய கால்' எனவும் கொள்க. பிராணவாயு கும்பகத்தில் சுவாதிட்டானத்தில் நின்று, பின் சுழுமுனை வழிமேற்செல்லும் என்க. அத்திசை - அவ்விடம். 'முச்சதுரத்தது' என்பது பாடம் அன்று. ஆஞ்ஞைத் தியானத்தில் மின்னல், விண்மீன், விளக்கு, பேரொளி முதலிய வடிவில் தியானப் பொருள் பலபடத் தோன்றும். அவற்றுள் பேரொளித் தோற்றத்தில் ஒன்றுதல் சமாதி' என்றற்கு இதனை முன்னர்க் கூறினார்.*

*இதனால், சமாதியைத் தலைப்படுங்கால் இடைநிகழ் காட்சி கூறப்பட்டது.*

**613.** *தெளிவுரை :- மூலாதாரம் முதலிய ஆதாரங்களில் செய்யும் பாவனைகளை விடுத்து, அவ்வாதார யோகங்களால் மூண்டெழுந்த கனவை மட்டும் துணையாகப் பற்றி ஆஞ்ஞையிற் சென்று, அங்குச் சிவனது பேரொளித் தோற்றம் ஒன்றையே எதிர்நோக்கி அதனுள் ஒடுங்கும் அவா மிக்கிருந்து, அவ்வொளி தோன்றிய காலத்து அதனையே தனக்கு வியாபகமாகக் கொண்டு அதன்கண் புகுந்து ஒடுங்கி நிற்றலே சமாதியாகும்.*

*குறிப்புரை :- கற்பனை - மனத்தால் படைத்திட்டுக் கொள்வன. சிற்பனை - விசித்திரமான செயல் முறை. "சிற்பி" என்பதனை, 'சிற்பன்' என்றார். 'எல்லாம்' என்றது, முன்னை ஆதார மூர்த்திகளையும், ஆஞ்ஞையில் தியானத்தில் தோன்றும் பலவகை வடிவங்களையும், "சிருட்டித்த சிற்பன்" என மாறுக. எனவே, "யோகத்தின் தலையாய பொருள் பேரொளி ஒன்றே" என்பது போந்தது. மதி - அறிவு. அஃது இங்கு ஆர்வத்தை உணர்த்திற்று. "பரம்" என்றது, "வியாபகம்" என்னும் பொருட்டு. ஆக - ஆகிவிட. தகும் - தக்கிருக்கும். தண்மை. இதுகாறும்*

615. சோதித் தனிச்சுட ராய்நின்ற தேவனும்
ஆதியும் உள்நின்ற சீவனு மாகுமால்
ஆதிப் பிரமன் பெருங்கடல் வண்ணனும்
ஆதி அடிபணிந் தன்புறு வாரே. 12

---

*உழன்ற உழப்பாகிய வெப்பம் நீங்கிய குளிர்ச்சி. "தண் சமாதி தக்கிருக்கும்" என்க. பொற்புப் பேரொளி - அழகிய பேரொளி. புணர்மதி - பொருந்திய மண்டலம். தற்பரமாக - தற்போதமழிந்து சிவபோதம் மிகுதல்.*

*இதனால், சிவ சமாதியைத் தலைப்படும் முறையும், அச்சமாதியது இயல்பும் கூறப்பட்டன.*

**614.** *தெளிவுரை :- துலை நாப்போல உள்ள ஆஞ்ஞையில் அசை வற்றிருக்க வல்லவர்க்கு, மெய்ப்பொருளைத் தலைப்பட்டிருக்குமாறு, அது, தானே கிடைக்கும். ஆணவமாகிய வலையில் தானே சென்று நின்று, அந்நிலை காரணமாகச் சினங்கொண்டவள்போல இருந்த அருட்சத்தியும் சினந்தணிந்து, பிறவிக் கடலுக்குக் கரையாகி நிற்பாள்.*

*குறிப்புரை :- தத்துவம் - மெய்ப்பொருள். அருட் சத்தியே பாசத்தின் வழி நின்று அதனை நடத்துங்கால் "திரோதான சத்தி" எனப்படுதலும், அது, "சின மருவு திரோதாயி" (சிவப்பிரகாசம், 48) எனக் கூறப்படுதலும் காண்க. குலை - கரை. குலைப்பட்டு - கரையின் தன்மை எய்தி. "கோபம் அகலும்" என்பதை, குலைப்பட்டிருத்தற்கு முன்னே கூட்டிப் பொருள் கொள்க. திரோதான சத்தி, சினந்தணிந்து அருட் சத்தியாய் ஆன்மாவிற் பதிதலே சத்திநிபாதம் என்பது அறிக. 'இருந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தல்.*

*இதனால், சிவயோகத்தின் முடிவு நிலையாகிய சிவ சமாதியால் சத்திநிபாதம் முதிர்தல் கூறப்பட்டது. அது கூறவே, "தத்துவம் கூடும்" என்றது, ஞானத்தைப் பெறும் பக்குவம் எய்தலைக் குறித்ததாயிற்று.*

**615.** *தெளிவுரை :- சிவசமாதி கைவரப் பெற்ற நிலையில் சீவனும், சிவம் சத்திகளாய் நிற்கும். அதனால், அத்தகைய யோகீசுரனைப் பிரம விட்டுணுக்களும் வணங்குவர்.*

*குறிப்புரை :- "ஆதி" மூன்றும் முறையே சத்தி, முதல், முதல்வன் என்னும் பொருளன. உம்மை நான்கனுள் முன்னவை இரண்டும்*

**616.** சமாதிசெய் வார்க்குத் தகும்பல யோகம்
சமாதிகள் வேண்டா இறையுட னேகில்
சமாதிதா னில்லை தானவ னாகில்
சமாதியில் எட்டெட்டுச் சித்தியும் எய்துமே. **13**

---

*எண்ணுப் பொருளிலும், இறுதியது உயர்வு சிறப்புப் பொருளிலும் வந்தன. ஏனையது இழிவு சிறப்பு. உள்நிற்றல் சமாதியில் நிற்றல். "உள்நின்ற சீவனும்" என்பதை முதலிற் கொள்க. 'சிவமாம்' என்று ஒழியாது, "சத்தியுமாம்" என்றது, "சிவன் செய்யும் செயலெல்லாம் இவ்யோகி செய்யவல்லன்" என்பது உணர்த்துதற்கு.*

*"தாமடங்க இந்தத் தலமடங்கும்"*

*என்ற திருக்களிற்றுப்படி மேலேயும் (பா. 528) காட்டப்பட்டது. இறுதியில் உள்ள "ஆதி" என்பதற்கு "அவ் ஆதி" எனச் சுட்டு வருவிக்க.*

*இதனால், சமாதி எய்தினோரது சிறப்புக் கூறப்பட்டது.*

**616.** *தெளிவுரை :- சமாதி யோகத்தைத் தலைப்பட்டவர்க்கு "யோகம்" எனப்படுவன பலவும் வாய்ப்புடையனவாய்ப் பயன் தரும். இனி, இறைவன் அருள்வழியே எச்செயலையும் செய்வார்க்கு இச் சமாதி யோகம் வேண்டுவதில்லை. சீவன் சிவமாய் நிற்கும் நிலையில் சமாதி என்னும் யோகநிலை இல்லை (நிட்டை என்னும் ஞான நிலையே உளதாம்). சமாதி யோகத்தால் அணிமாதி எட்டுச் சித்திகளும் எய்துமாம்.*

*குறிப்புரை :- "பல யோகம்" என்றது, மனம் ஒன்றி நின்று செய்யப்படுதல் பற்றி, 'மந்திரயோகம், கன்மயோகம், பத்தியோகம்' என வழங்கப்படுவனவற்றை, இடைநின்ற இரண்டடிகளாலும் ஞானம், யோகத்தின் வேறாய் மேம்பட்டு நிற்றல் குறித்தவாறு. இறையுடன் ஏகல், அவன் அருள்வழியே செயற்படல், தான் அவனாதல், ஆன்மா இறைவனது எண்குணங்களையும் பெற்று நிற்றல். இவை இரண்டும் யோகத்தில் எய்தாமை அறிக. ஈற்றடியால் யோகத்தின் இடைநிலைப் பயன் கூறப்பட்டது. 'எட்டுச் சித்திகளும் கீழ் உலகம் ஒன்றோடு மேல் உலகம் ஏழினும் அவ்வவ்விடத்திற்கு ஏற்பப் பெறப்படுமாற்றால் அறுபத்து நான்காம்' இது சிவஞானமாபாடியத்துட் (சூ.2 அதி.2) கண்டது.*

*இதனால், யோகத்தின் எல்லை கூறப்பட்டது.*

## 10. அட்டாங்க யோகப் பேறு

### இயமம்

617. போதுகந் தோறும் புரிசடை யானடி
யாதுகந் தாரம ராபதிக் கேசெல்வர்
ஏதுகந் தானிவன் என்றருள் செய்திடும்
மாதுகந் தாடிடு மால்விடை யோனே. 1

---

*இது முதல் எட்டுத் திருமந்திரங்களால் இது முற்கூறிய இயமமாதி அட்டாங்க யோகத்தின் பயன் அடைவுபடக் கூறுகின்றார்.*

617. ***தெளிவுரை :-*** *மலர்களை விரும்புதலால், அவை பொருந்தப் பெற்ற புரிந்த சடையினையுடைய சிவபெருமானது திருவடியை எத்துணைச் சிறிதளவு விரும்புவராயினும், அவர் சுவர்க்கத்தையே அடைவர்; நிரையம் புகார், இறைவியை ஒருபால் விரும்பிவைத்து நடனம் புரிகின்ற அப்பெருமான், தன்னை விரும்புபவன் எவனாயினும் அவனுக்கு 'இவன் விரும்பியது யாது' என்று நினைந்து அதனை அருள்செய்பவன் ஆதலின்.*

***குறிப்புரை :-*** *'ஆகவே, யோகத்தின் முதற்படியில் நின்றோர்க்கு அவன் இம்மையில் அவன் விரும்பிய பயனையும், மறுமையில் சுவர்க்கத்தையும் அருளுவன்' என்பதாம். "யாது" என்பது, 'சிறிது' என்னும் பொருட்டாய், அல்லவை செய்தலை ஓம்புதலாகிய (புறம். 195) இயமத்தைக் குறித்தது. 'உகந்தாரும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. பின்னிரண்டடிகளால் சிவபெருமான், 'வேண்டுவோர் வேண்டுவதை ஈயும்' (தி.6 ப.23 பா.1) கருணையாள னாதலைக் குறித்தவாறு மாதொரு பாகனாதலும், நடனம் ஆடுதலும் அக்கருணையைத் தெளிவிப்பனவாம். விடையூர்தியும் விரைந்து வந்து அருளுதலைக் குறிப்பதேயாம். அமராபதி - அமராவதி - விண்ணுலகாகிய சுவர்க்கம்.*

*'சுவர்க்கம்' என்பது பவயோகியர்க்குத் தேவர் உலகமும், சிவயோகியர்க்கு உருத்திரர் உலகமுமாகக் கொள்க. பவயோகியர் சிவபெருமானைப் போற்றினும், பிற தேவரோடு ஒப்பநினைந்து போற்றுபவரே என்க.*

*இதனால், தவிர்க்கவேண்டிய கெட்ட வழக்கங்களை விடுதலாம். இயமத்தின் பயன் இமையவராவர் என்று கூறப்பட்டது.*

## நியமம்

**618.** பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ்
கற்றிருந் தாங்கே கருது மவர்கட்கு
முற்றெழுந் தாங்கே முனிவர் எதிர்வரத்
தெற்றுஞ் சிவபதம் சேரலு மாமே. 2

## ஆதனம்

**619.** வருந்தித் தவஞ்செய்து வானவர் கோவாய்த்
திருந்தம ராபதிச் செல்வன் இவனெனத்
தருந்தண் முழவங் குழலும் இயம்ப
இருந்தின்பம் எய்துவர் ஈசன் அருளே. 3

---

**618.** *தெளிவுரை :- சிவபிரானது திருவடியைத் துணையாகப் பற்றி அன்பு செய்து, அவனது புகழைக் கற்றும், கேட்டும் ஒரு பெற்றியே ஒழுகுவார்கட்கு, பின்னர், முனிவர் குழாம் முழுவதும் சுவர்க்கலோகத்தே முன்வந்து எதிர்கொள்ள ஒளிமயமாகிய அவ்வுலகத்தை அடைதல் கூடும்.*

*குறிப்புரை :- "பரன்" எனப் பின்னர் வருகின்றமையின், வாளா, 'பதத்து' என்றார். பரன்புகழ் கற்றல், பிற நியம ஒழுக்கங்கட்கு உபலக்கணம் "ஆங்கே" இரண்டில் முன்னது, 'ஒருபெற்றியே' என நியமத்தைக் குறித்தது. பின்னது செய்யுளில் சுட்டு முன் வந்தவாறு. 'முற்றும்' என்னும் உம்மை தொகுத்தல். தெற்றுதல் - விளங்குதல். ''முனிவர்'' என்பது சிவயோகியர்க்கு உருத்திர கணங்களையும், "சிவபதம்" என்பது பவயோகியர்க்கு, 'இன்ப உலகம்' என்னும் பொதுப் பொருட்டாய்த் தேவருலகத்தையும் உணர்த்தி நிற்கும் 'சேர்தலும்' என்னும் உம்மை, சிறப்பு.*

*இதனால், சிவன் புகழையே ஓதலும், சிந்தித்தலுமாகிய நியமத்தின் பயன் கூறப்பட்டது. 'உயர்ந்தோராய்ப் போற்றப்படுதல் இங்குக் குறிக்கப்பட்ட சிறப்பு' என்க. அவர் சிவபதமடைவர்.*

**619.** *தெளிவுரை :- மக்கள், மெய் வருத்தத்தைப் பெற்றுத் தவம் செய்தபின் சிவபெருமானது அருளால் விண்ணவர்க்குத் தலைவராய், 'வானுலகச் செல்வத்திற்கு உரிமையுடையவர் இவரே' என்று பலரும் புகழும்படி, மத்தளம், குழல் முதலிய வாச்சியங்கள் ஒலிக்க வீற்றிருந்து, தலைவராம் இன்பத்தை அடைவர்.*

## பிராணாயாமம்

**620.** **செம்பொற் சிவகதி சென்றெய்தும் காலத்துக்**
**கும்பத் தமரர் குழாம்வந் தெதிர்கொள்ள**
**எம்பொற் றலைவன் இவனா மெனச்சொல்ல**
**இன்பக் கலவி இருக்கலு மாமே.** **4**

---

*குறிப்புரை :-* வருந்துதல், இங்கு, மெய் வருந்தல், எனவே, இஃது ஆசனத்தைக் குறித்தது. ''தவம்'' என்பது ஏற்புழிக் கோடலால் யோகமாயிற்று. 'செய்தபின்' என்பது 'செய்து' எனத் திரிந்து நின்றது. "வானவர்" என்பது பவயோகியர்க்குத் தேவர்களையும், சிவயோகியர்க்கு உருத்திரர்களையும் குறிக்கும். எனவே, தேவர்க்குத் தலைவராதல் திசைக்காவலர் ஆதலையும், உருத்திரர்களுக்குத் தலைவராதல் உருத்திர புவனங்கட்கு அதிபதிகள் ஆதலையும் குறிப்பனவாம். 'கோ, செல்வன், இவன்' என்பன, பன்மை யொருமை மயக்கங்கள். 'அருளால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று.

*இதனால், ஆசனத்தின் பயன்கூறப்பட்டது.*

**620. தெளிவுரை :-** *பிராண வாயுவைக் கும்பகம் செய்ததன் பயனாக மக்கள் செம்பொன் மயமான இன்ப உலகத்தில் சென்று சேரும் பொழுது, விண்ணவர் குழாம் வந்து எதிர்கொள்ள, விண்ணுலக மகளிர் தாம் தாம் 'எமக்கு அரிதிற் கிடைத்த தலைவன் இவனே' என மையலுற்றுச் சொல்லுமாறு கலவி இன்பம் மிகப்பெற்று இருத்தல் கூடும்.*

*குறிப்புரை :-* "கும்பத்து" என்பதனை முதலிற் கொண்டு உரைக்க. 'கும்பகத்து' என்பது குறைந்து நின்றது. 'சிவகதி, அமரர்' என்பவற்றிற்கும் மேல் உரைத்தவாறே உரைக்க. பொன்தலைவன், உவமத்தொகை, உவமை, பயன்பற்றி வந்தது. "இன்பக் கலவி" எனப் பின்னர் வருதலால், சொல்வோர் மகளிராதல் பெறப்பட்டது. மையலுற்றுக் கூறுவோர் ஆடல் மகளிர். அவர் அவ்வாறு கூறினும் சிவயோகியர் இன்புறுவது உரிமை மகளிரோடேயாம். ஐம்புல இன்பங்கள் பலவற்றையும் நிரம்பத் துய்த்தலை விளக்கும் குறிப்பு மொழியாக இன்பக் கலவி எய்துதலை எடுத்தோதினார். உருத்திரலோக இன்பம் சிவனை மறப்பியாது என்க.

*இதனால், பிராணாயாமத்தின் பயன் கூறப்பட்டது. பன்னாளும்*

### பிரத்தியாகாரம்

**621.** சேருறு காலந் திசைநின்ற தேவர்கள்
ஆரிவன் என்ன அரனாம் இவனென்ன
ஏருறு தேவர்கள் எல்லாம் எதிர்கொள்ளக்
காருறு கண்டனை மெய்கண்ட வாறே. 5

---

*பயில்யோகம் பரம்பரையின் விரும்பினாராகிய சுந்தரர் பெருமான்,*

*இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்*
*வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து*
*மந்திர மாமுனிவர் இவனாரென எம்பெருமான்*
*நந்தம ரூரனென்றான் நொடித்தான்மலை யுத்தமனே.*

*என்று அருளிய அனுபவமும் இதனை வலியுறுத்துதல் காண்க.*

**621.** *தெளிவுரை :-* *இம்பருள்ளாரை விடுத்து, உம்பருள்ளாரைப் பாவனையால் அடைந்தோர், அதன் பயனாக அவரை உண்மையாகவே அடையுங் காலத்து, அவ்விடத்துள்ளார். 'மக்களுள் இவ்வுயர் நிலையை அடைந்தோன் யாவன்' என்று வியப்புற்று வினாவ, (ஒரு சாரார் ஓர்ந்துணராது வடிவம் ஒன்றே பற்றி) 'இவன் சிவபெருமான் தான்' என்று மயங்கிக் கூற, இவ்வாறு அமரர் பலரும் ஒருங்குவந்து எதிர்கொள்ளத் திருநீலகண்டப் பெருமானைக் கண்ட முறைமையே எங்கும் நிகழ்வதாகும்.*

*குறிப்புரை :- உம்பரைப் பாவனையால் அடைதலே பிரத்தியாகாரமாம். சேர்தல் உண்மை வகையைக் குறித்தலால், அதற்கு வாயில் முன்னர்ச்செய்த பாவனையாதல் பெறப்பட்டது சேர்தற்குச் செயப்படுபொருள் திசை என்ற குறிப்பாற் பெறப்பட்டது. திசை - இடம். மெய் - வடிவம். 'கண்டனை மெய்யைக் கண்டவாறு' என, முதல், சினை இரண்டன்பாலும் ஐயுருபு வந்தது. 'நிகழ்வது' என்பது சொல்லெச்சம். "காருறு கண்டனை மெய்கண்டவாறே" என்றதனால் சிவதரிசனம் கிட்டியது. இதனால், பிரத்தியாகாரத்தின் பயன் சிவலோகம் சென்று சிவனைச் சேவிப்பர் என்று கூறப்பட்டது.*

**622.** *தெளிவுரை :-* *மக்கள் நல்வழி ஒழுகுமாற்றை ஆராய்ந்து, அவரைத் தீவழியினின்றும் நீக்குகின்ற நிறைமொழி யுடையராகிய முனிவர், பின் விண்ணுலகில் எவ்விடத்துச் செல்லினும், அவ்விடம்*

## தாரணை

**622.** **நல்வழி நாடி நமன்வழி மாற்றிடுஞ்**
**சொல்வழி யாளர் சுருங்காப் பெருங்கொடை**
**இல்வழி யாளர் இமையவர் எண்டிசைப்**
**பல்வழி எய்தினும் பார்வழி யாகுமே. 6**

---

*மண்ணுலகில் மிக்க கொடையுடைய இல்லறத்தவர் வாழ்கின்ற இடம்போலவே எதிர்கொண்டு பேணும் இடமாம்.*

*குறிப்புரை :- சொல்வழியாளர் - சொல்லால் வழிப்படுத்தும் ஆற்றல் உடையவர். எனவே, 'அவரது சொல், அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயனைத் தப்பாது தருவது, என்பது பெறப்பட்டது. இதனையே "நிறைமொழி" எனத் தொல்காப்பியரும், (தொல். செய்யுளில், 171) திருவள்ளுவரும் (குறள், 28) ஒருபடித்தாகக் கூறினர். இங்ஙனம் கூறவே, 'அறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறுணர்த்துவார் இவரே' என்பது போந்தது. இவர் இவ்வாறு நிறைமொழி யுடையராதல் தாரணை யோகத்தில் நிற்றலால்; அஃதாவது, மனத்தைப் பிறழவிடாது குறித்த பொருளிடத்தே நிறுத்தி நிற்றலாலாம். இவரே ஐம்புல ஆசையை முழுதும் வென்றவராவர்.*

*ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயம்இன்றே*
*மெய்யுணர் வில்லா தவர்க்கு. - குறள். 354*

*என்னும் குறளின் உரையில் பரிமேலழகரும், "ஐயுணர்வு எய்துதலாவது, மனம் மடங்கி ஒருதலைப்பட்டுத் தாரணைக்கண் நிற்றல்" என்று உரைத்தார். எனவே, "உரன் என்னுந் தோட்டியான் ஓரைந்துங் காத்தல்" (குறள், 24) என்பதும் தாரணையே யாயிற்று. இந்நிலையைப் பெற்றோர் நிறைமொழியாளராதலை,*

*ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்*
*இந்திரனே சாலுங் கரி. - குறள். 25*

*என்பதனாலும் அறிக. இவையெல்லாம் பிரத்தியாகார நிலைக்கு ஏலாமையும், தியான சமாதிகளில் சிறுபான்மையன்றிப் பெரும்பான்மை நிகழாமையும் அறிந்துகொள்க. இமையவரது பல்வழி என இயையும். 'பாரில் இல்வழியாளர் வழியாகும்' என மாறிக் கூட்டுக. ஆக்கம் உவமை குறித்து நின்றது. இத்தொடர் தாம் எய்திநின்ற உலகத்தேயன்றி அதற்குக் கீழுள்ள உலகங்களிலும் வியாபகம் உடையராதலை உணர்த்திற்று.*

*இதனால், தாரணையின் பயன் கூறப்பட்டது.*

## தியானம்

**623.** தூங்கவல் லார்க்கும் துணையேழ் புவனமும்
வாங்கல் லார்க்கும் வலிசெய்து நின்றிடந்
தேங்கவல் லார்க்கும் திளைக்கும் அமுதம்முன்
தாங்கவல் லார்க்குந்தன் தன்இடமாமே. 7

## சமாதி

**624.** காரிய மான உபாதியைத் தான்கடந்
தாரிய காரணம் ஏழுந்தன் பாலுற
வாரிய காரணம் மாயத் தவத்திடைத்
தாரியல் தற்பரஞ் சேர்தல் சமாதியே. 8

---

**623.** *தெளிவுரை :- சமாதி, பிரத்தியாகாரம், தாரணை, தியானம் இவற்றில் நிற்பாற்கு அவரவரது தியானப் பொருளின் இடமே அடையுமிடமாகும்.*

*குறிப்புரை :- எனவே, தியானத்திற்குப் பயன் தியானிக்கப்பட்ட கடவுளது உலகத்தில் இருந்து இன்பம் நுகர்தல் ஒன்றேயாயிற்று. செய்யுள் நோக்கிச் சமாதி முதற்கண் கூறப்பட்டது. 'புவனத்தினின்றும் மனத்தை வாங்க வல்லார்' என உருபு விரித்துச் செயப்படுபொருள் வருவிக்க. இது பிரத்தியாகாரமாதல் அறிக. 'நின்ற' என்பதன் அகரம் தொகுத்தலாயிற்று. 'நின்ற இடத்தில் தேங்குதலே தாரணை' என்பதும், அமுதத்தை உண்டு தேக்குவார் தியான யோகிகள் என்பதும் வெளிப்படை. தான், தியானிக்கப்படும் கடவுள். 'தன்தன்' என்பது அடுக்கு. தியானத்தின் பயனே கூறக் கருதினாராயினும், சிவயோகம், பிறயோகம் என யோகம் இருவகையாய் நிகழும் என்பதனை ஈண்டு உணர்த்துதற்குப் பிறவற்றின் பயனையும் உடன் கூறினார். பிரத்தியாகாரத்திற்குக் கீழ் உள்ளவற்றில் சிறப்புப்பயன் இன்மை அறிக.*

*இதனால், தியானத்தின் பயன் கூறப்பட்டது.*

**624. தெளிவுரை** *:- சமாதியினியல்பும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று. காரிய உபாதிகள் ஏழையும் அகன்று காரண உபாதிகள் ஏழையும் பொருந்தி, பரம்பரையாக வரும் நீண்ட காரணம் கெட. தவத்தில் ஒழுங்கான தற்பரம் பொருளைச் சார்தலே சமாதியின் பயனாம் என்றவாறு.*

*காரிய உபாதி ஏழ் - ஆன்மாக்களுக்கு ஆணவ மல மறைப்பால்*

*விளைந்த உபாதிகள் ஏழு. அவையாவன. இறைமையின்மை, அற்ப அறிவுடைமை, அளவுபட்ட தன்மை, மாயையோடு கூடிய தன்மை, சிறிதாற்றலுடைமை, சுதந்திரமின்மை, காணாமை என்பன. இவற்றை வடநூலார் முறையே அநீசத்துவம், கிஞ்சிஞ்ஞத்வம், பரிச்சின்னத்துவம், மாயா சகித்துவம், அற்பசக்தித்துவம், பராதீனத்துவம், அபரோக்ஷத்வம் என்பர். இவ்வேழு உபாதிகளையும் அகன்று என்பதாம். கடத்தலாவது சமாதியாளர்க்குச் சீவபோதம் கழலுதலின் சீவோபாதிகளும் நீங்குவனவாயின.*

*ஆரியகாரண உபாதி ஏழு - சிறந்த அல்லது ஆரியனாகிய சிவனுடையதான காரண உபாதிகள் ஏழு. அவையாவன:- இறைமை, முற்றறிவுடைமை, எங்குந்தானாதல், இயல்பாகவே மாயையின்மை, வரம்பிலாற்றல், தன்வயத்தனாதல், ஒன்றியுணர்தல் என்பன. இவற்றை வடநூலார் முறையே ஈசத்துவம், சர்வஞத்வம், வியாபகத்தவம், மாயாரகிதத்வம், சர்வசக்தித்வம், சுதந்திரத்வம், பரோக்ஷத்வம் என்பர்.*

*வாரிய காரணம் மாய - தொடர்ந்து வருகின்ற காரணமாகிய மாயை கெட. தாரியல் - ஒழுங்கான. தார் - ஒழுங்கு. தற்பரம் - தானே மேலான சிவம்.*

## 11. அட்டமாசித்தி

### பரகாயப் பிரவேசம்

625. பணிந்தெண் திசையும் பரமனை நாடித்
துணிந்தென் திசையும் தொழுதெம் பிரானை
அணிந்தெண் திசையினும் அட்டமா சித்தி
தணிந்தெண் திசைசென்று தாபித்த வாறே. 1

626. பரிசறி வானவர் பண்பன் அடியெனத்
துரிசற நாடியே தூவெளி கண்டேண்
அரிய தெனக்கில்லை அட்டமா சித்தி
பெரிதருள் செய்து பிறப்பறுத் தானே. 2

---

*அட்டமாசித்தி - தவத்தால் எய்தக்கூடிய எட்டு வகையான பேறுகளாம். அவை அணிமா முதலியன. இனி யோகத்தின் சிறப்புப் பயனாகிய அட்டமாசித்தியை எழுபத்தொரு திருமந்திரங்களான் உணர்த்துகின்றார். 'பரகாயப் பிரவேசம்' என்பதை அட்டமாசித்திக்கு மறுபெயராக நாயனார் அமைத்துள்ளார். இதனை இருபொருள்பட வைத்திருத்தல் பின்னர் விளங்கும்.*

625. ***தெளிவுரை :-*** *யாவரும் அட்டமா சித்திகளைப் பெற்று, அவற்றை எட்டுத் திக்கிலும் சென்று விளங்கக் காட்டிப் பெருமை பெற்றது, சிவபெருமானைப் பல்லாற்றானும் வழிபட்டேயாம்.*

***குறிப்புரை :-*** *பணிதல் - நிலத்தில் வீழ்ந்து வணங்குதல்; தொழுதல் - கும்பிடுதல்; அணிதல் - இறைவனுள் அடங்கி நிற்றல், ஒப்பனை செய்து மகிழ்தல், தணிதல், அடங்குதல். துணிதல் - நம்புதல். "எண்திசை சென்று அட்டமா சித்தி தாபித்தவாறு, பரமனை நாடித் துணிந்து எண்திசையிலும் சென்று பணிந்து, தொழுது, அணிந்து, தணிந்து" எனக் கூட்டுக. 'சிவபெருமானை எவ்வகையிலேனும் நினையாமல் சித்தி பெறுதல் கூடாது' என்பதாம்.*

*இதனால் அட்டமா சித்திப் பேற்றிற்கு ஆவது கூறப்பட்டது.*

**626.** ***தெளிவுரை :-*** *"யான் பெறும் பரிசாவது சிவபெருமானது திருவடிப்பேறு ஒன்றே" எனக் குற்றமற உணர்ந்து அவனை யான் அகத்தே தியானித்தேன். ஆகவே, எனக்குப் பெறற்கரிதாய பேறு யாதும் இல்லை; (எல்லாப்பேறும் எளியனவே) அதனால், பிறர் அரியனவாக*

627. குரவன் அருளிற் குறிவழி மூலன்
பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத்
தெரிதரு சாம்பவி கேசரி சேரப்
பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே. 3

---

*உணர்கின்ற அட்டமாசித்திகளை அவன் எனக்கு நிரம்பக் கொடுத்துப் பெரும்பயனாகிய பிறவி நீக்கத்தையும் அளித்தருளினான்.*

***குறிப்புரை :-*** *அறிவானவர்; உருத்திர சிவகணத்தார். பண்பன் - அவருக்கு நல்லன். தூவெளி - சிறந்த ஒளி. இஃது ஆஞ்ஞையில் தியானிக்கப்படுவது.*

*இதனால், சிவயோகியர்க்கு அட்டமாசித்தி தாமே கிடைத்தல் கூறப்பட்டது.*

**627. *தெளிவுரை :-*** *யோக குருவின் அருளால் அவன் குறித்த முறைப்படியே மூலாதாரத்தை நோக்கி ஓடப் பார்க்கும் வாயு, அவ்வாறு ஓடாது சத்தித் தானமாகிய இலாடத்திற் சென்று சேரும் அரிய நேரத்தைப் பார்த்து, அவ்வாறு சேரும் வாயுவே துணையாகச் சாம்பவி யோகம் கேசரி யோகங்களைச் செய்வார்க்குப் பெரிய சிவகதி போலக் கிடைப்பது, எட்டாம் சித்தியாகிய வசித்துவமாம்.*

***குறிப்புரை :-*** *"குறிவழிசேர" என இயையும். மூலத்தின் வழிச் செல்லுங்காற்றை, "மூலன்" என்றும், "நாதம், விந்து" என்பவற்றில் விந்து, சத்தி, பேதமாகக் கூறப்படுதலின், விந்துத் தானத்தை "பரை" என்றும் கூறினார். மணம் - கூடுதல்; சேர்தல். ''சங்கடம்'' என்பது விரித்தலாயிற்று. சங்கடம் - சிறிதிடம். மந்திரத்தை உபாஞ்சுவாகக் கணித்தல் சாம்பவி யோகம். இதில் கண்கள் சிறிது திறந்திருக்கும். மந்திரத்தை மானதமாகக் கணித்தல் கேசரி யோகம். இதில் கண்கள் மூடியிருக்கும். இவையே இவை பற்றிக் கூறும் வாக்கியங்கட்குக் கருத்தாதல் அறிந்துகொள்க. சாம்பவி - அம்பாளோடு (சத்தியோடு கூடியது. "சாம்பவி தீக்கை, சாம்பவி முத்திரை" என்னும் இடங்களிலும் சாம்பவி, இப்பொருட்டாதல் அறிக. சத்தி, உலகிற்கும், சிவத்திற்கும் இடைநிற்கும் நிலை. "எட்டாவது சித்தி இவ்யோகங்களாற் கிடைக்கும்". எனவே, இவை ஒழிந்த ஏனை யோகங்களால் சில சித்திகளே கிடைக்கும் என்பது பெறப்பட்டது.*

**628.** காயாதி பூதங் கலைகால மாயையில்
ஆயா தகல அறிவொன் றனாதியே
ஓயாப் பதியதன் உண்மையைக் கூடினால்
வீயாப் பரகாயம் மேவலு மாமே. 4

**629.** இருபதி னாயிரத் தேழ்நூறு பேதம்
மருவிய கன்மமாம் மாபந்த யோகந்
தருமிவை காய உழைப்பாகும் தானே
அருமிகு நான்காய் அடங்குமா சித்திக்கே. 5

---

*இதனால், சித்திகளை முற்றுப் பெறுமாறு கூறப்பட்டது.*

**628.** *தெளிவுரை :- ஆகாயம் முதலிய பூதங்களையும், கலை காலம் முதலிய உள்ளந்தக் கரணங்களையும் பற்றி நின்று ஒரு பொருளைச் சுட்டியறியாமல் வியாபகமாக அறியும் அறிவால், ஒன்றாய் அனாதியே தனக்கு அறிவைத் தருதலை ஒழியாத பதிப்பொருளின் உண்மையை அடைய விரும்பினால், என்றும் அழியாத பரவெளியிற் சேரலாம்.*

*குறிப்புரை :- என்றது, 'சித்திகளை விரும்பாது மெய்ஞ்ஞானத்தை விரும்பி யோகம் செய்தலே சிறந்தது' என்றவாறு. சிவத்தை விரும்புதல் வியாபக அறிவாதலும், பிறவற்றை விரும்புதல் ஏகதேச அறிவாதலும் உணர்க. "அகலம்" என்னும் பண்புப்பெயர் ஈறுகெட்டு, "அறிவு" என்பதனோடு புணர்ந்தது. அகலம் - விரிவு. "அறிவு உண்மையைக் கூடினால்" என்க. உண்மை - தன்னியல்பு. பரகாயம் - மேலான வெளி. "பராகாயம்" எனவும் பாடம் ஓதுவர்.*

*இதனால், சித்தி காம யோகத்தினும், முத்தி காம யோகமே சிறப்புடைத்தாதல் கூறப்பட்டது. எனவே, "பரகாயப் பிரவேசம்" என்பது சித்தி காமத்திற்கு, "பிறிதோர் உடம்பிற் புகுதல்" எனவும், முத்திகாமத்திற்கு, "சிதாகாசத்திற் புகுதல்" எனவும் பொருள் தந்து நிற்றல் குறிக்கப்பட்டவாறு அறிக.*

**629.** *தெளிவுரை :- கன்மத்தையே பொருந்தச் செய்கின்ற சித்தி காமயோகம், இருபதினாயிரத்து எழுநூறாய் விளங்கும். சித்திகளையே தருகின்ற இவை அனைத்தும் உடல் உழைப்பாவனவன்றி, உணர்வுப் பெருக்கமாதல் இல்லை. இவை இத்துணையாக விரிவன வாயினும், சித்திகளின் தொகை நோக்கி எட்டாய் அடங்கும்.*

**630.** **மதிதனில் ஈராறாய் மன்னுங் கலையின்**
**உதய மதுநா லொழியஓ ரெட்டுப்**
**பதியும்ஈ ராறாண்டு பற்றறப் பார்க்கில்**
**திதமான ஈராறு சித்திக ளாமே.** **6**

---

*குறிப்புரை :- எனவே, அவ்வெட்டும் அவ்வச் சித்தியோகம் எனப்படும் என்க. யோகம் இத்துணைத் தாய் விரியுமாறு பின்னர், "முந்திய முந்நூற்றறுபது" எனவரும் திருமந்திரத்தால் அறியப்படும். அதனானே "எண்ணூறு" என்பது பாடம் ஆகாமையும் விளங்கும். "ஆரும்" என்பது குறுகி நின்றது. ஆர்தல், நிரம்புதல். "சித்திக்கு" என்றது, "சித்திக்குத் தக" என்றவாறு.*

*இதனால், சித்தி யோகத்தின் அல்லற்பாடும், அதன் இழிபும் கூறப்பட்டன.*

**630.** *தெளிவுரை :- பன்னிரு கலையுடைய சில அதிசய நிலவுகள் முற்றும் மறைந்து பின் தோன்றும்பொழுது அக்கலைகளில் நான்கு ஒழிந்தேபோக, எட்டே நிலைபெறுகின்றன. அவ்வொழிவு நீங்கி அனைத்துக் கலைகளும் நிலைபெறும் செயலைப் பன்னிரண்டாண்டுகள் அயராது செய்தால், அவ்வாண்டெல்லைக்குள் சித்திகள் கைகூடும்.*

*குறிப்புரை :- பிராண வாயுவின் அளவான பன்னிரண் டங்குலத்தைக் கலையாக உருவகித்தற்கு, அவ்வாயுவைத் திங்களாக உருவகம் செய்தார். இவ்விரண்டு உருவகங்களும், தேய்தல், வளர்தலுக்கு ஏற்புடையவாயின. 'உதயமதில்' எனவும், திதமான ஈராறில் எனவும் உருபு விரிக்க. "பற்று" என்பது 'செலவு' என்றவாறு. திதம் - நிலைபேறு. 'அவ்வீராறில்' எனச் சுட்டு வருவிக்க. கன்ம யோகங்கள் யாவும் காய உழைப்பேயாதலின், 'பிராணாயாமத்தால் காயம் செம்மையுற்றிருந்தா லன்றி, அவற்றின் பயனாகிய சித்திகள் எய்தா' என்க. 'பிராண வாயு இயங்குங்கால் பன்னிரண்டங்குலமாக வெளிச்சென்று எட்டங்குலமாக உட்புகும்' என்பதும், அவ்வாறின்றி உட்புகும் பொழுதும் பன்னிரண்டங்குலமாகச் செய்யின் உடல் தளர்ச்சியுறாது என்பதும் முன்னே கூறப்பட்டன.*

*இதனால், சித்திகள் எய்துதற்கு யோக கால அளவும், 12 ஆண்டுகள் பிராணாயாமம் பழகின் சித்திகளை எய்தலாம் என்பதும் கூறப்பட்டது.*

**631.** **நாடும் பிணியாகும் நம்சனம் சூழ்ந்தக்கால்**
**நீடும் கலைகல்வி நீள்மேதை கூர்ஞானம்**
**பீடொன்றி னால்வாயா சித்திகள்பே தத்தின்**
**நீடுந் தூரங்கேட்டல் நீள்முடி வீராறே.** **7**

**632.** **ஏழா னதிற்சண்ட வாயுவின் வேகியாம்**
**தாழா நடைபல யோசனை சார்ந்திடும்**
**சூழான ஓரெட்டில் தோன்றா நரைதிரை**
**தாழான ஒன்பதிற் றான்பர காயமே.** **8**

---

**631.** ***தெளிவுரை :-*** *சுற்றத் தொடர்பு யோகத்திற்குத் தடையாகும். யோகமின்றி, நூலறிவு, உலகியலறிவு, இயற்கை நுண்ணறிவு முதலியவற்றுள் ஒன்றினாலும் சித்திகள் கிடைக்கமாட்டா. அவை வேறு வேறாகக் கிடைத்தற்குச் செல்லும் தீர்ந்த யோக கால எல்லையாக நூல்களில் கேட்கப்படுவது, மேற்குறித்த பன்னிரண்டாண்டுகளாம்.*

***குறிப்புரை :-*** *நம்சனம் - நமக்கு உறவான மக்கள். ஆகவே, 'சித்திகளைப் பெறவேண்டுவோர் சுற்றத் தொடர்பு, நூலாராய்ச்சி முதலிவற்றிற் காலம் கழியாது, பன்னிரண் டாண்டு யோகத்தில் நிற்க' என்பதாம். கேட்டல், கேட்கப்படும் கால அளவு; ஆகுபெயர்.*

*இதனால், மேலது நன்கு வலியுறுத்தப்பட்டது.*

**632.** ***தெளிவுரை :-*** *யோகத்தைக் குறைவின்றிப் பயின்றால், ஏழாவதாண்டில், பிறர் உடன் தொடர இயலாதவாறு காற்றைப் போலக் கடிதிற் செல்லும்நடை உளதாகும். அந்நடையது வேகம் எத்துணைக் காவதம் நடந்தாலும் குறையாது. எட்டாவது ஆண்டில், நரை திரை இருப்பினும் மறைந்து இளமைத் தோற்றம் காணப்படும். ஒன்பதாவது ஆண்டில் உடம்பு தேவசரீரம்போல ஒளிவிடும்.*

***குறிப்புரை :-*** *''தோன்றா'' என்பது, ''மறையும்'' என்னும் பொருட்டு, திரை, தோல் சுருங்கி மடிந்து தொங்குதல். "தான்" என்றது, தன் உடம்பைக் குறித்த ஆகுபெயர். 'பரம்' என்பது 'தெய்வம்' என்னும் அளவாய் நின்றது.*

*இதனால், குறைவிலா யோகத்தின் அடையாளங்கள் சில கூறப்பட்டன.*

**633.** ஈரைந்திற் பூரித்துத் தியான உருத்திரன்
நேரொன்று பன்னொன்றில் ஈறாகும் எண்சித்தி
சீரொன்று மேலேழு கீழேழ் புவிச்சென்றவ்
வோரொன்றில் வியாபியாய் நிற்றல்ஈ ராறே. **9**

**634.** தானே அணுவும் சகத்துத்தன் நோன்மையும்
மானாக் கனமும் பரகாயத் தேகலும்
தானாவ தும்பர காயஞ்சேர் தன்மையும்
ஆனாத வுண்மையும் வியாபியு மாம்எட்டே. **10**

---

**633.** ***தெளிவுரை :-*** *பத்தாம் யாண்டில் அகமும் புறமும் நிறைந்து, தியானிக்கத்தக்க உருத்திரர்களைத் தொகையான் ஒத்த பதினொராம் யாண்டில் அட்டமா சித்திகள் விளையும், பன்னீராண்டில் சிறப்புப் பொருந்திய மேல் ஏழு, கீழ் ஏழு என்று விதிக்கப் பெற்ற உலகங்களில் சென்று, சிந்தித்தல் பொருந்திய எங்கும் நிறைபொருளாய் நிற்றல் உண்டாம் என்றவாறு.*

*பூரித்து - நிறைந்து, உருத்திரன் நேர் பன்னொன்று - உருத்திரர்களை ஒத்த பதினொன்று என்ற எண். ஓர் ஒன்று - வியாபியாய். ஏகதேச வியாபியாக அன்றி ஒவ்வொருலகத்தும் வியாபித்த பொருளாய் சாத்தன் சாத்தனூரில் இருந்தான் என்றவழிக் கயிலையில் இலன் என்றது போலன்றி எங்கும் நிறைபொருளாய் நிற்றல்.*

*இதனால், எஞ்சிய அடையாளங்களுடன், முடிந்தது முடித்துக் காட்டப்பட்டது.*

**634.** ***தெளிவுரை :-*** *எட்டுச் சித்திகளாவன, யோகி ஒருவனே தான் வேண்டியவாறு எட்டுத் தன்மையனாக நிற்றல். அவை அணுவினுள்ளும் அணுவாய் நுழைதல், அண்டத்தினும் பெரியோனாய் அவற்றைக் கடந்து நிற்றல், காற்றினும் நொய்ம்மையனாய் வானத்தில் உலாவுதல், எத்துணை ஆடவர் கூடி எடுப்பினும் எடுக்கமாட்டாத வராம்படி மலைபோலத் திண்மையுடையனாயிருத்தல், நினைத்த இடத்தில் நினைத்த மாத்திரத்தில் செல்லுதல், நினைத்ததை அடைதல், எல்லோராலும் ஏற்றுப் போற்றப்படுதல். யாவரையும் தன்வழிப்படுத்தி நிற்றல் என்பனவாம்.*

***குறிப்புரை :-*** *இவை முறையே, 'அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்' என்னும் காரணப்பெயர் உடையன என்க.*

*இம்முறைக்கு ஏற்ப இத்திருமந்திரத்தில் "பரகாயம் சேர் தன்மை" என்பதை "மானாக் கனமும்" என்பதற்கு முன்னும், "வியாபியும்" என்பதை "ஆனாத உண்மையும்" என்பதற்கு முன்னும் கூட்டி உரைக்க "சகத்து" என்றது நில அண்டத்தை. நோன்மை - வலிமை; ஆற்றல் அஃதாவது எல்லாப் பொருளையும் உள்ளடக்கி நிற்றல் இங்கு அஃது அதுபோன்ற ஆற்றலைக் குறித்தது. மானா - ஒரு பொருளும் ஒப்பாகமாட்டாத. பரகாயத்து ஏகல் - பிற உயிரின் உடம்பிற் புகுதல் இஃது எவ்விடத்தும் எளிதிற் செல்லுமாற்றிற்குச் சிறந்து நின்ற உபலக்கணம். ஆவது - பொருட்பேற்றால் உயர்தல் பரகாயம் மேலான ஆகாயம்; என்றது பூதாகாசத்தையேயாம்.. 'தன்மையும்' என்பதனை, 'நொய்ம்மையும்' என ஓதுதல் சிறக்கும் ஆனாத உண்மை - பிறர் தன்னை விட்டு நீங்காத நிலை. "வியாபி" என்றதை மேலை மந்திரத்திற் போலவே கொள்க.* ***இச்சித்திகளை ஞானியர் விரும்புதல் இல்லை; எனினும் அவர்களிடத்து இவை தாமே அடையும். அடையினும் இவற்றை அவர் பயன்படுத்துதல் இல்லை.*** *இனி, ஞானசம்பந்தர் முதலியோரிடத்து நிகழ்ந்த அற்புதங்கள் இறைவனே நிகழ்த்தின வல்லது, இச்சித்திகளின்பால் அல்ல என்பது உணர்க.*

*வீரவாகு தேவரிடத்தும், அநுமனிடத்தும் அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, சித்திகள் விளங்கினமை அவரவர் வரலாற்றுட் கேட்கப்படுகின்றன. 'மவுற்கல்லியர்' என்னும் முனிவர், வேண்டிய வடிவங்கொண்டார் என்பதும் 'பிராத்தி'. வசிட்டர் முதலியோர் தாம் இருந்த இடத்தில் காமதேனு முதலியவற்றை வருவித்துப் பயன் கொண்டனர் என்பதும் 'பிராகாமியம்' என்னும் சித்தியாம். முனிவர் பலரும் பலராலும் புறக்கணியாது பணியப்பட்டமை 'ஈசத்துவம்' என்னும் சித்தியாம். நெருப்புச் சுடாதவாறு நின்று அதன்மேல் இருந்தல், நீர் ஆழ்த்தாதவாறு நின்று அதன்மேல் நடத்தல், கொடிய விலங்குகளையும் ஏவல் கேட்டு நடக்கச் செய்தல், மழையைப் பெய்வித்தல், நிறுத்தல் முதலியன 'வசித்துவம்' என்னும் சித்தியாம். மற்றும் இவற்றின் இயல்புகளை ஓர்ந்துணர்ந்துகொள்க.*

*'கரி' என்பது யானை; அது திண்மையைக் குறித்து நின்றது. ஆயினும், அதற்கு, 'சாட்சி' எனப்பொருள்கொண்டு, 'விடயங்களை நுகர்ந்தும் அவற்றில் தொடக்குண்ணாமை கரிமா' என்கின்றார்,*

**635.** தாங்கிய தன்மையுந் தானணுப் பல்லுயிர்
வாங்கிய காலத்தும் மற்றோர் குறையில்லை
ஆங்கே எழுந்தோன் அவற்றுள் எழுந்துமிக்
கோங்கி வரமுத்தி முந்திய வாறே. 11

---

சிவஞான போதப் பாடியம் உடையார். அஃது ஒருசார் நூல்களில் - அல்லது ஆகமங்களில் காணப்படும் சிறுபான்மை வழக்காதலன்றிப் பெரும் பான்மை வழக்காகத் தெரியவில்லை. மேலும், அணிமாவிற்கு மறுதலைப்பட மகிமா இருத்தல் போல, இலகிமாவிற்கு மறுதலைப் பட்ட தொன்று இருத்தலும் வேண்டப்படுவதே. அன்றியும், விடயத்தில் தொடக்குண்ணாதிருத்தல் முத்திப் பகுதியாவதன்றிச் சித்திப் பகுதியும் ஆகுமோ என்பது ஆராயத்தக்கது. இனிச் சித்திகளை "உடம்பால் பெறுவனவும், மனம் முதலியவற்றாற் பெறுவனவும்'' என இருவகையவாகப் பகுத்துணர்த்துகின்ற அவர், ''இருவகையவும் தனித்தனி நந்நான்காய் உள்ளன" என்னாது, "உடம்பாற் பெறுவன அணிமா, மகிமா, இலகிமா'' என்னும் மூன்றே என்கின்றார். இவற்றுடன் கரிமாவையும் உடம்பாற் பெறுவனவாகக் கொள்ளின் சாலப் பொருந்தும். 'கனமும்' என்பதை, "ககனமும்" என ஓதுவாரும் உளர்; அஃது யாப்பிற்கு ஒவ்வாமை அறிக.

இதனால், 'எட்டுச் சித்திகளாவன இவை' என்பவை கூறப்பட்டது.

**635.** *தெளிவுரை :-* யோகி, அணிமாவால் தான் நினைத்த உயிருட் புகுந்தவிடத்தும் மகிமாவால் அவற்றைக் கடந்து நிற்கும் தன்மை குறைபடுதல் இல்லை. எவ்வாறெனில், மகிமா நிலையில் நின்ற அவனே அணிமாவால் அவ்வுயிர்களுள் செறிந்துவர, அவற்றைக் கடந்து நிற்கும் நிலை திரிபின்றி நிற்கும் ஆகலான்.

*குறிப்புரை :-* "தான் அணுவாய்ப் பல உயிர்களால் ஏற்கப்பட்ட காலத்தும் தாங்கிய தன்மை ஓர் குறையில்லையாய் நிற்கும்" என்க. "தன்மையும்" என்னும் உம்மை இறந்தது தழுவிய எச்சம். எழுதல் - கடத்தல். "எழுந்தோம்" என்பது பாடமாயின், யோகியின் தன்மையைத் தம்மேல் வைத்து ஓதியதாக உரைக்க. அவற்றுள் - முற்கூறிய பல்லுயிர்களுள், "ஆகலான்" என்பது சொல்லெச்சம்.

இதனால், அணிமாவின் இயல்பறியாது ஐயுறும் மாணாக்கர்க்கு அவ்வையம் அகற்றப்பட்டது.

636. முந்திய முந்நூற் றறுபது காலமும்
வந்தது நாழிகை வான்முத லாயிடச்
சிந்தைசெய் மண்முதல் தேர்ந்தறி வாய்வலம்
உந்தியுள் நின்று வுதித்தெழு மாறே. 12

---

636. ***தெளிவுரை :-*** *"ஓர் ஆண்டு முந்நூற்றறுபது கூறுகளைக் கொண்டது" எனத் தொன்றுதொட்டுக் கொள்ளப்பட்டு வருகின்ற அக்காலக் கூறு - அஃதாவது, "ஒருநாள் என்பது, நாழிகைகளின் தொகுதியால் அமைந்தது. அந்த நாழிகைகளை ஐந்து கூறாகப் பகுத்து அப்பகுதி ஐந்தையும் ஐம்பூதங்கட்கும் உரிய பகுதிகளாகப் பாவனை செய்துகொள். பின்பு நிலம் முதலிய பூதங்களின் ஆற்றல் சுவாதிட்டானம் முதலாகத் தோன்றி நிலைபெறுவனவாகக் கொண்டு யோகம் செய்".*

***குறிப்புரை :-*** *"நாள்" என்னாது "காலம்" என்றார் "யாவும் காலத்தின் வழிப்பட்டு நடப்பன" என்றற்கு. "ஓர் ஆண்டிற்கு இத்துணை நாள்'' என்பதில் வேறுபாடுகள் பல உள. அவற்றுள் இங்குக் குறிக்கப்படுவது, "முந்நூற்றறுபது நாள்களைக் கொண்டது" என்பார், அதனை எடுத்தோதினார். இது கதிர்யாண்டு (சௌரமான வருடம்) இதற்கு முந்நூற்றறுபத்தைந்து நாள் சொல்லப்படுமாயினும், ஐந்து நாள்களை நாயனார் கொண்டிலர். இவ்யாண்டு ஒன்றே மக்கட்கு ஒரு வயது. இதன்படி மக்கள் வாழ்நாள் காலம் நூறு வயது. இனிக் கிரக தசா வருடங்கள். "முந்நூறு நாள்கள் கொண்டது ஒரு வருடம்" என்னும் கணக்கில் அமைந்தவை. அதன்படி, "மக்கள் தாய் வயிற்றில் ஓர் ஆண்டு காலம் இருக்கின்றனர்" என்பதும், "பிறந்தபின் நூற்றிருப தாண்டு வாழ்வர்" என்பதும், "அந்நூற்றிருபதாண்டுகளும் ஒன்பது கோள்களுக்கு ஏற்ற பெற்றியால் அமைந்து நிற்கும்" என்பதும் சோதிட நூற்கொள்கைகள். எனினும், இஞ்ஞான்று கிரகதசா வருடங்களும், முதற்கண் கூறிய கதிர்யாண்டின்படியே கொள்ளப்படுகின்றன.*

*"அறுபது நாழிகை கொண்டது ஒரு நாள்" என்பதில் பரத கண்டத்தில் வேறுபாடின்மையால், அதனை விதந்தோதாது வாளா, "வந்தது, நாழிகை" என்றார். "நாழிகையால்" என உருபு விரித்து, ''நாழிகையால் வந்தது'' என மாறிக் கூட்டுக. ''அவற்றை வான் முதலாயிடச் சிந்தைசெய்" என ஒருசொல் வருவித்துக் கொள்க. "வலம் மண்முதல் உந்தியுள் நின்று உதித்தெழுமாறு தேர்ந்தறிவாய்" எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. "தேர்ந்தறிவார் வலர்" என்பது*

பாடமாயின், இதனை, யோகியரது இயல்பாக்கி உரைக்க. "உந்தி" என்றது இங்கு அதற்குக் கீழ் உள்ள சுவாதிட்டானத்தை.

இதனாற் சொல்லியது, "ஒரு நாளில் உள்ள நாழிகையை ஐந்து கூறிட்டு அக்கூறுகளை ஐந்து பூதங்கட்கு உரியவாக்கி, சுவாதிட்டானம் முதலிய ஆதார யோகங்களை அப்பூதங்கட்கு உரிய அந்நாழிகைகளில் செய்தல் வேண்டும்" என்பதாம். "ஒரு நாளின் தொடக்கம் வைகறைப் போது" எனக் கொள்ளப்படுதலால், பகலவன் தோற்றத்திற்கு முன் ஆறு நாழிகையை நிலம் என்னும் பூதத்தின் காலமாகக் கொண்டு முதலதாகிய சுவாதிட்டான யோகத்தைத் தொடங்கல் வேண்டும். பின் அவ் ஆறு நாழிகை நீர், நெருப்பு, காற்று, வானம் என்பவற்றுக்கு உரியனவாகக கொண்டு மணிபூரகம் முதலாக ஆஞ்ஞை வரையில் செல்லுதல் வேண்டும். செல்லின், பகல் பதினெட்டு நாழிகை முதல் இருபத்து நான்கு நாழிகை வரையில் ஆஞ்ஞையில் நிற்க வேண்டி வரும். யோக நிலையில் இதனோடே பகற்காலம் முடிவுறும். பின்னும் இவ்வாறே சுவாதிட்டானம் முதலாகத் தொடங்கி, இரவு பதினெட்டு முதல் இருபத்து நான்கு நாழிகை வரையில் உள்ள பகுதியில் ஆஞ்ஞை யோகத்தில் இருத்தல் வேண்டும். இவையெல்லாம் உய்த்துணர்ந்து உரையிற் கொள்ளப்படும். ''வான் முதலாயிட'' என்பதற்குச் ''சூரியோதயம் தொடங்கி'' எனவும், ''மண் முதல்'' என்பதற்குச் "அத்தமனம் தொடங்கி" எனவும் தாம் வேண்டுமாறே அச்சொற்களை வருவித்துக்கொண்டு தமக்குத் தோன்றியவாறேயும் உரைப்பர். அஃது, 'உந்தியுள் நின்று உதித்தல்' என்றதனோடு ஒவ்வாமை அறிக.

'இவ்வாறு இடைவிடாது யோகத்தில் இருப்பின், உண்டல், உறங்கல் முதலியவற்றிற்குக் காலம் எப்பொழுது' என ஐயுறல் வேண்டா; என்னை? இது, 'ஆதார யோகத்திற்குரிய காலமுறை இவ்வாறு கொள்ளத்தக்கது' எனக் கூறியதன்றி, 'அவற்றை இடையறாது செய்தல் வேண்டும்' எனக் கூறியதன்று ஆகலான யோகமாகிய அறிதுயிலில் இருப்போர் அதனை விடுத்து உலகியலில் விழித்தல் எளிதாகலின் அஃது எந்த நேரத்திலும் இயல்வதேயாம். சிலர் சில நாள்காறும் ஊண் உறக்கம் இன்றி இடைவிடாது செய்ய வல்லராயும் இருப்பர். ஆகவே 'இஃது அவரவரது ஆற்றலுக்கு ஏற்பக் கொள்ளப் படுவதே' என்க. எனினும், பொருள் ஈட்டலில் கருத்துடையவர் பொழுதை வீண்போக்குதலும், பொருட் பேற்றிற்கு மாறானவற்றைச் செய்தலும் இல்லாமை போல யோகத்தில் கருத்துடையோரும் பொழுதை வீண்போக்குதலும், யோகத்திற்கு மாறானவற்றைச் செய்தலும் இலர் என்க.

**637.** சித்தந் திரிந்து சிவமய மாகியே
முத்தந் தெரிந்துற்ற மோனர் சிவமுத்தர்
சுத்தம் பெறலாக ஐந்தில் தொடக்கற்றோர்
சித்தம் பரத்தின் திருநடத் தோரே. 13

---

*இங்ஙனமாகனே, மேல் (பா.632) "ஏழானதிற் சண்டவாயுவின் வேகியாம்" என்பது முதலாகக் கூறிய ஆண்டுக் கணக்குகள் இங்குக் குறித்த முறையில் ஆதாரயோகம் நிகழும் நாழிகை யளவால் அமைவதன்றி, ஏனையோர்க்குப் போலப் பகலவனது தோற்ற மறைவு மாத்திரையானே அமைவதன்று என்பது பெறப்படும். அந்த நாழிகைத் தொகையே, மேல் (பா.629) "இருபதினாயிரத்தேழ்நூறு பேதம்" எனக் குறிக்கப்பட்டது. ஒருநாளைக்கு அறுபது நாழிகையாக, முந்நூற்றறுபது நாள்களுக்குக் கணக்கிட வருவது. (360 x 60 - 21600) இருபத்தோராயிரத்து அறுநூறு நாழிகை. இதில் பதினைந்துநாள் குறையினும் ஓராண்டாகவே பயன்தரும் என்றற்கே, தொள்ளாயிர நாழிகை தள்ளி, (21600 - 900 = 20700) "இருபதினாயிரத்து ஏழ் நூறு பேதம்" எனக் கூறினார். எனவே, சுவாதிட்டானம் முதலிய ஐந்தில் ஒவ்வோர் ஆதார யோகமும் நாலாயிரத்து நூற்று நாற்பது (4,140) நாழிகையிற் குறையாது சம அளவில் நிகழின், அதுவே யோகத்தின் ஓராண்டு எனவும், 'அவ்வகையில் பன்னிரண்டாண்டுகள் சென்ற பின்பே சித்திகள் எய்தப் பெறும்' எனவும் கொள்க. 'இவ்வாறு சொல்லிய யோக காலத்தை, யோகிகள், மந்திரம் கணிப்பவர் தாம் கருதிய உருவளவை இடை விட்டாயினும், இடைவிடாதாயினும் கணித்து முடித்தல் போல முடிப்பர்' எனினும், அவ்வாறு முடிக்குங்கால் இங்குக் கூறியமுறை வழுவாது செய்து முடிப்பர் எனவும், 'யோகப்பயிற்சி உடையவர் தாம் விரும்பும் ஆதார யோகத்தை விரும்பியவாறே செய்யவல்லராய் இருப்பர்' எனவும் உணர்க. மூலாதாரயோகம், குண்டலியை எழுப்புதல் மாத்திரையாய் அமைதலின், அது சுவாதிட்டான யோகத்தில் அடங்கிற்று. "நின்று வுதித்து" எனக் குற்றியலுகரம் கெடாது நின்று, உடம்படமெய் பெற்றது.*

*இதனால், 'பன்னிரண்டாண்டு யோகம் செய்க' என மேற்கூறிய ஆண்டின் இயல்பு கூறப்பட்டது.*

**637. தெளிவுரை :- *(அட்டமா சித்திகளை அடைய விரும்பி அவற்றைப் பெறும் பவயோகம் செய்பவர் அதனிடையே மலபரி பாகம் காரணமாக)* மனம் வேறுபட்டு, சிவனை அடையும் வேட்கை யராய் முத்திப்பேற்றிற்குரிய வழியை உணர்ந்து ஐம்புல ஆசையற்றுச் சிவஞான ஒழுக்கத்தில் நிற்கும் சிவயோகியராதலும் உண்டு.**

638. ஒத்தஇவ் வொன்பது வாயுவும் ஒத்தன
ஒத்தஇவ் வொன்பதின் மிக்க தனஞ்சயன்
ஒத்தஇவ் வொன்பதில் ஒக்க இருந்திட
ஒத்த உடலும் உயிரும் இருந்தவே. 14

---

*அவ்வாற்றால் தத்துவங்களின் நீங்கவேண்டி மேற்கூறிய ஐம்பூதங்களின் கட்டினின்றும் நீங்கினோர், உள்ளம் இறைவனது ஆனந்த நடனத்தில் ஒடுங்கப் பெறுவர்.*

***குறிப்புரை :-*** *சிவமயமாதல் சிவனை அடைதலாகிய ஒன்றிலே குறியாய் இருத்தல். 'முத்தி' 'முத்தம்' எனத்திரிந்து நின்றது. முத்தி, என்றது, அதனை அடையும் நெறியாகிய ஞான ஒழுக்கத்தை. "உற்ற" என்ற அநுவாதம், உறுதல் உண்மை பற்றிக் கூறியது. "முத்தர்" என்றது யோகியரை. சுத்தமாவது, தத்துவங்களினின்று நீங்குதல். "ஐந்து" என்றது, மேல், "வான்முதல்" எனவும், "மண்முதல்" எனவும் கூறிய பூதங்களை. அவற்றின் தொடக்காவது, ஆதாரங்களையும், மேற்கூறியவாறு அப் பூதங்கட்கு உரியனவாக்கி அவற்றின்வழி நிற்றல். சித்திகளை வெறுத்தோர்க்கு அம்முறை வேண்டாமையின், அவரை, "அத்தொடக்கு அற்றவர்" என்றார். "பரத்தின் திருநடம்", ஆறாவதன் தொகை.*

*இதனால், "சித்தியோகமாகிய பவயோகம் சிவயோகமாய் வேறுபடுதலும் உண்டு" என்பது கூறப்பட்டது. கூறவே, "இப்பயன் கருதியே ஞான நூல்களும் யோகத்தை விதிக்கின்றன" என்பது அறியப்படும்.*

*இங்கு நின்றும் மேற்குறித்த சிவயோகம் பற்றியே கூறுகின்றார்.*

**638. *தெளிவுரை :-*** *தம்முள் மிகாமலும், குறையாமலும் சமமான சிறப்பால் தம்முள் ஒத்தனவாகிய, தனஞ்சயன் ஒழிந்த ஏனை வாயுக்கள் ஒன்பதும் வேறு வேறு நின்று செயற்படுவன. சிறப்பால் அவ்வொன்பதிலும் மேம்பட்டது 'தனஞ்சயன்' என்னும் வாயு. அஃது ஏனை ஒன்பது வாயுக்களினும் ஒப்பக் கலந்து, அவற்றிற்கு வன்மையைத் தந்து நிற்கும். அஃது அவ்வாறு நிற்பதனாலே உயிரும், உடம்பும் இணங்கியிருக்கின்றன.*

**639.** **இருக்குந் தனஞ்சயன் ஒன்பது காலில்**
**இருக்கும் இருநூற் றிருபத்து நான்கின்**
**இருக்கு முடலி லிருந்தில தாகில்**
**இருக்கும் உடலது வீங்கி வெடித்ததே.** **15**

---

*குறிப்புரை :- முதலடியில் ஈற்றில் நின்ற "ஒத்தன" என்பது, ஒன்றையொன்று அவாவி நில்லாது தனித்து நிற்றலைக் குறித்தது. "மிக்க" என்றது அநுவாதம். "ஏனை வாயுக்கள் ஒழிய இஃது ஒன்றும், ஏனையவற்றில் கலந்து நிற்றல் எவ்வாறு" என்னும் ஐயத்தை நீக்குதற்கு அதனது இயல்பை விதந்தார். வாயுக்களில் பிராணனே சிறந்ததன்றித் தனஞ்சயன் சிறத்தல் எவ்வாறு எனின், பிராணனுக்கும் இயக்கத்தைத் தருவது தனஞ்சயன் ஆதலின் அது சிறந்தது என்க. மூர்ச்சையில் பிராணன் இயங்காது நின்றவிடத்தும் மீள அதனை இயங்கச் செய்வது இத்தனஞ்சயனேயாம். இதுபற்றியே, "இஃது இறப்புக்காலத்தில் பிராணனை உள்ளிட்ட ஒன்பது வாயுக்களும் நீங்கிய பின்பு தலைக்குள் இருந்து தலை ஓட்டை உடைத்துக்கொண்டு செல்லும்" என்கின்றனர்.*

*பவயோகத்தை விடுத்துச் சிவயோகத்தில் நிற்பார் அதனை முற்றச் செய்தற்பொருட்டு வாழ்நாளை நீடித்துக் கொள்ளுதற்கு வழி கூறத்தொடங்கி, முதற்கண் இம்மந்திரத்தால் உடல் நிலைத்திருத்தற்குக் காரணம் இது என்பது இதனாற் கூறினார்.*

**639. தெளிவுரை :-** *வாயுக்களுள் ஒன்றாய் இருக்கின்ற தனஞ்சயன், மேற்கூறியவாறு ஏனை ஒன்பது வாயுக்களிலும் கலந்திருக்கும். "தனஞ்சயன்" என்ற வாயு இல்லை என்றால், உடம்பே நிலைபெறாது பதங்கெட்டு அழியும்.*

*குறிப்புரை :- "இருக்கும்" நான்கில் இரண்டாவது முற்று, ஏனையவை எச்சம், "இருநூற்றிருபத்து நான்காய் இருக்கும் உடல்" என்றது, பிண்டம், அண்டம் அவை சமமாதல்" (கோயிற் புராணம், பதஞ்சலி சருக்கம், 70) பற்றி, உடம்பில் இருநூற்றிருபத்து நான்கு புவனங்களும் உளவாக வைத்து நோக்கப்படுதல் பற்றியாம். "இத்துணைச் சிறப்புடைய உடம்பு", "தனஞ்சயன்" என்ற ஒரு காற்று இல்லையாயின் அழிந்துவிடும் என்றவாறு. "வீங்கி வெடித்தது" என்பது, 'பதங்கெட்டு அழிந்தது' என்றபடி.*

*இதனால், மேற்கூறிய காரணம் வலியுறுத்தப்பட்டது.*

640. வீங்குங் கழலை சிரங்கொடு குட்டமும்
வீங்கும் வியாதிகள் சோகை பலவதாய்
வீங்கிய வாதமுங் கூனும் முடமுமாம்
வீங்கும் வியாதிகள் கண்ணில் மருவியே. 16

641. கண்ணில் வியாதி உரோகந் தனஞ்செயன்
கண்ணிலிவ் வாயிகள் காச மவனல்லன்
கண்ணினிற் கூர்மன் கலந்தில னாதலாற்
கண்ணினிற் சோதி கலந்ததும் இல்லையே. 17

---

640. ***தெளிவுரை :-*** *வீங்குகின்ற கட்டிகள், சொறிப்புண், குட்டம், பலவகை சோகை, கூன், முடம் என்னும் பலவகை நோய்களும், உறுப்புக் குறைகளும் தனஞ்சய வாயு, அளவில் செம்மையுற்று இராமையால் உளவாவன.*

***குறிப்புரை :-*** *"தனஞ்சயன் செம்மையுற்றிராமையால்" என்பது அதிகாரத்தால் கொள்ளக்கிடந்தது. இத்தீங்குகள் பிறப்பிலும், வாழ்வு இடையிலும் வருதல், இவ்வாயு, கருவிலும், இடையிலும் குறைபடுத லாலேயாம் என்க. கழலை - கட்டி. சிரங்கு - சொறிப்புண். 'பலவதாய்' என்பதில் "அது" என்பது "அத்தன்மை" எனப்பொருள் தந்தது. வீங்குதல் நான்கில் முதல் ஒழிந்த மூன்றும், மிகுதற் பொருளன. "ஆம்" என்பதை இறுதியில் வைத்து, "கண்ணில் மருவி வீங்கும் வியாதிகளும் ஆம்" என மாற்றியும், உம்மை விரித்தும் காண்க.*

*இதனால், உடற்குறைக்குக் காரணம் கூறுமுகத்தால், மேலது வலியுறுத்தப்பட்டது.*

641. ***தெளிவுரை :-*** *(மேல், "வீங்கும் வியாதிகள் கண்ணில் மருவியே" என்றதனால், "கண் அமைவதற்குத் தனஞ்சயனே காரணம் போலும்" என மயங்கற்கு). கண்ணில் உளவாகும் நோய்கட்கு மட்டுமே தனஞ்சயனது செம்மையின்மை காரணமாகும். கண்ணில் பொருந்தியுள்ள நரம்புகளின் செயற்பாட்டிற்கும், அச்செயற் பாட்டிற்கும் அமையும் கண்ணொளிக்கும் தனஞ்செயன் காரணமன்று; அவற்றிற்குக் "கூர்மன்" என்னும் வாயுவே காரணம்.*

***குறிப்புரை :-*** *"கண்ணில்" என்பன பலவும் சொற்பொருட் பின்வருநிலையணி. "வியாதி, ஆணிகள், காசம்" என்பன அவற்றின்*

**642.** நாடியின் ஓசை நயனம் இருதயம்
தூடி யளவுஞ் சுடர்விடு சோதியைத்
தேவருள் ஈசன் திருமால் பிரமனும்
ஓவற நின்றங் குணர்ந்திருந் தாரே. 18

---

*காரணங்களை உணர்த்திய ஆகுபெயர்கள், அவற்றுள் "ஆணிகள்" என்பது முதற்கண் அவற்றின் செயற்பாட்டை உணர்த்தி இருமடியாகு பெயராய் நின்றது. 'தனஞ்சயன் உரோகம்' என மாற்றுக. 'நோய்' எனப் பொருள்படும் 'உரோகம்' என்னும் வடசொல் இங்கு, செப்பம் இன்மையைக் குறித்தது. பின்னிப் பிணைந்து ஒட்டி நிற்றல் பற்றி நரம்புகளை "ஆணிகள்" என்றார். 'பிரகாசம்' என்னும் வடசொல், முதற் குறைந்து, 'காசம்' என நின்றது. 'தனஞ்சயன்' என்பதும், 'கூர்மன்' என்பதும் சொல்லால் ஆண்பாலோடு ஒத்து நிற்றலின், 'அவனல்லன்' என்றும், 'கலந்திலன்' என்றும் கூறினார். "கண்ணின் அமைப்பிற்குக் காரணம் 'கூர்மன்' என்னும் வாயுவே" என்பதனைப் பின்னிரண்டடி களில் எதிர்மறை முகத்தாற் கூறினார்.*

*இதனால், மேலது பற்றி நிகழ்வதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

**642. *தெளிவுரை :-* *கடவுளருள் சிறந்தோராகிய உருத்திரன், மால், அயன் என்னும் மூவருங்கூட யோகத்தில் பத்து நாடிகளிற் கேட்கப்படுவனவாக மேலே சொல்லிய பத்து ஓசைகளாகிய முழக்கத்தைக் (பா. 593) கேட்டலை விடுத்து, கண்ணிலும், இருதயத்திலும் நிலைபெற்று நின்று உடம்பில் துடிப்புள்ளளவும் 'துஞ்சும்போது சுடர்விடு சோதி' (தி.5 ப.93 பா.8) யாகிய சிவனை அங்கே தியானம் செய்கின்றனர்.***

***குறிப்புரை :-* 'மூவரும், நயனம் இருதயம் நின்று, நாடியின் ஓசை அற, சோதியை அங்கு உணர்ந்திருந்தார்' எனக்கூட்டுக. 'துடிப்பு' என்பதன் முதனிலைப்பெயராகிய 'துடி' என்பது நீட்டல் பெற்றது. "பிரமனும்" என்ற உம்மைச்சிறப்பு. "ஓ" என்பது ஒலிக்குறிப்பு இடைச்சொல். 'ஓவுற' எனப்பாடம் ஓதி, ஓவுதல் - ஒழிதல் என உரைத்தலுமாம். "மூவரும் உணர்ந்திருந்தார்" என்றதனால், "சிவனை அடைய விரும்புவோர் அவ்வாறு நிற்க" என்பது குறிப்பெச்சமாயிற்று. "நாடி ஓசைகளைக் கேட்டுக்களித்திருத்தல் சித்தியோகிகட்கே பொருந்துவது" என்றவாறு. சோதியை நயனத்திற் காண்டல், புறநோக்கு***

643. ஒன்பது வாசல் உடையதோர் பிண்டத்துள்
ஒன்பது நாடி யுடையதோ ரோரிடம்
ஒன்பது நாடி ஒருங்கவல் லார்களுக்
கொன்பது வாசல் உலைநல மாமே. 19

644. ஓங்கிய அங்கிக்கீழ் ஒண்சுழனைச்செல்ல
வாங்கி இரவி மதிவழி ஓடிடத்
தாங்கி உலகங்கள் ஏழுந் தரித்திட
ஆங்கது சொன்னோம் அருள்வழி யோர்க்கே. 20

---

*உளதாயவழிச் செய்யும் பாவனை. இருதயத்திற் காண்டல், தாரணை தியான சமாதிகளால் சிவனது ஒளி உருவை இருதயத்தில் காணுதல். அங்ஙனம் காணவே, பவயோகம் ஒழியச் சிவயோகம் உண்டாகும் என்பதாம். இதனுள் இரண்டடி எதுகை வந்தது.*

*இதனால், சிவயோகத்தைத் தலைப்படுமாறு கூறப்பட்டது.*

***643. தெளிவுரை :-** ஒன்பது வாயில்களை உடைய ஒரு வீடாகிய உடம்பில், ஒன்பது நாடிகளும் சுழுமுனை நாடியில் ஒவ்வோரிடத்தில் ஒருங்கு கூடுவனவாம். அவ்விடங்களை அறிந்து அந்த நாடிகளைத் தம்வசப்படுத்த வல்லவர்க்கு ஒன்பது துருத்திகளை உடைய ஓர் உலைபோல்வதாகிய உடம்பு ஞானத்தைத் தருவதாய் அமையும்.*

***குறிப்புரை :-** நாடிகள் ஒன்பதும் தொகும் இடங்களே. நடுநாடியாகிய சுழுமுனையில் உள்ள ஆறு ஆதாரங்கள். நாடிகள் பலவும் இணைதல் பற்றி இவற்றை "கிரந்தி" (முடிச்சு) எனவும் யோக நூல்கள் கூறும். நாடிகளைத் தம் வசப்படுத்துதலாவது, அவ்வவ்வாதாரத்திற் செய்யும் தியானம் முதலியவற்றிற்கு அவை இடையூறு செய்யாதவாறு அடக்குதல். இறுதியில் "வாசல்" என்றது காற்றைப் புகுத்துவதாகிய துருத்தியை. "உலையில் உள்ள நெருப்பால் இரும்பு ஒரு துருத்திக் காற்றினால் வேகின்றது; உடம்பில் உள்ள வெப்பத்தால் உயிர் ஒன்பது துருத்திக் காற்றால் துன்புறுகின்றது" என்றபடி, "சிவயோகத்தைத் தலைப்பட்டால், இவ்வுடம்பே உயிர்க்கு இன்பம் தருவதாய் அமையும்" என்பது கூறியவாறு.*

*இதனால், சிவயோகிகட்கு உடம்பு திருவருள் நெறிக்குத் துணையாய் நிற்றல் கூறப்பட்டது.*

645. தலைப்பட்ட வாறண்ணல் தையலை நாடி
வலைப்பட்ட பாசத்து வன்பிணை மான்போல்
துலைப்பட்ட நாடியைத் தூவழி செய்தால்
விலைக்குண்ண வைத்த தோர் வித்தது வாமே. 21

---

**644. தெளிவுரை :-** *மூலாதாரத்தில் உள்ள அக்கினியை எழுப்பிச் சுழுமுனை நாடி வழியே தலையளவும் செல்லச் செலுத்துதல், பிங்கலை இடைகலை வழியாகப் பிராணனை முறையே வெளியே ஓடவிட்டும், உள்ளே செல்ல இழுத்தும் பயிலுதல், ஏழுலகங்களையும் சுமந்து நிற்றல் ஆகிய முறைகளை நாம் சொன்னது, சிவனது அருள்வழியில் நிற்க விரும்புபவரை நோக்கியேயாம்.*

***குறிப்புரை :-*** *சிறந்த அங்கியாகிய குண்டலினியின் கீழே சுழுமுனை நாடி செல்லச் செய்து, சூரிய கலையில் இயங்கும் பிராணனைச் சந்திர கலையில் ஓடத் தடுத்துச் செலுத்தி, உலகங்கள் ஏழையுந் தாங்குக என்று யோக ஞானமுடையார்க்குச் சொன்னோம் என்றவாறு. குண்டலினி மூலாதாரத்து இருப்பது சுழுமுனை புருவ மத்தியிலிருப்பது, இதனைத் தலைகீழாக நின்று சுழுமுனையைக் குண்டலினித் தானத்தில் செலுத்த பிங்கலை நாடியாகிய வலது நாசி வழியாக இயங்குகிற பிராணன் இடகலையாகிய இடதுநாசியில் இயங்கத் தொடங்கும். உலகங்கள் என்றது மூலாதாரம் முதல் துவாதசாந்தம் வரையுள்ள ஏழு ஆதாரங்களையும், ஏழு ஆதாரங்களும் முறையே சத்தியலோகம், வைகுந்தம், கைலாயம், சிதாகாசம், பராகாசம் முதலான உலகங்களாக உருவகிக்கப்படுதலின் இங்ஙனம் உணர்த்தினார். தரித்திட என்பது அகரவிற்று வியங்கோள் வினைமுற்று. தரித்திடுக என்பது பொருள். அறிவுடையோர்க்குச் சொன்னோம் என்றதனால் யோகஞானம் சிறிதும் இல்லார் இதனைத் தெரிந்து அவதியுறற்க என எச்சரித்தவாறாம்.*

*விபரீத கரணியாவது, பூமியில் சிரத்தையூன்றி இரண்டு கைகளாலும் இடுப்பைப் பிடித்துக் கொண்டு, பிடரியும் தோள்களும் பூமியிற் பொருந்த மேலே காலை நீட்டி முதல் நாள் கணநேரமும், பின் நாட்களில் ஒவ்வொரு கண நேரம் கூட்டியும் ஓர் யாமம் வரை இருக்கப் பழகுதலாம்.*

*இதனால், **"யோகமாகிய அரு முயற்சியால், திருவருளாகிய பெரும்பயன் பெற விரும்புதலே அறிவுடைமை"** என்பது கூறப்பட்டது.*

**645. தெளிவுரை :-** *இடைகலை பிங்கலை நாடிகட்கு நடுவே துலை நாப்போல நிற்கும் சுழுமுனை நாடியையே நல்வழியாகக்*

**646.** ஓடிச் சென்றங்கே ஒருபொருள் கண்டவர்
நாடியி னுள்ளாக நாதம் எழுப்புவர்
தேடிச்சென் றங்கேயுந் தேனை முகந்துண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டுமே. **22**

---

*கொண்டு இயங்கத் தெரிந்தால், வலையில் அகப்பட்ட பெண்மானை வந்து அடையும் ஆண்மான்போல, அந்நாடியின் முடிவில் விளங்கும் சத்தியைத் தேடிச் சிவனும் வந்து பொருந்துவான். இந்நடு நாடி வழி, விலைக்கு விற்க வைத்திருந்த வித்துத் தனக்கே பயன்படுதல் போல்வதொரு தன்மையுடையது. நடுநாடியைத் தூய்மை செய்தால் வரும் பயன் கூறப்பட்டது. துலைப்பட்ட நாடி - சுழுமுனையாகிய புருவநடு தூவழி செய்தலாவது. இடகலைபிங்கலை வழியாகப் பிராணனை இயங்காது தடுத்து இதுவே நல்லவழியாக இயங்கச் செய்வது. அங்ஙனம் செய்யின் புருவ நடுவாகிய ஆஞ்ஞா சக்கரத்தில் சத்தியோடு கூடிய சிவம் எழுந்தருளியிருப்பதைக் கண்டு மகிழலாம். அம்மகிழ்ச்சி தனக்கும், உலகிற்கும் பயன்படும் என்பார் விலைக்கும் உண்ணவும் ஆகச் சேமித்த வித்துவாம் என்றருளினார்.*

*குறிப்புரை :-* மூன்றாம் அடியைத் தாப்பிசையாக முன்னும், பின்னும் இயைத்துப் பொருள்கொள்க. 'தலைப்படும் ஆறு' எனற்பாலதனை, துணிவு பற்றி, 'தலைப்பட்ட ஆறு' என்றார். பாசத்துப் பிணை, அன்புக்குரிய பெண்மான், முன்னர், 'பிணை' என்றதனால், பின்னர் "மான்" என்றது, "கலை" என்பது விளங்கிற்று. "பிணை மான்" என்னும் தொகைச் சொல்லை "பிணையை அணையும் மான்" என விரித்துக்கொள்க. 'தூவழி செய்தால், பிணைமான்போல், அண்ணல் தையலை நாடித் தலைப்பட்டவாறு' எனவும், "தூவழி செய்தால் அது விலைக்கு உண்ண வைத்தது ஓர் வித்தாம்" எனவும் இரு தொடராக இயைத்துரைக்க. சத்திவழியே சிவத்தைச் சார வேண்டுதலின், அதனை அண்ணல் தையலை நாடி வருவதாக ஓதினார்.

'விலைக்கு உண்ண' என்பது, "பிறர், விலைக்குக் கொண்டு உண்ண" என்றதாம். வைத்தது - வைக்கப்பட்ட நெல், "ஓர்வித்தாம்" என்றது வித்தாய்த் தனக்கே பயன்படுவதொரு தன்மையுடையது என்னும் கருத்தினது. "நெல்லை ஒருவன் அடுத்த ஆண்டிற்கு விதையாக வைத்துப் பெரும்பயன் கொள்ள நினையாமல் விலைக்கு விற்றுச் சிறிது பயன்கொள்ள இருக்கையில் அறிவு திருந்தினானாயின், அந்நெல்லே விதையாய் அவனுக்குப் பெரும் பயன்தருதல்போல, யோகமுயற்சியை ஒருவன் ஞானத்திற்கு வாயிலாகக் கொண்டு அதனை அடையக் கருதிச் செய்யாமல் சித்திகளைப் பெற விரும்பிச் செய்கையில் இடையே

**647.** கட்டிட்ட தாமரை நாளத்தில் ஒன்பது
மட்டிட்ட கன்னியர் மாதுடன் சேர்ந்தனர்
தட்டிட்டு நின்று தளங்களி னூடுபோய்ப்
பொட்டிட்டு நின்று பூரண மானதே. **23**

---

*பக்குவம் அடைவானாயின், அவ்யோகமே அவனுக்கு ஞானத்திற்கு வாயிலாக அமையும்" என்பது, ஈற்றடியிற் கூறப்பட்ட உவமையின் பொருள். 'தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளையும்' (மதுரைக் காஞ்சி, 1) அத்துணைப் பயன், விலைக்கு விற்றலால் எய்துதல் கூடாமை அறிக.*

*இதனால், 'சித்தியோகந்தானே முத்தியோகமாய்ப் பயன்படும்' என்பது கூறப்பட்டது.*

**646. *தெளிவுரை :-*** *எனின், உட்பகைகளை வெல்லும் உபாயமுணர்த்துதல் நுதலிற்று. பிரமரந்திரம் வரையில் விரைந்து சென்று ஒப்பற்ற பரம்பொருளைக் கண்டவர்கள், சுழுமுனை நாடியினுள்ளே பரநாதத்தை மேலோங்கச் செய்து, அதனைக் கேட்டுக் கொண்டேயிருப்பார்கள். மேலும் ஆராய்ந்து அங்கே உண்டாகின்ற அமுதத்தையும் உண்டு, உடலாகிற பாசறைக் கண் வலியுடனின்ற உட்பகைவர்களைச் சிறைப்படுத்துவர் என்றவாறு.*

*ஓடிச்சென்று என்றது மூலாதாரத்தினின்று குண்டலினியோடு மேலேறி விரைந்து சென்று என்பதாம். அதாவது பிராணாயாமத்தால் மூலக்கனலை எழுப்பி முதற்பொருளோடு கொண்டு சேர்த்து என்பது கருத்து. ஒரு பொருள் - தன்னோடொத்த இரண்டாம் பொருள் இல்லாத பரசிவம் நாடி - சிறப்புப் பற்றிச் சுழுமுனையையே உணர்த்திற்று. நாடி வகையைப் பற்றி முன் கூறப்பட்டது. தேன் - சகஸ்திராரமாகிற பிரமரந்திரத்தில் தியான யோகத்தால் ஊறும் இனியரசம். முகந்து, உண்டு என்பன தேனின் மிகுதியுணர்த்தின.*

*பாடி - பாசறை ஈண்டு உடலை உணர்த்தியது பகைவராவார். காமம், குரோதம், மோகம், மதம், மாற்சரியம் என்ற குணப் பகைவர் அறுவரும் இந்திரியங்களாகிற பகைகள் ஐந்துமாம் கட்டும் என்றது உயிராகிய தனக்குக் கேடு சேராதவாறு தடைப்படுத்துவன் என்பதாம்.*

*இதனால், 'சிவயோகமே காம வெகுளி மயக்கங்களை அறுத்துப் பேரின்ப நுகர்ச்சிக்கு வழிசெய்யும்' என்பது கூறப்பட்டது.*

**647. *தெளிவுரை :-*** *ஓர் இல்லத்தில் உள்ள பல கட்டுக்களை ஒத்த ஆதாரத் தாமரை மலர்களில் அதன் தண்டினைப் பற்றி அங்கங்கு*

*நின்று சிறிது சிறிது தேனைத் தெளித்த ஒன்பது மகளிர், அவ்விடங்களை விட்டுத் தேனை நிரம்ப முகர்ந்து வார்க்கின்ற அவ் இல்லத் தலைவியோடு சேர்ந்துவிட்டார்கள். அவ்விடங்களில் நின்ற அவர்கள் அவற்றை விட்டு நீங்கித் திலகம் இட்டு நின்றதே தலைவியுடன் ஒன்றாய் நின்ற நிறைவு நிலையாயிற்று.*

***குறிப்புரை :-*** *"கட்டு இட்ட" என்பதில் 'இட்ட' உவம உருபு.* **ஒன்பது கன்னியர் என இயையும். கன்னியரை,** *'கட்டுக்களில் நின்றவர்' என்றதனால், மாது, 'அவ்வில்லம் முழுவதற்கும் தலைவி' என்பது பெறப்பட்டது . மட்டு - தேன்; இஃது சிறிதளவாகத் துளிக்கின்ற* **தேனுக்கே காரணப்பெயர். பின்னர் இது மிக்க தேனைக் குறித்தல்** *மரூஉ வழக்கே. இல்லத்தின் ஒவ்வொரு பகுதியில் இருப்பவர் தேனைச் சிறிது சிறிது வார்ப்பவர் என்பதனால், இல்லத்தலைவி தேனை நிரம்ப முகந்து வார்த்தல் அறியப்படும். 'தளங்களி னூடு தட்டிட்டு நின்று பூரணமானது' என்க.*

*தட்டிடுதல் - தடைப்படுதல். முன்னர், "தாமரை நாளத்தில்" என்றதனால், 'போனது, அதன்வழியாகவே' என்பது போந்தது ஒன்பது கன்னியர், 'வாமை, சேட்டை, இரௌத்தி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சருவபூததமனி, மனோன்மனி' என்னும் நவசத்திகள். இவர்களின் வாமை மூலாதாரத்திலும், சேட்டை சுவாதிட்டானத்திலும், இரௌத்திரியும் காளியும் மணிபூரகத்திலும், கலவிகரணி முதலிய நால்வரும் அனாகதத்திலும், மனோன்மனி விசுத்தியிலும் நிற்பர். ஆஞ்ஞையில் ஆதிசத்தி இருப்பள் என்க. 'வாமை பூரணசக்தி' எனவும், 'பவயோகியர்க்கு அனைத்துச் சித்தியும் தருகின்ற ஆதிசக்தியே, சிவயோகியர்க்கு அருட்சத்தியாய்ச் சிவானந்தத்தைத் தருவள்' எனவும், உணர்க. வாமை முதலிய சத்திகள் சித்திகளுள் ஓரோஒன்றையும், சிவானந்தத்தின் ஏகதேசத்தையும் தருவர். ஆகவே, சிவயோகியர் அவர்களை ஆஞ்ஞையில் அருட்சத்திபால் சேர்த்துச் சிவானந்தத்தை வேண்டிநிற்பர் என்பது உணர்த்தியவாறு. பொட்டிட்டு நிற்றல், ஆஞ்ஞையை அடைந்து நிற்றல்.*

*இதனால், சிவயோகமே நிறைவுடைய யோகமாதல் கூறப்பட்டது.*

**648.** ***தெளிவுரை :-*** *பூரண சத்தியாகிய ஆதிசக்தி, 'இச்சை, ஞானம், கிரியை' என மூன்றாகி, குண்டலியில், 'அகாரம், உகாரம், மகாரம், அபரவிந்து, அபரநாதம், பரவிந்து, பரநாதம்' என்னும் ஏழு கலைகளிலும் பொருந்தி இருபத்தொரு கூறாதலால், அவ்*

**648.** பூரண சத்தி எழுமூன் றறையாக
ஏரணி கன்னியர் ஏழ்நூற்றஞ் சாக்கினார்
நாரணன் நான்முக னாதிய ஐவர்க்குங்
காரண மாகிக் கலந்து விரிந்ததே. **24**

---

*விருபத்தொரு கூறும் பிரமன் முதலிய ஐவரது தொழிற்கும் காரணமாய் அவரொடு பொருந்தி நிற்குமாறு ஏகதேச சத்திகள் அக்காரணப் பகுதிகளை (ஐ இருபத்தொன்று) நூற்றைந்தாக்கிக் கொண்டனர். (எனவே, அவை பிரம இச்சா அகாரம், பிரமஞான அகாரம், பிரமகிரியா அகாரம் என்றற்றொடக்கத்தனவாகப் பெயர்பெற்று நிற்பனவாம்). இனி அந்த நூற்றைந்தையும் மூலாதாரம் முதலிய ஆறாதாரங்களோடும், ஆஞ்ஞைக்கு மேல் உள்ள நிராதாரத்தோடும் கூட்டி மூலாதாரப் பிரம இச்சா அகாரம், மூலாதாரப் பிரமஞான அகாரம், மூலாதாரப் பிரம கிரியா அகாரம் என்றற்றொடக்கத்தனவாக உறழ்ந்து கூற, ஏழடுக்கிய நூற்றைந்தாம் (ஏழு நூற்றைந்து - 7 x 105 = 735 ஆம்) ஆதலின், அங்ஙனமும் ஆக்கினர்.*

***குறிப்புரை :-*** *அறை - பங்கு; கூறு குண்டலி சத்தியைப் பிரமன் முதலியவரோடும் ஏழ் வைத்து இங்ஙனம் பலவாகப் பகுத்துக்கூறுதல், 'உயிர்களின் உணர்வு அந்நிலங்களில் அதிதேவர் வழிவாக்கு வடிவாய் அளவற்றனவாகத் தோன்றும்' என்றற்கும், 'அவை அனைத்தையும் ஒடுக்கித் திருவருளில் நிறுத்திப் பயன்பெற வேண்டும்' என்றற்குமாம். உணர்வுகள் அளவின்றித் தோன்றுதலையே,*

*ஒருபொழுதும் வாழ்வதறியார்; கருதுப*
*கோடியு மல்ல பல.* *- குறள். 337*

*எனக் கூறினார் திருவள்ளுவர். 'எழு நூற்றஞ்சாக்கினர்; அவ் ஆக்கப்பாடு கலந்து விரிந்தது' என்க.*

*இதனால், 'பலவகை உணர்வுகளையும், சிவயோகநெறியால் திருவருள் உணர்வில் ஒடுங்கச் செய்தல்வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**649.** ***தெளிவுரை :-*** *பல ஏகதேச சத்திகளாய் விரிந்தும் ஒன்றேயான பூரண சத்தியாய்க் குவிந்தும் சிவத்தினின்றும் புலப்பட்டுச் செயல் ஆற்றுகின்ற இவ் ஆதிசத்தி, சிவத்தில் ஒன்றாய் அடங்கியிருக்கும் நிலையினின்றும் வெளிப்பட்டுச் செயலாற்றினால் மண் முதலிய பூதங்கள் தூலமாய் வெளிப்பட்டு விரிந்தும், அவள்*

649. விரிந்து குவிந்து விளைந்தஇம் மங்கை
கரத்துள் எழுந்து கரந்தங் கிருக்கிற்
பரந்து குவிந்தது பார்முதற் பூதம்
இரைந்தெழு வாயு விடத்தில் ஒடுங்கே. 25

650. இடையொடு பிங்கலை என்னும் இரண்டும்
அடைபடு வாயுவும் ஆறியே நிற்கும்
தடையவை ஆறெழுந் தண்சுட ருள்ளே
மிடைவளர் மின்கொடி தன்னில் ஒடுங்கே. 26

---

*சிவத்தில் அடங்கி ஒன்றாய் இருப்பின், அவை (பூதங்கள்) சூக்குமமாய் ஒடுங்கியும் இருக்கும் (ஆகவே, எல்லாம் ஆதிசத்தியால் ஆவனவாகலின்) பூரக இரேசகங்களில் பாம்பு சீறினாற் போன்ற ஓசையை உடையதாய், கும்பகத்தில் சுழுமுனை நாடி வழியே மேல் நோக்கி எழுகின்ற பிராணவாயுவால் அவளிடத்தில் சென்று ஒடுங்குவாயாக.*

***குறிப்புரை :-*** *'எழுந்து கரந்து இருக்கின், பரந்துகுவிந்தது' என நிரனிறையாகக் கொள்க எழுதற்கு முன்னுள்ள நிலையை "கரந்து உள் - உள் கரந்து" என்றார். "குவிந்தது" என்பது பன்மை ஒருமை மயக்கம். 'வாயுவால்' என உருபு விரித்து, 'அவளிடத்தினில்' என வருவித்துரைக்க.*

*இதனால், திருவருளது ஆற்றல் கூறப்பட்டது.*

**650. *தெளிவுரை :-*** *யோகத்தில் இடநாடி, வலநாடி இரண்டும் அடைபட, நடுநாடி வழியே செல்லும் பிராணவாயு தன் முரண் அவிந்து உனக்குத் துணையாகியே நிற்கும். அதனைப் பற்றிக்கொண்டு சென்று, ஆறு ஆதாரங்களின்மேல் எழுகின்ற சந்திரனுள்ளே பொருந்தி வளர்கின்ற மின்னற்கொடி போன்ற பூரண சத்தியில் நீ ஒடுங்கிவிடு.*

***குறிப்புரை :-*** *பிராணனியங்கு முறையும், அதனால் விளையுந் தீமையும், அதனை வெல்லும் உபாயமும் உணர்த்துதல் நுதலிற்று. இடகலை பிங்கலை என்ற இருமடைகளிலும் ஓடுகின்ற பிராணன் மாறுபட்டே நிற்கும். அப்போது ஆன்ம விளக்கம் மேலோங்கவிடாது தடையாயிருக்கிற ஆறு பகைகளும் தலைதூக்கி நிற்கும் ஆதலால் யோகியாகிய நீ குளிர்ந்த ஒளிப் பொருளாகிய மதியுள் பின்னி வளர்ந்திருக்கின்ற மின்னற் கொடி போன்ற குண்டலினியில் மனம் ஒன்றி நிற்பாயாக என்றவாறு.*

651. ஒடுங்கி ஒருங்கி யுணர்ந்தங் கிருக்கின்
மடங்கி அடங்கிடும் வாயு அதனுள்
மடங்கி அடங்கிடும் மன்னுயி ருள்ளே
நடங்கொண்ட கூத்தனும் நாடுகின் றானே. 27

652. நாடியின் உள்ளெழு நாதத் தொனியுடன்
தேடியுடன் சென்றத் திருவினைக் கைக்கொண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டிட்டு
மாடில் ஒருகை மணிவிளக் கானதே. 28

அணுமாதிரி சித்திக ளானவை கூறில்
அணுவில் அணுவின் பெருமையில் நேர்மை
இணுகாத வேகார் பரகாய மேவல்
அணுவத் தனையெங்குந் தானாத லென்றெட்டே.

---

*பிராணனைத் தன்னியக்கப்படிவிடின், காமமாதி பகையாறும் தலைதூக்கி நின்று வருத்தும். ஆதலால் பிராணனை மடைமாறிப் பாய்ச்சிக் கட்டுப்படுத்தினால் காமாதிகளைக் கட்டுப்படுத்தலாம். ஆதற்குற்ற உபாயம், பிராணனைச் சுழுமுனை வழியாக ஏற்றிச் சகத்திராரத்தில் உள்ள மதிமண்டலத்தில் குண்டலினி சக்தியோடு கூடச் செய்வதொன்றே என்பது கருத்து. மிடை - அடக்கம்.*

**651. *தெளிவுரை :-*** *சந்திரமண்டலத்தில் ஒடுங்கி, மனம் ஒருங்கித் திருவருளையே உணர்ந்திருந்தால், பிராண வாயுவும் மெத்தென இயங்குதலும் ஒழிந்து, அடங்கியிருக்கும் இவ்வாறு மனமும், வாயுவும் அடங்குதலால், அவற்றின் வரிப் புறஉணர்வும், தன் உணர்வும் அற்றிருக்கும் உயிரின் உள்ளத்தையே ஐந்தொழிற் கூத்து இயற்றும் இறைவனும் தனக்குரிய இடமாக விரும்புகின்றான். அவனைத் தரிசிக்கலாம்.*

***குறிப்புரை :-*** *ஒடுங்குதல் - புறம் போகவிடாது நிலைக்கச் செய்தல். ஒருங்குதல் - ஒன்றனையே பற்றச் செய்தல். உணர்தல் - அங்ஙனம் பற்றிய பரம்பொருளையே அறிந்து அனுபவித்தல்.*

*இதனால், 'சிவயோகத்தால் சந்திர மண்டலத்தில் நிற்பவர்கட்குச் சிவனை அடைதல் வாய்க்கும்' என்பது கூறப்பட்டது.*

**652. *தெளிவுரை :-*** *பத்து நாடிகளின் உள்ளே எழுகின்ற பத்து ஓசைகளாகிய மங்கல முழக்கத்துடன் திருவருளாகிய நிதிக்குவியலைத் தேடிச் சென்று அடைந்து, அதனைக் கவர நினைக்கும் காமம் முதலிய குற்றங்களாகிய பகைவரைச் சிறைப்படுத்தி, அரண்மனையின் மேல்*

653. எட்டா கியசித்தி யோரெட்டி யோகத்தாற்
கிட்டாப் பிராணனே செய்தாற் கிடைத்திடும்
மொட்டாம் நடுநாடி மூலத் தனல்பானு
விட்டால் மதியுண்ண வும்வரு மேலதே. 29

---

*நிலமாகிய முற்றத்தில் நந்தா மணிவிளக்கு (அணையாத இரத்தின தீபம்) ஆகிய சிவஞானத்தை ஏற்றிவைத்து இருத்தலே அதுவாம். (மேல், 'ஒடுங்கி ஒருங்கி உணர்ந்து அங்கிருக்க' எனக் கூறிய சிவயோக சமாதியாம்).*

***குறிப்புரை :-*** *"திரு" முதலாக வந்தவை இப்பொருளையுடைய சிறப்புருவகங்கள். "தொனி" என்றது மங்கல முழக்கத்தைக் குறித்தது. மங்கலமாவது பகைவரை அழித்து அவரது கோட்டையைக் கைப்பற்றிய வெற்றிவிழா. இது தமிழ் நூல்களில் "மண்ணு மங்கலம்" எனக்கூறப்படும். இங்குப் பாசங்களை வென்று திருவருட் கோட்டையைப் பிடித்த வெற்றி குறிப்பிடப்பட்டது. மாடு இல் - செல்வ மனை; அரண் மனை. ஒரு கை - ஓரிடம்; மேல் மாடம். இஃது இங்கே சந்திர மண்டலத்தைக் குறித்தலின், "நிலாமுற்றம்" என்றற்கு ஏற்புடைமை அறிக.*

*"மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்*
*சாலப் பெரியர்என றுந்தீபற*
*தவத்தில் தலைவர்என் றுந்தீபற"*

*என்றார் திருவுந்தியாரினும் (பா.12)*

*இதனால், சிவயோகத்தது பெருமை கூறப்பட்டது.*

*(இதன்பின் உள்ள "அணுமாதி சித்திகள்" என்னும் பாடல் "தானே அணுவும்'' என்ற திருமந்திரத்தின் பொருளையே மீள அரை குறையாகக் கூறலின், நாயனாரது திருமொழியன்றாம்).*

**653.** ***தெளிவுரை :-*** *வசப்படாத பிராணனை அட்டாங்க யோகத்தால் வசப்படுத்தினால் அட்டமாசித்தி உண்டாகும். இனி மூலாதாரத்தில் உள்ள அக்கினி, மொட்டுப்போல் மூடியுள்ள நடுநாடியைத் திறந்துகொண்டு சூரியமண்டலத்தையும் கடந்து சென்று அப்பால் நின்ற சந்திரமண்டலத்தில் உள்ள அமுதை உண்ணுதலும் யோகத்தாலே உண்டாவதாகும்.*

**654.** சித்திக ளெட்டன்றிச் சேரெட்டி யோகத்தாற்
புத்திக ளானவை எல்லாம் புலப்படும்
சித்திகள் எண்சித்தி தானாந் திரிபுரை
சத்தி அருள்தரத் தானுள வாகுமே. **30**

---

***குறிப்புரை :-*** *மூலாதாரம் அக்கினி மண்டலமும், இதயம் சூரிய மண்டலமும், புருவநடு சந்திரமண்டலமுமாதலின் குண்டலினி பிராணாயாமத்தால் நடுநாடி வழியாக அக்கினி மண்டலத்தினின்று கிளம்பி, சூரிய மண்டலத்தையும் தாண்டி, புருவ நடுவை அடையுமாயின் அதற்கும் மேலதாகிய சந்திர மண்டலத்து அமுதத்தை உண்ணலாம் என்பது கருத்து.*

*இதனால், ஆஞ்ஞைக்குக் கீழ், சித்தி பெறும் அளவில் நிற்றல் சிறப்பில்லாமை கூறப்பட்டது.*

**654. *தெளிவுரை :-*** *அட்டாங்க யோகத்தால் அட்டமாசித்திகளே யன்றித் தத்துவ ஞானங்கள் பலவும் விளங்குவனவாம். "சித்திகள்" என்பவற்றைத் தமக்கே பெயராக உடைய அட்டமாசித்திகளும், திருவருளேயாய் நிற்கின்ற அந்தச் சித்திகள், மும்மாயைகளினும் நின்று செயல் செய்யும் ஆதிசத்தி அருள்புரிதலால் உளவாகும்.*

*ஐசுவரியம், அணிமா, மகிமா முதல் எட்டு வகைப்படும் அவற்றுள், அணுவினும் அதிசூக்குமம் வடிவுற்று நிற்றல் அணிமா வென்னுஞ் செல்வம்.*

*மேருவினும் மிகப்பெரிய வடிவுற்று நிற்றல் மகிமா வென்னுஞ் செல்வம்.*

*சேறு முதலியவற்றின் இயங்கினும் அழுத்துதலின்றிக் காற்றினுங் கடுநடைத்தாய் மெல்லிய வடிவுற்று நிற்றல் இலகிமாவென்னும் செல்வம்.*

*மனத்தான் விழையப்பட்டன அனைத்தும் விழைந்தவாறே பெறுதல் பிராத்தியெனுஞ் செல்வம்.*

*சங்கற்ப மாத்திரையான் ஆயிரம் மகளிரைப் படைத்து அவ்வாயிர மகளிரோடும் ஆயிரம் வடிவாய் நின்று கிரீடித்தல் பிராகாமியமென்னுஞ் செல்வம்.*

*பிரமன் முதலியோர் மாட்டுந் தன்னாணை செலுத்தி அவராற்*

### 11அ. பர அணிமா

655. எட்டிவை தன்னோ டெழிற்பரங் கைகூடப்
பட்டவர் சித்தர் பரலோகஞ் சேர்தலால்
இட்டம துள்ளே இருக்கல் பரகாட்சி
எட்டு வரப்பும் இடந்தானின் றெட்டுமே. 1

---

*பூசிக்கப்படுதல் ஈசத்துவமென்னுஞ் செல்வம்.*

*உலகமுழுவதையுந் தன்வசமாக்குதலும், உலகத்தை உண்டாக்குதலும் வசித்துமென்னுஞ் செல்வம்.*

*இவ்வொண்வகைச் சித்தியுள் முன்னைய மூன்றும் உடம்பானும், பின்னையவைந்தும் மனமுதலியவற்றானும் பெறப்படுவனவென்று உணர்க.*

*பேய்களுக்கு இவ்வெட்டும் நிலவுலகத்தை வியாபித்துக் கூறியவாறே உள்ளன. அரக்கருவகத்துள்ளார்க்கு நீருலகத்தையும் வியாபித்த இருமடங்கும், இயக்கருலகத்துள்ளார்க்குத் தீயுலகத்தையும் வியாபித்து மும்மடங்கும், காந்தருவவுலகத்துள்ளார்க்கு வாயுவுலகத்தையும் வியாபித்து நான்மடங்கும், இந்திரவுலகத் துள்ளார்க்கு ஆகாயவுலகத்தையும் வியாபித்து ஐந்து மடங்கும், சோமலோகத்துள்ளார்க்கு மனத்தினையும் வியாபித்து ஆறு மடங்கும், பிரசாபதியுலகத்துள்ளார்க்கு ஆங்காரத்தையும் வியாபித்து ஏழு மடங்கும், பிரமலோகத்துள்ளார்க்குப் புத்தியையும் வியாபித்து எட்டு மடங்கும் ஏற்றமாயுள்ளனவர்கலான். எண்வகைச் செல்வமும் இங்ஙனம் ஓரோவொன்று எவ்வெட்டாய் விரியான் அறுபத்து நான்காம்.*

***குறிப்புரை :-** திரிபுரம் - மூன்று நகர். "சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை" என்னும் மூன்று மாயையே இவ்வாறு உருவகிக்கப்படும். இம்மூன்றினும் நின்று செயலாற்றுதல் பற்றி ஆதிசத்தி, "திரிபுரை" எனப்படுகின்றாள். "திரிபுர சுந்தரி" எனக் கூறுதலும் உண்டு.*

***இதனால், "அபர சித்திகள்" எனத் தக்க மருட்சித்திகளாகிய அட்டமாசித்திகளினும் மேற்பட்டு, 'பர சித்திகள்' எனத் தக்க அருட் சித்திகளும் உள்ளன" என்பது கூறி, அவற்றிற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.***

**656.** மந்தரம் ஏறு மதிபானு வைமாற்றிக்
கந்தாய்க் குழியிற் கசடற வல்லார்க்குத்
தந்தின்று நற்கா மியலோகஞ் சார்வாகும்
அந்த வுலகம் அணிமாதி யாமே. 2

---

655. ***தெளிவுரை :-*** *பரசித்தியாகிய இந்த அருட் சித்தி எட்டனையும் அடைந்து, இவற்றால் சிவப்பேறும் கைகூடப் பெற்றவரே பரலோகத்தை அடைவராதலால் அவரே "சித்தர்" (சித்திகளைப் பெற்றவர்) என்று சொல்லத்தக்கவர். அவர்கள் தங்கள் விருப்பம் எல்லாவற்றையும் சிவனது திருவருள் வியாபகத்துள் ஒடுக்கி அத்திருவருளையே கண்டுகொண்டிருத்தலே உண்மை யோகக் காட்சியாம். மாயையைக் கடந்த இந்த அருட்சித்தியன்றி மாயைக்குட்பட்ட மருட்சித்திகள் அம்மாயைகளில் நின்று சிவத்தை அணுகுதல் கூடுமோ!*

***குறிப்புரை :-*** *அவர்கள் சேருமிடம் பரலோகமாகிய சிவலோகமாம் அங்குச் சென்று அவர்கள் விருப்பப்படி, சுதந்திரர்களாக எஞ்ஞான்றும் சிவதரிசனம் செய்து கொண்டு சிவபோகத்தழுந்தியிருத்தலே பரகாட்சியாம். அங்ஙனம் பரகாட்சி பெறுகின்ற சித்தர்களிருக்கும் இடம் தேடி அட்டமாசித்திகளும் தாமே வலிய வந்தடையும் என்பதாம். இங்ஙனமன்றிச் சித்திகளளவில் நின்றவர்கள் சித்திகளைத் தேடிப் போகத்தக்கவர்கள்; அவற்றையும் வென்று கீழ்ப்படுத்திப் பரஞானம் பெற்றவர்களே சித்திகளைத் தம் வயப்படுத்தியவர்கள் ஆவார்கள் என்பது கருத்து.*

**656.** ***தெளிவுரை :-*** *"மேரு" எனப் பெயர்பெற்ற சுழுமுனை நாடியைச் சூழ்ந்து இயங்குகின்ற, 'சந்திர கலை, சூரிய கலை' என்னும் பெயரை உடைய இடைநாடி பிங்கலை நாடிகளின்வழி இயங்கும் பிராண வாயுவை அடக்கிச் சுழுமுனை நாடியின் உள்ளே செல்லுமாறு மாற்றியமைத்தபின், மூலாதாரம் முதலிய பள்ளங்களில் தறிபோல நில்லாது, அங்ஙனம் நிற்கும் குற்றத்தின் நீங்க வல்லவர்க்குப் பின் ஞானத்திற்கு ஏதுவாகிய விருப்பத்தைத் தரும் பரலோக இன்பம் இப்பொழுதே உண்டாகிப் பின்பு அவ்வுலகத்தைச் சார்தல் உண்டாகும். அத்தகையோர்க்கு அந்த உலக இன்பங்களே அணிமாதி அட்டமாசித்திகளாம்.*

***குறிப்புரை :-*** மேருவை, 'மந்தரம்' என்றார். 'குழியில் நிற்கும்'

**657.** முடிந்திட்டு வைத்து முயங்கில்ஓ ராண்டில்
அணிந்த அணிமாகை தானாம் இவனும்
தணிந்தஅப் பஞ்சினுந் தான்நொய்ய தாகி
மெலிந்தாங் கிருந்திடும் வெல்லவொண் ணாதே. **3**

---

*என ஒருசொல் வருவிக்க. மூலாதாரம் முதல் விசுத்தி ஈறாக நின்று சித்திகளை அடைதலின் இழிபுணர்த்துகின்றாராகலின், அவ்வா தாரங்களை, "குழி" என்றார். தர, என்பது "தந்து" எனத் திரிந்து நின்றது. 'நிட்காமியமாவது, உலகியலை விரும்பாது மெய்ந்நெறியை விரும்புதலே' என்றற்கு, அதனை, "நற்காமியம்" என்றார். 'அக் கசடறு நற்காமியலோகத்தை இன்றே தரப் பின் அதனைச் சார்வு ஆகும்' எனக் கூட்டுக.*

*இதனால், 'சிவயோகிகட்குக் தவயோகப் பேறே அட்டமா சித்திகளாய் நிற்கும்' என, பரசித்தியாவது இது என்பது கூறப்பட்டது.*

***657. தெளிவுரை :-** கீழ் ஆதாரங்களில் இறங்காமல், ஆஞ்ஞையிலே தன்னைச் சத்தியுடன் ஓர் ஆண்டின் முடியிட்டு வைத்து, அவளுடன் நீக்கமின்றியிருந்தால், அச்சத்தி இவனுக்கு அணுவிலும் அணுவாகின்ற 'அணிமா' என்னும் சித்தியாய் நிற்கும். அந்தச் சித்தியால் இவனும் அந்நிலையினனாவான். இந்த அருட்சித்தியைப் பெற்றவனை, மருட்சித்திகளால் வெல்ல இயலாது.*

***குறிப்புரை :-** இவ் யாண்டு மேற்கூறிய யோக ஆண்டே என்க. "அணிந்த" என்பது, 'அணுவாய் நின்ற' என்னும் பொருளது 'அணி மாவாகை' என்பது குறைந்து நின்றது. அருள் நிலையில் அணுவாதலாவது, எல்லாப் பொருளிலும் நுண்ணிதாய் நிற்கின்ற திருவருளை. தானும் அங்ஙனம் நுண்ணியனாய் நின்று பாவித்தல். முன்னர், "தான்" என்றது, திருவருளை, தணிந்த - சிறிதாய. நொய்ம்மை, இங்கு சிறுமை மேல் நின்றது. நொய்யது - சிறிய பொருள்; "நொய்யனாகி" என ஓதில் சிறக்கும். "இருந்திடும்" என்னும் முற்று, ஆண்பாலில் வந்தது.*

> *கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயின்,*
> *கொண்டவனும் அப்பரிசே கூறுபடும்; - கொண்ட*
> *இருபொருளு மன்றியே இன்னதிது என்னா(து)*
> *ஒருபொருளே யாயிருக்கும் உற்று.*
>
> *- திருக்களிற்றுப்படியார், 24*

*என வருதல் காணத்தக்கது. இதன் முதலடியும் ஈற்றடியும் உயிரெதுகை.*

## 11.ஆ. பர லகிமா

658. ஆகின்ற அத்தனி நாயகி தன்னுடன்
போகின்ற தத்துவம் எங்கும் புகலதாய்ச்
சாய்கின்ற காலங்கள் தன்வழி நின்றிடின்
மாய்கின்ற தையாண்டின் மாலகு வாகுமே. 1

659. மாலகு வாகிய மாய்வினைக் கண்டபின்
சாலொளி யாகித் தழைத்தங் கிருந்திடும்
பாலொளி யாகிப் பரந்தெங்கும் நின்றது
மேலொளி யாகிய மெய்ப்பொருள் காணுமே. 2

---

*இதனால், பரசித்திகள் எட்டனுள், அணிமாவாவது, சிவ சத்தி எப்பொருளிலும் நிறைந்திருத்தலை உணர்தல் என்பது கூறப்பட்டது.*

658. ***தெளிவுரை :-*** *தான் காண்கின்ற எப்பொருளிலும், அணிமாவாகின்ற அந்த ஒப்பற்ற சத்தியுடனே சென்று, அச்சத்தியே தனக்கு நிலைக்களமாக, தனக்குக் கழிகின்ற காலம் முழுதும் அச்சத்தி வழியே நிற்பானாயின், தற்போதங் கெடுதல் ஐந்தாண்டில் கூடும். அதுவே, பரலகிமாவாகும்.*

***குறிப்புரை :-*** *"புகலது" என்பதில் அது, பகுதிப்பொருள் விகுதி. "தன்" என்றது சத்தியை. மாய்தலுக்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. 'அதுவே மா லகுவாகும்' என வேறு தொடராக்கி உரைக்க. தற்போதம் அறுதலால் உயிர் பொறை நீங்கி நிற்குமாதலின், இது, 'இலகிமா' எனப்பட்டது. இது முதல் பல மந்திரங்கள் அந்தாதியாய் வருகின்றன.*

*இதனால், 'பரசித்திகளுள் பர லகிமாவாவது தற்போதம் கெடுதல்' என்பது கூறப்பட்டது.*

**659.** ***தெளிவுரை :-*** *பர லகிமாவாகிய தற்போதம் கெடுதல் உளதாயின் ஏகதேச உணர்வாய்ப் பொருள்களைப் பற்றுதல் விடுதல்களைச் செய்து நின்ற உயிர், நிறைந்த பேரொளியாம் திருவருளேயாய் நிற்கும்; அதன் பயனாகப் பரம்பொருளாகிய சிவத்தை அறியும்.*

***குறிப்புரை :-*** *"மாயனை, தானொளி" என்பன பாடமல்ல. மூன்றாம் அடியை முதலடியின் பின்வைத்து உரைக்க. "நின்றது" என்பது வினையாலணையும் பெயர்.*

*இதனால், மேலதன் பயன் கூறப்பட்டது.*

## 11.இ. பர மகிமா

**660.** **மெய்ப்பொருள் சொல்லிய மெல்லிய லாளுடன்**
**தற்பொரு ளாகிய தத்துவங் கூடிடக்**
**கைப்பொரு ளாகக் கலந்திடும் ஓராண்டின்**
**மைப்பொரு ளாகும் மகிமாவ தாகுமே.** **1**

**661.** **ஆகின்ற காலொளி யாவது கண்டபின்**
**போகின்ற காலங்கள் போவது மில்லையாம்**
**மேனின்ற காலம் வெளியுற நின்றன**
**தானின்ற காலங்கள் தன்வழி யாகுமே.** **2**

---

**660.** ***தெளிவுரை :-*** *இலகிமா சித்திக்குப்பின் மெய்ப்பொருளாகிய சிவத்தைச் சத்தி உணர்த்தி நிற்பாள். அவ்வுணர்வினால் அதனை அடைதல் ஓராண்டில் கைப்பொருளாகக் கிடைக்கும். அதுவே, ஒன்றும் தோன்றாத சூனிய நிலையாகிய பர மகிமாவாகும்.*

***குறிப்புரை :-*** *"சொல்லிய" என்றதனால், சொல்லுதல் அனுவாத முகத்தாற் பெறப்பட்டது. சொல்லுதல் - உணர்த்துதல். தத்பொருள் - அந்தப்பொருள்; என்பது பரம்பொருள். இதுவே மெய்யாதல் பற்றி மீள, "தத்துவம்" என்றார். சத்திவழிச் சிவம் வெளிப்படுங்கால் முதற் கண் அஃது இன்னதென அறிய வாராமையானும், பிறிதொரு பொருளும் அங்குப் புலனாகாமை யானும் வெறும் சூனியமாய்த் தோன்றுமாதலின் அதனை, "மைப்பொருள்" என்றார். மைப்பொருள் - விளங்காத பொருள். இது வியாபக நிலையின் தலைப்பாடாகலின், 'மகிமா' எனப்பட்டது. கைப்பொருள் - உள்ளங்கையில் உள்ள ஒரு பொருள்.*

*இதனால், 'அருட்சித்தியாகிய பர மகிமா இது' என்பது கூறப்பட்டது.*

**661.** ***தெளிவுரை :-*** *எல்லாவற்றிற்கும் அடிநிலை ஒளியாகிய சிவத்தைக் கண்டபின், காலக் கழிவும் அங்ஙனம் கண்டவனது உணர்வில் தோன்றாது. இனி, எல்லாப் பொருள்கட்கும் மேலான தாகிய காலம், தன்னியல்பில் பொருள்களைத் தன்வழிப்படுத்து நடத்தி நிற்குமாயினும், அவனது காலங்கள் அவனைக் கட்டுப்படுத்தாது அவன் வழியவேயாம். மகிமா சித்தியுற்றார் கால தத்துவத்தையும் வென்றவராவர். காலதத்துவம் அவர் ஏவல் வழி நடக்கும்.*

**662.** தன்வழி யாகத் தழைத்திடும் ஞானமும்
தன்வழி யாகத் தழைத்திடும் வையகம்
தன்வழி யாகத் தழைத்த பொருளெல்லாம்
தன்வழித் தன்னரு ளாகிநின் றானே. 3

## 11.ஈ. பரப் பிராத்தி

**663.** நின்றன தத்துவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையவை யெல்லாங்
கொண்டவை ஓராண்டுக் கூட இருந்திடில்
விண்டது வேநல்ல பிராத்திய தாகுமே. 1

---

*குறிப்புரை :- 'போவதும் இல்லை' என்றது, அப்போக்கு உணர்வில் தட்டாமைபற்றி. மேல் நிற்றல், எல்லாப் பொருட்கும் மேலே நிற்றல். வெளி உறுதல், வேறிடத்தில் செயலாற்றுதல். "தான் நின்ற" என்றது, 'தனக்கு நிலைக்களமான' என்றபடி. தன்வழியாதல், தனது மாற்றத்தை விளைக்கமாட்டாது நிற்றல். 'எல்லாவற்றினும் பெரிதாகிய காலத்தையும் அருள்வழி நின்று கடத்தலால், இது மகிமாவாயிற்று' என்பது விளக்கியவாறு. இதில் இரண்டடி எதுகை வந்தது.*

*இதனால் மேலதற்குக் காரணம் கூறப்பட்டது.*

**662. *தெளிவுரை :-*** *தற்போதம் இழந்து சிவத்தை உணர்ந்து நின்றால், ஞானம் மேன்மேல் பெருகும். அங்ஙனம் பெருகப் பெற்றவனால், உலகமும் நலம் பெறும். அங்ஙனம் நலம்பெற்ற உலகம் அவன் வழிப்படுமாயினும், அவன் அவற்றை ஆள நினையாது, சிவனது அருள்வழி நின்று அதுவேயாய் நிற்பன். எல்லாம் இவன் வழி நிற்க, இவன் அருள்வழி நிற்பன் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *"நின்றான்" என்பது காலவழுவமைதி.*

*இதனால், சிவத்தை உணர்ந்தவன் உலகியலால் தாக்கப்படாமை கூறுமுகத்தால், 'மகிமா' என்பதற்குப் பிறிதொரு காரணமும் கூறப்பட்டது.*

**663. *தெளிவுரை :-*** *தோன்றி நின்று தொழிற்படுவனவாகிய தத்துவங்கள் அனைத்திற்கும் தலைவியாகிய ஆதிசத்தியுடன் ஒற்றித்து நின்று கண்ட அத்தத்துவங்களை எல்லாம் யோகி தனக்குக்*

### 11.உ. பர கரிமா

**664.** ஆகின்ற மின்னொளி யாவது கண்டபின்
பாகின்ற பூவிற் பரப்பவை காணலாம்
மேகின்ற காலம் வெளியுறு நின்றது
போகின்ற காலங்கள் போவது மில்லையே. 1

---

*கீழ்ப்பட்டவையாக உணர்ந்து ஓராண்டுக்காலம் அவற்றின் தொழிற் பாடுகளைத் தன்னின் வேறாகக் கண்டுகொண்டிருப்பானாயின், அத்தத்துவங்களால் உளவாகும் வாதனை ஒழிந்து அவ்வொழிவே அருட்சித்திப் பிராத்தியாகும்.*

*குறிப்புரை :- 'நின்றன தத்துவம், கண்டன பூதப்படை' என்பன இருபெயரொட்டு. "தத்துவத்துக்கு நாயகி" என நான்காவது விரிக்க. தத்துவங்களை அவளுடன் நின்று காணுமாறு இலகிமாவில் சொல்லப்பட்டது. நின்றன தத்துவம் - நிலைபெற்றுள்ளனவாகிய தத்துவங்கள்; என்றது மண்முதல் குடிலையீறான தத்துவங்களை இவையனைத்தும் பூதப்படையனாகிய சிவம் சத்தியோடு கூடிப் படைத்தனவேயாதலின் அவற்றுள் மயங்காது இறைவன் படைப்பு ஆன்மாக்களாகிய நமது வினைப் போகத்தின் பொருட்டு விளைவிக்கப் பெற்றன என்றறிந்து அவற்றின் வாதனை தன்னைத் தாக்காது பாதுகாத்துக் கொள்ளும் தாரணைப் பயிற்சியை ஓராண்டுக்காலம் செய்யின், தத்துவகதி உண்டாம். அவைகள் தன்னை விட்டுப் பிரியும், அப்போது தாத்துவிகங்களாகிய பொருள்களனைத்தையும் ஒருசேர அடையும் பிராத்தி சித்திக்கும் என்பதாம்.*

**664.** *தெளிவுரை :- பிராத்தியில் குண்டலி சத்தியையும் தன் வழிப்படக் கண்ட பின்பு, சுத்த மாயையில் உள்ள சுத்த காலமும் அக்குண்டலிக்குள்ளே அடங்கிவிடும். அதனால், சுத்த தத்துவ நிகழ்ச்சிக்கு ஏதுவாக நிகழ்கின்ற சுத்த காலங்களும் நிகழா. ஆதலால், இந்நிலைகள் பாகுபட்ட அனைத்துலகங்களில் உள்ள பொருள் களையும் தன் அறிவினுள்ளே காணுதல் கூடும்.*

*குறிப்புரை :- இரண்டாம் அடியை இறுதியில் வைத்து உரைக்க. 'பகுகின்ற' என்பது, 'பாகின்ற' என மரூஉவாயிற்று. 'பூ' என்றது 'நிலம்' என்னும் பொருட்டாய்ப் புவனங்களை உணர்த்தி நின்றது. பூவிற் பரப்பவை - பல உலகங்களிலும் நிறைந்து கிடக்கின்ற பொருள்கள். இது வினையாலணையும் பெயர். 'மேனின்ற காலம்' என மேல் (பா.661)*

**665.** போவதொன் றில்லை வருவது தானில்லை
சாவதொன் றில்லை தழைப்பது தானில்லை
தாமத மில்லை தமரகத் தின்னொளி
ஆவது மில்லை அறிந்துகொள் வார்க்கே. **2**

**666.** அறிந்த பராசத்தி யுள்ளே அமரில்
பறிந்தது பூதப் படையவை யெல்லாம்
குறிந்தவை ஓராண்டுக் கூட இருக்கில்
விரிந்த பரகாயம் மேவலு மாமே. **3**

---

*அசுத்த காலம் குறிக்கப்பட்டமையின். இங்கு, "மேவுகின்ற காலம்" என்றது, அதற்கு 'மேலே பொருந்தியுள்ள காலம்' எனப் பொருள்பட்டு, சுத்த காலத்தைக் குறித்தல் அறிக. 'அசுத்த மாயையில்' உள்ள தத்துவங்கள் அனைத்தும் சுத்த மாயையிலும் உள்ளன என்பது மேலேயும் (பா. 407) காட்டப்பட்டது. சிவயோகத்தால் குண்டலி சத்தியை இனிது கண்டவரைச் சுத்த மாயை பந்தியாது என்றவாறு.*

*இதனால், 'சுத்த மாயா காரியங்களின் கட்டு நீங்கப்பெறுதலே பரசித்தி கரிமா' என்பது கூறப்பட்டது. இதனானே, மேல் 'கண்டன பூதப்படையவை' என்றது, அசுத்த தத்துவங்களையேயாதல் அறிக. அவற்றை, "பூதப்படை" என்றதும் அதுபற்றி.*

**665. *தெளிவுரை :-*** ***குண்டலி சத்தியை நன்கு காண வல்லவர்க்குப் பல்வேறு வகைப்பட்ட புவனங்களில் சித்திவழிப் போக்கு வரவு புரிதலும், எடுத்த உடம்பு இடையே வீழ்தலும், நுகர்ச்சிப் பொருள் களால் இன்புறுத்தலும் (மயக்கமுறுதலும்) துன்புறுதலும், யோகத்தில் நாடிகளில் பல இனிய ஓசைகளைக் கேட்டலும், மற்றும் ஆதாரக் காட்சிகளில் நிற்றலும், இவைபோல்வனவும் ஆகிய உலகியல்கள் சிறிதும் இல்லையாம்.***

***குறிப்புரை :-*** ***"இல்லை" என்றது 'அவற்றால் உணர்வு திரிதல் இல்லை' என்றதாம். எனவே, 'இந்நிலை கரிமாவாதல் பொருந்தும்' என்பது காட்டியவாறு. தழைத்தல், இன்புறுதல். தாமதம் - மயங்கல். இவை கூறவே துன்புறுதலும் பெறப்பட்டது. தமரம் - ஒலி; இது கடைக்குறைந்து நின்றது. 'அகத்து இன்' என்பது தமரம் என்பதனோடும் இயைந்தது. மூன்றாம் அடி மூன்றாம் எழுத்தெதுகை.***

**666. *தெளிவுரை :-*** ***அணிமா முதலாகப் பல நிலைகளிலும் தன்னால் அறியப்பட்ட சிவசத்தி, பின் யோகியின் உள்ளத்தில்***

## 11.ஊ. பரப் பிராகாமியம்

667. ஆன விளக்கொளி யாவ தறிகிலர்
மூல விளக்கொளி முன்னேயு டையவர்
கான விளக்கொளி கண்டுகொள் வார்கட்கு
மேலை விளக்கொளி வீடெளி தாம்நின்றே. 1

---

*நீங்காதிருப்பின், தத்துவங்களின் குறும்புகள் முற்றிலும் நீங்கினவாம். அங்ஙனம் அவை நீங்கிய நிலையில் அந்தச் சத்தியுடன் அமைதியுற்று இருப்பின், ஓராண்டுக் காலத்தில் நாதத்திற்கு மேல் அளவின்றிக் கிடக்கின்ற அருள்வெளி வியாபகத்தை அவன் அடைதல் கூடுவதாம்.*

***குறிப்புரை :-*** *முன்னிரண்டடிகளில் கரிமா நிலையை அனுவதித்த வாறு. 'இந்நிலையில் அமைதிதோன்றும்' என்றற்கு, "குவிந்தவை" என்றார். அவை - அவை பற்றிய உணர்வுகள். 'அவை குவிந்து' என மாற்றுக. 'குவிய' என்பது "குவிந்து" எனத் திரிந்து நின்றது. பர காயம் - எல்லாப் பொருட்கும் மேலே உள்ள ஆகாயம். "மேவலும்" என்ற உம்மை. சிறப்பு. விரிந்த பரகாயம் மேவலின் மிக்க பயனில்லை யாதலின். இது "கரிமா" எனப்படும். மூன்றாம் அடி உயிரெதுகையும், மூன்றாமெழுத்தெதுகையும் பெற்றது. அடிமுரண் ஆதலும் அறிக.*

*இதனால், பர சித்தியாகிய கரிமாவின் பயன் கூறப்பட்டது.*

**667. *தெளிவுரை :-*** *எல்லா ஒளிகட்கும் மூல ஒளியாகிய திருவருளை அனாதியே தம்மிடத்து உடைய அனைவரும் அது தமக்கு நலம் செய்யும் ஒளியாயிருத்தலை அறிந்திலர். அதனைச் சிவயோகப் பயிற்சியால் காட்டுத் தீப்போன்ற பேரொளியாகக் கண்டு மகிழ்பவர் கட்குப் பரஞ்சோதியாகிய சிவ பரம்பொருளில் ஒன்றுபடுகின்ற முத்தி எளிய பொருளாய் நிலைபெற்று நிற்கும்.*

***குறிப்புரை :-*** *"எல்லா விருப்பத்தினும் வீடு பெறும் விருப்பே உயர்வுடையதாகலின், அது கிடைக்கப் பெறுதலே பிராகாமியமாம்" என்றவாறு. "எளிதாய் நிற்கும்" என விகுதி பிரித்துக் கூட்டி உரைக்க. இதன்கண் இடையிட்டு எதுகை வந்தது. "கால விளக்கொளி" என்பதும் பாடமாதலின், அதனையே கொண்டு, முதலடியை 'ஆல விளக்கொளி' என ஓதினும் ஆம். ஆலம், "அகலம்" என்பதன் மரூஉமாம். காலம் - பக்குவம் எய்திய காலம்;*

*இதனால், பரசித்திப் பிராகாமியம் கூறப்பட்டது.*

## 11.எ. பர ஈசத்துவம்

**668.** நின்ற சதாசிவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையவை எல்லாம்
கொண்டவை ஓராண்டுக் கூடி யிருந்திடிற்
பண்டை அவ் வீசன் பரத்துவ மாகுமே. **1**

---

**668.** *தெளிவுரை :-* முன்னைச் சித்திகளில் பல்லாற்றானும் நீங்கிப் போன தத்துவங்களையெல்லாம் ஆஞ்ஞையில் யோகிக்குத் துணையாய் நிற்கின்ற சிவசத்தி வழியவாகக் கொண்டு அவற்றோடு ஓராண்டுக் காலம் கூடியிருப்பானாயின், அவனுக்கு, எப்பொருட்கும் முன்னோனாகிய சிவனது இறைமைத் தன்மைகள் எல்லாம் கிடைப்பனவாகும்.

*குறிப்புரை :-* எனவே, "இதுவே பர சித்தியுள் ஈசத்துவமாம்" என்றதாயிற்று. ஐந்தொழில் நிலையில் மேற்பட்டது, சதாசிவ நிலையாதலின், அதனையே எடுத்துக்கூறினார். "பூதம்" என்றது இங்குத் தத்துவம் முப்பத்தாறனையும். "எல்லாவற்றையும், அவற்றொடு" என உருபுகள் விரிக்க. ''நாயகி, தன்னுடன் (யோகி) கண்டன எல்லாவற்றையும் கொண்டு அவற்றோடு கூடியிருந்திடில்'' என்க. தத்துவங்கள் எல்லாவற்றையும் சத்தியே கைக்கொண்டு அவற்றொடு கூடியிருத்தலாவது, "இவன் செய்தியெலாம் என்செய்தி என்றும், செய்தது எனக்கு இவனுக்குச் செய்தது என்றும்" (சிவஞானசித்தி. சூ. 10) யோகியின் செயல் அனைத்தையும் தன் செயலாக ஏற்று அனைத்துச் செயல்களையும் அவனுக்கு நலமாக அமையும் வகையிலே புரிதலாம். "ஓராண்டுக் கூடி இருந்திடில்" என்றது, ''யோகி தன் செயல்கள் அனைத்தையும் சத்தியின் செயலாக ஒப்புவித்து நிற்றல் வேண்டும்" என்பதனைச் சத்திமேல் வைத்து ஓதியவாறு. 'பண்டைய தத்துவம்' என இயையும். அவை சிவனது பரத்துவம், தன் வயத்தனாதல் முதலியவையாம். இவைகளைப் பெறுதல் ஈசத்துவமாதல் வெளிப்படை "தத்துவ மாகுமே" என்பது பாடம் அறிக.

*இதனால், பரசித்தியுள் ஈசத்துவத்தின் இயல்பு கூறப்பட்டது.*

**669.** *தெளிவுரை :-* ஆஞ்ஞையாகிய சந்திர மண்டலத்தை அடைந்த யோகி அங்கு நின்றும் மீளாது நிற்குமிடத்து முதற்கண் அம்மண்டலத்தின் ஒளியைப் பெற்றுப் பின்னர் அதன் குளிர்ச்சியைப் பெறுவான். அதன்பின் அம்மண்டலத்தின் பகுதிகளை ஒவ்வொன்றாக

**669.** **ஆகின்ற சந்திரன் தன்னொளி யாயவன்**
**ஆகின்ற சந்திரன் தட்பமு மாயிடும்**
**ஆகின்ற சந்திரன் தன்கலை கூடிடில்**
**ஆகின்ற சந்திரன் தானவ னாமே.** **2**

**670.** **தானே படைத்திட வல்லவ னாயிடும்**
**தானே அளித்திட வல்லவ னாயிடும்**
**தானேசங் காரத் தலைவனு மாயிடும்**
**தானே சிவனெனுந் தன்மைய னாமே.** **3**

---

*அடைவானாயின், இறுதியில் அச்சந்திர மண்டலமே தானாய் விடுவான்.*

*குறிப்புரை :-* எனவே, “இங்கு, சிவம்” என்பது ஆஞ்ஞை யோகத்தில் விளங்குகின்ற தியானப்பொருள் என்பதும், “சத்தி” என்பது, அப்பொருளின் அருள் என்பதும் போந்தன. போதரவே, தன்வயத்தனாதல் முதலியனவும் அவ்வளவில் ஏற்புடைய குணங்களாதல் பெறப்படும். ஆகின்ற - உண்டாகின்ற; கிடைக்கின்ற. ‘‘ஒளியாயவன்’’ எனவே, ஒளியாதலும் அனுவாத முகத்தாற் பெறப்பட்டது. கலை - கூறு. அவையாவன, ஆஞ்ஞைக்குமேல் உள்ள இடங்கள். அவை, ‘நெற்றி, தலையின் முற்பக்கம், பிற்பக்கம், வலப்பக்கம், இடப்பக்கம், பிரமரந்திரம்’ எனப் பலவாறு யோக நூல்கள் கூறும். இவ் அனைத்திடங்களிலும் தொடர்பு கொண்டு நிற்கும் ஆற்றலை, “ஆயிர இதழ்த் தாமரை” என உருவகித்தும் கூறும்.

இதனால், ஓராண்டில் மேலது கைவருமாறு கூறப்பட்டது.

**670.** *தெளிவுரை :-* ஈசத்துவத்தைப் பெற்ற யோகி இறைவன் செய்யும் செயலெல்லாம் தானே செய்ய வல்லவனாவான். இதனால், ‘சிவன் இவனே’ என உலகத்தாரால் எண்ணப்படும் தன்மை உடையவனாய் இருப்பன்.

*குறிப்புரை :-* ‘படைத்திடும், அளித்திடும்’ என்னாது, ‘வல்லவனாயிடும்’ என்றதனால், ‘‘அத்தன்மையனாதலன்றி, அச்செயல்களைச் செய்ய அவன் முற்படான்” என்பது கூறப்பட்டதாம். பவயோகியின் ஈசத்துவம் இதனின் மிகச் சிறியதாயினும் அதுகொண்டு அவன் பலவும் செய்ய முற்பட்டு, அச்செயல்களால் வினையைத் தேடிக் கொள்வான்; “சிவயோகி பிறப்பிற்கு அஞ்சுதலின், இது கொண்டு யாதும் செய்ய முற்படான்” என்க.

**671.** தன்மைய தாகத் தழைத்த கலையினுள்
பன்மைய தாகப் பரந்தஜம் பூதத்தை
வன்மைய தாக மறித்திடில் ஓராண்டின்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் காணுமே. **4**

---

*எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர் ஒன்(று)*
*அல்லா தறியார் அற. - திருவருட்பயன், 93*

*என்றது இங்கே நினைக்கத்தக்கது. இவ்வாறாகவே உலகத்தார் இவனை, "சிவனே" என்றும், "சிவனது கூற்றின் அவதாரம்" என்றும் கூறுவன எல்லாம் மயக்க உரையேயன்றி, உண்மையுரையாகா என்றற்கு, "தானே சிவன்" என்று ஒழியாது, "தானே சிவன் எனும் தன்மைய னாமே" என்றார். "எவ்வாற்றானும் பிறப்பது உயிரேயன்றி, இறையாகாது" என்பது கருத்து.*

*இதனால், ஈசத்துவத்தின் பெருமை கூறப்பட்டது.*

**671.** *தெளிவுரை :- ஈசத்துவத்தை அடைந்தோன், பலவாகப் பரந்து விரிந்து கிடக்கின்ற தத்துவங்களை, சத்தியின் தன்மையால் அமைந்த நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளுள் அடங்கி நிற்பனவாக உணர்ந்து ஓராண்டு நிற்பானாயின், சூக்குமப் பொருளாகிய மெய்ப் பொருளைக் காண்பான்.*

*குறிப்புரை :- இரண்டாம் அடியை முதலில் வைத்து உரைக்க. "பூதம்" என்றது தத்துவத்திற்கு உபலக்கணமாய் பின் ஏனை நான்கு அத்துவாக்களுக்கும் உபலக்கணமாயிற்று. தத்துவங்களுள் மிகவும் தூலமாய்ப் பலராலும் அறிந்துரைக்கப்படுவன பூதங்களால் பற்றி அவற்றையே பலவிடத்தும் எடுத்தோதினார். உலகம் முழுதும் பஞ்ச பூதங்களுள் அடங்குவனவாகக் கொண்டு, அவற்றை அதிதேவர்கள் வழி வயப்படுத்துதல் பொதுநெறியாகிய வேதநெறி; உலகம் அனைத்தும் சிவ சத்திக்கு நேரே தொடர்புடைய பஞ்ச கலைகளில் அடங்கி நிற்பனவாக வைத்து அவற்றின் அதிதேவர்வழி அனைத்துப் பொருள்களையும் வயப்படுத்துதல் உண்மை நெறியாகிய சைவநெறி. சிவசக்தியின் பெருமை உணரப்படுதல் சைவநெறியில் உள்ள சிறப்பு. அதனால், "தன்மையதாகத் தழைத்த கலை" என்றார். பூதங்களை வயப்படுத்துதலால் மருட்சித்திகளன்றி, அருட்சித்திகள் சித்தியா. அதனால் அருட்சித்தி வேண்டுவோர் சைவ நெறியிலே நிற்றல் வேண்டும். அங்ஙனம் நின்று அருட்சித்தி பெற்றோர் சிவனை அடைதற்குத் தடையில்லையாகலின், 'பூதத்தைக் கலையினுள்*

## 11.ஏ. பர வசித்துவம்

672. மெய்ப்பொரு ளாக விளைந்தது வேதெனின்
நற்பொரு ளாகிய நல்ல வசித்துவம்
கைப்பொரு ளாகக் கலந்த உயிர்க்கெல்லாம்
தற்பொரு ளாகிய தன்மைய னாகுமே. 1

---

*மறித்திடில் மெய்ப்பொருள் காணும்' என்றார். இதனானே, நிலம் முதலிய* **பூதங்கட்குச் சொல்லப்படும் முறைமைகள் எல்லாம், நிவிர்த்தி** *முதலிய பஞ்ச கலைகட்கும் ஏற்புடையனவாதல் அறியப்படும். மென்மை இங்கு நுண்மையைக் குறித்தது.*

*இதனால், பரசித்தியுள் ஈசத்துவத்தின் பயன் கூறப்பட்டது.*

**672.** *தெளிவுரை :-* ஈசத்துவத்தால் மெய்ப்பொருட் காட்சி கிடைத்த பின், அதனால் விளையும் பயன் யாது எனின், சித்திகள் எல்லாவற்றுள்ளும் சிறந்த 'வசித்துவம்' என்னும் சித்தி பெறுதலேயாம். வசித்துவ சித்தியைப் பெற்றோன், இறைவனுடையவாய்ப் பொருந்தியுள்ள எல்லா உயிர்கட்கும் தானே மெய்ப்பொருள் போலும் தன்மையை உடையவனாவான்.

*குறிப்புரை :-* என்றது, 'எல்லா உயிர்களும் அவனையே இறைவனாகக் கருதி அச்சமும் அன்பும் உடையவாய் அவன்வழி நிற்கும்' என்பதாம். கைப்பொருளாகக் கலந்த உயிர்களாவன ஈசத்துவத்தால் தனக்குக்கீழ்ப்பட்டு நின்ற உயிர்கள். பின்னிரண்டடிகள் வசித்துவமாவது இதுவென்பதை விளக்கின. முதல் அடியில் குற்றியலுகரம் கெடாது நின்று உடம்படுமெய் பெற்றது. இம்மந்திரம் வல்லின எதுகை பெற்றமை காண்க. தற்பொருள் - சிவம்.

இதனால், வசித்துவ சித்தியின் இயல்பும், அச்சித்தி கைவருமாறும் கூறப்பட்டன. **மருட்சித்தி, மருளுடைய உயிரையன்றி, அருளுடைய உயிரை வசம் செய்யாது. அருட்சித்தி, அனைத்து உயிரையும் வசம் செய்யும்**. இதுவே அவை தம்முள் வேற்றுமை என்க.

673. *தெளிவுரை :-* மேற்கூறியவாறு பல்லுயிர்கட்கு மெய்ப்பொருள் தன்மையனாய்ப் பெருமை பெற்று நிற்கின்ற அருளொளிக் கதிரவனாகிய சிவயோகி மெய்ப்பொருளைக் கண்டவனாதலின், ஐம்புல ஆசைகள் அருவருக்கத்தக்க பொருள்களாய்த் தலைகாட்டாதொழிய, ஞானஉருவான

**673.** தன்மைய தாகத் தழைத்த பகலவன்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் கண்டிடின்
புன்மைய தாகிப் புலன்களும் போயிட
நன்மைய தாகிய நற்கொடி காணுமே. **2**

**674.** நற்கொடி யாகிய நாயகி தன்னுடன்
அக்கொடி ஆகம் அறிந்திடில் ஓராண்டுப்
பொற்கொடி யாய புவனங்கள் போய்வருங்
கற்கொடி யாகிய காமுக னாமே. **3**

---

*திருவருளையே நோக்கி நிற்பான்.*

***குறிப்புரை :-*** *"கண்டிடின்" என்னும் 'செயின்' என்னும் எச்சம் காலம் உணர்த்தாது. காரண மாத்திரையில் நின்று, 'அதனால் அதன் காரியம் நிகழ்தல் உறுதி' என்பதை விளக்கி நின்றது; ஒருவன் தான் மெலியனாயிருந்தும் தனது நிலையை அறியாது வலியவன் மேற்சென்றபொழுது, அதனைக் கண்டோர் 'அவன்மேற் சென்றானாயின், இவன் விரையக் கெடுவான்' என்பதிற் போல, "புன்மையது" என்பது, பன்மை ஒருமை மயக்கம், நன்மை - ஞானம்; "கொடி" என்பது உருவகமாய் அஃறிணையாயினமையின், அதன்கண் இரண்டன் உருபு தொக்கது. 'பகலவன் கண்டிடின் காணும்' என்க.*

*இதனால், அருட்சித்தியாகிய **வசித்துவம் பெற்றோர், அதனால் உலகப் பயன்கொள்ள நினையாமை கூறப்பட்டது**.*

**674. *தெளிவுரை :-*** *ஞான உருவான திருவருளோடு கூடி அதனது இன்பத்தை யோகி ஒருவன் அறிவானாயின், அதன் பின் ஓராண்டுக் காலத்தில் பொன்மயமான கொடிகளும், தருக்களும் நிறைந்த விண்ணுலகங்களில் சென்று மீள வல்லவனாவான். ஆயினும், அவன், மேருவை அடைந்து பொன்னிறத்தைப் பெற விரும்புகின்ற காக்கையினது ஆசைபோன்ற அவ்வாசையை உடையனாவனோ!*

***குறிப்புரை :-*** *அஃதாவது, 'அச்சித்தியின் வழி விண்ணவர் உலகங்களிற் சென்று மீளுதலால் தானும் விண்ணவர் எனச் சொல்லப்படும் பெருமையை அடைய விரும்புவனோ! விரும்பான்' என்பதாம். ஆகம் - உரு; இயல்பு. "வரும்" என்றது, 'வரத்தக்க ஆற்றல் பெறும்' என்றபடி. கல் - மலை; அஃது இங்கு, மேருவைக் குறித்தது. இதனை அடுத்துள்ள 'கொடி' காகம். காகம் மேருவை அணுகியவிடத்து அதன் ஒளியால் தானும் பொன்னிறம் உடையது போலத்*

*தோன்றுதலன்றி, உண்மையில் தன் நிறம் மாறப்பெறுதல் இல்லை. அதுபோல, மனித உடம்பு விடப்படுங்காறும் யோகி உண்மையில் தேவனாதல் இல்லை. ஆகவே, இவ்வுடம்பில் நின்றே, 'தேவன்' எனப்பெறும் பொய்யான புகழைச் சிவயோகி விரும்பான் என்பதாம். பொற்கொடியாகிய புவனங்கள்; நீரைப் படைத்து அதில் பொன்மயமான வீரியத்தைவிட அதுவே பொன்மயமான அண்டமாயிற்று. அவ்வண்டத்தில் எல்லா உலகங்களும் அடங்கியுள்ளன என்பது வரலாறு. ஆதலின் பொன்னண்டத்தின் கொடியாக (கிளையாக) உள்ள உலகமனைத்தும் என்றுரைக்கப் பட்டது.*

*சிகிமுகிக் கல்லுள்ளே விளங்கும் தீ கரந்து நின்று காலத்தில் வெளிப்பட்டு உபகாரப்படுதல் போல, வசித்துவ சித்தியுடையவனும் விருப்பத்தைவென்று ஆற்றலை மறைத்து நின்று வேண்டியபோது பிறருக்கு உபகாரப்படுவன் என்பதாம், கற்கொள் தீயென்பது கற்கொடி என எதுகை நோக்கி விகாரப்பட்டது. ஆகவே சித்தி பெற்றவன் தான் சித்தன் என்பதைப் பிறரறியா வண்ணம் ஒழுகும் இயல்பினன் என்பது கருத்து.*

*நல்ல கொடி போன்றவளாகிய சதாசிவ நாயகியுடன், அந்தக் கொடி போன்ற சத்தியை ஓராண்டுக் காலம் இதயத்து இடைவிடாது எழுந்தருளச் செய்து தியானிக்கின், பொன் போலும் சக்தி வடிவான எல்லாப் புவனங்களிலும் போய் மீளும் தன்மை வாய்ந்த, கல்லினுட் பொருந்திய தீயாகிய காமுகனாவான் என்றும், திருவருளாற்றலை ஓராண்டுத் தியானத்தாற் பெற்றவர் எல்லாவுலகங்களிலும் போய்வரும் ஆற்றலைப் பெறுவர் அங்ஙனம் போய்வரினும் கற்கொடி போன்ற உரனுடைய உள்ளமுடைமையை விரும்புவான் என்றும் உரைப்பர் சிலர், இவற்றின் இயைபு அறிந்து ஏற்பன கொள்க.*

*இதனால்,* ***'அட்டமா சித்திகளும் கைவந்தவர்கட்குப் பிற உலகங்களிலும் செல்லும் ஆற்றல் கூடும்' என்பதும், 'அது கூடினும் சிவயோகி, அவ்வாறெல்லாம் உழலும் தன்மையன் அல்லன்' என்பதும் கூறப்பட்டன.***

**675. தெளிவுரை :-** ***ஈசத்துவ சித்தியிற்றானே, விரும்பத்தக்க மெய்ப்பொருட்காட்சி கிடைத்து விடுதலால், அதன்பின் எல்லா உலகமும், பூவினுள் அடங்கித் தோன்றும் மணம்போல உன்னிடத்தே அடங்கித் தோன்றும். அதனால் அவ்வுலகங்கட்கெல்லாம் வியாபகமாம் தன்மையைப் பொருந்திய உன்னிடத்தில்,***

**675.** காமரு தத்துவ மானது கண்டபின்
பூமரு கந்தம் புவனம தாயிடும்
மாமரு வுன்னிடை மெய்த்திய மானனாம்
நாமரு வும்ஒளி நாயக மானதே. 4

**676.** நாயக மாகிய நல்லொளி கண்டபின்
தாயக மாகத் தழைத்தங் கிருந்திடும்
போயக மான புவனங்கள் கண்டுபின்
பேயக மாகிய பேரொளி காணுமே. 5

---

*அவற்றிற்கெல்லாம் நீயே உண்மைத் தலைவனாய் நிற்க. புகழ்பொருந்திய அருள் ஒளியே தலைமைபெற்று நிற்கும்.*

***குறிப்புரை :-*** *'உலகங்கட்கும், சிவயோகிக்கும் இடையே உள்ள இழிவுயர்வுகள் மிகப் பெரியவாகலானும், அவனது இச்சா ஞானக் கிரியைகட்குத் திருவருளே முதலாய் நிற்றலானும் அவன் வசித்துவ சித்தியால் உலகப் பயனை நாடான்' என்றவாறாம். தத்துவம் - மெய்ப்பொருள். 'புவனம் பூ மரு கந்தம் ஆயிடும்' என்க. இதனுள் ஆக்கம், உவமை குறித்து நின்றது. மா - பெருமை; "அத்தகைய மா மருவு உன்னிடை" எனச் சுட்டு வருவித்துக்கொள்க. மெய்த்தல் - உண்மையாகி நிற்றல். 'மெய்த்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "இயமானன்" என்பது இழிவழக்கில், "எசமானன்" என வழங்கும். 'வேட்போன்' என்பது இச்சொல்லின் பொருளாயினும், இது "தலைவன்" என்னும் பொருளில் வழங்கும். நா - புகழ்; ஆகுபெயர், "நாம் மருவும்" எனப் பிரித்து, நாயனார் சிவயோகியைத் தம்மோடு உளப்படுத்துக் கூறியதாகவும் உரைக்கலாம்.*

*இதனால், மேலதற்குக் காரணம் கூறப்பட்டது.*

***676. தெளிவுரை :-*** *எல்லாவற்றிற்கும் தலைமையான சிவச் சோதியைத் தரிசித்த பின்பு, அந்த ஒளியையே தாய் வீடாகக் கொண்டு மகிழ்ச்சியுடன் அங்கே வீற்றிருக்கும் எல்லாப் புவனங்களிலும் சென்று கண்டபின், ஏனைய பிரகாசங்களுக்கு இருப்பிடமாகிய ருத்திரன் முதலிய ஒளிகளைப் பெரிதென்று காணுமே; காணாது என்றவாறு.*

*அமுதம் உண்பவன் நஞ்சு விரும்பாதவாறு போல நல்லொளி கண்டவன் அங்கேயே தழைத்திருப்பானேயன்றித் தாழ்ந்து பிசாச புவனங்களிலுள்ள ஒளிகளை நோக்கான் என்பது கருத்து.*

**677.** பேரொளி யாகிப் பெரியஅவ் வேட்டையும்
பாரொளி யாகப் பதைப்பறக் கண்டவன்
தாரொளி யாகத் தரணி முழுதுமாம்
ஓரொளி யாகிய காலொளி காணுமே. **6**

---

*அகமான புவனங்கள் போய்க்கண்டபின் - பூமிக்கு மேலுள்ள இடமான புவனங்களைக் கண்டபிறகு பேய் அகமாகிய பேரொளி - பிசாசலோக வாசிகளான ருத்திர பிசாச கணங்களுக்குப் பிருதிவி தத்துவத்துள்ளிருக்கும் புவனங்களை வியாபித்த அணிமாதி எட்டுக் குணங்களும் உண்டாதலின், அவற்றைப் பெரிதெனக் கொண்டு அதனைக் காணார் என்பதாம். காணுமே என்றதில் ஏகாரம் ஈற்றசையன்று; எதிர்மறைக் கண்ணது.*

*பேசகம் - பேயகம் - புகழ்ந்து பேசப்படும் இடம் என்றும் கூறுவர். அப்பொருளுக்குப் பேசகம் என்பது சகரத்துக்கு யகரம் போலியாக வந்ததாகும்.*

*இதனால், 'திருவருளை அடைந்த சிவயோகி, ஏனைப் பவயோகிகள் போலப் பல புவன இன்பங்களையும், புவனபதிகளது அருளையும் நாடுதல் இல்லை' என்பது கூறப்பட்டது. 'கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு' (தி.8 திருச்சதகம். 2) என்றற் தொடக்கத்து அருட்டிரு மொழிகள் இங்கு நினைவுகூரத் தக்கன.*

**677.** *தெளிவுரை :- பெரிய ஒளியாகிய பராசத்தி எழுந்தருளியுள்ள பெரிய அழகிய தாமரையாகிய சகஸ்திராரத்தைப் பார்க்கும் அளவினதாகிய ஒளியாகத் துணுக்கற்றுக் கண்டவன். நீண்ட ஒளிபோல விசுவ வியாபியாக இருப்பன். அவன் பிராணனை ஒளிவடிவாகக் காணுவன் என்றவாறு.*

*ஏடு - இதழ்; ஆகுபெயரான் தாமரையை உணர்த்திற்று பெரிய ஏடு என்ற குறிப்பு ஆயிர இதழ்த் தாமரையை உணர்த்திற்று. பிரமரந்திரத்தில் சோதி காணும் போது துணுக்குண்டாமாதலின் அஃதின்றிக் காணவல்ல வலியோன் என்றது. தார்ஒளி - நீண்ட ஒளி, தரணி முழுதும் ஆம் விசுவம் முழுதும் வியாகித்து இருப்பன். கால் ஒளி - பிராண வாயுவின் ஒளி. யோகத்தின் பயன், பிராணாயாமத்தால் குண்டலி ஒளியை அகத்துக் காணுதலாதலின், அங்ஙனம் காணப்படும் ஒளியை, "காலொளி" என்றார். 'தாரொளியாக' என்பதனை, "காரொளி"*

## 11.ஐ. திருவருட் சிறப்பு

**678.** காலோ டுயிருங் கலக்கும் வகைசொல்லிற்
காலது வக்கொடி நாயகி தன்னுடன்
காலது ஐஞ்நூற் றொருபத்து மூன்றையும்
காலது வேமண்டிக் கண்டஇவ் வாறே. **1**

---

*என்பதன்பின் கூட்டுக. தார் - ஒழுங்கு; என்றது படிமுறையே. யோகியர்க்குக் குண்டலி ஒளி, 'மின்னல், விண்மீன், விளக்கு, பகலவன், திங்கள்' என்னும் இவற்றின் ஒளிபோலப் படிமுறையாற் பெருகித் தோன்றும் என்பது மேலே (612) கூறப்பட்டது. இக்காட்சியை இங்குவந்து கூறியது, 'பரசித்தி' எனத்தக்க வகையில் அருள் நிலை அனைத்தும் கைகூடிய பின்பே யோகத்தில் மனம் ஒருங்கி அதனை முற்றுப்பெறச் செய்யும் என்பது உணர்த்துதற்கு. இது, புதியதோர் அரண்மனையிற் புகுந்தவன் முதற்கண் அதனை முழுதும் சென்று கண்ட பின்னரே உரிய இடத்தில் அமர்ந்து இன்புறுதல் போல்வதாம்.*

*இதனால், பரசித்தி முழுதும் கைவரப் பெற்றபின்பே சிவயோகம் முற்ற முடிவதாதல் கூறப்பட்டது.*

*'உலகத்தை உணரும் பவயோகத்திலும், திருவருளை உணரும் சிவயோகமே சிறந்தது' என்பதை உணர்த்துதற்கு அத்திருவருளே யோகத்திற்கு முதலாய் நிற்குமாற்றை இவ்வதிகாரத்துள் இங்கு நின்றும் பதினெட்டுத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**678. *தெளிவுரை :-* *பிராணவாயுவும், உயிரும் தம்முள் இயைந்தவாற்றைக் கூறுமிடத்து, பிராணவாயு, உடம்பில் உள்ள நாடிகள் அனைத்திலும் நிறைந்து நிற்கின்ற, சிவசத்தியுடன் முன்னர்ப் பொருந்திப் பின்னர், அஃது 'ஐஞ்நூறு' என்றும், 'பத்து' என்றும், 'மூன்று' என்றும் சிறந்தெடுத்துக் கூறப்படுகின்ற நாடிகளில் நிறைந்து நிற்கும் வகையினாலேயாம்.***

***குறிப்புரை :-** கால் - பிராண வாயு. "கொடி" என்றது, உடம்பிற் பொருந்தியுள்ள நாடியை, அந்நாடிகள் இவை என்பது நூல்களின்வழி நன்கறியப்பட்டது. ஆதலின், "அக்கொடி" எனப் பண்டறி சுட்டாற் கூறினார். கொடி நாயகி - கொடிகளில் நிறைந்து நிற்கும் தலைவி. "நாயகி தன்னுடன்" என்பதன்பின், 'ஆய்' என்பது எஞ்சிநின்றது. உடம்பில் உள்ள நாடிகள் 'எழுபத்தீராயிரம்' என்பது யோகநூல் துணிவு. அவற்றுள், ஐந்நூறு சிறந்தன. அவற்றுள்ளும் சிறந்தன பத்து.*

**679.** ஆறது வாகும் அமிர்தத் தலையினுள்
ஆறது ஆயிரம் முந்நூற் றொடைஞ்சுள
ஆறது வாயிர மாகும் அருவழி
ஆறது வாக வளர்ப்ப திரண்டே. **2**

---

*அவைமுன்னே (பா. 562) சொல்லப்பட்டன. அவற்றுள்ளும் சிறப்புடையன மூன்று; அவை 'இடை, பிங்கலை, சுழுமுனை' என்பன. 'ஐந்நூற் றொருபத்து மூன்று' என்றது உம்மைத்தொகையேயன்றி, அத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையன்று. மண்டுதல் - செறிந்து நிற்றல். கண்ட காணப்பட்ட. இவ்வாறே - இவ்வாற்றினா லேயாம். இத்திருமந்திரத்துட் சத்தியின் செயல்களை வாயுவின்மேல் வைத்துச் சொற்பொருட் பின்வருநிலையாக அருளிச்செய்தார். இதனுள் குற்றியலுகரம் பலவிடத்தும் கெடாது நின்று, உடம்படு மெய் பெற்றது.*

*இதனால், 'யோகத்திற்கு முதலாகிய பிராண வாயுவை யோகிக்குக் கூட்டுவித்துப்பின் காத்து நிற்பது திருவருளே' என்பது கூறப்பட்டது. எனவே, உடலில் உள்ள ஆற்றல்கள் பலவும் இயற்கையாய் அமைந்தன எனக் கருதும் பவயோகிகளது கருத்தை விலக்கி, உண்மையுணர்த்தியவாறாயிற்று.*

**679.** *தெளிவுரை :- யாறு போல உண்டாகின்ற விந்துவாகிய அமுதத்தை உடைய ஆஞ்ஞையில் அந்த யாறு பாய்கின்ற வாய்க்கால்கள் "ஆயிரமும், முந்நூறும், ஐந்தும்" என்று கூறத்தக்க அளவில் உள்ளன. அந்த அரிய வழியிலே அந்த அமிர்த யாறு பெருகிப் பாயச் செய்து உடம்பை வளர்ப்பன இடை நாடி பிங்கலை நாடி என்னும் இருநாடிகளில் நிற்கும் இரு சத்திகளே யாகும்.*

*குறிப்புரை :- ஆறு நான்முகனுள் முன்னது, ஆறு என்னும் எண்; இரண்டாவது, மூன்றாவதும் வழி. நான்காவது வாயில் ஆயிரம் என்பது பலவென்னும் பொருளது.*

*இதனால், "சிவ சத்தி, இடைநாடி பிங்கலை நாடிகளில் நின்று பிராணனை இயக்குமாற்றால் உடல் உறுதிக்கு இன்றியமையாத விந்துவை உண்டாக்கிப் பெருக்குவது" என்பது உணர்த்துமுகத்தால் 'யோகத்தில் பருகத்தக்க அமுதத்தை முன்பே தோற்றி வளர்ப்பது திருவருளே' என்பது கூறப்பட்டது. இதனுள்ளும், "பிராணவாயு இடைகலை பிங்கலை வழியாக இயங்கி உடலை நிலைப்பித்தல் இயற்கை" எனக் கருதுவாரது கருத்து விலக்கப்பட்டதாம்.*

**680.** இரண்டினின் மேலே சதாசிவ நாயகி
இரண்டது கால்கொண் டெழுவகை சொல்லில்
இரண்டது ஆயிரம் ஐம்பதொ டொன்றாய்த்
திரண்டது காலம் எடுத்தது அஞ்சே. **3**

**681.** அஞ்சுடன் அஞ்சு முகமுள நாயகி
அஞ்சுடன் அஞ்சது வாயுத மாவது
அஞ்சது வன்றி இரண்டது வாயிரம்
அஞ்சது காலம் எடுத்துளும் ஒன்றே. **4**

---

**680. தெளிவுரை :-** *இடைகலை பிங்கலைகளின்மேல் சுழுமுனைத் தலையில் நிற்கும் சத்தி, இடையும், பிங்கலையுமாகிய இரண்டன் வழியாகப் பிராணனை இயக்கிச் செயல்புரிகின்ற முறையைச் சொல்லுமிடத்து, இரண்டாகிய அந்தப் பிராணன் ஆயிர நாடிகளோடும், ஐம்பத்தோர் அக்கரங்களோடும் கூடியுள்ள ஆறு ஆதாரங்களில் பொருந்தி, ஐந்து காலத்தைக் கொண்டிருக்கும் வகையிலேயாம்.*

**குறிப்புரை :-** *"ஆயிரம்" என்றது, 'பல' என்றவாறு, ஐம்பத்தோர் அக்கரங்களும், ஐந்து காலமும் முன்னே (பா.573, 627) கூறப்பட்டன. அவற்றை இங்கு மீளக் கூறியதன் கருத்து, 'யோக நிலையில் வேண்டப்படும் அவற்றை எல்லாம் அவ்வாறாக அமைத்து நின்றது திருவருளே' என்பது உணர்த்துதலாம். 'திரண்டது, எடுத்தது' என்னுந் தொழிற்பெயர்கள் 'எழுவகை' என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் நின்றன. 'காலம் அஞ்சு எடுத்தது' என்க.*

*இதனால், 'ஆறு ஆதாரங்களை ஆக்கிக் காத்து நிற்பது திருவருளே' என்பது கூறப்பட்டது.*

**681. தெளிவுரை :-** *சதாசிவ மூர்த்தியின் சத்தி, பத்துக் கைகளில் பத்து ஆயுதங்களை ஏற்றி இருப்பவளாகக் கிரியாவான்கள் கருதுவர். ஆயினும், யோகத்தில் அவளை இரண்டாயிரம் கைகளில் இரண்டாயிரம் ஆயுதங்களை ஏந்தி நிற்பவளாகக் கூறலாம். அவள் மேற்கூறிய ஐந்து காலங்களிலும் தங்கி நின்று அருளுதல், உயிர் ஒன்றையேயாம்.*

**குறிப்புரை :-** *சதாசிவமூர்த்தி, வேறுபட்ட ஐந்து நிறங்களை உடைய ஐந்து முகங்களையும், அவற்றிற்கு ஏற்ப அமைந்த பத்துக் கைகளில் பத்து ஆயுதங்களையும் உடையராயிருத்தல் பற்றி அவரது*

**682.** **ஒன்றது வாகிய தத்துவ நாயகி**
**ஒன்றது கால்கொண்டு ஊர்வகை சொல்லிடில்**
**ஒன்றது வென்றிகொள் ஆயிரம் ஆயிரம்**
**ஒன்றது காலம் எடுத்துளும் முன்னே.** **5**

---

*சத்தியையும் அத்தன்மையளாகவே கூறினார். எனவே, 'அஞ்சுடன் அஞ்சு முகம்' என்றதில் முதலில் உள்ள ஐந்து, ஐந்து நிறங்களைக் குறிப்பதாம். மூன்றாம் அடியில் 'அஞ்சுடன் அஞ்சு' என்பதனையே "அஞ்சு" எனச் சுருங்க ஓதினார். "இரண்டது ஆயிரம்" என்றது மேலைத் திருமந்திரத்தில் இரு பிராணனும் ஆயிர நாடிவழிச் செல்லுதலைக் குறித்ததாம். 'அஞ்சு காலத்தும் ஒன்றையே எடுத்து உள்ளும்' என்க. உள்ளுதல் - நினைத்தல்; அருளுதல். 'காலம்' என்னும் பொதுமைபற்றி, 'அஞ்சது' என ஒருமையாற் கூறினார். எனவே, 'அஞ்சாகிய அக்காலம்' என்பது பொருளாயிற்று. 'காலத்தும்' என்பதில் அத்தும், உம்மையும் தொகுத்தல் பெற்றன. "ஒன்று" என்பதில், இரண்டன் உருபு இறுதிக்கண் தொக்கது.*

*இதனால், நாடிகள் பலவற்றையும் இயக்கி உயிரைத் தாங்கி நிற்பது திருவருளே என்பது உணர்த்தப்பட்டது.*

**682.** *தெளிவுரை :- தன்னோடு ஒப்பது ஒன்று இல்லாது, தானே தனிப்பொருளாய் நிற்கும் சத்தி. பொதுவில் இரு நாடிகள் இயக்கி நின்ற பிராணனை யோக நிலையில் நடுநாடியாகிய ஒன்றன்வழியே செலுத்தி மேல் ஏறுகின்ற தன்மையைச் சொல்லுமிடத்து, அவ்வொரு வெற்றிச் செயலே அளவற்ற வெற்றிச் செயலாய் அமையும்படி ஒரு காலத்துள்ளே உயிரை உயர்த்தி, அருளுதலைச் செய்வாள். ஆதலின், அவளையே நினை.*

*குறிப்புரை :- 'காலினை ஒன்றதன் வழியாகக் கொண்டு ஊர்வகை சொல்லிடின்' என்க. 'ஒன்றது வாகிய வென்றி' என உரைக்க. கொள், முதனிலைத் தொழிற்பெயர். 'ஆயிரம் ஆயிரம் ஆக' என்னும் ஆக்கச் சொல் தொகுத்தலாயிற்று. இவ்வொரு வெற்றியே பல வெற்றியோடு ஒத்தலாவது, அபர சித்தி, பரசித்தி இரண்டாலும் அனைவரிலும் மேம்படல், "ஒன்றது காலம்" என்றது, 'எடுத்த பிறப்பிலே' என்றவாறு முன்னுதல் - நினைத்தல்.*

*இதனால், 'யோகம் கைகூடச் செய்வதும் திருவருளே' என்பது கூறப்பட்டது.*

683. முன்னெழும் அக்கலை நாயகி தன்னுடன்
முன்னறு வாயு முடிவகை சொல்லிடில்
**முன்னூறும் ஐம்பதொ டொன்றுடன் அஞ்சுமாய்**
முன்னுறு வாயு முடிவகை யாமே. 6

684. ஆய்வரும் அத்தனி நாயகி தன்னுடன்
ஆய்வரு வாயு அளப்பது சொல்லிடில்
ஆய்வரும் ஐஞ்நூற்று முப்பத்தொன் றொன்பது
மாய்வரு வாயு வளப்புள் ளிருந்ததே. 7

---

683. ***தெளிவுரை :-*** *எனின், கலைநாயகியுடன் மேலெழும் பிராணனது கால எல்லையை உணர்த்துதல் நுதலிற்று. முற்பட்டு எழுகின்ற அந்தக் கலைகட்கெல்லாம் தலைவியாகிய திருவருட்சத்தியோடு, மன்னுதல் உற்ற பிராணன் முடியுமுறையைச் சொல்லின், முந்நூற்றைம்பத்தாராய் மக்களால் எண்ணப்படுகின்ற ஆயுள் முடிவு வகைக்கு உபாயமாம் என்றவாறு.*

*முன் எழும் அக்கலை நாயகி, பிராணனோடு முற்பட்டு எழுகின்ற குண்டலினியாகிற திருவருட்சத்தி அதனுடன் முன்னுறு வாயு முடிவகை சொல்லிடின் - அக்குண்டலினியோடு முற்பட்டு எழுகின்ற பிராணன் முடியும் உபாயத்தை உரைக்கின், குண்டலினியும், பிராணனும் சாதகனிடம் தான் முந்தி தான் முந்தியெனப் போட்டியிட்டு எழுகின்றன என்பதாம்.*

*முன்னுறும் ஐம்பதொடு ஒன்றுடன் அஞ்சுமாய் - ஓராண்டுக் குரிய முந்நூற்று ஐம்பத்தாறு நாட்களாய், முந்நூறும் என்பது முன்னுறும் என எதுகை நோக்கி விகாரப்பட்டது. முன்னுறு ஆயு - எண்ணப்படுகின்ற ஆயுட்காலம், ஆண்டுகளாக ஆயுள் முடிவாக ஆகின்றது பிராணன் என்று விளக்கியவாறாம்.*

*இதனால், 'வாழ்நாளளவும் உணர்வுகள் பலவும் நிகழுமாறு பிராணவாயுவை இயக்கி உயிரினது பக்குவத்தை முதிர்வித்து வருவது திருவருளே' என்பது கூறப்பட்டது.*

684. ***தெளிவுரை :-*** *ஆய்ந்துணர்தற்கு அரியவாகிய மேற்சொல்லிய சிவசத்தி, தன்னுடயான் இயங்கிவருகின்ற பிராண வாயுவை வரையறை செய்யும் வகையைக் கூறுமிடத்து, இயல்பாக இயக்குகின்ற மூச்சு (சுவாசக்) கணக்கிலிருந்து, ஆராயவருகின்ற*

**685.** இருநிதி யாகிய எந்தை யிடத்து
இருநிதி வாயு இயங்கு நெறியில்
இருநூற்று முப்பத்து மூன்றுடன் அஞ்சாய்
இருநிதி வாயு இயங்கும் எழுந்தே. **8**

---

*ஐந்நூற்று நாற்பது மூச்சு அழிந்தொழிய எஞ்சியவை வலிமையுற்று உள்நிற்றலாம்.*

*குறிப்புரை :-* இயல்பான மூச்சுக்கணக்கு, ஒரு விநாடிக்கு ஆறாக, ஒரு நாளைக்கு இருபத்தோராயிரத்து அறுநூறு ($6 \times 60 \times 60$ என்பது நன்கறியப்பட்டது ஆகலின், அதனை எடுத்துக்கூறாது வாளா 'வாயு அளப்பது' என்றார். அளப்பது - கணக்கிடுதல். "மாய்தல்" என்பது ஆற்றலை இழந்து பயனின்றிக் கழிதலாம். 'மூச்சுக்கணக்கில் இயங்கி உடலை நிலைப்பிக்கின்ற பிராணவாயு ஒவ்வொரு மூச்சிலும் நாற்பதில் ஒருகூறு தனது ஆற்றல் கெடுக்கின்றது' என்பதை இருபத்தோராயிரத்து அறுநூற்றில் ஐந்நூற்று நாற்பது மாய்கின்றன என்றார். எனவே, 'மக்களது வாழ்நாள் அளவு நூறாண்டு' என்னும் பொதுக் கட்டளை. தொண்ணூற்றேழரையாண்டாகவே முடியும் என்பது கூறினாராயிற்று. இதனைக் கூறியது, 'யோகிகளுக்குத் திருவருள் இம்மாய்வினை நீக்குதலேயன்றிப் பிராணாயமத்தால், பிராணனின் புறக்கழிவு மூன்றில் ஒருபங்கை (பன்னிரண்டில் நான்கினை)க் கழியாது காத்தும், கும்பகத்தால், ஒரு நாளைக்கு 'இருபத்தோராயிரத்து அறுநூறு' என்னும் மூச்சுக் கணக்கினைக் குறைத்தும் வாழ்நாளை நீட்டிக்கச் செய்கின்றது என்பதும், யோகியரல்லாத பிறருள் நெறிப்பட்ட வாழ்க்கை இல்லாதார்க்குத் தீக்காரணங்கள் பலவற்றால் பிராணன் பல வகையினும் வலிகுன்ற மேற்குறித்த, 'தொண்ணூற் றேழரை' என்னும் அளவிலும் குறையப்பண்ணும் என்பதும் உணர்த்துதற்காம்.

''ஆய்வரும்'' மூன்றில் முதலது, 'ஆய்தற்கு அரிய' என்றும் மின்னது 'ஆய்தல் வருகின்ற' என்றும், இடையது 'பொருந்தி வருகின்ற' என்றும் பொருள் தந்தன. மாய் வருவாயு - மாய எஞ்சுகின்ற வாயு. வளப்பு - வளமை. 'வளப்பாக' என ஆக்கம் வருவிக்க. 'முப்பதொடொன்பது' என்பது பாடம் அன்று.

இதனால், பிராண வாயுவின் இயக்க வேறுபாடு வாயிலாகத் திருவருள் மக்கள் உலகை நடத்தும் முறை கூறப்பட்டது.

**685. தெளிவுரை :-** உயிர்களின் வாழ்நாளுக்கு முதலாய் உள்ள பிராண வாயு உயிர்கட்கு இருநிதி (சங்க நிதி, பதும நிதி) போல

**686.** எழுகின்ற சோதியுள் நாயகி தன்பால்
எழுகின்ற வாயு இடமது சொல்லில்
எழுநூற் றிருபத்தொன் பானது நாலாய்
எழுந்துடன் அங்கி இருந்ததிவ் வாறே. **9**

---

*உதவுகின்ற இறைவனது திருவருளிடத்து இயங்கும் நிலை உண்டாயின், அஃது 'இருபத்தோராயிரத்து அறுநூறு' என்னும் கணக்கினை விட்டு 'இருநூற்று முப்பத்து எட்டு' என்னும் நிலையை அடையும்.*

***குறிப்புரை :-*** *இஃது இயற்கைக் கணக்கில் சிறிது கூடத் தொண்ணூற்றில் ஒருபங்காதல் அறிக. மூச்சுக் கணக்கு இங்ஙனம், இயற்கையினின்றும் தொண்ணூற்றில் ஒருபங்காய்க் குறையவே, வாழ்நாள், சிறிது குறைய ஒன்பதினாயிரம் யாண்டாதல் பெறப்படும். மூச்சுக் கணக்கினை இதற்குமேல் குறைத்துக் கூறாமையால், இவ்யாண்டு மேல் எல்லையாதல் அறியப்படும். பிராணன் திருவருளிடத்து இயங்குதலாவது, ஆஞ்ஞை யோகத்திலே நிற்றல், 'எழுத்தே' என்பது பாடம் ஆகாமையை, வருகின்ற மந்திரத்தின் தொடக்கச் சொல்பற்றியும் அறிக.*

*இதனால், பிறர்க்கு வாழ்நாளை வரையறுக்கின்ற திருவருள் சிவயோகியர்க்கு அதனை மிகுவிக்குமாறு கூறப்பட்டது. 'பவயோகியர்க்கு இந்நிலை கூடாது' என்க.*

***686. தெளிவுரை :-*** *யோகக் காட்சியில் தோன்றுகின்ற ஒளியிடத்தில் அறியப்படும் சத்தியினது இடமாகிய ஆஞ்ஞையில் (சுழுமுனை வழியே) பிராணவாயு அடைவதனால் உளவாகும் நிலையைச் சொல்லுமிடத்து, மூலாதாரத்தில் உள்ள அக்கினி மேல் எழுந்து, எழுநூற்றிருபத்தொன்பது நாடிகள் இடையில் உள்ள நான்கு ஆதாரங்களிலும் தொடர்புபட்டு நிற்க. அவற்றின் வழி உடம்பெங்கும் பரவி நிற்கும்.*

*அக்கினி மண்டலம், நாடியின் கீழ்ப்பாகத்துத் திரிகோணமாயிருக்கிறது. காய்ச்சிய சாம்பூந்தப் பொன்னிறமுள்ளதாய மனிதர்களுக்கு முக்கோணமாயும் விலங்குகளுக்கு நாற்கோணமாயும் பட்சிகளுக்கு வட்டமாயும் இருக்கும். அதன் மத்தியில் எப்போதும் அக்கினி சிகை பரவியிருக்கின்றது. அக்கினிசிகை விருத்தியினாலாவது, வெப்பமுடைமையினாலாவது மேலெழுந்து அபான வாயுவோடு கிளம்பிப் பிராணவாயுவைப் பொருந்துகிறது. இவ்வண்ணம் மிகக்*

687. ஆறது கால்கொண் டிரதம் விளைத்திடும்
ஏழது கால்கொண் டிரட்டி இறக்கிட
எட்டது கால்கொண்டிடவகை யொத்தபின்
ஒன்பது மாநிலம் ஒத்தது வாயுவே. 10

---

*கொழுந்துவிட்டெரியும் அக்கினியால் தூண்டுகின்ற குண்டலினி தடியாலடிக்கப்பட்ட பாம்புபோலச் சீறி எழும்பி, நிமிர்ந்து, சுழுமுனையிற் புகுகின்றது. அப்போது அதனாற்றலாகிய வெப்பம் எழுநூற்றிருபத்தொன்பது நாடிகளாற் சென்று பரவுகின்றது என்பது யோக குண்டலி உபநிஷத்திலும், சாண்டில்யோபநிஷத்திலும் கூறப்பட்டுள்ளது இவற்றை.*

***குறிப்புரை :-*** *'இவ்வக்கினிப் பரப்பால் இங்கெல்லாம் குண்டலி சத்தி விளங்கி நிற்கும்' என்பது கருத்து.*

*இதனால், யோகியர்க்கு விளங்குகின்ற குண்டலி விளக்கத்திற்குத் திருவருளே முதல் என்பது கூறப்பட்டது.*

**687. *தெளிவுரை :-*** *ஆறு ஆதாரங்கட்கு மேல் ஏழாவதான உச்சி யளவும் பிராணவாயுவை ஏற்றியும் இறக்கியும் பயின்றால், ஆறு ஆதாரங்களிலும் தாரையாய்ப் பாயும்படி திருவருள் அமுதத்தை விளைத்து நிற்கும். இனி எட்டாந்தானமாகச் சொல்லப்படுகின்ற தலைக்குமேல் பன்னிரண்டங்குலம் பிராண வாயுவை நீக்கி நிற்றலால் ஆதார வேற்றுமைகள் நீங்கியபின், சுழுமுனையோடு மற்றை ஒன்பது நாடிகளிலும் பிராண வாயு ஒருதன்மைத்தாய் நிற்பதாம்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை முதலில் வைத்து உரைக்க. 'கால்' மூன்றனுள் முதலது, வாய்க்கால். ஏனைய இரண்டும், காற்று. 'ஏழு, எட்டு' என்பவை அவ்வெண்ணு முறைக்கண் நின்ற இடத்தைக் குறித்தன. அமுதத்தை 'இரதம்' (ரசம்) என்றார். விளைத்தற்கு வினை முதலாக மேற்சொன்ன நாயகியைக் கொள்க. இரட்டுதல் - மாறி மாறி வரச்செய்தல். யோகிகள் பிராண வாயுவைச் சுழுமுனை வழியில் மேல் ஏற்றவும், கீழ் இறக்கவும் வல்லராயிருப்பர். அவ்வன்மையைப் பிர மரந்திரம் வரையிலும் பெற்றவர்க்குச் சந்திர மண்டலத்திலுள்ள அமுதம் தாரையாய்க் கீழுள்ள ஆதாரங்களிலும் பாய்வதாம். துவாதசாங்குலத்தில் உணர்வு சென்றவர்க்கு வாயுப்பயிற்சி நீங்குவதால், அதனை, அந்த எட்டாந்தானம் வாங்கிக் கொண்டதாக ஓதினார். 'அஃது அங்ஙனம் கொள்ள வைப்பவளும் நாயகியே' என்பது குறிப்பு. கொண்டு - கொள்ளுதலால். இடவகை - ஆதார நிலைகள். அவை*

**688.** சந்திரன் சூரியன் தற்பரன் தாணுவிற்
சந்திரன் தானுந் தலைப்படுந் தன்மையைச்
சந்தியி லேகண்டு தானாஞ் சகமுகத்
துந்திச் சமாதி யுடையொளி யோகியே. **11**

---

*ஒத்தலாவது, அவற்றில் வெவ்வேறு வகையாய் நிகழும் பிராணாயாமம் முதலிய உறுப்புகள் அங்ஙனம் நிகழாது துவாதசாங்குலத் தியானம் ஒன்றேயாக நிகழ்தல். 'இந்நிலையில் பிராண வாயு, தானே தச நாடிகளிலும் நிறைந்த நிற்கும்' என்பார் "ஒன்பது மாநிலம் ஒத்தது வாயுவே" என்றார். சுழுமுனைப் பயிற்சியே சொல்லப்பட்டு வருதலின், அதனுடன் ஏனை நாடிகளிலும் ஒருபடித்தாய் நிற்கும் என்றவாறு. துவாதசாங்குலம் 'நிராதாரம்' எனவும், அதனைக் கடந்ததாகிய துவாதசாந்தம், 'மீதானம்' எனவும்படும் இத்திருமந்திரத்தின் அடிகள் எண்ணலங்காரமாய், அடி முரண் பெற்று நின்றது.*

*இதனால், 'ஆதார யோகம், நிராதார யோகம், மீதான யோகம் அனைத்தும் கைவரப் பெறுதல் திருவருளாலே' என்பது கூறப்பட்டது.*

***688. தெளிவுரை :-** 'சந்திரகலை' எனப்படுகின்ற இடநாடிக் காற்றும், 'சூரியகலை' எனப்படுகின்ற வலநாடிக் காற்றும் சிவனது திருமுடியில் உள்ள சந்திரகலை எனப்படுகின்ற பரஞானமாகிய திருவருளும் ஒன்றாய் நிற்கின்ற தன்மையை, அனைத்து நாடிகளும் கூடுகின்ற இடமாகிய ஆஞ்ஞையிலே விளங்கக் கண்டு அத்திருவருளே யாகி நிற்பான், உலகியலை அறவே ஒதுக்கித் தள்ளிச் சிவசமாதி ஒன்றையே உடைய சிவஞானயோகியே.*

***குறிப்புரை :-** "தாணு" என்றது, நீண்ட திருமேனியைக் குறித்தது, "தாணுவின்" என்றே போயினாராயினும், 'தாணுவின்' தலையின் என்பது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. சிவபெருமான் சந்திர கலையைத் திருமுடியில் அணிந்திருத்தல் ஞானத்தை உணர்த்தும் அடையாளமாம். திருவருளாகிய சிவனது சத்தி ஞானமாதல் வெளிப்படை. சிவபெருமான் தனது நெற்றிக்கு நேராகப் பிறையை அணிந்திருத்தல், இலாடத் தானத்தில் நின்று அறிவைத் தரும் குறிப்பினையும் உடையது. இடைநாடி வலநாடி வழிச்செல்லும் காற்றுச் சுழுமுனை வழிச் சென்று ஆஞ்ஞையை அடையத் திருவருளாகிய ஒளி விளங்குதலின் ஆஞ்ஞையை, சந்திரன் முதலிய மூன்றும் கூடும் இடம் என்றார். ஒளியோகி - ஞான யோகி; என்றது சிவயோகியை. சகமுகம் - கூடவேயிருத்தல்.*

689. அணங்கற்ற மாதல் அருஞ்சனம் நீவல்
வணங்குற்ற கல்விமா ஞான மிகுதல்
சிணுங்குற்ற வாயர்தம் சித்தி தாம்கேட்டல்
நுணங்கற் றிருத்தல்கால் வேகத்து நுந்தலே. 12

690. மரணஞ் சரைவிடல் வண்பர காயம்
இரணஞ் சேர்பூமி இறந்தோர்க் களித்தல்
அரணன் திருவுரு வாதல்மூ வேழாங்
கரனுறு கேள்வி கணக்கறிந் தோனே. 13

---

*இதனால், ஆஞ்ஞையில் திருவருளைக் கண்டு தான் அதுவேயாய் நிற்றல் சிவயோகிக்கே கூடும் என்பது கூறப்பட்டது.*

**689.** *தெளிவுரை :- மனைவியைத் துறத்தல், மக்கள் முதலிய பிற சுற்றத்தையும் துறத்தல், சிவனை வழிபடுகின்ற நூல் அறிவு மிகுதல், வாய்வாளாதிருக்கும் சிவயோகிகள் அடைந்துள்ள பர சித்திகளை அவரிடம் கேட்டல், உலகியலின் தாக்குதலால் உள்ளம் திரிவுபடாதிருத்தல், பிராணாயாமத்தை எளிதாகச் செய்தலாகிய வற்றைச் செய்ய வல்லவரே யோகியாவார்.*

*குறிப்புரை :- இதனுடன், வருகின்ற திருமந்திரத்தையும் கூட்டி வினை முடிவு செய்க. அணங்கு - பெண்டு. அற்றம் - அறுதி. அருஞ் சனம் - சுற்றம். நீவல் - நீக்குதல். சிணுங்குதல் - முணுமுணுத்தல். வணங்குற்ற கல்வி - செருக்கு விளையாத கல்வி. நுணங்கற்று இருத்தல் - சித்தம் காயாது நிலையாயிருத்தல்.*

**690.** *தெளிவுரை :- மூப்பு இறப்புக்கள் இன்மை, அருள் வெளியிற் கலந்திருத்தல், தன் முன்னோர்களைத் தனது நற்செய்கையால் நற்கதி பெறச் செய்தல். சிவனது திருவுருவைத்தான் பெறுதல் என்னும் பத்து இயல்புகளையும், கைப்பொருள் போன்ற கேள்வியால் யோகநூற் பொருளை நன்குணர்ந்தோன் பெறுவான்.*

*குறிப்புரை :- செய்யுள்நோக்கிச் சரை (மூப்பு) பின் நின்றது. 'இரணியம்' என்பது 'இரணம்' என மருவிற்று. இரணிய பூமி - பொன்னுலகம். முற்றத் துறந்தவற்கல்லது இல்வாழ்க்கைக் கடன் முற்றும் நீங்காமையின், சிவயோகியும் தென்புலத்தார் கடன் செயற்பாலன் என்பது கூறினார். 'இல்வாழ்வாரினும் சிவயோகிக்கு*

இஃது எண்ணிய வாறே எளிதின் முற்றுப்பெறும்' என்பது கருத்து. சிவயோகத்தின் இடைநிலைப் பயன்களில் மேலானது சாரூப பதவி பெறுதலாதலின், அதனை இறுதிக்கண் கூறினார். நன் திருவுரு - நல்ல திருவுருவம். மூவேழ் - மூன்றுடன் கூடிய ஏழ்; பத்து, "ஆம்" என்றது, 'பொருந்துவான்; அடைவான்' என்றவாறு. "மூவேழனையம் ஆம்" என இரண்டாவது விரித்துக்கொள்க. "கரம்" என்னும் வடசொல், இறுதிப் போலியாகிய தமிழ் முடிபு ஏற்றது. "கேள்வியால்" என மூன்றாவது விரிக்க. கணக்கு - நூல். "அறிந்தோன்" என்றது அறத்து அந்நெறி நின்ற, மேற்கூறிய ஒளி யோகியை. 'அறிந்தோன் ஆம்' என மேலே கூட்டி முடிக்க.

மரணம் விடல் - இயல்பாக வரும் மரணத்தைத் தவிர்த்துத்தாம் வேண்டும்போது பிரமரந்திரத்தின் வழியாகப் பிராணனை வெளிப்படுத்தும் உபாயத்தை மேற்கொள்ளல்.

சரை விடல் - கிழத்தனம் அகறல் சிறைவிடல் எனப் பாடங் கொண்டு பிறப்பாகிய சிறையை மீட்டும் எய்தா வண்ணம் விடுதல் என்பாரும் உளர்.

வண் பரகாயம் - எல்லா உயிர்களிடத்தும் வியாபித்திருத்தலே பரகாயப் பிரவேசமாதலின் வளப்பமான பரகாயப் பிரவேசம் செய்தல் என்றார் ஐம்பூத ஆற்றலையும் வெல்லுதலே பரகாயத்தின் முதற்படி ஆதலின் அவற்றை வெல்லுதலைப் பற்றிக் கூறியதாம்.

இரணம் சேர் பூமி - பொன்மயமான பூமி, சொர்க்கம், உறவு முதலிய முறை பற்றாது இறந்தோர் அனைவருக்கும் தன் யோகப்பயனால் சொர்க்கமளித்தல்.

அரணன் - பாதுகாவலாகிய பரமன் அவன் திருவுருவாதல் - பரமனைப்போல் திருவுருத்தாங்கியிருத்தல்.

மூவேழாம் கரன் உறுகேள்வி - சிவசூரியனைப் பற்றிய வரலாறுகளையே கேட்டல், சிவனைச் சூரியனாக உருவகித்தமைக் கேற்பச் சூரியனுக்குள்ள ஏழு நிறங்களும் தம்முட்கலப்பால் ஒவ்வொன்றும் மூன்றாக இருபத்தொன்றாயின என்க. இதுவன்றி, வெண்மை செம்மை பொன்மை என்ற மூன்று நிறங்களும் உறழப் பெறுதலால் இருபத்தொன்றான கிரணம் என்பாரும் உளர்.

இவ்விரண்டு திருமந்திரங்களாலும், சிவயோகி பெறும் இடைநிலைப் பயன்களைக் கூறுமுகத்தால், அவனுக்குத் திருவருள் செய்யும் முதல் நலங்கள் கூறப்பட்டன.

691. ஓதம் ஒலிக்கும் உலகை வலம்வந்து
பாதங்கள் நோவ நடந்தும் பயனில்லை
காதலில் அண்ணலைக் காண இனியவர்
நாதன் இருந்த நகரறி வாரே. 14

692. மூல முதல்வேதா மாலரன் முன்னிற்கக்
கோலிய ஐம்முகன் கூறப் பரவிந்து
சாலப் பரநாதம் விந்துத் தனிநாதம்
பாலித்த சத்தி பரைபரன் பாதமே. 15

---

691. ***தெளிவுரை :-*** *ஆர்வத்தால் சிவனைக் காணுதற்பொருட்டுக் கடல் சூழ்ந்த உலகம் முழுதும் கால்கள் நோவ நடந்து சுற்றி வரினும் பயன் இல்லை. அது நிற்க, சிவனுக்கு மிக இனியவராகிய சிவயோகியரே அவன் இருக்குமிடத்தை அறிந்து காண்பர்.*

***குறிப்புரை :-*** *'காண, நடந்து வலம் வந்தும் பயனில்லை' என மாறிக் கூட்டுக. இது, சரியை கிரியைகளில் நின்று அன்பு முதிரப் பெற்றோரை நோக்கிக் கூறியதன்றிப் பிறரை நோக்கிக் கூறியதன்று என்பதை இடம் நோக்கியுணர்க. "நாதன் இருந்த நகர், ஆதார நிராதார மீதானங்களே" என்பது குறிப்பு. "இவற்றை அறிந்து அடைதல் சிவ யோகிக்கல்லது கூடாது" என்பதாம். ஓதம் - கடல்.*

*இதனால், திருவருட் காட்சிக்குச் சிவயோகம் இன்றியமை யாததாதல் கூறப்பட்டது.*

692. ***தெளிவுரை :-*** *மகேசுரனுக்குக் கீழ் அயன், மால், உருத்திரன் என்னும் மூவரும் மூலாதாரம் முதலிய மூன்று ஆதாரங்களிலும் முறையே நிற்க, மகேசுரனுக்குமேல், 'விசுத்தி, ஆஞ்ஞை, நா அடி, உச்சி, தலைக்குமேல் பன்னிரண்டங்குலம்' என்னும் இடங்களில் சதாசிவன், விந்து, நாதம், பரவிந்து, பரநாதம் என்போர் முறையே நின்று பயன் தருமாறு உயிர்களுக்கு அளித்த சத்தி, 'பரை' எனப்படும் சிவனது திருவருளே.*

***குறிப்புரை :-*** *இதனுள் ஒன்பது இடங்கள் குறிக்கப்பட்டமை புலனாகும். "முன்" எனவே, "பின்" என்பதும், அவ்விரண்டனாலும் 'இடை' என்பதும் பெறப்பட்டன. 'முன், பின்' என்பன 'கீழ், மேல்' என்னும் பொருளவாய் நின்றன. கீழே உருத்திரன் ஈறாகவும், மேலே*

693. ஆதார யோகத் ததிதே வொடுஞ்சென்று
மீதான தற்பரை மேவும் பரனொடு
மேதாதி யீரெண் கலைசெல்ல மீதொளி
ஓதா அசிந்தம்ஈ தானந்த யோகமே. 16

694. மதியமும் ஞாயிறும் வந்துடன் கூடித்
துதிசெய் பவர்அவர் தொல்வா னவர்கள்
விதியது செய்கின்ற மெய்யடி யார்க்குப்
பதியது காட்டும் பரமன்நின் றானே. 17

---

*சதாசிவர் முதலாகவும் கூறினமையின் இடையே அனாகதத்தில் மகேசுரர் இருத்தல் பெறப்பட்டது. எனவே, நாயனாரது துணிபு இம்முறையேயாதல் பெறப்படும். பிற முறைகளில் சிறிது மேலே (பா. 575 உரை) காட்டப்பட்டது. அம்முறை பற்றி, நிற்பார், இங்கு, "மூல முதல்" என்பதற்கு 'கணபதி' எனவும், "மூலாதாரத்திற்கு மேல்" எனவும் பொருள் உரைப்பர். 'பரவிந்து' முதலியவை செய்யுளுக்கு ஏற்ப வைக்கப்பட்டன. திருவருளை, இறைவன் பாதம் என்றல் மரபு.*

*இதனால், மேல், "நாதன் இருந்த நகர்" எனப்பட்டன. இவை என்பது கூறி, இவ்வாறெல்லாம் திருவருள், யோகிகட்கு நலம் செய்தல் கூறப்பட்டது.*

**693. தெளிவுரை :-** ***மூலாதாரம் முதலாக ஆறு ஆதாரங்களையும் அவற்றில் உள்ள கடவுளரைத் தியான சமாதிகளால் வழிபட்டுப் பயன்பெறுமாற்றால் கடந்து, அவற்றிற்கு மேல் நிராதாரமாகிய உச்சிமுதற் பன்னிரண்டங்குலத்தை அடைந்து பரவிந்து பரநாதங்களின் அருள்பெற்று இவ்வாற்றால், மேதை முதலிய பிரணவகலை பதினாறும் கடக்கப்பட்டனவாய்விட, அதற்கு மேல், சொல்லவும், நினைக்கவும் வாராத மீதானமாகிய துவாதசாந்தத்தில் (பன்னிரண்டு அங்குலத்திற்கு அப்பால்) பரமசிவனை அடைந்து நிற்றலே ஆனந்தயோகமாகும்.***

***குறிப்புரை :- "ஆனந்தயோகம் நிகழ் புதல்வா" (உண்மை விளக்கம்) என்பது நினைக்கத்தக்கது. "சிவயோகத்துள்ளும் மூலாதாரம் முதலிய ஐந்து ஆதாரங்களில் நிற்றல் தவயோகமும், ஆஞ்ஞை முதலியவைகளில் நிற்றல் அருள் யோகமும், துவாதசாந்தத்தை அடைதல் ஆனந்த யோகமும் ஆம்" என்றவாறு. "மேதாதி ஈரெண் கலை செல்ல" என்றது வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய்***

695. கட்டவல் லார்கள் கரந்தெங்குந் தாமாவர்
மட்டவிழ் தாமரை யுள்ளே மணஞ்செய்து
பொட்டெழக் குத்திப் பொறியெழத் தண்டிட்டு
நட்டறி வார்க்கு நமனில்லை தானே. 18

---

*செய்தவாறு. எனவே ''அக் கலைகளாவன இவை'' என்பது அவ்வதிகாரத்திலே அறியற்பாலதாம்.*

**694. தெளிவுரை :-** *சந்திர கலையாகிய இட நாடிக் காற்றும், சூரிய கலையாகிய வல நாடிக் காற்றும் ஒடுங்கிச் சுழுமுனையில் வந்து பொருந்தச் செய்து, வாசி யோகத்தில் நின்று, ஆதாரங்களில் உள்ள கடவுளரைப் போற்றுகின்ற பொது யோகிகள் மேலுலகத்தில் அவ்வக் கடவுளராய் நின்று இன்பம் நுகர்வர். சிவனை உணர்தலாகிய முறைமையில் வழுவாது நின்று, அருள் யோகம் ஆனந்த யோகங்களைச் செய்கின்ற உண்மை யோகிகட்கே, நிலையான வீடுபேற்றைக் காட்டும் பரமசிவன் முன்னிற்பான்.*

**குறிப்புரை :-** *'சந்திர சூரியரோடு கூடி நிற்பவர் வானவரே' என்னும் நயம் தோன்ற முதல் இரண்டடிகளை அவ்வாறு ஓதினார். கூடி - கூடிய பின். துதி செய்தலுக்குச் செயப்படுபொருள் வருவிக்க. ''அவர்'' என்பதன்பின், 'கொண்ட' என ஒருசொல் வருவிக்க. 'வானவர்கள்' என்பதன் பின் 'ஆவர்' என்பது எஞ்சிநின்றது. தொன்மை, முன்னே துதிக்கப்பட்டமையைக் குறித்தது. "நின்றான்" என்பதில் நிற்றல், வெளிப்பட்டு நிற்றல் என்னும் பொருளது. பதி - நிலைத்து வாழும் ஊர்.*

**695. தெளிவுரை :-** *பிராண வாயுவைத் தம்வழியில் இயக்குமளவே வல்லராய்ப் பவயோகம் கைவந்தவர் மருட் சித்திகளையே பெறுவர். ஆஞ்ஞையில் அருள் இன்பத்தைத் தருகின்ற அருள் யோகத்தைத் தலைப்பட்டு, பின் சுழுமுனைத் தலையை அடைந்த பிராண வாயுவால் அவ்விடத்தில் வடு உண்டாகத் தாக்கிப் பின்பு, அவ்வாயுவை மண்டை ஓட்டில் தீப்பொறி உண்டாகுமாறு மோதி, உணர்வை அசையாது நிறுத்திச் சிவனை அறியும் ஆனந்த யோகத்தில் நின்று* ***சிவயோகம் கைவந்தவர்க்கு இறப்பு உண்டாகாது. (எடுத்த பிறப்பிலே வீடு உண்டாகும் என்பதாம்).***

**குறிப்புரை :-** *கட்டுதற்கும் நடுதற்கும் செயப்படுபொருள்*

வருவித்துக் கொள்க. மணம் செய்தல் - கூடுதல். இது 'தாமரையுள்ளே மணம் போல நிற்றல்' என்னும் நயம் தோற்றி நின்றது. 'கரந்தெங்கும் தாமாவர்' என்பது பிராத்தியைக் குறித்துப் பிற சித்திகட்கு உபலக்கணமாய் நின்றது. புருவநடுவில் தோன்றும் வடு, பொட்டுப் போலத் தோன்றுதல் பற்றி "பொட்டெழ" என்றார். யோகத்தா இவ்வடு தோன்றுதல் பலநாள் பயிற்சியால் ஆதலின், தாமரையுள்ளே மணஞ் செய்தற்குப் பின்னர்க் கூறினார். பொறியெழத் தாக்குதல், வன்மையை மிகுத்துக் கூறியவாறு. தண்டு - சுழுமுனை. அஃது ஆகுபெயரால் அதன்வழிச் செல்லும் பிராண வாயுவைக் குறித்தது. 'இறப்பில்லை என்னும் பொருளதாகிய "நமனில்லை" என்பது, இறந்தவர் பின் பிறப்பராதலின், பிறவியற்ற நிலையை அடைதலை உணர்த்தி நின்றது. "கட்ட வல்லார்கள் கரந்தெங்குந் தாமாவர்" எனவும், "நட்டறிவார்க்கு நமனில்லை" எனவும் கூறியன. பவ யோக சிவ யோகங்களது இழிபு உயர்வுகளை உறழ்ந்து காட்டியவாறு.

இவ் இருமந்திரங்களாலும், இருவகை யோகங்களின் இழிபு உயர்வுகளை ஒருங்கு வைத்துக் காட்டிச் சிவயோகம் வலியுறுத்தி முடிக்கப்பட்டது.

'பரகாயப் பிரவேசம்' என்பதை நாயனார் இங்ஙனம், 'மேலான ஆற்றல் பெற்ற உடம்பு' எனவும், "அருளுடம்பு" எனவும் இரு பொருள்பட இரட்டுறமொழிதலாக வைத்து, "சித்திகள் எட்டன்றி" என்னும் திருமந்திரம் முதல் இதுகாறும் சிவயோகமாகிய பரயோகத்தையும், பரசித்தியாகிய அதன் பயனையுமே உணர்த்தினமை அறிக.

## 12. கலை நிலை

*இதுமுதல் பன்னிரண்டு திருமந்திரங்களால் கலை நிலை உணர்த்தியருள்கின்றார். இங்கு, 'கலை' என்றது பிரணவகலையை அதனால், இவ்வதிகாரம், பிரணவயோகம் அல்லது மந்திர யோகம் கூறுவதாகும். எனவே, இதுகாறும் வாசியோகம் பற்றியவை கூறி, இதனால், மந்திர யோகம் பற்றியவை கூறுகின்றார் என்பது விளங்கும்.*

*"பிரணவ யோகம்" அல்லது "மந்திர யோகம்" என்பதே. "பிராசாத யோகம்" எனப்படுகின்றது. 'பிராசாதம்' என்னும் சொல்லின் பொருள், 'சிவஞான கதியைத் தருவது' (பிரா - சிவஞானம். ஸா - கதி. த - தருவது) என்பர். இது, வாசியோகத்தினும் நுண்ணியதாய், அதனினும் மேம்பட்டு விளங்குவது. வாசியோகத்தில் குண்டலி சத்தி, ஆதார தேவர் வடிவங்களாய்த் தடத்த நிலையில் நிற்கும். பிராசாத யோகத்தில் தன் வடிவில் உண்மையாய் நிற்கும்.*

*பிரணவம் தொகையாய் (சமட்டியாய்) நிற்குமிடத்து, 'ஓம்' என நிற்கும். இதனைப் பகுத்து நோக்கும் பொழுது, 'அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம்' என ஐந்தாகி நிற்றல் பெரும்பான்மை. இவை வியட்டிப் பிரணவமாம். இவ் ஐந்தும், 'ஐந்துகலை' எனப்படும்.* ***கலை - கூறு. 'ஒவ்வொரு கூறும் ஒவ்வொரு பிரணவமே' என்னும் கருத்தால், இவற்றை, 'பஞ்சப்பிரணவம்' என்பர். குமரகுருபரரும், "ஓதிய ஐந்து - ஓங்காரத்து உள்ளொளிக்கும் உள்ளொளியாய்" (கந்தர் கலிவெண்பா, கண்ணி, 58, 59) எனக் கூறினார்.***

***சிவனது முதற்றிருமந்திரமாகிய ''நமச்சிவாய'' என்னும் ஐந்தெழுத்து மந்திரம். சொல் வடிவினதாய் இனிது பொருள் பயந்து நிற்றல் பற்றி, அதனை, "தூல பஞ்சாக்கரம்" என வைத்து, இவ் அகாரம் முதலிய ஐந்தனையும் சொற்களுக்கு உறுப்பாதல் பற்றி, "சூக்கும பஞ்சாக்கரம்" என வழங்குவர். இறைவன் நமச்சிவாய மந்திரத்தின் பொருளாய் நிற்றலேயன்றிப் பிரணவத்தின் பொருளாயும் நிற்றலை, "ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்" (தி.6 ப.39 பா.10) என்பது முதலிய திருமொழிகளால் அறியலாம்.***

***ஓங்காரம், "அகாரம்: உகாரம், மகாரம்" என மூன்று கூறாகவும் இவற்றுடன் மேற்கூறியவாறு விந்து நாதங்களைச் சேர்த்து ஐந்து***

*கூறாகவும், விந்து நாதங்களைத் தனித்தனித் தூலமும், சூக்குமமுமாக வைத்து ஏழு கூறாகவும் இவற்றுள் விந்துவை மட்டும் தூல சூக்குமங்களுடன் அதிசூக்குமமாக வைத்து எட்டுக் கூறாகவும், நாதத்தையும் அவ்வாறு தூல சூக்குமங்களுடன் அதிசூக்குமமாக வைத்து ஒன்பது கூறாகவும் இவ்வொன்பதுடன், இவற்றுக்கெல்லாம் முதற் காரணமாகிய சுத்த மாயையை, "வியாபினி" என ஒன்றாக வைத்துக் கூட்டிப் பத்துக் கூறாகவும், வியாபினியைக் காரிய நிலையாக்கிக் காரண நிலையைச் சூக்குமம், அதிசூக்குமம் என இரண்டாக வைத்துப் பன்னிரண்டு கூறாகவும், காரிய நிலை அதிகார நிலையும் காரண நிலையில் சூக்கும அதி சூக்குமங்கள் இலய நிலையும் ஆம் என விடுத்து, தூலமாகிய போக நிலையை, "தூலதமம், தூல தரம், தூலம், தூலத்திற் சூக்கும்" என நான்காகப் பகுத்துப் பதினாறு கூறாகவும் இங்ஙனம் பல வகையாகக் கூறப்படும். இப்பகுப்புக்கள் முறையே, "திரிகலாப் பிராசாதம், பஞ்ச கலாப் பிராசாதம், சத்த கலாப் பிராசாதம், அட்ட கலாப் பிராசாதம், நவ கலாப் பிராசாதம், தசகலாப் பிரசாதம், துவாதச கலாப் பிரசாதம், சோடச கலாப் பிராசாதம்" எனப் பெயர் பெறும். இனி, இதனை, இருபது கலைகளாகப் பகுத்தலும் உண்டு. பிராசாத கலை இங்ஙனம் பல வகைப்பட நிற்பினும், சிறப்பாகச் சொல்லப்படுவன துவாதச கலாப் பிராசாதமும், சோடச கலாப் பிராசாதமும் ஆகிய இரண்டேயாம். இவ்விரண்டனுள்ளும் துவாதச கலாப் பிராசாதமே சிறந்தெடுத்துக் கூறப்படுகின்றது. சிவஞான பாடியத் துள்ளும் இஃது ஒன்றே கூறப்பட்டது (சூ. 4 அதி. 1)*

*பிராசாதங்களுட் சிறந்த துவாதச கலாப் பிராசாதத்தின் கலைகள் 'அகாரம், உகாரம், மகாரம், விந்து (தூல விந்து) அருத்த சந்திரன், (சூக்கும விந்து) நிரோதினி, (அதிசூக்கும விந்து) நாதம் (தூல நாதம்) நாதாந்தம், (சூக்கும நாதம்) சத்தி, (அதிசூக்கும நாதம்) வியாபினி, (சுத்த மாயை - காரிய நிலை) சமனை, சுத்த மாயையின் சூக்கும காரண நிலை) உன்மனை' (அதன் அதி சூக்கும காரண நிலை) என்பனவாம். இனி, வியாபினிக்கும் சமனைக்கும் இடையே அடங்கி நிற்கும் "வியோம ரூபிணி அனந்தை, அனாதை, அனாசிருதை" என்னும் நான்கையும் சுத்த மாயையின் போக நிலையில் (மேற்கூறிய வகைகளையும்) விரிக்கச் சோடச கலையாம். 'மேதா கலை' என்பது அகார கலையே.*

*அகாரம், உகாரம், மகாரம் மூன்றும் தூல எழுத்தாகலின், அவற்றைக் கடந்தவுடன், (1) ஒரு சூனிய நிலை தோன்றும். அதனின்று கீழ் இறங்காது மேலே நோக்க, "விந்து, அருத்தசந்திரன், நிரோதினி"*

*என்பன முறையே தோன்றும். இவை சூக்கும எழுத்தாகலின், இவற்றைக் கடந்தவுடன் (2) மற்றொரு சூனியநிலை தோன்றும் அதனினின்று கீழ் இறங்காது மேலே நோக்க நாதம், நாதாந்தம், சத்தி இவை முறையே தோன்றும். இவை அதி சூக்கும எழுத்தாகலின், இவற்றைக் கடந்தவுடன் (3) மற்றுமொரு சூனிய நிலை தோன்றும். அதனின்றும் இறங்காது மேலே நோக்க, வியாபினி தோன்றும், இது சுத்த மாயையின் காரிய நிலையாகலின் இதனைக் கடந்தவுடன் (4) வேறும் ஒரு சூனிய நிலை தோன்றும். அதனின்றும் இறங்காது மேலே நோக்க, சமனை தோன்றும். இது சூக்கும காரணமாகலின் இதனைக் கடந்த பின்னும் (5) ஒரு சூனிய நிலை தோன்றும். அதனின்றும் இறங்காது மேலே நோக்க, அதிசூக்கும காரணமாகிய உன்மனை தோன்றும். இதனுடன் பாசங்கள் யாவும் கழிதலால், ஒரு பெரிய சூனிய நிலை தோன்றும். அங்கு அசையாது உறைத்து நிற்பின், பரம்பொருள் வெளிப்படும். இதுவே பிராசாத யோகத்தின் பயனாகும். வியோம ரூபிணி, அனந்தை, அனாதை, அனாசிருதை நான்கும், சமனையின் கூறாய் அடங்குதலால், அவற்றைக் கடக்கும்பொழுது சூனியம் தோன்றுதல் இல்லை. அகாரம் முதலாக நாதாந்தம் ஈறாக உள்ள கலைகள் எட்டனுள் "அருத்த சந்திரன்" என்பது வடிவாலும், 'நிரோதினி' என்பது அதிதெய்வத்தால் பெற்ற பெயர் ஏனைய ஆறும் தம் பெயரையே உடையன. சத்தி முதலாக மேன்மேல் உள்ளவை எல்லாம் அதிதெய்வத்தால் பெற்ற பெயர்களே. உற்று நோக்கியவழித் துவாதச கலையாவன, பிரணவத்தை, "தூலம், சூக்குமம், அதிசூக்குமம்" என மூன்றாக வைத்து, அவற்றுள் ஒன்று மூன்றாகப் பின்னும் அவற்றைப் பகுத்து அவற்றுடன் வியாபினி, சமனை, உன்மனை மூன்றுங் கூட்ட வருவனவாதல் விளங்கும். வியாபினி முதலிய மூன்றின் மேலும் தனித்தனி ஒவ்வொரு சூனியம் நிற்க, ஏனையவற்றில் மும்மூன்றின் மேல் ஒவ்வொரு சூனியம் நிற்றலும் அறியப்படும்.*

*இனித், துவாதச கலைகள் நிற்கும் இடம் முறையே மணி பூரகம் (உந்தி), அனாகதம் (இருதயம்), விசுத்தி (கண்டம்), ஆஞ்ஞை (புருவநடு) என்னும் ஆதாரங்கள், ஆஞ்ஞையின்மேல் அதன் வியாபகமாகிய நெற்றி நடு, தலையின் முற்பாதி, (இது நெற்றி நடுவின் மேல் ஒன்றரை யங்குலத்தைச் சிறப்பாக உடையது) உச்சி (தலையின் நடு), தலையின் பிற்பாதி (இஃது உச்சிக்குப் பின் ஒன்றரையங்குலத்தைச் சிறப்பாக உடையது) உச்சிக்குமேல் பன்னிரண்டங்குலமாகிய நிராதாரத்தில்*

**696.** காதல் வழிசெய்த கண்ணுதல் அண்ணலைக்
காதல் வழிசெய்து கண்ணுற நோக்கிடிற்
காதல் வழிசெய்து கங்கை வழிதரும்
காதல் வழிசெய்து காக்கலு மாமே. **1**

---

*"நான்கு, நான்கு மூன்று, ஒன்று" என்னும் அங்குல எல்லைகளாகிய நான்கிடம் என்பவைகளாம். 'பிரம ரந்திரம்' எனப்படுவது "உச்சி" என்னும் தானமேயாம். வியாபினிக்குமேல் சமனை யிடமாய், நிராதாரத்தின் மூன்றாந் தானமாக நிற்கும் மூன்றங்குலத்துட்டானே சோடச கலைகளுள் தோன்றும் 'வியோமரூபிணி, அனந்தை, அனாசிருதை' என்னும் நான்கும் அடங்கி நிற்பனவாம்.*

*இவற்றின் இயல்பெல்லாம் தருமை ஆதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிச்செய்த சோடச கலாப் பிராசாத சட்கம், இவர் தம் ஞான குரு கமலை ஞானப்பிரகாசர் அருளிச் செய்த பிராசாத மாலை, காழிக்கண்ணுடைய வள்ளலார் மரபில் வந்த ஒருவர் செய்த பிராசாத தீபம், காவை அம்பலவாணர் செய்த பிராசாத அகவல் என்னும் நூல்களால் நன்குணரலாகும்.*

*இவ்விளக்கங்களையெல்லாம் இனிதுணர்த்துதல் மந்திரங்களை உணர்த்திய வழியே கூடுமாகாலானும், மந்திரங்களும், எந்திரங்களும் வருகின்ற தந்திரத்துட் கூறுதலானும் யோகங்களுள் பிராசாத யோகம் என்பது உண்டு என்பது உணர்த்துதற்கு அதனை இங்குத் தோற்றுவாய் மாத்திரையாகவே கூறுகின்றார்.*

**696. *தெளிவுரை :-* *தன்னை அடைவதற்கு அன்பு ஒன்றையே வழியாக அமைந்துள்ள முக்கட் கடவுளாகிய சிவபெருமானை, அவ் அன்பைத் தரும் வழியாகிய அறிவை உண்டாக்கி, அவ் அறிவு பொருந்த அவனை நோக்கினால், அன்பு பெருகி, அது வழியாக இன்ப வெள்ளம் பெருகும். அது பெருகியபின், அந்த அன்பையே பின்னும் துணையாகப் பற்றி, அந்த இன்ப வெள்ளம் வற்றிப் போகாதவாறு பாதுகாத்துக் கொள்ளுதலும் கூடும்.***

***குறிப்புரை :-* *''காதல்வழி'' நான்கனுள் இரண்டாவது, நான்காவதன் தொகை. முதலதும், ஈற்றதும் உருவகங்கள். மூன்றாம் அடியில் "வழிச்செய்து" "வழிதரும்" என்பன "வழியும் பெருகும்" என்னும் பொருளன. "கண்" என்றது அறிவை. எனவே, 'இது மந்திர***

697. காக்கலு மாகுங் கரணங்கள் நான்கையும்
காக்கலு மாகுங் கலைபதி னாறையும்
காக்கலு மாகுங் கலந்தநல் வாயுவும்
காக்கலு மாகுங் கருத்துற நில்லே. 2

698. நிலைபெற நின்றது நேர்தரு வாயு
சிலைபெற நின்றது தீபமும் ஒத்துக்
கலைவழி நின்ற கலப்பை அறியில்
மலைவறி வாகும் வழியது வாகுமே. 3

---

*யோகம்' என்பது விளங்கும். அறிந்தவிடத்தன்றி அன்பு நிகழாதாகலின், அன்பைத் தரும்வழி அறிவாதல் அறிந்துகொள்க. "அறிவை உண்டாக்கி அறிவுற நோக்கி" என்றது "அறிவைச் செயற்படுத்தி, அதன் வழியே நோக்கி" என்றவாறு.*

*இதனால் "பிராசாத யோகம் வழி முறையில் வீடு தரும்" என*

697. ***தெளிவுரை :–*** ***மாணாக்கனே! நீ பிரணவ கலைகளில் அறிவு பொருந்த நில், அங்ஙனம் நிற்பாயாகில், பிராண வாயுவையும், அக்கலைகள் பதினாறனையும், அவற்றின் வழி இயங்குகின்ற மனம் முதலிய அந்தக்கரணங்களையும் மருள் நெறியிற் செல்லாது தடுத்து, அருள் நெறியில் நிறுத்துதல் கூடும்.***

***குறிப்புரை :–*** *காக்கத்தகுவன இவையெனல் நுதலிற்று. அந்தக் கரணங்கள் நான்கையும் காத்தலுமாம். குண்டலினியோடு கலந்த பிராணனைக் காத்தலுமாம். அதனால், கருத்தைப் புறம்போக வொட்டாது காத்தலுமாம். அதனால், சாதகனாகிய புருவமத்தியத் தானத்திலேயே நிலைத்து நிற்பாயாக என்றவாறு.*

698. ***தெளிவுரை :–*** ***வலமும், இடமும் செல்லாமல், நடுநாடி வழிச் செல்கின்ற பிராண வாயு, அத்தகைய செலவிற் பிறழாது நிற்றலே அசைவில்லாது நிற்கும் பிராணாயாம நிலையாம். அந்நிலையால் அறிவும், பிரணவ கலைகளில் நிலைபெற்று நின்று, முதல்வனது திருவருள் அக்கலைகளில் பல்வேறு வகையாய்க் கலந்து நிற்கின்ற கலப்பினை அறியுமாயின், அவ்வாறு அறிந்து நிற்கின்ற அந்நிலையே, அவ்வறிவு பின் பலதலைப்படாது ஒரு தலைப்படும் வழியாம்.***

***குறிப்புரை :–*** *'ஆதலின், அவ்வாற்றால் அக்கலப்பினை அறிக' என்பது குறிப்பெச்சம். தொழிற்பெயராய் நின்ற ''நின்றது''*

**699.** புடையொன்றி நின்றிடும் பூதப் பிரானை
மடையொன்றி நின்றிட வாய்த்த வழியில்
சடையொன்றி நின்றஅச் சங்கர நாதன்
விடையொன்றி லேறியே வீற்றிருந் தானே. 4

---

*இரண்டனுள் முன்னது எழுவாய்; பின்னது பயனிலை. "நேர்தரு வாயு" என்பதனை முதலிற்கொள்க. சிலை, கல்; மலையுமாம். "சிலை" என்றது அதன் தன்மையை; அஃதாவது, அசைவின்மை "தீபம்" என்றது, அறிவை. உம்மை, இறந்தது தழுவிய எச்சம். ஒத்தல், பிறழாது நிற்றல். "கலை" எனப் பின்னர் வருதலின், வாளா, "ஒத்து" என்றார். 'அலை வற' என்பதும் பாடம். மலை அறிவு ஆகும் - ஐயமாகிய மருள் நீங்க அருள்ஞானம் விளையும்.*

*இதனால், பிராசாத யோகம், உணர்வு அருள் வழிப்படுவதற்கு வழியாதல் கூறப்பட்டது.*

**699.** *தெளிவுரை :- எஞ்ஞான்றும் உடனாய் நீங்காது நிற்கின்ற சிவபெருமானைச் சாரமாட்டாது புறத்தே ஓடிய உணர்வு, அவ்வாறு ஓடாது மடங்கி அவனைச் சார்ந்து நிற்றற்குப் பொருந்திய பிராசாத யோக நெறிக்கண் அவன் இனிது விளங்கி நிற்கின்றான்.*

*குறிப்புரை :- எங்கும் நிறைந்துள்ள, பூதங்களுக்குத் தலைவனாகிய பராகாயத்தை, மடைகளாகிய நாடிகளில் மாறிச் செல்லாது (பிராணன்) நடுநாடியில் ஒன்றி நிற்க வாய்த்த வழியில் சடையோடு கூடிய அந்தச் சங்கரனாகிய தலைவன், இடபம் ஒன்றிலேறி வீற்றிருந்தான் என்றவாறு.*

*பராகாயமாகிய மதிமண்டலத்துப் பொருந்த வாய்த்த வழியாகிய சுழுமுனையில் விசுத்திசக்கரத்துச் சங்கரன் இடபாரூடராகக் காட்சியளித்தார் என்பது கருத்து. புருவமத்தியில் இறைவன் சதாசிவன் மனோன்மணியாக எழுந்தருளியிருத்தலின் இங்ஙனம் அருளினார். விடையேறியிருத்தலாவது விஷ்ணு கிரந்தியைத் தாண்டியிருத்தல். இதனையே புராணங்கள், திருமாலாகிய இடபத்தைப் பெருமான் ஊர்வதாக உரைக்கும்.*

*பூதப்பிரான் - ஏனைய நான்கு பூதங்களும் ஒன்றுதலுக்கிடமாய விரிந்து இடங்கொடுக்கும் ஆகாயம். ஈண்டுப் பராகாயமாகிற ஆஞ்ஞையை சிவன் என்பாரும் உளர்.*

700. இருக்கின்ற காலங்கள் ஏதும் அறியார்
பெருக்கின்ற காலப் பெருமையை நோக்கி
ஒருக்கின்ற வாயு ஒளிபெற நிற்கத்
தருக்கொன்றி நின்றிடும் சாதக னாமே. 5

---

700. ***தெளிவுரை :-*** *தாம் வாழும் நாளில் எல்லை இவ்வளவினது என்பதை அறியாதவர் அது நீட்டித்தற்பொருட்டு ஒரு வழிப்படுத்துகின்ற பிராணவாயு, அவ்வாறு கால நீட்டிப்பிற்கு மட்டும் ஏதுவாயொழியாது, மெய்யுணர்வைப் பெறுதற்கு ஏதுவாகுமாயின், அத்தகைய சாதனங்களைப் புரிந்த சாதகன், பின்னர்ப் பேரின்பத்தில் திளைத்து மகிழ்ந்திருப்பான்.*

***குறிப்புரை :-*** *பெருகின்ற காலம் - இனிப்பெருக வாழ இருக்கின்ற காலம் ஒருக்கின்ற வாயு - ஒருவழிப்பட்ட, அதாவது ஆயாமப்படுத்தப்பட்ட பிராணன் வெளி - பிரமரந்திரதமாகிய மதி மண்டலம். இதுவே பராகாயமுமாம் தருக்கு ஒன்றி - யாமார்க்கும் குடியல்லோம் என்பது முதலிய சுத்தாகங்கார விளைவாகிய தருக்கு இது மேல்வினைக்கு வித்தாகாதது. தருக்கின்றி எனவும் பாடம்.*

*இதனால், எடுத்த பிறப்பில் ஞானத்தைப் பெற விழைபவர் வாழ்நாள் நீட்டிப்பின் பொருட்டுப் பிராணாயாமத்தினை ஒரு தலையாகச் செய்தல்வேண்டும் என அநுவாத முகத்தான் வலியுறுத்தப்பட்டது. படவே, அடுத்து வருகின்ற 'காயசித்தி, கால சக்கரம்' என்னும் அதிகாரங்கட்கு வழிவகுத்ததுமாயிற்று.*

*இதனால், பிராசாத நெறியல்லாத பிற நெறி யோகங்கள் சிறப்பிலவாதல் கூறப்பட்டது.*

701. ***தெளிவுரை :-*** *'ஒருக்கின்ற வாயு ஒளிபெற நிற்குமாறு நிறுத்துதல்' என மேற்கூறிய செயலே சாதகன் சாதிக்கத்தக்க முறையாதலை உணர்ந்து, பெருந்தவமாகிய அவ்வழிபாட்டினை ஒருவன் செய்யும்பொழுது, பிரணவ கலைகளின் உள்ளீடாய திருவருளிலே தனது உணர்வு செல்லுமாறு செலுத்துவானாயின், அச்செயலே, அவனது புலன் உணர்வாகிய இரும்பினை மெய்யுணர்வாகிய பொன்னாக மாற்றுகின்ற இரச குளிகையாய் அமைந்து பயனைத் தந்துவிடும்.*

***குறிப்புரை :-*** *அகத்தொழில் மாத்திரையாற் செய்யும் வழிபாடே யோகமாகலானும், சரியை, கிரியை யாகிய ஏனைத் தவங்களின்*

**701.** சாதக மானஅத் தன்மையை நோக்கியே
மாதவ மான வழிபாடு செய்திடும்
போதக மாகப் புகலுறப் பாய்ச்சினால்
வேதக மாக விளைந்து கிடக்குமே. **6**

---

மேம்பட்ட யோகத்துள்ளும் பிராசாத யோகம் மிகச் சிறந்ததாகலானும், அதனை "மாதவமான வழிபாடு" என்றார். "செய்திடும்போது" என்பது ஒருசொல், அகம் கலைகளின் உள்ளிடம். அஃது ஆகுபெயராய், அவ்விடத்துள்ள திருவருளைக் குறித்தது. 'அகத்தாக' என வரற்பாலதாய சாரியை வாராது விகற்பித்தது. பாய்ச்சுதலுக்குச் செயப்படுபொருள் ஆற்றலால் கொள்ளப்பட்டது. துணை வினையாய் வந்த கிடத்தல், துணிவுணர்த்தி நின்றது. வேதகம் - இரும்பைப் பொன்னாக்கும் இரத குளிகை. விளைந்து கிடக்குமே யென்றது அதன் மிகுதி உணர்த்திற்று.

**702.** *தெளிவுரை :-* மேல், "வேதகமாக விளைந்து கிடக்கும்" எனப்பட்ட அச்சாதனைதான், மிகத் தருகின்ற பயன் மூன்றாகும். இனி, இயல்பாக இயங்கும் பிராணவாயுவின் வழி எப்பொழுதும் புறத்தே ஓடிய உணர்வுதானே, சாதனையால் சுழுமுனைவழிச் செலுத்தப்பட்ட வாயுவின்வழியே உள்நோக்கிப் படர்ந்து, பின்னும் உச்சிக்கண்ணதாகிய பெரிய தாமரை மலரிடத்து அவ்வாயுவின் வழியே படிமுறையாற் புக, அவ்விடத்து நன்கு விளங்கும் பேரொளியாகிய திருவருள், முன்பு கீழுள்ள ஆதாரங்களினின்று அவ்வுணர்விற்கு விடமாய்த் தொடர்ந்து விளங்கிவருவதாம். இம்மை, மறுமை, வீடு எனப் பயன் மூன்றாம்.

*குறிப்புரை :-* பயன் மூன்றாவன புலங்களின் மேற்சென்ற அவா அறுதலும், திருவருள் தோற்றமும், திருவருட்பேறுமாம். இவை, மேல் (பா.700) "ஒளிபெற" என்றதனானே, 'பொழுது புலர்தல், செவ்வொளி தோன்றல், ஞாயிற்றைக் காண்டல்' என்பவற்றில் வைத்து அறியக் கிடத்தலின், இவற்றைக் கிளந்தோதாது போயினார். திருவருட்பேறு, படிமுறையானன்றி முதற்கண்ணே முற்றக் கிடையாமையைப் பயன் வகையாலும் உணர்த்துதற்கு, 'கிளர் பயன் மூன்று' என்றார். "கிளர் பயன்" என்பது, 'கிளர்த்தும் பயன்' என, பிறவினை வினைத்தொகை. 'தான்' என்னும் அசைநிலை நான்கிடத்தும் பிரிநிலை ஏகாரத்தோடு வந்தது. 'அச்சோதிதானே, உள்நின்று தொடர்ந்தது' என்க. 'தொடர்ந்தது தானேயாம்' என்பதில், 'ஆம்' என்பது எஞ்சி நின்றது.

702. கிடந்தது தானே கிளர்பயன் மூன்று
நடந்தது தானேஉள் நாடியுள் நோக்கிப்
படர்ந்தது தானே அப் பங்கய மாகத்
தொடர்ந்தது தானே அச் சோதியுள் நின்றே. 7

703. தானே எழுந்தஅத் தத்துவ நாயகி
ஊனே வழிசெய்தெம் உள்ளே யிருந்திடும்
வானோர் உலகீன்ற அம்மை மதித்திடத்
தேனே பருகச் சிவாலய மாகுமே. 8

---

*எனவே, "தொடர்ந்தது" என்றது எதிர்காலத்தில் இறந்த காலமாம். 'அவ்விடத்து நிற்கும் சோதி' எனற் பாலதனை, "அச்சோதி" என்றார்.*

*இதனால், மேற்கூறிய சாதனை, வேதகமாக விளையும் முறை விளக்கப்பட்டது.*

**703.** *தெளிவுரை :- உயிர் தனது முயற்சியால் அடைய லாகாமையின், தானாகவே அதற்குப் புலப்பட்டு நிற்கின்ற மெய்ப் பொருளாகிய தலைவி தன்னை நாம் அடைவதற்கு இவ்வுடம்பையே வழியாக அமைத்து நம்முள் இருக்கின்றாள். அவளையே பொருளாக நாம் கொள்ளின், இவ்வுடம்பு சிவானந்தமாகிய தேனைப் பருகி இன்புறுகின்ற இடமாய்விடும். இவ்வண்ணம் தானேதானாய் எழுந்த தத்துவ நாயகியாகிய குண்டலினி சத்தியானவள், இவ்வுடலில் வழி செய்துகொண்டு எமக்குள்ளாகவே எழுந்தருளியிருப்பள். தேவருலகையும் பெற்ற தாயாகிய சத்தி திரட்டித்தர, தேன் போன்ற அமுத மாரியையுண்டு, சிவயோகியின் உடல் சிவாலயமாகும் என்றவாறு.*

*குறிப்புரை :- 'வானோர் உலகீன்ற அம்மை' என்பது, 'அவள்' என்னும் சுட்டுப் பெயரளவாய் நின்றது. 'அம்மையை' என்னும் இரண்டனுருபு தொகுக்கப்பட்டது. 'பருகி' என்பது பாடமன்று. சிவம், இங்கு, 'இன்பம்' என்னும் பொருளது. "ஆகும்" என்பதற்கு எழுவாய் வருவிக்க.*

*இதனால், பிராசாத யோகத்தாற் பெறும் திருவருட்பேறு, பின் சிவப்பேற்றிற்கு ஏதுவாதல் கூறப்பட்டது.*

704. *தெளிவுரை :- உடம்பு ஒளி பெற்று நெடுநாள் விளங்குதற் பொருட்டுப் பொருந்தியுள்ள பிராணவாயு, ஒவ்வொரு மூச்சிலும்*

704. திகழும் படியே செறிதரு வாயு
அழியும் படியை அறிகிலர் ஆரும்
அழியும் படியை அறிந்தபின் நந்தி
திகழ்கின்ற ஆயுவைச் சேர்தலு மாமே. 9

705. சோதனை தன்னில் துரிசறக் காணலாம்
நாதனும் நாயகி தன்னிற் பிரியும்நாள்
சாதன மாகுங் குருவை வழிபட்டு
மாதன மாக மதித்துக்கொ ளீரே. 10

---

*சிறிது சிறிதாக அழிந்துகொண்டு வருதலை யாரும் அறிந்து கவலைப்படுதல் இல்லை, அதனால் அறிந்து கவலைப்பட்டு, அவ்வாயுவை அழியாமற் காப்பார் உளராயின், அவர்க்கு, எடுத்த பிறப்பிலே சிவனை அடைதற்கு ஏதுவான நீண்ட ஆயுளைப் பெறுதல் கூடும்.*

*குறிப்புரை :- 'செறிதல், சிவனருளால்' என்க. அழிதல், பன்னிரண்டு அங்குலமாகப் புறப்பட்டது. பின், நாலங்குலம் அழிய, எட்டங்குலமாகவே புகுதல். நந்தி, சிவன் அவன் திகழ்தலாவது, காட்சிப்படுதல், "திகழ்கின்ற" என்னும் பெயரெச்சம், "ஆயு" என்னும் ஏதுப்பெயர் கொண்டது. உம்மை, சிறப்பு, இடையிரண்டடிகள் மூன்றாம் எழுத்து எதுகை.*

*இதனால், 'ஆசனம் முதலிய உறுப்புக்களால் யோகநெறி கைவரப் பெற்றுப் பின் பிராசாத நெறியைத் தலைப்பட்டு மெய்யுணர்வைப் பெறுதற்கு, வாழ்நாள் நீட்டித்தல் வேண்டும்' என்பதுணர்த்தி, 'அதற்குப் பிராணாயாமம் இன்றியமையாதது' என வலியுறுத்தப்பட்டது.*

705. **தெளிவுரை :-** *'சிவன், உடலைக் காக்கின்ற சத்தியினின்றும் பிரிகின்ற நாள் இது' என்பதைக் குறிகள் சிலவற்றால் ஐயமற உணரலாகும். 'அக்குறிகள் இவை' என்பதை யோக குருவை வழிபட்டே பெற்று, அங்ஙனம் பெற்ற அறிவைப் பெரிய செல்வம் போல மதித்துப் போற்றிக்கொள்ளுங்கள்.*

*குறிப்புரை :- காக்கும் சத்தியை. "ஆரணி" என்பர். சிவன் காக்கும் சத்தியினின்றும் பிரிதலாவது, 'நிலை பெறுக என நினைக்கும் நினைவை விட்டொழிதல். அங்ஙனம் ஒழியின் உடல் ஒரு நொடியும நிலைபெறாது அழியும் இதனையே,*

**706.** ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்
பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லிரேல்
நீரா யிரமும் நிலமாயிரத் தாண்டும்
பேராது காயம் பிரான்நந்தி ஆணையே. **11**

---

*கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்,*
*உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே' - தி.5 ப.90 பா.4*

*என்று அருளிச் செய்தார் ஆளுடைய அரசர். எனவே, "நாதனும், நாயகி தன்னிற் பிரியும் நாள்" என்றது, 'உடல் அழியும் நாள்' என்றவாறாம். ஞான குரு, சாத்திய குருவாகலின், யோககுருவை, "சாதனகுரு" என்றார். எனவே, கிரியா குருவும் அத்தன்மையரேயாதல் அறியப்படும். இனி, 'நாதன், உடம்பினை உடையதாகிய உயிர்; நாயகி குண்டலினி சத்தி' எனவும் உரைப்பர்.*

*இதனால், பிராணாயாமத்தில் உளஞ்செல்லுதற் பொருட்டு, வாழ்நாளின் எல்லையை உணருமாறு கூறி, பின் வருகின்ற ஆயுள் பரீட்சைக்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

**706.** *தெளிவுரை :- பிராணாயாம வன்மையால் தலையில் உள்ள அமுதத்தைப் பெற்று மிகவும் நுகர வல்லீராயின், உமக்கு உடம்பாய் அமைந்த, நிலம், நீர் முதலிய தத்துவங்கள் பலவும் அவையவை ஒடுங்கும் முறையில், வலிமை கெட்டு ஒடுங்குதற்குத் தனித்தனிப் பல்லாண்டுக் காலம் செல்லும்; அங்ஙனம் செல்லவே, உடம்பு கெட்டொழியாது, நெடுநாள் நிலைத்து நிற்கும்; இஃது எங்கள் அருளாசிரியரான நந்திதேவர்மேல் ஆணையாக நான் சொல்லும் உண்மை.*

*குறிப்புரை :- பிராணாயாமத்தின் அருமை உணர்த்தற்குப் பிராணவாயுவை நான்கு காலன்றிப் பன்னிரண்டுகால்கொண்டு அதிவேகமாய் ஓடும் குதிரையாக உருவகம் செய்து கூறினார். 'பன்னிரண்டு கால்' என்றது, அது புறப்படும் அங்குல அளவை. ஆன் நிற்கற் பாலதாய நிலம், செய்யுள் நோக்கிப் பின் நின்றது. மூன்றாம் அடியின் இறுதியில் எஞ்சி நின்ற, 'என இவ்வாறாக' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. மூன்றாம் அடிக்குப் பிறவாறு உரைப்பாரும் உளர். ஈர ஆறு - இடை, பிங்கலையாகிய இருவழி, புரவி - குதிரை, பிராணன்.*

*இதனால், மேல் வலியுறுத்தப்பட்ட பிராணாயாமம் வாழ்நாள்*

707. ஓசையில் ஏழும் ஒளியின்கண் ஐந்தும்
நாசி யினில்மூன்றும் நாவில் இரண்டும்
தேசியும் தேசனுந் தம்மிற் பிரியுநாள்
மாசறு சோதி வகுத்துவைத் தானே. 12

---

*நீட்டிப்பிற்கு ஏதுவாதல் இவ்வாற்றான் என்பது கூறி, அடுத்து வருகின்ற காய சித்திக்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

707. ***தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு சத்தி சிவங்கள் தம்மிற் பிரிந்து நீங்குகின்ற நாளின் எல்லையை, 'சத்தம், உருவம், கந்தம், சுவை, பரிசம்' என்னும் புலன்களில் முறையே, 'ஏழு, ஐந்து, மூன்று, இரண்டு, ஒன்று' என இவ்வாறாகப் பொதுவகையில், இருளை அறுக்கும் ஒளியாகிய இறைவன் வகுத்து வைத்துள்ளான்.*

***குறிப்புரை :-*** *மாசறு சோதி - குற்றமில்லாத சோதியாகிய சிவன், தேசியும் தேசனும் தன்னில் பிரியுநாள் - குண்டலினியும் பிராணனும் தம்மை விட்டுப் பிரியும் காலத்து, ஓசையில் ஏழும் - ஓசை என்னும் ஆகாய பூத தன்மாத்திரையில் வெளிப்படும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், எரித்தல், சேர்த்தல் என்னும் ஏழு வகைகளையும், ஒளியின் கண் ஐந்தும் - ஒளியினிடத்து உண்டாகிற சுவை, ஒளி, நாற்றம், எரித்தல், சேர்த்தல் என்னும் ஏழு வகைகளையும், ஒளியின்கண் ஐந்தும் - ஒளியினிடத்து உண்டாகிற சுவை, ஒளி, நாற்றம், வெம்மை, எரித்தல் என்னும் ஐந்து வகைகளையும், நாசியில் மூன்றும் - நாசியினிடம் பொருந்திய நாற்றம், உயிர்ப்பு, உணர்தல் என்னும் மூன்றனையும், நாவில் இரண்டும் - நாவின் கண்ணதாகிய உணவை எடுத்தல், சுவைத்தலாகிய இரண்டனையும், வகுத்து வைத்தான் - ஒடுக்கி அருளினான் சுழுமுனையில் நின்றவர்க்குச் சுவை முதலிய தன்மைகள் இரா.*

## 13. காயசித்தி உபாயம்

708. உடம்பாற் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே. 1

---

*இனி இதுமுதல் பதினாறு திருமந்திரங்களால், மேல் தோற்றுவாய் செய்து கொண்ட காய சித்தி உபாயம் உணர்த்துகின்றார். அஃதாவது, உடம்பை நிலையுடையதாகப் பெறுதற்குரிய வழி. உயிர் சரியை, கிரியை, போகம், ஞானம் என்னும் நால்வகை நெறிக்கண் நின்று நாதனருளால் நற்கதி பெறத் துணையாயிருப்பது இவ்வுடம்பு. அதனை நெடுங்காலம் வைத்துப் பாவித்து அந்நெறியிலே செலுத்துதற் கேற்ற உபாயங்களை அறிவிக்கிறார்.*

708. ***தெளிவுரை :-*** *உடம்பு அழியுமாயின், அதனைப் பெற்றுள்ள* ***உயிரும் அழிந்ததுபோலச் செயலன்றி நிற்பதாம்.*** *ஆகவே, உடம்பு அழிந்தபின், அவ்வுடம்பைத் துணைக்கொண்டு இயங்கிய உயிர், தவமாகிய துணையைப் பெறவும், பின் அதனால் இறையுணர்வை அடையவும் இயலாததாய்விடும். இதுபற்றி, உடம்பை நிலைபெறுவிக்கும் வழியை அறிந்து அவ்வழியில் அதனை நிலைபெறுவித்த யான், உயிரை நலம் பெறச் செய்தவனே ஆயினேன்.*

***குறிப்புரை :-*** *"ஆகவே, என்னை உடம்பையே பொருளெனக் கொண்டவனாகக் கருதி அறிவுடையோர் இகழார்" என்பது கருத்து. எனவே, "நீவிரும் உடம்பை நிலை பெறுவிக்க முயலுங்கள்" என்பது குறிப்பெச்சமாயிற்று. "உடம்பார் உயிரார்" என்றவை, நிலையாமை யுடைய இழிவு பற்றி வந்த திணை வழுவமைதி. இதனை, "உயர்வு பற்றி வந்தது" என்பாரும் உளர்; "அழியின்" எனவும், "அழிவார்" எனவும் அழிபொருளாகக் கூறப்பட்டவை, உயர்வுடையனவாதல் எவ்வாறு என எண்ணி ஒழிக. திடம்படல், உறுதியுண்டாகப் பெறுதல், "உயிர்க்கு உறுதி" என்றது, இங்குத் தவத்தை, "திடம்பட" என்பதில் எண்ணும்மை தொகுக்கப்பட்டது. இனி ''சேரவும்'' என்னும் எண்ணும்மையைச் சிறப்பும்மையாக வைத்து, "திடம்பட" என்பதனைச் சேர்தற்கு அடையாக்கியே உரைப்பர் பலரும். உடம்பை வளர்க்கும் உபாயம், வருகின்ற திருமந்திரம் முதலாக உள்ளவற்றிற் கூறப்படுவன.*

709. உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே. 2

---

*''வளர்த்தேன்'' இரண்டில் முன்னது வினைமுற்று. அதன்பின், “அதனால்” என்பதும் இறுதியில், “ஆயினேன்” என்பதும் எஞ்சி நின்றன.*

*இதனால், காரியசித்தி இன்றியமையாமையாதற்குக் காரணம் உணர்த்துமுகத்தால், அதன் சிறப்புக் கூறப்பட்டது. இதனானே, உடம்பை உயிர் நலத்திற்குக் கருவியாகக் கொள்ளுதலல்லது, அதனையே பயனாகக் கொள்ளுதலும், உடம்பு கருவியாதலை உணராது அதனைப் பகை எனக் கொண்டு வருத்துதலும் ஆகா என்பதும் பெறப்பட்டன.*

709. ***தெளிவுரை :-*** *சிவநூல் கேட்பதற்கு முன்பெல்லாம் உடம்பை அழுக்கு ஒன்றையே உடையதாகக் கருதி இகழ்ந்திருந்தேன். சிவநூல் கேட்ட பின்னர், அதற்குள்தானே பயனை அடைதற்குரிய வழிகள் பலவும் இருத்தலை அறிந்தேன். அதனால், அவ்வறிவின் வழியே, உடம்பிற்குள் தானே இறைவன் தனக்கு இடம் அமைத்துக் கொண்டிருக்கின்றான் என்பதையும் அறிந்து, இப்பொழுது நான் உடம்பைக் கேடுறாதவாறு குறிக்கொண்டு காக்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *‘இத்தகைய அறிவையும் செயலையும் நீவிரும் பெறுதல் வேண்டும்’ என்பது குறிப்பெச்சம். இழுக்கு, குற்றம்; மாசு. இழுக்குடையதனை, ‘இழுக்கு’ என்றார். ‘சிவநூல் கேட்கும் முன்னர், கேட்டபின்னர்’ என்பன இயைபெச்சமாய் வந்து இயையும். உறுதல், பயனைப் பெறுதல். உறுபொருள், உறுதற்கு ஏதுவாய பொருள்; என்றது வழியை. செய்யுளின் இடைக்கண்நின்ற ஏகாரங்கள் தேற்றம். கோயில் - ஆதார, நிராதார, மீதானங்களாகிய இடங்கள். “இருந்து” என்றது குறிக்கொண்டிருந்து என்றவாறு.*

*இதனால், உடம்பு, உயிர் நலத்திற்குக் கருவியாதல் இவ்வாறு என்பது கூறப்பட்டது.*

710. ***தெளிவுரை :-*** *பிராண வாயுவை வாங்கியும், விட்டும் சுழலும்படி செய்ய, உடம்பில் உள்ள மாசுகளும் அதனோட சுழன்று நீங்கும். அவ்வாற்றால் மாசுகளைப் போக்கித் தூயதான*

710. சுழற்றிக் கொடுக்கவே சுற்றிக் கழியும்
கழற்றி மலத்தைக் கமலத்தைப் பூரித்
துழற்றிக் கொடுக்கும் உபாயம் அறிவார்க்
கழற்றித் தவிர்ந்துடல் அஞ்சன மாமே. 3

711. அஞ்சனம் போலுடல் ஐஅறும் அந்தியில்
வஞ்சக வாதம் அறும்மத்தி யானத்தில்
செஞ்சிறு காலையிற் செய்திடில் பித்தறும்
நஞ்சறச் சொன்னோம் நரைதிரை நாசமே. 4

---

*பிராணவாயுவை ஆதாரத்தாமரைகளில் நிரப்பி, அவை வழியாக உடம்பில் உள்ள எல்லா நாடியினுள்ளும் அவ்வாயுச் சென்று உலவும்படி செய்து, அதன் ஆற்றலை அந்நாடிகட்குத் தருகின்ற இவ்வுபாயத்தை முறையறிந்து செய்ய வல்லவர்க்கு, உடம்பு நெருப்பிலிட்டுச் சுடப்படுதலினின்றும் நீங்கி, உயிரினுள் ஒளிந்து நிற்கும் கள்வனாகிய இறைவனைப் புலப்படக் காட்டும் மந்திர மையாய் அமையும். உடலைச் சுத்தம் செய்யும் முறையை உணர்த்துகிறார்.*

***குறிப்புரை :-*** *"சுழற்றிக் கொடுக்க" என்பது ஒரு சொல் நீர்மைத்து. 'கொடு' என்பது செயப்படுபொருள் குன்றாவினையில் இவ்வாறு துணைவினையாய் வருதலை, 'கிண்டிக் கொடுத்தல், புரட்டிக் கொடுத்தல்' முதலாகவரும் வழக்குநோக்கி அறிக. 'சுத்தி' என்பது பாடமன்று. "மலம்" எனப் பின்னர் வருதலின் வாளா, "கழியும்" என்றார், "உழறிக் கொடுக்கும்" என்பதில் உழலதற்கு இடமும், கொடுத்தலுக்குச் செயப்படுபொருளும் ஆற்றலால் கொள்ளக் கிடந்தன. உழற்றிக் கொடுத்தலையே உபாயம் என்கிறாராதலின், "கொடுக்கும் உபாயம்" என்பதில், பெயரெச்சம் வினைப்பெயர் கொண்டதாம். 'அழற்றப்படுவது' என்னும் பொருளதாய "அழற்சி" என்பது இங்கு அன்னதாம் தன்மையைக் குறித்தது. மந்திர மை, புதையுண்டு கிடக்கும் பொருட்குவை முதலியவற்றைப் புலப்படக் காட்டுதல் நன்கறியப்பட்டது. அஞ்சனம் - மந்திரமை.*

*இதனால், காயசித்தி உபாயங்களுள் முதல் உபாயம் பிராணாயாமம் என்பது கூறப்பட்டது.*

***711. தெளிவுரை :-*** *மந்திரமைபோல நின்று பயன்தரத் தக்கதாகிய உடலை, அன்ன தாகாதவாறு, 'ஐ, வளி, பித்து' என்னும் மூன்றானும்*

712. மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள
ஏன்ற இயந்திரம் பன்னிரண் டங்குலம்
நான்றஇம் முட்டை யிரண்டையுங் கட்டியிட்
டூன்றி யிருக்க உடம்பழி யாதே. 5

---

தோன்றிக் கெடுக்கின்ற நோய்கள், முறையே, 'மாலை, நண்பகல், காலை' என்னும் பொழுதுகளில் செய்யும் பிராணாயாமத்தால் நீங்கும். அதுவேயன்றி, முப்பொழுதும் செய்யும் பிராணாயாமத்தாலும் நரை திரைகள் வாராதொழியும். இவ்வுபாயத்தை இங்கு, உடலைக் கொல்லும் நஞ்சு போன்ற தீமைகள் நீங்குதல் நோக்கிக் கூறினோம்.

*குறிப்புரை :- காலைப் பயிலும் மூச்சுப் பழக்கத்தால் பித்தம் நீங்கும். நடுப்பகலில் பயில்வதால் வாதம் நீங்கும். மாலையில் பயில்வதால் கபம், கோழை அறும். இம்மூன்றின் வேறுபாட்டால் உடற்கண் நிகழும் நஞ்சாம் நோய் அணுகாது அறும். "ஐ, வாதம், பித்து" என்ற மூன்றும் காரணவாகுபெயராய், அவற்றால் உளவாகும் நோய்களைக் குறித்தன; காலைப் பொழுது எச்செயலுக்கும் சிறப்புடையதாகலின். அதனை ''செஞ்சிறு காலை'' என்றார். செய்தலுக்குச் செயப்படு பொருள், அதிகாரத்தால் வந்தது. "நஞ்சறச் சொன்னோம்" என்பதனை ஈற்றில் வைத்து உரைக்க. "நரை, திரை நாசம்" என்றதனால், இளமை நீங்காமை குறிக்கப்பட்டது. இதனைக் காலம் வரையாது கூறினமையின் 'எக்காலத்தும் செய்தலால்' என்றதாயிற்று. ஐ - கபம், கோழை.*

*இதனால், மேற்கூறிய உபாயத்தைச் செய்யுமாறும், அவற்றால் வரும் பயன்களும் கூறப்பட்டன.*

**712. தெளிவுரை :-** *மூன்று வளைவை உடையதாகிய பாம்பு, பதினாறு அங்குல அளவினவாகிய கயிறுகளைக் கொண்ட பூட்டையில் அழுந்தப் பொருந்தியிருக்குமாயின், உடம்பு அழியாது நிலை பெற்றிருக்கும். அப்பாம்பு அங்ஙனம் பொருந்தி நிற்றற்கு, மேற்கூறிய பூட்டையில், அவிழ்ந்து கிடக்கும் நிலையினவாய்ப் பன்னிரண்டங்குல நீளம் தொங்குகின்ற இரண்டு முட்டைகள், அவிழ்ந்து வீழாதவாறு கட்டப்படல் வேண்டும்.*

*குறிப்புரை :- "பாம்பு" என்றது குண்டலினியை; "இயந்திரம்" என்றது நடுநாடியை. 'பதினாறு அங்குலக் கயிறு' என்றது, அந்நாடியுள் பதினாறு மாத்திரையளவு பூரிக்கப்படும். பிராணவாயுவை, 'பன்னிரண்டு அங்குல நீளம் தொங்குகின்ற இரண்டு முட்டை' என்றது,*

713. நூறும் அறுபதும் ஆறும் வலம்வர
நூறும் அறுபதும் ஆறும் இடம்வர
நூறும் அறுபதும் ஆறும் எதிரிட
நூறும் அறுபதும் ஆறும் புகுவரே. 6

---

*இடைகலை பிங்கலை நாடிகளின் வழி இயல்பிலே பன்னி ரண்டங்குலம் வெளிச் செல்லும் பிராணவாயுவை. 'அம்முட்டையை அவிழ்ந்து வீழாமல் கட்டுதல்' என்றது. அந்த இரு வழியையும் அடைத்தலை. எனவே, 'இடைகலை பிங்கலை நாடிகளின் வழி இயல்பாக இயங்குகின்ற பிராணவாயுவை அடக்கிப் பதினாறு மாத்திரயளவு நடுநாடி வழிப் பூரித்துக் குண்டலி சத்தியை நடு நாடியில் பொருந்தியிருக்கச் செய்தால், உடம்பிற்கு அழிவு உண்டாகாது' என்பது இம்மந்திரத்தால் போதரும் பொருளாம்.*

*'மூன்று மடக்கு' என்றது, உடம்பில், 'அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம்' எனப் பகுக்கப்படும் மூன்று வட்டங்களை. அம்மூன்றிலும் குண்டலினி வியாபித்துள்ளமை அறிக. இனி, 'அப் பாம்புஅவ் யந்திரத்தில் ஊன்றி யிருக்க' என்றது, பொது மக்களிடத்து உணர்வின்றித் தூங்குவது போல் இருக்கின்ற நிலையில்லாமல், விழித்திருப்பதுபோல் செயற்படும் நிலையில் நிற்க, என்றதாம். பிராண வாயுவால் சட ஆற்றல் மிக்கு நிற்கும் உடல் உறுப்புக்கள், பின் அறிவாற்றலால் தூண்டடப்படுதலும் அவை செயற்பாடின்றிக் கெட்டொழியாமைக்கு ஏதுவாம் என்க. குண்டலியின் தன்மை மேலே பலவிடத்தும் விளக்கப்பட்டது. "கட்டியிட்டு" என்பதில் 'இட்டு' அசைநிலை. 'பாம்பு, இரண்டு எட்டுள இயந்திரத்தில் நான்ற முட்டை இரண்டையும் கட்டி ஊன்றியிருக்க உயிர் அழியாதே' என வினை முடிவு செய்க. "இரண்டெட்டு" என்பது எண்ணலளவை ஆகுபெயர்.*

*இதனால், காய சித்தி உபாயங்களுள் குண்டலினி இயக்கம் இரண்டாவதாதல் கூறப்பட்டது.*

**713.** *தெளிவுரை :- நூறு மாத்திரை காலமேயாயினும், அறுபது மாத்திரை காலமேயாயினும், ஆறு மாத்திரை காலமேயாயினும் பிராணவாயு சுழுமுனை நாடியை வலமாகச் சூழ்ந்தும், அதன் உட்புகுந்து மேலேறியும் வருமாயின், அத்துணை ஆண்டுக்கால வாழ்நாளினை மக்கள் எய்துவர். இடகலை, பிங்கலைகளைக் கட்டியவர் நெடுநாள் வாழ்வர்.*

**714.** சத்தியார் கோயில் இடம்வலம் சாதித்தால்
மத்தியா னத்திலே வாத்தியங் கேட்கலாம்
தித்தித்த கூத்தும் சிவனும் வெளிப்படும்
சத்தியம் சொன்னோம் சதாநந்தி ஆணையே. 7

---

*குறிப்புரை :- நூறு முதலிய மூன்றினும் நான்கிடத்தும், 'ஆயினும்' என்பது எஞ்சி நின்றது. 'பிராண வாயுவைக் கும்பகம் செய்யும் ஆற்றலுக்கு ஏற்பவே வாழ்நாளின் அளவு அமையும்' என்றற்கு இங்ஙனம் நயம்படப் பலவாறு விகற்பித்துக் கூறினார்.* ***யோகநெறியிற் கொள்ளப்படும் மாத்திரை என்பது, கைவிரலை இயல்பான இயக்கத்தில் முழந்தாளை ஒருமுறை சுற்றச் செலுத்தி நொடித்தலைச் செய்யும் கால அளவாகும்.*** *யோக முறையால் பெறப்படும் வாழ்நாள் நீட்டிப்பு, இயல்பாய் அமைந்த வாழ்நாளின் எல்லையோடு கூடிநிற்கும்; அதனால் 'ஆறாண்டு' என்பதும் நீட்டிப்பே என்க.*

*இதனால், 'மேற்கூறியவற்றுள் முதலதாகிய பிராணாயாமத்தால் பெறப்படும் ஆற்றல் காயசித்திக்குச் சிறந்தது' என்பது கூறப்பட்டது.*

**714. தெளிவுரை :-** *மூன்று மடக்குடைப் பாம்புபோல உடம்பில் உள்ள குண்டலி சத்தி, மேற்கூறியவாறு ஊன்றியிருக்கும் இடமாகிய நடுநாடியைப் பிராணவாயு வலமும் இடமுமாகச் சுற்றிவருகின்ற சாதனையைப் புரிந்தால், உலக நோக்கில் இருக்கும்பொழுதே உடலில் உள்ள பத்து நாடிகளில் உண்டாவனவாக மேல் (பா.593) கூறிய "மணி, கடல், யானை" முதலியவற்றின் ஓசைபோலும் ஒலிகளைக் கேட்டல் கூடும். இனி, சிவபெருமான், தாள அறுதிக்கு இயைப ஆடும் ஆட்டத்தின் ஓசையும் கேட்கப்பட்டுப் பின் அப்பெருமானே விளங்கித் தோன்றுவான். மெய்யான இன்பமே வடிவமான எங்கள் ஆசிரியர் மேல் ஆணையாக, இவ்வாறு நாம் உண்மையையே உங்கட்குச் சொன்னோம். சத்தியார் கோயில் - சிவசத்தி எழுந்தருளியிருக்கும் கோயில், என்றது உடலை சாதித்து ஆன்மத் தியானத்திலேயெனப் பிரித்துப் பொருள் கொள்க. ஆன்மத் தியானம் என்பது தியானிப்போனாகிய தன்னைத் தித்தித்த கூத்து - தித்த தித்த என்னும் தாள லயத்தோடு கூடிய கூத்து. சிவன் வெளிப்படும் - சிவன் அறிவுக்கறிவாய்ப் புலப்படுவர், இங்ஙனம் தம் அநுபவங் கூறுவார் சிவன் மேலாணை; சத்தியமாகச் சொன்னோம் என்றார்.*

**குறிப்புரை :-** *முதலடி, மேல், "மூன்று மடக்குடை" என்ற மந்திரத்துட் கூறியதனை அநுவதித்தது. எனவே, இச்சாதனையால்*

715. திறத்திறம் விந்து திகழும் அகாரம்
உறப்பெற வேநினைந் தோதும் சகாரம்
மறப்பது மந்திரம் மன்னிய நாதம்
அறப்பெறல் யோகிக் கறநெறி யாமே. 8

---

குண்டலியின் இயக்கம் மிகுதல் பெறப்பட்டது. சகல நிலை 'பகல்' எனப்படுதலின், சகல சாக்கிர நிலையை, 'மத்தியானம்' என்றார். யோகாவத்தை யிலன்றிச் சகலாவத்தையில் தச நாதங்களைக் கேட்டல் அரிதாகலின், ''மத்தியானத்திலே வாத்தியங்கேட்கலாம்'' எனச் சிறந்தெடுத்தோதினார். இஃது உடம்பு சட ஆற்றல் மிக்கிருத்தற்கு அறிகுறியாகும். 'தித்தித் தா' என்னும் ஒலிக்குறிப்பினை, 'தித்தித்த' எனக் குறுக்கி ஓதினார். அஃது இரட்டுற மொழிதலாய் நின்று, கூத்து, அருள் இன்பக் கூத்தாதலை உணர்த்திற்று. கூத்து, கருவியாகுபெயர்; என்னை? சிவனின் வேறாக ஓதப்பட்டமையின் சிவன், தடத்த சிவன். "வெளிப்படும்" என்பதனைத் தனித் தனி இயைக்க. "சொன்னேன்" என்பதும் பாடம்.

இதனால், இரண்டாவதாகிய குண்டலியின் இயக்கம் திருவருட் பேற்றிற்குச் சிறந்ததாதல் கூறப்பட்டது.

**715.** தெளிவுரை :- நாதத்தை முற்றப் பெறக் கருதிச் சொல்லப்படுகின்ற, முறையே மகர மெய்யையும் புள்ளி வடிவினதாய எழுத்தையும் உடன் கொண்டு விளங்கும் அகரமும், சகரமும் பிராண வாயுவைத் தடுத்தற்குரிய மந்திரமாம்; ஏனெனில், நாதத்தை முற்றும் உணரப்பெறுதலே யோகம் கைவந்தவனுக்குரிய தன்மையாதலின்.

குறிப்புரை :- 'உறப் பெறவே நினைந்து ஓதும்' என்பதை முதலிற் கொள்க. பிரணவ கலைகளுள் அகர உகரங்கள் பெருங்கூறாயும், மகர மெய் உட்கூறாயும் நிற்குமாதலின், மகர மெய்யை, "திறத்திறம்" என்றார். "விந்து" என்றது இங்கு, புள்ளி, வடிவத்தை, மகரத்தை உடன்கொண்ட அகரம். எனவே, 'அம்' என்பதும், புள்ளி வடிவை உடன்கொண்ட சகரம் (ஸ) எனவே, 'ஸ' என்பதும் விளங்கின. இவை இரண்டுங் கூட, 'அம்ஸ:' என்றாகுமாகலின், அதுவே பிராணாயாமத்திற்கு உரிய மந்திரம் என்பது போந்தது. 'அகரம்' என வாளா கூறினும், மகரம் தானே பெறப்படுமாயினும், சகரத்திற்கு வேறு கூறுகின்றாராகலின், அகரத்தின்கண் ஐயம் நிகழாமைப் பொருட்டு, அதனை

எடுத்தோதினார். 'அசபை' எனப்படுவது இவ் அம்ஸ மந்திரமே, உபதேசத்தாற் பெறற்பாலனவாய மந்திரங்களை வெளிப்படக் கூறாது, இங்ஙனம் மறைத்துக் கூறுதலே மந்திர நூல்கட்கு இயல்பென்க. திறத்திறம் - மிகத்தூயதான.

அம்ஸ மந்திரத்துள் 'அம்' என்பது மூச்சினை உள் வாங்குதற்கும், 'ஸ' என்பது மூச்சினை வெளிவிடுதற்கும் உரியன. இதனை அவற்றது ஓசை இயல்பாலும் உணரலாகும். இவ்வாறன்றி இவற்றை மாறிக் கூறுவாரும் உளர். உயிர் முதலாய மந்திரங்கள் அனைத்திற்கும் முதற்கண் ஹகாரத்தைச் சேர்த்தல் வடமொழி மரபாகலின், 'அம்ஸ:' என்பது, 'ஹம்ஸ:' என்னும் 'அம்ச மந்திரம்' என்பது 'ஹம்ஸ மந்திரம்' என்றும் அம்மொழியில் சொல்லப்படும். இனி, ஸகாரத்திற்கும் மகர மெய்யைச் சேர்த்து 'அம்சம்' எனச் சொல்லப்படுவதே அம்ச மந்திரம் என்னும் கொள்கையும் உண்டு. 'அதனையே மேற்கொண்டு, இதற்கு அவ்வாறு உரை கூறுவாரும் உளர்.'

இது பிராணனின் இயல்பான இயக்கத்தாலே நடைபெறுதலின், 'அசபை' எனப்பட்டது. அசபை, வாய்விட்டுச் செபிக்கப்படாதது. 'அஜபா' என்பது வடமொழிப் பெண்பாற்சொல். 'செபிக்கப்படாதது' எனவே, இதனை, 'மானதமாகக் கணித்தலே சிறப்பு' என்பது பெறப்படும்.

'அம்' என்பதனை, 'அஹம்' எனத் திரிந்து, 'ஸ' என்பதன் பின் வைக்க, 'ஸோஹம்' என்றாகி, 'அவன் நான்' எனப் பொருள் தரும். அதனால், 'ஸோஹம்' எனப் பாவிக்கும் மந்திரமும் அம்ஸ மந்திரத்தின் வேறுபாடே என்பர், அம்ஸ மந்திரத்தால் பாச நீக்கமும், ஸோஹம் பாவனையால் சிவப்பேறும் உளவாகும் என்க. இதனை இடைவிடாது தியானிப்பர் யோகிகள்; அவர்கட்கு இதுவே தருமவழியாம் என்பது, இதனையே அப்பர் சுவாமிகள் என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு என்பார்கள், உயிர்ப்பாயப் புகுதல் ஸோ என்று உள்ளுக் கிழுக்கப்படுதல். புறம் போதல் ஹம் என்று விடப்படுதல். ஆகவே விடுகின்ற மூச்செல்லாம் அவன்நான் என்னும் பொருளதாகிய ஸோ ஹம் என்று இழுத்து விடப்படுதலே மறப்பற இருத்தல் அவனுக்கு வருந்தீமை ஏது? ஆதலின் அறநெறியாமே என்றருளப்பட்டது.

இதனால், 'காயசித்தி முதலிய பலவற்றிற்கும் துணையாகிய பிராணாயாமத்திற்கு உரிய மந்திரம் இது' என்பது, காயசித்தி உபாய இயைபு பற்றிக் கூறப்பட்டது.

716. உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச்
சிந்தித் தெழுப்பிச் சிவமந் திரத்தினால்
முந்தி முகட்டின் நிறுத்தி அபானனைச்
சிந்தித் தெழுப்பச் சிவனவ னாமே. 9

---

716. ***தெளிவுரை :-*** *பூரக ரேசகங்களை மேற்கூறியவாறு அம்ஸ மந்திரத்தாற் செய்தபின் கும்பகம் செய்யும் பொழுது 'ஹாம்' என்னும் வித்தெழுத்தாலே (பீஜாட்சரத்தாலே) பிராணனைச் சுழுமுனை நாடி வழியே கண்டத்தளவும் செலுத்திப் பின், 'ஹௌம்' என்னும் வித்தெழுத்தால் ஆஞ்ஞையை அடைவித்து, அங்கே மலவெழுத்துக்கள் நீங்கிய திருவைந்தெழுத்து, 'தத்துவமசி' மகாவாக்கியப் பொருளையும், 'சோஹம்' என்பதன் பொருளையும் தருமாற்றை உபதேச முறையான் உணர்ந்து அதனானே அவ்வாயுவை அசையாது நிறுத்திப் பின் அபானவாயு எழத் தொடங்குமாயின், அதனைப் பிரணவத்தால் அடக்கிப் பிராணனை முன்போலவே மேலெழச் செய்யின், அவ்வாறு செய்பவன் சிவமாந் தன்மையை அடைவான்.*

***குறிப்புரை :-*** *"உந்திச் சுழியின் உடன் ஏர் பிராணன்" என்றது, 'பிராணனை அஃது எழுமிடத்திலிருந்தே இவ்வாறு எழுப்புக' என்றவாறு. உடன் - விரைவாக. ஏர்தல் - எழுதல். நிறுத்தற்கு "சிவமந்திரத்தினால்" என விதந்தோதியது போலப் பிராணனையும், அபானனையும் எழுப்புதற்கு உரிய மந்திரங்களை விதவாமை யானும், ''எழுப்பி'' என வாளாகூறி ஒழியாது ''சிந்தித்தெழுப்புக'' என்றமையானும், பிராணனை உள்வாங்குதற்குரிய "ஹம்" என்பதனை மாத்திரை கூட்டி அது நெடிது செல்லுமாறு எழுப்பி, அப்பிராணன் நிற்றற்கு அம்மந்திரத்தை ஹௌகாரமாகத் திரித்து முடித்தல் வேண்டும் என்பதும், பெறப்பட்டன.*

*மந்திரங்கள் வாயினால் சொல்லப்படும் சொற்களும், அவற்றொடு கூட்டப்படும் வித்தெழுத்துக்கள் (பீஜாட்சரங்கள்) மனத்தால் சிந்திக்கப்படும் எழுத்துக்களும் ஆம் என்க. 'முந்தி நிறுத்தி' என இயையும். ''முகடு'' என்றது, சுழுமுனையின் உச்சியாகிய ஆஞ்ஞையை. பிராணனை அவ்விடத்து நிறுத்தும் முன்னே அபான வாயு கீழ்ச் செல்லுதல் குற்றமாகாமையின், "முந்தி முகட்டின் நிறுத்தி" என்றார். எனவே, "மூலத்துவாரத்தை முக்காரம் மிட்டிரு" (பா.571) என மேற்கூறியதும் இதுவேயாதல் அறியப்படும். "அவன் சிவனாம்" என*

717. மாறா மலக்குதந் தன்மேல் இருவிரல்
கூறா இலிங்கத்தின்கீழே குறிக்கொண்மின்
ஆறா உடம்பிடை அண்ணலும் அங்குளன்
கூறா உபதேசங் கொண்டது காணுமே. 10

---

*மாறுக. இனி 'அவ்வாறு செல்பவன்' என்பதைத் தோன்றா எழுவாயாகக் கொள்ளின், "அவன்" என்பது பகுதிப் பொருள் விகுதியாம், "ஆம்" என்றது "அப்பாவனையைத் தலைப்படுவன" என்றவாறு.*

*எனின், பிராண அபானன்களை மேலெழுப்பச் சிவனாவன் என்பதுணர்த்துதல் நுதலிற்று. நாபித்தானத்திலிருந்து தோன்றும் பிராண வாயுவை, சிவ என்னும் மந்திரத்தினால் தியானித்து, மேலெழுப்பி, முதற்கண் அதனைக் கொண்டு உச்சியில் நிறுத்தி, அபானவாயுவை மேலெழுச் செய்யின் அந்த யோகி சிவனாவன் என்றவாறு.*

*சிவமந்திரம் - சிவ என்னும் மந்திரம்; அசபை என்பாரும் உளர். பிராணன் அபானன்களைப் பிரமரந்திரத்தில் எழுப்புவதே சிவமாதற் குரிய உபாயம் என்பது கருத்து.*

*இதனால், காயசித்தி பெற்றவன் அதனால் பெறற்பாலதாய பயனைப் பெறுமாறு கூறப்பட்டது.*

717. **தெளிவுரை :-** *அசுத்தத் தன்மை நீங்காதே எருவாய்க்கு இரண்டு விரற்கிடை மேலேயும், தன் சொல்லாற் சொல்லப்படாத குறிக்குக் கீழேயுமாய் உள்ள இடத்தில் தியானியுங்கள் 'யாரை' எனின், உடம்பின் கண் ஆறு வகையில் உள்ள இறைவன் அங்கும் உளன். எனவே, அவனையே தியானியுங்கள் என்பதாம். அங்குத் தியானிக்கு மிடத்து, "ஊமை எழுத்து" எனப்படும் பிரணவத்தால் தியானியுங்கள்.*

***குறிப்புரை :- இறைவனைத் தியானிக்கும் இடங்களில் ஒன்றாகிய "மூலாதாரம் எனப்படுவது எருவாயுமன்று; கருவாயுமன்று" என மேற் (பா.568) கூறியதனை நன்கு வலியுறுத்தற்கு, "குதந்தன்மேல்" எனவும், "இலிங்கத்தின் கீழே" எனவும், அங்கு இறைவன் இருக்குமாறு*** *உணர்த்து முகத்தான் "யாரை" என்னும் அவாய் நிலையை நிரப்புதற்கு, 'ஆறா உடம்பிடை அண்ணலும் அங்குளன்' எனவும் கூறினார். மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களிலும் இறைவன் முறையே "அதோ முகன், பிரமன், மால்,*

718. நீல நிறமுடை நேரிழை யாளொடுஞ்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவர் பராநந்தி ஆணையே. 11

---

*உருத்திரன், மகேசுரவரன், சதாசிவன்" என்பவராக வீற்றிருப்பான். "அதோமுகம், கீழண்ட மான புராணன்" "அதோமுக மாகிய அந்தமில் சத்தி - அதோமுகமாகி அமர்ந்திருந்தானே" என்பவற்றால், அதோமுக மூர்த்தியின் நிலை பற்றி அறிந்துகொள்க. பிற யோகநூல்கள் மூலாதாரத்தில் விநாயகராய் இருப்பன் எனக் கூறும். கீழ்நோக்கித் தொங்கும் தும்பிமுகத்தையுடைய விநாயகர் அதோமுகரே ஐந்து முகத்தோடு அதோ முகமுங்கூடிய அறுமுக மூர்த்தி முருகன். "உடம்பிடை" என்பதன்பின், "உள்ள" என்பது சொல்லெச்சமாய் நின்றது. "அண்ணல் அங்கும் உளன்" என உம்மையை மாற்றியுரைக்க.*

*இதனால், அபானனை எழுப்புதலும் இன்றியமையாத தென்பதுணர்த்த வேண்டி, அதனை எழுப்புமாறு கூறப்பட்டது.* இதனுள் **"கூறா உபதேசம்"** என்றது "அபானனைச் சிந்தித் தெழுப்பி" என்றதனைத் தெரிந்துணர்த்தியவாறு. உபதேசிக்கப்படுவதனை, "உபதேசம்" என்றார். நீங்காத மலம் பொருந்திய அபான வாயிற்கு மேல் இருவிரல் தூரத்திற்கும் கூறக்கூடாத குறிக்குக்கீழே நால்விரல் தூரத்திற்கும் இடையிலே நிலைத்துத் தியானிங்கள், ஆறு ஆதாரங்களையுடைய உடம்பில் சிவனும் அங்கு எழுந்தருளியிருப்பன், இது சொல்லக் கூடாத உயர்ந்த உபதேசம். இதனைச் செவ்வனே ஏற்றுக்கொண்டு அதனை அநுபவத்தில் காணுங்கள் என்றவாறு.

ஆறு ஆ உடம்பு - மூலமுதல் ஆறு ஆன உடல், என்றது ஆறு ஆதாரங்களையுடைய உடல் கூறா உபதேசம் - மிக இரகசியமான உபதேசம் கொண்டு அதுகாணும் எனப் பிரித்துப் பொருள் காண்க.

**718. தெளிவுரை :-** *பிராணனை முந்தி முகட்டில் நிறுத்திய பின்,* அதற்கு மேலே உள்ள ஏழாந்தானமாகிய உச்சியில் திருவருளோடு நேரே கூடி, "இத்திருவருளல்லது பிறிதொன்றும் நிலையுடையதன்று" என்பதை எவரேனும் உணர்ந்திருப்பார்களாயின், அவர்கள் ஆன்ம லாபத்தைப் பெறுதலேயன்றி, நரை திரை அணுகாது, என்றும் இளமையோடு இருக்கும் நன்மையையும் அடைவர். இஃது எங்கள் ஆசிரியர் ஆணையாகச் சொல்லப்படும் உண்மை.

***குறிப்புரை :-*** *"குண்டலி சத்தியன்றிச் சிவசத்தி" என்பது உணர்த்துதற்கு. "நீலநிறமுடை நேரிழையாள்" என்றார்.* ஆறாந்

719. அண்டஞ் சுருங்கில் அதற்கோ ரழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள
கண்டங் கறுத்த கபாலியு மாமே. 12

---

*தானமாகிய ஆஞ்ஞை விந்துத்தானமாகலின், அதற்கு மேலுள்ள உச்சி சத்தித்தானமாம். சத்தி அருவ நிலையது ஆகலானும், அதில் அருவுருவ நிலையாகிய ஆஞ்ஞையினும் மிக விளக்கமாகத் திருவருள் விளங்கு மாகலானும் அதனையே, "நீல நிறமுடை நேரிழையாளொடும் சாலவும் புல்லி" என்றார். "பாலனும் ஆவர்" என்ற உம்மை, இறந்தது தழுவிய எச்சம். "ஆவர்" என்றது, "ஆதலை மிகப் பெறுவர்" என்றவாறு. பராநந்தி - பரானந்தத்தை எய்தியவர், பரானந்தம் - மேலாய இன்பம்; சிவானந்தம்.*

*இதனால், 'காய சித்தி பெற்றோன் அதனாலாம் பயனை மிகப் பெறுவானாயின், அதனானே, காய சித்திப் பயனும் மிகும்' என்பது கூறப்பட்டது.*

***719. தெளிவுரை :-** உணவுக் குறைவால் முகத்தில் தசை ஒட்டிக் கண்குழியுமாயினும், அதனால், உடலுக்கு அழிவு வந்து விடாது. மாறாக, உடம்பு இளைத்தால் பிராணவாயு வசப்பட்டு காயசித்தி கைகூடும். ஆகவே, உணவு குறையின், உயிர், நலம் பெறுதற்குரிய வழிகள் பலவும் அமையும். அதனால், உண்டி சுருக்கியவன், இறவாமையாலும், இன்ப நிறைவாலும் சிவனோடொத்து நிற்பான்.*

***குறிப்புரை :-** "அண்டம்" என்றது தலையை. "அண்டம், பிண்டம்" என்னும் நயம்பற்றி இவ்வாறு ஓதினார். வருகின்ற திருமந்திரத்துள்ளும் ''அண்டற்றுள் உற்று'' என்பார். மகளிர் இன்பத்தை விரும்பு வோருள்ளும், அதனைக் கை விடின் உடல் கெடும்' என்று அஞ்சுவார் இல்லை. ஆகவே, 'அவ்வின்பம் குறையின் உடற்கு அழிவில்லை' என விலக்குதல் வேண்டாமையின், அப்பொருள் பட ஈண்டு நலிந்துரைத்தல் வேண்டாமை அறிக. 'உள' என்பதன்பின், 'ஆம்' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால், "காய சித்தியும், உயிர் நலமும் வேண்டுவோர் உண்டி சுருக்கல் இன்றியமையாதது" என்பது கூறப்பட்டது.*

***720. தெளிவுரை :-** உடலில் பொருந்தியுள்ள, தவ ஒழுக்கத்திற்கு*

720. பிண்டத்துள் உற்ற பிழைக்கடை வாசலை
அண்டத்துள் உற்ற தடுத்தடைத் தேவிடின்
வண்டிச்சிக் கும்மம் மலர்க்குழல் மாதரார்
கண்டிச்சிக் கும்மந்நற் காயமு மாமே. 13

---

*இழுக்குத் தருகின்ற கடைப்பட்ட வழியை, உச்சியில் விளங்குவதாகிய திருவருளைத் தலைப்படுமாற்றால் அடைத்தே விடின், உடம்பு, மகளிர் கண்ட உடன் விரும்பத்தக்க அழகைப் பெற்று விளங்கும் பயனையும் அடையலாகும்.*

***குறிப்புரை :-*** *"புழைக்கடை" என்பது திரிந்து வழங்கும் இழிவழக் கோடு ஒத்துத் தோன்ற, "பிழைக் கடை" என நயம்பட ஓதினார். பிழை - குற்றம். எனவே, இஃது உண்மையில் புணர்ச்சி தவிர்தல் கூறியதேயாம். திருவருள் உணர்வும், சிவானந்தப் பேறும் உடையவர்க்கன்றி புணர்ச்சி தவிர்தல் இயல்பாக உண்டாகாது. ஆயினும், யோக முயற்சியால் தவிர்தல் கூடும்; அம்முயற்சி இது என்பதனை இதனுள் நாயனார் உணர்த்தியருளினார். ''பிழைக்கடை" என்பதன் உட்பொருளை உணராமல் வெளிப்பொருளே பற்றி, "எருவாய்" எனப் பலரும் உரைத்தார். அப்பொருள் மேலே பலவிடத்தும் பெறப்பட்டது. நன்மை - அழகு. உம்மை, 'மேற்கூறியவையேயன்றி' என இறந்தது தழுவிற்று. "நற்காயமும் ஆம்" என்றாராயினும், 'காயம் நல்லது மாம்' என்றலே கருத்தாதல் அறிக. மகளிரை விரும்ப விரும்ப அவரால் வெறுக்கப்படும் நிலையும், அவரை விரும்பாது ஒழிய ஒழிய அவரால் விரும்பப்படும் நிலையும் உளவாகின்ற வியப்பினைக் குறித்தற்குப் பின்னிரண்டடிகளை அவ்வாறு ஓதினார். அண்டம் என்றது விதை; ஆண்குறி; கருவியாகு பெயர் அது சுருங்குதலாவது புணர்ச்சி காலத்துப் போலச் சேட்டியாது அடங்கியிருத்தல்; அதாவது புணர்சி தவிர்த்தல் என்பதாம். அதற்கு என்ற சுட்டு உடலை உணர்த்தி நின்றது. பிண்டம் - உடல். அது சுருங்குதலாவது விரதங்களானும் தவத்தானும் நுணுகி இறுகி வலியுடையதாதல் உண்டி சுருங்குதலான் விளையும் பயன் பலவாதலின் உபாயம் பலவுள என்றருளினார், உணவு சுருங்கத் தவம் பெருகும்; தவம் பெருக உயிர் நிலைபெறும்; உடல் சுருங்கும், அது சுருங்கக் காமம் இல்லையாம்; அஃதின்றாகவே அழிவே இல்லையாம். அப்போது விடமுண்டும் சாவாத காமாரியாக விளங்குவன் என்பதாம்.*

*இதனால், காய சித்திக்கு வேண்டப்படுவதாய மற்றும் ஓர் உபாயம் கூறப்பட்டது.*

721. சுழலும் பெருங்கூற்றுத் தொல்லைமுன் சீறி
அழலும் இரதத்துள் அங்கியுள் ஈசன்
கழல்கொள் திருவடி காண்குறில் ஆங்கே
நிழலுளுந் தெற்றுளும் நிற்றலும் மாமே. 14

---

*721. **தெளிவுரை :-** சிவபெருமான், எவ்வுயிரையும் அதன் உடலின்றும் பிரித்துக் கொண்டுபோதற்குச் சுற்றிக் கொண்டிருக்கின்ற கூற்றுவனைத் தொன்றுதொட்டே சினந்து, முக்கோண வடிவான மூலாதாரத்தில் உள்ள அக்கினியில் காய்ந்து கொண்டிருக்கின்றான்; ஆகையால், அவ்விடத்தில் அவனது கழல் அணிந்த திருவடியைக் காணப்பெற்றால், பின்னர் நிழலில் நிற்பினும், வெயிலில் நிற்பினும் ஒன்றே அஃதாவது, அவற்றால் வரும் கேடு ஒன்றுமில்லையாம்.*

***குறிப்புரை :-*** *"ஈசன்; இரதத்துள் அங்கியுள் சீறி அழலும்" என மாறிக் கூட்டுக. 'கூற்றுச் சீறி' என இரண்டாவதன் தொகையாய் இயையும், "முன்" என்பது, 'முதலாக' எனப்பொருள் தந்தது, 'தொன்மை' என்றது, உடம்பு தோன்றிய காலத்தை. முக்கோண வடிவை 'இரதம் - தேர்' என்றார். இறைவன் உயிர்களின் உடம்பில் மூலாதாரத்தில் அக்கினியையும், அவ்வக்கினியுள் உடலை நிலைப்பிக்கின்ற ஆற்றலையும் படைத்து, அவற்றை நீங்காது நிறுத்தித் தானும் உடன் நிற்றலானும், அவற்றை அறிந்து, அவ்வக்கினியை எழுப்பி அவ்விடத்தில் அவனைத் தியானிப்பவர், காய சித்தியைப் பெறுவர் ஆகலானும் இவ்வாறு கூறினார். கூறவே, மேற்கூறியவாறு பிராணனையும், அபானனையும் மூலாதாரத்தினின்றும் மேல் எழச் செய்யுங்கால் முதல்வனது திருவருளை நினைந்து செய்தல் வேண்டும் என்பது பெறப்பட்டது. 'திருவருளை நினைந்து செய்யும் முயற்சியே வெற்றி பயக்குமல்லது, அதனை மறந்து செய்யும் முயற்சி ஒன்றொழிய ஒன்றாகும்' என்பது கருத்து.*

*இதனால் 'காய சித்தி உபாயத்தை இறையருள் வழி நின்று' செய்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது. இவ்வாறன்றி, 'உபாயந் தானே காய சித்தியைப் பயந்துவிடும்' என மயங்குவர் பவ யோகிகள் என்க.*

*722. **தெளிவுரை :-** ஈசன் இருத்தலை மேல் நான் தெரிந்து சொல்லிய மூலாக்கினி, 'அகார கலை, உகார கலை, மகார கலை, விந்து கலை என்னும் நான்கு கலைகள், மூலாதாரம் முதல் பிரமரந்திரம் ஈறாக உள்ள ஏழு ஆதாரங்களைப் பொருந்திய பிராண வாயு, உடம்பு*

722. நான்கண்ட வன்னியும் நாலு கலையேழுந்
தான்கண்ட வாயுச் சரீர முழுதொடும்
ஊன்கண்டு கொண்ட உணர்வு மருந்தாக
மான்கன்று நின்று வளர்கின்ற வாறே. 15

723. ஆகுஞ் சனவேத சத்தியை அன்புற
நீகொள்ளின் நெல்லின் வளர்கின்ற நேர்மையைப்
பாகு படுத்திப்பல் கோடி களத்தினால்
ஊழ்கொண்ட மந்திரந் தன்னால் ஒடுங்கே. 16

---

*முழுதும் உள்ள ஊன் ஆகிய இவைகளையே தன் பசிப் பிணிக்கு மருந்தாக உண்டு, ஒரு மான் கன்று வளர்கின்றவாறு வியப்புடைத்து!.*

*குறிப்புரை :- 'மான், மகான்' என்பதன் திரிபு. மகான் - பெரியோன்; சிவன். 'மகான்' என்பதை மான் திரித்து அதற்கேற்ப, சிவனது மக்களாகிய உயிர்களை, 'கன்றாக' உருவகித்து, 'புல்லை உண்ணுதலால் 'புல்வாய்' எனப் பெயர் பெற்ற மான் ஒன்று, புல்லை உண்டு வளராமல், நெருப்பு, நிலாவொளி, காற்று, ஊன் என்பவற்றை உண்டு வளர்தல் வியப்பாகின்றது' என நயம்படக் கூறினார். எனவே, மேலை மந்திரத்துட் கூறியவாறு மூலாக்கினியை எழுப்புதல் முதலிய யோகமுயற்சியால் வாழ்நாள் நீட்டித்தல் கூறியவாறாயிற்று. புல்லாவது, ஐம்புல இன்பம்.*

*இதனால், காயசித்தி உபாயங்களால் அப் பயன் வியக்கத்தக்க வகையில் உளதாதல் கூறப்பட்டது.*

723. தெளிவுரை :- *மேன்மேல் வளரத்தக்கதாகிய காய சித்தி ஆற்றலைப் பெற நீ விரும்புவையாயின், அச்சத்தி ஒவ்வொரு நெல்லின் அளவாக மெல்ல மெல்ல வளர்கின்ற நுட்பத்தை உடலில் அளவற்ற இடங்களில் பாகுபடுத்திக் கண்டு, அவ்விடங்களில் எல்லாம், மேற்பலவகையாலும் முறைப்படச் சொல்லிய மந்திரங்களின்வழி அதனுள் ஒடுங்குவாயாக.*

*குறிப்புரை :- 'சனனம்' என்பது இடைக்குறைந்து நின்றது. 'சனனம்' என்றது காயத்தை இவ்வாறன்றி, 'ஆகுஞ்சன இருக்கை' எனவும் உரைப்பர். வேத சத்தி, உடம்பின் நிலையாமையைமாற்றி நெடிது வாழச் செய்கின்ற ஆற்றல். 'அன்புறக் கொள்ளின்' என்பதை, 'கொள்ள அன்புறின்' என மாற்றிக் கொள்க. தினை, எள், கடுகு*

முதலியன போல, சிறுமைக்குக் காட்டப்படுவனவற்றுள் நெல்லும் ஒன்றென்க. நெல்லின் - நெல்லின் அளவாக. இனி, 'நெல் - நெற்பயிர்' எனக் கொண்டு, 'நீர் கொளு நெல்லின்' எனவும் பாடம் ஓதுப. "களத்தினால்" என்றது வேற்றுமை மயக்கம்.

இதனால், காய சித்தி உபாயங்கள் மேற் சில வகையால் தொகுத்துணர்த்தப்பட்டதாயினும், உண்மையில் அது பரந்து கிடப்பது என்பது உணர்த்தி, 'அவற்றை அறிந்து அனுபவமாகச் செய்க' என முடித்துக் கூறப்பட்டது.

## 14. கால சக்கரம்

724. மதிவட்ட மாக வரையைந்தும் நாடி
இதுவிட்டிங் கீரா றமர்ந்த அதனால்
பதிவட்டத் துள்நின்று பாலிக்கு மாறும்
அதுவிட்டுப் போமாறும் ஆயலுற் றேனே. 1

---

*இது முதல் முப்பது திருமந்திரங்களால் ''கால சக்கரம்'' உணர்த்துகின்றார். ''சக்கரம்'' என்றது, 'சுழற்சி' என்றவாறு. காய சித்தியாவது காலத்தைக் கடத்தலேயாகலின், காலத்தது இயல்பு கூறும் இவ்வதிகாரம் 'காயசித்தி உபாயம்' கூறிய மேலையதிகாரத்தோடு இயைபுடைத்தாதல் அறிக. காலம் என்பது அருவாய் கருவிகளாக உண்ணப்படும் சூரிய சந்திர உடுக்களை இயக்கும் வல்லமையாய் அவற்றைக் கொண்டு நாம் காலமாகிய தன்னை அறிவித்துக் கொள்வதாய், இறப்பு எதிர்வு நிகழ்வென்ற முப்பகுதித்தாய் இருப்பது. வித்தியாதத்துவங்கள் ஏழனுள் இரண்டாவதாக வைத்து எண்ணப்படுவது. சுத்த மாயையின் காரியமாவது. இது, சக்கரம் போல முடிவின்றி மாறி மாறி வருவதாகலின் காலச்சக்கரம் எனப்பட்டது, காலத்தை வெல்லுங் கணக்கறிவானாகிய சிவயோகி அதனியல்பை உணர்ந்தாலன்றி அதனை வெல்ல வொண்ணாதாகலின் அதனை உணர்த்த எடுத்துக்கொண்டார் ஆசிரியர். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.*

*இவ்வதிகாரமும் அடுத்துவரும் அதிகாரமும் அந்தாதியாய்ச் செல்ல, முடிவு, மண்டலித்தலாய் உள்ளது.*

724. ***தெளிவுரை :-*** ***திங்களினது சுற்றாக வரையறுக்கப்படுகின்ற ஐந்து பகுதிகளையும் முன்னே ஆராய்ந்து, பின்பு அதனை விடுத்து, ஞாயிறு பன்னிரண்டும் பொருந்திய அக் கூற்றினால் இறைவன் கால சக்கரத்துள் நின்று உடலைக் காக்கின்ற வகையையும், பின்பு அங்ஙனம் காக்கப்படுகின்ற உடலை விட்டு உயிர் போகின்ற வகையையும் இங்கு ஆராயத் தொடங்கினேன்.***

***குறிப்புரை :-*** ***சந்திரன் பன்னிரண்டு இராசிகளையும் ஒருமுறை சுற்றிவருகின்ற வட்டத்தில் ஓர் அரை வட்டம் - ஆறு இராசி அளவு - வளர் பிறையாயும், மற்றோர் அரை வட்டம் - ஆறு இராசியளவு தேய்பிறையாயும் தோன்றும். சூரியனும், சந்திரனும் ஒன்று***

*சேர்ந்திருக்கும் நாளே அமாவாசியை. அப்பொழுது சந்திரன் சூரிய ஒளியில் மறைந்து விடுவதால் காணப்படுதல் இல்லை. சூரியனை விட்டு விலகிச் செல்லச் செல்லச் சந்திரனது ஒளி சிறிது சிறிதாக மிகுந்து காணப்படும். இந்நிலையில் சந்திரன் சூரியனுக்கு முன்னே செல்வதாய் இருக்கும். அதனால், அந்நிலை 'முற்பக்கம்' (பூர்வ பட்சம்) எனப்படும். இது சந்திரனது வெள்ளொளி மிகுந்துவரும் காலம் ஆதலின், 'சுக்கில பட்சம்' என்றும் சொல்லப்படுகின்றது. சுக்கிலம் - வெண்மை. சந்திரன் சூரியனுக்கு ஆறாவது இராசியில் நிற்கும்பொழுதே முழு நிலவாய்க் காட்சியளிக்கும். அதுவே பூரணை (பௌர்ணிமை)யாகும். பின்பு சந்திரன் சூரியனுக்கு ஏழாவது இராசி முதலாக வரும்பொழுது சூரியனை நெருங்குவதால், அதன் ஒளி மறையத் தொடங்கும். அந்நிலையில் சந்திரன் சூரியனுக்குப் பின் செல்வதாய் இருக்கும். அதனால், அந்நிலை 'பிற்பகல்' (அமர பட்சம்) எனப்படுகின்றது. ஒளி குறைய இருள் மிகுவதால் இந்நிலை 'கிருஷ்ண பட்சம்' என்றும் சொல்லப்படுகின்றது. கிருஷ்ணம் - கருப்பு. இந்த அரைவட்டம் ஒவ்வொன்றும் சூரியனது நாட்கணக்கில் ஏறக்குறையப் பதினைந்தாக அமைவதால், அப்பதினைந்திலும் உள்ள சந்திரனது நிலைகள் ஒன்று, இரண்டு என்று முறையாக எண்ணப்பட்டு, 'பிரதிமை, துவிதியை' முதலிய பதினைந்து திதிகளாச் சொல்லப்படுகின்றன. ஒவ்வொரு கூற்றிலும் உள்ள ஐந்து திதிகள் நந்தை, பத்திரை, சயை, இரித்தை, பூரணை எனப் பெயர் பெறும். இவ்வைந்தையும் நன்கு உணர்வதே சந்திரகதியை நுண்ணிதாக அறிவது ஆதலின், "மதி வட்டமாகவரை ஐந்தும் நாடி" என்றார். "வரை ஐந்து" வினைத்தொகை. சந்திர கதியை முன்னே ஆராய்தல். அதுவே நிலவுலகின் உயிர்களது வினை நுகர்ச்சிக்குச் சிறந்த காரணமாதல் பற்றியாம். இதுபற்றியே திதியும், நட்சத்திரமும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. முன்னர் "மதி" என்றதனாலும், 'சூரியர் பன்னிருவர்' என்பது பயின்ற வழக்கு ஆதலாலும், வாளா, "ஈராறு" என்றே போயினார். பின் வந்த 'வட்டம்' கால சக்கரம் என்பது முன்னிரண்டடிகளாலும் விளங்கிக் கிடந்தது. காலம் இறைவனது ஆணைவழி நின்றே உலகத்தைத் தொழிற்படுத்தும் என்பது உணர்த்துதற்கு, 'காலம், பாலிக்குமாறு' என்னாது "பதி வட்டத்துள் நின்று பாலிக்குமாறு" என, இறைவனது செயலாகவே ஓதினார்.*

*"காலமும் கடவு ளேவ லால்துணைக் கார ணங்காண்"*

*என்பது சிவஞான சித்தி (சூ. 1-10).*

725. உற்றறி வைந்தும் உணர்ந்தறி வாறேழும்
கற்றறி வெட்டும் கலந்தறி வொன்பதும்
பற்றிய பத்தும் பலவகை நாழிகை
அற்ற தறியா தழிகின்ற வாறே. 2

726. அழிகின்ற ஆண்டவை ஐயைஞ்சு மூன்று
மொழிகின்ற முப்பத்து மூன்றெனப் தாகும்
கழிகின்ற கால்அறு பத்திரண் டெண்ப
தெழுகின்ற ஈரைம்ப தெண்ணல் திருந்தே. 3

---

*இதனால், 'இவ்வதிகாரம் நுதலிய பொருள் இது' என்பது கூறப்பட்டது.*

725. ***தெளிவுரை :-*** *உடற் கூற்றால் ஐம்புலன்களை ஐம்பொறிகள் பொருந்திப் பொதுவாக அறிகின்ற ஐந்தினாலும், பொறிகள் பொதுவாக அறிந்தவற்றை மனம் முதலிய உட்கருவினைப் பற்றி நின்று சிறப்பாக அறிகின்ற நிலையில் அந்த ஆறினாலும், மனம் சிறப்பாக அறிபவற்றில் உயிர் அழுந்தி நிற்கும் நிலையில் அந்த ஏழினாலும், உயிர்க்கு உறுதி தேட எண்ணி நூல்களைக் கற்கும் நிலையில் அந்த எட்டினாலும் கற்றவற்றை அநுபவமாக உணரும் நிலையில் அந்த ஒன்பதினாலும், அநுபவமாக உணர்ந்த நூற்பொருளைக் கடைப்பிடிக்கும் நிலையில் அந்தப் பத்தினாலும் இவ்வாறு பலவகைத் தொழிலால் உடலிற்கு அளந்த நாழிகை, கழிந்தது தெரியாமல் கழிந்து போவது இரங்கத்தக்கது.*

***குறிப்புரை :-*** *புலனுணர்வில், ஒரு காலத்திலே ஒரு பொருளின்கண் ஐம்புலன்களையும் உணர்தல் சிறந்ததாகலின், காலக் கழிவை ஐந்தின் மேல் வைத்தே கூறினார். 'ஒரு காலம்' என்றல் விரைவு பற்றியாதலின், "ஐந்து" என்றது மலைவாகாமை அறிக. "ஐந்து" முதலியவற்றில் ஆன் உருபு விரிக்க. 'இப்பலவகை' என்னாது, "பல வகை" என்றே கூறினமையால், 'இவ்வாறு பலவகையால்' என்பதே பொருளாயிற்று. ஆகவே, ஒன்றனையும் அறியாது அறியாமையுள் அழுந்துதலாலும் காலம் கழிதல் பெறப்படும்.*

*இதனால் உடலிற்கு அளந்த காலம் ஒழிவின்ற உருண்டோடு கின்றமையும், அவ்வோட்டந்தான் பல்வேறு வகையினதாதலும் கூறப்பட்டன.*

726. ***தெளிவுரை :-*** *உலகர்க்குப் பதின்மூன்றாண்டுகள் பயனின்றி*

727. திருந்து தினமத் தினத்தி னொடுநின்
றிருந்தறி நாளொன் றிரண்டிரு மூன்று
பொருந்திய நாளொடு புக்கறிந் தோங்கி
வருந்துத லின்றி மனைபுக லாமே. 4

---

*இறக்கும் எல்லையாகவும், முப்பத்து மூன்று ஆண்டுகள், பலரும் இரங்கிப்பேச இறக்கும் எல்லையாகவும், அறுபத்திரண்டாண்டுகள் பயன்பெற்று இறக்கும் எல்லையாகவும் எண்பது ஆண்டுகளும், நூறாண்டுகளும் நிறைந்து முற்றிய எல்லையாகவும் கணக்கிடப்படுதல் கால சக்கரத்தின் முறையாகும்.*

***குறிப்புரை :-*** *எல்லையே கூறினமையால், அவற்றுக்கு உட்பட்ட ஆண்டுகளும் அத்தகையனவாதல் தெளிவு. திருந்து - முதனிலைத் தொழிற்பெயர். இஃது அதனையுடைய முறைமையைக் குறித்தது.*

*இதனால், கால சக்கரம் அனைவரிடத்தும் ஒருவகையாற் சுழலாது பல்வேறு வகையால் சுழன்று செல்லுதல் கூறப்பட்டது.*

**727. *தெளிவுரை :-*** *பிறந்த நட்சத்திரமும், அதனோடு "இரண்டு, நான்கு, ஆறு" என்பவற்றைக் கூட்ட வருகின்ற "மூன்று, ஐந்து, ஏழு" என்னும் எண்ணுமுறைக்கண் வருகின்ற நட்சத்திரங்களும் ஒழித்து மற்றைய நட்சத்தரங்களிலே, இல்வாழ்க்கைக்குரிய யாதொரு செயலையும் தொடங்குதல் பொருந்தும்.*

***குறிப்புரை :-*** *பொருந்துதல், அச்செயல் பற்றி நிகழும் நாள்கள் பலவும் பயன் தரும் நாளாதற்கு ஏதுவாதல். எனவே, விலக்கப்பட்ட நட்சத்திரங்களில் தொடங்கினால் அந்நாள் வீணாகக் கழியும் என்க. இதனானே, யோகியர் யோகம் தொடங்குவதற்கு உரியநாளும் இங்கு "ஆம்" எனப்பட்ட அவையே என்பதும் கூறியவாறாம். ஒன்று - கூடுகின்ற. "இருமூன்று" என்பதில் "இரு" என்பது முன்னும் சென்று இயையும். அதற்கேற்ப "இரண்டு" என்பதும் இருமுறை ஓதப்படும். "எட்டு மூன்று" என்பது பாடம் அன்று. ஒருவன் பிறந்த நட்சத்திரம் முதலாக இருபத்தேழு நட்சத்திரங்களையும் ஒன்பது ஒரு கூறுபடுத்து மூன்று கூறாக வகுக்க. மூன்று கூற்றிலும் முதலில் உள்ள நட்சத்திரங்கள் முறையே ''சென்ம நட்சத்திரம், அனுசென்ம நட்சத்திரம், திரிசென்ம நட்சத்திரம்" எனப்படும். அவை மூன்றும் ஆகா என்பது வெளிப்படை மற்றும் அம்மூன்று கூறுகளிலும், 'மூன்று ஐந்து ஏழு' என்னும் எண்ணுமுறைமைக்கண் நிற்கும் நட்சத்திரங்களும் ஆகா என்பதும், ''இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, ஒன்பது'' என்னும்*

**728.** மனைபுகு வீரும் மனத்திடை நாடில்
எனைஇரு பத்தஞ்சும் ஈரா றதனால்
தனையறிந் தேறட்டுத் தற்குறி யாறு
வினையறி யாறு விளங்கிய நாலே. 5

---

*எண்ணுமுறைமைக்கண் நின்ற நட்சத்திரங்கள் ஆகும் என்பதும் இங்குக் கூறப்பட்டன. நட்சத்திரங்களை இவ்வாறு அறிதலை, 'தாரா பலன் பார்த்தல்' எனச் சோதிட நூல்கள் கூறும். அதனை வாழ்நாள் பற்றிய ஆராய்ச்சியில் இங்கு நாயனார் கூறினார் என்க. 'மனை' என்றது மனைவாழ்க்கைக்குரிய செயலைக் குறித்த ஆகுபெயர்.*

*இதனால், கால சக்கரத்துள் நன்மை தரும் பகுதிகள் சில கூறப்பட்டன.*

728. ***தெளிவுரை :-*** *ஞாயிற்றின் வட்டத்துள், 'முப்பது நாள் ஒரு கூறாகப் பன்னிரண்டு கூறு கூடியது ஒருவட்டம்' என்று அறிந்து அவ்வட்டம் சிலபோது, பன்னிரண்டு கூறும் கூட வருகின்ற முந்நூற்றறுபது நாள்களுக்கு மேல் ஆறு நாளும், சில போது நான்கு நாளும் கூடி நிற்றலையும் உங்கள் மனத்தில் நன்கு ஆராய்ந்து மேற்சொல்லிய செயல்களில் புகுவீராக.*

***குறிப்புரை :-*** *'நாள்' என்பது, 'ஞாயிறு தோன்றி மறைந்து மீளத் தோன்றுமளவும் உள்ள காலம்' என்பதும், அக்காலத்துள் ஞாயிறு காணப்பட்டு நிற்பது, 'பகல்' என்றும், காணப்படாது நிற்பது 'இரவு' என்றும் சொல்லப்படுதலும் யாவரும் அறிந்தவை, அவ்வளவான நாள் முப்பது கூடியது, ஞாயிற்றின் பகுதி வட்டம். இதனை, மேடம் முதலிய ராசிகளின் தொடர்பு பற்றி, 'மேடரவி, இடபரவி' முதலாக வழக்குவர், எனினும், இப்பகுதிகளில் சந்திரன் முழுநிலவாய்த் தோன்றும் நட்சத்திரத்தை ஒட்டி, இவற்றை, சித்திரைத்திங்கள் வைகாசித் திங்கள் முதலாக வழங்குதலே பெரும்பான்மை. இவ்வாற்றால், ஞாயிற்றின் வட்டப் பகுதியும் வேறே. ஞாயிற்றின் வட்டப்பகுதி பெரும்பான்மை என்றும் ஒருபடித்தாய் நிகழும். திங்களின் வட்டப்பகுதி அவ்வப்பொழுது வேறுபடும். ஞாயிற்றின் வட்டப்பகுதி ஒருபடித்தாய் நிகழ்தலின், அதனை உலகியல் நடைமுறைக்கும், திங்களினது வட்டப் பகுதியால் உலகின் விளைவுகள் வேறுபடுதலின் அதனை நோன்புகள் முதலியவற்றிற்கும் வகுத்தனர் முன்னோர். கோள்களின் நிலைகளால் உலகில் விளைவுகள் வேறுபடுதலை, நாவுக்கரசர், ஞானசம்பந்தர் பாண்டியநாடு செல்ல நினைத்தபொழுது, 'நாளும் கோளும் வளியில' எனக் கூறியருளினமையாலும், அதுபொழுது ஞானசம்பந்தர், 'அவை*

*அன்ன வாயினும் சிவனடி யாரை வாதியாது, நல்லனவாம்' என்பதை வலியுறுத்தித் திருப்பதிகம் அருளிச்செய்தமையானும், பின்னும் அவர் (ஞானசம்பந்தர்) புனல் வாதத்திற்கு அருளிச்செய்த திருப்பாசுரத் திருப்பதிகத்துள்,*

> *"கோட்பா லனவும் வினையுங் குறுகாமை எந்தை*
> *தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்க"*

*என்று அருளிச் செய்தமையானும் அறியலாம்.*

*"மகத்திடை நாடி" என்பது பாடம் அன்று. பத்து அஞ்சு - பதினைந்து. இரு பதினைந்து - முப்பது. "எனை முப்பதும்" என்றது எந்த ஒரு முப்பதுநாள் கூடிய பகுதியும் ஞாயிற்றின் வட்டத்தில் பன்னிரண்டில் ஒருகூறாய் நிற்கும் என்றவாறு. இக் கூறு 'மாதம்' எனவும், இம் மாதம் பன்னிரண்டு கூடிய ஒரு வட்டம் 'யாண்டு அல்லது வருடம்' எனவும்படும். ஞாயிற்றின் ஒரு வட்டத்தில் முந்நூற்றறுபது நாள்களுக்கு மேலும் சில நாள் கூடுதல், சில மாதங்கள் முப்பதுக்கு மேலும் சில நாள்களைப் பெறுதலினாலாம். சில மாதங்கள் முப்பது நாளிற் குறைதலும் உண்டு. இவை எல்லாம் சூரியன் அந்த அந்த இராசியோடு தொடர்புகொண்டு நிற்கும் நிலையைப் பற்றியன. சில யாண்டுகளில் ஆறு நாளும், சில யாண்டுகளில் நான்கு நாளும் கூடுதலை, 'யாண்டொன்றுக்கு முந்நூற்றறுபத்தைந்து நாள்' என்று அமைத்துப் போவர். இவற்றையெல்லாம் அவ்வப்பொழுது அறுதியிட்டுக் கூறுவர் அறிந்தோர். இவர் 'கணிவர்' எனப்படுவர். "தனை" என்றதும், "தற் குறி" என்றதும் முறையே, ஞாயிற்றின் முழு வட்டத்தையும், அதன் பகுதியாய நாளினையுமாம். 'ஏற அட்டும்' என்பது குறைந்து நின்றது. ஏற அட்டுதல் - கூடச் சேர்த்தல். வினை அறி ஆறு - ஞாயிற்றின் செலவை அறியும் வழி. 'எனை முப்பதும் ஈராறு என்னும் அடுக்காகக் கூட்டி ஞாயிற்றின் முழு வட்டத்தின் அளவை உணர்ந்து, தற்குறி ஆறு, விளங்கிய நால் இவற்றையும் உம் மனத்திடை நாடி மனை புகுவீர்' என முடிக்க. முப்பது முதலியன, அவ்வளவினவாகிய நாள்களைக் குறித்தன.*

*இதனால், கால சக்கரத்தின் பெரும்பான்மை இயல்பு இனிது விளங்கக் கூறப்பட்டது. 'சிறுபான்மை இயல்புகளைக் கணி நூல்களில் கண்டுகொள்க' என்பது கருத்து.*

**729. தெளிவுரை :- ஒருவன் பிறந்து நான்கு ஆண்டுகளைக் கடந்தானாயின், பின்னும் நான்கு நான்கு ஆண்டாக இருமுறை கடத்தல் வேண்டும். இனி, ஐந்து ஆண்டுகளைக் கடந்தானாயின்,**

**729.** நாலுங் கடந்தது நால்வரும் நால்ஐந்தும்
பாலங் கடந்தது பத்துப் பதினைந்து
கோலங் கடந்த குணத்தாண்டு மூவிரண்
டாலங் கடந்ததொன் றாரறி வாரே. **6**

---

*அப்பால் பின்னும் பத்து, பதினைந்து என்னும் ஆண்டுகளைக் கடத்தல் வேண்டும். எனவே, நான்கு, ஐந்து, எட்டு, பத்து, பன்னிரண்டு, பதினைந்து என்னும் ஆண்டுகள் வாழ்நாள் இடையறும் காலமாகும் என்பது அறியப்படும். பதினைந்து யாண்டு வரையில் ஒருவன் யோகத்தைத் தொடங்க இயலாது. ஆகவே, அதுகாறும் வாழ்நாளை நீட்டித்துக்கொள்ளுதலும் இயலாது. அதனால், இவ்வாறு, பிறந்து, ஆண்டுகள் பலவாக வளர்கின்ற உடம்பினை, உடம்பினை உடையதாகாத தன்மையுடைய ஒரு பொருளால் அருள்புரியப்பட்டு மேற்சொல்லிய ஆறு இடையறவுகளையும் (கண்டங்களையும்) கடந்த ஓர் அருமையை அறிகின்றவர் உலகில் யார் உளர்!*

***குறிப்புரை :-*** *"அறிவாராயின், பதினாறாவது வயது முதலாகவே அப்பொருளை அடைதற்கு யோகம் முயல்வர். அதனால், காலத்தைக் கடந்து, என்றும் பதினாறாண்டாகவே இருக்கும் பயனையும் பெறுவர்" என்பதாம். மார்க்கண்டேயரது வரலாறு இங்கு நினைவு கூரத்தக்கது.*

*நான்கு முதலியன, அவ்வளவினவான ஆண்டுகளைக் குறித்தன. ''கடந்தது'' இரண்டும், ''கடந்ததேல்'' என்னும் பொருளதாகிய முற்றெச்சங்கள். 'வரும்' என்றது, 'கடத்தற்கு அரிதாய் வரும்' என்றவாறு. இதனைப் பின் வந்த, 'நால், பத்து, பதினைந்து' என்பவற்றோடும் கூட்டுக. பாலனாம்தன்மை தமிழில், "பாலம்" என நின்றது. குணம் உடையதனை, குணமாகக் கூறினார். இனி, "சிவன்" எனத் தோன்றா எழுவாய் வருவித்து உரைத்தலும் ஆம். ஆண்டு - ஆளப்பட்டு. ஆலம் - நஞ்சு; என்றது நஞ்சு போலும் ஆண்டெல்லைகளை.*

*இதனால், காலசக்கரத்தின் கொடுமையை விதந்து, 'அஃது உணர்ந்து, காலம்பெற, யோகத்தைத் தொடங்குக' என்பது கூறப்பட்டது.*

**730. தெளிவுரை :-** *முதல் ஆறு திங்கட்குத் தனித்தனி நாள்கள் இருபதும், அடுத்த மூன்று திங்கட்குத் தனித்தனி நாள்கள் இருபத்தைந்தும், அடுத்த இரண்டு திங்கட்குத் தனித்தனி நாள்கள் இருபத்தாறும், இறுதி ஒருதிங்கட்கு நாள் இருபத்தேழும் என்று இவ்வாறு இறைவன் யோகத்திற்குரிய திங்களின் நாட்கணக்கை*

730. ஆறும் இருபதுக் கையைஞ்சு மூன்றுக்குந்
தேறு மிரண்டு மிருபத்தொ டாறிவை
கூறு மதியொன் றினுக்கிரு பத்தேழு
வேறு பதிஅங்கண் நாள்விதித் தானே. 7

731. விதித்த இருபத்தெட் டொடு மூன்றறையாகத்
தொகுத்தறி முப்பத்து மூன்று தொகுமின்
பதித்தறி பத்தெட்டும் பாரா திகள்நால்
உதித்தறி மூன்றிரண் டொன்றின் முறையே. 8

---

*உலகியலுக்கு வேறாக வகுத்துள்ளான்.*

***குறிப்புரை :-*** *உலகியலுக்கு வந்துள்ள கணக்கு, மேல், 'மனை புகுவீர்' என்னும் மந்திரத்தும் கூறப்பட்டது. யோகத்தைத் தொடங்குவோர் இத்துணை நாளளவே யோகம் புரிந்து எஞ்சிய நாள்களில் ஓய்வு கொள்ளுதல் வேண்டும் என்பதாம். ஓய்வுகொள்ளும் நாள்கணக்கையும், பகிர்ந்து இடைஇடையே கொள்ளுதல் நலமாகும். ஓய்வுநாள் கணக்கை நாழிகையாகவும் பகுத்துக் கொள்ளலாம். தொடக்கத்தில் ஓய்வு மிகுதியாகவும், போகப்போக ஓய்வு குறைந்தும் நிற்றல் அறியத்தக்கது. இவ்வகையில் ஓராண்டு சென்றபின் மீளத் தொடங்கும் பொழுதும் இக்கணக்கின்படியே செய்தல் வேண்டும் என்க.*

*ஆறுக்கு இருபதும் என உருபையும், உம்மையையும் மாற்றியுரைக்க. ''மதி, நாள்'' என்றவை இறுதி விளக்காய், மேலானவற்றோடும் சென்று இயைந்தன. "நாள்" - "வேறு விதித்தான்" என இயையும். பதி - சிவன். அங்கண் - அவ்விடம். அஃது யோகத்தை ஆராயும் இடம்.*

*இதனால், 'யோகம் புரிதற்குரிய நாள் முறை இத்தன்மையது' என்பது கூறப்பட்டது.*

**731. *தெளிவுரை :-*** *யோகத்தில் நிற்க விரும்புகின்ற நீ! தத்துவங்களைச் சுருக்கி எண்ண வேண்டின், அசுத்த தத்துவங்களில் மூன்று நீங்கலாக ஏனைய இருபத்தெட்டோடு, சுத்த தத்துவம் ஐந்தனையும் அங்ஙனமே கொண்டு, "தத்துவம் முப்பத்து மூன்று" என வைத்துக்கொள். இனி அத்தத்துவங்களில் இந்திரியம் பத்து சூக்கும தேகமாய் உள்ள எட்டு இவைகளையும் நிலம் முதலிய பஞ்ச பூதங்களில் அடங்கி நிற்பனவாகவே பாவித்துக்கொள். இனி நிலம்*

*முதலிய அப் பூதங்கள் ஐந்தும் ஒன்றின்ஒன்று - அஃதாவது, ஐந்தாவது பூதமாகிய நிலம் நான்காவது பூதமாகிய நீரிலும், நான்காவது பூதமாகிய நீர் மூன்றாவது பூதமாகிய தீயிலும் இவ்வாறு முறையே தோன்றின என்பதை உணர்.*

***குறிப்புரை :-*** *நீக்கப்படுகின்ற தத்துவங்கள் "பிரகிருதி, புருடன், மாயை" என்க. என்னை? அவை தனி தத்துவமாதற் சிறப்பில ஆதலின். அறை - அறுக்கப்படுவன; அஃதாவது குறைக்கப்படுவன. "மூன்று அறையாக இருபத்தெட்டொடு" என மாறுக. "இருபத்தெட்டோடு" என்றது, இருபத்தெட்டு உளப்பட என்றவாறு. இருபத்தெட்டு உளப்பட முப்பத்து மூன்று எனவே, சுத்தத் தத்துவங்களில் ஒன்றையும் குறையாது ஐந்தையும் கொள்ளல் வேண்டும் என்பது விளங்கிற்று. "தொகுமின்" என்றது, ஒருமை, பன்மை, மயக்கம் "பத்து எட்டும் பாராதிகளில் பதித்து அறி" என்க. எட்டு; தன்மாத்திரை ஐந்தும், "மனம், அகங்காரம், புத்தி" என்னும் அந்தக் கரணம் மூன்றுமாம். சித்தம் பிரகிருதியாய் ஒழியும். பத்து எட்டுப் பாராதிகளில் அடங்கவே, ஆன்ம தத்துவம் அனைத்தும் பஞ்ச பூதங்கள் அளவாய் நிற்றல் விளங்கும். இக்கருத்துப் பற்றியே, நாம் காணும் உலகம், "பஞ்சபூத பரிணாமம்" என்றே சொல்லப்படுகின்றது.*

*"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்*
*கலந்த மயக்கம் உலக மாதலின்"* - தொல். மரபியல்

*என்றார் தொல்காப்பியனாரும். மற்றும் திருமுறைகளிலும் பிற இடங்களிலும் உலகம் முழுவதும் பஞ்ச பூத பரிணாமம் என்னும் கருத்தே பெரும்பான்மையாகக் காணப்படுதல் தெளிவு. நான்கு முதலியன அவ்வவ் எண்ணுமுறைக்கண் நின்ற பூதங்களை உணர்த்தின. 'உதித்தது' என்னும் தொழிற்பெயர் இடைக்குறைந்து நின்றது. "உதித்தது அறி" என்பதனை இறுதிக்கண் கூட்டி, "அப்பாராதிகள் உதித்தது அறி" என எடுத்துக்கொண்டு முடிக்க. என்னை? ஏனைய எல்லாவற்றையும் பாராதிகளில் அடக்கவே, பின்னர் அறியற்பாலன அப்பாராதிகளே ஆதலின். பூதங்களின் தோற்ற முறையை அறிதலால், அவற்றைக் கடக்குமாறு புலனாகும். "தத்துவங்களை இவ்வாறு அறிக" என்றது, மேற்கூறியவாறு காலத்தை அவற்றிற்கு அதிதேவர்க்கு உரிய பகுதிகளாக வைத்து அவ்வப்பொழுது அவரவரைத் தியானித்து அக்காலங்களால் வாதிக்கப்படாமல் இருத்தற்காம்.*

*இதனால், 'காலத்தை யோகத்திற்கு உரிய வகையில் பகுத்துணர்கின்ற யோகி, அவற்றைக் கடத்தற்குத் தத்துவங்களின் முறைமையையும் உணர்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

732. முறைமுறை யாய்ந்து முயன்றில ராகில்
இறையிறை யார்க்கும் இருக்க அரிது
மறையது காரணம் மற்றொன்று மில்லை
பறையறை யாது பணிந்து முடியே. 9

---

732. ***தெளிவுரை :-*** *யோகம் முயலும்பொழுது இங்குச் சொல்லிய முறைகளை எல்லாம் முறையாக உணர்ந்து முயலாது, அவரவர் தாம் தாம் அறிந்தவாறே முயல்வார்களாயின், ஒருவர்க்கும் காலத்தைச் சிறிது வென்று நிலைபெறுதலும் இயலாது, இம்முறைகளைப் பெரியோர் வெளிப்படச் சொல்லாமல் மறைத்துச் சொல்லுதற்குக் காரணம் வேறொன்றுமில்லை; யோகத்தோடு சிறிதும் இயல்பில்லாதவரும் வாளா வாய்ப்பறை சாற்றிப் பெருமை பேசிக்கொள்ளாமல், விருப்பம் உடையவர்கள் தக்காரை அணுகிப் பணிந்து கேட்டு முயன்று கருத்தை முடிக்க வேண்டும் என்பது ஒன்றுதான் காரணம்.*

***குறிப்புரை :-*** *இறை இரண்டில் முன்னது சிறிது பின்னது தங்குதல்; வாழ்தல். இருத்தல் -உளதாதல். முடி, முதனிலைத் தொழிற்பெயர். அஃது, அதனைக் கருதுதலைக் குறித்தது. இறுதியில், 'காரணம்' என்பது சொல்லெச்சம்.*

*இதனால், 'காலத்தை வெல்லும் முறையைத் தக்கார் வாய்க் கேட்டுணராவழிப் பயனில்லை' என்பது கூறப்பட்டது.*

733. ***தெளிவுரை :-*** *அகல் இனித் தேட வேண்டாது முன்பே கிடைத்திருக்க, விளக்கெரியப் பண்ணி முன்னே இருளை நீக்கிப் பின் அதனானே நெருப்பை, மூண்டு எரியும்படி மூட்ட வல்லவர்க்கு, கால சக்கரம் சுழன்றவழியே சுழன்று செல்லும். இவ்வுலகத்தில் அச் சுழற்சி யுட்படாமல், ஒரு நிலையாய் நிற்றலும் கூடும். இம் முறையால் பலருக்கு விளைந்த பயனை, வேறு வழியில் முயலும் மடவோர் அறியமாட்டார்.*

***குறிப்புரை :-*** *முதலடியை இறுதியிற் கூட்டி உரைக்க. இடிஞ்சில் - மூலாதாரம், விளக்கு, அவ்விடத்துள்ள அக்கினி. 'எரியக்கொண்டு' என்பது குறைந்து நின்றது. கடிதலுக்கு 'இருள்' என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இருள், குண்டலியின் உறக்கம். அனல் மூளுதல், மூலாக்கினி எழுந்து உச்சியளவும் செல்லுதல். வேறுவழி, சில பச்சிலை போன்ற மருந்துகளை உண்டலும், பிறவுமாம்.*

*இதனால், யோகநெறியே காலத்தை வெல்லுதற்கு உபாயமாதல் கூறப்பட்டது.*

733. முடிந்த தறியார் முயல்கின்ற மூர்க்கர்
இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டு
கடிந்தனல் மூளக் கதுவவல் லார்க்கு
நடந்திடும் பாரினால் நண்ணலு மாமே. 10

734. நண்ணும் சிறுவிரல் நாணாக மூன்றுக்கும்
பின்னிய மார்பிடைப் பேராமல் ஒத்திடும்
சென்னியில் மூன்றுக்குஞ் சேரவே நின்றிடும்
உன்னி உணர்ந்திடும் ஓவியந் தானே. 11

---

*கூற்றங் குதித்தலும் கைகூடும் நோற்றலின்*
*ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. - குறள், 269*

*என்புழித் திருவள்ளுவர், "நோற்றல்" என்றது பெரும்பான்மையும் இவ்யோக முயற்சியையே என்க.*

*734. **தெளிவுரை :-** உற்று நினைக்கத்தக்க இடை, பிங்கலை, சுழுமுனை என்னும் மூன்று நாடிகளும் கையில் சிறுவிரலைப் பெருவிரலோடு சேர்த்து நாண்போல ஆக்க மேல் நிற்கும் ஏனை மூன்று விரல்களைப் போல, இருதயத்தில் வேறு வேறு நிற்கும். பின்பு தலையில், 'புருவநடு, நெற்றிநடு, உச்சித்துளை' என்னும் மூன்றிடங்களிலும், அதன்பின், தலைக்குமேல் 'சூரியன், சந்திரன், அக்கினி' எனப்படும் மூன்று மண்டலங்களிலும் வேறு வேறாய் நில்லாது ஒன்றியேவிடும்.*

***குறிப்புரை :-** எனவே, அவற்றை உன்னி உணரும் உணர்வும் அவ்வாறாதல் போந்தது. இவ்வாறு உணர்வு அலையாது நிற்றலால் உடம்பும் நிலைக்கும் என்க. "சிறுவிரல் நாணாக" என்றது, "காள கர்ணி" என்றும், "திரிசூலம்" என்றும் சொல்லப்படும் முத்திரையைக் குறித்தவாறு. 'இடை, பிங்கலை, சுழுமுனை' என்னும் மூன்று நாடிகளும் இருதயத்தில் அம்முத்திரைபோல நிற்கும் எனவும், "சேரவே" என்றதனால், 'ஆஞ்ஞை முதலிய இடங்களில் ஏனை இரு நாடிகளின் ஆற்றலும் சுழுமுனையில் ஒன்றிவிடும்' எனவும் உணர்க. "சென்னியில் மூன்று" என்றது, 'இரட்டுற மொழிதலாய்' நின்று இவ்வாறு பொருள் பயந்தது. ஓவியம் போல்வனவற்றை ஓவியம் என்றே ஆகுபெயராக ஓதினார். "ஒத்திடும், நின்றிடும்" என்பன முற்றுக்கள். உன்னி உணர்தல் - அறிவுடையதாதல். "ஓவியமாய் விடும்" என்றது, உடம்பை, இங்கு அதிகாரப்பட்டது அதுவேயாகலின். உடம்பு ஓவியமாதல், காலக் கழிவால் மாறுபடாது, என்றும் இளமையோடிருத்தல்.*

735. ஓவிய மான உணர்வை அறிமின்கள்;
பாவிகள் இத்தின் பயனறி வாரில்லை;
தீவினை யாம்உடல் மண்டலம் மூன்றுக்கும்
பூவில் இருந்திடும் புண்ணியத் தண்டே. 12

736. தண்டுடன் ஓடித் தலைப்பெய்த யோகிக்கு
மண்டல மூன்றும் மகிழ்ந்துடல் ஒத்திடும்;
கண்டவர் கண்டனர் காணார் வினைப்பயன்
பிண்டம் பிரியப் பிணங்குகின் றாரே. 13

---

*இதனால், 'யோகத்தின்வழி உணர்வு ஒருங்குதல் காலத்தை வெல்லும் வழியாகும்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

735. ***தெளிவுரை :-*** *ஓவியம்போல உணர்வு அலைவற நிற்றற்குரிய வழியை அறியுங்கள். இவ்வுணர்வினால் காலத்தை வெல்வதாகிய பயன் விளைதலை முன்னை நல்வினை இல்லாதோர் அறியமாட்டார்; (அதனால் அவர் வேறு உபாயங்களைத் தேடி அலைவர்). இனி அவ்வழியாவது, பந்தமாய் நிற்கும் வினை காரணமாக வந்த இவ்வுடலில் உள்ள சூரிய, சந்திர, அக்கினி மண்டலங்கள் மூன்றிற்கும் ஓர் இணைப்பாகப் பல தாமரை மலர்களில் ஊடுருவி நிற்கும், யோகத்திற்கு ஏதுவாகிய தண்டேயாம்.*

***குறிப்புரை :-*** *'அதன்வழி உணர்வைச் செலுத்தி நில்லுங்கள்' என்பது குறிப்பெச்சம். பின்னிரண்டடிகளால் குறிக்கப்பட்டது சுழுமுனை நாடி. 'யோகம் செய்யாத உடலால் பயனில்லை என்றற்கு, தீவினையாம் உடல்' என்றும், அதனைப் பயன்படச் செய்வது 'சுழுமுனை' என்பார், "புண்ணியத் தண்டு" என்றும் கூறினார்.*

*இதனால், 'காலத்தின், வாதனையைக் கடத்தற்கு யோக நெறியால் உணர்வொன்றியிருத்தலே சிறந்த உபாயம்' என்பது கூறப்பட்டது.*

**736.** ***தெளிவுரை :-*** *மேற்சொல்லியவாறு புண்ணியத் தண்டின்வழிச் சென்று உணர்வைப் பிரமரந்திரத்தில் வைத்த யோகிக்கு உடலில் 'சூரியன், சந்திரன், அக்கினி' என்னும் மூன்று மண்டலங்களும் தக்கவாறு அமைந்திருக்கும். ஆகவே, உடல், காலத்தால் வாதிக்கப்படாதாம். இந்நிலையைக் கண்டவர், உடல் கால வயப்படாது நிற்கும் பயனைக் கண்டனர். காணாது வேறு உபாயங்களில் சென்றோர், உடல் கால வயப்பட்டு நீங்க, அதனைக்கண்டு துன்புறுகின்றார்கள்.*

737. பிணங்கி அழிந்திடும் பேறது கேள்நீ
அணங்குடன் ஆதித்தன் ஆறு விரியின்
வணங்குட னேவந்த வாழ்வு குலைந்து
சுணங்கனுக் காகச் சுழல்கின்ற வாறே. 14

738. சுழல்கின்ற ஆறின் துணைமலர் காணான்
தழலிடைப் புக்கிடுந் தன்னு ளிலாமல்
கழல்கண்டு போம்வழி காணவல் லார்க்குக்
குழல்வழி நின்றிடுங் கூத்தனு மாமே. 15

---

*குறிப்புரை :-* மேல், "பாவிகள் இத்தின் பயனறிவாரில்லை" என்றதனால், 'கண்டவர் கண்டனர்' என்பதற்கு இதுவே பொருளாதல் அறிக. "பிரிய" என்றதும், "பிரியும் நிலையை எய்த" என்றதாம். இனி, "பந்தல் பிரிந்தது" (தி.10 பா.151) என்றாற்போல, 'கட்டுக் குலைந்தது' என்றலுமாம்.

*இதனால், 'உணர்வு ஒன்றுதல் காலத்தை வெல்லும் உபாயம் ஆமாறு இவ்வாறு' என்பது கூறப்பட்டது.*

**737. *தெளிவுரை :-*** *யோகம் செய்யாது பிணங்குகின்றவனுக்கு அவன் அடையத்தக்கதாகிய பயன் கிட்டாது கெடும். அஃது அங்ஙனம் ஆகின்றவாற்றை நீ கேட்பாயாக; பெண்டுடன் கூடுகின்ற நாள் மிகுமாயின், முற்பிறப்பில் இறைவனை வணங்கிய புண்ணியத்தால் வந்த மானுடப் பிறப்பின் வாழ்நாள் அளவு தேய, தான் சிலநாள் வாழ்கின்ற வாழ்வும், நாய்க்காக உடம்பை வளர்க்க முயல்வதாய் முடியும்.*

*குறிப்புரை :-* 'பிணங்கிக்கு' என்னும் நான்கனுருபு தொகுத்தலாயிற்று. 'நான்' எனப்படுவது ஞாயிற்றின் வட்டப்பகுதியே என்றற்கு, "ஆதித்தன் ஆறு" என்றார். 'ஆதித்தன் ஆறு அணங்குடனாய் விரியின்' என மாற்றியும். ஆக்கம் வருவித்தும் உரைக்க. ஆய், ஆகுமாற்றால். விரிதல் - மிகுதல். 'சில வாயினும் குற்றமின்றாம்' என்றற்கு ''விரியின்'' என்றார். 'வணங்கு' என்ற முதனிலைத் தொழிற்பெயர், அதன் பயனாகிய காரியத்தின்மேல் நின்றது. சிற்றின்பத்தை மிக விரும்புவோர்க்குக் கால சக்கரம் விரையச் சுழன்று நிற்கும் என்பதாம். சுணங்கனுக்காகச் சுழலுதலாவது - இறந்த பின் நாயுண்ண உடலைப் பேணி வாழ்தல்.

*இதனால், 'காலத்தை வெல்ல வேண்டினோர் சிற்றின்பத்தைத் துறத்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

739. கூத்தன் குறியிற் குணம்பல கண்டவர்
சாத்திரந் தன்னைத் தலைப் பெய்து நிற்பர்கள்
பார்த்திருந் துள்ளே அனுபோகம் நோக்கிடில்
ஆத்தனு மாகி அமர்ந்திடும் ஒன்றே. 16

---

738. ***தெளிவுரை :-*** *'சக்கரம்' எனப்படுகின்ற ஆறு ஆதாரங்களிலும் சிவனது திருவடியாகிய திருவருளைக் காணாதவன், அத்திருவருளினுள் புகாமல், நெருப்பில் புகுந்து அழிவான். அவற்றில் அத்திருவருளைக் கண்டு அதனுட்புகும் உபாயத்தை அறிய வல்லவர்க்கு, ஐந்தொழிற் கூத்தினை இயற்றுகின்ற சிவன் அவ்வாதாரங்களில் விளங்கியே நிற்பன்.*

***குறிப்புரை :-*** *"கூத்தன் நின்றிடும்" என்றது, 'காலத்தைக் கருவியாக வைத்து உலகத்தை நடாத்துகின்ற அப்பெருமானது அருளால் காலத்தை வென்று நிற்பர்' என்றவாறு. 'சுழல்கின்ற' என்பது, 'சுழல்வதனோடு ஒப்பிக்கின்ற' என்றதாம். துணைமலர் - இரண்டு மலர்போலும் திருவடிகள்; உவம ஆகுபெயர். "கூத்தன்" எனப் பின்னர் வருதலின், வாளா, "துணைமலர்" என்று போயினார். திருவருளை, 'திருவடி' என்றார். உடல் தழலிடைப் புகுதலை, உயிர் தழலிடைப் புகுவதாக அருளினார், உயிர் அதனால் பயனிழந்து கெடுதலின். "தன்" என்றது திருவருளை. 'அதனுட் போம் வழி' என்க. குழல், சுழுமுனை நாடி. ஆதாரங்களை அவற்றிற்குப் பற்றுக் கோடாகிய சுழுமுனையாக உபசரித்தார். குழல் - பிரமரந்திரம்.*

*இதனால், யோகநெறி வேறோராற்றானும் காலத்தை வெல்லும் உபாயமாதல் கூறப்பட்டது.*

739. ***தெளிவுரை :-*** *புறத்தில் சிவபெருமானது திருவுருவில் உண்மைகள் பலவற்றை உணர்ந்தவர், நூலுணர்வாகிய அபர ஞானத்தைப் பெற்றவராவர். அகத்தில் அவனைக் கண்டு, அதனால் விளையும் பயன்களை உணரின், அப்பெருமான் அங்ஙனம் உணர்பவர்க்கு உறவாயும் வேறாய் நில்லாது ஒன்றாயும் உடன் இருப்பான். அவர் பரஞானம் பெற்றவராகின்றார்.*

***குறிப்புரை :-*** *'அதனால், அவ்வநுபவம் பெற்றவர்களும் அவனைப் போலவே காலத்தைக் கடந்து நிற்பர்' என்பது கருத்து. பின்னர் ''உள்ளே'' என்றலால், முன்னர், 'வெளியே' என்பது பெறப்பட்டது. குறி - வடிவம். "குறிகளும் அடையாளமும் கோயிலும்" என்றருளியது காண்க. வடமொழியில் 'இலிங்கம்' எனப்படுதலையும்*

**740.** ஒன்றில் வளர்ச்சி உலப்பிலி கேளினி
நன்றென்று மூன்றுக்கு நாளது சென்றிடும்
சென்றிடும் முப்பதுஞ் சேர இருந்திடில்
குன்றிடைப் பொன்திகழ் கூத்தனு மாமே. 17

---

*நினைக. குணம் - தன்மை; உண்மை. அவை "தோற்றம் துடியதனில், தோயும் திதி அமைப்பில்" (தி.5 ப.90 பா.6) என்றாற்போல்வன. 'அகம்' என்றது ஆதார நிராதாரமீதானங்களை. அங்குப் பார்த்திருத்தல் பாவனையினாலாம். 'பாவனை' என்பது பொய்யன்று என்பதற்கு, 'அனு போகம்' என்றார். "அனுபோகம் நோக்கிடில்" எனவே "பார்த்திருப்பின், அனுபோகம் விளையும்'' என்பது பெறப்பட்டது. அநுபவங் காரணமாகச் சமாதியில் நீங்காது நிற்றல் கூடுமாகலின், நோக்கிடில் 'ஆத்தனும் ஒன்றாய் அமர்ந்திடும்' என்றார். ''ஆத்தன்'' என்றது, கூத்தனைச் சுட்டும் அளவாய் நின்றது. 'ஆத்தனும்' என்ற உம்மை 'அங்ஙனம் நோக்குவோனுக்கு இயைய' என இறந்தது தழுவிற்று. 'ஆத்தனும் ஒன்றேயாகி அமர்ந்திடும்' என மாறிக் கூட்டுக. 'யோகத்தாலன்றி ஏனைச் சரியை, கிரியா மார்க்கங்களால் காலத்தைக் கடந்து நிற்றல் அரிது' என்றற்கு, அவற்றின் பயனை இங்கு எடுத்துக் கூறினார்.*

*இதனால், ''யோகம் மேற்கூறிய வகையில் உபாயமாதல் இவ்வாறு" என்பது கூறப்பட்டது.*

***740. தெளிவுரை :-** எனின், அங்ஙனம் அநந்நியமாயிருத்தலின் பயனறிவித்தல் நுதலிற்று. அங்ஙனம் ஒன்றியிருத்தலால் விளையும் வளர்ச்சிகள் அளவற்றனவாம், இனிதுகேட்க நல்லதென்று, ரேசக பூரக கும்பங்களாகிற மூன்றாலும் ஆயுள் கழியும். ஆகையால் அங்ஙனம் கழியும் நாட்கள் உளவாகாமல், முப்பது நாள் பூரணகும்பஞ் செய்து இருந்தால் மேருமலை உச்சியில் விளங்கும் திருக்கூத்தனுமாவான் என்றவாறு.*

***குறிப்புரை :-** ஒன்றில் - ஒன்றினால் என வினை எச்சம், மூன்று - ரேசகமாதி மூன்று; இடகலை பிங்கலை சுழுமுனையாகிய நாடி மூன்றுமாம் உச்சுவாச நிச்சுவாசங்களால் நாட்கள் கழியும், அங்ஙனம் கழியுநாட்கள் முப்பது ஒரு சேர கும்பகஞ் செய்து இருக்கின், மேரு மலையில் விளங்கும் சிவனும் ஆவர் என்பது. பொன்மேரு என்றது உடலை, கூத்தன் என்றது துவாதசாந்தப் பெருவெளியில் விளங்கும் லயசிவத்தை.*

741. கூத்தவன் ஒன்றிடுங் கூர்மை அறிந்தங்கே
ஏத்துவர் பத்தினில் எண்டிசை தோன்றிடப்
பார்த்து மகிழ்ந்து பதுமரை நோக்கிடிற்
சாற்றிடு நூறு தலைப்பெய்ய லாமே. 18

742. சாற்றிடு நூறு தலைப்பெய்து நின்றவர்
காத்துடல் ஆயிரங் கட்டுறக் காண்பர்கள்
சேர்த்துடல் ஆயிரஞ் சேர இருந்தவர்
மூத்துடன் கோடி யுகமது வாமே. 19

---

741. ***தெளிவுரை :-*** *சிவன் ஒன்றி நிற்றற்குரிய இம்முறையை அறிந்து இதன்படி, ஒன்றில் பத்து நாளாக மூன்று நாடிகளிலும் மாறி மாறிப் பிராணன் இயங்க, அம்முறை யானே அவனை ஆதார நிராதாரத் தாமரைகளில் வழிபட்டு நிற்பவர், அவ்வழிபாட்டினால் எட்டுத்திக்கும் தாம் இருந்த இடத்திலே விளங்க, அவைகளைப் பார்த்து (தமக்கு யோகம் கைவந்தமைக்கு) மகிழ்ச்சியுற்றுப் பின், அத்தாமரைகளில் சிவனை முறையாகக் கண்டு நிற்பார்களாயின், நூல்களிற் சொல்லிய நூறாண்டுக் காலத்தை அவர்கள் குறையாது பெறுதல் கூடும்.*

***குறிப்புரை :-*** *கூத்தவன் - கூத்தன். கூர்மை - நுட்பம். அஃது அன்னதாகிய முறையைக் குறித்தது. "அங்கே" என்றது, பின்வரும் பதுமங்களைச் சுட்டிற்று. "ஏத்துவர்" வினையாலணையும் பெயர். 'பத்தினில் ஏத்துவர்' என மாற்றிக்கொள்க. எண்டிசை தோன்றுதலைக் கூறியது, யோகம் கைவந்தமை அறியும் குறி கூறியவாறு. பதுமர் - பதுமத்தில் இருப்பவர். 'சாத்திடும்' என்பது பாடமன்று. இது, வருகின்ற திருமந்திரத்திற்குமாம்.*

*இதனால், நூறாண்டிற் குறையாது வாழ்தற்குரிய உபாயம் கூறப்பட்டது.*

742. ***தெளிவுரை :-*** *முதலில் யோகப் பயிற்சியால் நூறாண்டு வாழ்ந்தவர், பின்பு அம்முறை அவர்க்குக் கைவந்து நிற்றலால், அதனை எளிதாகச் செய்து, 'ஆயிர ஆண்டு, (பின் பதினாயிரம், நூறாயிரம் என்று பல ஆயிர ஆண்டுக் காலம்) இருப்பர். பின்பு யுக முடிவு, அதன் பின்கோடிக் கணக்கான யுகம்' என்று இப்படிப் பலகாலமும் காலத்தை வென்றிருப்பர். நூறாண்டு வாழக் கற்றவர்கள் பல்யுகமும் வாழ்வர்.*

***குறிப்புரை :-*** *'இவை, அவர்கள் விரும்பிய பொழுது' என்க. மூத்தல், உலகில் உள்ள பலர்க்கும் ஆண்டினால் முதியராதல்,*

743. உகங்கோடி கண்டும் ஒசிவற நின்று
அகங்கோடி கண்டுள் அயலறக் காண்பர்கள்
சிவங்கோடி விட்டுச் செறிய இருந்தங்
குகங்கோடி கண்டங் குயருறு வாரே. 20

---

*அறிவினால் முதியராதல் பிறவாற்றானும் கூடுமாகலின், ஈண்டு இவ்வுபாயத்தாற் பெறுவது ஆண்டின் முதிர்ச்சியேயாம். ஆயிரம் முதலியன பன்மை குறித்து நின்றன.*

*இதனால், மேற்கூறிய உபாயம் காலத்தை வெல்லுதற்கு எத்துணையும் பேருதவியாதல் கூறப்பட்டது.*

743. ***தெளிவுரை :-*** *யோகத்தால் அளவற்ற காலம் வாழ்ந்தும் உடல் தளர்தல் இன்றி நின்று யோகக் காட்சியில் அளவற்ற காட்சிப் பொருள் கருத்துப் பொருள்களைக் கண்டு, பின் 'அகம், புறம்' என்னும் வேறுபாட்டைக் கடந்தவர், தாம் முன்பு கண்ட பொருள்களுள் ஒன்றையும் பொருளாக மதியாமல் விடுத்துச் சிவம் ஒன்றையே பொருளாகக் கொண்டு, அதனோடு ஒன்றும் நிலையைப் பெறுதற் பொருட்டு வாழ்ந்து, அவ்வாழ்வில், காலமும் முடிவு எய்துதலைக் கண்டு, அதனின்றும் அக்காலத்தைக் கடந்து மேற்போவர். பல்யுகம் வாழ்பவர் அதற்கு மேலும் அந்நியமாயிருந்து உயர்வர்.*

***குறிப்புரை :-*** *"அகத்துக் கண்டு" என்க. அயல் - வெளி. 'கோடி விட்டுச் சிவம் செறிய' என மாறுக. இறுதியில் உள்ள "கோடி", "முடிவு" என்னும் பொருளது, "சிவம்" என்றது, உயிரெதுகை. ஒசிவு - தளர்வு அநவரத தியானத்தை அறிவித்தவாறு. அகம் கோடிகண்டு - மனம் முடிந்த இடத்தைக் கண்டு; அதாவது மனமும் கடந்த நிலையை அறிந்து என்பதாம். உள் - சிவத்திற்குள் வியாபகமாகிய சிவபரம் பொருளினுள் தான் ஏகதேச வியாப்பியமாய்த் தாடலை போல அடங்கியிருத்தலைத் தரிசித்து, தான் சிவபரம் பொருளுக்கு அவறாகாதிருக்குந் தன்மையை அறிவார்கள் மனம்கோடி - மனம் முடிந்த இடம்.*

*சிவம் கோடி விட்டு - சிவமாகிற இறுதியான பொருளையும் விட்டு வியாபக வியாப்பியமாயிருக்குந் தன்மையையும் கழன்று போக, புணர்ச்சி வயத்தால் தன்னை மறந்த தலைவி போலத் தன் வசமழிந்து செறிய - வியாபகமாக இந் நிலையில் பல யுகங்கள் இருந்தவர் உயர்வற உயர்ந்த நலம் எய்துவார்கள் என்பது கருத்து.*

744. உயருறு வார்உல கத்தொடுங் கூடிப்
பயனுறு வார்பலர் தாமறி யாமற்
செயலுறு வார்சிலர் சிந்தையி லாமல்
கயலுறு கண்ணியைக் காணகி லாரே. 21

745. காணகி லாதார் கழிந்தோடிப் போவர்கள்
நாணகி லாதார்நயம் பேசி விடுவர்கள்
காணகி லாதார் கழிந்த பொருளெலாம்
காணகி லாமற் கழிகின்ற வாறே. 22

---

*இதனால், காலத்தை முற்றக் கடப்பாரது இயல்பு கூறப்பட்டது.*

744. ***தெளிவுரை :-*** *உலகத்தில் உடம்பையும், அது வழியாக வரும் பல பற்றுக்களையும் உடையவராய் இருந்தும் பலர் மேற்கூறியவாறு காலத்தை வென்று மேற்போகின்றார்கள். அதனால், உடம்பு எடுத்ததன் பயனையும் அவர்கள் அடைகின்றார்கள். ஆயினும், சிலர், அறிவில்லாமையால் காலச் சூழலைக் கடக்கமாட்டாது அதில் அகப்பட்டு அதன்வழியே வினையுட்படுகின்றனர். அவ்வறியாமை யானே அவர் இவ்வுடம்பு எடுத்ததன் பயனாகப் பெறவேண்டிய திருவருட்காட்சியைப் பெறமாட்டாதவராகின்றனர். தாயே தந்தையை அறிவிக்கத் தனயன் அறிந்து அவனிடமிருந்து அறிவும் பொருளும் ஆற்றலும் பெருகின்றானாதலின், அவன் மனத்தைப் பலவுணர்ச்சி கட்கு இடமாக்கினமையின் முதலிற்றாயையே அறிகிலனாய்ப் பின்னர் முறையே சிவத்தையும், பரஞானத்தையும், பரபோகத்தையும் உணரானாயினன் என்றவாறு, பரபோகந் துய்த்தவர்களே உடலைக் கொண்டு உலகத்தொடு துழலும் ஊமர் ஒன்றையுமுணரார், என்று இரங்கிக் கூறியதும் இப்பொருட்டு.*

***குறிப்புரை :-*** *'உயர்', முதனிலைத் தொழிற் பெயர். 'உலகத்தொடு கூடியும்' என உம்மையை மாற்றி யுரைக்க. "பலர், சிலர்" என்றது, பயனது அனுபவமும், அறியாமையாகிய இழிவும் குறித்தவாறு.*

*இதனால், காலத்தை வெல்லுதலும், அதனாற் பயன் பெறுதலும் அனுபவமாதல் கூறப்பட்டது.*

745. ***தெளிவுரை :-*** *அறிவின்மையால் மேற்கூறியவாறு திருவருளை உணரமாட்டாதவர், கால வயப்பட்டு அழிகின்றவரே யாவர். இனிக் கல்வியால் அறிவு பெற்றவரும் ஊக்கம் இன்மையால் தாம் கற்றறி மூடராகின்ற நிலைக்கு நாணாமல், நூலறிவைப் பிறர்க்கு*

**746.** கழிகின்ற அப்பொருள் காணகி லாதார்
கழிகின்ற அப்பொருள் காணலுமாகும்
கழிகின்ற வுள்ளே கருத்துற நோக்கிற்
கழியாத அப்பொருள் காணலு மாமே. **23**

**747.** கண்ணன் பிறப்பிலி காண்நந்தி யாய்உள்ளே
எண்ணுந் திசையுடன் ஏகாந்த னாயிடும்
திண்ணென் றிருக்குஞ் சிவகதி யாய்நிற்கும்
நண்ணும் பதமிது நாடவல் லார்கட்கே. **24**

---

*இனிமை உண்டாக (க் கிளிப்பிள்ளைகள் போல) விரித்துரைத்துப் போவார்கள். இவ்வாறு இருதிறத்தாரும் உயர்ந்த பொருள்கள் பலவற்றை அறியமாட்டாதவராய் அழிகின்றமை இரங்கத்தக்கது. அனுபவ ஞானமில்லாதார் அரனைக் காணார். சாத்திரங்கள், நயம்படப் பேசுவதற்காக இறைவனால் அருளிச் செய்யப்பட்டனவல்ல அறிந்து அநுபவித்து உயர அருளப்பட்டவை, இதனை உணராதாரை நாணமிலார் என எள்ளியவாறு விடுவார்கள் என்ற சொல்லாற்றல் பயன்படுத்தாது கழிப்பார்கள் என்பதனை விளக்கி நின்றது.*

***குறிப்புரை :-*** *'இரங்கத்தக்கது' என்பது சொல்லெச்சம். 'நாணகிலாதார்' என்றதனால், 'கற்றவர்' என்பது பெறப்பட்டது. கழிந்த பொருள் - மிக்க பொருள்; உயர்ந்த பொருள்.*

*இதனால், காலத்தை வெல்லும் அறிவும், ஊக்கமும் இல்லாதவரது குற்றம் கூறப்பட்டது.*

**746. *தெளிவுரை :-*** *எல்லாப் பொருள்களும் கால வயப்பட்டு நிலையின்றி மறைந்துபோதலை உணர மாட்டாதவர், அதனை உணர்தல் கூடும். எப்பொழுதெனின், அவற்றை உளத்துட்கொண்டு ஊன்றி நோக்குவாராயின். இனி அந்நோக்கினாலே, கால வயப்படாது நிலைத்து நிற்கின்ற முதற்பொருளையும் காணலாம். மலையுச்சியில் நிற்பவர்க்குக் கீழுள்ள பொருட்கள் எளிமையிற் காணப்படுமாறு போல, தத்துவ தாத்துவிகங்களைக் கடந்து சிவதரிசனம் செய்வார்க்கு அவைகள் தம்மை விட்டு விலகுதல் நன்கு விளங்கும் என்பது கருத்து மலத்துளழுந்திய புழு அதனை மலம் என்று அறியாதவாறு போலச் சிவங்காணார் கழியும் பொருள்களாகிய தத்துவங்களையும் காணார் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *"கழிகின்ற அப்பொருள்" என்றாராயினும், 'பொருள் கழிகின்ற அதனை' என்பதே கருத்தென்க. பின்னர் வந்த*

*"கழிகின்ற அப்பொருள்" என்பது 'அது' என்னும் சுட்டுப் பெயரளவாய் நின்றது. மூன்றாம் அடியில் உள்ள ''கழிகின்ற'' என்பது வினையாலணையும் பெயர். அதனிடத்து, 'கழிகின்றவற்றை நோக்கின்' என இரண்டாவது விரிக்க. 'நோக்கின் ஆகும்' என மேலே கூட்டிமுடித்துப் பின் 'அதனானே' என்பது வருவித்து உரைக்க. சிவதரிசனம் செய்யின் நம்மை விட்டுக் கழிவனவற்றையும் காணலாம்.*

**747. தெளிவுரை :-** ***அருள் உடையவனும், பிறப்பில்லாதவனும் ஆகிய சிவன் உயிர்களின் அகத்தே அவர்கள் காண்கின்ற குருமூர்த்தி வடிவாயும், அவனே எட்டுத்திசைகளாயும், முடிவில் ஒருவனேயாயும் இருப்பான். அவனே நிலையான இன்ப வீடும் ஆவான். உண்மையை ஆய்ந்துணர வல்லவர்க்கு, அவர்கள் அடையத்தக்க, முடிந்த பயன் மேற்சொல்லியவற்றை உணர்தலேயாம்.***

***குறிப்புரை :-*** *சிவயோகியர் சேருமிடம் இதுவென்றல் நுதலிற்று. கண்ணன் - முக்கண்ணன் - சிவன். முக்கண்ணனும், பிறப்பில் பெம்மானும், எமக்கு ஆசாரியமூர்த்தியுமாயுள்ள சீபரமேசரனை ஆவியினுள்ளாக ஆராய்ந்து காண்க. அங்ஙனம் காண்பார்க்கு அவன் எண்ணப்படுகின்ற திசைகளுடன் ஒன்றி, உலகமே தானாக நிற்கும் உறுதியாக நிற்கும் சிகார வகாரங்கள் நம்மை வந்தடையும் இதனை ஆராய்ந்து அநுபவிக்க வல்லார்கட்கு அடையத்தக்க நிலையிதுவேயாம் என்றவாறு.*

*கண்ணன் என்பது, மூக்கன் பல்லன் என்பனபோலக் கண்ணிற் சிறப்புடையான் என்னும் பொருளது. கண் மிகுந்திருப்பினும் அது சிறப்புத்தானே! ஆதலான் முக்கண்ணன் கண்ணெனப்படுதல் பொருந்தும் என்றறிக. நந்தி - ஆசாரியன் உள்ளே ஆய் காண் எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க. உள்ளே - ஆன்மாவினிடமாக.*

*எண்ணுந்திரை - ஒன்று இரண்டு எட்டு பத்து என்று எண்ணப்படுகின்ற திசை ஏகாந்தன் - ஒன்றாய்க் கலந்து நிற்பவன். திண்ணென்று இருக்கும் சிவ - உறுதியாக ஆன்மாக்களை உய்விப்பேம் என்று திருவுளம் பற்றியிருக்கும் சிகாரமாகிய சிவமும். வகாரமாகிய சத்தியும் கதியாநிற்கும் - அருளால் தாமே வந்து பொருந்தாநிற்கும். கதிப்பவரில்லையாகும் என்புழிப்போலக் கதித்தல் அடைதல் என்னும் பொருளது. இதுவே நாடவல்லார்க்கு நண்ணும் பதம் என உறுதியும் கூறியவாறு.*

**748. தெளிவுரை :-** *மேற்கூறிய உண்மையை ஓர்ந்துணர வல்லவர்க்குக் காலத் தாக்கு இல்லை. ஆகவே, அவர்கட்கு இறப்பும்*

**748.** நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை
நாடவல் லார்கள் நரபதி யாய்நிற்பர்
தேடவல் லார்கள் தெரிந்த பொருளிது
கூடவல் லார்கட்குக் கூறலு மாமே. 25

**749.** கூறும் பொருளி தகார வுகாரங்கள்
தேறும் பொருளிது சிந்தையுள் நின்றிடக்
கூறும் மகாரங் குழல்வழி யோடிட
ஆறும் அமர்ந்திடும் அண்ணலு மாமே. 26

---

*இல்லை. அவர்கள் மக்கள் வடிவில் காணப்படுகின்ற கடவுளாய் விளங்குவர். நூல்களின் முடிந்த பொருளைத் தேடிக் கண்டவர்கள் கண்ட பொருள் இதுவே. இதனைப் பெறவல்ல ஆற்றல் உடையவர்கட்கே இஃது உணர்த்தத் தகும். பயன் கூறிப் பலரை வழிப்படுத்த வேண்டும்.*

***குறிப்புரை :-*** *காலத்தை அதற்குரிய நமன்மேல் வைத்துக் கூறினார். நமனது தாக்குதலை "நமன்" என்றது ஆகுபெயர். நரபதி - நரனாகிய பதி. அறிவும், காதலும் இல்லாதார்க்குக் கூறின், அங்கணத்துள் உக்க அமிழ்துபோலப் பயனில் சொல்லாய் முடியும் ஆதலின், 'கூட வல்லார்கட்குக் கூறலும் ஆம்' என்றார். உம்மை, 'சிந்திப்பித்தலும், தெளிவித்தலும் ஆம்' என எதிரது தழுவிற்று.*

*இதனால், கழியாத அப்பொருள் காணவல்ல முயற்சியை உடையார் பெறும் பயன் கூறப்பட்டது.*

***749. தெளிவுரை :-*** *மத்திமையாயும், வைகரியாயும் வெளிப்படுகின்ற மந்திரங்கள் உணர்த்தும் பொருளும், அவை உணர்த்தியவாற்றானே உள்ளே உணர்ந்து பற்றத்தக்க பொருளும் மேற்கூறிய பிறப்பில் பொருளாகிய சிவமேயாம். அச்சிவம் சிந்தையுள் நிலைபெறாது நிற்றற்கு, 'சூக்குமை வாக்கு' எனப்படும் நாதம் புறம்பற்றி நிகழாது, சுழுமுனைவழி அகம்பற்றி நிகழ்தல் வேண்டும். அவ்வாறு நிகழின், அங்ஙனம் நிகழப்பெறும் சாதகன், ஆறு ஆதாரங்களிலும் அவ்வவ்வாதாரங்கட்கு ஏற்ப நிற்கும் சிவனாகவும் ஆய்விடுவான்.*

***குறிப்புரை :-*** *அகார உகாரங்கள் கூறும் பொருள் இது மாற்றிக் கொள்க. 'அகாரம், உகாரம்' என்பன மத்திமை வைகரியான மந்திரங்கட்குக் குறி எனின், சொல்லத்தக்க உண்மை இதுவேயென் றுணர்த்துதல் நுதலிற்று.*

**750.** **அண்ணல் இருப்பிடம் ஆரும் அறிகிலர்**
**அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வார்களுக்**
**கண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்**
**அண்ணலைக் காணில் அவன்இவன் ஆகுமே.** **27**

---

*நீங்கள் சொல்லத்தக்க பொருள் இது அகார உகாரங்கள் தெளிந்த பொருள்களாகவுள்ள இவை இரண்டும்நும் சிந்தைக்கண் நிலைபெற சொல்லப்படுகின்ற மகாரமாகிய நாதம் சுழுமுனையாகிய நடுநாடியின் வழியே மேலேறிச் செல்ல, ஆறு ஆதாரங்களிலும் எழுந்தருளியுள்ள சிவம்வெளிப்பட்டுத் தோன்றும் என்றவாறு.*

*அகாரம் சிவமும், உகாரம் சத்தியும், மகாரம் மலமுமாதலின், முன்னிரண்டும் மனத்திலிருக்க, நாதமாகிய சுத்த மாயா மலம் பிராணனோடு சுழுமுனை வழியாகப் புருவ மத்தியையடைய அங்கே சதாசிவம் வெளிப்படும் என்பது கருத்து ஆம் - ஆகும், தோன்றும் என்பதாம்.*

**750. தெளிவுரை :-** *சிவனது இருப்பிடத்தை ஒருவரும் அறிய மாட்டாது அல்லல் உறுகின்றனர். அதனைக் குருவின் உபதேசப்படி சிந்தித்துத் தெளிகின்றவர்கட்கு, அவன் என்றும் அழியாது உயிர்க்குயிராய் இருத்தல் விளங்கும். அவ்விளக்கத்தின்வழி அவனைக் கண்டால், அவன் காணுகின்றவனுக்கு வேறாய் இராமல் இவனேயாகி விடுவான்.*

**குறிப்புரை :-** *இவனேயாகி விடுதலாவது, இவன் செயல்கள் எல்லாவற்றிற்கும் அவனே முதலாய தன்மை விளங்க நிற்றல். 'அது விளங்கவே, பின்னர் இவன் தானாய் நில்லாது அவனேயாய் விடுவன்' என்பது கருத்து.*

*இதனால், சாதகன் ஆறும் அமர்ந்திடும் அண்ணல் ஆமாறு கூறப்பட்டது.*

**751. தெளிவுரை :-** *சிவன் சீவனேயாய் நிற்கும் முறையை உள்ளவாறு உணர்கின்றவர் ஒருவரும் இல்லை. அதனை, மாணவனே, உனக்குச் சொல்கின்றோம்; கேள், சீவன் அறிகின்ற ஓசை, ஒளி முதலிய புலன்களையும் சிவன் அச்சீவனின் பொருட்டு அறிந்து நிற்கின்றான். அதனோடு, சீவனது சுட்டுணர்வை நிகழ்வித்தும் நிற்கின்றான்.*

**குறிப்புரை :-** *'இதுவே சிவன் சீவனேயாய் நிற்கும் முறைமை' என்பது குறிப்பெச்சம். 'சிவன் சீவனுமாய் நிற்கின்றான்' என்பதற்கு, 'பொன்னே பூடணமாய் நிற்றல்போல' எனவும், 'மரந்தானே, கிளை,*

751. அவன்இவ னாகும் பரிசறி வாரில்லை
அவன்இவ னாகும் பரிசது கேள்நீ
அவன்இவன் ஓசை ஒளியினுள் ஒன்றிடும்
அவன்இவன் வட்டம தாகிநின் றானே. 28

752. வட்டங்கள் ஏழும் மலர்ந்திடும் உம்முளே
சிட்டன் இருப்பிடஞ் சேர அறிகிலீர்
ஒட்டி யிருந்துள் உபாயம் உணர்ந்திடக்
கட்டி இருப்பிடங் காணலு மாகுமே. 29

---

*இலை, பூ, காய் முதலியனவாய் நிற்றல்போல' எனவும், 'மகா ஆகாயந் தானே கடாகாயம், மடாகாயம் முதலியனவாய் நிற்றல்போல' எனவும், 'நீர்தானே நுரை, குமிழி, திவலை முதலியனவாய் ஆதல்போல' எனவும் பலர் பலவாறு விளக்கங்கூறி மலைதல் பற்றி "அவன் இவனாகும் பரிசறிவார் இல்லை" என்றார். ஓசை ஒளி, உபலக்கணம். ஒன்றுதல் அறிவினால் என்க. வரம்புபட்ட சுட்டுணர்வை வட்டமாக உருவகித்தார்.*

*இதனால், ஞாயிறு கண்ணுக்குப் பொருள்களைக் காட்டுதல் போலச் சிவன் சீவனுக்கு எல்லாவற்றையும் அறிவித்தும், ஆன்ம போதம் கண் ஒன்றைக் காணுதற்குத் தானும் உடன்சென்று காணுதல் போலச் சிவன், சீவன் ஒன்றை அறிதற்குத் தானும் உடன்நின்று அறிந்தும் ஒற்றுமைப்பட்டிருத்தலே 'அவன் இவனாய் நிற்கும் முறை' என, மேலே சுட்டியதன் இயல்பு தெரித்துக் கூறப்பட்டது.*

***752. தெளிவுரை :-** ஆதாரச் சக்கரம் ஆறு, அதற்குமேல் உள்ள மதி மண்டலச் சக்கரம் ஒன்று, இந்த ஏழு சக்கரங்களும் உங்கள் உடம்பினுள்ளே ஏழுவகைத் தாமரை மலர்களாய் மலர்ந்து நிற்கும். அவைகள் யாவும் சிவனது இருப்பிடங்களே. அங்ஙனமாகவும் அவனை அடையும் முறையை நீங்கள் அறியவில்லை. மேற்கூறியவாறு அவன் உங்களோடு ஒன்றாய் ஒட்டியிருத்தலை அறிந்து, நீங்களும் அவனின் வேறாகாது, அவனோடு ஒன்றாய் ஒட்டி அவனையே நினையும் உபாயத்தை உணர்வீர்களாயின், அங்ஙனம் உணர்பவர்களுக்குக் கருப்பங்கட்டிபோல இனிக்கின்ற அவனைக் கண்டுவிடலாம்.*

***குறிப்புரை :-** வட்டங்கள் ஏழு - ஆறாதாரங்களும், துவாத சாந்தமும், அவை வட்டமென்பது சக்கர வடிவாதலின்.*

**753.** காணலு மாகும் பிரமன் அரியென்று
காணலு மாகுங் கறைக்கண்டன் ஈசனைக்
காணலு மாகுஞ் சதாசிவ சத்தியும்
காணலு மாகுங் கலந்துடன் வைத்தே. **30**

---

*சிட்டன் - சிவன். யோகக்காட்சி கைவருதலும், ஞானச்செய்தி முறையில் முயலும் பொழுதே கூடும் என்றற்கு இதனைக் கூறினார். கட்டி, உவமையாகுபெயர். 'இருப்பிடம்' என்றே போயினாராயினும், 'அவ்விடத்து உள்ள பொருளை' என்றலே கருத்தாதல் அறிக.*

*இதனால், கழியாத அப்பொருளைக் காணுமாறு கூறப்பட்டது.*

**753. *தெளிவுரை :-* மேற்கூறியவாற்றால் சிவனை உணர்வோர்க்கு, அவன், 'அயன், மால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன், சத்தி' என நிற்கின்ற நிலை வேறுபாடுகளும், தனது திருவருளை ஆன்மாக்களோடு ஒற்றித்து நிற்கவைத்து அவைகளை நடாத்துகின்ற முறைமைகளும் நன்குணர்தல் கூடும். ஆறு ஆதாரங்களில் அவ்வவ் இறைவர்களைத் தரிசிக்கலாம்.**

***குறிப்புரை :-* எனவே, 'ஆதாரநிராதார தரிசனங்கள் எளிதில் கூடும்' என்பதாம். 'இத்தகையோர்க்குக் காலத்தை வெல்லுதல் ஒரு பொருளன்று' என்பது கருத்து. "என்று" என்னும் எண்ணிடைச் சொல்லின் பின், 'அவரை' என்பது எஞ்சி நின்றது.**

***இதனால், காலத்தைக் கடந்தாரது பெருமை கூறப்பட்டது.***

## 15. ஆயுள் பரீட்சை

754. வைத்தகை சென்னியில் நேரிதாய்த் தோன்றிடில்
உத்தமம் மிக்கிடில் ஓராறு திங்களாம்
அத்தம் மிகுத்திட் டிரட்டிய தாயிடில்
நித்தல் உயிர்க்கொரு திங்களில் ஓசையே. 1

---

*இதுமுதல் இருபது திருமந்திரங்களால் ஆயுள் பரீட்சை உணர்த்துகின்றார். அஃதாவது, மக்களது வாழ்நாளின் எல்லையை அளந்தறியும் முறை. அஃதாவது பிராணன் இயக்கத்தை அறிந்து ஆயுட்கால எல்லையை முடிவு செய்தல். பிராண இயக்கம் நீளுமாயின் ஆயுள் குறையும். பிராண இயக்கம் குறையுமாயின் ஆயுள் நீளும். ஒரு நாளைக்கு 21600 தடவை மானுடன் மூச்சு விடுகிறான். அந்த உயிர் இத்தனை முறை தனது இப்பிறவியின் ஆயுட்காலத்தில் மூச்சுவிட வேண்டுமென்று ஆயுளை நிர்ணயித்து பிறக்கும்போதே சிவபெருமான் அனுப்பிவிடுகிறான். 80 ஆண்டு அந்த உயிர் அவ்வுடலில் வாழ வேண்டுமென்றால் 80 x 365 x 21600 தடவை ஆயுட்காலத்தில் மூச்சுவிடும். பிராணாயாமத்தின் மூலம் 21600 என்ற எண்ணைக் குறைத்தால் ஆயுள் நீளும். இது காயசித்தி உபாயத்தில் மன எழுச்சி செல்லுதற்கும், அவ்வுபாயத்தில் நிற்பார் அதன் பயனை உணர்ந்து கொள்ளுதற்கும் பயன்படுதல் பற்றி இங்குக் கூறப்படுகின்றது.*

754. ***தெளிவுரை :-*** *ஒருவனது வாழ்நாள் எல்லையை அளந்தறிகின்றவன் தனது கையை அளக்கப்படுபவனது தலையின்மேல் வைக்க, அஃது அவனுக்கு இயல்பான எடையுள்ளதாய்த் தோன்றுமாயின், அவனது வாழ்நாளுக்குக் கேடில்லை. அவ்வாறன்றி, மிகுந்த எடையுள்ளதாய்த் தோன்றுமாயின், அவனது வாழ்நாள் அதுமுதல் ஆறுதிங்கள் அளவினதாம். மேலும், அஃது இரட்டிப்பான எடையுள்ளதாய்த் தோன்றின், அவனது உயிர்க்கு ஒருதிங்களில் பிறக்கும் சொல் 'இறப்பு' என்பதாம்.*

***குறிப்புரை :-*** *"நீத்தல்" என்பது குறுகி நின்றது. 'பிறக்கும்' என்பது சொல்லெச்சம். அத்தம் - கை. ஓசை - பிராணன். பிராணனுக்கு ஓசை உண்டாதலின், பிராணனை ஓசை என்றே கூறியபடி.*

*இதனால், ஒருவகைப் பரீட்சை கூறப்பட்டது.*

**755.** ஓசையும் ஈசனும் ஒக்கும் உணர்வின்கண்
ஓசை இறந்தவர் ஈசனை உள்குவர்
ஓசை இறந்தவர் நெஞ்சினுள் ஈசனும்
ஓசை உணர்ந்த வுணர்வது வாமே. 2

**756.** ஆமே அழிகின்ற வாயுவை நோக்கிடில்
நாமேல் உறைகின்ற நன்மை அளித்திடும்
பூமேல் உறைகின்ற போதகம் வந்திடும்
தாமே உலகில் தலைவனு மாமே. 3

---

**755. *தெளிவுரை :-*** *உணர்விற்கு முதலாய் நிற்றலில் சொல்லும், இறைவனும் ஒரு நிகரானவர். (ஆயினும் இஃது உலகியலிலாம். ஆதலால்) சொல்லை விடுத்தவரே இறைவனை உணர்கின்றவாராவர். சொல்லை விடுத்தவரது உள்ளத்தில் இறைவனும் அச்சொல்லைத் தம்மின் வேறாக உணர்ந்த உணர்வு வடிவாய் நிற்பன்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'வாய் மௌனம் கடவுட்டன்மையை மிகுவிக்கும்' என்றவாறு. 'ஈசனை உள்காது மௌனம் மட்டுமே உடையவர் சொல்லை விடுத்தவர் ஆகார்' என்றற்கு "ஓசை இறந்தவர் ஈசனை உள்குவர்" என்றும் 'நாத ஞானமும் பாச ஞானமே' எனவும் ஆதலின் 'அதுவும் நீக்கற்பாலது' எனவும், 'உணர்த்தற்கு ஓசை உணர்ந்த உணர்வது வாமே' என்றும் கூறினார்.*

*இதனால் வாய் வாளாமை (மௌனம்) இறையுணர்வோடு நிகழ்தல் வாழ்நாள் குறைபடாமைக்குக் குறியாதல் கூறப்பட்டது.*

**756. *தெளிவுரை :-*** *ஒவ்வொரு மூச்சிலும் பிராணவாயு அழிதலை அறியும் அறிவு உண்டாகுமாயின், அது பயனுடையதாகும். அஃதாவது, நாம் நெடுங்காலம் இவ்வுலகில் வாழ்கின்ற நன்மையைக் கொடுக்கும். அதனால், ஆதார கமலங்களில் நிலைத்து நிற்றற்குரிய ஞானமும் கைவரும். அந்த ஞானம் கைவரப் பெற்றோர் உலகில் கட்புலனாய் நிற்கின்ற இறைவனாகி நிற்கும் பெருமையையும் அடைவர்.*

***குறிப்புரை :-*** *எனின், கழிகின்ற வாயுவும் கட்டுப்படின் சிவானுபவம் சீக்கிரம் சித்திக்கும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.*

*வெளிச் செல்கின்ற நாலங்குல வாயுவையும் கண்டு நமக்கே ஆமாறு நோக்கிடின், நாக்கு பிரமரந்திர நோக்கி மேற்செல்லுவதால்*

757. தலைவன் இடம்வலஞ் சாதிப்பார் இல்லை
தலைவன் இடம்வலம் ஆயிடில் தையல்
தலைவன் இடம்வலம் தன்வழி அஞ்சில்
தலைவன் இடம்வலந் தன்வழி நூறே. 4

---

*விளையும் நன்மைகள் உண்டாம். சகத்திராத்தில் தங்கும் ஞானம் விளையும். உயிரே உலகத் தலைவனுமாவன் என்றவாறு.*

*உள்ளிழுக்கப்படுகின்ற பன்னிரண்டங்குலத்தில் கழிகின்ற நாலங்குலம் கட்டுப்படின், நாக்கு மேலண்ணத்தின் வழியாக, புருவ மத்திவரை செல்வதால் விளையும் அநுபவம் சித்திக்கும். அதற்கும் மேலதாகிய மதி மண்டலத்துறையும் மகிழ்ச்சியும் ஞானமுமுண்டாம் என்பது.*

*இதனால், வாயுப்பயிற்சி ஒன்றேயும் வாழ்நாள் குறைபடாமைக்குக் குறியாதல் கூறப்பட்டது.*

757. ***தெளிவுரை :-*** *இறைவன் கொடுத்த இடைநாடி பிங்கலை நாடி வழிகளைப் பயனுடையனவாகின்ற வகையில் சாதனை செய்பவர் உலகத்து அரியர். அந்நாடிகள் பயனுடையனவாய் விடின், அவற்றால் பஞ்சேந்திரியங்களும் தன்வழிப்படும். அவை தன்வழிப்பட்ட நிலையில் பின்னும் அச்சாதனையைச் செய்யின், அவ்வாறு செய்பவனது வாழ்நாள் நூறாண்டு அளவினதாய்க் குறைவின்றி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *இடைநாடி பிங்கலை நாடிகள் பயனுடையனவாதல் அவை முறையே பிராண வாயுவை உள்வாங்குதற்கும், வெளிவிடுதற்கும் உரியவாம் பொழுதாம். எனவே, அவற்றின் பொருட்டே தரப்பட்டன என்க. தையல் இடம், தலைவன் வலம் என்ற நிரனிறையாகக் கூட்டி, தையல் நல்லாளாகிய சத்தி நாடி இடநாடியாகிய இடகலையாம்; பரம்பதியாகிய சிவபெருமான் நாடி வலது நாடியாகிய பிங்கலையாம்; இந்த இரண்டு நாடிகளில் இயங்குந் தலைவனாகிய பிராணன் அவ்வைந்து நாழிகை இயங்கும். வழியில் இடமும் வலமும் மாறியியங்கில் தலைவனாகிய பரமபதியிடம் ஒன்றி நின்று, வலத்துடன் தன் வழி நூறாக வாழலாம் என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

*சூரியோதயம் முதலாக இடகலை பிங்கலைகள் வழியாகப் பிராணன் அவ்வைந்து நாழிகை மாறியியங்கும் என்பதும், அங்ஙனம்*

**758.** ஏறிய ஆறினில் எண்பது சென்றிடும்
தேறிய ஏழிற் சிறக்கும் வகையெண்ணில்
ஆறொரு பத்தாம் அமர்ந்த இரண்டையுந்
தேறியே நின்று தெளிஇவ் வகையே. **5**

---

*இயங்கும்போது, வெள்ளி முதலிய கிழமைகளில் வலநாடி வழியாகவும் இயக்கந் தொடங்கும் என்பதும், மாறி நடக்கப் பயிற்சி வேண்டும் என்பதும் வாரசரத்துள் வகுக்கப்பட்டுள்ளமை கொண்டு தெளிக.*

*தன் வழி - தனக்கு வினைப்போகத்திற்கு வாயிலாகக் கிடைத்த உடல் நூறு என்பது எண்ணாகு பெயராக நூறாண்டு என்னும் பொருளில் வந்தது.*

*அஞ்சில் என்பதற்கு அஞ்சு விரலளவு கழயின் என்பாரும் உளர்.*

*இதனால், வாயுவசம், இந்திரியவசம், யோக அனுபவம் மூன்றன் கூட்டம் நிறை வாழ்நாட்குக் குறியாதல் கூறப்பட்டது.*

**758.** *தெளிவுரை :- எண்பதும் அறுபதுமாகிய ஆண்டுகள் வாழும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று. ஆறு விரலளவு பூரகமாகப் (வெளியேறும்படியாக) பிராணன் இருக்குமாயின் எண்பது ஆண்டு வாழலாம், ஏழு விரலளவு பூரிக்கப்பட்டு நிலையை ஆராயின் அறுபது ஆண்டு இருக்கலாம். முற்கூறப்பட்ட இவ்விரண்டு நிலைகளையும் தெளிந்து நின்று இவ்வகை தெளிவாயாக என்றவாறு.*

*குறிப்புரை :- இடைநாடி வழியால் பிராண வாயு உட்செல்லின் உடல் வலிமை மிகும். அவ்வாறன்றி அவ்வழியே வெளிச்செல்லு மாயின், உடல் வலிமை குன்றும். ஒவ்வொரு முறையும் மூச்சு வெளிச் சென்று உட்புகும்பொழுது குறைந்தே புகுகின்றது என்பதுமே லெல்லாம் சொல்லப்பட்டது. அக்குறைவு வல நாசியின்வழி நிகழின் தீங்குமிக இல்லை. இடநாடியின் வழி நிகழின், தீங்கு மிகுதியாம். ஆகவே, கன்மத்துக்கு ஈடாகச் சிலர்க்குப் பிராண வாயு நெடுநேரம் வலநாசியின்வழி வெளிப்போதலும், சிலர்க்கு இடநாசியின்வழி நெடுநேரம் வெளிப்போதலும் உளவாகின்றன. அந்நிகழ்ச்சியைச் சரவோட்டம் அறியும் முறையாற் காணின், அவரவரது வாழ்நாள் எல்லையை அறிந்துகொள்ளலாம் என்பது கருத்து. இடைநாடி சத்தியை மிகுவிக்கும் வாயிலாதல் பற்றியே 'சத்தி நாடி' எனப்படுகின்றது. அறியாமையால், உலகர் பிராண வாயுவை அது*

**759.** இவ்வகை எட்டும் இடம்பெற ஓடிடில்
அவ்வகை ஐம்பதே யென்ன அறியலாம்
செவ்வகை ஒன்பதுஞ் சேரவே நின்றிடின்
முவ்வகை யாமது முப்பத்து மூன்றே. **6**

**760.** மும்மூன்றும் ஒன்றும் முடிவுற நின்றிடில்
எண்மூன்றும் நாலும் இடவகை யாய்நிற்கும்
ஐம்மூன்றும் ஓடி அகலவே நின்றிடிற்
பன்மூன்றொ டீராறு பார்க்கலு மாமே. **7**

---

*போகின்ற போக்கிலே விட்டிருப்பர். யோகியர் அதனைத் தம் வழிப்படுத்து முறைப்படி இயங்கச்செய்வர். அம்முறை, "ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்" (தி.10 பா.556) "எங்கே யிருக்கினும் பூரி இடத்திலே" (தி.10 பா.558) "வாமத்தில் ஈரெட்டு மாத்திரை பூரித்தே" (தி.10 பா.561) என மேற்கூறப்பட்டது. இங்கும் வருகின்ற திருமந்திரத்துள், "இடம் பெற ஓடிடில்" எனக் குறிக்கப்படும். அதனால், ஏறுதல் இடநாடியின் வழி என்பது ஆற்றலால் கொள்ளப்பட்டது. "தெளி இவ்வகையே" என்றது சரவோட்டத்தின் பயன் முறையை விளக்கியவாறு. "ஆறொரு பத்து" என்னும் பெயர்ப் பயனிலை வினையின் இயல்பினதாய், "எண்ணில்" என்னும் எச்சத்திற்கு முடிவாயிற்று. 'இவ்வாறாய் அமர்ந்த இரண்டையும்' என்க.*

*இதனால், சர ஓட்டத்தால் வாழ்நாள் எல்லையை அறியும் முறை இரண்டு கூறப்பட்டன.*

**759.** தெளிவுரை :- *இவ்வகை எட்டும் இடம் பெற ஓடிடில் - இவ்வகையாய் எட்டு விரற்கடை சுவாசம் நீண்டு இயங்குமாயின், அவ்வகை ஐம்பதேயென்ன அறியலாம் - அவ்வகை ஆயுள் ஐம்பது ஆண்டுகள் என அறியலாம். செவ்வகை ஒன்பதுஞ் சேரவே நின்றிடின் - செம்மையாய் ஒன்பது விரற்கடை சுவாசம் சேர இயங்குமாயின், முவ்வகையாம் அது முப்பத்துமூன்று - மூத்து அழியும் காலம் முப்பத்துமூன்று ஆண்டுகளாம். மேலும் ஆயுள் அளவு கணக்கிடும் முறை கூறியவாறு.*

760. தெளிவுரை :- *மும்மூன்றும் ஒன்றும் முடிவுற நின்றிடில் - பத்து விரற்கடை சுவாசம் முடிவு பெற நின்றிடில், எண் மூன்றும் நாலும் இடவகையாய் நிற்கும் - இருபத்தெட்டு ஆண்டுகள் வாழலாம்.*

**761.** பார்க்கலு மாகும் பகல்முப் பதுமாகில்
ஆக்கலு மாகுமவ் வாறிரண் டுள்ளிட்டுப்
போக்கலு மாகும் புகலற ஒன்றெனில்
தேக்கலு மாகுந் திருத்திய பத்தே. 8

**762.** ஏயிரு நாளும் இயல்புற ஓடிடிற்
பாயிரு நாலும் பகையற நின்றிடும்
தேய்வுற மூன்றுந் திகழவே நின்றிடில்
ஆயுரு வாறென் றளக்கலு மாமே. 9

**763.** அளக்கும் வகைநாலும் அவ்வழி ஓடில்
விளக்கும் ஒருநாலு மெய்ப்பட நிற்கும்
துளக்கும் வகையைந்துந் தூய்நெறி ஓடில்
களக்க மறமூன்றிற் காணலு மாமே. 10

---

*ஐம்மூன்றும் ஓடி அகலவே நின்றிடில் - பதினைந்து விரற்கடை ஓடி நிற்குமாயின், பன்மூன்றொடு ஈராறு பார்க்கலுமாம் - இருபத்தைந்து ஆண்டுகள் வாழலாம். இதுவும் ஆய்வு அளவு முறை கூறியவாறு.*

*இதனால், அம்முறை, மற்றும் இரண்டு கூறப்பட்டன.*

**761.** *தெளிவுரை :- பிராணவாயு பகல் முப்பது நாழிகையும் இடநாடி வழியே வெளிப்போதுமாயின், 'வாழ்நாள் பன்னிரண்டாண்டு' என்று வரையறுத்துவிடலாம். அதனை அநுபவமாகவும் காண முடியும். இடையே மாற்றம் புகாதொழிய ஒருநாள் முழுதும், (அஃதாவது அறுபது நாழிகை) பிராணவாயு இடை நாடி வழியே உள்வந்து வெளிச்செல்லுமாயின், 'வாழ்நாள் இனிப் பத்தாண்டு' என்று துணியலாம்.*

*குறிப்புரை :- 'பகல் முப்பதும் ஆகில், ஆறிரண்டை ஆக்கலும் ஆகும்; பார்க்கலும் ஆகும்' என்க. 'புகல் அற, ஒன்று உள்ளிட்டுப் போக்கலும் ஆகும் எனில்' என மாற்றுக. ஒன்று, ஒருநாள். தேக்கல் - நிலைநாட்டல்.*

*இதனால், அம்முறை மற்றும் இரண்டு கூறப்பட்டன.*

762. *தெளிவுரை :- பிராணவாயு இரண்டு நாள் அளவு இடைநாடி வழியாக இயங்கின், உயிர் எட்டாண்டுகாறும் இடையூறுறின்றி உடலில் நிற்கும். மூன்றுநாள் இயங்கின், வாழ்நாளை, 'ஆறு ஆண்டு' என்று அளந்து கூறிவிடலாம்.*

764. காணலு மாகுங் கருதிய பத்தோடிற்
காணலு மாகுங் கலந்த இரண்டையும்
காணலு மாகுங் கலப்பற மூவைந்தேற்
காணலு மாகுங் கருத்துற ஒன்றே. 11

765. கருதும் இருபதிற் காணஆ றாகும்
கருதிய ஐயைந்திற் காண்பது மூன்றாம்
கருதும் இருப துடன்ஆறு காணில்
கருதும் இரண்டெனக் காட்டலு மாமே. 12

---

*குறிப்புரை :-* "ஆயுரு" என்பது வடநூல் முடிபு.

இதனால், அம்முறை மற்றும் இரண்டு கூறப்பட்டன.

763. *தெளிவுரை :-* வாழ்நாளை அளந்தறிகின்ற வகையில் நான்கு நாள்கள் பிராணவாயு இடைகலை வழியே இயங்கின், நான்கு ஆண்டுகள் உயிர் உடலிற் பொருந்தி நிற்கும். ஐந்து நாள் அவ்வாறு இயங்கின், தெளிவாக மூன்றாண்டு அளவில் வாழ்நாள் எல்லையைக் காணலாம்.

*குறிப்புரை :-* 'கலக்கம்' என்பது திரிந்து நின்றது.

இதனால், அம்முறை மற்றும் இரண்டு கூறப்பட்டன.

764. *தெளிவுரை :-* பிராண வாயு பத்து நாள் இடை நாடி வழியே இயங்கின், உயிர் உடலிற் கலந்து வாழும் ஆண்டு இரண்டு என்பதை அறியலாம். பதினைந்து நாள் அவ்வாறு இயங்கின், 'வாழ்நாள் ஓர் ஆண்டு' என்பதை மனம் பொருந்தக் கொள்ளலாம்.

*குறிப்புரை :-* 'இரண்டையும்' என்னும் உம்மை இறந்தது தழுவிற்று.

இதனால், அம்முறை மற்றும் இரண்டு கூறப்பட்டன.

765. *தெளிவுரை :-* பிராணவாயு இருபது நாள் இடைநாடி வழியே இயங்கினால், வாழ்நாள் ஆறு திங்களாம். இருபத்தைந்து நாள் இயங்கினால் மூன்று திங்களாம். இருபத்தாறுநாள் இயங்கினால் இரண்டு திங்களாம்.

**766.** காட்டலு மாகுங் கலந்திரு பத்தேழில்
காட்டலு மாகுங் கலந்தெழும் ஒன்றெனக்
காட்டலு மாகுங் கலந்திரு பத்தெட்டிற்
காட்டலு மாகுங் கலந்தஈ ரைந்தே. **13**

**767.** ஈரைந்தும் ஐந்தும் இருமூன்றும் எட்டுக்கும்
பாரஞ்சி நின்ற பகைபத்து நாளாகும்
வாரஞ்செய் கின்ற வகைஆறஞ் சாமாகில்
ஓரஞ்சொ டொன்றொன் றெனவொன்றும் நாளே. **14**

---

*குறிப்புரை :- ஆறு முதலியவை, 'திங்கள்' என்பது ஆற்றலால் கொள்ளக்கிடந்தது.*

*இதனால், அம்முறை மற்றும் மூன்று கூறப்பட்டன.*

**766. தெளிவுரை :-** *பிராணவாயு இருபத்தேழு நாள் இடைநாடி வழியே இயங்கின், அப்பால் ஒரு திங்களே வாழ்நாள் என்பதை மெய்ப்பித்துக் காட்டமுடியும். இருபத்தெட்டுநாள் இயங்கின், அப்பால் பத்து நாள்களே வாழ்நாள் என்று காட்டலாம்.*

*குறிப்புரை :- இயக்கம் இருபத்தேழு நாள் என்பது, ஒரு நாள் கூட இருபத்தெட்டு நாளாகுமாயின், எத்துணைத் தீங்கு மிகுகின்றது என்பது இங்கு ஊன்றி உணரத்தக்கது.*

*இதனால், அம்முறை மற்றும் இரண்டு கூறப்பட்டன.*

**767. தெளிவுரை :-** *பிராணவாயு மேற்கூறியவாறு இருபத்தொன்பது நாள் இயங்கினும் இருபத்தெட்டு நாள் இயங்குதலோடு ஒப்பதேயாம். வேறுபாடில்லை இனி, முப்பது நாள் இயங்கின், வாழ்நாள் அப்பால் ஏழு நாளாகவே நிற்கும்.*

*குறிப்புரை :- பார் அஞ்சி நின்ற பகை - உலகம் அஞ்சுகின்ற பெருந்தீங்கு; இறப்பு. வாரம் - கூறு. 'நாள், ஓர் அஞ்சொடு, ஒன்று, ஒன்று என ஒன்றும்' எனக் கூட்டுக.*

*இதனால், அம்முறை மற்றும் இரண்டு கூறப்பட்டன.*

**768. தெளிவுரை :-** *பிராணவாயு இடை நாடி வழியே*

**768.** ஒன்றிய நாள்கள் ஒருமுப்பத் தொன்றாகிற்
கன்றிய நாளுங் கருத்துற மூன்றாகும்
சென்றுயிர் நாலெட்டுஞ் சேரவே நின்றிடின்
மன்றியல் பாகு மனையில் இரண்டே. 15

**769.** மனையினில் ஒன்றாகும் மாதம்மும் மூன்றும்
சுனையில்ஒன் றாகத் தொனித்தனன் நந்தி
வினையற ஓங்கி வெளிசெய்து நின்றால்
தனையுற நின்ற தலைவனு மாமே. 16

---

*முப்பத்தொரு நாள் இயங்குமாயின், வாழ்நாள் அப்பால் மூன்று நாளே. முப்பத்திரண்டு நாள் இயங்கின், அப்பால் இரண்டு நாளில் அவ்வுயிர் உடலை விட்டுச்செல்ல, அது வாழ்ந்த இல்லத்தில் பலர் கூடி ஒலிக்கின்ற மன்றத்தின் இயல்பு தோன்றுவதாகும்.*

*குறிப்புரை :- கன்றிய நாள் - உயிர் உடலில் அழுந்தியிருக்கும் நாள். "சென்று" என்பது, 'செல்ல' என்பதன் திரிபு.*

*இதனால், அம்முறை மற்றும் இரண்டு கூறப்பட்டன.*

**769.** *தெளிவுரை :- உயிர் வளர்க்கின்ற மாதங்கள் முதற்கண் ஓர் அறையில் ஒன்பதும், பின் நீர்க்குட்டத்தில் ஒன்றும் என்று எங்கள் நந்திபெருமான் திருவாய் மலர்ந்தருளினார். (அஃதாவது தாயின் வயிற்றில் ஒன்பது மாதம் உருப்பெற்று வளர்ந்து, பத்தாம் மாதம் நீரில் மிதந்து கிடக்கும் என்றவாறு) பத்தாம் மாதம் அவ்விடத்தை விட்டு அகன்று திருவருள் உணர்வோடு சிறப்புற்று வெளிவருமாயின், அது தன்னைப் பெறுதலாகிய பேற்றினால் உலகர்க்குத் தலைவனாதலும் கூடும்.*

*குறிப்புரை :- எனவே, 'அவ்வாறின்றி வினைவயப்பட்டே வெளி வருமாயின், அளவற்ற உயிர்களுள் தானும் ஒன்றாய், மேற்கூறிய வாழ்நாள் எல்லைகளுள் ஒன்றைப் பெற்றுக் கழியும்' என்றதாயிற்று. ஒன்றாகும் - பொருந்துதல் உடையதாம்.*

*இதனால், யோக முயற்சி முன்னைத் தவம் உடையர்க்கே கூடும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

*தவமும் தவமுடையார்க் காகும்; அவம் அதனை*
*அஃதிலார் மேற்கொள் வது. - குறள், 262*

*என்றார் திருவள்ளுவ நாயனாரும்.*

770. ஆரு மறியார் அளக்கின்ற வன்னியை
ஆரு மறியார் அளக்கின்ற வாயுவை
ஆரு மறியார் அழிகின்ற அப்பொருள்
ஆரு மறியார் அறிவறிந் தேனே. 17

771. அறிவது வாயுவொ டைந்தறி வாயது
அறிவா வதுதான் உலகுயிர் அத்தின்
பிறிவுசெய் யாவகை பேணிஉள் நாடிற்
செறிவது நின்று திகழும் அதுவே. 18

---

**770.** *தெளிவுரை :- வாழ்நாளை அளந்தறிதற்குக் கருவியாகிய (எனவே, உயிர் வாழ்தற்கு முதலாகிய) மூலாக்கினி, பிராணவாயு இவற்றின் பெருமைகளை அறிகின்றவர் உலகில் எவரும் இல்லை. அதனால், அவற்றை ஒழுங்குபட நிறுத்தாமையால் விரைவில் நீங்குகின்ற உயிரினது பெருமையையும் அறிகின்றவர் இல்லை. யான் திருவருளால் அவ்விரண்டையும் அறியப்பெற்றேன்.*

*குறிப்புரை :- எனவே, 'யான் மேற்கூறியவை ஒருவரும் அறிந்திராத அருமறை' என்றவாறு.*

*இதனால், ஆயுள் பரீட்சை முறையின் அருமை கூறப்பட்டது.*

771. *தெளிவுரை :- அறியவேண்டுவது, பிராணவாயுவின் இயக்கமும், அதனால் நிலைபெறுகின்ற ஐம்பொறிகளாகிய அறிவும் ஆகியவற்றையே, 'அறிவு' என்று சொல்லப்படுவது எதுவோ அதுவே, உலகில் 'உயிர்' என்று சுட்டப்படுவது. அவ்வுயிர் உலகினின்றும் பிரிந்து போகாதவாறு அதற்குரிய முறைகளை அறிந்து, அறிந்த வழியிலே பேணிக் காப்பின், அது உடம்பில் அழுத்தம் உடையதாய் நிலைபெற்று விளங்கும்.*

*குறிப்புரை :- பின்னர் வரும், பிறிவு செய்யா வகையை அறிதற்கு. முதற்கண், "அறிவது வாயுவொடு ஐந்தறிவாய" என்றார். "ஆய" என்பது வினைப்பெயர். அதனிடத்து, 'ஆயவற்றை' என உருபு விரித்துக் கொள்க. 'அதனின்' என்பது, "அத்தின்" என மருவிற்று. "அது" என்றது, முற்போந்த உலகினை.*

*இதனால், 'அறிவுடையார் ஆயுள் நீட்டிக்கும் முறையை அறிந்து அவ்வழியில் நிற்றல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**772.** **அதுவரு ளும்மரு ளான துலகம்**
**பொதுவரு ளும்புக ழாளர்க்கு நாளும்**
**மதுவரு ளும்மலர் மங்கையர் செல்வி**
**இதுவருள் செய்யும் இறைஅவ னாமே. 19**

**773.** **பிறப்பது சூழ்ந்த பெருந்தகை நந்தி**
**குறிப்பது கூடிய கோலக் குரம்பைப்**
**பழப்பதி யாவது பற்றறும் பாசம்**
**அழப்படி செய்வார்க் ககலும் மதியே. 20**

---

**772. தெளிவுரை :-** *'அது' என்று பொதுமையிற் சுட்டப்படும் முதற்பொருள் செய்கின்ற அருள் அனைத்துயிர்க்கும் பொதுவாக உலகின்பத்தையும், உயர்ந்தோர்க்குச் சிறப்பாகப் பேரின்பத்தையும் தரும். அவ்வருளும், செந்தாமரை வெண்டாமரை மலர்களில் வீற்றிருக்கின்ற திருமகள், கலைமகள் என்னும் இருவர்க்கும் தலைவியாகிய உமையே. அதனால், வாழ்நாளை நீட்டிக்கும் அருளைப் புரியும் இறைவன், அவ்வுமைக்குத் தலைவனாகிய சிவபெருமானே.*

*குறிப்புரை :- 'அதனால் அப்பெருமானை நினைந்தே வாழ்நாள் நீட்டிப்பில் முயல்க' என்பது குறிப்பெச்சம். "அருளும்" மூன்றில் முன்னது எச்சம்; ஏனையவை முற்று. 'உலகத்திற்கு' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. மது, சிவானந்தத் தேன்.*

*இதனால், வாழ்நாள் நீட்டிப்பின் முயற்சிக்கு இன்றியமையாத தொரு துணை கூறப்பட்டது.*

**773. தெளிவுரை :-** *'உயிர்கள் பிறத்தல் வேண்டும்' என்று கருதிய இறைவனது குறிப்பின்படி அவற்றிற்குக் கிடைத்த அழகிய உடம்பு, 'பிஞ்சு, காய், செங்காய்' என்று ஆகி முடிவில் பழமாய்ப் பழுத்து விழுந்துவிடும். அதற்குள் பாசங்கள் ஆழ்ந்து போம்படி அதற்குரிய முறைகளில் பழகினால், பாசம் விலகி, ஞானம் மிகும்.*

*இவ்வண்ணம் சிருட்டியைத் திருவுளத்தடைத்த சிவம், மாயையை முதற்காரணமாகக் கொண்டு படைக்கக் கருதிய இந்த அழகிய உடல், உயிர்களுக்கு மிகப் பழைய இடமாகும் ஆகையால் இதனிடம் வைத்த பற்றினை நீக்குங்கள். உம்மைப் பந்தித்து நின்ற பாசங்கள் அழ அதனது வலியை ஒடுக்குவார்க்கு ஞானம் பெருகும் என்றவாறு.*

*கோலக்குரம்பை பழப்பதியாவது என்றதால், யாக்கை நிலையாமையும், அது வினைப்போகத்தை நுகர்த்த அருளப் பெற்றது என்பதும், ஆதலால் அதன் கண் வைத்த பற்றினை அறுக்க வேண்டும் என்பதும், அங்ஙனம், பற்றறுப்பின் பற்றிற்குக் காரணமாகிய பாசங்கள் விலகும் என்பதும், பாசம்விலக ஞானம் மலரும் என்பதும் விளக்கப் பெறுகின்றன.*

***குறிப்புரை :-*** ***'அவ்வாறு முயலுதற்பொருட்டே, இவ்வாயுள் பரீட்சை கூறப்பட்டது' என்பது குறிப்பெச்சம். 'குறிப்பதனால்' என உருபு விரிக்க. உடம்பை, 'குரம்பை, பதி' என்பனவாகக் குறித்தார். ''ஆவது, அறும்'' என்பன முற்றுக்கள். ''பற்றறும்'' என்பதை, 'செய்வார்க்கு' என்பதன் பின் கூட்டுக. உரைக்க - 'ஆழ' என்பது குறுகி நின்றது. படி - முறை.***

***இதனால், இவ்வதிகாரத்திற்குக் காரணம் கூறப்பட்டது.***

## 16. வார சரம்

774. வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதன்இடம்
ஒள்ளிய மந்தன் இரவிசெவ் வாய்வலம்
வள்ளிய பொன்னே வளரும் பிறையிடம்
தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே. 1

775. வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதன்மூன்றும்
தள்ளி இடத்தே தயங்குமே யாமாகில்
ஒள்ளிய காயத்துக் கூன மிலையென்று
வள்ளல் நமக்கு மகிழ்ந்துரைத் தானே. 2

---

*ஆயுள் பரீட்சையில் சரவோட்டம் இடம்பெற்றமையால், அதனோடு இயைய அச்சர வோட்டத்தின் இயல்பு இதுமுதல் ஏழு திருமந்திரங்களால் உணர்த்துகின்றார். அவ்வியல்பு, கிழமைகளின் வைத்து உணர்த்தப்படுதலின், இவ்வதிகாரம், 'வார சரம்' என்னும் பெயர்த்தாயிற்று. வாரம் - நாள், கிழமை.*

*'சரவோட்டம்' என்பது, பிராணனின் இயல்பான இயக்கம், 'பிராணயாமம்' என்பது, யோகி தன் முயற்சியால் பிராணனைத் தன் விருப்பப்படி இயக்குதல். ஆகவே, இவை இரண்டும் தம்முள் வேறாதல் அறிக. வாரசரம் - இன்னின்ன நாட்கள் பிராணன் இவ்வண்ணமாக இன்ன நாடியின் வழியாக இயங்கும் என்று அறிதலாம்.*

774. ***தெளிவுரை :-*** ***கிழமைகள் ஏழனுள், 'வெள்ளி, திங்கள், புதன் என்னும் மூன்றில் இடநாடி வழியாகவும், 'சனி, ஞாயிறு, செவ்வாய்' என்னும் மூன்றில் வலநாடி வழியாகவும், வியாழனில் வளர்பிறையாயின் இடநாடி வழியாகவும், தேய்பிறையாயின் வலநாடி வழியாகவும் இயங்குதல் உடல் நலத்திற்கு ஏற்புடைய இயற்கைப் பிராண இயக்கமாகும். இவ்வியக்கம் சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னர் உறக்கத்தை விட்டு எழுகின்ற காலத்து முதற்கண் இயங்கும் இயக்கமாம். பின்னர் ஐந்து நாழிகைக்கு ஒருமுறை மாறும். நாழிகைக் கணக்கில் யோக நூல்களுள் கருத்து வேறுபாடுண்டு ஞானசர நூல் என்னும் தமிழ்நூல் மூன்று நாழிகைக்கு ஒரு முறை மாறும் என்று அறிவிக்கும்.***

***குறிப்புரை :-*** *எனவே, மாறி இயங்குதல் உடல் நலத்திற்குப்*

**776. செவ்வாய் வியாழன் சனிஞாயி றேஎன்னும்**
**இவ்வா றறிகின்ற யோகி இறைவனே**
**ஒவ்வாத வாயு வலத்துப் புரியவிட்**
**டவ்வா றறிவார்க்கவ் வானந்த மாமே. 3**

---

பொருந்தாது என்பதாம். மந்தன் - சனி. இரவி - ஞாயிறு. பொன் - வியாழன். இடம் - இடநாடி. வலம் - வலநாடி (அ) பிங்கலை நாடி.

*இதனால், சர ஓட்டத்தின் இயற்கைத் தன்மை கூறப்பட்டது.*

**775.** *தெளிவுரை :-* *'பிராணன், மேற்கூறியவாறு, குறித்த கிழமைகளில், குறித்த நாடியின் வழியே இயங்குமாயின், ஞானத்தைப் பெறுதற்கு வாயிலாகிய உடம்பிற்கு யாதொரு குறையும் உண்டாகாது' என்று அருள் வள்ளலாகிய நந்திபெருமான் எங்கட்குத் திருவுளம் உவந்து அருளிச் செய்தார்.*

776. *தெளிவுரை :-* *பிராணன், மேற்கூறியவாறு செவ்வாய், வியாழன், சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் வலநாடி வழியே இயங்குதல் வேண்டும் என்பதை அறிந்த யோகியை, 'சிவன்' என்றே சொல்லலாம். அஃது அவ்வாறு இயங்காது மாறி நிகழும்பொழுது அதனை ஒத்த முறையில் இயங்கச்செய்து அதன் பயனை அறிபவர்க்கு, அப்பயன் சிவானந்தமாய் முடியும்.*

*குறிப்புரை :-* *மேலைத் திருமந்திரத்துள், "காயத்துக்கு ஊனம் இல்லை" என்றதனையும், இத் திருமந்திரத்துள், "ஒவ்வாத வாயு வலத்து (ஒவ்வுமாறு) புரியவிட்டு'' என்றதனையும் இரண்டற்கும் பொதுவாமாறு கூட்டிப்பொருள் கொள்க. அங்ஙனங் கொள்ளவே, 'பிராணன் முதலிற் கூறிய இயல்பில் இயங்காது மாறி இயங்கின், அஃது, உடல், இயற்கை நிலையில் இல்லாமைக்கு அறிகுறியாய், மேலும் உடலின் இயற்கை நிலையைக் கெடச்செய்யும்' என்பதும், 'அதனால் யோகியானவன் தனது பிராணயாம முறையால், ஒவ்வா இயக்கத்தை மாற்றி, ஒத்த இயக்கத்ததாக ஆக்குதல் வேண்டும்' என்பதும் போதரும். இம்மந்திரத்துள் வலநாடி இயக்கத்திற்குச் சொல்லியனயாவும் இடைநாடி இயக்கத்திற்கும் பொருந்துதல் எளிதின் அறியப்படும்.*

*'பிராணன் எஞ்ஞான்றும் ஒரு நாடி வழியாகவே இயங்குதலோ, அல்லது மாறி நிகழினும் அம்மாற்றம் முன்னை நிலையொடு பின்னை நிலை ஒத்த அளவினதாய் நில்லாது மிக்காதல் குறைந்தாதல் நிற்றலோ*

777. மாறி வரும்இரு பால்மதி வெய்யவன்
ஏறி இழியும் இடைபிங் கலையிடை
ஊறும் உயிர்நடு வேஉயிர் உக்கிரம்
தேறி அறிமின் தெரிந்து தெளிந்தே. 4

---

*உளதாயின், உடல் தன் இயற்கை நிலைகெடும்' என்பது இம்மூன்று திருமந்திரங்களாலும் அறியப்படும். படவே, 'அவ் இரு வகையும் ஆகாது ஒரு நிகரான மாற்றத்ததாமாறு கிழமைக் கணக்கில் வைத்து அமைக்கப்பட்டது' என்பதும் உணர்ந்து கொள்ளப்படும்.*

*இவ்விரண்டு திருமந்திரங்களாலும் சர ஓட்டத்தின் ஒத்த நிலையது பயன் கூறப்பட்டது.*

**777.** *தெளிவுரை :- இடை நாடி பிங்கலை நாடிகளாகிய வழியால், முறையே, 'சந்திர கலை' என்றும், 'சூரிய கலை' என்றும் ஆகின்ற பிராணன், எஞ்ஞான்றும் அவ்வாறே இயங்கி அப்பெயரையே பெற்று நில்லாமல் மாறி வரும். (அஃதாவது, இடை நாடியில் இயங்கி, 'சந்திர கலை' எனப்பெயர் பெற்று நின்ற பிராணனே அந்நிலையினின்றும் மாறிப் பிங்கலையில் இயங்கி, 'சூரிய கலை' எனப்பெயர் பெற்று நிற்கும். பின்னும் அச் சூரிய கலைதானே சந்திர கலையாய் மாறும். இம் மாற்றத்திற்கு முடிவில்லை) இனி, பிராணன் மேற்கூறியவாறு, 'சந்திர கலை, சூரிய கலை' எனப்பெயர் பெறும்பொழுது, அவ்வந் நாடியின் வழி முன்னர் வெளிச் செல்லுதலையும், பின்னர் உட்புகுதலையும் உடையதாய் இருக்கும். நீர் ஊற்றுபோல இங்ஙனம் சுரந்து முடிவின்றிச் சர ஓட்டமாய் ஓடுகின்ற பிராணன், மேற்கூறிய இரு நாடிகளின் வழி ஓடாது, நடுநாடி (சுழுமுனை நாடி) வழியே இயங்குமாயின், (அஃதாவது, பிராணாயாமமாய் அமையுமாயின்), அஃது உடற்கே யன்றி, உயிர்க்கும் வலிமை தருவதாம். ஆகவே, அதனை அறிந்து, உலகீர், பிராணனை நடுநாடியிற் செலுத்தும் முறையைக் குருமுகமாகக் கேட்டுச் சிந்தித்துத் தெளியுங்கள். அதுவே தியானம், பூசை முதலிய கடவுட் காரியங்களுக்கு நன்மை பயப்பதாம்.*

*குறிப்புரை :- 'மதி வெய்யவன் இரு பால் மாறி வரும்; அவை இடை பிங்கலையிடை ஏறி இழியும்' என்க. முதல் அடியால், 'மதி, வெய்யவன்' என்பன பொருள் வேறாதலைக் குறியாது, ஒரு பொருள் தானே இடம் பற்றிப்பெறும் நிலை வேறுபாட்டினையே குறிக்கும் என்பது உணர்த்தியவாறு. இரண்டாம் அடி, அஃது அவ்வப்பெயர்*

778. உதித்து வலத்திடம் போகின்ற போது
அதிர்த்தஞ்சி ஓடுத லாம்அகன் றாரும்
உதித்தது வேமிக ஓடிடு மாகில்
உதித்த இராசி யுணர்ந்துகொள் உற்றே. 5

779. நடுவுநில் லாமல் இடம்வலம் ஓடி
அடுகின்ற வாயுவை அந்தணன் கூடி
யிடுகின்ற வாறுசென் றின்பணி சேர
முடிகின்ற தீபத்தின் முன்னுண்டென் றானே. 6

---

*பெறுங்காலத்தை உணர்த்திற்று. பால் - இடமும், வலமும் ஆகிய பக்கங்கள். 'இருபாற் கண்' என உருபு விரிக்க. மாறுதல் - வேறிடம் செல்லுதல். வருதல் - முன்னையிடத்திற்கு மீளுதல். 'இருபாற்கண் வரும்' என இயையும். எனவே, ஏழாவது இறுதிக்கண் தொக்கதாம். மதியும், வெய்யவனும் ஆகுபெயர்கள். உக்கிரம் - ஆற்றல்.*

*"உயிர்" இரண்டனுள் முன்னது பிராணன்; பின்னது ஆன்மா "நடுவே" என்பதன் பின், 'இயங்கின்' என்பதும், 'உக்கிரம்' என்பதன்பின் 'ஆம்' என்பதும் எஞ்சி நின்றன. 'இதனைத் தேறி' என எடுத்துக் கொண்டு, 'அறிமின்' என்பதற்கு, 'நடுவே இயங்குதற்குரிய வழியை' என்னும் செயற்படுபொருள் வருவித்து முடிக்க. 'குருமுகமாக' என்பது ஆற்றலாற் கொள்ளக் கிடந்தது.*

*இதனால், சரவோட்டம் இரு நிலையது ஆமாறும், பின்னும் அதுதானே பிராணாயாமமாய்ப் பயன் தருமாறும், அப்பயனை எய்துமாறும் கூறப்பட்டன.*

***778. தெளிவுரை :- கலை மாறுகின்றபோது உண்டாகின்ற மெய்ப்பாடும், கலை மாறாமல் ஓடுகின்றதன் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.***

***பிராணன் தோன்றி வலம் இடம் மாறுகின்ற போது, நடுக்கத்துடன் அஞ்சியோடும். இங்ஙனம் ஓடுதல் அகன்று நிறைந்த உதித்த நாடியிலே மிக ஓடுமாயின் உதித்த இராசியைப் பொருந்தி அறிக என்றவாறு.***

***பிராணன் கலை மாறியியங்கத் தொடங்கும் போது நடுக்கத்தோடு, அஞ்சி ஓடும்; என்றது உடலில் நடுக்கமும், அச்சமும்***

780. ஆயும்பொருளும் அணிமலர் மேலது
வாயு விதமும் பதினா றுளவலி
போய மனத்தைப் பொருகின்ற ஆதாரம்
ஆயவும் நாளு முகூர்த்தமு மாமே. 7

---

*தோன்ற மாறும். இந்த நிலை அகன்று உதித்த நாடியிலே நிலைத்து நிறைந்து ஓடுமாயின் பிராணனியக்கம் தொடங்கிய ஒழுங்கினை ஆராய்ந்து அறிக என்பது கருத்து.*

**779. தெளிவுரை :-** *சுழுமுனை நாடியில் பிராணனை நிறுத்தத் தீபதரிசனமாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று. நடுநாடியில் நில்லாமல், இடம் வலமாக மடை மாறிச் சென்று வருந்துகின்ற பிராணனை யோகியானவன் நாடிகள் கூடுகின்ற சந்நிதியாகிய சுழுமுனையில் இனிய குண்டலினி சென்றுசேர நடுநாடியின் முடிவில் விளக்கொளியின் முன் உண்டு என்று குருநாதன் கூறினான் என்றவாறு.*

*இடகலை பிங்கலை வழியாகப் பிராணன் இயங்குகிற போது உலகியலிற் கிடந்து உலைதல் நேரும், அங்ஙனமாவது பிராணனைக் குண்டலினியோடு நடுநாடியாகிய (கூடியிடுகின்ற ஆறு - நாடிகள் ஒத்தியங்குகின்ற நெறியாகிய) சுழுமுனையிற் செலுத்தின் நடுநாடியினுச்சியில் விளங்கும் தீபத்தின் முன் இருக்கலாம், அதாவது தீபதரிசனமாம் என்பது கருத்து. நடுவு நிற்றல் - இரு நாடிகள் வழியாய்ச் சுவாசம் ஒத்து வெளிப்படுதல். பணி - பாம்பு. அவ்வடிவான குண்டலினியை உணர்த்திற்று. முடிநின்ற தீபத்தின் எனவும் பாடம். தீபத்தின் முன் ஆன்மாவாகிய நீ உண்டு என வருவித்துப் பொருள் காண்க.*

*இதனால், யோகப்பயிற்சி சத்திநிபாதத்திற்கு ஏதுவாதல் கூறும் முகத்தால், 'அப்பயிற்சியை மேற்கொள்ளுதலே சரவோட்டத்தின் இயல்புணர்தற்குப் பயன்' என்பது கூறப்பட்டது.*

**780. தெளிவுரை :-** *ஆராய்ந்து உணரத்தக்க மெய்ப்பொருளும் ஆயிர இதழ்களையுடைய, உச்சித் தாமரை மலரில் உள்ளது. அதனை அடைதற்குப் பிராணாயாமமும் பூரகம் முதலாக உள்ளது. அந்தப் பிராணயாமத்தால் ஓட்டம் நீங்கிய மனத்தைத் தாங்குகின்ற ஆதார சக்கரங்களும் தன்னுள்ளே உள்ளன. ஆகவே, ஆதார நிராதார யோகங்களால் அம் மெய்ப்பொருளைக் காணும் பயிற்சியே, யோகிக்கு, முகூர்த்தம், நாள், ஆயுள் ஆகிய எல்லாவகைக் காலமுமாய் நிற்கும்.*

***குறிப்புரை :-*** *ஆயுள், ஆண்டு, மாதம், நாள், முகூர்த்தம் முதலியன சரம் பற்றியே விளைவன என்பதுணர்த்துதல் நுதலிற்று.*

*ஆராயப் பெறுதலாகிய பரம்பொருள் பிரமரந்திரத்திலுள்ள ஆயிர இதழ்த் தாமரை மலரின் மேலது. பிராண வாயுவின் வகைகளும் பதினாறுள்ளன, தன்னாற்றல் கெட்ட மனத்தை தாங்குகிற ஆதாரங் களாக ஆயுள், நாள், முகூர்த்தங்கள் இவையாம் என்றவாறு.*

*வலி போய் மனம் என்பது வலிபோயம் மனம் என விரித்தல் விகாரம் பெற்றது, பொருகின்ற - பொருவுகின்ற. தாங்குகின்ற என்பதாம்.*

*ஆயும் பொருள் - ஆராயப்படும் பொருளாகிய சிவச்சோதி அணிமலர்மேல - அழகிய நிரலான ஆயிர இதழ்களையுடைய தாமரை மலர் மேலுள்ளது. வாயுவிதம் பதினாறுள. பிராணவாயு பொருந்தும் ஆதார பேதங்களால் அவ்வாயுவும் பதினாறாக உள்ளன. பதினாறு ஆதாரங்களாவன - அங்குட்டம், பரடு, முழந்தாள், தொடை, பீஜத்தின் கீழ் நரம்பு, இலிங்கம், நாபி, இருதயம், மிடறு, கழுத்து, நாக்கு, மூக்கு, புருவநடு, நெற்றி, சிரசு, பிரம ரந்திரம் எனப்படும் இவை சோடசாதாரம் எனப்படும்.*

*இதனால், 'யோகத்திற்கு உரிய உடம்பு வாய்க்கப் பெற்றோர் அதனைச் செய்யாது பொழுது போக்குதல் குற்றம்' என்பது கூறும் முகத்தால், 'யோகத்தில் ஊக்கம் உண்டாதற்குச் சரவோட்ட முறையை அறிதல் தக்கது' என்பது கூறப்பட்டது.*

*சரவோட்ட முறையை உலகர் உலகப் பயன் கைகூடுமாற்றை அறிந்துகொள்ளும் குறியாம் அளவிற்கே உணர முற்படுவர் என்க.*

## 17. வார சூலம்

781. வாரத்திற் சூலம் வரும்வழி கூறுங்கால்
நேரொத்த திங்கள் சனிக்கிழக் கேயாகும்
பாரொத்த சேய்புதன் உத்தரம் பானுநாள்
நேரொத்த வெள்ளி குடக்காக நிற்குமே. 1

---

*இனி, இரண்டு திருமந்திரங்களால் வாரசூலம் உணர்த்துகின்றார்.*

*'சிவபெருமான் தனது சூலப்படையை ஒவ்வொரு கிழமையில் ஒவ்வொரு திக்கில் வைக்கின்றான்' என்பதும் 'அதனால் அச்சூலம் உள்ள திக்கினை நோக்கிப் பயணம் செய்தால் தீங்கு விளையும்' என்பதும் சோதிடநூற்கொள்கைகள். 'யோகம் பிருதிவி மண்டலத்தினின்றும் சந்திர மண்டலத்திற்குச் செல்லும் பயணமாதலின்', அதனைச் சூலம் உள்ள திசையை நோக்கியிருந்து தொடங்கலாகாது என்றற்கு இது கூறுகின்றார். மேலையதிகாரத்தில் வாரம் இயைபு பட்டமையின், அஃதே பற்றி இதனைக் கூறுதலும் ஈண்டு இயைபுடைத்தாயிற்று. நற்காரியங்களுக்குப் பயணம் செல்லத் தகாத சூலம் தோன்றிய திக்குகளை உணர்த்தும் இப்பகுதி வாரசூலம் எனப்படும்.*

781. ***தெளிவுரை :-*** *சிவபெருமானது சூலம் மாறி மாறி வருகின்ற திசைகளைச் சொல்லுமிடத்து, திங்களும், சனியுமாகிய கிழமைகளில் கிழக்காம். செவ்வாயும், புதனுமாகிய கிழமைகளில் வடக்காம். ஞாயிறும், வெள்ளியுமாகிய கிழமைகளில் மேற்காம். இக்கிழமைகளில் சூலம் இவ்வாறாக நிற்கும்.*

***குறிப்புரை :-*** *எஞ்சிய கிழமைகளில் நிற்கும் திசையை அடுத்து வரும் திருமந்திரத்திற் காண்க. அத்திருமந்திரத்தில், "அக்கணி சூலம்" என வருமாறே, இத்திருமந்திரத்திலும், "சூலம்" என்பதுடன் "அக்கணி" என்பதனைக் கூட்டிப் பொருள்கொள்க. பார் ஒத்தல் - நிலத்திற்குப் பொருந்துதல். செவ்வாயை 'நில மகன்' (நிலத்திற்கு உரிமையுடையவன்) எனச் சோதிடநூல் கூறும்.*

782. ***தெளிவுரை :-*** *வியாழக்கிழமைகளில் சூலம் இருக்கும் திசை தெற்காகும். சிவபெருமானுடைய சூலம் (பயணம் செய்பவனுக்கும், யோகிக்கும்) இடப் பக்கத்திலும், பிற்பக்கத்திலும் இருப்பின்*

**782.** **தெக்கண மாகும் வியாழத்துச் சேர்திசை**
**அக்கணி சூலமும் ஆம்இடம் பின்னாகில்**
**துக்கமும் இல்லை வலம்முன்னே தோன்றிடின்**
**மிக்கது மேல்வினை மேன்மேல் விளையுமே.** **2**

---

*ஏற்புடையதாகும். ஆகவே, அப்பொழுது அவர்கட்குத் தீங்கு இல்லை. வலப் பக்கத்திலும், முற்பக்கத்திலும் இருப்பின் தீங்கு மிக விளையும்.*

| வ.எண் | நாட்கள் | நன்மைக்காகச்செல்ல வேண்டிய திசை |
|---|---|---|
| 1. | ஞாயிறு, செவ்வாய், புதன், வெள்ளி | கிழக்கு |
| 2. | திங்கள், வியாழன், சனி | மேற்கு |
| 3. | ஞாயிறு, வியாழன், வெள்ளி | வடக்கு |
| 4. | திங்கள், செவ்வாய், புதன், சனி | தெற்கு |

| வ.எண் | நாட்கள் | நன்மைக்காகச்செல்ல வேண்டிய திசை |
|---|---|---|
| 1. | ஞாயிறு | கிழக்கு, வடக்கு |
| 2. | திங்கள் | மேற்கு, தெற்கு |
| 3. | செவ்வாய் | கிழக்கு, தெற்கு |
| 4. | புதன் | கிழக்கு, தெற்கு |
| 5. | வியாழன் | மேற்கு, வடக்கு |
| 6. | வெள்ளி | கிழக்கு, வடக்கு |
| 7. | சனி | மேற்கு, தெற்கு |

*குறிப்புரை :- அக்கு அணி - எலும்பை அணிந்தவன். உம்மை இரண்டும் அசைநிலைகள். 'சூலம் இடம் பின் ஆகில் ஆம்; துக்கம் இல்லை' எனவும், வலம் முன் தோன்றிடில் மிக்கதாகிய மேல்வினை மேன்மேல் விளையும் எனவும் கூட்டி வினை முடிவுசெய்க.*

*இவ் இரண்டு திருமந்திரங்களாலும் கூறப்பட்ட பொருள்கள் சோதிட நூல்களிலும் இவ்வாறே கூறப்படுகின்றன.*

## 18. கேசரி யோகம்

783. கட்டக் கழன்றுகீழ் நான்றுவீ ழாமலே
அட்டத்தைக் கட்டி அடுப்பை அணைகோலி
விட்டத்தைப் பூட்டிப்பின் மேற்பையைத் தாட்கோத்து
நட்ட மிருக்க நமனில்லை தானே. 1

---

*கேசரி என்பது ஆகாயம் அல்லது சிங்கம் என்று பொருள். யோகம் என்பது சேர்க்கை. கேசரி யோகமாவது, சிங்கத்தைப் போன்று மேல் நோக்கிப் பார்வையைச் செலுத்தியிருப்பதாகும். இந்த யோகத்தால் சாதகர் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஆற்றலைப் பெறுவர். சரியை முதலிய நான்கனுள் யோகத்தையே இத்தந்திரத்துட் கூற எடுத்துக்கொண்டு, யோகத்தின் உறுப்புக்களையும், அதன் பவ நிலை, சிவ நிலைகளையும், அவற்றின் பயனையும் கூறியபின், யோகத்திற்கு வேண்டப்படும் கால நிலை, சர நிலை, சூல நிலை ஆகியவற்றையும் கூறிய நாயனார், இங்கு நின்றும் மேற்கூறிய உறுப்புக்களையும், நிலைகளையும் உடைய அவ்யோகத்தின் சிறப்புடைய சில வகைகளைக் கூறுவான் தொடங்கி, முதற்கண் இருபத்தாறு திருமந்திரங்களால் கேசரி யோகம் உணர்த்துகின்றார். இடைநிலை பிராசாத யோகமும் சிவ நிலையேயாதல் அறிக.*

783. ***தெளிவுரை :-*** *கட்டக் கழன்று கீழ்நான்று வீழாமல் அட்டத்தைக் கட்டி - பிராணன் கீழே இறங்கி வராமல் அண்ணாக்கில் கட்டி, அடுப்பை அணைகோலி - பின் அபானன் குதம் வழியாகவோ குறி வழியாகவோ போகாது குதத்தைச் சுருக்கி நிறுத்தி, விட்டத்தைப் பூட்டி - பின் இரு கண் பார்வைகளையும் ஒன்றாக்கி, மேற்பையைத் தாட்கோத்து நட்டமிருக்க - அடுத்து மனத்தைச் சுழுமுனை வழியாகப் பாயும் பிராணனில் நிறுத்தியிருக்க, நமனில்லை - உடலைத் தாண்டின நிலைக்குச் சென்றமையால் காலத்தைக் கடக்கலாம். நட்டு இருத்தல் - உடலை அசையாது நிமிர்த்திருத்தல். "நமன் இல்லை" என்றது, 'யோகம் வாய்ப்புடையதாகும்' என்றபடி, இவ் ஆதனத்தை இங்கு முதற்கண் வலியுறுத்திக் கூறவே, 'கேசரி யோகம்' என்பது ஆதனத்தாற் பெற்ற பெயர் என்பது போந்தது. பிற ஆதனங்களிலிருந்து செய்யும் யோகங்களிலும் இது மேலானது ஆதலால் இதனையே நாயனார் சிறந்தெடுத்து உணர்த்துகின்றார். இதன் மேன்மை வருகின்ற திருமந்திரங்களுட் காணப்படும் இதனால், கேசரி யோகத்தின் இருக்கை நிலை கூறப்பட்டது.*

784. வண்ணான் ஒலிக்குஞ் சதுரப் பலகைமேற்
கண்ணாறு மோழை படமாற் கரைகட்டி
விண்ணாறு பாய்ச்சிக் குளத்தை நிரப்பினால்
அண்ணாந்து பார்க்க அழுக்கற்ற வாறே. 2

---

***குறிப்புரை :-*** *நாலுதல் - தொங்குதல். அட்டம் - அண்ணாக்குப் பிரதேசம். அட்டத்தைக் கட்டுதலாவது, சுழுமுனை வழியாய்ப் பாய்ந்து பிரமரந்திரம் நோக்கிச் செல்லும் பிராணன் கீழே இறங்கி வராமல் அண்ணாக்கில் கட்டி நிறுத்துதல். இது சாலந்திர பந்தனமாகும் என்க. அடுப்பு - அக்கினியுள்ள இடம். இஃது உடம்பில் மூலாதாரமும் சுவாதிட்டானமும் சேர்ந்த பகுதியாகும். அடுப்பை அணைகோலுதலாவது, குதத்தைச் சுருக்கி நிறுத்தி, முழங்காலை மடக்கி முழங்கையையும் வயிற்றுடன் பொருத்தி நிற்றல். இது வச்சிராசனம் என்க. மேற்பையைத் தாட்கோத்தலாவது, மனத்தைப் பிராணனில் நிறுத்தியிருத்தல். கேசரி யோகம் பயில்வோர் பிராண செயம் பெறுவதால் அழிவில்லாதவராவர்.*

**784. தெளிவுரை :-** *ஆடையை அழுக்கு நீக்க விரும்புகின்ற வண்ணான் முதலில் தனக்குப் பயன்படுகின்ற வாய்க்காலை ஓட்டை போகாமற் கட்டிப் பின் ஆடை ஒலிக்கின்ற கல்லிற்கும் உயரமான அளவில் கரை கட்டி, மழைநீரால் பெருகி வருகின்ற ஆற்றுநீரை அவ்வாய்க்காலின் வழியால் புகவிட்டுப் பள்ளத்தை நிரப்பினாலே அதில் ஆடையைத் தோய்த்து எடுத்து உயரத்தில் விரித்து உலர்த்திப் பார்க்கும்பொழுது அவ் ஆடை அழுக்கு நீங்கி விளங்கும். அம்முறை போல்வதுதான், யோகத்தால் உயிர் மல மாசு நீங்கி விளங்கும் முறையும்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'இவ்வுமையோடு யோகநிலையைப் பொருத்தி உணர்ந்துகொள்க' என்றதாயிற்று. அங்ஙனம் உணருமாறு:-*

*வண்ணான், யோகி, ஆடை, யோகியது ஆன்ம அறிவு. ஆடை ஒலிக்கும் பலகை, (கல்) நெற்றி. "நெற்றி" என்பது விளங்குதற் பொருட்டே 'சதுரப் பலகை' என்றார், ஆன்ம அறிவு மாசு நீங்குதல் ஆஞ்ஞைத் தியானத்தால் ஆகலின், ஆஞ்ஞை இடமாகிய நெற்றியை ஆடை ஒலிக்கும் கல்லோடு உவமித்தார். கண் ஆறு - வாய்க்கால். அஃது அண்ணாவை அடுத்து மேற்செல்லும் துளைக்கு உவமை, உச்சித் துளையை மோழை படாமற் கட்டுதலாவது, அதனை நாவின் நுனியால் அடைத்தல். தலையினின்றும் வரும் அமுதம் இத்துளை வழிக் கீழே ஒழுகிப் போகாமைப் பொருட்டு இது வேண்டப்பட்டது.*

**785.** இடக்கை வலக்கை இரண்டையும் மாற்றித்
துதிக்கையால் உண்பார்க்குச் சோர்வும் வேண்டா
உறக்கத்தை நீக்கி உணரவல் லார்கட்
கிறக்கவும் வேண்டா இருக்கலு மாமே. 3

---

*விண் ஆறு - விண்ணால் பெருகியெழும் யாறு. விண் - மழை, ''விண்ணின்று பொய்ப்பின்'' (குறள், 13) என்பதிற்போல. இது மேற்குறித்த அமுதத்திற்கு உவமை. "குளம்" என்றது சிலேடை. இஃது உவமையில், "நீர் நிலை" எனவும், பொருளில் 'நெற்றி' எனவும் பொருள் தரும். அண்ணாந்து பார்த்தல், புருவ நடுவை நோக்குதல். "உயிர் தூய்மைபெறுதல் இவ்வாற்றால் ஆகலின் இவ்வாற்றானே முயல்க" என்பது குறிப்பெச்சம்.*

*"வண்ணான் கட்டிப் பாய்ச்சி நிரப்பினால்" என இயையும், "தான் ஒலிக்கும்" என்க. "கட்டி" என்பதனை, "கண்ணாறு மோழை படாமல்" என்பதனோடும் கூட்டி, அத்தொடரை, 'வண்ணான்' என்பதன்பின் வைத்துரைக்க. ஆறு - முறை இஃது உவமையாகுபெயராய் அது போல்வதொரு முறையைக் குறித்தது. "நிரப்பினால்" என்பதில், அழுக்கு அறுதற்கு. கட்டுதல் முதலியவை இன்றி அமையாதனவாதலை விளக்கி நிற்கும் தேற்றேகாரம் தொகுத்தலாயிற்று.*

*இதனால், கேசரி யோகத்தைப் புரியுமாறெல்லாம் தொகுத்துணர்த்தப்பட்டன. இவற்றால் ஆஞ்ஞை யோகம் ஒன்றே கேசரி யோகமாதல் அறியப்படும். சிங்காதனம் கூறியவழி "அங்காந்து" என்றதனை வலியுறுத்தியதே இதனுள் ''அண்ணாந்து பார்க்க'' என்றதாம்.*

***785. தெளிவுரை :-** இடநாடி, வலநாடி இரண்டையும் விடுத்து, நடு நாடியாகிய சுழுமுனை நாடியால் பிராணனைப் பயன்படுத்திக் கொள்ளும் யோகிகட்கு, உடல், நரை, திரை மூப்புக்களால் தளர்தல் இல்லை. இதற்குமேல், உலக மயக்கத்தில் ஆழ்தலை ஒழித்துத் திருவருளை நினைந்திருக்க வல்லவர்க்கு அவர் தம் விருப்பத்திற்கு மாறாய் இறப்பு உண்டாகாது; அவர் விரும்புமளவும் இவ்வுலகில் வாழ்தல் கூடும்.*

***குறிப்புரை :-** பவயோகிகள் சித்திக் களிப்பாலும், சிவயோகிகள் திருவருட் களிப்பாலும் மதயானை போலக் களித்திருப்பர் என்பதனைக் குறிப்பால் உணர்த்துவார், சுழுமுனை நாடியைத் தும்பிக்கையாக உருவகம் செய்தார். இதனானே, விநாயகர் யோக*

**786.** ஆய்ந்துரை செய்யில் அமுதம்நின் றூறிடும்
வாய்ந்துரை செய்யும் வருகின்ற காலத்து
நீந்துரை செய்யில் நிலாமண்டலமதாய்ப்
பாய்ந்துரை செய்தது பாலிக்கு மாறே. **4**

---

*மூர்த்தியாதலும் விளங்கும். சுழுமுனையை உருவகித்தற்கு ஏற்ப ஏனை இட நாடி வல நாடிகளை இடக்கை வலக்கைகளாகவும், பிராணனை உணவாகவும் உருவகித்தார். பவ யோகிகள், "வெற்று யோகந்தானே காய சித்தியைப் பயக்கும்" எனக் கூறுதலை மறுத்தற்குப் பின்னிரண்டு அடிகளைக் கூறினார். 'திருவருள் உணர்வைப் பெறுவார் யோகியருள்ளும் அரியர்' என்றற்கு, "உண்பார்க்கு" என்றாற்போல, 'உணர்வார்க்கு' என்று ஒழியாது, ''உணர வல்லார்கட்கு'' என ஓதியருளினார். மூன்றாம் அடிக்கு இங்கு உரைத்தவாறு உரையாதார்க்கு அவ்வடி வெற்றெனத் தொடுத்தலாய் முடியும் என்க. "வேண்டா" என்பன இரண்டும், 'நீங்காது வருவன நீங்கும்' என்னும் பொருள் குறித்து நின்றன.*

*இதனால், கேசரி யோகத்துள் பிராணாயாமத்தது சிறப்பு வகுத்துக் கூறப்பட்டது.*

***786. தெளிவுரை :-** யோகநூல்கள் ஆராய்ந்து கூறிய முறையை மேற்கொண்டு பிரத்தியாகாரம் முதலியவற்றைச் செய்தால், உடம்பினின்றே அமுதம் சுரக்கும். சுரக்கும் அவ்வமுதம் நாடிகளிற் பாய்கின்றபோது அதனை யோகி தனது அநுபவமாகப் பிறர்க்கும் சொல்லுவான். இனி, நரை, திரை, மூப்புப்பிணி, சாக்காடுகளையே அன்றிப் பிறவிக் கடலையும் யோகி கடக்கின்ற முறையைச் சொல்லு மிடத்து, மேற் சொல்லிய அமுதம் சந்திர மண்டலத்திலிருந்து பாய்ந்து உடலைக் காப்பாற்றுகின்ற அதுவேயாம்.*

***குறிப்புரை :-** "ஆய்ந்துரை செய்யில்" என்பதில் 'உரை' என்பதும், மூன்றாம் அடியில் உள்ள "நீந்து" என்பதும் முதனிலைத் தொழிற் பெயர்கள். அவை முறையே செயப்படுபொருளையும், கருவியையும் உணர்த்தி நின்றன. 'அது வருகின்ற காலத்து வாய்ந்துரை செய்யும்' எனச் சுட்டுப்பெயர் வருவித்து, முன்னே கூட்டி முடிக்க. 'நீந்து உரை செய்யின் உரை செய்தது நிலாமண்டலமதாய்ப் பாய்ந்து பாலிக்குமாறு' எனக்கொண்டு கூட்டி உரைக்க. நிலாமண்டலத்தில் உள்ளதனை 'நிலாமண்டலம்' என்றே பான்மைப்படுத்து ஓதினார். 'நிலா மண்டலத்ததாய்' என்றே பாடம் ஓதுதலும் ஆம்.*

**787.** **நாவின் நுனியை நடுவே சிவிறிடிற்**
**சீவனும் அங்கே சிவனும் உறைவிடம்**
**மூவரும் முப்பத்து மூவரும் தோன்றுவர்**
**சாவதும் இல்லை சதகோடி ஊனே.** **5**

---

*இதனால், கேசரியோகத்தின் பயன் அமுதநிலையைக் காப்பாற்றிக் கொள்ளுதலே என்பது உணர்த்தப்பட்டது.*

**787.** *தெளிவுரை :- பிராணவாயு சுழுமுனை வழியே மேல் ஏறும் பொழுது அது மீளக் கீழ்ப் பாயாதபடி நாவின் நுனியால் அண்ணாக்கினை அடுத்துள்ள துளையை அடைத்தால், (அவ்வாயு தலையிலும், நெற்றியிலும் உள்ள நாடிகள் வழியாகப் பரவுதலால்) சீவனும், சிவனும் இருக்கும் இடம் தலையில் உள்ள அவ் ஆயிர இதழ்த் தாமரையாகவே முடியும். (அஃதாவது, பாச ஞானங்கள் விளங்குவனவாம்). ஆகவே, அப்பொழுது மூவர் காரணக் கடவுளரையும், ஏனை முப்பத்து மூவர் தேவரையும் காணும் ஒளிக்கண் கிடைக்கும். மற்றும் நூறு கோடி யுகங்கள் சென்றாலும் உடம்பு அழியாது நிலைபெற்றிருக்கும்.*

*குறிப்புரை :- 'சிவிறுதல்' என்பது, 'விசிறுதல்' என இக்காலத்து எழுத்து நிலைமாறி வழங்கும். நாவின் நுனியால் உச்சித்துளையை அடைக்க, அதன்வழி மேற்சென்ற பிராணன் மீளாமையும், அதனாற் பெருகும் அமுதம் கீழ்ப் போகாமையும் உளவாதலால் விளைகின்ற பயன்கள் பல என்றவாறு.*

*இதனுள், "நாவின் நுனியை நடுவில் சிவிறிடில்" எனவும், பின் வருகின்ற திருமந்திரங்களிலும் இவ்வாறு இப்பொருளே படக் கூறுவனவும், மேல் சிங்காதனம் கூறியவழி, "அங்காந்து" என்றதனுள்ளே உய்த்துணர்ந்து கொள்ளக்கிடந்தன. ஆகவே, இது கேசரி யோகத்தைக் குறிக்கும் குறிப்பாதல் பெறப்படும். "அங்கே" என்பதன்பின், 'உளதாம்' என்பதும், 'உறைவிடம்' என்பதன்பின் 'அதுவேயாம்' என்பதும் எஞ்சி நின்றன. ஆக்கங்கள் புதியனவாய் அறியப்படுதலைக் குறிக்கும்.*

*காரணக் கடவுளர் மூவர் ஆவார், 'அயன், அரி, அரன்' என்போர், முப்பத்து மூவர் ஆவார், 'உருத்திரர், சூரியர், அசுவினி தேவர், வசுக்கள்' என நால்வகைப்பட்டு, முறையே பதினொருவர், பன்னிருவர், இருவர், எண்மர் என்னும் தொகை பெற்று நிற்பவர். இவரை, "நால்வே றியற்கைப் பதினொரு மூவர்" (திருமுருகாற்றுப்படை, 167) என்றார்*

**788.** ஊனூறல் வாயும் உயர்வரை உச்சிமேல்
வானூறல் பாயும் வகையறி வாரில்லை
வானூறல் பாயும் வகையறி வாளர்க்குத்
தேனூறல் உண்டு தெளியலு மாமே. **6**

---

நக்கீர தேவர். இவர் ஒவ்வொருவரும் தம்மைப் போலும் 'கோடி' என்னும் எண்ணுடையோரைச் சுற்றமாகக் கொண்டு நிற்றலால், 'தேவர் முப்பத்து முக்கோடியர்' என்பர். பொதுவே "மூவரும் முப்பத்து மூவரும் தோன்றுவர்" என்றாராயினும், சிவயோகியர்க்கு அவரது வரம்புபட்ட நிலைகளும் உடன் அகப்பட்டுத் தோன்றும், என்பது கருத்து என்க. இவ் விளக்கங்கள் தத்துவ விளக்கம் ஆதல் அறிக.

இதனால், கேசரி யோகத்தால் பாச, பசு, பதிகளின் காட்சி கிடைத்தல் கூறப்பட்டது. பாசக் காட்சியைக் கடைக்கண் ஓதினார், பாசங்களின் இழிபு பற்றி, இதனுள், நாவின் நுனியை நடுவே சிவிறுதல் சிறப்பாகக் குறிக்கப்பட்டது.

**788.** தெளிவுரை :- குருதி பாய்ந்து ஓடுகின்ற தலையிலிருந்தே தேவருலகத்து அமுதம் பாய்கின்ற வகை அறிகின்றவர் உலகில் ஒருவரும் இல்லை. அதனை அறிதல் உடையவர்க்கு அந்தத் தேன் போலும் அமுதத்தை உண்டு, அதன் சிறப்பை உணர்தலும் கூடும்.

குறிப்புரை :- ஊனின்கண் சுரப்பதனை "ஊன் ஊறல்" என்றும், வானின்கண் குறையாது நிற்பதனை, "வான் ஊறல்" என்றும் கூறினார். வான் ஊறல் என்பது ஒரு சொல்லாய்ப் பின் உவமையாகு பெயராயிற்று. வரை - மலை; அஃது அதன் உச்சியைக் குறித்தது. 'வரைபோலும் உச்சி' என்க. முதனிலைத் தொழிற்பெயரும் பெயராதலின், அதனை இரண்டாவதன் பொருள்பட, "அறிவாளர்க்கு" என ஓதினார். 'தேன்' என்பதும் உவமையாகுபெயர். இதன் சிறப்பு வருகின்ற திருமந்திரத்திற் பெறப்படும்.

இதனால், கேசரி யோகத்தால் அண்டத்து அமுதம் பிண்டத்துட் கிடைத்துத் தெளிவுபெறுதல் கூறப்பட்டது.

789. தெளிவுரை :- அண்ணாக்கின் அருகில் உள்ள துளையில், 'இடை கலை, பிங்கலை' என்னும் இரு நாடிகளின் வழியே இயங்கும் பிராணனைப் பொருந்தினால், யம பயம் இல்லை. மேலுலகத்து வாயிற் கதவும் திறக்கும். உளவாய் இருந்த நரை திரைகளும் உலகத்தார் கண்டு

789. மேலை அண் ணாவில் விரைந்திரு காலிடிற்
காலனும் இல்லை கதவும் திறந்திடும்
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவான் பராநந்தி ஆணையே. 7

790. நந்தி முதலாக நாமேலே யேறிட்டுச்
சந்தித் திருக்கில் தரணி முழுதாளும்
பந்தித் திருக்கும் பகலோன் வெளியாகச்
சிந்தித் திருப்பவர் தீவினை யாளரே. 8

---

*வியக்கும் வண்ணம் மாறிவிடும். அதன்பின் யோகி இளமைத் தோற்றத்தையும் உடையவனாவான். இஃது எங்கள் ஆசிரியர்மேல் ஆணையாகச் சொல்லுகின்ற உண்மை.*

***குறிப்புரை :-*** *'நாக்கில் இரு கால்களை இடுதல் எவ்வாறு' என வியக்கும் முறையில் நயம்பட ஓதினார், இச்செயல் செயற்கரிதாதல் தோன்றுதற்கு. 'இரு காலால் உதைத்தால் கதவு திறந்து கொள்ளும்' என்பதும் ஓர் நயம். 'கதவு' மேல் 'உலகத்தது' என்பது ஏற்புழிக் கோடலால் விளங்கும். மேல் உலகத்தை, அண்டம், பிண்டம் இரண்டிலு கொள்க. கட்டிளமையுடையாரையும் 'பாலியர்' என்றல் வழக்கு. இனி, 'குழவிப் பருவத்துத் தோற்றம் உடையவராவர்' என உரைப்பினும் குற்றமின்று. என்னை? தோற்ற மாத்திரமேயன்றி அறிவு முதலியன அப்பருவத்தின் ஆகாமையின்.*

*இதனால், கேசரியோகத்தால் இம்மை மறுமைப் பயன்கள் கிடைத்தல் கூறப்பட்டது. இவற்றுள், இம்மைப் பயன் மேற்கூறிய அமுதத்தின் பயனாதல் அறிக.*

**790. *தெளிவுரை :-*** *கேசரி யோகத்தைச் சிவபெருமானையே முதல்வனாக உணரும் உணர்வில் நின்று செய்து, அதனானே, அவனைத் தலைப்படுகின்ற யோகி, உலகத்தார் யாவரையும் ஆட்கொள்கின்ற திருவருட் செல்வம் உடையவன் ஆவான். அங்ஙனமாகவும், அவ்யோகத்தை மேற்கொள்ளாது உலகியலில் பலவற்றை ஆக்க நினைத்துக் கொண்டிருப்போர், நல்வினை இல்லாதவரே யாவர்.*

***குறிப்புரை :-*** *"முதலாக" என்பது, 'முதல்வனாக' எனப்பொருள் தந்து நின்றது. ஆளுதல் இங்கு, 'அருள்வழியில்' என்பது வெளிப்படை.*

**791. தீவினை ஆடத் திகைத்தங் கிருந்தவர்**
**நாவினை நாடின் நமனுக் கிடமில்லை**
**பாவினை நாடிப் பயனறக் கண்டவர்**
**தேவினை ஆடிய தீங்கரும் பாமே. 9**

---

*எனவே, யோகாசாரியனாதல் கூறியவாறாயிற்று. பந்தித்தல் - இருத்தற்குரிய. பகலோன், சூரியகலை. இது பொதுவாக வெளிச் செல்வது ஆதலின், "பகலோன் வெளியாக" என்றார். சிந்தித்தல், "கருதுப கோடியும் அல்ல பல" (குறள்) என்றாற்போல, நினைவு மாத்திரமாய்க் கழிவனவற்றை எண்ணுதல். இது பிராணன் வீணே கழிதலை உணராமையைக் குறித்து நின்றது. சூரியனன் உதயமான பின்பும், 'எப்பொழுது உதயமாகும்' எனக் கவலையுறுபவர் என்பது ஒரு நயம்.*

*இதனால், கேசரி யோகத்தால் யோகாசாரியனாதற் சிறப்புக் கிடைத்தல் கூறப்பட்டது.*

**791.** *தெளிவுரை :- முன் செய்த தீவினை வந்து விளையாட, அவ் ஆடலைப் போக்க வழியறியாது நின்றவர், கேசரி யோகத்தைச் செய்யின், அவ் ஆடல் இல்லையாய்விடும். மேலும் அதனானே, அவர்க்குச் சிவனோடு கூடித் திளைத்தற்கு, இனிய கரும்புபோலும் திருவருளும் கிடைப்பதாகும்.*

*குறிப்புரை :- நா வினை - நாவினைப் புருவநடுவில் வைத்து தியானித்தலாகிய கேசரியோகம் செயல். பா வினை - பரவிய (மிக்க) வினை என்றது முன்னர், "தீ வினை" எனக் கூறியவற்றை. அவற்றோடு ஆடுதலாவது, அவற்றின் பயன்களில் அழுந்துதல். பயன், அவை அற்றொழிதல். இம் மூன்றாம் அடி, மேல், "திகைத்து அங்கிருந்தவர்" எனக் குறித்தவரைச் சுட்டும் அளவாய் நின்றது. இவ்வடியின் ஈற்றில் நான்காம் உருபு தொகுத்தலாயிற்று. தே - சிவம். இஃது (இன்) சாரியையோடு இரண்டாம் உருபு ஏற்று நின்றது. "ஆடிய" என்பது, ''செய்யிய'' என்னும் வினையெச்சம். ஆடுதல் - திளைத்தல்; அநுபவித்தல். பாவினை - பரவிய வினை. நாடி - அவற்றையே நுகர்ந்து.*

*இதனால், கேசரி யோகம் கீழ் நிலையில் உள்ளாரை எளிதில் மேல் ஏற்றுதல் கூறப்பட்டது. அதற்காக வினையீட்டலை ஒழித்து தெய்வப்பணி செய்ய வேண்டும்.*

**792.** தீங்கரும் பாகவே செய்தொழில் உள்ளவர்
ஆங்கரும் பாக அடையநா ஏறிட்டுக்
கோங்கரும் பாகிய கோணை நிமிர்த்திட
ஊன்கரும் பாகியே ஊனீர் வருமே. 10

**793.** ஊனீர் வழியாக வுண்ணாவை யேறிட்டுத்
தேனீர் பருகிச் சிவாய நமவென்று
கானீர் வரும்வழி கங்கை தருவிக்கும்
வானீர் வரும்வழி வாய்ந்தறி வீரே. 11

---

**792.** *தெளிவுரை :-* மேற்சொல்லிய கரும்பைப் பயிரிட (திருவருளைப் பெற) விரும்புவோர் கேசரி யோகத்தால் குண்டலியை எழுப்பி நிராதாரத்திற் செலுத்துதல் வேண்டும். செலுத்தினால், அருவருக்கத்தக்க இவ்வுடம்பே ஆனந்தத்தைத் தரும் கரும்பாகி, நிராதாரத்தில் உள்ள திருவருள் வெள்ளம் பாய்ந்தோடி வரும்.

*குறிப்புரை :-* "தீங் கரும்பாக" என்பதில், ஆதல், விளைதல். ஆக-ஆமாறு. ஆங்கு - அத்தொழிற்கண். "நாவை அரும்பாக அடைய மேல் நிமிர்த்தி" என உரைக்க. இதில் ஆக்கம் உவமை குறித்து நின்றது. கோங்கின் அரும்பு, உறக்கத்தால் சுருங்கிக் கிடக்கும் பாம்பின் முகத்திற்கு உருவகம். "அரும்பினதாகிய" என்பதை "அரும்பாகிய" என்றார். குண்டலியை "கோண்" என்னும் தமிழ்ச்சொல்லாற் கூறினார். "ஆகி" என்னும் வினையெச்சம் எண்ணின்கண் வந்தது. "ஊன் நீர்" என்பதில் ஊன் - உவ்விடம்; மேலிடம்; என்றது நிராதாரத்தை. எனவே, குண்டலி நிமிர்தல் இதுகாறுமாயிற்று. "நிராதாரத்தில் உள்ள நீர்" எனவே, அது திருவருள் வெள்ளமாயிற்று.

இதனால், கேசரி யோகத்தை நிராதாரமாகச் செய்தவழித் திருவருட்பேறு கிடைத்தல் கூறப்பட்டது.

**793.** *தெளிவுரை :-* மேற்கூறிய திருவருள் வெள்ளம் பெருகுதல் உண்டாகும் முறையிலே கேசரி யோகத்தைச் செய்து, அதனால், தேன்போல இனிய அந்த வெள்ளத்தைப் பருகி, திருவைந்தெழுத்தைச் சிகாரம் முதலாக வைத்து ஓதியிருக்க, காற்றும், நீரும் உலாவும் இடமாகிய இந்த உடம்பு ஆகாய கங்கையை உம்மிடம் வரச்செய்யும். அவ்வாறு அக்கங்கை வரும் வழியை அமைந்துணர்ந்து, முயலுங்கள்.

**794.** **வாய்ந்தறிந் துள்ளே வழிபாடு செய்தவர்**
**காய்ந்தறி வாகக் கருணை பொழிந்திடும்**
**பாய்ந்தறிந் துள்ளே படிக்கத வொன்றிட்டுக்**
**கூய்ந்தறிந் துள்ளுறை கோயிலுமாமே.** **12**

---

*கேசரியோகத்தில் சிவாயநம என்று தாரணை செய்யும்போது, பிரமரந்திரத்தில் மட்டும் வேர்வையுண்டாகி, கங்கை போல் பெருகும். அந்த அனுபவத்தைக் கண்டறிய வேண்டும்.*

*குறிப்புரை :-* "ஊன் நீர்" என்பதற்கு, மேல் உரைத்தவாறே உரைக்க. ''உள் நாவை ஏறிட்டு'' என்றது கேசரியோகத்தைக் குறித்தவாறு. இதனை, 'நாவை உள் ஏறிட்டு' என மாற்றியுரைக்க. "உள்" அண்ணத்துளையினுள் என்றவாறு. தேன் நீர், இல்பொருள் உருவகம். இஃது அணிநூலில் புறனடையாற் கொள்ளப்படும். ''என்று'' என்பதன்பின், 'இருக்க' என ஒருசொல் வருவிக்க. "வான் நீர்" என்பது, முன்வந்த 'கங்கை' என்றதனைச் சுட்டும் அளவாய் நின்றது. "ஊன் நீர்" என்றாற் போலப் பொதுப்பட 'நீர்' என்றொழியாது, "கங்கை" என உயர்த்துக் கூறினமையின், அதனைச் சிவானந்த வெள்ளமாகக் கொள்க.

இதனால், நிராதார கேசரி யோகத்தால் சிவானந்த அனுபவம் உளதாதல் கூறப்பட்டது.

794. *தெளிவுரை :-* நிராதார கேசரி யோகம் சிவானந்தத்தைத் தருமாற்றை அறிந்து அதன்கண் நின்றவர், அவ் யோகத்தானே பாசங்களை வென்று அறிவே வடிவாய் இருக்குமாறு சிவன் தனது திருவருளைப் பொழிவான். மேலும், அவரை அவன் தனது வியாபகத்துள் அடக்கிக் காப்பவனும் ஆவான்.

*குறிப்புரை :-* மதிமண்டலத்தில் கோயிலாக்கும் முறை குறித்தல் நுதலிற்று. சிவத்தைப் பொருந்தி உணர்ந்து, புருவ நடுவில் பூசித்தவர் களைச் சிவம் மலமாயை கன்மங்களைச் சுட்டெரித்து, சிவஞானமே வடிவாகத் திகழக் கருணை பாலிக்கும், உள்ளே பரவித் தியானித்து மீட்டும் குண்டலி கீழ்ப்படாத வண்ணம் வாசற்படியில் கதவொன்று இட்டு, குவிந்து தியானிக்க இறைவன் உள்ளுறையத் தக்க கோயிலாம் இவ்வுடல் என்றவாறு.

சிவம் என எழுவாய் வருவித்து முடிக்க மீட்டும் குண்டலி கீழ்ப்படாத வண்ணம் என்பது பொருளியைபிற்காக வருவித்து

795. கோயிலின் உள்ளே குடிசெய்து வாழ்பவர்
தாயினும் நல்லார் தரணி முழுதுக்கும்
காயினும் நல்லவர் காய்ந்தவர் தம்முளுந்
தீயினுந் தீயரத் தீவினை யாளர்க்கே. 13

796. தீவினை யாளர்தஞ் சென்னியி லுள்ளவன்
பூவினை யாளர்தம் பொற்பதி யானவன்
பாவினை யாளர்தம் பாவகத் துள்ளவன்
மாவினை யாளர் மதியிலுள் ளானே. 14

---

*உரைக்கப்பட்டது. படிக்கதவு - வாயிற்படிக்கு இடப்படும் கதவு வாயில் - பிரமரந்திர வாயிலாகிய சுழுமனைச் சந்தி. கூய்ந்து - குவிந்து; மனம் ஒருங்கி அறிந்து என்ற செய்தனெச் சத்தைச் செய்வனெச்சமாக்குக.*

**795. தெளிவுரை :-** *சிவனது வியாபகத்துள்ளே ஒடுங்கிப் புறம் போகாது நிற்கும் நிராதார கேசரி யோகிகள், எல்லா உயிரிடத்தும் தாயினும் மிக்க அருளுடையராய் இருப்பர். அறியாமையால் சிலர் அவர்க்கு ஊறு செய்யினும், அவரிடத்தும் அவர் அவ்வருள் நீங்குதல் இலர். ஆயினும், அவர்க்கு ஊறு செய்தவர் அத்தீவினையால் தம்மால் தாம் கேடுறுவர் ஆதலின், அது பற்றி அவர்க்கு அவ்யோகிகள் தீயினும் கொடியராகவும் சொல்லத்தக்கவர்.*

*குறிப்புரை :- "தீயினும் தீயர்" என்றதனை,*

*"என்பி லதனை வெயில்போலக் காயுமே*
*அன்பி லதனை அறம்" - குறள், 77*

*என்றதுபோலக் கொள்க. 'ஈசன் அடியார் இதயம் கலங்கிட' (பா.528) 'தானே படைத்திட வல்லவ னாயிடும்' (பா.670) என்னும் திருமந்திரங்களையும் இங்கு நினைவு கூர்க. 'தம்முளும்' என்னும் உம்மையைப் பிரித்து, "தீயரும் ஆவர்" எனக் கூட்டியுரைக்க.*

*இதனால், கேசரி யோகம் முற்றி நின்றாரது பெருமை கூறப்பட்டது.*

**796. தெளிவுரை :-** *தன்னை வழிபடும் நல்லூழ் இல்லாதவர்க்கு அவர் தலைக்கு அப்பால் மறைந்தே நிற்கின்றவனும், தன்னை யாதானும் ஒரு குறியில் புறத்தே வைத்து வழிபடுகின்றவர்கட்கு அக்குறியேயாய் நின்று அருள் செய்கின்றவனும், தன்னை அகத்தே ஆதாரங்களில் வைத்துப் பாவிக்கின்றவர்கட்கு அப்பாவனையிலே*

**797.** மதியின் எழுங்கதிர் போற்பதி னாறாய்ப்
பதிமனை நூறுநூற் றிருபத்து நாலாய்ப்
கதிமனை யுள்ளே கணைகள் பரப்பி
எதிர்மலை யாமல் இருந்தனன் தானே. **15**

---

*விளங்குகின்றவனும் ஆகிய சிவன், பெருஞ்செயலாகிய நிராதார யோகத்தைச் செய்கின்றவர்கட்கு அவர்களது உணர்வு வடிவாய் நிற்கின்றான்.*

*குறிப்புரை :- மூலாக்கினியை எழுப்பி வினை செய்வார்களின் சிரத்திலுள்ளவன், சகத்திராமாகிய தாமரைப் பூவில் உள்ளவர்களுக்குப் பொன்போலும் தலைவனாவான். இடைவிடாது பாவனை செய்தலாகிய வினை புரிவாரது பாவகத்தில் உள்ளவன்; பெருவினை யாகிய சிவயோகம் செய்வார்க்கு அவர்தம் மதியுள் எழுந்தருளி யிருப்பன் என்றவாறு.*

*தீவினையாளர் - தீயில் வினை செய்வார். அதாவது குண்டலினியாகிய மூலாக்கினியை எழுப்பி ஆகுதி செய்வார்; என்றது குண்டலினி தியான யோகிகளை குண்டலினி சென்று முடியுமிடம் சென்னியாதலின், சென்னியிலுள்ளார் என்றது அஞ்செழுத்தால் குண்டலினியிற் செய்தோமம் கோதண்டம் சானிக்கில் அண்டனாம் சேடனாம் அங்கு என்ற சிவஞான போத வெண்பாவை நோக்குக.*

*பூ வினையாளர் - பூவில் வினை செய்வார். பூ - சகஸ்திராரத்தில் உள்ள ஆயிர இதழ்த் தாமரைப்பூ, அதில் சிவத்தைத் தியானிப்பார். பொற்பதி - பொன்னான தலைவன்.*

*பாவினை - பாலிக்கும் வினை, தியானம், பாவகம் - பாவனை முற்றித் தான் பாவித்த பொருளாதல் தியானிப்பவர்களுடைய பாவகப் பொருளில் உள்ளவன்.*

*மாவினை - பெரிய தொழில், என்றது சிவயோகத்தை மதி - அறிவு, மதிமண்டலமுமாம்.*

**797. தெளிவுரை :-** *மாவினையாளர் மதியில் உள்ள சிவன், அதில், சந்திரனது கலைகள் போல்வனவாகிய பிராசாத கலைகள் பதினாறாய் நின்றும், புவன பதிகளின் இடமாகிய புவனங்கள் இருநூற்றிருபத்து நான்காய் நின்றும், இயங்கும் இல்லமாகிய உடம்பினுள் வினைகள் ஆகிய பகைவர் அவ்யோகியர் எதிர்சென்று போர்புரியாதவாறு தனது*

798. இருந்தனள் சத்தியும் அக்கலை சூழ
இருந்தனள் கன்னியும் அந்நடு வாக
இருந்தனள் மான்ஏர் முகநில வார
இருந்தனள் தானும் அமுதம் பொழிந்தே. 16

---

*அருளாற்றலாகிய கணைகளைப் பொழிந்து கொண்டு இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *சிவயோகியரின் சிவானுபவ நிலையை உணர்த்துதல் நுதலிற்று. சந்திரனிடமிருந்து எழும் கலைகளைப் போலப் பதினாறாய், பதிந்துள்ள மலையாகிய உடலில் மூலாதார முதல் அநாகதம் வரை இருநூற்றிருபத்து நான்கு ஒளிக்கதிர்களாய், நடக்கின்ற மனையாகிய உடலுள், கதிர்களாகிய கணைகளைப் பரப்பி, எதிர்த்துப் போரிடாதபடி எழுந்தருளினை என்றவாறு.*

*பதினாறு ஆய் - விசுத்தித் தானத்து பதினாறிதழ்க் கமலத்துள் ஆய் என்றவாறு.*

*மூலாதாரம் முதல் அநாகதம் வரை ஒளிவிடும் சூரிய கிரணங்கள் இருநூற்று இருபத்து நான்காதலைத் தெரிவிப்பது, பதிமனை நூறு நூற்றிருபத்து நாலாய் என்பது.*

*கதி மனை - உயிரிருத்தற்குக் கதியாம் மனையாகிய உடலுள் கணைகள் - அம்பு அம்பாவது ஊனீராகிய அமுதம். உச்சி முதல் உள்ளங்கால் வரை அமுத மழையைச் சொரிந்த எதிற்மலையாமல் - எதிர்த்து வருந்தாமல் ஆன்மாநுபவத்தோடு ஒத்தியங்கி இருந்தான் என்க.*

**798. *தெளிவுரை :-*** *மதியின் எழுங்கதிர்போல நிற்கும் பிராசாத கலைகள் பதினாறும் தன்னைச் சூழ்ந்து நிற்க, அவற்றின் நடுவே திரோதான சத்தி, தனது அழகிய முகமாகிய சந்திரன் நிறைந்த ஒளியுடன் விளங்க, அந்தப் பிராசாத கலைகளின் வழி அமுதத்தைப் பொழிந்துகொண்டு, அவற்றோடு தானும் இருக்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *"அதனால், அன்ன சிறப்பினதாகிய அந்தப் பிராசாத யோகத்தையே முயலுங்கள்" என்பது குறிப்பெச்சம். சத்தி, கன்னி, மான் என்பன ஒருத்தியையே குறித்தன. அந்நடு - அவற்றின் நடு. "சூழ நடுவாக இருந்தனள்" என்றது, "ஆட்சி செய்திருக்கின்றாள்" என்றவாறு. திரோதான சத்தி தன் நிலைமாறி அருட் சத்தியாகும் நிலைமையைக் குறிக்க. "முக நிலவு ஆர அமுதம் பொழிந்து இருந்தனள்" என்றும், அஞ்ஞானம், "மிருத்தியு" எனப்படுதலால்,*

**799.** பொழிந்தவி ரும்வெள்ளி பொன்மன் றடையில்
வழிந்துள் ளிருந்தது வான்முதல் அங்குக்
கழிந்தது போகாமற் காக்கவல் லார்க்குக்
கொழுந்தது வாகும் குணமது தானே. 17

---

*அதனைப் போக்குகின்ற மெய்ஞ்ஞானத்தை "அமுதம்" என்றும் கூறினார்.*

*இதனால், மேற்கூறிய அவ்யோகம் அங்ஙனம் பெரும்பயன் உடைத்தாமாறு கூறப்பட்டது.*

**799.** *தெளிவுரை :- பிராசாத கலைகளின் வழிச் சத்தியால் பொழியப்பட்டு விளங்குகின்ற அந்த ஞானம், அகார கலை முதலிய கலைகளின் அளவில் சுவாதிட்டானம் முதலிய கீழ் இடங்களோடு நில்லாது, அருத்த சந்திர கலை முதலிய கலைகளின் வழி ஆஞ்ஞை முதலிய மேல் இடங்களை அடையுமாயின், அவ்விடத்தே அந்த ஞானத்திற்கு முதலாகிய சிவம் வியாபகப் பொருளாய் விளங்கித் தோன்றும். அதன்பின் அந்த அருத்த சந்திராதி கலைகளின் ஞானங்கள் மறைந்து முன் போலக் கீழே போய்விடாமல் காக்க வல்லவர்கட்கு அந்த ஞானம் முடிநிலை வளர்ச்சியை எய்தும். அதுவே, அந்தக் கலா யோகத்தின் பயனாம்.*

*குறிப்புரை :- 'புறத்துப் பொன்மன்றுபோல, அகத்தே விளங்குவது ஆஞ்ஞை' என்றற்கு அதனை, "பொன் மன்று" எனக் கூறுகின்றவர், அதனோடு இயைந்து ஓர் நயத்தைத் தோற்றுவித்தற்கு, பிராசாத ஞானத்தை, வெள்ளியாக உருவகம் செய்து கூறினார். "வெள்ளி" எனப்பட்டது இந்த ஞானமே என்பது, "பொழிந்தவிரும் வெள்ளி" என மேற்கூறியதனையே அனுவதித்துக் காட்டியதனானே இனிது உணரப்படும். இதனையும், "பொன் மண்" என்பது பாடம் ஆகாமையையும் உணராது 'வெள்ளி, பொன்' என்றவற்றைச் சுக்கில சோணிதங்களாகக் கொண்டு உரைப்பின், அஃது இவ்விடத்திற்கு யாதோர் இயைபுமின்றிப் போதல் அறிந்து கொள்க. கேசரி யோகத்தால் உள்ளே வழிந்து எங்கும் பரவியிருந்ததாகிய பெருக்கெடுத்துப் பொழிந்த பெரிய அமுதம் பொன் நிறமான பிருதிவியையடைந்து வீணே கழிந்து போகாமல் காக்க வல்லவர் களுக்கு என்றும் உடல் கொழுந்தாகும். இதுவே இவ்வியோகத்தின் பயனாம் என்றவாறு.*

*அமுதம் உச்சிமுதல் உடலெங்கும் பரவி, மூலாதாரத்தில் தங்கினால் அதனைக் கழிந்துவிடாதவாறு பாதுகாக்க வல்ல*

800. குணமது வாகிய கோமள வல்லி
மணமது வாக மகிழ்ந்தங் கிருக்கில்
தனமது வாகிய தத்துவ ஞானம்
இனமது வாக இருந்தனன் தானே. 18

---

*யோகிகளின் உடல் தளிர்போல என்றும் விளங்குவதாம் என்பது கருத்து.*

*இதனால், பிராசாத யோகத்தின் முடிநிலையும், அதன் பயனும் கூறப்பட்டன. குணம் - பயன்.*

**800. *தெளிவுரை :-*** *சத்தி, பிறர்க்குப் பிறவித் துன்பத்தைத் தருபவள் போலாது வீட்டின்பத்தைத் தருபவளாய் மாறுகின்ற அந்நிலையிலேயே நிற்கும்படி யோகி மேற்கூறிய மேல் நிலையினின்றும் தாழாது நிற்பானாயின், அச்சத்தியால் நிதிபோலக் கிடைக்கின்ற உண்மை ஞானத்தின் வழியாகச் சிவனும் அவனிடத்தினின்றும் நீங்காதிருப்பான்.*

***குறிப்புரை :-*** *திருவருட் சத்தியோடு கூடின பேர்க்குத் தத்துவ தரிசனம் முதலியன சித்தியாம் என்றல் நுதலிற்று.*

*பொருளின் குணம்போல அபினையாயிருக்கிற பேரழகுடைய கொடிபோல்வாளாகிய சத்தி திருமணங் கொள்ள கேசரி யோகத்திருக்கின், பேறாகிய தத்துவ ஞானம் தமக்கு உறவாக யோக சீவன் இருந்தான் என்றவாறு.*

*குணத்திற்கும் பொருளுக்கும் உள்ள சம்பந்தம் பிரிக்க முடியாது, ஆகலின் அதுபோல் குண குணியாக ஆன்மாவினிடம் ஒன்றாய் விளங்கும் திருவருட்சத்தியென்பார் குணமதுவாகிய கோமளவல்லி என்று அருளினர்.*

*மனமதுவாக என்றது, அச்சத்தி யோகத்தான் வெளிப்பட்டு யோகியோடு என்றும் உடனாய் கூடியிருக்க என்றவாறாம்.*

*தனமதுவாகிய தத்துவ ஞானம் இனமதுவாக - பெத்த காலத்து இதுவரை தனம் போலப் போக்கியமாக இருந்த தத்துவக் கூட்டங்கள், தடைத்தன்மை நீங்கிச் சிவயோகத்திற்கு துணை செய்க.*

**801. *தெளிவுரை :-*** *சுவாதிட்டானத்தில் இருந்த பிராண வாயு வெளிப்புறமாக அன்றி உட்புறமாக எழுமாறு திறக்கப்பட்ட சுழுமுனை நாடி வழியே சென்று, ஆஞ்ஞையும் திறக்க. அதற்கு மேல்*

801. இருந்த பிராணனும் உள்ளே எழுமா
பரிந்தஇத் தண்டுடன் அண்டம் பரிய
விரிந்தஅப் பூவுடன் மேலெழ வைக்கின்
மலர்ந்தது மண்டலம் வாழலு மாமே. **19**

802. மண்டலத் துள்ளே மனஒட்டி யாணத்தைக்
கண்டகத் தங்கே கருதியே கீழ்க்கட்டிப்
பண்டகத் துள்ளே பகலே ஒளியாகக்
குண்டலக் காதனுங் கூத்தொழிந் தானே. **20**

---

*விரிந்து விளங்குகின்ற ஆயிர இதழ்த் தாமரை மலரின்மேல் பின்னும் மேல் எழும் வகையில் பொருந்தச் செய்தால், ஞான மண்டலமாகிய நிராதாரமும் அதற்குமேல் உள்ள பரமண்டலமாகிய மீதானமும் இனிது விளங்குவனவாம். அதுவன்றி, நெடுங்காலம் வாழ்தலும் கூடும்.*

*குறிப்புரை :- 'எழுமாறு' என்பது செய்யுளிடத்துக் கடைக் குறைந்து நின்றது. பரிதல் - உடைதல்; திறத்தல். அண்டம் - ஆகாயம். ஆஞ்ஞை முதலாக உள்ளவை ஆகாயமண்டலம் என்க. நெடுங்காலம் என்பது சொல்லெச்சம். இருந்த பிராணன் - யோகப்பயிற்சி யின்மையான் மூலாதாரத்திலே சுருண்டு கிடந்த பிராணன்.*

*இதனால், 'கேசரி யோகத்தை வாசி வகையிற் செய்யினும், பிராசாத வகையிற் செய்யினும் ஆதாரங்களைக் கடந்து, நிராதாரமாகச் செய்தல் நன்று' என்பது கூறப்பட்டது.*

802. **தெளிவுரை :-** *ஞானமண்டலமாகிய நிராதாரத்தில், மனம் ஒடுங்கும் நிலை உள்ளதை உணர்ந்து, தியானத்தை அவ்விடத்தே செய்து, அதனாலே மனம் கீழ்ப் போகாதவாறு தளைத்து, உடம்பில் எக்காலத்தும் இருள் இன்றி ஒளியே வீசப் பண்ணினால், சிவன், ஆடும் பெருமானாய் அசைந்து கொண்டிராமல், ஏக பாதனாய் அசையாது நிற்பான்.*

*குறிப்புரை :- மனம் நிராதாரத்திற்செல்லின் ஒடுக்கம் பெறுதலால், அங்குள்ள ஆற்றலை மனத்தை வளைக்கும் ஒட்டியாணமாகக் கூறினார். ஒட்டியாணம் - இடைப்பூண். பண்டம் - உடம்பு. மகரங்கெட்டபின் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'பகல் ஒளியே ஆக' என, ஏகாரத்தை மாற்றியுரைக்க. கூத்து, இங்கு அதி சூக்கும ஊன நடனம். இது புலனுணர்வைத் தந்து மனத்தை அலைப்பதாகலின், 'அதனை ஒழிவான்' என்றார். "ஒழிந்தான்" என்பது*

**803.** ஒழிகின்ற வாயுவும் உள்ளே அமரும்
கழிகின்ற ஆயுவும் காக்கலு மாகும்
வழிகின்ற காலத்து வட்டக் கழலைப்
பழிகின்ற காலத்துப் பைஅகற் றீரே. **21**

---

*துணிவுபற்றி வந்த கால வழுவமைதி 'கூத்து ஒழிந்தான்' எனவே அசையாது நிற்றல் பெறப்பட்டது. அதனால், மனம் ஒடுங்குதல் கூறப்பட்டதாம். உடம்பில் எப்பொழுதும் ஒளியே விளங்குதல், கருவி கரணங்களும் ஞானமயமாய் நிற்றல். இதுவும் அனுவாத முகத்தால் இடையே கூறப்பட்டமை காண்க.*

*இதனால், நிராதார யோகத்தின் பயன் கூறும் முகத்தால் அதன் சிறப்பிற்குக் காரணம் கூறப்பட்டது.*

**803. *தெளிவுரை :-*** *மேல் (பா.799)* ***"வழிந்துள் ளிருந்தது" எனப்பட்ட சிவம், அங்ஙனம் விளங்கும்பொழுது, முன்னை மந்திரத்தில் சொல்லப்பட்ட ஊன நடனத்தைப் புரிகின்ற திருவடியை விரும்பாமை தோன்றும். அப்பொழுது அண்ணத்துளையைத் திறவுங்கள். திறந்து அதன்வழிப் பிராணனைப் பாய்ச்சுங்கள். அதன் பயனாகப் பிராணன் தலைக்கண் நிற்கும். அதனால், வாழ்நாள் குறைவுபடாது காத்தற் பயனும் உளதாகும்.***

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி உரைக்க. ஆயு, ஆரியச்சொல். வட்டம் - சுழற்சி; நடனம் 'பழிக்கின்ற' என்பது எதுகை நோக்கி, இடைக்குறைந்து நின்றது. "பழிக்கின்ற காலத்து" என்ற தனால், அக்காலம் வருதல் கூறப்பட்டதாம். பழித்தல் அதன் காரணத் தின்மேல் நின்றது. வாயை, 'பை' என்றார். கேசரி ஆசனத்தில் இஃது அங்காந்து இருத்தலின், அகற்றுதல், பின்னும் திறத்தல், இம் முயற்சியால் அண்ணத்துளை திறக்குமாதலின், அப்பயன் கருதிக் கூறிய இத்தொடர்க்குக் கருத்துப் பற்றி அதுவே பொருளாக உரைக்கப்பட்டது. ஆஞ்ஞை யோகத்தால், நிராதாரத்தில் செல்லுதற்கு ஊக்கம் பிறத்தலும், அது பிறந்தவழி நிராதாரத்திற் செல்லுமாறும் கூறியவாறு.*

*இதனால், மேல் இருமந்திரங்களிற் கூறிய சாதனையிற் செல்லுதற்கு ஆதார யோகமும் வேண்டப்படுதல் கூறப்பட்டது.*

**804. *தெளிவுரை :-*** ***மூலபந்தத்தால் பிராணாபானன்களை இணைத்து அக்கினி மண்டலத்திலே அக்கினியை எழுப்பு முறையைச் சொல்லுதல் நுதலிற்று. உடலுள் மூலாதாரக் கதவாகிய குதத்தை***

804. பையினி னுள்ளே படிக்கத வொன்றிடின்
மெய்யினி னுள்ளே விளங்கும் ஒளியதாம்
கையினுள் வாயுக் கதித்தங் கெழுந்திடின்
மையணி கோயில் மணிவிளக் காமே. 22

---

*இறுக்கிப் பிடித்தால் உடலுள் ஒளி விளங்கும். வசப்பட்ட பிராண வாயு ஒலித்துக் கொண்டு மேலெழும் பின், ஆணவாதி மலங்களை அணிந்த கோயிலாகிய உடம்பில் இரத்தின தீபம் போலச் சிவம் பிரகாசிக்கும் என்றவாறு.*

*பை - தோற்பையாகிய உடல் படி - பூமியாகிய மூலாதாரம் அதன் கதவு - அதன் வாயிலையடைக்கும் கதவாகிய குதம் ஒன்றிட லாவது அதன் வாயைத் தன் இரு குதிகாலாலும் மறைத்து இறுகச் செய்தல் இதனையே மூலபந்தம் என்னும் முத்திரையாம் என்னும் யோகநூல்கள், மூலபந்த முத்திரையால் குதத்தையிறுக்கி அபானனையும் பிராணனோடு கலக்கச் செய்து, சுழுமுனை வழியாக மேலெழுப்பின் அது இருதயம் கண்டம் புருவநடு இவற்றைக் கடந்து உச்சியை அடைகிறது. அப்போது ஒளி தரிசனமாம் இதன் விளக்கத்தை, குதியால் யோனியைச் செவ்வையாகப் பிடித்துக் குதத்தைச் செவ்வையாகச் சுருக்க வேண்டும். கீழ்ச்செல்லும் வாயுவாகிய அபானனை மேலிழுத்தலால் மூலபந்தம் சொல்லப்படுகிறது என்னும் கருத்து அமைந்த உபநிடத வாக்கியங்களால் இதை உணரலாம்.*

*கையினுள் வாயு கதித்து அங்கு எழுந்திடின் என்பது, இவ்வண்ணம் கையகப்பட்ட வாயுக்கள் ஒலித்து எழில் என்பதை விளக்கிற்று, இக்கருத்து, பிராணாபான வாயுக்களும், நாத விந்துக்களும் (அநாகதத் துவனியும் அனுஸ்வார ஒலியும்) ஐக்கியத்தை அடைந்து யோகசித்தியைத் தருகின்றது என்னும் பொருள் அடங்கிய உபநிடத வாக்குகளால் அறியலாம்.*

*மை - மலம். மையணிகோயில் - மலமாயா சமகாரியமான உடல், உடலுக்குள் விளங்கும் இரத்தின தீபமாம் சிவன் என்றவாறு.*

**805. தெளிவுரை :- *ஜாலந்திர ஒட்டியாண முத்திரைகளுடன் கேசரியைச் செய்தலால் வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று. விளங்கும் பிராணனைச் சுழுமுனை வழியாக மேலே கிளம்பத் தியானித்து, சுருங்குகின்ற கழுத்து நாபி இவற்றுள், அனைவரும் வணங்கத்தக்கவாறு மண்டலமாகும் வண்ணம் கும்பகஞ் செய்து,***

**805.** விளங்கிடும் வாயுவை மேலெழ உன்னி
நலங்கிடுங் கண்டத்து நாபியி னுள்ளே
வணங்கிடு மண்டலம் வாய்த்திடக் கும்பி
சுணங்கிட நின்றவை சொல்லலு மாமே. **23**

**806.** சொல்லலு மாயிடும் மாகத்து வாயுவும்
சொல்லலு மாகும் மண்நீர் கடினமுஞ்
சொல்லலு மாகும் இவைஅஞ்சும் கூடிடிற்
சொல்லலுமாம் தூர தரிசனந் தானே. **24**

---

*அவ்வத் தானங்கள் வற்றிடும் படிச்செய்ய, அங்கே நிலைபெற்ற அனுபவங்களைச் சொல்லலும் ஆகுமே, ஆகாது என்றவாறு.*

*விளங்கிடும் வாயு - மூலத்தலத்துள் விளங்கும் பிராணன் மேல் எழ உன்னி - இடநாடி வலநாடி வழியாகவன்றி நடுநாடி வழியாகப் பிரமரந்திரம் செல்லும் சுழுமுனை வழியாக மேல் எழ எண்ணி.*

*நலங்கிடும் - சுருங்குகின்ற நாபி சுருங்குகின்ற கண்டம் என்பன ஜாலத்திரபந்தமும், ஒட்டியாணபந்தமும் ஆகிய இவற்றை உணர்த்தின.*

*ஜாலந்திரபந்தமாவது, கழுத்திலுள்ள துவாரத்தைச் சுருக்கி, மார்பின் சமீபத்தில் நாலங்குலமிடையிருக்கும்படி மேவாய்க் கட்டையை ஸ்தாபித்தலாம். இது நாடிகளைக் கட்டுப்படுத்தும்; மதி மண்டலத்தமுதம் கீழே ஜாடராக்கினியில் விழாத வண்ணம் தடுக்கும். இதன் விளக்கங்களை உபநிடதங்களால் அறியலாம்.*

*ஒட்டியாணபந்த முத்திரையிலக்கணம் முன்னரே உரைக்கப் பட்டது.*

*வணங்கிடு மண்டலம் வாய்த்திட அனைவரும் வணங்கும் மண்டலமாகிய ஆஞ்ஞை பொருந்த, கும்பிச்சு - கும்பித்து என்பதன் மரூஉ. உணங்கிட நின்றவை சொல்லலும் ஆமே - வளர நின்ற அனுபவங்களைச் சொல்ல முடியுமா? முடியாது என்பதாம் அனுபவங்களை.*

**806.** *தெளிவுரை :- ஐம்பூதங்கள் உடலுள் சேர்வதால் தூர தரிசனமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று. சொல்லப்படுகின்ற வானும், வாயுவும், மண்ணும், நீரும், கொடியதான தீயும் ஆகிய இவை ஐந்தும் கூடினால் தூரதிருட்டி உண்டாம் என்றவாறு.*

*பிராணவாயு, உடலினுள் முழந்தாள் வரையுள்ள பிருதிவி மண்டலத்தும், அதற்குமேல், அடிவயிறு வரையுள்ள அப்பு*

**807.** துூர தரிசனம் சொல்லுவன் காணலாம்
காராருங் கண்ணி கடைஞானம் உட்பெய்தி
ஏராருந் தீபத் தெழிற்சிந்தை வைத்திடில்
பாரார் உலகம் பகல் முன்ன தாமே. **25**

---

*மண்டலத்தும், அதற்குமேல் மார்பு வரையுள்ள தேயு மண்டலத்தும், அதற்கு மேல் மூக்கினடி வரையுள்ள வாயு மண்டலத்தும் அதற்கு மேல் உச்சி வரையுள்ள ஆகாய மண்டலத்தும் கூடி வியாபித்திருப்பின் தூர தரிசன ஆம் என்பது கருத்து.*

*தூர தரிசனமாகவும் ஐம்பூதத்திலும் பிராணன் வியாபித்தலைப் பிண்டத்தில் தரிசிப்பவன், அண்டத்திலும் நெடுந்தூரத்த நிகழ்ச்சிகளையும் இருந்த நிலையிலிருந்தே அறிவான் என்பதாம்.*

*இதனால், நிராதார யோகம் முற்றினமையை அறியும் குறி கூறப்பட்டது.*

**807.** *தெளிவுரை :- தூர தரிசனம் (தொலைக்காட்சி) வாய்க்கும் முறையைச் சொல்லுவேன், (அதன்படி முயன்றால்) அதனைக் காண முடியும். சிவ சத்தியாகிய திருவருள் ஞானத்தையே ஆன்ம ஞானத்திற்குத் துணையாகக் கொண்டு, ஆஞ்ஞையில் அத்திருவருளை அழகிய விளக்காகத் தியானிப்பின், நிலம் முதலிய அனைத்துலகங்களும், பகலிற் காணப்படும் பொருள் போல இனிது விளங்கும்.*

*குறிப்புரை :- முன்னை மந்திரத்தால், 'பூதக் காட்சிகளே தூர தரிசனத்திற்கு அமையும்போலும்' என மலையாமைப் பொருட்டு இதனைக் கூறினார். கூறவே, பவயோகியரது கொள்கை நிரம்பாமையும் காட்டப்பட்டதாம். இங்கு, "பகல் முன்னதாம்" என்றதனால், மேல், "தூர தரிசனம்" என்றது பொதுவகையான விளங்கலைக் குறித்ததாயிற்று.*

*"தரிசனம்" என்றது, அதனைப் பெறும் முறையைக் குறித்தது. "காராருங் கண்ணியது ஞானம்" என்க. கடை ஞானம், முடிநிலை ஞானம். தீபம் ஆஞ்ஞையில் உளதாதல் மேல் பலவிடத்தும் சொல்லப் பட்டமையின், வாளா, "தீபம்" எனச் சுட்டியொழிந்தார். பார் ஆர் - பார் முதலாக நிறைந்த.*

*இதனால், மேலை மந்திரத்தால் எய்தியதன் மேல் சிறப்பு முறை கூறப்பட்டது.*

808. முன்னெழு நாவிற்கு முந்நால் விரற்கீழே
பன்னெழு வேதம்பகலொளி யுண்டென்னும்
நன்னெழு நாதத்து நற்றீபம் வைத்திடத்
தன்னெழு கோயிற் றலைவனு மாமே. 26

---

808. ***தெளிவுரை :-*** *"யாதொன்றற்கும் முதற்கண் எழுந்து வருகின்ற நாவிற்குப் பன்னிரு விரற்கிடைக் கீழே (இதயத்தானத்தில்) "நுண்ணியதோர் சுடர் உண்டு" என்று வேதம் சொல்லும்; அதனைக் கண்டு, நாதத் தானமாகிய நெற்றியில் அதனைத் தியானிப்பின், அங்ஙனம் தியானிப்பவன், தன் உடம்பில் உள்ள ஆறு ஆதாரங்களுடன் உச்சியும் கூட ஏழாக நின்ற அக்கோயில்கள் அனைத்திற்கும் தலைவனாகியும் விளங்குவான்.*

***குறிப்புரை :-*** *இனிது விளங்குதற் பொருட்டு, நாவை, 'முன்னெழு நா' என்றார். 'நாபிக்கு' என்பது பாடம் அன்று. 'பன்ன' என்பதன் அகரம் தொகுத்தலாயிற்று. பகல் - பகுக்கப்பட்டது; சிறிது. "வேதம்" என்றது தகர வித்தை கூறும் உபநிடதங்களை. (சாந்தோக்கியம், நாராயணோப நிடதம்) தகர வித்தையாவது, இதயத் தாமரை மேல் விளங்கும் நுண்ணொளியில் பரமான்மாவை உபாசிக்கும் முறை. 'நன்றெழு' என்பது எதுகைக்கு ஏற்றபடித் திரிந்து நின்றது. 'அந்நற்றீபம்' எனச் சுட்டு வருவிக்க.*

*இதனால், கேசரி யோகத்தில் ஒளியுருத் தியானம் செயற்பாலது என்பதும், அதன் பயனும் கூறப்பட்டன.*

## 19. பரியங்க யோகம்

809. பூசு வனஎல்லாம் பூசிப் புலர்த்திய
வாச நறுங்குழல் மாலையுஞ் சாத்திய
காசக் குழலி கலவி யொடுங்கலந்
தூசித் துளையுறத் தூங்காது போகமே. 1

810. போகத்தை உன்னவே போகாது வாயுவும்
மோகத்து வெள்ளியும் மீளும் வியாழத்தில்

---

*யோகத்திற் சிறந்தவற்றையெல்லாம், 'கேசரி யோகம்' என அடக்கிக் கூறியபின், பிறவாற்றால் யோகமாவன சிலவற்றைக் கூறுவாராய், இருபது திருமந்திரங்களால் பரியங்க யோகம் கூறுகின்றார். பரியங்கம் - கட்டில். எனவே, கட்டிலின் மேற் செய்யப்படும் போகத்தை யோகமாக்குதல் பரியங்க யோகம் எனப்படும்.*

*கட்டிலின்மேல் நிகழ்வன உறக்கமும், இணை விழைச்சுமன்றிப் பிறிதில்லை. அவற்றுள், யோகிக்கு உறக்கம் குற்றமாகாது, இணைவிழைச்சே குற்றமாதலின், அஃது அன்னது ஆகாது யோகமாம் முறையே பரியங்கயோகம் என்க. யோகியர் எல்லோரும் துறவராயிருத்தல் வேண்டும் என்னும் வரையறையின்றி, இல்லறத்தவ ராயிருத்தலும் உளதாகலின், அவர்பொருட்டு இது கூறப்படுகின்றது.*

*809. **தெளிவுரை :-** யோகி போகத்தை விளைவிக்கின்ற ஒப்பனையுடன் வருகின்ற தன் மனைவியோடு கூடினானாயினும், அவனது மனம் பிரமரந்திரத்திலே நிற்கும் ஆதலின், அவனுக்கு அதனால் போகம் மிகாது; (யோகமே மிகும்). இன்பக் காலத்திலும் இறைவனை எண்ணியிருக்க வேண்டும்.*

*__குறிப்புரை :-__ 'புலர்த்திய, சாத்திய' என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி, 'காசக்குழலி' என்னும் ஒரு பெயர் கொண்டன. காசம் - மயிர்ச்சாந்து. 'கலந்தும்' என உம்மையை மாற்றியுரைக்க. ஊசித்துளை, பிரம ரந்திரம். தூங்குதல், மேலிடல்.*

*இதனால், பரியங்க யோகம் ஆமாறு கூறப்பட்டது.*

*810. **தெளிவுரை :-** போகத்தில் மனம் சென்றவழிப் பிராணன் சுழுமுனை வழியில் செல்லமாட்டாது. காமத்தை விளைக்கின்ற வெண்பாலும் செம்பாலில் வீழ்ந்தொழியும். ஆகவே, துணைவியும்,*

சூதொத்த மென்முலை யாளும்நற் சூதனுந்
தாதிற் குழைந்து தலைக்கண்ட வாறே. 2

811. கண்டனுங் கண்டியுங் காதல்செய் யோகத்து
மண்டலங் கொண்டிரு பாலும் வெளிநிற்கும்
வண்டியை மேற்கொண்டு வான்நீர் உருட்டிடத்
தண்டொரு காலுந் தளராது அங்கமே. 3

---

*துணைவனும் ஆகிய இருவரும் தங்கள் செம்பால் வெண்பால்களால் மன வலி இழந்து தாழ்தலைப் பின்னர் உணர்ந்து வருந்துவதுதான் போகத்தால் அவர்கள் எய்தும் பயன். சுக்கில, சுரோணிதங்கள் விந்து நாதங்களாய் மாற்றம் பெற்றுச் சிரசில் பொருந்தும்.*

***குறிப்புரை :-*** *'அதனால், போகத்தை மேற்கொள்ளாதிருத்தலும், மேற்கொள்ளினும் அதில் அழுந்தாதிருத்தலுமே அறிவுடைமை' என்பது குறிப்பெச்சம். இதனை உணர்த்துதற் பொருட்டே போகத்தின் இயல்பையெல்லாம் விரித்தார் ஆதலின், அது மிகையாகாமை அறிக. போகத்தில் ஈடுபடினும் அதன் கண் அழுந்தாதிருக்கும் நிலை முன்னை மந்திரத்திற் கூறப்பட்டது. சூது - சூதாடு கருவி, சூதன் - அக்கருவியைப் பயன்படுத்துகின்றவன். தலைக்காண்டல் என்பது ஒரு சொல். இதன்கண் ஈரடி எதுகை வந்தது. போதம் - அறிவு. மேகம் - நீர். வெள்ளி - வெண்ணிறமான சுக்கிலம். வியாழம் - செந்நிறமான சுரோணிதம். பிரமந்திரப் புழை நினைவால் காம வாயு சுக்கிலத்தை நீக்கம் செய்யாது மூலாதாரம் தொடங்கி சிரசைச் சென்றடையும்.*

**811. *தெளிவுரை :-*** *ஒருவர் மற்றொருவர் வரைக்கண் நிற்பவராகிய கணவனும், மனைவியும் அவருள் ஒருவராயினும், இருவருமாயினும் விரும்புவதாகிய போகத்தின்கண், வல, இட நாசிகளின்வழி ஏறியும், இறங்கியும் சுழன்று வீணாகின்ற சரவோட்டமாகிய தேரினில் ஏறி, அதனையே ஏழாந்தானமாகிய வானத்தில் அமுதமாகிய வெள்ளத்தில் ஓட்டினால், போகமாகிய, பகையை வெல்கின்ற யோகமாகிய படை தனது சதுரங்கம் (நான்கு உறுப்பு - யானை, தேர், குதிரை, காலாள்) ஆகிய பிரத்தியாகாரம் முதலியவை ஒருபோதும் தளர்ச்சியடையா திருக்கும்.*

***குறிப்புரை :-*** *"இருபால்" எனவும், "வெளிநிற்கும்" எனவும் கூறியதனால் அவை பிராணாயாமத்தை குறியாது சரவோட்டத்தையே குறித்தல் தெளிவு. பிராணாயாமத்தால் ஏழாந் தானத்தில் செல்வோர் வானவூர்தியின்வழி வாகத்திற் செல்பவர். 'அவ்வாறன்றிச்*

812. அங்கப் புணர்ச்சியும் ஆகின்ற தத்துவம்
மங்கத்தில் விந்து வருகின்ற போகத்துப்
பங்கப் படாமற் பரிகரித் துத்தன்னைத்
தங்கிக் கொடுக்கத் தலைவனு மாமே. 4

---

*சரவோட்டத்தில் நின்றே அதனை அடைதல், நேரில் நின்றே வானத்திற் செல்லுதல் போல்வது' என அதன் அருமை கூறியவாறு. 'தேர் வானத்திற் செல்லுதலேயன்றி, அவ்விடத்து நீரிலும் செல்ல' என மேலும் ஓர் வியப்புத் தோன்றக் கூறினார். 'தண்டு, அங்கம்' என்பன சிலேடையாய், 'சுழுமுனை, படை' எனவும், 'படையின் உறுப்பு, யோகத்தின் உறுப்பு' எனவும் இவ்விரண்டு பொருள் பயந்தன. 'சுழுமுனை' என்றது அதன்வழிச் செய்யும் யோகத்தினை போகமும், யோகமும் தம்முள் மாறாவன ஆகலின், அவற்றை முறையே பகையாகவும், படையாகவும் உருவகம் செய்தார். "தண்டு" என்றது குறிப்புருவகம்.*

*இதனால், பரியங்க யோகத்தின் அருமைப்பாடும் அதன் பயனும் கூறப்பட்டன.*

812. ***தெளிவுரை :-*** ***கணவனும், மனைவியும் மெய்யுறுகின்ற செய்கையும் யோகத்தால் விளைகின்ற மெய்யுணர்வை மழுங்கச் செய்வதேயாம். அச்செய்கையில் வெண்பால் வெளிப்படுகின்ற இன்ப நிலைக்கண் யோகி அது வெளிப்பட்டுக் கெடாதவாறு காத்துக் கொண்ட அச்செயலில் நின்று தன்னைத் தன் மனைவிக்கு இன்பந் தருபவனாகக் கொடுத்தால், தனது யோகம் கெடாமையேயன்றி, யோகிகட்குத் தலைவனாயும் விளங்குவான்.***

***குறிப்புரை :-*** ***யோகியின் உணர்வைத் தாக்குவனவாகிய பசி, பிணி முதலியவற்றுள் இணை விழைச்சும் ஒன்று என்பார், 'அங்கப் புணர்ச்சியும்' என உம்மை கொடுத்து ஓதினார். 'மங்கு' என்னும் முதனிலைத் தொழிற்பெயர், மங்குதற்கு ஏதுவாவதன் மேல் நின்றது. 'புணர்ச்சியுள்' எனப் பாடம் ஓதி, 'தத்துவம் மங்குதலையுடைய தாம்' என உரைத்தலும் ஆம். 'அதில்' என்பது 'அத்தில்' என விரித்தலாயிற்று. 'தம்மை' என்பது பாடம் அன்று. மேலெல்லாம் உணர்வு மாத்திரத்தால் யோகமாமாறு கூறி, இதனுள் உடலாலும் யோகமாமாறு கூறினார். இதனை, வேறோர் இயைபு பற்றி, 'விந்துசயம்' எனப் பின்னர் விரிப்பார். (தி 10 ஏழாந் தந்திரம்) விந்துசயம் பெறுதலாவது, விந்து கீழே வீழ்ந்து கெடாது, சுழுமுனைவழி மேலேசென்று ஒளியாகப் பெறுதல்.***

813. தலைவனு மாயிடுந் தன்வழி ஞானம்
தலைவனு மாயிடுந் தன்வழி போகம்
தலைவனு மாயிடுந் தன்வழி உள்ளே
தலைவனு மாயிடுந் தன்வழி அஞ்சே. 5

814. அஞ்சு கடிகைமேல் ஆறாங் கடிகையில்
துஞ்சுவ தொன்றத் துணைவி துணைவன்பால்
நெஞ்சு நிறைந்தது வாய்கொளா தென்றது
பஞ்ச கடிகைப் பரியங்க யோகமே. 6

---

*இதனால், விந்து சய பரியங்கயோகம் சிறப்புடைத்தாதல் கூறப்பட்டது. இதனானே, பரியங்க யோகத்து 'விந்து சயம்' என்பது ஒன்று உண்டு என்பதும் பெறப்பட்டது.*

813. ***தெளிவுரை :-*** *பரியங்க யோகத்தால் உணர்வும், விந்துவும், அந்தக் கரணமும், ஐம்பொறியும் தன்வழிப்பட்டு நிற்க, யோகி அவை அனைத்தையும் தன் விருப்பப்படி ஆளும் தலைவன் ஆவான்.*

***குறிப்புரை :-*** *தலைவனுமாயிடும் தன்வழி ஞானம் - அங்ஙனமாகிய தலைவன் ஆன்மாவை அறிந்தவனாகின்றான், தலைவனுமாயிடும் தன்வழி போகம் - அவன் விரும்பிய சிவயோகம் தானே வந்தமையும், தலைவனுமாயிடும் தன்வழி உள்ளே - அவன் தன்னை வசப்படுத்தி ஆளும் தலைவனாவான், தலைவனுமாயிடும் தன்வழி அஞ்சு - அவன் விருப்பப்படி பஞ்சபூதங்கள் முதலியன நடக்கும்.*

*ஆன்ம ஞானம் பெற்றுச் சிவானந்தத்தில் திளைப்பதால் இந்த யோகியின் விருப்பப்படி உடம்பு வசப்படும்.*

*இதனால், பரியங்க யோகி போகத்தால் தனது நிலையினின்றும் தாழாமை கூறப்பட்டது.*

814. ***தெளிவுரை :-*** *யோகி தன் மனைவியுடன் ஐந்து நாழிகை கலவியில் ஈடுபட்ட பின், மனைவி அவன் பக்கலில் அமைதியாய் உறங்குதல் ஒன்றே பரியங்க யோகத்தின் பயன். அதனால், "நெஞ்சு நிறைந்தது வாய்கொளாது" என்னும் இன்பமுறை, ஐந்து நாழிகையை எல்லையாக உடைய பரியங்கயோகத்தின் கண்ணே மிகப் பொருந்துவதாம்.*

***குறிப்புரை :-*** *கடிகை - நாழிகை. நாழிகை - 24 நிமிடங்கள். 1 நாள் - 60 நாழிகை. "அஞ்சு கடிகைமேல்" எனவும், "பஞ்சகடிகை"*

*எனவும் போந்தவற்றால் பரியங்க யோகத்திற்குக் கொள்ளத்தக்க காலம் வரையறுக்கப்பட்டது. 'அத் துணைவி துணைவன் பால் துஞ்சுவது ஒன்று' என மாற்றியுரைக்க. "ஒன்று" என்பது, ஒன்றாம் பயனைக் குறித்தது. ஒன்றே என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுக்கப்பட்டது. அதனை விரிக்கவே, 'ஒன்றே பயனாம்' என்பது பொருளாம். இஃது ஒன்றே பயன் என்றதனால், 'துறவு பூண மாட்டாது இல்லறத்தில் நிற்கும் யோகிக்கு இப்பரியங்க யோகம் ஆண் கடன் இறுத்தப் பொருட்டு உடன்படப்பட்டது' என்பது போந்தது. இனி, அவ் ஆண் கடன் இறுத்தலும், விலக்கிய காலத்துக் கூடாமை அறிந்து கொள்க. விலக்கப்பட்ட காலங்கள் இவை என்பதை,*

> *"மிகத் தெளிந்தார் ஓதி விதிநிசித்தம் எல்லாம்*
> *பகற்பொழுது பாரார் பகம்"*
>
> *- சைவ சமயநெறி, பொது இலக்கணம் 224*

> *"அட்டமி சட்டி பதினான்கைம் மூன்றினும்*
> *தொட்டிடேல் இல்லவள்வேய்த் தோள்"*
>
> *- சைவ சமயநெறி, பொது இலக்கணம் 235*

> *"சென்மமொரு மூன்றும் திருவா திரைஓணம்*
> *என்னுமிவை தம்மினுந்தீண் டேல்"*
>
> *- சைவ சமயநெறி, பொது இலக்கணம் 226*

*என்பன முதலியவற்றான் அறிக. சென்மம் மூன்றாவன:- சென்மம், அனுசென்மம், திரிசென்மம். இவை தான் பிறந்த நட்சத்திரமும், அதனைச் சேர்ந்து எண்ண ஒன்று பத்தாவதும், அவ்வாறே அதற்குப் பத்தாவதுமான நட்சத்திரங்களுமாகும்.*

*"பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம்" என உலக நூலாகிய வைதிக நூல்கள் பொதுவாகக் கூறும் நால் வகை நிலைகளையே மெய்ந்நூல்களாகிய சைவ நூல்கள், 'சரியை கிரியை, யோகம், ஞானம்' என ஓராற்றால் சிறப்பாகக் கூறும். அதனால், யோகி இல்லறத்தவனாயும், ஞானி துறவறத்தவனாயும் நிற்றலே பெரும் பான்மையாதலின், யோகியைப் பற்றிக் கூறும் இப்பகுதியுள் இப் பரியங்க யோகம் கூறப்படுகின்றது. அகத்தியர், கௌதமர் முதலியோர் போல ஞானியராயும் இல்லறத்தில் நிற்றல் சிறுபான்மை, அவர்க்கும் இப்பரியங்கயோகம் உரித்து என்க. "யோகம்" என்பதில் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. நெஞ்சு நிறைந்தது. வாய்கொளாமையாவது,*

**815.** பரியங்க யோகத்துப் பஞ்ச கடிகை
அரியஇவ் யோகம் அடைந்தவர்க் கல்லது
சரிவளை முன்கைச்சி சந்தனக் கொங்கை
உருவித் தழுவ ஒருவர்க்கொண் ணாதே. 7

**816.** ஒண்ணாத யோகத்தை உற்றவர் ஆரென்னில்
விண்ணார்ந்த கங்கை விரிசடை வைத்தவன்
பண்ணார் அமுதினைப் பஞ்ச கடிகையில்
எண்ணா மென்றெண்ணி இருந்தார் இருந்ததே. 8

---

*உள்ளத்தில் நிறைந்த இன்பம் வாயால் சொல்ல வாராமை.*

*இதனால், பரியங்க யோகத்திற்கு நாழிகை வரையறை கூறப்பட்டது.*

**815.** *தெளிவுரை :- பரியங்க யோகத்துப் பஞ்ச கடிகை - பரியங்க யோகத்தில் ஐந்து நாழிகை, அரிய இவ்யோகம் அடைந்தவர்க்கல்லது - அருமையாய் இருப்பவர்க்கல்லாமல், சரிவளை முன்கைச்சி சந்தனக் கொங்கை - நழுவுகின்ற வளையலை அணிந்த முன்கையையுடைய வளும் விஷய வாசனை பொருந்திய சூரிய சந்திரர்களாகிய தனங்களையுமுடைய குண்டலினி சத்தியை, உருவித் தழுவ ஒருவர்க்கு ஒண்ணாது - கடந்து மேற்செல்ல ஒருவராலும் முடியாது.*

*குறிப்புரை :- சரிவளை முன் கைச்சி - நாதத்தை வெளிப்படுத்து கின்ற குண்டலினி சத்தி. சந்தனக் கொங்கை - விஷய வாசனையோடு கூடிய சூரிய சந்திரர்களாகிய தனங்கள். உருவுதல் - நீங்குதல். உருவித்தழுவல் - சத்தியோடு பதிந்திருத்தல்.*

*ஐந்து நாழிகை - பரியங்கயோகம் புரிவோரே குண்டலினியின் ஆற்றலைக் கடந்து மேற்செல்ல முடியும்.*

**816.** *தெளிவுரை :- செய்தற்கரிய இப்பரியங்க யோகத்தைப் பொருந்தி அறிவித்தவர் எத்தகைய பெருமையுடையவர் என்றால் "நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும் வென்றவ"னாயும் (தி.6 ப.50 பா.3) "மங்கை யோடிருந்தே யோகு செய்பவ"னாயும் (தி.9 ப.13 பா.11) உள்ள சிவபெருமானே எனத் தக்க பெருமையுடையவர். ஏனெனில், தாம் பெற்ற அரிய அமுதத்தை அதனை நுகர்தற்குரிய ஐந்து நாழிகையளவிலும் "உளத்தால் நுகரேம்" என உறுதிபூண்டு, முன்பு இருந்த ஏழாந் தானத்திலே இருப்பர் ஆதலால்.*

817. ஏய்ந்த பிராயம் இருபதும் முப்பதும்
வாய்ந்த குழலிக்கும் மன்னற்கும் ஆனந்தம்
ஆய்ந்த குழலியோ டைந்தும் மலர்ந்திடச்
சோர்ந்தன சித்தமும் சோர்வில்லை வெள்ளிக்கே. 9

---

*குறிப்புரை :-* *பண்ணுதல் - தேடிக்கொள்ளுதல், இங்குத் துணைவியை மணந்துகொள்ளுதல். "ஆரமுது" என்றது வாயூறலை. என்னை? இன்பத்தை விரும்புவார்க்கு அது பாலொடு தேன் கலந்தாற் போல (குறள், 1121) இனிதாகலின், 'கடிகையினும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. "இருந்தது" என்பதில் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. அதன்பின், "ஆதலால்" என்னும் சொல்லெச்சம் வருவிக்க. பின்னிரண்டு அடிகளால் பரியங்க யோகத்திருத்தலின் அருமை கூறியவாறு.*

*இதனால், பரியங்க யோகத்தில் நிற்பாரது பெருமை கூறப்பட்டது.*

**817. *தெளிவுரை :-*** *பெண்மகளுக்கும், ஆண்மகனுக்கும் வேட்கை மிக்கிருக்கின்ற அகவையளவு முறையே இருபது ஆண்டும், முப்பது ஆண்டுமாம். முப்பது ஆண்டிற்குமேல் ஆண்மகன் ஐம்புலன்களையும் ஒருங்கு நுகரும் வேட்கை மிகுவனாயின், விந்து சயம் பெற்று நிற்கற்பாலன்.*

***குறிப்புரை :-*** *'இதுவும் யோகியைக் குறித்ததே' என்பதை மறவற்க. "சோர்ந்தனன்" என்பதன் பின், "ஆயினும்" என்பது எஞ்சி நின்றது. "சித்தமும்" என்ற உம்மை, சிறப்பு. "சோர்வில்லையாகுக" என ஆணையாக ஓதற்பாலதனை, "இல்லை" என இயல்பாக வைத்து ஓதினார்.*

*"பன்னீராட்டைப் பிராயமும், பதினாறாட்டைப் பிராயமும் முறையே பெண்டிர்க்குப் பெண்மையும், ஆடவர்க்கு ஆண்மையும் உளதாம் காலம்" (இறையனார் அகப்பொருள் உரை தொல்காப்பிய உரைகள்) என்பர் ஆதலின், "அதுமுதல் எட்டாண்டுக் காலமே பெண்டிர்க்கு வேட்டை மிக்கிருக்கும் காலம்" என்று கூறியவர் "ஆடவர்க்குப் பதினான்கு ஆண்டுக் காலம் வேட்கை மிக்கிருக்கும்" என்று கூறியதனால், ஆடவர் வழிமுறைக் கிழத்தியரோடும் வேட்கை மிக்கிருத்தல் பெறப்பட்டது.*

**818.** வெள்ளி யுருகிப்பின் பொன்வழி ஓடாமே
கள்ளத்தட் டானார் கரியிட்டு மூடினார்
கொள்ளி பறியக் குழல்வழி யேசென்று
அள்ளிஉண் ணாவில் அடைக்கிவைத் தாரே. 10

---

*இதனால், பரியங்க யோகி விந்து சயம் பெற முயலுதற்குக் காலம் கூறப்பட்டது.*

**818.** *தெளிவுரை :-* பரியங்க யோகம் செய்பவர்க்கு வெண்பால் உருகிச் செம்பாலில் வீழாதபடி, அவரது உள்ளத்துள்ளே ஒளிந்து நிற்கும் சிவபெருமான், எல்லாவற்றிற்கும் சாட்சியாய் நிற்கும் தனது திருவருளைக் கொண்டு தடுப்பான். அதுவன்றி, அந்த யோகியர் தமது மூலாக்கினி மூண்டெரியச் சுழுமுனை வழியே சென்று அள்ளி உண்ணும்படி அமுதத்தை அவர் நாவடியில், பொருந்த வைத்தும் உள்ளான்.

*குறிப்புரை :-* வெள்ளி உருகிப் பொன்வழி ஓடாமே - வெண்ணிறமாகிய சுக்கிலம் உருகிப் பொன்னிறமாகிய சுரோணிதத்தில் (நாதத்தில்) கலக்காமல், கள்ளத்தட்டானார் கரியிட்டு மூடினார் - மறைந்துள்ள தட்டானாகிய சிவன் கரியாகிய அருளை நல்கிப் பக்குவம் செய்தார், கொள்ளி பறியக் குழல்வழியே சென்று - நெருப்பாகிய அக்கினி கலை உண்டாக ஊதுகுழலாகிய சுழுமுனை வழியே சென்று, வள்ளி உண்ணாவில் அடக்கி வைத்தார் - பொன்னாகிய சந்திரனைச் செப்பாகிய உள்நாவில் விளங்க வைத்தார்.

*குறிப்புரை :-* கரியாவது, தட்டானுக்குப் பொன்னைக் காய்ச்சு வதற்குப் பயன்படும் பொருள். வள்ளி - மதி. உண்ணாக்குப் பிரதேசத்திலிருந்து ஒளி மண்டலம் விளங்குவதை உபதேசம் செய்தவர் நந்தியாகிய குரு என்க.

நந்தியாகிய குரு, விந்து செயம் பெற்று அக்கினி கலை விளங்க உபதேசம் செய்தார்.

819. *தெளிவுரை :-* இன்பம் துய்த்தற்குச் சிவனால் அமைக்கப்பட்ட துணைவன், துணைவி என்னும் இருவரும் அவ்வின்பத்தில் திளைப்பினும், உள்ளம் திரியாது நின்றே செய்கின்ற கலவித் தொழிலால் யோகி, பத்துத் திக்கினர்க்கும், பதினெண் கணத்தவர்க்கும் ஞான சூரியனாய் நிற்கும் திறப்பாடுடையவனாவான்.

**819.** வைத்த இருவருந் தம்மின் மகிழ்ந்துடன்
சித்தங் கலங்காது செய்கின்ற ஆனந்தம்
பத்து வகைக்கும் பதினெண் கணத்துக்கும்
வித்தக னாய்நிற்கும் வெங்கதி ரோனே. **11**

**820.** வெங்கதி ருக்கும் சனிக்கும் இடைநின்ற
நங்கையைப் புல்லிய நம்பிக்கோ ரானந்தம்
தங்களிற் பொன்னிடை வெள்ளிதா ழாமுனம்
திங்களிற் செவ்வாய் புதைத்திருந் தாரே. **12**

---

*குறிப்புரை :-* *"ஆனந்தம்" என்றது, அதற்கு ஏதுவாய செயலை "ஆனந்தத்தால்" என உருபு விரித்து, "வெங்கதிரோன் ஆவன்" என முடிக்க. "வித்தகனாய் நிற்கும் வெங்கதிரோனே" என்றாராயினும், "வெங்கதிரோனாம் வித்தகனாம்" என்றலே கருத்து, நிற்றற்கு, "யோகி" என்னும் எழுவாய் வருவிக்க.*

*இதனால், மனமடக்கி, விந்து அழியாது போகிக்கும் யோகி சிவசூரியனாக விளங்குவன். பரியங்க யோகி கலவிக் காலத்திலும் உணர்வு திரியாது நிற்றல் கூறப்பட்டது.*

820. *தெளிவுரை :-* *அறிதுயிலுக்கும், அறியாத் துயிலுக்கும் இடையே நிற்கின்ற துணைவியைத் துணைவன் புல்லுமிடத்து இருவரும் அவ்வின்பம் முற்றுங்காறும் திங்கள் போன்ற முகத்தில் உள்ள சிவந்த வாயைப் பொத்தியேயிருந்தாராயினும், துணைவனுக்கு வேறோர் இன்பமும் அவ்விடத்து உளது.*

*குறிப்புரை :-* *வெங்கதிருக்கும் சனிக்கும் இடைநின்ற - விருப்பத்தைத் தருகின்ற சூரியனுக்கும் சனிப்பித்தலைச் செய்யும் கருவாய்க்கும் இடையில், நங்கையைப் புல்லிய நம்பிக்கு ஓர் ஆனந்தம் - சிறந்த பெண்ணைப் புணருகின்ற ஆண்மகன் ஆனந்தமடைகிறான், தங்களில் பொன்னிடை வெள்ளி தாழாமுனம் - இருவரது புணர்ச்சியில் சுரோணித வழி சுக்கிலம் பாயாமல், திங்களில் செவ்வாய் புதைத்திருந்தார் - சந்திர மண்டலத்தில் விளங்கும் செந்நிறம் பொருந்திய வாக்கின் சத்தியாகிய நாதத்தில் திளைத்திருந்தனர். சனி - பிறப்பு. செவ்வாய் - நாதம். நங்கையும் நம்பியும் சந்திரமண்டலத்தில் நாதத்தில் திளைத்திருந்தனர்.*

**821.** **திருத்திப் புதனைத் திருத்தல்செய் வார்க்குக்**
**கருத்தழ காலே கலந்தங் கிருக்கில்**
**வருத்தமு மில்லையாம் மங்கை பங்கற்கும்**
**துருத்தியுள் வெள்ளியுஞ் சோரா தெழுமே.** **13**

---

**821.** *தெளிவுரை :-* இன்பத்தில் வேட்கை கொண்ட மனம் கலவியால் நிறைவு பெற்றபின், மேலும் அவ்வேட்கையை உற்றுக் குறைபடாதவாறு திருத்துகின்ற 'சிவன் சத்தி' என்னும் இருவரிடத்தும் தனது மனம் பொலிவோடு பொருந்தி அவ்விடத்தே நிற்கப்பெற்றால் துணைவியையுடைய யோகிக்கும் அவளையுடைமையால் உலகியல் துன்பமும் உண்டாகாது. விந்துவும், கீழ் விழுவதாகாது, மேல் எழுவது (ஊர்த்துவரேதசு) ஆகும்.

*குறிப்புரை :-* "திருத்தி" என்பது, "நிறைவு" என்னும் பொருட்டாய வடமொழிப் பெயர்ச்சொல். புதன் - புத்தி; மனம். "யோகி, தன்மனத்தை நல்வழிப்படுத்துவர் சிவனும், சத்தியுமே என உணரின், அவன் மன அவரிடத்தே பதிந்து நிற்கும்'' என்றற்கு, ''மனத்தைத் திருத்தல் செய்வார்க்கு" என உடம்பொடு புணர்த்து ஓதினார்.

"திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை
இடங்கொள் கயிலாயா" - தி.7 ப.47 பா.8

"நெஞ்சினைத் தூய்மை செய்து
நினைக்குமா நினைப்பி யாதே
வஞ்சமே செய்தி யாலோ
வானவர் தலைவ னேநீ" - தி.4 ப.23 பா.9

என்பவற்றால் இறைவன் தன் அடியவர் மனத்தைத் திருத்துபவனாதல் அறிக. திருத்திப் புதனைத் திருத்தல் செய்வார்க்கு - பரியங்க யோகத்தால் புதனாகிய அறிவைச் சந்திர மண்டலத்தில் வைப்பதாகிய நன்மையைச் செய்வார்க்கு, கருத்தழகாலே கலந்தங்கு இருக்கில் - வியாபகக் கருத்துகள் பொருந்த அங்கு இருந்தால், மங்கை பங்கற்கும் வருத்தமும் இல்லையாம் - பெண்ணுடன் பொருந்துவார்க்குத் துன்பமும் இல்லையாம், துருத்தியில் வெள்ளியும் சோராதெழும் - உடம்பில் விந்து நீக்கமின்றி ஊர்த்துவ ரேதசு அமையும். புதன் - அறிவு. துருத்தி - உடம்பு. ஊர்த்துவ ரேதசாவது, விந்துவைச் செலுத்தும் காம வாயு மேல்நோக்குதல். சந்திர மண்டலத்தில் கருத்துப் பதிந்தவர்க்கு ஊர்த்துவ ரேதசு அமையும்.

**822.** எழுகின்ற தீயைமுன் னேகொண்டு சென்றால்
மெழுகுரு கும்பரி செய்திடும் மெய்யே
உழுகின்ற தில்லை ஒளியை அறிந்தபின்
விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே. **14**

**823.** வெளியை அறிந்து வெளியின் நடுவே
ஒளியை அறிவின் உளிமுறி யாமே
தெளிவை அறிந்து செழுநந்தி யாலே
வெளியை அறிந்தனன் மேலறி யேனே. **15**

---

*இதனால், பரியங்கயோகி உலகியலால் தாக்குண்ணாமை கூறப்பட்டது.*

**822.** *தெளிவுரை :- எழுகின்ற தீயை முன்னே கொண்டு சென்றிட்டால் - சுவாதிட்டானத்திலுள்ள காமாக்கினியை (பார்த்தி பாக்கினியை) மூலாதார வழி புருவ நடுவுக்குக் கொண்டு சென்றால், மெழுகுருகும் பரிசு மெய் எய்திடும் - அனலின் முன் மெழுகு போன்று சாதகர்க்கு உடம்பு காணாதொழியும், ஒளியை அறிந்தபின் உழுகின்றதில்லை - சோதியைக் கண்டபிறகு உழுதலாகிய செயல் இல்லை, வெளியறிவார்க்கு விழுகின்றதில்லை - புருவ நடுவைத் தாண்டி துவாதசாந்தப் பெருவெளியை அறிந்த பேர்க்கு உடல் கீழே விழுகின்றதில்லை.*

*மெய் மெழுகுருகும் பரிசு எய்துதல் என்பது, உருவம் கடந்து வெளியான ஆகாயத்தில் சோதியாய் நிற்பவரது உடம்பு முதலியவை மெழுகு உருகுவது போன்று ஒளி மயமாய் உருகிவிடும் என்றபடி. ஆகாய மயமான சிதம்பரத்தை அறிந்தவரது உடம்பு, ஆவி பிரிந்த பின் கீழே விழாது.*

**823.** *தெளிவுரை :- யான் என் ஆசிரியர் நந்திபெருமானது அருளால் வான மண்டலமாகிய நிராதாரத்தையும், அதில் விளங்குகின்ற அருளொளியையும், அவ்வொளியால் தெளியப்படுகின்ற மெய்ப்பொருளையும் உணர்ந்து, அவ்வுணர்வு கெடாதிருக்க விந்து சயம் பெறும் முறையையும் உணர்ந்தேன். யோகத்தில் இதற்குமேல் அறியத்தக்கது ஒன்று இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.*

*குறிப்புரை :- "அறிந்து" என்பதனை, "ஒளியை" என்பதற்கும் கூட்டுக. "அறிவின் உளி" என்பதில் 'இன்' வேண்டா வழிச் சாரியை.*

824. மேலாந் தலத்தில் விரிந்தவர் ஆரென்னில்
மாலாந் திசைமுகன் மாநந்தி யாயவர்
நாலாம் நிலத்தின் நடுவான அப்பொருள்
மேலா வுரைத்தனர் மின்னிடை யாளுக்கே. 16

---

"உளி" என்றது, "கருவி" என்றவாறு. இஃது உருவக அணி. "உளி - கூர்மை" எனின், "அறிவின் உளி" என்பது ஆறாவதன் தொகையாம். "அறியின்" என்பது பாடம் அன்று, "அறிவின் உளி முறியாமே" என்றதனை, நான்காமடியின் முன்னே கூட்டி உரைக்க. நான்காம் அடியில் "வெளி" என்பது, "வெள்ளி" என்பதன் இடைக்குறை அஃது அதனை வசப்படுத்தும் முறையைக் குறித்தது. விந்து சயம் துறவிகளும் கொள்ளத்தக்கதாகலின் நாயனார் அஃது உடையராய் இருந்தார் என்க.

இதனால், விந்து சயம் அநுபவ நிகழ்ச்சியால் கூறும் முகத்தால் பரியங்க யோகி அஃது உடையனாதல் கூறப்பட்டது.

**824.** *தெளிவுரை :-* "இல்லறத்தவருள் நிராதார யோகத்தில் நின்று அதனால் வியாபக உணர்வைப் பெற்றிருந்தோர் எவரேனும் உளரோ" எனின், அயன், மால், நந்தி கணங்கள் ஆகிய யாவரும் அத்தகையோரே, இவரெல்லாம் துரிய மூர்த்தியாகிய சிவனை உணர்ந்து, அவனையே பரம்பொருளாகத் தம் துணைவியருக்கு உணர்த்தினர்.

*குறிப்புரை :-* மேலாந்தலம் - இன்றற்கொன்று மேலாக விளங்குகின்ற இடம் மூலாதாரம் திசைமுகன். அதற்குமேல் சுவாதிட்டானம் திருமால். அதற்குமேல் மணிபூரகம் உருத்திரன் மாநந்தி - எமது முதலாசாரியனாகிய சீகண்டருத்திர சிவம், அதற்கு மேல் அநாகதம் ஈசன், நாலாம் இடம் என்றது அநாகதஸ்தானத்தை, இது இதயஸ்தானமாதலின் நடு எனப்பட்டது. நடுவான பொருள் மகேசன், மேலாய் - அதற்கு மேலுள்ளதாகிய ஆஞ்ஞையில் ஒளி வடிவாகப் பராசத்தி விளங்குகிறாள் ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

இதனால், உயர்நிலை வானவர் பரியங்க யோகத்தால் அந்நிலை இழவாது நிற்றல் கூறும் முகத்தால், அவ்யோகப் பயன் தெளிவிக்கப்பட்டது.

**825.** *தெளிவுரை :-* துணைவனும், துணைவியும் தாம் கூடுகின்ற காலத்துத் தங்கள் உள்ளத்தை ஆஞ்ஞை முதலிய மேலிடங்களில் பொருந்த வைத்து, அங்கு விளங்குகின்ற சிவனுடன் தங்களை ஒன்றுபடுத்த வல்லவராயின், இவ்வுலகத்திலும் பல்லூழி காலம் வாழ்தல் கூடும்.

**825.** **மின்னிடை யாளும்மின் னாளனுங் கூட்டத்துப்**
**பொன்னிடை வட்டத்தின் உள்ளே புகப்பெய்து**
**தன்னொடு தன்னைத் தலைப்பெய்ய வல்லாரேல்**
**மண்ணிடைப் பல்லூழி வாழலு மாமே.** **17**

**826.** **வாங்க இறுதலை வாங்கலில் வாங்கியே**
**வீங்க வலிக்கும் விரகறி வாரில்லை**
**வீங்க வலிக்கும் விரகறி வாளர் தாம்**
**ஓங்கிய தம்மை உதம்பண்ணி னாரே.** **18**

---

*குறிப்புரை :-* *"மின்னாளன்" என்பதில் மின் - பெண்டு. பொன் இடை வட்டம், பொன்னை உள்ளிட்ட இடம்; பொன்னம்பலத்தை, "பொன்" என்றார், அதனை உள்ளிட்ட இடம். ஆஞ்ஞை முதலாக மேலே உள்ளவை. புகப் பெய்தலுக்கு, "உள்ளம்" என்னும் செயப்படு பொருள் வருவிக்க. "தன்னொடு" என்பதில் தான், சிவன், "தன்னை" என்பது "மின்னிடையாள், மின்னாளன்" என்பவற்றோடு தனித்தனி சென்று இயையும். விண்ணிடைப் பல்லூழி வாழ்தல் இயல்பாகவே பெறப்பட்டுக் கிடத்தலின் மண்ணிடைப் பல்லூழி வாழ்தலும்" என்னும் உம்மை இறந்தது தழுவிற்று. இதன்கண் இனவெதுகை வந்தது.*

*இம்மந்திரத்தினை நாயனார், துணைவி, துணைவன் இருவர்க்கும் ஒப்பக் கூறியதனால், பரியங்கயோகம் பெண்டிர்க்கும் உரித்தாதல் பெறப்பட்டது. இதனால், சிவநெறி, மெய்ந்நெறியை இருபாலார்க்கும் ஒப்ப உரித்தாகக் கூறுதல் அறியப்படும். காரைக்கால் அம்மையார் தாம் கணவனோடு வாழ்ந்த காலத்தில் தம் உடம்பை அவனுக்காகவே தசைப்பொதியாகச் சுமந்து நின்றமை தி.12 திருத்தொண்டர் புராணத்தால் அறியப்படுதலின், அக்காலத்து அவர் பரியங்கயோகம் உடையராய் இருந்தமை உய்த்துணர்ந்து கொள்ளப்படும்.*

*இதனால், பரியங்கயோகம் காயசித்தியையும் தருதல் கூறப்பட்டது.*

**826.** ***தெளிவுரை :-*** *துணைவி வாங்கிக் கொள்ளத் துணைவனிட மிருந்து நீங்குவதாகிய விந்துவை அங்ஙனம் நீங்காமல் உள்வாங்கிக் கொள்ளும் முறையில் வாங்கி, பின் அஃது உடம்பினுள் ஆற்றலாய்*

**827.** உதமறிந் தங்கே ஒருசுழிப் பட்டால்
கதமறிந் தங்கே கபாலங் கறுக்கும்
இதமறிந் தென்றும் இருப்பாள் ஒருத்தி
பதமறிந் தும்முளே பார்கடிந் தாளே. **19**

---

*மிகுமாறு உறுதிப்படுத்திக் கொள்ளும் வழியை அறிகின்றவர் ஒருவரும் இல்லை. ('அரியர்' - என்றபடி) இனி, அவ்வழியை அறிந்தவர் யோகத்தில் மிக்கு விளங்கும் தம்மைப் போகத்திற்கும் தகுதியுடையவராகச் செய்து கொண்டவராவர். வாங்கல் - பூரகம். இறுதல் - ரேசகம். வீங்கல் - கும்பகம். தன்னை உதம் செய்தல் - ஆத்ம ஆகுதி செய்தல்.*

*குறிப்புரை :- வாங்கல் இறுதலை - வெளிமுகமான காம வாயுவை உள்ளுக்கிழுத்துச் சுக்கிலம் கெடும்படி செய்தலும், வாங்கலில் வாங்கிய வீங்க வலிக்கும் விரகறிவார் இல்லை - அவ்வாறு உள்ளுக்கிழுத்த காம வாயுவை ஊர்த்துவ முகமாக்குதலுமாகிய உபாயத்தை அறிவாரும் இல்லை; வீங்க வலிக்கும் விரகறிவாளரும் - அவ்வாறு மாற்றம் செய்யும் உபாயத்தை அறிந்தவரும், ஓங்கிய தன்னை உதம் பண்ணினார் - வளர்ச்சி பெற்ற தன்னைச் சிவத்திடம் ஆகுதி பண்ணினவராவார்.*

*வாங்கலாவது, காம வாயுவை மூலாதார வழி மாற்றிச் செலுத்துதல். இறுதலாவது, காம வாயு மாறியமைந்ததால் சுக்கிலம் கெடுதல். வீங்கலாவது, ஊர்த்துவ ரேதசாதல். உதம் செய்தலாவது, ஆன்மாவை ஓமப் பொருளாக்கல்.*

*காம வாயுவை மாறி அமையும்படி செய்து சிவத்திடம் ஆத்மார்ப்பணம் செய்ய வேண்டும்.*

**827.** ***தெளிவுரை :-*** *போகத்தை நுகர்தற்குத் தகுதியான வழியை அறிந்து அவ்வெள்ளத்தில் மூழ்கினால், அவ்வழி உம்மால் நன்கு பயிலப்பட்டு அந்நிலையிற்றானே நரை வாராதொழியும் எக்காலத்தும் உமது நன்மையையே நினைத்திருப்பவளாகிய சத்தியும், உமது பக்குவ காலத்தை அறிந்து உங்கள் உணர்வில் உலகியலைப் போக்கியருள்வாள்.*

***குறிப்புரை :-*** *இவ்வண்ணம் ஆத்மாகுதி செய்து ஆஞ்ஞையில் உள்ள சக்கரத்துள் பொருந்தின், வழி தெரிந்து, அங்கே கபாலம் கறுக்கும்; பராசத்தி இவ்வியோகிக்கு இதமாவது யாதென்று ஆராய்ந்து*

**828.** பாரில்லை நீரில்லை பங்கயம் ஒன்றுண்டு
தாரில்லை வேரில்லை தாமரை பூத்தது
ஊரில்லை காணும் ஒளியது ஒன்றுண்டு
கீழில்லை மேலில்லை கேள்வியிற் பூவே. **20**

---

*அங்கேயிருந்து அருள்புரிவாள், உங்களுடைய பரிபாக நிலையை அறிந்து பாசஞானத்தைக் கடிந்து பரஞானத்தை அளிப்பள் என்றவாறு.*

*சுழி - சக்கரம், ஒருகழி - ஒப்பற்ற சக்கரமாகிற ஆஞ்ஞை, கதம் - வழி, அடைவிப்பது என்பது அதன் பகுதிப் பொருள். வழியறிந்து கபாலம் கறுத்தலாவது, நரையில்லை என்பதாம். இதம், இன்பம், ஒருத்தி என்றது பராசத்தியை பதம் - ஆன்மாவினுடைய மலபரிபாகமும், இருவினையொப்புமாகிய பரிபாக நிலை, பார் கடிதல் - பாராதிகட்குக் காரணமாகிய மாயைகளையும், அது உபாதானமாகி அகற்றும் மலத்தையும் நீக்கியும் வன்மை வாட்டியும்.*

*இதனால் காம வாயுவைக்கீழ் நோக்காது மேல்நோக்கும்படிச் செய்யும் பரியங்க யோகியர்க்கு நல்வாழ்வும், வீடு பேறும் கேடுறாமை கூறப்பட்டது. "இவை அனைத்திற்கும் திருவருளே காரணம்" என அறிவுறுத்தப்பட்டவாற்றை கடைப்பிடிக்க.*

**828. *தெளிவுரை :-* *பூமியும் இல்லை தண்ணீரும் இல்லை ஆனால் தாமரைப்பூவென்று உண்டு அரும்புமில்லை வேரும் இல்லை தாமரை பூத்திருக்கிறது ஊருமில்லை, ஆனால் அறியப்படுகின்ற ஒளிமட்டும் உண்டு, கீழுமில்லை, மேலுமில்லை, இங்ஙனமிருப்பதொரு பொருள் யாதோவெனின், சிவஞானமாகிய செந்தாமரைப்பூவாம் என்றவாறு.***

***தாமரை, சேறும் நீரும் இருந்தால் முளைவரும். அது விரும்பும் வேருமிருந்தால் வளர்ந்து பூக்கும். ஆதாரமாகிய இடமிருந்தாற்றான் ஒளியாகிய ஆதேயம் உண்டு. பூ என்ற பொருளுண்டானால் அதற்குக் கீழும் மேலுமாகிய பகுதிகள் உண்டு, இதற்கு அவையொன்றும் இல்லையாம் என்றபடி, சிவஞானமாகிய செந்தாமரைக்கு இவையொன்றுமில்லையாம், ஆனாலும் அது பூத்துச் சிவமணம் கமழும் என்பதாம். தார் - அரும்பு. இது பிசிச் செய்யுள் ஆதலின், இதனை விடுத்துக் காணுமாறு :- பங்கயம் - தாமரைக் கொடி. "இது மண்ணும், தண்ணீரும் இல்லாமலே முளைத்து வளர்ந்தது''***

*என்றதனால், சுழுமுனைத் தண்டைக் குறித்தது. ''அக்கொடிக்குச் சல்லிவேர், ஆணிவேர் முதலியன இல்லாமலே பூப் பூத்தது'' என்றதனால், அஃது அத்தண்டு ஆதார பங்கயங்களை உடைத்தாதலைக் குறித்தது. தார் - இழை போன்றவை. "ஊர்" என்றது ஊரின்கண் வாழ்வாரை. "அவர் (ஏற்றுவார்) ஒருவரும் இல்லாமலே காணப்படுகின்ற விளக்கு ஒன்று உண்டு'' என்றதனால், அஃது அவ்வாதார நிராதாரங்களில் ஏற்ற பெற்றியால் விளங்கும் அருளுருவத்தைக் குறித்தது. பூ - நிலம்; உலகம் "காட்சிக்கு வாராது, ஆசிரியர் தம் அருள்மொழிக் கேள்வியால் அறியப்படுகின்ற உலகம்" என்றதனால், அஃது அண்டத்தைப் போலவே பிண்டத்திற்குக் கொள்ளப்படும் உலகங்களைக் குறித்தது. கீழ்மேல் இல்லை என்றதனால் அவை பாவனைப் பொருளாதல் குறிக்கப்பட்டது. "பூவிற்கு" என்னும் நான்கன் உருபு தொகுத்தல் ஆயிற்று.*

***குறிப்புரை :-** "யோகநெறியில் உள்ள பொருள்கள் இத்துணை வியப்புடையன" என்றவாறு. இதனை இவ்விடத்திற் கூறினார். "மான் தோல், புலித்தோல், தருப்பை'' முதலிய ஆசனங்களின் மேல் இருத்தலும் காடு, மலை, முழை முதலிய இடங்களில் தனித்திருத்தலும் போல்வன இல்லாமல், கட்டிலிற் பஞ்சணையின் மேல் துணைவியுடன் கிடந்தும் முனிவராய் நிற்கும் வியத்தகு நிலையும் யோகத்தால் கூடும் என்பது தோன்றுதற்கு.*

***இதனால், "பரியங்க யோகம் வியப்புடையதொன்று" என்பது கூறப்பட்டது.***

## 20. அமுரி தாரணை

829. உடலிற் கிடந்த உறுதிக் குடி நீர்
கடலிற் சிறுகிணற் றேற்றமிட் டாலொக்கும்
உடலில் ஒருவழி ஒன்றுக் கிறைக்கில்
நடலைப் படாதுயிர் நாட்டலு மாமே. 1

---

*பரியங்க யோகத்தில் விந்து சயம் கூறிய இயைபானே, பின், ஐந்து திருமந்திரங்களால் அமுரி தாரணை கூறுகின்றார். அமுரி - வீரியம். தாரணை - தரித்தல். அமுரி தாரணையாவது - வீரியத்தை உடம்பில் தரிக்கும்படி செய்தல். குடிநீர், சிவநீர், வான்நீர், ஆகாய கங்கை, அமுத நீர், உவரி, தேறல், மது, கள், மலைநீர் என்பனவெல்லாம் அமுரியைக் குறிக்கும்.*

*"அமுரி" என்பது சிறுநீரில் உள்ள ஒரு மருந்துப் பொருள். "அமரி" என்பது மருவி, "அமுரி" என வழங்கப்படுகின்றது. அமரி - மரித்தலை (இறத்தலை) நீக்குவது. எனவே, இதுவும் "அமிர்தம்" என்பதனோடு ஒருபொருட் சொல்லேயாம். எனினும், குறித்தபொருள் விளங்குதற் பொருட்டு இதனை வேறு குறியீட்டுச் சொல்லாக வைத்து வழங்குவர். "அமுரி" எனப்படுவது சிறுநீரே என்பாரும் உளர். அது பொருந்தாமை. இங்கு வரும் திருமந்திரங்களாலே அறியப்படும்.*

*மருத்துவமுறையிலும் சிறுநீரிலிருந்து அமுரி எடுக்கும் முறை உளது. அவ்வாறு செய்யமாட்டாதார், சிறுநீரையே அமுரியாகக் கொள்வர்.*

***வெளிப்போந்த சிறுநீரிலிருந்து மருத்துவமுறையாற் பெறும் அமுரியை, அஃது உள்ளிருக்கும் பொழுதே யோக முறையால் நிறுத்தி உடலிற்குப் பயன்படச் செய்யும் முறையே இங்கு "அமுரி தாரணை" எனக் கூறப்படுகின்றது.** "தாரணை" என்னும் பெயர்தானே இஃது யோக முறையாதலை இனிது விளங்கும். மருத்துவமுறையில் அமுரியைப் பெறுதலை இங்குக் கூறுதற்கு ஓர் இயைபின்மை அறிக. காயசித்தி முதலியனவும் இங்கு யோக முறையானே கூறப்பட்டமை ஓர்ந்துணரத்தக்கது.*

**829. *தெளிவுரை :-*** உடம்பில் இயல்பிலே பொருந்தியுள்ள ஆற்றல் மிக்க, குடிக்கத் தகும் நீர், கடலில் சிறிய கிணற்றுக்கு

*இடப்படும் ஏற்றத்தை இட்டு இறைத்துக் கொள்ளுதலோடு ஒத்திருக்கும். (அஃதாவது, "மிகுதியாய் வெளிப்போகும் சிறுநீரில் சிறிதளவு உளதாகும்" என்பதாம்) அதனை உடலினின்று வெளிப்போதும் முன்பே வேறொரு வழியால் அவ்வுடலுக்கே ஆகுமாறு பாய்ச்சினால், உயிர் துன்பப்படாது நெடுங்காலம் நிற்கும்படி நிறுத்துதல் கூடும்.*

***குறிப்புரை :-*** *"'அமுரி" என்றாயினும், "நீர்" என்றாயினும் ஒரு பெயர்ச்சொல்லால் ஓதின், "அது சிறுநீரே போலும்" என மலைய வரினும் வரும் என்னும் கருத்தால், அங்ஙனம் மலையாமைப் பொருட்டு, "உறுதிக் குடி நீர்" எனத் தொடர்மொழியால் பொருள் இனிது விளங்க ஓதினார். சிறுநீர் தீப்பொருளாய்க் கழிக்கப்படுவது ஆதலின், அஃது உறுதியைத் தருவதாய்க் குடிக்கத் தக்கதாகாமை வெளிப்படை.*

*"உடலில் இறைக்கில்" என்றது, "உடலினுள் இருக்கும் பொழுதே இறைத்தால்" என்றவாறு. வேறொரு வழி, சுழுமுனைத் தண்டு; உடலில் உள்ள பல நாடிகளும் இதனைச் சுற்றிக்கிடத்தலால், அவற்றின்வழி அமுரியைப் பிராண இயக்கத்தால் உடல் எங்கும் செல்லுமாறு பாய்ச்சுதல் கூடும் என்க. யோக முயற்சி இல்லாதார்க்குப் பிராணன் அபானனாதல் பெரும்பான்மையாய்க் கீழ்ப்போய் ஒழிய, யோக முயற்சி உடையார்க்கு அஃது அவ்வாறாகாமல் சுழுமுனைவழிச் சென்று உடற்குப் பயன்தருதல் போல, அமுரியும் பிறர்க்குச் சிறுநீரோடு ஒன்றாய் வெளிப்போந்து ஒழிய, யோகியர்க்கு அவ்வாறாகாமல் உடற்கண் சென்று பயன்படுவதாம். அதனை அங்ஙனம் பயன்படச் செய்யும் முறையையே, "உடலில் ஒருவழி ஒன்றுக்கு இறைக்கில்" என்றார். ஒன்று - ஒன்றாய் நிற்கும் உடல். நடலை - துன்பம். "உயிர் நாட்டலும் ஆம்" என்றது, அமுரியின் பயன் கூறும் முகத்தால் பெயர்க் காரணத்தை விளக்கியவாறு.*

*இதனால், "அமுரியாவது இது" என்பதும், அதனைத் தரிக்கும் முறையும், அதன் பயனும் கூறப்பட்டன.*

***830. தெளிவுரை :-*** *யோக முறையால் வடிவத்துக் கொள்ளப்படுதலால் "சிவ நீர்" எனச் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற இந்த அமுரியைப் பருகுதலை மேற்கொண்டால், ஓராண்டுக் காலத்தில் அறிவு மிக விளக்கம் பெறும். உடலுக்கு உள்ள நோய், இளைப்பு முதலிய குறைகள் நீங்கும். எட்டாண்டில் வாசி யோகம் கைவரும். அதனால், மன ஒருமை உளதாகும். அதனால் அமைதியான ஓர் இன்பம்*

830. தெளிவரும் இந்தச் சிவநீர் பருகில்
ஒளிதரும் ஓராண்டில் ஊனமொன் றில்லை
வளியுறும் எட்டில் மனமும் ஒடுங்கும்
களிதரும் காயம் கனகம தாமே. 2

831. நூறும் மிளகு நுகரும் சிவத்தின் நீர்
மாறும் இதற்கு மருந்தில்லை மாந்தர்காள்
தேறி இதனைத் தெளிஉச்சிக் கப்பிடின்
மாறும் இதற்கு மறுமயி ராமே. 3

---

*தோன்றும். உடம்பு பொன் போல அழகு பெற்று விளங்கும்.*

***குறிப்புரை :-*** *"தெளி தரும்" என்றது, "தெளித்துத் தரப்படும்" என்னும் பொருளது. இதனானும், சிறுநீரே அமுரி அல்லது சிவ நீர் ஆகாமை அறியப்படும். ''பருகில்'' எனப் பொதுவகையாற் கூறினாரேனும், மேல், "உடலில் ஒருவழி ஒன்றுக்கு இறைக்கில்" என்றதே பொருளாம். "ஓராண்டில் எட்டில்" என்பவற்றை அவ்வவ் அடியின் முதற்கண் வைத்து உரைக்க.*

*இதனால், அமுரி தாரணையின் உடல், மனமாற்றம் போன்ற பயன்கள் பலவும் எடுத்துக் கூறப்பட்டன.*

**831. *தெளிவுரை :-*** *யோகியர்களே, நீவிர் பொடி செய்த மிளகை உண்ணுங்கள்; அதனால், சிறுநீர் சிவநீராய் மாறும். அவ்வாறு மாறுவதற்கு மருந்து ஒன்றும் வேண்டுவதில்லை. மிளகுப் பொடியின் ஆற்றலைத் தெளிந்து அறிவிற்கு நிலைக்களமான உச்சியில் அதனை அப்பினாலும் அவ்வாறாம். இன்னும் இதனாலே நரையும் மாறும்.*

***குறிப்புரை :-*** *நூறுதல் - பொடித்தல். "நூறு மிளகு" எனக் கொண்டு, எண் வரையறையாக உரைத்தல் கூடாமை அறிக. நுகரும், பன்மை ஏவல். "மாந்தர்கள்" என்பது பாடமாக ஓதின், இதனை, "நுகர" எனச் செயவென் எச்சமாக ஓதுக. "நீர் சிவத்தின் மாறும்" என மாற்றியுரைக்க. சிவத்தின் - சிவமாக. "மருந்தில்லை" என்றதனால் இங்குக் கூறப்பட்டவை யோகியர்தம் ஒழுக்கப் பகுதியாய், அமுரி தாரணையாய யோகத்திற்குத் துணையாவனவாயின. கப்புதல் - மூடுதல் 'கப்பஇடின்' என்பதில் அகரமும், ''கப்பிடினும்'' என்னும் எச்ச உம்மையும் தொகுத்தல் பெற்றன. 'உச்சிக்கு அப்பிடின்' எனப் பாடம் ஓதி, 'உச்சிக்கு என்பது உருபு மயக்கம்' என்றலும் ஆம். "இதற்கு" என்பது உருபு மயக்கம்.*

*இதனால், அமுரி தாரணைக்குத் துணையாவன சில கூறப்பட்டன.*

**832.** கரையரு கேநின்ற கானல் உவரி
வரைவரை என்பர் மதியிலா மாந்தர்
நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு
நரைதிரை மாறும் நமனுமங் கில்லையே. **4**

அளக நன்னுத லாயோ ரதிசயங்
களவு காயங் கலந்தஇந் நீரிலே
மிளகு நெல்லியும் மஞ்சளும் வேம்பிடில்
இளகும் மேனி இருளுங் கபாலமே.

---

**832.** *தெளிவுரை :-* *உண்ணத் தகுவதனையும், தகாததனையும் அறியமாட்டாத சிலர், தம்வழி நிற்பாரை, கடற்கரையின் அருகில் கானலிலே உள்ள உப்பங்கழியின் நீரை அப்படியே முகந்து உண்ணுமாறு பணிப்பர். அந்நீரை நுரையையும், பிற மாசுகளையும் நீக்கி உண்ண வல்லவர்க்கே பயன் உளதாம்.*

*குறிப்புரை :-* *இஃது ஒட்டணி. இதனுள் "உவரி" என்பது அடை பொதுவாக்கி மொழிதலும், ஈற்றடி அடை விரவத்தொடுத்தலும் ஆம். (தண்டியலங்காரம், 51) இதனாற் பெறப்படும் பொருள் வருமாறு:- சுவாதிட்டானத்திற்கு அருகில் நின்று குறிவழியே வெளிப்போதுகின்ற சிறுநீரையே சிலர் 'அமுரி' எனச் சொல்லிப் பிறரை உண்பிக்கின்றனர்; அஃது அறியாமைப்பாலது. அச் சிறுநீரைக் குற்றம் களையும் முறையறிந்து களைந்து உண்ண வல்லவர்க்கே அமுரியால் விளையும் பயன் உளதாகும்.*

*கானல் - கடற்கரையை அடுத்த இடம். 'கானல்' எனவே, கரை, கடற்கரையை 'உவரி' என்பது காரணக்குறியாய் உப்பங்கழி நீரைக் குறித்துச் சிறுநீர் மேலும் நோக்குடைத்தாயிற்று. வரைதல் - கொள்ளுதல். "வரை வரை" என ஏவல் முற்று, வலியுறுத்தற்கண் அடுக்கி வந்தது. இது பன்மை ஒருமை மயக்கம். முதற்கண் நின்ற திரை, அலை. அஃது ஆகுபெயராய் அதன்மேல் மிதக்கும் மாசுகளைக் குறித்தது. "நரை திரை மாறும்" என்றது, 'மூப்பு நீங்கி இளமை உண்டாகும்' எனவும், "நமனும் அங்கு இல்லை" என்றது கூற்றுவன் வருதலும் அவரிடம் இல்லை எனவும் கூறியவாறு. "நமன்" என்பது அவனது வருகைமேல் நின்ற ஆகுபெயர். வரைதலைத் தள்ளுதலாக்கி, அதற்கியைய உரைப்பாரும் உளர்.*

*இதனால், 'அமுரி' என்பதனை உள்ளவாறு உணராத வழிப் பயன் இன்மை கூறப்பட்டது.*

*இதன்பின், பதிப்புக்களில் காணப்படும் "அளக நன்னுதலாய்" என்னும் செய்யுள் நாயனார் திருமொழி அன்று என்பது,*

**833.** வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்
நாரி மருந்தென்றும் நந்தி அருள்செய்தான்
ஆதி மருந்தென் றறிவார் அகலிடஞ்
சோதி மருந்திது சொல்லவொண் ணாதே. **5**

---

*யாப்பமைதியானே எளிதின் விளங்கும். அன்றியும், மகடூஉ முன்னிலையாக நாயனார் மந்திரம் செய்யாமையும் நோக்கற்பாற்று. யாப்பமைதியைச் சீர்செய்தற்கு நிகழ்ந்த சிறு முயற்சி. "அழகிய நன்னுதலாயோ ரதிசயம்" எனவும், "இளகிடும் மேனி" எனவும் காணப்படுகின்ற பாட வேற்றுமைகளால் அறியப்படுகின்றது.*

*அளக நன்னுதலாய் - அழகிய கூந்தலையுடைய பெண்ணே! ஓர் அதிசயம் - ஒரு வியப்பு, களவு காயம் கலந்த இந்நீரில் - உடம்பில் மறைமுகமாய்ச் சென்று (உணர்வாகிய) இந்நீர் சிரத்தை அடையுங் காலத்து, மிளகு நெல்லியும் மஞ்சளும் வேம்பிடில் - மிளகு, நெல்லிப் பருப்பு, கத்தூரி மஞ்சள், வேப்பம் பருப்பு ஆகியவற்றை அரைத்துத் தலையில் தேய்த்து முழுகி வருவீராயின், இளகும் மேனி இருளும் கபாலம் - உடம்பு மென்மையாவதோடு உரோமம் கருமையாகும்.*

*வெண்மிளகு, நெல்லி வற்றல், கத்தூரி மஞ்சள், வேப்பம் வித்துடன் கடுக்காய்த்தோலும் கூட்டப் பஞ்ச கல்பமாம். யோகியர் இக்கூட்டுச் சரக்காகிய கல்பத்தினைத் தேய்த்து மூழ்குவர்.*

*அமுரி தாரணை செய்பவர் கல்பத்தினைத் தேய்த்து மூழ்கி வரவேண்டும்.*

**833.** *தெளிவுரை :- அமுரியை, 'வீரத்தைத் தரும் மருந்து' என்றும், 'தேவர் உண்கின்ற அமுதம்' என்றும், 'மகளிரொடு மெலிவின்றிக் கூடுதற்குரிய மருந்து' என்றும் எங்கள் நந்தி பெருமான் அருளிச் செய்தார். இஃது இறைவனே மக்கட்குப் படைத்துத்தந்த இயற்கை மருந்து என்று குருமொழியால் அறிகின்றவர்கள், இதன் பயனை இவ்வுலகத்தில் கண்கூடாகக் காணும் மருந்து இது. இதன் பெருமையைப் பொதுமக்கட்குச் சொல்லுதல் கூடாது.*

*குறிப்புரை :- 'சொன்னால் இதனைப் பெறும் முறை அறியாமையால் சிறுநீரையே உண்பவராவர்' என்பது கருத்து. நாரி, பன்மை ஒருமை மயக்கம். ஆதி - இறைவன். சோதி மருந்து, வினைத்தொகை. இதன்கண் உயிரெதுகை வந்தது.*

*இதனால், அமுரியின் சிறப்பு விரித்துக் கூறப்பட்டது.*

## 21. சந்திர யோகம்

834. எய்தும் மதிக்கலை சூக்கத்தில் ஏறியே
எய்துவ தூலம் இருவகைப் பக்கத்துள்
எய்துங் கலைபோல ஏறி இறங்குமாம்
துய்யது சூக்கத்துத் தூலத்த காயமே. 1

---

*யோகங்களில் சிறப்புடையனவற்றைத் தொகுத்து, 'கேசரி யோகம்' என வைத்துக் கூறியபின் யோகத்தின் சிறப்புப் பகுதியை, 'சந்திர யோகம்' என வைத்து முப்பத்து மூன்று திருமந்திரங்களால் இத்தந்திரத்து இறுதியிற் கூறி முடிக்கின்றார். சந்திரயோகம் - சந்திரனை உடம்பில் விளக்கச் செய்கின்றயோகம். சந்திரன், இங்கே யோக நெறியிற் கொள்ளப்படும் சந்திரமண்டலம். புறத்தே சூரியன், சந்திரன், அக்கினி முதலிய ஒளிப்பொருள்கள் இருப்பன போன்று அகத்தேயும் உண்டு. அஃது ஆறு ஆதாரங்களைக் கடந்த ஏழாந்தானமாகிய சகத்திராரம் ஆகும்.*

834. **தெளிவுரை :-** *சந்திரனிடத்துப் பொருந்தியுள்ள கலைகள் நுண்மையினின்று வளர்ந்து பருமையாக நிறைவெய்தும், (பின் பருமையினின்றும் தேய்ந்து நுண்மையாக ஒடுங்கும்) வளர்பிறை, தேய்பிறை என்னும் இருவகைப் பக்கத்திலும் அவை அவ்வாறாதல் போல உடம்பில் உள்ள சந்திர மண்டலத்தின் ஆற்றல்களும் நுண்மை யினின்றும் வளர்ந்து பருவுடம்பில் நிறைதலும், பருவுடம்பினின்றும் தேய்ந்து நுண்ணிடம்பில் ஒடுங்குதலும் உடையவாம். கலை என்பது ஆற்றல்.*

**குறிப்புரை :-** *'சூக்குமம்' என்பது, "சூக்கும்" என மருவிற்று. உவமையில் வளர்தல் கூறியதனானே தேய்தலும் பெறப்பட்டது. அஃது, "இருவகைப் பக்கத்துள்" என்பதனானும் அறியப்படும் அவ்வாறு எய்தும் கலைபோல என்க. ஆம், அசைநிலை. "துய்யது" என்றது, சந்திரமண்டலத்தை, என்னை? சந்திரனோடு ஒப்பிக்கத்தக்கது அதுவே ஆகலின், உவமையிற்போலப் பொருளிலும் 'சூக்கத்தில், தூலத்தில்' என நீக்கப் பொருட்கண் வந்த ஐந்தாம் உருபு விரிக்க. "காயம்" என்பதில் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. 'துய்யது காயத்தில் சூக்கத்தினின்றும் தூலத்தினின்றும் ஏறி இறங்கும்' எனக் கூட்டி உரைக்க. சந்திர மண்டலத்தின் ஆற்றலைத் தனக்கேற்ற வகையில் பெற்ற நுண்ணுடம்பையே நாயனார்மேல் (பா. 625) 'பரகாயம்' எனக் கூறியிருத்தல் இங்கு நினைவுகூரத்தக்கது.*

**835.** ஆகின்ற சந்திரன் சூரியன் அங்கியுள்
ஆகின்ற ஈரெட்டொ டாறிரண் டீரைந்துள்
ஏகின்ற அக்கலை யெல்லாம் இடைவழி
ஆகின்ற யோகி அறிந்த அறிவே. **2**

**836.** ஆறாத தாங்கலை ஆதித்தன் சந்திரன்
நாறா நலங்கிளர் ஞாலங் கவர்கொளப்
பேறாங் கலைமுற்றும் பேருங்கால் ஈரெட்டும்
மாறாக் கதிர்கொள்ளும் மற்றங்கி கூடவே. **3**

---

*இதனால், பிண்டத்தில் உள்ள சந்திர மண்டலம் அண்டத்தில் உள்ள சந்திர மண்டலத்தோடு ஒத்ததாதல் கூறப்பட்டது.*

**835.** *தெளிவுரை :-* யோகத்திற்கு உரியனவாகின்ற சந்திர கலை, சூரியகலை, அக்கினி கலை என்பவை முறையே பதினாறு, பன்னிரண்டு, பத்து என்னும் எண்ணிக்கையை உடையன. இயங்குகின்ற அவ் எல்லாக் கலைகளும் யோகி தனது அறிவால் அறிந்து அமைக்க அமைவனவே; அண்டத்தில் உள்ள சந்திரன் முதலியவற்றின் கலைகள் போல இயல்பாக அமைந்தன அல்ல.

*குறிப்புரை :-* யோகியால் அறிந்து அமைக்கப்படுதலாவது, ஒரு முறை பூரித்துக் கும்பித்து இரேசித்து முடிப்பது 'ஒருகலை' எனப்படுதல். "உள்" என்னும் முதனிலை. 'உள்ளன' எனப்பொருள் தந்தது. இடைவழி - நடு நாடி. "இடைவழி ஆகின்ற யோகி" என்றது, யோகியின் தன்மையை விதந்தவாறு. யோகத்தில் கொள்ளப்படும் 'சந்திரன், சூரியன், அக்கினி' என்பன, இடை, பிங்கலை, சுழுமுனை நாடிகளின் வழி இயங்கும் பிராணவாயுக்கள் என்பது மேலே பலவிடத்தும் பெறப்பட்டது. உலகச் சந்திரனுக்குக் கலைகள் பதினாறாதலும், சூரியர் பன்னிருவர் எனப்படுதலும் ஆகிய ஒற்றுமை பற்றி இங்குச் சொல்லப்படும் கலைகளும் இயல்பாய் அமைந்தவை போலும் என மலையாமைப் பொருட்டுப் பின்னிரண்டு அடிகளைக் கூறினார்.

இதனால், யோகத்திற்குரிய சந்திரன் முதலிய மூன்றற்கும் உரியகலையளவுகள் கூறப்பட்டன.

**836.** *தெளிவுரை :-* சூரியன் பன்னிரண்டு கலைகளையே உடையதாயினும் அது சந்திரனது பதினாறு கலைகளையும், அதற்கு ஏதுவாய் நிற்கும் பதினாறு மாத்திரைப் பிராண வாயுவையும்

**837.** **பத்தும் இரண்டும் பகலோன் உயர்கலை**
**பத்தினொ டாறும் உயர்கலை பால்மதி**
**ஒத்தநல் அங்கிய தெட்டெட் டுயர்கலை**
**அத்திறன் நின்றமை ஆய்ந்துகொள் வீரே.** **4**

---

*உட்கொள்ளும் ஆற்றல் படைத்தது. அஃது அன்னதாவது, தான் அக்கினி கலையோடு சேரும்பொழுதேயாம்.*

*குறிப்புரை :- எனவே, 'சந்திரனிலும் சூரியன் ஆற்றல் மிக்கது' என்றவாறு. இஃது உலகியல்பானே அறியப்படுமாயினும், 'யோக முறையில் வேறொங்கொல்லோ' என ஐயுற நிற்குமாதலின், அது நீக்க வேண்டி எடுத்தோதினார். அன்றியும், ஒப்பினாற் பெற்ற பெயர் உடைமை பற்றியே உவமைக்கு உள்ளனவெல்லாம் பொருட்கும் கொள்ளல் வேண்டும் என்னும் கட்டளை இன்மையால் 'இது கொள்க' என்றற்கும் ஓதினார். இனி, 'சூரியன் அக்கினியோடு சேர்ந்தே ஆற்றல் மிக்கு நிற்கும்' என்பது இங்கு இன்றியமையாது ஓதற்பாலதாயி னமையும் அறிக.*

*"ஆறாது" என்பதனை 'ஆறோடு கூடிய ஆறு' என விரிக்க. 'ஆதித்தன் ஆறாறதாயினும் கொள்ளும்' என ஒருசொல் வருவித்து இயைக்க. 'சந்திரன் நாறாமலும், ஞாலம் கவர் கொளவும் கதிர் கலைகளையும், காலினையும் கொள்ளும்' எனக் கூட்டி வினை முடிவு செய்க. நாறுதல் - தோன்றுதல். கவர் - கவர்த்தல்; ஐயுறல். அஃது இங்கு மருட்கை எய்தலின் மேற்று. பேறாங் கலை - சந்திரனுக்கு இயல்பாய் உள்ள கலை. பேர்தல் - இயங்குதல். மாறாக் கதிர் - என்றும் மறையாத கதிர்; சூரியன். இது 'மாறாக் கதிராகிய அது' எனப் பொருள் தந்தது. 'மற்றும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. 'அங்கியோடு' என மூன்றாவது விரிக்க. ஏழாம் பிரிநிலை. இம் மந்திரம் பெரிதும் பாடம் வேறுபட்டுள்ளது.*

*இதனால், மேற்கூறிய சந்திரன் முதலிய மூன்றனுள் சூரியனது ஆற்றல் வகுத்துக் கூறப்பட்டது.*

**837. தெளிவுரை :-** *'சூரியன், சந்திரன்' என்னும் இரண்டற்கும் மேற்சொல்லிய கலையளவில் வேறுபாடில்லை. ஆயினும், அக்கினிக்கு மேற்சொல்லப்பட்ட கலையளவு இழிபளவாக, உயர்பளவு அறுபத்து நான்காம். இதனை யோகமுறையை ஆராய்ந்து அறிந்து கொள்ளுங்கள்.*

*குறிப்புரை :- அக்கினி கலைக்குத் திரிபு கூறுவார், பிறவற்றின்*

**838.** எட்டெட் டனலின் கலையாகும் ஈராறுட்
சுட்டப் படுங்கதி ரோனுக்குஞ் சூழ்கலை
கட்டப் படுமீரெட் டாகும் மதிக்கலை
ஒட்டப் படாஇவை ஒன்றோடொன் றாகவே. 5

**839.** எட்டெட்டும் ஈராறும் ஈரெட்டும் தீக்கதிர்
கட்டிட்ட சோமனில் தோன்றுங் கலையெனக்
கட்டப் படும்தா ரகைக்கதிர் நாலுள
கட்டிட்ட தொண்ணூற்றொ டாறுங் கலாதியே. 6

---

*கலைகளில் ஐயம் வாராமைப் பொருட்டு அவற்றின் அளவுகளைப் பெயர்த்துங் கூறி வலியுறுத்தினார். 'அடங்கு தீ, அகலுந் தீ' என அக்கினி இரு நிலைமை உடைத்தாதலின், அதற்கேற்ப அதன் கலைகளும் இழிபு உயர்வுகளை உடையவாயின. இது பற்றியே அக்கினியைச் சில இடங்களில் இரண்டாக வைத்து எண்ணுவார் ஆசிரியர்.*

*இதனால், சந்திரன் முதலிய மூன்றனுள் அக்கினியின் கலைக்கு எய்தியதன்மேல் சிறப்புணர்த்தப்பட்டது.*

**838. *தெளிவுரை :-* *அக்கினி முதலிய மூன்றற்கும் சொல்லப்பட்ட கலை அளவுகளை ஒன்றற்கு உரியது மற்றொன்றற்கு ஆகுமாறு பொருந்துதல் கூடாது.***

***குறிப்புரை :- என்றது, 'அதனதன் அளவில் கூட்டுதல் - அல்லது குறைத்தல் கூடாது' என்றவாறு. இங்ஙனம் வலியுறுத்தி ஓதியதனால், மேற்கூறிய அளவை மாற்றின் தீங்கு பயக்கும் என்பது பெறுதும். மேற்கூறிப் போந்த அளவுகளை எல்லாம் மீளவு வகுத்தோதியது வரையறையை வலியுறுத்தற் பொருட்டாதல் அறிக. சுட்டப்படுதல் - சிறப்பித்துச் சொல்லப்படுதல். கட்டப்படுதல் வரையறுக்கப்படுதல்.***

***இதனால், கலைகளின் அளவு வரையறையே அவற்றால் விளையும் நன்மைக்கு ஏதுவாதல் கூறப்பட்டது.***

**839. *தெளிவுரை :- அக்கினிக்கு அறுபத்து நான்கு, சூரியனுக்குப் பன்னிரண்டு, சந்திரனுக்குப் பதினாறு எனக் கலைகள் மேற்கூறியவாறு வரையறுக்கப்படும் பொழுது அவற்றிற்கு மேலும் நட்சத்திரக் கலை என நான்கு சொல்லப்படும். ஆகவே, அவையும் கூடக் கலைகள் தொண்ணூற்றாறாம். இத்தொண்ணூற்றாறு கலைகளையும் தத்துவ தாத்துவிகங்களாகிய தொண்ணூற்று ஆறுமாகக் கொள்க.***

**840. எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்**
**சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலம்**
**செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்**
**நல்லார் திருவடி நண்ணிநிற் பாரே. 7**

---

*குறிப்புரை :-* அங்ஙனம் கொள்ளுதலால் வரும் பயனும், "நட்சத்திரக் கலையாவன இவை" என்பதும் வருகின்ற மந்திரத்துள் பெறப்படும். நட்சத்திரக் கலை நான்கு உளவென்பது உணர்த்து தலேயன்றி, அனைத்தையும் எண்ணித் தொகை கொள்ளுதலும் செய்கின்றாராதலின், அதன் பொருட்டு மேற்கூறிய அவ்வளவு களையும் உடன்கூட்டி எண்ணினார். 'சுட்டியிட்ட, கட்டியிட்ட' என்பவை குறைந்து நின்றன. "கலாதி" என்றது கலையைத் தோற்ற முறையிலும், ஒடுக்க முறையிலும் முதலாக வைத்துக் கூறியவாறு.

இதனால், கலையளவிற்கு எய்தாதது எய்துவித்து முற்ற முடிக்கப்பட்டது.

840. **தெளிவுரை :-** தொண்ணூற்றாறு கலைகளும், 'இடை, பிங்கலை, சுழுமுனை' என்பவற்றுடன், நடுநாடி வழியாகக் கீழ்ப் போய்த் தொடர்கின்ற, இதுகாறும் சொல்லப்படாத மூலாதாரத்திலும் "பூரகம், கும்பகம்" என்பவற்றில் ஏற்ற பெற்றியால் பொருந்திப் பின் மேல் எழுந்து தலையிலே சேர்தலால், யோகிகள் சிவனது திருவடியை அடைய வல்லவராவர்.

*குறிப்புரை :-* "இடை, பிங்கலை" என்பவற்றில் பூரகத்தாலும், சுழுமுனையில் கும்பகத்தாலும் பொருந்துவன முறையே சந்திர கலை, சூரிய கலை, அக்கினி கலைகளாதல் மேலெல்லாம் இனிது பெறப் பட்டமையின் "மூலம்" என்றது நட்சத்திரக் கலை பொருந்தும் இடத்தையே குறித்தது என்பது நன்கு பெறப்படும். "அவ்விடத்துத் தொடர்தலும் கும்பகத்தாலே" என்றற்கு "நடுநாடி யூடே தொடர் மூலம்" என்றார். "சொல்லா மூலம் தொடர் மூலம்" எனத் தனித்தனி கூட்டியுரைக்க. தத்துவ வன்னரூபனாய் (சிவப்பிரகாசம், 64) உள்ள சிவன் அவ்வுருவத்தோடே சிவனடியைச் சேர்பவனாவன்" என்பது மேல் தொண்ணூற்றாறு கலைகளையும் தொண்ணூற்றாறு தத்துவங்களாகக் கொள்க என்றதனால் பெறப்பட்டது. 'சிவனது திருவடி சீர்களது தலைமேல் உள்ளது' என்பது யோக நெறி. 'இறைவன் அடியை அவன் அடியவர் தம் முடிமேற் கொள்வர்' என்பதனைச்

841. அங்கியிற் சின்னக் கதிரிரண் டாட்டத்துத்
தங்கிய தாரகை யாகும் சசிபானு
பங்கிய தாரகை யாகும் பரையொளி
தங்கு நவசக்ர மாகுந் தரணிக்கே. 8

---

*சரியையாளரும், கிரியையாளரும், தாம் வழிபடும் மூர்த்தியின் திருவடி தம் சென்னி மேல் பொருந்துமாறு வீழ்ந்து வணங்குதலாகவும், யோகியர், சகத்திராரத்தும், நிராதாரத்தும் இறைவன் திருவடியைத் தியானித்தலாகவும், ஞானியர், தமது ஞானசத்தி, கிரியாசத்தி இரண்டனையும் இறைவனது ஞான சத்தி, கிரியா சத்திகளில் அடங்கப் பண்ணி அவனது அருள்வழி நிற்றலாகவும் கொண்டு ஒழுகுவர் என்க.*

*இனி, "எல்லாக் கலையும் எழும்பிச் சிரத்துடன் சேர்தலால் திருவடி நண்ணி நிற்பார்" என்றதனால், அங்ஙனம் சேரும் நிலையை அக்கலைகள் படிமுறையால் பெற்று நிறைவுறுதலே சந்திரயோகம் என்பதும் விளங்கும்.*

*இதனால், மேற்கூறிய கலைகள் பயன் தருமாறு கூறப்பட்டது.*

**841. தெளிவுரை :- *'அக்கினிகலையில் சந்திரன், சூரியன்'* என்னும் இரண்டன் கலைகள் தாக்குதலால் அவற்றொடு வைத்து எண்ணப்படுகின்ற நட்சத்திரக் கலைகள் தோன்றும். இங்கு, 'சந்திரன், சூரியன், அவற்றின் கூறுகளாகிய நட்சத்திரம்' என்று சொல்லப்படுவன எல்லாம் சத்தியது ஒளிப்பகுதிகளே. அதனால், இவை பிரணவ யோகிகட்கு நவமண்டலமாயும் நிற்கும். சோம சூரிய அக்கினியாகிய மூன்றும் உடலைக் கடந்த பரையொளியில் விளங்கும்போது இசையை எழுப்பிக் கொண்டு நட்சத்திரங்கள் போல விளங்கும்.**

***குறிப்புரை :-*** *இம்மந்திரத்துச் சொல்லப்பட்ட பொருள்களுள் முதலது "அங்கி மதிகூட" (பா.847) என்னும் மந்திரத்திலும், ஈற்றது வருகின்ற மந்திரத்திலும் விளங்கும். சின்னம் - துண்டம்; என்றது கலையை. 'கதிர் இரண்டு' என்பது ஒரு சொல் தன்மைப்பட்டு நிற்க, 'சின்னக்கதிர் இரண்டு' என்பது, பின் முன்னதாகத் தொக்க ஆறாவதன் தொகையாயிற்று. 'பங்கு' என்பதன் அடியாகப் பிறந்த 'பங்கிய' என்பது, 'பக்கு நின்ற' எனப் பொருள் தந்தது. திரோதான சத்தியையே இங்கு, 'பரா சத்தி' என்றார். யோகியர்க்கு அஃது அவ்வாறு சிறந்து நிற்றலின். அதன் ஒளியாவது குண்டலி சத்தி. சந்திர கலை முதலியவாய் நிற்கும் வாயுக்களையே 'குண்டலி சத்தி' என்றது, அவை அச்சத்தியை விளக்கி*

**842.** தரணி சலங்கனல் கால்தக்க வானம்
அரணிய பானு அருந்திங்கள் அங்கி
முரணிய தாரகை முன்னிய ஒன்பான்
பிரணவ மாகும் பெருநெறி தானே. **9**

---

*அதனோடு ஒற்றித்து நிற்றல்பற்றி. இவ்வாற்றால், இவை குண்டலி சத்தியாதல் இனிது விளங்குதற் பொருட்டே பிரணவ யோகிகட்கு இவை நவமண்டலமாய் நிற்றலும் உடன் கூறினார். தொண்ணூற்றாறு கலைகளையும் முன்னர், தொண்ணூற்றாறு தத்துவமாகக் கூறிப் பின் அவற்றைக் குண்டலி சத்தியாகக் கூறியவதனால், தத்துவ வன்ன ரூபியாகிய சீவன் சந்திர யோகத்தால் குண்டலி சத்தி வடிவாய்ச் சந்திர மண்டலத்தை அடைந்து சிவனது திருவடியைச் சேர்வான் என்பது போந்தது. 'பரையொளியாகும்' என மாறிக்கூட்டுக.*

*இதனால், கலைகளுக்கு எய்தியதன்பின் மேற் சில சிறப்பு இயல்புகள் கூறப்பட்டன.*

**842. *தெளிவுரை :-* *'பிரணவயோகம்' எனப்படுகின்ற பெரிய நெறி, 'பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், அக்கினி, நட்சத்திரம்' என்னும் நவமண்டலங்களை (ஒன்பான் வட்டங்களை) உடையது.***

***குறிப்புரை :-*** *இங்கு, 'பிரணவம்' என்றது பிராசாதத்தினை. மண்டலம் அல்லது வட்டமாவது பகுதி. ஒன்பான் வட்டங்களுள், தீயைப் பஞ்ச பூதங்களிடை, "கனல்" என்றும், முச்சுடரில் இறுதிக்கண் "அங்கி" என்றும் இருகால் ஓதியதனாலும், மேலேயும் (பா.835, 837) அக்கினிக்கு இருவகைக் கலையளவு கூறினமையாலும் 'அடங்கு தீ, அழலுந் தீ' எனத் தீயை இரண்டாகக் கொள்ளுதலும், பூதத் தீ அடங்கு தீயும், சுடர்த் தீ அழலுந் தீயும் ஆதலும் பெறப்படும்.*

*பிருதிவி வட்டம் முதலிய ஒன்பான் வட்டங்களை, "பிரணவ மாகும் பெருநெறி" என்றமையால், அவை பிராசாத கலைகளின் தானங்களேயாயின. அத் தானங்கள் பன்னிரண்டனுள் இறுதி நான்கும் நிராதாரமாதலின், சந்திர கலை முதலிய நால்வகை கலைகளும் அவ்விடத்துச் சொல்லமாட்டா. எனவே, எஞ்சிய எட்டுத் தானங் களோடு சோடசகலைத் தானங்கள் இரண்டு கூடத்தானங்கள் பத்தாம். ஆயினும், 'அருத்த சந்திரன், நிரோதினி' என்னும் இருகலைகட்கு இடையேயும், அவற்றின் தானங்கட்கிடையேயும் உள்ள வேற்றுமை*

843. தாரகை மின்னும் சசிதேயும் பக்கத்துத்
தாரகை மின்னா சசிவளர் பக்கத்துத்
தாரகை பூவிற் சகலத்து யோனிகள்
தாரகைத் தாரகை தானாம் சொரூபமே. 10

---

*சிறிதாகலின் அத்தானங்கள் இரண்டையும் ஒன்றாகக் கொள்ளத் தானங்கள் ஒன்பதாய், அவை இங்குக் கூறிய ஒன்பான் வட்டங்களாயும் அமையும். இவற்றுள், அழலுந் தீயை மரபுபற்றிச் சுடர்களோடு வைத்து எண்ணினாரேனும், 'அது மூலாதாரத்தில் உள்ளது' என்பதே யோக நூல் துணிபாதலின், அதனை அங்ஙனமே வைக்க, 'மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, நெற்றி, தலை, தலையின் பின்புறம்' என்னும் இடங்கள் முறையே, 'அங்கி, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், நட்சத்திரம்' என்பவற்றின் வட்டங்களாம் என அறிக. பிராசாத கலைத் தானங்களை இவ்வாறான ஒன்பான் வட்டங்களாகக் கூறியது, "மேற்கூறிய சந்திர கலை முதலிய நால்வகைக் கலைகளும் இப்பிராசாத கலைத் தான வகையினால் இங்குக் கூறிய பிருதிவி கலை முதலிய ஒன்பான் கலைகளாயும் நிற்கும்" என்பது உணர்த்துதற்கு என்க. அரணியம் - காடு; என்றது ஒளிக்கற்றையை. முரணிய - தம்முள் மாறுபட்டு விளங்குகின்ற.*

*இதனால், மேல் தோற்றுவாய் செய்யப்பட்ட நவ மண்டலங்கள் (ஒன்பான் வட்டங்கள்) இவை என்பது கூறப்பட்டது.*

**843. *தெளிவுரை :-* *நட்சத்திரங்கள் சந்திரன் தேயும் பக்கத்தில் விளங்குதலன்றி, அது வளரும் பக்கத்தில் தனியே விளங்கா; சந்திரனது ஒளியிலே ஒன்றி அதுவாய்விடும். யோகத்தில் "நட்சத்திரங்கள்" எனப்படுபவை, பூமியில் உள்ள பலவகை உயிர்கள். எனவே, யோகியின் சந்திர மண்டலம் விளங்கி நிற்கும்பொழுது உலகப் பொருள் பற்றிய உணர்வுகள் முன்னை மந்திரத்துட் கூறிய நட்சத்திர மண்டலத்தில் வேறு நின்று விளங்காது, சிவ உணர்விலே ஒன்றிவிடும்.***

***குறிப்புரை :- சசிதேயும் பக்கத்துத் தாரகை மின்னும் - சந்திரன் தேய்பிறை அனுசரித்துக் கீழ்முகமானபோது மூலாதாரத்திலுள்ள ஒளி பிரகாசம் அடையும், சசிவளர் பக்கத்துத் தாரகை மின்னா - சந்திரன் வளர்பிறையை அனுசரித்து மேல்முகமானபோது மூலாதாரத்திலுள்ள ஒளியில் பிரகாசம் இராது, தாரகை பூவில் சகலத்து யோனிகள் -***

844. முற்பதி னஞ்சின் முளைத்துப் பெருத்திடும்
பிற்பதி னஞ்சிற் பெருத்துச் சிறுத்திடும்
அப்பதி னஞ்சும் அறியவல் லார்கட்குச்
செப்பரி யான்கழல் சேர்தலு மாமே. 11

---

*மூலாதாரத்திலுள்ள ஒளியில் எல்லா யோனிகளும் உள்ளன. தாரகை தாரகை தானாம் சொரூபம் - மூலாதாரச் சக்கரத்துக்குக் காரணமான அகவொளியே சகல சீவர்களின் சொரூபமாகும்.*

*சசி - சந்திரன். தாரகை மின்னுதலாவது, மூலாதாரச் சத்தி அதிகரித்துச் சந்திரன் இருளில் செலுத்துதல். மனம் உலகமுகத்தை நாடும் என்க. தாரகை மின்னா என்பது, மூலாதாரச் சத்தி குறைந்து மனம் மேல் நிலையை நாடும் என்றபடி.*

*சந்திரன் வளர்பிறை பக்கத்துச் சீவர்கள் சிரசின் மேல் ஒளியில் விளங்குபவர்.*

844. ***தெளிவுரை :-*** *பிண்டத்தில் உள்ள சந்திர மண்டலமும், அண்டத்தில் உள்ள சந்திர மண்டலம் போலவே தனது முற்பக்க நாள் பதினைந்தில் தோன்றி வளர்ந்து, பிற்பக்க நாள் பதினைந்தில் நிறைவினின்றும் தேய்ந்துவிடும். அதனால், அவ்விருவகைப் பதினைந்து நாள்களையும் அறிந்து முற்பக்க நாளில் யோகம் புரிய வல்லவர்கட்கு, சொல்லுதற்கரிய சிவனது திருவடியைச் சேர்தலும் கூடும்.*

***குறிப்புரை :-*** *முற்பதினைஞ்சில் முளைத்துப் பெருத்திடும் - சந்திரனது கிரணங்கள் முதல் பதினைந்து நாள்களில் சிறிது சிறிதாய் வளர்ந்து பெருத்துப் பூரணத்தை அடையும், பிற் பதினைஞ்சில் பெருத்துச் சிறுத்திடும் - பிற்பதினைந்தில் சிறிது சிறிதாய்த் தேய்ந்து பெருத்த நிலையினின்றும் குறைந்துவிடும், அப்பதினைஞ்சும் அறிய வல்லார்கட்கு - அகரச் சுட்டால் உணர்த்தும் வளர்பிறையை அறிய வல்லவர்களுக்கு, செப்பரியான் கழல் சேர்தலுமாம் - அளவிட்டுக் கூற முடியாத பெருமையுடைய சிவனது திருவடியை அடைதலுமாகும்.*

*முற்பதினைஞ்சு - வளர்பிறைப்பக்கம். பிற்பதினைஞ்சு - தேய்பிறைப்பக்கம்.*

*மூலாதாரத்தினின்றும் மேலெழும் சோடச கலைகளின் தன்மையை அறிந்தவர் வளர்பிறை போல ஒளி பெற்றுச் சிவன் திருவடியை அடைவர்.*

845. அங்கி எழுப்பி அருங்கதிர் வட்டத்துத்
தங்குஞ் சசியினால் தாமம்ஐந் தைந்தாகிப்
பொங்கிய தாரகை யாம்புலன் போக்கறத்
திங்கள் கதிரங்கி சேர்கின்ற யோகமே. 12

846. ஒன்றிய ஈரெண் கலையும் உடலுற
நின்றது கண்டும் நினைக்கிலர் நீசர்கள்
கன்றிய காலன் கருக்குழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. 13

---

845. ***தெளிவுரை :-*** *முதற்கண் மூலாக்கினியை எழுப்பிப் பின் அவ்வக்கினியோடே சூரிய வட்டத்தில் தங்குகின்ற சந்திர கலையாகிய வாயு அங்ஙனம் ஓடித் தங்குதற்கு நாள்கள் பத்தாகிவிடப் பின் அவ்வக்கினி, நட்சத்திரங்களாகிய புலன் உணர்வு ஒழியும்படி, சந்திர மண்டலத்தில் சென்று சேர்கின்ற யோக நாள்களே முற்பக்க நாள்களாம்.*

***குறிப்புரை :-*** *சூரிய வட்டம், இங்கு மும்மண்டலங்களுள் ஒன்றாய அது. தாமம் - வரிசை; இது நாளின் அடைவைக் குறித்தது. அங்கி எழுப்பி அருங்கதிர் ஊட்டத்து - மூலத்தீயை எழுப்பி அருமையான சூரிய மண்டலப் பெருக்கத்தில் தங்கும் சசியால் தாமம் ஐந்தைந்தாகி - விளங்கும் சந்திர மண்டலத்தால் அகர உகர மகர விந்து நாதமாகிய ஐந்தும் விரிந்த பிரபையுடையதாய், பொங்கிய தாரகையாம் - ஒளியான பிரணவம் விளங்கும். புலன் போக்கறத் திங்கள் கதிர் அங்கி சேர்கின்ற யோகம் - அதனால் ஐம்புல வழி போகாது சந்திரன் சூரியன் அக்கினியாகிய மூன்றும் சேர்கின்ற யோகம் அமையும்.*

*மூலாதார அக்கினி சூரியனைத் தாண்டிச் சந்திரனை அடைந்தபோது பிரணவம் விளங்கும்.*

846. ***தெளிவுரை :-*** *இங்குக் கூறிய இருவகைப் பக்கங்களின் படி வளர்ந்தும், தேய்ந்தும் நிற்கின்ற சந்திர கலை பதினாறும் அண்டத்தில் உள்ளது போலவே பிண்டத்திலும் பொருந்தி உள்ளதை உயர் நெறியில் வேட்கையில்லாதோர் நினைப்பதில்லை. அதனால், வாழ்நாளை வீணாளாக்கிய குற்றம்பற்றி அவர்கள்மேல் சீற்றங் கொள்கின்ற கூற்றுவன் அவர்களை இழிபிறப்பில் தள்ளியபின், அதிலே சென்று வீழ்ந்து மேல் ஏற வழியறியாது திகைத்தலையே அவர்கள் உடையராவார்கள்.*

847. அங்கி மதிகூட ஆகும் கதிரொளி
அங்கி கதிர்கூட ஆகும் மதியொளி
அங்கி சசிகதிர் கூடஅத் தாரகை
தங்கி அதுவே சகலமு மாமே. 14

---

***குறிப்புரை :-*** *கரு - பிறப்பு. "குழி" என்றதனால் அஃது இழிபிறப்பாயிற்று. 'வீழ்ந்தபின்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும்.*

*இதனால், பிண்ட, சந்திரனை நினையாதவரது குற்றம் கூறப்பட்டது.*

**847. தெளிவுரை :-** *இடை நாடி வழியாகப் பூரிக்கப்படும் சந்திர கலையாகிய வாயு அக்கினி கலையாகிய சுவாதிட்டான கும்பகத்தில் முன்னர்ப் பொருந்தி நிற்பின், பின்னர் வல நாடி வழியாகப் பூரிக்கப்படும் சூரிய கலையாகிய வாயுவே அவ்வக்கினி கலையில் சென்று பொருந்துவதாகும். அவ்வாறே, சூரிய கலையாகிய வாயு முன்னர்ச் சென்று அக்கினி கலையில் பொருந்தின், பின்னர்ச் சந்திர கலையே அதன்கண் சென்று பொருந்துவதாகும். இவ்வாறு அக்கினி கலையில் சந்திர கலை, சூரிய கலை என்னும் இரண்டும் பொருந்திய பின்னரே, அதனை மூலாதாரத்திற் செலுத்துதலாகிய அந்த நட்சத்திர, கலை மூலாதாரத்தில் சென்று தங்கி, அதுவே அனைத்துக் கலைகளுமாய் அங்கு நிரம்பி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *எனின், சூரிய ஒளி தாரகையொளி இவை விளையும் முறையும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று. அக்கினியானது சந்திரகலையைக் கூட சூரிய ஒளியுண்டாம், அது கதிரொளியைக் கூட சந்திர ஒளியுண்டாம். அது, அநாகத சக்கரத்திலுள்ள சிவத்தினிடம்கூட ஐந்து முனைகளோடு கூடிய நட்சத்திர ஒளியாம், அதில் தங்கியதே எல்லாப் பயனும் விளையும் என்றவாறு. அங்கி மதியோடு கூடலாவது இடகலையின் வழியாக, குண்டலினி மேல்நோக்கி நடத்தல்; அப்போது சூரியன் ஒளி போல ஓர் ஒளிதோன்றும்; அதனையே கதிரொளி என்றது அங்ஙனமே இந்நிலை மாறி அங்கி கூடுவதால், மதியினொளியும், தாரகையினொளியும் உண்டாதலறிக, மூலக்கனலானது இடைபிங்கலை வழியாகக் கலந்து இயங்கும் போது; சூரியச் சோதியும் சந்திரச் சோதியும்; அனாகதமாகிய சுழுமுனையின் உச்சியிலிருக்கும் போது, தாரகை வடிவானசோதியும் தரிசனந்தரும் அத்தரிசனம் நிலைக்கில் எல்லாக் காரியமும் இனிது முடியும் என்பதாம்.*

**848.** ஈராறு பெண்கலை எண்ணிரண் டாண்கலை
பேராமற் புக்குப் பிடித்துக் கொடுவந்து
நேராகத் தோன்றும் நெருப்புற வேபெய்யில்
ஆராத ஆனந்தம் ஆனந்த மானதே. 15

---

**848.** *தெளிவுரை :-* "பன்னிரண்டு" என வரையறுக்கப்பட்ட சூரிய கலைகள் பெண் கலைகள். "பதினாறு" என வரையறுக்கப்பட்ட சந்திர கலைகள் ஆண் கலைகள். இவைகளை இந்த அளவுகளில் குறையாமல் பூரித்து, மூலாக்கினி விளங்கும் இடமாகிய சுவாதிட்டானத்தில் கும்பித்தால், அவ்விடத்துத் தெவிட்டாது தோன்றுகின்ற இன்பம் பேரின்பமே.

*குறிப்புரை :-* சூரிய சந்திரர்களை முறையே ஆண்மையும், பெண்மையும் உடையவராகக் கூறுதல் மரபாயிருக்க, இங்குச் சூரிய கலை சந்திர கலைகளை மாறிக் கூறியது என்னையெனின், சந்திர கலையே சந்திர மண்டல ஆற்றலை மிகுவித்தல் பற்றி என்க. இது பற்றியே யோகத்தில் சந்திர கலையை முன்னர் வைத்துக் கூறுதல் பெருவழக்காயிற்று. ''பன்னிரண்டு, பதினாறு'' என்பவைகளை எடுத்தோதியதனால், முன்னை மந்திரத்தில் "கூட" என்றது, 'இந்த அளவில் குறையாது கூடியபின்' என்பது பெறப்பட்டது.

'ஒரு கலை' எனப்படுவது, ஒரு முறை பூரித்துக் கும்பித்து, இரேசித்தலாம், என்பது மேலேயும் (பா. 835) கூறப்பட்டது. 'பூரக, கும்பகம்' என்னும் முறையில் நிகழும். இரேசகங்களுக்கு மேல் (பா.556) சொல்லப்பட்ட மாத்திரை அளவுகள் சந்திர கலைக்கு உரியன. பதினாறு கலைகளை உடைய சந்திர கலைக்கு மாத்திரை அளவு சொல்லப்பட்டதனானே, பன்னிரண்டும் பத்தும் நான்கும் ஆகிய கலைகளை உடைய சூரியகலை, அக்கினி கலை, நட்சத்திர கலைகட்குரிய மாத்திரை அளவுகள் கணக்கிட்டுக் கொள்ளப்படும் என்க. அக்கினி கலைக்குப் பூரித்தலாவது சுவாதிட்டானத்தில் கும்பிக்கப்பட்ட வாயுவை மணி பூரகம் முதலிய ஆதாரங்களில் செல்ல மேற்செலுத்தல். கும்பித்தலாவது, ஆஞ்ஞை முதலிய மேல் இடங்களில் அவ்வாயுவை நிறுத்துதல். இரேசகமாவது அவ்விடங்களிற் சென்ற வாயுவை இரு மூக்கு வழியாகவும் வெளிச் செலுத்துதல்.

'பேராமல் பெய்யில்' என இயையும். புக்கு - முயன்று. மூலாதாரத்தில் உள்ளது காரண நிலையில் நிற்றலால், அஃது எழுந்து

**849.** காணும் பரிதியின் காலை இடத்திட்டு
மாணும் மதியதன் காலை வலத்திட்டுப்
பேணியிவ் வாறு பிழையாமற் செய்வீரேல்
ஆணி கலங்காதவ் வாயிரத் தாண்டே. **16**

---

*செல்லும் நிலையை, "நேராகத் தோன்றும் நெருப்பு" என்றார். இங்கு, 'நெருப்பு' என்றது அஃது அடையும் இடத்தைக் குறித்தது. கும்பித்த பின் சந்திர மண்டலத்தில் உளதாம் இன்பத்தை, கும்பித்ததனானே உளதாகக் கூறினார். இஃது உடற்கண்ணே தோன்றுவதாயினும் வீட்டின்பமே என்றற்கு, "ஆனந்தம் ஆனந்தம் ஆனதே" என்றார். ஆணும், பெண்ணும் கூடியவழி இன்ப நுகர்ச்சியும், அவ்விருவரும் ஒருங்கே தீப்புக்கவழித் துறக்க இன்பமும் உளவாம் என வேறு பொருளும் இதன்கண் தோன்றிற்று.*

*இதனால், "அங்கி கதிர் கூட, அங்கி மதி கூட" என்றவற்றின் அளவிபற்றி ஐயம் அறுக்கப்பட்டது.*

**849. *தெளிவுரை :-*** *எனின், இடகலை பிங்கலைகள் மாறிப் பயில்வதால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று. சூரிய கலையாகிய காணப்படுகிற பிங்கலை வழியாக இயங்கும் காற்றை இடகலை வழியாக இயங்கச் செய்தும், சந்திர கலையாகிய இடகலையாக இயங்கும் காற்றை வலப்பக்கமாகிய பிங்கலை வழியாக இயங்கச் செய்தும், இம் முறையில் தவறு ஏற்படா வண்ணம் பாதுகாத்து ஒழுகுவீராயின் ஆயிரம் ஆண்டு இவ்வுடலாகிய ஆணி கலக்காது நிலைபெறும் என்றவாறு.*

*பரிதியின்கால் மதியதன் கால் என்பவை பிங்கலை இடகலை வழியாக இயங்கும் பிராணவாயுவை உணர்த்தி நின்றன. காணும் பரிதி என்றது சாதகர்க்குச் சோதியாய்த் தோன்றும் இயல்பு பற்றி அங்ஙனமே மாணும் மதி என்றது, அனுபவமாய் மாட்சிமையாகி இன்புறுத்தலின் என்க. பிழையாமல் பேணி என்று உடன்பட்டானும் எதிர்மறையானும் கூறியது. அதன் இன்றியமையாமையும் அருமையையும் விளக்கியவாறு ஆணி - உடல்.*

*இதனால், சந்திர கலை சூரிய கலைகளை இயக்குதற்குரிய பிறிதொருமுறை கூறப்பட்டது.*

**850.** பாலிக்கும் நெஞ்சம் பறையோசை ஒன்பதில்
ஆலிக்கும் அங்கே அமரர் பராபரன்
மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்கும்
காலைக்குச் சங்கு கதிரவன் தானே. **17**

**851.** கதிரவன் சந்திரன் காலம் அளக்கும்
பொதிரவ னுள்ளே பொழிமழை நிற்கும்
அதிரவன் அண்டப் புறஞ்சென் றடர்ப்ப
எதிரவன் ஈசன் இடமது தானே. **18**

---

**850.** ***தெளிவுரை :-*** *சிவன், யோகிகளது உள்ளத்திற்குத் தோன்றும்படி தருகின்ற தச நாதங்களில் சங்கொலி ஒழிந்த ஒன்பது நாதங்களாய் முதற்கண் அவர்கட்கு அநுபவப்படுவான். பின்பு மேலிடமாகிய ஆஞ்ஞையில் விளக்கொளி போலக் காட்சியளிப்பான். அஞ்ஞானம் ஆகிய இருள் நீங்கி ஞான ஒளி வெளிப்படுகின்ற நான்காம் சத்தி நிபாதமாகிய காலைப் பொழுதில் காலைச் சங்கொலியாயும், காலைக் கதிரொளியாயும் கேள்வியிலும், காட்சியிலும் அனுபவமானான்.*

***குறிப்புரை :-*** *"பாலிக்கும்" என்பது எச்சம்; "ஆலிக்கும்" என்பது முற்று. "நெஞ்சம்" என்பதை முதற்கண் வைத்து, நான்காவது விரிக்க. ஆலித்தல் - மகிழ்தல், ஒலித்தலுமாம். தச நாதங்கள் மேலே (பா.593) கூறப்பட்டன. "மேலைக்கு, காலைக்கு" என்பவற்றைத் தொல்காப்பியர், 'இக்குச்சாரியை' என்பர்; பிற்காலத்தார், 'உருபு மயக்கம்' என்பர். 'முன்னே ஆலிக்கும்' என மேலே கூட்டி முடிக்க. 'காலைச் சங்கும், காலைக் கதிரவனும் ஆவான்' எனப் படிமுறையை வகுத்துக் கூறவே, சந்திர யோகத்தால் சந்திர மண்டலம் இவ்வாறு படிமுறையான் வளர்தல் பெறப்பட்டது.*

*இதனால், சந்திர மண்டல வளர்ச்சியின் படிமுறை தெரித்துக் கூறப்பட்டது.*

**851.** ***தெளிவுரை :-*** *சூரிய கலை சந்திர கலைகள் சரவோட்டத்தில் மக்களது வாழ்நாளைப் படிமுறையாகக் குறைத்து நிற்பன. உடல் அழியாது நிலைபெறும்படி பொழிகின்ற அமுத மழை, யோகத்தால் ஆற்றல் மிகுகின்றவனது உடலினுள்ளே நீங்காது நிலைபெற்றுள்ளது. பிராணாயாமத்தால் நாடிகள் மாற்றத்தை எய்தப்பெறுகின்ற யோகி, 'அண்டம்' எனப்படுகின்ற தலைக்கு அப்பால் நிராதாரத்திற் சென்று*

852. உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை
அந்திக்கும் மந்திரம் ஆரும் அறிகிலார்
அந்திக்கும் மந்திரம் ஆரும் அறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே. 19

---

*அதனை ஒளி மண்டலமாகச் செய்ய, அவன் அங்குக் காண்பது சிவனது இருப்பிடத்தையே.*

***குறிப்புரை :-*** *கதிரவன் சந்திரன் காலம் அளக்கும் - சூரிய சந்திர இயக்கத்தில் காலம் அளவிடப்படும், பொதிரவனுள்ளே பொழி மழை நிற்கும் - இருவரும் ஒன்றுசேர்ந்த பிரணவ நிலையில் சிவசத்தி விளங்குவதால் அமுதம் பெருகும் அருள் நிலையுள்ளது, அதிரவன் அண்டப்புறம் சென்று அடர்ப்ப - நாத சம்மியம் செய்பவன் நாதத்தோடு கூடி அண்டத்தின் எல்லையாகிய துவாத சாந்தத்துக்குச் சென்று நெருங்க, எதிரவன் ஈசன் இடமது தான் - அவ்விடத்தில் ஈசனும் நேராய் எதிர்ப்பட்டு விளங்குவான்.*

*சூரியன் என்றும் சந்திரன் என்றும் தனியாய் இருக்கும்வரை சீவர்கள் காலத்துக்குக் கட்டுப்பட்டவர்; இரண்டும் ஒன்றானபோது காலத்தைக் கடந்து நிற்பர் என்க. பொதிர்தல் - மிகுதல். பொழி மழை - அருள். அதிர்தல் - நாதம்.*

*சந்திரயோகம் பயில்வார்க்குக் கால நியதி இல்லை.*

*இதனால், 'சந்திரயோகத்தை வாழ்நாள் கழியுமுன்னே மேற்கொண்டு, அதன் பயனைப் பெறல் வேண்டும்' என்பது வலியுறுத்தப்பட்டது.*

**852. *தெளிவுரை :-*** *நாபித் தானத்தில் தோன்றிப் பின் மேல் ஓங்குகின்ற குண்டலி சத்தியைத் தலைப்படுதற்குரிய மந்திரத்தை அறிபவர் அரியர். அதனை அறிந்தால், தந்தைக்கு முன்னே மகன் பிறத்தலாகிய புதுமை காணப்படும்.*

***குறிப்புரை :-*** *"கனல்" என்னாது, "சோதி" என்றதனால், அது குண்டலியேயாதல் அறிக. மூலாதாரம் குண்டலிக்குத் துயிலிடமாக, அது விழித்தெழுந்து செயற்படும் இடம் மணிபூரகம் முதலிய ஆதாரங்களேயாதல் பற்றி, மணிபூரகத்தினையே குண்டலி தோன்றும் இடமாகக் கூறினார். அந்தித்தல் - சந்தித்தல். "மந்திரம்" என்றது அசபையை. சுவாதிட்டானம் முதலிய ஆதாரங்களுள் கீழ்க்கீழ் உள்ள ஆதாரங்களில் நிற்கும் கடவுளர், மேன்மேல் உள்ள ஆதாரங்களில்*

853. ஊதியம் ஏதும் அறியார் உரைப்பினும்
ஓதியும் ஏதும் அறியாத ஊமர்கள்
ஆதியும் அந்தமும் அந்திக்க வல்லிரேல்
வேதியன் அங்கே வெளிப்படுந் தானே. 20

---

*நிற்கும் கடவுளருக்கு மைந்தர் ஆதலாலும், ஆதாரங்களைக் கீழ்நின்று மேற்சொல்லும் முறையானே அடைந்து நீங்க வேண்டுதலானும் "தந்தைக்கு முன்னே மகன் பிறந்தான்" என மருட்கை விளையக் கூறினார். "மகன் இருந்தான்" என்பதும் பாடம். 'பிராணாயாமத்தை வறிதே செய்யாது, அசபா மந்திரத்துடன் செய்து, அதனால் குண்டலி சத்தியை மணிபூரகத்திலே அடையப்பெற்று, அச்சத்தியோடே மேல் ஏறிச்சென்று சந்திர மண்டலத்தை அடைந்த வழியே யோகம், சந்திர யோகமாம்' என்றபடி, மந்திரமின்றியும், குண்டலியைத் தலைப்படா மலும் செய்யப்படுவது அட யோகம் என்க.*

*இதனால், "உண்மைச் சந்திர யோகமாவது இது" என்பது கூறப்பட்டது.*

**853. *தெளிவுரை :-* *நூல்களைக் கற்பினும் அவற்றின் பயனைச் சிறிதும் உணரமாட்டாத அறிவிலிகள், அவற்றைப் பிறர் உரைப்பினும் உணர்வாரல்லர். ஆதலின், அவர் நிற்க. நீவிர் யாம் கூறிய முறையால் குண்டலி சத்தியை அது தோன்றுகின்ற மணிபூரகத்தில் சந்தித்தலோடு ஒழியாது, அதன் முடிவிடமாகிய சந்திர மண்டலத்திலும் விடாது பொருந்தி நிற்றல் வேண்டும். அவ்வாறு நிற்க வல்லிராயின், அவ்விடத்தில் சிவன் வெளிப்பட்டுத் தோன்றுவான்.***

***குறிப்புரை :-* *இரண்டாம் அடியை முதற்கண் கூட்டி உரைக்க. "ஆதியும் அந்தமும்" என்னும் உம்மைகள் எச்ச உம்மைகள் ஆதலின், அதற்கு, மேல் உரைத்தவாறு உரைக்கப்பட்டது. "ஆதி, அந்தம்" என்பவை ஆதாரங்களை முறையாற் குறித்தன.***

***இதனால், அசபா யோகமும் சந்திர மண்டலங்காறும் சென்று முற்றிய வழியே சந்திர யோகமாதல் கூறப்பட்டது.***

**854. *தெளிவுரை :-*** *குண்டலினியாகிய பாம்பு சந்திரகலை, சூரியகலை எனும் இருகலை வாயுவையும் ஒருங்கே உட்கொண்டு சிறந்து எழும். பின் பெருந்தகையோனாகிய சிவபிரான் அந்தப் பாம்பினையும், சகத்திராரத்தில் உள்ள சந்திரனையும் மாறிநிற்க*

**854.** **பாம்பு மதியைத் தினலுறும் அப்பாம்பு**
**தீங்கு கதிரையுஞ் சேரத் தினலுறும்**
**பாம்பும் மதியும் பகைதீர்த் துடன்கொளீஇ**
**நீங்கல் கொடானே நெடுந்தகை யானே.** **21**

---

*விடாமல் ஒன்றியிருக்கச் செய்து, அவ்வொன்றுதலில் தானும் நீங்காது நிற்பான்.*

*குறிப்புரை :- குண்டலியைப் பாம்பாகக் கூறுதல் வடிவு பற்றியன்றியும் சந்திர சூரிய கலைகளையும், அப்பெயர்த்தாகிய காற்றினையும் உண்ணும் செயல் பற்றியுமாம் என்பதும் குறிப்பால் உணர்த்தியவாறு. மதியைத் தினல் உறுதலை வேறாக முன் வைத்துக் கதிரைத் தினல் உறுதலை உம்மை கொடுத்துப் பின் வைத்தமையால், சந்திர கலையே சிறப்புடையதாதல் பெறப்பட்டது. இராகு கேதுக்களாகிய பாம்புகள் சந்திரன், சூரியன் என்னும் இரு கோள்களையும் விழுங்குகின்றன எனக் கூறும் உலக வழக்காகிய நயம் தோன்ற நின்றது இம்மந்திரம்.*

*குண்டலிப் பாம்பும் சகத்திராரத்தில் உள்ள சந்திரனும் மாறி நிற்றலாவது, குண்டலிப் பாம்பு சந்திரனுடன் தனது முகத்தைப் பொருந்தவையாது, வாலைப் பொருந்த வைத்திருத்தல். சந்திர யோகத்தால் அப்பாம்பு கீழ்மேலாகச் சுழன்று முகத்தை அச்சந்திரனிடத்து வைத்து விளையாடுவதாம். அவ்விளையாட்டில் சிவபிரான் நீங்காது நிற்றலாவது, சிவ உணர்வு மறையாது விளங்குதல். சிவபெருமான், "பாம்பும் மதியும் புனலும் தம்மில் பகைதீர்த்து உடன் வைத்த பண்பன்" (தி.6 ப.5 பா.4) ஆதல் அறிக.*

*'சந்திர சூரியரை விழுங்கிய பாம்பு பின், சந்திரனோடு நட்புக் கொண்டு சிவபிரானிடம் விளையாடுகின்ற சிறப்புடையது, சந்திர யோகம்' என ஓர் வியப்புத் தோன்றக் கூறியவாறு; இதனுள் இனவெதுகை வந்தது. இம்மந்திரம் பாடவேறுபாடு மிகக் கொண்டுள்ளது.*

*பாம்பு மதியைத் தினலுறும் - குண்டலினியாகிய பாம்பு சுவாதிட்டானத்தில் பொருந்திச் சந்திரகலை, வளரவொட்டாது விந்து நீக்கம் செய்துகொண்டுள்ளது. பாம்பது தீங்கு கதிரையும் சோதித்து அனலுறும் - அக்குண்டலினியின் ஆற்றல் தீமை தரும் மணிபூரகத்திலுள்ள சூரியனையும் அசைத்து வெப்பத்தினைச் செய்து*

**855.** அயின்றது வீழ்வள வுந்துயில் இன்றிப்
பயின்ற சசிவீழ் பொழுதில் துயின்று
நயந்தரு பூரணை உள்ளம் நடத்தின்
நயந்தரு பூரணை மேவும் சசியே. **22**

---

*கொண்டிருக்கும், பாம்பும் மதியும் பகை தீர்த்து உடன் கொளீஇ - குண்டலினியையும் சந்திரனையும் பகைமைத் தன்மை நீங்கும்படி சிரசின்மேல் உடனாய்க் கொண்டால், நெடுந்தகையான் நீங்கல் கொடான் - பெருங்கருணையாளனான சிவபெருமான் சாதகனை விட்டு நீங்க மாட்டான்.*

*சிவத்தியானத்தால் குண்டலினி மேலே சென்ற போது சந்திர கலை வளர்ச்சி அடையும். அப்போது வெப்பத்தைச் செய்யும் சூரியனும் வெப்பத்தைச் செய்யாதவனாகிவிடுவான். அதனால் நெடுந்தகையானும் நீங்காது விளங்கித் தோன்றுவான்.*

*மனம் சிவவொளியில் நிற்குமளவு பாம்பு, மதி, சூரியன் ஆகிய மூன்றும் சிரசின்மேல் நிலை பெற்றுத் தீமை செய்யும் திறமையை இழந்துவிடும்.*

*இதனால், சந்திர யோகம் சந்திர மண்டலத்தில் சிவபிரானை அடையச்செய்தல் கூறப்பட்டது.*

**855. *தெளிவுரை :-* *சர நிலையில் சந்திர கலை இயங்கும்பொழுது உறங்காமல் விழித்திருந்து, சந்திர கலை நின்று சூரிய கலை இயங்கும் பொழுது உறங்கி, இரண்டு கலையும் சேர இயங்கும்பொழுது யோகத்திற் சென்றால், சந்திர மண்டலம், விரிவடைதலாகிய பௌர்ணிமை நிலையை எய்தும்.***

***குறிப்புரை :-* *அயின்றது - அயிலப்பட்டது. யோகத்தில் பதினாறு கலையாகப் பூரிக்கப்படும் சிறப்புப்பற்றி, "அயின்றது, பயின்றது" என்பன சந்திர கலையையே குறித்தன. சந்திர கலை வீழ்தலைக் கூறியொழிந்ததனானே, சூரிய கலை இயங்குதல் பெறப்பட்டது. இரு கலைகளும் சேர இயங்குதலை, ''பூரணை'' என்றார். அஃது யோகத்திற்குரிய காலமாதல் பற்றி, ''நயந்தரு பூரணை'' எனச் சிறப்பித்தார். உள்ளத்தை நடத்துதல், மனோலயம் செய்தல். எனவே, யோகம் புரிதலாயிற்று. 'நடத்தி' என்பது பாடம் அன்று.***

***'யோகி சரவோட்டத்தில் சந்திர கலை இயங்கும் பொழுது***

**856.** சசியுதிக் கும்அுள வுந்துயி லின்றிச்
சசியுதித் தானேல் தனதூண் அருந்திச்
சசிசரிக் கின்றள வுந்துயி லாமற்
சசிசரிப் பின்கட்டன் கண்டுயில் கொண்டதே. 23

---

*உறங்குதல் கூடாது' என்பதும், 'சந்திர கலை, சூரிய கலை' இரண்டும் சேர இயங்கும் பொழுது யோகத்திற் செல்லுதல் வேண்டும் என்பதும் இங்குக் கூறப்பட்டவை. இதனால், யோகிகட்குச் சர நிலையில் சந்திர கலை இயங்குதல் முற்பக்கமும், சூரிய கலை இயங்குதல் பிற்பக்கமும், இரண்டும் இயங்குதல் பூரணையும் ஆயின. உலகர் இவற்றை மறுதலைத்துக் கொள்வர்.*

*இதனால், சந்திர யோகம் செய்வார்க்குரிய சில கால முறைகள் கூறப்பட்டன.*

**856. *தெளிவுரை :-*** *சந்திர யோகத்தில் சந்திர மண்டலம் தோன்றுமளவும் சோம்பல் இன்றி யோகத்தில் முயன்று, அது தோன்றியபின் அதினின்றும் பெருகும் அமுதத்தைப் பருகிச் சரவோட்டத்தில் சந்திர கலை இயங்காமல் சூரிய கலை இயங்கும் பொழுது உறங்குதல் கூடாது.*

***குறிப்புரை :-*** *சசி உதிக்குமளவும் துயிலின்றி - சந்திரன் சிரசில் உதிக்குமளவும் காலை எழுந்ததும் தியானம் செய்து, சசி உதித்தானேல் தனது ஊண் அருந்தி - சந்திரன் உதித்த பிறகு தன் உணவை உட்கொண்டு, சசி சரிக்கின்றளவும் துயிலாமல் - சந்திரன் சிரசில் சஞ்சாரம் செய்யும்வரை துயிலாதிருந்து, சசி சரிப்பின் கட்டன் கண் துயில் கொண்டது - சந்திரன் சிரசை விட்டுக் கீழிறங்கியதும் இதுகாறும் கட்டி நிறுத்தினவன் உறங்கலாம்.*

*கட்டன் - ஒளியைக் கட்டி நிறுத்தினவன். சந்திரயோக சாதனையைப் பற்றிய இரு குறிப்புகள் இவ்விரு மந்திரங்களில் ஆசிரியர் கொடுத்துள்ளார்.*

*காலையில் தியானம் செய்து நிலவொளி பெற்று பின்னர் உணவு உட்கொள்ள வேண்டும்.*

**857. *தெளிவுரை :-*** *ஊழிகள் பல சென்றாலும் உலகிலே வாழ்கின்ற காய சித்த யோகிகள், தாம் யோகத்தில் இருக்கின்ற நாழிகையையே முழம் அளக்கும் கையாகக் கொண்டு எமனது ஆற்றலை/ வாழ்நாளை அளப்பார்கள். ஆயினும், இங்குக் கூறப்படுகின்ற சந்திர யோகிகள் ஊழிக்கு முதல்வனாய் உள்ள*

857. ஊழி பிரியா திருக்கின்ற யோகிகள்
நாழிகை யாக நமனை அளப்பர்கள்
ஊழி முதலாய் உயர்வார் உலகினில்
தாழஅல் லார்இச் சசிவன்னர் தாமே. 24

858. தண்மதி பானுச் சரிபூமி யேசென்று
மண்மதி காலங்கள் மூன்றும் வழிகண்டு
வெண்மதி தோன்றிய நாளில் விளைந்தபின்
கண்மதி வீழ்வள விற்கண மின்றே. 25

---

*சிவனேயாகின்ற உயர்நிலையை அடைவர்; உலகியலில் தாழ்தற்கு உரியரல்லராவர்.*

***குறிப்புரை :-*** *"நாழிகை" என்பது கடைக்குறைந்து நின்று, "நாழி என்னும் முகத்தல் அளவைக் கருவி கையிடத்ததாக" என வேறோர் பொருளையும் தோற்றுவித்தது. நமன் ஆகுபெயர். அளத்தல், உட்படக் கொள்ளுதல். "இச் சசிவன்னர்" என்பதை மூன்றாம் அடியின் முதற்கண் வைத்து உரைக்க. எமனது ஆயுள் இவ்யோகியருக்குச் சிறு பொழுதாம்.*

*இதனால், காய சித்தரினும் சந்திர யோகிகள் மேம்பட்டு நிற்றல் கூறப்பட்டது.*

***858. தெளிவுரை :-*** *மக்களது உணர்வு அவர்களது தலையில் உள்ள சந்திர மண்டலம் உருப்பெற்றுத் தோன்றிய பின் அவர்களது சந்திர கலை சூரிய கலையாகிய வாயுக்கள் இயங்கும் வழியிலே விளங்கி, உலகம் மதிக்கின்ற இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்களிலும் நிகழும் நிகழ்ச்சிகளை முறையே கண்டு விளங்கிய பின், முடிவில் அச்சந்திர மண்டலம் வீழ்ச்சி அடையும்பொழுது ஒரு நொடி நேரமும் இல்லாதொழியும்.*

***குறிப்புரை :-*** *''ஆகவே, உணர்வின் விளக்கமாகிய மெய்யுணர்வைப் பெறவேண்டுவோர் மேற்கூறியவாறு சந்திர யோகத்தால் சந்திர மண்டலத்தை விளக்கம் பெறச் செய்தல் வேண்டும்" என்பது குறிப்பெச்சம். "உணர்வு" என்னும் பொருட்டாகிய "கண்" என்பதனை "வெண்மதி தோன்றிய நாளில்" என்பதற்கு முன்னே கூட்டி, அனைத்தையும் முதற்கண் வைத்து உரைக்க. நான்காம் அடியில் "தண்மதி" என்பது பாடம் அன்று. 'கணமும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. சரி - வழி. மண் - உலகம். கணம் - அற்பம்.*

*இதனால், சந்திர யோகம் மெய்யுணர்விற்கு இன்றியமையாத தாமாறு விளக்கப்பட்டது. சந்திரயோகப் பயற்சியுடையோர்*

**859.** **வளர்கின்ற ஆதித்தன் தன்கலை ஆறும்**
**தளர்கின்ற சந்திரன் தன்கலை ஆறும்**
**மலர்ந்தெழு பன்னிரண் டங்குலம் ஓடி**
**அலர்ந்து விழுந்தமை யாரறி வாரே.** **26**

---

*முக்காலத்தையும் உணர்ந்து அமுதக் கிரணத்தைப் பருகியிருப்பர்.*

**859.** *தெளிவுரை :- சந்திரனினும் ஆற்றல் மிகுகின்ற சூரியனது கலைகள் ஆறும், சூரியனும் ஆற்றல் மெலிகின்ற சந்திரனது கலைகள் ஆறும் தனித்தனி இருதயத்திற்குமேல் பன்னிரண்டங்குலம் சென்று சந்திர மண்டலத்தில் பரவி நின்றதன் பயனை அறிகின்றவர் உலகத்து அரியர்.*

*குறிப்புரை :- வாயு சுழுமுனை வாயிலாக மேற்செல்லும் பொழுது இருதயத் தானத்தை அடைந்தபின் வலிமிகுமாகலின் அவ்வாறு மிக்குச் செல்வதை, "மலர்ந்தெழுதல்" என்றும் சந்திர மண்டலத்தை அடைந்த வாயு பயனுடைத்தாகலின், அதனை, "அலர்ந்து விழுதல்" என்றும் கூறினார்.*

*"சந்திர கலை சூரிய கலையினும் மிக்கிருத்தல் உடல் உயிர்கட்கு முற்பக்கத்து முதிர்ச்சியும், அது சூரிய கலையினும் குறைந்திருத்தல் பிற்பக்கத்து முதிர்ச்சியுமாம் ஆதலின், இரண்டும் சமமாதல் அட்டமியாம். ஆகவே, முற்பக்கத்தை முதிரச் செய்யாவிடினும் பிற் பக்கத்தை முதிரச் செய்யாமலேனும் இருத்தல் வேண்டும்" என்றவாறு.*
**இப்பாடலுக்கு இன்னொரு வகையாலும் பொருள் காணலாம்.**

*வளர்கின்ற ஆதித்தன் தன் கலை ஆறும் - மேடம் முதல் கன்னியாராசி வரையுள்ள சூரியனது ஆறு கலைகள் வளர்வதிலும், தளர்கின்ற சந்திரன் தன் கலை ஆறும் - உடலாட்சிக்கான அகரம் உகரம் மகரம் விந்து அர்த்தசந்திரன் நிரோதினியாகிய ஆறு கலைகள் குறைவதிலும், மலர்ந்தெழு பன்னிரண்டங்குலம் ஓடி - சுவாசம் நான்கு விரற்கடை கழிவுறாமல் பன்னிரு விரற்கடை விரிந்தோடி, அலர்ந்து விழுந்தமையார் அறிவார் - விரிந்து நிறைந்தமை யாரே அறியவல்லார்?*

*ஆதித்தன் கலை ஆறாவன - மேடம் ரிடபம் மிதுனம் கடகம் சிம்மம் கன்னி என்பன. ஆதித்தன் வளர்தலாவது, சந்திரன் பகுதியில் உணர்வு பாய்வது. தளர்கின்ற சந்திர கலை ஆறாவன, அகரமுதல்*

**860.** ஆமுயிர்த் தேய்மதி நாளே யெனல்விந்து
போம்வழி எங்கணும் போகாது யோகிக்குக்
காமுற வின்மையிற் கட்டுண்ணும் மூலத்தில்
ஓமதி யுள்விட் டுரையுணர் வாலே. 27

**861.** வேறுறச் செங்கதிர் மெய்க்கலை ஆறொடுஞ்
சூறுற நான்குந் தொடர்ந்துற வேநிற்கும்
ஈறில் இனன்கலை ஈரைந்தொ டேமதித்
தாறுட் கலையுள் அகலுவா வாமே. 28

---

*நிரோதினி வரையுள்ள ஆறாம். சந்திரன் வளர்ச்சி பெறுவதில் உடலாட்சிக்கான கலைகள் இவ்வாறு குறைந்துவிடுகின்றன. பன்னிரு அங்குலம் ஓடுதலாவது, தொண்டையிலிருந்து கீழ்நோக்கிச் செல்லும் எட்டு விரற்கடை சுவாசத்தோடு மேல்நோக்கிச் செல்லும் நான்கு விரற்கடை சுவாசமும் ஆகப் பன்னிரு விரற்கடை ஓடுதல்.*

| மீனம் | மேடம் | ரிடபம் | மிதுனம் |
|---|---|---|---|
| கும்பம் | | சூரிய பாகம் | கடகம் |
| மகரம் | சந்திர பாகம் | | சிம்மம் |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |

*யோகியர்கள், சூரியன் வளர்ந்து, சந்திரன் தேய்ந்து, சுவாசம் பன்னிரண்டங்குலம் ஓடுவதை அறிவர்.*

*இதனால், சூரிய கலை சந்திர கலைகளைச் சமமாகச் செய்கின்ற சமநிலை யோகம் கூறப்பட்டது.*

**860.** *தெளிவுரை :- ஆம் உயிர்த் தேய்மதி நாளே எனல் விந்து போம் வழி - ஆகின்ற உயிர்க்குக் குறைகின்ற மதி நாளாவது விந்து கழிகின்ற வழியாலாம். யோகிக்குக் காமுறவு இன்மையின் எங்கும்*

**862.** **உணர்விந்து சோணி உறஇனன் வீசும்**
**புணர்விந்து வீசுங் கதிரிற் குறையில்**
**உணர்வும் உடம்பும் உவையொக்க நிற்கில்**
**உணர்வும் உடம்பும் ஒருகால் விடாவே.** **29**

---

*போகாது - யோகியர்க்குக் காமத் தொடர்பில்லையாதலின் விந்து நழுவாது, மூலத்தில் கட்டுண்ணும் - மூலாதாரத்தில் கட்டுப்பட்டு விடும், ஓமதியத்துள் உணர்வால் விட்டு உரை - ஆகவே நீங்கள் பிரணவம் விளங்கும் மதி மண்டலத்தில் உணர்வினால் செலுத்தி ஏத்துமின்.*

*யோகியர்களுக்குக் காமக் கழிவின்மையின் சந்திர கலை பூரணமாய் இருக்கும்.*

**861.** *தெளிவுரை :-* மேல் சூரிய கலை பன்னிரண்டினின்று வேறாகத் தோன்றக் கூறிய ஆறனுடன், சுவாதிட்டானத்தினின்றும் கீழ்ச் சென்று மூலாதாரத்தைத் தாக்குவதாகிய அக்கினி கலை நான்கு தொடர்ந்து பொருந்தி நிற்கும் இயல்புடையன. அவற்றால் பத்தாகின்ற சூரிய கலைகளோடு சந்திரனது அடக்கமான கலை ஆறு கூடின், அந்நிலை யோகிக்கு மேற்கூறிய உரை உணர்வுகள் முழுதும் அற்றொழிகின்ற அமாவாசியை நாளாம்.

*குறிப்புரை :-* "ஆதலின் மேலே (பா.859) கூறிய அட்டமி நிலையில் அக்கினி கலை எழாதவாறு காக்க" என்பது குறிப்பெச்சம். சூறுதல் - அகழ்தல். 'மதித்து' என்னும் குறிப்பு வினைப்பெயர், பன்மையொருமை மயக்கம். "மதித்து உட்கலை ஆறுள்" என மாற்றுக. உட்கலை - அடங்கும் கலை. ஆறுள் - ஆறு கூடிய காலத்தில். அகலுதல் - நீங்குதல். இதற்கு 'உரை உணர்வு' என்னும் எழுவாய் முன்னை மந்திரத்தினின்றும் வந்தது. 'சந்திர மண்டலத்து உரை யுணர்வு முற்றும் அகல்உவா' என்றதனால், அப்பொழுது காம இச்சை மிக்கு, விந்து சயம் சிறிதும் இலதாதல் பெறப்பட்டது. சூரியனது பேரொளியுள் சந்திரன் அடங்கி நிற்றலே உவா (அமாவாசியை) ஆதல் உலகியல்பும் ஆதல் அறிந்துகொள்க.

இதனால், மேற்கூறப்பட்ட சமநிலை யோகத்தின் இன்றியமையாமை எதிர்மறை முகத்தாற் கூறப்பட்டது.

**862.** *தெளிவுரை :-* உணர்விந்து சோணி உறவு இனன் வீசும் -

**863.** விடாத மனம்பவ னத்தொடு மேவி
நடாவு சிவசங்க நாதங் கொளுவிக்
கடாவிடா ஐம்புலன் கட்டுண்ணும் வீடு
படாதன இன்பம் பருகார் அமுதமே. **30**

---

*உணர்வினாலான விந்து சுரோணிதத்துடன் உறவு கொள்ளின் சூரியன் மிக்க ஒளி வீசும், கதிரில் குறையில் புணர் விந்து வீசும் - ஆனால் சூரியனது ஆற்றல் குறையின் புணர்ச்சியாலான விந்து ஒளியாய்ச் சிரசின்மேல் வீசும், உணர்வும் உடம்பும் உவையொக்க நிற்கில் - ஒளிமயமான உணர்வும் (சூக்கும உடம்பும்) தூலமான உடம்பும் ஒத்து நிற்கில், உணர்வும் உடம்பும் ஒருகால் விடா - ஒளிமயமான உணர்வும் (சூக்கும உடம்பும்) தூல உடலமைப்பும் யோகிக்கு ஒரு காலத்தும் நீங்கா.*

*உணர்வு ஒளிமயமானது. யோகி உணர்வைச் சிரசின் இடப்பக்கத்துக்கு மாற்றிக் கொண்டபோது காமக்கலவியில் விந்து நீக்கமின்றிச் சோம சூரியாக்கினிமேல் விளங்கி ஒளியான சூக்கும உடல் வளர்கிறது. அதற்கேற்ப தூல உடம்பும் ஒத்து விளங்கும் என்க.*

*சீவனுக்கு வாகனமான சூக்குமமும் தூலமும் ஒத்து நிற்கில் எடுத்த உடம்பில் அழியாது வாழலாம்.*

**863.** *தெளிவுரை :-* ஒடுதலை விடாத மனம் பிராணாயாமத்தால் ஒருவழிப்பட்டுச் சிவநாத ஒலியைக் கேட்பிக்கும். மதம் நீங்காத ஐம்பொறிகளாகிய யானைகளும் உரிய இடத்தில் கட்டுப்படும். அதனால், பருகப்படுகின்ற சந்திர மண்டலத்து அரிய அமிர்தமே பெத்த காலத்தில் விளையாத பேரின்பமாய் நிற்கும். மனமும் பிராணனும் அடங்குதலால் உண்டாகும் பயன் உணர்த்தப்பட்டது.

*குறிப்புரை :-* ‘ஒடுதலை’ என்பது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. “சங்கம்” என்பது பொதுப்பட நாதத்தை உணர்த்தி நிற்ப, “சிவசங்க நாதம்” என்பது இருபெயரொட்டாயிற்று. ‘கொளுவுதலால்’ என்பது, ‘‘கொளுவி’’ எனத் திரிந்து நின்றது. ‘‘வீடு’’ என்றது சிலேடை. படாதனவாகிய இன்பம், பேரின்பம். இஃது ஒன்றேயாயினும் எல்லை இன்றிப் புதிது புதிதாய் விளைதல் பற்றிப் பன்மையாக ஓதப்பட்டது. ‘பருகு ஆரமுதமே படாதனவாகிய இன்பங்களாய் நிற்கும்’ என்க. கடா - முரட்டுத்தனம். கடாவுதல் - உசாவுதல். பவனம் - காற்று. நாதம் கொளுவுதல் - தொனியைக் கேட்டல்.

**864.** அமுதப் புனல்வரும் ஆற்றங் கரைமேல்
குமிழிக்கத் தற்சுடர் ஐந்தையுங் கூட்டிச்
சமையத்தண் டோட்டித் தரிக்கவல் லார்க்கு
நமன்இல்லை நற்கலை நாள்இல்லை தானே. **31**

**865.** உண்ணீர் அமுதம் உறும் ஊறலைத்திறந்
தெண்ணீர் இணையடித் தாமரைக் கேசெலத்
தெண்ணீர்ச் சமாதி யமர்ந்துதீ ராநலங்
கண்ணாற் றொடேசென்று கால்வழி மாறுமே. **32**

---

*இதனால், சந்திர யோகம் வாசி முறையில் முதிர்ந்து ஞான யோகமாய் விளங்குதல் கூறப்பட்டது.*

**864.** *தெளிவுரை :- சந்திரயோகியர்க்குச் சாக்காடில்லை யென்பதும் உணர்த்துதல் நுதலிற்று.*

*சிவாமுதமாகிய நீர் ஊறிவருகின்ற ஆற்றங்கரையின் மேல் குமிழி உண்டாக, சுடர்கள் ஐந்தையும் ஒன்றுகூட்டி சமைக்கப்பட்ட தண்டாகிய வீணாதண்டினூடே செலுத்தி மேல் நிலையில் தரிக்க, வல்லார்களுக்கு நமன் இல்லை; நல்ல கலை உண்டாம்; அவர்களுக்கு இறுதிநாளும் இல்லை என்றவாறு.*

*குறிப்புரை :- அமுதப்புனல் - மதிமண்டலத்து அமுதமாகிய நீர், ஆற்றங்கரை என்றது இடை பிங்கலை சுழுமுனையாகிய ஆறுகளின் இருமருங்கினையும் கற்சுடர் ஐந்து - சிவம், சத்தி, நாதம், பிந்து, சீவன் ஆகிய ஐந்து ஒளிகளையும், சமை அத்தண்டு - குண்டலினி இடையறாது செல்லுதற்குப் படைக்கப்பட்ட வீணாதண்டும் ஒட்டி - அதன் ஊடாக உள்ளே செலுத்தி நற்கலை ஆம் என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

**865.** *தெளிவுரை :- உலகீர், அமுதம் நிறைந்துள்ள ஊற்றின் மடையைத் திறந்து, அவ்வமுதம் பெருகிவர, அதனை உண்ணுங்கள். அதனை உண்டதன் பயனாக இவ்வுலகிலே நெடுங்காலம் வாழ நினையாமல், ஞான சமாதியில் அமர்ந்து சிவனது இரண்டு திருவடி களாகிய தாமரைமலரின் கீழ்ச் சென்று இருக்கவே நினையுங்கள். அங்ஙனம் இருத்தலாகிய அழியா இன்பத்தின் பொருட்டு முதற்கண் உங்கள் மூச்சுக்காற்றினை இருமூக்காகிய வழிகளை மாற்றிக் கண் வழியாகச் செலுத்துங்கள்.*

**866.** மாறும் மதியும்ஆ தித்தனும் மாறின்றித்
தாறு படாமல்தண் டோடே தலைப்படில்
ஊறு படாதுடல் வேண்டும் உபாயமும்
பாறு படாஇன்பம் பார்மிசைப் பொங்குமே. **33**

---

***குறிப்புரை :-*** *'அமுதம் உறும் ஊறலைத் திறந்து உண்ணீர்' எனவும், 'தெள்நீர்ச் சமாதி அமர்ந்து இணையடித் தாமரைக்கே செல எண்ணீர்' எனவும், எச்சங்களை முன்னே கூட்டி முடிக்க. "நலம் மாறும்" என்பது, 'இப்பெற்றங்கள் அறங் கறக்கும்' என்பதுபோல நான்காவதன் தொகை. 'சென்று மாறும்' என்பதை, 'மாறிச் செல்லும்' என விகுதி பிரித்துக் கூட்டிக் கொள்க. 'உம்முடைய கால்கள் குருட்டு வழியை விட்டுக் கண் தெரிந்த வழியில் செல்வனவாகும்' எனவும், 'உம்முடைய சந்ததிகளும் நீவிர் சென்ற வழியிற் சென்று திருந்தும்' எனவும் வரும் நயங்களும் ஈற்றடியில் தோன்றுதல் காண்க.*

*இதனால், உலகர்க்கு உறுதியுரைக்கும் முகத்தால், சந்திர யோகத்தினது சிறப்பு வலியுறுத்தப்பட்டது.*

**866. *தெளிவுரை :-*** *இடநாடி வழியாகவும், வலநாடி வழியாகவும் இயங்குகின்ற தம் இயல்பினின்றும் மாறுகின்ற சந்திர கலையும், சூரிய கலையும் பின், யோகத்திற்குரிய முறையில் மாறுபடாமலும், குறைவுறாமலும் சுழுமுனை வழியே சென்று சந்திர மண்டலம் உள்ள தலையை அடையுமாயின், உடல், தனது நலத்திற்கு வேண்டுகின்ற வழிகளில் சிறிதும் சிதைவு உண்டாகாது. என்றும் அழிவில்லாத வீட்டின்பமும் இவ்வுலகில் மிகுவதாகும்.*

***குறிப்புரை :-*** *தாறு - குலை. இது, சொல்லொற்றுமையால் குலைதலை (சிதைதலை) உணர்த்திற்று. இதனை, 'புத்தி சேனன்' என்பவனை, "திங்கள் விரவிய பெயரினான்" (சீவகசிந்தாமணி - காந்தருவ தத்தையார் இலம்பகம் - 181) என்றது போலக் கொள்க.*

*"உபாயமும் ஊறுபடாது" என முன்னே கூட்டுக. பாறு படுதல் - அழிவெய்துதல். "பொங்குமே" என்னும் ஏகாரம் தேற்றம்.*

*இதனால், யோக முறையும், அதன் பயனும் இறுதிக்கண் ஒரு திருமந்திரத்தால் தொகுத்துக் கூறி முடிக்கப்பட்டன.*

***மூன்றாம் தந்திரம்*** *மூலமும் உரையும் முற்றிற்று.*

***பத்தாம் திருமுறை - திருமந்திரம் 1, 2, 3***

## பாட்டு முதற்குறிப்பகராதி